# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

பத்தாம் மடலம் - முதற்பாகம்

[அயற்சொல் மடலம்]

(அ-ஔ)

Vol. X - Part I

[Loan words]


முனைவர் இரா. மதிவாணன்

மதிப்புறு இயக்குநர்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்

அகரமுதலித்திட்ட இயக்கக வெளியீடு

தமிழ்நாடு அரசு

2009

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## பத்தாம் மடலம் – முதற்பாகம்
[அயற்சொல் மடலம்]

## (அ–ஔ)

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## Vol. X - Part I
[Loan words]


முனைவர் இரா. மதிவாணன்

மதிப்புறு இயக்குநர்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட இயக்கக வெளியீடு

தமிழ்நாடு அரசு

2009

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு – 26.

முதற் பதிப்பு : திருவள்ளுவர் ஆண்டு 2040 மடங்கல் (ஆவணி) (September 2009)

A Comprehensive Etymological Dictionary of the Tamil Language, Vol. X, Part-I



விலை : உருபா 400/–

Price : Rs. 400/-

குறியீட்டெண் : Colon No.P.J1-J, 314"K.M4

வெளியிட்டோர் :

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்,
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக் வளாகம்,
அண்ணாநகர், சென்னை–600 040.

Published by :

Directorate of Tamil Etymological Dictionary Project,
C- 48, Ist Floor, T.N.H.B.,
IInd Avenue, Anna Nagar,
Chennai - 40.

அச்சீடு :

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை–600 113.

Printed at :

International Institute of Tamil Studies,
Tharamani, Chennai - 113

நூல் கிடைக்குமிடங்கள் :

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்,
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்,
அண்ணாநகர், சென்னை–600 040.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை–600 113.

Copies available at :

Directorate of Tamil Etymological Dictionary Project,
C- 48, Ist Floor, T.N.H.B.,
IInd Avenue, Anna Nagar,
Chennai - 40.

International Institute of Tamil Studies,
Tharamani, Chennai - 113

மு. கருணாநிதி

முதலமைச்சர்




தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

நாள் 16.7.2009

## அணிந்துரை

மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்களை இயக்குநராகக் கொண்டு 1974 இல் அமைக்கப்பட்ட செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் 12 மடலங்களில், 31 தொகுதிகளாகச் "செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி" வெளியிடத் திட்டமிட்டது. திட்டமிட்டவாறே, இதுவரை 10 மடலங்களில் 'அ' முதல் 'ஔ' வரை உயிரெழுத்துகளில் 3 தொகுதிகள், 'க' முதல் 'வெள' வரை உயிர்மெய் எழுத்துகளில் 21 தொகுதிகள், தமிழ் அகரமுதலி வரலாறு 1 தொகுதி என மொத்தம் 25 தொகுதிகளை வெளியிட்டுள்ளது. அவற்றைத் தொடர்ந்து தமிழில் கலந்துள்ள பிறமொழிச் சொற்கள் தொடர்பாக "அயற்சொல் மடலம்" 10–வது மடலமாக 3 தொகுதிகள் வெளியிடத் திட்டமிடப்பட்டு, அதில் முதற்கட்டமாக இரண்டு தொகுதிகள் தற்போது வெளியிடப்படுகின்றன. இதனைத் தொடர்ந்து மற்ற இரு தொகுதிகளுடன் 12–வது இறுதி மடலமும் மிக விரைவில் வெளியாகி இவ்வரும் பணி நிறைவு பெறவிருக்கிறது.

இந்திய மொழிகளில் இதுவரை வெளிவந்துள்ள சொற்பிறப்பியல் அகரமுதலிகளில் இதுவே மிகவும் விரிவானதும், செறிவானதும் ஆகும். அனைத்துச் சொற்களுக்கும் எழுத்துப் பெயர்ப்புடன், இலக்கணக் குறிப்பு, தமிழ் மற்றும் ஆங்கிலப் பொருள்கள், காலந்தோறும் மாறிவந்துள்ள பொருள்கள், திராவிட மொழிகளில் சென்றுள்ள ஒலி வடிவங்கள், பழமொழிகள், பல்வேறு சொல் வழக்குகள் ஆகியவற்றுடன் தேவைப்படும் இடங்களில் பட விளக்கங்களும் இப்பேரகரமுதலியில் இடம் பெற்றுள்ளன.

அனைவர்க்கும் பயன்படும் பொதுவகை அகரமுதலியாகவும், மொழியியல் மற்றும் திராவிட மொழிகள் ஆராய்ச்சியாளருக்குப் பெரிதும் பயன் தரும் ஒரு சிறந்த கருவி நூலாகவும் உருவாகியுள்ள இந்தச் "செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி" நூல் தொகுதிகளின் துணையோடு தமிழ் மொழியைப் பேணிக்காத்திட தமிழார்வலர்கள் முனைந்திடல் வேண்டும்.

இந்த அரும்பெரும் தமிழ் மொழிக் கருவூலத்தை உருவாக்கும் முயற்சிகளில் ஈடுபட்டுத் தமிழ் மொழிக்கு அணிசேர்த்துள்ள அறிஞர் பெருமக்கள், பணியாளர்கள் அனைவருக்கும் என் மனமார்ந்த பாராட்டுகளும் நல்வாழ்த்துகளும் உரித்தாகுக.

(மு.கருணாநிதி)



மாண்புமிகு தமிழக முதலமைச்சர்
"முத்தமிழறிஞர்"

**கலைஞர் மு. கருணாநிதி**

செம்மொழிச் செம்மல் கலைஞர் பெருந்தகையே
செம்மாந்த செந்தமிழர் பாவாணர் நுண்ணோக்கில்
சீர்கொள் அகர முதலி வெளியிட்டுப்
பேர்கொண்டீர் வாழ்க நெடிது!



மொழிஞாயிறு

## ஞா. தேவநேயப்பாவாணர்

ஞால முதன்மொழி எந்தமிழே என்றென்று
சால நிறுவிய பாவாணச் செம்மலே
நின்று நிலவும் சொற்பிறப்பு காட்டியதால்
பொன்றாது நின்றதும் பேர்!

# அணிந்துரை

**க. முத்துசாமி, இ.ஆ.ப.,**
**அரசு செயலாளர்.**

தமிழ் வளர்ச்சி, அறநிலையங்கள் (ம) செய்தித் துறை
தலைமைச் செயலகம்,
சென்னை 600 009.

பிறந்த நாடும் பேசும் மொழியும் நாட்டு மக்களுக்கு இரு கண்கள். தமிழ்த்தாய் உலக மொழிகளுக்குத் தாய்

"தொன்று நிகழ்ந்த தனைத்தும் உணர்ந்திடும்
சூழ்கலை வாணர்களும் – இவள்
என்று பிறந்தவள் என்றறி யாத
இயல்பினளாம் எங்கள் தாய்" என, பாரதி சிறப்பித்துப் பாடினார்.

செந்தமிழிலக்கியங்களைக் கொண்டதால் உயர்தனிச் செம்மொழி என்னும் தகுதிப்பாட்டுடன் தமிழ் செம்மாந்து நிற்கிறது. தமிழின் தனித்தன்மையை வேர்ச்சொல் ஆராய்ச்சி வாயிலாக நிறுவிக்காட்டியவர் இத்திட்டத்தின் முதல் இயக்குநர் 'மொழிஞாயிறு' ஞா. தேவநேயப் பாவாணர். மாண்புமிகு தமிழக முதல்வர் கலைஞர் அவர்கள் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலித் திட்ட இயக்ககத்தை உருவாக்கித் தந்தார்கள்.

மூவாயிரம் ஆண்டுகளாக இலக்கணக் கட்டமைப்புடன் திகழும் தமிழ் பிறமொழி உதவியின்றி தனித்தியங்கும் தகுதிபெற்றது.

"தனித்தியங்கும் தன்மை தமிழினுக் குண்டு
தமிழே ஞாலத்தின் தாய்மொழி பண்டு"

என்று பாவேந்தர் பாரதிதாசன் அழகாகக் குறிப்பிட்டார்.

அயலவர் தொடர்புகளால் பிறமொழிச் சொற்கள் தமிழில் கலந்தன. இக்கலப்பு கடந்த மூவாயிரம் ஆண்டுகளாக ஏற்பட்டதால் தமிழில் புகுந்த கலப்பினை ஆராய்ந்து பிரித்தெடுத்து 'அயற்சொல் மடலம்' எனும் வகைப்பாட்டில் கொடுத்திருப்பதனை அறிந்து மகிழ்ச்சியடைகிறேன். மேலும், அந்த அயற்சொற்களுள் பொதுமக்கள் வழக்கிலும் புகுந்த சொற்களுக்குத் தமிழ்ச் சொற்கள் காட்டி அயற்சொற்களை நீக்கித் தூய தமிழ்ச்சொற்களை வழங்குவதற்கு வழிவகை காட்டப்பட்டுள்ளது. இம்முயற்சி பிறசொல் கலவாமல் தமிழைப் பயன்படுத்துவோர்க்குப் பெரிதும் பயன்படும்.

வானுயர்ந்த பொதியமலையில் தோன்றி மன்னுபுகழ் மூவேந்தர் மடியில் தவழ்ந்து பழமைக்கும் பழமையாய், புதுமைக்கும் புதுமையாய் விளங்கும் தமிழ்மொழி வளர்ச்சிக்கு இப்பேரகரமுதலி பெருந்துணைபுரியும். இவ்வகையில் புத்தம்புதிய துறைகளில் தேவைப்படும் சூழல்களில் மரபார்ந்த சொற்களைப் படைத்து, தமிழை எதிர்காலத்தேவைகட்குத் தகுதிப்படுத்துவது நம் கடமை. அதற்கும் இத்துறைப் பணியாளர்கள் உதவுவார்களென நம்புகிறேன்.

இவ்வகரமுதலிப் பணியில் அரசின் திட்டங்களை நிறைவுறுத்த நாளும் கருத்தூன்றிப் பணியாற்றும் தமிழறிஞர் அனைவர்க்கும் என் நல் வாழ்த்துகள்.

(க. முத்துசாமி)

## பதிப்புக்குழு

முனைவர் **இரா. மதிவாணன்**, மதிப்புறு இயக்குநர்
தலைவர்—பதிப்புக்குழு

திரு. **முத்து.பிச்சை**, சிறப்புநிலைத் தொகுப்பாளர்
முனைவர் **மு.கண்ணன்**, சிறப்புநிலைத் தொகுப்பாளர்
முனைவர் **பா.வெற்றிச்செல்வன்**, சிறப்புநிலைத் தொகுப்பாளர்
முனைவர் **ச. செந்திலாண்டவன்**, சிறப்புநிலைத் தொகுப்பாளர்
முனைவர் **இரா.கு.ஆல்துரை**, சிறப்புநிலைத் தொகுப்பாளர்
திரு.**கா. இளமுருகு**, சிறப்புநிலைத் தொகுப்பாளர்
திரு.**ச.கி. கணேசன்**, சிறப்பு நிலை ஓவியர் – முதனிலை

திரு. **மா. பூங்குன்றன்**, பதிப்பாசிரியர்
திரு.**க.கணேசன்**, பதிப்பாசிரியர்
திரு.**சு.வீரவேலு**, பதிப்பாசிரியர்
திருவாட்டி.**வே.உமாராணி**, உதவிப் பதிப்பாசிரியர்

# பதிப்புரை

வளர்ந்து வரும் உலகில் மலர்ந்து வரும் அறிவியல் தொழில்நுட்ப முன்னேற்றங்களுக்கு ஈடுகொடுக்கும் வகையில் மொழியும் வளர வேண்டும். மொழிவளம் என்பது சொல்வளம். சொல்வளச் செழுமையைப் போற்றுவதும் பெருக்குவதும் அகரமுதலித் தொகுப்பின் தலையாயப் பணி. அதிலும் வேர்ச்சொல் மூலம் காட்டிச் சொற்பிறப்பு விளக்குவது உலக மொழியாராய்ச்சியாளர்க்கும் மாந்தநூலார்க்கும் அடிப்படை ஆய்வுச் சான்றுகளாக அமையும்.

அகராதியைப் பாவாணர் அகரமுதலி என்றார். ஆதி என்பது வடதமிழ் என்னும் பிராகிருதச் சொல்லாதலின் அதனைவிடுத்து அகரமுதலி எனும் சொற்படைத்தார். முத்தமிழ் அறிஞராகவும் செம்மொழிச் செம்மலாகவும் விளங்கும் தமிழக முதல்வர் கலைஞர் அவர்கள் உருவாக்கிய இந்த அகரமுதலித் திட்ட இயக்ககம் இறுதி மடலங்களை வெளியிடும் பணியில் ஈடுபட்டுள்ளது. பிறமொழிகளிலிருந்து சொற்களைக் கடன் பெறுவது உலக மொழிகள் அனைத்திலும் காணப்படும் பொதுவியல்பு. கடன்பெற்ற பிறமொழிச் சொற்களைப் பெரும்பாலான மொழிகளால் விலக்கிக் கொள்ள முடிவதில்லை. பிறமொழிச் சொற்களை முற்றாக நீக்கித் தன்சொற்களைப் படைத்துக் கொள்ளும் திறன் வாய்ந்தது தமிழ்மொழி. இந்தச் சிறப்பினைப் புலப்படுத்தும் பாங்கில் அயற்சொற்களை மட்டும் அயற்சொல் மடலம் எனத் தனியாகத் தொகுத்து வெளியிடப்படுகிறது.

இம்மடலம் மூன்று பாகங்களாக வெளியிடப்படுகிறது. இத்தொகுப்புப் பணிக்கு வேண்டிய உதவிகளைத் தக்காங்கு வழங்கிய தமிழக அரசுக்கும் தமிழ் வளர்ச்சித் துறையைத் தன் பொறுப்பில் பேணும் **தமிழக முதலமைச்சர் மாண்புமிகு கலைஞர் மு. கருணாநிதி** அவர்களுக்கும் தமிழ்வளர்ச்சி, அறநிலையங்கள் மற்றும் செய்தித் துறையின் அரசுச் செயலாளர் **உயர்திரு. க.முத்துசாமி, இ.ஆ.ப.** அவர்களுக்கும் நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். இதனை நன்கு வெளியிட உதவிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தாருக்கும், இப்பணிக்கு அயராது உழைத்த அகரமுதலித் திட்டப் பணியாளர் அனைவர்க்கும், நெஞ்சார்ந்த நன்றியுடையோம்.

**மதிப்புறு இயக்குநர்**

# ஆய்வு முன்னுரை

### அயற்சொல் மடலம்

மொழிஞாயிறு ஞா. தேவநேயப்பாவாணர் அவர்கள் தலைமையில் **மாண்புமிகு தமிழக முதல்வர் செம்மொழிச் செம்மல் முத்தமிழ்க் காவலர் கலைஞர்** அவர்களால் உருவாக்கப்பட்ட அகரமுதலித் திட்ட இயக்ககம் இதுவரை 25 பாகங்களை வெளியிட்டுள்ளது. இப்போது 26ஆம் பாகமாக அயற்சொற் மடலத்தின் முதற்பாகம் வெளியிடுவதில் அகரமுதலித் திட்ட இயக்ககம் பெருமை கொள்கிறது.

தமிழக அரசின் தளரா உதவியால் வளரும் பயிராகச் செழித்து வண்டமிழுக்கு வளம் சேர்த்துச் செம்மொழி எனும் தகவுபெற்ற தமிழுக்கு அணிகலன்களாக அகரமுதலி வெளியீடுகள் அமைந்துள்ளன எனில் அது மிகையாகாது.

ஆங்கிலம் தமிழோடு முந்நூறு ஆண்டுகளாகத் தொடர்பு கொண்டுள்ளது. ஆனால், சமற்கிருதம் தமிழோடு மூவாயிரம் ஆண்டுகளாகத் தொடர்பு கொண்டிருந்ததால் ஆங்கிலத்தைவிட அரபியம், பாரசீகம் போன்ற செமித்திய மொழிகளைவிட, சமற்கிருதச் சொல்லாட்சிகள் மிகுதியாகத் தமிழில் புகுந்துள்ளன.

தமிழ் மலையாம் மறைமலையடிகள், மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர், பாவலரேறு பெருஞ்சித்திரனார் போன்ற பெருமக்கள் சமற்கிருதம் உள்ளிட்ட அனைத்து அயற்சொற்களையும் அறவே களைந்து என்றுமுள இனித்தமுடைய தனித்தமிழை மீட்டெடுத்தனர். அவர்கள் மீட்டெடுத்த முயற்சியை வெளிப்படுத்துவதாக அமைந்ததே அயற்சொல் மடலம்.

### சொல்வளம்

“தமிழைப்போலச் சொல்வளமுள்ள மொழி உலகத்தில் வேறொன்றுமில்லை..... தமிழ் பழைமையான மொழியாயும், சென்ற மூவாயிரம் ஆண்டுகளாகத் தளர்ச்சியடைந்து வருவதாயும், வழங்கும் நிலம் வரவரக்குறுகி வருவதாயும், குறுகிய தன்னாட்டிலும் பெருகிய பகையுள்ளதாயும், தன் மக்களாலும் தள்ளப்படுவதாயும் இக்கால நூல்கள் எழுதப்படாததாயும், அரசியன் மொழியல்லாததாயும், எத்துணையோ கலைகளும் நூல்களும் சொற்களும் இறந்துபட்டும் வழக்கற்றுமுள்ளதாயும், இது போதுள்ளனவும் வழக்கற்று வருவதாயும் உள்ளது”[1].

உலகிலுள்ள எம்மொழியிலும் அயற்சொல் கலவாத நிலை இல்லை என்றும் அயற்சொற்களை வழங்குவதனால் மொழி வளர்ச்சியடையும் என்றும் சிலர் கூறுகின்றனர். இதற்கு வரையிகந்து அயற்சொற்களைக் கடன்பெற்ற ஆங்கில மொழியை எடுத்துக்காட்டுவர். ஒரு மொழியில் குறிப்பிட்ட பொருளையோ கருத்தையோ தெரிவிக்க சொல் இல்லாத நிலையில் அதற்குரிய சொல்லாக்கம் உருப்பெறா நிலையில் அயற்சொல்லைக் கடன் வாங்குதல் ஒருவகை. ஆயின், வழக்கிலுள்ள சொற்களைக் கையாளாமல் அவற்றிற்கு இணையான பிறமொழிச் சொற்களைக் கையாள்வது எவ்வகையில் மொழி வளர்ச்சிக்கு உதவும்? உவகை, களிப்பு, மகிழ்ச்சி என இனிமையான சொற்களிருக்க அவற்றிற்கு மாற்றாக ஆனந்தம், சந்தோஷம், குஷி, ஜாலி என அயற்சொற்களைப் பயன்படுத்துவது எங்ஙனம் தமிழ் வளத்தைப் பெருக்கும்? இவ்வகையில் பெரும் எண்ணிக்கையிலான அயற்சொற்கள், குறிப்பாகச் சமற்கிருதச் சொற்கள் ஒரு பொருட் பன்மொழிகளாகவே தமிழில் இடம்பெற்றுள்ளன. எ–டு: சொல்–வார்த்தை, நீர்–ஜலம், துப்புரவு–சுத்தம், விலங்கு–பிராணி, கூலம்–தானியம், விண்மீன்–நட்சத்திரம், சாறு–ரசம், கையூட்டு–லஞ்சம், அகவை–வயது, அறம்–தருமம், இரப்போன்–பிச்சைக்காரன், இழப்பு–நஷ்டம், நலம்–சௌகரியம்.

### வழக்கற்றசொல்

வழக்கில் இடம்பெறாத பழைய சொல் எளிதாய்ப் பொருள் உணர்த்துவது இல்லை. ஆகையால் அதற்கு ஈடான பிறமொழிச் சொல்லைப் பயன்படுத்துவது எளிதாய் அமையும் என்று குறிப்பிடுவாரும் உளர். வழக்கற்ற சொல் எளிதில் பொருளுணர்த்தாமைக்குரிய கரணியம் அச்சொல்லின் குற்றமன்று. அதனைப் பயன்படுத்தாததொன்றே அது எளிதில் பொருளுணர்த்தா நிலைக்குக் கொண்டு செல்லும். இதனை “நீண்ட காலமாக உறவாடாத மக்கள் அயலாராகத் தோன்றுவது போன்றே நீண்ட காலமாக வழங்காத சொற்களும் அருஞ் சொல்லாய்த் தோன்றுகின்றன” என்று எடுத்துக்காட்டி விளக்கினார் பாவாணர்.

1. பாவாணர், சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், தமிழ்மண் பதிப்பகம், 2000 (முதற்பதிப்பு 1949), பக்.72.

இந்திய மொழிகளில் பிறசொல் கலவாமல் எழுதவும் பேசவும் வல்ல ஒரே மொழி தமிழ்மொழி. இதனை நிலை நாட்டும் உயரிய நோக்கத்தை மொழிஞாயிறு பாவாணர் தம் வாணாட் குறிக்கோளாகக் கொண்டிருந்தார். இலக்கியம், இலக்கணம், வரலாறு, உலகியல், அறிவியல், கணிதம், கணியம் போன்ற துறைகளில் முழுமையாகத் தமிழாக்கம் செய்யப்படாத சமற்கிருதச் சொற்களின் நிலைப்பு நீடித்தது. குறிப்பாகத் தமிழ் மருத்துவ நூல்கள், ஒரிலக்கம் பாடல்களுக்கு மேற்பட்டவை, சமற்கிருதத்தில் மொழிபெயர்க்கப்பட்டபோது மூலத் தமிழ்ச் சொற்கள் உருவறிய முடியாமல் மறைந்து போயின. மருந்துகளின் பெயர்களும் மூலம் இழந்தன. அவற்றையும் மீட்டெடுக்க முயன்ற முயற்சியில் ஓரளவு துப்பு துலங்கியிருக்கிறது. அகரமுதலி திருந்திய மடலங்கள் வெளிவரும்போது சமற்கிருதமாக உருமாறிய தமிழ்ச் சொற்கள் முழுமையாக மீட்டெடுக்கப்படும். அதற்கான இடைக்கால ஏற்பாடாக முற்றிலும் தமிழாக்கப்படாத மருத்துவச் சொற்களும் சேர்க்கப்பட்டுள்ளன.

**சொற்கடன்**

“திராவிட மூலத்தினின்று முளைத்த சொற்கள் சமற்கிருதத்தில் இடம்பெற்றுள்ளன என்பதைப் பல்லாண்டுகளுக்கு முன்பே ஏற்றுக்கொண்டேன்.... ஆங்கில மொழியில், பிரித்தானியச் சொற்கள் எந்த அளவு கலந்துள்ளனவோ அந்த அளவு திரவிடச் சொற்கள் சமற்கிருதத்தில் கலந்துள்ளன. ஆனால் இவ்வுண்மை நெடுங்காலமாக உணரப்படவில்லை. எங்கேனும் ஒரு சொல் சமற்கிருத மொழியிலும் தமிழ் மொழியிலும் இருந்தால் அதை உடனே சமற்கிருத மூலத்தினின்று உருவானது என்று கருதிவிடுகின்றனர். பெரும் எண்ணிக்கையிலான சமற்கிருதச் சொற்கள் திரவிடமொழிகளில் வழக்கிலுள்ளன. இத்தகைய சொற்களைத் தமிழ், தெலுங்கு அகரமுதலித் தொகுப்பாளர்கள், சமற்கிருதச் சொற்களாகக் கருதி இயற் சொற்களான தம்மொழிச் சொற்களினின்று பிரித்து வழங்கி வந்திருக்கின்றனர். சில இடங்களில் தமிழ் சமற்கிருதத்தினின்று கடன் பெற்றதா, சமற்கிருதம் தமிழினின்று கடன் பெற்றதா என்னும் ஐயம் நிலவுகிறது. தமிழ்வாணர்களைப் போல் சமற்கிருதவாணர்கள் எப்போதும் பிரித்துக் காட்டவில்லை. யாரேனும் ஓர் ஆசிரியர் தாம் வாழும் உள்ளூர் அல்லது வட்டார மொழிச் சொற்களைப் பயன்படுத்திவிட்டால் (யாப்பமைதிக்காகவும் அல்லது வேறு கரணியங்களுக்காகவும் சமற்கிருதம் பேச்சு மொழி என்ற தகுதியை இழந்தபின் அவ்வாறானவை அருகிய வழக்காக இருப்பது இயல்பு), அவற்றைத் தவறாது சமற்கிருதச் சொற்கள் என்று குறிப்பிட்டு விடுகின்றனர்”[1]

மொழிக் கடன்பெறுவது தேவை கருதிப் பெறுவது பெருமை கருதிப் பெறுவது என இருவகைப்படும். தமிழில் கடன் கொள்ளப்பட்ட வடசொற்களுள் பெரும்பான்மையானவை பெருமை கருதிப் பெற்றவை என்பது குறிப்பிடத்தக்கது.

இந்நிலையில் தமிழ் அகரமுதலிகள் பெரும் எண்ணிக்கையிலான சொற்களை வட சொற்கள் எனக் காட்டியுள்ளன. அவற்றுள் பெரும்பான்மையானவை மக்கள் வழக்கில் இடம்பெறாதன. இலக்கியங்களில் இடம்பெற்ற வடசொற்களல்லாமல் வழக்கில் உள்ளனவாகப் பல வடசொற்களை அகரமுதலிகள் காட்டுகின்றன. அவற்றுள்ளும் பல பெரும்பான்மையோரால் கேள்விப்படாத சொற்கள். இவை போன்றனவல்லாமல் சென்ற நூற்றாண்டில் விளைந்த தமிழுணர்வின் கரணியமாகத் தமிழில் கலந்த வடசொற்கள் பல வழக்கு வீழ்ந்து வருகின்றன. எ–டு: அபேட்சகர்–வேட்பாளர்.

---

1 I have long felt persuaded that some words of Dravidian origin has found their way into Sanskrit vocabularies.... There is probably almost large a proportion of Dravidian words in Sanskrit, as of British words in English; but this probability has generally remained unnoticed: and wherever any word was found to be the common property of the Sanskrit and any of the Dravidian tongues, it was at once assumed to be a Sanskrit derivatives. Doubtless, the number of Sanskrit derivatives, properly so called, which have been introduced into the Dravidian Languages, is very great; but those words are almost always recognised and admitted to be derivatives by Tamil and Telugu lexicographers, and carefully distinguished from national or native Dravidian words. In a few cases, as might be expected, but in a few cases only, some doubt exists whether a particular word was borrowed by the Sanskrit from the Tamil, or by the Tamil from the Sanskrit. Sanskrit lexicographers and grammarians were not always so discrimate as their Dravidian brethern: and if any writer had happened to make use of a local or provincial word, that is, a word belonging to the vernacular of the district in which he resided (and it was natural that such words showed occasionally be used, for variety of metre or some other cause, especially after Sanskrit has caused to be a spoken tongue) every such word, provided only it were found written in Sanskrit charactors, was forthwith set down with vocabularies as Sanskrit. - **Caldwell, Robert**, A Camparative Grammar of the Dravidian or South Indian Family of Languages, AES 1987, (First Published 1913) P.566.

"தமிழ்ச்சொல் வட பாடைக்கட் செல்லாமையாலும் வடசொல் எல்லாத் தேயத்திற்கும் பொதுவாகலானும், இவை வட சொல்லாக ஈண்டு வழங்கப்பட்டன வெனல் வேண்டும்" (சேனாவரையர்) என்றாற் போன்று தமிழன்றி வடமொழி ஒரு போதும் கடன்பெறாது என்னும் பிழைக் கருத்து, பன்னூறு ஆண்டுகளாக நிலவி வந்துள்ளதன் விளைவாகப் பல தூய தென் சொற்கள் வடசொற்களாகக் கொள்ளப்பட்டு வந்துள்ளன.

**தமிழில் திசைச்சொல் அயற்சொல் வேறுபாடுகள்**

வேற்று மொழித் தாக்கமில்லாத தாய்மொழியிலுள்ள மரபார்ந்த சொற்கள் இயற்சொற்கள் எனப்படும். இவற்றை மரபிலக்கணத்தார் பெயர் வினை இடை உரி என நால்வகைப்படுத்துவர்.

பேச்சு வழக்கிலும் எழுத்து வழக்கிலுமுள்ள இயற்சொற்கள் பண்டுதொட்டே செய்யுள் வழக்கில் ஒரு பொருள் குறித்த பல சொல்லாகவும் பல பொருள் குறித்த ஒரு சொல்லாகவும் திரிபுற்றவற்றைத் தனியாகப் பிரித்துத் திரிசொல் என்றும் நெடிய வரலாற்றுக் காலத்தில் மக்கள் வழக்கில் வட்டார வழக்காகத் திரிபுற்றனவற்றைத் திசைச்சொல் என்றும் வகைப்படுத்தினர். இவையல்லாமல் பிற குடும்ப மொழிச் சொற்களும் தாய்மொழியில் கலப்பதுண்டு. அவ்வகையில் தமிழ்நாட்டுக்கு முப்புறமும் கடல் எல்லையாக இருத்தலின் வடதிசை வாயிலாக மட்டும் பிற குடும்ப மொழிச் சொற்கள் தமிழில் புக வாய்ப்புண்டாதலின் தொல்காப்பியர் தமிழில் புகத்தக்க பிற குடும்ப மொழிச் சொற்களுக்கு வடசொல் எனப் பொதுவாகப் பெயரிட்டார். இயற்சொல், திரிசொல், திசைச் சொல், வடசொல் எனச் சொற்களை நால்வகைப்படுத்தினார்.

இக்காலத்தில் பிறமொழிச் சொற்கள் நிலவழியாகவும் கடல் வழியாகவும் எல்லாத் திசைகளிலிருந்தும் வருதலால் வடசொல் என்பதைத் தவிர்த்து அயற்சொல் என வகைப்படுத்த வேண்டியுள்ளதால் வடமொழியுள்ளிட்ட பிற மொழிக் கடன் சொற்கள் அடங்கிய இத்தொகுதிக்கு அயற்சொல் மடலம் எனப் பெயரிட நேர்ந்தது.

தமிழின (திரவிட) மொழிகள் தமிழின் கிளை மொழிகளாகக் கிளைத்து வளர்ந்தவை. அச்சொற்கள் தமிழுக்குத் திசைச் சொற்களாக இருத்தலின் அவை தமிழ்ச் சொற்களாகவே கருதப்பட்டுத் தமிழ்ச் சொல் வளத்தில் சேர்க்கப்பட்டுள்ளன. தமிழில் வழக்கிறந்து திராவிடமொழி வழக்கில் உள்ளதைத் தமிழ்ச்சொல்லென்று கொள்வதற்கு எவ்வகைத் தயக்கமும் இல்லை.

வடதமிழ் எனும் பிராகிருதத்தில் வழங்கிய தமிழ்ச்சொற்களுள் பல ஒருசார் பிறழ்ந்த ஒலிப்புடையனவாயினும் பிறமொழி எழுத்தாலன்றித் தமிழ் எழுத்தால் எழுதிக் காட்டத்தக்கனவும் திசைச் சொல்லாகவே ஏற்று தமிழ்ச் சொல் வளத்தில் சேர்க்கப்பட்டுள்ளன.

தமிழிலிருந்து பிராகிருதத்தின் வாயிலாக வடமொழிக்குச் சென்று மீண்டும் பிராகிருதத்தின் வாயிலாகத் தமிழுக்கு வந்த சொற்களும், தமிழிலிருந்து வடமொழிக்குச் சென்று வடமொழி ஒலிப்பை ஏற்றுக்கொண்ட தமிழ்ச் சொற்களும் அயற்சொற்களாகவே கருதப்பட்டு அயற்சொன் மடலத்தில் சேர்க்கப்பட்டுள்ளன.

பிராகிருதம் ஒரு காலத்தில் தமிழின் கிளைமொழியாக வடநாட்டில் பேசப்பட்டது. இதனை வடதமிழ் என்றனர். அக்காலத்திய சொல்லாட்சிகளில் தமிழ்மரபிலிருந்து திரிந்தனவற்றை மட்டும் திசைச்சொல்லாக ஏற்றுள்ளோம். பிராகிருதத்திலிருந்து பிறந்த வடநாட்டு மொழிகளில் சமற்கிருதக் கலப்பு மிகுந்த பிறகு உருமாறிய வடபுல மொழிச் சொற்களில் பன்மடிபுத் திரிபுற்ற வடதமிழ்ச் சொற்கள் அயற்சொற்களாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

இயற்சொல் திரிசொல் திசைச்சொல் எனும் மூன்று நிலைகளில் ஊடாடும் சொற்கள் மட்டும் தமிழ்ச் சொற்கள். திசைச் சொல் வரம்பைக் கடந்தன அனைத்தும் உலகப் பிறமொழிச் சொல் வகை சார்ந்த அயற்சொற்கள். இவை வேற்றுக்குடும்ப மொழிச் சொற்கள். இயற்சொல் திரிசொல் திசைச்சொல் எனும் மூவகையும் தமிழுக்குத் தன் குடும்ப மொழிச் சொற்கள். வேற்றுக்குடும்ப அயற்சொற்களுக்குத் தேவை கருதி தமிழில் கலைச் சொல் படைத்துக் கொள்வது கடன் சொற்களின் பெருக்கத்தைக் கட்டுப்படுத்தும். இவ்வகைக் கலைச் சொற்களும் அகரமுதலியில் இடம்பெற்றுள்ளன.

"இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல்லென்று

அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே" (தொல்.சொல்.397) என்று நான்கு வகைச் சொற்களைப் பற்றித் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.

"தொல்காப்பியர் காலத்தில் தமிழ்ச் சொற்கள் இலக்கண முறையிற் போன்றே சொற்பிறப்பியல் முறையில் நான்காக வகுக்கப்பட்டன. முதலாவது தன்சொல் அயற்சொல் என்கிற முறையில் தென்சொல் வடசொல் என்ற பாகுபாடும், பின்பு தன் சொற்குள் செந்தமிழ் கொடுந்தமிழ் என்கிற முறையில் நாட்டுச் சொல் திசைச் சொல் என்ற பாகுபாடும், பின்பு நாட்டுச் சொற்கள் இயல்பும் திரிபும் பற்றி இயற்சொல் திரிசொல் என்ற பாகுபாடும் தோன்ற இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என நான்கமைந்தன.

தெலுங்கு கன்னடம் முதலிய திராவிட மொழிகள் முற்காலத்தில் கொடுந்தமிழா யிருந்தமையின், அவற்றின் சொற்கள் திசைச்சொற்கள் எனப்பட்டன. இன்று அம்மொழிகள் ஆரியக் கலப்பால் வேற்றுமொழியாய் வழங்குகின்றமையான், வேற்றுமொழிச் சொற்களையெல்லாம் திசைச் சொல்லெனக் கூறுவது தவறாம். முற்காலத்தில் திசைச் சொல்லாகக் காட்டப்பட்ட கொடுந்தமிழ்ச் சொற்களே இன்றுந் திசைச் சொல்லாகும்.

வடமொழி யொன்றே முற்காலத்து வழங்கிய அயன்மொழி. அதனால், அதன் சொல் அம்மொழிப் பெயராலேயே வடசொல் லெனப்பட்டது. அதுபோல் இதுபோது தமிழில் வழங்கும் பிறமொழிச் சொற்களும் ஆங்கிலச் சொல் போர்த்துக்கீசியச் சொல் என அவ்வம் மொழிப் பெயராலேயே அழைக்கப்படல் வேண்டும்"[1].

**எழுத்துக்கடன்**

பொதுவாகப் பெயர்ச்சொற்களையே ஒரு மொழி கடனாகப் பெறும். இதை "வடசொல்லுள்ளும் பெயரல்லது செய்யுட் குரியவாய் வாரா" (சேனாவரையர்) என்று உரையாசிரியர் காலத்திலேயே குறிப்பிட்டுள்ளது கவனிக்கத் தக்கது.

ஒருமொழி பிறமொழிகளிலிருந்து சொற்களைக் கடன்பெறலாம். ஆனால் பிறமொழிக்குரிய எழுத்துகள் அல்லது எழுத்தொலிப்புகளைக் கடன்பெற்ற மொழிகள் வேற்று மொழிகளாகத் திரிந்து விடுகின்றன. உலகில் மொழிகள் பலவாகப் பெருகுவதும் சிறுபான்மை மொழிகள் மறைவதும் பிறமொழி எழுத்தொலிப்புகளைக் கடன் வாங்கியபின் சின்னஞ்சிறு கிளைமொழிகளாகவும், வட்டார வழக்கு மொழிகளாகவும் தேய்ந்து போவதால்தான் எனக் கண்டறியப்பட்டுள்ளது.

தமிழ் உலகமுதல் செம்மொழி எனும் தகுதியுடன் இலக்கிய இலக்கண வளம் கொண்டது. பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளைக் கடந்தும் செம்மை இழவாத நிலை தன் எழுத்தொலிப்புகளைப் பிறமொழி எழுத்தொலிப்புத் தாக்குதல்களிலிருந்து காத்துக் கொண்டதால்தான் என்பதை மொழியாராய்ச்சி அறிஞர்கள் கண்டறிந்துள்ளனர். இந்நிலைப்பாட்டை வலியுறுத்துவதற்கென்றே தொல்காப்பியம் வடதிசையிலிருந்து வரும் கடன் சொற்களைத் தமிழ் உள்வாங்கிக் கொண்டாலும் அவற்றைப் பிறமொழி எழுத்தொலிப்பு நீக்கி முற்றிலும் தமிழ் எழுத்தொலிப்புகளிலேயே எழுதவேண்டும் என்கிறது

"வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ

எழுத்தொடு புணர்ந்த சொல்லாகுமே" (தொல்.சொல்.401)

தமிழில் பிறமொழி எழுத்துகள் புகலாகாது என்பதற்காகத் தமிழ் எழுத்துக் காப்புப் போராளிகள் பழந்தமிழர் வரலாறு நெடுக வாழ்ந்துள்ளனர் எனத் தெரிகிறது.

**வடமொழியில் தற்சமம்–தற்பவம் என்பன இலக்கண மரபு இகந்தவை**

ஒரு மொழியில் தன்சொல் என்றும் கடனாகப் பெறப்பட்ட அயற்சொல் என்றும் இரண்டு வகைப்பாடே காணப்படும். இரண்டு மொழிகளுக்கும் பொதுவான சொல் என்று எதுவும் எக்காலத்திலும் இருந்ததில்லை. சொற்பிறப்பு ஆராய்ச்சி இந்த உண்மையை வெளிப்படுத்திக் காட்டிவிடும்.

---

1. பாவாணர், தொல்காப்பியம் சொல்லிலக்கணம், சேனாவரையருரை, கழகம், நூற்பா அடிக்குறிப்பு.

ஆதலின் வடமொழிக்கும் பிற இந்திய மொழிகளுக்கும் பொதுவான சொல் எனப் பொருள்படும் தற்சமம் என்னும் இலக்கண வகைப்பாடு மொழியியல் மற்றும் மரபிலக்கண நோக்கில் முற்றிலும் பொருளற்ற வறுஞ்சொல்லாகும். அதிலிருந்து பிறந்தது என வட மொழியாளர் கணிக்கும் தற்பவம் என்பதும் சொற்பிறப்பு மூலம் சரியாகக் கணிக்கப்பட்டது என்று சொல்ல முடியாது. இத்தகைய வகைப்பாடுகளை வடமொழிக்கென்றே இலக்கண நூல்கள் ஏற்படுத்தின. அவை இந்திய மொழிகளுக்குத் தேவையில்லை. தொல்காப்பியர் இத்தகைய இலக்கண வகைப்பாட்டைக் குறிப்பிடவில்லை. பிராகிருத பாலிமொழிகளில் பயிற்சி மிக்க உரையாசிரியர்கள் தேவையில்லாமல் நன்னூல் இலக்கணத்தில் இவற்றைப் புகுத்தினர்.

**தற்சமம்** என்பதற்கு நன்னூல் (146, உரை) உரையாசிரியர், "ஆரியத்திற்கும் தமிழிற்கும் பொதுவெழுத்தாலாகி விகாரமின்றித் தமிழில் வந்து வழங்கும் வடமொழிச்சொல்" என விளக்கம் தந்துள்ளார். சொல்லின் வரலாறு என்பது பொருளின் வரலாறு. அது எழுத்தின் வரலாறு ஆகாது என்பது அவருக்குப் புலப்படவில்லை. கமலம், குங்குமம் என்பன நட்டாசியாவில் ஆரியரால் கண்டறியப் பட்டவை அல்ல. எனவே இவை சமற்கிருதம் எனும் வடமொழிக்கு உரியனவல்ல என அவரால் கணித்தறிய இயலவில்லை. இவை திரவிட மொழிக்குரிய சொற்கள். வடமொழி கடன் கொண்டதால் சில அடிப்படைத் திரிபுற்று அதே வடிவில் இந்திய மொழிகளிலும் வழக்கூன்றியுள்ளன.

மணி என்பதைத் தற்சமம் என உரையாசிரியர் குறித்தனர். ஆனால் மொழிஞாயிறு பாவாணர் அதன் வேர்ச்சொல்லை ஆராய்ந்து நால்வகை வேரடிப் பொருள்களில் அது விரிந்திருப்பதைப் பின்வருமாறு விளக்கிக் காட்டி மணி என்பது முற்றிலும் தமிழ் என்று நிறுவியிருக்கிறார்.

| | |
|---|---|
| 1. மணி = சிறியது | எ–டு: மணிக்காடை, மணிக்குடல் |
| 2. மணி = வட்டமானது | எ–டு: மணியோசை, நாழிமணி |
| உருண்டது, குண்டு | எ–டு: மணிவலை, குன்றிமணி |
| உருண்டு திரண்டது | எ–டு: நென்மணி, மணிச்சம்பா |
| 3. மணி = கரியது | எ–டு: மணிமிடற்றோன் |
| நீலமானது | எ–டு: மணிவண்ணன், மணிமலர் |
| 4. மணி= ஒளிபெறக் கழுவியது | எ–டு: மணிமாலை |
| அழகானது | எ–டு: மணிவாசல் |

**தற்பவம்** என்பதற்கு நன்னூல் உரையாசிரியர் "ஆரியத்திற்கேயுரிய சிறப்பெழுத்தாலும், பொதுவும் சிறப்புமாகிய ஈரெழுத்தாலும் முடிந்திருக்கிற ஆரிய மொழிகளாகத் திரிதல் முதலிய விகாரம் பெற்றுத் தமிழில் வந்து வழங்கும் போது பெறும் பெயர்" (நன்.146, உரை) எனக் குறித்திருக்கிறார்.

**எ.டு** புட்பம் எனும் சொல் தற்பவம் எனப்படுகிறது. தமிழ் பூ எனும் சொல் வட மொழியில் pushpa எனப்படும். இது மீண்டும் தமிழில் வந்து வழங்கும்போது புட்பம் எனத் திரிபடைகிறது.

தமிழிலிருந்து பூ–புஷ்பம் எனத் திரிந்ததை வடமொழி இலக்கண ஆசிரியர்கள் கண்டுகொள்ளாமல் விட்டுவிட்டது ஏன் என்று எவரும் வினாத் தொடுக்கவில்லை. வடமொழி பிறமொழிகளிடமிருந்து கடன்பெற்ற சொற்களை வெளியில் தெரியாமல் மறைத்துத் தன் சொற்களாகக் காட்டிக் கொள்வதற்குச் செய்த முயற்சியே தற்பவம் என்னும் செயற்கையான இலக்கண வகைப்பாடாக மாறியிருக்கிறது. ஒருசொல் எம்மொழிக்கு உரியது எனச் சரியாகக் கணிக்கும் சொற்பிறப்பு நெறிமுறை (Principles of Etymology) ஆரியர்க்கும் குறிப்பாக பாணினி உள்ளிட்ட வடமொழியாளர்க்கும் தெரிந்திருக்க வாய்ப்பில்லை. இதனால் தோன்றிய தற்சமம் தற்பவம் என்னும்

வகைப்பாடுகள் பொய்யானவை. இலக்கண மரபுகளுக்கு மாறானவை. இவற்றைத் தமிழிலக்கண நூல்களில் ஆள வேண்டியதில்லை.

இருமொழிகளுக்கும் பொதுவான சொல் என்றோ இருமொழி எழுத்துகளுக்கும் பொதுவான ஒலிப்பு என்றோ வகைப்படுத்துவது முறையன்று. அத்தகு சொற்கள் முறையாக எம்மொழிக்குரிய சொல் என்பதைச் சொற்பிறப்பு வாயிலாக அயற்சொன் மடலம் நிறுவிக் காட்டவல்லது.

மேலும் அயற்சொற்களுக்கு இணையான தமிழ்ச்சொல் தருதல், பொருள்வரையறை, மரபார்ந்த விளக்கம் தருதல், பிற அகரமுதலித் தவறுகள் திருத்துதல் ஆகியனவும் இடம்பெறும்.

வடமொழிச் சொற்களும் பிறமொழிச் சொற்களுமாக அயன்மொழிச் சொற்கள் தமிழில் புகும்போது எத்தகைய எழுத்துத் திரிபு பெறும் என்பதைத் தமிழிலக்கணச் சான்றோர் வகைப்படுத்தியுள்ளனர். அவற்றை 19ஆம் நூற்றாண்டில் மணிப்பவள நடைதோன்றும் வரை தமிழ்ப் புலவர்கள் மட்டுமன்றி கிறித்தவ முகமதியப் புலவர்களும் பின்பற்றியுள்ளனர். உரைநடையிலும் செய்யுளிலும் அயன்மொழிச் சொற்கள் தமிழாக்கப்படும் பாங்கு கீழே தரப்பட்டுள்ளன.

### பிறமொழிச் சொற்கள் தமிழில் திரியும் பாங்குகள்

1. வடசொற்களின் இடையில் உள்ள '**த்**', '**ஸ்**', '**ல்**' என்பன தமிழ் வடிவம் பெறும் போது **றகர** மெய்யாகத் திரியும்.

   உத்சவம் – உற்சவம்

   பஸ்பம் – பற்பம்

   கல்பம் – கற்பம்

2. '**டகர**' முதல் பிறமொழிச் சொற்கள் '**தகர**' முதலாகிய தமிழ்ச் சொற்களாகத் திரியும்.

   டமருகம் – தமருகம்

   டொப்பி – தொப்பி

3. '**டகர**' முதல் '**இகர**' முன்னெழுத்து பெறும்.

   டம்பம் – இடம்பம்

4. **ஆகார** ஈற்றுப் பெயர் **ஐகார** ஈறாகும்.

   பிக்ஷா – பிச்சை

   தீக்ஷா – தீட்சை

5. **ர, ல** முன்னெழுத்துச் சொல்லுக்கு முன் '**இ**'கர துணைமுன்னெழுத்து சேரும்.

   ராமன் – இராமன்

   லாபம் – இலாபம்

6. '**ஷ**' – டகரமாகத் திரியும் (இடையில்)

   விபீஷணன் – விபீடணன்

   புஷ்பம் – புட்பம்

7. **ஸ, ஷ** மொழி முதலில் சகரமாகத் திரியும்.

   ஸரஸ்வதி – சரசுவதி

   ஷங்கர் – சங்கர்

**8. க்ஷ**– மொழி முதலில் **'ச'**வாகத் திரியும்.

சேஷமம் – சேமம்

**9. க்ர, ப்ர** எனத் தொடங்கும் வடசொற்கள் முன்னெழுத்தோடு இகர **உயிர்த்**துணை பெறும்.

ப்ரகதி – பிருகதி

க்ரந்தம் – கிரந்தம்

10. வல்லின மெய்யீறுகள் **உகரத்** துணையீறு பெறும்.

தத் – தத்து

சத் – சத்து

11. **'ஜ' – சகர**மாகும்.

ஜோதி – சோதி

பங்கஜம் – பங்கசம்

சரோஜா – சரோசா

12. **ஸ்வ** எனும் கூட்டெழுத்து **சு, சி, சொ** எனவாகும்.

ஸ்வாமி – சுவாமி

ஸ்நேகம் – சினேகம்

ஸ்வதேசி – சுதேசி

ஸ்வர்க்கம் – சொர்க்கம்

ஈஸ்வர் – ஈசுரன்

13. **ஸ்த– த்த** ஆகும் (தனிக்குறில் சார்ந்தவை).

புஸ்தகம் – புத்தகம்

14. **ஸ்** முன் ககரம் வருமாயின் **'ஸ்' றகர** மெய்யெழுத்தாகும்.

பாஸ்கரன் – பாற்கரன்

15. **ஹ** வரிசையிலுள்ள மொழிமுதலான வடமொழிச் சொற்கள் மெய்கெட்டு அத்துடன் பொருந்திய உயிரெழுத்து மட்டும் ஒலிக்கும்.

ஹிமாலாயா – இமாலயம்

ஹோமம் – ஓமம்

ஹேது – ஏது

16. வடசொற்களில் இடையில் வரும் **'ஹ'** எழுத்து **ககரமாகத்** திரியும். **ரகர லகரத்**தில் தொடங்குவதாயின் **இகர உகர** முன் எழுத்துகளைப் பெறும்.

ரோஹிணி – உரோகிணி

17. **'க்ஷ'** மொழி முதலில் **க, ச** எனத் திரியும்.

க்ஷணம் – சணம், கணம்

க்ஷேமம் – சேமம்

18. **'க்ஷ'** மொழி இடையிலும் ஈற்றிலும் **க்க–ட்ச–ச்ச** எனத் திரியும்

லக்ஷ்மி – இலக்குமி

தீக்ஷை – தீட்சை, தீக்கை

பக்ஷணம் – பட்சணம்

அக்ஷரம் – அச்சரம், அக்கரம்

19. **'க்த', 'ப்த'** என வரும் கூட்டெழுத்துகள் உடனிலை மெய் மயக்கங்களாகும்.

சக்தி – சத்தி

சப்தம் – சத்தம்

20. 'ப' (ba) – மொழி முதல் – **'ப'** (pa) மொழி முதலாக ஒலிக்கும்.

பாவன – பாவனை

21. சொல்லிடையில் வரும் **'ப' – 'வ'** ஆகும்.

பாபம் – பாவம்

22. **ந–ன** ஆகும்.

ஜநகன் – *சனகன்*

23. **யகர** முதலெழுத்துகள் ஒலித் துணை முன் உயிர் பெறும் அல்லது யகரமெய் கெடும்.

யந்திரம் – இயந்திரம் (எந்திரம்)

யக்ஷன் – இயக்கன்

யூகி – ஊகி

யூகம் – ஊகம்

யோகம் – ஓகம்

24. குறில் கீழ் ஒற்றாகும் **ரகர** மெய்யெழுத்து **இகர** அல்லது **உகரத்** துணையெழுத்து பெற்று உயிர் மெய்யாகும்.

தர்மம் – தருமம்

துர்யோதனன் – துரியோதனன்

25. **'ர்ண', 'ர்ந'** என்ற கூட்டெழுத்து தமிழில் **'ன்'** மெல்லின மெய் இரட்டிப்பாகும்.

கர்ணன் – கன்னன்

துர்நிமித்தம் – துன்னிமித்தம்

26. **ஈகார** ஈற்றுப் பெயர் **இகர** ஈறாகக் குறுகும்.

நதீ – நதி

27. **ண்ய, க்வ, த்ம, வ்ய, ம்ச** என்பவை மெய் இரட்டித்து முன்னெழுத்தோடு உயிர் எழுத்து இணைந்து ஒலிக்கும்.

பக்வம் – பக்குவம்

புண்யம் – புண்ணியம்

பத்மம் – பதுமம்

காவ்ய – காவியம்

வம்ச – வமிசம்

**28. உப** எனும் வடமொழி முன்னொட்டு தமிழ்ச் சொல்லாகும் போது **பகரம்** வகரமாகி உயிர் முதலாகவோ, வகரம் பெற்ற உயிர்மெய் முதலாகவோ மாறும்.

உபாத்தியாயன் – உவாத்தியாயன் – வாத்தியான்

**29.** வடசொல்லிடையில் **க்ன** எனும் கூட்டெழுத்தில் ககரம் இரட்டிக்கும்.

அக்னி – அக்கினி

**30.** வடசொல்லினிடையில் வரும் **'ஸ்வ'** எனும் கூட்டெழுத்து **சு** அல்லது **ச்சு** எனத் திரியும்.

அஸ்வனி – அசுவினி

அஸ்வினித்தேவர் – அச்சுவினித்தேவர்

## வடசொல், தமிழ்ச்சொல்

பொதுவாகப் பிறமொழி எழுத்தொலிப்பு அல்லது பிற மொழிக்கே உரிய எழுத்துள்ள சொல்லை அயற்சொல் என்று எளிதில் கண்டுபிடித்து விடலாம். இருமொழிகளுக்கும் பொதுவான எழுத்துகளால் எழுதத்தக்க சொல் ஒலிப்பிலும் பொருளிலும் ஒத்திருந்தால் எம்மொழியிலிருந்து எம்மொழிக்குச் சென்றது எனக் கண்டுபிடித்தல் ஒரு புதிராகவே இருந்தது. கமலம் என்ற சொல் சமற்கிருதம் தமிழ் இரண்டிலும் ஒன்று போல் ஒலிக்கும் பொருள் கொண்டுள்ளது. இரு மொழியாளரும் தம்சொல் என உரிமை கொண்டாடும் சூழலுக்கு இது இடந்தருகிறது.

1) இத்தகு சூழல்களில் சொற்பிறப்பு ஆராய்ச்சி ஒன்றே குறிப்பிட்ட சொல் எந்த மொழியில் இயல்பாகத் தோன்றியது என்பதையும் வேறெந்த மொழிகளில் கடன் சொல்லாக ஊடாடியது என்பதையும் அறிய உதவும்.

2) கடன் கொண்ட மொழி தான் பெற்ற சொல்லின் பாங்கைத் தன் மொழிப் பாங்குக்கு ஏற்ற சொற்கட்டமைப்பாக மாற்றிக் கொள்ளும். சொற் கட்டமைப்பு மாற்றத்தைக் கண்டறிவதன் வாயிலாக அச்சொல் எம்மொழியிலிருந்து எம்மொழிக்குச் சென்றது எனக் கண்டறிய முடியும்.

**தமிழ்.** மாலை > **சமற்.** மாலா.

ஐகார ஈற்றுத் தமிழ்ச் சொற்களைச் சமற்கிருதம் 'ஆ'கார ஈறாக மாற்றிக் கொள்வதாலும் பூவிட்டுப் பூசை செய்யும் வழக்கம் திரவிடருடையது என்பதாலும் மாலை என்னும் தமிழ்ச் சொல் மாலா என்னும் வடிவில் சமற்கிருதத்தில் கடன் கொள்ளப்பட்டிருப்பது தெளிவாகிறது.

3) தமிழ் வேரடியும் சமற்கிருத ஈறும் கொண்ட சொல் பிராகிருதப் பேச்சு மொழியில் இடம்பெற்று மீண்டும் தமிழுக்கு வரின் அது வேரளவில் தென் சொல்லாயினும் அந்த வடிவம் வடநாட்டில் திரிபுற்றதால் தமிழுக்குத் தன்சொல்லன்று என்றாலும் பிராகிருதம் வடதமிழ் எனப்பட்டதால் திசைச்சொல்லாகத் தமிழில் வழங்கத்தக்கதாயிற்று. ஆதி எனும் சொல் இதற்குத் தக்க சான்றாகும்.

## வடசொல் தென்சொல் வேறுபாடுகள் - கண்டறியும் முறை

பழைய உரையாசிரியர்களும் மொழியியல் நுட்பங்களை அறியாதவர்களும் வடமொழி தவமொழியாதலின் அதன்கண் பிறமொழிச் சொல் புகாததெனவும் வடமொழிச்சொற்கள் பிறமொழிக்குப் பொதுவாகலின் எம்மொழிக்கும் வடமொழிச்சொல் செல்லும் எனவும் தவறான கருத்து கொண்டிருந்தனர்.

இங்கிலாந்து நாட்டு வடமொழிப் பேராசிரியரும் திராவிட மொழியியல் வல்லுநருமாகிய பேராசிரியர் பரோ அவர்களும், கன்னட ஆங்கில அகரமுதலி தொகுத்த பேராசிரியர் கிட்டலும், ஒரு சொல் வட மொழிக்கே உரிய சொல்லா அல்லது வடமொழி பிற மொழிகளிடம் பெற்ற கடன் சொல்லா என்பதைக் கண்டறியும் வழிமுறைகளைத் தெளிவாக்கினர். அதன் விளைவாக வடமொழியில் கடன் கொள்ளப்பட்ட

சொற்களையும் இருக்கு வேதத்தில் உள்ள பழந்திரவிடம் எனும் தமிழ்ச் சொற்களையும் பட்டியலிட்டுக் காட்டினர். மொழிஞாயிறு பாவாணர் மேலும் பன்னூற்றுக்கணக்கான தமிழ்ச்சொற்கள் வடமொழியில் கடன் கொள்ளப்பட்டிருப்பதைத் தம் ஆய்வுநூல்களில் வெளிப்படுத்தினார். அவருடைய வடமொழி வரலாறு இதற்குத் தக்க சான்றாகும்.

பேராசிரியர் பரோ குறிப்பிட்ட அடிப்படை வேறுபாட்டுக் காரணங்கள் அனைவரும் நினைவிற் கொள்ளத்தக்கன.

1. ஒருசொல் சமற்கிருதம் எனும் வடமொழிக்கே உரியதாயின் அச்சொல் அதன் இனமொழிகளாகிய செருமானியம், கிரேக்கம், இலத்தீனம் போன்ற மேலையாரிய மொழிகளில் இனச்சொல்லாகக் காணப்பட வேண்டும். இல்லையாயின் அது கடன் சொல்லாகக் கருதப்படும்.
2. ஒரு சொல்லின் வேர்ச்சொல்லும் அதன் எண்ணிறந்த தாய்மொழிச் சொல்லாட்சிகளும் அச்சொல் எம்மொழிக்குரியது எனக்காட்டும். வேர்ச்சொல் இல்லாது பரந்துபட்ட சொல்வளர் நிலைகளும் இல்லாமல் ஓரிரு இடங்களில் மட்டும் பயின்றிருந்தால் அது கடன் சொல்லாகக் கருதப்படும்.
3. அம்மண்ணுக்கே உரிய நிலைத்திணை இயங்குதிணைப் பொருள்களும், உயிரிபயிரிகளின் பெயர்களும் பண்பாட்டுக் குமுகாய வரலாற்றுப் பின்னணிச் சொற்களும் எந்தத்தாய் மொழிக்குரிய சொல் இது என்பதைக் காட்டிவிடும்.

எ–டு. முத்து, பவளம் போன்ற கடல்படுபொருள்கள் நட்டாசியாவிலிருந்து வந்த ஆரியர்க்குத் தெரியாதவை. எனவே இவற்றை வடமொழி முக்தா, ப்ரவள என உருமாற்றிக் கடன் கொண்டுள்ளது.

பேராசிரியர் பரோ ஐநூற்றுக்கும் மேற்பட்ட சொற்களையும் கிட்டல் நானூற்றுக்கும் மேற்பட்ட சொற்களையும் குறிப்பிட்டு இவை திரவிட மொழிகளிலிருந்து சமற்கிருதத்துக்குச் சென்றுள்ளன என எடுத்துக் காட்டினர். மொழிஞாயிறு பாவாணர் வடமொழியில் 40% சொற்கள் தமிழிலிருந்து கடன் கொள்ளப்பட்டுள்ளன என எடுத்துக்காட்டினார்.

வேதமொழி பேச்சு மொழியாக இருந்தது. ஈரானிய ஆரியர் கி.மு.16ஆம் நூற்றாண்டிலும் இருக்குவேத ஆரியர் கி.மு. 13ஆம் நூற்றாண்டிலும் வடமேற்கு இந்தியாவில் திரவிட மக்களோடு கலந்தனர். கி.மு.19ஆம் நூற்றாண்டில் இயற்கைச் சீற்றத்தால் அழிந்துபோன சிந்துவெளி தமிழர் நாகரிகக் காலத்துக்கும் ஆரியர்க்கும் எவ்வகைத் தொடர்பும் இல்லை. இருக்குவேதப் பாடல்கள் வேள்விக்குப் பயன்பட்ட கி.மு.1200 முதல் கி.மு. 800 கால வரம்பில் வடமொழி மந்திரமொழியாக மட்டும் பயன்பட்டு பேச்சுவழக்கு இழந்ததால் உள்நாட்டுத் திரிபு மொழிகளாகிய பிராகிருத பாலி மொழிகளை ஆரியர் தம் பேச்சு மொழிகளாக்கிக் கொண்டனர். கி.மு.800க்குப்பின் வடபுலச் சமண பவுத்த நெறிகளால் தாக்குண்டு தென்னாட்டில் குடிபுகுந்த ஆரியக் கூட்டத்தினர் பல்வேறு புலத்துறைத் தமிழ் நூல்களை வடமொழியில் மொழி பெயர்த்ததால் பல்லாயிரக் கணக்கான தமிழ்ச் சொற்களை வடமொழியில் உருமாற்றிச் சேர்த்துக் கொண்டனர். அவற்றைத் தெளிவாக்குவதற்கு இந்த அயற்சொன் மடலம் தனியாகத் தொகுக்கப்பட்டுள்ளது.

## பேசப்படாத மொழியில் கடன் சொற்களே மிகுதி

“சமற்கிருதம் எப்பொழுதும் நாட்டின் எப்பகுதியிலும், அது வடநாடாக இருக்கட்டும் அல்லது தென்னாடாக இருக்கட்டும் ஒரு காலத்திலும் பேச்சு மொழியாக இருந்தது இல்லை”[1].

1. Sanskrit, though it was improbable that it ever was the vernacular language of any district or country, whether in the north or in the south. - **Caldwell, Robert**, A Comparative Grammar of the Dravidian or South Indian Family of languages, AES 1987 (First Published 1913), int. P.2.

பேசப்படாமல் வெறும் எழுத்து வடிவில் மட்டும் இருக்கும் மொழியில் வேற்று மொழியிலிருந்து மொழிபெயர்ப்பு வாயிலாகப் பல்லாயிரம் சொற்கள் புக வாய்ப்பு ஏற்படுகிறது. பேசப்படும் மொழியில் தேவை கருதி மக்கள் தாமாகவே புதுச் சொல் படைத்துக் கொள்கின்றனர். இது இயற்கை மொழியின் இயல்பு. கடன்சொற்களால் மட்டும் வாழும் மொழியைக் கலவை மொழியென்றும் செயற்கை மொழியென்றும் கூறுவர். சமற்கிருதம் எனும் மிகு கலவை செயற்கை மொழி பன்மடித் திரிபுச் சொற்களைத் தன் சொற்களாகக் காட்டிக் கொண்டாலும் மொழியகழ்வாராய்ச்சியாளர்கள் ( Language Archaelogists) அவற்றை எளிதில் கண்டறிகின்றனர்.

பேசப்படாத வடமொழிச் சொற்களாகக் காட்டப்பட்டவற்றுள் தமிழில் மக்களின் அன்றாட வழக்கில் புகுந்துள்ள சொற்களின் எண்ணிக்கை 1500 எனலாம். அதிலும் மருத்துவம், வானநூல், கணியம், சமயம், இசை, நாட்டியம், சிற்பம் போன்றவற்றில் புகுத்தப்பட்டவை மிகுதி. இக்காலத்தில் ஆங்கிலச் சொல்லாட்சிகள் அன்றாட வழக்கத்தில் சற்றொப்ப 2000 புகுந்துள்ளன எனலாம். இவையனைத்தையும் களைந்து தமிழை அதனியல்பில் வளர்க்கும் தாளாண்மையின் வெளிப்பாடாக அயற்சொல் மடலம் தொகுக்கப்பட்டுள்ளது.

ஆயிரக்கணக்கான ஆண்டுகள் கடந்த நிலையில் திரிபுக்குத் திரிபாகப் பன்மடித் திரிபுற்ற சொற்களில் தமிழிலிருந்து திரிந்தன எவை? சமற்கிருதத்திலிருந்து திரிந்தன எவை? இது தமிழ்ச்சொல் இது சமற்கிருதச்சொல் என்று மிக நுட்பமாக வரையறுக்கும் எல்லைக்கோடு எது? எத்தகைய சொற்பிறப்பு நெறிமுறைகள் இவற்றை வரையறுக்கின்றன என்னும் வினாக்களுக்கு விடைகளாகச் சொற்பிறப்பு நெறிமுறைகள் எழுதுவதற்கு முன்பே பாவாணர் இயற்கையெய்திவிட்டார். அவரோடு ஆறாண்டுகளாக நீங்கா நிழலாய் இருந்த எனக்கு அவர் கற்பித்த நெறிமுறைகளே மேற்கண்ட வினாக்களுக்கு விடையளித்துள்ளன. அடுத்து வெளிவரும் தமிழ்ச் சொற்பிறப்பு நெறிமுறை மடலத்தில் அவை விரிவாக இடம் பெறும்.

1994இல் நான் ஓய்வுபெற்ற பின்னர் 14 ஆண்டுகளாக இயக்குநர் அமர்த்தப்படாத நிலையில் அரசு செயலாளர்களாக இருந்த இ.ஆ.ப., அதிகாரிகள் பொறுப்பு இயக்குநர்களாக இருந்த காலத்தில் தக்க மேற்பார்வைக்குரிய தமிழறிஞர்கள் இல்லாததால் வடசொல் எது தமிழ்ச் சொல் எது எனும் வரையறை முறையாகப் பின்பற்றப்படாத குறைகள் சில காணப்படுகின்றன. அவை திருந்திய பதிப்பில் சீராக்கப்படவுள்ளன. அயற்சொல் மடல வெளியீடு அயற்சொற்களை அறவே நீக்கி முற்றிலும் செந்தமிழ்ச் சொற்களை ஆள்வதற்குத் தக்க கருவி நூலாக அமையும்.

**சொற்பயன்பாடு**

"மக்கள் வரவரக் கலைநாகரிக வளர்ச்சியடைந்து வருவதால், அன்றன்று தோன்றும் புதுப் புதுக் கருத்துகட்கெல்லாம் உடனுடன் சொற்கள் அமையப் பெறல் வேண்டும். ஆங்கிலத்தில் அது நடைபெற்று வருகின்றது. ஆனால் தமிழிலோ அஃதில்லை. அதோடு இருந்த சொற்களும் பல இறந்துவிட்டன. உலக வழக்கிறந்த சொற்கள் செய்யுள் அல்லது நூல் வழக்கிலும், நூல் வழக்கிறந்த சொற்கள் அகரமுதலியிலும் இடம்பெறுவதுண்டு. தமிழில் ஏழாம் நூற்றாண்டுக்கு முன்பு அகரமுதலியும், இவ்விருபதாம் நூற்றாண்டிற்கு முன்பு விரிவான அகரமுதலியும் இருந்ததில்லை. ஆதலால் இதற்குமுன் வழக்கிழந்த சொற்களெல்லாம் மீளா இருளில் மூழ்கிவிட்டன. அவைபோக எஞ்சியவற்றுள்ளும் பல வழக்கிழந்துள்ளன. அவை வழக்கற்றமைக்குக் காரணம் அவற்றை வழங்காமையே"[1]. ஆகையால் இங்கு அயற்சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இது தமிழின் வளமையை எடுத்துக்காட்டுவதோடு வழக்கிழந்த சொற்களை மீட்டுருவாக்கம் செய்வதற்கும் பெருந்துணை புரியும் என்பதில் ஐயம் இல்லை.

---

1. பாவாணர், சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், தமிழ் மண் பதிப்பகம், 2000 (முதற்பதிப்பு 1949), பக்.73.

**அக்கம்** *akkam*, பெ.(n.) உலகப் படத்தில் நிலநடுக்கோட்டின் இருபாலும் உள்ள கிடைவரை (வின்.); terrestrial latitude.

**த.வ. நிலகிடைக்கோடு**

*[Skt. akṣa>த. அக்கம்.]*

longitude நெடுவரை எனவும் latitude கிடைவரை எனவும் கூறப்படும்.

**அக்கமம்** *akkamam*, பெ.(n.) பொறுமை யின்மை, (சிந்தா. நி. 31); impatience.

*[Skt. a-kṣamā>த. அக்கமம்.]*

**அக்கரகாலம்** *akkara-kālam*, பெ.(n.) தாள அளவை; chief unit of time.

*[அக்கர(ம்) + காலம்.]*

*[Skt.a-kṣara > த. அக்கர(ம்).]*

**அக்கரச்சுதகம்** *akkara-c-cudagam*, பெ.(n.) ஒருபொருள் பயப்பதோர் சொற்கூறி, அச்சொல்லில், ஓரோ ரெழுத்தாக நீக்க, வேறுவேறு பொருள் பயக்கும் சித்திரப்பா (தண்டி. 95; யாப். வி. ஒழிபி. 1, உரை.); verse composed with a play on words, a word by gradual elimination becoming different words with different meaning, as in *kanakāri, nakāri, kāri,* or *pālāvi, pālā, pā.*

**த.வ. நீங்கெழுத்துப்பா**

*[அக்கரம் + சுதகம்.]*

*[Skt. a-kṣara - cyutaka > த. அக்கரச்சுதகம்.]*

**அக்கரதாரணை** *akkara-tāraṇai*, பெ.(n.) தொண்பது (ஒன்பது) வகைச் சிவயோகங்களில் (தாரணையுள்) ஒன்று (யாப். வி. 96, பக். 516); one of *navatāraṇai*, practised by Šaiva Yōgis.

*[அக்கர(ம்) + தாரணை.]*

*[Skt. akṣara + dhāraṇā > த. அக்கரதாரணை.]*

**அக்கரதீபம்** *akkara-dībam*, பெ.(n.) வடமொழியிலுள்ள ஐம்பத்தோ ரெழுத்துகளைக் குறிக்குமுகத்தான் கோயிலிலேற்றப் பெறும் ஐம்பத்தொரு விளக்கு; row of 51 lights set up in temples, as representing the 51 letters of the Skt. alphabet.முப்பது விளக்கு ஏற்றுவது தமிழ் மரபு. 30 lights representing Tamil tradition.

**த.வ. எழுத்து விளக்கு.**

*[Skt. a-kṣara > த. அக்கரம்.]*

*[தீ → தீவம் > Skt. dīpa > த. தீபம்.]*

**அக்கரம்**[1] *akkaram*, பெ.(n.) 1. எழுத்து (சிவதரு. கோபுர. 219); letter of the alphabet writing symbol. 2. கற்றல் (திவா.); learning. *"அக்கரம் பிறர்கட் பொறாதவன்" (திருவாலவா. 18,12.).*

**த.வ. எழுத்து.**

*[Skt. a-kṣara>த. அக்கரம்.]*

**அக்கரம்**[2] *akkaram*, பெ.(n.) 1. வானம்; sky. 2. வீடுபேறு (நாநார்த்த); salvation. 3. அறம் (நாநார்த்த.); virtue. 4. கடுமையானது; that which is strong or virulent. *"அக்கர விடத்திற் பாவ நிரையினால்" (மேருமந். 793.).*

**த.வ. மேற்கட்டு.**

*[Skt. akṣara>த. அக்கரம்.]*

**அக்கரவர்த்தனம்** *akkara-varttaṉam*, பெ.(n.) ஒருபொருள் பயப்பதோர் சொற்கூறி அச்சொல்லோடு, ஓரோ ரெழுத்தாகக் கூட்ட வேறுவேறு பொருள் பயக்கும் சித்திரப் பா (பி.வி. 26, உரை.); verse composed with a play on words, a word by gradual addition becoming different words with different meaning, as in *kam, nagam, kanagam, kōkanagam,* or *kā, kāvi, kāviri.*

**த.வ. சேர்ப்பெழுத்துப்பா**

*[Skt. a-kṣara+vardhana> த. அக்கரவர்த்தனம்.]*

**அக்கரவர்த்தி** *akkara-vartti*, பெ.(n.) **அக்கரவர்த்தனம்** பார்க்க; see akkara-varttaṉam.

**த.வ. சேர்ப்பெழுத்துப்பா**

*[Skt. a-kṣara+vṛddhi>த. அக்கரவர்த்தி.]*

**அக்கரவிந்து** *akkara-vindu*, பெ.(n.) நால்வகைச் சொற்களுள், ஒன்றாயதும், உந்தி யினின்று முகிழ்த்து, நெஞ்சகத்தைச் சென்றடைவதுமான, இசைவடிவிலமைந்த ஒலி வடிவெழுத்து (அஷ்டப்பிரக. இரத்தின. 40.); sound from the navel, one of four kinds of *vākku*.

*[அக்கர(ம்) + விந்து.]*

*[**Skt.** akṣara>த. அக்கர(ம்).]*

**அக்கரவிலக்கணம்** *akkara-v-ilakkaṇam*, பெ.(n.) அறுபத்து நன்கு கலைகளுள் ஒன்றாகிய எழுத்திலக்கணம்; orthography, one of sixty four arts.

*[அக்கரம் + இலக்கணம்.]*

*[**Skt.** a-kṣara > த. அக்கரம்.]*

*இலக்கு > இலக்கணம் >* **Skt.** *lakṣaṇa.*

**அக்கரன்** *akkaraṉ*, பெ.(n.) கடவுள் (சங். அக.); God, as the indestructible one.

*[**Skt.** a-kṣara>த. அக்கரன்.]*

**அக்கரா** *akkarā*, பெ.(n.) அக்கரகாரமென்னும் மருந்து வேர்; pellitory root.

*[**U.** akarkarhā>த. அக்கரா.]*

**அக்கராலத்தி** *akkarālatti*, பெ.(n.) வடமொழியிலுள்ள 51 எழுத்துக்களைக் குறிக்கும் கோயில் தீவவகை (குற்றா. கல. சிவபூசை. 48.); row of 51 lights set up in temples as representing the 51 letters of the Skt. alphabet.

*[அக்கர(ம்) + ஆலத்தி.]*

*[**Skt.** a-kṣara>அக்கர(ம்).]*

*[ஆலா→ஆலாத்து →ஆலாத்தி >* **Skt.** *āratti]*

**அக்கரோட்டு** *akkarōṭṭu*, பெ.(n.) மரவகை; English walnut.

*[**U.** akhrōṭ>த. அக்கரோட்டு.]*

**அக்கல்** *akkal*, பெ.(n.) 1. அறிவு; wisdom, sensibility. 2. செய்தி (சென்னை); news.

*[**Ar.** aql>த. அக்கல்.]*

**அக்காத்தி** *akkātti*, பெ.(n) திக்கற்றவன்; one without resources or friends. *அவன் அக்காத்தியாய்த் திரிகிறான் (இ.வ.).*

**த.வ. திக்கிலி, போக்கிலி.**

*[**Skt.** a-gati>த. அக்காத்தி.]*

**அக்கிசசூர்** *akki-ša-šūr*, பெ.(n.) கண்ணோய் வகையு ளொன்று; disease of the eye.

*[**Skt.** akṣhi+sa-sur>த. அக்கிசசூர்.]*

**அக்கியானம்** *akkiyāṉam*, பெ.(n.) **அஞ்ஞானம்** பார்க்க; see *aññāṉam*.

*[**Skt.** agñānam>த. அக்கியானம்.]*

**அக்கியானி** *akkiyāṉi*, பெ.(n.) 1. அறிவிலி; person without spiritual knowledge. 2. புறச்சமயத்தான்; heathen.

**த.வ. அஞ்ஞானி.**

*[**Skt.** a-jñānin>த. அக்கியானி.]*

**அக்கிரகண்ணியன்** *akkira-kaṇṇiyaṉ*, பெ.(n.) முதல்வனாக மதிக்கப்படுபவன்; one who is considered foremost, highest in rank. *"மகா வீரர்க்கெல்லாம் அக்கிர கண்ணியன்" (சி.சி. பாயி. சிவாக்.).*

*[அக்கிர(ன்) + கண்ணியன்.]*

*[**Skt.** agra > த. அக்கிர(ன்).]*

கண் → கண்ணியம் → கண்ணியன் >**Skt.** *gaṇya.*

**அக்கிரகத்தம்** *akkira-kattam*, பெ.(n.) 1. கை நுனி; the extremity of the arm. 2. வலக்கை; the right hand (சா. அக.).

*[**Skt.** agra+hasta>த. அக்கிரகத்தம்.]*

**அக்கிரகாரப்பிரதிட்டை** *akkirakāra-p-piradiṭṭai*, பெ.(n.) பார்ப்பனக் குடிகளை வீடுகட்டிக் குடியேற்றுகை; establishment of a number of Brahmin families in a village, one of *šapda-šandāṉam*.

*[**Skt.** agra-hāra+prati-ṣtha> த.அக்கிரகாரப் பிரதிட்டை.]*

**அக்கிரகாரம்** *akkirakāram*, பெ. (n.) 1. பார்ப்பனர் வாழும் குடியிருப்பு; the area in a village or town where Brahmin traditionally live. 2. முற்காலத்தில் பார்ப்பனர்க்குக் கொடுக்கப்பட்ட இறையிலியூர் (M.M.); village formerly allotted to *Brāhmins* at a favourable assessment or rent free.

த.வ. பார்ப்பனச்சேரி.

*[Skt. agra-hāra>த. அக்கிரகாரம்.]*

**அக்கிரகாரவாடை** *akkirakāra-vāḍai*, பெ.(n.) பெரும்பாலும் பார்ப்பனரும் சிறுபான்மை பிற இனத்தவரும் பயன்கொள்ளும் பொருட்டு, இறையிலியாக விடப்பட்ட ஊரகப்பகுதி (W.G.); part of a village exempt from revenue, usually owned by Brahmins but sometimes by other classes.

*[அக்கிரகார(ம்) + வாடை.]*

*[Skt. agra-hāra>த. அக்கிரகார(ம்).]*

**அக்கிரகோடி** *akkira-kōḍi*, பெ.(n.) நண்பகல் வரி(ரேகை)க்கும் உச்சிக்கோட்டுக்கும் இடையே யுள்ள சக்கரவாளத்தின் பகுதி (பாண்டி.); (Astron.) azimuth.

*[அக்கிர(ம்) + கோடி.]*

*[Skt. agra>த.அக்கிர(ம்).]*

கோடு → கோடி.

**அக்கிரச்சா** *akkira-c-cā*, பெ.(n.) கோள், விண்மீன் முதலியன நேர்கிழக்கிற்கு வடபுறமாவது தென்புறமாவது விலகி யுதிக்கும் போது அவ்விடத்துக்கும் நேர் கிழக்கிற்கும் இடையிலுள்ள வட்டப் பகுதியின் குறுக்களவு வகை (வின்.); (Astron.) sine of the amplitude.

*[Skt. agra+jyā>த.அக்கிரச்சா.]*

**அக்கிரசங்கை**[1] *akkira-šaṅgai*, பெ.(n.) தகுதி முதன்மைபற்றி ஒருவற்கு நடத்தும் மதிப்புரவு; honours paid to the first in rank.

*[Skt. agra+šaṅkhyā > த. அக்கிரசங்கை.]*

**அக்கிரசங்கை**[2] *akkira-šaṅgai*, பெ.(n.) 1. கணைக்காலின் முன் பாகம்; the anterior border of the leg from the ankle to the knee, shin. 2. முன்தொடை; the front portion of thigh (சா. அக.).

*[Skt. agra+saṅga > த. அக்கிரசங்கை.]*

**அக்கிரசந்தானி** *akkira-šandāṉi*, பெ.(n.) வாழ்பவர்களுடைய நன்மை தீமைகளெழுதப் படுவதாகக் கூறப்படும் கூற்றுவனுடைய குறிப்பேடு; register of good and bad actions of all beings, maintained by Yama.

*[Skt. agra+saṃdhāni> த.அக்கிரசந்தானி.]*

**அக்கிரசம்பாவனை** *akkira-šambāvaṉai*, பெ.(n.) முதல் பரிசில்; priority of attention, because of rank, priority in presentation of gifts, as a mark of honour.

*[Skt. agra + saṃbhāvanā > த.அக்கிர சம்பாவனை.]*

**அக்கிரசருமம்** *akkira-šarumam*, பெ.(n.) 1. நுனித்தோல்; the foreskin. 2. ஆண் குறியின் நுனித்தோல்; the foreskin of the penis, prepuce (சா.அக.).

*[Skt. agra+carman > த. அக்கிரசருமம்.]*

**அக்கிரசன்** *akkirašaṉ*, பெ.(n.) உடன்பிறப்புகளுள் மூத்தவன்; elder brother, first-born.

த.வ. தமையன்.

*[Skt. agra-ja> த. அக்கிரசன்.]*

**அக்கிரசன்மன்** *akkira-šaṉmaṉ*, பெ.(n.) 1. தமையன்; elder brother. 2. பார்ப்பான்; Brahmin.

*[Skt. agra-ja> த. அக்கிரசன்மன்.]*

**அக்கிரசா** *akkirašā*, பெ.(n.) **அக்கிரச்சா** (வின்.) பார்க்க; see *akkiraccā*.

*[Skt. agra+jyā>த. அக்கிரசா.]*

**அக்கிரசாலை** *akkira-šālai*, பெ.(n.) பார்ப்பனர்க்கு உணவளிக்குமிடம் (Insc.); feeding-house for *Brāhmins*.

*[அக்கிர(ம்) + சாலை.]*

*[Skt. agra > த. அக்கிரம்.]*

சால் → சாலை.

**அக்கிரசாலைப்புறம்** *akkira-šalai-p-puram*, பெ.(n.) பார்ப்பனர்க்கு உணவளிக்கும் பொருட்டு வேந்தனால் விடப்பெறும் இறையிலி நிலம் (Insc.); endowment land to provide a feeding-house for *Brāhmins.*

*[அக்கிர(ம்) + சாலைப்புறம்.]*

*[Skt. agra > த. அக்கிர(ம்).]*

தமிழர் வரலாற்றில் இடைக்காலத்தில் தோன்றிய வழக்கம்.

**அக்கிரசூதகம்** *akkira-šūdagam*, பெ.(n.) மங்கையின் முதற்பூப்பு; the first menstruation (சா. அக.).

*[Skt. agra+sūtaka > த. அக்கிரசூதகம்.]*

**அக்கிரணி** *akkirani*, பெ.(n.) முதல்வன் (சம். அக); leader, foremost person.

*[Skt. agra-ṇī > த. அக்கிரணி.]*

**அக்கிரணிவாசி** *akkiranivāši*, பெ.(n.) அமுக்கிரா; horse-root or Indian - winter - cherry - *Physalis somni fera alias withania somnifera* (சா.அக.).

**அக்கிரதாம்பூலம்** *akkira-tāmbūlam*, பெ.(n.) மதிப்புரவின் பொருட்டு முதற்கண் கொடுக்கும் தாம்பூலம்; priority in presentation of *pānsupāri.*

*[அக்கிர(ம்) + தாம்பூலம்.]*

*[Skt. agra > த. அக்கிர(ம்).]*

தம்பலம் → தாம்பூலம்>**Skt.** tāmbūla.

**அக்கிரபாசம்** *akkira-pāšam*, பெ.(n.) 1. முன் பக்கம்; the fore part of anything. 2. நுனி; the extreme point of anything. 3. உடம்பின் முன் உறுப்பு அதாவது கை, கால்; one of the extremities of an animal body, namely the arm or the leg, especially the latter (சா. அக.).

*[அக்கிர(ம்) + பாசம்.]*

**அக்கிரபூசை** *akkira-pūšai*, பெ.(n.) முதன் மதிப்புரவு; first act of reverence.

*[அக்கிர(ம்) + பூசை.]*

*[Skt. agra > த. அக்கிர(ம்).]*

பூசு → பூசை>**Skt.** *pūjā*

**அக்கிரம்**[1] *akkiram*, பெ.(n.) திருப்படையல்; sacred meal, food-offering. *"போழுங் குமர னமைச்ச அக்கிரம்" (T.A.S. iii, 166.)*

*[Skt. agra > த. அக்கிரம்.]*

**அக்கிரம்**[2] *akkiram*, பெ.(n.) 1. நுனி; tip. *"தருப்பை கைக்கொண்டக்கிரங் கிழக்கதாக" (இரகு. கடி. 79.).* 2. உச்சி; the upper part of anything especially the head in an animal. 3. மேற்பாகம்; the front side of anything. 4. சிறப்பு முதன்மை; that which is foremost, first. 5. கோள் கீழ் மேல்வீதி அகறல் (வின்.); (Astron.) amplitude of a celestial object. 6. இரந்து பெற்ற நாலு கவள வுணவு (பிச்சை) (கூர்மபு. நித்திய கன். 17); four handful of food given as alms.

*[த.அகரம் (முதன்மை) > Skt. agra > த.அக்கிரம்.]*

**அக்கிரமச்சா** *akkirama-c-cā*, பெ.(n.) **அக்கிரச்சா** (வின்) பார்க்க; see *akkiraccā.*

*[Skt. agrima+jyā > த. அக்கிரமச்சா.]*

**அக்கிரமச்சியை** *akkirama-c-ciyai*, பெ.(n.) **அக்கிரச்சா** (வின்.); பார்க்க; see *akkiraccā.*

*[Skt. agrimā+jyā > த. அக்கிரமச்சியை.]*

**அக்கிரமசூதகம்** *akkirama-šūdagam*, பெ.(n.) 1. முறைமைக்கு எதிராகக் காணும் மாதவிலக்கு; menstruation which does not recur at proper intervals, irregular menstruation. 2. **அகாலசூதகம்** பார்க்க; see *agāla-šūdagam* (சா.அக.).

*[Skt. ā+krama+sūdaka > த. அக்கிரம சூதகம்.]*

**அக்கிரமண்டபம்** *akkira-maṇḍabam,* பெ.(n.) கோயிலின் முகமண்டபம்; front hall of a temple. *“திருவக்கிர மண்டபமும் செய்தான்” (புதுக்.கல். 634).*

*[அக்கிர + மண்டபம்.]*

*[**Skt.** agra> த. அக்கிர(ம்).]*

*மண்டகம்>மண்டவம்>மண்டபம்>**Skt.** maṇḍapa.*



**அக்கிரமதேவியார்** *akkira-madēvīyār,* பெ.(n.) அரசமா தேவி (M.E.R. 165 of 1925); the chief queen.

*[அக்கிரம் + தேவியார்.]*

*[**Skt.** agra > த. அக்கிரம.]*

**அக்கிரமப்பிரசவம்** *akkirama-p-pirašavam,* பெ.(n.) இயற்கை நிலைக்கு வேறுபட்ட மகப்பேறு; labour differing from its natural state by its difficulty, duration or danger involved, preternatural labor (சா.அக.).

**த.வ. கொடுமகப்பேறு.**

*[**Skt.** a-krama+pra-šava > த. அக்கிரமப் பிரசவம்.]*

**அக்கிரமப்பிரேதவடக்கம்** *akkirama-p-pirēda-v-aḍakkam,* பெ.(n.) பாம்பு முதலிய நச்சுயிரிகளால் கடியுண்டு சிலநேரங்களில் உயிரடங்கிப் பிணத்தைப்போல் கிடக்கும் நோயாளியை இறந்து விட்டதாகக் கருதி புதைக்கை; a wrong or mistaken burial of a living patient in the cataleptic state induced by snake. bite or sting of poisonous insects, on the authoritative pronouncement of the doctor in attendance (சா. அக.).

*[அக்கிரமம் + பிரேதம் + அடக்கம்.]*

*[**Skt.** a-krama+pirēda>த.அக்கிரமப் பிரேதம்.]*

அடங்கு → அடக்கு → அடக்கம்.

பிணத்தை 90 நாழிகை வரைக்கும் புதைக்கக் கூடாதென்று சத்தியாரூடம், சித்தாரூடம், நாகாரூடம் முதலிய சில தமிழ் நூல்கள் கூறுகின்றன.

**அக்கிரமப்புணர்ச்சி** *akkirama-p-puṇarcci,* பெ.(n.) முரணாக, மாதவிலக்கான பெண், மகப்பேறுற்றவள், நோயாளி அல்லது மருந்துணவிலிருக்கும் பெண் ஆகிய இவர்களுடன் கூடும் முறைகேடான கூட்டம்; (in medicine) irregular sexual intercourse with a woman during her menstrual period or pregnancy or during her illness or dietetic treatment, contrary to all rules of hygiene. 2. அற நூல்களிற் கூறப்பட்டவற்றிற்கு எதிராகக் கைம்பெண், பொதுமகள், பிறன்மனை, தாயார், உடன் பிறந்தாள், மூத்தவள், குரு மனைவி முதலானவர்களைத் திருட்டுத் தனமாய் கூடும் முறை கேடான புணர்ச்சி; (in moral philosophy) illicit intercourse or in other words clandestine sexual connection with a widow, a virgin, a prostitute or other women, with whom sexual intercourse is prohibited because of their relationship such as mother, sister, elderly woman, guru's wife and so on, against all principles of morality and the established rules and customs of society. 3. பிறன்மனை, பருவமடையாப் பெண், இசையா பெண் ஆகியோரை வலியப் புணர்தல்; (in law) illegal intercourse i.e., copulation with a married woman amounting to adultery under section 497 I.P.C. or with a woman

forcibly against her will and without her consent or with a girl under 12 years of age amounting to rape under section 375 I.P.C. or with a woman who is dead or unconscious (சா. அக.).

*[அக்கிரம(ம்) + புணர்ச்சி.]*

*[**Skt.** a-krama > த. அக்கிரம(ம்).]*

புல் → புள் → புண் → புணர் → புணர்ச்சி. 'சி' தொழிற்பெயரீறு.

**அக்கிரமப்பேச்சு** *akkirama-p-pēccu*, பெ.(n.) கேடு விளைக்குஞ் சொல் (R.) improper, evil speech, calumny.

*[அக்கிரம(ம்) + பேச்சு.]*

*[**Skt.** a-krama > த. அக்கிரம(ம்).]*

**அக்கிரமம்**[1] *akkiramam*, பெ. (n.) 1. ஒழுங்கின்மை; irregularity; (in medicine) not occurring successively or at proper time. 2. முறைமையல்லாதது; non-conformity to rule. 3. நேர்மையின்மை, injustice. 4. கொடுமை; cruelty.

**த.வ. அன்முறை, அல்நயம்.**

*[**Skt.** a-krama>த. அக்கிரமம்.]*

**அக்கிரமம்**[2] *akkiramam*, பெ.(n) 1. அட்டூழியம்; unjust or unfair act; atrocity. *'குடிசைகளுக்குத் தீ வைத்தது அக்கிரமம் இல்லையா?' (இ.வ.).* 2. தொல்லை; mischief, nuisance. *'நாய்களின் அக்கிரமம் பொறுக்க முடியவில்லை' (இ.வ.)* (கிரியா.).

**த.வ. நயக்கேடு.**

*[**Skt.** a-krama>த. அக்கிரமம்.]*

**அக்கிரமமலம்** *akkirama-malam*, பெ.(n.) காலந்தவறி மலங்கழித்தல்; passing stools at irregular intervals-defecation (சா.அக.).

*[அக்கிரம(ம்) + மலம்.]*

*[**Skt.** a-krama > த. அக்கிரம(ம்).]*

**அக்கிரமாமிசம்** *akkira-māmišam*, பெ.(n.) நெஞ்சகம் (அரத்தாசயம்); the primary organ of the blood's motion an animal, namely the heart. 2. நெஞ்சாங்குலையின் தசைப்பற்று; the muscles of the heart (சா.அக.).

*[**Skt.** agra+māmsa>த. அக்கிரமாமிசம்.]*

**அக்கிரமி**[1]**-த்தல்** *akkirami*, 4 செ.கு.வி (v.i.) தீங்கு செய்தல் (பஞ்ச. திருமுக. **81**); to do wrong or mischief.

*[**Skt.** a-krama>த. அக்கிரமி-,]*

**அக்கிரமி**[2] *akkirami*, பெ.(n) அறமுறை பிழைத்தோன் (நீதி); one who is unjust.

**த.வ. அறக்கேடன்.**

*[**Skt.** a-kramin>த. அக்கிரமி.]*

**அக்கிரரோகம்** *akkira-rōgam*, பெ.(n) இயல்பாகக் கண் சிவந்து மாறும்; மலரவிழிக்க வொட்டாது, கண்ணீர் ஒழுகி, இமை தடித்துக் கடைக்கண்ணில் அறுப்பது போல வலியையும் கூச்சத்தையு முண்டாக்கிப் பீளைதள்ளுமொரு கண்ணோய்; an inflammation of the superficial tissues of the eye, especially of the conjunctive, which will soon disappear. It is marked by an acute pain on the ocrnea of the eye, a catarrhal or muco-purulent secretion and swelling of the eyelids, Conjuctivitis (சா. அக.).

**த.வ. கண்ணோய்.**

*[**Skt.** a-kra+rōga > த. அக்கிரரோகம்.]*

**அக்கிரவம்** *akkiravam*, பெ.(n) தான்றிக்காய்; the fruit of the tree, *Belleric myrobalan - Terminalia belerica* (சா. அக.).

*[**Skt.** agrava> த. அக்கிரவம்.]*

**அக்கிரன்** *akkiran*, பெ.(n) உடன்பிறப்புகளுள் மூத்தவன் (வின்.); elder brother.

**த.வ. தமையன்.**

*[**Skt.** agra>த. அக்கிரன்.]*

**அக்கிரா** *akkirā*, பெ.(n) **அக்கிராரம்** (பொதி. நி.) பார்க்க; see *akkirāram.*

**த.வ. பார்ப்பனச்சேரி.**

*[**Skt.** a-grā>த. அக்கிரா.]*

**அக்கிராகியச்சரக்கு** *akkirāgiya-c-carakku*, பெ.(n) மருத்துவத்தில் ஏற்றுக்கொள்ளப் படாத மருந்துப்பண்டம்; in medicine non official drug, a drug not recognised by the pharmacopocia (சா.அக.).

*[அக்கிராகியம் + சரக்கு.]*

*[**Skt.** a-grāhya > த. அக்கிராகியம்.]*

சர் → சரகு → சரக்கு.

**அக்கிராகியம்** *a-k-kirāgiyam*, பெ.(n) 1. ஏற்றுக் கொள்ளத்தகாதது; that which is inadmissible. 2. புலனாகாதது; that which cannot be perceived. *"அக்கிராகியமான தேஜோரூபமாம்" (சி.சி. பாயி. சிவாக்.).*

*[**Skt.** a-grāhya>த. அக்கிராகியம்.]*

**அக்கிராசன்** *akkirāšan*, பெ.(n) எலும்புருக்கி நோயுண்டாக்குவதாகக் கருதப்படுங் கோள் (தஞ். சரசு. iii, 172); (Astrol.) a planet believed to cause consumption.

**அக்கிராசனம்** *akkirāšanam*, பெ.(n) அவைத் தலைமை; seat of honour, the chair at a meeting.

*[**Skt.** agra+āsana>த. அக்கிராசனம்.]*

**அக்கிராசனர்** *akkirāšanar*, பெ.(n) அவைத் தலைவர்; chairman, president.

*[**Skt.** agra+āšana > த. அக்கிராசனர்.]*

**அக்கிராசனாதிபதி** *akkirāšanādipadi*, பெ.(n) அவைத்தலைவர்; chairman, president.

*[**Skt.** agra+āsana+adipadi>த. அக்கிராசனாதிபதி.]*

**அக்கிராசியம்** *akkirāšiyam*, பெ. (n) **அக்கிராகியம்** பார்க்க; see *akkirāgiyam* (சா. அக.).

*[**Skt.** a-grāhya>த. அக்கிராசியம்.]*

**அக்கிராத்தம்** *akkirāttam*, பெ.(n.) 1. கை நுனி; extremities of the hand. 2. வலக்கை; the right hand (சா. அக.).

*[**Skt.** agra+hastam>த. அக்கிராத்தம்.]*

**அக்கிராரம்** *akkirāram*, பெ. (n.) பார்ப்பனர் வாழும் பகுதி அல்லது வீதி; *Brāhmin* street. *"அக்கிராரச் சேஷியுமோ வப்படிவே" (தனிப்பா.).*

**த.வ. பார்ப்பனச்சேரி.**

*[**Skt.** agra-hāra>த. அக்கிராரம்.]*

**அக்கிரியம்** *akkiriyam*, பெ.(n.) முதலி லுண்டானது அல்லது பிறந்தது; the first born (சா. அக.).

**த.வ. தலைச்சன், முதற்பிள்ளை.**

*[**Skt.** agriya > த. அக்கிரியம்.]*

**அக்கிரியன்** *akkiriyan*, பெ.(n.) தமையன் (வின்.); elder brother.

*[**Skt.** agriya>த. அக்கிரியன்.]*

**அக்கிரு** *akkiru*, பெ.(n.) விரல் (வின்.); finger.

*[**Skt.** agru>த. அக்கிரு.]*

**அக்கிருகம்** *akkirugam*, பெ. (n.) மாஞ்சரோகணி; a rare plant used by Siddhars for strengthening the body, a drug unidentified? (சா. அக.).

**அக்கிரேசரன்** *akkirē-šaran*, பெ.(n) தலைவன்; leader.

*[**Skt.** agra-āsana>agrē-sara>த. அக்கிரேசரன்.]*

**அக்கிரோனம்** *akkirōnam*, பெ.(n.) **அக்கிரகோடி** (பாண்டி.) பார்க்க; see *akkira kōdi*

**அக்கினி** *akkini*, பெ.(n.) 1. தீ; fire. 2. தீக்கடவுள் (பிங்.); Agni, the god of fire, regent of the south east, one of *asta-tikku-p-pālakar*, q.v.s. 3. வேள்வித் தீ; sacrificial fire. 4. உணவைச் செரிமானம் செய்யும் வயிற்றுத் தீ; digestive fire. 5. முளரிப் (ரோசா) பூவுள்ள கொடிவகை; rosy-flowered lead wort.

6. பகல் 15 முழுத்தத்துள் பதினொராவதும் இரவு 15 முழுத்தத்துள் ஏழாவதும் (விதான. குணா. 73, உரை); (Astrol.) the 11th of 15 divisions of day and the 7th of those of night. 7. வெடியுப்பு (மூ.அ.); saltpetre. 8. ஒருவகை உப்பு; ammonium chloride. 9. செடிவகை (மலை); tribulus plant.

உள் > உண் > உண. உணத்தல் = காய்தல். உண > உணங்கு > உணங்குதல் = காய்தல். உண் > உண்ணம் > **Skt.** uṣṇa. உள் > அள் > (அழு)>அழல்>அழன்>அழனம் = தீ (பிங்.), வெம்மை (பிங்.).அழன்>அழனி> **Skt.**agni >த.அக்னி> L.ignis.

**அக்கினிஇரசம்** *akkiṉi-i-rašam*, பெ.(n.) இதளியம், கந்தகம், கடுக்காய் முதலான சரக்குகளைப் பொடித்து கருவேலங்கருக்குக் கியாழத்தினாலரைத்து ஈளை நோயகல உட்கொள்ளுமொருவகை மாத்திரை (அநு.வை); a kind of pill used in *āsthma* which is containing mercury, sulphur and gall-nut as its chief ingredients (சா. அக.).

*[**Skt.** agni+rasa.]*

**அக்கினிக்கட்டு** *akkiṉi-k-kaṭṭu*, பெ.(n.) தீ அடக்கல்; art of suspending the action of fire by magic. *"காடுகட் டக்கினிக்கட்டு காட்டித் தருவேன்" (குற்றா. குற. 116.1.).*

*[அக்கினி + கட்டு.]*

*[**Skt.** agni > த. அக்கினி.]*

கள் → கடு → கட்டு.

**அக்கினிக்கண்** *akkiṉi-k-kaṇ*, பெ.(n.) அரத்தக் கண்; blood-shot eye (சா. அக.).

**த.வ. செங்கண்.**

*[அக்கினி + கண்.]*

*[**Skt.** agni > த. அக்கினி.]*

கள் (கருமை) → கண்.

**அக்கினிக்கண்ணன்** *akkiṉi-k-kaṇṇaṉ*, பெ.(n.) 1. கொடியவன்; cruel man. 2. நெருப்பைக் கண்ணாக வுடையவன், தீங்கு பயக்குங் கண்ணுடையவன் (இ.வ.); man of evil eye Lit., a fire - eyed man.

*[அக்கினி + கண்ணன்.]*

*[**Skt.** agni > த. அக்கினி.]*

கள் → கண் → கண்ணன்.

**அக்கினிக்கணம்** *akkiṉi-k-kaṇam*, பெ.(n.) தீப்பொறி; spark (சா. அக.)

*[அக்கினி + கணம்.]*

*[**Skt.** agni > த. அக்கினி.]*

கள் → கண் → கணம்> **Skt.** gaṇa.

**அக்கினிக்கப்பம்** *akkiṉi-k-kappam*, பெ.(n.) கடல் நுரை (வை. மூ.); cuttle-bone.

*[அக்கினி + கப்பம்.]*

*[**Skt.** agni> த. அக்கினி.]*

**அக்கினிக்கப்பரை** *akkiṉi-k-kapparai*, பெ.(n.) கோயில் திருவிழா முதலியவற்றில் எடுக்கும் நெருப்புச்சட்டி (இ.வ.); fire-pot as in temple-procession.

**த.வ. தீச்சட்டி.**

*[அக்கினி + கப்பரை.]*

*[**Skt.** agni > த. அக்கினி.]*

**கொப்பரை → கப்பரை.**



**அக்கினிக்கரப்பான்** *akkiṉi-k-karappāṉ*, பெ.(n.) நோய்வகை (வின்.); severe type of herpes.

*[அக்கினி + கரப்பான்.]*

*[**Skt.** agni > த. அக்கினி.]*

**அக்கினிக்கல்** *akkiṉi-k-kal*, பெ.(n.) சக்கிமுக்கிக்கல் (R); flint, pyrites.

**த.வ. அழற்கல்.**

*[அக்கினி + கல்.]*

*[**Skt.** agni > த. அக்கினி.]*

குல் → கல்.

**அக்கினிக்கள்ளி** *akkiṉi-k-kaḷḷi*, பெ.(n.) கொப்புளங்களை எழுப்பும் ஒரு வகைக் கள்ளி; a kind of spurge the juice of which on coming in contact with the body, causes blistens, *Euphorbia (genus)* (சா. அக.).

*[அக்கினி + கள்ளி.]*

*[**Skt.** agni > த. அக்கினி.]*

கள் → கள்ளி.

**அக்கினிக்காட்டம்** *akkiṉi-k-kāṭṭam*, பெ.(n.)
1. **அகருக்கட்டை** பார்க்க; see *agaru-k-kaṭṭai*.
2. **அகில்** பார்க்க; see *agil* (சா.அக.).

*[**Skt.**agni+kāṣtha→ த. அக்கினிக்காட்டம்.]*

*த. கட்டை > **Skt.** kāstā.*

**அக்கினிக்காரியம்** *akkiṉi-k-kāriyam*, பெ.(n.) எரியோம்பல் முதலியன; religious rites performed in the consecrated fire.

*[அக்கினி + காரியம்.]*

*[**Skt.** agni > த. அக்கினி.]*

**அக்கினிக்காற்று** *akkiṉi-k-kāṟṟu*, பெ.(n.) வெப்பக்காற்று; a fierce hot wind (சா. அக.).

*[அக்கினி + காற்று.]*

*[**Skt.** agni > த. அக்கினி.]*

**அக்கினிக்குண்டம்** *akkiṉi-k-kuṇḍam*, பெ.(n.) வேள்வி வளர்க்குங் குழி; enclosed pit for consecrated fire.

*[அக்கினி + குண்டம்.]*

*[**Skt.** agni > த. அக்கினி.]*



**அக்கினிக்குமரம்** *akkiṉi-k-kumaram*, பெ. (n.) முன்பேற்ற உணவுசெரியாமை மற்றும் நீர்கோத்தல் முதலிய நோய்களுக்குக் கொடுக்கும் ஒரு வகைக் கூட்டு மருந்து; a medicinal compound used for curing indigestion, cold etc., stomachic stimulant (சா.அக.).

*[அக்கினி + குமரம்.]*

*[**Skt.** agni > த. அக்கினி.]*

**அக்கினிக்குமாரரசம்** *akkiṉi-k-kumāra-rašam*, பெ.(n.) இதளியம் (இரசம்) கந்தகம், முதலிய சரக்குகளைச் சேர்த்து, செரியாமை மற்றும் கழிச்சல் முதலான நோய்களுக்குக் கொடுக்கும் ஒரு மருந்து (அநு. வை.); a medicinal preparation consisting of mercury, sulphur, pepper etc. as its chief ingredients, given for indigestion, diarrhoea, etc., stomachic tonic (சா.அக.).

**த. நெருப்பிளஞ்சாறு.**

**அக்கினிக்குளிகை** *akkiṉi-k-kuḷigai*, பெ.(n.) சுரம், சன்னி முதலிய நோய்களுக்குத் தட்சிணாமூர்த்தி திருமந்திரம் 1500இல் சொல்லிய முறைப்படி செய்த ஒரு மாத்திரை; a pill prepared as per process laid down in the work of *Dakshinamurthy*

*Thirumandiram* (1500); prescribed for delirium, fever etc. (சா.அக.).

த.வ. தீக்குளிகை.

*[அக்கினி + குளிகை.]*

*[**Skt.** agni > த. அக்கினி.]*

**அக்கினிக்கூர்மை** *akkiṉi-k-kūrmai*, பெ.(n.) 1. கடல் நுரை; decayed cuttle fish bone, *Os sepiac*. 2. சவட்டுப்பு; a kind of salt extracted from the fuller's earth or dhoby's earth (சா.அக.).

த.வ.சுட்டுக்கூர்ப்பு.

*[அக்கினி + கூர்மை.]*

*[**Skt.** agni > த. அக்கினி.]*

**அக்கினிக்கூறு** *akkiṉi-k-kūṟu*, பெ.(n.) 1. உடம்பிலுள்ள சூட்டின் தன்மை; the nature or effect of heat in the system. 2. நெருப்பின் பாகம்; section of the fire. 3. உடம்பில் சூடுண்டாகும் பகுதிகள்; different centres in the body producing heat, Thermogenic centres (சா.அக.).

*[அக்கினி + கூறு.]*

*[**Skt.** agni > த. அக்கினி.]*

**அக்கினிக்கேது** *akkiṉi-k-kēdu*, பெ.(n.) புகை; smoke (சா.அக.).

*[**Skt.** agnikēdu > த. அக்கினிக்கேது.]*

**அக்கினிக்கொடி** *akkiṉi-k-koḍi*, பெ.(n.) சிறுதேக்கு; fire creeper, *Cleodendron serrata* (சா.அக.).

**அக்கினிக்கோடைச்சோளம்** *akkiṉi-k-kōḍai-c-cōḷam*, பெ.(n.) சோளவகை (விவசா. 3); a kind of maize.

த.வ. செஞ்சோளம்.

*[அக்கினி + கோடைச்சோளம்.]*

*[**Skt.** agni > த. அக்கினி.]*



**அக்கினிகட்டல்** *akkiṉi-kaṭṭal*, பெ.(n.) 1. நெருப்பை மூலிகையாலாவது மந்திர ஆற்றலிலாவது சுட்டெரிக்கா திருக்கச் செய்தல்; stopping the power of fire by medicinal plants or by witch crafts. 2. மூத்திரத்தைக் கட்டல்; suppression of urine (சா.அக.).

த.வ. தீக்கட்டு.

*[அக்கினி + கட்டல்.]*

*[**Skt.** agni > த. அக்கினி.]*

**அக்கினிகண்டம்** *akkiṉi-kaṇḍam*, பெ.(n.) 1. வயிற்றுத்தீ; abdominal or gastric fire. 2. உடம்பினுள் பாலகம் (மூலாதாரம்), அட்டக (சுவாதிட்டான) மென்னுமிரு அடிப்படைகளுக் கிடையேயிருக்குமொரு பகுதி; that portion of the pelvic region between the pelvic and hypogastric plexuses, representing the seat of fire. 3. கொங்கணர் கடைக் காண்டத்தில் சொல்லியுள்ள நாற்பத்து முக்கோணச் சக்கரத்தினொரு பகுதி; that portion demonstrating the philosophical conceptions of fire in a diagram called நாற்பது முக்கோணம், consisting of 40 magic triangles, a mysterious diagram described in the secret science of '*kadaikkāṇḍam*'.

த.வ. அழற்கண்டம்.

*[அக்கினி + கண்டம்.]*

*[**Skt.** agni > த. அக்கினி.]*

**அக்கினிகணம்** *akkiṉi-kaṇam*, பெ.(n.) செய்யுண் முதற்சீராக அமைக்கத் தகாததும் நிரைநேர்நிரை என வருவதுமாகிய தீய செய்யுட்கணம்; (pros.) metrical foot of *nirai-nēr-nirai*, considered inauspicious at the commencement of a poem.

**த.வ. தீக்கணம்.**

*[அக்கினி + கணம்.]*

*[**Skt.** agni > த. அக்கினி.]*

**அக்கினிகபம்** *akkiṉi-kabam*, பெ.(n.) 1. கடல் நுரை; a decayed cuttle fish bone sepia octopedia, alias ossepiac. 2. ஞாயிறு (சூரிய) காந்தம்; a glass which collects the rays of the sun into a focus, producing intense heat and it times producing even fire-burning glass (சா.அக.).

*[**Skt.** agni+kabha> த. அக்கினிகபம்.]*

**அக்கினிகம்** *akkiṉigam*, பெ. (n.) 1. **அக்கினிமுகம்** பார்க்க; see *akkiṉi-mugam*. 2. ஒரு பாம்பு; a kind of serpent. 3. இந்திர கோபப் பூச்சி; a scarlet insect lady fly-*Mutella occidentalis* (சா.அக.).

**த.வ. அழலிகம்.**

*[**Skt.** agnigam>த. அக்கினிகம்.]*

**அக்கினிகம்பி** *akkiṉi-kambi*, பெ.(n.) ஒரு வகை வெடியுப்பு; a kind of saltpetre .

*[அக்கினி + கம்பி.]*

*[**Skt.** agni > த. அக்கினி.]*

**அக்கினிகர்ப்பம்**[1] *akkiṉi-karppam*, பெ.(n.) 1. தீப்பொறி; spark of fire. 2. புதுமைக் குணங்களுடைய பளிங்குக்கல் வகை; a crystal with fabulous qualities (சா.அக.).

*[**Skt.** agni+garbha > த. அக்கினிகர்ப்பம்.]*

**அக்கினிகர்ப்பம்**[2] *akkiṉi-karppam*, பெ.(n.) 1. நெருப்பைத் தன்னிடமாகக் கொண்டது; pregnant with fire. 2. ஞாயிறு (சூரிய) காந்தம்; a gem said to contain and give out sun's heat, the sunstone. 3. கடல்நுரை; a frothy substance engendered by the submarine fire. 4. நீர்மேல் நெருப்பு; a fire plant, *Ammania vesicatoria* (சா.அக.).

*[**Skt.** agni+garbha > த. அக்கினிகர்ப்பம்.]*

**அக்கினிகரப்பன்** *akkiṉi-karappaṉ*, பெ. (n.) 1. நமைச்சலையும் எரிச்சலையுமுண்டாக்கும் அக்கியைப் போன்ற ஒரு வகைக் கரப்பான்; a skin disease of the type of herpes attended with itching and burning, *Herpes desquamans alias Tinea inbricata*. 2. நமைச்சலையும், எரிச்சலையுமுண்டாக்கும் ஒரு வகைச் கரப்பான் நோய்; red spots consisting of small papulae and terminating in a browish itchy scab; a kind of eczema marked by itching and burning, *Eczema papulosum* (சா.அக.).

**த.வ. அழல்கரப்பான்.**

*[அக்கினி + கரப்பன்.]*

*[**Skt.** agni > த. அக்கினி.]*

**அக்கினிகரப்பான்** *akkiṉi-karappāṉ*, பெ. (n.) **அக்கினிகரப்பன்** பார்க்க; see *akkiṉi-karappaṉ* (சா.அக.).

*[அக்கினி + கரப்பான்.]*

*[**Skt.** agni> த. அக்கினி.]*

**அக்கினிகருப்பை** *akkiṉi-karuppai*, பெ.(n.) சாமைப் பயிர்; a kind of millet, Panicum (சா.அக.).

**த.வ. அழல்கருப்பை.**

*[அக்கினி + கரு + பை.]*

சாமைச் சோறு உடலில் வெப்பம் மிகுவிக்கும் எனும் அடிப்படையில் உண்டான பெயர்.

*[Skt. agni > த. அக்கினி.]*



**அக்கினிகருமம்** *akkiṉi-karumam,* பெ.(n.) 1. தீயினாற் சுடல்; actual cauterization (as an ulcer) by means of heated wire or rod thermocautery. 2. மருந்தின் உதவியால் உடம்பிற்குச் சூடு எழுப்பும் ஆற்றல்; thermogenetic potency (சா.அக.).

**த.வ. தீச்சூடு.**

*[அக்கினி + கருமம்.]*

*[Skt. agni> த. அக்கினி.]*

**அக்கினிகல்பம்** *akkiṉi-kalpam,* பெ.(n.) நெருப்பு அல்லது வெப்பத்தன்மை வாய்ந்தது; that which has the nature of fire or heat as the case may be (சா.அக.).

*[அக்கினி + கல்பம்.]*

*[Skt. agni> த. அக்கினி.]*

**அக்கினிகலை**[1] *akkiṉi-kalai,* பெ.(n.) மூக்கின் வழியாக வரும் உயிர்ப்பு (வின்.); breath coming from the nostrils, in *ś*ara-*ś*attiram.

**த.வ. அழல்உயிர்ப்பு.**

*[அக்கினி + கலை.]*

*[Skt. agni > த. அக்கினி.]*

**அக்கினிகலை**[2] *akkiṉi-kalai,* பெ.(n) 1. உயிர்ப்பு; மூச்சு; respiration. 2. வல கலை; the vital air passing through the right nostril. It has for its quality heat. 3. இடைகலை, வலகலை; currents of prana coming through the nostrils or more properly, the two channels called nāḍis for the currents of prana working respectively in the left half of the body, (the left sympathetic) and the right half of the body (the right sympathetics). 4. உயிர்ப்பின்பகுதி, உயிர்ப்பினை உள்வாங்கல் அல்லது வெளிவிடல்; a part of respiration referring either to inhalation or exhalation. 5. நெருப்பு அல்லது வெப்பத்தைப் பற்றிக் கூறும் நூல்; the science heat, *Thermology* (சா.அக.).

*[அக்கினி + கலை.]*

*[Skt. agni> த. அக்கினி.]*

**அக்கினிகாரியம்** *akkiṉi-kāriyam,* பெ.(n.) 1. சமையல் முதலிய வீட்டு வேலை; cooking and other domestic work. 2. சூடு போடல்; (in medicine) the application of a cautery or caustic (சா.அக.).

*[அக்கினி + காரியம்.]*

*[Skt. agni> த. அக்கினி.]*

**அக்கினிகீடம்** *akkiṉi-kiḍam,* பெ.(n.) 1. கடித்தால் கடி வாயிலில் அரத்தங் கம்மி, இலுப்பைப் பூ, பேரீச்சங்காய் முதலியன போல் கொப்புளங்களை எழுப்பி எரிச்சலை உண்டாக்கும் ஒருவகை நச்சுயிரினம்; a class of venomous creature causing swelling in the bitten part, which becomes livid ant gives raise to boils of varied sizes. It consists of 24 kinds. 2. ஒரு வகைப் உயிரினத்தின் நஞ்சு; the poison of a particular kind of creatures. 3. **அக்கினிபாதச்சிலந்தி** பார்க்க; see *akkiṉi-pāda-c-cilandi* (சா.அக.).

**த.வ. அழலூட்டி.**

*[அக்கினி + கீடம்.]*

***[Skt.** agni > த. அக்கினி.]*

**அக்கினிகுணப்பாடு** *akkiṉi-kuṇa-p-pāḍu,* பெ.(n.) நெருப்பு அல்லது வேறு வகை வெப்பத்தினாலுடம்பிலுள்ள நோயைக் குணப்படுத்தல்; treatment of diseases in the system by the application of heat, *Thermotherapy* (சா.அக.).

**த.வ. அழல்குணப்பாடு.**

*[அக்கினி + குணப்பாடு.]*

***[Skt.** agni>த. அக்கினி.]*

**அக்கினிகுணம்** *akkiṉi-kuṇam,* பெ.(n.) உடம்பிலுள்ள சூட்டை எழுப்புங் குணம்; the quality of producing heat, *Thermogenic* property (சா.அக.).

**த.வ. அழற்குணம்.**

*[அக்கினி + குணம்.]*

***[Skt.** agni>த. அக்கினி.]*

**அக்கினிகுமாரம்** *akkiṉi-kumāram,* பெ.(n.) ஒரு கூட்டுமருந்து (பதார்த்த. 1211); a compound medicine.

**த.வ. அழற்குமரம்.**

*[அக்கினி + குமாரம்.]*

***[Skt.** agni > த. அக்கினி.]*

**அக்கினிகுமாரன்**[1] *akkiṉi-kumāraṉ,* பெ.(n.) முருகக் கடவுள்; kandaṉ, as offspring of Agni.

**த.வ. அழற்குமரன்.**

*[அக்கினி + குமாரன்.]*

***[Skt.** agni > த. அக்கினி.]*

*த. குமரன் >* ***Skt.** ku-māra.*

**அக்கினிகுமாரன்**[2] *akkiṉi-kumāraṉ,* பெ.(n.) உடம்பு குளிர்வடையுங் காலத்துச் சூடுண்டாகும்படிச் செய்யக் கொடுக்கும் ஒருவகை மாத்திரை; a kind of medicinal pill which produces a quickly diffused and transient increase of vital energy and heat in the bodily system, a diffusible or a general stimulant (சா.அக.).

**த.வ. அழற்குமரன்.**

*[அக்கினி + குமாரன்.]*

***[Skt.** agni > த. அக்கினி.]*

**அக்கினிகுமாரி** *akkiṉi-kūmāri,* பெ.(n.) அகத்தியர் 1500இல் சொல்லியபடி பதினெண் குட்டம், பெருவயிறு, விப்புருதி முதலிய நோய்களுக்குக் கொடுக்கும் ஒரு வகைக் குளிகை; a medicinal pill used in curing the eighteen kinds of leprosy, abdominal dropsy (ascites), abscess etc, as prescribed in Agastiyar's work (1500) (சா.அக.).

**த.வ. அழற்குளிகை.**

*[அக்கினி + குமாரி.]*

***[Skt.** agni > த. அக்கினி.]*

**அக்கினிகுலம்** *akkiṉi-kulam,* பெ.(n.) அரச குலத்தொன்று; agni race of kings, as descended from Agni, one of three *irāśa-kulam,* q.v.

**த.வ. கதிர்க்குடி, கதிரவக்குடி.**

*[அக்கினி + குலம்.]*

***[Skt.** agni > த. அக்கினி.]*

**அக்கினிகெற்பம்** *akkiṉi-kēṟpam,* பெ.(n.) **அக்கினிக்கூர்மை** பார்க்க; see *akkiṉi-k-kūrmai* (சா.அக.).

**அக்கினிகை** *akkiṉigai,* பெ.(n.) **அக்கினிக் கூர்மை** பார்க்க; see *akkiṉi-k-kūrmai* (சா.அக.).

**அக்கினிகொழுந்து** *akkiṉi-koḻundu,* பெ.(n.) தீ நாக்கு; the little flame of a fire (சா.அக.).

*[அக்கினி + கொழுந்து.]*

***[Skt.** agni >த. அக்கினி.]*

**அக்கினிகோணம்** *akkiṉi-kōṇam,* பெ.(n.) தென் கீழ் மூலை; the SE. quarter, as under the guardianship of Agni.

**த.வ. அழல்மூலை.**

*[அக்கினி + கோணம்.]*

*[**Skt.** agni>த. அக்கினி.]*

*[த. கோண்>கோணம் (மூலை) > **Skt.** kōṇa.]*

**அக்கினிகோத்திரம்** *akkiṉi-kōttiram,* பெ.(n.) பார்ப்பனர்க்கு மட்டுமுரிய தீவழிபாடு, நாடொறுங் காலையிற் செய்யும் தீவேள்வி (திருக்காளத். பு. 26, 6.); sacrifice to Agni and certain other dieties performed daily, morning and evening at a particular time.

*[**Skt.** agni+hōtra> த.அக்கினிகோத்திரம்.]*

**அக்கினிகோத்திரி** *akkiṉi-kōttiri,* பெ.(n.) தீ வேள்வி செய்வோன்; one who habitually performs *agni-hōtra.*

*[**Skt.** agni+hōtrin> த. அக்கினி கோத்திரி.]*



**அக்கினிகோதகம்** *akkiṉi-kōdagam,* பெ. (n.) பெண்கள் தீட்டுக்காலத்தில் நாளும் மேற்கொள்ளும் குளியல்; the daily bath during the menstrual period or period or uncleanliness (சா.அக.).

**அக்கினிகோபம்** *akkiṉi-kōbam,* பெ.(n.) பித்தம்; bile, one of the three humours in the body (சா.அக.).

**அக்கினிகோமுச்சிரவல்லி** *akkiṉi-kōmuc ciravalli,* பெ.(n.) கொடிவேலி; a plant, white-flowered leadwort, *Plumbago zeylanica* (சா.அக.).

**அக்கினிச்சட்டி** *akkiṉi-c-caṭṭi,* பெ.(n.) 1. கோயில் திருவிழாக்களில் எடுக்கும் நெருப்புச் சட்டி (இ.வ.); fire-pot, as in temple-procession, etc. 2. சவத்தை எரியூட்டுதற் பொருட்டு எடுத்துச் செல்லும் நெருப்புச் சட்டி (இ.வ.); fire-pot carried in front of the bier for cremating the corpse.

**த.வ. தீச்சட்டி.**

*[அக்கினி + சட்டி.]*

*[**Skt.** agni > த.அக்கினி.]*

**அக்கினிச்சலம்** *akkiṉi-c-calam,* பெ.(n.) 1. குப்பைமேனி; a plant a vermifuge, *Acalypha indica.* 2. **அக்கினிசிகம்,** 2 பார்க்க; see *akkiṉi-šigam.* 3. நெருப்பும் தண்ணீரும்; fire and water (சா.அக.).

*[அக்கினி + சலம்.]*

*[**Skt.** agni>த.அக்கினி.]*

*சலசல→சலம்>**Skt.** jala.*



**அக்கினிச்சிலம்[1]** *akkiṉiccilam,* பெ.(n.) செங்காந்தள் (L); red species of Malabar glory lily.

**அக்கினிச்சிலம்²** *akkiṉi-c-cilam*, பெ.(n.) **அக்கினிசிகம்** பார்க்க; see *akkiṉi-šigam* (சா.அக.).

**அக்கினிச்சிவம்** *akkiṉi-c-civam*, பெ.(n.) குப்பை மேனி; a rubbish plant, *Acalypha indica,* is used as an antidote to poisonous bites.

*[Skt. agni+šikhā> த. அக்கினிச்சிவம்.]*

**அக்கினிச்சுவத்தர்** *akkiṉi-c-cuvattar*, பெ.(n.) தேவ மூதாதையருள் ஒரு பிரிவினர்; manes of gods who, when living on earth, maintained the sacred domestic fires, but did not perform the agnistoma or other sacrifices. *"அக்கினிச் சுவத்தரெனும் தேவர் பிதிர்க்களும்" (கூர்மபு. பிருகு. 13).*

*[Skt. agni-svātta> த.அக்கினிசுவத்தர்.]*

**அக்கினிச்சுவாசம்** *akkiṉi-c-cuvāšam*, பெ.(n.) தீப்போற்சுடும் உயிர்ப்பு (தக்கயாகப் 476, உரை); fiery breath.

**த.வ. அழல்உயிர்ப்பு.**

*[Skt. agni + švāša>த.அக்கினிச்சுவாசம்.]*

**அக்கினிச்சுவாலை** *akkiṉi-c-cuvālai*, பெ.(n.) 1. தீ நாக்கு; flame of fire. 2. பெருந்தீ; large fire - conflagration. 3. சிவன்; the god Šivaṉ. 4. சிரிஞ்சிப் பூ; a plant with red flowers used by dyers, *Grislea tomentosaa* (சா.அக.).

**த.வ. தீக்கொழுந்து.**

*[Skt. agni+ jvālā> த.அக்கினிச்சுவாலை.]*

**அக்கினிச்சூரணம்** *akkiṉi-c-cūraṇam*, பெ.(n.) கொடிவேலியுடன் மற்ற சரக்குகளுஞ் சேர்ந்த ஒரு வகைச் சூரணம்; a medicinal compound in which the lead-wort forms in chief ingredient (சா. அக.).

**த.வ. கொடிவேலிப்பொடி.**

*[Skt. agni+cūrṇa> த. அக்கினிச்சூரணம்.]*

**அக்கினிச்சூனுவிரசம்** *akkiṉi-c-cūṉu-virašam*, பெ. (n.) பலகறைப் பற்பம், சங்கு பற்பம், கெந்தி, இதளியம் (இரசம்,) ஆகியவற்றை வேப்பம்பட்டைச் சாற்றிலரைத்து சுரம், குன்மம் முதலிய நோய்களுக்குக் கொடுக்கும் ஓர் ஆயுள்வேத மருந்து (அநு.வை.); an ayurvedic medicinal compound consisting of sulphur, mercury and certain other calcined mineral powders impregnated with calcium oxides as ingredients, and given for comsumption, fever, dyspepsia etc. (சா.அக.).

**த.வ. வேதிமருந்து.**

**அக்கினிச்செடி** *akkiṉi-c-ceḍi*, பெ.(n.) செங்கொடி வேலி; a fire plant, rosy-flowered lead- wort, *Plumbago rosea* (சா. அக.).

**த.வ. கொடிவேலி.**

*[அக்கினி + செடி.]*

*[Skt. agni> த.அக்கினி.]*

**அக்கினிச்சேர்வை** *akkiṉi-c-cērvai*, பெ.(n.) 1. புண்ணாக்கக் கூடிய ஒரு சீலை மருந்து; a plaster used to raise blisters on the skin-vesicating or cantharides plaster. 2. காரச் சீலை; blister plaster (சா.அக.).

**த.வ. காரச்சீலை.**

*[அக்கினி + சேர்வை.]*

*[Skt. agni> த.அக்கினி.]*

**அக்கினிசக்தி** *akkiṉi-šakti*, பெ. (n.) 1. செரிமான ஆற்றல்; the power of digestion. 2. நெருப்பின் வல்லமை; the power of fire (சா.அக.).

**த.வ. அழலாற்றல், தீத்திறம்.**

*[Skt. agni + šakti> த.அக்கினிசக்தி.]*

**அக்கினிசஞ்சீவிகுமாரன்** *akkiṉi-šañjīvi-kumāraṉ*, பெ.(n.) பதினெட்டு வகை இசிவு (சன்னி)க்கும் தேனில் அல்லது இஞ்சிச் சாற்றில் இழைத்துக் கொடுக்கும் போகர் முறைப்படிச் செய்த ஒரு மாத்திரை; a pill prepared

according to the process of Bogar and macerated in honey or juice of ginger before use, is prescribed for 18 kinds of delirium and apoplexy (சா.அக.).

த.வ. இசிவு குளிகை.

*[இசிவு குளிகைக்கு இடப்பட்ட வடமொழிப் பெயர்.]*

**அக்கினிசம்பவம்** *akkiṉi-šambavam*, பெ. (n.) 1. நெருப்பின் தோற்றம்; production from fire. 2. காட்டுக் குங்குமப்பூ; safflower, *Carthamus tinctorius*. 3. நெருப்பினால் ஏற்பட்ட நிகழ்ச்சி; that which happened from the action of fire or is resulting from fire (சா.அக.).

த.வ. அழல்நிகழ்ச்சி.

*[**Skt.** agni + sam - bhava > த.அக்கினி சம்பவம்.]*

**அக்கினிசமதீபனம்** *akkiṉi-šamadībaṉam*, பெ.(n.) 1. செரிமான ஆற்றலைத் தூண்டுதல்; simulation of digestion. 2. செரிமான ஆற்றலை ஒழுங்குபடுத்துதல்; regulation of digestion. 3. சமாக்கினி; moderate appetite (சா.அக.).

த.வ. அழல்சமன்மை.

*[**Skt.** agni + šamati-bhana> த.அக்கினி சமதீபனம்.]*

**அக்கினிசர்ப்பம்** *akkiṉi-šarppam*, பெ.(n.) கொள்ளிவாய்ப் பேய்; a metenor that appears in the night and flirts about over marshy grounds, The ignis - Fataus, is known by several names sch as "will o" the wisp, jack-o-lantorn, Fire-drake, Foolish-Fire, Corpse candle etc. (சா. அக.).

*[**Skt.** agni+sarpa> த. அக்கினிசர்ப்பம்.]*

**அக்கினிசன்மன்** *akkiṉi-šaṉmaṉ*, பெ.(n.) முருகக்கடவுள் (வின்.); Kandaṉ, as born of the god of fire.

த.வ. அனற்பிறவன்.

**அக்கினிசாட்சி** *akkiṉi-šāṭci*, பெ.(n.) திருமணச் சடங்கில் தீ வளர்த்து அதனை முன்னிலைப்படுத்துதல்; in the presence of sacred fire.

த.வ. அழற்சான்று.

**அக்கினிசாதகம்** *akkiṉi-šādagam*, பெ. (n.) செரியாமை; முன் உண்டது அறாமை; indigestion or want of digestion (சா.அக.).

த.வ. செரியாநோய்.

**அக்கினிசாரம்** *akkiṉi-šāram*, பெ.(n.) 1. கண் மருந்து; medicines for the eyes, collyrium. 2. கடல்நுரை; a frothy substance floating on the sea (சா.அக.).

*[அக்கினி+சாரம்.]*

*[**Skt.** agni> த. அக்கினி.]*

**அக்கினிசாலம்** *akkiṉi-šālam*, பெ.(n.) 1. கடல் நுரை; decayed cuttle fish bone, *Os sepiae*. 2. நெருப்பைக் கொண்டு செய்யும் ஒரு தந்திரம் அல்லது கண்கட்டு வித்தை; a trick or magic performance with the agency of fire. 3. ஒரு பூண்டு, அதாவது நீர்மேல் நெருப்பு; a plant, (unidentified) (சா.அக.).

த.வ. மாயக்கலை.



**அக்கினிசிகம்** *akkiṉi-šigam,* பெ.(n.) 1. வெந்தோன்றி; fire flame, flame from flower. 2. கார்த்திகைக் கிழங்கு; the root of November - flower plant, *Gloriosa superba.* 3. மஞ்சள்; saffron, *Crocus indicus.* 4. சீந்தில்; moon creeper, *Menispermum cordifolium* (சா.அக.).

**அக்கினிசிகை** *akkiṉi-šigai,* பெ.(n.) 1. குங்குமப் பூ; a safflower plain, *European saffron - crocus sativus.* 2. கார்த்திகைக் கிழங்கு; methonia superba alias *Gloriosa superba* (சா.அக.).

*[Skt. agni-sikā>த. அக்கினிசிகை.]*

**அக்கினிசித்தன்** *akkiṉišittaṉ,* பெ.(n.) தீ வழிக் குடி (S.I.I. ii, 528); a Brahmin who regularly performs *agni-hōtra.*

*[Skt. agni-cit> த. அக்கினிசித்தன்.]*

**அக்கினிசித்து** *akkiṉišittu,* பெ. (n.) **அக்கினி சித்தன்** (S.i.i.ii, 519) பார்க்க; see *akkiṉišittaṉ.*

*[Skt. agni-cit>த.அக்கினி சித்து.]*

**அக்கினிசிலாசம்** *akkiṉi-šilāšam,* பெ.(n.) 1. மலைமேல் விளையும் கொடிவேலி; leadwort growing on the top of hills or mountains. 2. கருங்கொடி வேலி, நீலக் கொடி வேலி; a plant cape lead wort or blue-flowered, leadwort, *Plumbago capensis* (சா.அக.).

**அக்கினிசிலேட்டுமம்** *akkiṉi-šilēṭṭumam,* பெ.(n.) இருமல், கோழை, உடம்பெரிச்சல், கால் கை அழற்சி, நீர்வேட்கை, உண்டபின் பசி முதலிய குணங்களைக் காட்டும் ஒருவகைக் கோழைக்கட்டு நோய்; a phlegmtic disease characterised by cough; bronchial secretion, thrist, burning sensation of the limbs; hunger after food etc., a kind of consumption (சா.அக.).

**த.வ. அழற்கோழைநோய்.**

*[Skt. agni+šlēsman>த.அக்கினிசிலேட்டுமம்.]*

**அக்கினிசிலை** *akkiṉi-šilai,* பெ.(n.) நெருப்புக்கல்; flint used in older days to strike fire (சா. அக.).

**த.வ. தீத்தட்டிக்கல்.**

*[Skt. agni+ šilā> த.அக்கினிசிலை.]*

**அக்கினிசிவாகம்** *akkiṉi-šivāgam,* பெ.(n.) **அக்கினிசிலாசம்** பார்க்க; see *akkiṉi-šilāšam* (சா.அக.).

**அக்கினிசேகரம்** *akkiṉi-šēgaram,* பெ.(n.) 1. மஞ்சள்; turmeric, *Crocus indicus.* 2. குங்குமம்; a fragrant tree, *Crocus sativus.* 3. குங்குமத்தூள்; a kind of red powder worn by Indian ladies on their for head. 4. குசும்பா மரம்; a tree the seeds of which are used by dyers, *Carthamus tinctorious* (சா.அக.).

**த.வ. அழலம்.**

**அக்கினிசேவகன்** *akkiṉi-šēvagaṉ,* பெ.(n.) 1. கருநாபி; a black variety of poisonous plant, a contium ferox. 2. கருநாபிக் கிழங்கு; the poisonous root of plant; black aconite root (சா.அக.).

**த.வ. அழற்சேவை.**

**அக்கினிட்டி** *akkiṉiṭṭi,* பெ.(n.) நெருப்பிடுகலம் (பிங்.); fire-pan, censer.

**த.வ. அழற்சட்டி.**

*[Skt. agnisṭhikā> த.அக்கினிட்டி.]*

**அக்கினிட்டோமம்** *akkiṉiṭṭōmam,* பெ.(n.) வேள்வி வகை; variety of *jyōtisṭōma* which is the main type of the *sōma* sacrifice. *"அக்கினிட் டோம மாற்றிய பயன்களை யடைவர்" (மச்சபு. தடாக. 26.).*

*[Skt. agnisṭōma> த. அக்கினிட்டோமம்.]*

**அக்கினித்தம்பம்** *akkiṉi-t-tambam,* பெ.(n.) 1.அக்கினிக்கட்டு நெருப்பு, முதலானவற்றைச் சுடாதிருக்கச் செய்யும் மாயக்கலை (வித்தை); suspending the action of fire - a kind of magic. 2. நெருப்புத் தூண்; pillar of fire.

3.அறுபத்து நான்கு கலை மற்றும் அறிவியல்களிலொன்று; one of the 64 Indian arts and sciences (சா.அக.).

த.வ. அழற்கம்பம்.

*[அக்கினி + தம்பம்.]*

*[**Skt.** agni> த.அக்கினி.]*

**அக்கினித்தம்பன்** *akkiṉiittambaṉ*, பெ.(n.) சிவபெருமான் (வின்.); *Śivaṉ*, in the form of a column of fire.

த.வ. அழற்கம்பன்.

*[அக்கினி + தம்பன்.]*

*[**Skt.** agni> த. அக்கினி.]*

**அக்கினித்தம்பனம்** *akkiṉi-t-tambaṉam*, பெ.(n.) **அக்கினித்தம்பம்,1** பார்க்க; see *akkiṉi-t-tambam1* (சா.அக.).

*[அக்கினி + தம்பனம்.]*

*[**Skt.** agni > த. அக்கினி.]*

**அக்கினித்தாழி** *akkiṉi-t-tāḻi*, பெ.(n.) வேள்வித் தீ வைக்கும் பானை (இ.வ.); earthen pot which holds the sacred domestic fire.

த.வ. தீச்சட்டி.

*[அக்கினி + தாழி.]*

*[**Skt.** agni> த. அக்கினி.]*

**அக்கினித்திட்டம்** *akkiṉi-t-tiṭṭam*, பெ.(n.) **அக்கினிவரை** பார்க்க; see *akkiṉi-varai* (சா.அக.).

**அக்கினித்திரயம்** *akkiṉittirayam*, பெ.(n.) மூன்று வேள்வித் தீக்கள் (வின்.); the three sacrificial fires.

த.வ. முத்தீ.

*[**Skt.** agni+ traya>த. அக்கினித்திரயம்.]*

**அக்கினித்திராவகம்**[1] *akkiṉi-t-tirāvagam*, பெ.(n.) பட்ட இடம் அல்லது பொருள்களை எரித்துவிடும் தன்மையுள்ள நீர்மமாகிய எரிநீர்மம்; acids which corrode or burn the parts of which they are applied.

த.வ. எரிநீரம்.

*[**Skt.** agni+drāvaka> த.அக்கினித்திராவகம்.]*

**அக்கினித்திராவகம்**[2] *akkiṉi-t-tirāvagam*, பெ.(n.) செடிவகை (வை.மூ.); a plant.

த.வ. அழற்செடி.

*[**Skt.** agni+drāvaka>த.அக்கினித்திராவகம்.]*

**அக்கினித்துண்டவடுகம்** *akkiṉi-t-tuṇḍa vaḍugam*, பெ.(n.) செரிமானமின்மைக் (அக்கினி மாந்தத்திற்)குக் கொடுக்கும் ஒரு வகை ஆயுள்வேத மாத்திரை (அநுவை); a medicinal pill given in ayurveda for dyspepsia (சா.அக.).

த.வ. அழல்வடகம்.

**அக்கினிதம்** *akkiṉidam*, பெ. (n.) 1.செரியாமையைப் போக்கும், ஒரு மருந்து; a medicine which removes indigestion, Stomatic. 2. உடம்பில் வெப்பத்தைக் கொடுக்கும் பொருள்; that which lends heat to the system (சா.அக.).

**அக்கினிதமம்** *akkiṉidamam*, பெ.(n.) கண்டங்கத்திரி; a narcotic, plant, *Jacquins nightshade - solanum jacquini* (சா.அக.).

*[**Skt.** agni+tamam>த. அக்கினிதமம்.]*



**அக்கினிதிசை** *akkiṉi-diśai*, பெ.(n.) தென் கிழக்கு; the S.E. quarter, as under the guardianship of Agni.

த.வ. அழல்திசை.

*[அக்கினி + திசை]*

*[Skt. agni> த. அக்கினி.]*

**அக்கினிதிவ்வியம்** *akkiṉi-divviyam*, பெ.(n.) தீத்திற ஆய்வு; ordeal by fire.

*[Skt. agni+divya> த.அக்கினிதிவ்வியம்.]*

**அக்கினிதீபதி** *akkiṉi-dīpadi*, பெ.(n.) அருந்தியது அறாமையானேற்படும் வயிற்றிரைச்சல்; rumbling noise in the stomach from indigestion (சா.அக.).

**அக்கினிதீபனம்** *akkiṉi-dībaṉam*, பெ.(n.) 1. செரிமான ஆற்றலை வளர்க்கும் மருந்து; a medicine that excites the action of digestion and strengthens the functional activity of the stomach, stomachic. 2. செரிமான ஆற்றலைப் பெருக்குகை; increase of the power of digestion (சா.அக.).

த.வ. செரிமானி.

*[Skt. agni+dībaṉa>த. அக்கினிதீபனம்.]*

**அக்கினிதேவன்** *akkiṉi-dēvaṉ*, பெ.(n.) நெருப்பு (தீ)க் கடவுள்; Agni, the god of fire.

த.வ. அழலோன்.

*[அக்கினி +தேவன்.]*

*[Skt. agni>த. அக்கினி.]*

**அக்கினிதோசம்** *akkiṉi-dōṣam*, பெ.(n.) வளிக் கோளாறினால் உண்டாகும் நோய்; defects arising from gastric disorders (சா.அக.).

த.வ. வளிநோய்.

*[Skt. agni + dōša>த. அக்கினிதோசம்.]*

**அக்கினிநட்சத்திரம்** *akkiṉi-naṭšattiram*, பெ.(n.) 1. ஒரு விண்மீன்; the third nakṣatra. 2. மூன்றாம் கால் (பாதம்) முதல் உரோகிணி முதற் கால் (பாதம்) வரை சூரியன் நிற்கும் காலம்; (Astron.) hot period during *cittirai-vaikāši* when the sun passes through the third quarier of *puraṇikārttikai* and the first quarter of *urōkiṉi*, calculated at the rate of two and a quarter *nakṣatras* for a solar month, dog-days.

த.வ. அழல்மீன்.

*[Skt. agni+nakṣatra>த.அக்கினி நட்சத்திரம்.]*

**அக்கினிநாள்** *akkiṉi-nāḷ*, பெ.(n.) **அக்கினி நட்சத்திரம்** (சோதிட. சிந். 55.) பார்க்க; see *akkiṉi-naṭšattiram.*

த.வ. கோடைக்காலம்.

*[அக்கினி + நாள்.]*

*[Skt. agni>த. அக்கினி.]*

**அக்கினிநீர்**[1] *akkiṉi-nīr*, பெ.(n.) எரிநீர் (திராவகம்) வகை (பாண்டி.); nitric acid.

த.வ. எரிநீரம்.

*[அக்கினி + நீர்.]*

*[Skt. agni> த.அக்கினி.]*

**அக்கினிநீர்**[2] *akkiṉi-nīr*, பெ.(n.) 1. வளி (பாசக) நீர்; gastric fluid. 2. சிறுநீர்; urine (சா.அக.).

*[அக்கினி + நீர்.]*

*[Skt. agni> த.அக்கினி.]*

**அக்கினிப்பாகு** *akkiṉi-p-pāgu*, பெ.(n.) **அக்கினிக்கேது** பார்க்க; see *akkiṉi-k-kēdu* (சா.அக.).

**அக்கினிப்பிரவேசம்** *akkiṉi-p-piravēšam*, பெ.(n.) 1. தீப்புகுதல்; entering fire, as an ordeal. 2. உடன்கட்டை யேறுகை (R.); sati, suttee.

த.வ. தீப்பாய்வு.

*[Skt. agni+pra-vēša>த.அக்கினிப் பிரவேசம்.]*

**அக்கினிப்பிரளயம்** *akkiṉi-p-piraḷayam*, பெ.(n.) தீயினாலுண்டாம் உலகழிவு (வின்.); destruction of the world by fire.

த.வ. அழல்அழிவு.

[Skt. agni+pra-laya>த. அக்கினிப்பிரளயம்.]

**அக்கினிப்பிராமணன்** *akkiṉi-p-pirāmaṇaṉ*, பெ.(n.) சவத்தை எரியூட்டு சடங்கு நடத்துவிக்கும் பார்ப்பான் (Cm); Brahmin who conducts the funeral rites when a dead body is cremated.

த.வ. ஈமப்பார்ப்பான்.

[Skt. agni+ brāhmaṇa>த. அக்கினிப் பிரமாணன்.]

**அக்கினிப்பிரீதிசெய்தல்** *akkiṉi-p-pirīdi-šeydal*, பெ.(n.) 1. புடமிடல்; calcination. 2. நெருப்புக்கு இரையாதல்; giving anything an as offering to fire, as for example, the burning of the dead (சா.அக.).

த.வ. அழலூட்டல்.

[அக்கினிபிரீதி + செய்தல்.]

[Skt. agni+prīti> த.அக்கினிபீரீதி.]

**அக்கினிப்பிலவு** *akkiṉi-p-pilavu*, பெ.(n.) காட்டுப் பலா, பேய்ப் பலா; a tree-jungle jack, wild jack, *Atro hirsuta* (சா.அக.).

த.வ. அழல்பலா.

[Skt. agni>த. அக்கினி.]

**அக்கினிப்பிழம்பு** *akkiṉi-p-piḻambu*, பெ.(n.) **அக்கினிச்சுவாலை,** 1 பார்க்க; see *akkiṉi-c-cuvālai* (சா. அக.).

த.வ. அழற்பிழம்பு, தீக்கொழுந்து.

[அக்கினி + பிழம்பு.]

[Skt. agni> த.அக்கினி.]

**அக்கினிப்பிளப்பு** *akkiṉi-p-piḷappu*, பெ.(n.) எரிமலை (வின்.); volcano.

[அக்கினி + பிளப்பு.]

[Skt. agni > அக்கினி.]

**அக்கினிப்பிளாசுத்திரி** *akkiṉi-p-piḷāšuttiri*, பெ.(n.) **அக்கினிச்சேர்வை** பார்க்க; see *akkiṉi-c-cērvai* (சா.அக.).

[Skt. agni + E. Plaster>த. அக்கினி பிளாசுத்திரி.]

**அக்கினிப்புடைப்பு** *akkiṉiṣ-p-puḍaippu*, பெ.(n.) நெருப்புக் கொப்புளம்; a collection of watery fluid benath the superficial layer of the skin-blister (சா.அக.).

த.வ. அழற்கொப்புளம்.

[அக்கினி + புடைப்பு.]

[Skt. agni > அக்கினி.]

**அக்கினிப்பொறி** *akkiṉi-p-pōri*, பெ.(n.) துமுக்கி (துப்பாக்கி); gun.

[அக்கினி + பொறி.]

[Skt. agni > அக்கினி.]



**அக்கினிப்போக்கு** *akkiṉi-p-pōkku*, பெ.(n.) 1. உடம்பினுள் வெப்பம் பரவியிருக்கும் நிலைமை; the distribution of heat in the system. 2. உடம்பிலுள்ள வெப்பம், வயிற்றோட்டம் (பேதி), சிறுநீர் முதலியவற்றால் கழிதல் அல்லது உடம்பை விட்டகலல்; the dissipation of bodily heat by means of radiation, discharge of excretions etc., *Thermolysis* (சா.அக.).

த.வ. அழற்போக்கு.

[அக்கினி + போக்கு.]

[Skt. agni> த.அக்கினி.]

**அக்கினிபகவான்** *akkiṉi-pagavāṉ*, பெ.(n.) தீக்கடவுள் (தக்கயாகப்.103, உரை); agni, the god of fire.

**த.வ. அழற்கடவுள், தீக்கடவுள்.**

*[அக்கினி + பகவான்.]*

*[**Skt.** agni> த.அக்கினி.]*

*த. பகவன் > **Skt.** bhaga-van.*

**அக்கினிபஞ்சகம்** *akkiṉi-pañjagam*, பெ.(n.) பஞ்சகத் தொன்று (சோதிட. சிந். 213); (Astrol.) an inauspicious period of time, as portending danger of fire to any function commenced during such period, one of *pañjagam*, q.v. (சா. க.).

**த.வ. அழல்ஐந்தகம்.**

*[**Skt.** agni+panjaka>த.அக்கினிப்பஞ்சகம்.]*

**அக்கினிபம்** *akkiṉibam*, பெ.(n.) நெருப்பைப் போல் ஒளிர்வது, பொன்; gold (சா.அக.).

*[**Skt.** agnibha > த. அக்கினிபம்.]*

**அக்கினிபயம்** *akkiṉi-bayam*, பெ. (n.) நெருப்பைக் காணநேர்ந்தவிடத்துண்டாம் அச்சம்,; morbid dread of fire or heat, *Thermophobia* (சா. அக.).

**த.வ. அழலச்சம்.**

**அக்கினிபரீட்சை** *akkiṉi-parīṭcai*, பெ. (n.) தீயைக் கொண்டு மேற்கொள்ளும் ஆய்வு (சங். அக.); ordeal by fire, an acid test 2. கடினமான பணியை மேற்கொள்ள முற்படுகை; to take risk jop.

**த.வ. அழல்தேர்வு.**

*[**Skt.** agni+parīkṣā> த. அக்கினிபரீட்சை.]*

**அக்கினிபல்லி** *akkiṉi-palli*, பெ.(n.) இருளில் ஒளிரும் ஒரு கொடி; fire-brand creeper; a creeper shining in dark, *Cardiospermum halicacabum* (சா.அக.).

**த.வ. ஒளிர்கொடி.**

*[**Skt.** agni+palli> த. அக்கினிபல்லி.]*

**அக்கினிபாதச்சிலந்தி** *akkiṉi-pāda-c-cilandi*, பெ.(n.) நச்சுத்தன்மையுள்ள ஒருவகைச் சிலந்திப் பூச்சி; a kind of spider possessing in its leg a powerful poisonous principles which causes blisters, when coming in contact with the body, a kind of blistering spider (சா. அக.)



**த.வ.அழற்சிலந்தி.**

**அக்கினிபித்தசுரம்** *akkiṉi-pitta-šuram*, பெ. (n.) ஆறு நாள் முதல் பத்துநாள் வரை உணவுகொள் வேட்கையின்மை, வாய்குமட்டல், வாய்க்கசப்பு, எரிச்சல், கைகாலுளைவு முதலிய குணங்களைக் காட்டும், ஒருவகை பித்தக் காய்ச்சல்; a fever characterised by loss of appetite with thirst for a duration of 6 to 10 days, nausea, bitterness of taste, burning sensation, pain in the limbs etc., a kind of gastro - bilious fever (சா. அக.).

**த.வ. அழற்காய்ச்சல்.**

*[அக்கினி + பித்தம் + சுரம்.]*

*[**Skt.** agni> த.அக்கினி.]*

**அக்கினிபிரவேசம்**[1] *akkiṉi-piravēšam*, பெ.(n.) ஒருவன் தன் தூய்மை, நேர்மை முதலியவற்றை, வெளிப்படுத்த மேற் கொள்ளும் கடும் நடவடிக்கை அல்லது செய்கை; a trial or an ordeal to which one subjects oneself to prove one's innocence.

த.வ. அழவேறல்.

[Skt.agni+pravēša>த.அக்கினிபிரவேசம்.]

**அக்கினிபீசம்** *akkiṉi-pīšam*, பெ.(n.) 1. பொன்; gold. 2. காட்டுச் சீரகம்; a seed (digestive) wild cumin, *Veronia anthelmintica* (சா.அக.).

த.வ. அழல்வித்து.

**அக்கினிபுமான்** *akkiṉipumān*, பெ.(n.) ஊரகப் பெண்தெய்வத்தின் முன்பு, தீச்சட்டியோடு ஆடுதற்காக விடப்பட்ட இறையிலிநிலம் (R.T.); *iṉām* granted for the service of dancing with a fire-pot before the village goddess.

த.வ. அழல் இறையிலி.

[Skt.agni+ pumān> த. அக்கினிபுமான்.]

**அக்கினிபுராணம்** *akkiṉi-purāṇam*, பெ.(n.) பதினெண்தொன்ம(புராண)த் தொன்று; a chief *purāṇam*.

[Skt.agni+purāṇa>த.அக்கினிபுராணம்.]

**அக்கினிபூ** *akkiṉi-pū*, பெ.(n.) முருகக் கடவுள் (மச்சபு. குமார. 115); *Kandaṉ*, as born of fire.

த.வ. அழல்தோன்றல்.

[அக்கினி + பூ.]

[Skt.agni>த.அக்கினி.]

**அக்கினிமச்சம்** *akkiṉi-maccam*, பெ.(n.) இறால்; fire-fish; prawn so called because it contains phosphorous, *Astacus* (சா.அக.).



**அக்கினிமண்டலம்**[1] *akkiṉi-maṇḍalam*, பெ.(n.) 1. ஏழுமண்டலங்களுள் தீக்குரிய இடம் (சது.); the region of fire, one of *šapta-maṇḍalam*. 2. அடி வயிறு (வை. மூ.); lower abdomen.

த.வ. அழல்மண்டலம்.

[அக்கினி + மண்டலம்.]

[Skt.agni> த.அக்கினி.]

**அக்கினிமண்டலம்**[2] *akkiṉi-maṇḍalam*, பெ.(n.) ஓர் ஓகவிடம் (ஜீவோற்பத். 30); fire-centre situate between water and earth in the region of *mūlādāram* of great in significance in *yōga* practice.

த.வ. அழல்மண்டலம்.

**அக்கினிமணி** *akkiṉi-maṇi*, பெ.(n.) ஞாயிறு (சூரிய) காந்தக் கல்; a kind of flint said to emit fire when exposed to the sun, burning glass, sun-stone (சா.அக.).

த.வ. அழற்கல்.

[அக்கினி + மணி.]

[Skt.agni> த. அக்கினி.]

**அக்கினிமதனம்** *akkiṉi-madaṉam*, பெ.(n.) காமத்தீ; the fire of sexual love; heat of passion (சா.அக.).

த.வ. அழலெ.

**அக்கினிமந்தசுரம்** *akkiṉi-mandašuram*, பெ.(n.) ஏழு அல்லது பத்து நாள் வரை பசி, நீர் மற்றும் உணவுகொள் வேட்கையின்மை, வலிமைக்குறைவு, எரிச்சல், கழிமாசுக்கட்டு, தலைவலி, வாய்குமட்டல், ஏப்பம், வாந்தி, விக்கல், கை, கால் வலி முதலிய குணங்களைக் காட்டும் ஒருவகை காய்ச்சல்; a fever marked by absence of hunger and thirst for duration of 7 to 10 days. weakness, burning sensation, constipation, headache, tastelessness, belching, vomiting, hiccough, pain in the limbs etc.,

sometimes it brings about several complications such as, typhoid, diarrhoea etc. in the later stages as an after effect (சா.அக.).

**த.வ. அழற்காய்ச்சல்.**

*[அக்கினி + மந்தசுரம்.]*

*[**Skt.** agni>த.அக்கினி.]*

**அக்கினிமந்தம்** *akkiṉi-mandam,* பெ.(n.) 1. உடல் வெப்பம் மிகுந்து வயிறு பொருமிக் கொண்டிருக்க, மேலும் உண்பதாலும், மிகுதியாய்க் கொதிக்கும் நீரை உட்கொள்வதாலும் உண்டாகும் செரியாமை நோய்; impaired or imperfect digestion arising from excessive heat in the system or from some errors in the diet, or by drinking water excessively - not-indigestion. It is also said to be due to catarrh of the mucous coat of the stomach and to the presence of abnormal ferments arising from gastric disorders, *Dyspepsia*. 2. முன்னை அல்லது பசு முன்னை; spinous fire-brand teak or Indian headache tree, *Premna integrifolia*. 3. உடம்பின் தீயளவு குறைவு; gastric insufficiency. 4. பசிவேட்கை யின்மை; loss of appetite, *Anorexia* (சா.அக.).

**த.வ. செரியாநோய்.**

*[அக்கினி + மந்தம்.]*

*[**Skt.** agni> த.அக்கினி.]*

**அக்கினிமந்தமூலயோகம்** *akkiṉi-manda-mūlayōgam,* பெ. (n.) கோழை (சீத) பித்தத்திற்குக் கொடுக்குமோர் ஆயுள்வேத மருந்து (அநு.வை.); a medicinal compound in ayurveda given for diseases of the digestive organs (சா.அக.).

**த.வ. அழல்தணிப்பான்.**

**அக்கினிமந்தவாயு** *akkiṉi-manda-vāyu,* பெ.(n.) செரியாமையினால் வயிற்றிலும், குடலிலும் வளி தங்குவதனாலேற்படும் ஓர் ஊதை நோய்; a condition marked by the presence of gases in the alimentary canal. It arises mainly from the fermontation of the contents of the stomach and the intestines, *Flatulent Dyspepsia* (சா.அக.).

**த.வ. அழல்ஊதை.**

*[அக்கினி + மந்தம் + வாயு.]*

*[**Skt.** agni>த. அக்கினி.]*

**அக்கினிமாடன்**[1] *akkiṉi-māḍaṉ,* பெ. (n.) நெருப்பினிடத்தில் விருப்பத்தை உண்டாக்கும் ஓர் இசிவு நோய்; devilish nature creating a morbid desire or mania for fire. (in females), a kind of hysteria (சா.அக.).

**த.வ. அழலிசிவு.**

*[அக்கினி + மாடன்.]*

*[**Skt.** agni>த. அக்கினி.]*

**அக்கினிமாடன்**[2] *akkiṉi-māḍaṉ,* பெ. (n.) ஊரகச் சிறு தெய்வம். (மதி. களஞ். ii, 9); a village deity.

**த.வ. அழல்மாடன்.**

*[அக்கினி + மாடன்.]*

*[**Skt.** agni> த.அக்கினி.]*

**அக்கினிமாதா** *akkiṉimādā,* பெ. (n.) கொடிவேலி; a plant white-flowered leadwort, *Plumbago zeylanica* (சா.அக.).

**த.வ. அழல்தாய்.**

**அக்கினிமாந்தம்** *akkiṉi-māndam,* பெ.(n.) செரியாமை நோய் (வின்.); indigestion. *"அக்கினி மாந்தம் கைகால் யெரிவுழலை"* *(தைலவ.தைல.58).*

**த.வ. அழல்மாந்தம்.**

*[அக்கினி + மாந்தம்.]*

*[**Skt.** agni> த. அக்கினி.]*

**அக்கினிமாந்தியம்** *akkiṉi-māndiyam*, பெ.(n.) வயிறு கோளாறடைவதினால் நீருஞ் சோறுங் கொள்ள வல்லமையற்று மாந்தம் ஏற்பட்டு அதனால் புளியேப்பம், வயிற்றுப்புசம், கழிமாசு வெளியேறாதிருத்தல் முதலிய தீக்குணங்களை யுண்டாக்கித் துன்புறுத்தும் ஒரு வகைச் செரியாமை நோய். a derangement of the stomach, resulting in the disorder of its functions as tympanites, sour belching, constipation etc, due to insufficient quantity or impaired quality of the gastric juice or to the deficient action of the gastric muscles, *Atonic dyspepsia* (சா.அக.)

**த.வ. அழல்மாந்தம்.**

*[அக்கினி + மாந்தம்.]*

*[**Skt.** agni>த. அக்கினி.]*

*[மந்தம் → மாந்தம் → மாந்தியம்.]*

**அக்கினிமானி** *akkiṉi-māṉi*, பெ.(n.) வெப்பத்தின் ஏற்ற இறக்க வேறுபாடுகளை அளந்தறியுங் கருவி; an instrument for recording heat variation, thermograph; (thermometer) (சா. அக.).

**த.வ. அழல்மானி.**

*[அக்கினி + மானி.]*

*[**Skt.** agni> அக்கினி.]*

**அக்கினிமுகச்சிலந்தி** *akkiṉi-muga-c-cilandi*, பெ.(n.) அக்கினி பாதச் சிலந்தியைப் போன்ற ஒரு வகைச் சிலந்தி; a kind of blistering spider of the species of *akkiṉi-c-cilandi*; the only difference is that his insect contains the poisonous principle in its face instead of in the legs, mandibles are furnished with a curved claw perforated at the extremily, like a poison fang, a gland furnishes a certain colourless poisonous fluid which is injected into the object wounded by the claw, a species of spider (சா.அக.).

**த.வ. அழல்முகச்சிலந்தி.**

*[அக்கினி+முகம்+சிலந்தி.]*

*[**Skt.** agni>த. அக்கினி.]*

**அக்கினிமுகம்** *akkiṉi-mugam*, பெ. (n.) 1. சேங்கோட்டை; the nut of the fire-face tree causing blisters on the skin; marking nut-semicarpus anacardium. 2. சித்திரமூலம்; a plant, the bark of which invariable acts as a vesicatory; leadwort-plumbgao zeylanica. 3. கார்த்திகைக் கிழங்கு; the root of a plant, which also possesses similar blistering properties, *Gloriosa superba* (சா.அக.).

**த.வ. அழல்முகம்.**

*[அக்கினி + முகம்.]*

*[**Skt.** agni> த. அக்கினி.]*

**அக்கினிமுகலவணம்** *akkiṉimuga-lavaṇam*, பெ.(n.) சித்திரமூலம், சிவதைவேர், இந்துப்பு முதலானவற்றைப் புடமிட்டுச் செரிமான ஆற்றலுக்குக் கொடுக்கும் ஒரு மருந்து (அநு.வை.); a compound of salt extracted from blister root and burbith root, and used for promoting digestion (சா.அக.).

**த.வ. அழல்முகவுப்பு.**

*[அக்கினி + முகம் + லவணம்.]*

*[**Skt.** agni>த. அக்கினி. **Skt.** lavaṇa> த. லவணம்.]*

**அக்கினிமுகி** *akkiṉi-mugi*, பெ. (n.) சேங்கொட்டை; marking nut (சா.அக.).

**த.வ. அழல்முகத்தி.**

**அக்கினிமூலம்** *akkiṉi-mūlam*, பெ. (n.) 1. **அக்கினிமுகம்,** 1 பார்க்க; see *akkiṉi-mugam*. 2. பெருங்குடலின் கீழ்ப் பகுதியில் தங்கியிரா னின்ற சூடு அல்லது வெப்பம்

அதாவது வயிற்றுத்தீ (மூலாக்கினி); (In physiology) the animal heat lying stored up or lodged in the descending colon; the thermogenic heat of the large intestines. 3. பரியன் (அபான) வளியின்னிமித்தமாய், உடம்பின் சூட்டை உட் கொண்டிருக்கும் பாலகம் (மூலாதாரம்); (in-psychology) the sacral plexus supposed to be one of the thermogenic centres in the hunna system; heat through the action of apana (one of the 10 vital airs in the system) (சா.அக.).

**த.வ. அழல்மூலம்.**

*[அக்கினி + மூலம்.]*

*[**Skt.** agni>த. அக்கினி.]*

**அக்கினிமூலவாயு** *akkiṉi-mūlavāyu*, பெ.(n.) ஒலிப்புடன் கழிந்து, கிறுகிறுத்த வயிறு வலித்துளையும் போது மலத்தில் அரத்தம் கலந்து விழுந்து, வலங் குன்றி, முகம் வேறுபட வெளுத்துக் காணும் ஓர் ஊதை நோய்; a disease characterised by frequent evacuation of stools mixed with blood, causing colic pains, giddiness, progressive failure of strength etc. It is marked by pinched feature and anaemia, *Dysenteric diarrhoea* (சா.அக.).

**த.வ. அழல்மூலஊதை.**

*[அக்கினி + மூலவாயு.]*

*[**Skt.** agni>த. அக்கினி; **Skt.** vāyu> த.வாயு.]*

**அக்கினிமூலி** *akkiṉi-mūli*, பெ. (n.) 1. கற்றாழை; a plant fommon Indian aloe - *Aloe typica*. 2. **அக்கினி,** 1 பார்க்க; see *akkiṉi* (சா.அக.).

**த.வ. அழல்மூலி.**

*[அக்கினி + மூலி.]*

*[**Skt.** agni>த. அக்கினி.]*



**அக்கினிமூலை** *akkiṉi-mūlai*, பெ.(n.) தென்கீழ்த் திசை; the SE quarter, as under the guardianship of Agni. *"அக்கினி மூலை திங்கள்" (மச்சபு. சாந்தி. 8).*

**த.வ. அழல்மூலை.**

*[அக்கினி + மூலை.]*

*[**Skt.** agni>த. அக்கினி.]*

**அக்கினியன்** *akkiṉiyaṉ*, பெ.(n.) செவ்வாய்; mars. *"பவுமனக் கினியன்" (சாதகசிந். 6.).*

**த.வ. அழலன்.**

*[**Skt.** agniya>த.அக்கினியன்.]*

**அக்கினியாசம்** *akkiṉi-yāšam*, பெ.(n.) 1. பித்தப் பை; the pear shaped reservoir for the bile on the under surface of the liver, gall bladder. 2. செரிமான நீருக்கு உறைவிடம்; the seat of gastric juice i.e., stomach. 3. சிறுநீர்ப் பை; the membraneous sac which serves as a reservoir for the urine-bladder (சா.அக.).

**அக்கினியாசயம்** *akkiṉi-y-āyasayam*, பெ. (n.) 1. சற்றொப்ப 12 விரற்கடை நீளமிருக்கும் இரைக்குடலோடு சேர்ந்திருக்கும் சிறிய குடலின் முதற்பகுதி; the first part of the small intestines beginning at the pylorous, it is about 12 finger's breadth long-

duodenum. 2. உடம்பின் உறைவிடமான பித்தப்பை (பித்தாசயம்); the per-shaped membrancous sac in the right lobe of the liver, consistuting the reservoir for the bile-Galls (bladder), thermogenic centre in the system (சா.அக.).

**அக்கினியாடன்** *akkiṉi-y-āḍaṉ,* பெ.(n.) எட்டி மரம்; strychnine tree, *Strychnos nuxvomica* (சா.அக.).

த.வ. அழலாடன்.



**அக்கினியாத்திரம்** *akkiniyāttiram,* பெ.(n.) தீயைக்கக்கிக் கொண்டு செல்லும் அம்பு (வின்.); arrow emitting fire.

த.வ. அழலம்பு.

*[அக்கினி + அத்திரம்.]*

*[Skt. agni+aṣtra>த. அக்கினியாத்திரம்.]*

**அக்கினியாதானம்** *akkiṉi-y-ādāṉam,* பெ.(n.) அங்கியாதானம் பார்க்க; see *aṅgi-y-ādāṉam.*

*[அக்கினி + ஆதனம்.]*

*[Skt. agni+a-dhāna>த. அக்கினியாதானம்.]*

**அக்கினியாராதனைக்காரன்** *akkiṉi-y-ārādaṉai-k-kāraṉ,* பெ.(n.) தீக்கடவுளை வணங்கும் பாரசீகன் (பாண்டி.); parsee, as workshipping fire.

த.வ. அழல்போற்றியன்.

*[அக்கினி + ஆராதனை+காரன்.]*

*[Skt. agni+ā-rādhana>த.அக்கினியாராதனை.]*

**அக்கினியாள்வோன்** *akkiṉi-y-āḷvōṉ,* பெ.(n.) உடல் வெப்பத்தை ஒரொழுங்கிற்குட் படுத்துவதற்கென மூளையிலமைந்த ஒரு பொருள்; an eminence of gray substance in the brain for controlling the bodily heat, *Tuber cinereum* (சா.அக.).

த.வ. அழல்ஆள்வோன்.

*[அக்கினி+ஆள்வோன்.]*

*[Skt. agni>த. அக்கினி.]*

**அக்கினியாளுமுறை** *akkiṉi-y-āḷu-muṟai,* பெ.(n.) உடம்பினிலுள்ள சூட்டைக் கட்டுப்படுத்தி ஒழுங்குபடுத்தல்; regulating or controlling the bodily temperature, *Thermotactic* (சா.அக.).

த.வ. அழலாளுமுறை.

*[அக்கினி+ஆளும்+முறை.]*

*[Skt. agni>அக்கினி.]*

**அக்கினியிணக்கம்** *akkiṉi-y-iṇakkam,* பெ. (n.) உடம்பினில் தோன்றும் தீயளவு, சம நிலையடைதல்; the normal adjustment of the bodily temperature, *Thermotaxis* (சா.அக.).

த.வ. அழலிணக்கம்.

*[அக்கினி + இணக்கம்.]*

*[Skt. agni>த. அக்கினி.]*

**அக்கினியுப்பு** *akkiṉi-y-uppu,* பெ. (n.) 1. வெடியுப்பு; a kind of salt, nitre-potassium nitrate. 2. ஆறாங் காய்ச்சலுப்பு; a native preparation of potassium nitrate - nitras potassae. 3. பூநீரினின்று காய்ச்சி யெடுக்கும் ஐந்தாங்காய்ச்சலுப்பு; a kind of salt boiled and filtered five times in the course of its extraction from the fuller's earth. 4. தலையோட்டி னின்று உருவான ஓர் உப்பு; an euphemistric term used for denoting a kind of salt extracted from the skull of the

foetus. *"அண்டமதான அக்கினியுப்பை கண்டறியார்கள் காசினிமூடர் பிண்ட மதனிற் பிறந்தது காணார் சண்டனைச் சேர்வர் சாஸ்திரம் பார்த்தே" (சட். சூத்.)* (சா.அக.).

**த.வ. அழலுப்பு.**

*[அக்கினி + உப்பு]*

*[**Skt.** agni>த. அக்கினி.]*

**அக்கினியுபாதை** *akkiṉi-y-ubādai*, பெ.(n.) தீயால் நேருங் கேடு (இ.வ.); injury or damage by fire (சா.அக.).

**த.வ. அழற்கேடு.**

*[**Skt.** agni+bādhā>த. அக்கினியுபாதை.]*

**அக்கினியோகம்** *akkiṉi-y-ōgam*, பெ. (n.) நன்றல்லா காலம் (சூடா. உள். 32.); inauspicious conjuction of the tithi with the day of the week, viz., the 6th on Mon., the 7th on Tues., the 8th on Wed., the 9th on Thurs, the 10th on Fri. the 11th on Sat, the 12th on Sun.

**த.வ. அழற்காலம்.**

*[**Skt.** agni+ yōga>த.அக்கினியோகம்.]*

**அக்கினியோத்திரம்** *akkiṉiyōttiram*, பெ.(n.) காலை மற்றும் மாலை வேளைகளில், தீ முதலிய தெய்வங்களைக் குறித்துச் செய்யும் வேள்விச்சிறப்பு (தக்கயாகப், 112, உரை.); sacrifice to Agni and certain other deities, performed every morning and evening.

**த.வ. அழல்வழிபாடு.**

*[**Skt.** agni-hōtra>த. அக்கினியோத்திரம்.]*

**அக்கினிர்மமந்தினி** *akkiṉirma-mandiṉi*, பெ.(n.) தழுதாழை; a medicinal shrub, wind-killer, Cleodendron phlomoides (சா.அக.).

**அக்கினிரசம்** *akkiṉi-rašam*, பெ. (n.) 1. இந்திரகோபப் பூச்சி; a red coloured insect known as lady fly; *Mutella occidentalis*, a classified natural drugs described in the Tamil medicinal science on account of its great usefulness in medicines. 2. பொன்; gold. 3. தீத்திறம்; virulence of fire. 4. பாசக நீர்; gastric fluid (சா.அக.).

**த.வ. அழற்பூச்சி.**

*[**Skt.** agni+rasa>த. அக்கினிரசம்.]*

**அக்கினிரணம்** *akkiṉi-raṇam*, பெ. (n.) தீப்புண்; any injury caused by fire or dry-heat burns (சா.அக.).

**த.வ. அழற்புண்.**

*[**Skt.** agni+v-raṇa>த. அக்கினிரணம்.]*

**அக்கினிரோகணி** *akkiṉi-rōgaṇi*, பெ. (n.) 1. அக்குள் கட்டி; a suppurative axillary gland; a hard inflammatory swelling in the arm-pit. 2. சுரத்தினாலடிபட்டு உடம்பு இளைத்தவர்களுக்கு அக்குளில் கட்டி யுண்டாகி நெருப்பைப் போல் எரிச்சலையும், சதை வெடிப்பு, மயக்கம், முதலியவற்றை விளைவிப்பது மல்லாமல் சில சமயம் ஏழு நாளுக்குள் சாக்காட்டையுண்டு–பண்ணுமொரு நோய்; a very fatal contagious epidemic disease characterised by fever, pain, swelling of the axillary lymphatic gland; delirium and coms, in majority of cases, it may end in death, *Bubonic plague* (சா.அக.).

**த.வ. அழல்நோய்.**

*[**Skt.** agni+rōga>த. அக்கினிரோகணி.]*

**அக்கினிரோகம்** *akkiṉi-rōgam*, பெ.(n.) 1. ஒரு வகைக் கண்ணோய்; a kind of eye-disease. 2. பித்தநோய்; bilious disease (சா.அக.).

**த.வ. அழலி.**

*[**Skt.** agni+ rōga> த. அக்கினிரோகம்.]*

**அக்கினிலிங்கம்** *akkiṉi-liṅgam*, பெ.(n.) ஐந்து குறி (இலிங்கங்)களுள் நெருப்பு வடிவிலான திருவண்ணாமலையில் உள்ள சிவக்குறி (சிவலிங்கம்); *liṅgam* of fire.

**த.வ. அழல்தாணு.**

*[**Skt.** agni+liṅga>த. அக்கினிலிங்கம்.]*

**அக்கினிவகை** *akkiṉi-vagai,* பெ.(n.) மருந்தெரிக்கும் திட்டம் அல்லது எரிப்புத் திட்டம்; exactness or accuracy in determining the quantity of heat required for burning for purposes of preparing medicines (சா.அக.).

த.வ. அழல்வகை.

*[அக்கினி + வகை.]*

*[Skt. agni> த. அக்கினி.]*

*வகு→வகை.*

**அக்கினிவர்ணசிலந்திக்கடி** *akkiṉi-varṇa-cilandi-k-kaḍi,* பெ.(n.) கடிவாயில் எரிச்சலையும், சுரம், மயிர்க்கூச்சம், உடம்பெரிவு, குருக்கள் ஆகிய குணங்களையு முண்டாக்கும் ஒரு வகைச் சிவப்புச் சிலந்திக்கடி; a bite of the red species of spider marked by a reddish base and burning sensation, at the affected part, followed by fever, horripilation, and eurptions or pustules, in the body (சா.அக.).

த.வ. அழல்நிறச்சிலந்திக்கடி.

**அக்கினிவர்த்தனம்** *akkiṉi-varttaṉam,* பெ.(n.) 1. வயிற்றுத்தீ (உதராக்கினி)யை மிகுதிப்படுத்தும் மருந்து; a stimulant increasing the digestive power or exicting the functional activity of the stomach, stomachic. 2. ஓமம்; Bishop's weed, *Carum copticum* (சா.அக.).

த.வ. பசித்தூண்டி.

*[Skt. agni+vardhana>த.அக்கினிவர்த்தனம்.]*

**அக்கினிவாகம்** *akkiṉi-vāgam,* பெ. (n.) 1. புகை; smoke. 2. ஆடு; sheep (சா.அக.).

**அக்கினிவாகனம்** *akkiṉi-vāgaṉam,* பெ.(n.) 1. வெள்ளாடு; goat. 2. ஆட்டுக்கடா; he-goat (சா.அக.).

த.வ. அழலூர்தி.

**அக்கினிவாகு** *akkiṉi-vāgu,* பெ.(n.) **அக்கினிவாகம்** பார்க்க; see *akkiṉi-vāgam* (சா.அக.).

**அக்கினிவாதம்** *akkiṉi-vādam,* பெ.(n.) செரிமான நீரால் ஏற்பட்ட (வாத) வளிநோய்; a kind of gastric disease, *Gastralgia* (சா. அக.).

த.வ. அழல்வளி.

*[Skt. agni + vāta> த. அக்கினிவாதம்.]*

**அக்கினிவிகாரம்** *akkiṉi-vigāram,* பெ.(n.) 1. உண்ட உணவுகளை வயிற்றுனுள் பக்குவம் செய்வதற்கேற்ற செரிமான நீர் கோளாறடைவதனால் உண்டாகும் நோய்; a disease caused by gastric disorders, *Gastricism*. 2. செரித்தற்கான தீயளவு வேறுபாடுகள்; the change in the digestive faculty. 3. பித்தக்கோளாறு; bilious disorders (சா.அக.).

த.வ. அழல்திரிபு.

*[Skt. agni+vikāra>த.அக்கினிவிகாரம்.]*

**அக்கினிவிசர்ப்பி** *akkiṉi-viśarppi,* பெ.(n.) சுரம், வயிற்றாலெடுத்தல் (பேதி), நீர் மற்றும் பசிவேட்கை, அயர்வு, கக்கல், மயக்கம், உறக்கக்கேடு, உடம்பில் சில இடங்களில் நெருப்புக் கொப்புளங்களைப் போன்ற கொப்புள எரிச்சல் கண்டு அவ்விடங் கறுத்தல், மற்றவிடங்களில் நீலம் அல்லது செந்நிறமுண்டாதல் முதலியவற்றை உண்டாக்குமொருவகை படரும் தன்மையுடைய தோல்நோய்; an acute specific, febrile disease with inflammation of the skin, accompanied by an eruption of a flery acrid humour in some part of the body, and a peculiar blue colour in other parts, the symptoms are-purging, thirst, swooning, vomiting and the characteristic rash with a well defined margin upon the skin. It is of a spreading nature, *St. Anthony's fire, Erysipelas* (சா.அக.).

த.வ. அழல்படர்த்தி.

[Skt. agni+visarpi>த.அக்கினிவிசர்ப்பி.]

**அக்கினிவிடபாகம்** *akkiṉi-viḍabāgam*, பெ.(n.) உடம்பில் நஞ்சு ஊடுருவி, அரத்தம் முறித்து, அதனால் வளிமுதலா எண்ணிய இரண்டு மிகுத்து, வயிறளைதல், கக்கல், கோழை, அயர்வு, வாய்நீரொழுக்கு, வீக்கம், புரட்டல், உடம்பு மெலிதல், இருமல், பக்க நோய் முதலியவற்றை உண்டாக்கும் உடம்பின் நிலைமை; a condition of the body in which the quality of the blood is altered by the reason of the presence in it of a poison collected in the system. It is marked by the following symptoms - increase of humours in the system, with rumbling noise in the stomach, vomiting, salivation, swelling, restlessness, emciation, cough, pain on the sides and so on. It usually terminates in death - a kind of *Toxemia* (Blood Poisoning) (சா.அக.).

த.வ. அழல்நஞ்சம்.

[அக்கினி + விடம் + பாகம்.]

[Skt. agni + viṣa>த.அக்கினிவிடம்.]

பகு → பாகம்.

**அக்கினிவிடம்** *akkiṉi-viḍam*, பெ.(n.) அதிக வெப்பத்தினால் குருதியோட்டத்திலோ உடம்பிலுள்ள வேறு உறுப்புக்களினாலோ ஏற்படும் நஞ்சு; any toxic substance formed in the blood or any other living organism in the body by heat, *Thermotoxin* (சா.அக.).

த.வ. அழல்நஞ்சு.

[Skt. agni + viṣa> த. அக்கினிவிடம்.]

**அக்கினிவியாபகம்** *akkiṉi-viyābagam*, பெ.(n.) வெப்பம் பரவுகை; diffusing of heat, *Thermodiffusion* (சா.அக.).

[Skt.agni+vyābaga>த.அக்கினி வியாபகம்.]

**அக்கினிவிரணம்** *akkiṉi-viraṇam*, பெ.(n.) 1. தீப்புண்; an injury on the body caused by fire-burns. 2. சூடிட்ட புண்; cauterised wound (சா.அக.).

[Skt. agni + vraṇa>த.அக்கினிவிரணம்.]

**அக்கினிவிருத்தி** *akkiṉi-virutti*, பெ.(n.) 1. வயிற்றுத் தீயளவு மிகுகை; increase in the digestive power improved digestion. 2. பசி மற்றும் வயிற்று ஆற்றலை யுண்டாக்கும் மருந்து; a medicine that excites the action of and strengthens the stomach, *stomachic* (சா.அக.).

[Skt. agni+vṛtti>த. அக்கினிவிருத்தி.]

**அக்கினிவெள்ளை** *akkiṉi-veḷḷai*, பெ.(n.) கேழ்வரகு வகை (விவசா. 3); a species of rāgi.

**அக்கினிவேசசம்மிதை** *akkiṉivēśa-śammidai*, பெ.(n.) சரக சம்மிதையென்னும் ஓர் ஆயுள் வேத நூல்; an ayurvedic science named *'charaka samhita'* (சா.அக.).

**அக்கினிவேசர்** *akkiṉi-vēšar*, பெ. (n.) சரக சம்மிதை என்னும் ஆயுள் வேத நூலையியற்றிய முனிவர் (ஓர் இருடி). இவர் ஆத்திரேய முனிவரின் மாணாக்கர் அறுவருள் ஒருவர். ஆத்திரேயர், உலகத்தாருக்குதவும்படி ஆயுள் வேத நூலை இயற்றவேண்டிக் கயிலையில் நடந்த மருத்துவக்கழகத்தில், அதிக முயற்சி எடுத்து உழைத்தவர். ஆத்திரேயர் வாக்கின்படி அவரது மாணாக்கர்களறுவரும் தனித்தனியாக மருத்துவ நூல்கள் எழுத, அவற்றுள், அக்கினி வேசர் எழுதியது மிகவும் பொருத்த முள்ளதாகவும் பட்டறிவை யொட்டினதாகவுமிருக்கக் கருதி, முனிவர்களால் அதைச் சிறந்ததாக எடுக்கப்பட்டது. சரகசம்மிதை என்பது அக்கினிவேசரால் எழுதப்பட்டுப் பின்னர் சரகரால் வடமொழியில் திருத்தப்பட்டுள்ள நூல். இது சற்றொப்ப கி.மு. 1000 வருடத்திற்கு

முந்தியிருக்கலாமென ஊகிக்கப்படும்; a rishi (saint) who compiled an ayurvedic science now called charaka samhita. He is one of the six pupils of Atreya who took prominent part in the sanitary commission held in the Himalaya mountains for purposes of introducing ayurveda into this world. It is said that each of the five pupils wrote a treatise on medicine and the sages selected that of Agnivesa as the most practical.

This was subsequently modified by charaka, under whose name it became known and his book is undoubtedly the most ancient and continues to be the most celebrated medical work in the possession of the modern Hindus. It is in Sanskrit and it is not definitely known at what period of the world's history it was written. It is roughly calculated to be at about 1000 B.C. (Em. Med. men.) (சா.அக.).

**அக்கினிவேதனை** *akkiṉi-vēdaṉai*, பெ. (n.) அக்கினியுபாதை பார்க்க; see *akkiṉi-y-ubādai* (சா.அக.).

**அக்கினிவேந்திரம்** *akkiṉi-vēndiram*, பெ.(n.) 1. கல்லுருவி; drawing out stone, as from the bladder; gravel plant, *Ammannia baccifera*. 2. இலவங்கம்; clove tree, Caryophyllus aromaticus. 3. நீர் மேல் நெருப்பு என்னும் ஒரு பூண்டு; fire on water or water-fire, a kind of plant, blistering, *Ammannia-Ammannia vesicatoria* (சா.அக.).

**அக்கீகத்து** *akkīkattu*, பெ.(n.) 1. வழக்கை எடுத்துரைக்கை (P.T.L.); statement of a case. 2. உண்மை; truth, fact.

*[U. haqīqat>த. அக்கீகத்து.]*

**அக்கீம்** *akkīm*, பெ.(n.) மகமதிய மருத்துவன்; Muhammadan doctor.

*[U. hakīm>த. அக்கீம்.]*

**அக்கு** *akku*, பெ.(n) உரிமை; claim, right.

*[U. hagg>த. அக்கு.]*

**அக்குசு** *akkuśu*, பெ.(n.) 1. அக்கறை; interest, Concern. *"அவன் அக்குசோடு வேலை செய்கிறான்"* (பே.வ.). 2. விரைவு; quick. *அக்குசா வேலை முடிக்க வேண்டுமாம்.*

*[U. akhass>த. அக்குசு.]*

**அக்குசை** *akkuśai*, பெ.(n.) துறவு பூண்டு வேள்வி புரியும் சமணக் கைம்பெண்; jaina widow - ascetic. *"நூல்கள் வாங்கும் அக்குசைகள்"* (*திருவிளை. சமணரைக். 17.*).

*[Skt. a kuśā>த. அக்குசை.]*

**அக்குப்பீளை** *akku-p-pīḷai*, பெ.(n.) கண் பீளை; muco-purulent discharge from the eyes (சா.அக.).

*[அக்கு+ பீளை.]*

*[Skt. akra>த.அக்கு.]*

**அக்குரன்** *akkuraṉ*, பெ.(n.) இடையேழு வள்ளல்களுளொருவன் (பிங்.); name of a liberal chief, one of sevan *iḍai-vaḷḷai*, q.v.

*[Skt. a-krūra>த. அக்குரன்.]*

**அக்குரு** *akkuru*, பெ.(n.) 1. விரல்; finger. 2. அகில் பார்க்க; see *agil.*

**அக்குரூரன்** *akkurūraṉ*, பெ.(n.) யாதவர் தலைவருள் ஒருவன் (பாகவத.); name of a *yādava*, a devotee and uncle of *Kṛṣṇa*.

*[Skt. a-krūra>த. அக்குரூரன்.]*

**அக்குரோசம்** *akku-rōśam*, பெ.(n.) கருஞ் சீந்தில்; a black variety of. சீந்தில்; moon creeper, *Menispermum cordifolium alias Tinosphora Cordifolia* (சா.அக.).



**அக்குரோணி** *akkurōṇi*, பெ.(n.) பெரும்படை வகை; army consisting of 21,870 chariots, 21,870 elephants, 65,610 horses, and 109,350 foot soldiers, according to Skt. authorities, Tamil *nigaṇḍus* giving differently.

*[**Skt.** akṣauhiṇi>த. அக்குரோணி.]*

**அக்குரோதம்** *akkurōdam*, பெ.(n.) காமப்பூ; a flower which excites venery, Cupid's plant, *Pergularia minor alias p.tomentosa* (சா.அக.).

**அக்கோடகம்** *akkōḍagam*, பெ.(n.) கடுக்காய்; Indian gall nut or ink nut, *Terminalia chebula* (சா.அக.).

**அக்கோடிகம்** *akkōḍigam*, பெ.(n.) கருஞ்சூரை; a black variety of the shrub, Jujubi- *zizyphus oenoplia* (சா.அக.).

**அக்கோணி** *akkōṇi*, பெ.(n.) பெரும்படை வகை; vast army. *"எழுப தக்கோணி புடமுள செங்களம்" (திருவகுப்பு, சித்து. 43).*

*[**Skt.** akṣauhiṇi>த.அக்கோணி.]*

**அக்கோரம்** *akkōram*, பெ.(n.) ஊசிக் காந்தம்; the magnetic oxide or iron which attracts needls; load stone, *Feri Oxidum,* a combination of the protoxide and peroxide of iron (சா.அக.).

**அகங்கரம்** *agaṅgaram*, பெ.(n.) தன்முனைப்பு (ஞானவா. வைராக். 85); self-love, egotism.

*[**Skt.** ahaṃ-kāra>த.அகங்காரம்.]*

**அகங்காரக்கிரந்தி** *agaṅgāra-k-kirandi*, பெ.(n.) மெய்ப்பொருள்களைத் தானென்றுகொள்ளும் செருக்குப் பிணைப்பு; (Advaidam) 'ego-bond', the enslaved state, of the soul in which it confuses the tattvas with itself.

*[**Skt.** ahaṃ-kāra+kiranti>த. அகங்காரக் கிரந்தி.]*

**அகங்காரசைதன்னியவாதி** *agaṅgāra-SaidaVViya-vAdi*, பெ. (n.) உயிர்வளி முதலியவையே ஆதனெனக்கருதும் கொள்கையாளர் (சி.சி. 2, 73, மறைஞர்); one who holds that the vital airs connecting with *prāṇa* which are the effects of *ahaṃ-kāra* are the soul.

*[**Skt.** ahaṃ-kāra+caitanya+vādin→ த. அகங்காரசைதன்னியவாதி.]*

**அகங்காரத்திரயம்** *agaṅgāra-t-tirayam*, பெ.(n.) புறநிலைக் கருவிவகை (சிவப். கட்.) *(தைசதவகங்காரம், வைகரியகங்காரம், பூதாதியகங்காரம் முதலியன மூவகை அகங்காரங்கள்)*; (Śaiva). three kinds of *ahaṃ-kāra*, viz., *aiśatavakaṅkāram, vaikariyakaṅkāram, pūtātiyakaṅkāram,* one of 11 divisions of *pura-nilai-k-karuvi* q.v.

*[**Skt.** ahaṃ-kāra+traya>த. அகங்காரத் திரயம்.]*

**அகங்காரிக்கிரகம்** *agaṅgāri-k-kiragam*, பெ. (n.) பிறந்த ஐந்தாம் நாளில், குழந்தைக்குத் தீங்கு விளைவிப்பதாய்க் கருதப்பெறும் நாண்மீன்; a disease ascribed to the baneful influences of malignant stars, it attacks a newborn baby on the fifth day.

*[**Skt.** aham- kārin + graha>த.அகங்காரக் கிரகம்.]*

**அகசாரசக்தி** *aga-šāra-šakti*, பெ. (n.) ஒரு பொருளின் சுற்றெல்லையிலுள்ள பகுதி அப்பொருளின் நடுவத்தை நோக்கி நெருங்கும் ஆற்றல் (இ.வ.); centripetal force.

*[Skt. ahaṃ+šāra+šakti>த. அகசார சக்தி.]*

*[த. சத்தி > Skt. šakti]*

**அகசிப்பிசின்** *agaši-p-pisiṉ*, பெ.(n.) ஒருவகைப் பிசின்; a kind of gum (சா.அக.).

**அகசியகாரன்** *agašiyakāraṉ*, பெ.(n.) நகைச்சுவையூட்டுபவன்; jester.

**த.வ. நகையாண்டி, கோணங்கி, கோமாளி, பகடி.**

*[அகசிய+காரன்.]*

*[Skt. hāsya>அகசிய(ம்).]*

**அகசியம்** *agašiyam*, பெ.(n.) 1. பகடிக் கூத்து (நல். பாரத. இராச. 17.); mimicry, farce. 2. ஏளனம்; ridicule, derision.

*[Skt. hāsya>த. அகசியம்.]*

**அகசு** *agašu*, பெ.(n.) 1. பகல் (சூடா. உள். 65); day time. 2. இராப்பகல் கொண்டதொரு நாள்; day including night.

*[Skt. ahan>த. அகசு.]*

**அகசேபம்** *agašēbam*, பெ.(n.) கட்டுக்கொடி; a creeper, bind weed, *Pedalium murex* (சா.அக.).



**அகசேருகம்** *agašērugam*, பெ. (n.) முள்ளந்தண்டின்மை; the congenital absence of the spinal column, *invertebrata* (சா.அக.).

**அகசை** *agašai*, பெ.(n.) 1. சிறுகல்லூரிச் செடி; a small variety of plant, *Densiflora*. 2. மரத்திற்பிறந்தது; born of the tree or tree-born. 3. மலையிற் பிறந்தது; grown or originated in a mountain, pertaining to a mountain (சா.அக.).



**அகடம்** *agaḍam*, பெ.(n.) 1. நேர்மைக்கேடு, நெறிமுறையின்மை; injustice. 2. சூழ்ச்சி; trick.

*[Skt. a-ghaṭana> த. அகடம்.]*

**அகடவிகடம்** *agaḍa-vigaḍam*, பெ.(n.) 1. பகடி; fun, humour. 2. குறும்பு; prank, mischief. 3. நுண்ணுத்தி; acute intellect.

*[Skt. agata+vikaṭa >த. அகடவிகடம்.]*

**அகடன்** *agaḍaṉ*, பெ.(n.) மோசக்காரன், ஏமாற்றுக்காரன் (வின்.); treacherous person.

*[Skt. a-ghaṭana> த. அகடன்.]*

**அகடனம்** *agaḍaṉam*, பெ.(n.) 1. செய்யக் கூடாதது; that which cannot be done, impossibility. 2. குறும்பு; mischief.

*[Skt. a-ghaṭana>த. அகடனம்.]*

**அகடிதகடனாசாமர்த்தியம்** *agaḍita-kaṭaṉā-šāmarttiyam*, பெ.(n.) கூடாததைக் கூட்டுவிக்கும் வன்மை (வேதா.சூ.56, உரை); ability to effect the impossible.

**அகடியம்** *agaḍiyam*, பெ.(n.) முறையின்மை (வின்.); that which is injustice.

*[Skt. aghaṭita>த. அகடியம்.]*

**அகணிதன்** *agaṇidaṉ*, பெ.(n.) கடவுள்; god, as immeasurable. *"தேவ முதல்வ வேதமி லகணித" (பெருந்தொ. 193.).*

**த.வ. வரம்பிலி.**

*[Skt. agaṇita>த. அகணிதன்.]*

**அகத்மாத்து** *agatmāttu*, வி.எ.(adv.) தற்செயலாய்; causelessly by chance, unexpectedly. *"அவனை அகஸ்மாத்தாய்ச் சந்தித்தேன்" (இ.வ.).*

• *[Skt.a-kasmāt> த.அகத்மாத்து.]*

**அகத்துமாத்தாக** *agattumāttāga*, வி.அ. (adv.) முன்னேற்பாடு இல்லாமல், தற்செயலாக; accidentally, by chance, unexpectedly. *"தெருவில் அகத்துமாத்தாக நண்பரைச் சந்தித்தேன்".*

*[அகத்துமாத்து+ஆக.]*

*[Skt. akaṣmāt > த. அகத்துமாத்து.]*

**அகத்தியா** *agattiyā*, பெ.(n.) 1. அளந்தறியக் கூடா ஆழம்; unfathomable abyss. 2. கடல்; ocean.

**அகத்திருத்துவம்** *a-gattiruttuvam*, பெ.(n.) செயலின்றி நிற்குங் கடவுட்டன்மை (வேதா. சூ. 47.); divine attribute of not being agent.

*[Skt. a-kartṛtuva>த. அகத்திருத்துவம்.]*

**அகதங்காரன்** *agadaṅkāraṉ*, பெ.(n.) 1. நலத்தைக் கொடுப்போன்; one who restores health, a health-restorer. 2. மருத்துவன்; a physician.

*[அகத(ம்) + காரன்.]*

*[Skt. agada>த. அகத(ம்).]*

*[காரன் > Skt. kāra.]*

**அகததந்திரம்** *agada-tandiram*, பெ. (n.) நிலைத்திணை, (தாவரம்) விலங்கு முதலானவற்றின் நஞ்சினால், மாந்தர்க்கு ஏற்படும் நோய்களையும் அவற்றைக்களையும் முறைகளையும் விளக்கிக்கூறும் நூல்; a tantric science which treats of antidotes against vegetable, mineral and animal poisons toxicology.

**த.வ. நஞ்சறுப்புநூல்.**

*[Skt. agada+tantra> த. அகததந்திரம்.]*

**அகதம்** *agadam*, பெ.(n.) 1. நோயின்மை; freedom from disease. 2. மருந்து; a medicine, drug (especially) antidote. 3. நஞ்சு நீக்கு மருந்து; antipoisonous remedy.

*[Skt. agada>த. அகதம்.]*

**அகதவேதம்** *agada-vēdam*, பெ. (n.) 1. மருத்துவ நூல்; medical science. 2. நச்சு முறிவைப் பற்றிக் கூறுமோர் ஆயுள் வேத நூல்; an ayurvedic science dealing with several antidotes for poison.

*[Skt. agada+vēda>த. அகதவேதம்.]*

**அகதன்** *agadaṉ*, பெ.(n.) நிறைநலமுடையான்; one who is free from disease, a healthy man.

**த.வ. நலவான்.**

*[Skt. agadya>த. அகதன்.]*

**அகதி[1]** *agadi*, பெ.(n.) வீடுபேற்று நிலை; the path of salvation. *"அடைந்தனை அகதியை" (மேருமஞ். 173).*

*[Skt. a-gati>த. அகதி.]*

**அகதி[2]** *agadi*, பெ.(n.) மரவகை (மலை) (வின்); babul.

*[Skt. agati>த. அகதி.]*

**அகதி[3]** *agadi*, பெ.(n.) இயற்கைப் பேரிடர், அரசியல் நெருக்கடி இன்ன பிறவற்றின் பொருட்டு தம் சொந்த நாட்டிலிருந்து பிற

நாட்டிற் குடிபெயர்வோர்; one without resources friends, destitute person.

**த.வ. வழியிலி, ஏதிலி.**

*[**Skt.** a-gati>த. அகதி.]*

**அகதி[4]** *agadi*, பெ.(n.) 1. பெண்ணோடு இணைந்து வாழாமை–சேராமை; not cohabiting with a woman. 2. நலிந்தோன், வலிமையற்றவன்; a weak man.

*[**Skt.** a-gada>த. அகதி.]*

**அகதிசேத்திரத்தார்** *agadi-šēttirattār*, பெ.(n.) மேலுகத்தில் வாழ்பவர்களில் பெரியவர் (தக்கயாகப். 352, உரை.); celestials higher than those of the svarga.

*[**Skt.** a-gati+kṣētra>த.அகதிசேத்திரத்தார்.]*

**அகதேசு** *agadēšu*, பெ.(n.) நோய்நொடியில்லாதவன்; one who is free from diseases.

*[**Skt.** agada>த. அகதேசு.]*

**அகபார்** *agabār*, பெ.(n.) செய்தி (P.T.L.); news.

*[**U.** akhbār>த. அகபார்.]*

**அகபாலம்** *agabālam*, பெ.(n.) தலையில்லாத அழகற்ற தோற்றம்; a monster with partial or complete absence of cranjum-*Acranium*.

**அகம்பம்** *agambam*, பெ.(n.) ஒரு செய் நஞ்சு (கற்பரிபாடாணம்) (வை. மூ.); a mineral poison.

**அகம்பனம்** *agambaṉam*, பெ.(n.) மூச்சுத் திணறுதல்; suspension of the vital function when the lungs are deprived of air, suffocation.

**அகம்பிரமம்** *agam-piramam*, பெ.(n.) 1. செருக்கு; self-importance. 2. திமிர்; pride.

*[**Skt.** ahaṃ+bhirama>த. அகம்பிரமம்.]*

**அகம்பிரமவாதி** *agam-pirama-vādi*, பெ.(n.) தானே கடவுளென (பிரமமென்று) வழக்கிடுபவன் (வாதிப்பவன்); one who holds that self is Brahman, Advaitin.

*[**Skt.** aham + pirama + vādin> த. அகம்பிரமவாதி.]*

**அகம்மகியாகமனம்** *agammagiyākamaṉam*, பெ.(n.) 1. விலைமகளை விரும்பிச் சேர்தல்; cohabiting with a public woman or a prostitute. 2. பிறன் மனையாளைப் புணர்தல்; illicit intercourse with a married woman (சா.அக.).

*[**Skt.** a-gamya+gamana>த. அகம்மகியாகமனம்.]*

**அகம்மியகை** *agammiyagai*, பெ. (n.) 1. கண்டவனோடு கூடிக்கலந்தவள்; a married woman who has had illicit intercourse, an adulteress. 2. விலை மகள்; unmarried female guilty of fornication (சா.அக.).

*[**Skt.** a-gamya>த. அகம்மியகை.]*

**அகம்மியம்** *agammiyam*, பெ.(n.) 1. அணுகக் கூடாதது; the unapproachable, that which is not fit to be approached. 2. அறியக் கூடாதது; the inconceivable, incomprehensible. *"பிரத்தியக்ஷாதி பிரமாண சதுட்டயங்களிலும் அகம்மிய மாதலாலே" (சி.சி. அளவை 1, சிவாக்.).* 3. ஒரு பேரெண் (பிங்.); the thousand quintillions.

*[**Skt.** a-gamya>த. அகம்மியம்.]*

**அகம்மியா** *agammiyā*, பெ.(n.) விலைமகள்; a prostitute, a harlot.

*[**Skt.** a-gamyagā>த. அகம்மியா.]*

**அகம்மியாகமனம்** *agammiyā-kamaṉam*, பெ.(n.) தகுதியற்றவளோடு புணர்கை; intercourse with a woman who is not fit to be approached. *"அகம்மியாகமணஞ்செய்து பிராயச்சித்தஞ் செய்து சுத்தரானாரையும்" (கல்.).*

*[அகம்மியா + கமனம்.]*

*[**Skt.** a - gamyā>த. அகம்மியா.]*

*கம் → கமனம்.*

**அகம்மியாகமனன்** *agammiyāgamanaṉ*, பெ. (n.) 1. கெடுமதியன் (தூர்த்தன்); he who commits lewd acts, a fornicator. 2. பிறனில் விழைவோன்; an adulterer.

*[Skt. a - gamyā → த.அகம்மியா.]*

*கம் → கமனம் → கமனன்.*

**அகம்மியை¹** *agammiyai*, பெ.(n.) பொதுமகள் (வின்.); harlot.

*[Skt. a-gamyā>த. அகம்மியை.]*

**அகம்மியை²** *agammiyai*, பெ.(n.) **அகம்மியா** பார்க்க; see *agammiyā*.

**அகமம்** *agamam*, பெ.(n.) மரம் (உரி.நி.); tree.

*[Skt. agama>த. அகமம்.]*

**அகமருடணபாதாளயோகம்** *agama-ruḍaṇa-pādāḷa-yōgam*, பெ. (n.) ஒக விருக்கை வகையு ளொன்று; a *yōga*. *"மானெசதடாகத்தில் அகமருஷணபாதாள யோகம் பண்ணின துர்வாசர்" (தக்கயாகப் 552, உரை.).*

*[Skt. aghamarṣaṇa + pātāḷa + yōgā> த. அகமருடணபாதாளயோகம்.]*

**அகமருடணம்** *agamaruḍaṇam*, பெ.(n.) 1. மறை மந்திரத்தின் வகை; name of particular vedic hymn, as sin-effacing. 2. அகமருடண மந்திரம் கூறிச் செய்யும் நீராடல்; ablution holding the right hand containing water up to the nose while repeating the above vedic hymn.

*[Skt. aghamarṣaṇa>த. அகமருடணம்.]*

**அகமன்** *agamaṉ*, பெ. (n.) 1. ஒருவகை விலையுயர்ந்த கல்; a kind of precious stone. 2. இடி; thounder boll. 3. முகில்; cloud. 4. இரும்பு; iron (சா.அக.).

*[Skt. a-gama>த. அகமன்.]*

**அகமனம்** *agamaṉam*, பெ.(n.) பெண்ணின்பம் பெறாதவன்; abstinence from sexual intercourses (சா.அக.).

*[Skt. a-gamana>த. அகமனம்.]*

**அகமனி** *agamaṉi*, பெ.(n.) 1. திருமணமாகாதவன்; a confirmed bachelor, a celibate. 2. வான்வழிச் செல்லும் ஆற்றலில்லாதவன்; one who is incapable of travelling in the aerial regions as opposed to *gamaṉi* (சா.அக.).

*[Skt. a-gamana>த. அகமனி.]*

**அகமார்க்கம்** *aga-mārkkam*, பெ. (n.) 1. அருமையிற்பாடல் (பிங்.); a high style of singing, difficult to attain. 2. முக்குணம் பற்றிவரும் மெய்க்கூத்து (சிலப். 3, 12, உரை); exposition, by gesture and dancing, of three *guṇas*, viz. sattva, rajas, tamas.

*[Skt. agha + mārga>த. அகமார்க்கம்.]*

**அகமாலிகம்** *aga-māligam*, பெ. (n.) கருங்குமிழ் மரம் (சித். அக.); black coom teak.

**அகமிந்திரம்** *agamindiram*, பெ. (n.) (Jaina.) **அகமிந்திரலோகம்** பார்க்க; see *agamindira-lōgam*, *"அருகன துருவ மில்லா ரகமிந்திரத்துட் டோன்றார்"* (மேருமந். 75.).

*[Skt. ahaṃ-indra>த. அகமிந்திரம்.]*

*[வேந்தன்→இந்தன்→இந்தர்→இந்திரன் > **Skt.** indra.]*

**அகமிந்திரலோகம்** *agam-indira-lōgam*, பெ.(n.) வானுலுகத்தி லொன்று (திருக்கலம். 6, உரை.); (Jaina.) a celestial region.

*[Skt. ahaṃ+indra+lōka>த. அகமிந்திர லோகம்.]*

*[உலவு→ உலகு>Skt. lōka>த. லோகம்.]*

**அகர்க்கணனம்** *agar-k-kaṇaṉam*, பெ. (n.) கலியூழி தொடங்கிக் குறித்த காலம் வரை கணித்தெடுத்த, மொத்த எண்; (Astron.) total number of days calculated from the beginning of the kali-y-uga until a certain period.

*[அகர் + கணனம்.]*

*[Skt. ahar>த. அக(ர்).]*

*கண்→கணம்→கணனம்.*

**அகர்ணகம்** *agarṇagam*, பெ.(n.) **அகர்ணம்** பார்க்க; see *agarṇam* (சா.அக.).

**அகர்ணம்** *agarṇam*, பெ.(n.) 1. காதின்மை; lack of ears, absence of ears. 2. காது கேளாமை; thickness of hearing, defect in the power of hearing. 3. செவிடு; lack or loss complete or partial of the sense of hearing.

*[Skt. aghar>த. அகர்ணம்.]*

**அகர்த்தவியம்** *a-garttaviyam*, பெ. (n.) செய்யத்தகாதது; that which ought not to be done. *"கர்த்தவிய வகர்த்தவிய விடய மாயினவால்" (சூத. எக்கி. பூ. 10, 20).*

*[Skt. a-kartavya>த. அகர்த்தவியம்.]*

**அகர்த்தா** *a-karttā*, பெ.(n.) செயற்பாடற்றவன்; one who is not agent. *"பிரஹ்மவித் தானவன் கர்மத்தில் அகர்த்தா என்னும் புத்தியால்" (விசாரசா.).*

*[Skt. a-kartā>த. அகர்த்தா.]*

**அகர்த்திருவாதம்** *a-garttiru-vādam*, பெ.(n.) படைத்தவன் இல்லை என்னும் தருக்கம் (சி.சி. பர. சௌத்.-1, உரை.); system of thought which denies the existence of a creator.

*[Skt. a-kartr+vāda>த. அகர்த்திருவாதம்.]*

**அகர்நாதன்** *agarnādaṉ*, பெ.(n.) பகலவன்; ruler of the day i.e., the sun.

*[Skt. a-kar-nātha>த.அகர்நாதன்.]*

**அகர்மகர்த்தரிப்பிரயோகம்** *agarmagarttari-p-pirayōgam*, பெ.(n.) செயப்படு பொருள் குன்றிய வினை (வின்.); (gram.) intransitive use of a verb.

*[Skt. a - karma - kartari + prayōga> த. அகர்மகர்த்திரிப்பிரயோகம்.]*

**அகர்முகம்** *agarmugam*, பெ. (n.) வைகறை; early dawn. *"அகர் முகமப் பாடுநர்க்கு". (தைலவ. பாயி. 53.).*

*[அகர்+முகம்.]*

*[Skt. ahan> த. அகர்.]*

**அகரக்களங்கு** *agara-k-kaḷaṅgu*, பெ.(n.) தூய்மையற்ற இதளியம்; an impure oxide of mercury (சா.அக.).

*[அகர(ம்)+களங்கு.]*

*[Skt. agar> த.அகரம்.]*

**அகரகாயம்** *agarakāyam*, பெ. (n.) உடம்பின் முன் பக்கம்; the fore or front part of the body (சா.அக.).

*[Skt. agara+kāya>த. அகரகாயம்.]*

**அகரத்திரவம்** *agarattiravam*, பெ. (n.) பால், தயிர் ஆகியவற்றின் ஏடு; the thin upper part of standing milk or curd (சா.அக.).

**அகரநீர்** *agara-nīr*, பெ.(n.) முத்துச்சிப்பியின் நடுவிலிருக்கும் நீர்; the water deposited in the centre of a pearl (சா.அக.).

*[அகர(ம்) + நீர்]*

*[Skt. agara>த. அகர(ம்).]*

**அகரபரணி** *agaraparaṇi*, பெ. (n.) பூனைக்காலி; a plant, cow-hage or cat-bean (சா.அக.).

**அகரபாதம்** *agarabādam*, பெ.(n.) பாதத்தின் முற்பகுதி; the fore part of the foot (சா.அக.).

*[அகர(ம்) + பாதம்.]*
*[Skt. ahara>த. அகர(ம்).]*
பதி → பதம் → பாதம்.

**அகரராசசம்** *agara-rāšašam*, பெ.(n.) சிவதை; a herb, Indian rhubarb (சா.அக.).

**அகரி** *agari*, பெ.(n) ஒருவகைப் புல்; a kind of grass (சா.அக.).

**அகரிடணம்** *agariḍaṇam a*, பெ.(n.) 1. வெறுப்பு; dislike, 2. வருத்தம்; sorrow.

*[Skt. a-harṣaṇa>த-அகரிடணம்.]*

**அகருதம்** *agarudam*, பெ.(n.) வீற்றிருக்கை (சிந்தா. நி. 13.); sitting in state.

*[Skt. agaru>த. அகருதம்.]*

**அகருமகம்** *agarumagam*, பெ.(n.) செயப்படு பொருள் குன்றிய வினை (வீரசோ. தாது. 2. உரை.); intransitive verb.

*[Skt. a-kar-maka>த. அகருமகம்.]*

**அகல்லியமாமிசம்** *agalliya-māmišam*, பெ.(n.) சமைக்கப்படாத இறைச்சி, பச்சூன் (சி.சி. பர. சௌத். 29, வேலப்); meat not dressed.

*[Skt. a-kalya+māmisa>த. அகல்லியமாமிசம்.]*

**அகலசத்து** *agalašattu*, பெ.(n.) மலைச்சத்து, சிலாத்து ஒரு துணைத் தாதுப் பொருள்; fossil-exudation stonelack supposed to issue from stones of mountains is hot weather (சா.அக.).

*[Skt. agal-šat>த. அகலசத்து.]*

**அகலமுனி** *agalamuṉi*, பெ.(n.) ஆடுதின்னாப் பாளை; a plant which even the goat will not eat (சா.அக.).



**அகலாதரை** *agalādarai*, பெ. (n.) ஆடாதோடை; a plant winter cherry (சா. அக.).

**அகலிகை** *agaligai*, பெ. (n.) கவுதமன் மனைவி; Ahalya, wife of Gaudama, one of *pañša-kaṉṉiyar*, q.v. *"அகலிமெய்க் கேள்வன்" (நல். பாரத கிருட்டிணார்ச்சுன. 99).*

*[Skt. agalyā>த. அகலிகை.]*

**அகலியை** *agaliyai*, பெ.(n.) **அகலிகை** பார்க்க; see *agaligai*

*[Skt. ahalyā>த.அகலியை.]*

**அகவஞ்சம்** *agavañjam*, பெ.(n.) வெள்ளி; silver (சா.அக.).

**அகவாசிகம்** *agavāšigam*, பெ. (n.) கருங்குறிஞ்சா; a black variety of *kuriñja*, a plant (சா.அக.).

**அகவாலிசுரோதம்** *agavāli-šurōdam*, பெ. (n.) வால் நீண்ட குரங்கு; a long-tailed monkey (சா.அக.).

**அகவான்** *agavāṉ*, பெ.(n.) முதலாளிக்கு நிகராகச் செயல்படுபவன்; a agency. *"நேரிருந்து சீமையகவா னிகழ்த்த" (பஞ்ச. திருமு. 2164.).*

*[H. agawānī>த. அகவான்.]*

**அகற்பப்பிராணாயாமம்** *agaṟpa-p-pirāṇāyāmam*, பெ. (n.) மந்திரச் சடங்குகளின்றி உயிர்ப்பினை ஒழுங்கு படுத்தும் ஓகவகை; restraint of breath practised without the use of mantras or meditation.

*[Skt. a - kalpa + pirāṇāyama > த. அகற்பப்பிராணாயாமம்.]*

**அகற்பவிபூதி** *a-kaṟpa-vibūdi*, பெ. (n.) இயற்கையிலுண்டான திருநீறு (சைவச. பொது. 186, உரை.); sacred ashes found in nature.

*[Skt. a-kalpa+vibhūdi>த. அகற்பவிபூதி.]*

*[புழுதி→பூதி> Skt. vi-bhūdi.]*

**அகற்பன்** *a-kaṟpaṉ*, பெ.(n.) ஒப்பில்லாதவன்; one who is incomparable. *"கற்பவர்க ணற்புலனில் நிற்புறு மகற்பா" (சேதுபு. சருவதீ. 27.).*

த.வ. ஒப்பிலி.

*[Skt. a-kalpa>த. அகற்பன்.]*

**அகற்பிதமரணம்** *agaṟpida-maraṇam*, பெ.(n.) முதிரா இறப்பு; death occuring before the prescribed time, unnature death.

*[அகற்பித(ம்)+மரணம்.]*

*[Skt. a-kalpita>த. அகற்பிதம்.]*

**அகன்மகம்** *agan-magam*, பெ.(n.) செயப்படு பொருள் குன்றிய வினை (பி.வி. 35, உரை.); intransitive verb.

*[Skt. a-karmaka>த. அகன்மகம்.]*

**அகன்னம்** *agannam*, பெ.(n.) செவிடு; deafness (சா.அக.).

**அகன்னியகனி** *aganni-y-agani*, வி.அ. (adv.) நாடொறும்; daily, from day to day.

*[Skt. ahani+ahani>த. அகன்னியகனி.]*

**அகன்னியசனி** *aganniyašani*, பெ.(n.) நாளுக்கு நாள்; from day to day (சா.அக.).

**அகத்தியநட்சத்திரம்** *agattiya-natšattiram*, பெ.(n.) அகத்திய விண்மீன்; the star canopus.

**அகாடி** *agāḍi*, பெ.(n.) 1. முன்; front. 2. குதிரை முன்னங்காற் கயிறு(வின்.); rope used for tying a horse's fore-feet.

*[U. agāri>த. அகாடி.]*

**அகாடிபிச்சாடியில்லாதவன்** *agāḍi-piccāḍi-y-illādavan*, பெ.(n.) கட்டுக்கடங்காதவன் (இ.வ.); person free from all resonsibility, as a horse bound neither before nor behind.

*[அகாடிபிச்சாடி + இல்லாதவன்.]*

*[U.agāri+pichwāṛe>த.அகாடிபிச்சாடி.]*

**அகாண்டகுசுமம்** *agāṇḍa-kušumam*, பெ. (n.) பருவந் தவறிப் பூக்கை; blossoming out of season (சா.அக.).

*[அகாண்டம் + குசுமம்.]*

*[Skt. a-gānta>த.அகாண்ட(ம்).]*

**அகாண்டசாதம்** *agāṇḍa-šādam*, பெ.(n.) குறிப்பிட்ட காலத்திற்கு முன்பே பிறந்தது; premature birth (சா.அக.).

*[Skt. a-gānta+jāta>த.அகாண்டசாதம்.]*

**அகாண்டசூலை** *agāṇḍa-šūlai*, பெ.(n.) குத்தல் வலி; acute pain (சா.அக.).

*[அகாண்டம் + சூலை.]*

*[Skt. a-gānṭa>த. அகாண்டம்.]*

*[த.சூலை>Skt. sūla.]*

**அகாண்டபாதசாதம்** *agāṇḍa-pādašādam*, பெ.(n.) பிறந்தவுடன் இறத்தல்; dying soon after birth (சா.அக.).

*[Skt. akāṇḍa+pāta+jāta>த. அகாண்டபாதசாதம்.]*

**அகாண்டபாதம்** *agāṇḍa-pādam*, பெ.(n.) இயற்கைக்கு மாறான நிகழ்ச்சி; unnatural or untimely occurence (சா.அக.).

*[Skt. akāṇḍa+pāta>த. அகாண்டபாதம்.]*

**அகாண்டம்** *agāṇḍam*, பெ.(n.) 1. இசையாக் காலம்; out of season before the natural time. 2. முண்டமில்லாதது; that without a trunk (சா.அக.).

*[Skt. akāṇḍa>த. அகாண்டம்.]*

**அகாத்தியம்**[1] *agāttiyam*, பெ.(n.) 1. பொல்லாங்கு; wickedness. 2. ஏய்ப்பு வஞ்சகம்; deceit.

*[Skt. aghātya>த. அகாத்தியம்.]*

**அகாத்தியம்**[2] *agāttiyam*, பெ.(n.) கடித்துண்ணத் தகாதது; that which is not fit for chewing (சா.அக.).

**அகாதசுரம்** *agāda-šuram*, பெ. (n.) அளவிறந்த காய்ச்சல்; a condition marked by excessively high temperature or aggravated febrile symptoms, hyperpyretia (சா.அக.).

*[அகாதம் + சுரம்.]*

*[Skt. a-gadha>த. அகாத(ம்).]*

**அகாதநோய்** *agāda-nōy*, பெ.(n.) கடுமையான நோய்; a virulent disease (சா.அக.).

*[அகாத(ம்) + நோய்.]*

*[Skt. a-gādha>த. அகாதம்.]*

**அகாதப்படுஞ்சமயம்** *agāda-p-paduñ-šamayam*, பெ.(n.) துன்பக்காலம் (வின்); times of adversity.

*[அகாதம் + படுஞ்சமயம்.]*

*[Skt. a-gādha>த. அகாத(ம்).]*

**அகாதப்புளிப்பு** *agāda-p-pulippu*, பெ. (n.) கூடுதற் புளிப்பு; excess of acidity, *hyperacidity* (சா.அக.).

*[அகாதம் + புளிப்பு.]*

*[**Skt.** a-gadha>த. அகாதம்.]*

**அகாதபசி** *agāda-paši*, பெ. (n.) அளவிறந்த பசி; extreme hunger, *hyperorexia* (சா.அக.).

**த.வ. யானைப்பசி.**

*[அகாதம் + பசி.]*

*[**Skt.** a-gādha>த. அகாத(ம்).]*

**அகாதபித்தம்** *agāda-pittam*, பெ. (n.) கொடிய பித்தம்; excessive secretion of bile, *hypercholia* (சா.அக.).

*[அகாதம் + பித்தம்.]*

*[**Skt.** a-gādha>த. அகாத(ம்).]*

*பித்து → பித்தம்.*

**அகாதம்¹** *agādam*, பெ.(n.) 1. மிக்க ஆழம் (அஷ்டப். அழகரந். 15.); great depth. 2. நீந்துபுனல் (பிங்.); water of swimming depth. 3. மிகுதி; excess.

*[**Skt.** a-gādha>த. அகாதம்.]*

**அகாதம்²** *agādam*, பெ.(n.) தேவகணத்தால் வெட்டப்பட்ட குளம் (நாநார்த்த); tank formed by divine agency.

*[**Skt.** a-gādha>த. அகாதம்.]*

**அகாதவலி** *agāda-vali*, பெ.(n.) 1. தாங்க வொண்ணா மிகு வலி; excessive sensibility to pain, *hyperadigesia*. 2. ஆழ்ந்த வலி; deep seated pain (சா.அக.).

*[அகாத(ம்) + வலி.]*

*[**Skt.** a-gādha>த. அகாத(ம்).]*

**அகாதவியர்வை** *agāda-viyarvai*, பெ. (n.) விட்டொழியா வியர்வை; excessive sweating, *Hyperphidrosis* (சா.அக.).

*[அகாத(ம்) + வியர்வை.]*

*[**Skt.** a-gādha>த. அகாத(ம்).]*

வியர்→ வியர்வை.

**அகாதவுதிரம்** *agāda-v-udiram*, பெ. (n.) 1. மிகுதியான குருதி; vast quantity of blood, *Polyemia*. 2. அளவிறந்த குருதி; superabundance of blood, *Plethora* (சா.அக.).

*[**Skt.** a-gādha+udhira>த. அகாதவுதிரம்.]*

**அகாதவொழுக்கு** *agāda-v-olukku*, பெ.(n.) அளவிறந்த அரத்தப்போக்கு; excessive evacuation as in bleeding or purging, *hypercenosis* (சா.அக.).

*[அகாதம் + ஒழுக்கு.]*

*[**Skt.** a-gādha>த.அகாத(ம்).]*

ஒழு→ஒழுகு→ஒழுக்கு.

**அகாதன்** *agādan*, பெ. (n.) வஞ்சகன் (யாழ்.அக.); deceit full man.

**த.வ. கேடன்.**

*[**Skt.** a-gādha>த. அகாதன்.]*

**அகாதிகள்** *agādigal*, பெ.(n.) முத்திப்பேறு, முத்திச் செயல்; (Jaina.) unobstuctive karmas helpful in emancipation, four in number. *"தீர்ப்ப தகாதிகள்" (திருநூற். 88.).*

*[**Skt.** a-ghātin>த. அகாதிகள்.]*

**அகாதிதகம்** *agādidagam*, பெ.(n.) 1. கடித்துத் தின்னக் கூடாதது; that which can only be swallowed and not masticated. 2. **அகாத்தியம்²** பார்க்க; see *agāttiyam²*.

**அகாமவினை** *agāmavinai*, பெ.(n.) விரும்பாமலே செய்யும் தொழில்; unintentional action. *"கிருகபதி யகாம வினையினுக்குப் பரிகாரம் பகர்ந்திடுவர்" (சிவதரு.பரிகார–2).*

**அகாரணம்¹** *agāranam*, பெ.(n.) நேர்ச்சி (தற்செயல்) (வின்.); accident.

*[**Skt.** a-kārana>த. அகாரணம்.]*

**அகாரணம்²** *a-gāranam*, பெ. (n.) காரணமின்மை; absence of cause. *"அகாரணத் தெதிர்த்தீர்" (காஞ்சிப்பு. தக்கீச.12.).*

*[**Skt.** a-kārana>த. அகாரணம்.]*

**அகாரணமாக** *agāraṇam-āga*, கு.வி.எ.(adv.) கரணியமின்றி; without proper reason. *அகாரணமாகச் சந்தேகப்பட்டுக் காரியத்தை கெடுத்துவிடாதே (இ.வ.).*

*[அகாரணம் + ஆக.]*

*[**Skt.** a-kārana> த. அகாரணம்]*

**அகாரணன்** *a-gāraṇaṉ*, பெ.(n.) கடவுள்; god, as uncaused.

*[**Skt.** a-kāraṇa>த. அகாரணன்.]*

**அகாரம்** *agāram*, பெ.(n.) வீடு(பிங்.); house.

*[**Skt.** agāra>த. அகாரம்.]*

**அகாரி** *agāri*, பெ.(n.) கடவுள்(வின்); god.

*[**Skt.** a-kārin>த. அகாரி.]*

**அகாரியம்** *a-gāriyam*, பெ.(n.) தகாத செய்கை; improper act, unworthy deed, criminal or sinful action. *"நாவகாரியஞ் சொல்லிலாதவர்" (திவ். பெரியாழ், 4, 4,1.).*

**த.வ. தீச்செயல்.**

*[**Skt.** a-kārya>த. அகாரியம்.]*

**அகாருண்யம்** *agāruṇyam*, பெ. (n.) அருளின்மை (மேருமந்.97, உரை.); mercilessness.

**த.வ. இரக்கமின்மை.**

*[**Skt.** a-kāruṇya>த. அகாருண்யம்.]*

**அகி**[1] *agi*, பெ.(n.) பாம்பு; snake. *"கடி யகிப்பிணி தீர்ந்ததன்பின்" (சேதுபு. இராமனருச்.30.).*

*[**Skt.** ahi>த. அகி.]*

**அகி**[2] *agi*, பெ.(n.) 1. ஈயம்; lead plumbum. 2. ஒருவகை மரம்; a kind of tree. 3. கதிரவன்; the sun (சா.அக.).

**அகிகண்டம்** *agi-kaṇḍam*, பெ. (n.) மயிர்மாணிக்கம்; wild fenugreeks-sider rhombifolia (சா.அக.).



**அகிகாந்தம்** *agi-gāndam*, பெ.(n.) 1. காற்று; wind, air. 2. ஞாயிறு (சூரிய)காந்தம்; sun *stone-Jasper* (சா.அக.).

**அகிகை** *agigai*, பெ.(n.) 1. இலவமரம்; silk-cotton tree, *Bombax Malabricum*. 2. பட்டுப்பருத்தி (இலவம் பஞ்சு); silk-cotton, *Bombax pentan drum* (சா.அக.).



**அகிகோசம்** *agi-kōšam*, பெ.(n.) பாம்புச் சட்டை; the slough or cast-off skin of a snake (சா.அக.).

*[அகி+கோசம்.]*

*[**Skt.** ahi>த. அகி.]*

*[கோயம்→ கோசம்.]*

**அகிச்சத்திரம்** *agi-c-cattiram*, பெ.(n.) 1. ஒருவகை நஞ்சு; a kind of vegetable poison. 2. ஒருவகை பூடு; a plant, *Odina pennata* (சா.அக.).

**அகிஞ்சனன்** *agiñjaṉaṉ*, பெ.(n.) ஆதரவு இல்லாதோன்; destitute-person.

த.வ. ஏதிலி.

*[Skt. a-kiñcana>த. அகிஞ்சனன்.]*

**அகிஞ்சிரம்** *agiñjiram*, பெ.(n.) 1. செங்கத்திரி; caper shrupcapparis sepiaris alias cactas opimtia. 2. கருக்குவாளி; the plant *Momordica Cochin-chinesis* (சா.அக.).

**அகிஞ்சை** *agiñjai*, பெ.(n.) 1. கொல்லாமை; abstinence from killing. 2. துன்பமின்மை; harmlessness (சா.அக.)

*[Skt. a-hiṃsā>த. அகிஞ்சை.]*

**அகிதம்[1]** *agidam*, பெ.(n.) 1. உணவு; food. 2. நன்மை இல்லாதது; that which is not conformable to a standard of taste. 3. தீமை; evil. *"அகித மொருவர்க்கு மெண்ணிலாதோர்" (திருவேங்.சத. 87.).* 4. (இதம்) இன்மை; unpleasantness.

*[Skt. a-hita>த. அகிதம்.]*

**அகிதம்[2]** *agidam*, பெ.(n.) 1. பகை; hostility. 2. உரிமையின்மை; absence of right or claim.

*[Skt. a-hita>த. அகிதம்.]*

**அகிதம்[3]** *agidam*, பெ.(n.) 1. தகாதது (தாயு.எங்கு நிறை.1); that which is unfit, unsuitable. 2. இடையூறு; obstruction. *"இந்தத் தன்மத்துக்கு அகிதம் பண்ணினவன்" (S.II.ii, 499.).*

*[Skt. a-hita > த. அகிதம்.]*

**அகிதலம்** *agi-talam*, பெ. (n.) கீழுலகம்; serpant world in the nither regions. *"அகிதல வரவினது" (இரகு. யாகப். 79.).*

*[அகி + தலம்.]*

*[Skt. ahi>த. அகி.]*

*தளம்→தலம்.*

**அகிதன்** *agidaṉ*, பெ.(n.) பகைவன் (யாழ்.அக.); foe, enemy.

*[Skt. a-hita>த. அகிதன்.]*

**அகிதுண்டிகன்** *agituṇḍigaṉ*, பெ. (n.) பாம்பாட்டி; a snake charmer; a snake exhibitior (சா.அக.).



**அகிநிர்வலயோனி** *agi-nirvala-yōṉi*, பெ. (n.) **அகிகோசம்** பார்க்க; see *agi-kōšam* (சா. அக.).

**அகிபதி** *agi-padi*, பெ. (n.) 1. ஆதிசேடன்; *ādišēsaṉ*. *"அகிபதி யாயிர தலையா லிதாகப் பொறுக்கின்ற" (பெருந்தொ.392).* 2. பெரும்பாம்பு, பாம்புக்கரசன்; a big snakes, a king of snakes.

*[Skt. ahi + pati>த.அகிபதி.]*

**அகிபுக்கு** *agi-bukku*, பெ.(n.) 1. கீரி; a mungoase, *Herpestes Mungo*. 2. மயில்; the pea-cock-pavocristatus. 3. (கருடன்) கலுழன்; the Brahminy kite, *Haliastur indicus*.



**அகிபுசம்** *agi-pušam*, பெ.(n.) 1. கலுழன்; the Brahminy kite, *Haliastar indicus*. 2. மயில்; the peacock, *Pavo-Cristatus*. 3. கந்த நாகுலி; the inchneumon plant, *Vanda roxburghi* (சா.அக.).

**அகிபுட்பம்** *agi-puṭpam*, பெ.(n.) நாகேசுரப்பூடு; a plant, ceylon ironwood, *Mesaca roxburghi* (சா.அக.).

**அகிபூதனம்** *agi-būdaṉam*, பெ. (n.) குழந்தைகட்கு எருவாயிலண்டை சேரும் கழிமாசு மற்றும் சிறுநீர் முதலானவற்றை, அடிக்கடி தூய்மைப் படுத்தாமையால், அவ்விடத்தில் தினவுடன் குருக்கள் கண்டு பின்னர் பாம்பைப் போல் சட்டை கழற்றித் துன்புறுத்துமொரு தோல் நோய்; itch-like eruptions appeating about the anus in children and resulting in sloughing, owing to the deposit of urine, perspiration, faeces etc. consequent on the neglect in cleansing that part (சா.அக.).

**அகிபேனம்** *agi-bēṉam*, பெ. (n.) 1. பாம்பின் நஞ்சு; saliva of the snake; the snake poison. 2. கசகசாச் செடியின் பால்; opium, *Papaver Somniferam* (சா.அக.).

**அகிம்சை** *agimšai* பெ.(n.) தீங்கு செய்வதிலிருந்தும் வன்முறையில் ஈடுபடுவதிலிருந்தும் நீங்கிய நிலை; non-violence.

*[**Skt.** a-himsā>த. அகிம்சை.]*

**அகிமாறல்** *agimāṟal*, பெ.(n.) வெள்வேல் (பச்.மு.); panicled babool.

**அகிர்ப்புத்தினி** *agir-p-puttiṉi*, பெ.(n.) இரவு 15 முழுத்தத்தில் மூன்றாவது (விதான குணா. 73, உரை); (Astrol.) the third of 15 divisions of night.

*[**Skt.** ahir-budhnya>த. அகிர்ப்புத்தினி.]*

**அகிரிபு** *agiribu*, பெ. (n.) **அகிபுக்கு** பார்க்க; see *agibukku* (சா.அக.).

**அகிருத்தியம்** *agiruttiyam*, பெ. (n.) தவறான செய்கை; illegal action as rape, adultery etc. (சா.அக.).

*[**Skt.** a-hṛtya>த. அகிருத்தியம்.]*

**அகிருத்திரமவிடம்** *agiruttiramaviḍam*, பெ. (n.) மரம், புல், பூண்டு முதலான நிலத்திணைப் பொருள்களினாலும், நஞ்சு முதலிய தாதுக்களினாலும், தேள், பாம்பு, சிலந்தி முதலிய நச்சுயிர்களின் சேர்க்கைனாலும் ஏற்படும் கொடிய நோய்; diseases arising indirectly from the vegetables, mineral and animal poisons, is opposed to. கிருத்திரமவிடம் - poisons imported into the system directly by mixing it with other substances (சா.அக.).

**அகிரை** *agirai*, பெ. (n.) 1. குரலடைப்பு; obstruction to the place of production of the voice. 2. குரலின்மை; voicelessness due to some perpheral lesion aphonia (சா.அக.).

*[**Skt.** a-hir>த. அகிரை.]*

**அகில** *agila*, கு.பெ.அ.(adj.) நாடு அல்லது உலகுதழுவிய; all. *அகில இந்தியத் தொழிளாளர் சங்கம் (இக்.வ.). அகில இந்திய வானொலி; அகில உலகப் புகழ் (இ.வ.).*

*[**Skt.** a-kila> த. அகில.]*

**அகிலகலாவல்லி** *agila-kalā-valli*, பெ. (n.) கலைமகள் (தக்கயாகப். 220); *Kalaimagaḷ.*

*[அகிலகலா+வல்லி.]*

*[**Skt.** akhila+kalā>த. அகிலகலா.]*

**கலை** > **Skt.** kalā.



**அகிலசரீரம்** *agila-šarīram*, பெ. (n.) 1. உடம்பின் முழுபாகம்; the body as a whole. 2. எல்லாச் சிற்றுயிர்களின் உடம்பு; bodies of all creatures in general (சா.அக.).

*[Skt. a-kila+šarīra>த. அகிலசரீரம்.]*

**அகிலதம்** *agiladam*, பெ. (n.) வெற்றிலைக் கொடி; the betel plant or creeper (சா.அக.).

**அகிலப்பிரகாசன்** *agila-p-piragā-šan*, பெ. (n.) எங்கும் விளங்கும் புகழுடையவன்; one whose fame is world-wide. *"அகிலப்பிரகாசன் திம்மையவப்பையன்" (பெருந்தொ. 1251.)*

*[Skt. akhila + pra - kāša>த. அகிலப் பிரகாசன்.]*

**அகிலம்[1]** *agilam*, பெ.(n.) 1. எல்லாம், முழுவதும் (திவா.); all; the whole 2. உலகு; earthy; 3. உலகம் முழுதும்; universe or entire world. *"அகிலத்துள்ளதோர் கணங்களும்" (கந்தபு. பார்ப்.9) அகிலம் அறிந்த செய்தி (இக்.வ.) அவர் புகழ் அகிலம் எங்கும் பரவிற்று(இ.வ.).*

*[Skt. a-khila>த. அகிலம்.]*

**அகிலம்[2]** *agilam*, பெ.(n.) 1. நிலம்; earth. *"எந்தைதன் னேவலா லகிலந் துறந்தவாறென" (இரகு. சிதைவ. 72).* 2. நீர் (பிங்.); water.

*[Skt. a-khila>த. அகிலம்.]*

**அகிலமேதகி** *agila-mēdagi*, பெ.(n.) சிறுகாஞ்சொறி (சித்.அக); small climbing nettle.

**அகிலரூபன்** *agila-rūbaṉ*, பெ.(n.) கடவுள்; god, as assuming all forms.

*[Skt. akhila+rūpaṉ>த. அகிலரூபன்.]*

**அகிலாண்டகோடி** *agilāṇḍa-kōḍi*, பெ.(n.) எண்ணிறந்த உலகங்கள்; innumerable worlds. *"அகிலாண்ட கோடியெல்லாம்" (தாயு. திருவருள்விலா.).*

*[அகிலாண்டம் +கோடி]*

*[Skt. akhila + aṇḍa>த. அகிலாண்டம்.]*

**அகிலாண்டநாயகி** *agilāṇḍa-nāyagi*, பெ. (n.) மலைமகள் (தக்கயாகப். 613); Malaimagaḷ.

*[அகிலாண்டம் + நாயகி]*

*[Skt. akhila + aṇḍa>த. அகிலாண்டம்.]*

**அகிலாண்டம்** *agilāṇḍam*, பெ. (n.) அனைத்துலகம் (வின்.); the whole universe.

*[Skt. akhil-ānḍa>த. அகிலாண்டம்.]*

**அகிலோலிகம்** *agilō-ligam*, பெ.(n.) **அகிலதம்** பார்க்க; see *agiladam* (சா. அக.).

**அகிவிடபாகம்** *agivida-bāgam*, பெ.(n.) 1. பாம்பின் நஞ்சிறக்கல்; neutralising the poison of snake. 2. கந்தநாகுலி; the chneumon plant, *Vandaro-burghil* (சா.அக.).

**அகிவைரி** *agivairi*, பெ. (n.) 1. பாம்பின் பகைவன் (சத்துரு), மயில்; a peacock Pavo-cristatus. 2. கருடன்; the Brahmini kite, *halidstur inducus* (சா.அக.).

*[Skt. ahi+vairin>த. அகிவைரி.]*

**அகீம்** *agīm*, பெ.(n.) அரபு, பாரசீக மருத்துவ நூல்களில் தேர்ச்சியடைந்த உனானி மருத்துவன்; a physician who is well acquainted with Persian and Arabic system of medicines (சா.அக.).

*[U. aḥaq>த. அகீம்.]*

**அகுசலவேதனை** *agušala-vēdaṉai*, பெ.(n.) வருத்த (துக்க)வுணர்ச்சி; experience of sorrow.

*[Skt. a-kušala + vēdanā>த. அகுசல வேதனை.]*

**அகுசுமாதிதம்** *agušu-mādidam*, பெ. (n.) சிவப்புக் குண்டுமிளகாய்; a variety of red chilly (சா. அக.).

**அகுசுலாபு** *agušulābu*, பெ. (n.) அதிவிடயம்; a medicinal root used in dysentery. Indian atees, *Aconitam Heterophyllum* (சா.அக.).

**அகுசுளாபு** *agušuḷābu*, பெ.(n.) 1. அதிவிடை (சங்.அக); atis. 2. **அகுசுலாபு** பார்க்க; see *agušulābu.*

**அகுடகந்தம்** *aguḍa-kandam*, பெ.(n.) பெருங்காயம்; asafoetida, *Ferula asfoeida* (சா.அக.).

**அகுடாரிசம்** *aguḍārišam*, பெ. (n.) கருங்குங்கிலியம்; black dammer, *canarium strictum* (சா.அக.).

*[**Skt.** agaru > த. அகுடாரிசம்.]*

**அகுதார்** *agudār*, பெ. (n.) உரிமையாளி; holder of a right. one in whom any property, perquisite or privilege is vested.

*[**U.** haq-dār>த. அகுதார்.]*

**அகுதி** *agudi*, பெ. (n.) ஏதிலி; destitute, helpless person *"அகுதியிவ டலையின்விதி, யானாலும் விலகரிது" (திருப்பு. 142.).*

த.வ. திக்கற்றவன்.

*[**Skt.** a-gati>த. அகுதி.]*

**அகுப்பியகம்** *aguppiyagam*, பெ. (n.) **அகுப்பியம்** பார்க்க; see *aguppiyam*(சா.அக.).

**அகுப்பியம்** *aguppiyam*, பெ.(n.) பொன் அல்லது வெள்ளி; not a base metal but gold or silver (சா.அக.).

**அகுயலம்** *aguyalam*, பெ. (n.) தீமையாயுள்ளது; that which is bad or inauspicious. *"குயலாகுயலம்மெனக் கூறும் வினை" (நீலகேசி, 490).*

*[**Skt.** a-kušala>த. அகுயலம்.]*

**அகுர்** *agur*, பெ.(n.) **அகுரா** பார்க்க; see *agurā* (சா.அக.).

*[**Skt.** a-hir>த. அகுர்.]*

**அகுரம்** *aguram*, பெ. (n.) வயிற்றுத் தீ; fire in the stomach, *Gastric fire* (சா.அக.).

*[**Skt.** a-hir>த. அகுரம்.]*

**அகுரா** *agurā*, பெ.(n.) மோதிரக்கண்ணி; a rambling shrub 10-15 ft. (சா.அக.).

*[**Skt.** a-hir>த. அகுரா.]*

**அகுள்** *aguḷ*, பெ.(n.) அலைதாடி (களகம்பள)த்தோல்; the excrescense of a goat's neck (சா.அக.).

**அகுளிநாதன்** *aguḷi-nādaṉ*, பெ. (n.) ஒன்பான் (நவநாத) சித்தருளொருவர்; one of the nine original Siddhars (சா.அக.).

**அகூடகந்தகம்** *agūḍa-kandagam*, பெ. (n.) பெருங்காயம் (வை.மூ); asafoetida, *Ferula Asafoetida* (சா.அக.).

**அகூடகந்தம்** *agūḍa-kandam*, பெ. (n.) **அகூடகந்தகம்** பார்க்க; *agūḍa-kandagam* (சா. அக.).

**அகூபாரம்** *agū-bāram*, பெ.(n.) 1. கடல் ஆமை; sea-turtle, *Chelonia*. 2. கடல்; sea. 3. கல் மலை; rock; hill (சா.அக.).



**அகூபாரன்** *agū-bāraṉ*, பெ.(n.) **அகூபாரம்** பார்க்க; see *agūbāram* (சா.அக.).

**அகேசம்** *agēšam*, பெ.(n.) 1. மொட்டை; shaven head. 2. வழுக்கை; baldness, *Alopecia*. 3. மயிரின்மை, மயிர்க்குறைவு; absence or lack of hair-atrichia (சா.அக.).

*[**Skt.** a-kēša > த. அகேசம்.]*

**அகேசன்** *agēšaṉ*, பெ.(n.) 1. மயிரில்லாதவன்; one who has lost the hair on the scalp, a bald headed man. 2. மொட்டையன்; one with clean shaven head (சா.அக.).

*[Skt. a-kēša > த. அகேசன்.]*

**அகோசரம்** *agōšaram*, பெ. (n.) புலனுக்கெட்டாதது (வின்.); that which cannot be comprehended by the senses.

*[Skt. a-gōcara > த. அகோசரம்.]*

**அகோசரிமுத்திரை** *agōšari-muttirai*, பெ. (n.) செவித்துளையிரண்டினையும் பஞ்சால் அடைத்துக் கொண்டு, தலையை இருதோள்களிலும் சாய்த்துச் செவியில் உண்டாகும் ஓசையைக் கேட்டுக் கொண்டிருக்கும் ஓகவிருக்கை வேறுபாடு (யோகஞானா. 34.); (*yōga*) a *yōgic* posture in which a person stuffs both his ear-holes with cotton and inclines his head alternately towards each shoulder, listening to the sound in his ears.

*[அகோசரி + முத்திரை.]*

*[Skt. a-gōsarin > த. அகோசரி.]*

**அகோத்திரம்** *agōttiram*, பெ. (n.) நற்குலமின்மை (வின்); want of good ancestry.

*[Skt. a-gōtra > த. அகோத்திரம்.]*

**அகோதாரை** *agōtārai*, பெ. (n.) மிகப்பொழிகை (வின்); pouring in torrents, as rain.

**த.வ. பெரும்பெய்கை.**

**அகோபிலம்** *agōpilam*, பெ.(n.) சிங்கவேள் குன்றம் என்னுந் திருப்பதி; name of a *Vaiṣṇava* shrine in *Karnūl*. *"சொலகோபில நரசிங்கம்" (திருச்செந். பு. 18, 43.).*

*[Skt. ahō-bila > த. அகோபிலம்.]*

**அகோரக்காய்ச்சல்** *agōra-k-kāyccal*, பெ. (n.) கடுமையான காய்ச்சல்; a high fever, *Hyperpyrexia* (சா.அக.).

*[அகோரம் + காய்ச்சல்.]*

*[Skt. a-ghōra > த. அகோரம்.]*

**அகோரசிவாசாரியர்** *agōra-šivācāriyar*, பெ.(n.) சிவ (சைவ)பத்ததி இயற்றியவருள் ஒருவர்; name of a spiritual preceptor author of a *Šaiva* book of ritual.

*[Skt. a-ghōra + šivācārya > த. அகோர சிவாசாரியர்.]*

**அகோரப்பசி** *agōra-p-paši*, பெ. (n.) 1. கொடிய பசி; a voracious hunger. 2. அடங்காப் பசி; a gluttonous appetitie, *Adephagia* (சா.அக.).

**த.வ. பெரும்பசி, யானைப்பசி.**

*[அகோரம் + பசி.]*

*[Skt. a-ghōra > த. அகோரம்.]*

**அகோரப்பல்லதகி** *agōra-p-palladagi*, பெ. (n.) 1. சங்கிலை; the leaf of a plant. *Monetia barlerioides*. 2. பீச்சங்கிலை; smooth volkameria, *Cleodendron inerme* (சா.அக.).

**அகோரம்**[1] *agōram*, பெ. (n.) 1. கொடுமை (திருநெல்.பு.சுவேத.88); fierceness, formidableness. (திருநெல்.பு.88). 2. சிவன் முகத்தொன்று (சிவதரு. பரிகார. 89); face of *Šivaṉ* which is turned southward, one of five *Šivaṉ-mugam*, q.v. 3. சிவமந்திரம் (சைவச. பொது. 324.); a *Šaiva* mantra.

**த.வ. கொடுந்தோற்றம்.**

*[Skt. a-ghōra > த. அகோரம்.]*

**அகோரம்**[2] *agōram*, பெ.(n.) 1. அறிவு (சி.சி. 1, 59); wisdom. 2. வெப்பம் (யாழ் அக); heat.

*[Skt. a-ghōra > த. அகோரம்.]*

**அகோரமயமாதி** *akōra-mayamādi*, பெ. (n.) உடம்பினுள் வெப்பத்திற்குக் காரணமான இடம், உச்சகம்; the seat of heat in that portion of the body situated in the forebain, thermogenic centre (in the carpus striatum) (சா.அக.).

**அகோரவிரம்** *agōraviram*, பெ. (n.) அல்கிடம், ஆறிதழி (சுவாதிட்டானம்); one of the six psychic centres of the body that is sitnated in the genital region.

**அகோரவுபாதி** *agōra-v-ubādi*, பெ. (n.) மிகவும் கொடிய வலி; excessive pain, *Hyperalgia* (சா.அக.).

*[Skt. a-ghōra-ubādhā>த. அகோரவுபாதி.]*

**அகோரவெரிச்சல்** *agōra-v-ericcal*, பெ. (n.) தாங்கொணா எரிச்சல்; unberable burning sensation in the body (சா.அக.).

*[அகோர+எரிச்சல்.]*

*[Skt. a-ghōra>த. அகோரம்.]*

எரி→ எரிச்சல்.

**அகோரன்** *agōraṉ*, பெ. (n.) சிவன் (சூத. எக்கி.பூ.33.2); *Śivaṉ*, as formidable.

*[Skt. a-ghōra>த. அகோரன்.]*

**அகோராத்திரம்** *agōrā-t-tiram*, பெ. (n.) பகலிரவு; day and night.

*[Skt. ahō-rātra>த. அகோராத்திரம்.]*

**அகோரை** *agōrai*, பெ. (n.) வெப்பநாள்; a sultry day (சா.அக.).

த.வ. முதுவேனில.

*[Skt. a-ghōra>த. அகோரை.]*

**அகௌரவம்**[1] *agauravam*, பெ. (n.) இகழ்ச்சி, மதிப்புக்குறைவு; disrespect, irreverence. *'கூத்துப் பார்க்க வந்தவர்கள் தூங்குவதைக் கூத்தர்கள் கௌரவமாக நினைப்பதில்லை (சா. அக.).*

த.வ. மதிப்புக்கேடு.

*[Skt. a-gaurava>த. அகௌரவம்.]*

**அகௌரவம்**[2] *a-gauravam*, பெ. (n.) வணக்கமின்மை; degradution, dishonour. *"அங்கேபோய் அவன் அகௌரவமடைந்தான்"*

*[Skt. a-gaurava> த. அகௌரவம்.]*

**அங்கக்களரி** *aṅga-k-kaḷari*, பெ. (n.) கோயிலில் காணிக்கை யளித்தோர்க்குச் செய்யும் மதிப்புரவு (இ.வ.); honours to liberal donors, in a temple.

*[அங்கம் + களரி.]*

*[Skt. aṅga>த. அங்கம்.]*

**அங்கக்கறிப்பு** *aṅga-k-kaṟippu*, பெ. (n.) 1. உடம்பின் அமைப்பு; (in physiology) the general design and structure of the body. 2. உடலுறுப்பினால் காட்டும் சைகை; any action of the body or limbs intended to express in idea or feeling such as, nodding the head to express assent or dissent etc., 3. ஆண் அல்லது பெண் காட்டும் காதல் வெளிப்பாடு காமக்குறிப்பு (in erotic science) the desire expressed or indicated by gestures of a male or a female through love or passion.4. பிணியுற்றார்தம் உடம்பிற் காணும் அடையாளங்கள்; (in medicine) severed symptoms found in the body of a patient (சா.அக.).

*[அங்கம் + கறிப்பு.]*

*[Skt. aṅga>த. அங்கம்.]*

*கறி → கறிப்பு.*

**அங்கக்காரன்** *aṅga-k-kāraṉ*, பெ. (n.) 1. மெய்க்காவலன் (திவ். நாய்ச்சி. 9, உரை); body-guard. 2.அழகுபடுத்திக் கொள்வோன்; dandy,top.3.முகமூடிக்காரன்,பொய்த் தோற்றங்காட்டுவோன்; masquerader.

*[அங்க (ம்)+காரன்.]*

*[Skt. aṅga>த. அங்கம்.]*

**அங்கக்கிரகம்** *aṅga-k-kiragam*, பெ. (n.) உடல் வலுவின்மையால் கெண்டைக்கால், கைகளில் தானாகவே காணும் நரப்பிசிவு; a spasmodic and painful contraction of the muscles of the calf and the arm observed in weak or debilitated persons or in those of neurotic tendency-cramps (சா.அக.).

**அங்கக்கிரியை** *aṅga-k-kiriyai*, பெ. (n.) மெய்யாற் செய்யும் கூத்துத் தொழில் (சிலப். 3, 12. உரை.); (*nāṭya)* gesticulation in dancing.

*[Skt. aṅga + kriyā>த. அங்கக்கிரியை.]*

**அங்கக்குறி** *aṅga-k-kuṟi*, பெ.(n.) 1. உடம்பின் குணம்; bodily symptom. 2.உடம்பின் அடையாளம்; descriptive marks on the body. 3. ஆண் அல்லது பெண்குறி; genital of a male or a female (சா.அக.).

*[அங்கம் + குறி]*

*[Skt. aṅga>த. அங்கம்.]*

**அங்கக்குறிப்புநூல்** *aṅga-k-kuṟippunūl*, பெ.(n.) உடலமைப்பைப் பற்றியும், உடலுறுப்புகளின் குறிப்புகளைப் பற்றியும், சொல்லும் நூல்; science dealing in the general designs of the body and its organs, as learned by dissection, *Anatomy* (சா.அக.).

*[அங்கம் + குறிப்பு+ நூல்.]*

*[Skt. aṅga>த. அங்கம்.]*

**அங்கக்கூறு** *aṅga-k-kūṟu*, பெ. (n.) 1. உடம்பின் இயல்பு வேறுபாடு முதலியவை; peculiarity of the constigution or temperament Idiosyncrasy. 2. உடற் பகுதிகள்; different parts of the body. 3. உடம்பின் தன்மை; nature of the body (சா.அக.).

*[அங்கம் + கூறு.]*

*[Skt. aṅga>த. அங்கம்.]*

**அங்கக்கோற்பூச்சி** *aṅga-k-kōṟpūcci*, பெ. (n.) உடம்பினுள்ளிருக்கும் கோற்புழு; a round worm found inside the body (சா.அக.).

*[அங்க(ம்)+கோல்+பூச்சி.]*

*[Skt. aṅga>த. அங்கம்.]*

**அங்ககணிதம்** *aṅgak-kaṇidam*, பெ. (n.) எண்கணிதம்; arithmetic.

*[அங்கம் + கணிதம்.]*

*[Skt. aṅga>த. அங்கம்.]*

**அங்ககம்** *aṅgagam*, பெ. (n.) 1. உடலுறுப்பு; organ of the body. 2. உடலுறுப்புகளின் உட்பகுதி; the interior part of an organ (சா.அக.).

*[அங்கம் + அகம்.]*

*[Skt. aṅga>த. அங்கம்.]*

**அங்ககசாயம்** *aṅga-kaṡāyam*, பெ. (n.) 1. வித்தமிழ்து, விந்து; the essence of the body referring to the semen virile. 2. சிறுநீர்; urine (சா.அக.).

**அங்ககாரம்** *aṅga-kāram*, பெ. (n.) நாட்டிய வகை (திருவினை. கான்மா.9.); a mode of dancing.

*[அங்க(ம்) + காரம்.]*

*[Skt. aṅga>த.அங்கம்.]*



**அங்ககீனம்** *aṅga-kīṉam*, பெ. (n.) 1. உறுப்புக் குறை; defect or want of an organ. 2. உறுப்புக்கேடு; deformity of an organ.

*[Skt. aṅga+hīna>த. அங்ககீனம்.]*

**அங்ககீனன்** *aṅga-kīṉaṉ*, பெ. (n) உடம்பினில் ஊனமுற்றவன்; one who is wanting in the perfection of bodily organs or having organic deformity (சா.அக.).

*[Skt. aṅga+hīna>த. அங்ககீனன்.]*

**அங்கச்சோர்வு** *aṅga-c-cōrvu,* பெ. (n.) ஆண்குறித் தளர்ச்சி; want of erectile power in the penis impotency (சா.அக.).

*[அங்க(ம்) + சோர்வு.]*

*[**Skt.** aṅga>த. அங்கம்.]*

**அங்கசங்கம்**[1] *aṅga-šaṅgam,* பெ. (n.) மெய்யுறு புணர்ச்சி (சித்தா. நி. 35.); sexual intercourse.

*[அங்க(ம்) + சங்கம்.]*

*[**Skt.** aṅga>த. அங்கம்.]*

*சங்கம் > **Skt.** saṅga.*

**அங்கசங்கம்**[2] *aṅga-šaṅgam,* பெ. (n.) ஆரவாரப் பகட்டு; ostentation, foppery. *"அவன் அங்கசங்கமாயுள்ளவன்" (இ.வ.).*

*[**Skt.** aṅga>த. அங்கம்.]*

**அங்கசபிசாகம்** *aṅgaša-piśāgam,* பெ. (n.) கருநாயுருவி; black variety of the plant, Indian burr, *Achyrantnes aspera* (சா.அக.).

**அங்கசம்** *aṅgašam,* பெ.(n.) 1. குருதி; blood. 2. நோய்; disease, sickness. 3. மயிர்; hair 4. காமம்; sexual enjoyment. 5. சங்குச் செய்ந் நஞ்சு; an acid prepared from a kind of impure arsenic called 'saṅgupāshanam' used in Indian medicine. 6. ஆயுள்வேதப்படிப் பல மூலிகைகளின் உப்பெடுத்தும் செய்யும், ஒரு நீர்மம்; according to ayurveda, an acid prepared from different kinds of salts obtained by incinerating the roots of several plants. 8. குடிமயக்கம்; intoxication (சா.அக.).

*[**Skt.** aṅga-ja >த. அங்கசம்.]*

**அங்கசலனம்** *aṅga-šalaṉam,* பெ.(n.) 1. உடல் நடுக்கம்; an inroluntary trembling of the body through cold, fear or desease. 2. உடல் அதிர்வாட்டம்; alternate contraction and relaxaction of the muscles of the body, *Tremor* (சா.அக.).

*[அங்கம் + சலனம்.]*

*[**Skt.** aṅga>த. அங்கம்.]*

**அங்கசலனவாதம்** *aṅga-šalaṉa-vādam,* பெ.(n.) ஊதைநோய் தோற்றும் உணவுப் பண்டங்களை உண்பதால், வளிமிகுந்து நாடி நரம்புகளைத் தாக்குவதனால், அது உடம்பு முழுவதும் பரவிக் கை கால்களில், நடுக்கத்தை உண்டாக்கும், ஒரு வகை வளி (வாத) நோய்; a kind of paralysis, progressive in its course by the aggravated condition of *vāyu* arising from consumption of food containing excess of starchy substances, It effects the whole nervous system and is marked by a characteristic tremor of the limbs and the head and is also know as paralysis agitans, shaking palsy or parkinson's disease, and is most common in males over 40 years of age (சா.அக.).

*[அங்க+சலன(ம்)+வாதம்.]*

*[**Skt.** aṅga+vāta>த. அங்கவாதம்.]*

**அங்கசன்**[1] *aṅgašaṉ,* பெ. (n.) காமவேள் (பிங்.); *Kāmaṉ* as born in the mind.

*[**Skt.** aṅga-ja>த. அங்கசன்.]*

**அங்கசன்**[2] *aṅgašaṉ,* பெ. (n.) மகன் (நாநார்த்த); son.

*[**Skt.** aṅga-ja >த. அங்கசன்.]*

**அங்கசாதனம்**[1] *aṅga-šādaṉam,* பெ. (n.) உடற்பயிற்சி; bodily exercise (சா.அக.).

*[**Skt.** aṅga+sādhana>த. அங்கசாதனம்.]*

**அங்கசாதனம்**[2] *aṅga-šādaṉam,* பெ.(n.) உடலுறுப்புகளால் காட்டும் அடையாளம்; bodily sign, mark.

**த.வ. உடற்குறி.**

*[**Skt.** aṅga+šādhana>த. அங்கசாதனம்.]*

**அங்கசாதனம்பிடி-த்தல்** *aṅga-šādaṉam-piḍi-,* 4. செ.கு.வி.(v.i.) துப்பறிதல்; to find out anything by signs or circumstances, fixing suspicion upon one.

**த.வ. உளவறிதல்.**

*[அங்கசாதனம் + பிடி–த்தல்.]*

*[**Skt.** aṅka+šādhaṉa>த. அங்கசாதனம்.]*

**அங்கசாலை** *aṉga-šālai*, பெ.(n.) வேளாண் குடிகள் செலுத்தும் வரிவகை (I.M.P.Cg. 1095.); a tax paid by cultivators.

*[அங்கம் + சாலை.]*

*[**Skt.** aṅga>த. அங்கம்.]*

**அங்கசாலைக்காரன்** *aṅga-šālai-k-kāraṉ*, பெ.(n.) ஊர் நலப்பணியாளன்; village servant who, by order of the headman, assembles the villagers and procures things wanted.

*[அங்க(ம்)+சாலைக்காரன்.]*

*[**Skt.** aṅka>த. அங்கம்.]*

**அங்கசுத்தம்** *aṅgašuttam*, பெ. (n.) அணிவகை; (s.i.i. viii, 39); an ornament.

**அங்கசுபாதி** *aṅgašupādi*, பெ.(n.) சிறுபுள்ளடி; a medicinal plant hedysaram (சா.அக.).



**அங்கசூதம்** *aṅgašūdam*, பெ. (n.) கொன்றை (சித். அக.); Indian labarnum.

**அங்கசேட்டை** *aṅga-šēṭṭai*, பெ.(n.) 1. கால் கைகளாற் குறும்பியற்றல்; doing mischief with the limbs. 2. கை கால்களை வறிதே யாட்டுகை; antic gestures. *"அங்கசேஷ்டை புரியாமல்" (திருவேங். சத. 63.).*

த.வ. புலக்குறும்பு

*[**Skt.** aṅga+ cēṣṭā> த. அங்கசேட்டை.]*

**அங்கசேதம்** *aṅgašēdam*, பெ.(n.) 1. உடம்பினுறுப்புகளைத் தறித்தல் அல்லது அழித்தல்; excision or mutilation of a member of part of the body, amputation. 2. உறுப்புக்குறைவு; absence or defect of any part of organ. 3. உறுப்பழிவு; loss by mutilation etc. of an organ or a part these of (சா.அக.).

*[அங்க(ம்) + சேதம்.]*

*[**Skt.** aṅga>த. அங்கம்.]*

**அங்கசேதனம்** *aṅga-šēdaṉam*, பெ. (n.) உடம்பினுறுப்பை அறுத்தகற்றுகை; the removal of limb or part of the body by using knife, ligature, or any other means, amputation (சா.அக.).

*[அங்கம் + சேதனம்.]*

*[**Skt.** aṅga+chēdana>த. அங்கசேதனம்.]*

**அங்கசேதனவித்தை** *aṅga-šēdaṉa-vittai*, பெ.(n.) உடற்கூற்று நூல் (புதுவை); anatomy.

*[அங்கம் + சேதனம் + வித்தை.]*

*[**Skt.** aṅga+cētana>த. அங்கசேதனம்.]*

*[த. வித்தை>**Skt.** vidyā.]*

**அங்கசேவை** *aṅga-šēvai*, பெ. (n.) குருவின் திருவடி தொழுகை (விவேகசிந்.26); personal service to a preceptor, as washing his feet, etc.

த.வ. பாதத்தொழுகை.

*[**Skt.** aṅga+ šēvā>த. அங்கசேவை.]*

**அங்கசோதனை** *aṅga-šōdaṉai*, பெ. (n.) உடம்பை ஆராய்கை; examination of the body (சா.அக.).

*[**Skt.** aṅga+šōdhana>த.அங்கசோதனை.]*

**அங்கணப்பிரியம்** *aṅgaṇa-p-piriyam*, பெ.(n.) 1. பெண்ணிற்குகந்தது; dear to woman; 2. அசோகு; asoka tree, *saraca indica* (சா. அக.).

*[**Skt.** aṅgaṇa+priya>த.அங்கணப்பிரியம்.]*

**அங்கணபாடாணம்** *aṅgaṇa-pāḍāṇam*, பெ.(n.) ஒருவகைச் செய்ந்நஞ்சு; a mineral poison, a kind of a arsenic in its natural state (சா.அக.).

**அங்கணம்** *aṅgaṇam*, பெ.(n.) 1. கடுக்காய் மரம்; common myrobalan tree, Indian myrobalan, *Terminalia chebala*. 2. பத்து முழஅளவு; 10 cubit's measure. 3. உப்பு (இலவணம்); any salt, but generally common salt. 4. பொரிகாரம்; an artifical or manufactured salt borax, a mineral chemically called sodium biborate. ($Na^2 B_4O_7$) (சா.அக.).

**அங்கணன்** *aṅgaṇaṉ*, பெ.(n.) **அங்கண பாடாணம்** பார்க்க; see *aṅgaṇa-pāḍāṇam* (சா.அக.).

**அங்கத்தளர்ச்சி** *aṅga-t-taḷarcci*, பெ.(n.) 1. விம்மி நிமிர்வுறுந் தன்மையின்மை ; want of erectile power. 2. உடல் நலக்குறைவு; bodity relaxation owing to advance age infirmity (சா.அக.).

*[அங்கம் + தளர்ச்சி.]*

*[**Skt.** aṅga>த.அங்கம்.]*

**அங்கத்தினர்** *aṅgattiṉar*, பெ.(n.) உறுப்பினர்; member.

*[அங்கம்+அத்து+இனர்.]*

*[**Skt.** aṅga>த. அங்கம்.]*

**அங்கத்தீ** *aṅga-t-ti*, பெ. (n.) 1. வயிற்றுத்தீ; fire in the stomach-gastric or digestive fire. 2. உடம்பிற் பரவிநிற்கும் சூடு; the heat felt through out the system, animal heat. 3. உடம்பினில் பல இடங்களில் தோற்றுஞ் சூடு; the therogenic heat at the different centres of the body. 4. காம இன்பத்தால் உடம்பினில் ஏற்படும் சூடு, காமச் சூடு; heat arising in the body from excess of passion or love (சா.அக.).

**த.வ. மேனிச்சூடு, காங்கை.**

*[அங்கம் + தீ.]*

*[**Skt.** aṅga>த. அங்கம்.]*

**அங்கத்துவம்** *aṅgattuvam*, பெ. (n.) உறுப்பினர் தகுதி; member ship. *அவர் தொடர்ந்து மூன்று கூட்டங்களுக்கு வராததால் தம் அங்கத்தவத்தை இழந்தார்.*

**த.வ. உறுப்பாண்மை.**

*[**Skt.** aṅga>த. அங்கத்துவம்.]*

**அங்கதந்திரம்** *aṅga-tandiram*, பெ. (n.) மந்திரவினை அல்லது செய்வினை பற்றியநூல்; a tantric science treating of magical diagrams, marks of figures (சா. அக.).

**த.வ. செய்வினை நூல்.**

**அங்கதன்** *aṅgadaṉ*, பெ.(n.) வாலியின் மகன் (கம்பரா. அங்கதன்றூ. 9); name of the son of *Vāli*.

*[**Skt.** aṅgada>த. அங்கதன்.]*

**அங்கதாரி** *aṅga-dāri*, பெ.(n.) 1. ஆதன் (சீவன்); soul. 2. எலும்பு; bone. 3. உடம்பு; body (சா.அக.).

*[**Skt.** aṅga+dārin>த. அங்கதாரி.]*

**அங்கதாளம்** *aṅga-tāḷam*, பெ.(n.) தாளவகை (பரத. தாள 4 உரை); (Mus.) variety of time-measure.

*[அங்கம் + தாளம்.]*

*[**Skt.** aṅga>த. அங்கம்.]*

**அங்கதி** *aṅgadi*, பெ.(n.) 1. வளி; wind. 2. நெருப்பு; fire. 3. நோய்; disease (சா.அக.).

*[**Skt.** aṅga>த. அங்கதி.]*

**அங்கதேவதை** *aṅga-dēvadai*, பெ. (n.) சிறுதெய்வம்; attendent deity of a superior god. *"அங்கதேவதைக்கு இருநாழி உரி அரி" (T.A.S. ii, 173.).*

*[அங்கம் + தேவதை.]*

*[**Skt.** aṅga>த. அங்கம்.]*

**அங்கந்திறத்தல்** *aṅgan-tiṟattal*, தொ.பெ. (vbl.n.) வாயால் வயிற்றாலெடுக்கை (வாந்தி பேதி), நாட்பட்ட கழிச்சல் முதலிய நோய்களின் நிமித்தம் எருவாய் திறந்து போதல்; gaping of the anus owing to the relaxed condition of the sphinctre muscles. It is sometimes noticed in choloera, chronic diarrhoea or dysentary (சா.அக.).

த.வ. எருவாய்திறப்பு.

*[அங்கம் + திற-.]*

*[Skt. aṅga>த. அங்கம்.]*

**அங்கநதி** *aṅga-nadi*, பெ. (n.) 1. மூளையின் நீர்; the cerebro spinal fluid. 2. சிறுநீர்; urine discharged from the body (சா.அக.).

**அங்கநியாசம்** *aṅga-niyāšam*, பெ. (n.) மறைமொழியோடு உறுப்புகளைத் தொடுகை (திருக்காளத். 4, 5, 39.); touching some parts of the body with the fingers pronouncing the appropriate mantras.

த.வ. மெய்தீண்டல்.

*[Skt. aṅga + nyāsa>த. அங்கநியாசம்.]*

**அங்கநூல்** *aṅga-nūl*, பெ. (n.) 1. மறைநூல்; sciences auxiliary to the vedas. *"சோதிடாதிமற்றங்கநூல்" (தாயு. சிதம்பர. 10)* 2. சமண தோன்றிய (சைனாகமம்) வேறுபாடுகளு ளொன்று; a class of jaina scriptures. *"அங்கநூலாதி யாவும்" (யசோதர. 1, 51).*

த.வ. அடிப்படைநூல்.

*[அங்க(ம்)+ நூல்.]*

*[Skt. aṅga>த. அங்கம்.]*

**அங்கபடியெலும்பு** *aṅga-padiyelumbu*, பெ. (n.) குதிரை சேணத்து அங்கவடியைப் போலவிருக்கும் காதெலும்பு; the stirrup-shaped bone of the middle ear articulating with the incus. It is one of the chains of small bones found in the tympanic cavity-stapes (சா.அக.).

த.வ. செவிஎன்பு.

**அங்கப்பதக்கணம்** *aṅga-p-padakkaṇam*, பெ.(n.) **அங்கப்பிரதட்சிணம்** (திருவாலவா. 34.13) பார்க்க; *aṅga-p-piratatcinam.*

த.வ. மெய்யுறுசுற்று, உருள்தண்டம்.

*[Skt. aṅga+pra-dakṣiṇa > த. அங்கப் பதக்கணம்.]*

**அங்கப்பயிற்சி** *aṅga-p-payiṟci*, பெ. (n.) **அங்கசாதனம்** பார்க்க; see *aṅga-šādaṉam.*

*[அங்க(ம்) + பயிற்சி.]*

*[Skt. aṅga>த.அங்க(ம்).]*

**அங்கப்பழுது** *aṅga-p-paḻudu*, பெ. (n.) 1. உறுப்புக்குறைபாடு; defect in an organ of the body. 2. உறுப்புக்கேடு; malformation or deformity in an organ (சா.அக.).

த.வ. உறுப்புக்குறை.

*[அங்க(ம்) + பழுது.]*

*[Skt. aṅga > த. அங்கம்.]*

**அங்கப்பானை** *aṅga-p-pāṉai*, பெ. (n.) எரியூட்டப்பட்ட சாம்பல், எலும்பு முதலியவடங்கிய பானை; an earthen vessel containing the bones and ashes of the dead (சா.அக.).

த.வ. ஈமத்தாழி, ஈமப்பானை.

*[அங்க(ம்) + பானை.]*

*[Skt. aṅga>த. அங்கம்.]*

**அங்கப்பிச்சு** *aṅga-p-piccu*, பெ. (n.) உடம்பிலிருக்கும் பித்து; bile in the system (சா.அக.).

*[அங்கம் + பிச்சு.]*

*[Skt. aṅga>த. அங்கம்.]*

*பித்து→பிச்சு.*

**அங்கப்பிரதக்கணம்** *aṅga-p-piratakkaṇam*, பெ.(n.) **அங்கப்பிரதட்சிணம்** (சீகாழிக் தலவி. 14.) பார்க்க; see *aṅga-p-piratatcinam.*

*[Skt. aṅga+ pradakṣiṇa>த. அங்கப் பிரதக்கணம்.]*

**அங்கப்பிரதட்சணம்** *anga-p-pira-taṭcaṇam*, பெ.(n.) கோயில் திருச்சுற்றினை உடலாற் புரண்டு வலம்வருகை; rolling the body to the right, to and around a sacred place, generally in fulfilment of a vow.

**த.வ. உருள்தண்டம், மெய்யுறு சுற்று.**

*[**Skt.** anga+pradakṣiṇa > த. அங்கப்பிரதட்சணம்.]*



**அங்கப்பிரளி** *anga-p-piraḷi*, பெ.(n.) தன் உடம்பைச் சுருட்டிக் கொள்ளும் தன்மையுள்ள மரவட்டை; a creature capable of twisting its body into a round fold; millepees-*Hydenocarpus inebrains* (சா.அக.).

*[அங்கம் + பிரளி.]*

*[**Skt.** anga > த. அங்கம்.]*

புரள் → பிரள் → பிரளி.



**அங்கப்பிராயச்சித்தம்** *anga-p-pirāya-c-cittam*, பெ.(n.) உடல் தூய்மையின் பொருட்டானதொரு குற்றநீக்கம், தீட்டுக் கழிப்பு (வின்.); expiation for bodily impurity, such as that caused by the death of a relative.

**த.வ. தீட்டுக்கழிவு.**

*[**Skt.** anga+prāya-c-citta > த. அங்கப்பிராயச்சித்தம்.]*

**அங்கப்புண்** *anga-p-puṇ*, பெ. (n.) 1. உடலுறுப்புகளில் ஏற்படும் புண்; sore or wound developed in an organ. 2. ஆண்குறிப் புண்; sore or ulcer on the penis. 3. உடலிற்காணும் புண்; itches, sore or other wound on the body (சா.அக.).

**த.வ. மேனிப்புன்.**

*[அங்க(ம்)+புண்.]*

*[**Skt.** anga > த. அங்கம்.]*

**அங்கபங்கம்**[1] *angapangam*, பெ.(n.) பெருமை (இ.வ.); pomp, pride.

**அங்கபங்கம்**[2] *angapangam*, பெ.(n.) 1. உடற் குற்றம்; defect in the organ of a body. 2. உடலுறுப்புக் குறைபாடு; mutilation or deformity of an organ. 3. முடக்கு நோயாலே உடற்சோர்வு; poss of motion in a living part or member-paralysis (சா.அக.).

**த.வ. மெய்யுறவு.**

*[**Skt.** anga+bhanga > த. அங்கபங்கம்.]*

**அங்கபங்கமழி-த்தல்** *angapangam-aḻi-*, 4 செ.குன்றாவி.(v.t.) வருத்துதல் (வின்); to vex, irritate, torment.

**த.வ. மெய்வருத்துதல்.**

*[அங்கபங்க(ம்)+அழி-.]*

*[**Skt.** anga-banga > த. அங்கபங்கம்.]*

**அங்கபாலி** *angapāli*, பெ.(n.) 1. மருத்துவச்சி; midwife; nurse. 2. ஒரு பூடு; a plant. (சா.அக.).

**த.வ. மருத்துவச்செவிலி.**

**அங்கபூவம்** *aṅgapūvam*, பெ. (n.) அங்காகம பூர்வாகமங்கள்;(jaina) *aṅgagama* and *purvāgama*. *'அங்கபூவமாதிநூலோதி' (மேருமந். 124).*

*[**Skt.** aṅga + pūrva > த. அங்கபூவம்.]*

**அங்கம்¹** *aṅgam*, பெ.(n.) 1. உடலுறுப்பு; a part of the body. 2. அரையின் மேலுள்ள உடம்பின் பகுதி; the portion of the main body without the limbs-trunk. 3. எலும்புக் கூடு; the solid frame-work of mere bones-skeleton. 4. உடம்பு; body. 5. மேனியழகு; well-formed human shape-symmetry. 6. மருத்துவ நூல்; medicial science. 7. உயிர்; the soul. 8. கோளக செய்நஞ்சு (பாடாணம்); one of the 32 kinds of mineral poison.9. மனம்; mind. 10. பத்து; the numeral ten. 11. மூளை; brain *(சா.அக.).*

*[**Skt.** aṅga>த.அங்கம்.]*

அங்க எனும் வடமொழிச்சொல் வளைதல் பொருள்படும் 'அன்ச்' எனும் வேரிலிருந்து பிறந்ததாக மோனியர் வில்லியம்சு வலிந்துரைக்கிறார். வடநாட்டில் வழங்கிய பல்வேறு பாகத (பிராகிருத) மொழிகளில் வயிற்றைக் குறித்த அங்க எனும் சொல்லே வடமொழியில் கடன் சொல்லாயிற்று எனத் தெரிகிறது. அஃகு–அக்கு–அங்கு எனச் சுருங்குதல் பொருளில் வழங்கிய தமிழ்ச் சொல். பாகதம் எனும் வடதமிழில் அங்கு–அங் எனத் திரிந்தது.

**அங்கம்²** *aṅgam*, பெ. (n) 1. ஒரு முழுமையின் அல்லது அமைப்பின் பகுதி; part of a whole or an organization. *'படைத்துறை அரசின் ஓர் அங்கம்'.* 2. (நாடகத்தில்) ஒரு பெரும் பிரிவு; act (of a play). *'செய்தியைக் கேட்டதும் அங்கமெல்லாம் பதறியது'.*

*[**Skt.** aṅga>த.அங்கம்.]*

**அங்கமணிதிரவியம்** *aṅgamaṇi-tiraviyam*, பெ.(n) மணமகன் பரிசம் (S.I.I.VI. 152.); dowry.

*[அங்க+மணி+திரவியம்.]*

*[**Skt.** aṅga > த.அங்க(ம்);**Skt.** dravya> த.திரவியம்.]*

**அங்கமர்த்தன்** *aṅga-marttaṉ*, பெ. (n.) உடம்பை அழுத்தித் தேய்ப்பவன்; a servant who shampooes his master's body - shampooer (சா.அக.).

**அங்கமருடம்** *aṅga-maruḍam*, பெ. (n.) 1. உடலுறுப்பில் ஏற்படும் வலி; pain in the limbs. 2. உடம்பு வலி; pain in the body. 3. ஊதை நோய்; pain in the joints (சா.அக.).

**த.வ. மெய்வருத்தம்.**

**அங்கமாலை** *aṅga-mālai*, பெ.(n.) சிற்றிலக்கிய வகை (இலக். வி. 835.); members of bones worn by *Śivaṉ.*

*[அங்கம் + மாலை.]*

*[**Skt.** aṅga>த.அங்கம்.]*

**அங்கயோகம்¹** *aṅga-y-ōgam*, பெ.(n.) 1. எண் ணுறுப்பு யோகம் (R); yōga which consists of eight forms of discipline. 2. எலும்பு மாலை (தேவா.295, 7); necklace of bones worn by *Śivaṉ.*

*[**Skt.** aṅga+yōga>த. அங்கயோகம்.]*

**அங்கயோகம்²** *aṅga-yōgom*, பெ. (n.) ஒகநிலை வகை (சங்.அக.); (Astrol.) situation of the planet jupiter in one of four position *udayam, kēndiram, mūlattirikoṇam,* or *uccam.*



**அங்கர்** *aṅgar*, பெ.(n.) அங்கநாட்டார்; *aṅga-dēsa,* the country about Benares. *"அங்கர் மாகத ராரியர்" (திருவிளை. திருமண. 74).*

*[**Skt.** aṅga >த. அங்கர்.]*

**அங்கர்கோமான்** *aṅgar-kōmāṉ*, பெ.(n.) அங்கநாட்டை ஆட்சிசெய்த கண்ணன்; (சூடா;); *Karṇaṉ,* as king of *aṅga-dēšam.*

*[அங்கர்+கோமான்.]*

*[**Skt.** aṅga > அங்கர்.]*

**அங்கர்யாரி** *aṅgar-yāri*, பெ.(n.) நங்கூரந் தூக்கியெடுக்கும் கப்பிக் கயிறு (கடலியல்); cat tackle for drawing up an anchor.

**த.வ. நங்கூரத்தாரம்.**

*[E. anchor>த.அங்கர்.]*

**அங்கரக்கன்** *aṅgarakkaṉ*, பெ. (n.) மெய்க்காவலன்; body-guard. *"அங்கரக்கர் சதகோடி யமைந்தோர்" (கம்பரா. இராவணன்றானை காண். 10).*

**த.வ. மெய்க்காப்பாளன், மெய்ம்மறை.**

*[**Skt.** aṅga +raksa>த.அங்கரக்கன்.]*

*[த.அரக்கன்> **Skt.** raksa.]*

**அங்கரக்கா** *aṅgarakkā*, பெ.(n.) நீண்ட சட்டை; long coat worn by men, tunic.

*[**U.** angarkhā >த. அங்கரக்கா.]*

**அங்கரங்கம்** *aṅgaraṅgam*, பெ.(n.) உலகின்பம்; wordly pleasure (சா.அக.).

**அங்கரங்கவைபவம்** *aṅgaraṅga-vaibavam*, பெ.(n.) எல்லா நுகர்ச்சிகளும்; all kinds of enjoyment. *"ஸ்வாமிக்கு அங்கரங்க வைபவத்துக்கு விடுவித்த கிராமம் (S.i.i.71.).*

**அங்கரங்கவைபோகம்** *aṅgaraṅga-vaibōgam*, பெ.(n.) **அங்கரங்கவைபவம்** பார்க்க; see *aṅgaraṅga-vaibavam.*

**அங்கரட்சிணி** *aṅga-raṭciṇi*, பெ.(n) மெய்யுறை (போர்க்கவசம்); coat of mail

*[**Skt.** aṅga + rakṣiṇi>த.அங்கரட்சிணி.]*

**அங்கராகம்** *aṅga-rāgam*, பெ.(n.) உடம்பிற் பூசப்பெறும் நறுமணப் பொருள்; cosmetic. *"அங்கராக மணியார மார்ப" (பாரத. மணி 109).*

*[**Skt.** aṅga + rāga>த.அங்கராகம்.]*

**அங்கராகி** *aṅgarāgi*, பெ. (n.) புறத்தே காண்குறும் மேனி மயிர்; hair on the body (சா.அக.).

*[**Skt.** aṅga+rāga>த.அங்கராகி.]*

**அங்கருகம்** *aṅgarugam*, பெ.(n.) மயிர் (சங்.அக); hair.

*[**Skt.** aṅga+ruha>த.அங்கருகம்.]*

**அங்கரூகம்** *aṅgarūgam*, பெ.(n.) **அங்கருகம்** (சிந்தா.நி. 35) பார்க்க; see *aṅgarugam.*

*[**Skt.** aṅga+rūhā>த.அங்கரூகம்.]*

**அங்கரூபகம்** *aṅga-rūbagam*, பெ.(n.) மயிர்; hair (சா.அக.).

**அங்கலட்சணநூல்** *aṅgalaṭcaṇa-nūl*, பெ.(n.) உடலுறுப்புகளின், அமைப்பு அழகு முதலானவற்றைப் பற்றிக் கூறும் உடற்கூற்றிலக்கண நூல்; that branch of science describing the structural beauty, symmetrical disposition of organs and due proportion of the several parts of the body to each other (சா.அக.).

*[அங்கம்+லட்சணம் +நூல்.]*

*[**Skt.** aṅga+lakṣaṇa>த.அங்கலட்சணம்.]*

*இலக்கு→இலக்கணம் > **Skt.** lakṣaṇa.*

**அங்கலாகாசம்** *aṅgalākāšam*, பெ.(n.) மனநல மருத்துவர்கள் பயன்படுத்தும் மந்திரக் கோல்; a magic rod or want used by conjurors occultists, seers and other psychologists to effect a cure in diseases or to attain success in any of their attempts (சா.அக.).

**அங்கலிங்கம்** *aṅgaliṅgam*, பெ.(n.) வீரசைவர் தங்கள் உடலில் அணிந்து கொள்ளும் இலங்கக் குறி, இலங்கம்; *liṅgām* worn by *liṅgāyates* on their person.

*[**Skt.** aṅga+liṅga>த. அங்கலிங்கம்.]*

**அங்கவத்திரம்**[1] *aṅga-vattiram*, பெ. (n.) மேலாடை (இ.வ.); upper cloth.

*[**Skt.** aṅga + vastra>த.அங்கவத்திரம்.]*

**அங்கவத்திரம்**[2] *aṅgavattiram*, பெ.(n.) அடுக்கடுக்கான மடிப்புக்களுடன் ஆண்கள் தோளில் போட்டுக் கொள்ளும் நீண்ட துண்டு; a long pleated piece of ornamental cloth on the shoulder.

*[**Skt.** aṅga + vastra> த.அங்கவத்திரம்.]*



**அங்கவயிச்சியர்** *aṅga-vayicciyar*, பெ. (n.) ஆயுள்வேத மருத்துவன் (s.i.i.v, 164); ayurvedic physician.

*[**Skt.** anga+vaidya> த. அங்கவயிச்சியர்.]*

**அங்கவாதம்** *aṅga-vādam*, பெ. (n.) 1. உடலுறுப்பிற் காணும் ஊதை (வாத) நோய்; rheumatism or other nervous affection of the limbs or organs of the body. 2. உடம்மை அடுத்த ஊதை (வாதம்); a constitutional affection of the nerves of the whole body. 3. எலும்பிற்காணும் ஓர் ஊதை (வாத) நோய்; neuralgia of the bone, *osteoneuralgia* (சா.அக.).

**த.வ. கைகால்முடக்கு.**

*[**Skt.** aṅga + vāta>த. அங்கவாதம்.]*

**அங்கவாவகம்** *aṅgavāvagam*, பெ.(n.) உடம்பைப் பிடித்தல் அல்லது தேய்த்தல்; shampooing or rubbing the body (சா.அக.).

**அங்கவிகிர்தம்** *aṅgavigirdam*, பெ.(n.) 1. உறுப்பு (அங்க)க் குறைவு; defect in an organ. 2. உடம்பின் வேறுபாடு; structural changes of the body or its parts (சா.அக.).

**த.வ. உறுப்புமுடம்.**

*[**Skt.** aṅga+ vi-kṛta>த. அங்கவிகிர்தம்.]*

**அங்கவிகுருதி** *aṅgavikurudi*, பெ. (n.) 1. உடல்நோய்; disease of the body. 2. உடலுறுப்புகளின் நோய்; disease of an organ in the body. 3. உடம்பின் மாறுபாடு; change of apperance in the body, as in collapse, fainting, apoplexy etc., (சா.அக.).

*[**Skt.** aṅga + vikṛti>த. அங்கவிகுருதி.]*

**அங்கவித்திகை** *aṅgavittigai*, பெ. (n.) கணிதம் (சிந்தா. நி. 37); a kind of maths.

*[**Skt.** aṅka+vidyā>த. அங்கவித்திகை.]*

**அங்கவியல்பு** *aṅgaviyalbu*, பெ. (n.) **அங்க விலக்கணம்** பார்க்க; see *aṅga-v-ilakkaṇam* (சா.அக.).

*[அங்கம்+இயல்பு.]*
*[**Skt.** aṅga>த. அங்கம்.]*

**அங்கவிலக்கணம்** *aṅga-v-ilakkaṇam*, பெ. (n.) உடம்பின் தன்மை (குணங்கள் அல்லது இயல்புகள்); the natural disposition or other distinguishing characteristic features of the body or its parts (சா.அக.).

**த.வ. உடற்கூற்றிலக்கணம்.**

*[அங்க(ம்) + இலக்கணம்.]*
*[**Skt.** aṅga>த. அங்கம்.]*

**அங்கவீனன்** *aṅga-v-īṉaṉ*, பெ. (n.) உறுப்புக்குறைந்தவன் (வின்.); one who has bodily defects "physically handicapped".

த.வ. உடற்குறை.

*[Skt. aṅga + hīna> த. அங்கவீனன்.]*

**அங்கவீனம்** *aṅga-vīṉam,* பெ.(n.) உறுப்புக் குறைவு, maimediness.

*[Skt. aṅga + hīna>த. அங்கவீனம்.]*

**அங்கன்** *aṅgaṉ,* பெ.(n.) புதல்வன் (திவ். இயற். 3,65.); son.

*[Skt. aṅga >த. அங்கன்.]*

**அங்கனை** *aṅgaṉai,* பெ.(n.) பெண் (திவா.); woman.

*[Skt. aṅganā >த. அங்கனை.]*

**அங்கனைப்பால்** *aṅgaṉai-p-pāl,* பெ.(n.) முலைப் பால்; woman's breast milk (சா.அக.).

த.வ. முலையமுது.

*[அங்கனை + பால்.]*

*[Skt. aṅganā>த. அங்கனை.]*

**அங்காகமம்**[1] *aṅgāgamam,* பெ.(n.) சமணத் தோன்றியங்களுள் ஒன்று (சிலப். 10, 187, உரை.); one of the classes of jaina scriptures.

*[Skt. aṅga+āgama >த. அங்காகமம்.]*

**அங்காகமம்**[2] *aṅgāgamam,* பெ.(n.) 1. காமம் தொடர்பான உடற்கூற்றியல் நூல்; a scientific treatise on sex and sexual enjoyments. 2. கொக்கோகம்; a book *kokkōgam.*

*[Skt. aṅga+ āgama > த. அங்காகமம்.]*

**அங்காகருடணநாசசாரி** *aṅga-karuḍaṇa-nāśa-śāri,* பெ.(n.) இசிவு நோய்க்குரிய மருந்து; an agent allaying or relieving convulisons or spasmodic pains, as nareotics, nitrites etc., (சா.அக.).

**அங்காகருடணம்** *aṅgā-karuḍaṇam,* பெ. (n.) 1. உடம்பின் தசை இழுத்தல்; contraction of a limb. 2. இழுப்பு; contracture of a limb, as in paralysis. 3. வலிப்பு; convulsion (சா.அக.).

த.வ. உடலிழுப்பு.

*[Skt. aṅga+ā-karṣaṇa>த.அங்காகருடணம்.]*

**அங்காகருடணவாதம்** *aṅgā-karuḍaṇa-vādam,* பெ. (n.) நாக்குப் போன்ற உறுப்புகளை உள்ளுக்கிழுக்கும், முடக்கு ஊதை (வாத) நோய்; a kind of paralysis in which organs like the tongue etc., are drawn in (சா.அக.).

த.வ. முடக்குவளி.

*[Skt. aṅga + ā-karṣaṇa+vāta > த. அங்காகருடணவாதம்.]*

**அங்காங்கம்** *aṅgāṅgam,* பெ.(n.) 1. நான்மறை உறுப்பு நூல் (உபாங்கம்); anxilliary or secondary organs (சா.அக.).

*[Skt. aṅgāṅga>த. அங்காங்கம்.]*

**அங்காங்கிபாவம்** *aṅgāṅgi-pāvam,* பெ.(n.) உடல் உறுப்புகளின் உறவு; relation of the subsidiary or accessory and principal. *"அருவினி லுருவந் தோன்றி யங்காங்கி பாவமாகி" (சி. சி. 1, 27.).*

*[Skt. aṅgāṅgi-bhāva>த. அங்காங்கிபாவம்.]*

**அங்காதிபாதசாத்திரி** *aṅgādi-pāda-śāttiri,* பெ. (n.) உடற்கூற்று ஆராய்ச்சியாளர்; one who is versed in the doctrine and principle of anatomy; one who has studies the structure of the body by dissection, anatomist (சா.அக.).

**அங்காமி** *aṅgāmi,* கு.பெ.எ. (adj) நிரந்தரமல்லாத; temporary. *"அங்காமி குமஸ்தா" (C.G.).*

*[U. haṅgāmi >த. அங்காமி.]*

**அங்காமிப்பட்டா** *aṅgāmi-p-paṭṭa,* பெ. (n.); நில ஆவண (பட்டா) வகைகளுள் ஒன்று, temporary or limited title-deed.

*[U. haṅgāmi-paṭṭā>த. அங்காமிப்பட்டா]*

**அங்காரகதோடம்** *aṅgāraga+tōḍam*, பெ.(n.) கணிய நூலில் செவ்வாயினால் ஏற்படுவதாகக் கூறப்படும் குற்றம் (astrol.) malefic influence of mars.

த.வ. செவ்வாய்க்குறை.

*[Skt.aṅgāraka+dōsa>த.அங்காரகதோடம்.]*

**அங்காரகம்**[1] *aṅgāragam*, பெ. (n.) தீ (அக.நி.); fire.

**அங்காரகம்**[2] *aṅgāragam*, பெ.(n.) உடலிற் பூசும் நறுமணக்குழம்பு (அக.நி.); scented unguent.

த.வ. மணக்கலவை.

*[Skt.aṅgarāga >த. அங்காரகம்.]*

**அங்காரகம்**[3] *aṅgāragam*, பெ.(n.) 1. கரி (வின்.); charcoal. 2. தழற்கரி (சங்.அக.); heated charcoal.

*[Skt.aṅgāraka > த. அங்காரகம்.]*

**அங்காரகம்**[4] *aṅgāragam*, பெ.(n.) பிருங்கராசம் என்னும் ஒரு படர்கொடி; a spreading creeper; white or yellow amaranthes, *Verbesina caledulacealias eclipta prostata* (சா.அக.).

த.வ. கையாந்தகரை

*[Skt.aṅgāra-ka> த. அங்காரகம்.]*

**அங்காரகமணி** *aṅgāraga-maṇi*, பெ. (n.) 1. பவளம்; coral, 2. மணி (இரத்தினம்); ruby (சா.அக.).

**அங்காரகவல்லி** *aṅgāragavalli*, பெ. (n.) சிறுதேக்கு (பச். மு.); bushy fire brand teak.

*[அங்காரகம் + வல்லி.]*

*[Skt.aṅgāra-ka>த.அங்காரக(ம்).]*

**அங்காரகன்** *aṅgāragaṉ*, பெ.(n.) 1. நெருப்பு (திவா.); fire. 2. செவ்வாய் (திவா); the planet mars. 3. செந்நீர் முத்து (சிலப்.14, 195.); pearl with a pink lustre.

*[Skt.aṅgāraka>த.அங்காரகன்.]*

**அங்காரசய்யாப்பிரமணம்** *aṅgāra-śayyā-p-piramaṇam*, பெ. (n.) தீப்பிழம்புக்குமேல் சுழலும் நிரயச் சிறப்பு; hell where in one revolves on a bed of fire. *"அங்காரசய்யாப்பிரமண மாநிரயம்" (சேதுபு. துராசார. 37.)*

*[Skt. aṅgāra + śayyā + bhramaṇa> த.அங்காரசய்யாப்பிரமணம்.]*

**அங்காரதாளிகை** *aṅgāra-tāḷigai*, பெ. (n.) 1. சுட்டடுப்பு; an earthen ware portable heating apparatus for baking, used in an Indian household. 2. நெருப்புச் சட்டி, கணப்புச் சட்டி; fire-pot (சா.அக.).



**அங்காரபரிபாசிதம்** *aṅgāra-pari-pāśidam*, பெ.(n.) பொரித்த கறி; fried curry (சா.அக.).

**அங்காரம்**[1] *angāram*, பெ.(n.) 1. நெருப்பு; fire. 2. தழற்கரி; live charcoal.

*[Skt.aṅgāra >த. அங்காரம்.]*

**அங்காரம்**[2] *aṅgāram*, பெ.(n.) மாத்துவர் நெற்றியி லணியுங் கரிக்கோடு; sectarian charcoal mark placed on the forehead by *Mādhva brāhmans*. *"ஆங்கதனிடையங் காரமுந் தீட்டி" (பிரபோத. 11, 17.).*

*[Skt.aṅgāra >த. அங்காரம்.]*

**அங்காரமஞ்சரி** *aṅgāra-mañjari*, பெ. (n.) கழற்சி; a plant, *Caesalpinia bonduceell* (சா.அக.).

**அங்காரவல்லன்** *aṅgāravallaṉ*, பெ. (n.) **அங்காரவல்லி** பார்க்க; see *aṅgāravalli*.

*[அங்காரம் + வல்லன்.]*

*[**Skt.** aṅgāra>த.அங்காரம்.]*

**அங்காரவல்லி[1]** *aṅgāra-valli*, பெ. (n.) 1. பூடுவகை; gushy firebrand leak. 2. பெருங்குறிஞ்சா; green wax flower.

*[அங்காரம்+வல்லி.]*

*[**Skt.** aṅgāra>த. அங்காரம்.]*

**அங்காரவல்லி[2]** *aṅgāra-valli*, பெ. (n.) 1. சிறுதேக்கு; blue flowered saw-leaved glory tree, *Cleodendron sphoenanthes*. 2. பெருங்குமிழ்; a plant Galedupa arborea. 3. கஞ்சா; gunjah-cannabis sativa (சா.அக.).

**அங்காரவாயு** *aṅgāra-vāyu*, பெ.(n.) நச்சுவளி; noxious suffocating gas like that in wells, pits, mines etc. chokedamp (சா. அக.).

*[**Skt.** aṅgāra+vāyu>த. அங்காரவாயு.]*

**அங்காரவாரிதி** *aṅgāra-vāridi*, பெ. (n.) கையாந்தகரை; a medicinal plant known as white amaranthus, *Eclipta prostata* (சா.அக.).



**அங்காரன்** *aṅgāraṉ*, பெ.(n.) செவ்வாய் (அறப். சத. 50) the planet mars.

*[**Skt.** angāra>த. அங்காரன்.]*

**அங்காரி** *aṅgāri*, பெ.(n.) **அங்காரதாளிகை, 2** பார்க்க; see *aṅgāratāḷigai* (சா.அக.).

*[**Skt.** aṅgāra > த. அங்காரி.]*

**அங்காரிகம்** *aṅgārigam*, பெ. (n.) 1. கரும்புத் தண்டு; the stalk of the sugar-cane. 2. பலாசு; the bud of கிஞ்சுகம், *Butea frondosa* (சா.அக.).

**அங்காரிகை** *aṅgārigai*, பெ.(n.) 1. கரும்புத் தடி; stalk of the sugar-cane. 2. முருக்கம் பூங்கொத்து; bunch of *murukku* flowers.

*[**Skt.** aṅgārikā>த. அங்காரிகை.]*

**அங்காரிதம்** *aṅgāridam*, பெ.(n.) 1. ஒரு கொடி; a creeper. 2. பலாசு; the early blossom of கிஞ்சுகம், *Butea frondosa* (சா.அக.).

**அங்கானுகூல** *aṅgāṉukūla*, கு.பெ.எ.(adj.) உடம்பிற்குத் தகுதியாக; agreeable to the body (சா.அக.).

**அங்கானுலேபனம்** *aṅgāṉu-lēbaṉam*, பெ. (n.) உடம்பிற் பூசுதல்; anointing the body (சா.அக.).

**அங்கி[1]** *aṅgi*, பெ.(n.) 1. (விட்டங்களைத் தாங்கும் தாய்நிலை உத்திரம் போலும்) முதன்மையான உடம்புச் சட்டம்; principal. *"கூறும் மங்கியல தங்கமிலை" (வேதாரணி. மாகாசமச். 7).* 2. நீள் குப்பாயம்; long jacket. *"அங்கியினை யங்குமெ யணிந்தவருமானார்" (இரகு. தேனு. 28.).* 3. பாதிரியார் அணியும் நீள் வெள்ளுடை; cassock.

*[**Skt.** aṅgin >த. அங்கி.]*

**அங்கி[2]** *aṅgi*, பெ. (n.) 1. நெருப்பு (பிங்.); fire. 2. தீக்கடவுள் (கந்தபு. பாயிர. 53); Agni. 3. பெருந்தீ; digestive faculty, gastric fire. *"உடற்காதார மடலங்கி மாந்தல்" (தைலவ. பாயி. 1.).* 4. ஆரல் (கார்த்திகை) மீன் (பரிபா.11,7.); the third nakṣatra. 5. கதிரவன்; sun. *"பனிப்பகை யங்கியைப் பழிப்பர்" (திருக்காளத். 4. 30, 14.).*

*[**Skt.** agni >த. அங்கி.]*

**அங்கி³** *angi*, பெ. (n.) 1. சாதி லிங்கம் (வை. மூ.); vermilion. 2. கைம்மீன் என்னும் (அத்தம்) 13ஆம் விண்மீன் (R); 13th *naṣatram*.

*[Skt. agni > த. அங்கி.]*

**அங்கிக்கரு** *angi-k-karu*, பெ.(n.) சாதிலிங்கம்; a beautiful red colouring matter artificially prepared from sulphur and mercury vermilion (சா.அக.).

த.வ. அழற்கரு.

**அங்கிசக்குரு** *angiśa-k-kuru*, பெ. (n.) இதளியம் (இரசம்) முதலிய தாதுக்களைக் கட்டுவதற்காகக் கொங்கணவன் பொன்னாக்க நூலிற் சொல்லிய முறைப்படி செய்யும், ஒருவகைக் குரு மருந்து; a medicine with an active principle parepared as per method prescribed in the alchemical science of *Konganavar* for consolidating mercury and other minerals (சா.அக.).

த.வ. இதளியக்குரு.

**அங்கிசகம்** *angiśagam*, பெ.(n.) தன்னொறுப்பு; kind of asceticism.

த.வ. புலனடக்கம்.

*[Skt. hamsaka > த. அங்கிசகம்.]*

**அங்கிசபாதி** *anglśapādi*, பெ. (n.) **அங்குசவாதி** (பரி.அக.) பார்க்க; see *anguśavādi*.

**அங்கிசம்¹** *angiśam*, பெ. (n.) எகினப் (அன்னப்) புள்; swan. *"பிரமாவினுடைய இராச அங்கிசமும்" (தக்கயாகப் 151.).*

த.வ. எகினம்.

*[Skt. hamsa > த. அங்கிசம்.]*

**அங்கிசம்²** *angiśam*, பெ. (n.) கூறு; part, portion. *"மாதவப்பட்ட னங்சிச வவதாரமாகி" (ஞானவா. முடிவு.).*

த.வ. பங்கு.

*[Skt. amśa > த. அங்கிசம்.]*

**அங்கிசம்³** *angiśam*, பெ. (n.) 1. தோள்; shoulder. 2. வாழை; plantain tree. 3. பங்கு; division (சா.அக.).

த.வ. கிளைப்பு.

**அங்கிசயன்** *angiśayan*, பெ.(n.) யாக வகை; name of a sacrifice.

த.வ. அழலாவுதி.

*[Skt. agni-caya > த.அங்கிசயன்.]*

**அங்கிசு** *angiśu*, பெ. (n.) 1. கதிரவன்; the sun. 2. ஞாயிற்றுக் கதிர் (சூரியக் கிரகணம்); the sun's rays (சா.அக.).

த.வ. அழல்.

*[Skt. agni > த.அங்கிசு.]*

**அங்கிசபாதி** *angiśapādi*, பெ.(n.) **அங்குசவாதி** (யாழ்.அக.) பார்க்க; see *anguśavādi*.

*[Skt. hamsa + pādika > த. அங்கிசபாதி.]*

**அங்கிசுமாலி** *angiśumāli*, பெ.(n.) பன்னிரு (துவாதச) கதிரவ இனத்தவருள் ஒருவன் (பிங்.); a deity representing the sun, one of the *tuvādaśādittar*, q.v.

த.வ. அழல்தேவு.

*[Skt. amśu-mālin > த. அங்கிசுமாலி.]*

**அங்கிட்டோமம்¹** *angiṭṭōmam*, பெ. (n.) தீயால் செய்யப்படும் வேள்வி வகை; variety of the *jyōtiṣṭōma*. *"அங்கிட்டோமங் கோமேத மிராச சூயம்" (உத்தரரா. திக்கு. 117).*

த.வ. அழலோமம்.

*[Skt. agni-ṣṭōma > த. அங்கிட்டோமம்.]*



**அங்கிட்டோமம்**[2] *aṅgiṭṭōmam*, பெ. (n.) திருமணி (கோமேதகம்); cinnamon stone, *Onyx* (சா.அக.).

**த.வ. அழற்கல்.**

*[**Skt.** agni-ṣṭōma> த.அங்கிட்டோமம்.]*

**அங்கிடபாதி** *aṅgiḍa-pādi*, பெ. (n.) **அங்கிசபாதி** பார்க்க; see *aṅgiśapādi* (சா.அக.).

**த.வ. அங்குசவாதி**

*[**Skt.** haṃsa-pādikā > த.அங்கிடபாதி.]*

**அங்கிடம்**[1] *aṅgiḍam*, பெ. (n.) 1. சீதாங்க வைப்பு நஞ்சு; a kind of mineral poison 2. சாரத்தைக் கட்டுமோர் மருந்து; a chemical capable of consolidating muriate of ammonia sold in the abzaar.

**த.வ. அழல்நஞ்சு.**

*[**Skt.** haṃsa > த. அங்கிடம்.]*

**அங்கிடம்**[2] *aṅgiḍa*, பெ. (n.) 1. வாழை; plantain tree. 2. தசை (மாங்கிசம்); flesh

**அங்கித்தம்பனை** *aṅgi-t-tambaṉai*, பெ. (n.) நெருப்புச் சுடாமலிருக்கச் செய்யவல்லதொரு கலை (திருவாலவா. 38, 23.); art of suspending the action of fire by magic.

**த.வ. அழல்தடை.**

*[அங்கி + தம்பனை.]*

*[**Skt.** agni> த. அங்கி.]*

**அங்கித்தேவன்** *aṅgi-t-tēvaṉ*, பெ.(n.) தீக்கடவுள்; the god to fire. *"அங்கித் தேவனருளென" (பெருங். உஞ்சைக் 43, 151).*

**த.வ. அழற்கடவுள்.**

*[அங்கி + தேவன்.]*

*[**Skt.** agni > த. அங்கி.]*

**அங்கிதம்**[1] *aṅgidam*, பெ.(n.) பாட்டுடைத் தலைவனைக் குறிக்கும் பெயர்; the name given, in a poem, to a person who is the hero. "ஓர் அங்கிதம் வைத்துப் பாடுகிறது" (R).

**த.வ. உள்ளாளன்.**

*[**Skt.** aṅkita > த. அங்கிதம்.]*

**அங்கிதம்**[2] *aṅgidam*, பெ.(n.) 1. அடையாளம்; sign. *"அங்கிதம் பிறவுமே லறைய நின்றவே" (கந்தபு. இந்திரபுரி 37.).* 2. தழும்பு; scar. *"இவன் செருவிற் கொண்ட வங்கிதத்து" (இரகு. யாகப். 103.).*

**த.வ. அடையாளம்.**

*[**Skt.** aṅkita > த. அங்கிதம்.]*

**அங்கிதாரணம்** *aṅgitāraṇam*, பெ. (n.) தீயின் திறம் நினைத்து அமைத்தல்; concentrating on the principle of fire, as operating in the body (சா.அக.).

**த.வ. அழற்கோவை.**

*[அங்கி + தாரணம்.]*

*[**Skt.** agni>த. அங்கி.]*

**அங்கிதிசை** *aṅgi-tiśai*, பெ. (n.) தென்கிழக்கு (திவா.); the S.E quarter, as under the guardianship of Agni.

**த.வ. அழல்திசை.**

*[அங்கி +திசை.]*

*[**Skt.** agni > அங்கி.]*

**அங்கிநாள்** *aṅgi-nāḷ*, பெ. (n.) 1. ஆரல் (கார்த்திகை) (பிங்.); the third *nakṣatra*. 2. கைம்மீன் (அத்தம்) (சூடா.); the thirteenth *nakṣatra*.

**த.வ. ஆரல்.**

*[அங்கி +நாள்.]*

*[**Skt.** agni>த. அங்கி.]*

**அங்கிபூட்டு-தல்** *aṅgi-pūṭṭu*, 5 செ.கு.வி. (v.i.) சீலைமண் செய்தல்; to coat a long piece of cloth with clay or red sand and to cover or tie it round the edges of the mouth, as of a bottle etc., to make them air-tight. To lute this is a method adopted by the alchemists, and vaidyans for calcination of metals (சா.அக.).

**த.வ. மண்ணீடுசெய்தல்.**

**அங்கிமாந்தம்** *aṅgimāndam*, பெ. (n.) நோய்வகை (கடம்ப. 4, இல்லா. 94.); a kind of disease.

**த.வ. அழல்மாந்தம்.**

*[அங்கி + மாந்தம்.]*

*[Skt. agni>த. அங்கி.]*

**அங்கியங்கடவுள்** *aṅgi-aṅ-kaḍavuḷ*, பெ. (n.) தீக்கடவுள்; Agni. *"அங்கியங் கடவுள் அறிகரி யாக" (தொல். பொருள். 142, உரை.).*

*[அங்கியம் + கடவுள்.]*

*[Skt. agni>த. அங்கி.]*

**அங்கியாதானம்** *aṅgi-y-ādāṉam*, பெ. (n.) வேள்விக்காகத் தீயைச் சேர்க்கும் தொழில் (திருக்காளத். 4, 29, 33); initiatory ceremony of placing the sacred fire on the altar and consecrating it.

**த.வ. அழற்கொடை.**

*[அங்கி + ஆதனம்.]*

*[Skt. agni > த. அங்கி.]*

**அங்கிரகம்** *aṅgiragam*, பெ. (n.) உடம்பினோய்; disease of the body, bodily ailment (சா. அக.).

**த.வ. மெய்ப்பிணி.**

*[Skt. aṅga+graha>த. அங்கிரகம்.]*

**அங்கிரசு** *aṅgirašu*, பெ. (n.) **அங்கிரன்** (மச்சபு.இருடிமான்.57) பார்க்க; see *aṅgiraṉ.*

*[Skt. aṅgirasu > த. அங்கிரசு.]*

**அங்கிரம்** *aṅgiram*, பெ. (n.) பதினெண் துணைத் தொன்மத்துளொன்று; a secondary *purāṇa*, one of 18 *uba-purāṇam*

*[Skt. aṅgiras > த. அங்கிரம்.]*

**அங்கிரன்** *aṅgiraṉ*, பெ. (n.) ஒரு முனிவன் (விள்.); name of a sage.

*[Skt. aṅgiras > த. அங்கிரன்.]*

**அங்கிரா** *aṅgirā*, பெ. (n.) ஒரு முனிவன் (காஞ்சிப்பு. சத்ததா 2); name of a sage.

*[Skt. aṅgirās > த. அங்கிரா.]*

**அங்கிரி**[1] *aṅgiri*, பெ. (n.) மரவேர் (நாநார்த்த.); root, as of tree.

*[Skt. aṅghri > த. அங்கிரி.]*

**அங்கிரி**[2] *aṅgiri*, பெ. (n.) மாட்டு நோய்வகை (பெரியமாட். 102); a cattle - disease.

*[Skt. aṅgiri > த. அங்கிரி.]*

**அங்கிரி**[3] *aṅgiri*, பெ.(n.) பாதம், தாள் (பிங்.); foot.

*[Skt. aṅghri > த. அங்கிரி.]*

**அங்கிரிநாமகம்** *aṅgiri-nāmagam*, பெ. (n.) மரமூலம்; root of a tree (சா.அக.).

**த.வ. மரவேர்.**

*[Skt. aṅghri+nāmakā>த.அங்கிரிநாமகம்.]*

**அங்கிரிப்பலா** *aṅgiri-p-palā*, பெ. (n.) சிற்றா மல்லி, பற்களையொத்தும் சிறியனவுமான மல்லிவகை; short tubed Arabian jasmine, *Jasminum sambac* (typica) (சா.அக.).

**த.வ. மூக்குமல்லி.**

**அங்கிரிபம்** *aṅgiribam*, பெ. (n.) மரம்; tree (சா.அக.).

*[Skt. aṅghri-pa > த. அங்கிரிபம்.]*

**அங்கிரிபாணி** *aṅgiri-pāṇi*, பெ. (n.) (வழக்கமாய்) விரல் சூப்புங் குழந்தை; a child who habitually sucks the thumb, thumb sucker (சா.அக.)

**த.வ. கைசூப்பி, விரல்சூப்பி.**

**அங்கிரிபானம்** *aṅgiri-bāṉam*, பெ.(n.) விரல் சப்புதல்; sucking the finger or the toes as done by infants (சா.அக.).

த.வ. விரற்சூப்பல்.

**அங்கிரிவல்லி** *aṅgiri-valli*, பெ.(n.) மூவிலை; a plant-liedysarum, Lagopodioides, c.f. அங்கிசபாதி (சா.அக.).

த.வ. இலைவள்ளி.

*[அங்கிரி + வல்லி.]*

*[**Skt.** aṅgira>த.அங்கிரி.]*

**அங்கினிண்டான்** *aṅgiṉiṇḍāṉ*, பெ. (n.) கருஞ் செம்பை; bastard sensitive plant-*sesbania aegyptiaca* alias, *S. Aculeata* (சா.அக.).

**அங்கீகரணம்** aṅgīgaraṇam, பெ. (n.) உடன் படுகை, உடன்படிக்கை; assenting, accepting.

த.வ. உடன்பாடு.

*[**Skt.** aṅgīkaraṇa > த. அங்கீகரணம்.]*

**அங்கீகரி—த்தல்** *aṅgīgari-*, 4. செ.குன்றாவி. (v.t) ஏற்றுக்கொள்ளுதல்; to accept, receive, approve. *"சித்தம்வைத் திடவுமங் கீகரித் திடுமகா தேவதேவா" (அறப். சத. 100.).*

த.வ. ஏற்பளித்தல்.

*[**Skt.** aṅgī-kaı > த. அங்கீகரி–.]*

**அங்கீகாரம்** *aṅgīgāram*, பெ. (n.) 1. உடன்பாடு; acceptance, approval. 2. வரவேற்பு; hospitality. *"அங்கீகார மனைத்துஞ் செய்தான்" (ஞானவா. சிகித். 81.).*

த.வ. ஏற்பு.

*[**Skt.** aṅgī-kāra > த. அங்கீகாரம்.]*

**அங்கீகிருதம்** *aṅgīgirudam*, பெ. (n.) ஏற்றுக் கொள்ளப்பட்டது (சங். அக.); that which is agreed to, accepted.

*[**Skt.** aṅgī-kṛta > த. அங்கீகிருதம்.]*

**அங்கு** *aṅgu*, பெ. (n.) உடலுறுப்பு; limb of the body (சா.அக.).

*[**Skt.** aṅga > த. அங்கு.]*

**அங்குசபிசாரி** *aṅguša-pišāri*, பெ.(n.) பேரீச்சம் பழம்; fruit of the date palm, *Phoenix dactylifera* (சா.அக.).

**அங்குசம்** *aṅgušam*, பெ. (n.) தையற்காரரின் விரற்கூடு (இராட்.); thimble.

*[**Skt.** angusthān > த. அங்குசம்.]*

**அங்குசரோசனம்** *aṅguša-rōsaṉam*, பெ. (n.) கூவை நீறு (இராட்.); flour of East Indian arrowroot.

*[**Skt.** aṅkuša + rōcana> த.அங்குசரோசனம்.]*

**அங்குசவாதி** *aṅguša-vādi*, பெ. (n.) சிறுபுள்ளடி; (பச். மூ.); scabrous ovate unifoliate tick-trefoil.

*[**Skt.** hamsa + pādikā> த.அங்குசவாதி.]*

**அங்குசன்** *aṅgusaṉ*, பெ. (n.) வைப்பு நஞ்சு (வை.மூ); *aṅguša.pāṣāṇam*. a mineral poison.

*[**Skt.** aṅkuša > த. அங்குசன்.]*

**அங்குட்டப்பருமன்** *aṅguṭṭa-p-parumaṉ*, பெ. (n.) பெருவிரல் கனம்; as thick as the thumb (சா.அக.).

*[அங்குட்டம் + பருமன்]*

*[**Skt.** angusha>த. அங்குட்டம்.]*

**அங்குட்டப்பிரமாணம்** *aṅguṭṭa-p-piramāṇam*, பெ. (n.) **அங்குட்டமாத்திரம்** பார்க்க; see *aṅguṭṭa-māttiram* (சா.அக.).

*[**Skt.** aṅgustha+pra-māṇa>த. அங்குட்டப் பிரமாணம்.]*

**அங்குட்டம்[1]** *aṅguṭṭam*, பெ.(n.) 1. பெருவிரல்; thumb, great toe. *"தாளங்குட்டத்தைத் திகழிரதத்தினூன்றி" (வரத. பாகவத. பற்கு 20).* 2. பெருவிர லளவு; measure of a thumb. *"அங்குட்டமென்னு மளவிற்றா முருவுவாய்ந்த" (பாகவத. சூரியமண் 20).*

[**Skt.** *angustha* > த. *அங்குட்டம்.*]

**அங்குட்டம்²** *anguttam,* பெ. (n.) பாண்டு (வை.மு.); a condition to the biliary passages, general dropsy (சா.அக.).

[**Skt.** *angustha* > த. *அங்குட்டம்.*]

**அங்குட்டமாத்திரம்** *angutta-māttiram,* பெ. (n.) பெருவிரலளவு; as big as the thumb (சா.அக.).

**அங்குட்டமுதல்ரோமம்வரை** *anguttamudal-rōmam-varai,* பெ. (n.) கால் பெருவிரல் முதல் தலைமயிர் வரை; from the big toe to the head i.e., from toe to top, figuratively the whole body (சா.அக.).

த.வ. அடிமுதல் முடிவரை.

**அங்குட்டரூபி** *angutta-rūbi,* பெ. (n.) 1. பெருவிரலளவினன்; a person of very small size, Liliputian. 2. அகத்தியர்; the sage Agastyar (சா.அக.).

[**Skt.** *angustha+rūpin>* த. *அங்குட்டரூபி.*]

**அங்குட்டவாதம்** *angutta-vādam,* பெ. (n.) பெருவிரல் வளி; neurosis of the thumb or the great toe, similar to cramp (சா.அக.).

[**Skt.** *angustha+vāta>*த. *அங்குட்டவாதம்.*]

**அங்குடம்** *angudam,* பெ. (n.) திறவுகோல் (யாழ். அக.); key.

[**Skt.** *ankuta* > த. *அங்குடம்.*]



**அங்குடாகினி** *angudāgiṉi,* பெ. (n.) கருங் கடுகுரோகினி; black hellibore, *Helliborus nigher alias picrorriza kurroa* (சா.அக.).

[**Skt.** *anguta* > த. *அங்குடாகினி.*]

**அங்குணம்¹** *angunam,* பெ. (n.) வெங்காரம் (R.); borax.

[**Skt.** *tankana* > த. *அங்குணம்.*]

**அங்குணம்²** *angunam,* பெ. (n.) கோதுமை; wheat, *Triticum vulgara alias T. sativum* (சா.அக.).

[**Skt.** *tankana* > த. *அங்குணம்.*]

**அங்குத்தான்¹** *anguttāṉ,* பெ. (n.) துன்னர் விரலில் அணியுங்கூடு; thimble.

**அங்குத்தான்²** *anguttāṉ,* பெ.(n.) பெருந்தாரா; a wild goose (சா.அக.).

**அங்குயாசக்காய்** *anguyāśakkāy,* பெ. (n.) பலகறை; cowry (சா.அக.).

**அங்குரகம்** *anguragam,* பெ. (n.) கூடு (சிந்தா. நி. 39); nest.

[**Skt.** *ankura-ka* > த. *அங்குரகம்.*]

**அங்குரப்பிராணி** *angura-p-pirāṇi,* பெ. (n.) மூளை சீவி; a generic name for micro-organism whether animal or vegetable-microbe (சா.அக.).

[**Skt.** *ankura + prāṇin>*த.*அங்குரப்பிராணி.*]

**அங்குரம்¹** *anguram,* பெ.(n.) நீர் (நாநார்த்த.); water.

[**Skt.** *ankura* > த. *அங்குரம்.*]

**அங்குரம்²** *anguram,* பெ. (n.) 1. வாழை; plantain tree, *Musa parasidiaca.* 2. பூண்டின் முளை; the shoot of plant. 3. முளை; sprout from a seed. *"அங்குரம் போல் வளர்ந்தருளி" (பெரியபு. திருஞா. 53.);* 4. குருதி; blood. 5. மயிர்; hair.

[**Skt.** *ankura* > த. *அங்குரம்.*]

**அங்குரார்ப்பணம்** *angurārppaṇam,* பெ. (n.) பாலிகை தெளிக்கை (நெடுநல். 75. உரை); ceremony preliminary to a marriage or other auspicious ceremony in which certain seeds are placed in vessels for sprouting.

**த.வ.** முளைப்பாலிகை, முளைக்கட்டு.

*[**Skt.** aṅkura+arpaṇa> த. அங்குரார்ப்பணம்.]*

**அங்குரி¹–த்தல்** *aṅguri-,* 4. செ.கு.வி. (v.i) 1. முளைத்தல்; to sprout. *"வித்துட்டங்கியே யங்குரித்து" (திருவாத. பு. மந்தி 7.).* 2. தோற்றுவித்தல்; to originate, to be born. *"குருவுமக் குலத்திலங் குரித்தான்" (பாரத. குருகு. 31.).* 3. வெளிப்படுதல்; to reveal oneself, appear. *"ஆண்டு மன்றல் பெற் றங்குரித்தார்" (பாரத. திரௌபதிமா. 98.).*

**த.வ.** முளைப்பு.

*[**Skt.** aṅkura > த. அங்குரி–.]*

**அங்குரி²** *aṅguri,* பெ. (n.) 1. கைவிரல்; finger. 2. கால் விரல்; toe.

*[**Skt.** aṅguri > த. அங்குரி.]*

**அங்குரி³** *aṅguri,* பெ.(n.) தளிர்த்தல்; sprouting (சா.அக.).

*[**Skt.** aṅkuri > த. அங்குரி.]*

**அங்குரிதம்** *aṅguridam,* பெ.(n.) முளைத்தது; that which has sprouted forth (சா.அக.).

*[**Skt.** aṅkurita> த. அங்குரிதம்.]*

**அங்குலதோரணம்** *aṅgula-tōraṇam,* பெ. (n.) சிவனியர்கள் நெற்றியிலணியும் திருநீற்றுக் கோடு (C.m.); marks of sacred ashes worn by *śaivites* on their foreheads in three horizontal lines.

*[**Skt.** aṅgula-toraṇa> த. அங்குலதோரணம்.]*



**அங்குலப்பரிட்சை** *aṅgula-p-pariṭcai,* பெ.(n.) பெண்களின் பிறப்புறுப்பிற் கைவிரலை யிட்டுக் கருப்பையைத் தூக்கியும் இறக்கியும் பார்த்துக் குழந்தை உண்டாயிருப்பதை அறிந்து, கருப்பத்தை உறுதி செய்யும் ஒரு கைமுறை; a method of diagnosing pregnancy from the 4th to the 8th month by pushing up the uterus with the finger inserted into the vagina so as to cause the embryo to rise and fall again like a heavy body in water, impinging on the tip of the finger in the rebound, in a characteristic way, *Internal Ballottement* (சா.அக.).

**த.வ.** விரல்தேறல்.

*[**Skt.** aṅgula+parīksā > த. அங்குலப் பரீட்சை.]*

**அங்குலம்¹** *aṅgulam,* பெ. (n.) அணிவிரல், சுண்டு விரலுக்கு முன்னுள்ள விரல் (அக. நி.); ring finger.

**த.வ.** மோதிரவிரல்

*[**Skt.** aṅgula > த. அங்குலம்.]*

*அங்குலம் என்னும் சொல் கணையாழி (மோதிரம்) அணியும் சிறப்பு நோக்கி அணிவிரல் என்னும் பொருளில் தமிழில் மட்டுமே உள்ளது. வடமொழியில் இல்லை.*



**அங்குலம்²** *aṅgulam*, பெ. (n.) 1. கைவிரல்; finger. *"கமலங்க ணிகரு மங்குலத் திருக்கை"* (மருதூ 48.); 2. கை அல்லது காலின் பெருவிரல்; thumb or great toe. 3. ஒருவிர லகலம்; inch, a measure of length, as a finger's breadth. *"அங்குலத்தளவை யாமே"; (கந்தபு. அண்ட. 5).*

**த.வ. விரலம், விரற்கிடை.**

*[Skt. aṅgula > த. அங்குலம்.]*

**அங்குலராசி** *aṅgula-rāśi*, பெ.(n.) பூநாகம் போன்ற ஒரு வகைச் சிறிய பாம்பு; a species of small snakes about an inch in length, as pūnāgam (சா.அக.).

*[Skt. aṅgula+rāji>த. அங்குலராசி.]*



**அங்குலி¹** *aṅguli*, பெ.(n) 1. விரல் (திவா.); finger or toe. *"அங்குலி யெண்களி னமைத்து" (பெரியபு. ஆனாய. 13.).* 2. கணையாழி; finger-ring, toe-ring. *"மேல்விரல் தனக்கு மங்குலி பொருத்தி" (நல். பாரத. திரௌ. 30.).*

*[Skt. aṅguli > த. அங்குலி.]*

**அங்குலி²** *aṅguli*, பெ.(n.) 1. ஆதனின் இருப்பிடமாகக் கருதப்பெறும் புருவ நடுவம்; the space between the eye-brow considered as the seat of soul. *"அங்குலி கூடி யகப்புறம்" (திருமந். 1191.)*

*[Skt. aṅguli > த. அங்குலி.]*

**அங்குலி³** *aṅguli*, பெ. (n.) 1. யானைத் துதிக்கையின் நுனி; the tip of an elephants trunk. *"அக்கிரி குலங்கள்விடு மங்குலியி னுண்டி வலை" (கலிங் 285).* 2. ஐவிரலி (பரி. அக.); aivirali, a creeper bearing red fruits.

*[Skt. aṅguli > த. அங்குலி.]*

**அங்குலிகம்** *aṅguligam*, பெ. (n.) கணையாழி; finger-ring. *"அங்குலிக மொன்றுபுன லாழ்தரு கிணற்றில் விழ" (பாரத. வாரணா. 51).*

**த.வ. மோதிரம்.**

*[Skt. aṅgulika > த. அங்குலிகம்.]*

**அங்குலிசத்திரம்** *aṅguli-śattiram*, பெ. (n.) தொண்டையில் அறுவை மருத்துவம் செய்தவற்காக விரலில் மாட்டிக்கொண்டு பயன்படுத்தும் ஒரு வகைக் கத்தி; a surgical knife used in an operation of the throat; a scraping instrument held in the hand-scarper (சா.அக.).

**த.வ. விரற்கத்தி.**

*[Skt. aṅguli+śastra>த.அங்குலிசத்திரம்.]*



**அங்குலிசந்தேசம்** *aṅguli-śandēśam*, பெ. (n.) விரல் நொடித்தல்; making a sharp noise by striking the ball of the thumb, snaing the thumb (சா.அக.).

*[Skt. aṅguli+san-dēśa> த. அங்குலிசந்தேசம்]*

**அங்குலித்திரம்** *aṅgulittiram*, பெ. (n.) கைவிரலுறை (சிந்தா. நி. 39); thimble.

*[Skt. aṅguli-tra > த. அங்குலித்திரம்.]*

**அங்குலித்திராணம்** *aṅguli-t-tirāṇam*, பெ. (n.) **அங்குலித்திரம்** (யாழ். அக) பார்க்க; see *aṅgulittiram*.

*[Skt. aṅguli+tirāṇa>த. அங்குலிதிராணம்.]*

**அங்குலித்திராணிகம்** *aṅguli-t-tirāṇigam*, பெ.(n.) இசிவு (சன்னி) முதலிய நாய்களினால் தாக்குண்டு பல் கிட்டியிருக்கும் போது நோயாளிகளின் வாயைத் திறக்க முயலுகையில் அவர்கள் தம் பற்களால் விரல்கடிபடாமல் இருப்பதற்காகப் பயன்படுத்தும் ஒரு வகைக் கருவி; a surgical instrument akin to pincers for keeping a part or for holding anything difficult to be held by the hand forceps; a surgical instrument of holding the mouth open-mouth gag (சா.அக.).

த.வ. கிட்டுக்கோல்.

*[Skt. aṅguli+tirāṇa>த.அங்குலி திராணிகம்.]*

**அங்குலிதோரணம்** *aṅguli-tōraṇam*, பெ. (n.) தோரணம் போல் நெற்றியிலணியும் சந்தனச் சாந்து; a decorative mark on the forehead drawn with sandal paste or other materials.

த.வ. தோரணச்சாந்து.

*[அங்குலி + தோரணம்.]*

*[Skt. aṅguli + tōraṇa > த. அங்குலி தோரணம்.]*

**அங்குலிப்பருவன்** *aṅguli-p-paruvaṉ*, பெ. (n.) விரற்கணு; finger joint (சா.அக.).

*[Skt. aṅguli-paruva>த.அங்குலிப்பருவன்.]*

**அங்குலிபிராசனம்** *aṅguli-pirāšaṉam*, பெ.(n.) விரல்களினால் அள்ளியெடுத்து உண்ணுகை; eating with the fingers (சா.அக.).

த.வ. விரலூட்டு.

*[Skt. aṅguli + prāšana > த. அங்குலி பிராசனம்.]*

**அங்குலிமுகம்** *aṅguli-mugam*, பெ. (n.) விரல் நுனி; tip of the finger (சா.அக.).

*[அங்குலி + முகம்.]*

*[Skt. aṅguli> த. அங்குலி.]*

**அங்குலிமுத்திரை** *aṅguli-muttirai*, பெ. (n.) முத்திரை மோதிரம் (யாழ். அக); signet ring.

*[அங்குலி+முத்திரை.]*

*[Skt. aṅguli > த. அங்குலி.]*

**அங்குலியம்** *aṅguliyam*, பெ. (n.) கணையாழி (யாழ். அக); finger ring.

*[Skt. aṅguliya >த. அங்குலியம்.]*

**அங்கோலதைலம்** *aṅgōla-tailam*, பெ. (n.) கண்கட்டுக்கலைக்குரிய நெய்மம் (சம். அக.); oil extracted from *aṅgōla* seeds for magical purposes (சா.அக.).

*[Skt. aṅkōla+taila>த.அங்கோலதைலம்.]*

**அங்கோலம்** *aṅgōlam*, பெ. (n.) 1. அழிஞ்சில் (மலை.); sage-leaved alanguim. 2. மரவகை (L); thin sage leaved Indian linden.

*[Skt. aṅkōla>த. அங்கோலம்.]*

**அங்கோலவைரவன்** *aṅgōla-vairavaṉ*, பெ. (n.) அழிஞ்சில் (மலை.); sage-leaved alangium.

*[Skt. aṅkōla + bhairava>த. அங்கோல வைரவன்]*

**அங்கோலை** *aṅgōlai*, பெ. (n.) அழிஞ்சிற் பட்டை; bark. *“அத்தமதியுதய மங்கோலை” (இராசவைத். 270).*

*[Skt. aṅkōla > த. அங்கோலை.]*

**அச்சணம்** *accaṇam*, கு.வி.எ. (adv.) உடனே (இராட்.); immediately.

*[Skt. a+kshaṇa.]*

**அச்சகாரம்** *accagāram*, பெ. (n.) முன்பணம் (இ.வ.); earnest money advance payment.

த.வ. அச்சாரம்.

*[Skt. satyaṅkāra >த. அச்சகாரம்.]*

**அச்சதந்தெளி–த்தல்** *accadanteḷi*, 4 செ.கு.வி. (v.i.) அருகும் அரிசியும் இடல் (இ.வ.); to spirinkle a mixture of rice and cynodon grass, as on a newly married couple.

*[அச்சதம் + தெளி-.]*

*[**Skt.** akṣata>த. அட்சதை.]*

**அச்சபல்லம்** *acca-pallam*, பெ. (n.) கரடி (சிந்தா.நி. 50.); bear.

*[**Skt.** accha-bhalla>த. அச்சபல்லம்.]*

**அச்சம்¹** *accam*, பெ. (n.) வைப்புநஞ்சு (சங்.அக.); a mineral poison.

**அச்சம்²** *accam*, பெ. (n.) அன்னை (பொதி. நி. 19, பி-ம்); mother.

*[த. அச்சி >**Pkt.** ajja >த. அச்சம்.]*

**அச்சம்³** *accam*, பெ. (n.) 1. தெளிவு (ஈடு. 1, 1, 11).; clearness. 2. பளிங்கு (யாழ். அக.); crystal. 3. கரடி (யாழ். அக.); bear.

*[**Skt.** accha >த. அச்சம்.]*

**அச்சயன்** *accayaṉ*, பெ. (n.) அழிவில்லாதவன் கடவுள்; god, as the imperishable one.

**த.வ. நீடுவாழி.**

*[**Skt.** akṣaya >த. அச்சயன்.]*

**அச்சரசு** *accarašu*, பெ. (n.) துறக்கவுலகிலி ருப்பதாகக் கருதப்படும் தேவமகள்; celestial nymph, courtesan of svargam.

**த.வ. அரமகள்.**

*[**Pkt.** accharasa>**Skt.** apsaras>த. அச்சரசு.]*

**அச்சரம்** *accaram*, பெ. (n.) எழுத்து (இ.வ.); letter.

**த.வ. எழுத்து.**

*[**Skt.** akṣara >த. அச்சரம்.]*

**அச்சா** *accā*, பெ.(n.) இடை (int.); மிகநன்று (இ.வ.); well done, very good.

**த.வ. நன்று.**

*[**U.** acchā >**Skt.** accha>த. அச்சா.]*

**அச்சாரம்** *accāram*, பெ. (n.) முன்பணம் (இ.வ.); earnest money, advance given to ratify a bargain. *'அச்சாரம் கொடுத்தால்தான், வீட்டை வேறுயாருக்கும் விடமாட்டார்கள்' (இவ).*

**த.வ. முன்காசு.**

*[**Skt.** satyaṅkāra >த. அச்சாரம்.]*

**அச்சாவாகன்** *accāvāgaṉ*, பெ. (n.) வேள்வியில் தலைமைப் பூசகருக்கு உறுதுணை புரிபவன்; priest, officiating at some sacrifices as a co-adjutor of *hōtr.* 2. மூடன் (இ.வ.); stupid dunce.

**த.வ. உழையாளன்.**

*[**Skt.** acchā-vāka >த. அச்சாவாகன்.]*

**அச்சாறு** *accāṟu*, பெ. (n.) ஊறுகாய் (பர.வ.); pickles.

**த.வ. உப்பின்காய்.**

*[**U.** accār > த. அச்சாறு.]*

**அச்சானம்** *accāṉam*, பெ. (n.) அறிவில்லாத் தன்மை (ஞானா. பாயி. 6, 26.); spiritual ignorance.

**த.வ. அறியாமை.**

*[**Skt.** a-jñāna >த. அச்சானம்.]*

**அச்சானியம்** *accāṉiyam*, பெ. (n.) 1. தீக்குறி முதலியவற்றால் நேரும் மனவேறுபாடு; unhappiness, painful state of mind, as from a bad omen. *அங்கேபோக மனசுக்கு அச்சானியமாயிருக்கிறது (இ.வ.).* 2. மங்கல மின்மை; inauspiciousness. *ஏன் அச்சானியமாய்ப் பேசுகிறாய்? (இ.வ.).*

**த.வ. தீத்திறம்.**

*[**Skt.** a-jñāna >த. அச்சானியம்.]*

**அச்சினி** *acciṉi*, பெ. (n.) எட்டாம் மாதம் (சித். அக); eighth month.

**த.வ. எட்டாம்திங்கள்.**

*[**Skt.** aṣṭa >த. அச்சினி.]*

**அச்சுதந்தெளி-த்தல்** *accudanteḷi-*, 4 செ.கு.வி. (v.i.) **அச்சதம்தெளித்தல்** பார்க்க; see *accadam-teḷi.* *"மங்கல வச்சுதந் தெளித்து... வாழ்த்தினர்" (சீவக. 2411).*

*[அச்சுதம்+தெளி–.]*

*[**Skt.** a-kṣata>த. அச்சுதம்.]*

**அச்சுதம்[1]** *accudam*, பெ. (n.) அருகும் அரிசியும் கூடியது; mixture of rice and cynodon grass, used in benediction or workship. *"வாழிய ரூழியென்னா அச்சுதங் கொண்டு" (சீவக. 2494).*

*[**Skt.** a-kṣata >த. அச்சுதம்.]*

**அச்சுதம்[2]** *accudam*, பெ. (n.) அழிவில்லாதது; the imperishable. *"அச்சுத மனந்தஞ் சாந்தம்" (ஞானவா. சிகித். 148).*

*[**Skt.** a-cyuta >த். அச்சுதம்.]*

**அச்சுதம்[3]** *accudam*, பெ. (n.) இந்திரர்களில் ஒருவனுக்குரிய உலகம் (தக்கயாகப். 265.); the world of an Indran.

**த.வ. அமருலகம்.**

*[**Skt.** a-cyuta >த. அச்சுதம்.]*

**அச்சுதன்** *accudan*, பெ.(n.) 1. எஞ்ஞான்றும் அழிவில்லாதவன்; the imperishable one. *"அச்சுதனாஞ் சிவன்" (கந்தபு அவைபுகு. 8.).* 2. திருமால் (திவா.); *Thirumāl (Viṣnu)*. 3. முருகன் (பொதி. நி.); Lord Murugan. 4. அருகன்; Arhat. *"அச்சுத னடிதொழுது".*

**த.வ. அழிவிலி.**

*[**Skt.** a-cyuta >த. அச்சுதன்.]*

**அச்சுதன்முன்னோன்** *accudan-munnōn*, பெ. (n.) பலபத்திரன் (பிங்.); *Balabhdran*, elder brother of *Krisnan*.

*[அச்சுதன்+முன்னோன்.]*

*[**Skt.** a-cyuta>த. அச்சுதன்.]*

**அச்சுதை** *accudai*, பெ. (n.) மலைமகள் (கூர்மபு. திருக்கல் 23.); Malaimagal, as the imperishable one.

*[**Skt.** a-cyutā >த. அச்சுதை.]*

**அச்சுரம்** *accuram*, பெ.(n.) 1. நெருஞ்சி (மூ.அ.); tribulus plant. 2. முருங்கை (வின்.); horse-radish tree.

*[**Skt.** ikṣura >த. அச்சுரம்.]*



**அச்சுவசாத்திரம்** *accuva-šāttiram*, பெ. (n.) குதிரையியல்பு கூறும் நூல்; hippology.

*[**Skt.** ašva + šāstra >த. அச்சுவசாத்திரம்.]*

**அச்சுவத்தம்** *accuvattam*, பெ. (n.) அரசமரம் (பிங்.); pipal.

*[**Skt.** ašvattha >த. அச்சுவத்தம்.]*

**அச்சுவத்தாமன்** *accuvattāman*, பெ. (n.) **அசுவத்தாமா** பார்க்க; see *ašuvattāmā*.

*[**Skt.** ašvatthāman >த. அசுவத்தாமன்.]*

**அச்சுவத்தாமா** *accuvattāmā*, பெ.(n.) அச்சுவத்தாமன் (பாரத. பதினைந். 27.); *accuvattāman*, son of *Drōnar*.

*[**Skt.** ašvatthāman >த. அச்சுவத்தாமா.]*

**அச்சுவதரம்** *accuvadaram*, பெ. (n.) 1. கோவேறு கழுதை (நாநார்த்த.); mule. 2. பாம்பு வகையு ளொன்று; a kind of snake.

*[**Skt.** ašva-tara >த. அச்சுவதரம்.]*

**அச்சுவதி** *accuvadi*, பெ.(n.) முதல் விண்மீனான இரலை (அசுவதி); the first nakṣatra asuvadi, alias iralai. *"மறுவில் அச்சுவதி யாதி யிரேவதி யீறா மாதர்" (நல். பாரத. பதினெட்.23).*

*[**Skt.** ašvinī >த. அச்சுவதி.]*

**அச்சுவம்**[1] *accuvam*, பெ.(n.) குதிரை; horse. *"இந்த அச்சுவம் கூர்ச்சரம்" (திருவிளை. நரிபரி. 105).*

*[**Skt.** aśva > **த.** அச்சுவம்.]*

**அச்சுவம்**[2] *accuvam*, பெ.(n.) அக்கரகாரம் (எரிச்சலூட்டும் வேர் செடிவகை) (பொதி.நி.); pellitory root.

*[**Skt.** aśva-gandhā > **த.** அச்சுவம்.]*

**அச்சுவமுகாதனம்** *accuvamugādaṉam*, பெ. (n.) கால்மடித்து இரண்டு முழங்காலிலும் முழங்கைகளை யூன்றி இரண்டு உள்ளங் கைகளையும் கன்னத்தில் வைத்திருக்கும் ஓகவிருக்கை வகை (தத்துவப் 108, உரை.); a *yōgic* pose in which the person sits cross-legged, places his elbows on his knees and rests his cheeks on the palm of his hands.

*[அச்சுவம் + முகம் + ஆதனம்.]*

*[**Skt.** aśva>த.அச்சுவம். **Skt.** ā-sana>த. ஆதனம்.]*



**அச்சுவமேதம்** *accuvamēdam*, பெ.(n.) குதிரை ஈதல் (அசுவமேதம்) (உத்தரரா.); horse sacrifice.

**த.வ. குதிரைவேள்வி.**

*[**Skt.** aśva+mēdha>த. அச்சுவமேதம்.]*

**அச்சுவன்** *accuvaṉ*, பெ. (n.) குதிரை யினத்தைச்சார்ந்த ஆடவன் (கல்லா. 5, மயிலேறு.); man of horse-like nature, one of three *āḍavar-śādi*.s

**த.வ. பரியன்.**

*[**Skt.** aśva > **த.** அச்சுவன்.]*

**அச்சுவாதீதம்** *accuvādidam*, பெ. (n.) செவ்வலரி வகை (சித்.அக.); a kind of red oleander.

*[**Skt.** aśvamāra > **த.** அச்சுவாதீதம்.]*

**அச்சுவினி** *accuviṉi*, பெ.(n.) இரலை விண் மீன் (அசுவினி) (திவா.); name of the first nakṣatra, part of Aries.

*[**Skt.** aśvini > **த.** அச்சுவினி.]*

**அச்சுவினிகள்** *accuviṉigaḷ*, பெ. (n.) அச்சுவினி தேவர் (பிங் 86.); twin *vēdic* gods who are physicians of heaven.

*[அச்சுவினி+கள்.]*

*[**Skt.** aśvin>த.அச்சுவினி.]*

**அச்சுவினிதேவர்** *accuviṉi-dēvar*, பெ. (n.) தேவமருத்துவர் (பிங்.); twin *vēdic* Gods who are physician's of heaven.

*[அச்சுவினி+தேவர்.]*

*[**Skt.** aśvini> **த.** அச்சுவினி.]*

**அச்சுவினிமதலையர்** *accuviṉi-madalaiyar*, பெ. (n.) நகுலசகதேவர் (பிங்.); Nagula and *Sagādēvar*, the fourth and fifth of the *Pāṇḍavār*.

*[அச்சுவினி + மதலையர்.]*

*[**Skt.** aśviṉi>அச்சுவினி.]*

**அச்சுனிகள்** *accuṉigaḷ*, பெ. (n.) அச்சுவினி தேவர்; twin *vēdic* gods. *"அச்சுனிகள் தீர்த்தம்" (வேதாரணி தீர்த்த. 27.).*

*[**Skt.** aśvin > **த.** அச்சுனிகள்.]*

**அச்சை** *accai*, பெ.(n.) வேதத் தொடரியம் (வாக்கியம்); *vēdic hymn. "முப்பத்திரண்டு அச்சையும் ஐஞ்சு வாரமுமோதி" (T.A.S. i, 8).*

*[**Skt.** ṛca > **த.** அச்சை.]*

**அசக்கியம்[1]** *ašakkiyam*, பெ.(n.) செய்ய வியலாதது; that which is impossible or impracticable. *"தியானம் புரிதற் கசக்கிய மாதலினால்" (சூத. எக்கிய. பூ. 9, 3.).*

த.வ. அருவினை.

*[**Skt.** a-sakya>த. அசக்கியம்.]*

**அசக்கியம்[2]** *ašakkiyam*, பெ.(n.) நாகமணல் (வை. மூ.); sand containing lead.

*[**Skt.** a-saṅkhya >த. அசக்கியம்.]*

**அசக்கியன்** *ašakkiyaṉ*, பெ.(n.) இயலாதவன் (R.); unskilled or unfit person.

*[**Skt.** a-šakya >த. அசக்கியன்.]*

**அசக்கீரம்** *aša-k-kīram*, பெ.(n.) ஆட்டுப்பால் (பரி. அக.); goat's milk.

*[**Skt.** aja + kṣīra>த. அசக்கீரம்.]*

**அசகசாந்தரம்** *aša-gašāndaram*, பெ. (n.) பெரும் வேறுபாடு; wide disparity, as between a goat and an elephant.

த.வ. ஆட்டானைவேறுபாடு.

*[**Skt.** aja+gaja+antara>த.அசகசாந்தரம்.]*

**அசகண்டம்** *ašakaṇḍam*, பெ. (n.) தைவேளை (சித். அக.); a species of cleome.

*[**Skt.** ajakaṇta >த. அசகண்டம்.]*

**அசகண்டா** *ašagaṇḍā*, பெ.(n.) **அசகண்டம்** பார்க்க; see *asakaṇḍam*.

**அசகணாகம்** *ašagaṇāgam*, பெ.(n.) கருந் துவரை (சித். அக.); a kind of dholl.

**அசகந்தம்** *ašagandam*, பெ.(n.) மொச்சி நாற்றம்; goat's smell.

த.வ. ஆட்டுமுடை.

*[அச(ம்)+கந்தம்.]* *[**Skt.** aja>த.அச(ம்).]*

**அசகந்திகம்** *ašagandigam*, பெ.(n.) எலுமிச்சந் துளசி; lemon basil, *Ocinum Gratissimum* (சா.அக.).

*[**Skt.** aja kandikā >த. அசகந்திகம்.]*

**அசகம்** *ašagam*, பெ.(n.) 1. வரையாடு (சிந்தா. நி 46.); mountain sheep. 2. வெள்ளுள்ளி; garlic. 3. **அகத்தி** பார்க்க; see agatti. 4. உடம்பு பருத்து எங்கும் கரணைக் கிழங்கு முளைகளைப் போல் கொப்புளங் களையும், புண்களையும், உண்டாக்கும் எட்டுவகை அம்மையுளொன்று; one of the eight kinds of small-pox in which pustules develop to the size of yam-root shoots and spread all over the body. 5. கண்மணியில் சிவப்பாகச் தசை வளர்ந்து பிதுங்கி, சீழ் வடியும் ஒரு கண்ணோய்; a disease of the pupil of the eye in which small reddish tumours are found protruding through the transparant cornea and discharging pus (சா.அக.).

*[**Skt.** aja>த. அசகம்.]*

**அசகர்ணகம்** *ašakarṇagam*, பெ. (n.) குங்கிலியம்; Indian dammer, *Shorea robusta* (சா.அக.).

*[**Skt.** aša-karṇaka >த. அசகர்ணகம்.]*

**அசகர்ணம்** *ašakarṇam*, பெ.(n.) மருதமரம்; goast's ear tree, *Terminalia alata alias T. tomentosa* (சா.அக.).

*[**Skt.** aja-karṇa >த. அசகர்ணம்.]*

**அசகரம்** *ašagram*, பெ.(n.) மலைப்பாம்பு (தேசிகப். 18, 1); boa-constrictor.

*[**Skt.** aja-gara >த. அசகரம்.]*



**அசகல்லி** *aśakalli*, பெ. (n.) குழந்தைகட்கு வரும் நோய்வகை (பதார்த்த. 1155); a disease of children.

*[**Skt.** ajagalla > த. அசகல்லி.]*

**அசகல்லிகாரோகம்** *aśakallikā-rōgam*, பெ. (n.) **அசகல்லி** (பதார்த்த 1155, உரை.) பார்க்க; see *aśagalli.*

*[**Skt.** ajagallikā+rōga>த. அசகல்லிகா ரோகம்.]*

**அசகவம்** *aśagavam*, பெ. (n.) சிவபெருமானுடைய வில் (சிந்தா. நி. 46); the bow of *Śivan.*

*[**Skt.** ajagava > த. அசகவம்.]*

**அசகா** *aśagā*, இடை.(part.) குருதியைக் கொண்டு கருவிழியில் பளபளப்பான புண் கொப்புளத்தையுண்டாக்கி, அதைச் சுற்றிலும் சிறுசிறு கொப்புளங்களை எழுப்பி, அதனால் அக்கண்ணில் அதிக வலியையும் அரத்தம் போல் சிவந்த நீர் ஒழுக்கையும் உண்டாக்கும் ஒரு கண்ணோய்; painful reddish growth resembling the hard excreta of a goat, found shooting forth from beneath the surface of the cornea with small vesicles around it. It is attended with excessive pain the reddish slimy secretion, *Vesicular keratitis* (சா.அக.).

*[**Skt.** ajakā>த. அசகா.]*

**அசகாமிகம்** *aśagā-migam*, பெ.(n.) கரு மொச்சை (சித். அக.); a kind of black bean.

*[**Skt.** aja-kāmikā > த. அசகாமிகம்.]*

**அசகாயசூரன்** *aśagāya-śūran*, பெ.(n.) துணை வேண்டாப் பெருவீரன்; hero able to accomplish great things without assistance.

**த.வ. தனியாண்மை வீரன், மையான் மறவன்.**

*[அசகாயன் + சூரன்.]*

*[**Skt.** a-sahāya>த. அசகாய(ன்).]*

**அசகாயம்** *aśagāyam*, பெ.(n.) சிறு (சொற்ப) புண்; simple injury (சா.அக.).

*[**Skt.** aśa+**Mhr.** ghaya>த. அசகாயம்.]*

**அசகாரிதம்** *aśagāridam*, பெ. (n.) முயல்; a hare (சா.அக.).

*[**Skt.** aśa-garida > த. அசகாரிதம்.]*

**அசகாவம்** *aśakāvam*, பெ.(n.) 1. ஒரு நச்சுயிரி; a venomous vermin. 2. அட்டை, தேள் முதலியன; centipedes, scorpion, etc., (சா.அக.).

*[**Skt.** asa+kāvam.]*

**அசகியம்** *aśagiyam*, பெ.(n.) 1. தாங்க முடியாதது; that which is unbearable. 2. அருவருப்பு; loathing.

*[ **Skt.** a-sahya >த. அசகியம்.]*

**அசகியாபீடம்** *aśakiyā-pīḍam*, பெ.(n.) தாங்கவொண்ணா வலியுண்டாக்குகை; causing an unbearble pain (சா.அக.).

**அசகும்பி** *aśakumbi*, பெ. (n.) ஒரு வகை நீர்ப் பூடு; an aquatic plant, *Pistia stratiotes* (சா.அக.).

*[**Skt.** aśa+>த. அசகும்பி.]*

**அசகை** *aśagai*, பெ. (n.) பருத்தும், தடித்தும் கொப்புளங்களை எழுப்பி புண் உண்டாக்கி மூட்டுகளிலும் முகத்திலும் வீக்கமும், நீர் வேட்கையும், பிசுபிசுப்புள்ள சீழ் முதலியனவும் உண்டாக்கும் ஒரு வகை அம்மை நோய்; a kind of small pox; marked by large and well-defined pustules in the body and swelling on the face and the joints. It is followed by thirst and discharge of sticky pus (சா.அக.).

**த.வ. அசர் அம்மை.**

*[**Skt.** aśaga > த. அசகை.]*

**அசங்கதம்**[1] *a-šaṅgadam,* பெ.(n.) 1. ஒழுங்கின்மை; irregularity. 2. இகழ்ச்சி; contempt, disrespect.

த.வ. நேரன்மை.

*[Skt. a-šaṅgata > த.அசங்கதம்.]*

**அசங்கதம்**[2] *a-šaṅgadam,* பெ.(n.) 1. பொருத்தமில்லாதது; that which is inconsistent. 2. பொய் (வின்.); falsehood.

த.வ. நேரிலி.

*[Skt. a - saṅgata>த. அசங்கதம்.]*

**அசங்கதம்**[3] *a-šaṅgadam,* பெ. (n.) படை வகுப்பு (குறள், 767, உரை.); incompact, open array of an army.

*[Skt. a - samhata>த. அசங்கதம்.]*

**அசங்கதி** *a-šaṅgadi,* பெ.(n.) 1. பொருத்த மின்மை; inconsistency. 2. தொடர்பின் மையணி (மாறனலங். 203); figure of speech in which cause and effect are represented as not co-existent.

த.வ. நிகரன்மை.

*[Skt. a-šaṅgata > த.அசங்கதி.]*

**அசங்கதியாடு-தல்** *ašaṅgadi-y-āḍu-,* 5 செ.குன்றாவி.(v.t.) பகடிசெய்தல்; to ridicule, treat with contempt. *"அந்த மாமுனி யுரைத்ததை யசங்கதி யாடி" (செவ்வந்திப்பு. உறையூரழித். 60).*

த.வ. வகடி.

*[அசங்கதி+ஆடு-.]*

*[Skt. a-šaṅgati>த.அசங்கதி.]*

**அசங்கம்**[1] *a-šaṅgam,* பெ. (n.) பற்றின்மை; non-attachment, freedom from worldly ties. *"அயற்சங்க மறல் அசங்கமாகும்" (ஞானவா. உற். 47.).*

த.வ. பற்றறவு

*[Skt. a-šaṅga > த. அசங்கம்.]*

**அசங்கம்**[2] *a-šaṅgam,* பெ. (n.) **அசங்கமம்** (வின்.) பார்க்க; see *ašaṅgamam.*

*[Skt. a-saṅga> த.அசங்கம்.]*

**அசங்கமம்** *ašaṅgamam,* பெ. (n.) 1. ஒற்றுமை யின்மை; disunion, opposition. 2. கோள்கள் கதிரவனுக்கு எதிர்நிற்கை; (astron.) opposition of the sun and planets.

த.வ. ஒன்றாமை.

*[Skt. a-šaṅgama > த.அசங்கமம்.]*

**அசங்கற்பமாசம்** *a-šaṅgaṟpa-māšam,* பெ.(n.) கதிரவன் ஓர் ஓரையில் இருந்து அடுத்த ஓரைக்குச் செல்லும் முதல் மற்றும் முடிவுகளில், காருவா வர, நிகழும் மாதம் (விதான. குணா. 81, உரை); (Astrol.) month in which the new moon appears at the beginning or end of the sun's passage from one sign of the zodiac to another.

த.வ. கூடாமாதம்.

*[அசங்கற்பம் + மாசம்.]*

*[Skt.a-šaṅkalpa >த. அசங்கற்பம்.]*

*மாதம் → மாசம்.*

**அசங்கன்** *ašaṅgaṉ,* பெ.(n.) பற்றற்றவன்; one who is free from attachment. *"இந்த வான்மா வென்றுவே யசங்கனாவன்" (விவேகசூடா. 114.).*

த.வ. பற்றிலி.

*[Skt. šaṅga > த.அசங்கன்.]*

**அசங்கிதம்** *ašaṅgidam,* பெ.(n.) தூய்மையின்மை; uncleanliness. *"காக்கை யெச்சமாதிகளில் யாவருக்கும் அசங்கித புத்தி யெப்படித் தோற்றுமோ" (வேதாந்தசாரம், பக். 6.).*

த.வ. தூவாமை.

*[Skt. ā-šahyatā > த. அசங்கிதம்.]*

ஊ **அசங்கியம்[1]** *a-šaṅgiyam*, பெ.(n.) எண்ணிக்கை யிலடங்காதது; that which is innumerable, unnumbered.

**த.வ. எண்ணிலி.**

*[**Skt.** a-šaṅkhya > த. அசங்கியம்.]*

**அசங்கியம்[2]** *a-šaṅgiyam*, பெ.(n.) 1. அருவருப்பு (இ.வ.); uncleanliness. 2. ஒழுக்கமின்மை, துப்புரவின்மை; uncleanliness.

**த.வ. குப்படை.**

*[**Skt.** a-sahya > த.அசங்கியம்.]*

**அசங்கியாதம்** *ašaṅgiyādam*, பெ.(n.) எண்ணிக்கையற்றது (மேருமந். 6, உரை.); that which is innumerable, countlessness.

**த.வ. எண்ணிலி.**

*[**Skt.** šaṅkhyāta > த.அசங்கியாதம்.]*

**அசங்கியேயம்** *a-šaṅgiyēyam*, கு.பெ.எ. (adj.) எண்ணிறந்தது; that which is innumerable. *'அசங்கியேய கிரந்தம்'.*

**த.வ. எண்ணிலி.**

*[**Skt.** a-saṅkhyēya > த.அசங்கியேயம்.]*

**அசங்கை[1]** *ašaṅgai*, பெ.(n.) அச்சமின்மை; fearlessness, security. *"அசங்கையனை" (தேவா. 683. 9.).*

**த.வ. அஞ்சாமை.**

*[**Skt.** a-šaṅkā > த.அசங்கை.]*

**அசங்கை[2]** *ašaṅgai*, பெ.(n) மதிப்பின்மை (யாழ்ப்); dishonour.

**த.வ. மதியாமை.**

*[**Skt.** a-šaṅkhyā > த.அசங்கை.]*

**அசங்கையன்** *ašaṅgaiyaṉ*, பெ.(n.) ஐயமில்லாதவன்; one who has no doubts. *"அசங்கையனை யமரர்கடஞ் சங்கையெல்லாங் கீண்டானை" (தேவா. 683, 9).*

**த.வ. தெள்ளியன்.**

*[அசங்கை+அன்.]*

*[**Skt.** a-šaṅkā > த. அசங்கை.]*

**அசசரம்** *ašašaram*, பெ. (n.) 1. நெருஞ்சி; cow's thorn. 2. முருங்கை; horse radish tree.

**த.வ. நீரப்பயிரி.**

*[**Skt.** ikṣura> த. அசசரம்.]*

**அசசிரிங்கி** *ašaširiṅgi*, பெ. (n) 1. ஒதியமரம்; Indian ash tree, *odina wodier.* 2. நரிக்காந்தள்; goat's horn mangrove, *Aegiceras majus.* 2. ஆடுதின்னாப் பாளை; worm-killer, *Aristolochia bracteata* (சா. அக.)

**த.வ. நீரவேரி.**

*[**Skt.** aša+širiṅgi > த. அசசிரிங்கி.]*

**அசசீரம்** *aša-šīram*, பெ.(n.) ஆட்டுப்பால்; sheep's milk (சா.அக.).

*[**Skt.** aja + šīra> த. அசசீரம்.]*

**அசசுரம்** *aša-šuram*, பெ. (n.) 1. நெருஞ்சில்; a thorny shrub, *Tribulus terrestris.* 2. முருங்கை; drumstick tree, *Hyperanthera moringa alias Moringa Pterygosperma* (சா.அக.).

**அசசெந்தா** *ašašendā*, பெ.(n.) நுண்ணுயிர்க் கொல்லி; germ-killer, an agent that destroys germs-germicide.

*[**Skt.** aja+ šendā> த. அசசெந்தா.]*

**அசஞ்சத்தி** *ašañjatti*, பெ. (n.) பற்றின்மை (ஞானவா.உற். 47, உரை.); non-attachment, indifference to worldly things.

*[**Skt.** a-šaṃ-šakti > த. அசஞ்சத்தி.]*

**அசஞ்சலம்** *a-šañjalam*, பெ. (n.) மனந் தளராமை; steadiness, imperturbability.

**த.வ. நடுங்கா உள்ளம்.**

*[**Skt.** a-cancala > த.அசஞ்சலம்.]*

**அசஞ்சலன்** *a-šañjalan*, பெ. (n.) மனந்தளராதவன் (ஞானா. 48, 15.); one who is steady, unmoved.

**த.வ. அஞ்சாநெஞ்சன்.**

*[Skt. a-cancala > த. அசஞ்சலன்.]*

**அசட்டி** *ašaṭṭi*, பெ.(n.) **அசமதாகம்** பார்க்க; see *ašama-dāgam* (சா.அக.).

**அசட்டை** *a-šaṭṭai*, பெ.(n.) 1. புறக்கணிப்பு; contempt, *"அசட்டையற் றொழுகி மையலாக்குவன்"* (நல். பாரத. துட்டியந்த. 29.); 2. நினைவோட்டமின்மை; inattention, heedlessness, indifference. *'காரியத்தில் அசட்டையா யிருந்துவிட்டான்'.*

**த.வ. கடைகணிப்பு.**

*[Skt. a-šraddhā > த. அசட்டை.]*

**அசடம்** *a-šaḍam*, பெ. (n.) இயங்கக் கூடியது; non-inert, conscious being. *"அசட மநாமயம்" (கைவல்ய. சந்தே. 137).*

**த.வ. இயலி.**

*[Skt. a-jaḍa > த. அசடம்.]*

**அசடுவா** *ašaḍuvā*, பெ.(n.) பால்; milk (சா.அக.).

**அசத்தன்** *a-šattan*, பெ.(n.) வலுவற்றவன், ஆற்றலில்லாதவன்; weak, incompetent person. *"புகலரு மசத்தர் தம்பாற் பொருந்திய வலகை யேபோல்" (சிவப்பிர. உண்மை, 26.).*

**த.வ. நோஞ்சான்.**

*[Skt. a-šakta > த. அசத்தன்.]*

**அசத்தி**[1] *ašatti*, பெ.(n.) வலுவின்மை; inability, powerlessness. *"கிலேசத்தா லசத்தி யாற் றுயரம்"* (சூத. எக்கிய. பூ. 17, 15).

*[Skt. a-šakti > த. அசத்தி.]*

**அசத்தி**[2] *ašatti*, பெ.(n.) துறத்தல்; detachment from worldly feelings or passions (சா.அக.).

*[Skt. a-šadyaḥ > த. அசத்தி.]*

**அசத்தியநிருவாணம்** *ašattiya-niruvāṇam*, பெ.(n.) **அசத்தியோநிர்வாண தீட்சை** (சித். பிர.) பார்க்க; see *ašattiyo-nirvāṇa-tiṭcai.*

*[Skt. a-sadya + nirvāna > த. அசத்திய நிருவாணம்.]*

**அசத்தியம்** *a-šattiyam*, பெ.(n.) பொய்; untruth, falsehood. *"அசத்திய மறியீர்" (உபதேசகா. சிவத்துரோ. 128.).*

**த.வ. சுள்ளு.**

*[Skt. a-satya > த. அசத்தியம்.]*

**அசத்தியோநிர்வாணதீட்சை** *ašattiyō-nirvāṇa-tiṭcai*, பெ.(n.) நிருவாண நோன்பு வகை (சி.சி. 8, 4 சிவஞா.); (*šaivam.*) kind of *nirvāṇatiḍšai*, which helps the disciple to obtain liberation at the end of his life.

*[Skt. a - sadya + nirvāṇa + ḍiksā> த. அசத்தியோநிர்வாணதீட்சை.]*

**அசத்து**[1] *ašattu*, பெ.(n.) **அசத்தி** பார்க்க; see *ašatti* (சா.அக.).

*[Skt. a-sat > த. அசத்து.]*

**அசத்து**[2] *a-šattu*, பெ.(n.) 1. இல்லாதது (திருக்காளத். பு. 5, 44.); that which is non-existent. 2. பொய்ந்நெறி; false course. *"அசத்தினிற் செல்கிலாச் சதுமுகத்தவற்கு" (கம்பரா. இராவணன் வதை. 117.).* 3. நிலையில்லாதது (திருக்காளத். பு 32, 40.); that which is unstable. 4. மாயை (சூத. சிவ. 8, 10.); Illusion. 5. தீயோன் (இவ.); wicked person.

**த.வ. பொய்ப்பொருள்.**

*[Skt. a-sat > த. அசத்து.]*

**அசத்துரு** *ašatturu*, பெ.(n.) நண்பன் (வின்.); friend.

**த.வ. பகையிலி.**

*[Skt. a-šatru > த. அசத்துரு.]*

**அசத்துவம்**[1] *ašattuvam*, பெ. (n.) ஆற்றலற்றது; characterised by astenia or loss of strength, Asthenic (சா.அக.).

*[Skt. a-satva > த. அசத்துவம்.]*

**அசத்துவம்**[2] *aśattuvam*, பெ.(n.) ஏலாமை; deficiency or loss of vital or muscular power, *adynamia* (சா.அக.).

*[**Skt.** a-sat-va>த.அசத்துவம்.]*

**அசத்யகதனம்** *aśatya-kadanam*, பெ. (n.) பொய்பேசுகை; uttering lies. *"அசத்யகதனமும் சுகதனுக்குண்டு" (நீலகேசி, 1, உரை.).*

*[**Skt.** a-satya+kadana>த. அசத்யகதனம்.]*

**அசதபன்னி** *aśada-panni*, பெ.(n.) **அசனபன்னி** பார்க்க; see *aśana-panni* (சா.அக.).

**அசதி**[1] *aśadi*, பெ.(n.) 1. இழித்துரை, நக்கல் பேச்சு; scoffing. *2. நட்புடன் கூடிய நகைச்சுவை;* banter, pleasantry.

**த.வ. நகையாட்டு.**

*[**Skt.** hasiti> த. அசதி.]*

**அசதி**[2] *aśadi*, பெ.(n.) காணாவொலி (அசரீரி); voice from heaven, utterance of an invisible speaker. *"உரைத்த தந்தரத்தே யோரசதி யாங்கு" (பாரத வெண். 268.).*

**த.வ. சேணொலி.**

*[**Skt.** aśarīrin >த.அசதி.]*

**அசதி**[3] *aśadi*, பெ.(n.) கற்பில்லாதவள் (சூடா.); unchaste woman.

*[**Skt.** a-sati>த.அசதி.]*

**அசதிக்கிளவி** *aśadi-k-kilavi*, பெ.(n.) எள்ளனப் பேச்சு; derisive speech. *"அசதிக் கிளவி நயவர மிழற்றி" (பெருங். இலாவாண. 17, 191).*

**த.வ. நகைமொழி.**

*[அசதி + கிளவி.]*

*[**Skt.** hasitid>த. அசதி.]*

*கிள்→கிள→கிளவி.*

**அசதியாடு-தல்**[1] *aśadi-y-āḍu*, 5 செ.குன்றாவி. (v.t.) எள்ளனம் செய்தல்; to ridicule, laugh at. *"ஒறுக்கப்படுவா ரிவரென்றங் கசதியாடி" (சீவக. 1871.).*

**த.வ. நகையாடுதல்.**

*[அசதி + ஆடு-.]*

*[**Skt.** hasiti >த.அசதி.]*

**அசதியாடு-தல்**[2] *aśadi-y-āḍu-*, 5 செ.கு.வி. (v.i.) நகைச்சுவைச்சொல் (வார்த்தை) கூறுதல்; to indulge in banter, pleasantry. *"அமிர்தனாரோடு.... வானோ ரசதியா டிடங்கள்" (சூளா. சீய. 192.).*

**த.வ. நகையாடுதல்.**

*[**Skt.** hasiti>த. அசதி.]*

**அசதீபம்** *aśatībam*, பெ.(n.) கோயிலிலுள்ள வழிபாட்டு விளக்கு வகை (பரத. ஒழிபி. 41, உரை.); a kind of light used in temple worship.

*[அச(ம்) +தீபம்]*

*[**Skt.** aja>த. அசம்.]*

*த.தீவம்>**Skt.** dīpa>த. தீபம்.*

**அசந்ததி** *aśandadi*, பெ.(n.) வழித் தோன்றலில்லாமை; the state or condition remaining issueless (சா.அக.).

**த.வ. பூண்டறுகை.**

*[**Skt.** a-santati> த. அசந்ததி.]*

**அசந்தர்ப்பம்**[1] *aśandarppam*, பெ. (n.) 1. இயலாக் காலம்; unsuitable time. *'அவன் வர அசந்தர்ப்பமா யிருக்கிறது'.* 2. வாய்ப் (வசதி)யின்மை; inconvenience. *'அசந்தர்ப்பத்தால் கடன் கொடுக்கக் கூடவில்லை'.* 3. பொருத்தமின்மை; irrelevancy. *'அசந்தர்ப்பமாகப் பேசாதே' (கொ.வ.).*

**த.வ. அல்லாக்காலம்.**

*[**Skt.** a-śan-darbha > த. அசந்தர்ப்பம்.]*

**அசந்தர்ப்பம்**[2] *aśandarppam*, பெ.(n.) இழவு; death. *'வீட்டில் ஒரு அசந்தர்ப்பம் நடந்துவிட்டது' (இ.வ.).*

*[**Skt.** a-sandarbha > த. அசந்தர்ப்பம்.]*

**அசந்தாகம்** *ašandāgam*, பெ.(n.) உப்பு; common salt (சா.அக.).

**அசந்தானம்** *ašandānam*, பெ.(n.) **அசந்ததி** பார்க்க; see *ašandadi* (சா.அக.).

*[Skt. a-šan-tāna > த. அசந்தானம்.]*

**அசந்தீண்டாப்பாலை** *ašandīṇḍā-p-pālai*, பெ.(n.) ஆடுதின்னாப் பாளை; a plant which even goat will not touch owing to its extreme bifferness, *Aristolochia bracteata* (சா.அக.).

**த.வ. ஆடுதீண்டாப்பாளை.**

*[அசம் + தீண்டாப்பாலை.]*

*[Skt. aja> அசம்.]*

**அசந்துட்டி** *a-šantuṭṭi*, பெ. (n.) பொந்திகை யின்மை; discontent, dissatisfaction.

**த.வ. மனக்குறை.**

*[Skt. a-šan-tusṭi > த. அசந்துட்டி.]*

**அசநாமகம்** *ašanāmagam*, பெ. (n.) ஒரு வகைத் தாது; a kind of mineral (சா.அக.).

**அசநீர்** *ašanīr*, பெ.(n.) ஆட்டு மூத்திரம்; goat's urine (சா.அக.).

**த.வ. ஆட்டு உச்சை.**

*[அச(ம்) + நீர்]*

*[Skt. aja>த. அசம்.]*

**அசநீர்வாயு** *ašanīr-vāyu*, பெ. (n.) நோய் வகையுளொன்று; a kind of disease (சா.அக.).

**அசநோற்பவவிக்கல்** *ašanōrbava-vikkal*, பெ.(n.) உணவுக் குற்றங்களினால் வயிற்றில் வளி மிகுத்து அதனால் தொண்டைக் கம்மல், சிணுக்கிருமல், முதலியவற்றை உண்டாக்கும் ஐந்து வகை விக்கல்களுள் ஒரு விக்கல்; a kind of hiccough due to the neurotic condition of the stomach arising from dietary defects or indigestion. It is marked by sore throat, feeble voice and a sligh cough. It is one of the five kinds of hiccough described in the Indian medical science, *Singultus gastricus nervosus* (சா.அக.).

**அசப்பியம்** *ašappiyam*, பெ.(n.) அவைக்குப் பொருந்தாச் சொல் ; indecent language or expression, as unfit for an assembly.

*[Skt. a-šabhya >த. அசப்பியம்.]*

**அசப்பியன்** *ašappiyan*, பெ.(n.) கணவாய் மீன்; cuttle-fish (சா.அக.).



**அசப்பிரியை** *aša-p-piriyai*, பெ.(n.) ஆடு விருப்பமாகத் தின்னும் இலந்தை; that plant which is dear to a goat jujube *(சா.அக.).*

*[Skt. aja +priya> த. அசப்பிரியை.]*

**அசபம்¹** *ašabam*, பெ.(n.) வேள்வி மந்திரம் (வின்.); the hamsa mantra, known as *ajapā*.

*[Skt. a-japā > த. அசபம்.]*

**அசபம்²** *ašabam*, பெ.(n.) 1. இயல்பாகப் பலுக்கும் முனிவர்கள் மாயையில் ஒன்றுவதற்காக (லயப்படுவதற்காக) 'அவன் தான் நான்' எனப் பொருள்படும் அம்ச அல்லது சோகம் என்னும் மந்திரம்; a particular mantram, Hamsam which is but 'soham' (He is I) described in one of the 108 kinds of upani shads, uttered by yogis without effort during inhalation for identifying him with the self. 2. குண்டலிலுள்ள ஓர் ஆற்றல் (சக்தி) ; a cosmic power said to be lying dormant and coiled up in the kundalini situated in Mooladar. (மூலாதாரம்)

"குண்டலி"யதனிற் கூடிய அசபை (விநாயகர் அகவல்), the base of the spine in the region of the sacral plexus. It is described in the Tantric science of the Dravedians. It is roused by Siddhars by special forms of meditation and other practices for purposes of spiritual awakening and it is by this power, the acquire wonderful psychic powers, spiritual visions and finally the highest spiritual illumination (சா.அக.).

த.வ. ஒன்றல்மந்திரம்.

*[Skt. a-japā > த. அசபம்.]*

**அசபா** *ašabā*, பெ.(n.) மறைமொழி வகை (தாயு. தேசோ. 6.) the hamsa mantra, known as asapā

*[Skt. a-japā > த. அசபா.]*

**அசபை** *ašabai*, பெ.(n.) **அசபம்**[1] பார்க்க; see *ašabam* (சா.அக.).

*[Skt. a-japā > த. அசபை.]*

**அசபையடிமூலி** *ašabai-y-aḍimūli*, பெ.(n.) பூண்டு வகையுளொன்று; a kind of plant (சா.அக.).

**அசம்**[1] *ašam*, பெ.(n.) **அசமடம்** (T.C.M. ii, 2, 429) பார்க்க; see *ašamaḍam*.

*[Skt. aja > த. அசம்.]*

**அசம்**[2] *ašam*, பெ.(n.) 1. ஆடு; sheep. 2. வெள்ளாடு; goat (சா.அக.).

*[Skt. aja > த. அசம்.]*

**அசம்பந்தம்** *a-šampandam*, பெ. (n.) தொடர்பின்மை; unconnectedness, irrelevancy.

*[Skt. a-sambandha > த. அசம்பந்தம்.]*

**அசம்பவம்**[1] *ašambavam*, பெ.(n) 1. பாழ் (சூன்யம்) (சித். அக.); nothingness. 2. பிறவாமை (வின்.); non-existence. 3. பொய் (தருக்கசங். நீலகன் 15.); false-hood.

த.வ. நிகழாநிகழ்வு.

*[Skt. a-sambhava > த. அசம்பவம்.]*

**அசம்பவம்**[2] *a-šambavam*, பெ.(n.) 1. நேரக் கூடாமை; impossibility, improbability. 2. ஒவ்வாமை; inconsistency. 3. கூறும் இலக்கணம், இலக்கிய மொன்றிலும் இல்லையாகும் குற்றம் (தருக்கசங்.); fault of total inapplicability of a definition, one of three *tōṣam*.

த.வ. நேராநிகழ்வு.

*[Skt. a-sam-bhava > த. அசம்பவம்.]*

**அசம்பவாலங்காரம்** *a-šambavālaṅgāram*, பெ.(n.) கூடாமையணி (அணியி. 36.); figure of speech in which the impossible is imagined.

*[Skt. a-sam-bhava + alaṅ-kāra > த. அசம்பவாலங்காரம்.]*

**அசம்பாதை** *ašambādai*, பெ.(n.) படை செல்லும் வழி (சிந்தா. நி. 55.); the route of an army.

த.வ. படைச்சாலை.

*[அசம் + பாதை]*

*[Persn. asam > த. அசம்.]*

**அசம்பாவிதம்** *a-šampāvidam*, பெ. (n.) 1. நேரக்கூடாதது; that which cannot happen. 2. பொருத்தமில்லாதது; that which is inconsistent.

த.வ. நினையா நிகழ்வு.

*[Skt. a-sam-bhāvita > த. அசம்பாவிதம்.]*

**அசம்பாவிதோபமை** *ašambāvidōbamai*, பெ.(n.) கூடாவுவமை (தண்டி. 30, உரை.); (rhet) simile in which a non-existent quality is taken as the basis of comparison.

த.வ. கூடா வுவமை.

*[Skt. a-sam-bhāvita + upa-mā > த. அசம்பாவிதம்.]*

**அசம்பிரஞ்ஞாதசமாதி** *a-šampiraññāda-šamādi*, பெ.(n.) தான்வேறு கடவுள் வேறென்ற, வேறுபாட்டுணர்வற்ற ஒகநிலை

(சி.சி. 10, 4, ஞானப்); (*yōga*) highest state of concentration, in which the soul loses all consciousness of its being different from the universal soul.

த.வ. இரண்டற்ற ஓகம்.

[*Skt. a-sam - prajñāta + samādhi* > த. அசம்பிரஞ்ஞாதசமாதி]

**அசம்பிரேட்சியகாரித்துவம்** *a-šampirētciya-kārittuvam*, பெ.(n.) ஆராயாது செயல் (பஞ்சதந்.); action without forethought.

த.வ. ஓராவினை.

[*Skt. a-sam - prēksya + kāritva* > த. அசம்பிரேட்சியகாரித்துவம்]

**அசம்பிரேட்சியம்** *ašampirēṭciyam*, பெ. (n.) முன்விழிப்பின்மை (சிந்தா. நி. 59.); lack of forethought.

[*Skt. a-samprēksya*> த. அசம்பிரேட்சியம்.]

**அசம்போகம்** *ašambōgam*, பெ.(n.) 1. சேர்க்கைக்குத் தகுதியற்றது; unsuited for intercourse; one with whom intercourse in forbidden. 2. இன்பமின்மை; absence of sexual intercourse or union. 3. பட்டறிவின்மை; having no experience. (சா.அக.).

த.வ. கூட்டின்மை.

[*Skt. a-sam-bhōga*>த. அசம்போகம்.]

**அசம்மதம்** *a-šammadam*, பெ. (n) உடன்பாடின்மை; dissent.

த.வ. ஒப்பாமை.

[*Skt. a-sam-mata*> த. அசம்மதம்.]

**அசம்மதி** *a-šammadi*, பெ.(n.) **அசம்மதம்** பார்க்க; see *a-šammadam*.

[*Skt. a-sammati*> த. அசம்மதி.]

**அசமசமன்** *ašama-šaman*, பெ.(n.) ஒப்பில்லாதாருக்கு ஒப்பானவன்; person comparable only to peerless men. *“அரிகேசரி அசமசமன் ஸ்ரீமாறவர்மன்” (பெருந்தொ.889).*

த.வ. நேரிலிநேரன்.

**அசமஞ்சசம்** *ašamañjašam*, பெ.(n.) பொருத்தமில்லாதது; that which is inconsistent, improper.

[*Skt. a-samañjasa*> த. அசமஞ்சசம்.]

**அசமஞ்சன்** *ašamañjan*, பெ.(n.) 1. சகரன் மகன் (பாகவத, 9, 6, 16); name of the cruel son of Sagara. 2. தீயோன்; ill-behaved person, wicked man.

[*Skt. a-samañja*> த. அசமஞ்சன்.]

**அசமடம்**[1] *ašamaḍam*, பெ.(n.) ஓமம் (பரி. அக); bishop's weed.

[*Skt. aja-mōdā* >த. அசமடம்.]

**அசமடம்**[2] *ašamaḍam*, பெ.(n.) **அசமதாகம்** பார்க்க; see *ašamadāgam* (சா.அக.).

[*Skt. aja-mōdā* >த. அசமடம்.]

**அசமதாகம்** *ašamatāgam*, பெ.(n.) 1. செடிவகை; bishop's-weed, herbaceous plant. 2. ஓமம் (மலை.); omum.

[*Skt. ajamōdi-gā* >த. அசமதாகம்.]

**அசமதாகவிதை** *ašama-tāga-vidai*, பெ.(n.) ஓமம் போன்ற ஒரு விதை; a seed, nearly the sarrie as omum; *Ajmud-Apium graveloans*. It is an aromatic and medicinal seed (சா.அக.).

[அசமதாக(ம்) + விதை.]

[*Skt. ajamōdika*>த. அசமதாக(ம்).]

**அசமதாகவோமம்** *ašama-dāga-vōmam*, பெ. (n.) **அசமதாகவிதை** பார்க்க; see *ašama-tāga-viḍai* (சா.அக.).

[அசமதாகம் + ஓமம்.]

[*Skt. ajamōdika*>த. அசமதாக(ம்).]

**அசமந்தம்**[1] *a-šamandam*, பெ. (n.) மந்தம்; sloth, indolence.

த.வ. நீர்மந்தம்.

[*Skt. aja+manda*>த. அசமந்தம்.]

**அசமந்தம்**[2] *ašamandam*, பெ. (n.) 1. மலையத்தி; downy climbing cluster fig, *Ficus macro carpa*. 2. மடிமைக்குணம்; lethargy (சா.அக.).

**அசமந்திபம்** *ašamandibam*, பெ. (n.) மலையத்தி நீண்ட கொடிவகை (மலை.); downy climbing cluster fig.

*[**Skt.** aš-manta > த. அசமந்திபம்.]*

**அசமநாகி** *ašama-nāgi*, பெ.(n.) குரோசாணி, ஓமம்; khorasan omum, *Henbane - Hyoscyamus niger* (சா.அக.).

*[**Skt.** ajamōnāka > த. அசமநாகி.]*

**அசமநீர்** *ašama-nīr*, பெ. (n.) வெள்ளாட்டுச் சிறுநீர்; goat's urine (சா.அக.).

**த.வ. ஆட்டு உச்சை.**

*[அசம + நீர்.]*

*[**Skt.** aja> த. அசம.]*

**அசமம்** *ašamam*, பெ.(n.) 1. ஓமம்; bishop's weed. 2. நீர்முள்ளி; water thorn.

*[**Skt.** ajamō > த. அசமம்.]*

**அசமருதம்** *ašamarudam*, பெ. (n.) மரவகை (மலை.); country fig.

**அசமாருதம்** *ašamārudam*, பெ. (n.) **அசமந்திபம்** பார்க்க; see *ašamandibam* (சா.அக.).

**அசமுகி** *aša-mugi*, பெ.(n.) சூரபதுமன் தங்கை (சந்தபு.); name of the sister of *Šūra-padma*, as goat-faced.

*[**Skt.** aja-mukhi> த.அசமுகி. த. முகம்>**Skt.** mukha>mukhi]*

**அசமுசாரி** *ašamušāri*, பெ.(n.) கழிமாசுக் கட்டி; a state of the bowels in which the evacuation are free and regular without difficulty (சா.அக.).

**அசமேலிகம்** *ašamēligam*, பெ.(n.) கருப்பு அம்மான் பச்சரிசி; a black species of an annual plant, *Euphorbia hyphorbia hypericifolia alias E. Indica* (சா.அக.).

**அசமோடிகம்** *aša-mōḍigam*, பெ.(n.) பல பூண்டுகளைக் குறிக்கும் பெயர்; a common name for several plants such as, carroway, ajwan, parsley etc., (சா.அக.).

**அசமோதகம்** *ašamōdagam*, பெ.(n.) 1. ஓமம்; dill seed-sison ammi-carum copticum. 2. **அசமதாகம்** பார்க்க; see *ašama-tāgam* (சா.அக.).

*[**Skt.** ajamōdika > த. அசமோதகம்.]*

**அசமோதம்** *ašamōdam*, பெ.(n.) **அசமோதகம்** பார்க்க; see *aša-mōdagam* (சா.அக.).

*[**Skt.** ajamōda > த. அசமோதம்.]*

**அசமோதாகம்** *aša-mōdāgam*, பெ.(n.) கருப்பு அருகம்புல்; a black bent grass-cynodon dactylon (சா.அக.).

**த.வ. காரருகு.**

**அசமோதை** *ašamōdai*, பெ.(n.) 1. ஓமம்; bishop's weed. 2. இலவம் பிசின்; gum of silk cotton.

*[**Skt.** aja-mōdā > த. அசமோதை.]*

**அசயம்** *ašayam*, பெ.(n.) 1. கோரைப்புல்; a grass of the *Cyperusgenus-Cyperuspertenuis*. 2. ஈசுரப்புல்; a kind of grass sacred to šivan (சா.அக.).

**த.வ. நீரங்கோரை.**

**அசரணம்** *ašaraṇam*, பெ.(n.) புகலின்மை (ஜீவஸம். Ms.); absence of protection or refuge.

*[**Skt.** a-šaraṇa > த. அசரணம்.]*

**அசரணயோனி** *ašaraṇa-yōṇi*, பெ.(n.) கலவித்தொழில் முடிப்பதற்கு முன்னதாகவே பெண்களுக்கு நாதநீரை வெளிப்படுத்தும் ஒரு வகைக் கருப்பை நோய்; a raginal disease in which larger quantity or ova is secreted before the completion of sexual act (சா.அக.).

*[**Skt.** aṣaraṇa+yōni> த. அசரணயோனி.]*

**அசரணன்** *ašaranan*, பெ.(n.) புகலற்றவன்; he who has no refuge.

த.வ. போக்கிலி.

*[Skt. a-šarana > த. அசரணன்.]*

**அசரணை** *ašaranai*, பெ.(n.) புகலற்றவள்; she who has no refuge. *"அசரணையாய்ப் புறந்திண்ணையிற் கிடந்து" (நீலகேசி, 246, உரை.).*

த.வ. போக்கிலி.

*[Skt. a-šaranā > த.அசரணை.]*

**அசரம்** *a-šaram*, பெ.(n.) நிலத்திணை; motionless things. *"அசர சர பேதமான" (தாயு. சின். 4.).*

*[Skt. a-cara > த. அசரம்.]*

**அசராதி** *ašarādi*, பெ.(n.) கொன்றை (சித். அக.); Indian laburnum.

*[Skt. rāja-taru > த. அசராதி.]*

**அசராது** *ašarādu*, பெ.(n.) கொன்றை; cassia tree; *Indian laburnum-cassia indica* (சா.அக.).

*[Skt. rāja-taru > த. அசராது.]*

**அசரீரன்** *ašarīran*, பெ.(n.) மன்மதன் (சிந்தா. நி. 55.); *Kāman*, the god of love.

த.வ. உருவிலி.

*[Skt. a-šarīra > த. அசரீரன்.]*

**அசரீரி[1]** *ašarīri*, பெ.(n.) பரம்பொருள், மேலானவன் (சித்தபரமேஷ்டி); (jaina.) *šitta-paramēṣṭi* the perfected one. *"அருக னசரீரி யாசிரியன்" (திருக்கலம். 41.).*

த.வ. பரன்.

*[Skt. a-šarīrin > த. அசரீரி.]*

**அசரீரி[2]** *ašarīri*, பெ.(n.) 1. உடலில்லாதது (சி.சி. 1, 38, ஞானப்); incorporeal being. 2. மேலிருந்து வரும் ஒலி; voice from heaven, utterance of an invisible speaker. *"என்றது வானினிடத் தசரீரி" (பாரத. புட்ப. 79.).*

த.வ. மெய்யிலி, உருவிலி, உடம்பிலி.

*[Skt. a-šarīrin> த. அசரீரி.]*

**அசல்** *ašal*, பெ.(n.) 1. நிலம்; the earth. 2. மேன்மையானது; superior. 3. இயற்கை; natural. 4. முதல் படி, மூலப்படி; the original (சா.அக.).

*[U. asl > த. அசல்.]*

**அசல்குறிப்பு** *ašal-kurippu*, பெ.(n.) நாடோறும் எழுதும் குறிப்பு; day-book.

த.வ. அன்றாடு குறிப்பு.

*[அசல் + குறிப்பு]*

*[U. asl>த. அசல்.]*

**அசல்சமா** *ašal-šamā*, பெ.(n.) நிலக்குத்தகை யாளரிடமிருந்து திறை செலுத்துவதற்காக அரசால் வழங்கப்பட்ட மூல ஆவணம் (R.F.); original rent or revenue charged upon lands without any extra cess, also the amount taken as the basis of a revenue settlement.

த.வ. திறையாவணம்.

*[U. asl+ jamā > த. அசல்சமா.]*

**அசல்சாதி** *ašal-šādi*, பெ.(n.) மூலி, கஞ்சாங் கோரை; a kind of wild white basil-ocimum alba (சா.அக.).

*[U. asl+ jāti > த. அசல்சாதி.]*

**அசல்பேரீசு** *ašal-pērīšu*, பெ.(n.) ஆதி நிலவரித் திட்டம் (R.F.); standard or original assessment of the land revenue without any extra cess.

த.வ. மூலவரியீடு.

*[U. asl+pērij > த. அசல்பேரீசு.]*

**அசல்வியாச்சியம்** *ašal-viyācciyam*, பெ.(n.) முறையான வழக்கு; original suit.

த.வ. மூலவழக்கு.

*[U. asl+vyāja> த. அசல்வியாச்சியம்.]*

**அசலகால்** *ašala-kāl*, பெ.(n.) தென்றல் காற்று (சிந்தா. நி.); south breeze.

த.வ. தென்கால்.

*[அசல(ம்) + கால்.]*

*[Skt. a-cala>த. அசல(ம்).]*

**அசலசலம்** *ašala-šalam*, பெ.(n.) சிவ விலங்கவேறுபாடு; *linga* that is both immovable and movable as permanently fixed in an alter for initiation, or daily taken out for private workship. *"மண்டலமுங் காணி னசலசலம்" (சைவச. பொது. 123.).*

**த.வ. நிலை இயங்கு திருமேனி.**

*[Skt. a-sala+cala >த. அசலசலம்.]*

**அசலசலலிங்கம்** *ašala-šala-lingam*, பெ.(n.) ஒரு வகை இலங்கம் (சைவச. பொது. 123, உரை.); (*šaivam*) a kind of *lingam*.

**த.வ. பனியிலங்கம்.**

*[Skt. a-cala +cala+ linga>த. அசலசல லிங்கம்.]*

**அசலம்[1]** *ašalam*, பெ.(n.) 1. ஒரு வகை நஞ்சு (கற்பாடாணம்) (வை. மூ.); a mineral poison. 2. ஆப்பு (நாநார்த்த.); wedge used in splitting wood, peg, stake.

*[Skt. a-šala >த. அசலம்.]*

**அசலம்[2]** *ašalam*, பெ.(n.) 1. அசையாதது; that which is fixed. *"அசித்தா யசலமாகி" (சிவப்பிர. பொது.10).* 2. மலை (திவா.); mountain. 3. சிவலிங்க வேறுபாடு (பேதம்); immovable *linga*, as the temple *gōpura*. *"கோபுரமாதி யசலம்" (சைவச. பொது. 132.).*

*[Skt. a-šala >த. அசலம்.]*

**அசலம்[3]** *ašalam*, பெ.(n.) 1. நிலம்; the earth. 2. இரும்பு; iron (சா.அக.).

*[Skt. a-šala >த. அசலம்.]*

**அசலம்பனம்** *ašalam-banam*, பெ.(n.) நீலாஞ்சனம்; antimony. (சா. அக.)

**அசலலிங்கம்** *ašala-lingam*, பெ.(n.) வழிபாட்டுக்குரிய கோபுர முதலியன (சைவச. பொது. 122.); (*šaivam.*) immovable symbols of worship, such as the *gōpura* of a temple.

**த.வ. கண்டுதொழுதேவிகம்.**

*[Skt. a-cala+ linga>த. அசலலிங்கம்.]*

**அசலவுற்பத்தி** *ašala-v-urpatti*, பெ.(n.) கற்பரி செய்நஞ்சு (பாடாணம்); poison found underneath rocks (சா.அக.).

*[Skt. a-cala+ utt.patti>த. அசலவுற்பத்தி.]*

**அசலன்** *ašalan*, பெ. (n.) 1. அசைவிலாதவன்; one who is motionless. *"இந்த ஆன்மா அசரீரியுமா யசலனுமாய்" (சி. சி. 8, 6, மறைஞா).* 2. கடவுள்; god, as motionless. 3. அருகக் கடவுள் (திவா.); Arhat.

**த.வ. அசைவிலி.**

*[Skt. a-cala >த. அசலன்.]*

**அசலாமாங்கம்** *ašalā-māngam*, பெ.(n.) வெட்டிவேர்; root of kusa grass-*Andropogon aromaticus alias A-muricatum* (சா.அக.).

**அசலை** *ašalai*, பெ.(n.) 1. நிலம்; earth. *"அசலை மங்கை"* (கந்தபு. இரணியன்யு. 56.); 2. மலைமகள் (கூர்மபு. திருக்கல் 20.); *Pārvati.*

*[Skt. a-šala >த. அசலை.]*

**அசலோமன்** *ašalōman*, பெ.(n.) பூனையவரை; cowhage, *Carpopogon pruriens* (சா.அக.).

**அசலோமி** *ašalōmi*, பெ.(n.) பொற்றலைக் கையாந்தகரை; a medicinal plant with yellow flower, mary-gold *Verbesina-verbesina calendulacea* (சா.அக.).

**அசவாகனன்** *aša-vāganan*, பெ.(n.) நெருப்புக் கடவுள்; *Agni*, as riding a goat.

**த.வ. ஆட்டு ஊர்தியன்.**

*[Skt. aja+ vāhana >த. அசவாகனன்.]*

**அசவாகிகம்** *ašavāgigam*, பெ.(n.) கருப்பு கசகசா; black poppy seeds (சா.அக.).

**அசவை[1]** *ašavai*, பெ.(n.) மறைமொழி வகை (வின்.); *hamsa mantra.*

*[Skt. a-japā >த. அசவை.]*

**அசவை[2]** *ašavai*, பெ.(n.) 1. முள்வேங்கை; spinous kino tree-Bredelia refusa; *B. Hamiltoniana.* 2. பெருவிரலடி; the root of the thumb (சா.அக.).

**அசற்காரியம்** *a-šar-kāriyam*, பெ.(n.) முறையற்ற செய்கை; bad or improper deed.

**த.வ. அன்முறைவிளைவு.**

*[அச(ற்) + காரியம்.]*

*[**Skt.** a-sat >த. அசல்.]*

**அசற்காரியவாதம்** *ašarkāriyavātam*, பெ.(n.) உருவாக்கலுக்குமுன், இல்லாமலே தொழில் தோன்றுமென்னுங் கொள்கை (சித். மர, கண். 11); creationistic doctrine of causation according to which the effect does not exist before its production.

**த.வ. காரணமில் வினைக் கொள்கை.**

*[அசத்+காரியம்+வாதம்.]*

*[**Skt.** a-sat + த. அசத்(து) + **Skt.** vāda > த.வாதம்.]*

**அசற்சரக்கு** *ašar-šarakku*, பெ.(n.) 1. இயற்கை மருந்து; natural drug as distinguished from artificial compound. 2. உயர்ந்த; a superior kind of drug unadulterated (சா.அக.).

**த.வ. மூலச்சரக்கு.**

*[அசல் + சரக்கு]*

*[**U.** asl>த. அசல்.]*

**அசற்சீட்டு** *ašar-šīṭṭu*, பெ.(n.) மூல ஆவணம்; original bond.

**த.வ. மூலச்சீட்டு.**

*[அசல் + சீட்டு]*

*[**Skt.** a-sal>த. அசல்.]*

**அசற்சூத்திரர்** *ašar-šūttirar*, பெ.(n.) ஊன் உணவு தவிராதிருக்கும் சமய நெறி நில்லா வேளாளர் (சூத்திரர்) (சி. போ. பா. சிறப்புப், புது.); *šūdras* who do not abstain from animal food and are not religious.

*[**Skt.** a+sar+šudra>த. அசற்சூத்திரர்.]*

அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்னும் நாற்பாற் தொழின்முறைப் பாகுபாட்டைத் தீய முறையிற் பயன்படுத்திக்கொண்டு பிராமணர் சத்திரியர் வைசியர் சூத்தரர் என்னும் நால்வருணப் பிறவி வகுப்புகளாக வகுத்து அவை முறையே ஒன்றினொன்று தாழ்ந்தவையென்றும் தாம் பிராமணரும் ஏனையர் ஏனை மூவகுப்பாருமாவர் என்றும், இப்பாகுபாடு இறைவன் படைப்பே என்றும், கூறிவிட்டனர் ஆரியப் பூசகர் (த.ம.பக்.60).

**அசற்பாத்திரம்** *a-šar-pāttiram*, பெ.(n.) தானம்பெறத் தகுதியற்றவன்; unworthy recipient.

*[**Skt.** a-sat+pātra >த. அசற்பாத்திரம்.]*

**அசற்பிரதி** *ašar-piradi*, பெ.(n.) 1. முதற்படி; the original. 2. உண்மை படி (வின்.); fair copy.

**த.வ. மூலப்படி.**

*[**U.** asl + **Skt.** prati> த. அசற்பிரதி.]*

**அசன்[1]** *ašan*, பெ.(n.) 1. திருமால் (நாநார்த்த.); *viṣṇu*. 2. சிவபெருமான் (நாநார்த்த); *Šivan*. 3. மன்மதன் (நாநார்த்த); the god of love. 4. இரகு மன்னர் மன்னனின் மகன்; a son of Raghu. 5. உந்தன் வளிக்கு(உதானவாயுவுக்கு)ரிய கடவுள் (வேதாந்தசாரம், பக். 43.); the god who actuates the *utāṉaṉ*.

*[**Skt.** aja>த. அசன்.]*

**அசன்[2]** *ašan*, பெ.(n.) எடுத்துக்காட்டுப் போலிகளுளொன்று; (Log.) fallacy of illustrating the invariable concomitants between the middle term and the major term with a non-existent thing. *"சன்னு மசன்னு மென்றிரு வகையாம்" (மணிமே, 29, 362).*

*[**Skt.** a-sat>த. அசன்.]*

**அசன்[3]** *ašan*, பெ.(n.) 1. பிறப்பிலி (வின்.); being without birth, as the deity. 2. தசரதன் தந்தை (வின்.); name of the father of Dašaratha. 3. **அயன்** (வின்.) பார்க்க; see *āyan*.

*[**Skt.** a-ja>த. அசன்.]*

**அசன்னியம்** *aśaṉṉiyam,* பெ.(n.) நிமித்தம் (சகுனம்) (சிந்தா. நி. 56.); omen.

*[Skt. a-jan-ya > த. அசன்னியம்.]*

**அசனங்கொள்ளல்** *aśaṉaṅkoḷḷal,* பெ.(n.) சோறுண்ணுகை; eating boiled rice i.e. taking food (சா.அக.).

**த.வ. அயினிகொள்ளல்.**

*[அசனம் + கொள்ளல்.]*

*[Skt. aśaṉa>த. அசனம்.]*

**அசனசாலை** *aśaṉaśālai,* பெ.(n.) உணவு விடுதி (pond.); eating house.

**த.வ. அயினிச்சாலை.**

*[அசன(ம்) + சாலை.]*

*[Skt. aśaṉa>த. அசன(ம்).]*

**அசனப்பல்** *aśaṉa-p-pal,* பெ.(n.) பாற்பல்; milk-tooth (சா.அக.).

*[அசன(ம்) + பல்.]*

*[Skt. aśaṉa>த. அசன(ம்).]*

**அசனப்பிரியம்** *aśaṉa-p-piriyam,* பெ.(n.) உணவின் மேலுள்ள ஆர்வவேட்கை; desire for food (சா.அக.).

**த.வ. அயனிவேட்கை.**

*[Skt. aśaṉa+priya>த. அசனப்பிரியம்]*

**அசனப்பிரியன்** *aśaṉa-p-piriyaṉ,* பெ.(n.) மிகுதியாக உண்பவன்; an epicurian (சா.அக.).

**த.வ. பேருண்டியன்.**

*[Skt. aśaṉa+priya>த. அசனப்பிரியன்.]*

**அசனப்பெருக்கம்** *aśaṉ-p-perukkam,* பெ.(n.) வயிற்றுத்தீ மிகுதியால் அளவிறந்து உண்ணுகை; indulging the appetite to excess as a result of great hunger (hyperorexial) (சா.அக.).

**த.வ. அயினிப்பெருக்கம்.**

*[அசனம் + பெருக்கம்.]*

*[Skt. aśaṉa>த.அசன(ம்).]*

**அசனபர்ணி** *aśaṉa-parṇi,* பெ.(n.) ஒருவகைப் பூடு; a plant, *Marsilea quadrifolia* (சா.அக.).

**அசனபன்னி**[1] *aśaṉa-paṉṉi,* பெ.(n.) சிற்றகத்தி (மலை); comman sesban.

**அசனபன்னி**[2] *aśaṉa-paṉṉi,* பெ.(n.) 1. சோறு; boiled rice. 2. வெள்ளுள்ளி; white onion, *Alluim sepra.* 3. வேங்கை; kino tree, *Terminalia tomentosa alias pterocarpus marsupium* (சா.அக.).

**த.வ. அயினியுளி.**

**அசனபாணிகம்** *aśaṉa-pāṇigam,* பெ.(n.) கருப்புக் கொடி; black bottle-flower, *Webera corymbosa (nigrum)* (சா.அக.).

**அசனம்**[1] *aśaṉam,* பெ.(n.) 1. உணவு; food. *"கொடுப்பி னசனங் கொடுக்க" (நான்மணி. 81.).* 2. சோறு (சூடா.) boild rice. 3. பசி (பிங்.); hunger. 4. கொழுப்பு (பிங்.); fat.

**த.வ. அயினி.**

*[Skt. aśana>த. அசனம்.]*

**அசனம்**[2] *aśaṉam,* பெ.(n.) நீண்ட மரவகை (பிங்.); Indian kino-tree.

*[Skt. aśana>த. அசனம்.]*

**அசனம்**[3] *aśaṉam,* பெ. (n.) 1. வேங்கை மரம்; east Indian kino, *Terminalia tomentosa alias - pterocarpus marsupium.* 2. உண்ணல்; eating.

*[Skt. ā-saṉa>த. அசனம்.]*

**அசனம்பண்ணல்** *aśaṉam-paṇṇal,* தொ.பெ. (vbl.n.) 1. உண்ணுதல்; eating food. 2. சோறு சமைத்தல்; cooking food, preparing meals (சா.அக.).

**த.வ. அயினிசெய்தல்.**

*[அசனம் + பண்ணல்.]*

*[Skt. a-śaṉa> த.அசனம்.]*

**அசனமருந்தல்** *aśaṉamarundal,* தொ.பெ. (vbl.n.) சோறுண்டல்; taking food (சா.அக.).

த.வ. அயினிஅருந்தல்.

[அசனம் + அருந்தல்.]

[**Skt.** a-šaṉa>த.அசனம்.]

**அசனமாற்றல்** *ašaṉa-māṟṟal*, தொ.பெ. (vbl.n.) ஏற்கும் உணவை மாற்றுதல்; changing the food or diet (சா.அக.).

த.வ. அயினிமாற்றல்.

[அசனம் + மாற்றல்.]

[**Skt.** a-šaṉa>த.அசனம்.]

**அசனவேதி** *ašaṉa-vēdi*, பெ.(n.) 1. செடிவகை (இராச வைத். 37.); cumin. 2. செரிக்கச் செய்யும் பொருள் (இராசவைத். 52); digestive.

[**Skt.** ašaṉa-bhēdin>த. அசனவேதி.]

**அசனாசயம்** *ašaṉāšayam*, பெ.(n.) இரைப்பை (வின்.); stomach.

[**Skt.** ašana+ā-šaya>த.அசனாசயம்.]




**அசனாத்(து)** *ašaṉāttu* பெ. (n.) கட்டளை (P.T.L.); order, warrant.

[**Ar.** asṉād>த. அசனாத்(து).]

**அசனாமிர்ததைலம்** *ašaṉāmirda-tailam*, பெ.(n.) வேங்கைப்பட்டை, சீந்தில் முதலியவற்றினின்றும் வடிக்கும் ஒருவகை நெய்மம் (தைலவ. தைல. 47.); unguent made of the bark of pterocarpus marsupium, *Tinospora cadifolia* and other herbs.

[**Skt.** asana + amṛta + taila>த.அசனாமிர்த தைலம்.]

**அசனி** *ašaṉi*, பெ.(n.) 1. இடி; thunderbolt. *"பெருவிறலசனி" (ஞானா. 19.)*; 2. வானவர் கோன்படை. (பிங்.); weapon of Indra. 3. நறும்புகை (சாம்பிராணி)யிலை (இராசவைத்.); frankincense leaf.

[**Skt.** ašaṉi>த. அசனி.]

**அசனிபாதம்** *ašaṉi-pādam*, பெ.(n.) இடியின் வீழ்ச்சி (சி.சி. 11, 7. சிவாக்); stroke of lightning.

[அசனி + பாதம்.]

[**Skt.** ašani>த.அசனி.]

**அசனியேறு** *ašaṉi-y-ēṟu*, பெ.(n.) இடியேறு; thunderbolt. *"அசனியேறென வுரப்பி" (கூர்மபு. அந்தகா. 61.).*

[அசனி + ஏறு.]

[**Skt.** ā-šani>த.அசனி.]

**அசனுகம்** *ašaṉugam*, பெ. (n.) கருவழிகை; abortion (சா.அக.).

**அசனுதம்** *ašaṉudam*, பெ. (n.) கருவழிக்கும் மருந்து; a medicine that could bring about abortion, abortive drugs (சா.அக.).

த.வ. கருக்கொல்லி.

**அசனேற்பவவிக்கல்** *ašaṉērpava-vikkal*, பெ. (n) **அசநோற்பவிக்கல்** பார்க்க; see *ašanōrpa-vikkal* (சா.அக.).

**அசனோமந்தாரை** *ašaṉō-mandārai*, பெ. (n.) கருப்பு மந்தாரை; a black variety of flowering shrub, மந்தாரை, *Bauhmia variegata* (சா.அக.).

**அசாக்கிரதை** *a-šākkiradai*, பெ. (n.) விழிப்பின்மை; inattentiveness, heedlessness, carelessness.

த.வ. மந்தநிலை, கவனக்குறை.

[**Skt.** a-jāgrattā> த. அசாக்கிரதை]

**அசாகசம்** *ašāgašam*, பெ.(n.) அமைதி (யாழ். அக.); gentleness.

[**Skt.** a-sāhasa>த. அசாகசம்.]

**அசாகளத்தனம்** *asā-gaḷa-t-tanam*, பெ. (n.) ஆட்டின் கழுத்திற் றொங்குந் தசை; nipple or fleshy protuberance hanging down from the neck of goats. *"அசாகளத்தனம் போல அதிக சங்கியை கொள்வது ஏற்றிற்கு" (சிவசமவா. 39.).*

*[Skt. aja+gala+stana> த. அசாகளத்தனம்.]*

**அசாகை** *asāgai*, பெ. (n.) கிளைபிறிதின்மை; without branches (சா.அக.).

த.வ. கிளையிலி.

**அசாசருமம்** *asā-sarumam*, பெ.(n.) ஆட்டுத் தோல்; sheep's skin (சா.அக.).

**அசாசி** *asāsi*, பெ.(n.) 1. சீரக வகை; black cumin. 2. படர் கொடிவகை; gulancha.

*[Skt. ajājī>த. அசாசி.]*

**அசாசீவி** *asā-sīvi*, பெ. (n.) மூட்டுப் பொருத்து, எலும்பு முறிவு, மருத்துவம், அட்டை விடல் முதலியவற்றைச் செய்யும் பழங்காலத் தமிழினத்தாராகிய ஆட்டுவணிகர், a class of men called 'āṭṭuvaṇgar' who could attend to dislocated joints and fractured bones in olden days amongst the Tamilians. They also used to apply leeches in the way that we do at present (சா. அக.).

த.வ. ஆடுவாழி.

*[Skt. a-jā+jīva>த. அசாசீவி.]*

**அசாடம்** *asāḍam*, பெ.(n.) தாளிசபத்திரி; plant-facourtia cataphracta (சா.அக.).

*[Skt. asāṭa>த. அசாடம்.]*

**அசாத்தியஅதிசாரம்** *asāttiya-adisāram*, பெ.(n.) பலவகை நாற்றத்துடன் கழிச்சல் கண்டு சுரமும், மயக்கமு முண்டாக்கி நினைவு தடுமாறச் செய்யும் நோய்; a severe type of chronic diarrhoea characterised by fever, giddiness, loss of consciousness, fetid fecal discharge, etc. It may generally end in death, acute Inflammatory Diarrhoea (சா.அக.).

த.வ. கடுங்கழிச்சல்.

*[Skt. a-sathyā+atisāra> த. அசாத்திய அதிசாரம்.]*

**அசாத்தியவெலிவிடம்** *asāttiya-v-elividam*, பெ.(n.) உயிர்ப் பொடுக்கம், வீக்கம், வேற்றுருவம், சுரம், அரத்தங்கக்கல் (வாந்தி)யாகிய குணங்களை உண்டாக்கும் ஒருவகை எலிக்கடி; an incurable rat-bite characterised by faintness, swelling, change of features, fever, vomiting of blood and other symptoms (சா.அக.).

த.வ. கடுஎலிநஞ்சு.

*[அசாத்திய + எலி + விடம்.]*

*[Skt. asādya>த.அசாத்திய. Skt. viṣa> த.விடம்.]*

**அசாத்தியகட்டி** *asāttiya-kaṭṭi*, பெ.(n.) சீழ் கட்டுண்டு சதையாக மாறும் ஆறாத கட்டி; a chronic abscess in which the pus is absorbed and converted into a flesh-like mass-cold abscess. It is of comparatively slow development with little inflammation (சா.அக.).

த.வ. கட்டுண்கட்டி, கட்டாங்கட்டி.

*[அசாத்திய(ம்) + கட்டி.]*

*[Skt. a-sadhyā> த. அசாத்தியம்.]*

**அசாத்தியகண்டமாலை** *asāttiya-kaṇḍa-mālai*, பெ. (n.) அருகின் வேரைப் போல் கழுத்தைச் சுற்றிலும் முதலில் கிளைத்து எழும்புவதும், பிறகு அழுந்துவதுமாயுள்ள ஒரு தீராத நோய்; a disease showing itself by crops of glandular tumours round the neck, which suppurate and heal up every time at the onset (சா.அக.).

த.வ. கடுங்கண்டமாலை.

*[அசாத்தியம் + கண்டமாலை.]*

*[Skt. a-sādhya> த. அசாத்தியம்.]*

**அசாத்தியகபாலநோய்** *asāttiya-kabāla-nōy*, பெ.(n.) தலையில் காணும், ஒரு தீராத நோய்; a disease of the scalp.

**த.வ. கடுமண்டைநோய்.**

*[அசாத்திய(ம்) + கபாலநோய்.]*

*[**Skt.** a-sādhya>த.அசாத்திய(ம்)]*

*கன்னப்புலம் → கப்பாளம்→ கபாலம் = மண்டை, தலை.*

**அசாத்தியகருப்பம்** *asāttiya-karuppam*, பெ.(n.) பெண்களின் அடிவயிற்றில் சிக்கிச் கொண்டு வெளிப்படா நிலையில், வயிற்றைக் கீறி எடுக்க நேரிடும் கருப்பம்; pregnancy in which the delivery is obstructed in the natural passages by transverse presentation and the child is removed by operation as in contracted pelvis (சா.அக.).

**த.வ. கடுங்கருப்பம்.**

*[அசாத்தியம் + கருப்பம்.]*

*[**Skt.** a-sādhya>த.அசாத்தியம்.]*

*குரு→கரு → கருப்பம்.*

**அசாத்தியகழலை** *asāttiya-kaḻalai*, பெ. (n.) 1. உடம்பில் பதிய ஆழ்ந்தும் பக்கங்களில் துளிர்த்தும் உடம்பு முழுவதும் பரவி அடிக்கடி கிளைக்கும் தன்மை வாய்ந்து, கடைசியாக ஆவியையும் பற்றும் ஒரு வகைத் தீராத கழலை; tumours which tend infiltrate the tissues, and produce secondary growth in the adjacent glands. They are disseminated through out the body, affect the general health, tend to recur after removal and eventually destroy life-malignant tumors. 2. அரத்தக் கழலை முதலியனவற்றிலும், எலும்புப் பொருந்துகளின் பள்ளங்களிலும் பருத்துத் தோன்றும் தீராத தசைக் கட்டிகள்,; incurable tumours appearing in the regions of circulation in the cavity of an artery or in any vulnerable joint of the body, such as those formed in cases of ancurism, hematoma etc. malignant tumor (சா.அக.).

**த.வ. கடுங்கழலை.**

*[அசாத்திய(ம்) + த. கழலை.]*

*[**Skt.** a-sādhya >அசாத்திய(ம்).]*

*கழல்→கழலை = கழற்சிக்காய் போன்ற கட்டி.*

**அசாத்தியகழிச்சல்** *asāttiya-kaḻiccal*, பெ.(n.) உலாவும் காலத்தினும், கோடையிலும், கக்கல், கழிச்சல் (வாந்தி பேதி), அல்லது வயிற்றளைச்சல் (சீதபேதி) கண்டு மலத்துடன் குருதி கலந்து வந்த காலத்தும், எலும்புருக்கி நோய் முதலிய கொடிய நோய்களின் ஈறாக மாறா கழிச்சல் கண்ட காலத்தும் ஏற்படும் தீராத கழிச்சல்கள்; any acute dysentry or diarrhoea occuring with serious mucous or bloody stools in some circumstances.

**த.வ. கடுங்கழிச்சல், பெருவாயிநோய்.**

*[அசாத்தியம் + கழிச்சல்.]*

*[**Skt.** sādhya>த.அசாத்தியம்.]*

**அசாத்தியகாசம்** *asāttiya-kāsam*, பெ.(n.) இருமல் மிகுந்தும், மேல்மூச்சு, நீர்வேட்கை, கழிச்சல் முதலிய குணங்களுடன் கூடியதும், சிறுவர்களைத் தாக்கிக் கண்டத்திலுள்ள சுரியக (விசுத்திக்) கோளத்தை வீங்கச் செய்து, அதனால் நெஞ்சடைப்பு உண்டாக்கி எதிர்பாராது திடீரென உயிரிழக்கச் செய்யும் ஈளைநோய்; spasmodic asthma marked by severe paroxysms, hard breathing, thirst, purging etc., thymic asthma occuring usually in children or adults characterised by obstruction to respiration due to enlargement of the thymus, with a tendency to end in sudden death. It is therefore considered incurable (சா.அக.).

**த.வ. கடுஈளை.**

*[அசாத்தியம் + காசம்]*

*[**Skt.** a-sādhya> த. அசாத்திய(ம்).]*

*கால்→ கார்→ காய்→ காசம்.*

**அசாத்தியகுட்டம்** *aśāttiya-kuṭṭam*, பெ. (n.) உடம்பிலுள்ள தசை, நாடி, நரம்பு முதலியவற்றறில் பூச்சிகள் ஏற்பட்டு அதனால் உடம்பில் திமிர், புண், சதையழுகல், விரற்குறைவு முதலிய துன்பங்களை உண்டாக்கி மற்றும் வேற்றுக் குரல், உருமாற்றம் முதலிய வேறுபாடுகளையும் காட்டும் ஒரு வகைக் குட்ட நோய்; a chronic form of leprosy arising from a constitutions disorder due to a specific mircobe (bacillus leprate) in the skin and nerve. It is marked by anesthesia, deep ulceration, and gangrene. The lesion is also followed by affection of the larynx and change of appearance in the body (சா. அக.).

**த.வ. கடுங்குட்டம்.**

*[அசாத்தியம் + குட்டம்.]*

*[**Skt.** a-śādhya> த. அசாத்திய(ம்).]*

**அசாத்தியகுணம்** *aśāttiya-kuṇam*, பெ.(n.) நோய்கள் தீராது இறப்பிற்கேதுவாக்கும் தன்மையைக் குறிக்கும் நிலைமை; a condition in which disease exhibit symptoms impossible for treatment, but pointing to death (சா.அக.).

**த.வ. கடுங்குணம்.**

*[அசாத்தியம் + குணம்]*

*[**Skt.** a-śādhya> த. அசாத்திய(ம்).]*

**அசாத்தியகுறி** *aśāttiya-kuṟi*, பெ.(n.) தீர்க்க வொண்ணா நோய்களின் அடையாளம் அல்லது இலக்கணம் symptom or symptoms which are clear indications that the disease cannot be cured, but ill prove fatal ultimately (சா. அக.).

**த.வ. கடுங்குறி.**

*[அசாத்தியம் + குறி.]*

*[**Skt.** a-śādhya> த. அசாத்திய(ம்).]*

**அசாத்தியசன்னி** *aśāttiya-śaṉṉi*, பெ. (n.) உடம்பினின்று அரத்தம் மூளை, முள்ளந்தண்டைத் தாக்குவதால் உளவேறுபாடு உண்டாகி நாடித்துடிப்பு மேல்மூச்சு உண்டாகும் ஒருவகை இசிவு (சன்னி); apoplexy arising from the some causes in considered incurable and its invariably fatal.

**த.வ. கடும் இசிவு.**

*[**Skt.** a-śādhya + san - ni> த. அசாத்திய சன்னி.]*

**அசாத்தியசிலேட்டுமம்** *aśāttiya-silēṭṭumam*, பெ. (n.) பித்தம் அல்லது வளி மிகுதலால் நீடித்து இடர் செய்யக்கூடிய கோழைக் கட்டு நோய்; a chronic phlegmatic disease due to the physiological activities of the body resulting from the combination of the two humours bile and gas in the system. The disease in considered incurable (சா. அக.).

**த.வ. கடுங்கோழைக்கட்டு.**

*[**Skt.** a-śādhya+slēṣman>த. அசாத்திய சிலேட்டுமம்.]*

**அசாத்தியசுவாசம்** *aśāttiya-śuvāśam*, பெ.(n.) காய்ச்சல், கக்கல் (வாந்தி), நீர்வேட்கை, கழிச்சல் வீக்கம் இவற்றுடன் காணுவதாகிய நாட்பட்ட ஈளை, நெஞ்சகக் கோழைக்கட்டு; chronic asthma and bronchitis attended with fever, vomiting, thirst, purging and swelling. These are considered incurable (சா.அக.).

**த.வ. கடுஈளை.**

*[**Skt.** a. śādhya + śvāsa>த.அசாத்திய சுவாசம்.]*

**அசாத்தியசோகை** *aśāttiya-śōgai*, பெ.(n.) உடம்பு முழுவதும் குருதி குறைந்து பரவிய வீக்கம் நெடு நாளாகியும் வாடாமற் போன காலத்தும், வயிறு, எரு (மல)வாய், அல்குல், ஆண்குறி ஆகிய இவ்விடங்களில் வீக்கங்

கண்டு அத்துடன் காய்ச்சல், மேல் மூச்சு, கழிச்சல் முதலிய தீயகுணங்கள் கண்டபோதும், எலும்பிலுள்ளிருக்கும் மச்ச சத்துவை நோயானது தாக்கின பொழுதும், குருதி யூறுகை, குருதி ஊட்டம் குறைவடைந்த காலத்தும் ஏற்பட்ட தீராத குருதிக்கேடு; anemia which is reckoned as incurable and at times proves fatal.

த.வ. கடுஞ்சோகை.

*[அசாத்தியம் + சோகை.]*

*[**Skt.** a-šādhya>த.அசாத்திய(ம்).]*

*சோர்பு→ சோகு→ சோகை.*

**அசாத்தியசோபை** *ašāttiya-šōbai*, பெ. (n.) **அசாத்தியசோகை** பார்க்க; see *ašāttiya-šōgai* (சா.அக.).

*[**Skt.** a- šādhya +šōbhā> த.அசாத்திய சோபை.]*

**அசாத்தியதாகம்** *ašāttiya-dāgam*, பெ. (n.) நோயினால் தாக்கப்பட்டு அறிவழிந்த காலத்திலும், நாக்கு வெளிப்பட நீண்டு விட்ட காலத்திலும், தொண்டைக்குள் நீர் இறங்காத காலத்திலும், இறக்குந் தறுவாயிலும் காணும் தீராத நீர்வேட்கை; unquenchable or morbid thirst (polydypsia) in a patient exhibiting the some symptoms.

த.வ. கடுந்தாகம்.

*[அசாத்திய(ம்) + தாகம்.]*

*[**Skt.** a-šādhya>த. அசாத்திய(ம்).]*

**அசாத்தியநரை** *ašāttiya-narai*, பெ. (n.) அகவை முதிர்வால் ஏற்பட்ட நரை; permanent greyness of hair due to old age (சா.அக.).

த.வ. கடுநரை.

*[அசாத்திய(ம்) + நரை.]*

*[**Skt.** a-šādhya> த. அசாத்திய(ம்).]*

**அசாத்தியநாடி** *ašāttiya-nādi*, பெ.(n.) நாடி நடையைத் தன்மாத்திரைக்குக் கொண்டுவர முடியாத காலத்திலும், நாடி நடையில் விரைவு மேன்மேலும் அதிகரித்துச் சாவிற்கு ஏதுவாகும் காலத்திலும் ஏற்பட்ட நாடியோட்டம்; pulse which is incapable of being restored to its normal condition or the abnormal increase in the pulse rate indicating the approach of death (சா.அக.).

த.வ. கடுநாடி.

*[அசாத்திய(ம்) +நாடி.]*

*[**Skt.** a-šādhya>த. அசாத்திய(ம்).]*

**அசாத்தியபல்நோய்** *ašāttiya-pal-nōy*, பெ.(n.) பல் வேரடியிற் புண்ணுண்டாகும் போது, சீழ் வடிந்து புரையோடின காலத்திலும் சொத்தை விழுந்த பொழுதும் உண்டாகும் பல் நோய்கள்; severe tooth ache, accompanied by inflammation of the tough fibrous membrane surrounding the teeth (dental periosteam), attended with discharge of pus, due to necrosis of the alveoil or rotten condition of the gum and cariess of the tooth (சா.அக.).

த.வ. கடுபல்நோய்.

*[அசாத்திய(ம்)+பல்நோய்.]*

*[**Skt.** a-šādhya>த.அசாத்திய(ம்).]*

**அசாத்தியபித்தம்** *ašāttiya-pittam*, பெ. (n.) 1. அளவிறந்த பித்தம்; excessive secretion of bile in the system. 2. கள்ளுண்டவனைப் போல் உணர்ச்சியற்று வாய் வறண்டு நீர்வேட்கை முதலிய குணங்களை உண்டாக்கும் ஒருவகைப் பித்த நோய்; a bilious disease followed by insensibility similar to the condition of adrunker person and marked by parched tongue and intense thirst. 3. ஊதையும் (வாதமும்) கோழையும் கூடிய ஒரு பித்த நோய்; a chronic biliousness due to the concerted action of the three dhoshas (humours) in the system (சா.அக.).

த.வ. கடும்பித்தம்.

*[அசாத்திய(ம்) + பித்தம்.]*

*[**Skt.** a-sādya>த. அசாத்திய(ம்).]*

**அசாத்தியபிரமேகக்கட்டி** *aśāttiya-iramēga-k-katti*, பெ. (n.) நெஞ்சு, எருவாய் (குதம்), தலை, தோள், முதுகு ஆகிய இவ்விடங்களிலாவது, உடம்பில் வேறு மறையுப்பு மூட்டுகளிலாவது எழும்பி, நோயாளியைப் பாயும் படுக்கையுமாய்க் கிடத்தும் தீராத வெட்டைநோய் எழுப்பிய கட்டி; gummatus tumour appearing about the region of the heart, anus, head, shoulder, back or any of the vital joints of the body attended with supervening symptoms producing extreme prostration in a patient (சா.அக.).

த.வ. கடுமேகக்கட்டி.

*[அசாத்திய(ம்) + பிரமேக(ம்)+கட்டி.]*

*[**Skt.** a-šādhya>த. அசாத்தியம்; **Skt.** pra-mēha>பிரமேகம்.]*

**அசாத்தியபிரமேகம்** *aśāttiya-piramēgam*, பெ.(n.) நோய் கொண்ட பெண்களைப் புணர்வதினால் ஏற்பட்ட வெள்ளை நெடு நாட்களாகக் குணப்படாமல், ஊதைபித்த வெட்டைநோய், தந்தி வெட்டைநோய், சிறுநீர் கல்லடைப்பு ஆகிய நோய்களாக மாறிப் பண்டுவஞ் செய்து குணப்படுத்தவியலா தோல்நோய்; gonorrhoea which is said to be chronic when it is being negleated for a long time without adequate treatment, and when it developes in its last stage into gonorrhoeal rheumatism gleet, stricture of urinal passage arising from neglected gleet and stone in the bladder, moreover in bad cases, the disease may spread from the bladder to the kidneys or in a woman it may reach the womb and its appendages (சா.அக.).

த.வ. கடுமேகம்.

*[**Skt.** a-šādhya+ pra-mēha>த.அசாத்திய பிரமேகம்.]*

**அசாத்தியபீலிகம்** *aśāttiya-pīligam*, பெ.(n.) 1. மண்ணீரலுக்கு ஊதையினால் ஏற்படும் நரம்பு வலி; a radiating neuralgic pain resulting from the morbid condition of the spleen, splenalgia. 2. வீங்கிப் பருத்துக் காணும் மண்ணீரல் நெடு நாளாகியும் பண்டுவத்துக்கு இணங்காமல் அதனால் கூடுதற் கழிச்சல் உண்டாக்கும் ஒரு தீராத நோய்; a chronic form of the enlargement of spleen marked by anaemia and emaciation due to its being long unattended to. At the last stage, diarrhoea or dysentery becomes permanent and the person sinks (சா.அக.).

த.வ. கடு ஈரல்நோய்.

*[**Skt.** a-šādhya+pīligā>த.அசாத்திய பீலிகம்.]*

**அசாத்தியம்[1]** *aśāttiyam*, பெ. (n.) 1. நிலை நிறுத்த முடியாதது (சி.சி. அளவை 1, சிவாக்); that which is impracticable, impossible of accomplishment. 2. அசாத்தியரோகம் பார்க்க; see *aśattiya-rōgam.*

த.வ. செயற்கரிது, செயற்கருமை.

*[**Skt.** a-sādhya>த.அசாத்தியம்.]*

**அசாத்தியம்[2]** *aśāttiyam*, பெ. (n.) மிகுதி; something, in excess. *'அவனுக்கு அசாத்திய நம்பிக்கை'.*

த.வ. மிகை.

*[**Skt.** a-šādhya>த. அசாத்தியம்.]*

**அசாத்தியம்[3]** *aśāttiyam*, பெ. (n.) 1. முடியாமை; impossibility. 2. குணமாகாமை; that state or condition in which no cure or remedy from medical skill is possible. 3. இயலாமை; impracticability (சா.அக.).

த.வ. ஆகாமை.

*[**Skt.** a-šādhya>த.அசாத்தியம்.]*

**அசாத்தியமசூரிகை** *aśāttiya-maśūrigai*, பெ. (n.) அம்மை நோயில் கொப்புளங்கள் ஏற்பட்டு, அக்கொப்புளங்களில் குருதி போய் கலந்து கருகி முகத்தில் குழி விழுந்து, குணமுறாவெனக் கருதப்படும் நோய்; a severe form of variola or small-pox.

**த.வ. நலமுறாக்குழியம்மை.**

**அசாத்தியமூடகர்ப்பம்** *aśāttiya-mūḍa karppam*, பெ.(n.) வலுக்குறைவு, சோர்வு இன்னபிறவற்றின் நிமித்தம் வாயுவானது கருப்பத்தை நிலை தடுமாறச் செய்து, கருப்பை, வயிறு இவற்றில் குத்தல் உண்டாக்கி கருவுற்றார்தம் கழுத்து நிற்காமலும் கைகால் குளிர்ந்தும், அறிவழிந்தும் போகச் செய்வதுடன், கருவுற்றவளை இறக்கச் செய்யும் கருப்பம்; a condition or pregnancy brought about by the child in the uterus taking an unnatural course or position due to pressure through weakness, languor etc., It is marked by share pain in the genital and the abdomen, chillness of the extremetics, loss of senses, and lack of formness in the neck. It finally ends in the death of both the mother and the child (சா.அக.).

**த.வ. கடுமூடக்கருப்பம்.**

*[அசாத்திய(ம்) + மூட + கருப்பம்.]*

*[**Skt.** a-śādhya>த. அசாத்திய(ம்).]*

**அசாத்தியமேகம்** *aśāttiya-mēgam*, பெ. (n.) தீர்க்க முடியாத வெள்ளை நோய்களுள் ஒன்று; incurable urinery diseases.

**த.வ. கடுவெட்டை.**

*[**Skt.** a-śādhya+mēha>த.அசாத்தியமேகம்.]*

**அசாத்தியரோகம்** *aśāttiya-rōgam*, பெ.(n.) சூதமுனி நாடி 30–ன் வாக்கியப்படி கூறியுள்ள நோய்கள்; a diseases mentioned *šutamūni* 30.

**த.வ. கடும்பிணி.**

*[**Skt.** a-śādhya+rōga>த.அசாத்தியரோகம்.]*

**அசாத்தியவதிசாரம்** *aśāttiya-vadi-śāram*, பெ.(n.) மலவாய்ப் புண்பட்டாலும், அங்கந்திறந்தாலும், வயிறு பெருப்பதாலும், சில்லிட்டாலும் அல்லது வேறு எவ்வகையான தீயகுறிகளைக் காட்டினாலும் அது தீராது என்று கருதப்படும் ஒருவகை செரியாமைக் கழிச்சல்; incurable diarrhoea accompanied by ulcerational-the anus, gaping of the anus, distended abdomen and chillness of the extremitics (சா.அக.).

**த.வ. செரியாக்கழிச்சல்.**

**அசாத்தியவாதரோகம்** *aśāttiya-vāda-rōgam,* பெ.(n.) அதிக நடுக்கம், வீக்கம், தாங்கமுடியாத வலி, உடம்பு முழுவதும் திமிர் ஆகிய குணங்களுடன் உடம்பு மெலிவு, வாட்டம் முதலிய குறிகளையுங்காட்டும் ஓர் ஊதை (வாத)நோய்; a form of chronic rheumatism attended with characteristic tremor of the musches, swelling, unbearable pain, numbness, and progeressive muscular atrophy (சா.அக.).

**த.வ. கடுவூதை.**

*[**Skt.** a-śādhya+vāta+rōga>த. அசாத்திய வாதரோகம்.]*

**அசாத்தியவாந்தி** *aśāttiya-vāndi*, பெ.(n.) இருமல், இரைப்பு, முக்குற்றம் முதலிய குணங்களோடு கழிமலமாகவும், குருதி அல்லது சீழாகவும், கழிமாசு மூத்திரங்கள் தீநாற்றத்துடனும் உண்டாகும் தீராத வாயாலெடுக்கை; incurable vomiting attended with cough, hard breathing, deranged condition of the three humours in the system etc., and marked by the presence of fecal matter, blood or fetid stomach contents (சா.அக.).

**த.வ. கடுங்கக்கல்.**

*[**Skt.** a-sādhya+vāndi>த. அசாத்தியவாந்தி.]*

**அசாத்தியவிடக்கடி** *aśāttiya-viḍa-k-kaḍi*, பெ.(n.) நச்சுயிரிகள் தீண்டலினால் ஏற்படும் நோய்கள்; bites of poisoning creatures diseases.

**த.வ. கடுநஞ்சுக்கடி.**

*[அசாத்திய(ம்) + விடம் + கடி]*

*[**Skt.** a-sādhya - viṣa>த.அசாத்தியவிடம்.]*

**அசாத்தியவிடக்குறி** *aśāttiya-viḍak-kuṟi*, பெ.(n.) உடம்பில் எவ்வகையினாலாவது, உட்கொண்ட நஞ்சு, மருந்துகளால் தீராது சாவிற்கேதுவாக்கும் குறிகள்; fatal symtoms of poisons exhibited in the system of a patient at the time when no antidotes administered.

**த.வ. கடுநஞ்சுக்குறி.**

*[அசாத்திய(ம்)+ விடம்+குறி.]*

*[**Skt.** a-sādhya-viṣa > த.அசாத்தியவிடம்.]*

**அசாத்தியவித்திரதிக்கட்டி** *aśāttiya-vittiradi-k-kaṭṭi*, பெ. (n.) 1. வயிற்றின் உட்புறத்தில் கட்டியுண்டாகி உடைந்து மிக்க துன்பம் உண்டாக்கி, வாயால், சீழ், குருதி முதலியவற்றை விழச் செய்யும் ஒரு வகைக் கட்டி; an incurable abscess developed inside the abdomen the contents of which (pus and blood) find their way out through the mouth.

**த.வ. கடுவயிற்றகக்கட்டி.**

*[அசாத்தியவிரத்திரதி+கட்டி.]*

*[**Skt.** a-sādhya+vidradhi > த.அசாத்திய வித்திரதி.]*

**அசாத்தியவிரணம்** *aśāttiya-viraṇam*, பெ.(n.) ஆறாத புண்கள் (இராண); incurable ulcer.

**த.வ. கடும்புண்.**

*[**Skt.** a-sādhya + vraṇa> த.அசாத்திய விரணம்.]*

**அசாத்தியவீக்கம்** *aśāttiya-vīkkam*, பெ.(n.) நீர்வேட்கை, மெலிவு, காய்ச்சல், கக்கல், விக்கல், வயிற்றோட்டம் ஆகியவற்றோடு கூடி நச்சு தொடர்பாகச் சாவும் ஏற்படும் வடியாத வீக்கம்; inreducible swelling arising from the effects of poison and poisonous bites and characterised by the following symptoms - dyspnoea, thirst, weakness, fever, vomiting, hiccough, dysentery etc. It is extremely hard to cure and may every soon prove fatal (சா.அக.).

**த.வ. கடுவீக்கம்.**

*[அசாத்தியம் + வீக்கம்.]*

*[**Skt.** a-sādhya> அசாத்தியம்.]*

**அசாத்திரமுயற்சி** *aśāttira-muyaṟci*, பெ.(n.) நூன் முறையின்றி வழக்கிலுள்ள சமயச் சடங்கு (வின்.);religious ceremonies in vogue though not sanctioned by sastras, dist. fr *śāttiramuyaṟci.*

**த.வ. வாடிக்கை முயற்சி.**

*[அசாத்திர(ம்)+ முயற்சி.]*

*[**Skt.** a-śāstra> த.அசாத்திரம்.]*

**அசாத்திரியம்** *aśāttirīyam*, பெ.(n.) கலை நூல்கட்கு எதிரிடையானது; that which is contrary to the *sāstra.*

**த.வ. நூல்நெறி இகப்பு.**

*[**Skt.** a-śāstra> த.அசாத்திரியம்.]*

**அசாத்மியபோசனம்** *aśātmiya-bōśaṉam*, பெ.(n.) இடம், காலம், இயல்பு உணர்ச்சி, பழக்கம் முதலியவற்றிற்கு மாறுபாடான உணவு; food unsuitable to one's constitution when considered with other circumstances, such as place, climate, natural temperment habit idiosyncracy etc.

**த.வ. மாறுபடு உண்டி.**

*[**Skt.** a-śādhmibhōjana>த. அசாத்மிய போசனம்.]*

**அசாத்மியம்** *aśātmiyam*, பெ.(n. ) புதுவதாய் வழக்கமில்லாததை வழக்கப்படுத்திக் கொள்ளுவதனால் உடம்புக்கு ஒத்துக்

கொள்ளாத் தன்மை; unsuitability to the constituion brought about by acquired habit; disagreement to one's constitution due to adopting a thing contrary to one's habit (சா.அக.).

த.வ. அல்வழக்கு ஒவ்வாமை.

*[**Skt.** a-sādhmi>த. அசாத்மியம்.]*

**அசாதம்** *aśādam*, பெ.(n.) 1. பிறவாதது; that which is not born. 2. தூய்மையின்மை uncleanliness (சா.அக.).

த.வ. சீத்தை.

*[**Skt.** a-śādha>த. அசாதம்.]*

**அசாதாரணம்** *aśātāraṇam*, பெ.(n.) 1. சிறப்பானது (ஈடு.6, 1, 7); that which is not common, special thing, rarity. 2. காரண(ஏது)ப் போலிகளுளொன்று (மணிமே.29, 212); (Log.) fallacy of *hētu* being found neither in a place where *sādhya* exists not in a place where it does not exist.

த.வ. சீர்மை.

*[**Skt.** a-śādhāraṇa>த. அசாதாரணம்.]*

**அசாதி** *aśādi*, பெ.(n.) செவ்வாய்க் கோள் (சங். அக.); mars, as rulling the astrol. house aries.

*[**Skt.** aja-pati>த. அசாதி.]*

**அசாது** *aśādu*, பெ.(n.) கற்பிழந்தவள்; an unchaste woman (சா.அக.).

*[**Skt.** a-śādhā>த. அசாது.]*

**அசாந்தன்** *a-śāndaṉ*, பெ.(n.) அமைதி யில்லாதவன்; restless man, one without tranquillity.

த.வ. தெம்மாடி.

*[**Skt.** a-śānta>த. அசாந்தன்.]*

**அசாந்திரி** *aśāndiri*, பெ.(n.) நில சருக்கரைக் கிழங்கு; a pot herb. convolvulus argentens (சா.அக.).

**அசாபாலகன்** *aśā-bālagaṉ*, பெ.(n.) **அசாசீவி** பார்க்க; see *aśā-śīvi* (சா.அக.).

**அசாமி** *aśāmi*, பெ.(n.) ஆள் (கொ.வ.); an individual.

த.வ. ஆள்.

*[**U.** aśāmi>த. அசாமி.]*

**அசாயசூரன்** *aśāya-śūraṉ*, பெ.(n.) **அசகாய சூரன்** பார்க்க; see *a-śagāya-śūraṉ*.

**அசாரதை** *aśāradai*, பெ.(n.) சாறுஇன்மை; that which is sapless (சா.அக.).

**அசாரம்**[1] *aśāram*, பெ.(n.) 1. ஆமணக்குச் செடி; castor oil plant, *Ricinus communis*. 2. வாழை; plantain tree, *Musa paradisiaca*. 3. சாறற்றது; that which is deprived of sap or juice. 4. சாறமின்மை அல்லது பயனின்மை; that which is without strength or value, which is unsubstantial (சா.அக.).

**அசாரம்**[2] *aśāram*, பெ.(n.) கொலுமண்டபம்; royal audience hall or royal court.

த.வ. திருவோலக்கம்.

*[**U.** ḥaẓar>த. அசாரம்.]*

**அசாரவாசி** *aśāra-vāśi*, பெ.(n.) அரசன் வாயில் காவலன்; watchman of the king's gate. *"ஒரு பூசல் உண்டென்று கூறிய அசாரவாசிக்கு" (சீவக. 430, உரை.).*

*[**U.** ḥaẓar+**Skt.** vāśi>த. அசாரவாசி.]*

**அசாவேரி** *aśāvēri*, பெ.(n.) இளவேனிற் கால பண்களுளொன்று (பாரத. இராக. 77.); (Mus.) a specific melody-type adapted for spring time.

*[**Skt.** āsāvari>த. அசாவேரி.]*

**அசாறூன்** *aśārūṉ*, பெ.(n.) இது சிறுநீர்க் கல்லடைப்பு, குருதிசிக்கல், ஊதை, வெள்ளைப்படுதல், காமாலை, நீரடைப்பு, நரம்பிசிவு, கீல்வாதம், வீக்கம் முதலிய நோய்களுக்கு உதவுவதும் புகையிடத் தேள் ஓடிப்போவதுமான ஒரு சேணிய (யுனானி) மருந்து; a well known drug in unani

medicine. It is precribed in cases of stricture of urinary passages, stone in the bladder, scantry discharge (as in menstruation), rheumatism, dropsy, jaundice etc., a fumigation of this drug drives away scorpion (சா.அக.).

**அசி¹-த்தல்** *aši-*, 4.செ.கு.வி.(v.i.) நகைத்தல்; to laugh. *"புள்ளெலா மசிப்ப போன்று" (சீவக. 659.)*

*[Skt. has> த. அசி-.]*

**அசி²-த்தல்** *aši-*, 4 செ.குன்றாவி.(v.t.) உண்ணுதல் (தேவா. 867, 3.); to eat, consume.

*[Skt. aš>த. அசி-.]*

**அசி³** *aši*, பெ.(n.) உயிர் (வின்.); soul.

*[Skt. aši>த.அசி.]*

**அசி⁴** *aši*, பெ.(n.) அம்பு (பொதி. நி.); arrow.

*[Skt. ašita>த.அசி.]*

**அசி⁵** *aši*, பெ.(n.) 1. வாள் (திவா.); sword, knife. 2. படைக்கலம் (சூடா.); weapon.

*[Skt. aši>த. அசி.]*

**அசி⁶** *aši*, பெ.(n.) ஏளனச் சிரிப்பு (சூடா.); derisive laughter.

*[Skt. hasi>த.அசி.]*

**அசிகம்** *ašigam*, பெ.(n.) கீழுதட்டுக்கும் மோவாய் கட்டைக்கும் இடையேயுள்ள பகுதி; that part of the face between the underlip and the chin (சா.அக.).

**அசிகியம்** *ašigiyam*, பெ.(n.) 1. தாங்கக் கூடாதது; that which is unbearable. 2. அருவருப்பு; loathing, disgust.

*[Skt. šahya>த.அசிகியம்.]*

**அசிகை¹** *ašigai*, பெ.(n.) பொறாமை (கொ.வ.); envy, jealousy.

*[Skt. asūyā>த.அசிகை.]*

**அசிகை²** *ašigai*, பெ.(n.) நகைத்துப் பேசும் பேச்சு; mirthful conversation. *"கசுகுசென்னவே சொல் லசிகை யென்னடி" (மதுரகவி. 4.)*

*[Skt. hāsikā> த. அசிகை.]*

**அசிங்கம்¹** *ašingam*, பெ.(n.) அருவருப்பு (இ.வ.); digust.

**த.வ. சீத்தை, தூத்தை.**

*[Skt. šahya>த.அசிங்கம்.]*

**அசிங்கம்²** *ašingam*, பெ.(n.) தூய்மையின்மை துப்புரவின்மை; uncleanness, impurity, as unbearable. *"அசிங்கமான இடம்" (கொ.வ.).* 2. அழகின்மை; disorder, repulsiveness. *"அசிங்கமான வேலை" (கொ. வ.).*

**த.வ. அருவருப்பு.**

*[Skt. a-sahya>த.அசிங்கம்.]*

**அசிங்கம்³** *ašingam*, பெ.(n.) 1. தரக்குறைவு, மட்டம்; obscenity. *'அவன் குறையைச் சுட்டிக் கட்டி அசிங்கமாகச் கேலி செய்தார்'.* 2. இழிநிலை தரத்தக்கது; unbecoming.

*[Skt. sahya>த. அசிங்கம்.]*

**அசிங்நுவத்தன்மை** *ašinnuva-t-tanmai*, பெ.(n.) தன் அலுவலில் பற்றில்லாமை (விசாரசந். 341.); non-attachment in respect of one's affairs.

*[அசிங்நுவ(ம்) + தன்மை.]*

*[Skt. ia-sahya-tva> த. அசிங்நு(ம்).]*

**அசிசெறுகாத்துப்பு** *aši-šerukāttuppu*, பெ.(n.) கரியுப்பு; black salt (சா.அக.).

**அசித்தம்** *ašittam*, பெ.(n.) காரண (ஏது)ப்போலிகளு ளொன்று (மணிமே. 29, 192.); fallacy of *hētu* being unsustainable.

*[Skt. a-siddha>த. அசித்தம்.]*

**அசித்தி** *ašitti*, பெ.(n.) கைகூடாமை; incompleteness, failure. *"தாவறு மசித்தி சித்தி தம்மி லலையாதே" (பிரபோத. 27, 80).*

**த.வ. எய்தாமை.**

*[Skt. a-siddhi> த. அசித்தி.]*

**அசித்திரன்** *aśittiran*, பெ.(n.) கள்வன் (சிந்தா. நி. 57.); thief.

*[Skt. aśitra>த. அசித்திரன்.]*

**அசித்து** *a-śittu*, பெ.(n.) அறிவில் பொருள் (சடம்); that which is non-intelligent, matter. *"சித்த சித்தொ டீசனென்று செப்புகின்ற மூவகைத் தத்துவத்தின்" (பாரத. பதினைந். 1.).*

த.வ. அறிவில் பொருள்.

*[Skt. a-śit>த. அசித்து.]*

**அசிதகருணி** *aśida-karuṇi*, பெ.(n.) கருப்பு வழுதலை; black brinjal plant-solanum melongenum (சா.அக.).

**அசிதத்துருமம்** *aśidatturumam*, பெ.(n.) மலைப்பச்சை; Mysore gamboge; painter's gamboge-xanthochymus pictorius (சா. அக.).

**அசிதம்¹** *aśidam*, பெ.(n.) 1. சிரிப்பது; that which laughs. 2. அலர்வது; that which blossoms.

*[Skt. hasita>த. அசிதம்.]*

**அசிதம்²** *aśidam*, பெ.(n.) கருமை; blackness. *"அசித வெங்கட—குண்டு" (இரகு. குச. 83.).*

*[Skt. a-sita> த. அசிதம்.]*

**அசிதம்³** *aśidam*, பெ.(n.) சிவதோன்றியத்து ளொன்று; an ancient *śaiva* scripture in Sanskrit, one of 28 *śivāgamam*, q.v.

**அசிதம்⁴** *aśidam*, பெ.(n.) 1. நச்சு விலங்கு; a poisonous animal. 2. கரும்பாம்பு; a black snake. 3. நீலிப்பூடு; indigo plant, *Indigofera tinctoria* (சா.அக.).

**அசிதமயப்பூ** *aśidamaya-p-pū*, பெ.(n.) பூநீர்; an efflorcent salt obtained from the soil of fuller's earth (சா.அக.).

**அசிதர்** *aśidar*, பெ.(n.) தீர்த்தங்கரருள் ஒருவர் (திருக்கலம. காப்பு, உரை.); name of a jaina Arhat, one of 24 *Tirttaṅgarar*, q.v.

*[Skt. ajita>த. அசிதர்.]*

**அசிதவெலி** *aśida-v-eli*, பெ.(n.) நச்சுத் தன்மையுள்ள ஒருவகைக் கருப்பு எலி; a kind of black poisonous rat.

த.வ. காரெலி.

**அசிதன்¹** *aśidan*, பெ.(n.) 1. வெல்லற்கரியோன்; he who is unconquerable. 2. திருமால்; *Viṣṇu.*

*[Skt. a-jita>த. அசிதன்.]*

**அசிதன்²** *aśidan*, பெ.(n.) 1. காரி(சனி)க் கடவுள்; 2. நீலநிறத்தோன்; blue cololured god *(Viṣṇu)*.

**அசிதாசுமம்** *aśidā-śumam*, பெ.(n.) இந்திர நீலமணி; a precious stone of the corundum class and of various shades of blue sapphire (சா.அக.).

த.வ. நீலக்கல்.

**அசிதாம்புருகம்** *aśidāmburugam*, பெ.(n.) நீலோற்பலம் (மலை.); blue water lily.

*[Skt. asita+ambu+ruha>த.அசிதாம் புருகம்.]*

**அசிதாரு** *aśi-tāru*, பெ.(n.) நிரயச் சிறப்பு (சிவதரு. சுவர்க்க. 115); hell in which sword-like trees from instruments of torture.

*[Skt. asi+tāru>த. அசிதாரு]*

**அசிதாலவனம்** *aśi-tāla-vanam*, பெ.(n.) நிரயச் சிறப்பு (சிவதரு சுவர்க்க. 145); hell in which sword-like palmyra palms instruments of torture.

*[Skt. asi>த. அசி.]*

**அசிதேசுமம்** *aśidē-śumam*, பெ. (n.) வெள்ளைக்கல் (புட்பராகம்); a white precious stone-lapis lazali (சா.அக.).

**அசிதை¹** *aśidai*, பெ.(n.) 1. பராசக்தி மாற்றுரு (சைவச. பொது. 74, உரை.); *(śaiva)* a form of *parā-śakti*, one of four. 2. நீலிச் செடி (ட); Indian indigo.

*[Skt. aśitā>த. அசிதை.]*

**அசிதை²** *aśidai*, பெ.(n.) அவுரி; indigo plant, *Indigofera tinctoria* (சா.அக.).

*[Skt. āsita>த. அசிதை.]*

**அசிதோகம்** *aśi-dōgaom*, பெ.(n.) **கற்பலா** பார்க்க; see *karpalā*.

*[**Skt.** aśitōkada>த. அசிதோகதம்.]*

**அசிதோற்பலம்** *aśidōr-palam*, பெ.(n.) 1. நீலத்தாமரை; blue lotus, *Monochria vaginalis*. 2. நீலமணி; sapphire. 3. கருங் குவளை (நீலோற்பலம்); blue-waterlily, *Nymphaca stellata* (சா.அக.).

**அசிந்தம்** *aśindam*, பெ.(n.) ஒரு பேரெண் (யாழ். அக.); a thousand quadrilions.

*[**Skt.** a-cintya>த. அசிந்தம்.]*

**அசிந்திதன்** *aśindidan*, பெ.(n.) மனத்துக் கெட்டாதவன், கருதற்கரியவன், தனிச் சிறப்பினன் (சி. போ. சிற். 12, 3, 1); one who is inconceivable or incomprehensible.

**த.வ. எண்ணறக்கரியான்.**

*[**Skt.** a-cintita>த. அசிந்திதன்.]*

**அசிந்தியம்** *aśindiyam*, பெ.(n.) 1. நினைவிற் கெட்டாதது; that which is inconceivable. 2. ஒரு பேரெண் (வின்.); the number 1000 quadrillions.

**த.வ. நினைவிகப்பு.**

*[**Skt.** a-cintya>த. அசிந்தியம்.]*

**அசிப்பு** *aśippu*, பெ.(n.) ஏளனச் சிரிப்பு; derisive laughter. *"அசிப்பிலனாசி" (பெருங். மகத. 14, 225.).*

*[அசி + பு.]*

*[**Skt.** asi>அசி.]*

**அசிபகாந்தம்** *aśiba-kāndam*, பெ.(n.) 23 மா மூலிகைகளுளொன்றான கருப்பு விழுதி; dark vizhudhi - one of the 23 rare drugs of high potency (மா.identified)

**அசிபத்திரகம்** *aśipattiragam*, பெ.(n.) கரும்பு (மலை.); sugar-cane.

*[**Skt.** asi+patraka>த. அசிபத்திரகம்.]*

**அசிபத்திரம்** *aśipattiram*, பெ.(n.) கத்தியைப்போன்று இலைகளையுடைய மரங்கள் வளர்ந்திருக்கும் நிரயச் சிறப்பு; hell where trees have leaves as sharp as swords. *"அசிபத்திரிமெனும்.... நரகிடை" (குற்றா. தல. கவுற்சன. 67).*

*[**Skt.** aśi+patra> த. அசிபத்திரம்.]*

**அசிபத்திரவனம்** *aśipattira-vanam*, பெ.(n.) 1. **அசிபத்திரம்** (சேதுபு. தனுக். 3.); பார்க்க; see *aśipattram*. 2. நிரையம்; hell.

*[**Skt.** asi-patra +vana>த. அசிபத்திரவனம்.]*

**அசிபத்திரி** *aśi-pattiri*, பெ.(n.) 1. **அசிபத்திரம்** பார்க்க; see *aśi-pattiram*. 2. கத்தியைப் போன்ற இலைகள்; sword shaped leaves (சா.அக.).

*[**Skt.** aśi+patra>த. அசிபத்திரி.]*

**அசிபதம்** *aśipadam*, பெ.(n.) ஒகநிலைக்குரிய தத்துவமசி என்னும் தொடரியத்தில் அசி என்னுஞ் சொல்; the word *aśi* in the sentence, *tat-tvam-aśi*. *"தத்துவ-பதார்த்தங்க ளிரண்டுக்கும் அசிபதத்தினால் ஐக்கியக்கூடும்"* (சா.அக.).

*[**Skt.** asi+pada>த. அசிபதம்.]*

**அசிமேதம்** *aśi-mēdam*, பெ.(n.) ஒரு வகை நாற்றப் பூடு; a stinking plant, fetid mimosa (சா. அக.).

*[**Skt.** asi+ mēta> த. அசிமேதம்.]*

**அசிர்க்கசிராவகம்** *aśirkka-śirāvagam*, பெ.(n.) குருதியொழுக்கு; bleeding, letting blood (சா.அக.).

*[**Skt.** aśira-śravaga>த.அசிர்க்கசிராவகம்.]*

**அசிர்க்கதரம்** *aśirkka-daram*, பெ.(n.) மாதவிலக்குப் பெருக்கு; excessive menstruation, *Menorrhagia* (சா.அக.).

**த.வ. பெரும்பாடு.**

*[**Skt.** aśira - tara > த. அசிர்க்கதரம்.]*

**அசிர்க்கபாதம்** *aśirkka-pādam*, பெ. (n.) 1. குருதி வீழ்ச்சி; the flew of blood. 2. குருதித் துளி; a drop of blood. 3. குருதி யொழுக்கு; oxing of blood from a wound (சா.அக.).

[அசிர்க்க + பாதம்.]

[Skt. ašira>த.அசிர்.]

**அசிர்க்கபானம்** *aširkka-pāṉam*, பெ.(n.) அரத்தம் குடிக்கை; drinking of blood (சா.அக.).

[Skt. ašira-pānā> த. அசிர்க்கபானம்.]

**அசிர்க்கரநோய்** *aširkkara-nōy*, பெ.(n.) 1. குருதி தொடர்பான நோய்; any disease arising from altered condition of blood in the system. 2. குருதிப் பெருக்கை யுண்டாக்கும் பெரும்பாடு, மூக்குத்துளை வழி ஏற்படும் குருதியொழுக்கு முதலிய நோய்கள்; disease resulting in hemorrage such as menorrhagias Epistaxis, hemoptysis etc. (சா.அக.).

த.வ. குருதிநோய்.

[அசிர்க்கர(ம்) + நோய்.]

[Skt. aširakara > த. அசிர்க்கர]

**அசிர்க்கரம்** *ašir-k-karam*, பெ. (n.) 1. குருதியுண்டாதல்; forming of blood. 2. பக்குவப்படாத நிலைமையிலுள்ள நிணநீர்; lymph-chyle before its conversion into blood (சா.அக.).

[Skt. ašira-kara>த. அசிர்க்கரம்.]

**அசிர்க்கவகம்** *ašir-k-ka-vagam*, பெ.(n.) குருதிக்குழாய்; blood vessel (சா.அக.).

[Skt. ašir+vaha>த.அசிர்க்கவகம்.]

**அசிர்க்கின்மிசிரம்** *aširkkiṉ-miširam*, பெ. (n.) குருதிக் கலப்பு; mixing with the blood (சா.அக.).

[Skt. ašir+mišra>த.அசிர்க்கின்மிசிரம்.]

**அசிர்க்கின்முகம்** *aširkkiṉ-mugam*, பெ.(n.) குருதி முகம்; bloody face (சா.அக.).

[Skt. aširmugā > த. அசிர்க்கின்முகம்.]

**அசிர்க்கு** *aširkku*, பெ.(n.) குருதி; blood (சா.அக.).

[Skt. ašir>த. அசிர்க்கு.]

**அசிரத்தை** *aširattai*, பெ.(n.) கவனிப்பின்மை; inattention indifference.

[Skt. šraddhā>த. அசிரத்தை.]

**அசிரநானம்** *ašira-nāṉam*, பெ. (n.) கழுத்து வரையில் குளிக்கை; a bath upto the neck without immersing or wetting the head (சா.அக.).

[Skt. aši+snāna>த.அசிரநானம்.]

**அசிரபத்திரகம்** *ašira-pattiragam*, பெ.(n.) கத்தூரி வெண்டை; mustk mallow plant, *Abelmoschus esculentes* (சா.அக.).

[Skt. ašira+bhadra>த. அசிரபத்திரகம்.]

**அசிரபித்தம்** *ašira-pittam*, பெ.(n.) **அரத்த பித்தம்** பார்க்க; see aratta-pittam (சா.அக.).

[அசிரம் + பித்தம்.]

[Skt. ašira>த. அசிரம்.]

**அசிரம்**[1] *aširam*, பெ.(n.) 1. காற்று; wind. 2. புலனுறுப்புக்கள்; object of senses. 3. தவளை; frong. 4. முற்றம்; court-yard. 5. உடம்பு; body.

[Skt. ajira>த. அசிரம்.]

**அசிரம்**[2] *aširam*, பெ.(n.) தீ; fire.

[Skt. ašira>த. அசிரம்.]

**அசிரம்**[3] *aširam*, பெ.(n.) 1. வெட்டிவேர்; a fragrant root; khus root, *Andropogon muricatus*. 2. வெள்ளை; whiteness. 3. தலைமயிர்; hair of the head (சா.அக.).

[Skt. ajira>த. அசிரம்.]

**அசிரமாத்திரிகம்** *ašira-māttirigam*, பெ.(n.) உணவுப் பால், உடலில் உணவிலிருந்து ஊறும் கொழுப்புக் கலந்த வெள்ளை நிணநீர் (அன்ன ரசம்) chyle (சா.அக.).

த.வ. நிணநீர்.

[Skt. ajira+mātrā> த.அசிரமாத்திரிகம்.]

**அசிரவணம்** *ašira-vaṇam*, பெ.(n.) 1. செவிடு; deafness. 2. காதின்மை; state of condition

of being deprived of ear. 3. காது கேளாமை; thickness of hearing (சா.அக.).

*[Skt. a-šravaṇa > த.அசிரவணம்.]*

**அசிரன்** *aširaṉ*, பெ.(n.) 1. தீ; agni. 2. கதிரவன்; sun. 3. கவந்தன்; Kabandha, a demon.

*[Skt. ašira > த. அசிரன்.]*

**அசிராற்சகம்** *aširaṟ-šagam*, பெ.(n.) வெண்துளசி; white basil (சா.அக.).

*[Skt. ašira + šaga > த.அசிராற்சகம்.]*

**அசிரி** *aširi*, பெ.(n.) அருவருப்பானவன் (இவ).; dirty fellow.

*[Skt. a-širi > த.அசிரி.]*

**அசிருத்திரரோகம்** *aširuttararōgam*, பெ.(n.) **அசிர்க்கரநோய்** பார்க்க; see *aširukkara-nōy* (சா.அக.).

*[Skt. asi + rudhra + rōga > த.அசிருத்திர ரோகம்.]*

**அசிருபாதம்** *aširu-pādam*, பெ. (n.) 1. கண்ணீர்ப் பெருக்கு; habitual or persistent overflow of tears due to over secretion or impleded outflow of excretion, *Epiphora* c.f. *Lachrymation*. 2. குருதிப் பெருக்கு; the flow of blood from wounded or ruptured vessels, *Hemorrhage* (சா.அக.).

*[Skt. asira-pāthas > த. அசிருபாதம்.]*

**அசிவம்** *ašivam*, பெ.(n.) நோயுண்டாக்கும் ஒரு வகைப் பேய்; the name of demon causing deseases (சா.அக.).

*[Skt. aši > த. அசிவம்.]*

**அசினப்பத்திரிகை** *ašina-p-pattirigai*, பெ.(n.) வாவல் (யாழ். அக.); bat.

**த.வ. வவ்வால்.**

*[Skt. ajina+patrikā > த.அசினப்பத்திரிகை.]*

**அசினபத்திரி** *ašiṉa-pattiri*, பெ.(n.) **அசினப் பத்திரிகை** பார்க்க; see *ašina-p-pattirigai*.

*[Skt. aši + patra > த. அசினபத்திரி.]*

**அசினபத்திரை** *ašiṉa-pattirai*, பெ.(n.) **அசினப்பத்திரிகை** பார்க்க; see *ašiṉa-p-pattirigai*.

*[Skt. asi+patra > த.அசினபத்திரை.]*

**அசினம்¹** *ašiṉam*, பெ.(n.) விலங்குகளின் தோல்; hairy skin of an animal, esp. black buckskin, used as a seat or covering and for other purposes. *"நன்னூ லுடன்பூ ணசினத்தை" (பாரத. நச்சுப். 17.).*

*[Skt. ajina > த. அசினம்.]*

**அசினம்²** *ašiṉam*, பெ.(n.) மான்தோல்; the skin of deer (சா.அக.).

*[Skt. ajina > த.அசினம்.]*

**அசினயோனி** *ašiṉa-yōṉi*, பெ.(n.) மான்; deer (சா.அக.).

*[Skt. ajina+yōni > த. அசினயோனி.]*



**அசீட** *ašīḍa*, கு.பெ.எ.(adj.) 1. மூளையற்ற; absence of brain. 2. மூளையில்லாத; brainless (சா.அக.).

*[Skt. ašita > த. அசீட.]*

**அசீடம்** *ašīḍam*, பெ. (n.) தலையற்றது; (in teratology) absence of the head-acephalia (சா.அக.).

**த.வ. முண்டம்.**

*[Skt. ašīṭa > த. அசீடம்.]*

**அசிடவ** *aśiḍava,* கு.பெ.எ. (adv.) மூளையற்றதின் தொடர்பானது; pertaining to a anercephalu, *Anercephaloid* (சா.அக.).

**அசீடவத்தி** *aśīḍa-vatti,* பெ.(n.) ஈரல் முதலிய உறுப்புகளிலிருக்கும் ஒரு வகையான தலையில்லா நாக்குப் பூச்சி; a headless worm found in the liver and other organs; the bladder worm, *Acepholocyst* (சா.அக.).

**அசீடன்** *aśīḍaṉ,* பெ.(n.) மூளையில்லாத தோர் கொடு விலங்கு; a species of monster without even a trace of the brain or a rudimentary representation of it- *Anecephalus* (சா.அக.).

*[Skt. a-šīṭa> த. அசீடன்.]*

**அசீடி** *aśīḍi,* பெ.(n.) தலையற்றது; headless, *Acephalus* (சா.அக.).

த.வ. முண்டம்.

*[Skt. aīṭi> த. அசீடி.]*

**அசீதகரன்** *aśīdagaraṉ,* பெ.(n.) கதிரவன்; the sun (சா.அக.).

*[Skt. aśītagara>த. அசீதகரன்.]*

**அசீதம்** *aśīdam,* பெ.(n.) வெப்பம்; intense heat of the sun or of the body (சா.அக.).

*[Skt. aśita>த. அசீதம்.]*

**அசீதளம்** *aśītaḷam,* பெ.(n.) கருப்பூரம்; camphor. *"துல்லிய மசீதளம் பூலாங் கிழங்கசை"* (தைலவ. தைல. 6.).

*[Skt. a-šītaḷa>த. அசீதளம்.]*

**அசீதனு** *aśīdaṉu,* பெ.(n.) சூட்டுடம்பு; heat body (சா.அக.).

*[Skt. aśīta>த. அசீதனு.]*

**அசீதி**[1] *aśīdi,* பெ.(n.) எண்பது; eighty. *"அதற்கு நீள மசீதியு மைந்துமால்"* (சிவதரு. கோபுர 86.).

*[Skt. aśiti>த. அசீதி.]*

**அசீதி**[2] *aśīdi,* பெ.(n.) ஆடவை, கன்னி, சிலை, மீன(ம்) மாதங்களின் பிறப்பு (சைவச. பொது. 15.); beginning of the 3rd, 6th, 9th and 12th solar months, considered sacred.

*[Skt. ṣaḍ-aśiti> த. அசீதி.]*

**அசீர்** *aśīr,* பெ.(n.) அணியம் (ஆயத்தம்) (யாழ். அக.); readiness.

*[U. hāzir>த. அசீர்.]*

**அசீர்த்தி** *aśīrtti,* பெ.(n.) செரியாமை; indigestion. *"அக்கினி தேவற் கசீர்த்தியென்று"* (ஒழிவி. கிரியைக். 3.).

*[Skt. a-jīrti>த. அசீர்த்தி.]*

**அசீரகம்** *aśīragam,* பெ.(n.) மகப்பேற்றின் பின் தாய்ப்பால் இன்மை; failure or insufficiency of the mother's milk after childbirth, *Agalactia alias Agalaxia.* 2. பால் மறுத்தல்; accuston to do without the mother's milk; causing an infant to cease from taking food by sucking, but to take it in the oridinary way, weaning (சா.அக.).

த.வ. பாற்கேடு.

*[Skt. ajīraka>த. அசீரகம்.]*

**அசீரணக்காய்ச்சல்** *aśīraṇa-k-kāyccal,* பெ.(n.) முன் உண்ட உணவு அறாமையால் வயிறு மிகப் பொருமிக்கழிந்து, புளியேப்பம், கொட்டாவி, விக்கல் ஆகிய குணங்களைக் காட்டும் ஒரு வகைக் காய்ச்சல்; a fever arising from indigestion or other gastric disturbances. It is characterised by rumbling noise in the stomach, purging, sour belch, yawning, hiccough etc., gastric fever (சா.அக.).

த.வ. செரியாக் காய்ச்சல்.

*[அசீரண(ம்)+காய்ச்சல்.]*

*[Skt. ajīrṇa> த. அசீரணம்.]*

**அசீரணக்கிராணி** *aśīraṇa-k-kirāṇi,* பெ. (n.) 1. மகப்பெற்றார்தம் குடல் கோளாறினால் உண்ட உணவு செரியாமல் ஏற்படும் வயிற்றுப் போக்கு; chronic diarrhoea in women after-delivery due to the functional

derangement of the bowels. 2. குழந்தைகளுக்கு முறைப்படி தாய்ப் பாலூட்டத் தவறினாலும், மிகுத்தூட்டினாலும், பால் குற்றத்தினாலும் அல்லது முன்னை கழிமாசுக்கட்டாலும், ஏற்படும் கழிச்சல்; a chronic diarrhoea in infants caused by improper feeding, over feeding, deleterious property of the milk or by accumulation in the bowels of hard faecal matter (சா.அக.).

**த.வ. செரியாக்கழிச்சல்.**

*[Skt. ajīṛṇa + grahaṇi>த. அசீரணக்கிராணி.]*

**அசீரணசுரம்** *aśīraṇa-śuram*, பெ.(n.) **அசீரணக்காய்ச்சல்** பார்க்க; see *aśīraṇa-k-kāyccal*(சா.அக.).

*[அசீரண(ம்) + சுரம்.]*

*[Skt. ajīṛṇa>த.அசீரணம்.]*

**அசீரணசூலை** *aśīraṇa-śūlai*, பெ.(n.) உணவு செரியாமையினாலும் கழிமாசு(மல)க் கட்டினாலும் அடிவயிற்றில் உண்டாகும் ஒரு குத்தல் நோய்; an acute abdominal pain due to indigestion and accumulation of faeces in the intestines, *stercoral colic* (சா.அக.).

**த.வ. செரியாச்சூலை.**

*[அசீரண(ம்) + சூலை.]*

*[Skt.ajīṛṇa>அசீரணம்.]*

**அசீரணநாடி** *aśīraṇa-nāḍi*, பெ.(n.) முன் உண்ட உணவு செரியாமையைக் காண்பிக்கும் நாடி; a pulse indicating the digestive disorders (சா.அக.).

**த.வ. செரியாநாடி.**

*[அசீரண(ம்) + நாடி.]*

*[Skt.ajīṛṇa>அசீரணம்.]*

**அசீரணபித்தம்** *aśīraṇa-pittam*, பெ.(n.) பித்தம் அதிகமானதால் கழிமாசு கட்டியாகி, தலைவலி, செரியாமை, வயிற்றிரைச்சல், வாய்நீர் ஊறல் முதலிய குணங்களைக் காட்டும் ஒரு பித்த நோய்; excessive secretion of bile marked by constipation, headache, indigestion, rumbling noise in the stomach, hyper salivation and other gastric disturbance (சா.அக.).

**த.வ. செரியாப்பித்தம்.**

*[அசீரண(ம்) + பித்தம்.]*

*[Skt. ajīṛṇa>த.அசீரணம்.]*

*பித்து → பித்தம்.*

**அசீரணபேதி** *a-śīraṇa-pēdi*, பெ. (n.) கழிச்சல்; diarrhoea from indigestion undigested discharges.

*[Skt. ajīṛṇa + bhēdin>த. அசீரண(ம்)பேதி.]*

**அசீரணம்** *a-śīraṇam*, பெ.(n.) 1. செரியாமை; indigestion. 2. அழிவுபடாதது; that which is unimpaired. *"அசீரணமாஞ் சித்துருவால்" (ஞானவா. சிகித். 13.).*

**த.வ. அறாயாமை.**

*[Skt.ajīṛṇa > த.அசீரணம்.]*

**அசீரணரோகம்** *aśīraṇa-rōgam*, பெ.(n.) பொதுவாக உணவின் குற்றத்தினாலும், மிதமிஞ்சி உண்பதாலும் செரிமான உறுப்புகளின் தொழில் வேறுபாடு அடைந்து உண்ட உணவு செரியாமல், வயிற்றில் புளிப்பு அதிகமாக ஏற்பட்டு, அதனால் வாய்ப்புண் பொங்கல் (அட்சரம்), வளி (வாயு) பரிதல், ஏப்பம், புளியேப்பம், நெஞ்செரிச்சல் கழிமாசுக்கட்டு, எதிர்க் களித்தல் (மலபந்தம்), முதலிய குணங்களும், சில சமயம் மயக்கம், உணவின் மீது வெறுப்பு (அரோசிகம்), முதலியவுங்காணும் நோய்; indigestion in one or other of its numerous forms, occuring as a result of disorders of the digestive organs, due to the fermentation of the food taken. It is marked by sore in the mouth, flatulence, belching, eructation of gas smelling like rotten eggs, heartburn, slight eructation after meals, constipation etc, and accompanied at times, by giddiness and nausea. This is generally caused by errors in diet, as when

some irritating, over rich or high material is taken, *Dyspepsia* (சா.அக.).

**த.வ. செரியாநோய்.**

*[Skt. ajīrṇa + rōga>த.அசீரணரோகம்.]*

**அசீரணவாயு** *a-ṡīraṇa-vāyu*, பெ.(n.) செரியாமையால் உண்டாகும் ஊதைநோய்; flatulence from indigestion.

**த.வ. செரியாஊதை.**

*[Skt. ajīrṇa+vāyu>த.அசீரணவாயு.]*

**அசீரணவெரிச்சல்** *aṡīraṇa-v-ericcal*, பெ.(n.) உண்ட உணவு செரியாமல் வயிற்றில் புளித்து அதனால் உண்டாகும் நெஞ்செரிவு; a burning sensation felt at the pit of the stomach. It is due to the fermentation of the contents of the stomach, heart burn cardialgia (சா.அக.).

**த.வ. நெஞ்செரிச்சல்.**

*[அசீரண(ம்) + எரிச்சல்.]*

*[Skt. ajīrṇa>த.அசீரணம்.]*

*எல் > எரி > எரிச்சல்.*

**அசீரியம்** *aṡīriyam*, பெ.(n.) அழியாதது; that which is indestructible. *"அக்கிராகிய மசீரியம்" (சூத. எக்கிய. பிரம. 10, 13).*

*[Skt. a-jīrya>த. அசீரியம்.]*

**அசீவம்[1]** *aṡīvam*, பெ.(n.) ஒன்பதுவகை சொற்பொருள்களுளொன்று (சீவக. 2814, உரை.); (Jaina.) things inanimate, opp. to *ṡīvam*, one of nava *patārttam*, q.v.

*[Skt. a-jīva>த. அசீவம்.]*

**அசீவம்[2]** *aṡīvam*, பெ.(n.) 1. இறப்பு; death. 2. பாழ் (சூனியம்); nothingness; the condition or state of being nothing. 3. நாக்கற்றது; that which is tongueless (as in frog) (சா.அக.).

**த.வ. பாழ்வு.**

*[Skt. ajīva>த. அசீவம்.]*

**அசீவன்** *aṡīvaṉ*, பெ.(n.) உயிரிலி (சடம்); that which is lifeless; a non-existent thing (சா.அக.).

*[Skt. ajīva> த. அசீவன்.]*

**அசீவனி** *aṡīvaṉi*, பெ.(n.) 1. பாழ்த்தன்மை; the quality or state of being nothing-Nihitity.

*[Skt. ajīvaṉ > அசீவனி.]*

**அசு** *aṡu*, பெ.(n.) 1. உயிர்வளி (சிந்தா. நி. 57); the vital breath or airs of the body. 2. தென்புலக் காற்று (சீவன்); the life of the spiritual world. 3. உடலை விட்டுப் பிரிந்த ஆதன்; the departed soul. 4. உயிர் (பிராணன்); animal life. 5. வருத்தம்; grief. 6. மூச்சு; respiration (சா.அக.).

**த.வ. மூச்சுக்காற்று.**

*[Skt. aṡu>த. அசு.]*

**அசுக்காட்டு-தல்** *aṡu-k-kāṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) பகடிசெய்தல் (திவ் திருப்பா. 28, வ்யா.); to ridicule, mock.

**த.வ. நகுவித்தல்.**

*[அசு+காட்டு-.]*

*[Skt. has>த. அசு.]*

**அசுகதாபம்** *aṡuga-tābam*, பெ. (n.) மூச்சுக் குழாயில் ஏற்படும் அழற்சி நோய்; inflammation of the mucous membrane of the bronchial tubes, *Bronchitis* (சா.அக.).

**அசுகந்தம்** *aṡukandam*, பெ.(n.) தீ நாற்றம்; bad smell (சா.அக.).

*[அசு + கந்தம்.]*

*[Skt. aṡu> த. அசு.]*

*காந்து→கந்து→கந்தம்.*

**அசுகம்[1]** *aṡugam*, பெ.(n.) 1. காற்று; air. 2. வருத்தம்; grief. 3. மூச்சுக் குழற் பகுதி; one of the two tubes of the wind pipe, *Bronchus*. 4. குரல்வளை; wind-pipe.

*[Skt. a-ṡukha>த. அசுகம்.]*

**அசுகம்**[2] *a-šugam*, பெ.(n.) நலக்குறை; illness.

த.வ. நலக்கேடு.

*[Skt. a-šukha>த. அசுகம்.]*

**அசுகரம்** *ašugdaram*, பெ.(n.) **அசுகதாபம்** பார்க்க; see *ašugatābam* (சா.அக.).

**அசுகுசு-த்தல்** *ašukušu-*, 4 செ.கு.வி. (v.i.) 1. அருவருத்தல் (வின்.); to feel disgust. 2. ஐயுறுகை; to suspect.

**அசுகை**[1] *ašugai*, பெ.(n.) அருவருப்பு (தெய்வச் விறலி. 504); loathing, disgust.

த.வ. சீற்றம், மிகு வெறுப்பு.

*[Skt. šahya>த. அசுகை.]*

**அசுகை**[2] *ašugai*, பெ.(n.) 1. **அசூயை** பார்க்க; see *ašūyai*. 2. ஐயம் (வின்.); conjectural circumstance.

*[Skt. šahya> த. அசுகை.]*

**அசுசி** *ašusi*, பெ.(n.) துப்புரவின்மை; impurity, uncleanness. *"தேறா ரசுசியென் றகல்வார்"* (நல். பாரத உமாமகே. 58.).

த.வ. குப்படை.

*[Skt. a-šuci> த. அசுசி.]*

**அசுடகம்** *ašudagam*, பெ.(n.) 1. உலராதது; that which is undried. 2. பசுமை; greeness; that state of being cold and damp, rawness (சா.அக.).

*[Skt. ašu>த. அசுடகம்.]*

**அசுடவங்கம்** *ašuda-vangam*, பெ.(n.) மாசற்ற கருமம்; lead not subjected to industrial or preparatory process, i.e., crude in character-plumbago or black lead (சா.அக.).

**அசுண்டவாயு** *ašunda-vāyu*, பெ.(n.) எல்லா உயிர்களுக்கும் உணவின் மீது வேட்கை பிறப்பிப்பதும் அரக்கர், விண்ணவர், சித்தர்கள் ஆகிய இவர்களும், பறவைகளும், விண்ணில் உலாவுவதற்கு ஆதாரமாயுள்ளதும் பூமிக்கு மேல் 650 கல்லுக்கு அப்பால் இருப்பதுமான காற்று; a thin, subtle matter, much finer and rarer than air, occupying the heavenly space. It is an etheric medium of extreme tenuity and elasticity universally diffused in space above the earth at an altitude of 50 × 13 or 650 miles.

It is said to be the medium of transmission of vital force to super physical beings like the Rakshashas, Gandarvas, Siddhars, etc., travelling in the etheric regions and also to birds flying far high in the serial regions (சா.அக.).

த.வ. மீமிசைவளி.

*[Skt. ašunta+ vāyu>த.அசுண்டவாயு.]*

**அசுணம்** *ašunam*, பெ.(n.) வெள்ளைப் பூண்டு; garlic, *Allium Sativum* (சா.அக.).

*[Skt. lašuna>த. அசுணம்.]*



**அசுணன்** *ašunan*, பெ.(n.) உள்ளிவகை (மலை.); garlic.

*[Skt. lašuna>த. அசுணன்.]*

**அசுத்த** *ašutta*, பெ.எ.(adj.) தூய்மையற்ற; impure (சா.அக.).

*[Skt. a-šuddha>த. அசுத்த.]*

**அசுத்ததத்துவம்** *a-šutta-tattuvam*, பெ.(n.) மெய்ப் பொருள் (தத்துவ) வகை (சிவப். கட்); (Šaiva.) impure categories, one of three classes of tattuvam, q.v., comprising 4

*antak-karaṇam.* 5. *ñānēntiriyam,* 5 *karumentiriyam,* 5 *taṉmāttirai,* 5 *pūdam.*

த.வ. ஆதன்கோட்பாடு.

[**Skt.** *a-šuddha>த. அசுத்தம்.*]

**அசுத்தப்பிரபஞ்சம்** *a-šutta-p-pirapañjam,* பெ.(n.) கலை மெய்ப்பொருள் முதல் புடவி மெய்ப்பொருள் (பிருதிவிதத்துவம்) ஈறாகிய மெய்ப் பொருள் (தத்துவம்); (*šaiva.*) impure universe envolved out of *a-cutta-māyai* and comrising the 30 categories from *kalā-tattuvam pirutivi-tattuvam.*

த.வ. மெய்ப்பொருள் பேரண்டம்.

[**Skt.** *a-šuddha+pra-pañca> த.அசுத்தப் பிரபஞ்சம்.*]

**அசுத்தபற்பம்** *ašutta-parpam,* பெ.(n.) நோய்களைக் கண்டிப்பதற்குப் மாற்றாகக் குட்டம், வெள்ளை (பாண்டு), கோழை, ஊதை (வாதம்) முதலிய பல நோய்களைப் புதிதாக உண்டாக்கி உயிருக்குத் தீங்கு விளைவிக்கும் தூய்மைமுறைப்படி, செய்பாகம், கைபாகம், புடபாகம் முதலியவற்றை, முறைப்படி கொள்ளாமல் செய்யும் நீற்றுமானப் பொருள்; impure calcined compounds prepared without consistency in the observance of rules and practice laid-down in the Tamil medical science for cleansing, compounding, grinding and calcining medicines, especially metals and chemicals. Such imperfect, defective and crude preparations, instead of curing disease as intended, may in their train bring on new complaints and complications endangering life, like leprosy, general dropsy, consumption, rheumatism etc., (சா.அக.).

த.வ. கூடாப்பொடி.

[**Skt.** *ašuddha+ bhasman>த.அசுத்தபற்பம்.*]

**அசுத்தபுவனம்** *ašutta-puvaṉam,* பெ.(n.) ஆதன் மெய்ப்பொருள் (ஆன்ம தத்துவம்); operation of the soul in relation to the constitutent principles in nature including elements, bodily and mental organs, faculties matter etc. (சா.அக.).

[**Skt.** *ašuddha+bhuvana>த.அசுத்த புவனம்.*]

**அசுத்தம்**[1] *ašuttam,* பெ.(n.) 1. தூய்மையின்மை; impurity, foulness. 2. தீட்டு (திவா.); ceremonial impurity, incorrectness. 3. திருத்தமின்மை; inaccuracy, incorrectness. 4. கழிமாசு (மலம்); excrement. *"சூகரங்க ளசுத்த மேவி யளைந்து" (சி.சி.பர.லோகா.மறு. 28.).*

த.வ. குப்படை.

[**Skt.** *a-šuddha> த. அசுத்தம்.*]

**அசுத்தம்**[2] *ašuttam,* பெ.(n.) பரத்தைமை (வேசி மார்க்கம்); prostitution (சா.அக.).

[**Skt.** *a-šuddha>த. அசுத்தம்.*]

**அசுத்தமாயை** *a-šutta-māyai,* பெ. (n.) தூய்மையில்லா வுலகத்திற்கு முதற் காரணமான மாயை (சி.சி. 1, 19 மறைஞா.); (*šaivam*) impure *māyā,* the material cause of *a-šutta-p-pirapañcam,* dist. fr. *šutta māyai,* as tending to yield pain as well as pleasure.

த.வ. புரைமாயை.

[*அசுத்த(ம்) + மாயை.*]

[**Skt.** *a-šuddha>த.அசுத்தம்.*]

*மன்→மய்→மாய் →மாயை (வேக.462).*

**அசுத்தவாயு** *ašutta-vāyu,* பெ. (n.) தூய்மைக் கேடான காற்று; impure or contaminated air (சா.அக.).

த.வ. புரைவளி.

[**Skt.** *a-šuddha+vāyu>த.அசுத்தவாயு.*]

**அசுத்தன்** *asuttaṉ*, பெ.(n.) உடல் (அ.) மனமாசுடையோன்; person impure in body or mind.

*[Skt. a-śuddhan>த. அசுத்தன்.]*

**அசுத்தாத்துவா** *asuttāttuvā*, பெ.(n.) **அசுத்த தத்துவம்** (ஞானா. கட்) பார்க்க; see *asutta tattuvam.*

*[Skt. a-śuddh+attuvān>த. அசுத்தாத்துவா.]*

**அசுத்தாவி** *asuttāvi*, பெ.(n.) 1. தூய்மை யில்லாத ஆவி; impure gas. 2. தூய்மை யில்லாத ஆன்மா, அதாவது பேய் (கிறித்); impure soul i.e., unclean or evil spirit, demon.

*[அசுத்தம் +ஆவி.]*

*[Skt. aśuddha> த. அசுத்த(ம்).]*

*ஆவு→ ஆவி.*

**அசுத்தி** *asutti*, பெ.(n.) தூய்மையின்மை; impurity, uncleanness.

*[Skt. aśuddhi> த. அசுத்தி.]*

**அசுத்தை** *asuttai*, பெ.(n.) ஒழுக்கமற்றவள்; unchaste woman. *"அசுத்தை யென்றே யறிந்துவைத் தவளை நீத்தோம்"; (உத்தரரா. சீதை 56).*

*[Skt. aśuddhā>த. அசுத்தை.]*

**அசுதாரணன்** *asutāraṇaṉ*, பெ.(n.) சிவபெருமான் (சிந்தா. நி. 54); *Śivaṉ.*

*[Skt. asu+dhāraṇa>த. அசுதாரணன்.]*

**அசுதை** *asudai*, பெ.(n.) நஞ்சு (சிந்தா. நி. 50); poison.

*[Skt. a-sudhā>த. அசுதை.]*

**அசுபக்கிரகம்** *a-śuba-k-giragam*, பெ.(n.) தீக்கோள்; malevolent planet. *"சுபா சுபக் கிரகம்" (விதான. மரபி. 2, உரை).*

*[Skt. a-śubha+graha> த. அசுபக்கிரகம்.]*

**அசுபக்கிரியை** *aśuba-k-kiriyai*, பெ.(n.) இறந்தோர்க்குச் செய்யும் சடங்கு; nauspicious rites or ceremonies, as for the dead. *"ஈன்றோர்க் கன்றிப் பல் லசுபக் கிரியை செயல்" (திருவானைக். கோச்செங். 59.).*

த.வ. ஈம நடப்பு.

*[Skt. a-śubha+kriyā>த. அசுபக்கிரியை.]*

**அசுபங்கம்** *aśubaṅgam*, பெ.(n.) 1. உயிர்கட் கேற்படும் பேரிடர்; danger to life. 2. அச்சந் தரும் உயிர்; fear for life (சா.அக.).

த.வ. உயிரிடர்.

*[Skt. a-subhanga>த. அசுபங்கம்.]*

**அசுபதி** *aśubati*, பெ.(n.) பொன் (வை.மூ); gold.

**அசுபபாவனை** *aśubabāvaṉai*, பெ.(n.) உடலின் கழிவு, நிலையின்மை முதலியவற்றைக் கருதும் உடலியல்புகள் (மணிமே. பக். 388, கீழ்க்குறிப்பு); (Buddh.) contemplation of the disgusting nature of the body and of its impermanence.

*[Skt. aśubha+bhāvanā>த. அசுப பாவனை.]*

**அசுபம்[1]** *aśubam*, பெ.(n.) அமுக்கிரா (பச். மூ); Indian winter cherry.

**அசுபம்[2]** *aśupam*, பெ.(n.) 1. தீவினை; sin. 2. தீமை; evil.

த.வ. பாழ்வினை, அன்மங்கலம்.

*[Skt. a-śubha>த. அசுபம்.]*

**அசுபாவக்குறி** *aśubāva-k-kuṟi* பெ.(n.) 1. இயல்புக்கு மாறான அடையாளம்; unnatural symptom. 2. இறப்புக்குறி; symptom of death, not found ordinarily in man (சா. அக.).

த.வ. அல்குறி.

*[அசுபாவ(ம்) + குறி.]*

*[Skt. a-svabhava>த. அசுபாவ(ம்).]*

*குழி→ குறி.*

**அசுபாவக்கபம்** *aśubāva-kabam,* பெ. (n.) 1. குருதியாக மாறுவதற்குப் பக்குவப்படாமல் இருக்கும் கோழை; the phlegm which incapable of developing itself into blood. 2. இயற்கையாக உடம்பினுள் அமையப் பெற்ற கோழைக்கும் அதிகமாகவுள்ள கோழை; phelgm in excess of that naturally existing in the system (சா.அக.).

**த.வ. அல்கோழை.**

*[**Skt.** a-švabhava+ kapha>த. அசுபாவக் கபம்.]*

**அசுபாவக்காமம்** *aśubāva-k-kāmam,* பெ.(n.) 1. இயல்புக்கு மாறாக ஏற்படும் விருப்பம் அல்லது காமம்; unnatural desire or lust. 2. முறைகேடான செயல்களைச் செய்யத் தூண்டும் வேட்கை (காமச்சேட்டை); sexual perversions (சா.அக.).

**த.வ. பெருந்திணைக்காமம்.**

*[அசுபாவ(ம்) + காமம்.]*

*[**Skt.** a-švabhava>த. அசுபாவ(ம்).]*

*கமம் = நிறைவு, மகிழ்வு, விருப்பம். கமம் > காமம்.*

**அசுபாவக்குணம்** *aśubāva-k-kuṇam,* பெ.(n.) 1. இயல்புக்கு மாறாகவேற்படும் தன்மை; unnatural quality. 2. பித்து; insanity (சா.அக.).

**த.வ. அல்குணம்.**

*[அசுபாவ(ம்) + குணம்.]*

*[**Skt.** a-švabhava>த. அசுபாவ(ம்).]*

*கொள் (கொண்)→கொணம்→ குணம்.*

**அசுபாவச்செய்கை** *aśubāva-c-ceygai,* பெ.(n.) 1. இயற்கைக்கு மாறாகச் செய்யும் செயல்கள்; perverted acts. 2. முரணிய இன்பக் களியாட்டங்கள்; (in erotic science) unnatural sexual embraces and postures in coitus, popularly known as sexual perversion. 3. இசிவு (சன்னி), மனக்கோட்டம், பித்து, முதலிய நோய்களால் அறிவிழந்து செய்யும் செய்கை; unnatural symptoms found in persons suffering from apoplexy, delirium, insanity, etc.,

**த.வ. அல்செய்கை.**

*[அசுபாவம் + செய்கை.]*

*[**Skt.** a-švabhava>த. அசுபாவம்.]*

*செய்→செய்கை.*

**அசுபாவதவிரத்தம்** *aśubāvada-v-irattam,* பெ.(n.) 1. இயல்புத் தன்மையற்ற குருதி; blood deprived of its natural quality. 2. கெட்ட குருதி; impure blood.

**த.வ. அல்குருதி.**

*[அசுபாவத(ம்) + அரத்தம்.]*

*[**Skt.** a-švabhavata>த. அசுபாவத(ம்).]*

**அசுபாவப்பிரமேகம்** *aśubāva-p-piramēgam,* பெ.(n.) தாய்தந்தையரின் உடற் கூறுபாட்டின் முரண்பாட்டாலும், மாறுபாடான பண்டங்களை உண்பதாலும், மருத்துவம் செய்யத் தவறியதாலும் முறைகேடான மருத்துவத்தாலும், உண்டாகும் சிறுநீர் நோய்கள்; urinary diseases due to other than natural causes, i.e. generally arise from contagion or congenital causes, but in the following instances they may be acquired by external causes viz. difference in the nature of the constitutions of the parent, errors in diet, neglect to take prompt remedial measures, defective treatment giving rise to complications, especially in gonorrhoea.

*[**Skt.** a-šubhava+pra-mēha>த. அசுபாவப் பிரமேகம்.]*

**அசுபாவப்புணர்ச்சி** *asubāva-p-puṇarcci,* பெ. (n.) 1. இயல்புக்கு மாறாக ஆணுடனாவது பெண்ணுடனாவது கொள்ளும் எருவாய்ப்புணர்ச்சி; coitus against the order of nature with any man or woman gratifying the sexual appetite by unusual and unnatural methods. 2. கீழ்வகை விலங்குகளுடன் செய்யும் புணர்ச்சி; unnatural connection of a man or woman with the lower order of animals. 3. பெண்களின் ஓரினப்புணர்ச்சி; coitus between woman and women.

**த.வ. அல்புணர்ச்சி.**

*[அசுபாவ(ம்)+புணர்ச்சி.]*

*[**Skt.** a-šubhava> த. அசுபாவ(ம்).]*

புணர்→புணர்ச்சி.

**அசுபாவம்** *asubāvam,* பெ. (n.) இயல்பல்லா நிலை; lack of own condition or state of being.

**த.வ. அல்லியல்பு.**

*[**Skt.** a-šva-bhava> த. அசுபாவ(ம்).]*

**அசுமக்கதலி** *ašuma-k-kadali,* பெ.(n.) 1. கல்வாழை; stone plantain, *Musasuperba.* 2. மலைவாழை; rock plantain, *Canma indica* (சா.அக.).

*[அசும(ம்) + கதலி.]*

*[**Skt.** ašman>த. அசுமம்.]*

*[குதல்→(கதல்)→கதலி = சிறியது.]*



**அசுமகேது** *ašuma-kēdu,* பெ.(n.) மலையில் விளையும் ஒரு நச்சுப்பூண்டு; a poisonous plant found on hill tops (சா.அக.).

*[அசும(ம்) + கேது.]*

*[**Skt.** ašman>த. அசும(ம்).]*

*சே→சேது→கேது=சிவப்புவடிவான நச்சுப் பூண்டு.*

**அசுமசத்து** *ašuma-šattu,* பெ.(n.) கல்சத்து, கல்மதம்; a gelatinous substance, secreted from rocks in summer, bitumen (சா.அக.).

**த.வ. சிலாசத்து.**

*[அசும(ம்) + சத்து.]*

*[**Skt.** ašman>த. அசுமம்.]*

*சள் > (சண்) > சத்து.*

**அசுமசம்** *ašumašam,* பெ.(n.) 1. **அசுமசத்து** பார்க்க; see *ašumašattu.* 2. கல்லிற் பிறந்தது; rock-born. 3. இரும்பு; iron (சா. அக.).

*[**Skt.** ašman>த. அசுமசம்.]*

**அசுமசாரம்** *ašuma-šāram,* பெ.(n.) 1. **அசுமசத்து** பார்க்க; see *ašuma-sattu.* 2. கல்லில் உருவாகும் எண்ணெய் முதலிய பொருள்கள்; a generic name for native hydrocarbons more or less oxgenated such as, rock-oil, petroleum etc., bitumen. 3. இரும்பின் சாரம், நீலக்கல்; iron shappire. (சா. அக.)

*[அசும(ம்) + த. சாரம்.]*

*[**Skt.** ašman>த. அசும(ம்).]*

*சாறு → சாறம் → சாரம்.*

**அசுமத்தம்** *ašumattam,* பெ.(n.) ஆதன் மெய்ப்பொருள்; that portion of the spirit connected with the attributes of existence; the principle of vitality. (சா. அக.)

**அசுமந்தகம்** *ašumandagam,* பெ.(n.) 1. நாணற் புல்; thatch grass. 2. தருப்பைப் புல்; sacrifical grass.

*[**Skt.** ašmanda > த. அசுமந்தகம்.]*

**அசுமந்தம்**[1] *aśumandam,* பெ.(n.) இறப்பு; death.

*[Skt. aśu+anta > த. அசுமந்தம்.]*

**அசுமந்தம்**[2] *aśumandam,* பெ.(n.) அடுப்பு; oven (சா. அக.).

*[Skt. aśmanta > த. அசுமந்தம்.]*

**அசுமபித்தம்** *aśuma-pittam,* பெ.(n.) சிறுநீர்ப் பையில் உண்டாகும் கற்களைக் கரைக்குந் தன்மையுள்ளதொரு பூண்டு; a plant capable of dissolving the stone in the bladder *coleus sentellarioides* (சா.அக.).

*[அசும(ம்) + பித்தம்.]*

*[Skt. aśma>த. அசும(ம்).]*

*பித்து→ பித்தம்.*

**அசுமபுட்பம்** *aśuma-puṭpam,* பெ.(n.) நறும்புகை (சாம்பிராணி); benzoin (சா.அக.).

**அசுமம்** *aśumam,* பெ.(n.) 1. தீத்தட்டிக்கல், சக்கிமுக்கிக்கல்; a siliceous concretion usually transparent, flint. 2. கல்; stone. 3. இரும்பு; iron. 4. முகில்; cloud (சா.அக.).

*[Skt. aśman > த. அசுமம்.]*

**அசுமரவரம்** *aśumaravaram,* பெ. (n.) 1. வெண்மருது; white murdah, pentiptera arjuna alias *terminaliarjuna.* 2. கல்லடைப்புக்குக் கொடுக்கும் ஒரு மருந்து; a medicine having the property of breaking up stone in the bladder, lithontripte (சா.அக.).



**அசுமரி** *aśumari,* பெ.(n.) கல்லடைப்பு (Med.); calculus.

*[Skt. aśmarī > த. அசுமரி.]*

**அசுமரிக்கினம்** *aśumarikkiṉam,* பெ.(n.) மாவிலிங்கம்; roundberried liṅgam tree, *crataevaroxburghi,* used as lithontriptic i.e., an agent that dissolves stone (சா.அக.).

*[Skt. aśmarighna> த. அசுமரிக்கினம்.]*

**அசுமரிரோகம்** *aśumari-rōgam,* பெ.(n.) நீரடைப்பு அல்லது கல்லடைப்பு நோய், சிறுநீரில் கற்கள் உருவாகித் திரண்டு தீர்த்தாரை. ஊத்தாம்பிள்ளை, குண்டிக்காய் முதலிய உறுப்புக்களை அடைக்கும் சிறுநீர் நோய்; a urinary disease.

*[Skt. aśmarī + rōga> த. அசுமரிரோகம்]*

**அசுமலோட்டிரநியாயம்** *aśumalōṭṭira niyāyam,* பெ.(n.) ஒன்றோடு ஒன்றைச் சீர்தூக்கி, அவற்றின் சிறுமை பெருமை கற்பிக்கும் நெறி; maxim of the stone and clod used to denote relative superiority and inferiority as clod is hard compared with cotton but soft compared with stone.

**த.வ. சீர்நோக்குமுறை.**

*[Skt. aśman + lōsta + nyāya>த. அசுமலோட்டிரநியாயம்.]*

**அசுமன்** *aśumaṉ,* பெ.(n.) 1. அருமணியுனொன்று; a kind of precious stone. 3. இடி; thunder bolt. 3. முகில்; cloud. 4. இரும்பு; iron. (சா. அக.)

*[Skt. aśman > த. அசுமன்.]*

**அசுமாத்தம்** *aśumāttam,* பெ.(n.) சந்தடி; noise. *'வீட்டில் ஆள் இருப்பதற்கான அசுமாத்தமே இல்லை'.*

**த.வ. ஆள்அரவம்.**

**அசுமாரோபணம்** *aśumārōbaṇam,* பெ.(n.) அம்மி மிதிக்கை (சீவக. 2464, உரை.); ceremony of the bridegroom's placing the bride's right foot on the grinding stone.

த.வ. கல்மிதி.

[*Skt.* *aśman + ārōpaṇa> த. அசுமாரோபணம்.*]

**அசுமானகிரி** *aśumāṉakiri,* பெ.(n.) மேற்கட்டி; canopy, tester.

[*U. āsmāngiri > த. அசுமானகிரி.*]

**அசுமோத்தம்** *aśumōttam,* பெ.(n.) 1. **அசுமசத்து** பார்க்க; see *aśuma-śattu.* 2. கல்லினின்று உண்டானது; made of stone (சா.அக.).

**அசுயை** *aśuyai,* பெ.(n.) **அசூயை** பார்க்க; see *aśūyai.*

[*Skt. asūyā > த. அசுயை.*]

**அசுரசம்** *aśuraśam,* பெ.(n.) ஒரு பூடு; a plant, *basilicum* (சா. அக.).

[*Skt. asurasa > த. அசுரசம்.*]

**அசுரபி** *aśurabi,* பெ.(n.) முடைநாற்றம்; a bad smell or odour (சா.அக.).

[*Skt. asurabhi > த. அசுரபி.*]

**அசுராவம்** *aśurāvam,* பெ.(n.) வெண்கலம்; bell-metal (சா.அக.).

**அசுருத்திரரோகம்** *aśuruttira-rōgam,* பெ.(n.) **அசிருத்தரரோகம்** பார்க்க; see *aśiruttara-rōgam* (சா.அக.).

த.வ. பெரும்பாடு.

[*Skt. aśurudhra+rōga>த. அசுருத்திரரோகம்.*]

**அசுருநாலி** *aśuru-nāli,* பெ.(n.) கண்ணீர்த் தாரையிற் காணும் ஒரு புண்; a sinuous ulcer opening in the passage of tears in the eye, *fistula lacrimalis* (சா.அக.).

[*Skt. aśrunālī > த. அசுருநாலி.*]

**அசுருநேத்திரம்** *aśuru-nēttiram,* பெ.(n.) நீர்வடியும் கண்; eye with tears (சா.அக.).

த.வ. நீர்க்கண்.

[*Skt. aśuru + nētra > த. அசுருநேத்திரம்.*]

**அசுருமயம்** *aśuru-mayam,* பெ.(n.) கண்ணீர்ப் பெருக்கு; fullness of tears (சா.அக.).

[*Skt. aśru + maya > த. அசுருமயம்.*]

**அசுருவதனம்** *aśuru-vadaṉam,* பெ.(n.) அழுமூஞ்சி; tear-face ( சா.அக.).

[*Skt. aśuru + vadana> த. அசுருவதனம்.*]

**அசுருவென்பு** *aśuru-v-eṉbu,* பெ.(n.) கண் குழியில் பதிந்திருக்கும் மென்மையான சிறியதோர் எலும்பு; a very small soft bone resembling the finger-nail, situated at the anterior and upper part of the orbit, Lachrymal bone (சா.அக.).

த.வ. பிசிர் எலும்பு.

[*அசுரு+என்பு.*]

[*Skt. aśru > த. அசுரு.*]

[*எல்→என்→என்பு.*]

**அசுவக்கிழங்கு** *aśuva-k-kiḻaṅgu,* பெ.(n.) அமுக்கிராங் கிழங்கு; horse root, *withania somnifera* alias *physalis flexuosa* (சா. அக.).

[*அசுவம் + கிழங்கு.*]

[*Skt. aśva> த. அசுவம்.*]

*கீழ் → கிழக்கு → கிழங்கு.*

**அசுவக்கினம்** *aśuva-k-kiṉam,* பெ.(n.) அலரி; horse bane or horse killer; Indian oleander, nerium odorum (சா.அக.).

[*Skt. aśvaghna>த. அசுவக்கினம்.*]

**அசுவக்குரம்** *aśuva-k-kuram,* பெ.(n.) 1. வெள்ளைக் காக்கணம்; white-flowered mussel-shell creeper, *clitorea ternatea albiffora.* 2. குதிரைக்குளம்படி; horse's hoof plant. 3. ஒரு நறுமணப் பொருள் (மீனம்பர்); a perfume (apparently ambergris which is a concretion of the indigestible portion of the cuttle-fish) (சா.அக.).

[*அசுவம்+குரம்.*]

[*Skt. aśva>த. அசுவம்.*]

*குல்→குர→ குரம்→* ***Skt.*** *khura.*

**அசுவகதி** *aśuva-gadi,* பெ.(n.) 1. குதிரை நடை; speed of horse. 2. குதிரை நடைவகைகள்; paces of horse.

த.வ. குதிரைநடை

*[அசுவ(ம்) + கதி.]*

*[**Skt.**aśva>த. அசுவம்.]*

*கது→கதி>**Skt.** gati*

**அசுவகந்தாதி** *aśuva-gandādi,* பெ.(n.) அமுக்கிராங் கிழங்குடன் மற்ற கடைச் சரக்குகளையும் கொண்டு செய்யப் பெறும் ஒரு எண்ணெய் (தைலம்); a medicated oil prepared with the horse-root as a chief ingredient and some other bazaar drugs (சா. அக.).

*[அசுவகந்தம் + ஆதி.]*

*[**Skt.**aśvagandha> த. அசுவகந்தம். ]*

*அகுதி>ஆதி > **Skt.** ādi*

**அசுவகந்தாதிச்சூரணம்** *aśuva-gandādi-c-cūraṇam,* பெ.(n.) அமுக்கிராங் கிழங்கை முதன்மையாகக் கொண்டு, பிற கடைச் சரக்குகளையும் உடன் சேர்த்துச் செய்யப் பெறும் பொடி (சூரணம்); powder of horse-root mixed with the powder of some other minor bazaar drugs (சா.அக.).

*[அசுவகந்தம் + ஆதி+சூரணம்.]*

*[**Skt.** cūrṇa> த. சூரணம்.]*

**அசுவகந்தி** *aśuvagandi,* பெ.(n.) அமுக்கிரா (மலை.); Indian winter cherry, species of withania.

*[**Skt.** aśva-gandhā > த. அசுவகந்தி.]*

**அசுவகந்திச்சூரணம்** *aśuva-gandi-c-cūraṇam,* பெ.(n.) அமுக்கிராக் கிழங்குடன், திரிகடுகு, ஏலம், கிராம்பு, சிறுநாவற்பூ முதலியவற்றைக் கலந்து பொடி செய்து சருக்கரை சேர்த்து, வீக்கம், காய்ச்சல், வாயிலெடுத்தல், இருமல், மந்தப் பசி முதலிய நோய்களுக்குப் பயன்படுத்தும் மருந்துக் கூட்டு; a mixture of the powdered drugs such as horse-root, dry ginger, pepper, long-pepper, caradamon, clove, cassia buds, and sugar, prescribed for swelling in the body, fever, vomiting, cough, dull appetite etc.

த.வ. அமுக்கிராப்பொடி.

**அசுவகந்தித்தைலம்** *aśuva-gandi-t-tailam,* பெ.(n.) அமுக்கிராங் கிழங்குடன் சில கடைச் சரக்குகளையும் சேர்த்து நல்லெண்ணெயில் காய்ச்சி வடித்துத் தலைமுழுகப் பயன்படுத்தும் ஒரு நெய்மம்; a medicated oil prepared by boiling horse-root and some other bazaar durgs in gingelly oil and then filtered, used for anointing (சா.அக.).

*[அசுவகந்தி+தைலம்.]*

*[**Skt.** aśva-gandha+tila> த. அசுகந்தித்தைலம்.]*

**அசுவகந்தை** *aśuva-gandai,* பெ.(n.) **அசுவகந்தி** பார்க்க; see *aśuva-gandi* (சா.அக.).

*[**Skt.** aśva - gandhā>த.அசுவகந்தை.]*

**அசுவக்கர்ணகம்** *aśuva-k-karṇagam,* பெ.(n.) **அசுவகர்ணம்** பார்க்க; see *aśuva-karṇam* (சா.அக.).

*[அசுவ(ம்)+கர்ணகம்.]*

*[**Skt.** aśva> த. அசுவம்.]*

*[கன்→கன்னம் > **Skt.** karṇa>த.கர்ணகம்]*

**அசுவக்கர்ணம்** *aśuva-k-karṇam,* பெ.(n.) 1. குதிரைக் காது; a medicinal plant, the leaves of which resemble the ears of a horse, horse ear three-Indian-dammer, *Shorea robusta* alias *vatica robusta*. 2. குதிரைக் காதைப் போன்ற எலும்பு முறிவு; particular fracture of the bone (resembling the ear of a horse) (சா.அக.).

த.வ. குங்கிலிய மரம், குதிரைச்செவி பூடு.

*[அசுவ(ம்) + கர்ணம்.]*

கன்→ கன்னம்> ***Skt.** karṇa.*

**அசுவக்கிரந்தம்** *ašuva-k-kirandam,* பெ.(n.) **அசுவசாத்திரம்** பார்க்க; see *ašuva-šāttiram* (சா.அக.).

**அசுவக்கெந்தி** *ašuva-k-gendi,* பெ.(n.) **அசுவகந்தி** பார்க்க; see *ašuva-kandi* (சா.அக.).

**அசுவச்சட்டிரம்** *ašuva-c-caṭṭiram,* பெ.(n.) நெருஞ்சில்; a thorny shurb, small caltrope-tribulus terrestris (சா.அக.).

*[Skt. ašva-danshṭra > த. அசுவசட்டிரம்.]*

**அசுவசாகுடம்** *ašuva-šāguḍam,* பெ.(n.) ஒரு வகைப் பூடு; an unknown plant (சா.அக.).

**அசுவசாத்திரம்** *ašuva-šāttiram,* பெ.(n.) குதிரையியல்பு கூறும் நூல்; hippology.

**த.வ. குதிரைநூல், பரிநூல்.**

*[Skt. ašva + šāstra>த. அசுவசாத்திரம்]*

**அசுவசிகிச்சை** *ašuva-šigiccai,* பெ.(n.) குதிரை மருத்துவம்; the art of science of healing or treating the disease of horses. (சா. அக.)

*[Skt. ašva + cikitsā>த. அசுவசிகிச்சை.]*

**அசுவத்தம்** *ašuvattam,* பெ.(n.) 1. அரசமரம் (மூ.அ.); holy tree-ficus religiosa. 2. அத்தி மரம்; fig tree, *ficus racemosa* alias *f. glomerata.*

*[Skt. ašvattha > த. அசுவத்தம்.]*

**அசுவத்தமேதம்** *ašuvatta-mēdam,* பெ.(n.) வெள்ளால், மகப்பேறு வழங்கி; willow fig tree, *Ficus benjamina* (சா.அக.).

*[Skt. ašvat+habheda > த. அசுவத்தமேதம்.]*

**அசுவத்தவிருட்சம்** *ašuvatta-viruṭcam,* பெ.(n.) **அசுவத்தம்** பார்க்க; see *ašuvattam.* (சா. அக.)

*[Skt. ašvattha + vrkṣa>த. அசுவத்த விருட்சம்.]*

**அசுவத்தவிவாகம்** *ašuvatta-vivāgam,* பெ.(n.)பிள்ளையில்லாதவன் பிள்ளைப் பேறடையும் பொருட்டு, அரசமரத்தை நட்டு மகனாகக் கருதி வளர்த்துப்பின் அவ்வரச மரத்திற்கு வேம்பை மனைவியாக்கிப் புரியும் திருமணச் சடங்கு (கொ.வ.); rites of marriage performed with a pipal tree as bridegeroom and a margosa as bride, the pipal having been planted by a sonless person with a view to begetting a son and having been reared by him as his first son.

**த.வ. வேம்பரசு மணம், அரசமரத்திருமணம்**

*[Skt.ašvattha+vivāha>த.அசுவத்த விவாகம்.]*

**அசுவத்தாதி** *ašuvattādi,* பெ.(n.) கருவழுதலை; a black species of brinjal, *solanum melangena* (சா.அக.).

**அசுவத்தை** *ašuvattai,* பெ.(n.) 1. நெட்டிலிங்க மரம்; Indian mast tree, *Polyathia longifolia.* 2. நெடுநாரை; Wynad coffee cherry mutmeg, *Polyathia coffecoides.* 3. பூப்பருத்தி; flowering cotton, *Thespesia populneoides.*

*[Skt. ašvattha > த. அசுவத்தை.]*

**அசுவதட்டிரம்** *ašuvataṭṭiram,* பெ.(n.) நெருஞ்சில் (மலை.); tribulus plant.

*[Skt. ašva-damṣtra > த. அசுவதட்டிரம்.]*

**அசுவதரம்** *ašuvadaram,* பெ.(n.) கோவேறு கழுதை; the male off spring of a he-ass and a mare or a horse and a she-ass; the male of a mule (சா.அக.).

*[Skt. ašvatara > த. அசுவதரம்.]*



**அசுவதரி** *ašuvadari,* பெ.(n.) பெண்கோவேறு கழுதை; the female offspring of a mule (சா. அக.).

*[Skt. ašvatarī > த. அசுவதரி.]*

**அசுவதாட்டியா—தல்** *ašuvadātti-y-ā-,* 5, செ.கு.வி. (v.i.) பேச்சு முதலியவற்றில் தங்குதடையிலவாதல்; to be fluent in speaking. *"அவன் அசுவதாட்டியாய்ப் பேசுகிறான்"* (வின்.).

*[அசுவம்+தாட்டி+ஆ—.]*

*[Skt. ḍarḍhya>த. தாட்டி.]*

**அசுவதி** *ašuvadi,* பெ.(n.) இரலை (அசுவதி) என்னும் விண்மீன் (தணிகை. திருநகர. 31.); the first *nakṣatram.*

*[Skt. ašvinī > த. அசுவதி.]*

**அசுவதீபம்** *ašuvadībam,* பெ.(n.) கோயில் வழிபாட்டு விளக்கு வகை (பரத. ஒழிபி. 42.); a kind of temple light, used in workship.

*[அசுவம்+தீபம்.]*
*[Skt. ašva>த. அசுவம்.]*
தீ→ தீவம்> **Skt.** dīpa> த. தீபம்.



**அசுவந்தம்[1]** *ašuvandam,* பெ.(n.) இறப்பு (யாழ் அக.); death.

*[Skt. ašu+anta> த. அசுவந்தம்.]*

**அசுவந்தம்[2]** *ašuvandam,* பெ.(n.) 1. வயல்; field. 2. அடுப்பு; oven.

*[Skt. ašmanta > த. அசுவந்தம்.]*

**அசுவநோய்நூல்** *ašuvanōy-nūl,* பெ.(n.) குதிரை நோய்களைப் பற்றி விளக்கும் நூல்; a treatise in disease of horse, *hippopathology* (சா.அக.).

**த.வ. பரிநோய்நூல்.**

*[அசுவ(ம்) + நோய்நூல்.]*

*[Skt. ašva> த. அசுவ(ம்).]*

**அசுவபதி** *ašuvapadi,* பெ.(n.) விசயநகர அரசர்கள் கொண்டபட்டப்பெயர்களுளொன்று (I.M.p. Md. 81.); a title of Vijayanagar kings.

*[Skt. ašva+pati>த. அசுவ + பதி.]*

**அசுவபரி** *ašuva-pari,* பெ.(n.) ஒரு பூச்செடி (வின்.); oleander, as horse-killer.

*[Skt. ašva-māra > த. அசுவபரி.]*

**அசுவபரீட்சை** *ašuva-parītcai,* பெ.(n.) குதிரை யிலக்கணமறியும் கலை; scientific study of the horse, hippology.

*[Skt. ašva + parīkṣā>த. அசுவபரீட்சை.]*

**அசுவபலம்** *ašuva-palam,* பெ.(n.) 1. அமுக்கிராங் கிழங்கு; horse root, *Withania somnifera.* 2. ஒருவகைக் கறி; a kind of curry-*Trigonella foenum graecum* (சா.அக.).

*[அசுவ+பலம்.]*

*[Skt. ašva > த. அசுவம்.]*

*பழு→பழம்>* **Skt.** *phala> த. பலம்.*

**அசுவபலை** *ašuvapalai,* பெ.(n.) நாரி, செந்நிற இலையுடைய செடி; a plant known as *"nārī"* with red leaves (சா.அக.).

**அசுவபுச்சகம்** *ašuva-puccagam,* பெ.(n.) ஒரு பூடு; a plant, *Glucine debilis* (சா.அக.).

*[Skt. ašvapucchaka > த. அசுவபுச்சகம்.]*

**அசுவம்[1]** *ašuvam,* பெ.(n.) தூய்மையற்றது; that which is unclean. *"அவைதா நிலையாதுயரா மசுவம்" (நீலகேசி, 493.).*

*[Skt. a-šubha > த. அசுவம்.]*

**அசுவம்[2]** *aśuvam,* பெ.(n.) 1. குதிரை; horse. 2. குதிரைப்பல் நஞ்சு (பாடாணம்) (மூ.அ.); a mineral poison.

**அசுவமியம்** *aśuvamiyam,* பெ.(n.) ஒரு வகை நஞ்சு (வை. மூ.); a mineral poison.

**அசுவமேதப்பிரதக்கணம்** *aśuva-mēda-p-piradakkaṇam,* பெ.(n.) திருவிடைமருதூரில் வெளிச்சுற்றை வலம்வருகை (கோபாலகிருஷ். 8.); circumambulation of the outer court-yard of the temple at *Tiruviḍai-marudūr.*

*[Skt. aśva-medha+pradakṣiṇa>த. அசுவ மேதப்பிரதக்கணம்.]*

**அசுவமேதம்** *aśuvamēdam,* பெ.(n.) ஒரு வேள்வி; horse sacrifice.

**த.வ. குதிரைவேள்வி.**

*[Skt. aśva + mēdha>த. அசுவமேதம்.]*

**அசுவமேதயாகம்** *aśuvamēdayāgam,* பெ.(n.) பேரரசர் தம் அரசாணையைப் பிறரும் ஏற்கும் முறையில் பட்டத்துக் குதிரையை அண்டை நாடுகளுக்கு அனுப்பி, அதனைப் பிடிக்க வந்தோரை வென்று, அதனைக் கொண்டுவந்து, காவு கொடுத்துச் செய்யும் வேள்வி; a ceremonial sacrifice of the invincible horse brought back after being sent to other kingdoms by the emperor who by means of this asserted his sovereign power.

**த.வ. பரிவேள்வி.**

*[Skt. aśva + mēdha+yāga>த.அசுவமேத யாகம்.]*

**அசுவர்த்தோ** *aśuvar-t-tō,* பெ.(n.) அரசமரம்; holy peepul tree, *ficus religiosa* (சா.அக.).

**அசுவரலி** *aśuvarali,* பெ.(n.) **அசுவலரி** பார்க்க; see *aśuvalari* (சா.அக.).

**அசுவரோகம்** *aśuva-rōgam,* பெ.(n.) குதிரை நோய்; a horse disease (சா.அக.).

*[Skt. aśva + rōga > த. அசுவரோகம்.]*

**அசுவலரி** *aśuvalari,* பெ.(n.) குதிரையைக் கொல்வது, அலரிச் செடி; horse-killer, *Nerium odorum alias N.rubrum* (சா.அக.).

*[அசுவ+அலரி.]*

*[Skt. aśva > த. அசுவம்.]*

*[அலர்→அலரி.]*

**அசுவவலக்கால்** *aśuvavalakkāl,* பெ.(n.) வாலுளுவை; spindle tree, *celastrus paniculata* alias *vernonia Anthelmintica* (சா.அக.).

**அசுவவாதம்** *aśuva-vādam,* பெ.(n.) குதிரைக் குட்டியின் பாய்ச்சல் போல் உடம்பு முழுவதும் குலுங்கும்படிச் செய்வதும், அண்டத்தை வீங்கச் செய்வதும், விதைப்பையிலும், அடிவயிற்றிலும் மிகையாக வலி யுண்டாக்குவதுமான ஓர் ஊதை (வாத) நோய்; a nervous disease a functional disorder of the nervous system marked by a trembling skin to the gambol of a foal, of the entire body, swelling of the scrotum and unbearable pain in the genital and the abdomen (சா.அக.).

*[Skt. āśva+vāta > த. அசுவவாதம்.]*

**அசுவவாரம்** *aśuva-vāram,* பெ.(n.) **அசுவவாலம்** பார்க்க; see *aśuva-vālam* (சா.அக.).

*[Skt. aśva + vāra>த. அசுவவாரம்.]*

**அசுவவாரியர்** *aśuva-vāriyar,* பெ.(n.) குதிரை செலுத்துவோர் (சிலப். 5, 54, உரை.); riders on horseback, horsemen.

**த.வ. குதிரை வீரர்.**

*[அசுவ(ம்) + வாரியர்.]*

*[Skt.aśva>த. அசுவ(ம்).]*

வாரி→வாரியர்→ வாரி > **Skt.** vara.

**அசுவவாலம்** *aśuva-vālam,* பெ.(n.) பேய்க் கரும்பு; wild sugar-cane-*saccharam spontaneum* (சா.அக.).

[அசுவ + வாலம்.]

[Skt. ašva>த. அசுவம்.]

வால்→வாலம் > Skt. vāla.

**அசுவவைத்தியம்** *ašuva-vaittiyam,* பெ.(n.) **அசுவசிகிச்சை** பார்க்க; see *ašuva-šigiccai* (சா.அக.).

த.வ. பரிமருத்துவம்.

[Skt. ašva+ vaidya>த. அசுவவைத்தியம்.]

**அசுவன்** *ašuvaṉ,* பெ.(n.) **அசமதாகம்** பார்க்க; see *ašama-tāgam* (சா.அக.).

[Skt. ašva > த. அசுவன்.]

**அசுவனியம்** *ašuvaṉiyam,* பெ.(n.) **அசுவநோய் நூல்** பார்க்க; see *ašuvanōy-nūl* (சா.அக.).

த.வ. குதிரைநோய்நூல்.

**அசுவாசம்** *ašuvāsam,* பெ.(n.) 1. மூச்சின்மை; partial or complete suspension of breath. 2. மூச்சுவிட முடியாமை; difficult or forced respiration, *Apnoca.*

[Skt. a-švāsa > த. அசுவாசம்.]

**அசுவாதிகன்** *ašuvādigaṉ,* பெ.(n.) குதிரை மருத்துவன்; one skilled in the treatment of horses (சா.அக.).

[Skt. ašva > த. அசுவம்.]

**அசுவாதிசூரணம்** *ašuvādišūraṇam,* பெ.(n.) **அசுவகந்தாதிச்சூரணம்** பார்க்க; see *ašuva-kandādi-c-cūraṇam* (சா.அக.).

[Skt. ašva + šūrṇa>த. அசுவாதிசூரணம்.]

**அசுவாபரி** *ašuvā-pari,* பெ.(n.) **அசுவபரி** பார்க்க; see *ašuva-pari* (சா.அக.).

**அசுவாபாணிதம்** *ašuvā-pāṇidam,* பெ.(n.) கரு(ப்பு) மருதோன்றி; a black variety of henna plant, *barlerea cristata* (சா.அக.).

**அசுவாமணக்கு** *ašuvāmaṇakku,* பெ.(n.) சிறுபீளை; wolly caper, *Illecebrum lanatum* alias *Achuranthes lanata*, formerly garland of this plant was worn by soldiers when storm of fort (சா.அக.).

**அசுவாரசியம்** *ašuvārašiyam,* பெ.(n.) 1. இனிமையற்றது; that which is disagreeable. 2. ஈடுபாடு இல்லாமை; lack of interest or enthusiasm. *'அவன் சொல்வதை அசுவாரசியமாகக் கேட்டுக் கொண்டிருந்தான்' (உ.வ.).*

த.வ. ஏற்பின்மை.

[Skt. a-svārasya > த. அசுவாரசியம்.]

**அசுவாரி** *ašuvāri,* பெ.(n.) எருமை; a buffalo, especially the female (சா.அக.).



**அசுவினி** *ašuviṉi,* பெ.(n.) இரலை விண்மீன்; the first *naksatra.*

[Skt. ašvinī > த. அசுவினி.]

**அசுவினிகுமாரரசம்** *ašuviṉi-kumāra-rašam,* பெ.(n.) ஆயுள்வேத முறைப்படி அணியம் செய்து, தோல்தொடர்பிலான நோய்கட்குக் கொடுக்கப்படும், ஒரு வகை மாத்திரை; a kind of pill prepared according to the principles of ayurveda and prescribed for venereal complaints (சா.அக.).

[Skt. ašvini-kumāra-rasa>த. அசுவினி குமாரரசம்.]

**அசுவினிதேவர்** *ašuviṉidēvar,* பெ.(n.) வானவர் மருத்துவர்; twin *vēdic* gods who are physicians of heaven, as twin horsemen.

*[அசுவினி + தேவர்]*

**[Skt.** *a-švin > த. அசுவினி.]*

தேய்வு→தேவு→தேவன் >**Skt.** *dēva*

**அசுவேதம்** *ašuvēdam,* பெ.(n.) வியர்வை யின்மை; suppressed perspiration (சா.அக.).

**அசுனம்** *ašuṉam,* பெ.(n.) வெள்ளுள்ளி (பரி.அக.); garlic.

**த.வ. பூண்டு.**

**[Skt.** *lašuna>த. அசுனம்.]*

**அசுனி** *ašuṉi,* பெ.(n.) அனிச்சை மரம்; tree, white-flowered justice wort, *Rhinacanthus communis* (சா.அக.).

**அசூசம்** *ašūšam,* பெ.(n.) 1. மாதவிலக்கு; menstruation. 2. மாசு; uncleanliness in general (சா.அக.).

**த.வ. கொளை, கொணக்கு.**

**[Skt.** *ašusa>த. அசூசம்.]*

**அசூசி** *ašūši,* பெ.(n.) **அசூசம்** பார்க்க; see *ašūšam* (சா.அக.).

**த.வ. தூய்மைக்கேடு, மாசு.**

**[Skt.** *a-šuci>த. அசூசி.]*

**அசூசை** *ašūšai,* பெ.(n.) பொறாமை (இ.வ.); envy.

**[Skt.** *asūyā > த. அசூசை.]*

**அசூதி**[1] *ašūdi,* பெ.(n.) மலடி (வின்.); sterile woman.

**[Skt.** *a-sūti > த. அசூதி.]*

**அசூதி**[2] *ašūdi,* பெ.(n.) 1. பெறாமை; non-production. 2. அம்மை; small pox, *Variola* (சா.அக.).

**[Skt.** *a-sūti>த. அசூதி.]*

**அசூதிகம்** *ašūdigam,* பெ.(n.) மலடு; barreness (as in a woman) (சா.அக.).

**[Skt.** *a-sūtikā>த. அசூதிகம்.]*

**அசூதிசரதி** *ašūdišaradi,* பெ.(n.) மலடி; a woman who grows old without having brought forth a child; a barren woman (சா. அக.).

**[Skt.** *a-sūti-carati>த. அசூதிசரதி.]*

**அசூயாபரன்** *ašūyābaraṉ,* பெ.(n.) பொறாமை கொண்டவன்; envious man, jealous person.

**[Skt.** *asūyā+para>த. அசூயாபரன்.]*

**அசூயை** *ašūyai,* பெ.(n.) பொறாமை (மச்சபு. மன்வந்தர 22); envy, intolerance, jealousy.

**த.வ. அழுக்காறு.**

**[Skt.** *asūya>த. அசூயை.]*

**அசூர்** *ašūr,* பெ.(n.) உடனிருக்கை (சமூகம்) (P.T.L.); presence, as of a person in authority.

**த.வ. குமுகம்.**

**[U.** *huzūr>த. அசூர்.]*

**அசூர்வாசலட்டவணை** *ašūrvāšalaṭṭa-vaṇai,* பெ.(n.) அரண்மனைக் கணக்கு; palace accounts. *"அசூர் வாசலட்டவணையிற் பிரவேசச் செலவெழுதி" (சரவண. பணவிடு 146.).*

**அசூரி** *ašūri,* பெ.(n.) பெரிய அம்மைநோய்; small-pox.

**[Skt.** *masūri > த. அசூரி.]*

**அசேசம்** *a-šēšam,* பெ.(n.) எல்லாம்; all, everything, as without consciousness. *"அசேஷகோத்திரத்து அசேஷசூத்திரத்தில்" (S.I.I.i, 84.).*

**[Skt.** *a-šeṣa > த. அசேசம்.]*

**அசேதனம்** *a-šēdaṉam,* பெ.(n.) அறிவில்லாதது (சித். சிகா. 21, 2); that which is insensible, without consiciousness.

**த.வ. அறிவிலி.**

**[Skt.** *a-cētana > த. அசேதனம்.]*

**அசேதனி** *ašēdaṉi,* பெ.(n.) மயக்கத்தை விளைவிக்கும் பொருள்; a substance that produces loss of sense or insensibility, *Anesthetic* (சா.அக.).

**[Skt.** *a-cētana>த. அசேதனி.]*

**அசேவகவாதம்** *aśēvagavādam,* பெ.(n.) உடலிலுண்டாம் ஊதைப்பிடிப்பு நோய்வகை (R.); a kind of ventrosity in the body.

*[Skt.a-sēvaka+vāta>த. அசேவகவாதம்.]*

**அசைகை** *aśaigai,* பெ.(n.) பொறாமை (வின்.); envy.

*[Skt. aśūyā > த. அசைகை.]*

**அசைதன்னியம்** *aśaidaṉṉiyam,* பெ.(n.) 1. அறியாமை; ignorance. 2. அறிவுக்குருடு; blindness owing to want of wisdom. 3. மெய்ப்பொருளறிவின்மை; absense or want of philosophical knowledge or wisdom (சா.அக.).

*[Skt. a-caitanya > த. அசைதன்னியம்.]*

**அசைவம்** *aśaivam,* பெ.(n.) இறைச்சி, மீன் முதலியவற்றை உணவில் சேர்த்துக் கொள்ளும் முறை; (in food) meat and fish, the practice of eating meat and fish. *'திருமணத்திற்குப் பின் அசைவ உணவேற்கப் பழகிக் கொண்டான்' (உ.வ.).*

த.வ. புலவுண்டி, புலவுணா, புலவூண், புல்லுணவம், புலவுணவம்.

*[Skt. a-śaiva > த. அசைவம்]*

சிவ→சிவம் > **Skt.** śaiva.

**அசோகம்**[1] *aśōgam,* பெ.(n.) 1. இதளியம் (பாதரசம்); mercury. 2. திமிசுமரம்; east Indian kino.

*[Skt. aśōkā > த. அசோகம்.]*

**அசோகம்**[2] *asōgam,* பெ.(n.) கவலையின்மை (தஞ்சைவா. 11.); freedom from sorrow.

*[Skt. aśōkā > த. அசோகம்.]*

**அசோகம்**[3] *aśōgam,* பெ.(n.) 1. அகத்தி; Agastya's plant, *Sesbania grandiflora* alias *coronila Grandiflora.* 2. மருதமரம்; Aryuna tree; winged myrobalan, *Terminalla alata* alias *Tomentosa.*

*[Skt. aśōka > த. அசோகம்.]*

**அசோகரோகினி** *aśōga-rōgiṉi,* பெ.(n.) கடுகுரோகினி; bear's foot; black *Hellibore Helleborus niger* alias *picrorrhiza kurroa.* *'நேபாளத்தில் விளையும் மருந்துப்பூடு'* (சா.அக.).

**அசோகவனம்** *aśōga-vaṉam,* பெ.(n.) இராவணனுடைய பூந்தோட்டம் (இராமநா. சுந். 6.); *Rāvaṉa's* pleasure garden.

*[அசோக(ம்)+வனம்.]*

*[Skt. aśōka>த. அசோகம்.]*

**அசோகவனிகை** *aśōga-vaṉigai,* பெ.(n.) 1. **அசோகவனம்** பார்க்க; see *aśōga-vaṉam.* 2. அசோகமரச்சோலை; a grove of a asoka tree.

*[அசோக(ம்)+வனிகை.]*

*[Skt. aśōka>த. அசோகம்.]*

வனம் > **Skt.** vana > vanikā> த. வனிகை.

**அசோகவாசவாடை** *aśōga-vāśa-vāḍai,* பெ.(n.) புனுகு; a perfume from the anal glands of the civer cats-civet (சா.அக.).

**அசோகன்** *aśōgaṉ,* பெ.(n.) 1. அருகன்; Arhat, to whom the *aśōka* tree is sacred. 2. மோரிய வரசருளொருவன்; name of the Maurya emperor who issued the edicts anjoining the principles and practice of buddhism 272-231 B.C.

**அசோகாட்டமி** *aśōkāṭṭami,* பெ.(n.) ஒரு நோன்புநாள்; eighth tithi of the bright fortnight of caittiram, as the day for drinking an infusion of three *aśōka* buds with a view to drive away sorrow.

*[Skt. aśōka+aṣṭami>த. அசோகாட்டமி.]*

**அசோகாதிதம்** *aśōgādidam,* பெ.(n.) சிவதுளசி; a kind of basil sacred to *śivaṉ* (சா.அக.).

**அசோகி** *aśōgi,* பெ.(n.) சீவக மூலி; a kind of plant; Indian Coecinea cephalandra indica (சா.அக.).

**அசோகு**[1] *ašōgu,* பெ.(n.) நலம் (பொதி. நி.); health, ease.

*[Skt. a-šōka > த. அசோகு.]*

**அசோகு**[2] *ašōgu,* பெ.(n.) மரவகை; Indian mast-tree.

**த.வ. செயாலமரம்.**

*[Skt. ašōka > த. அசோகு.]*

**அசோகை** *ašōgai,* பெ.(n.) சவுரிப்பூண்டு; a crooper bearing red fruits (சா.அக.).

**அசோடகத்தி** *ašōḍagatti,* பெ.(n.) செவ்வகத்தி; a red species of agathi tree, *coronila coccinea* (சா.அக.).

**அசோதை** *ašōdai,* பெ.(n.) கண்ணபெருமானை வளர்த்த தாய் (திவ். பெரியாழ். 1, 2, 1.); *Kṛṣṇa's* foster mother.

*[Skt. yašōdā > த. அசோதை.]*

**அசோரிதம்** *ašōridam,* பெ.(n.) வால்மிளகு; tail pepper, *Cubeb* (சா.அக.).

**அசோலம்** *ašōlam,* பெ.(n.) தேற்றாமரம்; water-clearing nut tree, *Strychnos Potatoram* (சா.அக.).

**அசோனம்** *ašōṉam,* பெ.(n.) **அசோணம்** பார்க்க; see *ašōṇam* (சா.அக.).

**அசௌக்கியம்** *a-šaukkiyam,* பெ.(n.) நலக்குறை; illness, sickness.

**த.வ. நலிவு, நலக்கேடு.**

*[Skt. a-šaukhya > த. அசௌக்கியம்.]*

**அசௌகரியம்**[1] *a-šaugariyam,* பெ.(n.) 1. வாய்ப் பில்லாமை; lack of opportunity. 2. நலமின்மை (இ.வ.); want of comfort, unhealthiness.

**த.வ. நலிவு.**

*[Skt. a-saukhya > த. அசௌக்கியம்.]*

**அசௌகரியம்**[2] *ašaugariyam,* பெ.(n.) தொல்லை; disadvantage. *'வீட்டுக்கு மூத்த பிள்ளையாக இருப்பதில், சௌகரியங்களும் உண்டு, அசௌகரியங்களும் உண்டு'.*

**த.வ. நலி, ஏந்தின்மை.**

*[Skt. a-saukarya > த. அசௌகரியம்.]*

**அஞ்சநம்** *añjanam,* பெ.(n.) **அஞ்சனம்** பார்க்க; see *añjaṉam* (சா.அக.).

*[Skt. añjana > த.அஞ்சநம்.]*

**அஞ்சபாடாணம்** *añjapāḍāṇam,* பெ.(n.) பிறவிநஞ்சு வகை (பரி. அக.); a mineral poison.

*[Skt.añjana+pāṣāṇa>த.அஞ்சபாடாணம்.]*

**அஞ்சபாதம்**[1] *añsapādam,* பெ.(n.) 1. (அன்னம்) புள்ளின் அடி; foot of the swan. 2. புள்ளடிக் குறி; caret mark.

*[அஞ்ச(ம்)+பாதம்.]*

*[Skt. haṃsa > த. அஞ்ச(ம்).]*

*படி>பதி-பதிவு. பதி >பதம்>பாதம்>**Skt.**pāda.*

**அஞ்சபாதம்**[2] *añjapādam,* பெ.(n.) சாதிலிங்கம்; bisulphate or red sulphate of mercury or cinnabar-vermilion (சா.அக.).

**அஞ்சம்**[1] *añjam,* பெ.(n.) 1. வெள்ளையெருது; white bull. 2. உயிர்வளி; *pirāṇaṉ,* one of the vital airs of the body.

*[Skt. haṃsa > த. அஞ்சம்.]*

**அஞ்சம்**[2] *añjam,* பெ.(n.) 1. துறவறம் நான்கனுள் ஒன்று; kind of asceticism. *"குடீசகம் பகூதக மஞ்சம்" (சூத. ஞான. 2.);* 2. மறைமொழி வகை; haṃsa mantra. *"காயத்திரியதனி னதிக மஞ்சமா மந்திரம்" (காஞ்சிப்பு. திருவேக. 28.).*

*[Skt. haṃša > த. அஞ்சம்.]*

**அஞ்சம்**[3] *añjam,* பெ.(n.) உரிமைப் பங்கு; share, portion.

*[Skt. aṃša > த. அஞ்சம்.]*

**அஞ்சம்**[4] *añjam,* பெ.(n.) 1. அன்னப்பறவை; bird capable of separating water from milk. 2. **அசபை** பார்க்க; see *ašabai* (சா.அக.).

*[Skt. haṃsa > த. அஞ்சம்.]*

**அஞ்சலோமசம்** *añja-lōmašam,* பெ.(n.) அன்னபேதி; green vitriol, iron sulphate (சா. அக.).

**அஞ்சன்[1]** *añjaṉ,* பெ.(n.) 1. காமன் (மன்மதன்); *Kāmaṉ.* 2. திருமால்; *Viṣṇu.* 3. பொறாமை யில்லாதவன்; one who is not envious. 4. தலைவன்; person of eminence. 5. வள்ளன்மையுடைய அரசன்; munificent king. 6. பரம்பொருள்; the supreme being.

*[**Skt.** hamsa > த. அஞ்சன்.]*

**அஞ்சன்[2]** *añjaṉ,* பெ.(n.) 1. நால்வகைத் துறவியர்களுள் கடுமையான நோன்பு மேற்கொண்டு, தூயவிடங்களில் வாழும் ஒருவகைத் துறவி ; a kind of ascetic. *"சீரஞ்சன் கமண்டலம்"* (சூத. ஞான. 6, 7). 2. நான்முகன் (சூத. எக்கிய உத். பிரம. 2, 15); *Brahmāṉ* 3. பன்னிரு ஆதித்தவரில் ஒருவர் (கூர்மபு. ஆதவர்சிறப். 2.); a deity representing the sun, one of the *tuvādašāittar,* q.v.

*[**Skt.** hamsa > த. அஞ்சன்.]*

**அஞ்சனக்கல்[1]** *añjaṉa-k-kal,* பெ.(n.) கருநிமிளை (மூ.அ.); sulphuret of antimony, black bismuth, used as a collyrium, as a combustible in fire works.

**த.வ. நீலாஞ்சனக்கல்.**

*[அஞ்சனம் + கல்.]*

*[**Skt.** añjana > த. அஞ்சனம்.]*

*[குல் > கல்.]*

**அஞ்சனக்கல்செந்தூரம்** *añjaṉa-k-kal-šendūram,* பெ.(n.) 1. தோல்நோய், வெள்ளைநோய், கீல்வாயு முதலியவற்றிற்குப் பயன்படுத்தப்படுவதும் கிச்சிலிப் பழ நிறமும், களிம்பு சுவையுமுடைய ஒருவகைச் சிவப்பு மருந்துப் பொடி; the sulphide of antimony with a small but indefinite amount of the oxide; sulphuretted antimony, *Antimonium sulphurettum*, an astrigent, used in skin diseases, syphilitic affections, rheumatism etc. 2. துரிசுச் செந்தூரம்; calcined red-oxide of blue vitriol prepared as per method laid down in Tamil medical science (சா.அக.).

*[அஞ்சனம் + கல் + செந்தூரம்.]*

*[**Skt.** añjana> த. அஞ்சன(ம்).]*

*குல் > கல். சிந்தூரம் > செந்தூரம்.*

**அஞ்சனக்கல்பற்பம்** *añjaṉa-k-kal-parpam,* பெ.(n.) பலவகை வெள்ளை நோய்கள், காய்ச்சல், இருமல், தோல்நோய் முதலிய வற்றிற்குக் கொடுக்கும் வெண்மையாகவும், சுவையற்றதாகவும் இருக்கும் பொடி (பற்பம்); calcined antimony prepared according to Tamil medical science and prescribed for the 20 kinds of venereal complaints such as fever, consumption, skin diseases and so on. white in colour and heavy, readily melts in fire and disappears as a gas, *Antimony oxidum* (சா.அக.).

*[அஞ்சனம் + கல் + பற்பம்.]*

*[**Skt.** añjana>த. அஞ்சனம்.]*

*[**Skt.** bharman>த. பற்பம்.]*

**அஞ்சனக்கலிக்கம்** *añjaṉa-k-kalikkam,* பெ.(n.) 1. கண்ணிலிடும் மருந்து; a medicine of chronic headache. 2. கண்ணுக்கிடும் மை; colliyrium. 3. மந்திரப் பொருளைக் காட்டும் மந்திர மை (வின்); magic black pigment rubbed on the eyes or palms of who wishes to discover anything lost.

*[அஞ்சனம் + கலிக்கம்.]*

*[**Skt.** añjana>த. அஞ்சனம்.]*

*கல்→கலி → கலிக்கம்.*

**அஞ்சனக்காரன்** *añjaṉa-k-kāraṉ,* பெ.(n.) 1. மந்திர மையிடுவோன்; conjurer, sorcerer who uses the magic black pigment. *"அஞ்சனக் காரன் முதுகில் வஞ்சனைக் காரன் ஏறினான்".* 2. கண்ணுக்குக் கலிக்கமிட்டு நோய்களைக் குணப்படுத்து வோன்; one who cures diseases by applying collyrium to the eyes (சா.அக.).

*[அஞ்சனம்+காரன்.]*

*[Skt. añjana>த. அஞ்சனம்.]*

*கரு>காரன் = வினைமுதல் ஆண்பாற் பெயரீறு.*

**அஞ்சனக்கோல்** *añjaṉa-k-kōl,* பெ.(n.) கண்ணுக்கு மைதீட்டுங் கோல்; pencil to paint the eyelashes with collyrium. *"அஞ்சனக் கோலி னாற்றா நாகம்" (சீவக. 1994.).*

*[அஞ்சனம் + கோல்.]*

*[Skt. añjana> த. அஞ்சனம்.]*

*குல் > (கொல்) > கோல்.*

**அஞ்சனகுமாரி** *añjaṉa-kumāri,* பெ.(n.) சிமிட்டி; bitter apple, *cucumis colocynthis* (சா. அக.).

**அஞ்சனகேசி** *añjaṉa-kēśi,* பெ.(n.) ஒரு ஏறண (தருக்க) நூல் (யாப். வி.பக். 540.); a treatise on logic.

*[Skt. añjana+kēśa>த. அஞ்சனகேசி.]*

**அஞ்சனச்சலாகை** *añjaṉa-c-calāgai,* பெ.(n.) கூர் மழுங்கியதாகவும், இரு முனைகளுடைய தாகவும், எட்டு அங்குல நீளமுள்ளதாகவும் இருக்கும். மருந்துக்குத் தக்கபடி, வெவ்வேறு மாழைகளைக் கொண்டு செய்யப்படும் கண்ணில் மருந்து தீட்டப் பயன்படுத்தும் பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, சிலை முதலியவற்றால் செய்த, ஒரு நீளமான தடித்த கம்பியைப் போன்ற கருவி; an instrument like a probe used by native doctors for applying eye-salve. It is made of gold, silver, iron or stone, according to the kind of medicines, to be used. It is a thing rod of about eight inches and blunt at the extremities (சா. அக.).

*[அஞ்சனம் +சலாகை.]*

*[Skt. añjana>த. அஞ்சனம்.]*

*சல் → சலம் → சலாகை.*

**அஞ்சனத்தார்** *añjaṉattār,* பெ.(n.) விளைச்சலை மதிப்பிடுவோன் (R.T.); estimator or appraiser of produce.

*[U. ancenādar>த. அஞ்சனத்தார்.]*

**அஞ்சனத்திரவியம்** *añjaṉa-t-tiraviyam,* பெ.(n.) ஐங்கோல நெய்மம்; a medicated ointment with magical or magnetic vitrues, prepared from the plant alinjil; *Sage - leaved Indian Linden-grewia excelsa Agnivesha* (சா.அக.).

**த.வ.** ஐங்கோலம்.

**அஞ்சனநாமிகாவர்த்தமம்** *añjaṉanāmikā-varttamam,* பெ.(n.) இமைகளின் நடு விலாவது முனைகளிலாவது குருதியைக் கக்கும், சிவந்த கட்டிகளை எழுப்பி, நமைச்சலையும், வலியையும் உண்டாக்கும் ஒரு வகைக் கண்ணோய்; an eye disease marked by the growth of small tumours in the centre or at the edges of the eyelid, causing inflammation and pain, *Bichparo adenoma* (சா.அக.).

**த.வ.** கருங்கண்கட்டி.

**அஞ்சனநிதானம்** *añjaṉa-nidāṉam,* பெ.(n.) கண்ணுக்கிடும் மையை பற்றி ஓர் ஆயுள் வேத நூல்; a treatise on ophthalmology compiled (சா.அக.).

**த.வ.** மைநூல்.

*[Skt. añjana+nidāna> த.அஞ்சனநிதானம்.]*

**அஞ்சனப்படம்** *añjaṉa-p-paḍam,* பெ.(n.) கரியால் ஓவியம் வரையப்பட்ட படத்துணி (பஞ்சதசப்பிர. 2.); cloth on which a figure is drawn with charcoal.

**த.வ.** கரி ஓவியத் துணி.

*[அஞ்சனம் + படம்.]*

*[Skt. añjana > த. அஞ்சனம்.]*

பட்டம் > படம்.




**அஞ்சனப்பாடாணம்** *añjana-p-pāḍāṇam,* பெ.(n.) 1. தமிழ் மருத்துவத்தில் சொல்லியுள்ள முப்பத்திரண்டு நஞ்சுள் ஒன்று, பொற்றொட்டி நஞ்சு உருவாக்குங் கால், அடியில் நிற்கும் கசடு, மருத்துவத்திற்கு உதவுவது (போகம் 7000); according to the Tamil medical science, one of the thirty two kinds of poisons; one of the mineral poisons found as a sediment at the bottom in the preparation of another poison in a gold vessel. 2. நீலாஞ்சன நஞ்சு; poisonous compound of sulphate of antimony. 3. கல்லீயம்; a kind of hard lead, pewter (சா.அக.).

த.வ. கடுங்கசடு நஞ்சு.

*[Skt. añjana+pāṣāṇa>த. அஞ்சனபாடாணம்.]*

**அஞ்சனம்**[1] *añjaṇam,* பெ.(n.) 1. **அஞ்சனகேசி** (யாப். வி. பக். 540) பார்க்க; see *añjaṇa-kēśi.* 2. அவுரி (வை. மூ); indigo. 3. சலவைக்கல் (R); marble.

*[Skt. añjana > த. அஞ்சனம்.]*

**அஞ்சனம்**[2] *añjaṇam,* பெ.(n.) 1. மேற்பூச்சு மருந்து; a semi-solid ointment consisting of fatty substances mixed with an active principle or drug-unguentum. 2. மறைபொருளைக் காட்டும் மை; a magic black paint used for finding out concealed or hidden treasures or things. 3. மை மாயக்கலை; magic art using unguents. 4. கருவைக் கொண்டு செய்யப்பெறும் மை; unguent prepared from embryo. 5. கருமாக்கல்; a darkish blue-colured stone, sulphuret of antimony. 6. நீலத் தோற்றமுள்ள மலை; blue mountain, as the Nilgiris. 7. இருள்; darkness. 8. சண்பகம்; champak, *Michelia champaca.* 9. இமைகளில் எரிச்சல், குத்தல், வலி இவற்றுடன் கூடிய, சிறிய, மென்மையான செந்நிறக் கட்டியை எழுப்பும் ஒருவகைக் கண்ணோய்; a small, soft, copper-coloured pustule appearing on the eye-lid and attended with burning and pricking sensation and a slight pain; a sebaceous cyst of an eyelid, *Blepharo atheroma.*

த.வ. கரும் மை.

*[Skt. añjana > த. அஞ்சனம்.]*

**அஞ்சனமாலி** *añjaṇa-māli,* பெ.(n.) மந்திரக்கலை செய்வோர் பயன் கொள்வதற்குரிய கருநாய்; a black dog from its eyes unguents are prepared and used in sorcery (சா. அக.).

**அஞ்சனமிடல்** *añjaṇamiḍal,* தொ. பெ.(Vbl.n.) 1. கண்ணிற்கு மையெழுதுகை; painting black pigment on eye-lids (by women). 2. கலிக்கமிடுகை; applying a pungent eye-salve (சா.அக.).

*[அஞ்சனம் + இடல்.]*

*[Skt. añjana> த. அஞ்சனம்.]*

*இடு→இடல்.*

**அஞ்சனலா** *añjaṇalā,* பெ.(n.) 1. கருங்காக் கணம்; mussel-shell creeper. 2. கருங்குவளை (நீலோற்பலம்); blue water lilly.

*[Skt. aṇjana>த. அஞ்சனலா.]*

**அஞ்சனவண்ணம்** *añjaṇa-vaṇṇam,* பெ.(n.) மை வண்ணம்; black colour like that of a unguent (சா.அக.).

*[அஞ்சன(ம்) + வண்ணம்.]*

***[Skt.** añjana > த. அஞ்சனம்.]*

*வள்→வன்→வண்ணம்.*

**அஞ்சனவண்ணன்** *añjana-vaṉṉaṉ,* பெ.(n.) திருமால் (சிலப் 6, 47); *Tirumāl,* (*Viṣṇu*) as dark-complexioned.

*[அஞ்சன(ம்) + வண்ணன்.]*

***[Skt.** añjana>த. அஞ்சன(ம்).]*

*வண்→வண்ணம்→வண்ணன்.*

**அஞ்சனவர்ணம்** *añjana-varṉam,* பெ.(n.) **அஞ்சனவண்ணம்** பார்க்க; see *añjana-vaṉṉam* (சா.அக.).

*[அஞ்சன(ம்) + வர்ணம்.]*

***[Skt.** añjana> த. அஞ்சனம்.]*

*வண்→வண்ணம்→**Skt.** varṇa.*

**அஞ்சனவர்த்தி** *añjana-vartti,* பெ.(n.) கண்ணோய்களில் கண்ணுக்கு இழைத்து இடப்பெறும் ஒரு மருந்துக் குளிகை; a medicinal pill used in eye-diseases as an external application (சா.அக.).

***[Skt.** añjana + vṛdh>த. அஞ்சனவர்த்தி.]*

**அஞ்சனவித்தை** *añjana-vittai,* பெ.(n.) மையிட்டுப் பார்த்து நிலத்துள் மறைந்து கிடக்கும் பொருள்களைக் கண்டறியும் கலை; the art of discovering hidden treasure or other substances under the ground with the help of magic pigment (சா.அக.).

***[Skt.** añjana + vdhya>த.அஞ்சனவித்தை.]*

**அஞ்சனவுருவன்** *añjana-v-uruvaṉ,* பெ.(n.) திருமால்; *Viṣṇu.* *"அஞ்சனவுருவின் றந்து நிறுத்தாங்கு"* (புறநா. 174.).

*[அஞ்சன(ம்) + உருவன்.]*

***[Skt.** añjana>த. அஞ்சனம்.]*

*உரு → உருவு → உருவம் → உருவன்.*

**அஞ்சனவெற்பு** *añjana-veṟpu,* பெ.(n.) திருவேங்கடமலை (திவ். திருவாய். 8, 2, 8.); the Tirupati hills.

*[அஞ்சன(ம்) + வெற்பு.]*

***[Skt.** añjana>த. அஞ்சன(ம்).]*

**அஞ்சனா[1]** *añjaṉā,* பெ.(n.) பயிர் விளைநிலத்தி லுள்ள மதிப்பு (செங்கை); estimate or appraisement of the probable amount and value of the crops standing on a field.

***[U.** ancenā > த. அஞ்சனா.]*

**அஞ்சனா[2]** *añjaṉā,* பெ.(n.) 1. மூக்கத்தாரி என்னும் ஒரு கடைச்சரக்கு; formerly a bazaar drug (now-unidentified). 2. ஒரு வகைப் பல்லி; a domestic lizard. 3. ஒரு பாம்பு; a fabulous serpent. 4. மை; a black pigment or collyrium applied externally to the eye-brows or the eye-lids. 5. ஒரு மரம்; a tree. 6. மை தீட்டல்; the act of applying ointment or pigment. 7. இறும்பூது காட்டும் மை; a magic ointment (சா.அக.).

***[Skt.** añjana> த. அஞ்சனா.]*

**அஞ்சனாட்சி** *añjaṉāṭci,* பெ.(n.) மைதீட்டிய கண்ணுடையாள்; woman having her eyelashes painted with collyrium.

**த.வ. மை விழியாள்.**

***[Skt.** añjana + akṣi> த. அஞ்சனாட்சி.]*

**அஞ்சனாதார்** *añj-aṉā-tār,* பெ.(n.) விளை பயிரை மதிப்பிடுபவன் (C.G.); estimator, appraiser.

**த.வ. விலையீட்டாளர்.**

***[U.** ancenādār > த. அஞ்சனாதார்.]*

**அஞ்சனாதி** *añjaṉādi,* பெ.(n.) வெள்ளை நாயுருவி; a white species of Indian burr, *Achyranthes aspera* (alba) (சா.அக.).

**அஞ்சனாதிகை** *añjaṉādigai,* பெ.(n.) ஒரு வகைப் பல்லி; a kind of lizard (சா.அக.).

**அஞ்சனாதேவி** *añjaṉādēvi,* பெ.(n.) நிலத்தின் அடியில் புதைந்துள்ள பொருள்களுக்குத் தலைவியான அரசி; goddess of treasures hidden underground (சா.அக.).

*[அஞ்சனா + தேவி.]*

**அஞ்சனாமிகை** *añjanā-migai,* பெ.(n.) கண்ணிமைகளின் வீக்கம்; swelling of eyelids stye (சா.அக.).

*[அஞ்சனா + மிகை.]*

*மிகு→ மிகை வீக்கம்.*

**அஞ்சனாலா** *añjaṉālā,* பெ.(n.) 1. கருங் குவளை; a blue water-lilly pontederia alias *Nymphoca stellata.* 2. கருங்காக்கணம்; blue flowered mussel-shell creeper, *Clitoria ternatec* (typical).

**அஞ்சனாவதி** *añjaṉāvadi,* பெ.(n.) வடகீழ்த் திசைப் பெண்யானை (வின்.); name of the female elephant of the north-east, mate of cuppiradigam.

*[Skt. añjanāvatī > த. அஞ்சனாவதி.]*

**அஞ்சனி** *añjaṉi,* பெ.(n.) 1. நாணற் புல்; a sweet grass, *Saccharum spontaneum.* 2. காயா அல்லது காசா; iron wood tree, *Memecylon edule.* 3. கருங்குவளை; blue-water lilly, *Pontederia* alias *Nymphoca stellata.* 4. வறட்சுண்டி; a bitter plant-Aristolochia bracteata (சா.அக.).

**அஞ்சனிகா** *añjaṉikā,* பெ.(n.) 1. ஒரு வகைக் கரும் பல்லி; a kind of black lizard. 2. ஒரு வகை நீலச் சுண்டெலி; a small blue mouse (சா.அக.).

**அஞ்சனை** *añjaṉai,* பெ.(n.) 1. அனுமானுடைய தாய் (கம்பரா. நட்புக். 28.); name of the mother of *Haṉumāṉ.* 2. வடதிசைப் பெண் யானை (வின்.); name of the female elephant of the north, mate of *šārvapaumam.*

*[Skt. añjanā > த. அஞ்சனை.]*

**அஞ்சனைசாபிதா** *añjaṉai-šābidā* பெ.(n.) புள்ளிக்கணக்கு (C.G.); list or account of an estimate of the probable out-turn of standing crops.

*[U. ancenā+jāpitā>த. அஞ்சனைசாபிதா.]*

**அஞ்சி–த்தல்** *añji-,* 4. செ.குன்றாவி.(v.t.) தலை வணங்குதல்; to reverence, worship. *"அஞ்சித்தல் சொற்ற பூசனை யடைவுமாம்" (காஞ்சிப்பு. திருவே. 36.).*

*[Skt. añc > த. அஞ்சி–,]*

**அஞ்சிதபத்திரி** *añjida-pattiri,* பெ.(n.) வளைந்த இலைகளுள்ள ஒருவகைத் தாமரை; a lotus with curved leaves (சா.அக.).

**அஞ்சிதபதம்** *añjidapadam,* பெ.(n.) குதிங்காலை யூன்றிப் பாதத்தை மேனோக்கி வைத்து நிற்கை (பரத. பாவ. 83.); (*Nāṭya*) standing with the heels resting on the ground and the toes raised up.

*[அஞ்சித+ பதம்.]*

*[Skt. ancita>த. அஞ்சிதம்.]*

*பதி→பதம் >Skt. pāda.*

**அஞ்சிதமுகம்** *añjidamugam,* பெ.(n.) வருத்த மாற்றாது இருதோண் மேற் றலைசாய்க்கை (வின்.); (*Nāṭya*) reclining one's head on the shoulders from extreme pain, one of 14. muga-v-abinayam, q.v.

*[அஞ்சிதம் + முகம்.]*

*[Skt. añjita > த. அஞ்சித(ம்).]*

*[ முகம் >Skt. mukha.]*

**அஞ்சீரகம்** *añjīragam,* பெ.(n.) 1. அத்தி; fig tree, *Ficus raccmosa.* 2. அத்திப் பழம்; fig fruit (சா. அக.).

**அஞ்சீரம்** *añjīram,* பெ.(n.) **அஞ்சீரகம்** பார்க்க; see *añjīragam* (சா.அக.).

**அஞ்சுகம்**[1] *añjugam,* பெ.(n.) மெல்லாடை; fine cloth.

*[Skt. aṃšuka > த. அஞ்சுகம்.]*

**அஞ்சுகம்**[2] *añjugam,* பெ.(n.) ஈயக்கல் (சிலாவங்கம்); a stone containing lead or lead ore; hardened lead ore (சா.அக.).

**அஞ்சுமாலி** *añjumāli,* பெ.(n.) கதிரவன்; the sun (சா.அக.).

**அஞ்சுமான்** *añjumāṉ,* பெ.(n.) 1. பன்னிரு இனத்தவருளொருவன் (திவா.); a deity representing the sun, one of twelve member. 2. சிவ தோன்றியங்களுளொன்று; an ancient *Śaivam* scripture in Sanskrit, one of 28 *Śivāgamam*, q.v. 3. கதிரவக் குல இளவரசன் (கூர்மபு. சூரிய. 43.); name of the prince of the solar race.

*[Skt. amśumān > த. அஞ்சுமான்.]*

**அஞ்சுமித்திரம்** *añju-mittiram,* பெ.(n.) **பஞ்சமித்திரம்** பார்க்க; see *pañja-mittiram* (சா.அக.).

**அஞ்சுமுத்திரைத்தகடு** *añju-muttirai-t-tagaḍu,* பெ.(n.) செப்புத்தாது செய்வதற்காகப் பழங்காலத்தில் பயன்படுத்தி வந்ததோர் உயர்ந்த செப்புத்தகடு; a kind of pure, thin copper plate used formerly for obtaining calcined copper known as copper aksir (சா.அக.).

**அஞ்சுவர்ணத்தான்** *añju-varṇattāṉ,* பெ.(n.) நாகமணல்; lead-ore (சா.அக.).

**அஞ்சுவர்ணநிறத்தோன்** *añju-varṇa-niṟattōṉ,* பெ.(n.) **அஞ்சுவர்ணத்தான்** பார்க்க; see *añju-varṇattāṉ* (சா.அக.).

**அஞ்சுளோநேமி** *añjuḷōnēmi,* பெ.(n.) திமிசு அல்லது வேங்கை மரம்; Malabar kino, *pterocarpus marsupium*, alias *Terminalia Tomentosa* (சா.அக.).

**அஞ்ஞத்துவம்** *aññattuvam,* பெ.(n.) அறியாமை (சிந்தா.நி.66.); spiritual ignorance.

*[Skt. ajñatva > த. அஞ்ஞத்துவம்.]*

**அஞ்ஞவதைப்பரணி** *aññavadai-p-paraṇi,* பெ.(n.) மறைமுடிவுப் பொருளாகத் தத்துவராயர் பாடிய பரணி நூல் (தக்கையாகப் பக். 153); a *paraṇi* poem on *vēdānda* philosophy, by *Tattuvarāyar.*

*[Skt. a-jña+ vadhabharaṇi>த. அஞ்ஞவதை பரணி.]*

**அஞ்ஞன்** *aññaṉ,* பெ.(n.) அறிவில்லாதவன் (பிரபோத. 38, 1); ignorant person.

*[Skt. a-jña > த. அஞ்ஞன்.]*

**அஞ்ஞாதசுகிருதம்** *aññāda-śugirudam,* பெ.(n.) தன்னை அறியாமல் வந்த நல்வினை (ஸ்ரீ வசன. 381, வ்யா.); merit unconsciously aptained.

*[Skt. a-jñāta+ su-krta>த. அஞ்ஞாத சுகிருதம்.]*

**அஞ்ஞாதம்** *aññādam,* பெ.(n.) அறியப்படாதது; that which is not known (சா.அக.).

*[Skt. a-jñāta > த. அஞ்ஞாதம்.]*

**அஞ்ஞானத்தம்பம்** *aññāṉa-t-tambam,* பெ.(n.) குரல் நொந்து வாயினால் மூச்சுவிட்டு, நாவறண்டு, நெஞ்சுலருமோர் வகைத் தொண்டை நோய்; a disease marked by the affection of the throat, breathing through the mouth, dryness of the tongue and throat and depression of the chest (சா.அக.).

**த.வ. தொண்டைகடுப்பன்.**

*[Skt.a-jñata+tamba>த.அஞ்ஞானத் தம்பம்.]*

**அஞ்ஞானப்பாறை** *aññāṉa-p-pāṟai,* பெ.(n.) கருங்கல் பாறை; black granite rock (சா.அக.).

*[அஞ்ஞான+பாறை.]*

*[Skt. a-jñāna > த. அஞ்ஞானம்.]*

**அஞ்ஞானம்** *aññāṉam,* பெ.(n.) 1. அறியாமை; ignorance, spiritual ignorance. 2. கிறித்துவத்திற்குப் புறச்சமயம் (கிறித்.); non-christian religion, paganism.

*[Skt. a-jñāna > த. அஞ்ஞானம்.]*

**அஞ்ஞானாசிரவம்** *aññāṉāśiravam,* பெ.(n.) அறிவின்மை (மேருமந். 98, உரை.); spiritual ignorance.

*[Skt. a-jñāna+śrava>த. அஞ்ஞானசிரவம்.]*

**அஞ்ஞானி** *aññāṉi,* பெ.(n.) 1. அறிவிலான்; person without spiritual knowledge.

"ஆங்கார வஞ்ஞானிகளா மானிடரும்" (பிரபுலிங். விமலை. 29.). 2. புறச்சமயி (கிறித்.); non-christian, pagan.

[Skt. a-jñānin > த. அஞ்ஞானி.]

**அஞ்ஞை** *aññai,* பெ.(n.) 1. அறிவிலான்; ignorant person. 2. கிடாய்; he-goat, male of the sheep.

[Skt. a-jña > த. அஞ்ஞை.]

**அஞன்** *añaṉ,* பெ.(n.) அறிவிலான் (திவா.); ignorant person.

[Skt. a-jña > த. அஞன்.]

**அட்சக்கோடு** *aṭcakkōḍu,* பெ.(n.) அட்சரேகை பார்க்க; see *aṭca-rēgai.*

[அட்ச+கோடு.]

[Skt. akṣa>த. அட்சம்.]

**அட்சகன்னம்** *aṭca-kaṉṉam,* பெ.(n.) நிலவுருண்டை கணிதவகை (வின்.); (Astron.) argument of latitude.

[Skt. akṣa-karṇa > த. அட்சகன்னம்.]

**அட்சச்சூலை** *aṭca-c-cūlai,* பெ.(n.) வெப்ப நோய் வகை (R); a kind of rheumatism.

[அட்ச+சூலை.]

[Skt. akṣa> த. அட்ச(ம்).]

சூல்→சூலை > Skt. śūlā.

**அட்சத்தி** *aṭcatti,* பெ.(n.) திப்பிலி; long pepper, *Pipe longum* (சா.அக.).

**அட்சதரோகம்** *aṭcada-rōgam,* பெ.(n.) உகிர் சுற்றுண்டாகி உகரின் வேரைக் கெடுத்து, அந்த உகிர் விழுவதற்கு முன்னமே மறுஉகிரை முளைக்கச் செய்யும் ஒரு நோய்; an inflammation of the bulbous ends of the fingers affecting the root of the nail, fresh nail crops up before the original one is shed, whitlow (சா.அக.).

**த.வ. உகிர்சுற்றுநோய்.**

[Skt. aksata+ rōga>த. அட்சதரோகம்.]

**அட்சதீபம்** *aṭca-dībam,* பெ.(n.) முருங்கை (பரி. அக.); horse-radish tree.

**அட்சதூரம்** *aṭca-tūram,* பெ.(n.) உலகின் சம கோட்டிலிருந்து வடக்கே அல்லது தெற்கேயுள்ள இடைவெளியின் அளவு (M. Navi. 57.); latitute.

**த.வ. கிடைவரை அளவு.**

[Skt. akṣadūra> த. அட்சதூரம்.]

**அட்சதை** *aṭcaḍai,* பெ.(n.) 1. மஞ்சள் கலந்த மங்கல அரிசி; unbroken grains of rice mixed with turmeric or saffron used in benediction or workship. "மாமல ரட்சதை யறுகதிற் சொரிந்து" (பிரபோத. 11, 42); 2. அரிசி (இ.வ.); rice.

**த.வ. பொலியரிசி, அறுகு அரிசி.**

[Skt. a-kṣata > த. அட்சதை.]

**அட்சதைப்பொட்டு** *aṭcadai-p-poṭṭu,* பெ.(n.) நெற்றியிலிடும் பொட்டுவகை; turmeric paste, blackened with charcoal powder and lime, used for marks on the forehead.

[அட்சதை + பொட்டு.]

[Skt. a-kṣata>அட்சதை.]

**அட்சதைபோட்டுக்கொள்(ளு)-தல்** *aṭcadai poṭṭu-k-kol((lu),* 16 செ.கு.வி.(v.i.) வலிய தொரு வினையை மேற்கொள்ளுதல் (இ.வ.); to voluntarily undertake to perform an act.

[அட்சதை + போட்டுக்கொள்(ளு)-.]

[Skt. a-kaṣta> த. அட்சதை.]

**அட்சதைவை-த்தல்** *aṭcadai-vai-,* 4 செ.கு.வி. (v.i.) நற்செயல் அழைத்தற் குறியாக மங்கல அரிசி கொடுத்தல்; to distribute unbroken rice mixed with turmeric or saffron as an invitation to auspicious ceremonies.

**த.வ. பொலியரிசிவை.**

[அட்சதை + வை-.]

[Skt. a-kṣata > த. அட்சதை.]

**அட்சபாதன்**[1] *aṭca-pādaṉ,* பெ.(n.) கவுதம முனி; Gaudama, founder of the *nyāya* phil, as having an eye in his right foot.

*[அட்சு(ம்) + பாதன்.]*
***[Skt.** akṣa > த. அட்ச.]*
*பதி → பதம் → பாதம் → பாதன் >**Skt.** pādiṉ.*

**அட்சபாதன்**[2] *aṭca-pādaṉ,* பெ.(n.) நாயப் பொருளைப் (நியாய சாத்திரம்) பின்பற்றி நடப்பவன் (வின்.); follower of *Nyāya* philosophy propounded by *Akṣapādā.*

**த.வ. அறவாணன்.**
*[அட்சு(ம்) + பாதன்.]*
***[Skt.** akṣa > த. அட்ச.]*
*பாதம் → பாதன் >**Skt.** pādiṉ.*

**அட்சம்**[1] *aṭšam,* பெ.(n.) 1. கண்; eye. 2. நிலக்கோடு; terrestrial latitude.

***[Skt.** akṣa > த. அட்சம்.]*

**அட்சம்**[2] *aṭcam,* பெ.(n.) 1. **அட்சமணி** பார்க்க; see *aṭcamaṇi.* 2. வெங்காயம்; onion. 3. தான்றி; devil's abode, *Terminalia bellerica.* 4. பூண்டின் பெயர்களில் விதையைக் குறிக்கக் இறுதி மொழியாக வரும் சொல் (எ–டு:) உத்திராட்சம், கோகிலாட்சம்; in the name of plants, a termination showing the seed, as in *Eleocarpus,* and *Coix barbata* (சா.அக.).

***[Skt.** akṣa > த. அட்சம்.]*

**அட்சமணி** *aṭcamaṇi,* பெ.(n.) அக்கமணி; bead sacred to *Šivaṉ, Eleocarpus ganitus* (சா.அக.).

**த.வ. கள்மணி, முள்மணி.**
*[அட்சம் + மணி.]*
***[Skt.** akṣa > அட்சம்.]*
*மண் →மணி.*

**அட்சமாலிகை** *aṭca māligai,* பெ.(n.) நூற்றெட்டுபநிடதங்களுளொன்று; name of an *upaniṣad.*

***[Skt.** akṣamālikā > த. அட்சமாலிகை.]*

**அட்சமாலை** *aṭšamālai,* பெ.(n.) வழிபாட்டு மாலை; rosary.

**த.வ. அக்கமாலை.**
*[அட்ச + மாலை.]*
***[Skt.** akṣa>த. அட்சம்.]*
*மால்→ மாலை >**Skt.** mālā.*

**அட்சய** *aṭcaya,* பெ.(n.) வட மொழியாளரின் அறுபானாண்டுள் ஓர் ஆண்டு; name of the last year in the jupiter cycle of sixty years as followed by sanskri lovers.

***[Skt.** akṣaya > த. அட்சய.]*

**அட்சயதிருதியை** *aṭcaya-tiru-diyai,* பெ.(n.) விடை (வைசாக) மாத வளர்பிறை மூன்றாம் பக்கலாகிய நன்னாள்; third tithi of the bright fornight of *vaišāgam,* as securing merit to all deeds of virtue performed on that day.

**த.வ. மங்கலமும்மி.**

***[Skt.**a-kṣaya+ tṛtiyā>த.அட்சயதிருதியை.]*

**அட்சயதூணி** *aṭcayatūṇi,* பெ.(n.) அருச்சுனனுடைய அம்புக்கூடு (வின்.); the quiver of Arjuna, as inexhaustible.

**த.வ. அழிவில் தூணி.**
*[அட்சய(ம்) + தூணி.]*
***[Skt.** a-kṣaya> த. அட்சய(ம்).]*



**அட்சயபாத்திரம்** *aṭcaya-pāttiram*, பெ.(n.) 1. தெய்வத்தன்மையால் உணவு குறையாத கலம் (வின்.); divine vessel of inexhaustible food given to the *Pāṇdavas* by the sun. 2. இரந்துண் கலம்; vessel carried in begging, usu. by *Bhāgavatas*.

த.வ. குறையாக்கலம், உலவாக்கலம், அமுதசுரபி.

*[**Skt.** a-kṣayapātra > த. அட்சயபாத்திரம்.]*



**அட்சயம்**[1] *aṭcayam*, பெ.(n.) 1. கேடின்மை (சிந்தா. நி. 87.); undecaying. 2. குறைவு படாதது (இ.வ.); that which is inexhaustible.

த.வ. அல்காமை.

*[**Skt.** a-kṣaya > த. அட்சயம்.]*

**அட்சயம்**[2] *aṭcayam*, பெ.(n.) கல்லுப்பு; common salt dug out from the bed at the bottom of the sea (சா.அக.).

த.வ. கடலடி உப்பு.

**அட்சயரசம்** *aṭcayarašam*, பெ.(n.) கொங்கணவர் வாதகாவியம் 3000–இல் சொல்லியுள்ள பத்து வகை இதளியக் குளிகைகளுள் ஒன்று. இது சாரணைக் குதவும், இதைப் பதினொரு தடவை விடுவித்தாக்கால் எண் பெரும் பேறடையலாம். முழுமை நிலைக்குச் சென்று நிலைக்கலாம், திரும்பலாம். இதன் பெருமை அடியிற் கண்ட செய்யுளினால் விளங்கும்; one of the ten kinds of mercurial pills described in kunganavar's work on Alchemy. It can be animated as per process laid down there in and if this is down eleven times, one can succeed in the performance of eight kinds of miracles vide (அஷ்டசித்தி) this pill will also enable him to absorb him self into the absolute and return to his original state at pleasure, as explained in the above stanza. *"ஓடலாம் அட்சய மாம் ரசத்தைக் கேளு உத்தமனே பதினொறுக்கால் விடுவித்தாக்கல் ஆடலாம் அஷ்டமா சித்தியெட்டும் அணிமாவும் கரிமாவும் வகிமாவோடு தேடலாம் மகிமாவும் பிராத்தியோடு சேர்ந்தயெட்டு மாடலாம் செப்பக்கேளு நீடலாம் பூரணத்திற் சென்று புக்கி நிலைக்கலாம் திரும்பலாம் நீங்கள் கேளே"* (சா.அக.).

த.வ. அழியாச்சாறு.

*[**Skt.** aksaya + raša >த. அட்சயரசம்.]*

**அட்சயவடம்** *aṭcaya-vaḍam*, பெ.(n.) தொன்மைக் காலத்தில் கயையிலிருந்த அழகியதோர் ஆலமரம்; undecaying banyan the name of a very ancient sacred tree that was in Gaya (சா.அக.).

*[அட்சய(ம்) + வடம்.]*

*[**Skt.** a-kṣaya>த. அட்சயம்.]*

*வட்டம்>வடம்* > **Skt.** *vaṭa.*

**அட்சயன்** *aṭcayaṉ*, பெ.(n.) கடவுள்; god, as exempt from decay.

*[**Skt.** a-kṣaya > த. அட்சயன்.]*

**அட்சரகணிதம்** *aṭcarakaṇidam*, பெ.(n.) குறிக் (பீச)கணிதம் (வின்.); (Math.) algebra.

த.வ. குறிக்கணக்கியல், இயற்கணிதம்.

*[அட்சரம் + கணிதம்.]*

*[**Skt.** akṣara>த. அட்சரம் .]*

கண் > கணி > கணிதம் > **Skt.** gaṇita.

**அட்சரகாலம்** *aṭcarakālam,* பெ.(n.) ஒரு தாளவளவை; (mus.) chief unit of time, measured by the time-length of a short syllable.

**த.வ. மாத்திரைக்காலம்.**

*[அட்சர(ம்) + காலம்.]*

*[**Skt.** a-kṣara> த. அட்சரம்.]*

*கால்→காலம் > **Skt.** kāla.*

**அட்சரசமுத்திபலம்** *aṭcaraša-mutti-palam,* பெ.(n.) விளா; wood apple, *Feronia elephantum* (சா.அக.).

**அட்சரசீவிகன்** *aṭcara-šivigaṉ,* பெ.(n.) எழுத்தாளன் (யாழ். அக.); scribe, writer.

**த.வ. சொல்லோஉழவன்.**

*[**Skt.** akṣara-jivika > த. அட்சரசீவிகன்.]*

**அட்சரசுத்தி** *aṭcarašutti,* பெ.(n.) 1. பலுக்கல் (ஒலிப்பு) திருத்தம்; correct utterance, accurate pronunciation. 2. கையெழுத்துத் திருத்தம் (வின்.); correct chirography.

**த.வ. திருத்தப்பாடு, திருத்தப்பலுக்கல்.**

*[**Skt.** akṣara + šuddhi > த. அட்சரசுத்தி.]*

**அட்சரத்தாபனம்** *aṭcara-t-tābaṉam,* பெ.(n.) சுருள் தகட்டில் மந்திர எழுத்துகளைப் பொறிக்கை (வின்.); inscribing letters of mantras in mystical diagrams for amulets.

**த.வ. எழுத்தேற்றம்.**

*[**Skt.** a-kṣara+sthāpana > த.அட்சரத் தாபனம்.]*

**அட்சரத்துடையோன்** *aṭcarattuḍaiyōṉ,* பெ.(n.) ஈ; fly (சா.அக.).

**அட்சரதீபம்** *aṭcara-dibam,* பெ.(n.) கோயிலிலேற்றும் ஐம்பத்தொரு திருவிளக்கு; row of 51 lights set up in temples, as representing the 51 letters of the Skt. alphabet.

**த.வ. ஐம்பானோர் விளக்கு.**

*[அட்சர + தீபம்.]*

*[**Skt.** a-kṣara > த. அட்சரம்.]*

*தீ→ தீவம்>**Skt.** dīpa> த. தீபம்.*

வடமொழியாளர் தம் மொழிப் பெருமையை நிலைநாட்டுதற்காகக் கோயில் வழிபாட்டில் புதிதாகப் புகுத்தப்பட்ட ஆரியர் வழக்கம். முப்பான் விளக்கேற்றல் தமிழ் மரபு.

**அட்சரதேவி** *aṭsara-dēvi,* பெ.(n.) கலைமகள்; goddess of letters. *“அட்சர தேவி கோவின் விதிப்படி” (திருப்பு. 1126).*

**த.வ. சொன்மடந்தை.**

*[அட்சர(ம்) + தேவி.]*

*[**Skt.** a-kṣara> த. அட்சரம்.]*

*தேவன்→தேவி > **Skt.** dēvi.*

**அட்சரதோசம்** *aṭcara-dōšam,* பெ.(n.) எழுத்துப் பிழை (கொ.வ.); error of spelling.

**த.வ. எழுத்துவழு.**

*[**Skt.** a-kṣara + dōṣa > த. அட்சரதோசம்.]*

**அட்சரப்புல்** *aṭcara-p-pul,* பெ.(n.) பீனசப்புல்; a kind of grass, *Panicum Dactylon* (சா.அக.).

**த.வ. சளிப்புல்.**

**அட்சரபோளம்** *aṭcara-pōḷam,* பெ.(n.) கரும் பிசின் (போளம்); black myrrh, a black substance extracted from aloes and dried up (சா.அக.).

**த.வ. கள்ளிப்பிசின்.**

**அட்சரம்** *aṭcaram,* பெ.(n.) 1. எழுத்து; letter of the alphabet, writing-symbol. 2. பண் வகைகளிளொன்று (பரத. இராக. 27.): one of the characteristic of melody-types. 3. நா வெடிப்பு நோய் (பைஷஜ.); cracked tongue. 4. குழந்தை நோய் வகை (பாலவா. 912); a general name for several diseases of children.

*[**Skt.** a-kṣara > த. அட்சரம்.]*

**அட்சரமாந்தசுரம்** *aṭcara-mānda-šuram,* பெ.(n.) **அக்கரக்காய்ச்சல்** பார்க்க; see *akkara-k-kāyccal.* (சா. அக.)

*[அட்சர(ம்) + மாந்தம் + சுரம்.]*

*[Skt. akṣara + த. அட்சர(ம்).]*

*மந்தம் → மாந்தம்.*

*சுள் > சுர் > சுரம்.*

**அட்சரமாந்தம்** *aṭcara-māndam,* பெ.(n.) **அக்கரப்படுவன்** பார்க்க; see *akkara-p-paḍuvan* (சா.அக.).

*[Skt. akṣara>த. அட்சரம்.]*

*மந்தம் → மாந்தம்.*

**அட்சரமுகன்** *aṭcara-mugan,* பெ.(n.) மாணாக்கன் (சிந்தா. நி. 96.); student, disciple.

*[அட்சர(ம்) + முகன்.]*

*[Skt. akṣara> த. அட்சரம்.]*

*முகம் > முகன்.*

**அட்சரரேகை** *aṭcara-rēgai,* பெ.(n.) மண்டையின் பின்புறத்தில் குறுக்காக வோடுமோர் எலும்புப் பொருத்து; a suture running across the skull on its back portion, Lamboid suture (சா.அக.).

**த.வ. குறுக்கைப்பொட்டு.**

*[Skt. akṣara+rekhā>த. அட்சரரேகை.]*

**அட்சரவகுப்பு** *aṭcara-vaguppu,* பெ.(n.) வாயிலுண்டாகும் கொப்புள வகைகள்; different varieties of stomatitis (சா.அக.).

*[அட்சர+வகுப்பு.]*

*[Skt. akṣara> த. அட்சரம்.]*

*வகு→வகுப்பு.*

**அட்சரவிருட்சத்தி** *aṭcara-viruṭšatti,* பெ.(n.) பலா; jack tree, *Artocarpus integrifolia* (சா.அக.).

**அட்சராப்பியாசம்** *aṭcarā-p-piyāšam,* பெ.(n.) முதன் முதலாகப் பள்ளியில் சேரும் குழந்தைக்கு எழுத்தறிவிக்கும் முறைமை (சடங்கு); ceremony connected with a child's beginning to learn the alphabet.

**த.வ. ஏடுதூக்கல், ஏடுமங்கலம்.**

*[Skt. a-kṣara+ abhyāsa>த. அட்சராப்பியாசம்.]*

**அட்சராரத்தி** *aṭcarāratti,* பெ.(n.) வடமொழி எழுத்துகளின் எண் அளவாக 51 விளக்குகளை அடுக்கடுக்காகக் கொண்ட விளக்குத்தட்டுவகை (தமிழ்விடு. 236, கீழ்க்குறிப்பு); metallic tray containing 51 lights arranged in tiers and waved in front of the deities, the number of lights representing the number of letters in the Sanskrit alphabet.

**த.வ. ஐம்பானோர் ஆரத்தி.**

*[Skt. akṣara+āratti > த. அட்சராரத்தி.]*

**அட்சரேகை** *aṭcarēgai,* பெ.(n.) நிலநடுக் கோட்டுக்கு வடக்கில் அல்லது தெற்கில் தொலைவைக் கணக்கிடும் முறையில் நிலவுருண்டையைச் சுற்றிக் கிழக்கிலிருந்து மேற்கில் செல்வதாக அமைத்துக் கொண்ட சுற்றுக் கோடு; line of latitute.

**த.வ. கிடைவரை.**

*[Skt. akṣa + rekhā>த. அட்சரேகை.]*

**அட்சாம்சம்** *aṭcāmšam,* பெ.(n.) நிலக் கோட்டின் கோணப் பகுதி; degree of terrestrial latitude.

**த.வ. நிலக்கோணம்.**

*[Skt. akṣa + aṃša> த. அட்சாம்சம்.]*

**அட்சாரம்** *aṭcāram,* பெ.(n.) காரமின்மை; absence of alkali (சா.அக.).

**அட்சி**[1] *aṭci,* பெ.(n.) 1. கண் (வின்.); eye. 2. நூற்றெட்டுபநிடதப் பகுதிகளிளொன்று; name of an *upaniṣad.*

*[Skt. akṣi > த. அட்சி.]*

**அட்சி**[2] *aṭci,* பெ.(n.) புறவுறுப்புகளை ஆய்வு செய்யும் கண்ணாடி; an instrument for examining certain openings in the body, *Speculum* (சா.அக.).

**அட்சிகம்** *aṭcigam,* பெ.(n.) ஒரு மரம்; dalbergia tree (சா.அக.).

**அட்சிகோபம்** *atcikōbam,* பெ.(n.) கண்சிவப்பு; inflammation of the eye (சா.அக.).

**அட்சிகோளம்** *atcikōlam,* பெ.(n.) கண்விழி; eye - ball (சா. அக.)

*[அட்சி + கோளம்.]*

*[Skt. aksi>த. அட்சி.]*

*கொள் > கோள் > கோளம்.*

**அட்சிணி** *atcini,* பெ.(n.) எண்வகை இன்பங்களுளொன்றாகிய தற்காலத்தில் துய்க்கும் சிறப்புரிமை(C.G.); privileges actually enjoyed in an estate, one of *asta-pōkam.*

**த.வ. எட்டிலோர் துய்ப்பு.**

*[Skt. aksini > த. அட்சிணி.]*

**அட்சிதர்ப்பணம்** *atci-dar-p-panam,* பெ.(n.) கண்ணில் துளித் துளியாயிடும் மருந்து; a fluid medicine to be dropped into the eye, eye drops (சா.அக.).

**த.வ. சொட்டுமருந்து.**

*[Skt.aksi + tarppana > த. அட்சிதர்ப்பணம்.]*

**அட்சிதாரை** *atcidārai,* பெ.(n.) கருவிழி; pupil of the eye (சா.அக.).

**அட்சிபடலம்** *atci-padalam,* பெ.(n.) கண்ணின் தோல்; coat of the eye (சா.அக.).

**த.வ. இரப்பை.**

*[அட்சி + படலம்.]*

*[Skt. aksi> த. அட்சி.]*

படல் → படலம் = கண்படலம்.

**அட்சிபந்தம்** *atci-pandam,* பெ.(n.) 1. கண்ணோயில் கட்டும் கட்டு; bandage for the eyes in eye-diseases. 2. கண்கட்டு வித்தை; a kind of illusion in magic. 3. கண்ணைக் கட்டல்; binding the eyes (சா.அக.).

**த.வ. கண்கட்டு, கண்ணாங்கட்டு.**

*[அட்சி + பந்தம்.]*

*[Skt. aksi>த. அட்சி.]*

பற்று → பத்து → பந்து → பந்தம்> **Skt.** bandha.

**அட்சிபாகத்தியம்** *atci-pāgattiyam,* பெ.(n.) கருவிழியில் வெண்ணிறச் சதை படர்ந்து மூடிக் கொள்வதுடன், குத்தலும், வலியும் கொண்டு கண்சிவந்து கருவிழியில் காணும் ஒருவகைக் கண்ணோய்; the appearance of a whitish milky film over the black of the eye slowly but completely shrouding it with its mass and attended with acute pain (சா.அக.).

**அட்சிபாகம்** *atci-pāgam,* பெ.(n.) 1. வீக்கத்துடனும் அல்லது வீக்கமில்லாமலும் காணப்படும் கண் இரப்பையின் அழற்சி; an inflammation of the eye-lid with or without any local swelling. 2. கண்ணோய்; ordinary inflammation of the eyes ophthalmia (சா.அக.).

**த.வ. இரப்பையழற்சி.**

*[அட்சி + பாகம்.]*

*[Skt. aksi>த. அட்சி.]*

பகு →பாகம்.

**அட்சிபாகாத்தியரோகம்** *atci-pāgāttiya-rōgam,* பெ.(n.) கண்கள் வீங்குதல், கலங்கல், நீர்க்கம்மல், பீளைவடிதல், கருவிழி வெள்விழி சிவத்தல், எரிச்சல், அடிக்கடி வலியுறல் ஆகிய குணங்களையுண்டாக்கிப் பார்வையைக் கெடுக்குமோர் கண்ணோய்; a disease which destroys the eye-sight in the end, characterised by inflammation, swelling, burning, sensation, mucopurulent discharge and frequent pain (சா.அக.).

**த.வ. கண் நலிநோய்.**

**அட்சிபுருவம்** *atcipuruvam,* பெ.(n.) கண் புருவம்; eye-brow (சா.அக.).

*[அட்சி + புருவம்.]*

*[Skt. aksi> த. அட்சி.]*

புரு → புருவம் = கண்மேலுள்ள மயிர் வளைவு.

**அட்சிலோமன்** *atcilōman,* பெ.(n.) கண்மயிர்; eye-lash (சா.அக.).

**அட்சீபம்** *atcībam,* பெ.(n.) 1. மாமரத்தில் ஒரு வகை; a species of mango tree. 2. முருங்கை; drumstick tree, *Moringa pterygosperma* (சா.அக.).

**அட்டகசம்** *aṭṭakašam,* பெ.(n.) ஆடாதோடை; Malabar nut trees, *Justicewort-Adhatoda vasica,* a medicinal shrub commonly found in all hedges in S. India (சா.அக.).



**அட்டகணம்[1]** *aṭṭakaṇam,* பெ.(n.) நிலக்கணம், நீர்க்கணம், சந்திரகணம், இந்திரகணம் அல்லது இயமான கணம், சூரியகணம், தீக்கணம், வாயுகணம், வெளி (ஆகாச)க் கணம் என எண்வகையுடையனவும் நல்லவுந் தீயவுமாய் வருவனவுமானவும் நூன்முதற் சீர்கள் (வின்.); (pros.) the eight kinds of feet with which a poem viz. *nila-k-kaṇam, nīr-k-kaṇam, cantira-kaṇam, intira-kaṇam, or iyamāṉa-kaṇam, sūriya-kaṇam, tī-k-kaṇam, vāyu-kaṇam, ākāsa-kaṇam.*

த.வ. எண்கணம்.

*[அட்டம் + கணம்.]*

*[**Skt.** astan> த. அட்டம்.]*

*களம் > கணம் >* **Skt.** *gaṇa.*

**அட்டகணம்[2]** *aṭṭakaṇam,* பெ.(n.) சூலிகணம், முக்குக் கணம் (மூலக்கணம்), ஆமக்கணம், தேரைக்கணம், மாகணம், சுழிக்கணம், கழிகணம், வறட்கணம் என வரும் எண்வகைக் கணங்கள்; a disease in children similar to tabes with progressive wasting of the body or a part of it and It consists of eight kinds, as enumerated above (சா.அக.).

த.வ. எண்கணம்.

*[அட்டம் + கணம்.]*

*களம் > கணம் >* **Skt.** *gaṇa.*

**அட்டகணிதம்** *aṭṭa-kaṇidam,* பெ.(n.) எண் கணிதச் செயல் முறைகள்; eight mathematical processes, viz. *“சங்கலிதம், விபகலிதம், குணனம், பாகாரம், வர்க்கம், வர்க்கமூலம், கணம், கனமூலம்" (பிங்.), “குணகாரம், பரியச்சம், பாற்கரம், மூலம், மானதம், கன்மம், சலிதி, தருதம்" (சூடா.).*

த.வ. எண்கணிதம்.

*[அட்டம் + கணிதம்.]*

*[**Skt.** astan> த. அட்டம்.]*

கண் > கணி> கணிதம்.

**அட்டகந்தம்** *aṭṭa-kandam,* பெ.(n.) எண்வகை நறுமணப் பொருள்கள்; eight kinds of perfumes viz; 1. சந்தனம்; sandal. 2. அகரு; agallochum. 3. மான்மணத்தி (கத்தூரி); musk. 4. பச்சைக் கருப்பூரம்; crude camphor. 5. பச்சிலை; acheon leaf. 6. குங்குமப்பூ; European saffron. 7. விலாமிச்சை; kus kus. 8. கோட்டம் (கோஷ்டம்); costus (சா.அக.).

த.வ. எண்கணம்.

*[அட்டம் + கந்தம்.]*

*[**Skt.** astan>த. அட்டம்.]*

காந்து > கந்து > கந்தம் > **Skt.** gandha.

**அட்டகம்[1]** *aṭṭagam,* பெ.(n.) மறைநூலில் அடங்கிய ஒருசார் மந்திரத்தொகுதி; a collection of mantras in the vēda. *"வருக்க முழுதும் வந்தவட் டகமும்" (கலிங். 170).*

த.வ. எட்டகம்.

*[**Skt.** astaka > த. அட்டகம்.]*

**அட்டகம்[2]** *aṭṭagam,* பெ.(n.) எட்டன் தொகுதி; group of eight. *"உருவமெலாம் பூத வுபாதாய சுத்தாட்டக வுருவ மென்னின்" (சி.சி. பர. சௌத். மறு. 17).*

*[Skt. aṣṭaka > த. அட்டகம்.]*

**அட்டகராசி** *aṭṭaga-rāśi,* பெ.(n.) சிறுசிமிட்டி; an unidentified plant (சா.அக.).

**அட்டகருமக்கரு** *aṭṭa-karuma-k-karu,* பெ.(n.) மாய (வித்தை) கூட்டுப் பொருள்கள்; ingredients for magical preparations employed in the *aṭṭa-karumam,* q.v., as plants, roots, skins, bones, flesh.

*[அட்ட + கருமம் + கரு.]*

*[Skt. aṣṭan> த. அட்டம்.]*

*கரு→கருமம் > Skt. karman*

**அட்டகருமசித்தி** *aṭṭa-karuma-śitti,* பெ.(n.) எண் வகை தொழில்களினாலடையும் பேறு (சித்தி); an accomplished success derived from the practice of the eight kinds of magic; success in witchery (சா.அக.).

*[அட்ட+கருமம்+சித்தி.]*

*[Skt. aṣṭa > த. அட்டம். Skt. śiddhi> த. சித்தி.]*

குரு>கரு>கருமம் > Skt.karman

**அட்டகருமப்பலகை** *aṭṭa-karuma-p-palagai,* பெ.(n.) எண் வகை தொழிலுக்கும் பயன் படுத்தும் வெவ்வேறு மரங்களால் செய்த உட்காரும் மணைகள்; eight sitting planks made of different kinds of wood and used while chanting mantrams in the performance of the eight kinds of magic. They are respectively used according to ten prescribed rules of mantric science (சா.அக.).

*[அட்டம் + கருமம் + பலகை.]*

*[Skt. aṣṭan>த. அட்டம்.]*

*கரு→கருமம் > Skt. karman*

**அட்டகருமம்** *aṭṭa-karumam,* பெ.(n.) எண்வகை மாயக்கலைகள் (வசியம், மோகனம், தம்பனம், உச்சாடனம், ஆகர்ஷணம், வித்துவேஷணம், பேதனம், மாரணம்); the eight magic arts.

*[அட்டம் + கருமம்.]*

*[Skt. aṣṭan > த. அட்டம்.]*

*குல்→குரு→ கரு> Skt. karman*

**அட்டகவுடலம்** *aṭṭa-kavuḍalam,* பெ.(n.) **அட்டகம்[2]** பார்க்க; see *aṭṭagam[2]*.

**அட்டகாசம்[1]** *aṭṭakāśam,* பெ.(n.) 1. பெருநகை; loud laughter. *"அனலுமிழ் கண்களு மட்டகாசமும்" (பிரபோத. 18, 74.).* 2. ஆர்ப்பாட்டம்; pomp, parade, ostentation.

**த.வ. வெற்றாட்டம், கொட்டம் அடித்தல், நகையாட்டம்.**

*[Skt. aṭṭa-hāsa > த. அட்டகாசம்.]*

**அட்டகாசம்[2]** *aṭṭakāśam,* பெ.(n.) 1. கொடுஞ்சொல்; atrocity. *'கொள்ளைக் காரர்களின் அட்டகாசம் பொறுக்க முடியவில்லை'.* 2. ஆர்ப்பாட்டம்; uproar. *'குழந்தை அழுது அட்டகாசம் செய்து விட்டது'.* 3. விளம்பரப்படுத்திக் கொள்ளும் முறை; ostentatious display. *'முகத்தில் மூக்குத்தி, காதில் வைரக்கம்மல் என்று அட்டகாசத்துடன் காணப்பட்டாள்'.* 4. மிகச்சிறப்பு; superb, excellence. *'என்ன அட்டகாசமாக ஆடினாள் தெரியுமா?'.*

**த.வ. கொட்டம் கொடும்பாடு.**

*[Skt. aṭṭa-hāsa > த. அட்டகாசம்.]*

**அட்டகிராம்** *aṭṭa-kirām,* பெ.(n.) எருமையூரில் (மைசூர்) இருக்கும் அசுகாவிலிருந்து வரும் ஒருவகை வெள்ளைச் சருக்கரை; a granulated white sugar exported from Aska in Mysore (சா.அக.).

**அட்டகிரி** *aṭṭa-kiri,* பெ.(n.) **அத்தகிரி** (பிங்.) பார்க்க; see *atta-kiri.*

*[Skt. aṣṭan + giri > த. அட்டகிரி]*

**அட்டகீடம்** *aṭṭa-kīdam,* பெ.(n.) ஒணான், தவளை, அடவி ஈ, வீட்டுப்பல்லி, காட்டுக் கொசு, குளவி, மலைக் கட்டெறும்பு, சிலந்திப் பூச்சி ஆகிய எட்டுவகை நச்சுயிரிகள்; the eight kinds of poisonous creatures viz., blood sucker, frog, jungle-fly, house-lizard, malarial mosquito, wasp, stick ant and the spider (சா.அக.).

*[அட்ட(ம்) + கீடம்.]*

*[**Skt.** aṣṭan>த. அட்டம்.]*

கீள் > கீழ் > கீழம் > கீடம் > **Skt.** kīta.



**அட்டகுட்டம்** *aṭṭa-kuṭṭam,* பெ.(n.) எட்டு வகையான குட்ட நோய்; the eight kinds of leprosy.

**த.வ. எண்குட்டம்.**

*[அட்ட(ம்) + குட்டம்.]*

*[**Skt.** aṣṭa > த. அட்டம்.]*

*குட்டு→குட்டம்* > **Skt.** *kuṣṭa.*

**அட்டகுணம்** *aṭṭa-kuṇam,* பெ.(n.) கடவுளின் எண்குணம்; the eight atributes of god.

**த.வ. எண்குணம்.**

*[அட்ட(ம்) + குணம்.]*

*[**Skt.** aṣṭan>த. அட்ட(ம்).]*

குள் → குணம் > **Skt.** guna.

**அட்டகுலசெல்வம்** *aṭṭakula-šelvam,* பெ.(n.) **அட்டசித்தி** பார்க்க; see *aṭṭa-šitti* (சா.அக.).

*[அட்ட(ம்) + குலதெய்வம்.]*

*[**Skt.** aṣṭan>த. அட்ட(ம்).]*

குல்→குலம்> **Skt.** kula. செல்→செல்வம்.

**அட்டகுவடு** *aṭṭa-kuvaḍu,* பெ.(n.) திராமலை; a mountain containing a mineral called thara (copper and spelter) (சா.அக.).

**அட்டகுறி** *aṭṭa-kuṟi,* பெ.(n.) நோயாளிகட்கு மருத்துவம் செய்வதற்கு முன் மருத்துவர்கள் கண்டறிய வேண்டிய எண்வகை அடையாளங்கள்; eight different kinds of tests to be applied or attended to by a physician before arriving at a correct diagnosis (சா.அக.).

**த.வ. எண்குறி.**

*[அட்ட(ம்) + குறி.]*

*[**Skt.** aṣṭan> த. அட்ட(ம்).]*

குல்→குறு→குறி.

**அட்டகுன்மம்** *aṭṭa-kuṉmam,* பெ.(n.) செரியாமையினாலெழுந்த எட்டு வகை குணங்களுடைய குன்ம நோய்கள். அவையாவன; 1. எரி, 2. உமட்டல் செய்தல், 3. இசிவு (சன்னி), 4. சிலேத்துமம், 5. சூலை 6. பித்தம் 7. வலி 8. ஊதை (வாதம்); the eight kinds of indigestion. or dyspepsia characterised by (1) burning sensation (2) vomiting (3) fever followed by delirium (4) phlegm (5) biliousness (6) piercing pain as in colic etc. (7) convulsion and (8) rheumatism or other nervous affections (சா.அக.).

**த.வ. எண்குத்தல்வலி.**

*[அட்டம் + குன்மம்.]*

*[**Skt.** aṣṭan> த. அட்டம்.]*

குல் (குத்தல், வலி) > குன்மம் > **Skt.** gulma.

**அட்டகுன்மலேகியம்** *aṭṭa-kuṉma-lēgiyam,* பெ.(n.) வயிற்றுநோய், வயிற்றுப்பிசம், செரியாமை முதலிய எட்டுவகை நோய்கள் தீருவதற்காக, அகத்தியர் வைத்திய காவியம் 1500–இல் சொல்லியுள்ளபடி உருவாக்கும்

ஒருவகை இளகியம்; an electuary prepared as per process laid down in Agastya's work (1500) on medicine. It is prescribed for eight kinds of dyspepsia such as, colic, tympanities, indigestion etc. (சா.அக.).

த.வ. குத்தல்வலி இளகியம்.

*[அட்டம் + குன்மம் + இலேகியம்.]*

***[Skt.** aṣṭan> த. அட்ட, **Skt.** lēhya> லேகியம்]*

**அட்டகை[1]** *aṭṭagai,* பெ.(n.) (அட்டமி) எண்மி (யாழ். அக.); the eight tithi.

***[Skt.** aṣṭakā > த. அட்டகை.]*

**அட்டகை[2]** *aṭṭagai,* பெ.(n.) 1. ஒரு வேள்வி (திவா.); a sacrifice. 2. இறந்த நாட்கடன் வகை (கூர்ம உத்தரகா. அழற்க. 3.); *srāddha* or worship of the manes on the eighth tithi after the full moon in the 9th, 10th, and 11th solar months.

***[Skt.** aṣṭakā > த. அட்டகை.]*

**அட்டகோணம்[1]** *aṭṭakōṇam,* பெ.(n.) 1. எட்டு மூலையை யுடைய உருவம்; octagon. 2. எட்டு மூலை; the eight points of the compass.

த.வ. எண்கோணம்.

*[அட்டம் + கோணம்.]*

***[Skt.** aṣṭan>த. அட்ட(ம்).]*

கோண் → கோணம் > **Skt.** kōṇa.

**அட்டகோணம்[2]** *aṭṭa-kōṇam,* பெ.(n.) 1. மூச்சை உள்ளிழுத்தல் (பூரகம்); yogi's method of scientific inhalation. 2. எண்கோணமுள்ள மறைமொழிச் சக்கரம்; an octagonal diagram used in magic (சா.அக.).

*[அட்டம் + கோணம்.]*

***[Skt.** aṣṭan> த. அட்டம்.]*

கோண் → கோணம்.

**அட்டசருமக்கரு** *aṭṭa-šaruma-k-karu,* பெ.(n.) எட்டு வகை செய்வினைகளில் பயன்படுத்தும் கருமருந்து; a black magical paint used for attaining success in the practice and performance of the eight kinds of black magic consisting of roots, plants, bones, skin etc., as ingredients (சா.அக.).

*[அட்டசருமம் + கரு.]*

***[Skt.** aṣṭan+carman> த. அட்டசருமம்.]*

கள்→ கரு.

**அட்டசாந்திநெய்** *aṭṭa-šāndi-ney,* பெ.(n.) அகத்தியர் வைத்தியகாவியம் **1500**இல் சொல்லப் பட்டுள்ள எலும்புருக்கி, பெரும்பாடு, முதலிய எட்டுவகை நோய்களுக்குக் கொடுக்கும் மருந்து நெய்; a medical ghee in cow's ghee prescribed for eight diseases viz. tuberclosis of the bone, consumption menorhagia etc. as contemplated in Agastyar's work (1500) on medicines (சா.அக.).

த.வ. எண்நோய் நெய்மம்.

**அட்டசாரநிகண்டு** *aṭṭašāra-nigaṇḍu,* பெ.(n.) தேரையர் செய்த, ஒரு தமிழ் மருத்துவ நூல்; a medical treatise compiled in Tamil by Tērayar (சா.அக.)

**அட்டசித்தி** *aṭṭa-šitti,* பெ.(n.) ஒக வழியைக் கடைப்பிடித்த சித்தர்கள் அடையும் எட்டுவகைப் பேறுகள் (பலன்கள்); the eight kinds of siddhis or super human powers attained by Siddhars eddicted to yoga practice.

த.வ. எண்பேறு.

*[அட்ட(ம்) + சித்தி.]*

***[Skt.** aṣṭn>த. அட்ட(ம்).]*

செ → செத்து → சித்து → சித்தி> **Skt.**siddha.

**அட்டசித்துக்குளிகை** *aṭṭa-šittu-k-kuḷigai,* பெ.(n.) எண் பெரும் பேறு (அட்டமா சித்தி)களை அடைவதற்கு மூலமாகச் சித்தர்கள் பயன்படுத்தும் சாரணை தீர்க்கப்பட்ட ஒரு இதளிய (இரச)க் குளிகை;

a kind of mercurial pill sufficiently animated and used by Siddhars with a view to help them in exercising the eight super human powers attained by them (சா.அக.).

**த.வ. எண்பேற்றுக்குளிகை.**

*[அட்டம் + சித்து + குளிகை.]*

*[**Skt.** aṣṭan>த. அட்ட(ம்).]*

செ → செத்து → சித்து > **Skt.** siddhi

குளம்→ குளிகை > **Skt.** gulikā.

**அட்டசுபம்** *aṭṭa-šubam,* பெ.(n.) எண்வகை மங்கலப் பொருள் (யாழ். அக.); the eight auspicious objects.

**த.வ. எண்மங்கலம்.**

*[**Skt.** aṣṭan + šubha → த. அட்டசுபம்.]*

**அட்டசூரணம்** *aṭṭa-šūraṇam,* பெ. (n.) எல்லாவகை வளிநோய்களுக்கும் கொடுக்கப்படும் 1. திரிகடுகு, 2. பருத்தி விதை, 3. கழற்சிப் பருப்பு, 4. பெருங்காயம், 5. வளையலுப்பு, 6. இந்துப்பு, 7. கல்லுப்பு, 8. கருவேம்பு ஆகிய எண்வகைச் சரக்குகள் சேர்ந்த மருந்துப்பொடி; a powdered mixture consisting of eight drugs viz. 1. traid (of dry ginger pepper and long pepper). 2. cotton seed. 3. bondue sead. 4. asafoetida. 5. glass gall (felvitriol) 6. rock salt. 7. seasalt 8. black neem, a good remedy for all kinds of rheumatic affections and other disorders of vayu, if given onixed in proper mediams such as honey. ghee etc., as prescribed (சா.அக.).

**த.வ. எண்பொடி.**

*[**Skt.** aṣṭan+cūrṇa> த. அட்டசூரணம்.]*

**அட்டசூலை** *aṭṭa-šūlai,* பெ.(n.) 1. எட்டுவகை சூலைநோய்; eight kinds of diseases characterised by piercing or darting pain. 2. எரு (மல) வாயில் கடுத்துச் சிறுநீர் துளித்துளியாய் விழும் ஒரு சூலைநோய்; a servere darting pain in the rectam attended with the passing of urine in drops (சா.அக.).

**த.வ. எண்சூலை.**

*[அட்ட(ம்) + சூலை.]*

*[**Skt.** aṣṭan>த. அட்ட(ம்).]*

சூல் > சூலை >**Skt.** sūlā.

**அட்டதந்திரவாதம்** *aṭṭa-tandira-vādam,* பெ. (n.) உணர்ச்சியற்று, வாய் நீர் கசந்து, பற்கிட்டி, மூச்சற்றுப் பிணத்தைப் போற்கிடக்கச் செய்யும் ஓர் ஊதை (வாத) வளி நோய்; a nervous affection marked by loss of consciousness, bitter taste, lock jaw, breathlessness, and prostration, *Asthenia* (சா.அக.).

**அட்டதளம்** *aṭṭa-taḷam,* பெ.(n.) எட்டு இதழ்களையுடைய தாமரைப் பூ; a lotus flower with eight petals (சா.அக.).

**த.வ. எட்டிதழ்.**

*[அட்டம் + தளம்.]*

*[**Skt.** aṣṭan>த. அட்டம்]*

*தள் → தளம் >* ***Skt.*** *tala.*

**அட்டதற்கம்** *aṭṭa-dargam,* பெ.(n.) இலவங்கப்பூ; the flower of the clove tree, *Carophyllum aromaticus* (சா.அக.).

**அட்டதா** *aṭṭadā,* பெ.(n.) 1. எட்டுப்பிரிவு; eight sections or divisions. 2. எண்மடங்கு; eight times (சா.அக.).

*[**Skt.** aṣṭan>த. அட்டதா.]*

**அட்டதாதிகம்** *aṭṭa-tādigam,* பெ.(n.) சிறுகொன்றை; small leaved cassiatree, *Cassia fistvea* (சா.அக.).

**அட்டதாது** *aṭṭa-tādu,* பெ.(n.) வெள்ளி, பொன், செம்பு, இரும்பு, வெண்கலம், தராவங்கம், வெள்ளடம் (துத்தநாகம்) ஆகிய எண்வகை மாழை (உலோகம்)கள்; the eight kinds of minerals such as gold, silver, copper, iron, bellmetal, the dark metal (of copper and spelter), lead or tin and zinc (சா.அக.).

**த.வ. எண்மாழை.**

*[அட்டம் + தாது.]*

*[**Skt.** aṣṭan>த. அட்ட(ம்).]*

**அட்டதாய்** *aṭṭatāy,* பெ.(n.) சரமூலம், கொடிவேலி, எருக்கு, நெருஞ்சில், மாவிலங்கு, முதலிய தாயைப் போன்ற எண்வகை மூலிகைகள்; the eight kinds of mother drugs such as laburnam, lead wort, mudar, calrop, garlic pear, etc. (சா.அக.).

*[அட்டம் + தாய்.]*

*[**Skt.** aṣṭan>த. அட்டம்.]*

தம் + ஆய் > தாய்.

**அட்டதானப்பரிட்சை** *aṭṭadāṉa-p-paritcai,* பெ.(n.) மருத்துவர்கள், நோயாளிகளின் நோய் நாடிப் பார்க்கும் போது நாடி, முகம், மலம், சிறுநீர் (அமுரி), கண், நாக்கு, உடம்பு, குரல் (தொனி), முதலியவற்றைக் கவனித்து தெரிந்து கொள்ள வேண்டிய செய்திகள்; the examination of a patient in the following eight points with a view to correct diagnosis namely pulse, facial expression, stool, urine, eyes, tongue, the body in general and the voice, objective signs (சா.அக.).

**த.வ. எட்டிடத்தெரி.**

*[அட்டம்+தானம்+பரிட்சை.]*

*[**Skt.** aṣṭan > த. அட்ட(ம்), **Skt.** parīkṣit> த. பரிட்சை.]*

*தா→தானம் > **Skt.** tāna.*

**அட்டதானம்** *aṭṭadāṉam,* பெ. (n.) உடம்பிலுள்ள எட்டு இடங்கள்; the eight situations in the body, viz, pulse, face, faces, urine, eye, tongue, body and voice (சா. அக.).

**த.வ. எட்டிடம்.**

*[அட்ட(ம்) + தானம்.]*

*[**Skt.** aṣṭan > த. அட்டம்]*

*தா→தானம் > **Skt.** tāna.*

**அட்டதிக்கயம்** *aṭṭa-tikkayam,* பெ.(n.) எண்திசைகளில் காவல் புரியும் யானைகள்; elephants guarding the eight points of the compass.

**த.வ. எண்திசையானை.**

*[அட்டம் + திக்கு + கயம்.]*

*[**Skt.** aṣṭan> த. அட்டம்.]*

*கய>கயம் > **Skt.** gaja.*



**அட்டதிக்கு** *aṭṭa-tikku,* பெ.(n.) எண்திசை; the eight points of the compass.

**த.வ. எண்டிசை.**

*[அட்டம் + திக்கு.]*

*[**Skt.** aṣṭan> த. அட்டம்.]*

**அட்டதிக்குப்பாலகர்** *aṭṭa-tikku-p-pālagar,* பெ.(n.) எட்டுத் திசைகளைக் காப்பதாக வடநூலார் கருதும் இந்திரன், அக்கினி, எமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், வடகீழ் திசையோன் (ஈசானன்) முதலானோர்; regents of the eight points of the compass, as world.

**த.வ. எண்திசைக்காவலர்.**

*[அட்ட + திக்கு + பாலகர்.]*

*[**Skt.** aṣṭan > த. அட்ட(ம்).**Skt.** pālaka > த. பாலகர்.]*

**அட்டநவகண்டம்** *aṭṭanava-kaṇḍam,* பெ.(n.) பழு வெலும்பு; rib-bone (சா.அக.).

**அட்டநாகபந்தம்** *aṭṭa-nāga-pandam,* பெ.(n.) சித்திரபா வகை; metrical composition which is fitted into a diagram representing eight snakes.

*[அட்டம் + நாகம் + பந்தம்.]*

*[**Skt.** aṣṭan> த. அட்டம்.]*

*நகர்→நாகம் > **Skt.** nāga.*

**அட்டபதபத்திரம்** *aṭṭapada-paṭṭiram,* பெ.(n.) பொற்கூடு; gold leaf (சா.அக.).

**அட்டபந்தம்** *aṭṭa-pandam,* பெ.(n.) கடவுள் சிலைகள் அசைவற்றிருக்கும்படி அடியிடத்துச் சாத்தப்படும், ஒரு வகைக் கலவைச்சாந்து; a kind of prepared cement. used to fix the stone idol firmly at its base.

*[அட்ட + பந்தம்.]*

*[**Skt.** aṣṭan> த. அட்டம்.]*

*பற்று→பத்து→ பந்து→பந்தம் > **Skt.** bandha.*

**அட்டபந்தனம்** *aṭṭa-pandaṉam,* பெ.(n.) தீங்குவராமல் தடுப்பதற்குத் திக்குத் தேவதைகளை மந்திரத்தால் எண் திசைகளிலும் நிறுத்துகை (சிந்தா. நி. 75.); posting by incantations the regents of the eight cardinal points round a place to ward of evil.

**த.வ. எண்கட்டு.**

*[அட்டம் + பந்தனம்.]*

*[**Skt.**aṣṭan > த. அட்டம்.]*

*பந்தம் > **Skt.** bandha→bandhana.*

**அட்டபரிசம்** *aṭṭa-parišam,* பெ.(n.) **அட்டமெய்ப் பரிசம்** பார்க்க; see *aṭṭa-mey-p-parišam. தட்டல், பற்றல், தடவல், தீண்டல், குத்தல், வெட்டல், கட்டல், ஊன்றல் (பிங்.).*

**த.வ. எண்வகைமெய்யுணர்வு.**

*[**Skt.** aṣṭan + sparišа> த. அட்டபரிசம்.]*

**அட்டபாதம்** *aṭṭa-pādam,* பெ.(n.) 1. எட்டுக்கால் பூச்சி; any eight legged insect. 2. சிலந்திப்பூச்சி; the spider (சா.அக.).

**த.வ. எண்காலி.**

*[**Skt.** aṣṭan > த. அட்டம்]*

*பதி→பதம்→பாதம்> **Skt.** pāda.*



**அட்டபாலகர்** *aṭṭa-pālagar,* பெ.(n.) **அட்டதிக்குப்பாலகர்** பார்க்க; see *aṭṭa-tikku-p-p-pālagar. "அட்டபாலகரும் வசுக்களும்" (நல் பாரத. குமாரச். 103.).*

*[**Skt.** aṣṭan + pālaka>த. அட்டபாலகர்.]*

**அட்டபிரமி** *aṭṭa-pirami,* பெ.(n.) பெரும் பிரமி; a large species of பிரமி, a plant, *Gratiola monieri* (சா.அக.).

**அட்டபுகைச்சொல்** *aṭṭa-pugai-c-col,* பெ.(n.) ஆமணத்தி; a concretion found in the stomach and the intestines of some animals such as cow etc., bezoar (சா.அக.).

**அட்டபுட்பம்** *attaputpam*, பெ.(n.) 1. எண்வகை மலர்கள்; eight kinds of flowers used in daily worship. *"புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தியாவர்த்தம்', நீலோற்பலம், பாதிரி, அலரி, செந்தாமரை' (புட்ப. 20).* 2. எண்வகை அறங்கள்; eight virtues necessary for mental worship. *"கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு" (ஆசாரிய).*

த.வ. எண்மலர்.

*[Skt. astan + puspa>த. அட்டபுட்பம்.]*

**அட்டம்**[1] *attam*, பெ.(n.) வழிபாட்டு வகை(R); a kind of obeisance.

*[Skt. astan > த. அட்டம்.]*

**அட்டம்**[2] *attam*, பெ.(n.) எட்டு; eight (சா.அக.).

*[த. எட்டு>Skt. astan > த. அட்டம்.]*

**அட்டம்விதை** *attam-vidai*, பெ.(n.) வாதுமைப் பருப்பு; almond kernels (சா.அக.).

**அட்டமக்குறி** *attama-k-kuri*, பெ.(n.) நோயாளிகளிடம் கவனிக்க வேண்டிய எட்டுவகைக் குறிகள்; the eight symptoms to be studied in a patient before treatment examination of 1. hand (pulse), 2. the two eyes, 3. facial expression, 4. condition of teeth, 5. condition and colour of the tongue, 6. faeces, 7. urine, 8. the body as a whole.

த.வ. எண்குறி.

*[அட்டமம் + குறி.]*

*[Skt. astan>த. அட்டமம்.]*

*குல்→குறு→குறி.*

**அட்டமகசித்துக்குளிகை** *attamagacittu-k-kuligai*, பெ.(n.) எட்டு முறை சாரணை தீர்ந்த ஈரப்பதமான இதளியக் குளிகை; a mercurial pill animated eight times and endowed with the power of taking one through the etheric region (சா.அக.).

*[அட்டமக+சித்து+குளிகை.]*

*[Skt. astamaka>த. அட்டமக(ம்).]*

*செத்து→சித்து > Skt. cit.*

*குளம்→குளிகை>Skt. gulikā.*

**அட்டமகாரோகம்** *attamagā-rōgam*, பெ.(n.) **அசாத்தியரோகம்** பார்க்க; see *asāttiya-rōgam* (சா.அக.).

*[அட்ட+மகா+ரோகம்.]*

*[Skt. asta>த.அட்ட.]*

*[மா>Skt. mahā > த.மகா.]*

**அட்டமங்கலம்** *atta-mankalam*, பெ.(n.) 1. எண்வகை மங்கலப் பொருள் (பிங்.); the eight auspicious objects. *"கவரி, நிறைகுடம், கண்ணாடி, தோட்டி, முரசு, விளக்கு, பதாகை, இணைக்கயல்"* 2. எட்டுறுப்பில் வெண்மை யுடைய குதிரை (திருவாலவா. 28, 68.) horse which has auspicious white marks on its chest, its four hoofs, tail, face and head. 3. சிற்றிலக்கிய வகை (இலக்.வி.843.); a benedictory poem of eight stanzas in *āsiriyaviruttam* metre.

த.வ. எண்மங்கலம்.

*[அட்டம்+மங்கலம்.]*

*[Skt. astan>த. அட்டம்.]*

*[மங்கல்→மங்கலம்>Skt. mangala.]*

**அட்டமச்சனி** *attama-c-cani*, பெ.(n.) நிலவு (சந்திர) நல்லோரைக்கு எட்டாமிடத்து நிற்குங் காரி (சனி); (Astrol) saturn in the eighth house from that of the *sandira-lakkinam*, in which its influence is deemed most malignant.

த.வ. எட்டாங்காரி.

*[Skt. astama + sani> த. அட்டமச்சனி.]*

**அட்டமசுத்தி** *attama-sutti*, பெ.(n.) கொண்ட நல்லோரைக்கு எட்டாமிடத்து, எந்தக் கோளுமில்லா திருக்கை (விதான. மைந்தர்வி. 13); (Astrol) eighth house from a specified lagna being unoccupied by any planet.

**அட்டமம்** *aṭṭamam,* பெ.(n.) எட்டாவது; eighth sign or place or position. *"ஒத்தவுதயத்துக் கட்டமத்தே நிற்கு மோரதிபன்" (விதான. குணா. 87.).*

*[Skt. aṣṭama > த. அட்டமம்.]*

**அட்டமாசித்தி** *aṭṭamā-šitti,* பெ.(n.) எண்பெரும்பேறு; the eight super natural powers altainable by yoga.

*[அட்டம் + மா + சித்தி.]*

*[Skt. aṣṭan>த. அட்டம்.]*

*சித்து→சித்தி.*

**அட்டமாசித்திமூலி** *aṭṭamā-šitti-mūli,* பெ.(n.) 1. அட்டகரும சித்தி, இழுத்தல், ஏவுதல் முதலிய எட்டுவகை மந்திரங்களை ஏற்குங்கால் பயன்படுத்தும் மூலிகைகள்; roots of plants possessing psychic virtues, used in the performance of the eight kinds of magic. 2. மயக்குவதற்காகப் பயன்படும் வடக்கே ஓடிய சங்கம் வேர்; the root of monetia branched out towards the north, used in magic to bring a woman. or an enemy to one's side. 3. எண்வகைப் பேறுகளைப் பெற வேண்டி பயன்படுத்தும் மந்திர ஆற்றல் வாய்ந்த மூலிகைகள்; psychic plants used in the attainment of the eight superhuman powers (சா.அக.).

**த.வ.** எண்பேற்றுமூலி.

*[அட்டம் + மா + சித்தி + மூலி.]*

*[Skt. aṣṭan > த. அட்டம்.]*

**அட்டமாந்தம்** *aṭṭa-māndam,* பெ.(n.) குழந்தைகளுக்குச் செரியாமையினால் உண்டாகும் எட்டுவகை மாந்த நோய்கள்; the eight kinds of children's diseases arising from indigestion. viz. 1. செரியாமாந்தம்; indigestion. 2. போர்மாந்தம்; visceral obstruction. 3. மலடிமாந்தம்; disgust of milk. 4. பெரு மாந்தம்; flux and cold. 5. வளி (வாத) மாந்தம்; inflation. 6. சுழிமாந்தம்; curling of eyes. 7. வலி மாந்தம்; convulsions or fits. 8. கணமாந்தம்; dysentery and fever (சா.அக.).

**த.வ.** எண்மாந்தம்.

*[அட்டம் + மாந்தம்.]*

*[Skt. aṣṭan>த. அட்டம்.]*

*மந்தம்→மாந்தம்* > **Skt.** *mānda.*

**அட்டமி** *aṭṭami,* பெ.(n.) எட்டாம் நாள் (திதி); the eighth tithi. *"அட்டமியு மேனை யுவாவும்" (ஆசாரக். 48.).*

**த.வ.** எண்மி.

*[Skt. aṣṭami > த. அட்டமி.]*

**அட்டமிகை** *aṭṭamigai,* பெ.(n.) அரைப்பலம்; a measure of weight = 1/2 palam. *"தவித்தனிக்கங் கட்டமிகை வெவ்வேறாக" (தைலவ. தைல. 54.).*

*[Skt. aṣṭamikā > த. அட்டமிகை.]*

**அட்டமூர்த்தம்** *aṭṭa-mūrttam,* பெ.(n.) சிவனின் எண்வகை வடிவம்; the eight forms of *Šivaṉ.* (பூமி, நீர், நெருப்பு, வளி, வானம், சூரியன், நிலா, இயமானன்) *"வருமட்ட மூர்த்தமாம் வாழ்வே" (கந்தர் கலி. 65.).*

**த.வ.** எண்மேனி.

*[Skt. aṣṭan + mūrta> த. அட்டமூர்த்தம்.]*

**அட்டமூர்த்தி** *aṭṭa-mūrtti,* பெ.(n.) சிவன் (தேவா. 53, 8.); *Šivaṉ* as having *aṭṭa-mūrttaṉ,* q.v.

*[Skt. aṣṭan + mūrti>த. அட்டமூர்த்தி.]*

**அட்டமூலம்** *aṭṭamūlam,* பெ.(n.) எட்டுவகை மூலிகைகள்; the name given for a group consisting of the following eight drugs, viz. 1. according of Tamil siddha medicine either group (a) or (b) (a) 1. கண்டு பாரங்கி; cleodendron serratum. 2. காஞ்சொறிவேர்; tragia involucrata (root of) 3. கோரைக் கிழங்கு; cyperus rotandus. 4. சித்திரமூலம்; plumbago rosea; alias p. zeylanica.

5. சுக்கு; dry ginger. 6. நன்னாரி; sarasaparilla. 7. செவ்வியம் (மிளகு); black pepperi 8. அரத்தை; galanga (சா.அக.).

த.வ. எண்மூலி.

*[அட்டம் + மூலம்.]*

*[Skt. aṣṭan>த. அட்ட(ம்).]*

**அட்டமெய்ப்பரிசம்** *atta-mey-p-parišam,* பெ.(n.) சிற்சில செயல்களினால் ஏற்படும் உடம்பின் எட்டு வகையான உணர்ச்சிகள்; the eight sensations of the body arising from eight different kinds of actions, such as:- 1. ஊன்றல்; pressing. 2. கட்டல்; binding. 3. குத்தல்; stabbing or pricking. 4. தடவல்; rubbing. 5. தட்டல்; cutting. 6. பற்றல்; seizing. 7. வெட்டல்; cutting. 8. தீண்டல்; touching (சா.அக.).

த.வ. எண்மெய்யுறல்.

*[அட்டம் + மெய் + பரிசம்.]*

*[Skt. aṣṭan>த. அட்டம், Skt. spariša> த. பரிசம்.]*

**அட்டயோகம்**[1] *atta-y-ōgam,* பெ.(n.) எண்வகை ஓக நிலை; *yōga-consisting* eight forms of disiclpline *"மெய்ஞ்ஞானந் தரு மட்டயோகத் தவமே" (கந்தர்கலி. 65.).*

த.வ. எண்ஓகம்.

*[Skt. aṣṭan + yōga> த. அட்டயோகம்.]*

**அட்டயோகம்**[2] *atta-yōgam,* பெ.(n.) அரப்பொடி; iron filings (சா.அக.).

**அட்டலோகபற்பம்** *attalōga-parpam,* பெ.(n.) எண்வகை மாழைகளின் கலப்பு; calcined compound of eight metals. *எண் வகை மாழைகளாவன: பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, வெண்கலம், சங்கு, ஈயம், துத்தநாகம்.*

த.வ. எண்மாழைப் பொடிப்பு.

*[Skt. aṣṭan + lōha + bhasman > த. அட்டலோகப்பற்பம்.]*

**அட்டலோகம்** *atta-lōgam,* பெ.(n.) **அட்டதாது** பார்க்க; see *atta-tādu* (சா.அக.).

த.வ. எண்மாழை.

*[Skt. aṣṭan + lōha> த. அட்டலோகம்.]*

**அட்டவசியம்** *atta-vašiyam,* பெ.(n.) **அட்டமாசித்தி** பார்க்க; see *attamā-šitti* (சா.அக.).

த.வ. எண்வயம்.

*[அட்டம் + வசியம்.]*

*[Skt. aṣṭan>த. அட்ட(ம்).]*

*வயின்→வயம்→வசம்→வசி→வசியம்.*

**அட்டவசுக்கள்** *atta-vašukkal,* பெ.(n.) அனலன் முதலான எண்வகைக் குழு தெய்வங்கள்; the eight vasus, a class of deities.

த.வ. எண்தேவர்.

*[அட்டவசு + கள்.]*

*[Skt. aṣṭan + vasu>த.அட்டவசு.]*

**அட்டவத்தனாதி** *atta-vattanādi,* பெ.(n.) கடுகு; mustard (சா.அக.).

**அட்டவத்தி** *atta-vatti,* பெ.(n.) நெருஞ்சி, யானைநெருஞ்சில்; a thorny plant; large caltrop pedalium murex (சா.அக.).

**அட்டவர்க்கம்** *atta-varkkam,* பெ.(n.) **அட்டவருக்கம்** பார்க்க; see *atta-varukkam* (சா.அக.).

*[Skt. aṣṭan+varga> த. அட்டவர்க்கம்.]*

**அட்டவருக்கம்** *atta-varukkam,* பெ.(n.) எண்வகை மருந்துச்சரக்கு; a group of eight drugs viz- 1. இந்துப்பு; rock-salt-*Sodil chloridam.* 2. ஓமம்; bishop's weed-*Sison Ammi.* 3. கருஞ்சீரகம்; black cumin-*Negella sativa.* 4. சீரகம்; cumin seed-*Cuminum cyminum.* 5. சுக்கு; dry gingerzingiber officinales. 6. திப்பிலி; long pepper-*Piper longum.* 7. பெருங்காயம்; asafoetida-*Feraula foetida.* 8. மிளகு; pepper piper Nigram (சா.அக.).

த.வ. எண்சரக்கு.

*[Skt. aṣṭan + varga>த. அட்டவருக்கம்.]*

**அட்டவருக்கு** *atta-a-varukku,* பெ.(n.) **அட்டவருக்கம்** பார்க்க; see *atta-varukkam* (சா.அக.).

*[Skt. astan+varga>த. அட்டவருக்கு.]*

**அட்டவிகாரம்** *atta-vigāram,* பெ.(n.) மாந்தர்க்குண்டான எண்வகைத் தீய குணங்கள்; the eight kinds of bad qualities in man viz.:- 1. காமம்; lust. 2. உட்பகை (குரோதம்); hatred. 3. பித்து; madness. 4. பொறாமை (மாற்சரியம்); envy. 5. இவறன்மை (உலோபம்); avarice. 6. பெரு வேட்கை (மோகம்); sensuality. 7. விரைவு; severity. 8. இடும்பு; pride (சா.அக.).

**த.வ. எண்குணக்கேடு.**

*[Skt. astan + vi-kāra> த. அட்டவிகாரம்.]*

**அட்டவித்தியேசுவரர்** *atta-vittiyēšu-varar,* பெ.(n.) அயனந்தர், சூக்குமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திருமூர்த்தி, நீலகண்டர், சிகண்டி என எண்வகையராய் படைப்புத் தொழிலை இறைவனேவற்படி நடத்துவோர் (சி. சி. 8, 2); the eight agents who perform the *pañša-kiruttiyam* under the orders of *išvara*, viz., *anandar, sūkșmar, šivōttamar, ēganēlliram, tirimurtti, nīlakandar, šikandi.*

**த.வ. எண்கருமம்.**

*[Skt. astan + vidyēšvara> த. அட்டவித்தி யேசுவரர்.]*

**அட்டவிதபரீட்சை** *atta-vita-parīttcai,* பெ.(n.) நோயாளியின் உடல் தொடுவுணர்வு அல்லது முகம், குரல், கண், மலம், சிறுநீர், நாநாடியாகிய எட்டனையும் தீர ஆய்வு செய்து நோயை அறிகை; diagnosis of a disease, by examining the state of *udal sparišam* or mugam, kural, *kan*, malam, *mūttiram, nānādi*, of a patient.

**த.வ. எண்வகை நோட்டம்.**

*[Skt. astan+ vidhā + pariksā> த. அட்டவித பரீட்சை.]*

**அட்டவீரட்டம்** *atta-virattam,* பெ.(n.) எட்டு வீரட்டாணப் பதிகள்; eight places celebrated as the scenes of *Šiva's* exploits. (கண்டியூர், கடலூர், அதிகை, வழுவூர், பறியலூர், கோவலூர், குறுக்கை. விற்குடி.).

*[அட்ட(ம்) + வீரட்டம்.]*

*[Skt. astan>த. அட்ட(ம்).]*

*வீரம்+தானம் >வீரட்டானம்>***Skt.** *vira-sthāna.*

**அட்டவூறு** *atta-v-ūru,* பெ.(n.) சருச்சரை, சீர்மை, தண்மை, திண்மை, நொய்ம்மை, மென்மை, வன்மை, வெம்மை என எண்வகைப்பட்ட உணர்ச்சி (யாழ். அக.); the sensation to touch, of eight kinds, viz., *šaruccrai, širmai, tanmai, tinai, noymmai, menmai, vanmai, vemmai.*

**த.வ. எண்உணர்வு.**

*[அட்ட(ம்) + ஊறு.]*

*[Skt. astan>த. அட்டம்.]*

*உல் → உறு → ஊறு.*

**அட்டவெச்சம்** *atta-v-eccam,* பெ.(n.) உடம்பிற் காணப்படும் எட்டுவகையான குறைபாடுகள்; the eight kinds of defects found in the body viz. குருடு, செவிடு, ஊமை, பேடு, இருகை, இருகால் முடம்; blindness, deafness, dumbness, impotency, lameness, lacking of two hands and two legs (சா.அக.).

**த.வ. எண்குறை, எண் ஒச்சம்.**

*[அட்ட(ம்) + எச்சம்.]*

*[Skt. astan>த. அட்ட(ம்).]*

*எஞ்சு→எச்சு→எச்சம்.*

**அட்டவெற்றி** *atta-verri,* பெ.(n.) வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை என வெற்றியைத் தரும் எட்டுவகைப் போர்கள் (யாழ். அக.); the eight kinds of fight leading to victory *vetci, karandai, vañji, kāñji, nocci, uliñai, tumbai, vāgai.*

த.வ. எண்வகைப் போர்.

*[அட்ட(ம்) + வெற்றி.]*

***[Skt.** asṭan > த. அட்டம்.]*

*வெல்→வெற்றி.*

**அட்டன்** *aṭṭaṉ,* பெ.(n.) எண் வடிவமான சிவபெருமான் (தேவா. 855, 8.); ***Śivaṉ,*** as having *aṭṭa-mūrttam* q.v.

த.வ. எண்வடிவன்.

***[Skt.** asṭan > த. அட்டன்.]*

**அட்டனாதிப்பூடு** *aṭṭaṉādi-p-pūḍu,* பெ.(n.) பெருந்தும்மட்டி; a large variety of bitter apple cucumis colocynthis (சா.அக.).

**அட்டாங்கசங்கிரகம்** *aṭṭāṅga-śaṅgiragam,* பெ.(n.) இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் 'வாக்படாச்சாரி' எழுதிய ஓர் ஆயுள் வேதநூல்; a work on medicine written about 2000 years ago by Vakbhatachary, an authority on ayurveda (சா.அக.).

***[Skt.** asṭāṅga+śaṅgraha>த.அட்டாங்க சங்கிரகம்.]*

**அட்டாங்கம்** *aṭṭāṅgam,* பெ.(n.) உடம்பிலுள்ள எண் வகை உறுப்புகள்;– the eight members of the body. viz- தலை, ஒன்று; one head. கை, இரண்டு; two hands. கால், இரண்டு; two legs. செவி, இரண்டு; two ears. மார்பு அல்லது மெய், ஒன்று; chest or the trunk (சா.அக.).

த.வ. எண்ணுறுப்பு.

***[Skt.** asṭāṅga > த. அட்டாங்கம்.]*

**அட்டாங்கநமக்காரம்** *aṭṭāṅka-namakkāram,* பெ.(n.) இருகால், இருகை, இருதோள், மார்பு, நெற்றி என்ற எட்டுஉறுப்புகள்; the eight limbs of the body, viz., feet, hands, shoulders, breast and forehead.

த.வ. எண்ணுறுப்பு தொழுகை.

***[Skt.** asṭāṅga + namaskāra>த. அட்டாங்க நமக்காரம்.]*

**அட்டாங்கயோகம்** *aṭṭāṅga-yōgam,* பெ.(n.) மூச்சுக்கட்டுப்பாடு (பிராணயம்) இயமம், நெறி(நியமம்), இருக்கை (ஆசனம்), புலனடக்கம் (பிரத்தியாகாரம்), ஊழ்கம் (தியானம்), நினைவொருமை (தாரணை), அமைதி (சமாதி) ஆகிய எட்டு ஓகப் பயிற்சி நிலைகள்; the eight told yoga precises consisting of the restraint of the appeties, religious observances, position or porture of the body, breathing in a particular way, restraining the senses, silent meditation, fixing the mind on a member of the body, silen comtemplative worship.

த.வ. எண்வகை ஓகம்.

*[அட்டாங்க + ஓகம்.]*

***[Skt.** asṭāṅga > த.அட்டாங்கம்.]*

*ஓகம்* **> Skt.** *yōga.*

**அட்டாசிக்காய்** *aṭṭāśi-k-kāy,* பெ.(n.) சிறு தும்மட்டிக்காய்; a small species of bryonia; bitter apple, *Cucumis colocynthus* (சா.அக.).

**அட்டாட்சரவாசி** *aṭṭāṭcara-vāśi,* பெ.(n.) 1. எட்டு வகை அக்கர நோய்களைக் (ரோகங்களைக்) குணப்படுத்துவது; that which cures the eight kinds of aphathac. 2. ஆடாதோடை; a small shrub; winter cherry, *adathoda vasica* (சா.அக.).

***[Skt.** asṭā-akṣara+ vāsin>த. அட்டாட்ச வாசி.]*

**அட்டாதசகணம்** *aṭṭātaśa-gaṇam,* பெ.(n.) பதினெண் கணம்; the eighteen classes of celestial hosts.

*[அட்டாதச + கணம்.]*

***[Skt.** asṭādasan > த. அட்டாதசம்.]*

*குள்→கண→கணம்* **> Skt.** *gaṇa.*

**அட்டாதசகுணம்** *aṭṭādaśa-kuṇam,* பெ.(n.) உடம்பிற்குரிய பதினெண் குணங்கள்; the eigteen qualities attributed to the human

system viz. 1. வியப்பு; surprise. 2. இன்பம்; pleasure. 3. உவகை; delight. 4. உறக்கம்; sleep. 5. துன்பம்; grief. 6. கையறவு; helplessess. 7. நரை; greyness. 8. நினைப்பு; thought. 9. நீர் வேட்டடல்; thirst. 10. நோய்; disease. 11. பசி; hunger. 12. அச்சம்; fear. 13. பிறப்பு; birth. 14. கொள்கை, நெளி; self conceit. 15. சாவு; death. 16. வியர்த்தல்; perspiration. 17. வெகுளி; anger. 18. வேண்டல்; desire or avarice (சா.அக.).

**த.வ. பதினெண்குணம்.**

*[அட்டாதச + குணம்.]*

***[Skt. asṭādašan > த. அட்டாதசம்.]***

*கொள்→கொணம்→குணம்* > ***Skt.*** *guṇa.*

**அட்டாதசம்** *aṭṭādašam,* பெ.(n.) பதினெட்டு; eighten (சா.அக.).

***[Skt. asṭādašan > த. அட்டாதசம்.]***

**அட்டாதசமூலம்** *aṭṭādašamūlam,* பெ.(n.) பதினெட்டு வகை மூலிகை; the eighteen kinds of medicinal plants viz. 1. எருக்கு; giant swallow wort *Calotropis gigantea*. 2. கண்டங்கத்திரி; yellow berried night shade, *Solanum zanthocarpam*. 3. கரந்தை; sweet basil, *Olimum Basilicum*. 4. கறிமுள்ளி; black thorny shrub *Solanum indicam*. 5. குமிழ்; a thorny shrub, *Gmelina arborea*. 6. கொடிவேலி; lead wort, *Plumbago-zeylanica*. 7. சங்கங்குப்பி; a shrub, *Valkameriainermis*. 8. சிற்றாமல்லி; small jasmina, *Jasminam fragrans*. 9. தழுதாழை; a plant, *cleodendron phlomoides*. 10. தூதுளை; a thorny plant, *Solanum trilobatam*. 11. நன்னாரி; Indian sarasaparilla *Hemidesmus indicas*. 12. நொச்சி; willo-leaves *Justicia vitex negando*. 13. பாதிரி; trumpet flower tree *Bignomia chelonoides*. 14. பேராமல்லி; large jasmine, *Jasminam undulatam*. 15. மாலிங்கம்; a tree, garlic pear, *Crataeve Roxbarghil*. 16. முருங்கை; dramstick tree, *Anoma moringa*. 17. வில்வம்; tree, *Crataeva marmelos* alias *Feronia pellucida*. 18. வேர்க்கொம்பு; dried ginger, *Zingiber officinale* (சா.அக.).

**த.வ. பதினெண்மூலிகை.**

*[அட்டாதசம் + மூலம்.]*

***[Skt. asṭādašan>த. அட்டாதசம்.]***

**அட்டாதுட்டி** *aṭṭā-duṭṭi,* பெ.(n.) அடாவடி; perversity, abusive language. *"அட்டாதுட்டிகள் பேசி"* ***(இராமநா. ஆரணி. 9.)*** (இவ.).

**தெ.** அட்டாதிட்டி.

**த.வ. முறைகேடு, வக்கரிப்பு.**

**அட்டாதுட்டம்** *aṭṭā-tuṭṭam,* பெ.(n.) **அட்டாதுட்டி** (வின்.) பார்க்க; see *aṭṭātuṭṭi.*

**தெ.** அட்டாதிட்டமு.

**அட்டாபாதம்** *aṭṭā-pādam,* பெ.(n.) 1. எட்டுக் கால் பூச்சி; eight legged insect. 2. சிலந்திப் பூச்சி; spider. 3. பொன்; gold. 4. சரபப் புள்; a fabulous eight legged bird supposed to have the faculty of attacking a lion (சா.அக.).

**த.வ. எண்காலி.**

*[அட்டா + பாதம்.]*

***[Skt. asṭan>த. அட்டா.]***

*பதி→பதம்→பாதம்* > ***Skt.*** *pāda.*

**அட்டாமுகம்** *aṭṭāmugam,* பெ.(n.) 1. இகழ்ச்சி, கவலை, ஐயம் இவற்றாற் கோணிய முகம்; face turned aside in contempt, distraction or perplexity. 2. சுளித்தமுகம்; wry face.

**த.வ. கோணல்முகம்.**

*[அட்டா + முகம்.]*

***[Skt. asṭa>த. அட்டா.]***

*முகம்* > ***Skt.*** *mukha.*

**அட்டாவதானம்** *aṭṭāvatāṉam,* பெ.(n.) ஒரே நேரத்தில் எண்வகை வினைகளில் நினைவு

செலுத்துகை; art of attending to eight matters at a time. *"அட்டாவதானமுந் தொல்காப்பியமு மகப்பொருளும்" (தனிப்பா. i, 223, 13.).*

**த.வ. எண்நினைவாற்றல், கண்கவனகம்.**

*[Skt. aṣṭan+avadhāna>த. அட்டாவதானம்.]*

**அட்டாவதானி** *aṭṭāvatāṉi,* பெ.(n.) ஒரே நேரத்தில் எட்டு வினைகளில் நினைவு செலுத்துபவர்; one skilled in the art of attending to eight matters at the time. *"அட்டாவதானி சொக்கன்" (தஞ்சைவா. உரைச்சிறப்.).*

**த.வ. எண்கவனகர்.**

*[Skt. aṣṭan+avadhānin> த. அட்டாவதானி.]*

**அட்டி** *aṭṭi,* பெ.(n.) அதிமதுரம்; wild liquorice-abrus precatorius (சா.அக.).

*[Skt. yaṣṭi>த. அட்டி.]*

**அட்டிகதாகம்** *aṭṭiga-dāgam,* பெ.(n.) **அதிமதுரம்** பார்க்க; see *adi-maduram.* (சா. அக.)

**அட்டிகாலா** *aṭṭi-kālā,* பெ.(n.) **அட்டிகதாகம்** பார்க்க; see *aṭṭiga-dāgam* (சா.அக.).

**அட்டிதாமதம்** *aṭṭi-tāmadam,* பெ.(n.) சிறுசீரகம்; cumin seed, *Cuminum cyminum* (சா.அக.).

**அட்டிமதுசாரம்** *aṭṭi-madu-šāram,* பெ.(n.) 1. அதிமதுரம்; liauorice a gulecrirrhiza glabra. 2. நாட்டு அதிமதுரம் அல்லது குன்றி வேர்; Indian liquorice root, *Abrus precatorius* (சா.அக.).

*[Skt. yaṣṭi-madhukā > த. அட்டிமது.]*

**அட்டிமதுரம்** *aṭṭi-maduram,* பெ.(n.) பூடுவகை (பு.வெ. 12, 8. உரை.); liquorice-plant.

**த.வ. அதிமதுரம்.**

*[Skt. yaṣṭi-madhukā > த. அட்டிமதுரம்.]*

**அட்டிமதுரி** *aṭṭi-maduri,* பெ.(n.) **அட்டிமதுசாரம்** பார்க்க; see *aṭṭi-madu-šāram* (சா.அக.).

*[Skt. yaṣṭi+madhukā> த. அட்டிமதுரி.]*

**அட்டிமாமதி** *aṭṭi-māmadi,* பெ.(n.) கரு நொச்சி; a black species of purification plant, *Justicia gendarussa* (சா.அக.).

**அட்டியம்** *aṭṭiyam,* பெ.(n.) **அதிமதுரம்** பார்க்க; see *adi-maduram* (சா.அக.).

*[Skt. yaṣṭi>த. அட்டியம்.]*

**அட்டியோசம்** *aṭṭi-yōšam,* பெ.(n.) அரப்பொடி; iron filings (சா.அக.).

**அட்டிரபாணிதம்** *aṭṭira-pāṇidam,* பெ.(n.) சிவப்புப் புளியம் பிரண்டை; a red species of sour wild vine, *Vitis setosa* (சா.அக.).

**அட்டிரம்** *aṭṭiram,* பெ.(n.) இலுப்பை; long leaved bassia, *Bassia longifolia* (சா.அக.).

**அட்டிலம்** *aṭṭilam,* பெ.(n.) வீக்கம்; swelling (சா.அக.).

*[Skt. aṣṭā>த. அட்டிலம்.]*

**அட்டிலாரோகம்** *aṭṭilā-rōgam,* பெ.(n.) **அட்டிலாவாதம்** பார்க்க; see *aṭṭila-vādam* (சா.அக.).

*[Skt. aṣṭā + rōga>த. அட்டிலாரோகம்.]*

**அட்டிலாவாதம்** *aṭṭilā-vādam,* பெ.(n.) தொப்புளின் கீழாகச் சிறுநீர்ப்பை, எருவாய்க்கிடையே காற்று தங்கி, அதிகரித்துச் சிறுகல்லைப் போல் சுமையாகவும், கெட்டியாகவுமுள்ள கட்டியை எழுப்பும் வளிநோய்; a disease in which the deranged and aggravated bodily vayu incarcerated or lodged in the region between the bladder and the anus, develops a thick lumpy tumour like a pebble, which is hard and non shifting in its character (சா.அக.).

**த.வ. வளிநோய்க்கட்டி.**

*[Skt. aṣṭi + vāta> த. அட்டிலாவாதம்.]*

**அட்டீலிகம்** *aṭṭīligam,* பெ.(n.) கல்; stone (சா.அக.).

**அட்டீலிகாரோகம்** *aṭṭīligā-rōgam,* பெ.(n.) ஆண்குறியில் புண்ணை (விரணத்தை)ப் பிறப்பித்து, அதில் குழி விழுந்து கல்லைப் போல்

கட்டியாக இருக்கும்படிச் செய்யும் ஒருவகைக் குய்யநோய்; a disease of the penis causing deep ulcers with hardened muscles all round it (சா.அக.).

த.வ. குய்யப்பிணி.

*[Skt. asti + rōga>த. அட்டீலிகாரோகம்.]*

**அடஞ்சாதி—த்தல்** *aḍañ-šāti-*, 4 செ.கு.வி.(v.i.) வன்மங்கொள்ளுதல்; to maintain a stubborn, unyielding spirit of opposition.

*[Skt. haṭha+sad>த. அடஞ்சாதி–.]*

**அடத்தி** *aḍatti*, பெ.(n.) 1. மொத்த வணிகம்; buying and selling in lots, wholesale. 2. வாசி (வின்.); premium for ready money. 3. தரகு (இ.வ.); commission or agency business.

*[U. arhat > த. அடத்தி.]*

**அடத்திச்சீட்டு** *aḍatti-c-ciṭṭu*, பெ.(n.) ஒரு செட்டியார் மற்றொரு செட்டிக்கு இவ்வளவு தொகைவரை கொடுக்கலா மென்று எழுதிக் கொடுக்குஞ் சீட்டு (இ.வ.); note given by one Chetti to another, showing the amount within which to draw upon him for funds in trading.

*[அடத்தி + சீட்டு.]*

*[U. arhat > த. அடத்தி.]*

**அடதாளம்** *aḍa-tāḷam*, பெ.(n.) தாளவகை (பரத. தாள. 23.); (Mus.) variety of time-measure.

*[அட(ம்) +தாளம்.]*

*[Skt. aṭa>த. அடம்.]*

*தாள்→தாளம்* > **Skt.** *tāla.*

**அடந்தாளம்** *aḍandāḷam*, பெ.(n.) தாளவகை (வின்.); (mus.) a time-measure

**அடயோகம்** *aḍayōgam*, பெ.(n.) ஒக வகை; kind of *yōga* involving several disciplinary exercises of a taxing nature. *"அடயோகத்தினால் வினை தொலைத்து"* *(திருக்காளத். பு. 18, 5.).*

*[அட+ யோகம்.]*

*[Skt. hatha > த. அடம்.]*

*ஒகம்* > **Skt.** *yōga.*

**அடவாதி** *aḍavādi*, பெ.(n.) 1. பிடிவாதக்காரன்; obstinate person. 2. தீராப்பகையுள்ளவன்; revengeful person.

*[Skt. haṭha-vādin > த. அடவாதி.]*

**அடாணா** *aḍāṇā*, பெ.(n.) ஒரு பண்; (mus.) specific melody-type.

*[U. aḍhānā > த. அடாணா.]*

**அடாத்தியம்** *aḍāttiyam*, பெ.(n.) முறைகேடு (வின்.); impropriety, injustice.

*[Skt. haṭhāt > த. அடாத்தியம்.]*

**அடாத்து** *aḍāṭṭu*, பெ.(n.) 1. வலக்காரம் (வின்); violence, force. 2. அவமதி (வின்.); insult, provocation. 3. வழியின்மை (இ.வ.); unjustifiableness.

*[Skt. haṭhāt > த. அடாத்து.]*

**அடாலத்து** *aḍālattu*, பெ.(n.) முறைமன்றம் (P.N.); court of justice.

த.வ. நயன்மன்றம்.

*[U. aḍālat > த. அடாலத்து.]*

**அடாற்காரம்** *aḍāṟkāram*, பெ.(n.) வலக்காரம்; that which is done by force, by violence. *"அடாற்காரத்தா லரிதாகப் பயிலுதலின்"* *(திருக்காளத். பு. 18, 10.).*

த.வ. வல்லந்தம்.

*[Skt. haṭhātkāra > த. அடாற்காரம்.]*

**அடித்தி** *aḍitti*, பெ.(n.) வணிக ஆணையாளர் (C.G.); mercantile correspondent or agent.

*[U. arhat > த. அடித்தி.]*

**அடித்திவியாபாரம்** *aḍitti-viyābāram*, பெ.(n.) மொத்த வணிகம் (C.G.); wholesale dealings.

*[U. arhat+ Skt. vyāpāra> த. அடித்தி வியாபாரம்.]*

**அண்டக்கமர்** *aṇḍa-k-kamar,* பெ.(n.) மண்டையோட்டின் பிளப்பு; fissure of the skull-cranial fissure (சா.அக.).

**த.வ. மண்டைப்பிளப்பு.**

*[அண்டம் + கமர்.]*

*[**Skt.** aṇḍa> த. அண்ட.]*

*கவல் > கவர் > கமர்.*

**அண்டக்கல்** *aṇḍa-k-kal,* பெ.(n.) 1. அண்டக்கல் எனப்படும் சிறு சுண்ணாம்புக் கற்கள்; (இது புரட்டாசி முதல், கார்த்திகைக்குள் உவர்நிலத்தில் இடுப்பளவு பள்ளம் தோண்டிப் பார்க்க, பூ நீறானது மாறிப் பல்லி அல்லது ஓணான் முட்டைகளைப் போலிருக்கும்) இதுவே an extensive group of secondary limestones compossed of rounded paricles like the eggs of reptiles-oolite. They are generally found 3 feet below the soil of fuller's earth between the months of September and November. 2. சிற்றண்டம், பேரண்டம், நடுவண்டம், ஆணைக்கல், காரசாரக்கல், நடுமையக் கல்லெனப் பல வகையாய் குறியீட்டில் சொல்லப்படும் மண்ணில் உண்டாகும் ஒரு நஞ்சுக்கல்,; a speices of limestone composed of globules clustered together and found underneath the calcareous soil. It is known by several technical names as mentioned above (சா.அக.).

*[அண்ட(ம்) + கல்.]*

*[**Skt.** aṇḍa > த. அண்டம்.]*

*உல் > குல் > கல்.*

**அண்டக்கல்லுற்பத்தி** *aṇḍa-k-kall-uṟ-patti,* பெ.(n.) சிறு சுண்ணாம்புக் கற்களின் பிறப்பு; the production of the secondary limestones in nature or by a natural process - of life formation (சா.அக.).

*[அண்டம் + கல் +உற்பத்தி.]*

*[**Skt.** aṇḍa>த. அண்டம், **Skt.** uṭ-patti> த.உற்பத்தி.]*

**அண்டக்கழலை** *aṇḍa-k-kaḻalai,* பெ.(n.) 1. விதைப்பகுதியில் வரும் ஒருவகைக் கழலைக் கட்டி; a tumour of the testicle-orchidoncus. 2. தலை மண்டையில் வரும் ஒரு கழலைக் கட்டி; a circumscribed edema of the scalp associated with inflammation of bone or marrow of the skull bones-puffy tumour. 3. பிடுக்கில் உண்டாகும், ஒரு வகைக் கொழுப்புக் கழலை; a sebaceous orgreasy cyst of the scrotum; atheroma of the scrotum scrotum-lapillosum; c.f, Liparocele (a fatty scrotal tumour) (சா.அக.).

**த.வ. கழலைக்கட்டி.**

*[அண்டம் + கழலை.]*

*[**Skt.** aṇḍa > த. அண்ட(ம்).]*

*கழல்>கழலை.*

**அண்டகடம்** *aṇḍakaḍam,* பெ.(n.) **அண்ட கடாகம்** (கந்தபு.அண்ட.18) பார்க்க; see *aṇḍakaḍāgam.*

*[அண்டம் + கடம்.]*

*[**Skt.** aṇḍa > த. அண்டம்.]*

*கடு > கடம். கடு = கடுமையான ஓடு. அம்-பருமை (அகற்சி) குறித்த சொல்லாக்க ஈறு.*

**அண்டகடாகம்** *aṇḍakaḍāgam,* பெ.(n.) உலக உருண்டையின் மேல் ஓடு (திருவிளை. தீர்த்த. 9.); imaginary shell which surrounds the universe.

**த.வ. நிலமேலோடு, கோளகம்.**

*[அண்டம் + கடாகம்.]*

*[**Skt.** aṇḍa > த. அண்டம்.]*

**அண்டகபாலம்** *aṇḍa-kabālam,* பெ.(n.) **அண்டகடாகம்** (தேவா. 246, 2.) பார்க்க; see *aṇḍakaḍāgam.*

*[அண்ட(ம்) + கபாலம்.]*

*[**Skt.** aṇḍa >த. அண்டம்.]*

*கன்னப்புலம்→ கப்பளம்→ கப்பாளம் > Skt. kapālam.*

**அண்டகம்** *andagam,* பெ.(n.) 1. கொட்டை; testicle. 2. சிறுமுட்டை; ovum. 3. குப்பைமேனி; rubbish plant, *Acalph Indica* (சா. அக.).

த.வ. விதைக்கொட்டை.

*[**Skt.** anda > த. அண்டகம்.]*

**அண்டகமேனி** *andaga-mēni,* பெ.(n.) **அண்டகம்** பார்க்க; see *andagam* (சா.அக.).

**அண்டகலை** *andakalai,* பெ.(n.) நிலவின் கலை; a current of prana or vital breath operating in the left nostril (சா.அக.).

த.வ. இடைகலை.

*[அண்ட(ம்) + கலை.]*

*[**Skt.** anda > த. அண்டம்.]*

*கல் > கலை (வ.வ.110) இச்சொற்கு வடமொழியில் மூலமில்லை.*

**அண்டக்கற்டம்** *anda-k-karpam,* பெ.(n.) கல்லுப்பில் இருபது நாள் வைத்தெடுத்து, பின் அவித்த கருங்கோழி முட்டைகள்; the eggs of black fowls kept within a heap of rock-salt for 20 days and then taken out and boiled (சா.அக.).

*[அண்ட(ம்) + கற்பம்.]*

*[**Skt.** anda > த. அண்டம்.]*

*கரு > கருப்பம். >* ***Skt.*** *கற்பம்.*

**அண்டக்குகை** *anda-k-kugai,* பெ.(n.) மருந்தினைப் புகட்டிக் குகையைப் போல் பயன்படுத்திப் புடம் போட உதவும் கோழி முட்டையின் உட்கரு நீங்கிய ஓடு. ; the empty egg or shell of a black fowl used as crucible for preparing medicines (சா.அக.).

*[அண்டம் + குகை.]*

*[**Skt.** anda > த. அண்டம்.]*

*குழி > குழை > குகை.*

**அண்டகூடம்** *anda-kūdam,* பெ.(n.) உலகக்கோளகை; globe of the universe. *"அண்ட கூடமுஞ் சாம்பராயொழியும்" (கம்பரா. அகலிகை. 14.).*

*[அண்டம் + கூடம்.]*

*[**Skt.** anda > த. அண்டம்.]*

*கூடு > கூடம்.*

**அண்டக்கெவுனம்** *anda-kevunam,* பெ.(n.) காட்டுப்பருத்தி; golden silk cotton, *Cochlospermum gossypium* (சா.அக.).



**அண்டக்கேசரி** *anda-k-kēšari,* பெ.(n.) சாம்பலுப்பு (சத்தியுப்பு); salt obtaine by burning beared grass.

**அண்டகை[1]** *andagai,* பெ.(n.) அப்பவருக்கம் (சூடா.); kind of cake.

தெ. அட்ட்ரிக.

**அண்டகை[2]** *andagai,* பெ.(n.) 1. விதைக் கொட்டை the bag containing the testicles -scretum. 2. பழம்; fruit. 3. பழத் தோல்; the outer skin of a fruit. 4. சினைப்பை; (In physiology) the female organ in which the ova or the reproductive germs or eggs, are formed and developed; ovary. (In Botany) a case enclosing the ovules or young seeds, to develop later on into pulpy fruit (சா.அக.).

*[**Skt.** andaka> த. அண்டகை.]*

**அண்டக்கோசம்[1]** *anda-k-kōšam,* பெ.(n.) 1. ஓடு (கந்தபு.அண்ட.); imaginary shell which surrounds the universe. 2. விதைப்பை(இங். வை.); scrotum.

*[அண்டம் + கோசம்.]*

*கோறம்→கோசம் >****Skt.*** *kōsa.*

**அண்டக்கோசம்²** *aṇḍa-k-kōšam,* பெ.(n.) 1. விதையின் உறை; the outer covering of the testicles. 2. முட்டைக்கருவின் மேல்தோல்; the sac or membraneous bag which contains the yolk of an egg. 3. அண்டத்தின் மேல்தோல், விதை மற்றும் அதைச்சேர்ந்த உறுப்புகளடங்கிய பை; the pouch which contains the testicles and their accessory organs-scrotum (சா.அக.).

*[அண்டம் + கோசம்]*

*[**Skt.** aṇḍa> த. அண்டம்.]*

*கோளம்→கோயம் →கோசம்>**Skt.** kōsa.*

**அண்டக்கோசு** *aṇḍa-k-kōšu,* பெ.(n.) முட்டைக் கோசு; a culinary vegetable which has the leave in dense round head-cabbage (சா. அக.).



**அண்டக்கோளகை** *aṇḍa-k-kōḷagai,* பெ.(n.) உலகவுருண்டை (கந்தபு. அண்ட.65.); globe of the universe.

*[அண்டம் + கோளகை.]*

*[**Skt.** aṇḍa > த. அண்டம்.]*

*கோள் → கோளகம்→ கோளகை >**Skt.** gōlaka.*

**அண்டக்கோளம்** *aṇḍa-k-kōḷam,* பெ.(n.) **அண்டகோளகை** (திருவிளை.நகர. 21.) பார்க்க; see *aṇḍakōḷagai.*

*[அண்டம் + கோளம்.]*

*[**Skt.** aṇḍa > த. அண்டம்.]*

*கொள்→கோள்→கோளம் > **Skt.** gōla.*

**அண்டச்சத்து** *aṇḍa-c-cattu,* பெ.(n.) மண்டையோட்டினின்று உருவாக்கும் ஊட்டம்; essence prepared from the human skull (சா.அக.).

*[அண்டம் + சத்து.]*

*[**Skt.**aṇḍa> த. அண்டம்.]*

*சள்→சண்→ சத்து.*

**அண்டச்சுண்ணம்** *aṇḍa-c-cuṇṇam,* பெ.(n.) 1. ஊதை (வாதம்), பித்தம், மருத்துவம், ஓகம் அறிவு (ஞானம்) முதலியவற்றிற்கு அடிப்படையான முப்பூச்சுண்ணம், அதாவது மூன்று வகையுப்புகளினாலான சுண்ண மருந்து; traid salt i.e., the union of three kinds of salts. This is considered highly useful in alchemy, medicine, yoga and gnana (spiritual wisdom) elixir vitae. 2. மருத்துவத்திற்குப் பயன்படுவதும், மண்டையோட்டினைப் பயன்படுத்தி உருவாக்கப்படுவதுமான சுண்ண மருந்து; a cakium compound prepared from the human skull. It is used in medicine (சா.அக.).

*[அண்டம் + சுண்ணம்.]*

*[**Skt.** aṇḍa > த. அண்டம்.]*

*சுள் > சுண் > சுண்ணம்>**Skt.** cūrṇa.*

**அண்டச்சுவர்** *aṇḍa-c-cuvar,* பெ.(n.) உலகவுருண்டையின் புறத்தோற்றம் (பிங்.); shell of the universe, as a wall.

*[**Skt.** aṇḍa> அண்டம்.]*

*சுல் > சுவல் > சுவர்.*

**அண்டச்செந்தூரம்** *aṇḍa-c-cendūram,* பெ. (n.) 1. கோழிமுட்டை ஓட்டைக் கொண்டு செய்யும் செந்தூரம்; a red powder prepared out of the shells of a fowl's egg. 2. அடை காத்த கோழிமுட்டையோட்டை மற்றச் சரக்குகளுடன் சேர்த்துச் செய்யும் சிவப்பு மருந்து; a red oxide prepared by the calcination of egg-shells mixed

with other drugs. 3. கோழிமுட்டைக் குடுக்கைக்குள் வைத்து உருவாக்கும் மருந்து; any red oxide obtained by calcining the drug in question enclosed in a fowl's egg shell. 4. மண்டையோட்டில் வைத்து உருவாக்கும் செந்தூரம்; a red medicinal powder obtained by the calcination of drugs hermetically scaled in the human skull (சா. அக.).

*[அண்டம் + செந்தூரம்.]*

***[Skt. aṇḍa > த. அண்டம்.]***

*சிந்தூரம் > செந்தூரம்.*

**அண்டச்சோர்வு** *aṇḍa-c-cōrvu,* பெ.(n.) விதைத்தளர்ச்சி; atony or laxness of the testiles, *Orchidatonia* (சா.அக.).

*[அண்டம் + சோர்வு.]*

***[Skt. aṇḍa> த. அண்டம்.]***

*சோர் > சோர்வு.*

**அண்டசம்**[1] *aṇḍaśam,* பெ.(n.) முட்டையிற் பிறப்பன (சி. சி. 2, 89); oviparous animals, one of four *uyir-t-tōṟṟam,* q.v.

***[Skt. aṇḍa-ja > த. அண்டசம்]***

**அண்டசம்**[2] *aṇḍaśam,* பெ.(n.) 1. பறவை (அக. நி.); bird. 2. ஓந்தி; chameleon. 3. பாம்பு முதலியன; snake and other aquatics. 4. மீன் முதலான நீர்வாழ் உயிரிகள்; fish and other aquatics. 5. சங்கு (உரி.நி.); conch. 6. ஆமை (அக. நி.); tortoise.

***[Skt. aṇḍa-ja > த. அண்டசம்.]***

**அண்டசராசரம்** *aṇḍaśarāśaram,* பெ.(n.) இயலுலகம் முழுமையும்; universe cosmos.

***[Skt. aṇḍa +cara + a-cara>த. அண்டசராசரம்.]***

**அண்டச்சவ்வு** *aṇḍa-c-cavvu,* பெ.(n.) 1. மயிர் மண்டிய இறைச்சி; the scalp usually covered with hair, hairy scalp. 2. தலைக்கறி; the outer covering of the head scalp (சா.அக.).

*[அண்டம் + சவ்வு.]*

***[Skt. aṇḍa > த. அண்டம்.]***

*சவ் > சவ்வு.*

**அண்டச்சவுக்காரம்** *aṇḍa-c-cavukkāram,* பெ.(n.) காக்கை, வெண்கோழி, புறா, கழுகு ஆகியவற்றின் முட்டைகளில் வகைக்கு ஐந்தெடுத்து, அவற்றுடன் செயநீர், கல்லுப்பு, ஐந்து சுண்ணம் முதலியவற்றைச் சேர்த்து இடித்துச் சித்தர்கள் செய்யும், தாழ்ந்த வகை மாழைகளைப் பொன்னாக மாற்றும்;ஒரு குளிகை; a pill used in alchemy. It is prepared by siddhars by a peculiar process known to themselves. The following are the ingredients:-

1. one egg taken from each of the five birds, viz, crow, white fowl, pigeon and eagle.
2. the well known fluid called jayancer.
3. the five calcium compounds contemplated in the Tamil medicine.
4. the crystallised salt collected from the beds of precipitated salt found at the bottom of the sea (சா.அக.).

*[அண்டம் + சவுக்காரம்.]*

***[Skt. aṇḍa > த. அண்டம்.]***

*உவர் → சவர் + காரம்.*

**அண்டச்சாரணை** *aṇḍa-c-cāraṇai,* பெ.(n.) இதளியக் குளிகைக்குச் சாரணை தீர்ப்பதற்காகப் பயன்படுத்தும் முடியண்ட படருப்பு; a peculiar salt extracted from the human skull and used for animating mercurial pills (சா.அக.).

*[அண்டம் + சாரணை.]*

***[Skt. aṇḍa > த. அண்டம்.]***

**அண்டசிதம்** *aṇḍa-śidam,* பெ.(n.) முட்டையின் வெண்கருவைப் போல் உடம்பிலிருக்கும் ஒருவகை ஊட்டம்; a substance of definite chemical compositon resembling the

white of an egg, found in the body, *Albuminoid*; protein (சா.அக.).

*[Skt. aṇḍa+sita> த. அண்டசிதம்.]*

**அண்டசிறுநீர்** *aṇḍa-šiṟu-nīr,* பெ.(n.) சிறுநீர்ப் பையில் தங்கி நிற்கும் சிறுநீர்; the urine stored up in the bladder before it is discharged (சா.அக.).

*[அண்டம் + சிறுநீர்.]*

*[Skt. aṇḍa > த. அண்டம்.]*

*சில்→சிறு + நீர்.*

**அண்டசு** *aṇḍašu,* பெ.(n.) முட்டைவயிற் பிறப்பு; uviparous (சா.அக.).

*[Skt. aṇḍaja > த. அண்டசு.]*

**அண்டசூலை** *aṇḍa-šūlai,* பெ.(n.) வளி மிகுதியி (வாதத்தி)னால் விதையின் நரம்புகள் தாக்குண்டு குத்தல் மற்றும் வலியுண்டக்கும், ஒரு வகைச் சூலைநோய்; a neuralgic pain of severe dearting and throbbing character experienced in the testicle, *Orcheoneuralgia* (சா.அக.).

*[அண்டம் + சூலை.]*

*[Skt. aṇḍa>த. அண்டம்.]*

*சூல் > சூலை.*

**அண்டசெயநீர்** *aṇḍa-šeya-nīr,* பெ.(n.) 1. கோழிமுட்டையில் இருந்து உருவாக்கும் ஒரு வகைச் செயநீர்; a peculair liquid prepared from the fowl's egg which is mixed up with the required ingredients and kept exposed in the night-dew. 2. தலைச்சன் பிள்ளைத் தலையைக் கொண்டு உருவாக்கும் ஒரு வகைச் செயநீர்; a liquid preparation obtained from the head of the first-born child after its death (சா. அக.).

*[அண்டம் + செயநீர்.]*

*[Skt. aṇḍa > த. அண்டம்.]*

*செய் + நீர் → செயநீர்.*

**அண்டசை** *aṇḍašai,* பெ.(n.) நறுமணப்பொருள் (கத்தூரி) (பரி. அக.); musk.

*[Skt. aṇḍa-ja > த. அண்டசை.]*

**அண்டசோதி** *aṇḍa-šōdi,* பெ.(n.) சோதி மரம்; a luminous tree said to be found on the top of hills, and is believed to contain phosphoroas (சா.அக.).

*[Skt. aṇḍa + jyōtis > த. அண்டசோதி.]*

**அண்டத்தாங்கம்** *aṇḍa-t-tāṅgam,* பெ.(n.) பெருங்குறிஞ்சா; a plant scammony swallow wort, *Secamore emetica* (சா.அக.).

**அண்டத்தாசி** *aṇḍa-t-tāši,* பெ.(n.) கண்டங்கத்திரி; prickly brinjal, *Solanum xanthocarpum* (சா.அக.).

**அண்டத்தாபிதம்** *aṇḍa-t-tābidam,* பெ.(n.) 1. விதையில் ஏற்படும் அழற்சி; inflammation of the testicles orchitis. 2. பிடுக்கின் விதைப் பையில் ஏற்படும் அழற்சி; inflammation of the scrotum-scrotitis (சா.அக.).

**த.வ. விதைவீக்கம்.**

*[Skt. aṇḍa+tāpita > அண்டதாபிதம்.]*

**அண்டத்தைமயினமாக்கி** *aṇḍattai-mayiṉa-mākki,* பெ.(n.) நாணற்புல், nanal grass, *Saccharam spontaneum* (சா.அக.).

**அண்டத்தைலம்** *aṇḍa-t-tailam,* பெ.(n.) கோழிமுட்டை எண்ணெய்; medicinal oil extracted from hen's eggs.

**த.வ. முட்டை நெய்மம்.**

*[அண்டம் + தைலம்.]*

*[Skt. aṇḍa-taila > த. அண்டத்தைலம்.]*

**அண்டத்தோடு** *aṇḍa-t-tōḍu,* பெ.(n.) 1. முட்டையோடு; the shell of an egg. 2. மண்டையோடு; the skull of an animal, particularly human skull (சா.அக.).

*[அண்டத்து + ஓடு.]*

*[Skt. aṇḍa > த. அண்டம்.]*

*'அத்து' சாரியை.*

**அண்டத்தோல்** *aṇḍa-t-tōl,* பெ.(n.) 1. முட்டையோடு; incorrectly but ususally referring to an egg-shell. 2. முட்டையோட்டின் உட் பக்கத்துச் சவ்வு; the membraneous lining inside the shell of an egg, egg envelope. 3. மண்டையின் தோல்; the skin covering the head, scalo. 4. விதைப் பையின் மேல்தோல்; the skin of the scrotam. 5. முட்டையினுட் கருவின் சவ்வுப்பை; the membraneous bag which contains the yolk of an egg, yolk bag (சா.அக.).

*[அண்டம் + தோல்.]*

*[**Skt.** aṇḍa > த. அண்டம்.]*

**அண்டநீர்** *aṇḍa-nīr,* பெ.(n.) 1. முட்டையின் வெண்கருவினின்று உருவாக்கும் நீர்; a liquid prepared from the white of the egg. 2. நீராகச் செய்த வெண்கரு; liquified or dissolved white of the egg. 3. **அண்ட செயநீர்** பார்க்க; see *aṇḍa-šeya-nīr.* 4. பிடுக்கில் சேர்ந்த நீர்; the fluid collected in the scrotum, as in hydrocele. 5. நிலத்தினின்று வரும் ஊற்று நீர்; water flowing out from the earth, spring water, opposed to rain water from the sky (சா.அக.).

*[அண்டம் + நீர்.]*

*[**Skt.** aṇḍa>த. அண்டம்.]*

**அண்டநோய்** *aṇḍa-nōy,* பெ.(n.) 1. தலைவலி; head-ache. 2. விதைவலி; pain in the testicles, *Orchialgia*. 3. விரையூதை(விதை வாதம்); hydrocele. 4. குடலண்டநோய்; hernia. 5. பொதுவாகப் பிடுக்கில் வரும் நோய்; any disease of the testicle or the scrotum (சா.அக.).

*[அண்டம் + நோய்.]*

*[**Skt.** aṇḍa>த. அண்டம்.]*

**அண்டப்பரப்பு** *aṇḍa-p-parappu,* பெ.(n.) உலகப்பரப்பு; expanse of the universe. *"மாதிக்கொ டண்டப்பரப்பெலாம்" (தாயு. மௌன.3.).*

*[அண்டம் + பரப்பு.]*

*[**Skt.** aṇḍa>த. அண்டம்.]*

**அண்டப்பவுத்திரம்** *aṇḍa-p-pavuttiram,* பெ.(n.) பிடுக்கில் உண்டாக்கும் ஓர் அரிதான குறிக்கட்டி நோய்; a chronic form of fistula in the scrotum, *Scrotal fistula* (சா.அக.).

*[**Skt.** aṇḍa+bhagam-dara>த. அண்டப் பவுத்திரம்.]*

**அண்டப்பாத்திரம்** *aṇḍa-p-pāttiram,* பெ.(n.) மண்டையோட்டினால் செய்த ஓர் ஏனம்; a vessel made out of the human skull for holding liquids and solid substances (சா.அக.).

*[**Skt.** aṇḍa+pātra>த. அண்டப்பாத்திரம்.]*

**அண்டப்பித்தி** *aṇḍa-p-pitti,* பெ.(n.) உலகக் கோளத்தின் மேலோடு; the vault of the heavens, as the shell of the universe imagined to be in the form of an egg.

**த.வ. புடவிச்சுவர்.**

*[**Skt.** aṇḍa+bhitti > த. அண்டப்பித்தி.]*

**அண்டப்பிளவு** *aṇḍa-p-piḷavu,* பெ.(n.) 1. மண்டையோட்டின் பிளப்பு அல்லது வெடிப்பு; a fissure of the skull-cranial fissure. 2. மூளைப்பகுதியின் இடையேயுள்ள இடைவெளி; the fissure separating the two hemi-spheres of the brain, intercerebral fissure of longitudinal fissure. 3. கருவில் ஏற்பட்ட முகத்தின் அருவெருப்பு; the two lowest facial fissures of the embryo, Mandibular fissures. 4. விதைப்பையின் விந்துத் தாரையுள் ஏற்படும் வெடிப்பு அல்லது குறிக்கட்டி; a fissure of fistuala opening into any of the seminal passages scrotal or spermatic fissure of fistura (சா.அக.).

*[அண்டம் + பிளவு.]*

*[**Skt.** aṇḍa>த. அண்டம்.]*

*பிள் > பிள > பிளவு.*

**அண்டப்புத்து** *anda-p-puttu,* பெ.(n.) **அண்டப்புற்று** பார்க்க; see *anda-p-purru.*

*[அண்டம் + புற்று.]*

*[**Skt.** anda>த. அண்டம்.]*

*புல் > புற்று > புத்து.*

**அண்டப்புரட்டன்** *anda-p-purattan,* பெ.(n.) பெரும்போக்கிலி; consummate rogue.

**த.வ. அடாவடிக்காரன்.**

*[அண்டம் + புரட்டன்.]*

*[**Skt.** anda>த. அண்டம்.]*

*புரள் → புரட்டு → புரட்டன்.*

**அண்டப்புளுகன்** *anda-p-pulugan,* பெ.(n.) பெரும் பொய்யன்; monstrous rogue.

*[அண்டம் + புளுகன்.]*

*[**Skt.** anda>த. அண்டம்.]*

*புள்→புளுகு→புளுகன்.*

**அண்டப்புற்று** *anda-p-purru,* பெ.(n.) பிடுக்கில் உண்டாகும் ஓர் (கிரந்திப் புற்றுநோய்ப் புண்); cancer of the scrotum (சா.அக.).

*[அண்டம் + புற்று.]*

*[**Skt.** anda>த. அண்டம்.]*

*புல் > புற்று.*

**அண்டப்பூடு** *anda-p-pūdu,* பெ.(n.) முயல்; rabbit (சா.அக.).

**அண்டப்பூண்டு** *anda-p-pūndu,* பெ.(n.) **அண்டப்பூடு** பார்க்க; see *anda-p-pūdu* (சா.அக.).

**அண்டப்பேரொளி** *anda-p-pēroli,* பெ.(n.) தலையின் மூளை; the superior portion of the brain, occupying the whole upper cavity of the skull cerebrum (சா. அக.).

*[அண்டம் + பேரொளி.]*

*[**Skt.** anda>த. அண்டம்.]*

*பேர் + ஒளி > பேரொளி.*

**அண்டப்பை** *anda-p-pai,* பெ.(n.) விதைத் தோல்; bag containing the testicles-scrotum (சா. அக.).

*[அண்டம் + பை.]*

*[**Skt.** anda> த. அண்டம்.]*

*பொள் > பொய் (பய்) > பை.*

**அண்டப்பொகுட்டு** *anda-p-poguttu,* பெ.(n.) **அண்டகூடம்** பார்க்க; see *anda-kūdam.* *"பூதலப் பரப்பி னண்டப் பொகுட்டினுட் புறத்துள்" (கம்பரா.பிணிவீட்டு.113).*

*[அண்டம் + பொகுட்டு.]*

*[**Skt.** anda> த. அண்டம்.]*

*பொக்கு > பொகுட்டு.*

**அண்டபகிரண்டம்** *anda-pagir-andam,* பெ.(n.) நிலவுருண்டையும் அதன் புறத்தவான உருண்டையும்; this world and the world beyond this sphere. *"அண்டபகி ரண்டமும் மாயா விகாரமே" (தாயு. பரிபூ. 4.).*

*[**Skt.** anda + bahiranda >த.அண்ட பகிரண்டம்.]*

**அண்டபவுத்திரம்** *andapavuttiram,* பெ.(n.) விதைப்பையைச் சார்ந்த நோய்; scrotal fistula.

*[**Skt.** anda+bhagan-dara> த. அண்ட பவுத்திரம்.]*

**அண்டபற்பம்** *andaparpam,* பெ.(n.) கோழி முட்டைக் கருவைக் கொண்டு செய்யும் மருந்து; calcination of medicinal drugs with eggs.

*[**Skt.** anda + bhasman > த.அண்டபற்பம்.]*

**அண்டபித்தி** *anda-pitti,* பெ.(n.) **அண்டப்பித்தி** பார்க்க; see *anda-p-pitti* *'ஒரு திருவடிகளே அண்டபித்திக்கு மவ்வருகேபோய்" (திவ். திருநெடுந். 5, வ்யா.).*

*[அண்டம் + பித்தி.]*

*[**Skt.** anda> த. அண்டம்.]*

**அண்டபேதி** *anda-bēdi,* பெ.(n.) மாழைகளைப் பிரிக்கும் தன்மையுடைய மண்டை யோட்டினின்று செய்த, ஒரு கார மருந்து; a strong and powerful alkaline substance

prepared from the human skull powdered and mixed with other ingredients (சா.அக.).

[Skt. aṇḍa+bhēdin>த. அண்டபேதி.]

**அண்டபேரண்டபட்சி** *aṇḍapēraṇḍapaṭci,* 1. இருதலையுடைய பெரும் பறவை (இ.வ.); a monster bird. 2. கழுகு (பாண்டி); eagle.

த.வ. கண்டபேரண்டப் பறவை.

[Skt. gaṇḍabhēruṇḍa+paksin > த. அண்ட பேரண்டபட்சி.]

**அண்டம்**[1] *aṇḍam,* பெ.(n.) 1. முட்டை (திவா.); egg. 2. நிலம்; the earth. *"நீர்கொண்ட வண்டத்தும்" (அரிச். பு. பாயி. 3.).* 3. வானம் (திவா.); sky, visible heavens. 4. புடவி (அஷ்டாதச. தத்வத். 2, 34.); universe in the shape of an egg. 5. அண்ட விதை; testicle. *"அண்டத்திலூறு செய்வனவால்" (திருவிளை. பரிநரி. 17.).* 6. விதை; seed, nut. *"இல்லமுறு மண்டங்க ளூறுபலம்" (தைலவ. தைல. 33).*

[Skt. aṇḍa > த. அண்டம்.]

**அண்டம்**[2] *aṇḍam,* பெ.(n.) 1. புழுகு சட்டம் (சம்.அக.) (Ms.); sac of the civet cat. 2. மூளை (வை. மூ.); brain. 3. மண்டையோடு (யாழ். அக.); skull.

[Skt. aṇḍa > த. அண்டம்.]

**அண்டம்**[3] *aṇḍam,* பெ.(n.) 1. வழலை; a universal solvent consisting chiefly of calcium compounds extracted by a secret process of calcination known to Sidhhars, *Alcanest.* 2. மான்மணத்தி (கத்துரி)ப்பை; the musk bag. 3. மதம்; semen virile. 4. அண்டநோய்; diseases of the testicles, probably the two kinds of hernia (சா.அக.).

**அண்டமயிமை** *aṇḍa-mayimai,* பெ.(n.) **அண்டத்தைமயினமாக்கி** பார்க்க; see *aṇḍattai-mayiṉamākki* (சா.அக.).

**அண்டமயினா** *aṇḍa-mayiṉā,* பெ.(n.) **அண்டத்தைமயினமாக்கி** பார்க்க; see *aṇḍattai-mayiṉamākki* (சா.அக.).

**அண்டமான்** *aṇḍamāṉ,* பெ.(n.) ஒரு தீவு(H.J.); Andaman islands in the eastern part of the Bay of Bengal.

[Mal. agamitae > த. அண்டமான்.]

**அண்டமுகடு**[1] *aṇḍamugaḍu,* பெ.(n.) புடவி (அண்ட)கடாகத்தினுச்சி; top of the imaginary shell that surrounds the universe. *"அண்டமுகட்டுற நின்று சிரித்தனன்" (பாரத. கிருட். 202).*

[அண்டம் + முகடு.]

[Skt. aṇḍa>த. அண்டம்.]

**அண்டமுகடு**[2] *aṇḍa-mugaḍu,* பெ.(n.) மூதண்டம், நடு உச்சி; crown of the head. (சா. அக.)

[அண்டம் + முகடு.]

[Skt. aṇḍa>த. அண்டம்.]

**அண்டமுடிமெழுகு** *aṇḍa-muḍi-meḻugu,* பெ.(n.) மூன்று மாதம் நிரம்பிய தலைச்சன் கருப்பிண்டத்தின் தலை மண்டையோட்டை இடித்து, அதனின்று செய்யப்படும் ஒரு வகை மெழுகு; a wax like preparation obtained by reducing the head of the first foetus three months old, in a woman into a pulp as per process laid down in Siddhar's science (சா.அக.).

[அண்ட+மூடி+மெழுகு.]

[Skt. aṇḍa>த. அண்டம்.]

**அண்டமுறுகல்** *aṇḍamuṟugal,* பெ.(n.) மண்டையோட்டினின்று உருவாக்கும் தீ முறுகல் நஞ்சு; a poisonous substance extracted from bone ash by incineration of the skull-phosphorus (சா.அக.).

**அண்டமேபிண்டம்** *aṇḍamē-piṇḍam,* பெ.(n.) அண்டத்திலுள்ளதே பிண்டத்திலுள்ளது என்னும் கொள்கை; what exists in nature, exists eqully in a human being which is said to be a miniature of the world. The Hindu philosophic science recognise man

as the microcosm possessing all the parts corresponding to the macrocosm or the solar system. This is the doctrine of macrocosm and microcosm. It was also traced to the oldest sacred books of the chinese and accepted by them (சா.அக.).

*[அண்டம் + ஏ + பிண்டம்]*

***[Skt. aṇḍa > த. அண்டம்]***

*பிள்→பிண்டம்.*

*'ஏ' தேற்றேகாரம்.*

**அண்டயம்** *aṇḍayam,* பெ.(n.) உடம்பிலிலுள்ள வெண்கருவின் ஆற்றலாகிய வெண்கருவூட்ட (அண்ட சித)த்தின்ஓரினம்; a substance in the body resembling the white of an egg, *Albumin* (சா.அக.).

***[Skt. aṇḍa> த. அண்டம்]***

**அண்டயெரு** *aṇḍa-y-eru,* பெ.(n.) பண்டுவ முப்பு; an old name for a medicine curative of all congestions, *Alcahest* (சா.அக.).

**அண்டயோனி** *aṇḍa-yōṉi,* பெ.(n.) 1. கதிரவன், ஞாயிறு (பிங்.); sun, as giving life to the earth. 2. முட்டைவழிப் பிறப்பு (சங்.அக.); oviparous animal.

***[Skt. anda + yōni > த. அண்டயோனி]***

**அண்டரசம்** *aṇḍa-rašam,* பெ.(n.) 1. தூய்மையான இதளியம் (பாதரசம்); purified mercury. 2. மூளையின் ஆற்றல்; essence of the brain. 3. முட்டையின் கரு; the yolk of an egg (சா.அக.).

***[Skt. aṇḍa+raša > த. அண்டரசம்]***

**அண்டரிசனம்** *aṇ̃ḍarišaṉam,* பெ.(n.) விதையடிக்கை; emasculation or semicastration orchotomy (சா.அக.).

**த.வ. காயடிக்கை.**

***[Skt.aṇḍa-karashaṇa> த. அண்டரிசனம்]***

**அண்டரோகம்** *aṇḍa-rōgam,* பெ.(n.) **அண்ட நோய்** பார்க்க; see *aṇḍa-nōy* (சா.அக.).

***[Skt. aṇḍa+ rōga > த. அண்டரோகம்]***

**அண்டவச்சில்சாய்த்தல்** *aṇḍa-v-accil-šāyttal,* பெ.(n.) முட்டை வடிவ அச்சில் மாழைகளை உருக்கியெடுக்கை; casting a melted metal into an oval shaped mould (சா.அக.).

*[அண்டம் + அச்சில் + சாய்–.]*

***[Skt. aṇḍa > த. அண்டம்]***

**அண்டவடிவு** *aṇḍa-vaḍivu,* பெ.(n.) **அண்டவம்** பார்க்க; see *aṇḍavam* (சா.அக.).

*[அண்டம் + வடிவு]*

***[Skt. aṇḍa > த. அண்டம்]***

**அண்டவம்** *aṇḍavam,* பெ.(n.) முட்டை வடிவு; the shape of an egg-oviform (சா.அக.).

**அண்டவர்த்தனம்** *aṇḍa-varttaṉam,* பெ.(n.) **அண்டவிருத்தி** பார்க்க; see *aṇḍa-virutti* (சா.அக.).

***[Skt. aṇḍa+varttana>த. அண்ட வர்த்தனம்]***

**அண்டவலி** *aṇḍa-vali,* பெ.(n.) பிடுக்கிற் பொதுவாகக் காணப்படும். வலிகள்: – 1. ஊதையினால் ஏற்படும் வலி. 2. வளியினால் விதையில் ஏற்படும் குத்தல். 3. சூலையினால் ஏற்படும் குத்தல்; pains of the scrotum in general resalting from any one or more of the morbid conditions of vāyu e.g:- 1. pain due to the deranged condition of vadham - *orchialgia* or *orchidargia.* 2. neuralgic pain due to nervous affection of the parts *orchinoearalgia.* 3. acute pricking pain due to deranged vadham, *orchiodynia* (சா.அக.).

*[அண்டம் + வலி]*

***[Skt. aṇḍa > த. அண்டம்]***

**அண்டவாசி** *aṇḍa-vāši,* பெ.(n.) முட்டையின் உள்தாரை; a duct or passage for the egg in animals from ovary, *Oviduct* (சா.அக.).

***[Skt. aṇḍa+ vāsi > த. அண்டவாசி]***

**அண்டவாணன்** *aṇḍa-vāṇaṉ,* பெ.(n.) தேவன்; god. *"அண்டவாணனடி யுள்குதலால்" (தேவா. 1114,11).*

*[அண்டம் + வாணம்.]*

*[**Skt.** aṇḍa > த. அண்டம்.]*

**அண்டவாதசூலை** *aṇḍa-vāda-šūlai,* பெ.(n.) பிடுக்கிலாவது விதையிலாவது நீர் கலந்ததோடல்லாமல் குத்தல், வலி ஆகியன உண்டாக்கும் சூலை; a neuralgic pain of a severe darting character attended with a collection of fluid in the scrotum (சா.அக.).

*[அண்டம் + வாதம் + சூலை.]*

*[**Skt.** aṇḍa + vāta>த. அண்டவாத(ம்).]*

*சுல்→சூல்→சூலை.*

**அண்டவாதம்** *aṇḍa-vādam,* பெ.(n.) 1. பிடுக்கில் நீர் இறங்கிப் பருத்துக் காணும் நோய்; a circumscribed collection of fluid in the scrotum, hydrocele or scrotal hydrocele. 2. விதை வீக்கம், விதையைச் சூழ்ந்துள்ள தோற்பைக்குள் நீரிறங்கிப் பருத்துக்காணும் ஒரு நோய்; hydrocele due to collection of fluid in the serous covering of the testis-funicular hydrocele. 3. விதைத் தசை ஊதை, பிடுக்கினுள் தசை தடித்து வளர்ந்து நீரும் சேர்ந்து பருத்துக் காணும் ஒரு பிடிப்பு; enlargement of the scrotum due to collection of fluid and morbid growth of the skin, Elephantiasis of the scrotum. 4. குடல்விதைவூதை (வாதம்), வளி மிகுதியால் பிடுக்கில் குடலிறங்கி மரக்காற்போல் பருத்துக் காணும் ஒரு பிடிப்பு; swelling of the scrotum from the protrusion of a portion of the intestine through the abdominal opening and its consequent decent into it (scrotum) hernia (சா.அக.).

*[**Skt.** aṇḍa + vāta > த-அண்டவாதம்.]*

**அண்டவாதரோகம்** *aṇḍa-vāda-rōgam,* பெ.(n.) **அண்டவாதம்** பார்க்க; see *aṇḍa-vādam* (சா.அக.).

*[**Skt.** aṇḍa + vāta + rōga > த. அண்டவாத ரோகம்]*

**அண்டவாயு** *aṇḍa-vāyu,* பெ.(n.) 1. விதையூதை, வளி விதையோடு சேர்ந்து அழற்சியையும், வீக்கத்தையும் உண்டாக்கும் ஒரு வளி நோய்; an inflmmation and swelling of the testicles due to the deranged vayu affecting the part. 2. வளி (வாயு) குடலில் தங்கி நரம்பு வழியாய் விதையிலிறங்கி பொருமி நரம்பு புடைத்துக் காணும் ஒரு நோய்; a disease of the scrotum due to the accumulation of gas (vaya) in the intestines, which, in turn is imparted to the scrotum, marked by swelling and pain of the spermatic card and the testis. 3. விதை வீக்கம்; inflammation of the testicles followed by swelling (சா.அக.).

*[**Skt.** aṇḍa+vāyu > த. அண்டவாயு.]*

**அண்டவாரு** *aṇḍa-vāru,* பெ.(n.) மருந்தரைக்கும் கலுவம்; a granite bowl in which substance are pulverised, pounded or ground down to a paste with a pestle-mortar, this is specially used in preparing medicines (சா.அக.).



**அண்டவித்தை** *aṇḍa-vittai,* பெ.(n) பத்து வகைப் பறவைகளின் முட்டைகளை மெழுகாகச் செய்து வேதைக்கு பயன்படுத்தும் ஒரு முறை; an alchemical preparation by a secret process, from 10 kinds eggs of different birds ground down to a paste with other ingredients (சா.அக.).

[அண்டம் + வித்தை.]

[Skt. aṇḍa> த. அண்டம்.]

விழி→ வித்→ வித்தை .

**அண்டவிர்த்துவாரம்** *aṇḍavir-t-tuvāram,* பெ.(n.) 1. முட்டை வடிவத்தைப் போன்ற ஓட்டை; shield shapped opening, Foraman ovale. 2. கேடகம் என்ற ஆயுதத்தைப் போன்ற துளை; shield shapped opening-Foramen thyroideum (சா.அக.).

**அண்டவிருத்தி** *aṇḍa-virutti,* பெ.(n.) விரைநோய் வகை (தைலவ. தைல. 97.); enlargement of the scrotum, due to hydrocele or elephantiasis.

[Skt. aṇḍa+vrddhi>த. அண்டவிருத்தி.]

**அண்டவுப்பு** *aṇḍ-v-uppu,* பெ.(n.) மண்டை யோட்டிலிருந்து உருவாக்கப்படும் ஒரு வகை உப்பு; a salt prepared from the human skull (சா. அக.).

[அண்டம் + உப்பு.]

[Skt. aṇḍa > த. அண்டம்.]

**அண்டவுருள்** *aṇḍa-v-uruḷ,* பெ.(n.) பூசணிக்காய்; pumpkin, *cucurbitmaxima* (சா. அக.).

[அண்டம் + உருள்.]

[Skt. aṇḍa > த. அண்டம்.]

உரு > உருள்.



**அண்டவெண்கரு** *aṇḍa-veṇ-karu,* பெ.(n.) முட்டையின் வெள்ளைக் கரு; the white of an egg, *Albumen* (சா.அக.).

[அண்டம் + வெண் + கரு.]

[Skt. aṇḍa> த. அண்டம்.]

குல் > குரு > கரு.

**அண்டவெள்ளைரசம்** *aṇḍa-veḷḷai-rašam,* பெ.(n.) முட்டையின் வெண்கருவினின்று உருவாக்கப்பெறும் ஒரு வகை ஊட்டம் (சத்து) a liquid essence obtained by a special process from the white of an egg (சா.அக.).

[அண்டம் + வெள்ளை + ரசம்.]

[Skt. aṇḍa > த. அண்டம், Skt. rasa > த.ரசம்.]

**அண்டவோடு** *aṇḍa-v-ōḍu,* பெ.(n.) 1. முட்டையோடு; the shell or outside covering of an egg, egg-shell. 2. மண்டையோடு; the bony case which forms the frame work of the head, skull (சா.அக.).

[அண்ட(ம்) + ஓடு.]

[Skt. aṇḍa > த. அண்ட(ம்).]

**அண்டன்** *aṇḍaṉ,* பெ.(n.) கடவுள்; god, as lord of the universe. "அண்டனாஞ் சேடனா மங்கு" (சி. போ. 9, 3, 1.).

[Skt. aṇḍa > த. அண்டன்.]

**அண்டா** *aṇḍā,* பெ.(n.) ஒருவகைப் பெரும் ஏனம்; large vessel, cauldron. "அண்டா குண்டாவை அடகு வைத்துப் படிக்கவைத்தேன்" (பே.வ.).

த. அகனெடுங்கலம்.

[U. haṇḍā > த. அண்டா.]



**அண்டாகாரகாசம்** *aṇḍākāra-kāšam,* பெ.(n.) கண்ணிற்குள் முட்டை வடிவத்தைப் போல் உள்ள கண்ணாடி; the transparent lenticular organ behind the pupil - crystalline lens (சா.அக.).

**அண்டாகாரகோளம்** *aṇḍākāra-kōḷam,* பெ.(n.) முட்டையின் வடிவமான கோளம்; a gland of the shape of an egg-lenticular gland (சா.அக.).

*[அண்டாகாரம் + கோளம்.]*

*[Skt. aṇḍākāra> த. அண்டாகாரம்.]*

*கொள்→கோள் →கோளம்.*

**அண்டாகாரம்** *aṇḍā-kāram,* பெ.(n.) முட்டைவடிவம்; egg shape; oval shape-lentiform (சா. அக.).

*[Skt. aṇḍākāra>த. அண்டாகாரம்.]*

**அண்டாசயம்** *aṇḍāšayam,* பெ.(n.) 1. சினைப் பை; (in physiology) the female organ in which reproductive germs or eggs are formed and developed,ovary. 2. விதையின் பை; the pouch that contains the testicles and their accessory organs, scrotum. 3. அண்டங்களை அடக்கிக் கொண்டிருக்கும் பூம்பிஞ்சு; (in botony) the case enclosing ovules or young seeds and which ultimately becomes the fruitovary (சா.அக.).

**அண்டாவர்த்தம்** *aṇḍāvarttam,* பெ.(n.) குதிரைத்தண்டையடியில் இருக்கிற சுழி (அசுவசா. 148.); curl of hair at the ankle of a horse.

**அண்டிகம்** *aṇḍigam,* பெ.(n.) 1. கரிமா, அரிமா ஆகியவற்றிற்குக் காணும் காய்ச்சல்; fever in an elephant or a lion. 2. தீங்கு விளைவிக்கும் நீர் un whole some or bad water (சா.அக.).

**அண்டிகா** *aṇḍigā,* பெ.(n.) மட்பாண்டம்; an earthern vessel or pot (சா. அக.).

**அண்டிமாண்டு** *aṇḍimāṇḍu,* பெ.(n.) கடனுறுதியாவணம் (இ.வ.); promissory note, note of hand, as beginning with the words on demand.

*[E. on demand > த. அண்டிமாண்டு.]*

**அண்டினி** *aṇḍiṉi,* பெ.(n.) குடற்காய்ச்சலின் விளைவால், பெண்ணின் பிறப்புறுப்பில் புணர்ச்சிக் காலத்தே தென்படும் ஒருவகை நீளுருண்டைக் கட்டி; a disease of the vagina resulting from typhoid fever, marked by an oval tumour felt during sexual intercourse (சா.அக.).

**அண்டைமஞ்சள்** *aṇḍai-mañjaḷ,* பெ.(n.) முட்டையின் மஞ்சட் கரு; the yellow portion of the hen's egg as distinguished from the white-yolk (சா.அக.).

*[அண்டை + மஞ்சள்.]*

*[Skt. aṇḍa>த.அண்டம்.]*

*மஞ்சல்→மஞ்சள்.*

**அண்டோட்டுவித்தை** *aṇḍōṭṭu-vittai,* பெ.(n.) நாய், நரி, கழுதை முதலிய விலங்குகள் மற்றும் மனிதரின் மண்டை ஒடுகளைக் கொண்டு செய்யும் மந்திரக்கலை (குறளிவித்தை); sorcery or witch craft performed with the aid of the skull of a dog, fox, ass or human being (சா.அக.).

*[அண்டம் + ஒடு + வித்தை.]*

*[Skt. aṇḍa > த. அண்டம்.]*

**அண்டோடு** *aṇḍōḍu,* பெ.(n.) 1. மண்டை ஒடு; the skull in common. 2. மனிதரின் மண்டை ஒடு; human skull (சா.அக.).

*[அண்டம் + ஒடு.]*

*[Skt. aṇḍa > த. அண்டம்.]*

*ஒட்டு→ஒடு → ஒடு.*

**அண்ணகன்** *aṇṇagaṉ,* பெ.(n.) விதை யெடுக்கப்பட்டவன் (வின்.); eunuch.

**த.வ. காயடிபட்டவன், பேடி.**

*[Skt. saṇḍaka > த. அண்ணகன்.]*

**அணா** *aṇā,* பெ.(n.) 1. பணம்; money, the small coin termed fanam, whether of gold or of silver. 2. தட்டார்நிறை; gold smith's weight. i.e., மஞ்சிட்டி =1 அணா. 3. ஆறு குண்டுமணி

எடை; 6 grains. 4. வீசம்; 1/16; part (சா.அக.).

த.வ. ஆணைக்காசு.

*[U. ānā>த. அணா.]*

**அணுக்காபிதம்** *aṇu-k-kābidam,* பெ.(n.) செஞ்சந்தனம்; red sandal-pterocarpus santalinus (சா.அக.).

**அணுபை** *aṇubai,* பெ.(n.) மின்னல் (சிந்தா.நி 105); lightning.

*[Skt. aṅu-bhā > த. அணுபை.]*

**அணுவதம்** *aṇuvadam,* பெ.(n.) ஓர் அருக நோன்பு (அருங்கலம். 64:65); subordinate duties or vows of jaina laymen.

த.வ. அணுநோன்பு.

*[Skt. aṇu + vrata>த. அணுவதம்.]*

**அணோக்கம்** *aṇōkkam,* பெ.(n.) 1. மரப் பொது; tree in common. 2. மரம்; tree (சா.அக.).

**அணோசுரோத்திரியம்** *aṇōšurōttiriyam,* பெ.(n.) இறையிலி வகை (M.M.); inam village in which the interest of the inadar is so many annas out of each rupee of revenue, the rest going to government.

**அத்தகடகம்** *atta-kaḍagam,* பெ.(n.) கைவளை; bracelet. *"அத்தகடகம் தோள்வளை" (அரிச். பு. விவாக. 115).*

த.வ. கைக்கடகம்.

*[அத்த(ம்) + கடகம்.]*

*[Skt. hasta>த.அத்த(ம்).]*

**அத்தகண்டாதனம்** *atta-kaṇḍādaṇam,* பெ.(n.) ஒருகாலை மேல் நீட்டி, அவ்வாறு நீட்டிய காலை ஒரு கையைக்கொண்டு கட்டி, மற்றைக்கையை நிலத்தில் நீட்டியுமிருக்கும் காலை நிலத்தில் ஊன்றியும், மற்றொரு காலை நிலத்தில் நீட்டியுமிருக்கும் இருக்கை வகை (தத்துவப். 108, உரை.); (yoga) a yogic posture in which one leg is held in upright position by one hand, while the other leg is stretched on the ground, the whole body resting on the other hand.

*[அத்தகண்டம் + ஆதனம்.]*

*[Skt. hasta > த. அத்தம்.]*

**அத்தகம்** *attagam,* பெ.(n.) 1. ஆமணக்கு; castor oil plant ricinus communis. 2. கருஞ்சீரகம்; black cummin seed, *Niggella sativa* (சா.அக.).

**அத்தகம்பவாதம்** *atta-kamba-vādam,* பெ.(n.) கைகளை நீட்டவும், மடக்கவும் முடியாதபடிச் செய்யும் ஓர் ஊதை நோய்; a disease of the joints of the arms marked by degenerative changes involving the structure of the various articulations and resulting in rigidity and deformity, *Rheumatoid arthritis* (சா.அக.).

*[அத்த(ம்) + கம்ப(ம்) + வாதம்.]*

*[Skt. hasta> த. அத்தம், Skt. vāta>வாதம்.]*

**அத்தகானி** *atta-kāṇi,* பெ.(n.) பொருட்கேடு (தஞ். சரசு, 1, 307); lose of wealth.

த.வ. அத்தநாசம்.

*[Skt. artha-hāni > த. அத்தகாணி.]*

**அத்தகிரி** *atta-kiri,* பெ.(n.) கதிரவன் மறையும் மலை (சீவக. 18. உரை); western mountain.

*[Skt. asta+giri> த. அத்தகிரி.]*

**அத்தகோளம்** *atta-kōḷam,* பெ.(n.) 1. உடம்பில் நீர் பொசிகின்ற கருவியின் பாதி, வியர்வைக் கோளத்தின் பகுதி; one half of a sweat gland. 2. பாதிகோளம்; half the portion of any gland (சா.அக.).

*[அத்த(ம்) + கோளம்.]*

*[Skt. ardha > த. அத்த(ம்).]*

*கொள்→கோள்→கோளம்.*

**அத்தசாமம்** *atta šāmam,* பெ.(n.) நள்ளிரவு (வின்.); midnight.

த.வ. அர்த்தசாமம்.

*[அத்த(ம்) + சாமம்.]*

*[Skt. ardha > த. அத்த(ம்).]*

*யாமம் > சாமம்.*

**அத்தநாசம்** *attanāsam,* பெ.(n.) பொருட்கேடு (வின்.); loss of money, destruction of property.

*[அத்த(ம்) + நாசம்.]*

*[Skt. artha+nāsa> த. அத்தநாசம்.]*

**அத்தநாரி** *atta-nāri,* பெ.(n.) கட்டுக் கொங்கை; kidney plum tree, prussic-acid tree, *Pygeum wightianum* (சா.அக.).

**அத்தநாரீசுரன்** *attanārīšuran,* பெ.(n.) ஒரு பாதி பெண்வடிவான சிவன் (வின்.); a manifestation of *šivan.*

**த.வ. மாதொருபாகன், மங்கைபங்கன்.**

*[Skt.ardha+nārīšvara>த.அத்த நாரீசுரன்.]*

**அத்தநாள்[1]** *atta-nāḷ,* பெ.(n.) ஒருபாதி நாள் (திவா.); half a day.

**த.வ. அரைநாள்.**

*[அத்த(ம்) + நாள்.]*

*[Skt. ardha > த. அத்த.]*

**அத்தநாள்[2]** *attanāḷ,* பெ.(n.) ஒரு விண்மீன் (கைம்மீன்); the 13th *viṇmīṉ.*

**த.வ. கைம்மீன்.**

*[அத்த(ம்) +நாள்.]*

*[Skt. hasta> த. அத்தம்.]*

**அத்தப்பிரகரம்** *atta-p-piragaram,* பெ.(n.) 4 1/4 நாழிகை கொண்டது; a period consisting of 4 1/4 naligai ( 1 naligai = 24 minutes) (சா.அக.).

*[Skt. asta + prahara > த. அத்தப்பிரகரம்.]*

**அத்தப்பிரகரன்** *atta-p-piragaraṉ,* பெ.(n.) ஒரு காணாக்கோள் (சங். அக); (Astrol.) planet subordinate of mercury.

*[Skt. ardha-prahara > த. அத்தப்பிரகரன்.]*

**அத்தப்பிரபஞ்சம்** *atta-p-pirabañjam,* பெ.(n.) அர்த்தப்பிரபஞ்சம் (சி. போ. பா. 2, 2, பக். 134, புது.) பார்க்க; see *arttappira-pañjam.*

*[Skt.artha+pra-pañca>த.அத்தப் பிரபஞ்சம்.]*

**அத்தப்பொருந்தி** *atta-p-porundi,* பெ.(n.) 1. இருபாதியை ஒன்று சேர்ப்பது; that which joins the two halves. 2. எலும்பு முறிவை ஒன்றாகச் சேர்க்கும் பூடு; a plant capable of curing the fracture of bones (சா.அக.).

*[அத்தம்+பொருந்தி.]*

*[Skt. ardha > த. அத்தம்.]*

*பொரு→பொருந்து.*

**அத்தபாகம்** *atta-bāgam,* பெ.(n.) செம்பாகம்; half a share, half a portion (சா.அக.).

**த.வ. சரிபாதி.**

*[அத்தம்+பாகம்.]*

*[Skt. ardha > அத்தம்.]*

*பகு→பாகு→பாகம்.*

**அத்தம்** *attam,* பெ.(n.) 1. மாலை நேரம்; evening. 2. அந்திப் பொழுது; twilight cock; shut. 3. பொழுது சாய்கை; sunset (சா.அக.).

*[Skt. asta > த. அத்தம்.]*

**அத்தமம்** *attamam,* பெ.(n.) **அத்தமயம்** (வின்) பார்க்க; see *attamayam.*

*[Skt. astama > த. அத்தமம்.]*

**அத்தமயம்** *attamayam,* பெ.(n.) படு ஞாயிறு; setting, as of the sun. *"அத்தமய வெற் படைந்தான் கதிராயிரத்தோன்" (கந்தபு. தெய்வ. 146).*

**த.வ. சாயுங்காலம், எற்பாடு.**

*[Skt. astamaya > த. அத்தமயம்.]*

**அத்தமனம்** *attamaṉam,* பெ.(n.) 1. கோள்கள் மறைகை; setting, as of the sun. *"அத்தமன முதய மில்லை" (ஞானவா. தாசூர. 7.).* 2. அழிவு; destruction. *"உதயாத்த மனமறிவுக் குளவாகாவே" (பிரபோத. 32, 18).*

*[Skt. astamana > த. அத்தமனம்.]*

**அத்தமானம்[1]** *atta-māṉam,* பெ.(n.) ஆமணக்கு (மூ.அ.); castor-plant.

*[Skt. asta-māna> த. அத்தமானம்.]*

**அத்தமானம்2** *attamāṉam,* பெ.(n.) கதிரவன் மறையும் மேற்கு மலை; the western mountain behind which the sun is supposed to set. *"கதிரோன் றோன்று முதயத்தோ டத்தமானம்" (கம்பா. இரணி. 151).*

**த.வ. குடகுமலை.**

*[Skt. asta-mana > த. அத்தமானம்.]*

**அத்தமி-த்தல்** *a-t-tami-,* 4 செ.கு.வி.(v.i.) ஞாயிறு மறைதல்; to set, as the sun.

*[Skt. asta > த.அத்தமி-.]*

**அத்தமேற்கால்** *attamēṟ-kāl,* பெ.(n.) **அத்தமேற்காலாதனம்** பார்க்க; see *attamēṟkālādaṉam. "அத்தமேற்கா லேகபாத மேகவத்தம்" (தத்துவப். 108).*

*[அத்தம் + மேல் + கால்.]*

*[Skt. hasta>த. அத்தம்.]*

**அத்தமேற்காலாதனம்** *attamēṟkāl-ādaṉam,* பெ.(n.) கீழே கிடந்தவண்ணம் இரண்டுகாலும் சம்மணமாக மடித்து, அவ்வாறு மடித்த காலிரண்டுந் தலைக்கு மேலாக உயர்த்திக் கையாற்பிடித்துக் கொண்டு கிடக்கையாகிய இருக்கை வகை (தத்துவப். 108, உரை); (*yōga*) a *yōgic* posture in which a person lying on his back holds his folded legs upright with his hands.

*[அத்தம் + மேல் + கால் + ஆதனம்.]*

*[Skt. hasta > த. அத்தம்.]*

**அத்தமம்** *attamam,* பெ.(n.) கதிரவன் மறைவு; setting, as of the sun or moon.

**த.வ. ஏற்பாடு.**

*[Skt. astama > த. அத்தமம்.]*

**அத்தயாமம்** *atta-yāmam,* பெ.(n.) நாட் பொழுதில் பதினாறிலொரு பங்கு கொண்ட நேரம்; 1/16 of the period constituting a day (சா.அக.).

**த.வ. அரையாமம்.**

*[அத்தம் + யாமம்.]*

*[Skt. asta > த. அத்தம்.]*

*சாமம் → யாமம்.*

**அத்தர்** *attar,* பெ.(n.) முளரி (ரோஜா), மல்லிகை முதலிய மலரிதழ்களிலிருந்து எடுக்கப்படும் நறுமண நெய்; fragrant essence obtained from the petals of rose, jasmine, etc. and used as a perfume.

**த.வ. பூச்சாறை.**

*[U. atritr > த. அத்தர்.]*

**அத்தராவாயு** *attarā-vāyu,* பெ.(n.) புளிமம் தேங்கி, உடம்பின் வலுவைக் குறைக்குமோர் வளி; a find of indigestion characterised by over eructation and weakness (சா.அக.).

**அத்தரேகை** *atta-rēgai,* பெ.(n.) மருத்துவத் தொழிலுக்குத் தகுதியுடையவன் என்பதற்கு அறிகுறியாக, அவன் உள்ளங் கையில் அமைந்துள்ள வரிகள் (ரேகை); a peculiar link or curling mark in the palm of the hand as in indication that he will be proficient in medicine (சா.அக.).

**த.வ. கைவரை.**

*[அத்தம் + ரேகை.]*

*[Skt. hasta > த. அத்தம்.]*

*வரி > வரிகை>ரேகை >* **Skt.** *rēkhā.*

**அத்தலைப்பொருந்தி** *attalai-p-porundi,* பெ.(n.) **அத்தப்பொருந்தி** பார்க்க; see *atta-p-porundi* (சா.அக.).

**அத்தவசனம்** *atta-vaśaṉam,* பெ.(n.) நினைத்த பொருளை விளக்குஞ் சொல்; word that exactly expresses one's meaning.

**த.வ. பொருண்மொழி.**

*[Skt. artha + vacana > த. அத்தவசனம்.]*

**அத்தவாளம்**[1] *atta-vāḷam,* பெ.(n.) 1. மேலாடை; upper garment. 2. முன்றானை (ஈடு, 9, 10, ப்ர.); outer end of a cloth. 3. காடு (வின்.); jungle.

**த.வ. தோள்தானை.**

*[Skt. hasta + Mar. vāḷā > த. அத்தவாளம்.]*

**அத்தவாளம்**[2] *atta-v-āḷam,* பெ.(n.) ஆயுள் வேதத்திற் சொல்லியுள்ள ஒரு வகை மாத்திரை; (In medicine) a kind of pill in ayurvedic science (சா.அக.).

**அத்தாங்கம்** *attāṅgam,* பெ.(n.) **அத்தாங்காதனம்** பார்க்க; see *attāṅgādaṉam.* "கேசாங்கமு மத்தாங்கம்" (தத்துவப். 107.).

*[Skt. hasta + aṅga>த. அத்தாங்கம்.]*

**அத்தாங்காதனம்** *attāṅgādaṉam,* பெ.(n.) கையிரண்டும் மடித்து நிலத்திலூன்றி உடல் மேற்பட நிற்கும் இருக்கை வகை (தத்துவப். 107, உரை); a yōgic posture in which a person stands on folded hands, keeping the body aloft.

**த.வ. கைத்தாங்கல் ஒகநிலை.**

*[அத்தாங்கம் + ஆதனம்.]*

*[Skt. hasta + aṅga>த. அத்தாங்கம்.]*

**அத்தாணி**[1] *attāṇi,* பெ.(n.) ஓலக்கமண்டபம்; hall of audience durbar hall, presence chamber. "அண்டத் தமரர்கள் சூழ வத்தாணி யுள்ளங் கிருந்தாய்" (திவ். பெரியாழ். 2,7,9.)

*[Pkt.attāṇi>Skt. āsthāna > த. அத்தாணி.]*

**அத்தாணி**[2] *attāṇi,* பெ.(n.) 1. அண்மை; nearness. 2. கமுக்கம்; intimacy.

*[Pkt. attāṇi>Skt. ā-sthana > த. அத்தாணி.]*

**அத்தாணிச்சேவகம்** *attāṇi-c-cēvagam,* பெ.(n.) அறமன்றப் பணிவிடை (திவ். திருப்பல். 8.); service of king or God.

*[அத்தாணி+சேவகம்.]*

*[Pkt.attāṇi>Skt. āsthāna > த. அத்தாணி.]*

*[சே[2] + அகம் > சேவகம்.]*

**அத்தாணிமண்டபம்** *attāṇi maṇḍabam,* பெ.(n.) ஓலக்க மண்டபம் (சி. போ. சிற். 5, 1, 1.); hall of audience, presence-chamber.

*[அத்தாணி + மண்டபம்.]*

*[Pkt.attāṇi>Skt. āsthāna > த. அத்தாணி.]*

**அத்தாந்தரம்**[1] *attāndaram,* பெ.(n.) நிலையற்ற நிலை; helpless condition. "அவனை அந்தாந்தரத்தில் விட்டுவிட்டான்" (இ.வ.).

*[Skt. ardha + antara>த. அத்தாந்தரம்.]*

**அத்தாந்தரம்**[2] *attāndaram,* பெ.(n.) கைப்பணம் வரவுசெலவு செய்யுங்கணக்கன்; cashier. "அம்பலஞ்செயத்தாந்தரம் என்றும்" (நெல்விடு. 317.).

**த.வ. பொருளாளர், காசாளர்.**

*[Skt. hasta+antara> த. அத்தாந்தரம்.]*

**அத்தாபத்தி** *attāpatti,* பெ.(n.) **அத்தியாவத்தை** (நெல்லை) பார்க்க; see *attiyāvastai.*

*[Skt. atyāpat > த. அத்தாபத்தி.]*

**அத்தாபம்**[1] *attābam,* பெ.(n.) **அத்தாபத்தி** (இ.வ.) பார்க்க; see *attāpatti.*

*[Skt. atyāpat > த. அத்தாபம்.]*

**அத்தாபம்**[2] *attābam,* பெ.(n.) **அத்தியாவத்தை** பார்க்க; see *attiyāvattai.*

*[Skt. atyapat > த. அத்தாபம்.]*

**அத்தானம்** *attāṉam,* பெ.(n.) கோபுரவாயில்(R.); gateway under a turret or tower, as of a pagoda.

*[Skt. ā-sthāna > த. அத்தானம்.]*



**அத்தி**[1] *atti,* பெ.(n.) 1. யானை (பிங்.); elephant. 2. தெய்வானை (திருப்பு.); one of the two wives of Skanda. 3. ஓர் அரசன்

(பாரத.குருகுல.28);name of a prince of the lunar race, as the founder of Hastinapura.

*[Skt. hastin > த. அத்தி.]*

**அத்தி[2]** *atti,* பெ.(n.) எலும்பு (பிங்.); bone.

*[Skt. asthi > த. அத்தி.]*

**அத்திக்கவிப்பு** *atti-k-kavippu,* பெ.(n.) எலும்பின் மேல் கவிந்துள்ள சவ்வு; the tough fibrous membrane surrounding the bone periosteum (சா.அக.).

த.வ. என்புக்கவிப்பு.

*[அத்தி+கவிப்பு.]*

*[Skt. asthi> த.அத்தி.]*

*கவி > கவிப்பு.*

**அத்திக்கழலை** *atti-k-kalalai,* பெ.(n.) எலும்பைப் பற்றிய கழலைக் கட்டி; a bone tumour (சா.அக.).

த.வ. என்புக்கழலை.

*[அத்தி + கழலை.]*

*[Skt. asthi>த. அத்தி.]*

**அத்திக்கிரந்தி** *atti-k-kirandi,* பெ.(n.) எலும்புகள் நொறுங்குதலால் உண்டாகிப் பருத்துயர்வதும் அமுங்குவதுமாக இருக்கு மோர் புண்கட்டி; an ulcerous diseases due to the death of a bone arising from syphilitic causes syphilitic causes (சா.அக.).

· த.வ. துருத்துக்கழலை.

*[Skt. asthi+granthi>த. அத்திக்கிரந்தி.]*

**அத்திக்குட்டிமலம்** *atti-k-kutti-malam,* பெ. (n.) 1. கண்டில் வெண்ணெய்; a drug unidentified. 2. யானைக் குட்டியின் சாணி; the faeces of an elephant's kid (சா.அக.).

**அத்திக்கூடு** *atti-k-kūdu,* பெ.(n.) எலும்புக் கூடு; a skeleton (சா.அக.).

த.வ. என்புக்கூடு.

*[அத்தி + கூடு.]*

*[Skt. asthi > த. அத்தி.]*

குல் → குள் → கூடு.



**அத்திக்கொம்பு** *atti-k-kombu,* பெ.(n.) யானைக் கொம்பு; elephant's tusk (சா.அக.).

த.வ. யானை மருப்பு.

*[அத்தி + கொம்பு.]*

*[Skt. hastin>த. அத்தி.]*

**அத்திகங்கம்** *atti-kangam,* பெ.(n.) பொழுதுவணங்கி (சூரிய காந்திப்பூ); sun flower, *Helianthus annuns* alias *Hindicus* (சா.அக.).

**அத்திகபம்** *atti-kabam,* பெ.(n.) 1. கணவாய் மீனெலும்பு; cuttle fish bone. 2. கடனுரை; sea-froth (சா.அக.).

**அத்திகர்ணி** *atti-karni,* பெ.(n.) சிற்றாமணக்கு; castor-plant. *"அத்திகர்ணியவிசு" (தைலவ. தைல. 113.).*

*[Skt. hasti-karnā > த. அத்திகர்ணி.]*

**அத்திகரம்** *atti-karam,* பெ.(n.) 1. பலகறை; cowry. 2. ஊனீர்; serum (சா.அக.).

**அத்திகன்னி** *atti-kanni,* பெ.(n.) வெருகஞ் செடிவகை (மலை.); ol, tuberous rooted herb, *Arum macrorwzon.*

*[Skt. hasti-karna > த. அத்திகன்னி.]*

**அத்திகாயம்[1]** *atti-kāyam,* பெ.(n.) ஐந்து அருக (சைன) மத மெய்ப்பொருள்கள் (தத்துவங்கள்); (Jaina.) ontological categories which are five in number.

*[Skt. asti-kāya > த. அத்திகாயம்.]*

**அத்திகாயம்**[2] *atti-kāyam,* பெ.(n.) 1. எலும்பிலேற்பட்ட புண் (காயம்); an injury to the bone or a wound from the affection of a bone. 2. எலும்பு முறிவு; fracture of a bone (சா.அக.).

*[அத்தி + காயம்.]*

*[**Skt.** asthi > த. அத்தி.]*

கள் → கய் → காய் → காயம்.

**அத்திகிரிமான்மியம்** *atti-kiri-māṉmiyam,* பெ.(n.) சிற்றிலக்கிய(பிரபந்த)ங்களுளொன்று; name of a poem on the *Viṣṇu*shrine at *Kāñjipuram* by *Vēdāntadēšika.*

*[**Skt.** hasti-giri + mahātmya > த. அத்திகிரி மான்மியம்.]*

**அத்திகும்பம்** *atti-kumbam,* பெ.(n.) எலும்புப் பானை; an urn for preserving the bones of the dead (சா.அக.).

**த.வ. என்புத்தாழி.**

*[அத்தி + கும்பம்.]*

*[**Skt.** asthi> த. அத்தி.]*

*கும்பு > கும்பம் > **Skt.** kumbha.*

**அத்திகூடம்** *atti-kūḍam,* பெ.(n.) யானைக்கூடம்; elephant stables. *"ஆயிடை யத்தி கூடத் தயலெழுந்து" (யசோதர. 2, 21.).*

**த.வ. யானைத்தறி.**

*[அத்தி + கூடம்.]*

*[**Skt.** hastin > த. அத்தி.]*

*கூடு > கூடம்.*

**அத்திகேசரம்** *atti-kēšaram,* பெ.(n.) சிவப்பு வல்லி; a red creeper (சா.அக.).

**அத்திகோசத்தார்** *atti-kōšattār,* பெ.(n.) ஒரு குழுவின் பெயர் (தொல். சொல். 167. உரை.); name of an ancient clan.

**த.வ. யானைக்குழுவார்.**

**அத்திகோசம்** *atti-kōšam,* பெ.(n.) யானை சுமத்தற்குரிய பொருள் படைத்த பெரு வணிகர் வகையார்; a kind of merchant, whose store of wealth is so large as to need an elephant to carry it. *"ஐம்பெருங்குழுவு மத்திகோசமும்" (பெருங். வத்தவ. 9, 5, அரும்.).*

**த.வ. யானைவாணிகக்குடி.**

*[**Skt.** hastin + kōšan>த. அத்திகோசம்.]*

**அத்திகோபம்** *atti-kōbam,* பெ.(n.) சிவந்து தோன்றும் கண்ணோய் வகை (வின்.); a disease of the eye.

*[அத்தி + கோபம்.]*

*[**Skt.** asthi > த. அத்தி.]*

*குப்பள் = சிவப்பு. குப்பள் > குப்பு > கோப்பு > கோபம்.*

**அத்திகோவிகம்** *atti-kovigam,* பெ.(n.) சிவப்பு, எலிச் செவிப் பூடு; a red species of rat's ear plant, *Evolvulus emarginatas* (சா.அக.).

**அத்திசந்தி** *atti-šandi,* பெ.(n.) எலும்பின் மூட்டு; the joint of bones (சா.அக.).

*[அத்தி + சந்தி.]*

*[**Skt.** asthi > த. அத்தி.]*

அந்து → சந்து → சந்தி.

**அத்திசம்** *attišam,* பெ.(n.) எலும்புக்குள் தோன்றுவது; that which is produced in the bone like its marrow (சா.அக.).

**த.வ. என்பியம்.**

*[**Skt.** asthi > த. அத்திசம்]*

**அத்திசம்மாரகம்** *atti-šammāragam,* பெ.(n.) நான்முகப் பிரண்டை; bone setter, *Vitis quadrangularis* (சா.அக.).



**அத்திசா** *attišā,* பெ.(n.) கொடி முந்திரிகை; common grapervine, *Vitis vinefera* (சா.அக.).

**அத்திசாரபேதி** *atti-šāra-bēdi,* பெ.(n.) எலும்பு, மூளை இவற்றின் சாரத்தை வெளிப்படுத்தி கழி மலத்தோடு கலந்து வருமோர் வகை வயிற்றுக் கழிச்சல்; a kind of dysentary marked by the discharge of marrow and other substance from the cavities of bones (சா.அக.).

[**Skt.** *asthi+šarabēdi* > த. *அத்திசாரபேதி.*]

**அத்திசிங்குவை** *atti-šinguvai,* பெ.(n.) பதின் நாடியுளொன்று (சிலப். 3, 26, உரை.); a principal tubular vessel of the human body, one of *taša-nāḍi,* q.v.

[**Skt.** *hastijihvā* > த. *அத்திசிங்குவை.*]

**அத்திசிராவம்** *atti-širāvam,* பெ.(n.) பெண்களுக்கு அல்குல் வழியாகவோ அல்லது கருப்பைக் குள்ளிருந்தோ பால்போல் வெண்ணிறமாயோ அல்லது சளி, சீழ் முதலியன போலவோ நீர்மமாக வெளிப்பட்டு, அல்குலிலும், முதுகிலும் வலியுண்டாக்கி அடிவயிறு கனத்து, நாளுக்கு நாள் உடம்பு மெலிந்து, கை காலோய்ந்து போகும்படிச் செய்யும் நோய்; a disease in women characterised by a whitish viscid discharge from the vagina or uterine cavity due to the congestion of the these parts, arises from weakness, perturbation of the mind abortion or premature labour, rude coitus etc. 2. எலும்புருக்கி நோய்; a tabes marked by a secretion of the marrow from the bony tissues with a darting pain ostcotabes. 3. இதள் (இரச) தாதுவின் கொதிப்பினால் குருதியின் இயற்கை நிறம் கெட்டு வெளிப்படுமோர் நோய்; a wasting disease arising from the discharge of blood, with its natural colour altered, owing to the overheated condition of the chyle in the system (சா.அக.).

[**Skt.** *asthi+šrāva*>த. *அத்திசிராவம்.*]

**அத்திசூடு** *atti-šūḍu,* பெ.(n.) 1. வெப்பம்; heat. 2. கதகதப்பு; feverishness.

**அத்தித்திப்பிலி** *atti-t-tippili,* பெ.(n.) கொடிவகை (மூ.அ.); elephant - pepper climber.

*[அத்தி+திப்பிலி.]*

[**Skt.** *hasti* > த. *அத்தி.*]

*திப்பிலி* > **Skt.** *pippili*

**அத்தித்திவகம்** *atti-t-tivagam,* பெ.(n.) எலும்பின் பாகத்தையடுத்த சவ்வு; the membrane investing the bones of animals, *Periosteum* (சா.அக.).

**அத்திதந்தம்**[1] *atti-tandam,* பெ.(n.) முள்ளங்கிச் செடிவகை; radish, as resembling elephant tusk. *"விடமரக் கனிமுருக் கத்தி தந்தம்" (தைலவ. தைல. 73.).*

[**Skt.** *hastidanta* > த. *அத்திதந்தம்*]

**அத்திதந்தம்**[2] *atti-tandam,* பெ.(n.) யானைத் தந்தம்; the tusk of the elephant ivory.

[**Skt.** *hastindanta* > த. *அத்திதந்தம்.*]

**அத்திதாதுசுரம்** *atti-tādu-šuram,* பெ.(n.) உடம்பை உருக்கச் செய்யும் எலும்பைப் பற்றிய வோர் வகைக் காய்ச்சல். a kind of fever resulting in the emaciation of the body the due to the affection of bones (சா.அக.).

*[அத்தி+தாது+சுரம்.]*

[**Skt.** *asthi*> த. *அத்தி.*]

உல் → சுல் → சுர் → சுரம்.

**அத்திதேலம்** *atti-tēlam,* பெ.(n.) ஆவியாய்ப் போகக் கூடிய நெய்மம்; a volatile oil, such as petrol, etc. (சா.அக.).

**அத்திநகம்** *atti-nagam,* பெ.(n.) நகர வாயிலின் படிச்சுருள் (சூடா.); raised mound protecting the approach to the gate of a fort or city, furnished with an inner staircase and loopholes for discharging arrows.

[**Skt.** *hasti - nakha* > த. *அத்திநகம்.*]

**அத்திநகர்** *attinagar,* பெ.(n.) அத்தினாபுரம்; *Hastināpuram* near modern Delhi. "*அத்திநகரெய்தினா னாங்கு*" *(பாரதவெண். 147.).*

*[அத்தி + நகர்.]*

*[**Skt.** hastin>த. அத்தி.]*

*நகு → நகர்.*

**அத்திநாடிவிரணம்** *atti-nāḍi-viraṇam,* பெ.(n.) எலும்பின் வழியே பிறந்து அந்த எலும்பின் நரம்புகளுக்கு வலியுண்டாக்கும் ஒரு மென்மையான கட்டி; a cold abscess formed in the surrounding tissues of a bone and marked by a chronic inflmmation of the periosteum (சா.அக.).

**அத்திநாத்திவாதம்** *atti-nātti-vādam,* பெ.(n.) எலும்பை அழிக்கக்கூடியவோர் வளிநோய் (வாதம்); a disease marked by the molecular decay or death of a bone-osteonecrosis (சா.அக.).

**அத்திநூல்** *atti-nūl,* பெ.(n.) எலும்பினுடைய தன்மையையும், அதன் அமைப்பையும் பற்றிக் கூறும் நூல்; the science of the nature and structed of the bones, *Osteology* (சா.அக.).

*[அத்தி+நூல்.]*

*[**Skt.** asthi > த. அத்தி.]*

**அத்திநோய்** *atti-nōy,* பெ.(n.) 1. எலும்பில் ஏற்படும் நோய்; disease of the bone. 2. எலும்பில் ஏற்படும் வலி; pain in a bone or in the bones-ostalgia (சா.அக.).

*[அத்தி+நோய்.]*

*[**Skt.** asthi > த. அத்தி.]*

**அத்திப்பிடிப்பு** *atti-p-piḍippu,* பெ.(n.) 1. எலும்பிற்குக் காணும் அழற்சி; inflammation of the bones. 2. மூட்டு அல்லது எலும்புப் பொருத்துகளிற் காணும் பிடிப்பு; inflammation of the joints, *Osteoarthiritis.* 3. மூட்டுகளிலுள்ள குருத்தெலும்புகள் வன்மையடைவதனால் ஏற்படும் பிடிப்பு; arthritis marked by the growth of the cartilage at the edge of the joints, *Hypertrophic arthritis* (சா.அக.).

*[அத்தி + பிடிப்பு.]*

*[**Skt.** asthi > த. அத்தி.]*

*புள்→பிள்→பிண்→பிடி→பிடிப்பு.*

**அத்திப்புரசாதனி** *atti-p-puraśādaṉi,* பெ.(n.) அவுரிப் பூடு; indigo plant, *Indigofera elephantum* (சா.அக.).

**அத்திபங்கம்** *atti-paṅgam,* பெ.(n.) 1. எலும்பின் முறிவு; the fracture of a bone. 2. எலும்பின் கோணல்; the curvature or bending of a bone-osteocampsia (சா.அக.).

*[**Skt.** asthi + bhaṅga > த. அத்திபங்கம்.]*

**அத்திபஞ்சரம்** *attipañjaram,* பெ.(n.) எலும்புக்கூடு (சிந்தா. நி. 147.); skeleton.

*[**Skt.** asthipañjara > த. அத்திபஞ்சரம்.]*

**அத்திபந்தனம்** *atti-pandaṉam,* பெ.(n.) எலும்புகளைக் ஒன்று கட்டுகின்ற நார்; a ligament or a ligamental fibre (சா.அக.).

*[அத்தி+பந்தனம்.]*

*[**Skt.** asthi > த. அத்தி.]*

**அத்திபேதம்** *atti-pēdam,* பெ.(n.) எலும்பின் வேற்றுமை; the different varieties of bones. (சா. அக.)

*[**Skt.** ashti + bhēda > த. அத்திபேதம்.]*

**அத்திபேதி**[1] *atti-bēdi,* பெ.(n.) யானையின் மலக்குடலைத் துப்புரவாக்கும் மருந்து (வின்.); purgative for elephants.

*[**Skt.** hastibhedin > த. அத்திபேதி.]*

**அத்திபேதி**[2] *atti-bēdi,* பெ.(n.) எலும்பை நீராக்கும் மருந்து; a medicine capable of converting the bone into a liquid (சா.அக.).

*[**Skt.** asthi+bhēdin > த. அத்திபேதி.]*

**அத்திபைரவி** *atti-bairavi,* பெ.(n.) சீமைவிளா; European wood apple, *Feronia elephantum* (சா.அக.).

**அத்திமண்டுகி** *atti-mandūgi,* பெ.(n.) முத்துச் சிப்பி; a molluse which yields pearls, pearl oyster (சா.அக.).



**அத்திமுகத்தோன்** *attimugattōn,* பெ.(n.) பிள்ளையார் (பிங்.); *Ganēša,* as elephant-faced.

த.வ. ஆனைமுகப் பெருமான்.

*[அத்தி+முகத்தோன்.]*

*[Skt. hasti > த. அத்தி.]*

*முகம் > முகத்தோன்.*

**அத்திமேகம்** *atti-mēgam,* பெ.(n.) யானையின் சிறுநீரை யொத்து ஒருவேளை தடைபடாமலும், ஒருவேளை தடைபட்டும், வெண்ணிறமாகவோ சிறிது நிறம் மாறியோ காணுமொரு அரிதான வெள்ளை நோய்; a chronic diabetes chracterised by the passing of a large-quantity of pale or light coloured urine with or without hindrance, in an unbroken stream like that passed by an elephant, *Diabetes in sipidus or D. mellitus* (சா.அக.).

*[Skt. hastin + mēha > த. அத்திமேகம்.]*

**அத்தியக்கம்** *attiyakkam,* பெ.(n.) காண்டலென்னுமளவை; perception as a mode of proof. *"ஆக்கைவிதம் பேதமென அத்தியக்க மறிவிக்கும் (சிவதரு. சிவஞான யோ. 19.).*

*[Skt. adhyakṣa > த. அத்தியக்கம்.]*

**அத்தியக்கன்** *attiyakkan,* பெ.(n.) தலைவன்; master, lord, leader, director, superintendent. *"கணாத்தியக்கரை" (விநாயகபு. 80. 792).*

*[Skt. adhyakṣa > த. அத்தியக்கன்.]*

**அத்தியக்கினி** *attiyakkini,* பெ.(n.) திருமண காலத்து நெருப்பெதிரே பெண்ணுக்குக் கொடுக்குஞ் சீர்வரிசைப்பொருள் (W.G.); gifts made to a woman before the sacred fire at her wedding, which become her separate property, a variety of *šīr.*

*[Skt. adhyagni > த. அத்தியக்கினி.]*

**அத்தியசனம்** *attiyašanam,* பெ.(n.) முதல் நாள் உண்டவுணவு செரிக்காமலே மறுநாள் கொள்ளு முணவு; food taken on the next day before the digestion of that taken on the previous day (சா.அக.).

**அத்தியட்சன்** *attiyaṭcan,* பெ.(n.) **அத்தியக்கன்** பார்க்க; see *attiyakkan.*

த.வ. தலைவன்.

*[Skt. adhyakṣa > த. அத்தியட்சன்.]*

**அத்தியந்தம்**[1] *attiyandam,* எ.வி.(adv.) மிகவும்; much, excessively.

*[Skt. atyanta > த. அத்தியந்தம்.]*

**அத்தியந்தம்**[2] *attiyandam,* பெ.(n.) ஒரு பேரெண் (வின்.); ten thousand quadrillions.

*[Skt. atyanta > த. அத்தியந்தம்.]*

**அத்தியந்தம்**[3] *attiyandam,* வி.அ.(adv.) முழுதும்; அனைத்தும்; அறவே; to the last end, entirely. *"பாவங்களை அத்தியந்தம் போக்கடிக்கிறவர்களையும்" (வேதாந்தசா. 13).*

*[Skt. atyanta > த. அத்தியந்தம்.]*

**அத்தியந்தாபாவம்** *attiyandāpāvam,* பெ.(n.) முழுதுமின்மை (பிரபோத, 42, 4.); (Log.) absolute non-existence.

*[Skt. atyantābhāva > த. அத்தியந்தாபாவம்.]*

**அத்தியயம்** *attiyayam,* பெ.(n.) இறப்பு; death (சா. அக.).

**அத்தியயனபட்டர்** *attiyayaṉa-paṭṭar*, பெ.(n.) பூசகன்; temple priest.

*[Skt. adhyayana+bhaṭṭa > த. அத்தியயன பட்டர்.]*

**அத்தியயனம்** *attiyayaṉam*, பெ.(n.) ஓதல்; learning, studying, esp. the *vēda*. *"அத்தியயனத்தொடு வலமாத்திரிந்து" (நல். பாரத. தருமசா. 177.).*

த.வ. மறையோதல்.

*[Skt. adhyayana > த. அத்தியயனம்.]*

**அத்தியயனவிருத்தி** *attiyayaṉa-virutti*, பெ.(n.) கோயிலில் மறைநூலோதற்கு விடப்பட்ட இறையிலி நிலம் (M.E.R. 493-4 of 1926.); tax-free land endowed for the service of reciting the *vēdas* in temples.

த.வ. மறையோத்துப்புரப்புக்கொடை.

*[Skt. adhyayana + vṛtti> த. அத்தியயன விருத்தி. ]*

**அத்தியயனாங்கம்** *attiyayaṉāṅgam*, பெ.(n.) **அத்தியயனவிருத்தி** (M.E.R. 197 of 1924.) பார்க்க; see *attiyayaṉa-virutti.*

*[Skt. adhyayana + aṅga > த. அத்தியயனாங்கம்.]*

**அத்தியயனோற்சவம்** *attiyayaṉōṟcavam*, பெ.(n.) திருமால் கோவிலின் விழா வகை (கோயிலொ. 8); festival in *Viṣṇu* temples during which are chanted the divya-prabandha and vedic hymns for ten nights before (*pagaṟpattu*), and ten days after (*irāppattu*) *vaiguṇḍa-ēgādaśi.*

த.வ. மறையோதல் விழா.

*[Skt. adhyayana+ utsava>த. அத்தியயனோற்சவம்.]*

**அத்தியவசாயம்** *attiyavaśāyam*, பெ.(n.) மனப்போக்கு; inclination, turn of mind.

*[Skt. adhyava - sāya > த. அத்தியவசாயம்.]*

**அத்தியற்பம்** *attiyaṟpam*, பெ.(n.) அளவிட்டிது; very little.

த.வ. மிச்சிறிது.

*[Skt. atyalpa > த. அத்தியற்பம்.]*

**அத்தியற்புதம்** *atti-y-aṟpudam*, பெ.(n.) பெரு வியப்பு; exceeding wonder.

*[Skt. atyadbhuta > த. அதியற்புதம்.]*

**அத்தியாகாரம்**[1] *attiyāgāram*, பெ.(n.) அவாய் நிலையால் வருவித்து முடிக்கை (பி.வி. 50, உரை.); (Gram.) supplying an ellipisis.

*[Skt. adhyāhāra > த. அத்தியாகாரம்.]*

**அத்தியாகாரம்**[2] *attiyāgāram*, பெ.(n.) அளவிறந்த உணவு; too much of food.

*[Skt. adhyāhara > த. அத்தியாகாரம்.]*

**அத்தியாகாரம்**[3] *attiyāgāram*, பெ.(n.) பெருஞ்சீரகம்; star-anise, *Illecium anisatum* (சா.அக.).

*[Skt. adhyāhara > த. அத்தியாகாரம்.]*

**அத்தியாகாரி** *attiyāgāri*, பெ.(n.) மிகு உணவு உண்போன், கழிபேரிரையான்; one who eats in excess, a glutton (சா.அக.).

**அத்தியாகினம்** *attiyāgiṉam*, பெ.(n.) கருஞ்சீரகம் (பரி. அக.); black cumin.

**அத்தியாசம்** *attiyāśam*, பெ.(n.) ஒன்றன் குணத்தை மற்றொன்றன் மேலேற்றுகை; erroneous superimposition, transference of an attribute from one thing to another which does not really possess it. *"உற்றவத்தியாச விலக்கணமாம் வேறொன்றி லொன் றுணர்தலாம்" (வேதா சூ. 90.).*

*[Skt. adhyāsa > த. அத்தியாசம்.]*

**அத்தியாசவாதம்** *attiyāśa-vādam*, பெ.(n.) முகத்தில் ஒரு பக்கமும், அதற்கு மாறாக உடம்பில் மற்றொரு பக்கமுமாகக் காணுமோர் முடக்குவளி(வாத) நோய்; a paralysis of the facial muscles of one side with paralysis of the limbs on the corresponding opposite side ot the body, *Aternate paralysis* (சா.அக.).

*[Skt.adhyāsa+vāta > த. அத்தியாசவாதம்.]*

**அத்தியாத்துமசாத்திரம்** *attiāttu-maśāttiram,* பெ.(n.) சாங்கியம், பாதஞ்சலம், வேதாந்தம் என மூவகைப்பட்ட ஆதன் அறிவியல் நூல் (விவேகசிந். 15.); the spiritual science, of three kinds, *śāṅgiyam, pādañjalam, vēdāndam.*

*[Skt. adhyātma+ śāstra > த. அத்துயாத்தும சாத்திரம்.]*

**அத்தியாத்துமம்** *attiyāttumam,* பெ.(n.) நூற்றெட்டுபநிடதங்களுளொன்று; name of an upanisad.

*[Skt. adhyātma > த. அத்தியாத்துமம்.]*

**அத்தியாத்துமமதம்** *attiyāttumamadam,* பெ.(n.) பாசுகரீயம் மாயாவாதம் சத்தப்பிரமவாதம் கீரீடாப்பிரம வாதம் என நால்வகைப்பட்டு உயிரின் வடிவத்தை விளக்கும் மதம் (விவேகசிந். 16.); the doctrine of the soul of four kind, *pāśkariyam, māyāvādam, śatta-p-pirama-vādam, kiriḍā-p-pirama-vātam.*

*[Skt. adhyātma > த. அத்தியாத்துமம்.]*

**அத்தியாத்துமிகம்** *attiyāttumigam,* பெ.(n.) **அத்தியான்மிகம்** பார்க்க; see *attiyāṉmigam.*

*[Skt. ādhyātmika > த. அத்தியாத்துமிகம்.]*

**அத்தியாபகன்** *attiyābagaṉ,* பெ.(n.) திருமறைப் பயிற்றுவிப்போன் (பிரபோத. 11, 5); teacher, instructor of the *Vēda.*

த.வ. மறையாசான்.

*[Skt. adhyāpaka > த. அத்தியாபகன்.]*

**அத்தியாபனம்** *attiyāpaṉam,* பெ.(n.) மறை நூல் பயிற்றுகை; teaching the *Vēda.*

த.வ. மறையோதல்.

*[Skt. adhyāpana > த. அத்தியாபனம்.]*

**அத்தியாம்சரக்கு** *attiyām-śarakku,* பெ.(n.) யானையைப் போல் எளிதில் கட்டுப்படாத சரக்கு; minerals that cannot be easily consolidated; substances that pass away into vapour or fumes before fire, like, sulphur, mercury, etc., (சா.அக.).

**அத்தியாமிசம்** *attiyāmiśam,* பெ.(n.) எலும்பின் மேலுண்டாகுங் கழலைக் கட்டி; a sarcoma situated closed to the outer surface of a bone, *paresteal sarcoma* (சா.அக.).

த.வ. என்புக்கழலை.

**அத்தியாயம்** *attiyāyam,* பெ.(n.) நூற்பிரிவு (பிங்.); chapter, division of a book.

த.வ. இயல்.

*[Skt. adhyāya > த. அத்தியாயம்.]*

**அத்தியாயனம்** *attiyāyaṉam,* பெ.(n.) மறைநூல் ஓதுகை (சிந்தா. நி. 121.); reciting the *Vēdas.*

த.வ. மறையோதல்.

*[Skt. adhyayana > த. அத்தியாயனம்.]*

**அத்தியாரோபம்** *attiyārōbam,* பெ.(n.) ஒன்றன் தன்மையை மற்றொன்றில் ஏற்றிக் கூறுகை (வேதா. சூ. 28.); erroneously attributing the properties of one thing to another.

த.வ. பிறிதேற்றம்.

*[Skt. adhyārōpa > த. அத்தியாரோபம்.]*

**அத்தியாவசியம்** *attiyāvaśiyam,* பெ.(n.) மிக தேவை (அடிப்படை)யானது; that which is indispensable or essential.

த.வ. அகத்தியம், கட்டாயம்.

*[Skt. atyāvaśya > த. அத்தியாவசியம்.]*

**அத்தியாவத்தை** *attiyāvattai,* பெ.(n.) நெருக்கடியான நிலை (இ.வ.); critical condition, as of a disease-stricken person.

*[Skt. atyāvasthā > த.அத்தியாவத்தை.]*

**அத்தியாவாகனிகம்** *attiyāvākaṉigam,* பெ.(n.) பெண் கணவன் வீட்டுக்குச் செல்லுங்காற் பெறுஞ் சீதனம் (W.G.); gifts made to a bride when she is conducted

to the bridegroom's house, which become her separate property, a variety of *Šīdaṇam*.

த.வ. தாய்மனைச்சீர்.

*[Skt. adhyāvāhanika > த. அத்தியாவாகனிகம்.]*

**அத்தியாவிரதவாதம்** *attiyā-virada-vādam*, பெ.(n.) உடம்பில் எலும்பின் கூறுகளில் வீக்கம் அல்லது கழலைக் கட்டியைப் போல் காணுமோர் வளி (வாத) நோய்; an indurated swelling or tumour that forms upon bones from various causes, but chiefly-syphilis-syphilitic node (சா.அக.).

த.வ. என்பு ஊதை.

**அத்தியாளி** *atti-yāḷi*, பெ.(n.) யானையாளி (பெரும்பாண். 257-9 அடிக்குறிப்பு); a fabulous animal.

*[அத்தி+யாளி.]*

*[Skt. hastin > த. அத்தி.]*

**அத்தியான்மிகம்** *attiyāṉmigam*, பெ.(n.) 1. ஆதனுக்குரியது (வின்.); pertaining to the soul. 2. சைவ தோன்றியங்களுள் ஒரு பகுதி; (*Šaivam*) a section of *Šaivāgamas*. *"வைதிகம் அத்தியான்மிகம் அதிமார்க்கம்... என நூல்களை ஐவகைப்படுத்து" (சி.போ.பா. சிறப். 17.)*; 3. ஆதன் பிறரால் அடையுந் துன்பம் (சி.சி. 2, 39, சிவாக்.); (phil.) physical and mental afflictions caused to one's self by others.

த.வ. ஆதன்மம்.

*[Skt. ādhyātmika > த. அத்தியான்மிகம்.]*

**அத்தியானந்தயோனி** *attiyāṉanda-yōṉi*, பெ.(n.) பெண்களுக்கு அடிக்கடி முயக்கத்தில் மிகுதியாக இச்சையுண்டாக்குமொரு நோய்; a disease in women which knows no satisfaction in sexual pleasures; in sane sexual desire in the female, *Nymphomania* (சா.அக.).

த.வ. கடுங்காமம்.

**அத்தியானம்** *attiyāṉam*, பெ.(n.) மறைநூல் கற்கை; learning, studying, esp. the Vēda. *"அத்தியான மாமினையர் கத்துவதும்" (பிரபோத. 11, 4.).*

*[Skt. adhyayana > த. அத்தியானம்.]*

**அத்தியிளக்கம்** *atti-y-iḷakkam*, பெ.(n.) 1. எலும்பின் நுண்மங்கள் மெதுவடைதல்; softening of the bony tissue, ossifluence. 2. எலும்பு இளக்கமடைதல்; softening of the bones, *Ostcomalacia or mollities ossium* (சா.அக.).

*[அத்தி+இளக்கம்.]*

*[Skt. asthi > த. அத்தி.]*

**அத்தியூர்** *atti-y-ūr*, பெ.(n.) காஞ்சியில் திருமால் கோயில் கொண்டுள்ள தோரிடம் (யாப். வி. 93, பக். 351.); little Kanjeevaram which has a *Viṣṇu* shrine.

*[அத்தி + ஊர்.]*

*[Skt. hastin > த. அத்தி.]*

**அத்திர** *attira*, எ.வி.(adv.) ஆவியாய்ப் போகக் கூடியது; capable of passing off into vapour-volatile (சா.அக.).

**அத்திரசத்திரம்** *attira-šattiram*, பெ.(n.) கைவிடு படை, கைவிடாப் படைகள் (திருவானைக். திருவிழா. 11.); missiles and weapons.

*[Skt. astra + šastra > த. அத்திரசத்திரம்.]*

**அத்திரசிகிச்சை** *attira-šigiccai*, பெ.(n.) 1. அம்பைப் போல் உடம்பினுள் மருந்தைப் புகட்டுமொரு வகை மருத்துவ முறை; a method of treatment in which liquid medicine is introduced into the system by a needle, Injection. 2. கத்தியாலறுத்து மருத்துவம் செய்தல்; the operative branch of the medical practice (சா.அக.).

*[Skt. astra + cikitsā > த. அத்திரசிகிச்சை.]*

**அத்திரத்துவம்** *attirattuvam*, பெ.(n.) ஆவியாய்ப் போதல்; vapourising or

dissipating spontaneously into atmosphere, volatility (சா.அக.).

**அத்திரதேவர்** *attiradēva,* பெ.(n.) விழாக் காலங்களில் வீதி வலம் வரும் படைக்கல வடிவ திருமேனி (திருவானைக். திருவிழா. 11.); weapon-god taken round the streets during festivals.

*[அத்திர(ம்) + தேவர்.]*

*[Skt. astra> த. அத்திர(ம்).]*

**அத்திரநீர்** *attira-nīr,* பெ.(n.) கழுதையின் சிறுநீர்; ass's urine (சா.அக.).

**அத்திரப்பால்** *attira-p-pāl,* பெ.(n.) 1. கழுதைப் பால்; ass's milk. 2. குதிரைப் பால்; horse's milk (சா.அக.).

**அத்திரப்பொருள்** *attira-p-poruḷ,* பெ.(n.) ஆவியாக மாறிக் காற்றில் கலக்கக் கூடிய பொருள்கள்; bodies which are capable of passing off into vapour and mingling in the atmosphere-volatile substances like camphor, alchohol etc. (சா.அக.).

**அத்திரபரீட்சை** *attiraparīṭcai,* பெ.(n.) அறுபத்து நாலு கலையுள் ஒன்றாகிய வில்வித்தை; archery, one of *aṟupattunālu-kalai,* q.v.

*[Skt. astra + parīksa> த.அத்திரபரீட்சை.]*

**அத்திரம்**[1] *attiram,* பெ.(n.) வில் (நாநார்த்த); bow.

*[Skt. astra > த. அத்திரம்.]*

**அத்திரயூகம்** *attira-y-ūgam,* பெ.(n.) படை அணி வகுப்பு வகை (பாரத. பதினெட் 15.); arrow-shaped battle array.

**த.வ. வில்லுருப்படை வகுப்பு.**

*[Skt. astra + vyūha>த. அத்திரயூகம்.]*

**அத்திரவக்கிதம்** *attira-vakkidam,* பெ.(n.) முளரி (தாமரை)ப் பூவிதழ்; filaments of lotus.

**அத்திராதாளி** *attirā-tāḷi,* பெ.(n.) யானை; elephant (சா.அக.).

**அத்திரி**[1] *attiri,* பெ.(n.) 1. கதிரவன்; sun. 2. விண்; sky, firmament.

*[Skt. adri > த. அத்திரி.]*

**அத்திரி**[2] *attiri,* பெ.(n.) மலை; mountain (சா.அக.).

*[Skt. adri > த. அத்திரி.]*

**அத்திரிகாரம்** *attirikāram,* பெ.(n.) இரும்பு; iron (சா.அக.).

*[Skt. adrigara > த. அத்திரிகாரம்.]*

**அத்திரிசாரம்** *attiriśāram,* பெ.(n.) இரும்பு (வை.மூ.); iron.

*[Skt. adriśāra > த. அத்திரிசாரம்.]*

**அத்திரெட்சை** *attireṭcai,* பெ.(n.) 1. உணர்ச்சி; passion. 2. ஆசை; desire (சா.அக.).

**அத்திரெணம்** *attireṇam,* பெ.(n.) **அத்தி விரணம்** பார்க்க; see *attiviraṇam* (சா.அக.).

**அத்திவலி** *atti-vali,* பெ.(n.) எலும்பிற் காணும் வலி; pain in the bone or bones, Ostalgia (சா.அக.).

*[அத்தி + வலி.]*

*[Skt. asthi>த. அத்தி.]*

**அத்திவாரம்** *attivāram,* பெ.(n.) அடிக் கட்டடச் சுவரின் அடிப்பாகம்; foundation. *"அத்திவார மிருத்தி" (அரிச். பு. இந்தி. 19.).*

**த.வ. கடைக்கால், அடிவாணம்.**

*[U. ustuwār > த. அத்திவாரம்.]*

**அத்திவிரணம்** *atti-viraṇam,* பெ.(n.) எலும்பில் உண்டாகும் புண்; a sore affecting the bones (சா.அக.).

*[Skt. asthi + vrāṇa>த.அத்திவிரணம்.]*

**அத்திவிசாணிகா** *atti-viśāṇigā,* பெ.(n.) வாழை; plantain tree, *Musa paradisiaca* (சா.அக.).

**அத்திவெட்டை** *atti-veṭṭai,* பெ.(n.) ஒழுக்கக் கேட்டினால் எலும்பில் பாய்ந்த மேகச்சூடு; venereal heat affecting the bones in the system, *Osteotabes* (சா.அக.).

த.வ. அங்கவெட்டை.

*[அத்தி+வெட்டை.]*

*[**Skt.** asthi > த. அத்தி.]*

**அத்திவேர்** *atti-vēr,* பெ.(n.) 1. மயிர்க்கால்; root of the hair. 2. யானைமயிர்; elephant's hair (சா. அக.).

*[அத்தி + வேர்.]*

*[**Skt.** hastin>த. அத்தி.]*

**அத்திராதாளி** *attirā-tāḷi,* பெ.(n.) யானை; elephant (சா.அக.).

**அத்தினபுரம்** *attinapuram,* பெ.(n.) நூற்றுவர்தம் தலைநகர் (சீவக. 2182, உரை); Hastinapura.

*[**Skt.** hastinapura > த. அத்தினபுரம்.]*

**அத்தினாபுரி** *attināpuri,* பெ.(n.) அத்தினாபுரம் (பாரத. குருகுல. 29.); Hastinapuram.

*[**Skt.** hastinapurī > த. அத்தினாபுரி.]*

**அத்தினி**[1] *attini,* பெ.(n.) 1. பிடி (பிங்.); female elephant. 2. பெண்வகை (கல்லா. 7, மயிலேறு கொக்கோ. 1, 15–18.); (Erot.) woman of elephant-like nature, one of three *magaḷir šādi* or one of four *peṇ.*

*[**Skt.** hastinī > த. அத்தினி.]*

**அத்தினி**[2] *attini,* பெ.(n.) 1. காக்கை; crow. 2. விருப்பம் (இச்சை) கொண்ட பெண்; a woman highly lustful. 3. வழலை; fuller's earth. 4. மூன்று அல்லது நான்கு திங்கள் வளர்ச்சியுள்ள பிண்டக்கரு; human foetus three or four months old i.e., the fourth and the last class of foetus according to the classification contemplated in the Tamil medical science (சா.அக.).

**அத்தினிமார்பிண்டத்தவலமுடி** *attini-mār-piṇḍa-t-tavala-muḍi,* பெ.(n.) நால்வகைச் சாதிகளிலொன்றாகிய அத்தினி சாதிப் பெண்ணின் முதற்பிண்டத்தின் மண்டையோடு; the skull of the first foetus of the one of the 4 classes of women called Athini (the lowest class) (சா.அக.).

**அத்துச்சம்** *attuccam,* பெ.(n.) கோள்களின் நல்லுச்சநிலை (சங். அக.); (Astrol.) highest position of a planet.

*[**Skt.** atyucca > த. அத்துச்சம்.]*

**அத்துவசிரமம்** *attuva-širamam,* பெ.(n.) வழிநடைக் களைப்பு; fatigue from travel (சா.அக.).

**அத்துவசுத்தி** *attuva-šutti,* பெ.(n.) தீக்கை காலத்தில் ஆறு வழிகளிலும் இறந்தகால வினைகளையெல்லாம் அழிக்கை (சைவச. ஆசாரி. 64.); (*Šaiva.*) purification of *attuvās*; annihilation, by the guru while initiating, of all the karmas which remain stored as *šañjidam* in the six *attuvās,* leading to the sundering of the bonds *māyai* and *āṇavam* and eventually to liberation.

*[**Skt.** adhvan+suddhi>த. அத்துவசுத்தி.]*

**அத்துவசோதனை** *attuva-šōdanai,* பெ.(n.) **அத்துவசுத்தி** பார்க்க; see *attuva-šutti.*

*[**Skt.** adhvan + šōdhana> த. அத்துவ சோதனை.]*

**அத்துவநியாசம்** *attuva-niyāšam,* பெ.(n.) அத்துவத் தூய்மை (சுத்தி); purification of *attuvā.*

*[**Skt.** adhvan +nyāsa>த. அத்துவநியாசம்.]*

**அத்துவபோக்கியம்** *attuva-bōkkiyam,* பெ.(n.) ஒருவகை மரம், மாம்புளிச்சை; a tree called travellers delight, *spondias mangifera* (சா.அக.).

**அத்துவயதாரகம்** *attuvaya-tāragam,* பெ.(n.) நூற்றெட்டு மறையின் அறிவுப் பகுதியிலொன்று; name of an upaniṣad.

*[**Skt.**A-dvaya-tāraka >த. அத்துவயதாரகம்.]*

**அத்துவரியு** *attuvariyu,* பெ.(n.) 1. வேள்வி செய்வாருள் ஒருவன்; chief *Yajur-vēdic* priest at a sacrifice. *"வன்றிறல் வசுக்க ளத்துவரியு"* (மச்சபு. சந்திரோ. 12.). 2. வினைத் தலைமை கொள்பவன் (வகிப்பவன்); active

leader, as an adhvaryu. *'அவன் அத்துவரியுவாய் நின்று பாடுபடுகிறான்'.*

*[Skt. adhvaryu > த. அத்துவரியு.]*

**அத்துவவிலிங்கம்** *attuva-v-iliṅgam,* பெ.(n.) மெய்ப்பொருள் வடிவான (லிங்கம்) குறி; *liṅga* comprising all the 36 tattvas from earth to *Šivaṉ.* *"மண்முதற் சிவமீறானவத்துவ விலிங்கம்" (திருவிளை. இந்திரன். 13.).* இலங்க வடிவுநிலையில் இறைவ னாற்றலைக் குறிக்கும் அடித்தளத்திற்கு ஆவுடையாள் என்றும் மேல்நிற்கும் இலங்கத்திற்கு ஆவுடையப்பன் என்றும் பெயர்.

*[Skt.adhvan+liṅga>த. அத்துவவிலிங்கம்.]*

**அத்துவா** *attuvā,* பெ.(n.) 1. வழி; way, road. 2. நெறி (சித்.); (*Šaiva.*) paths to liberation, as well as means of acquiring karma, for the soul, six in number, viz *mandirāttuvā, padāttuvā, varṇāttuvā, puvaṉātuvā, tattuvāttuvā, kalāttuvā,* each of which, in initiation, is shown to be absorbed by the next one, till the last is absorbed by the *tirōdāna-šakti,* and this in its turn by *Šivaṉ.* *"அத்துவா வெல்லா மடங்கச் சோதித் தபடி" (தாயு. எந்நாட். அன்பர். 1.).*

*[Skt. attuvān > த. அத்துவா]*

**அத்துவாசுத்தி** *attuvā-šutti,* பெ.(n.) **அத்துவசுத்தி** பார்க்க; see *attuva-šutti.* *"அத்துவா சுத்திபண்ணி" (சி.சி. 8, 6.).*

*[Skt. adhvan > த. அத்துவாசுத்தி.]*

**அத்துவாசைவம்** *attuvā-šaivam,* பெ.(n.) சிவனியம் (சைவம்) பதினாறனுள் ஒன்று; *Šaiva* sect which holds that an initiate should by introspection perceive the six *attuvās* and meditate on *Šivaṉ* who is beyond them, one of 16 saivam, q.v.

**அத்துவாந்தம்** *attuvāndam,* பெ.(n.) வைகறை மற்றும் மருண்மாலையொளி; twilight (சா.அக.).

**அத்துவிதம்** *attuvidam,* பெ.(n.) ஒருமை; இரண்டின்மை; non-duality. *"அத்துவித வத்துவை" (தாயு. பரசிவ. 3.).*

*[Skt. a-dvaita > த. அத்துவிதம்.]*

**அத்துவிதவுண்மை** *attuvida-v-uṇmai,* பெ.(n.) 1. இரண்டின்மை என்னும் கொள்கை; the doctrine of the existence of but one principle in the universe; the doctrine or principle of non-duality. 2. ஒரு தமிழ் (தத்துவ) மெய்ப் பொருள் நூல்; a treatise in Tamil on non-dulaity (சா.அக.).

*[அத்துவிதம் + உண்மை]*

*[Skt. advaita> த. அத்துவிதம்.]*

**அத்துவேசம்** *attuvēšam,* பெ.(n.) பகையின்மை; freedom from hatred or malevolence.

*[Skt. a-dvēṣa > அத்துவேசம்.]*

**அத்துவைதம்** *a-t-tuvaidam,* பெ.(n.) 1. இரண்டன்மை; non-duality. 2. ஒரு பொருண்மைக் கொள்கை; doctrine of non-duality, monism.

*[Skt. a-dvaita > த. அத்துவைதம்.]*

**அத்துவைதி** *a-t-tuvaidi,* பெ.(n.) இரு பொருளொருமைக் கோட்பாடுடையவன்; one who holds the doctrine of non-duality monist.

*[Skt. a-dvaitin > த. அத்துவைதி.]*

**அத்தேயம்** *a-t-tēyam,* பெ.(n.) திருடாமை (சூத. ஞான. 13, 7.); non-stealing, absence of frand.

த.வ. கள்ளாமை.

*[Skt. a-stēya > த. அத்தேயம்.]*

**அத்தோரியாமம்** *attōriyāmam,* பெ.(n.) (சோமயாகம்) வேள்வி வகை (திவா.); variety of the *iyotṣṭōma,* the main type of the soma sacrifice.

*[Skt. aptōryāma > த. அத்தோரியாமம்]*

**அத்தொய்தம்** *attoydam,* பெ.(n.) **அத்துவிதம்** பார்க்க (வேதாந்தசா.84); see *attuvidam.*

*[Skt. a-dvaita > த. அத்தொய்தம்.]*

**அத்தொய்தன்** *attoydan,* பெ.(n.) ஒப்பற்றவன்; one who is matchless, without a second. *"அத்தொய்தனா யிருக்கிற வுனக்குப் பயமென்ன?" (வேதாந்தசா. 85.).*

*[Skt. a-dvaitin > த. அத்தொய்தன்.]*

**அத்யாபி** *atyābi,* (வி.அ.).(adv.) இப்போதும்; even now, to this day, down to the present time. *"அத்யாபி அப்படியே நடந்து வருகிறது".*

*[Skt. adyāpi > த. அத்யாபி.]*

**அத்விதீயம்** *a-tvidiyam,* பெ.(n.) இணையற்றது; that which is matchless, peerless.

*[Skt. a-dvitiya > த. அத்விதீயம்.]*

**அதக்காயம்** *ada-k-kāyam,* பெ.(n.) தொடை, கால், பாதம், இவை அடங்கிய உடம்பின் பகுதி; that portion of the body below the hip comprising the thinghs, the leg and the feet, lower extremity (சா.அக.).

**அதக்காயவெலும்பு** *adakkāya-v-elumbu,* பெ.(n.) இடுப்பின் கீழேயுள்ள எலும்பு; bone of the lower extremity (சா.அக.).

**அதகக்கொடி** *adaga-k-kodi,* பெ.(n.) பெருமருந்துக் கொடி; a twining plant, Indian birthwort, *Aristolochia Indica* (சா.அக.).

**அதககந்தி** *adaga-kandi,* பெ.(n.) கந்தக வண்டல்; precipitated sulphur, *Lac - sulphur or Milk of sulphur* (சா.அக.).

**அதகம்**[1] *adagam,* பெ.(n.) 1. மருந்து; medicine, medicament. *"அதகங் கண்ட பையண ணாகம்"* (சீவக. 403.); 2. உயிர்தரு மருந்து (பிங்.); restorative that brings the dead to life. 3. கொடிவகை (மலை.); Indian birthwort. 4. சுக்கு (தைலவ.); dried ginger.

*[Skt. agada > த. அதகம்.]*

**அதகம்**[2] *adagam,* பெ.(n.) அடையல்; precipitate (சா.அக.).

**அதகமனம்** *adaga-manam,* பெ.(n.) வண்டலாகப் பிரிந்து தங்கல்; the process by which a substance is made to seperate from another or other substances in a solution and fall to the bottom - precipitation (சா.அக.).

**அதகன்**[1] *adagan,* பெ.(n.) வலிமையுள்ளவன்; strong powerful person. *"உறுதுயர் தீர்த்த வதகன்" (திவ். பெரியாழ். 2, 1, 9.).*

*[Skt. hataka > த. அதகன்.]*

**அதகன்**[2] *adagan,* பெ.(n.) 1. மருந்து கொடுப்பவன்; one who administers medicine. 2. மருத்துவன்; one who prescribes remedies for diseases or who is skilled in the art of healing, Physician (சா. அக.).

**அதங்கம்** *adaṅgam,* பெ.(n.) ஈயம் (மூ.அ.); lead, plumbum.

*[Skt. taṅka > த. அதங்கம்.]*

**அதசம்** *adaśam,* பெ.(n.) 1. காற்று; wind. 2. ஆதன்; soul (சா.அக.).

**அதசயம்** *adaśayam,* பெ.(n.) தரையில் உறங்குகை; sleeping on the ground (சா.அக.).

**அதசி** *adaśi,* பெ.(n.) சணல்; flax or hemp, *Crotolaria juncea* (சா.அக.).

**அதசுப்தி** *ada-śupti,* பெ.(n.) இடுப்பின் கீழ் உணர்ச்சியற்றுக் கால் விழுகை, முடக்கு ஊதை பக்கவலிப்பு; paralysis of the legs and the lower part of the body, *Paraplegia* (சா.அக.).

**அதட்டம்** *adaṭṭam,* பெ.(n.) 1. பாம்பின் கீழ்வாய்ப் பல் (சீவக. 1286.); lower fang of a serpent. 2. பாம்பினுயிர்ப்பு (சூடா.); breath of a snake.

*[Skt. adhō-damṣṭra > த. அதட்டம்.]*

**அதப்பாதாளம்** *ada-p-pādāḷam,* பெ.(n.) காணவொண்ணா ஆழம்; chasm, abyss.

*[Skt. adhas + pātālam > த. அதப்பாதாளம்.]*

**அதப்பியம்** *adappiyam,* பெ.(n.) அவையல் கிளவி (யாழ்ப்.); indecent language.

*[Skt. a-sabhya > த. அதப்பியம்.]*

**அதப்பு** *adappu,* பெ.(n.) மதிப்புறவு; reverence/ manner.

*[U. adab > த. அதப்பு.]*

**அதபட்சம்** *adapaṭcam,* பெ.(n.) சுக்கு; dried ginger (சா.அக.).

**அதபவாதம்** *adaba-vādam,* பெ.(n.) ஆயுள் வேதத்தில் சொல்லியுள்ள ஓர் ஊதை (வாத) நோய்; a rheumatic disease mentioned in the ayurvedic science (சா.அக.).

*[Skt. adha+vāta > த. அதபவாதம்.]*

**அதபு** *adabu,* பெ.(n.) 1. வணக்கம்; obedience. 2. மதிப்புறவு (மரியாதை); manners. *"அதபு கெட்டவன்".*

த.வ. மதிப்பு.

*[Ar. adab > த. அதபு.]*

**அதமசரீரம்** *adama-šarīram,* பெ.(n.) (கற்பக விருட்சம்) வளம் தரும் மரம் (சிந்தா. நி. 124.); kalpaka tree.

**அதமதசம்** *adamatašam,* பெ.(n.) வெங்காரம் (வை.மூ.); borax.

**அதமதானம்** *adama-dāṉam,* பெ.(n.) கைம்மாறு, அச்சம் முதலியவை கருதிய கொடை (வின்.); charity for selfish ends through fear, as the lowest kinds of benevolence.

*[அதம(ம்) + தானம்.]*

*[Skt. adhama>த. அதம(ம்).]*

**அதமபட்சம்** *adama-paṭcam,* (வி.அ.)(adv.) குறைந்தது; at least.

த.வ. கீழ்ப்பாடு.

*[Skt. adhama + pakṣa > த. அதமபட்சம்]*

**அதமம்** *adamam,* பெ.(n.) கீழ்நிலை; that which is lowest, worst.

*[Skt. adhama > த. அதமம்.]*

**அதமர்ணன்** *adamarṇaṉ,* பெ.(n.) கடன் வாங்குவோன் (சுக்கிரநீதி, 97.); one who takes loans; debtor.

*[Skt. adha-marṇa > த. அதமர்ணன்.]*

**அதமவிம்சதி** *adama-vimšadi,* பெ.(n.) அறுபது ஆண்டு (வருடங்)களுள் பிலவங்க முதல் அட்சய வரையுள்ள 20 ஆண்டுகள் (பெரியவரு.); the last twenty years from *pila-vanga* to *aṭcaya,* in the jupiter cycle.

*[Skt. adha-ma-viṁšati > த. அதமவிம்சதி]*

**அதமன்** *adamaṉ,* பெ.(n.) கடையன்; low, mean, vile person. *"கமுகு போல்வ ரதமர்"* (நீதிவெண். 91.).

த.வ. கீழ்மகன், கீழோன், இழிந்தோன்.

*[Skt. adhama > த. அதமன்.]*

**அதமாதமன்** *adamādamaṉ,* பெ.(n.) மிகக் கீழானவன்; vilest of the vile, most worthless fellow.

*[Skt.adhama +adhama>த. அதமாதமன்.]*

**அதர்மம்** *a-darmam,* பெ.(n.) **அதருமம்** பார்க்க; see *adarumam.*

த.வ. அறங்கடை, அல்லறம், அறக்கேடு.

*[Skt. a-dharma > த. அதர்மம்.]*

**அதர்மாத்திகாயம்** *adarmāttikāyam,* பெ.(n.) ஐந்து அருக (சமண) மத உட்பொருள்களு ளொன்று; (Jaina) that which without any movement on its part attracts and keeps passive the thing attracted, as the shadow of a tree first attracts a man walking along the road on a hot day and then keeps him quietly resting under it, one of *pañjastikāyam.*

*[Skt. adharma + asti-kāya >த.அதர்மாத்தி காயம்]*

**அதர்வசிகை** *adarva-šigai,* பெ.(n.) நூற்றெட்டுபநிடதங்களுளொன்று; name of an *upaniṣad.*

*[Skt. atharvašikhā > த. அதர்வசிகை.]*

**அதர்வசிரசு** *adarva-širašu,* பெ.(n.) நூற்றெட்டுபநிடதங்களுளொன்று (சி.சி. 8, 11, மறைஞா.); name of an *upaniṣad.*

*[Skt. atharvaširas > த. அதிர்வசிரசு.]*

**அதர்வணம்** *adarvaṇam,* பெ.(n.) நான்காம் மறை (திருவானைக். கோச்செங். 127.); name of the fourth *vēda.*

**த.வ. தீமறை.**

*[Skt. atharva > த. அதர்வணம்.]*

**அதர்வம்** *adarvam,* பெ.(n.) **அதர்வணம்** (காஞ்சிப்பு. வயிரவீ, 12.) பார்க்க; see *adarvaṇam.*

*[Skt. atharvan > த. அதர்வம்.]*

**அதரகுட்டம்** *adara-kuṭṭam,* பெ.(n.) இதழில் தோன்றும் புற்றுநோய்; cancer of the lip (சா.அக.).

**த.வ. இதழ்புற்று.**

*[அதர+குட்டம்.]*

*[Skt. adhara > த. அதர(ம்).]*

**அதரணவித்தை** *adaraṇa-vittai,* பெ.(n.) செய்வினை; black magic (சா.அக.).

**அதரபானம்** *adara-bāṉam,* பெ.(n.) மகளி ரிதழூறும் நீர் (சீவக. 190, உரை.); drinking the lips, kissing the lower lip.

*[Skt. adhara > pāṉa > த. அதரபானம்.]*

**அதரம்**[1] *adaram,* பெ.(n.) கீழ் (நாநார்த்த.); place or space below.

*[Skt. adhara > த. அதரம்.]*

**அதரம்**[2] *adaram,* பெ.(n.) அல்குல் (நிதம்பம்); the external part of the organs of generation of the female, vulva (சா.அக.).

**த.வ. குய்யம், கருவாய்.**

*[Skt. adhara >த. அதரம்.]*

**அதரம்**[3] *adaram,* பெ.(n.) 1. கீழுதடு (பிங்.); lower lip. 2. இதழ் (உதடு) (சூடா.); lip.

*[Skt. adhara > த.அதரம்.]*

**அதரமதம்** *adara-madam,* பெ.(n.) புலனுகர் ஈடுபாட்டி லிதழூறும் நீர்; a secretion from the lower lip of woman through lust (சா.அக.).

**த.வ. மகளிர் இதழூறும் நீர்.**

*[Skt. adhara+amrta>த. அதரமதம்.]*

**அதரவாய்வு** *adara-vāyvu,* பெ.(n.) வளித் தொல்லையால் வாய் மற்றும் இதழி (உதட்டி)ற் காணும் நோய்; a disease of the lip of the mouth or that of the genital of a female (சா.அக.).

*[Skt. adhara + vāyu>த. அதரவாய்வு.]*

**அதராமிர்தம்** *adarāmirdam,* பெ.(n.) **அதரமதம்** பார்க்க; see *adara-madam* (சா.அக.).

*[அதர(ம்) + அமிர்தம்.]*

*[Skt. adhara >த. அதர(ம்).]*

*அமிழ்து > அமிர்து >* ***Skt.*** *amrta.*

**அதரிசனன்** *adarišaṉaṉ,* பெ.(n.) 1. பார்க்க முடியாதவன்; one who is destitute of the sense of sight. 2. கண் பார்வையற்றவன்; a blindman (சா.அக.).

*[Skt. adharšana>த. அதரிசனன்.]*

**அதரிசி** *adariši,* பெ.(n.) **அதரிசனன்** பார்க்க; see *adarišaṉaṉ* (சா.அக.).

*[Skt. adharšana>த. அதரிசி.]*

**அதருமம்** *a-tarumam,* பெ.(n.) அறமல்லாதது; that which is unrighteous.

**த.வ. அறக்கேடு.**

*[Skt. a-dharma > த. அதருமம்.]*

**அதலகுதலம்** *adala-kudalam,* பெ.(n.) பெருங்குழப்பம் (இ.வ.); tumult, great confusion.

**த.வ. கலவரம்.**

*[Skt. atala+ku-tala > த. அதலகுதலம்.]*

**அதலதலம்** *adala-talam,* பெ.(n.) 1. காரீயம்; black lead; plumbago. 2. காரீய மணல்;

(literaly) the term denotes the mineral found in heaps under the earth-plumbum (சா.அக.).

**அதலபாதாளம்** *adala-bādāḷam,* பெ.(n.) அளவிட முடியாத ஆழம் அல்லது பள்ளம்; immeasurable depths, chasm. *'மலை மேலிருந்து அதல பாதாளத்தில் விழுவது போன்று ஒரு கனவு' (கிரியா.).*

**த.வ. ஆழ்நிரயம்.**

*[Skt. atala + pātāḷa>த. அதலபாதாளம்.]*

**அதலம்** *adalam,* பெ.(n.) கீழேழுலகத் தொன்று; name of a world under the earth, first of *kīḻēḻulagam,* q.v. *"அதல விதலமுத லந்தத் தலங்களென" (திருப்பு. 138).*

**த.வ. கீழுலகு, நிரயம்.**

*[Skt. atala > த. அதலம்.]*

**அதலாயிலோகம்** *adalāyi-lōgam,* பெ.(n.) 1. நிலவுலகின் கீழுண்டாகும் தாதுப் பொருள்; any ingredient or natural in organic substance in the earth's crust obtained by mining-mineral. 2. நிலத்திற்குள் விளையும் மாழை (உலோகம்); any metal dug out from the earth (சா.அக.).

*[Skt. atala + lōha>த. அதலாயிலோகம்.]*

**அதவா** *adavā,* இணைப்.(conj.) அல்லது; or, *"அதவா முரட்போர் தனக்கஞ்சுமோ" (பாரத. பதினேழா. 232).*

*[Skt. athavā > த. அதவா.]*

**அதவாய்வு** *adavāyvu,* பெ.(n.) சவுட்டு மண்; fuller's earth (சா.அக.).

**அதவிடம்**[1] *adaviḍam,* பெ.(n.) அதிவிடை (வின்.); atis.

*[Skt. ati-viṣā > த. அதவிடம்.]*

**அதவிடம்**[2] *adaviḍam,* பெ.(n.) அதவிடயம்; Indian atees, *Aconium heterophyllum* (சா.அக.).

**அதவுபாசனம்** *adavu-pāšaṉam,* பெ.(n.) புணர்ச்சி; sexual intercourse (சா.அக.).

**அதவை** *adavai,* பெ.(n.) கீழ்மகன் (இ.வ.); vile person.

*[Skt. hata > த. அதவை.]*

**அதளக்காய்** *adaḷa-k-kāy,* பெ.(n.) **அதளங்காய்** பார்க்க; see *adaḷaṅgāy* (சா.அக.).

**அதளங்காய்** *adaḷaṅ-gāy,* பெ.(n.) பீர்க்கங்காய்; acute-angled cucumber, *Cucumis actutangalus* (சா.அக.).

**அதளமேலிச்சாரணை** *adaḷa-mēli-c-cāraṇai,* பெ.(n.) சிவப்புச் சத்திச்சாரணை; a red variety of a plant, *Boerhaavia procumbens* alias *B.repens* (சா.அக.).

**அதன்மம்** *a-daṉmam,* பெ.(n.) அறமல்லாதது; that which is unrighteous. *"அருளினா லுரைத்த நூலின் வழிவரா ததன்மஞ் செய்யின்" (சி.சி., 2.33.).*

*[Skt. a-adharma >த. அதன்மம்.]*

**அதன்மர்** *a-daṉmar,* பெ.(n.) கீழ் மக்கள் (பிங்.); base, low persons.

*[Skt. a-dharma > த. அதர்ம>அதன்மர்.]*

'ர்' பலர்பால் ஈறு.

**அதன்மாத்திகாயம்** *adaṉmāttikāyam,* பெ.(n.) **அதர்மாத்திகாயம்** பார்க்க; see *adarmāttikāyam.*

**அதன்மி** *adaṉmi,* பெ.(n.) ஒழுக்கங்கெட்டவள்; fallen woman. *"அதன்மி யாரென வாங்கவன் வினவ" (பெருங். உஞ்சைக் 35, 69.).*

**த.வ. அறக்கேடன்.**

*[Skt. a-dharmin > த. அதன்மி.]*

**அதனா** *adaṉā,* பெ.அ.(adj.) தாழ்ந்த; mean, low. *'அதனா மனிதன்' (இ.வ.).*

*[U. adnā > த. அதனா.]*

**அதத்தசஞ்சயம்** *adatta-šañjayam,* பெ.(n.) உடம்பின் கீழ்ப் பகுதியில் தங்கியுள்ள சிறுநீர் மற்றும் கழிமாசு (மல மூத்திரம்); the faeces and the urine in the lower region of the trunk (சா.அக.).

**அதாசலம்** *adāśalam*, பெ.(n.) காட்டு மல்லிகை வகை (மலை.); wild jasmine.



**அதாதிமந்தம்** *adādi-mandam*, பெ.(n.) ஆயுள் வேதப்படிக் கண்ணைப் பற்றிய ஐந்து வகை மாந்த நோய்களுள் ஒன்று; one of the five kinds of ophthalmia according to ayurveda.

**அதாதிமாந்தரோகம்** *adādi-mānda-rōgam*, பெ.(n.) **அதாதிமந்தம்** பார்க்க; see *adādimandam* (சா.அக.).

*[அதாதி+மாந்த(ம்)+ரோகம்]*

*[**Skt.** ati> த. அதாதி, **Skt.** rōga> த. ரோகம்.]*

**அதாதிரு** *adātiru*, பெ.(n.) இவறன் மாலையன் (சிந்தா. நி. 137.); miser.

*[**Skt.** a-dātṟ > த. அதாதிரு.]*

**அதாது** *adādu*, பெ.(n.) 1. தாது வல்லாதது; that which is not a mineral. 2. வித்தமிழ்தின்மை; absence of semen (சா.அக.).

*[அ + தாது.]*

*[**Skt.** a>த. அ.]*

*தாது > **Skt.** dhātu.*

**அதாரன்** *adāraṉ*, பெ.(n.) மணமாகதவன், மாணி; one who is unmarried, an unmarried man, Bachelor. 2. மனைவி யிழந்தவன்; one who has lost his wife, a widower (சா.அக.).

**த.வ. மாணி.**

*[**Skt.** a-dāra >த. அதாரன்.]*

**அதாலத்து** *adālattu*, பெ.(n.) முறைமன்றம்; court of justice.

*[**U.** adālat > த. அதாலத்து.]*

**அதாவரிசி** *adā-v-ariśi*, பெ.(n.) வெட்பாலை யரிசி; dysentery rosebay; bitter oleander, *Nerium antidysentericum* alias *Holarhena antidysentericum* (சா.அக.).

**அதாவெட்டில்** *adā-veṭṭil*, கு.வி.எ.(adv.) தற்செயலாய் (இ.வ.); unexpectedly, by chance.

**அதாவெட்டுக்காரன்** *adāveṭṭu-k-kāraṉ*, பெ.(n.) போலியாக நடிப்போன்; bogus personage, bogus tax-gatherer. *"ஆயக்காரன் ஐந்து பணங்கேட்பான் அதாவெட்டுக்காரன் ஐம்பது பணங்கேட்பான்"*

*[அதாவெட்டு + காரன்.]*

*[**U.** adāwat>த. அதாவெட்டு.]*

**அதிக்கிரமம்**[1] *adi-k-kiramam*, பெ.(n.) 1. மீறுகை; overstepping, going beyond, transgression. 2. முறைகேடு; iniquity. *"அன்ன தன்மைய னதிக்கிரமங்கள் கேட்டு" (உத்தரரா. வரையெடு. 2.).*

*[**Skt.** ati-krama > த. அதிக்கிரமம்.]*

**அதிக்கிரமம்**[2] *adi-k-kiramam*, பெ.(n.) கற்பழித்தல்; commiting excess of sin sexually (சா.அக.).

*[**Skt.** ati-krama>த. அதிக்கிரமம்.]*

**அதிக்கிரமி-த்தல்** *adi-k-kirami-*, 4 செ.குன்றாவி. (v.i.) 1. மேற்படுதல்; to exceed, as proper bounds. 2. மீறுதல்; to transgress.

*[**Skt.** ati-krama>த. அதிக்கிரமி-.]*

**அதிக்கிராந்தம்** *adikkirāndam*, பெ.(n.) கடந்தது (சி.சி. 7, ஞானப்.); that which transcends.

**த.வ. வரம்பிகவு.**

*[**Skt.** ati-krānta > த. அதிக்கிராந்தம்.]*

**அதிககுரசாந்தினி** *adiga-šura-šāndiṉi,* பெ.(n.) வல்லாரை; a bitter plant, *Hydrocotyle asiatica*, so called from its soothing effect in cases of excessive fever (சா.அக.).

*[Skt. atiga > த. அதிகம்.]*

**அதிகண்டம்**[1] *adi-kaṇḍam,* பெ.(n.) ஓகம் இருபத்தேழி லொன்று (விதான. பஞ்சாங்க 25); (Astrol.) a division of time, one of 27 yōgam, q.v.

*[Skt. atigaṇḍa > த. அதிகண்டம்.]*

**அதிகண்டம்**[2] *adi-kaṇḍam,* பெ.(n.) 1. இறக்கும் நேரத்தில் ஏற்படும் துன்பம்; pangs or agony of death. 2. பெரிய துண்டம்; a big piece. 3. பெரிய கழுத்து; a swollen neck-colloid goitre. 4. உயிருக்கு இடர் விளைவிக்கக் கூடிய எதிர்பாராத நிகழ்வு; an accident or other crisis endangering human life (சா.அக.).

**அதிகதம்** *adigadam,* பெ.(n.) 1. வளி (வாயு); air. 2. எட்டாதது; that which is beyond reach (சா.அக.).

*[Skt. ati-gata>த. அதிகதம்.]*

**அதிகந்தம்** *adi-kandam,* பெ.(n.) 1. நறுமணப் புல் வகை (மூ.அ.); fragrant species of grass. 2. மர வகை (மூ.அ.); champak. 3. கந்தகம் (மூ.அ.); sulphur.

*[Skt. ati-gandha > த. அதிகந்தம்.]*

**அதிகர்ணம்** *adikarṇam,* பெ.(n.) பொருள்; substance (சா.அக.).

**அதிகரணத்தண்டம்** *adikaraṇa-t-taṇḍam,* பெ.(n.) பழைய வரிவகை (S.I.I.ii, 353.); an ancient tax.

*[அதிகரணம் + தண்டம்.]*

*[Skt. adhi-karaṇa>த. அதிகரணம்.]*

**அதிகரணத்தைலம்** *adika-raṇa-t-tailam,* பெ.(n.) தலை முழுக்கெண்ணெய் (தைலம்); a medicated oil prepared as per process aid down in Agastyar vallathi 600 and used for oil bath in cases of obstinate fever. *அகத்திய வல்லாதி 600இல் சொல்லிய முறைப்படி, விடாத காய்ச்சலுக்காக வடித் தெடுத்த நெய்மமருந்து* (சா.அக.).

**அதிகரணம்** *adikaraṇam,* பெ.(n.) 1. அடிப்படை (சி.சி. 1, 65, சிவஞா.); substratum, support. 2. ஏழாம் வேற்றுமைப் பொருள் (பி.வி.9.); place, as the sense of the loc. 3. ஒரு செய்தியைக் குறித்த பகுதி (சி.போ. சிற். 1, அவ.); section of a work, treating of one subject.

*[Skt. adhi-karaṇa > த. அதிகரணம்.]*

**அதிகரம்** *adikaram,* பெ.(n.) காட்டு மல்லிகை; wild jasmine, *Jasminum angustifolium* (சா.அக.).

**அதிகராவிகம்** *adikarā-vigam,* பெ.(n.) செந்துளசி; a red variety of basil , *Ocimum* (genus) (சா.அக.).



**அதிகாசம்** *adikāšam,* பெ.(n.) பெருநகை (சிந்தா. நி. 120.); loud laughter.

த.வ. வெடிச்சிரிப்பு.

*[Skt. ati+hāsya > த. அதிகாசம்.]*

**அதிகாயசித்தி** *adikāya-šitti,* பெ.(n.) கரு மருது; a tree, black marudu; Negroe's olive, *Terminalia tementosa* alias *T.alata* (சா.அக.).

**அதிகாயன்** *adi-kāyaṉ,* பெ.(n.) 1. பருத்த உடம்புடையோன்; one having a gross or flesh body; a stout man. 2. உடம்பில் மிகுந்த

காயமுடையோன்; one with serious injuries. 3. உடம்பில் தழும்புடையோன்; one with numerous scars on the body (சா.அக.).

**அதிகாரடாகை** *adigāra-ḍāgai,* பெ.(n.) அதிகாரத்தால் உண்டாகும் செறுக்கு; pride of power. *"அதிகாராடாகையின்மே லார்த்து"* *(சரவண. பணவிடு. 109).*

*[Skt.adikarā+U.tiga> த.அதிகாரடாகை.]*

**அதிகாரதத்துவம்** *adigāra-tattuvam,* பெ.(n.) வினை மிகுந்து கல்வி குறைந்த சிவ மெய்ப்பொருள் (சி.சி. 1, 65, ஞானப்); (*Šaivam*) the function of god in which the principle of energy dominates that of wisdom.

**அதிகாரநந்தி** *adigāra-nandi,* பெ.(n.) சிவன் கோயில் திருவிழாக்களில் பயன்படுத்தும் ஊர்தி வகை; vehicle of *Šivan* with the face of a bull and body of man, used generally on the morning of the third day of festivel in some temples, as respresenting *Nandikēšvarar* who is the commandant of the city of *Šivan*. *"அதிகார நந்தி சேவை".*

**அதிகாரபத்திரம்** *adigāra-pattiram,* பெ.(n.) கொடுப்பிசைவு ஆவணம், அதிகார ஆவணம்; letter of authority, power of attorney.

**அதிகாரவர்த்தனை** *adigāra-varttaṉai,* பெ.(n.) வரித்தொகுதி (M.E.R. 428 of 1913); a collection of taxes.

**அதிகாலங்காரம்** *adikālaṅgāram,* பெ.(n.) பெருமையணி (அணியி. 41.); figure of speech in which the contained is described as greater than the container, or the container than the contained.

*[Skt.adhika+alaṅkāra>j.mâfhy§fhu«.]*

**அதிகிருச்சிரம்** *adi-kirucciram,* பெ.(n.) 12 நாள் கைக்கொள்ளும் ஒரு நோன்பு; an extraordinary fasting and penance lasting 12 days.

*[Skt. atikṛcchra > த. அதிகிருச்சிரம்.]*

**அதிகேரம்** *adi-kēram,* பெ.(n.) சீதா செங்கழுநீர்; a kind of water-lily, *Grewia rotundifolia* (சா.அக.).

**அதிங்காலிகம்** *adiṅkāligam,* பெ.(n.) செம்புளியம் பிரண்டை; a red variety of புளிப் பிரண்டை, hairy wildyine, *Vitis setosa* alias *cissus acida* (சா.அக.).

**அதிச்சத்திரம்** *adi-c-cattiram,* பெ.(n.) காளான் (மலை.); mushroom.

*[Skt. atichatra > த. அதிச்சத்திரம்.]*



**அதிசங்கலிதம்** *adi-šaṅgalidam,* பெ.(n.) ஒன்றுமுதலிய எண்களை இரட்டித்துப் பெருக்க வருந் தொடரெண் (வின்.); summation of a series in geometrical progression whose first term is one, and ratio two.

*[Skt. ati + šaṅ-kalita > த. அதிசங்கலிதம்.]*

**அதிசங்கை** *adi-šaṅgai,* பெ.(n.) வீண் ஐயம் (கோயிலொ. 29); needless suspicion.

*[Skt. ati + šaṅkā>த. அதிசங்கை.]*

**அதிசத்திரம்** *adi-šattiram,* பெ.(n.) 1. விண்மீன் சீரகம்; star anise, *Illecium ani satum.* 2. காளான்; mushroom. 3. மருதோன்றி; nail dye, *Barleria longifolia* (சா.அக.).

**அதிசத்திரகம்** *adi-šattiragam,* பெ.(n.) **அதிசத்திரம்** பார்க்க; see *adi-šattiram* (சா.அக.).

*[Skt. atichatra>த. அதிசத்திரகம்.]*

**அதிசந்தானம்** *adišandānam,* பெ.(n.) பொய் (சிந்தா. நி. 122.); falsehood.

*[Skt. atisandhāna > த. அதிசந்தானம்.]*

**அதிசமாதியோகம்** *adi-šamādiyōgam,* பெ.(n.) தன்னை மறந்து புரியும் மனவொடுக்கம் (யோகம்); a profound meditation in yoga practice in which the yogee is not only insensible to the surroundings but also forgets his own body (சா.அக.).

*[அதிசமாதி+ஒகம்.]*

*[Skt.ati+ sāmādhi>த. அதிசமாதி.]*

*ஒகம்* > **Skt.** *yōga.*

**அதிசயக்குளிகை** *adišaya-k-kuḷigai,* பெ.(n.) ஐந்து முறை சாரணைத் தீர்ந்த ஒரு இதளியக் குளிகை; a mercurial pill animated five times.

*[அதிசயம் + குளிகை.]*

*[Skt. atišaya>த. அதிசயம்.]*

*குள் → குளி → குளிகை.*

**அதிசயச்சொல்** *adišaya-c-col,* பெ.(n.) வியப்புச் சொல்; expression of wonder.

*[அதிசயம் + சொல்.]*

*[Skt. atišaya> த. அதிசயம்.]*

**அதிசயபுட்பி** *adišaya-puṭpi,* பெ.(n.) அத்தி; Indian fig-tree, *ficus glomerata.* It is so called from its flowers not visible to any. *இதன் பூ ஒருவர் கண்ணுக்கும் புலப்படாத கரணகத்தை முன்னிட்டு இப்பெயர்* (சா.அக.).

*[Skt. atišaya + pușp> த. அதிசயபுட்பி.]*

**அதிசயம்**[1] *adišayam,* பெ.(n.) 1. அருக (சைன) தலைமை இறைப்பண்புகள்; (Jaina.) pre-eminence, as an attribute of Arhat, of three kinds. *"சகசாதிசயம், கர்ம க்ஷயாதிசயம், தெய்வீகாதிசயம்"* (சீவக. 2813). 2. உயர்வு நவிற்சியணி (தண்டி 54.); hyperbole. 3. வியப்பு; astonishment, wonder. *"அடிகளிவ் வழிபோந்த வதிசய மறியேனே"* *(தேவா. 938, 1.).*

*[Skt. atišaya > த. அதிசயம்.]*

**அதிசயம்**[2] *adišayam,* பெ.(n.) 1. அதிநோய்; a severe type of disease. 2. கொடிய என்புருக்கி (சய) நோய்; an acute form of consumption. 3. மிகுநோய்; excessive secretion and discharge or urine, *polyuria* (சா.அக.).

**அதிசயமாலை** *adišaya-mālai,* பெ.(n.) பண்டார நூல்களிலொன்று; name of a Saiva *Siddhānda* treatise by *Ambalavāṇa-tēšigar,* one of *paṇḍāra-šāttiram,* q.v.

*[அதிசயம் + மாலை.]*

*[Skt. atišaya> த. அதிசயம்.]*

**அதிசயமொழி** *adišaya-mōḻi,* பெ.(n.) வியப்புச் சொல் (பிங்.); expression of wonder.

*[அதிசயம் + மொழி.]*

*[Skt. atišaya>த. அதிசயம்.]*

**அதிசயவுவமை** *adišaya-v-uvamai,* பெ.(n.) மிகையுவமை (வீரசோ. அலங். 14, உரை); (Rhet.) a smile which states that there is no difference between *uvamāṇam* and *uvamēyam* except in their loci.

*[அதிசயம் + உவமை.]*

*[Skt. atišaya>த. அதிசயம்.]*

**அதிசயன்** *adišayaṉ,* பெ.(n.) அருகன் (திவா.); Arhat, as superhuman.

*[Skt. atišaya> த..அதிசயன்.]*

**அதிசயி-த்தல்** *adišayi-,* 4 செ.கு.வி.(v.i.) வியப்படைதல்; to wonder, to be surprised. *"அலமந் தேங்கி யதிசயித்து" (கந்தபு. திருமண. 31.).*

*[Skt. atišaya>த. அதிசயி-.]*

**அதிசயோக்தி** *atišayōkti,* பெ.(n.) உயர்வு நவிற்சியணி (அணியி. 13.); hyperbole.

*[Skt. atišayōkti > த. அதிசயோக்தி.]*

**அதிசரணம்** *adi-šaranam,* பெ.(n.) **அதிசரண யோனி** பார்க்க; see *adi-šarana-yōni* (சா.அக.).

*[Skt. ati šarana>த. அதிசரணம்.]*

**அதிசரணயோனி** *adišarana-yōni,* பெ.(n.) மிகுதியாகக் கலவியில் ஈடுபடுவதால் பிறப்புறுப்பில் ஏற்படும் நோய்; a disease of the vagina.

*[Skt.ati-šarana+yoni>த. அதிசரணயோனி.]*

**அதிசரம்** *adišaram,* பெ.(n.) நெட்டுயிர்ப்பு (வின்.); sigh.

*[Skt. ati-cara > த. அதிசரம்.]*

**அதிசரி-த்தல்** *adišari-,* 4. செ.கு.வி.(v.i.) கடந்து போதல்; to pass by, as a planet. *"கிரகங்க ளதிசரித்து வக்கிரிக்கிறது" (வின்.).*

*[Skt. ati-car > த. அதிசரி-.]*

**அதிசருமகூச்சம்** *adi-šaruma-kūccam,* பெ.(n.) **அதீதகூச்சம்** பார்க்க; see *adida-kūccam* (சா.அக.).

*[அதிசருமம் + கூச்சம்.]*

*[Skt. ati-carman>த. அதிசருமம்.]*

**அதிசனசி** *adi-šanaši,* பெ.(n.) 1. கொடிவேலி; Ceylon leadwort, *Plumbago zeylanica.* 2. அதிக நாற்றமுடையது; that which is excessively fetid or that which has a strong smell. 3. பெருங்காயம்; asafoetida. 4. பீநாறி; a fetid plant or tree, *Stereulia foetida* (சா.அக.).

**அதிசாகரம்** *adisāgaram,* பெ.(n.) ஒரு தமிழ்க் கணித நூல் (கணக்கதி. பாயி.); name of a Tamil mathematical work.

**அதிசாதிகம்** *adi-šādigam,* பெ.(n.) **அதிகராவிகம்** பார்க்க; see *adigarāvigam* (சா.அக.).

**அதிசாமியை** *adi-šāmiyai,* பெ.(n.) வெண் குன்றிச் செடி; white country liquorice, *Abrus precatorius* (alba-) (சா.அக.).

**அதிசாரக்கடுப்பு** *adi-šāra-k-kaduppu,* பெ.(n.) செரியாமற் கழிதலால் ஏற்படும் வயிற்று வலி; colic arising from diarrhoea due to indigestion, *Sabbural colic* (சா.அக.).

*[அதிசாரம் + கடுப்பு.]*

*[Skt. ati šāra>த. அதிசாரம்.]*

*கடு → கடுப்பு.*

**அதிசாரக்கழிச்சல்** *adi-šāra-k-kaliccal,* பெ.(n.) 1. இயல்பாய் ஏற்படும் கழிச்சல்; ordinary or simple diarrhoea. 2. செரியாமையினால் சோம்பல் உண்டாகி வாயாலெடுப்பு, கழிச்சல், வலுவின்மை, களைப்பு முதலிய குணங்களையுண்டாக்கும் ஒரு வகைக் கழிச்சல்; an acute diarrhoea marked by serious stools as in cholera and vomitting; attended with fatigue, weakness and sometimes collapse, *Choleraic diarrhoea.* 3. வயிற்றளைச்சல்; diarrhoea with mucous and bloody stool, *Dysenteric diarrhoea* (சா.அக.).

*[அதிசாரம் + கழிச்சல்.]*

*[Skt. ati-šāra> த. அதிசாரம்.]*

*கழி→ கழிச்சல்.*

**அதிசாரக்காய்ச்சல்** *adi-šāra-k-kāyccal,* பெ.(n.) செரியாமையினால் ஏற்படும் ஒரு காய்ச்சல்; fever caused by diarrhoea, *Febrilis diarrhoea* (சா.அக.).

*[அதிசாரம் + காய்ச்சல்.]*

*[Skt. ati-šāra>த. அதிசாரம்.]*

**அதிசாரக்கினி** *adi-šāra-k-kini,* பெ.(n.) அதிவிடயமெனும் ஒரு மருந்துச் சரக்கு; Indian atees, *Aconitum hoterophyllum* (சா.அக.).

**அதிசாரங்கட்டி** *adi-šāraṅ-katti,* பெ.(n.) 1. செரியாமையினால் ஏற்படும் கழிச்சலைக் குணப்படுத்தும் சரக்கு; any drug capable of stopping or arresting diarrhoea from indigestion. 2. கற்கடக சிங்கி; galls of pistacia, *Rhus succedanea* (சா.அக.).

[அதிசாரம் + கட்டி.]

[Skt. ati-šāra> த. அதிசாரம்.]

**அதிசாரசன்னி** *adišāra-šanni,* பெ.(n.) நச்சுக் காய்ச்சல் வகை (இங். வை.); typhoid fever.

[Skt. atišāra + šanni> த. அதிசாரசன்னி.]

**அதிசாரசன்னிபாதசுரம்** *adi-šāra-šanni pāda-šuram,* பெ.(n.) வயிற்றோட்டக் கழிச்சலுடன் கூடிய காய்ச்சல்; typhoid fever accompanied by diarrhoea (சா.அக.).

[அதிசாரசன்னிபாதம்+சுரம்.]

[Skt. atišāra+šan-ni+pāda>த. அதிசார சன்னிபாதம்.]

சுள்→ சுர்→சுரம்.

**அதிசாரசாந்தி** *adi-šāra-šānti,* பெ.(n.) 1. வயிற்றுப் போக்கைக் குணப்படுத்தும் மருந்து; any remedy which controls the motion in dysentery. 2. காட்டாத்தி; jungle autti, *Woodfordia floribunda* (சா.அக.).

[அதிசார(ம்) + சாந்தி.]

[Skt. ati-šāra>த. அதிசாரம்.]

**அதிசாரசிலேட்டுமம்** *adi-šāra-šileṭṭumam,* பெ.(n.) 1. செரியாமையினால் காய்ச்சல், வயிற்றிரைச்சல், விலாக்குத்து, நெஞ்சுவலி, நாவறட்சி, உடம்பெரிச்சல், இருமல், நீர்வேட்கை முதலிய குணங்களை உண்டாக்கும் ஒரு நோய்; a form of diarrhoea from indigestion due to the phlegmatic condition of the system. It is marked by rumbling noise in the bowels, darting pain in the sides and in the intercostal region, chest pain, parched tongue, burning sensation of the body, cough, thirst etc., 2. செரியாமையினால் குழந்தைகளுக்கு வயிற்றோட்டமும் சீதளமும் குளிர்ச்சியும் ஏற்பட்டு, அத்துடன் காய்ச்சலும் காணுமோர் கோழைக்கட்டு; diarrhoea from indigestion in children due to phlegmatic causes. It is followed by fever and watery stools containing thin, white mucous - watery or serous diarrhoea (சா.அக.).

[Skt. ati-šāra+šlēṣman>த. அதிசார சிலேட்டுமம்.]

**அதிசாரசுரசமரசி** *adi-šāra-šura-šamarasi,* பெ.(n.) **அதிசாரக்கினி** பார்க்க; see *adi-šāra-k-kini* (சா.அக.).

**அதிசாரசுரம்** *adi-šāra-šuram,* பெ.(n.) **அதிசாரக்காய்ச்சல்** பார்க்க; see *adi-šāra-k-kāyccal* (சா.அக.).

[அதிசார + சுரம்.]

[Skt. ati-šāra > த. அதிசாரம்.]

சுல்→ சுர்→சுரம்.

**அதிசாரஞ்சுருக்கி** *adi-šārañ-šurukki,* பெ.(n.) 1. இலவம் பிசின்; the gum of the silk-cotton tree. 2. அதிசாரக் கழிச்சலை கண்டிக்கும் மருந்து; any drug capable of arresting diarrhoea (சா.அக.).

[அதிசாரம் + சுருக்கி.]

[Skt. ati-sāra> த. அதிசாரம்.]

**அதிசாரணம்** *atišāraṇam,* பெ.(n.) மாவிலங்க வகை (மூ.அ.); species of crataeva.

[Skt. atisāraṇa > த. அதிசாரணம்.]

**அதிசாரத்திரவியம்** *adi-šāra-t-tiraviyam,* பெ.(n.) வயிற்றுளைவிற்காகக் கொடுக்கும் கடைச்சரக்குகளின் தொகுப்பு; a group of elementary drugs pescribed for arresting or regulating diarrhoea, *Astringents* (சா.அக.).

[Skt. ati-šāra +dravya>த. அதிசாரத் திரவியம்.]

**அதிசாரநாசனி** *adi-šāra-nāšani,* பெ.(n.) 1. வெட்பூலா; white honey plant, *Flueggia.* 2. தீன்பூ; an unidentified drug (சா.அக.).

**அதிசாரபந்தனி** *adi-šāra-pandani,* பெ.(n.) மருவகம்; a plant known as maid's love, *Artemesia abrotanum* (சா.அக.).

**அதிசாரபந்து** *adi-šāra-pandu,* பெ.(n.) **அதிசாரங் கட்டி** பார்க்க; see *adi-šāraṅ-kaṭṭi* (சா.அக.).

**அதிசாரபித்தம்** *adi-šāra-pittam,* பெ.(n.) வயிற்றிலிரைச்சலுடன் ஏற்படும் கழிச்சல், வயிற்றுப்பசம், விலாவலி, ஈரலெரிச்சல், மயக்கம் முதலிய குணங்களை உண்டாக்கும் ஒரு நோய்; a form of diarrhoea arising from the deranged condition of bile in the system. It is marked by rumbling noise in the stomach, accompanied by purging, distension, of the abdomen, pain in the sides, burning sensation, giddiness and other abdominal disorders, *Gastrogenic diarrhoea* (சா.அக.).

*[அந்தக(ம்) + பித்தம்.]*

*[**Skt.** ati-šāra> த. அதிசாரம்.]*

*பித்து→பித்தம் >* **Skt.** *pitta.*

**அதிசாரபேதி** *atišāra-pēdi,* பெ.(n.) கழிச்சல் (பேதி) வகை; kind of diarrhoea.

*[**Skt.** ati-šāra+bhēdin>த. அதிசாரபேதி.]*

**அதிசாரம்**[1] *adi-šāram,* பெ.(n.) கோள்களின் வழக்கத்திற்கதிகமான நடை; accelerated motion of a planet from one sign to another.

*[**Skt.** ati-cāra > த. அதிசாரம்.]*

**அதிசாரம்**[2] *ati-šāram,* பெ.(n.) 1. கழிச்சல் வகை (திருக்காளத். 4. 17, 33.); kind of diarrhoea. 2. அதிமதுரம் (இராசவைத்.); liquorice. 3. மிகச் சிறியதொரு பின்னவெண் (நான். பால.); a very small fraction = 1/18,38,400.

*[**Skt.** ati-sāra > த. அதிசாரம்.]*

**அதிசாரம்**[3] *adi-šāram,* பெ.(n.) 1. சத்திசாரம்; வெடியுப்பு, எரியுப்பு (நவாச்சாரம்), சோற்றுப்பு, பூநீறு முதலியவற்றைக் கொண்டு செய்யும் ஒரு வகை உப்பு; a kind of salt prepared from a mixture of nitre, sal-ammoniac, common salt and pooneer (fuller's earth). 2. சவ்வீரம்; corrosive sublimate, *Hydrargyri perchloridum.* 3. அதிக ஊட்டம்; essence or extract. 4. மிக்க இனிப்பு; excessive sweetness. 5. கல்லுப்பு; rock - salt (மூ.அ.).

*[**Skt.** ati-sāra>த. அதிசாரம்.]*

**அதிசாரம்போக்கி** *adi-šāram-pōkki,* பெ.(n.) ஒதிய மரம்; Indian ash tree, *Odina wodier.* It is so called from its virtue of curing diarrhoea (சா.அக.).

*[அதிசாரம் + போக்கி.]*

*[**Skt.** ati-sāra>த. அதிசாரம்.]*

*போக்கு > போக்கி.*

**அதிசாரமூரி** *adi-šāra-mūri,* பெ.(n.) ஊணங் கொடி; a winding plant, *Convolvulus racimosus* (சா.அக.).

**அதிசாரரோகம்** *adi-šāra-rōgam,* பெ.(n.) செரியாமைக் கழிச்சல் அல்லது வயிற்றளைச்சல்; diarrhoea or dysentery (சா.அக.).

*[**Skt.** ati-šāra+rōga > த. அதிசாரரோகம்.]*

**அதிசாரவக்கிரம்** *adišāra-vakkiram,* பெ.(n.) கோள் முன்சென்று திரும்புகை (விதான. கோசா. 15, உரை); passage and retrogression of a planet.

*[**Skt.** ati-cāra+vakkira>த.அதிசாரவக்கிரம்.]*

**அதிசாரவுபரசம்** *adi-šāra-vubarašam,* பெ.(n.) 1. கருப்பத்தில் உண்டாகும் ஒரு வகை நீர்; a fluid of the uterus. 2. பனிக் குடத்து நீர்; a liquid that, forms in the anniotic sac in which the foetus lies-liquor amni (சா.அக.).

*[**Skt.** ati-sāra + upa-rasa> த. அதிசாரவுபரசம்.]*

**அதிசிகுவை** *adi-šiguvai,* பெ.(n.) அடி நாக்கின்கீழ் வீக்கத்தை உண்டாக்கிப் பிணிநீர்ப்பை அல்லது சிறுமுளைகள் போல் கொப்புளங்களை எழுப்பி, உண்ண முடியாது

வலி உண்டாக்கும் ஒரு நோய்; a disease of the under surface of the tongue of the under surface of the tongue accompanied by a cyst or swelling and pustules all over the parts and thereby causing inability to take food (சா.அக.).

*[**Skt.** ati + jihvā>த. அதிசிகுவை.]*

**அதிசிரம்** *adiśiram,* பெ.(n.) தலைகீழாகப் பிடித்தல்; holding head downward or upside down (சா.அக.).

**அதிசிவம்** *adi-śivam,* பெ.(n.) நாக்கு அல்லது உண்ணாக்கில் உண்டாகும் ஒருவகை வீக்கம்; a peculiar swelling of the tongue or (uvala) (சா.அக.).

*[**Skt.** ati + jihvā>த. அதிசிவம்.]*

**அதிசிவிகம்** *adi-śivigam,* பெ.(n.) **அதிசிவம்** பார்க்க; see *adi-śivam* (சா.அக.).

*[**Skt.** ati + jihvā>த. அதிசிவிகம்.]*

**அதிசீதம்** *adi-śīdam,* பெ.(n.) நிரயங்களு ளொன்று (சிவதரு. சுவர். 112.); name of a hell of extreme cold.

*[**Skt.** ati-śita > த. அதிசீதம்]*

**அதிசூக்குமதேகம்** *adi-śūkkuma-dēgam,* பெ.(n.) பூதம், தன்மாத்திரை, அறிவுப் பொறி (ஞானேந்திரியம்), கருமப்பொறி (கன்மேந்திரியம்), உட்கருவி (அந்தக்கரணம்), குணம், மூலப்பகுதி, கலாதி என்பவற்றில் ஒவ்வொன்றும் கொண்ட நுண்ணுடல் (சி.போ.பா. 2, 3, பக். 194.); (*Śaivam*) subtle body, containing the *pūdam, taṉmāttirai, ñāṉēndiriyam, kaṉmēndiriyam, anda-k-karaṇam, kuṇam, mūla-p-pagudi* and *kalādi.*

*[**Skt.** ati+ sūkṣma + dēga>த. அதிசூக்கும தேகம்.]*

**அதிசூக்குமம்** *adi-śūkkumam,* பெ.(n.) மிகுநுண்மம் (மிகுபுரியட்டகம்) (சி. போ. பா. 2, 3, பக். 194.); anything very subtle.

**த.வ.** மீநுண்டு.

*[**Skt.** ati-śūkṣma > த. அதிசூக்குமம்.]*

**அதிசூக்குமை** *adiśūkkumai,* பெ.(n.) சிவ சத்தி மாறுபாடுகளுளொன்று (சதாசிவ. 21, உரை.); (*Śaivam*) a form of *Śiva-Śakti.*

*[**Skt.** ati-sūkṣmā > த. அதிசூக்குமை.]*

**அதிசோபனை** *adiśōbaṉai,* பெ.(n.) மலைமகள் (கூர்மபு. திருக்கலியாண. 22.); *Pārvati.*

*[**Skt.** ati-śōbhanā > த.அதிசோபனை.]*

**அதிசௌரபம்** *adi-śaurabam,* பெ.(n.) மாமரவகை (மலை.); sweet mango, as very fragrant.

*[**Skt.** ati + saurabha>த.அதிசௌபரம்.]*

**அதிட்டக்காரன்** *adiṭṭa-k-kāraṉ,* பெ.(n.) நல்வாய்ப்புள்ள மனிதன், நற்பேறுடையோன்; fortunate man.

**த.வ.** பேற்றாளன்.

*[அதிட்டம் + காரன்.]*

*[**Skt.** a-dṛṣṭa > த.அதிட்டம்.]*

**அதிட்டகன்மம்** *adiṭṭa-kaṉmam,* பெ.(n.) நன்மை தீமைகளைத் துய்க்கச் செய்யுஞ் செயல் (சிவப்பிர. 19. உரை. பக். 213.); the invisible karma which causes enjoyment and suffering.

*[**Skt.** a-dṛṣṭa + karman > த. அதிட்டகன்மம்]*

**அதிட்டச்செல்லி** *adiṭṭa-c-celli,* பெ.(n.) வைப்பு நஞ்சு (வின்.); prepared arsenic.

**அதிட்டச்சொல்லி** *adiṭṭa-c-colli,* பெ.(n.) **அதிட்டச்செல்லி** (மூ.அ.) பார்க்க; see *atiṭṭa-c-celli.*

**அதிட்டம்** *adiṭṭam,* பெ.(n.) நற்பேறு; forture.

**த.வ.** ஆகூழ்.

*[**Skt.** adrista>த. அதிட்டம்.]*

**அதிட்டவசம்** *adiṭṭavaśam,* பெ.(n) எதிர்பாராத வகையாக ஏற்பட்ட நன்மை; sheer luck (கிரியா.).

*[அதிட்ட(ம்) + வசம்.]*

***[Skt.** a-dṛṣṭa> த. அதிட்ட(ம்).]*

*வயம்→வசம்.*

**அதிட்டாத்திரு** *adiṭṭāttiru,* பெ.(n.) தலைமை உடையவன்; ruler, chief, protector. *"ஈசனதிட்டத்திடுவாம்" (வேதா. சூ. 79.).*

***[Skt.** adhi-ṣṭhātr > த. அதிட்டாத்திரு.]*

**அதிட்டாதா** *adiṭṭātā,* பெ.(n.) **அதிட்டாத்திரு** பார்க்க; see *adiṭṭāttiru.*

***[Skt.** adhiṣṭhātā > த. அதிட்டாதா.]*

**அதிட்டானம்** *adiṭṭāṉam,* பெ.(n.) 1. நகர் (நாநார்த்த.); city. 2. இருக்கை (M.E.R. 343 of 1927-8); seat. 3. தேர்க்கால் (நாநார்த்த.); chariot-wheel. 4. கோயில் விமானத்தின் கீழுள்ள பகுதி (M.E.R 146 of 1928-9); the base of a temple *vimāṉam.* 5. புகழ் (நாநார்த்த.); fame. 6. ஆரவாரிக்கை (நாநார்த்த.); roaring, shouting. 7. நிலைக்களம்; place, abode.

த.வ. அடிவாணம்.

***[Skt.** adhi-sṭhāna > த. அதிட்டானம்.]*

**அதிட்டி-த்தல்** *adiṭṭi-,* 4. செ.குன்றாவி.(v.t.) நிலைக்களமாகக் கொள்ளுதல் (சி.போ.சிற்.4, 1, பக்.86); to abide in, stand on.

***[Skt.** adhi-sṭhā > த. அதிட்டி-.]*

**அதிதலசிலேட்டுமம்** *adi-dala-śilēṭṭu-mum,* பெ.(n.) கோழைநோய்; a kind of phlegmatic disease (சா.அக.).

**அதிதனு** *aditaṉu,* பெ.(n.) பொன் (வின்.); gold.

**அதிதாபகவாதம்** *adi-tābaga-vādam,* பெ.(n.) உடம்பைத் தவிக்கச் செய்யும் ஓர் ஊதை (வாத) நோய்; a kind of nervous prostration arising from errors in diet and extending all over the body (சா.அக.).

*[அதி + தாபகம் + வாதம்.]*

***[Skt.** ati > த. அதி. **Skt.** vāta>த. வாதம்.]*

*தபம் → தாபம் → தாபகம்.*

**அதிதி**[1] *adidi,* பெ.(n.) 1. விருந்தினன் (சைவச. மாணாக். 27); one entitled to hospitality, guest. 2. இறந்தநாட் கடன் செய்தற்கு ஒவ்வாத நாள்; an unsuitable tithi, the first of two tithis in the same month, on which ceremonies that are regulated by the tithis cannot be performed. 3. இரவு 15 முழுத்தத்துள் பத்தாவது (விதான. குணா. 73, உரை.); the tenth of 15 divisions of night.

***[Skt.** a-tithi > த. அதிதி.]*

**அதிதி**[2] *adidi,* பெ.(n.) கசியபர் மனைவி (கம்பரா. சடாயு கா. 29.); name of a daughter of *Dakṣa,* wife of *Kaśyapa* and mother of all the gods.

***[Skt.** aditi > த. அதிதி.]*

**அதிதி**[3] *adidi,* பெ.(n.) 1. நிலம்; earth. 3. மலை மகள்; *Pārvatī.*

***[Skt.** aditi > த. அதிதி.]*

**அதிதிநாள்** *adidi-nāḷ,* பெ.(n.) கழை (புனர்பூசம்) (பிங்.); the seventh *nakṣatra,* as presided over by Adidi.

த.வ. ஏழாமுடு.

*[அதிதி + நாள்.]*

***[Skt.** aditi> த. அதிதி.]*

**அதிதிப்பம்** *adidippam,* பெ.(n.) உணவவா வின்மை; loss of appetite, *Anorexia* (சா.அக.).

**அதிதிபூசிதம்** *adidi-pūšidam,* பெ.(n.) சத்தி சாரணை; a plant; spreading hogweed, *Boerhaavia procumbens* alias *B. diffusa* (சா.அக.).

**அதிதிபூசை** *adidi-pūšai,* பெ.(n.) விருந்தோம்பல்; hospitality to a guest. *"கமழ்சுவை யடிசிலா னதிதி பூசையும்" (காஞ்சிப்பு. திருநகர. 103.).*

*[அதிதி + பூசை.]*

***[Skt.** atithi > த. அதிதி.]*

*பூசு→பூசை.*

**அதிதீபம்** *adi-dībam,* பெ.(n.) பேரரத்தை; greater galangal, *Alpinnia galanga* (major) (சா.அக.).

**அதிதும்மற்பீனசம்** *adi-tummar-pīṉasam,* பெ.(n.) கபால வறட்சியினாலும் மூக்கெலும்பில் அடிபடுவதனாலும் காற்றுடன் மூக்கு, கண், வாய், செவி ஆகிய இடங்களை அடைப்பதனாலும் எந்நேரமும் தும்மலை உண்டாக்கும் மூக்கடைப்பு வகை (பீனசம்); a kind of nasal catarrh marked by constant sneezing, due to the dryness of the scalp, traumatic causes and obstruction in nasal passages and other openings due to the deranged condition of vayu, acute catarrhal Rhinitis (சா.அக.).

**த.வ. மூக்கடை சிந்தல்.**

*[அதி+தும்மல்+பீனசம்.]*

*[**Skt.** ati>த. அதி.**Skt.** pīnasa> த. பீனசம்.]*

தும்மு→தும்மல்.

**அதிதூலரோகம்** *adi-dūla-rōgam,* பெ.(n.) 1. ஆண்களுக்கு உடம்பைப் பருக்கச் செய்யும் ஒரு நோய்; (in male) an abnormal over growth of the body, *Ginantism*, said to be the result of a disease of the pituitary body. 2. பெண்களுக்கு மாதவிலக்கு, வளி செல்வாக்கு முதலிய கரணியங்களினால் உடம்பு பருத்துக் காணுவதல்லாமல் நெஞ்சு, தொடை, வயிறு, பிட்டம் முதலியன பருத்தும் அதனால் களைப்பு, இரைப்பு, மேல் மூச்சு முதலிய குணங்களையும் காட்டும் ஒரு நோய்; (in female) excessive or monstrous size and stature as a result of irregular menstruation, and good circumstances in life without exercise etc., it is marked by an abnormal growth in certain organs or parts of the body such as, the chest, abdomen, thighs, buttocks, etc. (சா.அக.).

**த.வ. வீங்கல்நோய்.**

*[**Skt.** ati+sthula+rōga>த.அதிதூல ரோகம்.]*

**அதிதேசம்** *adi-dēšam,* பெ.(n.) 1. ஒன்றற்குரியதை மற்றொன்றற்கு ஏற்றிக் கூறுகை; extending a rule to an analogous case. 2. ஒப்புமையானுணர்த்துகை; (Log.) explaining the meaning through analogy. *"அதிதேச வாக்கியம்" (தர்க்கபா. 29.).*

*[**Skt.** atidēsa > த. அதிதேசம்.]*

**அதிதேசி-த்தல்** *adidēši-,* 4 செ.குன்றாவி. (v.t.) ஒன்றற் குரியதை மற்றொன்றிற்கு ஏற்றிக் கூறுதல் (ஈடு, 10, 10, 6.); to extend to an analogous case.

*[**Skt.** ati-dēša > த. அதிதேசி-,]*

**அதிதேவதை** *adi-dēvadai,* பெ.(n.) குலதெய்வம்; presiding deity, as of a mantra.

*[**Skt.** adhi>த. அதி.]*

த. தேவி > **Skt.** devata>த. தேவதை.

**அதிதோவயம்** *adi-dōvayam,* பெ.(n.) முழுமையான எரிநீர்; a fluid that dissolves any substance or in which any solution is effected, universal solvent (சா.அக.).

**அதிநிதி** *adi-nidi,* பெ.(n.) எரியுப்பு (நவச்சாரம்); hydrochlorate of *ammonia-Sal ammoniac* (சா.அக.).

**அதிநீசம்** *adinīšam,* பெ.(n.) 1. ஐவகைப் புணர்ச்சியுளொன்று; (erot.) the sexual union of a man of the hare class with a woman of the elephant class, one of *aivagai-p-puṇarcci,* q.v. *"விழைவுற அதிநீச மென்ன" (கொக்கோ. 3, 7.).* 2. கோள்கள் தாழ்வான (பாகை) கோட்டிலிருக்கை (சோசிட.சிந்.); (Astron.) highly debilitated position of a planet in the house of its depression.

*[**Skt.** ati-nīca > த. அதிநீசம்.]*

**அதிப்பிரசங்கம்** *adi-p-pirašaṅgam,* பெ.(n.) வேண்டுவ பகராது மற்றொன்று விரிக்கை (தருக்கசங் பக். 249.); digression, introducing extraneous matter.

*[**Skt.** ati+pra-saṅga> த. அதிப்பிரசங்கம்.]*

**அதிபதாதி** *adibadādi,* பெ.(n.) செம்பசளை; a red species of Indian spinach, *Spinacha oleracea* (சா.அக.).

**அதிபதி**[1] *adibadi,* பெ.(n.) 1. அரசன் (பெரியபு. கண்ணப்ப. 7); ruler, king, sovereign. 2. தலைவன் (திவ். திருவாய் 6, 10, 3); lord, master, superior. 3. உரிமையுடையோன்; one who has the right. *'அரசன் என்பவன் ஒரு நாட்டின் அதிபதி'* (கிரியா.).

த.வ. தலைவன்.

*[Skt. adhi+pati>த. அதிபதி.]*

**அதிபதி**[2] *adibadi,* பெ.(n.) சண்பகமரம் (மூ.அ.); champak.

**அதிபதிங்கி** *adi-badiṅgi,* பெ.(n.) கொடிவேலி; a plant, leadwort, *plumbago zeylanic* (சா.அக.).

**அதிபதிச் சங்கம்** *adi-badi-c-caṅgam,* பெ.(n.) வாலுளுவை; climbing staff-plant, *Celastrus paniculata* alias *Vernonia anthelmintica* (சா.அக.).

**அதிபதிச்சம்** *adi-badiccam,* பெ.(n.) **அதிபதிச் சங்கம்** பார்க்க; see *adi-padi-c-caṅgam* (சா.அக.).

**அதிபதிஞ்சி** *adi-badiñji,* பெ.(n.) **அதிபதிங்கி** பார்க்க; see *adi-padiṅgi* (சா.அக.).

**அதிபத்திரம்** *adi-pattiram,* பெ.(n.) 1. தேக்கு மரம்; teak tree, *Teetona grandis.* 2. மயிர் மாணிக்கம்; morning mallow, *Sida acuta* (சா.அக.).

**அதிபதிப்பொருத்தம்** *adipadi-p-poruttam,* பெ.(n.) மணமக்கட் பொருத்தங்களுள் ஒன்று (வின்.); (Astrol.) a correspondence between the horoscopes of the prospective bride and bridegroom.

*[Skt. adhi + pati>த. அதிபதி .]*

**அதிபம்** *adibam,* பெ.(n.) மூளையின் சிறப்பு மிக்க உயர்ந்த கூறு; the superior portion of the brain, cerebrum (சா.அக.).

*[Skt. adhipa >த. அதிபம்.]*

**அதிபர்** *adibar,* பெ.(n.) 1. உரிமையாளர்; owner. *'தொழில் அதிபர்'*. 2. ஆட்சித்தலைவர்; one who heads a state. 3. தலைமை ஆசிரியர்; head of an educational institution. *'பாடசாலை அதிபர்'.* 4. ஒரு நாட்டின் தலைவர்; one who heads a country.

*[Skt. adhi-pa > த. அதிபர்.]*

**அதிபன்** *adiban,* பெ.(n.) தலைவன் (பிங்.); lord.

*[Skt. adhi-pa > த. அதிபன்.]*

**அதிபாதகம்** *adi-pādagam,* பெ.(n.) பெரும் கரிசு (பாவம்) (தணிகைப்பு. அகத். 226.); henious sin.

*[Skt. ati+pātaka > த. அதிபாதகம்.]*

**அதிபாதிதம்** *adi-pādidam,* பெ.(n.) 1. முழுதும் ஒடிந்தது; that which is completely broken. 2. முழுவதும் முறிந்த எலும்பு; (in medicine) the complete fracture of a bone (சா.அக.).

**அதிபாரகம்** *adi-pāragam,* பெ.(n.) கோவேறு கழுதை; mule which is an offspring of an ass and a mare or a horse and a she-ass (சா.அக.).

**அதிபுரசத்தான்** *adi-puraśattān,* பெ.(n.) அலரி; oleander rosebay, *Nerium odorum.*

**அதிமாங்கிசம்** *adi-māṅgiśam,* பெ.(n.) தசை வளர்ந்து துன்புறுத்தும் கண்ணோய்; a disease of the conjunctiva characterised by the thickening of the membrane, ptergium (சா.அக.).

**அதிமாமிசக்கழலை** *adi-māmiśa-k-kalalai,* பெ.(n.) தசை வளர்ச்சியுள்ள கழலைக் கட்டி; a tumour blended with sarcoma, *Hemangio sarcoma* (சா.அக.).

*[அதிமாமிசம் + கழலை.]*

*[Skt. adhi+māmsa>த. அதிமாமிசம்.]*

**அதிமாமிசகம்** *adi-māmiśagam,* பெ.(n.) 1. ஈறு சுரந்து அதனால் ஏற்படும் பல்வலி; painful sensation in the gum of the teeth due to its abnormal growth. 2. உண்ணாக்கு

வளர்ந்து அதனாலுண்டாகும் அழற்சி; inflammation due to the elongation of the uvula, uvulitis (சா.அக.).

[*Skt. adhi+māṃsa>த. அதிமாமிசகம்.*]

**அதிமாமிசசருமன்** *adi-māmiša-šaruman*, பெ. (n.) வெள்விழிமேல் தசை வளர்ந்து உலர்ந்த அரத்த உண்டையைப் போல் கறுத்தும், பருத்தும் இருக்கும் ஒரு கண்ணோய்; a soft, thick, extended overgrowth of flesh resemling a dried clot of blood in colour, on the white of the eye (சா.அக.).

[*Skt.adhi+māṃsa+carman>த.அதிமாமிச சருமன்.*]

**அதிமாமிசாசருமரோகம்** *adi-māmišā-šaruma-rōgam*, பெ.(n.) 1. கண்ணின் வெள் விழியில் சதை வளர்ந்து காணப்படும் ஒரு நோய்; a fleshy growth in the white of the eye. 2. பிறவியில் ஏற்படும் சதை மடிப்பு; an anomaly of the eye in which a patch of the thickened conjunctive extends over a part of the cornea, *Epitarsus* or *congenital pterygium* (சா.அக.).

[*Skt. adhi+māṃsa+carman+rōga> த. அதிமாமிசசருமரோகம்.*]

**அதிமார்க்கநூல்** *adimārkka-nūl*, பெ.(n.) **அதிமார்க்கிகசாத்திரம்** (சித். பிர. பக். 14) பார்க்க; see *adimārkiga-šāttiram*.

[*அதிமார்க்கம் + நூல்.*]

[*Skt. ati-mārga> த. அதிமார்க்கம்.*]

**அதிமார்க்கம்** *adi-mārkkam*, பெ.(n.) 1. அகப் புறச் சமயம் (சித. பிர. 14); (Šaivam) religious sects not intimately related to *Šaivašiddhānta*. 2. சைவாகமப் பிரிவினுள் ஒன்று (சி.போ.பா.17.); a section of *Šaivāgamas*.

[*Skt. ati + mārga>த. அதிமார்க்கம்.*]

**அதிமார்க்கிகசாத்திரம்** *adi-mārkkiga-šāttiram*, பெ.(n.) பாசுபதம் 'காபாலிகம்' மாவிரதமென்னும் மதக் (மார்க்கங்) கோட்பாடுகளைக் கூறும் நூல்கள் (சாத்திரம்) (விவேகசிந். 17.); (Šaivam) the religious treatises which deal with *pāšubadam*. *kāpāligam* and *māviradam*.

[*Skt. ati +mārgika + šāstra > த. அதிமார்க்கிகசாத்திரம்.*]

**அதிமானுடம்** *adimānuḍam*, பெ.(n.) மாந்தனுடைய ஆற்றலுக்கு மேற்பட்டது; that which is superhuman.

[*Skt. ati + mānuṣa > த. அதிமானுடம்.*]

**அதிமித்திரன்** *adimittiran*, பெ.(n.) கணவன் (சிந்தா. நி. 132.); husband.

[*Skt. ati + mitra>த. அதிமித்திரன்.*]

**அதிமிதம்** *adi-midam*, பெ.(n.) ஈரமில்லாதது; that which is deprived of moisture (சா.அக.).

**அதிமிருத்தியாதிமாத்திரை** *adi-miruttiyādi-māttirai*, பெ.(n.) ஆன்மணத்தி (கோரோசனை) மாத்திரை (வின்.); medicinal pill made of bezoar.

[*அதிமிருத்தி + ஆதி + மாத்திரை.*]

[*Skt.ati >mṛtya> ādi>த. அதிமிருத்தியாதி.*]

**அதிமேற்றிராசனம்** *adi-mēṟṟirāšanam*, பெ.(n.) அதிமேற்றிராணியரின் இருப்பிடம் (R.C.); archiepiscopal see or diocese.

[*Skt. adi > அதி + Syr. metrān+Skt. ā-sana> த. அதிமேற்றிராசனம்.*]

**அதிமேசு** *adimēsu*, பெ.(n.) அரசிறை சார்நிலைப் பணியாளரிட்ட புள்ளிமதிப்பு (இ.வ.); estimate of standing crop, made by a subordinate revenue officer.

த.வ. புள்ளிமதிப்பு.

[*U. azmāish > த. அதிமேசு.*]

**அதிமோகம்** *adi-mōgam*, பெ.(n.) 1. விருப்ப (இச்சை) யுறழ்ச்சி; excessive venereal impulse in the male-satyriasis. 2. ஒருதலைக் காமம்; abnormal increase of

the sexual impulse before it is reciprocated, sexual hyperesthesia (சா.அக.).

*[Skt. ati + mōha> த. அதிமோகம்.]*

**அதிமோதம்** *adi-mōdam,* பெ.(n.) மர மல்லிகை; jasmine tree, *Jasmine arboreum* (சா.அக.).

**அதியசனம்** *adi-y-ašaṉam,* பெ.(n.) 1. உண்ட உணவு செறியாமுன்னம் மீண்டு உணவு உட்கொள்ளுதல்; eating too soon after a meal before it is digested. 2. அளவு கடந்து உண்கை; immoderate eating (சா.அக.).

*[Skt. ati + ašana>த. அதியசனம்.]*

**அதியண்டம்** *adiyaṇḍam,* பெ.(n.) பூனைக்காலி; cowhage plant - carpopogon pruriens alias, *Flacourtia cataphracta* (சா.அக.).

**அதியத்தம்** *adiyattam,* பெ.(n.) எலும்பின் மேற் கூறு; the upper part of a bone (சா.அக.).

*[Skt. ati + asthi>த. அதியத்தம்.]*

**அதியத்தி** *adiyatti,* பெ.(n.) எலும்பின் மேல் எலும்பு வளர்தல்; a bone growing over another; a bony growth projecting outward from the surface of a bone, *Expostoses* (சா.அக.).

*[Skt. ati + asthi>த. அதியத்தி.]*

**அதியமிலபரணி** *adiyamila-baraṇi,* பெ.(n.) 1. புளியிலை; tamarind leaves, *Tamarindus indica*. 2. மாவிலை; mango, leaf, *Mangiferus indica*. 3. புளிச்சிறு கீரை; a medicinal plant having sour leaves; sour greens, *Oxalis corniculata* (சா.அக.).

**அதியமிலம்** *adiyamilam,* பெ.(n.) 1. புளிமா; sour mango tree, *Spondias mangifera*. 2. புளிநாரத்தை; a species of citron, *Citron aurantium* (சா.அக.).

*[Skt. ati + amla>த. அதியமிலம்.]*

**அதியாச்சிரமம்** *ati-y-ācciramam,* பெ.(n.) வாழ்க்கைநிலை நான்கும் கடந்த நிலை (சி.சி.8,32, சிவாக்); the order beyond the four *ācciramam*.

*[Skt. ati + ā-širama > த. அதியாச்சிரமம்.]*

**அதியாத்துமிகம்** *adiyāttu-migam,* பெ.(n.) 1. உயிருக்குரியது; relating to the soul. 2. இறையாதன் (பரமாத்துமா); the supreme spirit (சா.அக.).

*[Skt. ati + ātmika>த. அதியாத்துமிகம்.]*

**அதியாமம்** *adiyāmam,* பெ.(n.) 1. அறுகம் புல்; couch grass, *Agrostis linearis*. 2. முயற்புல்; cynodon grass, *Cynodon dactylon* (சா.அக.).

**அதியால்** *adiyāl,* பெ.(n.) பெரியோருக்கிடுங் காணிக்கை; present or offering made to a superior, nuzzer.

*[U. hadiya > த. அதியால்.]*

**அதியோகம்** *adi-yōgam,* பெ.(n.) நற்கோள் நிலையுள் ஒன்று (விதான. காதக. 23, உரை.); (Astrol.) auspicious situation of one or more of the four benign planets in a horoscope.

*[Skt. ati + yōga>த. அதியோகம்.]*

**அதியோமகம்** *adiyōmagam,* பெ.(n.) சிவப்பு வாடா மல்லி; red globe ever lasting jasmine, *Gomphrena globosa* (சா.அக.).

**அதியோனிப்பூப்பு** *adi-yōṉi-p-pūppu,* பெ.(n.) பூப்பெய்தற்கு முன்னதாகவே பிறப்புறுப்புகள் விரைவாக வளர்ச்சியடைதல்; excessive activity of the genital glands, resulting in precocious puberty, genital over-development etc., Hyper genitalism (சா.அக.).

*[அதியோனி + பூப்பு.]*

*[Skt. ati + yōni> த. அதியோனி.]*

**அதிட்டசன்மபோக்கியம்** *aditta-šaṉma-pōkkiyam,* பெ.(n.) வானுலக (சுவர்க்க)த்திலேயாதல் நிரயத்திலேயாதல் மறு

பிறவியிலேயாதல் நிகழ்வுறும் வினை நுகர்வம் (சி.சி. 4, 40, சிவாக்.); enjoyment of the fruits of karma, either in heaven, hell or in succeeding birth.

*[**Skt.** adrṣṭa + janma + pōkkiyam > த. அதிட்டசன்மபோக்கியம்.]*

**அதிர்வசிரசு** *adirva-širašu,* பெ.(n.) நூற்றெட்டு மறையின் அறிவுப் பகுதிகளிளொன்று (சி.சி. 8, 11, மறைஞா.); name of an *upaniṣad.*

*[**Skt.** atharvaširas > த. அதிர்வசிரசு]*

**அதிரசம்**[1] *adirašam,* பெ.(n.) 1. பலவகைப் பூண்டுகளின் பெயர்; the names of various plants. 2. இதளியம்; mercury. 3. ஒரு தித்திப்புக் குடிநீர்; a sweet drink like syrup mixed with water (சா.அக.).

*[**Skt.** ati+rasa>த. அதிரசம்.]*

**அதிரசம்**[2] *adirašam,* பெ.(n.) வெல்லப்பாகில் அரிசிமாவைக் கலந்து எண்ணெயில் சுட்டு உருவாக்கப்படும் ஒருவகை திண்பண்டம்; a kind of thick flat round cake made by frying a sweetened rice flour (கிரியா.).

**த.வ. பணியாரம்.**

*[**Skt.** ati +rasa>த. அதிரசம்.]*

**அதிரதம்** *adi-radam,* பெ.(n.) தேர்வகை நான்கனு ளொன்று (ஸ்ரீபத்ம. தென்றல் விடு. 67, குறிப்பு); a class of chariots, one of four iradam, q.v.

*[**Skt.** ati-ratha > த. அதிரதம்.]*

**அதிரதன்** *adi-radan,* பெ.(n.) தேரோட்டி (பாரத. அணிவ. 1.); warrior who fights from his car with warriors innumerable, one of four *tēr-vīrar,* q.v.

*[**Skt.** ati-ratha > த. அதிரதன்.]*

**அதிராசன்** *adi-rāšan,* பெ.(n.) பேரரசன் (insc.); emperor.

**த.வ. மன்னர்மன்னன், கோவேந்தன்.**

*[அதி + ராசன்.]*

*[**Skt.** adhi>த. அதி.]*

*அரசு→அரசன்→ராசன்.*

**அதிராத்திரம்** *adi-rāttiram,* பெ.(n.) திங்கள் வேள்வி வகைகளிளொன்று (திருக்காளத். பு. 7, 43); variety of the *jyōtiṣṭōma,* the main type of the *sōma* sacrifice.

*[**Skt.** ati-rātra > த. அதிராத்திரம்.]*

**அதிராத்திரியாசி** *adirāttiri-yāši,* பெ.(n.) கற்றுவல்ல பார்ப்பானுக்குரியதோர் பட்டப் பெயர்; (s.i.i.v. 161.). a title of learned Brahmins.

*[**Skt.** atirātra + yājin> த. அதிராத்திரியாசி.]*

**அதிரி** *adiri,* பெ.(n.) கல்; stone (சா.அக.).

**அதிரிகர்ணி** *adirikarṇi,* பெ.(n.) காக்கணம்; a plant, crow's beak, *Clitorai ternatea* (சா.அக.).

**அதிரிச்சியம்** *adiricciyam,* பெ.(n.) பண்டங்களைப் பிறர் கண்ணிற் காணக்கூடாமல் மறைக்கும் கலை (வித்தை); art of making visible objects invisible. *'புசரிலா வதிரிச்சிய மஞ்சனம்' (திருவிளை. எல்லாம் 17).*

*[**Skt.** adṛšya > த. அதிரிச்சியம்.]*

**அதிரிசம்** *adirišam,* பெ.(n.) 1. குருடு; blindness. 2. காண்குறவியலாமை; incapability of seeing (சா.அக.).

**அதிரிசயம்** *adirišayam,* பெ.(n.) 1. காணக்கூடும் பொருளைக் காண்குறவியலாமற் செய்யும் ஒரு கலை (வித்தை) ; the art of rendering a visible thing invisible. 2. தன்னைப் பிறர் பார்க்காதபடி மறைத்துக் கொள்ளும் கலை (வித்தை), மறைப்பு மையைக் கொண்டு சித்தர் செய்யும் கலை; the art of making oneself invisible to others or making things invisible, performed art of Šiddhars with the help of a magic unguent prepared by them (சா.அக.).

**த.வ. மைக்கட்டு, கண்கட்டுக்கலை.**

**அதிரிசன்** *adiriśaṉ,* பெ.(n.) கண் பார்வை இல்லாதவன்; a blind man (சா.அக.).

**அதிரிசாரம்** *adiri-śāram,* பெ.(n.) 1. இரும்பு; iron. 2. கற்சத்து; essence of stone. 3. கல்மதம்; a fossil exuding from rocks, *Asphaltum* (சா.அக.).

*[அதிரி + சாரம்.]*

*[**Skt.** atiri> த. அதிரி.]*

*சாறு→சாரம்.*

**அதிரிசியம்** *adiriśiyam,* பெ.(n.) **அதிரிசயம்** பார்க்க; see *adiriśayam* (சா.அக.).

**அதிரித்தம்** *adirittam,* பெ.(n.) மிகையானது; that which is greater. *"ஆணவமல சாமர்த்தியத்தினைக் காட்டிலும் அதிரித்தம்"* (சிவசம. 43.).

*[**Skt.** ati-rikta > த. அதிரித்தம்.]*

**அதிருக்கு** *adirukku,* பெ.(n.) கண் பார்வை தெரியாமை; blindness (சா.அக.).

**அதிருசன்** *adiruśaṉ,* பெ.(n.) **அதிரிசன்** பார்க்க; see *adiriśaṉ* (சா.அக.).

**அதிருசியம்** *adiruśiyam,* பெ.(n.) 1. காணக் கூடாதது (சித். மர. கண். 3); that which is invisible. 2. அறுபத்து நாலு கலையுள் தன்னைக் பிறர் காண்குறவொட்டாமல் மறைக்கும் கலை; art of making oneself invisible, one of *aṟupattunālu-kalai,* q.v.

**த.வ. காண்பிலி.**

*[**Skt.** a-dṛśya > த. அதிருசியம்.]*

**அதிருட்டக்கட்டை** *adiruṭṭa-k-kaṭṭai,* பெ.(n.) 1. நற்பேறின்மை (இ.வ.); lack of good fortune. 2. அதிட்டவீனன் (இ.வ.); one who suffers ill-fortune.

*[அதிருட்ட(ம்) + கட்டை.]*

*[**Skt.** a-dṛṣṭa> த. அதிருட்டை.]*

*கள்→கட்டை.*

**அதிருட்டசாலி** *adruṭṭa-śāli,* பெ.(n.) நற்பேறுடையான்; fortunate person.

*[அதிருட்டம் + சாலி.]*

*[**Skt.** a-dṛṣṭa>த. அதிருட்ட(ம்).]*

*சால்→சாலி.*

**அதிருட்டபரதந்திரத்துவம்** *adiruṭṭa-para tandira-t-tuvam,* பெ.(n.) அறப்பயன் அறங்கடை வயத்தனாகை (விவேகசிந். 3); being subject to the results to *puṇṇiyam* and *pāvam.*

*[அதிருட்டம்+பரம்+தந்திரம்+தத்தும்.]*

*[**Skt.** a-dṛṣṭa>த. அதிருட்டம். **Skt.** adhvan> த-அத்துவம்.]*

**அதிருட்டபோக்கியம்** *adiruṭṭa-pōkkiyam,* பெ.(n.) மறுபிறவியில் துறக்க நிரய (சொர்க்க நரக)ங்களில் நுகரும் நுகர்ச்சி (சி.சி. 2, 39, ஞானப்); effects of unseen actions, experienced of after-life.

*[**Skt.** a-dṛṣṭa+ bhōgya> த. அதிருட்ட போக்கியம்.]*

**அதிருட்டம்** *adiruṭṭam,* பெ.(n.) ஐம்பொறிகளால் காணப்படாதது; that which cannot be perceived by the senses. 2. பார்வைக்கு எட்டாதது; that which is beyond the reach of vision. 3. ஊழ்; destiny, luck. 4. நல்லூழ்; good luck. 5. குருவிடம் முழுமையாகப் படைக்கை (பரநியாசம்) (*Vaiṣṇ*) surrendering one's self and all to a guru (சா.அக.).

*[**Skt.** a-dṛṣṭa>த. அதிருட்டம்.]*

**அதிருப்தி** *adirupti,* பெ.(n.) பொந்திகையின்மை, நிறைவின்மை; dissatisfaction, displeasure. *'அதிருப்தியான பதில் கூறினார்'.*

**த.வ. மனக்குறை.**

*[**Skt.** a-tṛpti>த. அதிருப்தி.]*

**அதிருப்பை** *adiruppai,* பெ.(n.) பொற்றலைக் கையாந்தகரை; eclypta with yellow flowers; marygold verbesina, *Wedelia calendulacea* (சா.அக.).

**அதிருட்டயத்தினம்** *adiruttayattinam,* பெ.(n.) பயன்தரும் முயற்சி; fruitful attempt. *"தேவர் செய்தருளின அதிர்ஷ்டயத்னமாய் இப்படிப் பலித்தது" (S.i.i. vi, 189.)*

*[**Skt.** a-drsta+yatna>த.அதிருட்டயத்தினம்.]*

**அதிருட்டானுகூலம்** *adiruttāṉukūlam,* பெ.(n.) நற்பேறு பயன்; luck. *"இவனுடைய அதிருஷ்டானுகூலம் எப்படியோ?" (தமிழறி. 24.).*

*[**Skt.** a-drsta+anu-kūla> த.அதிருட்டானுகூலம்.]*

**அதிரூதை** *adirūdai,* பெ.(n.) 33 அகவை முதல் 50 அகவைக்குட்பட்டவள்; a woman of any age between 33-50 (சா.அக.).

*[**Skt.** ati +rūdai>த. அதிரூதை.]*

**அதிரூபம்** *adirūbam,* பெ.(n.) தான்றிக்காய்; belleric myrobalan, or devil's abode, *Terminalia belerica* (சா.அக.).



**அதிரோகம்[1]** *adirōgam,* பெ.(n.) கருக்குநீர் (வின்.); consumption.

*[**Skt.** ati-rōga > த. அதிரோகம்.]*

**அதிரோகம்[2]** *adirōgam,* பெ.(n.) 1. எலும்புருக்கி (சய ரோகம்); consumption. 2. ஈளை நோய்; asthma. 3. தொந்த நோய்; chronic disease (சா.அக.).

*[**Skt.** ati+rōga > த. அதிரோகம்.]*

**அதிரோமம்** *adirōmam,* பெ.(n.) உடம்பு முழுவதும் மயிர் முளைத்தல்; growth of hair all over the body, *Hypertrichosis universalis* (சா.அக.).

*[**Skt.** ati+rōma > த. அதிரோமம்.]*

**அதிலவிதம்** *adila-vidam,* பெ.(n.) வெள்ளிலோத்திரம்; bark of a silvery - white tree (lodram), *Simplocos racemosa*, a foreign plant (சா.அக.).

**அதிலவோடகம்** *adila-v-ōdagam,* பெ.(n.) கேரளமண்ணிற் காணக்கூடும் ஒரு செடி; a plant found in Malabar, *Justicia bivalvis* (சா.அக.).



**அதிலோகம்** *adilōgam,* பெ.(n.) ஒரு மருந்துப் பண்டம் (இரச கருப்பூரம்) (வை.மூ.); sublimate of mercury.

**அதிலோகமருஞ்சாகம்** *adilōga-maruñjāgam,* பெ.(n.) இதளிய கருப்பூரம்; muriate of mercury (சா.அக.).

**அதிவகா** *adivagā,* பெ.(n.) ஒரு மருந்துச் சரக்கு; a bazaar drug called Indian atee, *Aconitum heterophyllum* (சா.அக.).

த.வ. அதிவசம், அதிவிடயம்.

**அதிவசம்[1]** *adivašam,* பெ.(n.) 1. அதிவிடை; atis. 2. வசம்பு; sweet flag.

*[**Skt.** ativisā > த. அதிவசம்.]*

**அதிவசம்**[2] *adivašam,* பெ.(n.) **அதிவிடயம்** பார்க்க; see *adividayam* (சா.அக.).

**அதிவசம்பு** *adivašambu,* பெ.(n.) **அதிவகா** பார்க்க; see *adivagā.*

*அதிவசம்→அதிவசம்பு.*

**அதிவர்ணாச்சிரமி** *adi-varṇāccirami,* பெ.(n.) குலக்கேடன்; one who is above castes and orders.

*[அதி + வரணம் + ஆச்சிரமி.]*

*[**Skt.** ati>த.அதி. **Skt.** āšramin>ஆச்சிரமி.]*

**அதிவன்னாச்சிரமி** *adi-vannāccirami,* பெ.(n.) **அதிவர்ணாச்சிரமி** (சூத. முக்தி. 5, 16.) பார்க்க; see *adivarṇāccirami.*

*[அதி + வன்ன+ ஆச்சிரமி.]*

*[**Skt.** ati>த.அதி.**Skt.** āšramin>த.ஆச்சிரமி.]*

**அதிவாசம்**[1] *adi-vāšam,* பெ.(n.) இறந்த நாட் சடங்குக்கு முதல்நாள் மேற்கொள்ளும் உண்ணா நோன்பு; fast on the day previous to that of the *šrāddha* ceremony.

*[**Skt.** ati+vāša > த. அதிவாசம்.]*

**அதிவாசம்**[2] *adi-vāšam,* பெ.(n.) திருமணத்துக்கு முன் நிகழ்வாக நிகழ்த்துஞ் சடங்குவகை (சீவக. 2363, உரை); a preparatory ceremony before marriage.

*[**Skt.** adhi+vāsa > த. அதிவாசம்.]*

**அதிவாதநாடி** *adivāda-nāḍi,* பெ.(n.) உடம்பில் வளி மிகுத்திருப்பதைக் குறிக்கும் நாடி நடை; pulsation indicating excess of hatulancy in the system.

*[அதி + வாத(ம்) + நாடி.]*

*[**Skt.** ati + vāta>த. அதிவாதம்.]*

*நாழி→நாடி.*

**அதிவாதம்**[1] *adi-vādam,* பெ.(n.) கடவுள் மங்கலஞ் செய்தற்குரிய சடங்கு (சிவதரு. சிவஞானதா. 71); preliminary consecratory ceremony for invoking the presence of god in an image.

*[**Skt.** adhi+vāda > த. அதிவாதம்.]*

**அதிவாதம்**[2] *adi-vādam,* பெ.(n.) புனைந்துரை; exaggeration, hyperbole.

*[**Skt.** ati-vāda > த. அதிவாதம்.]*

**அதிவாலகன்** *adivālagan,* பெ.(n.) குழந்தை; infant.

**அதிவாவிகம்** *adivāvigam,* பெ.(n.) சிவப்பு மருதோன்றி; red-leaved fragrant nail dye, *Lawsonia spinosa* alias *Barteria cristata.*

**அதிவிடாகிகம்** *adi-viḍākigam,* பெ.(n.) செம்முளரி; red rose.

**அதிவிடை**[1] *adiviḍai,* பெ.(n.) ஒரு மருந்துச் செடி (தைலவ. தைல. 4); atis, s.sh., *Aconitum heterophyllum.*

*[**Skt.** ati-višā > த. அதிவிடை.]*

**அதிவிடை**[2] *adiviḍai,* பெ.(n.) **அதிவகா** பார்க்க; see *adivagā.*

*[**Skt.** ati+višā > த. அதிவிடை.]*

**அதிவியாத்தி** *adiviyātti,* பெ.(n.) **அதிவியாப்தி** (தருக்கசங்.) பார்க்க; see *adiviyāpti.*

*[**Skt.** ati+vyāpti > த. அதிவியாத்தி.]*

**அதிவியாப்தி** *adi-viyāpti,* பெ.(n.) இலக்கியமல்லாததன் கண்ணும், இலக்கணம் சொல்லுங் குற்றம்; (Log.) applicability of a definition to things not intended to be defined by it, one of three *tōṣam.*

*[**Skt.** ati-vyāpti > த. அதிவியாப்தி.]*

**அதிவிருட்டி** *adi-viruṭṭi,* பெ.(n.) மிகுபெயல்; excessive rain. *"கொள்ளை யதிவிருட்டி நீங்கும்" (குற்றா. தல. சிவபூசை. 46).*

*[**Skt.** ati+vṛṣṭi > த. அதிவிருட்டி.]*

**அதிவிருத்தம்** *adi-viruttam,* பெ.(n.) வரம்பு மீறுகை (நாநார்த்த.); transgression.

*[Skt. ati-vṛtta > த. அதிவிருத்தம்.]*

**அதிவீரம்** *adi-vīram,* பெ.(n.) பறங்கிப் பாடாணம்; a mineral poison.

**அதிவேகதீபனம்** *adi-vēga-dībanam,* பெ.(n.) யானைப் பசி; excessive hunger, *Bulimia.*

**அதிறாப்பை** *adirāppai,* பெ.(n.) பொடுதலை; a plant, *Verbena nodiflora.*

**அதினாதிபூண்டு** *adinādi-pūṇḍu,* பெ.(n.) கொடி வேலி; Ceylon lead-wort, *Plumbago zeylanica.*

**அதீசாரம்** *adī-šāram,* பெ.(n.) **அதிசாரம்** பார்க்க; see *adi-šāram.*

*[Skt. ati-sāra > த. அதிசாரம்.]*

**அதீதப்பிரசவம்** *adīda-p-pirašavam,* பெ.(n.) **அகாலப்பிரசவம்** பார்க்க; see *akāla-p-pirašavam.*

*[Skt. atīta+pra-sava > த. அதீதப்பிரசவம்.]*

**அதீதம்[1]** *adīdam,* பெ.(n.) 1. கடந்தது (சி.சி.1. 57); that which has gone, beyond, risen above. 2. **அதீதவெடுப்பு** (பரத. தாள. 43) பார்க்க; see *adīda-v-eḍuppu* (Mus.) variety of kiragam, q.v.

*[Skt. atīta > த. அதீதம்.]*

**அதீதம்[3]** *adīdam,* பெ.(n.) 1. பொன்; gold. 2. எட்டாதது; that which is beyond reach. 3. கொன்றை மரம்; cassia tree.

*[Skt. atīta > த. அதீதம்.]*

**அதீதியம்** *adīdiyam,* பெ.(n.) ஆசையின்மை (சிந்தா. நி. 143); absence of desire or attachment.

*[Skt. atindriya > த. அதீதியம்.]*

**அதீதர்** *adīdar,* பெ.(n.) அறிவர்; ascetics, sages, as having risen above the world.

த.வ. பெற்றியர், சித்தர்.

*[Skt. atīta > த. அதீதர்]*

**அதீதவிடந்தீண்டி** *adida-viḍan-tīṇḍi,* பெ.(n.) நாகப்பாம்பு; a very venomous reptile, cobra.

*[அதீதவிடம் + தீண்டி.]*

*[Skt.atīta+viṣa>த. அதீதவிடம்.]*



**அதீதவெடுப்பு** *adīta-v-eḍuppu,* பெ.(n.) குரல் முன்னும் தாளம் பின்னும் வரும் எடுப்பு வகை; (Mus.) variety of *eḍuppu,* q.v., in which the song begins before the principal beat of the time-measure.வடமொழி முன்னொட்டு வகை;

*[அதீத(ம்) + எடுப்பு.]*

*[Skt. atīta>த. அதீத(ம்).]*

**அதீதன்** *adīđan,* பெ.(n.) 1. மண், பெண், பொன் என்னும் மூன்றும் கடந்தவன்; one who has surrendered all the three that is naturally attractive in this world i.e., world, women and wealth. 2. அன்பினின்றும் விடுவிக்கப்பட்டவன்; one who is released from the clutches of Maya.

*[Skt. atita > த. அதீதன்.]*

**அதீதாவத்தை** *adīdāvattai,* பெ.(n.) 1. மூலாதாரத்தில் ஆதன் தங்கி அறிவற்ற நிலை (அவிச்சை) மாத்திரையில் வயப்படும் ஆதனின் ஐந்தாம் நிலை (சி.போ.3. 6. சிற்.); the transcendent - fifth state of the soul.

*[Skt. atīta+avasthā > த. அதீதாவத்தை.]*

**அதீந்திரியம்** *adīndiriyam,* பெ.(n.) பொறியறிவிற்கெட்டாதது (மச்சபு. பிரமாண்ட. 17); that which is beyond the cognisance of the senses.

*[Skt. atī+indriya > த. அதீந்திரியம்.]*

**அதீபனம்** *adībaṉam,* பெ.(n.) பசிவேட்கை யின்மை (யாழ்ப்.); want of appetite, anorexia.

*[Skt. a-dipana > த. அதீபனம்.]*

**அதீரம்** *adīram,* பெ.(n.) ஊக்கமின்மை; want of courage.

*[Skt. atīta > த. அதீரம்.]*

**அதீனம்**[1] *adīṉam,* பெ.(n.) வயம்; influence, control. *"சந்தமுறு பிராணவளி யதீன மேயாய்" (சூத. எக்கிய. பூ. 4, 4).*

*[Skt. adhīna > த. அதீனம்.]*

**அதீனம்**[2] *adīṉam,* பெ.(n.) 1. உரிமை; right of possession. 2. சார்பு; dependence.

*[Skt. adhina > த. அதீனம்.]*

**அதுட்டவிரணம்** *aduṭṭa-v-iraṇam,* பெ.(n.) சீழ், அரத்தம், சிலை நீர் முதலியன வடிந்தாலும், மருத்துவத்துக்கு ஆறும் காயம்; an ulcer that could heal under treatment though attended with discharges of fluid, blood and pus.

**அதும்பை** *adumbai,* பெ.(n.) கவிழ்தும்பை; a flowering plant.

**அதுலம்** *adulam,* பெ.(n.) 1. ஒப்பற்றது; ஈடு இணை இல்லாதது; that which is unequalled. *"அசங்க மதுலம்" (கைவல்ய. சந்தே. 137).* 2. ஒரு பேரெண் (வின்.); a thousand quintillions.

*[Skt. atula>த. அதுலம்.]*

**அதுலன்** *adulaṉ,* பெ.(n.) ஒப்பற்றவன்; one who is unequalled. *"வான்மிசை யதுலன்" (காஞ்சிப்பு. இரணீச. 5).*

**த.வ. ஒப்பிலி.**

*[Skt. a-tula→த. அதுலன்.]*

**அதுலிதம்** *adulidam,* பெ.(n.) அசைவின்மை (சிந்தா. நி. 120); state of being at rest.

*[Skt. a-tulita > த. அதுலிதம்]*

**அதைரியம்** *a-dairiyam,* பெ.(n.) மனவுறுதியில்லா தன்மை; want of fortitude, timidity, dispiritedness.

*[Skt. a-dhairya>த. அதைரியம்.]*

**அதோகதி**[1] *adō-gadi,* பெ.(n.) 1. தாழ்நிலை; low state, degraded condition. 2. நிரயம் (பிங்.); hell. 3. நிரய மேழனுளொன்று (பிங்.); a hell, one of *ēḻu-naragam,* q.v.

**த.வ. வீழ்நிலை, கீழ்அளறு.**

*[அதோ + கதி.]*

*[Skt. adhas> த. அதோ.]*

**அதோகதி**[2] *adōgadi,* பெ.(n.) கையறுநிலை; utter helplessness, miserable plight. *'நீங்களும் போய்விட்டால் எந்நிலை அதோகதிதான்'.*

**த.வ. அவலம்.**

*[அதோ + கதி.]*

*[Skt. adhas> த. அதோ.]*

**அதோகந்தம்** *adōgandam,* பெ.(n.) நாயுருவி; a plant, *Achyranthes aspera.*



**அதோங்கம்** *adōṅgam,* பெ.(n.) இடுப்பிற்குக் கீழேயுள்ள பகுதி (தைலவ. தைல. 54, உரை); part of the body below the waist.

*[Skt. adhas+aṅga>த. அதோங்கம்.]*

**அதோசததோடம்** *adōśada-dōḍam,* பெ.(n.) நீரிழிவு நோய் தொடர்பால் தொப்புளின் கீழ் காற்று அழுத்துவதனால் மலம் நழுகல், வாயுலர்தல் முதலிய குணங்களைக் காட்டும் ஐவகைக் குற்றங்களுள் ஒன்று; one of the five

affections of the body marked by evacuation of bowels, parched tongue etc, due to the deranged *vāyu* arising from the affection of urinary organs and extending to the abdominal region.

**அதோசாணு** *adō-šāṇu,* பெ.(n.) முழங்காலுக்குக் கீழுள்ள பகுதி; below the knee.

**அதோசிவிகம்** *adō-šivigam,* பெ.(n.) உண்ணாக்கு; the uvula.

*[Skt. adhas+jivika>த. அதோசீவிகம்.]*

**அதோமுகம்** *adō-mugam,* பெ.(n.) 1. கீழ்நோக்கிய முகம்; the face that looks downwards. *"ஐந்து முகத்தோ டதோமுகமும்" (கந்தர்கலி.78).* 2. தலை குனிந்து பார்க்கை (சது.); (Nāṭya) looking down with head bent, one of 14 *muga-v-abinayam*, q.v. 3. தலைகீழான நிலை; inverted position. *"அதோ முகமாகி......... கொம்பர் நாலு மொருவனை" (இரகு. சம்புக. 41).* 4. கடற் கழிமுகம் (பிங்.); mouth of a river, confluence of a river with sea. 5. கறி முன்னை; a plant, *Premnaesculenta.*

*[அதோ+முகம்.]*

**த.வ. கீழ்முகம், கீழக்காந்தலை.**

*[Skt. adhas>த. அதோ.]*

**அதோதரம்** *adōdaram,* பெ.(n.) அடி வயிறு, the abdominal region.

*[அதோ + உதரம்.]*

*[Skt. adhas> த. அதோ.]*

**அதோதிதம்** *adōdidam,* பெ.(n.) 1. சிவப்பு முள்ளுக்கீரை; red nail dye plant, *Amaranthus spinosus.* 2. செம்முள்ளி; common nail dye, *Barteria prionitis* alias *Bcristata.*

**அதோதுவாரம்** *adō-duvāram,* பெ.(n.) **அதோங்கம்** பார்க்க; see *adōṅgam.*

*[Skt. adhas+ dvāra>த. அதோதுவாரம்.]*

**அதோநாபி** *adō-nābi,* பெ.(n.) கொப்பூழின் கீழ்ப்பாகம்; that portion below the navel region.

*[Skt. adhas + nābhi>த. அதோநாபி.]*

**அதோபக்தம்** *adō-pakdam,* பெ.(n.) உணவு உண்டவுடனே எடுத்துக் கொள்ளும் மருந்து; a dose of medicine to be taken just after meals.

**அதோபகாசம்** *adōba-kāšam,* பெ.(n.) சேர்க்கை; sexual intercourse.

**த.வ. புணர்ச்சி.**

**அதோபரம்** *adōbaram,* பெ.(n.) மலம் கழியும் உறுப்பு; the anus.

**த.வ. எருவாய்.**

**அதோபாகம்** *adō-bāgam,* பெ.(n.) 1. அடிப்பக்கம்; bottom. 2. கீழ்ப்பாகம்; the lower portion, especially of the body. foot. *"பிரமாண்டத்ததோபாகம்" (சிவதரு. கோபுர. 30.).*

*[அதோ + பாகம்.]*

*[Skt.adhas>த.அதோ. வகு→பகு→பாகம்.]*

**அதோபாதம்** *adō-pādam,* பெ.(n.) 1. கீழ்ப்பாதம்; the lower portion of the foot. 2. கீழ்க்கால்; the lower portion of the leg. 3. சிறு மூளையினிரண்டு கூறுகளையும் இணைத்துக் கொண்டிருக்கும் நார்க்கட்டுக் களாலாகிய கால்கள் இரண்டிலொன்று; one of the fibrous bands by which the cerebellam is attached to the brain-Inferior crus.

*[அதோ + பாதம்.]*

*[Skt. adhas > த. அதோ.]*

பதி → பதம் → பாதம்.

**அதோபாரதோசவரி** *adōbāra-dōsavari,* பெ.(n.) உடம்பின் அடிப்பாகத்தைக் குணப்படுத்தல் அல்லது உறுதிப்படுத்துகை; curing or strengthening the lower part of the body.

**அதோபிரகன்னாளம்** *adō-pira-kaṉṉāḷam,* பெ.(n.) கீழ் உடம்பினின்று நெஞ்சாங் குலைக்குக் கொண்டு போகும் குருதிக்குழாய்;

a vein formed by the junction of the two common iliac veins. It empties into the right auricle of the heart, *Inferior Venacava.*

**அதோமாயை** *adō-māyai,* பெ.(n.) அசுத்த மாயை; inferior illusion, material maya.

[அதோ + மாயை.]

[**Skt.** adhas> த. அதோ.]

மள்→மய்→மாய்→மாயை.

**அதோமார்க்கம்** *adō-mārkkam,* பெ.(n.) 1. கீழ்நோக்கிய வழி; (in pathology) downward descending motion, as in hemorrhage, labour, etc. 2. கீழ் நெறியா (மார்க்கமா)கிய சடங்கு; *"தாழ்ந்தநெறி"* (சி.சி.251, சிவாக்.) (In religion) the last and inferior stage in meditation or religious worship. 3. நாயுருவி; a plant Indian burr, *Achyranthes aspera.*

**த.வ. தாழ்நெறி.**

[**Skt.** adhas+ mārga >த. அதோமார்க்கம்.]

**அதோமுகக்கட்டி** *adō-muga-k-kaṭṭi,* பெ.(n.) வயிறு அல்லது இடுப்பு முதலிய கீழ்ப்பாகங்களிற் பெரிதாயும், கருப்பாயும், எழும்பி மிக்க வலியை யுண்டாக்கி, நிமிர வொட்டாமற் செய்வதும் பிசுபிசுப்பான நீர் வடிவதுமான ஒரு வகைக்கட்டி; a large blue-coloured abscess appearing on the abdomen or on the back or other parts of the lumber region and rendering the patient unable to stand or sit erect, is marked by a deep - seated pain and slimy discharge, *Lumbar or psosas abscess.*

**த.வ. சுரக்கட்டி.**
[அதோ + முகம் + கட்டி.]
[**Skt.** adhas>த.அதோ.]

**அதோமுகசிரம்** *adōmuga-širam,* பெ.(n.) **அதோ முகம், 2** பார்க்க (பரத. பாவ. 76.); see *adō-mugam*[2].

[அதோ + முகம் + சிரம்.]

[**Skt.** adhas>த.அதோ. **Skt.** širas> த.சிரம்.]

**அதோமுகவாதம்** *adōmuga-vādam,* பெ.(n.) உடம்பினில் கீழ் முகமாக நோக்கும் காற்று (வாதம்); a disease resulting in the descent of *vāyu* (air).

[அதோ + முகம் + வாதம்.]

[**Skt.** adhas>த.அதோ.**Skt.** vāta>த.வாதம்.]

**அதோமுகி** *adō-mugi,* பெ.(n.) கவிழ் பூந்தும்பை வகை (வின்); a low annual plant flourishing in dry localities of Trichodesma.

[அதோ + முகி.]

[**Skt.** adhō > த. அதோ. முகம்→முகி.]

**அதோமுகியான்** *adōmugiyāṉ,* பெ.(n.) ஈற்றா; a cow in calf.

**அதோமுரரத்தபித்தம்** *adōmura-ratta-pittam,* பெ.(n.) உடம்பின் கீழ்ப் பகுதியில் சிறுநீர், மலம், மயிர் ஆகியவற்றின் துளைகள் வழியாக அரத்தப் போக்கை யுண்டாக்கும் ஒரு வகை நோய்; hemorrhage or discharge of blood through the natural openings in the lowest part of the body such as, the vagina, the urinary passage, the anus and the hair follicles.

**த.வ. குருதிக்கொப்புளம்.**

**அதோயந்திரம்** *adōyandiram,* பெ.(n.) கீழ்ப் பாகத்திலுள்ள உறுப்பமைவு; the lower part of an apparatus.

[**Skt.** adhas+yantra>த. அதோயந்திரம்.]

**அதோரத்தபித்தம்** *adōratta-pittam,* பெ.(n.) எரு(மல)வாய், பெண் பிறப்புறுப்புத்துளை அல்லது சிறுநீர்ப்பை இவற்றினின்று வெளிவரும் குருதியொழுக்கு; a discharge blood from the anus, bladder or the vagina.

[அதோ + ரத்த + பித்தம்.]

[**Skt.** adhas+rakta>த. அதோரத்தம்.]

**அதோலம்பம்**[1] *adōlambam,* பெ.(n.) உறக்கம்; sleep.

[**Skt.** adhas+lamba > த. அதோலம்பம்.]

**அதோலம்பம்**[2] *adōlambam,* பெ.(n.) செங்குத்தான நிலை (வின்.); perpendicularity.

*[Skt. adhas+lamba > த. அதோலம்பம்.]*

**அதோலோகம்** *adō-lōgam,* பெ.(n.) கீழுலகம்; lower world.

*[அதோ + லோகம்.]*

*[Skt. adhas>த. அதோ.]*

*த.உலகம்>Skt.lōka>த.லோகம்.*

**அதோவசம்** *adōvašam,* பெ.(n.) கருப்பை; the vulva, *Pandendum muliebre.*

**அதோவதனம்** *adō-vadanam,* பெ.(n.) **அதோமுகம்** பார்க்க; see *adō-mugam.*

*[Skt. adhas+vadana>த. அதோவதனம்.]*

**அதோவாயு** *adō-vāyu,* பெ.(n.) 1. பரியன்வளி; vital air-agent for expelling the contents of the stomach. 2. கீழ் நோக்கு(ம்) வளி (வாயு); the wind passing downwards.

*[Skt. adhas+vāyu>த. அதோவாயு.]*

**அதோனியாமிகாசத்தி** *adōni-yāmigā-šatti,* பெ.(n.) ஆன்மாக்களுக்குங் கீழாகவுள்ள இன்ப நுகர்ச்சியை விளைவிக்குமாணவ மலத்தின் ஆற்றல்; the power of ānava (one of the 3 evil passions of the soul) driving one to enjoy the transient pleasures of this world which are considered low and inferior in the light of spiritual philosophy.

**த.வ. கீழவா.**

**அந்** *an,* பெ.(n.) அன் எதிர்மறை முன்னொட்டு; a prefix having the force of a negative meaning.

**அந்தக்கண்** *anda-k-kan,* பெ.(n.) குழிவிழுந்த கண்; sunken eyes.

*[அந்தம் + கண்.]*

*[Skt. anta>த. அந்தம்.]*

**அந்தக்கணம்** *anda-k-kanam,* பெ.(n.) குழந்தைகளுக்கு மூளையில் கனல் ஏறி அதனால் உடல் வெதும்பி நாவுலர்ந்து, முகம் மஞ்சள் நிறமடைந்து காணுமொரு வகைக் கணைநோய்; a disease in children arising from the affection of the brain. It is marked by emaciation, dryness of the tongue, yellow face and other symptoms characteristic of *Tabea mesenterica.*

**அந்தக்கரணசாட்சி** *anda-k-karana-šātci,* பெ.(n.) மனச்சான்று (சாட்சி) (வின்.); conscience.

*[அந்த(ம்)+கரணம் + சாட்சி.]*

*[Skt. antah> த. அந்த. Skt. šākṣin>த. சாட்சி.]*

**அந்தக்கரணம்** *anda-k-karanam,* பெ.(n.) உட்கருவி (சி.போ.சிற். 4, 1); inner seat of thought, feeling and volition, consisting of four aspects. *மனம், புத்தி, சித்தம், அகங்காரம்.*

*[அந்தம் + கரணம்.]*

*[Skt. antah>த. அந்த. கரு → கரணம்.]*

**அந்தக்காரி** *anda-k-kāri,* பெ.(n.) அழகி (வின்.); beautiful woman.

*[அந்தம் + காரி.]*

*[Skt. anta> த. அந்த.]*

**அந்தக்கிருமி** *anda-k-kirumi,* பெ.(n.) உடம்பில் நுண்ணுயிரிகளால் ஏற்படும் ஒரு வகை நோய்; a disease caused by worms in the body.

*[Skt. anta+kṛmi> த. அந்தக்கிருமி.]*

**அந்தக்கெடு-த்தல்** *andaṅ-kedu-,* 4 செ.குன்றாவி. (v.t.) உருக்குலைத்தல்; to injure the beauty of a person or a thing to deface or disfigure.

*[அந்தம் + கெடு-.]*

*[Skt. anta> த. அந்தம். கள்→கடு→கெடு-.]*

**அந்தக்கேணி** *anda-k-kēni,* பெ.(n.) மறைகிணறு; hidden well, covered well. *"அந்தக் கேணியு மெந்திரக் கிணறும்" (பெருங். உஞ்சைக். 33, 3).*

*[அந்தம் + கேணி.]*

*[Skt. anta> த. அந்த. குள்→குணி→கேணி.]*

**அந்தகக்கல்** *andaga-k-kal,* பெ.(n.) ஒரு தமிழ் மருந்துச் சேர்க்கை சரக்கு; one of the one hundred and twenty kinds of natural drugs and other substances described in the Tamil medical vocabulary.

**அந்தகச்சாரம்** *andaga-c-cāram,* பெ.(n.) சவட்டுப்பு; salt produced from earth impregnated with soda; salt extracted from fuller's earth (artificially).

*[அந்தம் + சாரம்.]*

*[**Skt.** antaka>அந்தகம். காரம் →சாரம்.]*

**அந்தகசயன்** *andagaśayaṉ,* பெ.(n.) சிவபெருமான் (வின்.); *Śivaṉ.*

*[**Skt.** antaka-jaya > த. அந்தகசயன்.]*

**அந்தகசன்னி** *andaga-śaṉṉi,* பெ.(n.) 1. மூளைக்கு அதிர்ச்சியை யுண்டாக்கிக் கண்ணைக் குருடாக்கும் ஒரு வகை இசிவு; an apoplexy affecting the cerebral system and marked by loss of eyesight. 2.**அந்தக சன்னி பாதசுரம்** பார்க்க; see andaga-*śaṉṉi-pāda-śuram.* 3. நஞ்சினால் ஏற்படும் இசிவு; delirium due to arsenical poisoning.

*[**Skt.** andhaka+san-ni > த. அந்தகசன்னி.]*

**அந்தகசன்னிபாதசுரம்** *andaga-śaṉṉi-pāda-śuram,* பெ.(n.) நடுக்கமாய்க் காய்ச்சல் கண்டு, விக்கல், நீர்வேட்கை, சோர்வு, இரைப்பு, உப்பசம் முதலிய குணங்களையும் மற்றும் தலை நடுக்கம், மறதி, இசிவு முதலிய மூளையின் கோளாறுகளையும், இறப்பையு முண்டாக்குமொரு காய்ச்சல் நோய்; a fever characterised by high temperature hiccough, thirst, languor, hard breathing, swelling, etc, coupled with the shaking of the head, forgetfulness, confusion of mind, delirium and other cerebral manifestations. It is sometimes extremely fatal, *Typhus fever.*

*[அந்தகம் + சன்னி+பாதம் + சுரம்.]*

*[**Skt.** andhaka+san-ni> த.அந்தகசன்னி.]*

*பதி→பதம். சுள்→சுர்→சுரம்.*

**அந்தகசன்னிபாதம்** *andagaśaṉṉipādam,* பெ.(n.) இசிவுநோய் (சன்னிபாத)வகை (சீவரட்.); one of 13 kinds of *śaṉṉi*, q.v.

*[அந்தகம் + சன்னி + பாதம்.]*

*[**Skt.** andhaka+san-ni > த.அந்தகசன்னி.]*

*பதி→பாதம்.*

**அந்தகம்** *andagam,* பெ.(n.) 1. **அந்தகசன்னி** பார்க்க; see *andaga-śaṉṉi.* 2. ஒரு வகை செய் (சாலாங்க) நஞ்சு; a kind of arsenic. 3. ஒரு வகை செய் (அவுபல) நஞ்சு; one of the 32 kinds of native arsenic. 4. குருடு; blindness.

*[**Skt.** andhaka > த. அந்தகம்.]*

**அந்தகரணம்** *andakaraṇam,* பெ.(n.) 1. குருடாக்கல்; causing blindness. 2. கண்ணைக் குருடாக்கும் நோய்; an ulcer causing loss of eye-sight.

*[**Skt.** andhaka+vraṇa > த. அந்தகரணம்.]*

**அந்தகரூபி** *andaga-rūbi,* பெ.(n.) 1. எலி; rat. 2. குருடன்; a blind person.

*[**Skt.** andhaka+rūpin > த. அந்தகரூபி.]*

**அந்தகலை** *andakalai,* பெ.(n.) நிலவின் (சந்திர) கலை; the vital air passing through the left nostril.

*[அந்த + கலை.]*

*[**Skt.** anta>த.அந்த. குல்→கல்→கலை (பிரிவு.)]*

**அந்தகன்[1]** *andagaṉ,* பெ.(n.) 1. அழிப்போன்; destroyer. *"இராவணாந்தகனை" (திவ். பெரியுதி. 2, 3, 7).* 2. கூற்றுவன் (திவா.); Yama, as causing death. 3. மரஞ் செடிகளில் ஒட்டி வளரும் பூடுவகை (மலை.); species of loranthus. 4. வழலை (சவர்க்காரம்) (மூ.அ.); soap.

*[**Skt.** antaka > த. அந்தகன்.]*

**அந்தகன்**² *andagaṉ,* பெ.(n.) 1. குருடன் (தேவா. 859. 4); blind man. 2. ஓரசுரன் (திருவிளை. அருச். 16); name of an asura. 3. ஓர் அரசன் (பாகவத. 9, எதுமரபு. 29); name of a descendant of Yadu, and ancestor of *Krisṇa.*

*[Skt. andhaka > த. அந்தகன்.]*

**அந்தகன்**³ *andagaṉ,* பெ.(n.) 1. வெள்ளாடு; goat. 2. காய்ச்சு வழலை; a kind of salt obtained by repeated boiling. 3. காசிச்சாரம்; a mineral salt. 4. சீர்பந்த நஞ்சு; a kind of native arsenic. 5. காசு நஞ்சு; one of the 32 kinds of prepared arsenic. 6. திராய்; a mineral one consisting of copper and spelter.

**அந்தகன்கணம்** *andagaṉ-kaṇam,* பெ.(n.) குழந்தை நோய் வகை (பாலவா. 511); a disease of children.

*[அந்தகன் + கணம்.]*

*[Skt.antaka>த.அந்தகன்.]*

*குண்→கண்→கண→கணம்.*

**அந்தகன்பீடம்** *andagaṉ-pīḍam,* பெ.(n.) தராமலை (R); mountain where zinc is found.

*[அந்தகன் + பீடம்.]*

*[Skt.antaka>த.அந்தகன்.]*

*புள்→பிள்→பீடு →பீடம்.*

**அந்தகசநியாயம்** *anta-kasa-niyāyam,* பெ.(n.) ஒன்றை முற்ற ஆராயாது அதனொரு பாகத்தை மட்டும் கண்டு உறுதி செய்யும் நெறி; maxim of the blind men and the elephant, used to denote arriving at a wrong one-sided conclusion, as the blind men who, each feeling a different part of the elephant, formed erroneous opinions as to what the elephant was like.

த.வ. குருடன் கண்ட யானைநெறி.

*[Skt. andha+gaja+nyāya>த.அந்தகச நியாயம்]*

*த. கயம் > Skt. gaja.*

*andagāśura-haraṉar,* பெ.(n.) சிவ வேறுபாடு (பேதம்) இருபத்தைந்தனுளொன்று (காஞ்சிப்பு. சிவபுண். 24, தலைக்குறிப்பு); (śaivam) a manifestation of *Śivaṉ.*

*[Skt. andhakāsura+haraṇa.]*

**அந்தகாரம்**¹ *andakāram,* பெ.(n.) 1. இருள் (பிங்.); darkness, gloom. 2. அறியாமை, மனவிருள்; nescience, mental darkness. *"மும்மலம் போர்த்த வந்தகாரப் படலவிருள்" (மச்சபு. பாயி. 16).*

*[Skt. andha-kāra > த. அந்தகாரம்.]*

**அந்தகாரம்**² *andakāram,* பெ.(n.) நெல்லி; Indian gooseberry, *Phyllanthus emblica.*

*[Skt. andha-kāra > த. அந்தகாரம்.]*

**அந்தகாரி** *andakāri,* பெ.(n.) சிவன் (பிங்.); *Śivaṉ,* as the foe of Andhakāsura or Yama.

*[Skt. antaka+ari > த. அந்தகாரி.]*

**அந்தகாலம்** *anda-kālam,* பெ.(n.) இறப்புறுங் காலம்; time of death. *"அந்தகால மடைவதன் முன்னம்" (திவ். பெரியாழ். 4, 5, 3).*

த.வ. இறுதிக்காலம்.

*[அந்த(ம்) + காலம்.]*

*[Skt. anta>த. அந்த.]*

**அந்தகை** *anda-gai,* பெ.(n.) அடிவயிற்றினில் வலப்பக்கமாகப் பெருங்குடலின் தொடக்கத்தி லுள்ள பை; the large blind pouch in which the largo intestine beging; a branch of an intestine with one end closed caecum.

**அந்தகோலாங்கூலநியாயம்** *andakō-lāṅgūla-niyāyam,* பெ.(n.) பிறிதை நம்பித் துன்பமடைதலைக் காட்டும் நெறி; maxim of the blind man and the cow's tail, used to denote being misled, as the blind man who came to grief through holding on to a cow's tail, under a misapprehension, trusting the advice of a stranger.

த.வ. ஆன்வால் அவசல நெறி.

[**Skt.** *andha + gō + lāṅgūla + nyāya > த. அந்தகோலாங்கூலநியாயம்.*]

**அந்தகூபம்** *anda-kūbam,* பெ.(n.) **அந்தக்கேணி** (P.N.) பார்க்க; see *anda-k-kēṇi,*

[*அந்த + கூபம்.*]

[**Skt.** *anta>த. அந்த. கூவல்→கூவம்→ கூபம்.*]

**அந்தச்சித்திரம்** *anda-c-cittiram,* பெ.(n.) உட்கலகம் (சிவசமவா. 38); internal discord.

[**Skt.** *antaš-chidra > த. அந்தச்சித்திரம்.*]

**அந்தச்சுண்ணம்** *anda-c-cunnam,* பெ.(n.) வழலைச் சுண்ணம், முப்புச் சுண்ணம்; (in alchemy) the highest essence prepared from a mixture of three salts in a small quantity. It is called 'The king of metals'.

[*அந்த(ம்) + சுண்ணம்.*]

[**Skt.** *anta> த. அந்தம். சுள் → சுண் → சுண்ணம்.*]

**அந்தச்சோபம்** *anda-c-cōbam,* பெ.(n.) புளிப்பு; sourness.

**அந்தசடம்** *andašadam,* பெ.(n.) 1. வயிறு; stomach. 2. அடிவயிறு; abdomen.

[**Skt.** *anta+jaḍa> த. அந்தசடம்.*]

**அந்தசெயநீர்** *anda-šeyanīr,* பெ.(n.) வழலையுப்பு செயநீர்; (in alchemy) a liquid used for preparing (muppu) known as the universal solvent with a peculiar property of transmuting metal into gold.

**அந்தத்து**[1] *andattu,* பெ.(n.) நிலைமை; rank, condition, standing. *"எத்தனையந்தத் தென்றியம்புவேன்" (தெய்வச். விறலி. 221).*

[**Skt.** *antastu > த. அந்தத்து.*]

**அந்தத்து**[2] *andattu,* பெ.(n.) 1. மேல்மாடி; storey of a building. 2. ஒழுங்கு; order, reqularity. *"இவற்றை அந்தஸ்தோடுவை" (R).*

[**Skt.** *antar + stha >த. அந்தத்து.*]

**அந்தத்துவம்** *andattuvam,* பெ.(n.) குருடு; blindness.

[**Skt.** *andhatva > த. அந்தத்துவம்.*]

**அந்ததமசம்** *anda-tamašam,* பெ.(n.) காரிருள் (சிந்தா. நி. 164); pitch darkness.

[**Skt.** *andha-tamas > த. அந்ததமசம்.*]

**அந்ததரம்** *andataram,* பெ.(n.) சிவனியக் கொண்முடிபு (சைவ சித்தாந்தம்) (சி.போ.12, 4, பக். 242); Šaiva siddhānda philosophy.

[**Skt.** *anta-tara > த. அந்ததரம்.*]

**அந்ததரமிச்ரம்** *andataramicram,* பெ.(n.) நிரயவகை (சி.போ.பா.2,3,பக்.204); a hell.

[**Skt.** *andha-tara+mišra>த.அந்ததரமிச்ரம்.*]

**அந்தந்தலை** *andantalai,* பெ.(n.) முடிவும் முதலும் (வின்.); end and beginning.

**த.வ. அந்தாதி.**

[*அந்த(ம்) + தலை.*]

[**Skt.** *anta> த. அந்தம்.*]

**அந்தப்பங்குநியாயம்** *anda-p-paṅgu-niyāyam,* பெ.(n.) குருடன் தோள்மேல் முடவன் அமர்ந்து வழிப்படுத்துவது போன்ற நெறி; maxim of the lame man and the blind man, used to illustrate mutual dependence for mutual advantage, as the lame man, mounted on the shoulders of the blind man, is able to direct him in the right way.

**அந்தப்பர்வகம்** *anda-p-parvagam,* பெ.(n.) அகக்கணு (வின்.); (Anat.) inner tuberosity.

[**Skt.** *antar+parvan>த. அந்தப்பர்வகம்.*]

**அந்தப்பரம்பரை** *anda-p-parambarai,* பெ.(n.) குருடரைக் குருடர் பின்பற்றும் நெறி; maxim of the blind leading the blind.

[**Skt.***andha+parampara>த.அந்தப்பரம்பரை.*]

**அந்தப்புரம்** *anda-p-puram,* பெ.(n.) 1. அரசமாதேவியினிருக்கை (திவா.); queen's apartments in a royal palace. 2.மகளிருறைவிடம்; zenana.

த.வ. உவளகம்.

*[அந்த(ம்) + புரம்.]*

*[**Skt.** antar> த. அந்த.]*

புர் → புரை = உயர்வு. புர் → புரம் = உயர்ந்தமனை.

**அந்தப்பூதனா** *anda-p-pūdanā,* பெ.(n.) கோள்களின் ஏவலினால் குழந்தைகளுக்கு நோயுண்டாக்குமொரு பெண் பேய்; a female demon bringing about disease in children under the influence of evil planets.

*[**Skt.** anta> த. அந்த.]*

பூது → பூதம் → பூதனா = பருத்த பெண் பூதம்.

**அந்தபூதனாகிரகதோடம்** *andapūdanā-kiraga-dōdam,* பெ.(n.) குழந்தைகளுக்குக் காய்ச்சலுண்டாக்கி அதனால் பாலுண்ணாது, வாயால்வயிற்றாலெடுத்தல், கழிச்சல், இருமல் அல்லது விக்கல், வீக்கம், குப்புறக் கிடத்தல் ஆகிய இக்குணங்களைக் காட்டுமொரு வகைக் கோட்குற்றம்; a morbific diathesis in children characterised by fever, aversion to milk, vomiting dysentery or diarrhoea, cough or hicough, swelling and an inclination lie always on the face.

த.வ. அகட்டுத்துகடம்.

**அந்தப்போதிகை** *anda-p-pōdigai,* பெ.(n.) யானையின் பின்னங்காற் சங்கிலி; chain fastening the hind-leg of an elephant.

*[அந்தம் + போதிகை.]*

*[**Skt.** anda>த. அந்த.]*



**அந்தம்**[1] *andam,* பெ.(n.) 1. ஈறு (நாநார்த்த.); (gram.) suffix. 2. உறுதி (நாநார்த்த.); certainly. 3. அழிவு (நாநார்த்த.); destruction. 4. உறுப்பு (நாநார்த்த.); limb. 5. அணியம் (நாநார்த்த.); nearness. 6. இயல்பு (நாநார்த்த.); nature.

*[**Skt.** anta>த. அந்தம்.]*

**அந்தம்**[2] *andam,* வி.அ.(adv.) வரைக்கும்; as far as, up to, till. *"சேவப்ப நாயக்கர் முதல் விசயராகவ நாயக்கரந்தம்" (தஞ். சரசு. i, 319).*

*[**Skt.** anta> த. அந்தம்.]*

**அந்தம்**[3] *andam,* பெ.(n.) கமுக்கம்; secrecy. *"அந்தக் கோட்டி" (பெருங். உஞ்சைக். 54, 91).*

*[**Skt.** antas> த. அந்தம்.]*

**அந்தம்**[4] *andam,* பெ.(n.) பச்சைக் கருப்பூரம் (வை.மூ.); refined camphor.

*[**Skt.** anta> த. அந்தம்.]*

**அந்தம்**[5] *andam,* பெ.(n.) இருட்டு (நாநார்த்த.); darkness.

*[**Skt.** andha>த. அந்தம்.]*

**அந்தம்**[6] *andam,* பெ.(n.) 1. முடிவு; termination, end, close. *"அந்தமில் சிறப்பின்" (தொல். பொ. 243).* 2. இறப்பு (திவ். பெரியாழ். 4,5,3); death.

*[**Skt.** anta > த. அந்தம்.]*

**அந்தம்**[7] *andam,* பெ.(n.) 1. உறுப்பு; an organ of the body. 2. எலும்பின் கடை; extermity of bone. 3. நஞ்சு; poison. 4. நீர்; water. 5. சோறு; food, boiled rice. 6. பிண்டம்; foetus. 7. தலைச்சன் குழந்தை மண்டையோட்டி விருந்து செய்யப்படுமொரு வகை மண்டையோட்டு (அண்ட)ச் சுண்ணம்; a calcined compound prepared from the skull of the first-born child.

*[**Skt.** anta > த. அந்தம்.]*

**அந்தமந்தம்** *anda-mandam,* பெ.(n.) 1. உறுப்புக்கேடு; the malformation of an organ in the body-deformity. 2. செரியாமை; indigestion.

[அந்த(ம்) + மந்தம்.]

[**Skt**. anta> த. அந்த(ம்).]

**அந்தமுள்** *anda-mul*, பெ.(n.) குறிஞ்சா; a plant, common Indian Ipecacuanha, *Tylophora asthmatica*.

**அந்தமூசிகம்** *anda-mūšigam*, பெ.(n.) ஒரு வகைப் புல்; a kind of grass, *Lepeocericis serrata*.

[**Skt**. anta+mūcika > த. அந்தமூசிகம்.]

**அந்தமூசை** *anda-mūšai*, பெ.(n.) ஒரு பக்கம் துளைவிட்டு மூடிய ஒரு சிறிய குடுவை (மூசை); a small covered crucible with a hole in the side.

[அந்தம் + மூசை.]

[**Skt**. anta> த. அந்த.]

**அந்தயெரு** *anda-y-eru*, பெ.(n.) மருத்துவ உப்பு; a kind of salt prepared out of 3 kinds of salts called 'muppu' by a secret process known only to Siddhars, is used for curing all kinds of diseases and is primary used in Tamil medicine.

**அந்தர்** *andar*, பெ.(n.) 112 எடை (இ.வ.); hundred weight = 112 lbs.

[**E**. hundred > த. அந்தர்.]

**அந்தர்க்கதம்** *andar-k-kadam*, பெ.(n.) உள்ளடங்கியது (சி.சி.1,21,சிவாக்.); that which is included, suppressed.

[**Skt**. antargata > த. அந்தர்க்கதம்.]

**அந்தர்கதசுரம்** *andarkada-šuram*, பெ.(n.) உட்காய்ச்சல்; internal fever.

[அந்தர்கதம்+சுரம்.]

[**Skt**. antargata> த. அந்தர்கத(ம்).சுல்→சுர் →சுரம்.]

**அந்தர்குதவளையம்** *andarkuda-valaiyam*, பெ.(n.) எரு (மல) வாயிற்குள்ளிருக்கும் வளையம்; (in Anatomy) the inner ring of the spineter muscle in the anus.

[அந்தர்+குதம்+வளையம்.]

[**Skt**. antar>த. அந்தர்.]

குல்→குத்து→குத்தம்→குதம். வள்→வளை→ வளையம்.

**அந்தர்சடரம்** *andar-šadaram*, பெ.(n.) இரைக்குடல்; the stomach.

[அந்தர் + சடரம்.]

[**Skt**. antar> த. அந்தர்.]

சடம்→சடர்→சடரம்.

**அந்தர்சரீரம்** *andar-šarīram*, பெ.(n.) 1. ஆவிவுடல்; body interior, inner body, astral body. 2. உள்ளுறுப்பு (உள்ளிந்திரியம்); internal organ.

**த.வ. ஆவிமேனி.**

[**Skt**. antar+šarīra> த. அந்தர்சரீரம்.]

**அந்தர்சீவி** *andar-šīvi*, பெ.(n.) ஓர் உயிர் பிறிதோருயிரியைப் பற்றுகை; an animal - parasite living within the body of another animal, *Entozoon*.

**த.வ. உயிரேற்றம்.**

[**Skt**.antar+jīvin>த. அந்தர்சீவி.]

**அந்தர்த்தகனம்** *andar-t-taganam*, பெ.(n.) மது நீர் வடிகை; distillation of spirit of liquor.

[**Skt**. antar>த. அந்தர்.]

தக → தகன் + அம்—தகனம்.

**அந்தர்த்தானம்**[1] *andarttānam*, பெ.(n.) மறைகை; disappearance, vanishing. *"அந்தர்த்தானமாய் சேர்ந்து போவார்" (மச்சபு. அசுர. 31).*

[**Skt**. antardhāna>த. அந்தர்த்தானம்.]

**அந்தர்த்தானம்**[2] *andar-t-tānam*, பெ.(n.) 1. மறைவிடம்; a concealed or covered place. 2. உள்ளிடம்; private part. 3. பெண் குறி; the genital of a female.

[**Skt**. antar+stahāna>த. அந்தர்த்தானம்.]

**அந்தர்தர்பார்** *andar-darbār*, பெ.(n.) முறைதவறி நடக்கும் அலுவலகம் (இ.வ.);

public office notoriously ill-conducted, maladministration.

*[Skt. antara+U.darbār> த.அந்தர்தர்பார்.]*

**அந்தர்திருட்டி** *andar-tirutti,* பெ.(n.) உண்முக நோக்கு; looking into one's own soul, Introspection.

**த. உள்நோக்கு.**

*[Skt. antar+drsti → drtti> த. அந்தர்திருட்டி.]*

**அந்தர்ப்பவி-த்தல்** *andar-p-pavi-,* 4 செ.கு.வி. (v.i.) உள்ளடங்கியிருத்தல்; to be contained, inherent. *"ஆன்மா பதிபதார்த்தத்தில் அந்தர்ப்பவிக்குமெனின்" (சிவசம. 39).*

**த. உள்ளடங்குதல்.**

*[Skt. antar-bhāva > த. அந்தர்ப்பவி-.]*

**அந்தர்ப்பாகம்** *andar-p-pāgam,* பெ.(n.) 1. உட்பாகம்; internal portion. 2. மறைவிடம்; private part. i.e.the genital portion.

*[அந்தர் + பாகம்.]*

*[Skt. antar> த. அந்தர். பகு → பாகம்.]*

**அந்தர்ப்பூதம்** *andarppūdam,* பெ.(n.) உள்ளடங்கினது; that which is included.

*[அந்தர்+பூதம்.]*

*[Skt. antar-bhuta > த. அந்தர். பூது → பூதம்.]*

**அந்தர்மலக்கிருமி** *andar-mala-k-kirumi,* பெ.(n.) உடம்பினுள்ளுண்டாகும் கோழை, குருதி, கழிமாசு (மலம்), சிறுநீர் ஆகியவற்றில் பிறக்கும் நாக்குப் பூச்சி; micro-organism found in the phlegm, blood, faces, urine etc.

*[அந்தர் + மலம் + கிருமி.]*

*[Skt.antar>த. அந்தர்.Skt.krmi> த.கிருமி.]*

**அந்தர்மிருதம்** *andar-mirudam,* பெ.(n.) பிண்டப் பிறப்பு; dead at the birth, still born.

*[Skt. antar+mrta>த. அந்தர்மிருதம்.]*

**அந்தர்முகம்** *andar-mugam,* பெ.(n.) 1. உண்ணோக்கு; looking inward. 2. ஓக நிலையிலொன்று; a posture in the yoga practice.

*[அந்தர் + முகம்.]*

*[Skt. antar>த. அந்தர்.]*

**அந்தர்முகி** *andar-mugi,* பெ.(n.) அடங்கிய மனமுடையவன், ஓர் ஓகி; one who has controlled his mind, and said of a yogi. 2. உண்ணோக்கமுடையவன்; one who is always engaged in looking inwards, a state in yoga.

**த.வ. உள்நோக்கி.**

*[Skt. antar+mukhī>த. அந்தர்முகி.]*

*த. முகம்>* ***Skt.*** *mukhī.*

**அந்தர்முகியோனி** *andar-mugi-yōni,* பெ.(n.) பெண்கள் வயிறு முட்ட உண்டபிறகு வன்புணர்ச்சி செய்வதனால் வளி மிகுத்து, உள்நோக்கிய முகமாகவெழும்பி குறியை விரிக்க முடியாதபடி வலியையும், பூவொதுங்குவதால், அங்குள்ள எலும்பு, நாடி, நரம்பு முதலியவற்றிற்கு வலியையு முண்டாக்கி அடிவயிற்றில் சூலையையு முண்டாக்குமொரு நோய்; a vaginal disease characterised by pain in every part of the genital, bone, muscles, nerves etc., inability to stretch the part and darting pain in the abdomen and in the lower region just above the pubis, is due to the deranged condition of vayu arising from violent or rude intercourse when the stomach is full after meals.

**த.வ. உள்ளெரிச்சல்நோய்.**

*[Skt.antar+mukhī+yōni>த.அந்தர்முகியோனி.]*

*த. முகம்>* ***Skt.*** *mukhī.*

**அந்தர்யாகம்** *andar-yāgam,* பெ.(n.) **அந்தரியாகப்பூசை** பார்க்க; see *andariyāga-p-pūšai.*

*[Skt. antar-yāga>த. அந்தர்யாகம்.]*

**அந்தர்யாமித்துவம்** *andar-yāmittuvam,* பெ.(n.) திருமால் நிலையுளொன்று (அஷ்டாதச. தத்வத். 3, 42); manifestation of *Viṣṇu* as being immanent in the universe and governing it, one of five *tirumāl-nilai.*

*[Skt. antar-yāmitvam>த. அந்தர்யாமித்துவம்.]*

**அந்தர்யோகம்** *andar-yōgam,* பெ.(n.) சுழுத்தி நிலை; a state of deep thought or abstraction, reverie.

*[Skt. antar +yōga>த. அந்தர்யோகம்.]*

**அந்தர்யோனி** *andar-yōṉi,* பெ.(n.) பெண் குறியினுட்புறம்; the internal portion of the genital of a female.

த.வ. உள்நோனி.

*[Skt. antar+yōni> த. அந்தர்யோனி.]*

**அந்தர்வதி** *andar-vadi,* பெ.(n.) சூலுற்றவள் (கருப்பிணி); a pregnant woman.

த.வ. சூலி.

**அந்தர்வமி** *andar-vami,* பெ.(n.) 1. வளி (வாயு); flatulence. 2. செரியாமை; indigestion.

**அந்தர்வாகினி** *andar-vāgiṉi,* பெ.(n.) கீழாறு; stream within a stream.

**அந்தர்வித்திரதி** *andar-vittiradi,* பெ.(n.) பெண்களுக்குண்டாகும் மாதவிடாய் தடைபட்டு, அதனால் குருதி கோளாறடைந்து, கருப்பையிற் திரண்டு கறுத்த கொப்புளங்களாற் சூழப்பட்டு, அழற்சி, வலி, காய்ச்சல் ஆகியவற்றை உண்டாக்குமொரு தீட்டு (சூதக) நோய்; a menstrual disease in women arising from the altered condition of blood in the womb due to the supression of menstrual flow, is marked by fever, dark ulcers in the womb, inflammation and pain in the vagina, a kind of Amenorrhea.

*[Skt. antar+vidradi>த. அந்தர்வித்திரதி.]*

**அந்தர்வேககரம்** *andar-vēga-šuram,* பெ.(n.) எலும்பிற்குள்ளிருக்கும் கொழுப்புப் பொருளை (மச்ச) தாதுவைப் பற்றி ஏற்படும் ஒரு வகைக் காய்ச்சல்; a fever due to the affection of the marrow in the bone.

**அந்தர்வேதி** *andar-vēdi,* பெ.(n.) 1. வேள்விச் சாலையினுள்ளிடம் (காஞ்சிப்பு. அந்தரு. 22); inside of the sacrificial ground. 2. கங்கை யமுனைகட்கு நடுவிலுள்ள பகுதி; district between the Gaṅgā and Yamunā rivers. *"அவர்களை யந்தர்வேதிசென் றுடன்கொணர்வா யென்று" (கோயிற்பு. இரணிய. 107).*

*[Skt. antar+vēdi> த. அந்தர்வேதி.]*

**அந்தரக்கோன்** *andara-k-kōṉ,* பெ.(n.) புல்லூரி; a parasitic plant.

**அந்தரகணம்** *andara-kaṇam,* பெ.(n.) செய்யுட்கணத்தொன்று (திவா.); metrical foot to two nirai and one nēr (-), as karuviḷaṅgāy, considered inauspicious at the commencement of a poem.

*[அந்தர(ம்) + கணம்.]*

*[Skt.antara>த.அந்தரம்.கள்→ களம்→ கணம்.]*

**அந்தரகாந்தாரம்** *andara-kāndāram,* பெ.(n.) பதினாறுவகைப் பண்களில் மூன்றாவது பண்; (Mus.) highest variety of the third note of the gamut, one of *šoḍaša-šuram.*

*[அந்தர(ம்) + காந்தாரம்.]*

*[Skt. antāra>த. அந்தரம்.]*

**அந்தரகாமி** *andara-kāmi,* பெ.(n.) வான் வழியாய்ச் செல்வது; that which passes through the air.

த.வ. வானோடி.

*[Skt. antara+kāmin>த. அந்தரகாமி.]*

**அந்தரகும்பகம்** *andara-kumbagam,* பெ.(n.) மூச்சுக் காற்றைக் குடலினுள்ளேயே அடக்குதல்; the act of retaining the vital air in the intestines by suppression of breath.

த.வ. மூச்சடக்கம்.

*[அந்தர + கும்பகம்.]*

*[**Skt.** antara>த. அந்தர(ம்).]*

*கும்பம் > கும்பகம் >* ***Skt.*** *kumbha.*

**அந்தரகெந்தன்** *andara-kendaṉ,* பெ.(n.) இதளிய நஞ்சு (சூத பாஷாணம்); a kind of mercurial poison.

**அந்தரங்கக்கரப்பான்** *andaraṅga-k-karappāṉ,* பெ.(n.) ஆண்குறி (கோச) மலரின் தோலிற்கடியில் வட்டமாய்ச் சிவந்து எரிச்சலோடு காணும் தழும்பு; an intense itching on the innerside of the foreskin of the penis marked by crops of papules with inflammation and burning sensation, pruritus.

*[அந்தரங்கம்+கரப்பான்.]*

*[**Skt.** antar + aṅga> த. அந்தரங்கம்.]*

**அந்தரங்கச்சொறி** *andaraṅga-c-coṟi,* பெ.(n.) மேகச் சூட்டினால் ஆண், பெண் குறியிடங்களிற் பொறுக்க முடியாத நமைச்சலோடு சிறிய வியர்க்குருக்கள் போற்காணும் ஒரு வகைச் சொறிசிரங்கு; a chronic skin disease marked by the development of small pale papules and intense itching of the genitals in both the male and the female, is due to the venereal heat, *Prurigo.*

த.வ. பாலுறுப்புச்சொறி.

*[அந்தரங்கம் + சொறி.]*

*[**Skt.** antar + aṅga>த. அந்தரங்கம்.]*

*சல்→சுர்→சுறு→சொறி.*

**அந்தரங்கத்தானம்** *andaraṅga-t-tāṉam,* பெ.(n.) 1. பெண்குறி; the private part of a female. 2. மறைவான இடம்; a secret place. 3. மனம்; mind.

*[**Skt.** antar + aṅga + sthāna > த. அந்தரங்கத்தானம்.]*

**அந்தரங்கத்தியானி** *andaraṅga-t-tiyāṉi,* பெ.(n.) ஆமை (வை.மு.); tortoise.

*[**Skt.**antaraṅga+dhyānin>த.அந்தராங்கத்தியானி.]*



**அந்தரங்கபரிகரம்** *andaraṅga-parigaram,* பெ.(n.) மந்தண மற்றும் உண்மைச் சுற்றம் (ஈடு. 10, 1, ப்ர. அரும்.); faithful retinue, loyal attendants.

த.வ. அணுக்கச்சுற்றம்.

*[**Skt.** antar + aṅga + pari-hara > த. அந்தரங்கபரிகரம்.]*

**அந்தரங்கம்** *andaraṅgam,* பெ.(n.) 1. மறை பொருள், கமுக்கம் (நல். பாரத. உமாம. 307); privacy, secrecy. 2. உள்ளம்; mind. *"அவனுக்கு அந்தரங்கத்தில் பாசமுண்டு".* 3. உட்கருத்து; inmost thought. 4. நெருங்கிய நட்பு; intimate friendship. *"இருவரும் அந்தரங்க முள்ளவர்கள்" (உ.வ.).*

த.வ. கமுக்கம்.

*[**Skt.** antar+aṅga> த. அந்தரங்கம்.]*

**அந்தரங்கன்** *andaraṅgaṉ,* பெ.(n.) உற்ற நண்பன்; intimate friend.

*[**Skt.** antar+aṅga> த. அந்தரங்கன்.]*

**அந்தரச்சிந்து** *andara-c-cindu,* பெ.(n.) ஒருவகை நஞ்சு (மூ.அ.); a mineral poison.

**அந்தரசமி** *andarašami,* பெ.(n.) 1. செரியாமை; indigestion. 2. வளி மிகுதியான் வயிறு உப்புகை; inflation of the bowels due to wind, *Tympanites.*

*[Skt. antarasam> த. அந்தரசமி.]*

**அந்தரசரிதர்** *andara-šaridar,* பெ.(n.) வான்வழிச் செல்வோர் (பாரத. உலூக. 18); super human being moving in the air.

*[Skt. antara+carita> த. அந்தரசரிதர்.]*

**அந்தரசாமி** *andara-šāmi,* பெ.(n.) வான் வழியில் செல்வதிலேயே விருப்பமுடையோன்; he who has always a mania for passing or travelling in the serial regions.

**அந்தரசாரி** *andara-šāri,* பெ.(n.) வான் வலம் வருவோன் (மணிமே. 28, 69); superhuman being moving in the air.

**த.வ. வான்வலசையன், வானுலவி.**

*[Skt. antara+šārin > த. அந்தரசாரி.]*

**அந்தரசைவம்** *andara-šaivam,* பெ.(n.) ஒரு சிவனிய வகை (சைவபேதம்); Šaiva sect which holds that Šivaṉ should be contemplated as immanent in the whole universe.

*[Skt. antara+šaiva> த. அந்தரசைவம்.]*

*சிவன்→சிவனியம்.*

*சிவ > விசம் > **Skt.** šaiva> த. சைவ.*

**அந்தரஞ்சனம்** *andar-añjaṉam,* பெ.(n.) கொடி மாதுளை; lemon citron - citrus (lemoni medica).

**அந்தரட்சி** *andaraṭci,* பெ.(n.) உடம்பின் துளை வழியாக விட்டு ஆய்வு செய்யும் கருவி; an instrument for the examination of a body cavity through its natural outlet, *Endoscope.*

**அந்தரட்டிக்குருக்கள்** *andaraṭṭi-k-kurukkaḷ,* பெ.(n.) நீத்தார் நிகழ்வு (கருமாதி) செய்விக்குங் குருக்கள்; priests who help in funeral rites.

*[அந்தரட்டி + குருக்கள்.]*

*[Skt. antya-isti>அந்தரஷ்டி →த. அந்தரட்டி.]*

*குல் → குரு → குருக்கள்.*

**அந்தரடி-த்தல்** *andar-aḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) தலைகீழாகப் பாய்தல்; to turn a somersault, tumble.

**த.வ. குட்டிக் கரணம் போடுதல், குப்புறப் பாய்தல்.**

*[அந்தர் + அடி-.]*

*[Skt. antar> த. அந்தர்.]*

*அடு → அடி.*

**அந்தரத்தர்பார்** *andara-t-darbār,* பெ.(n.) **அந்தர்தர்பார்** பார்க்க; see *andardarbār.*

*[Skt. antara + U. darbār> த. அந்தரத்தார்.]*

**அந்தரத்தாமரை** *andara-t-tāmarai,* பெ.(n.) குழித்தாமரை, குளிர்தாமரை (ஆகாசத் தாமரை) (பதார்த்த. 319); a weed, *Pistia stratiotes.*

*[அந்தரம் + தாமரை.]*

*[Skt. antara>த. அந்தரம்.]*

**அந்தரத்தில்நில்(ற்)-த(ற)ல்** *andarattil-nil-,* 14 செ.கு.வி.(v.i.) ஆதரவற்றிருத்தல் (இ.வ.); to be helpless.

*[அந்தரம்+அத்து+இல்+நில்-.]*

*[Skt. antara>த. அந்தர(ம்).]*

அத்து = சாரியை.

**அந்தரத்தில்விடு-தல்** *andarattil-viḍu-,* 18 செ.குன்றாவி.(v.t.) ஏதிலியாக்குதல்; to leave helpless. *"என்னை அந்தரத்தில் விட்டான்" (இ.வ.).*

*[அந்தரம்+அத்து+இல்+விடு-.]*

*[Skt. antara> த. அந்தரம்.]*

**அந்தரத்தேசரி** *andara-t-tēšari,* பெ.(n.) சிறுபசலை; small Indian purslane, *Portulaca qudrifida.*

**அந்தரதம்** *andaradam,* பெ.(n.) குடற்புழு; a worm in the intestines.

*[Skt. antarata> த. அந்தரதம்.]*

**அந்தரதாகம்** *andara-tāgam,* பெ.(n.) 1. இறக்குந் தறுவாயில் ஏற்படும் நீர்வேட்கை; intense thirst in a dying person. 2. மேக வெட்டையின் தொடர்பினால் ஏற்பட்டு மிகுதியான நீர் வேட்கையை யுண்டாக்குமொரு நோய்; intense thirst arising from the parched condition of the tongue, etc. due to urinary disorders as diabetes etc.

*[அந்தர(ம்) + தாகம்.]*

*[**Skt.** antara > த. அந்தரம்.]*

*தவி → தாவம் → தாகம்.*

**அந்தரதிசை** *andara-tišai,* பெ.(n.) கோணத் திசை; intermediate point of the compass.

*[அந்தர(ம்) + திசை.]*

*[**Skt.** antara> த. அந்தரம்.]*

திக்கு → திகை → திசை.

**அந்தரதுந்துபி** *andara-dundubi,* பெ.(n.) தெய்வவாச்சியம்; drum of the gods. *"அந்தர துந்துபி முதலா மளவில் பெருகொலி" (பெரியபு. திருஞான. 98).*

*[**Skt.** andara+dundubi > த. அந்தரதுந்துபி]*

**அந்தரதுந்துமி** *andara-tundumi,* பெ.(n.) தேவமுரசு; the drum of the celestials. *"ஆர்ப்பன பல்லியமோ வந்தரதுந்து மியுமே" (தக்கயாகப். 112).*

*[**Skt.** antara+dundhubi>த. அந்தரம் + துந்துமி.]*

**அந்தரநதி** *andara-nadi,* பெ.(n.) வான் (ஆகாய) கங்கை (வரத. பாகவத. சுபத். 18); the celestial *Gaṅgā.*

*[**Skt.** antara+nadi > த. அந்தரநதி.]*

**அந்தரநாதன்** *andara-nādaṉ,* பெ.(n.) இந்திரன் (கந்தபு. தெய்வ. 241); Indraṉ, as the lord to heaven.

*[**Skt.** antara+nātha> த. அந்தரநாதன்.]*

**அந்தரப்படு-தல்** *andara-p-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) பெருந்துன்ப முறுதல்; to be in great distress. *"இவள் நோக்காமையிறே அந்தரப்பட்டது" (ஈடு. 7, 1, ப்ர.).*

*[அந்தர(ம்) + படு-.]*

*[**Skt.** antara> த. அந்தரம்.]*

**அந்தரப்பல்லியம்** *andara-p-palliyam,* பெ.(n.) **அந்தரதுந்துமி** பார்க்க; see *andaratundumi. "அந்தரப்பல்லியங் கறங்க" (திருமுரு. 119).*

*[அந்தர(ம்) + பல்லியம்.]*

*[**Skt.** antara> த. அந்தரம்.]*

**அந்தரப்பிசாசு** *andara-p-pišāšu,* பெ.(n.) தகாச்சாவு அடைபவர் பெறும் பேயுருவம்; ghost of one who died through suicide or violence.

*[அந்தர(ம்) + பிசாசு.]*

*[**Skt.** antara> த. அந்தரம்.]*

*பிள் → பியம் → பிசம் → பிசசு → பிசாசு.*

**அந்தரபட்பம்** *andara-paṭpam,* பெ.(n.) பலாசு; tisso flower, *Butea frondosa.*

**அந்தரபவனி** *andarabavaṉi,* பெ.(n.) வான்வழிப் பயணம் (வின்.); motion through the air.

*[அந்தர(ம்) + பவனி.]*

*[**Skt.** antara> த. அந்தரம்.]*

**அந்தரபுருடன்** *andara-puruḍaṉ,* பெ.(n.) ஆன்மா; the soul.

**த.வ. ஆதன்.**

*[**Skt.** antara+puruṣa>த.அந்தரபுருடன்.]*

**அந்தரம்** *andaram,* பெ.(n.) 1. வெளி; open space. 2. உட்பகுதி; interior space. *"பந்த ரந்தரம் வேய்ந்து" (பதிற்றுப். 51).* 3. இருள் (பிங்.); darkness. 4. வானம்; sky, firmament. *"அந்தரம் பாரிடமில்லை" (திவ். திருப்பள்ளி.7).* 5. நடு; intermediate space. *"மற்றோ ரந்தர விசும்பில்" (சீவக. 836.).* 6. இடம்; place. *"அந்தரமி தல்லவென" (பாரத. ஒன்பதாம், 22).*

7. இடுப்பு; waist. "*அந்தர மேற்செம்பட் டோடு*" (*திவ். திருவாய். 7,6,6.*). 8. நடு(வு) நிலை; impartiality. "*அந்தரந் தீர்ந்துலகளிக்கு நீரினால் தந்தையுங் கொடியன்*" (*கம்பரா. மந்தரை. 60.*). 9. வானுலகம் (பிங்.); heaven. 10. வேறுபாடு; difference. "*அந்தரம் பார்க்கி னன்மை யவர்க்கிலை*" (*கம்பரா. மாரீச. 75.*). 11. கெடுவிளைவு; contrariety, unsoundness "*விரிகோவண நீத்தார் சொல்லும் அந்தர ஞான மெல்லாம்*" (*தேவா. 74, 10.*). 12. கோயில். (பிங்.); temple. 13. தீமை; evil. "*என்மனை வாழும் பெண்ணால் வந்த தந்தரம்*" (*கம்பரா. கைகேசி. 40*). 14. கூட்டம் (பிங்.); crowd.

[**Skt.** *antara* > த. *அந்தரம்.*]

**அந்தரம்[2]** *andaram,* பெ.(n.) முடிவு (பிங்.); close. end.

[**Skt.** *antara* > த. *அந்தரம்.*]

**அந்தரம்[3]** *andaram,* பெ.(n.) 1. புறம்பு (நாநார்த்த.); outside, exterior. 2. எல்லை (நாநார்த்த.); limit, boundary. 3. அயலானது (நாநார்த்த); neighbourhood distinction. 4. தனிச்சிறப்பு (நாநார்த்த.); distinction. 5. **அந்தரான்மா** (நாநார்த்த.) பார்க்க; see *andarāṉmā*. 6. மறைவு (நாநார்த்த.); hiding, concealment. 7. துளை (நாநார்த்த.); hole. 8. குழி (நாநார்த்த); pit. 9. ஆடை (நாநார்த்த.); cloth. 10. இடைகழி (சம். அக. Ms.); passage next to the entrance of a house. 11. காலநீட்டிப்பு (நாநார்த்த.); interval. 12. அவசரம் (நாநார்த்த.); occasion, time. 13. இடையூறு; impediment. "*அந்தரம் புகுந்த துண்டென* (*கம்பரா. நிந்தனை. 4*). 14. மேகம் (பொதி. நி.) cloud. 15. அளவு (பொதி.நி.); standard measure, normal form.

[**Skt.** *antara* > த. *அந்தரம்.*]

**அந்தரம்[4]** *andaram,* பெ.(n.) 1. விருப்பம்; desire. 2. புருவத்தினடு; space between the eye-brows. 3. தனிமை; loneliness. 4. மாறுபாடு; difference (சா.அக.).

[**Skt.** *antara* > த. *அந்தரம்.*]

**அந்தரமத்திமபுத்தி** *andara-mattima-putti,* பெ.(n.) கோள்களின் நித்தியகதியில் உண்மைக்கும் மத்திமத்துக்குமுள்ள வேறுபாடு; (Astron.) difference between the mean and the true daily motions of planets.

[*அந்தரமத்திம + புத்தி.*]

[**Skt.** *antara+mattima*>த. *அந்தரமத்திம(ம்).*]

**அந்தரமாமூலி** *andara-māmūli,* பெ.(n.) **அந்தரத்தாமரை** பார்க்க; see *andara-t-tāmarai* (சா.அக.).

[*அந்தர(ம்)+மா+மூலி.*]

[**Skt.** *antara*>த. *அந்தர(ம்).*]

**அந்தரர்** *andarar,* பெ.(n.) 1. தேவர்; celestials, as dwellers in heaven. "*அந்தரர்கோன்* (*திருவாச. 9, 3.*). 2. பதினெண்கணத்து ளொருவர்; a class of demigods, as being in the intermediate space, one of *padiṉeṇ-kaṇam,* q.v.

[**Skt.** *antara* > த. *அந்தரர்.*]

**அந்தரவல்லி** *antara-valli,* பெ.(n.) கொல்லங் கொவ்வை (மலை.); species of corallocarpus.

[**Skt.** *antara-valli*> த. *அந்தரவல்லி.*]

**அந்தரவனசம்** *andara-vaṉašam,* பெ.(n.) கொடிப்பாசிவகை (பச். மூ.); a kind of moss.

**அந்தரவனம்** *andara-vaṉam,* பெ.(n.) மக்களில்லாக் காடு (வின்.); uninhabited desert.

**த.வ. அத்துவானம்.**

[**Skt.** *antara + vana* > த. *அந்தரவனம்.*]

**அந்தரவாசம்[1]** *andara-vāšam,* பெ.(n.) கொட்டைப்பாசி; an epiphytic medicinal plant (சா.அக.).

[**Skt.** *antara + vāsa* > த. *அந்தரவாசம்.*]

**அந்தரவாசம்[2]** *andara-vāšam,* பெ.(n.) வான்வெளியில் இயங்குகை; moving in the aerial regions (சா.அக.).

*[Skt. antara + vāsa > த. அந்தரவாசம்.]*

**அந்தரவாசி** *andara-vāši,* பெ.(n.) வானில் வலம்வருவோன்; a superhuman being moving in the aerial regions. (சா. அக.)

*[Skt. antara + vāsin> த. அந்தரவாசி.]*

**அந்தரவாண்டு** *andara-vāṅḍu,* பெ.(n.) குறித்த நாளெல்லைகட்கு இடைப்பட்ட காலம் (வின்.); the period of time between any two given dates (சா.அக.).

*[அந்தர(ம்) + ஆண்டு.]*

*[Skt. antara > அந்தரம்.]*

**அந்தரவாயு** *andara-vāyu,* பெ.(n.) 1. குடல் (வாயு) வளி; gas or air in the intestines; flatulence. 2. வளியினால் உண்டாகும் குடலிறக்கம்; the descent of the bowels from its normal position, as a result of the deranged conditions of vayu in the system, *Rupture*. 3. வான்வெளியில் உள்ள காற்று; atmospherie air. 4. இடுப்பிலேற்பட்ட (வாயு) வளிநோய்; hip-pain due to wind in the system (சா.அக.).

*[Skt. antara + vāyu > த. அந்தரவாயு.]*

**அந்தரவாயுக்கிரகணி** *andara-vayu-k-kiragaṇi,* பெ.(n.) குடலில் தங்கிய வளியினால் உண்டவுடன் வயிறிரைந்து கழிச்சலாகி நீர்வேட்கை, தளர்ச்சி, விலாவிசிவு, விக்கல் முதலிய குணங்களை உண்டாக்கும் நாட்படு வயிற்றோட்டம்; a form of chronic diarrhoea characterised by rumbling noise in the stomach and purging, thirst, fatigue, spasmodic pain on the sides, hiccough etc. is due to gas or air in the intestines (Flatus) and occurs soon after meals, *Flatulent diarrhoea* (சா.அக.).

*[Skt. antara + vāyu+kiragani> த. அந்தரவாயுக்கிரகணி.]*

**அந்தரவிகூசனம்** *andara-vigūšaṇam,* பெ.(n.) வயிற்றிரைச்சல்; rumbling of the bowels (சா.அக.).

**அந்தரவிட்டை** *andara-viṭṭai,* பெ.(n.) குடலிலிறங்கி நிற்கும் கழிமாசு (மலம்); faecal matter in the intestines as opposed to வெளி தள்ளு மலம் discharged faces (சா. அக.)

*[அந்தர(ம்) + விட்டை.]*

*[Skt. antara > த. அந்தரம்.]*

**அந்தரவித்திரதி** *andara-vittiradi,* பெ.(n.) உடம்பினுள்ளுறுப்புகளிற் காணுங் கழலைக் கட்டி; a tumour like raised abscess in the interior organs of the body (சா.அக.).

*[Skt. antara+vidradhi>த. அந்தரவித்திரதி.]*

**அந்தரவிதனம்** *andara-vidaṇam,* பெ.(n.) ஒரு கண்ணோய்; an eye-disease (சா.அக.).

*[Skt.antara+vyathana > த. அந்தரவிதனம்.]*

**அந்தரவிருத்தி** *andara-virutti,* பெ.(n.) 1. குடல் பருத்தல்; enlargement of distension of the bowels. 2. குடல் தன்னிடத்தை விட்டு நழுவி அடிவயிற்றிற் குள்ளிறங்காமல் ஆண்குறிக்கு மேற் பருத்துக் தோற்றுகை; the displacement of bowels with protursion or swelling appearance above the penis when they have not passed quite through the inguinal canal, Imperfect hernia. 3. உடம்பின் உட்புறத்திலிருந்து பருமனாதல்; swelling remaining internally. 4. இடுப்புப்பருத்தல்; enlargement of the waist and buttocks. 5. வளியினால் பல நிலைகளில் வளர்ச்சியுற்று, சிறுகுடல் அழற்சியையும், விதைப்பையில் பெருக்கத்தையும் ஏற்படுத்தும் குடலண்ட வளர்ச்சிநோய்; a rupture caused by the muscles over the bowels, giving way and letting some portion of the intestines escape outwards beneath the skin, arises from the aggravated condition of vayu in the iliac region (சா.அக.).

*[Skt. antara+ vṛddhi > த.அந்தரவிருத்தி.]*

**அந்தரவினியோகம்** *antara-viniyōgam,* பெ.(n.) வரிவகை (S.I.I. i, 136.); a tax.

*[Skt. antara+ viniyōga>த. அந்தரவினி யோகம்.]*

**அந்தரவீச்சு** *andaraviccu,* பெ.(n.) பெரும்பொய் (இ.வ); outrageous lying.

*[அந்தர(ம்) + வீச்சு.]*

*[Skt. antara> த. அந்தரம்.]*

**அந்தரவீச்சுக்காரன்** *andaraviccu-k-kāran,* பெ.(n.) ஏமாற்று(மோச)க்காரன் (வின்.); fraudulent man, cheat.

*[அந்தர(ம்) + வீச்சுக்காரன்.]*

*[Skt. antara > த. அந்தரம்.]*

**அந்தரவுலகம்** *andara-v-ulagam,* பெ.(n.) வானுலகம்; svarga. *"அந்தரவுலகத் தமரர்கோமான்" (பெருங். உஞ்சைக். 37, 96.).*

*[அந்தரம் + உலகம்.]*

*[Skt. antara> த. அந்தரம்.]*

*உலம் > உலகம்.*

**அந்தரவேட்டணசவ்வு** *andara-vēttana šavvu,* பெ.(n.) வயிற்றின் உட்பகுதியைச் சூழ்ந்துள்ள நீரடங்கிய இரட்டைச் சவ்வுப் பை; peritoneum (சா.அக.).

**அந்தராஞ்சம்** *andarāñjam,* பெ.(n.) தோளிற்கும் நெஞ்சிற்கும் இடையேயுள்ள கூறு; that part of the body between the shoulder and the breast (சா.அக.).

*[Skt. antarānsa> த. அந்தராஞ்சம்.]*

**அந்தராத்மா** *andar-ātmā,* பெ.(n.) 1. பரவாதன் (பரமான்மா); indwelling soul. 2. மனம் (இ.வ.); mind.

*[Skt. antar + ātmā > த. அந்தராத்மா.]*

**அந்தராபத்தம்** *andarā-pattam,* பெ.(n.) உணவிற்கிடையே கொள்ளுமருந்து; a medicine taken between two meals (சா.அக.).

**அந்தராபதியை** *andarā-padiyai,* பெ.(n.) கருவுற்றவள்; a pregnant woman (சா.அக.).

த.வ. சூலி.

**அந்தராபவச்சத்துவம்** *andarā-pava-c-cattuvam,* பெ.(n.) இறப்பிற்கும் மீள்பிறப்பிற்கும் இடைப்படு காலத்தில் ஆதனுக்கேற்படு நிலைமை; the soul in its existence between death and rebirth (சா. அக.).

*[Skt. antarābhava-sattva > த. அந்தராபவச் சத்துவம்.]*

**அந்தராயப்பாட்டம்** *andarāya-p-pāttam,* பெ.(n.) பணமாகத் தண்டும் வரிவகை (I. M.P. Cg 1070.); certain taxes collected in cash.

*[அந்தர் + ஆயம் + பாட்டம்.]*

*[Skt. antara> த.அந்தர்.]*

ஆய் > ஆயம்; பாடு > பாட்டம்.

**அந்தராயம்** *andarāyam,* பெ.(n.) 1. இடையூறு (சூடா.); obstacle, impediment. 2. (Jaina.) எண் குற்றங்களுள் இடையூ றியற்றுவது; obstructive karma, one of *en-kurram,* q.v. 3. உள்வரும்படி; (S.I.I.iii, 121) internal revenue as of a temple.

*[அந்தர் + ஆயம்.]*

*[Skt. antara> த. அந்தர்.]*

**அந்தராயாமதனுத்தம்பவாதம்** *andarā-yāma-tanuttamba-vādam,* பெ.(n.) உடம்பினுள்ள வளி (வாயு) கடுமை (பிரகோப) மடைந்து, விரல்கள், புறங்கால்கள், வயிறு, மார்பு, இதயம், தொண்டை ஆகிய இவற்றை உடம்பிலுள்ள என்புக்கட்டுகள் உள்ளுக் கிழுக்க உடம்பு சுருங்கி முன்னம் குனிந்து உள்ளாக வளைந்து குறுகுவதனாலேற்படும் ஓர் ஊதைநோய்; a disease due to the accumulation of the extremely enraged *'vāyu'* (nerve force) in the regions of the fingers, insteps, abdomen, chest, heart

and throat and forcibly draws in the local ligaments, when the body becomes contracted and bends forward bringing about a curvature of the inner trunk (சா.அக.).

**அந்தராளம்** *andarāḷam,* பெ.(n.) 1. இடைப்பட்ட யிடம்; intermediate space. 2. திசைநாற் கோணம் (பிங்.); intermediate points of the compass. 3. **அந்தராளமண்டபம்** பார்க்க; see *andarāḷa-manḍabam.*

த.வ. இடைமண்டபம்.

*[Skt. antarāla > த. அந்தராளம்.]*

**அந்தராளமண்டபம்** *andarāḷa-manḍabam,* பெ.(n.) கருவறையை அடுத்த மண்டபம் (I.M.P.Tn. 270.); ante-chamber to the inner sanctuary of a South Indian temple.

த.வ. கருவறை மண்டபம், முகமண்டபம்.

*[அந்தராள(ம்) + மண்டபம்.]*

*[Skt. antarāla> த. அந்தராள(ம்).]*

**அந்தராளன்** *andarāḷaṉ,* பெ.(n.) உயர்குல தந்தைக்கும் இழிகுலத் தாய்க்கும் பிறந்தபிள்ளை (திவா.); son of an uppercaste (*anulōma*) father and lower caste mother.

*[Skt. antarāla > த. அந்தராளன்.]*

**அந்தரான்மா** *andarāṉmā,* பெ.(n.) 1. கடவுள் (விவேக. சூடா. 152.); god, as immanent. 2. நான்கு வாக்குக்களோடும் கூடி வலம்வரும் உயிர் (சி. போ. பா. 6, 2, பக். 317.); (*Śaivam.*) soul when it is associated with the four *vākku.*

*[அந்தர் + ஆன்மா.]*

*[Skt. antar > த. அந்தர்.]*

**அந்தரி[1]-த்தல்** *antari-,* 4 செ.கு.வி.(v.i.) 1. தனித்திருத்தல் (வின்.); to be forlorn, solitary, lonely. 2. உதவியற்றிருத்தல் (வின்.); to be friendless, helpless. 3. மாறுதல்; to differ, to be inconsistent. *"விதி யந்தரிக்க வொழுதி" (திருநூற். 62.).* 4. கழித்தலா லுண்டாகும் வேறுபாடு அறிதல் (வின்.); to find the difference between two quantities.

*[Skt. antara> த. அந்தரி-.]*

**அந்தரி[2]** *andari,* பெ.(n.) 1. மலைமகள் (பிங்.); Parvati. 2. கூளித்தலைவியாகிய கரிய பாலை நிலத் தெய்வம், காளி (பிங்.); *Durgā.*

*[Skt. antara > த. அந்தரி.]*

**அந்தரிட்சம்** *andariṭcam,* பெ.(n.) 1. வானம்; atmosphere. 2. நற்பேறு; heaven. *"அந்தரிட்சஞ் செல . . . கனல் புகுங் கபிலக்கல்லது" (செந். பத். 4, 232.)*

*[Skt. antari-kṣa > த. அந்தரிட்சம்.]*

**அந்தரிந்திரியம்** *andar-indiriyam,* பெ.(n.) உட்கருவி (அந்தக்கரணம்) (பிரபோத. 39, 30.); inner seat of thought, feeling and volition.

*[Skt. antar + indriya > த. அந்தரிந்திரியம்.]*

**அந்தரிப்பு** *andarippu,* பெ.(n.) வழி (கதி)யின்மை (வின்.); helplessness.

*[Skt. antar > த. அந்தர் > அந்தரிப்பு.]*

**அந்தரியாகப்பூசை** *andar-iyāga-pūšai,* பெ.(n.) மானசபூசை; (*Śaivam.*) mental worship. *"அறைந்தவை மூர்த்திசேர்க்கி லந்தரி யாக பூசை" (ஞானபூசா. 14.).*

த.வ. மனப்பூசனை.

*[அந்தரியாகம் + பூசை.]*

*[Skt. antar+ yāga> த.அந்தரியாகம்.]*

**அந்தரியாகம்** *andariyāgam,* பெ.(n.) மனவழிபாடு (சி. சி. 9, 10.); mental worship, opp. to *pagiryāgam.*

*[Skt. antar + yāga > த. அந்தரியாகம்.]*

**அந்தரியாமி** *andariyāmi,* பெ.(n.) கடவுள் (வேதா. சூ. 41.); god, as being immanent in the universe and governing it.

*[Skt. antar + yāmin > த. அந்தரியாமி.]*

**அந்தரிலம்பம்** *andar-ilambam,* பெ.(n.) கூர்க்கோணங்கள் கொண்ட முக்கோணம் (வின்.); acute-angled triangle.

*[Skt. antas + lamba > த. அந்தரிலம்பம்.]*

**அந்தரிலயம்** *andar-ilayam,* பெ.(n.) உயிர்ப்படக்கம் (துரியா தீதம்) (சிந்தா. நி. 165.); (phil) the transcendent fifth state of the soul.

*[Skt. antas + laya > த. அந்தரிலயம்.]*

**அந்தரீபம்** *antarībam,* பெ.(n.) தீவம் (சிந்தா. நி. 162.); Island.

*[Skt. antarīpa > த. அந்தரீபம்.]*

**அந்தரீயம்** *andarīyam,* பெ.(n.) அரையிற் கட்டும் வேட்டி (*Brāh.*); waist cloth, dist. fr. *uttarīyam.*

*[Skt. antarīya > த. அந்தரீயம்.]*

**அந்தருவேதி** *andaruvēdi,* பெ.(n.) வேள்விச் சாலையினுள்ளிடம் (காஞ்சிப்பு. அந்தரு. 22.); inside of the sacrificial ground.

*[Skt. antar + vēdi > த. அந்தருவேதி.]*

**அந்தரேணம்** *andarēṇam,* பெ.(n.) நடுவிடம் ; இடைப்பட்டயிடம் (சிந்தா. நி. 164.); intermediate space.

*[Skt. antarēṇa > த. அந்தரேணம்.]*

**அந்தவருணி** *anda-varuṇi,* பெ.(n.) சிறு நெருஞ்சில்; a thorny shrubtribalus terrestris (சா.அக.).

**அந்தன்¹** *andaṉ,* பெ.(n.) 1. கூற்றுவன் (தேவா. 978,5); Yama. 2. காரி (சனி) (திவா.); saturn.

*[Skt. anta > த. அந்தன்.]*

**அந்தன்²** *antaṉ,* பெ.(n.) 1. குருடன்; blind man. *"அந்தர் கரமுற்ற தடியன்றி யறிவார்" (திருவாத. பு. புத்தரை. 79.).* 2. அறிவிலான்; fool, ignorant man. *"கூடற்பெருமான் செந்தாள் விடுத்துறை யந்தர்கள்" (கல்லா. 7.).*

*[Skt. andha > த. அந்தன்.]*

**அந்தாச்** *andāc,* பெ.(n.) மதிப்பு (W.G.); estimate.

**த.வ. மதிப்பீடு.**

*[U. andāz > த. அந்தாச்.]*

**அந்தாச்கட்டு-தல்** *andāc-kaṭṭu-,* செ. குன்றாவி. (v.t.) மதிப்பிடுதல் (C.G.); to estimate.

*[அந்தாச் + கட்டு-.]*

*[U. andāz> த. அந்தாச்.]*

**அந்தாச்பட்டி** *andāc-paṭṭi,* பெ.(n.) அறுவடைக்குமுன் கணக்கிடப்பெறும் பயிரின் விலைமதிப்பு (R.T.); estimate of the value of a standing crop.

**த.வ. மதிப்பீட்டுப்பட்டி, கண்டுமுதல்பட்டி.**

*[U. andāz> த. அந்தாச்.]*

**அந்தாசி** *andaši,* பெ.(n.) 1. நஞ்சற்ற பாம்பு; a non-poisonous snake. 2. ஒருவகை மீன்; a kind of fish.

**அந்தாதி¹** *andādi,* பெ.(n.) 1. அந்தாதித்தொடை (காரிகை. உறுப். 17) பார்க்க; see *andādi-t-tōḍai.* 2. ஒரு சிற்றிலக்கியம்; poem in which the last letter, syllable or foot of the last line of one stanza is identical with the first letter, syllable or foot of the succeeding stanza, the sequence being kept on between the last and the first stanza of the poem as well. *"அந்தாதிமேலிட் டறிவித்தேன்" (திவ். இயற். நான். 1.).*

**த.வ. ஈறுதொடங்கி, கடைமுதல்பா.**

*[அந்தம் + ஆதி.]*

*[Skt. anta + ādi > த. அந்தாதி.]*

**அந்தாதி²-த்தல்** *andādi,* 4. செ. கு. வி. (v.i.) முடிவிலும் முதற்கண்ணும் வருதல்; to follow the rules of *andādi.* *"அடிமடக்கா யந்தாதித்து" (மாறனலங். 267, உரை.).*

*[அந்தம் + ஆதி.]*

*[Skt. anta > த. அந்தம்.]*

**அந்தாதி³** *andādi,* பெ.(n.) 1. முதலும் முடிவும்; beginning and end. 2. தலைமுதல் அடிவரையுள்ள உறுப்பு; the limps from head to foot. *"உருக்கோதை மேனிக்கந்தாதியைத் தீட்டில் (குலோத். கோ. 131.).*

*[அந்தம் + ஆதி.]*

*[Skt. anta > த. அந்தம்.]*

**அந்தாதித்தொடை** *andādi-t-todai,* பெ.(n.) அடிதோறும் இறுதிக்கணின்ற சீரும் அசையும் எழுத்தும் மற்றையடிக்கு முதலாவதாக வரத் தொடுப்பது (இலக். வி. 725.); (pros.) concatenation in which the foot, syllable or letter at the end of a line of verse begins the next line.

*[அந்தம் + ஆதி + தொடை.]*

*[Skt. anta > த. அந்தம்.]*

**அந்தாதியாக** *andādi-y-āga,* வி.எ.(adv.) இடைவிடாமல்; without intermission. *"அநாதிகாலம் அந்தாதியாக ஸம்ஸரித்துப் போந்த வடியேனுக்கு" (ரஹஸ்ய. 1329.).*

*[அந்தம் + ஆதி + ஆக.]*

*[Skt. anta > த. அந்தம்.]*

**அந்தாதியுவமை** *andādi-y-uvamai,* பெ.(n.) இறுதிச் சொல்லையே மடக்கி ஆதியாகக் கொண்டு, உவமை பெறக் கூறும் அணி (மாறனலங். 10, உரை.); (rhet.) a figure of speech in which the last word of a line is repeated at the beginning of the next line and made the *uvamāṉam.*

*[அந்தம் + ஆதி + உவமை.]*

*[Skt. anta > த. அந்தம்.]*

*உ > உவ் > உவ > உவமை.*

**அந்தாரப்பனை** *andāra-p-paṉai,* பெ.(n.) தொட்டிப் பனை; a species of palmyra (சா.அக.).

**அந்தாலசி** *andālaśi,* பெ.(n.) முகம் விடாக் கட்டி; a boil or abscess which does not has point; a blind boil or abscess (சா.அக.).

**அந்திகா** *andigā,* பெ.(n.) **அந்திகை** பார்க்க; see *andigai.*

*[Skt. andhaka > த. அந்திகா.]*

**அந்திகாசிரயம்** *andigāśirayam,* பெ.(n.) நிலத்திணை (சிந்தா. நி. 162.); plants and other immoveable objects.

*[Skt. antika + ā-śraya > த. அந்திகாசிரயம்.]*

**அந்திகிருதன்** *andi-kirudaṉ,* பெ.(n.) குருடனாக்கப் பட்டவன்; one who is rendered blind (சா.அக.).

*[Skt. andha + krta > த. அந்திகிருதன்.]*

**அந்திகை** *andigai,* பெ.(n.) 1. கண்ணோய்; a disease of the eye. 2. குருடு; blindness (சா.அக.).

*[Skt. andhaka > த.அந்திகை.]*

**அந்திபந்தி** *andi-pandi,* பெ.(n.) கும்பகம்; suppression of breath (சா.அக.).

**அந்திபூதம்** *andi-būdam,* பெ.(n.) குருடாதல்; becoming blind (சா.அக.).

**அந்திபூதன்** *andi-būdaṉ,* பெ.(n.) குருடனானவன்; one who has become blind (சா.அக.).

**அந்திமக்கிரியை** *andimakkiriyai,* பெ.(n.) இறந்தவர்க்குச் செய்யும் இறுதிச் சடங்கு; funeral rites.

*[Skt. antima + kriya > த. அந்திமக்கிரியை.]*

**அந்திமக்காலம்** *andima-k-kālam,* பெ.(n.) இறப்புவேளை (ஸ்ரீவசன. 1, 69.); last moments, close of life.

*[அந்திமம் + காலம்.]*

*[Skt. antima > த. அந்திமம்.]*

**அந்திமதசை** *andima-taśai,* பெ.(n.) **அந்திமக்காலம்** பார்க்க; see *andima-kālam.*

**அந்திமம்** *andimam,* பெ.(n.) (ஒருவருடைய வாணாளின்) இறுதிக்காலம்; (of one's life span) end, last phase.

*[Skt. antima > த. அந்திமம்.]*

**அந்தியக்கிரியை** *andiya-k-kiriyai,* பெ.(n.) இறந்தவர்க்குச் செய்யும் சடங்கு; funeral rites.

*[Skt. antya + kriya > த. அந்தியக்கிரியை.]*

**அந்தியகமனம்** *andiya-kamaṉam,* பெ.(n.) இறப்பு; dying, going to the end of life (சா.அக.).

**அந்தியகாபிம்** *andiya-kābim,* பெ.(n.) 1. முடிவு காலம்; the last period of life. 2. சாகுங்காலம்; the last moments preceeding death (சா.அக.).

**அந்தியசன்** *andiyašaṉ,* பெ.(n.) புலையன்; man of the lowest caste. *"அந்தியசர் வண்ணார் முதலோர் மனை" (சைவச. பொது. 243.).*

*[Skt. antya-ja > த. அந்தியசன்.]*

**அந்தியத்துககரம்** *andiyattuga-šuram,* பெ.(n.) சாகுங் காலத்துக் காணுமொரு கொடுங் காய்ச்சல்; a severe type of fever that precedes death (சா.அக.).

**அந்தியதீபம்** *andiya-dībam,* பெ.(n.) கடைநிலைவிளக்கு என்னும் அணி; (rhet.) the figure of speech known as *kaḍainilai-viḷakku.*

*[அந்திய + தீபம்.]*

*[Skt. antya> த. அந்தியம்.]*

*த. தீவம் >Skt. dīpa> த. தீபம்.*

**அந்தியபரணி** *andiya-paraṇi,* பெ.(n.) ஒரு ஆயுள்வேத மூலிகை; a plant of the terminalia genus used in ayurveda (சா.அக.).

**அந்தியம்[1]** *andiyam,* பெ.(n.) 1. இறப்பு; death. 2. இறக்குங் காலம்; the last period preceding death, the moment of death. 3. ஒரு பூடு; a plant cyperus (genus) *Hexastachyus communis* (சா.அக.).

*[Skt. antya > த. அந்தியம்.]*

**அந்தியம்[2]** *andiyam,* பெ.(n.) ஒரு பேரெண் (பிங்); the number 1000 billions.

*[Skt. antya > த. அந்தியம்.]*

**அந்தியமட்டும்** *andiyamaṭṭum,* பெ.(n.) சாகும் வரை; till the time of death (சா.அக.).

*[அந்திய + மட்டும்.]*

*[Skt. antya > த. அந்தியம்.]*

**அந்தியவோடாலிகாகிரகம்** *andiya-vōḍāligā-giragam,* பெ.(n.) எட்டாம் நாளில் எட்டாம் மாதத்தில் அல்லது எட்டாம் ஆண்டில் தாயை அல்லது குழந்தையைத் தாக்குமொரு வகை கோளின் விளைவால் வரும் குற்றம்; a morbific diathesis in a child or the mother in the 8th year or the 8th month or the 8th day after delivery, is due to the influence of an evil planet called ' aryaka' (சா.அக.).

**அந்தியேட்டி** *antiyēṭṭi,* பெ.(n.) நீத்தார் நிகழ்வுகள்; lit. after-ceremonies applied to funeral rities obsequies.

*[Skt. antya + iṣṭi > த. அந்தியேட்டி.]*

**அந்தியேட்டிக்குருக்கள்** *andiyēṭṭi-k-kurukkaḷ,* பெ.(n.) நீத்தார் நிகழ்வு (கருமாதி) செய்விக்குங் குருக்கள்; priests who help in funeral rites.

*[அந்தியேட்டி + குருக்கள்.]*
*[Skt. antya + iṣṭi > த. அந்தியேட்டி.]*
*குரு>குருக்கள்.* **அந்தரட்டிக்குருக்கள்** பார்க்க.

**அந்திரக்கண்மணி** *andira-k-kaṇmaṇi,* பெ.(n.) நீலமணி (மூ.அ.); sapphire.

*[அந்திர + கண்மணி.]*

*[Skt. antara> த. அந்திர.]*

**அந்திரக்கொடிச்சி** *antira-k-koḍicci,* பெ.(n.) கந்தகம் (மூ.அ.); sulphur.

**அந்திரகாசம்** *andira-kāšam,* பெ.(n.) வானத்தில் நிலவு உதிக்கும் போது, கண் புகைச்சல் நீங்கியும், மற்றக் காலத்தில் கண் சிவந்து பார்ப்பதற்கு அச்சமாயும், நாட்பட்டால் காரிருளையுங் கொடுக்கும் ஒரு வகைக் கண்ணோய்; a disease of the eye in which the vision is clear before moonlight but dart at other times, is a condition in which the patient sees better in an obscure light than in bright sun-light, *Hemeralopia* (சா.அக.).

*[அந்திர + காசம்.]*

***[Skt.** antra > த. அந்திரம்>அந்திர.]*

*கால் > கார் > காய் > காசம்.*

**அந்திரகிராணி** *andira-kirāṇi,* பெ.(n.) குடற் கோளாறினால் ஏற்படும் நாட்படு செரியாமை (கிராணி)க் கழிச்சல்; a chronic diarrhoea due to intestinal disorders (சா.அக.).

***[Skt.** antra + grahaṇi > த. அந்திரகிராணி.]*

**அந்திரசுரம்** *andira-šuram,* பெ.(n.) குடலில் வீக்கம் கண்டு அதனிமித்த முண்டாகுமொரு வகைக் கடுங்காய்ச்சல்; a severe type of fever characterised by morbid changes of peculiar intestinal lesions, *Typyoid* or *Enteric fever* (சா.அக.).

*[அந்திர + சுரம்.]*

***[Skt.** antra > த. அந்திரம்.]*

*சுல் > சுர் > சுரம்.*

**அந்திரட்டி** *andiraṭṭi,* பெ.(n.) சாக்காடெய்தினா ரொருவர்தம் முப்பத்தொன்றாம் நாள் செய்யப்படும் சடங்கு; funeral rite performed on the thirty first day.

***[Skt.**antya+ iṣṭi>த.அந்திரட்டி.]*

**அந்திரட்டை** *antiraṭṭai,* பெ.(n.) corr. of அந்தியேஷ்டி (இ.வ.).

***[Skt.** antya + iṣṭi > த. அந்திரட்டை.]*

**அந்திரதாபிதம்** *andira-tābidam,* பெ.(n.) குடலின் அழற்சி; inflammation of the intestines, *Enteritis* (சா.அக.).

***[Skt.** antra + sthapita> த.அந்திரதாபிதம்.]*

**அந்திரபுரீதரம்** *andira-purīdaram,* பெ.(n.) சிறு குடலுக்கும், பெருங்குடலுக்கும் காணுமொரு அழற்சி; inflammation of the small intestines and of the colon, *Entero-colitis* (சா.அக.).

**அந்திரம்** *andiram,* பெ.(n.) 1. குடல்; intestines; bowels. 2. இரைப்பை யொழிந்த மற்றக் குடல் முதலானவை; the bowels and the other abdominal viscera excepting the stomach. 3. சிறு குடல்; small intestines (சா.அக.).

***[Skt.** antra > த. அந்திரம்.]*

**அந்திரமயம்** *andira-mayam,* பெ.(n.) குடலை உள்ளடக்கியது; consisting of entrails (சா.அக.).

***[Skt.** antra + maya > த. அந்திரமயம்.]*

**அந்திரமுட்டிவாயு** *andira-muṭṭi-vāyu,* பெ.(n.) குடல் முட்டி வளி; an intestinal complaint due to the deranged condition of `*vāyu*' in the system (சா.அக.).

*[அந்திர(ம்)+முட்டி+வாயு.]*

***[Skt.** antra> த.அந்திர. **Skt.** vāyu> த.வாயு.]*

**அந்திரருகம்** *andira-rugam,* பெ.(n.) குடல் இறக்கம் (வாதம்); a hernia containing a loop of the intestine, *Enterocele* (சா.அக.).

**அந்திரலோகிதம்** *andira-lōgidam,* பெ.(n.) சிறுபொடுதலை; a small creeper of the species of பொடுதலை, *Verbena nodiflora* (சா.அக.).



**அந்திரவசனம்** *andira-vašaṉam,* பெ.(n.) பச்சையான கொட்டைப்பாக்கு (மூ.அ.); raw areca-nut.

**அந்திரவர்த்தமன்** *andira-varttamaṉ,* பெ.(n.) குடல் வளர்ச்சி (விருத்தி); hernia commonly known as rupture (சா.அக.).

[**Skt**. *antra + vardhanā > த. அந்திர வர்த்தமன்.*]

**அந்திரவாதம்** *andira-vādam,* பெ.(n.) 1. பெருங்குடலில் பற்பல வளி (வாயுக்கள்) சேர்ந்து வயிறு பருத்து வலியுண்டாகி, உப்பல், சிறுநீர், கழிமாசு (மல மூத்திர)க் கட்டு, கக்கல் (வாந்தி), நெஞ்சுவலி முதலிய குணங்களை யுண்டாக்கும் நோய்; a disease of the colon marked by heaviness of bowels, pain, distension of the abdomen, retention of faces and urine, vomiting, chest pain etc., is due to the accumulation of gases in the intestines. 2. குடல் நரம்பிற் காணும் வலி; neuralgia of the intestine, *Enteralgin* (சா.அக.).

[**Skt**. *antra + vāta > த. அந்திரவாதம்.*]

**அந்திரவாயு** *andira-vāyu,* பெ.(n.) குடல் வளி (வாயு); the flatulent nature of the intestines, flatulency (சா.அக.).

[**Skt**. *antra + vāyu > த. அந்திரவாயு.*]

**அந்திரவாயுசூலை** *andira-vāyušūlai,* பெ.(n.) குடலில் வளி (வாயி) சேருவதனால் ஏற்படும் குத்தல் நோய்; an acute abdominal pain due to the accumulation of gas, intestinal colic (சா.அக.).

[*அந்திரவாயு + சூலை.*]

[**Skt**. *antra + vāyu> த. அந்திரவாயு.*]

*சுல் > சூல் > சூலை.*

**அந்திரவிரணம்** *andira-viranam,* பெ.(n.) 1. சிறுகுடலிற் காணுமோர் புண் (விரண) நோய்; an inflammation of the duodenum, *Duodenitis.* 2. சிறுகுடற் புண்; ulcer of the duodenum, peptic ulcer. 3. குடற்புண்; ulceration of the intestines, *Entereicosis* (சா.அக.).

[**Skt**. *antra + vraṇa > த. அந்திரவிரணம்.*]

**அந்திரவிருத்தி**[1] *andira-virutti,* பெ.(n.) 1. குடல் கவுட்டியின் வழியால் பிடுக்கிற்குள் இறங்காமலே ஆண்குறித் தண்டிற்கு மேற் பாகமாகக் காணும் வீக்கம் அல்லது புடைப்பு; protrusion of the bowels with an appearance of swelling just above the penis, without descending through the groin into the scrotum; hernia which has not passed quite through the orifice, *Incomplete hernia.* 2. ஊதையினால் சிறுகுடல் வலுக்குறைந்து கவுட்டியின் வழியாய்க் கீழிறங்கிக் காற்றுப்பை போற் பருத்துக் காணும் நோய்; a disease in which a portion of the small intestines which is pressed down through the groin (inguinal canal) decends into the scrotum and becomes swollen like an inflated air bladder, *Inguinal hernia* (direct) (சா.அக.).

த.வ. அடிக்குடும்பி.

[**Skt**. *antra + vṛddhi > த. அந்திவிருத்தி.*]

**அந்திரவிருத்தி**[2] *andira-virutti,* பெ.(n.) **அந்திரவர்த்தமன்** பார்க்க; see *andira-varttaman* (சா.அக.).

[**Skt**. *antra + vṛddhi > த. அந்திரவிருத்தி.*]

**அந்திரன்** *andiran,* பெ.(n.) தேவன்; god. *"அந்திரனை யாரூரி லம்மான் யன்னை" (தேவா. 723, 4.).*

[**Skt**. *antara > த. அந்திரன்.*]

**அந்திரி** *andiri,* பெ.(n.) 1. மலைமகள்; *Pārvadi.* 2. கொற்றவை; *Kāḷi.*

[**Skt**. *antarī > த. அந்திரி.*]

**அந்திரவிருட்சம்** *andira-viruṭcam,* பெ.(n.) தில்லை மரம்; a tree, *mountain slender tiger's milk, Excoecaria crenulata* (சா.அக.).

[**Skt**. *antra+vṛkṣa > த. அந்திவிருட்சம்.*]

**அந்திவீருகம்** *andi-virugam,* பெ.(n.) சிறு முள்ளங்கி; wall radish, *Bluemea aurita* (சா.அக.).

**அந்து** *andu,* பெ.(n.) கணுக்கால் வளை (பாத கிண்கிணி) (நாநார்த்து.); anklet.

[**Skt**. *andu > த. அந்து.*]

**அந்துகம்** *andugam,* பெ.(n.) யானைத் தொடரி (R); chain for an elephant's leg.

*[**Skt.** anduka > த. அந்துகம்.]*

**அந்துதிம்** *andudim,* பெ.(n.) வாகை மரம்; a tree, *Acacia sirissa* (சா.அக.).

**அந்துப்போதிகை** *andu-p-pōdigai,* பெ.(n.) யானையின் பின்காற் தொடரி (சங்கிலி) கட்டுங் குறுந்தறி; stake for fastening the hind leg chain of an elephant. *"அடுகளி றந்துப் போதிகை பரிந்து" (சீவக. 1831.).*

*[அந்து + போதிகை.]*

*[**Skt.** andu> த.அந்து.]*

**அந்துவாசம்** *anduvāšam,* பெ.(n.) கொட்டைப் பாசி (வை.மூ); a kind of moss.

**அந்தூல்பல்லக்கு** *andūl-pallakku,* பெ.(n.) பல்லக்கு வகை (தக்ஷிண. இந். சரித். 444); a kind of palanquin.

*[அந்தூல் + பல்லக்கு.]*

*[**Skt.** āndōla > த. அந்தூல்.]*

*பல் > பல்லக்கு.*

**அந்தேசம்** *andēšam,* பெ.(n.) வழி (கதி)யின்மை (யாழ்ப்.); extremity, great straits.

**அந்தேசாதிகம்** *andē-šādigam,* பெ.(n.) தேற்றா (விதை) மரம்; water clearing nut tree, *Strychnos potatorium* (சா.அக.).

**அந்தேசாதிம்** *andē-šādim,* பெ.(n.) **அந்தே சாதிகம்** பார்க்க; see *andē-šādigam* (சா.அக.).

**அந்தேசாலம்** *andēšālam,* பெ.(n.) தேற்றா மரம் (பச். மூ.); clearing nut tree.

**அந்தேசோலிகம்** *andē-šōligam,* பெ.(n.) சிறு எழுத்தாணிப் பூடு; a plant with flowers like a style or style plant, *Prenanthes sarmentosa* (சா.அக.).

**அந்தோட்டம்** *andōṭṭam,* பெ.(n.) 1. இதழி லுண்டாகும் புண்; a sore on the lip due to the disease, as in thrush, *Labiomycosis.* 2. இதழ் வெடிப்பு; a crack or fissure in the lip (சா.அக.).

**அந்நகத்தி** *annagatti,* பெ.(n.) வயிற்றுளைவு; a flux in which the stools consist chiefly of blood and mucus, accompanied with griping of the bowels, *Dysentery* (சா.அக.).

**அந்நகோடகன்** *anna-kōḍagan,* பெ.(n.) கதிரவன்; the sun. (சா. அக.).

**அந்நபேதி** *anna-bēdi,* பெ.(n.) **அன்னபேதி** பார்க்க; see *anna-bēdi.*

*[**Skt.** anna + bhēdin> த. அந்நபேதி.]*

**அந்நசலம்** *anna-šalam,* பெ.(n.) **அன்னசலம்** பார்க்க; see *anna-salam.*

*[அந்ந(ம்) + சலம்.]*

*[**Skt.** anna> த. அந்ந(ம்).]*

**அந்நியபுட்டம்** *anniya-puṭṭam,* பெ.(n.) குயில்; a well known bird with a melodius voice, Indian cuckoo (சா.அக.).



**அந்நியம்** *anniyam,* பெ.(n.) 1. தனதல்லாதது, தனக்குரிமை இல்லாதது; that which is not one's own, that which is alien. *'அந்நிய நாடு'.* 2. ஒருவருக்குத் தொடர்பு இல்லாதது; that which has no relation. *'பெண் சொந்தமா, அந்நியமா?'.*

*[**Skt.** a-nyā > த. அந்நியம்.]*

**அந்நியம்** *anniyam,* பெ.(n.) **அந்நியபுட்டம்** பார்க்க; see *anniya-puttam* (சா.அக.).

**அந்நியமாதல்** *anniyamādal,* பெ.(n.) தொடர்பில்லா நிலை; alienation.

**த.வ. அயலாதன்.**

*[அந்நியம் + ஆதல்.]*

*[Skt. a-nya > த. அந்நியம். ஆ>ஆதல்.]*

**அந்நியன்** *anniyan,* பெ.(n.) 1. அறிமுகம் இல்லாதவன், வேற்றாள்; a stranger. *'அந்நியர்கள் முன்பாகவும் இந்த மாதிரி பேசுகிறாரே'.* 2. இனத்தாலோ, மதத்தாலோ, நாட்டாலோ வேறுபட்டவன்; one who is an alien, foreinger. *'கோயில் கருவறையின் உள்ளே அந்நியர் நுழைய அனுமதி இல்லை'.*

**த.வ. அயலான்.**

*[Skt. anya > த. அந்நியன்.]*

**அந்நியாயகாரி** *anniyāyakāri,* பெ.(n.) தீங்கிழைப்போன்; treacherous person, as sinner. *"அந்நியாய காரிகளாய்ப் போந்த இவர்கள்" (s.i.i.iv, 140.).*

*[Skt. a-nyāya-kārin > த. அந்நியாயகாரி.]*

**அந்நியேத்துகவாதம்** *anniyēttuga-vādam,* பெ.(n.) உணவின் குற்றத்தினாற் பிறந்து, தோள், முதுகு, கழுத்து, தலை, விலா ஆகிய இவ்விடங்களில் பரவிப் பித்தத்துடன் கூடி, ஒரு நாள் விட்டு மறுநாளில் துன்பத்தை உண்டாக்கிக் காய்ச்சல், வேட்கை முதலிய குணங்களையுமுண்டாக்கும் ஓர் ஊதை நோய்; a disease of the nervous system marked by perplexity, fever, swoon, thirst etc., is occurs every alternate day and is due to the deranged condition of *`vāyu'* which extends through the neck, the head or the ribs, arises from incompatible articles of diet (சா.அக.).

**அந்நீர்** *annīr,* பெ.(n.) 1. நாரி சுக்கிலம்; a fluid discharge from the vagina. 2. தேங்கிய நீர்; stagnant water or water spoiled from long keeping (சா.அக.).

**அநக்கினி** *anakkini,* பெ.(n.) வயிற்றுத்தீயின் செய்கையற்றவன்; one who is deprived in his system of the action of gastric fire, said to be the cause of hunger (சா.அக.).

**அநகம்** *anagam,* பெ.(n.) புல்லுருவி; a parasitic plant, *Loranthus* (genus) (சா.அக.).

**அநங்கம்** *anangam,* பெ.(n.) 1. மல்லிகை; jasmine, *Jasminum sambue.* 2. இருவாட்சி; a running flower plant, *Jasminum sambue.* 3. உடலின்மை; having no corporeal body. 4. உடலற்ற தன்மை; the quality or state of being incorporeal, *Incorporeality* (சா.அக.).

**அநங்கலி** *anangali,* பெ.(n.) எலும்புருக்கி நோய்க்கு மருந்தாகப் பயன்படும் சிறுதேட் கொடுக்கி; small leaved, *Tiaridium Indicum,* a cure for all affections of bones as necrosis etc. இதனால் தீராத எலும்புருக்கி நோயும், போகும் (சா.அக.).

**அநங்கன்** *anangan,* பெ.(n.) காமன்; the Indian Cupid (சா.அக.).

**த.வ. உருவிலி.**

**அநதிரோகம்** *anadi-rōgam,* பெ.(n.) நோயில்லாமை; not much affected by disease (சா.அக.).

*[Skt. a-nadi + rōga > த. அநதிரோகம்.]*

**அநந்தஞானி** *ananda-ñāni,* பெ.(n.) கதிரவன்; the sun (சா.அக.).

**அநந்தம்** *anandam,* பெ.(n.) 1. பிறவி நஞ்சு; one of the 32 kinds of native arsenic. 2. பொன்; gold. 3. வானம்; sky; either pervading all space. 4. கொடிப் பசலை; nail dye, *Barleria prionitis.* 5. நன்னாரி; Indian sarasaparilla, *Hemidesmus indicus* (சா.அக.).

**அநந்தவாதம்** *ananda-vādam,* பெ.(n.) முகமும், கழுத்தும் சோரும்படிச் செய்யும் நோய்; a form of paralysis affecting the muscles of the face, mouth and pharynx, *Bulbar paralysis* (சா.அக.).

**அநந்தன்** *anandan*, பெ.(n.) 1. வெடியுப்பு; nitre-potassium nitrate ($kNO_3$). 2. பிறவிநஞ்சு; a kind of native arsenic (சா.அக.).

**அநந்தை** *anandai*, பெ.(n.) 1. அறுகு; sacred grass; harialli grass, *Agrostis linearis*. 2. கொத்தான் கொடி; leafless creeper, *Cassytha filiformis*. 3. நெல்லிமரம்; small leaved goose-berry, *Phyllanthus emblica* (சா.அக.).

**அநநுபாடணம்** *ananupāḍaṇam*, பெ.(n.) தோல்வித்தானத் தொன்று (செந். iii, 13.); a fault in argumentation.

*[Skt. an-anubhāṣaṇa> த. அநநு பாடாணம்.]*

**அநபத்தியம்** *anapattiyam*, பெ.(n.) கால்வழி மரபின்மை; incapacity to produce children or progeny-sterility (சா.அக.).

*[Skt. a-na > த. அந.]*

*பற்று > பத்தி > பத்தியம்.*

**அநம்** *anam*, பெ.(n.) சோறு; boiled rice (சா.அக.).

*[Skt. a.na > த. அநம்.]*

**அநம்பு** *anambu*, பெ.(n.) 1. சாதகப்புள்; lark. 2. நீரில்லாதது; that which is destitute of water or is waterless. 3. ஈரமில்லாதது; that which is deprived of moisture (சா.அக.).

*[Skt. a-na>த. அநம்பு.]*

**அநயம்** *anayam*, பெ.(n.) 1. தீவினை; evil karma. 2. இடர்; danger. 3. தீது; anything inauspicious. 4. சூது முதலியன; gambling.

*[Skt. a-naya > த. அநயம்.]*

**அநரவன்** *anaravan*, பெ.(n.) 1. வெந்தோன்றி; plough root, *Gloriosa superba*. 2. நஞ்சு; poison. 3. செய்ந்நஞ்சு; a kind of prepared arsenic (சா.அக.).

**அநல்** *anal*, பெ.(n.) 1. கொடிவேலி; a plant, Ceylon lead, wort, *Plumbago zeylanica*. 2. பித்தம்; bile. 3. வயிற்றுத்தீனி; warmth of the stomach, gastric fire. 4. வன்னியிலை; the leaves of the vanni tree; Arjunas penance tree, *Prosopis spicigera* (சா.அக.).

**அநல்வென்றி** *anal-venri*, பெ.(n.) தங்கம்; refined gold (சா.அக.).

**அநலபித்தம்** *anala-pittam*, பெ.(n.) உண்ட உணவைச் செரிக்கச் செய்யும் பித்த நீர்; a fluid secreted in the stomach forming the principle agent in digestion, gastric juice (சா.அக.).

**த.வ. இரைப்பை நீர், சேமிப்பு நீர்.**

*[அநல + பித்தம்.]*

*[Skt. ana> த. அநல.]*

**அநலாடுவேந்தன்** *analāḍu-vēndan*, பெ.(n.) கார்முகில் நஞ்சு; a kind of prepared dark arsenic (சா.அக.).

**அநா** *anā*, பெ.(n.) மூச்சு; breath, respiration (சா.அக.).

**த.வ. உயிர்வளி.**

**அநாகதசுரம்** *anāgada-šuram*, பெ.(n.) நெஞ்சகத்திலிருந்தெழும் காய்ச்சல்; a fever arising from disorders or diseases in the region of the heart (சா.அக.).

*[அநாகத + சுரம்.]*

*[Skt. a-nā + gata> த. அநாகதம்.]*

**அநாகதம்** *anāgadam*, பெ.(n.) 1. சொல்லப்படாதது; that which cannot be revealed or divulged. 2. அறியப்படாதது; that which cannot be ordinarily recognised. 3.வருங்காலம்;the future. 4. ஆறாதாரங்களி லொன்று; (in psychology) one of the six supports or mainstay of life (சா.அக.).

*[Skt. a-nā + gata > அநாகதம்.]*

**அநாகாரம்** *anākāram*, பெ.(n.) உணவின்மை; being deprived of food (சா.அக.).

*[Skt. a-nā + ā-hāra> த. அநாகாரம்.]*

**அநாசிகன்** *anāṡigan*, பெ.(n) மூக்கில்லாதவன்; one who is deprived or destitute of nose (சா.அக.).

*[Skt. a-nāsika > த.அநாசிகன்.]*

**அநாதப்பள்ளிக்கூடம்** *anāda-p-paḷḷi-k-kūḍam,* பெ. (n.) ஏதிலிகட்குரிய பள்ளிக்கூடம் (இக்.வ.); school for helpless orphanage for children.

*[அநாத + பள்ளிக்கூடம்.]*

*[Skt. a-nātha> த. அநாதம்.]*

*கூடு > கூடம்.*

**அநாதப்பிரேதம்** *anāda-p-pirēdam,* பெ.(n.) உரிமை கோரா உயிரற்ற மாந்த உடல்; unclaimed corpse.

*[Skt. a-nātha + prēta>த. அநாதப்பிரேதம்.]*

**அநாதப்பிள்ளை** *anāda-p-piḷḷai,* பெ.(n.) ஏதிலிப்பிள்ளை; orphan, as without guardians.

*[அநாத(ம்) + பிள்ளை.]*

*[Skt. anātha> த. அநாதம்.]*

**அநாதர்விசிகம்** *anādar-viśigam,* பெ.(n.) ஏதிலிகட்குரிய காப்பகம்; a place where children without parents or any one to take care of them and also infants, deserted, or left exposed are brought up-founding hospital (சா.அக.).

*[Skt. anātha+visikha> த.அநாதர்விசிகம்.]*

**அநாதரட்சகர்** *anāda-raṭśagar,* பெ.(n.) திக்க (கதிய)ற்றவர்களின் கடவுள்; saviour of the helpless, lord.

*[Skt. a-nātha+rakṣka > த. அநாதரட்சகர்.]*

**அநாதன்** *anādan,* பெ.(n.) 1. தனக்குமே லொரு தலைவனில்லாதவன்; one who has no superior, the deity. *"ஞாலம் விழுங்கும நாதனை" (திவ். இயற். திருவிருத். 79.).* 2. திக்கில்லாதவன்; one who has no protector, poor, helpless person. *"அநாதர்களா யுனையடையுமவர்" (சேதுபு. கவிசம்பு. 67.).*

*[Skt. a-nātha > த. அநாதன்.]*

**அநாதி** *a-nādi,* பெ.(n.) திக்கற்றவன், ஏதிலி; helpless person.

*[Skt. a-jñāti > த. அநாதி.]*

**அநாதிபதி** *anādi-padi,* பெ.(n.) உயிர்ப்படக்க நிலை (துரியாதீதம்); the highest state or soul completely free from corporeal entanglements (சா.அக.).

**அநாதுரம்** *anāduram,* பெ.(n.) நலக்குறை வின்மை; being free from disease (சா.அக.).

**அநாதை**[1] *anādai,* பெ.(n.) திக்கற்றவன் (வின்.); poor, helpless man.

**த.வ. ஏதிலி, அற்றோன்.**

*[Skt. a-nātha > த. அநாதை.]*

**அநாதை**[2] *anādai,* பெ.(n.) சிவன் மற்றும் சிவையின் வேறுபடுதோற்றம் (சதாசிவ. 22.); (*Śaivam*) a *Śiva-śakti.*

*[Skt. a-nāthā > த. அநாதை.]*

**அநாதையாக** *anādai-y-āga,* கு.வி.அ.(adv.) உரிமை கொண்டாடுவார் இல்லாமல்; uncared for.

*[அநாதை+ஆக.]*

*[Skt.anātha > த. அநாதை.]*

**அநாமதேயம்** *anāmadēyam,* பெ.(n.) 1. இன்னார் என இனம் கண்டுகொள்ளக் கூடிய பின்னணிச் செய்திகள் ஏதும் இல்லாத நிலை; anoymity, that which is without any identity. *'அநாமதேயக் கடிதம்.'* 2. பலராலும் அறியப்படாத நிலையில் இருப்பவர்; non-entity. *'அரசியலில் இன்று அவர் ஒரு அநாமதேயம்.' (இ.வ.).*

**த.வ. மொங்கான்நிலை, மொட்டைநிலை.**

*[Skt. anāma > த. அநாமம்.]*

திகை > திகைதல் = முடிதல். திகை = முடிவு, எல்லை. திகை > திசை > தேசம். ய→ ச= போலி.

ஒ.நோ. தேசம்→தேயம். நேசம்→நேயம்.

**அநாமதேயன்** *anāmatēyan,* பெ.(n.) புகழில்லாதவன், பலரால் அறியப்படாதவன் (அப்பிரசித்தன்); man unknown to fame, as nameless.

த.வ. மொட்டையன்.

*[Skt. a-nāma>த. அநாமம். தேசன்→தேயன்.]*

**அநாமயம்** *anāmayam,* பெ.(n.) நோயற்ற தன்மை; the state of being free from disease; healthy (சா.அக.).

*[Skt. a-nāmaya > த. அநாமயம்.]*

**அநாமயன்** *anāmayan,* பெ.(n.) நோயில்லாதவன்; one who is free from disease (சா.அக.).

*[Skt. a-nāmaya > த. அநாமயன்.]*

**அநாமிகை** *anāmigai,* பெ.(n.) கணையாழி விரல்; ring-finger, as having no specific name. *"பெருவிரலை யநாமிகையோ டியையக் கூட்டி"* (கூர்மபு. சுத்தாசம. 10.).

*[Skt. a-nāmikā > த. அநாமிகை.]*



**அநாயகம்** *anāyagam,* பெ.(n.) அரசின்மை; want of a ruler, anarchy.

*[Skt. nāyaka > த. அநாயகம்.]*

**அநாயம்** *anāyam,* பெ.(n.) வீண் (தேவா. 859, 7.); uselessness.

*[Skt. a-nyāya > த. அநாயம்.]*

**அநாயாசகவாதம்** *anāyā-šaga-vādam,* பெ.(n.) குளிர்ச்சியினாலும், தீயமருந்துப் பண்டங்களை உண்பதனாலுமுண்டாகி, உடம்பில் எல்லா நரம்புகளிலும், அவ்வவ் வுறுப்புகளுக் கியற்கையாக வேற்பட்ட தொழில்களை இயக்கி குருதியோட்டம், சிறுநீர்கழிமாசு இவற்றைத் தாக்கி, அதனால் உடம்பு குத்தல், மறத்தல், கனத்தல் முதலிய குணங்களை உண்டாக்குமோர் ஊதை (வாத) நோய்; a kind of nervous affection characterised by shooting pain, numbness, heaviness etc., in the body, is due to the affection of the natural function of the respective organs, with reference to the circulatory system as well as to the interference to the derangement of 'vāyu' caused by errors in diet and climatic conditions such as, chillness etc. (சா.அக.).

*[Skt. a-nāyācaka+vāta > த. அநாயாசக வாதம்.]*

**அநாயாசம்** *anāyāšam,* பெ.(n.) மிக எளிதில்; இயற்கையாக; effortlessness. *'பாராட்டத் தகுந்த அநாயாசமான நடிப்பு'* (இ.வ.).

*[Skt. anāyāca > த. அநாயாசம்.]*

**அநார்ச்சவம்** *anārccavam,* பெ.(n.) நோய்; disease (சா.அக.).

**அநாரியதித்தம்** *anāriya-tittam,* பெ.(n.) நிலவேம்பு; ground neem, *French chirreta - Andrographis paniculata* alias *Justicia paniculata* (சா.அக.).

**அநாரோக்கியம்** *anārōkkiyam,* பெ.(n.) 1. நலமின்மை; not sound and vigorous in body-unhealthiness. 2. நோய்; disease (சா.அக.).

*[Skt. anā + arōgya > த. அநாரோக்கியம்.]*

**அநாவசியம்** *anāvašiyam,* பெ.(n.) தேவையற்றது; that which is unnecessary. *'இந்த நீண்ட விளக்கம் அநாவசியம்'* (இ.வ.).

*[Skt. a.nāvašya > த. அநாவசியம்.]*

**அநாவத்துவம்** *anā-v-attuvam,* பெ.(n.) உயிரோடிருத்தல்; the state of being endowed with breath or life (சா.அக.).

*[Skt. anādhvan > த. அநாவத்துவம்.]*

**அநாவிருத்தி** *anā-v-irutti,* பெ.(n.) மீளப் பிறவாமை; not to be born again, not to suffer, *metempsychosis* (சா.அக.).

*[Skt. anā + vṛtti > த. அநாவிருத்தி.]*

**அநாவிலம்** *anā-v-ilam,* பெ.(n.)களங்கமின்மை, தெளிவு; being free from sediment; clearness (சா.அக.).

**அநான்மா** *anāṉ-mā,* பெ.(n.) 1. உடம்பு; body. 2. உயிரற்ற உடல்; that which is not a soul i.e., material body and the material world (சா.அக.).

த.வ. பிணம்.

*[Skt. a.nā + ātmā > த. அநான்மா.]*

**அநிச்சாபிராரத்தம்** *aniccā-pirārattam,* பெ.(n.) ஊழ்வினை; an invincible necessity (சா.அக.).

த.வ. பழவினை.

*[Skt. anicca +prā-rabdha > த.அநிச்சா பிராரத்தம்.]*

**அநிச்சை** *aniccai,* பெ.(n.) 1. நாகமல்லிகை; snake jasmine, *Rhinacanthus communis.* 2. பேய்ச்சேம்பு; a bitter plant (சா.அக.).

**அநிசம்**[1] *aniśam,* வி.எ.(adv.) எப்பொழுதும்; always. *"அநிசம் பற்றின்றி நிற்கும்" (ஞானவா. புண்ணி. 11.).*

*[Skt. aniśam > த. அநிசம்.]*

**அநிசம்**[2] *aniśam,* பெ.(n.) 1. தூக்கமின்மை; sleeplessness. 2. அழியாமை (நித்தியம்); that which is eternal. 3. **அநித்தியம்** பார்க்க; see *anittiyam* (சா.அக.).

**அநித்தம்**[1] *anittam,* பெ.(n.) **அநித்தியம்** (சி.சி.பா. நிகண். 7) பார்க்க; see *anittiyam.*

த.வ. நிலையாமை.

*[Skt. a-nithyā > அநித்தம்.]*

**அநித்தம்**[2] *anittam,* பெ.(n.) சிவபெருமான், சிவையின் வேறுபடுதோற்றம் (சிவசக்தி பேதம்) (அக.நி.); *(Śaivam)* a *Śiva-sakti.*

*[Skt. a-nityā > த. அநித்தம்.]*

**அநித்தியம்** *anittiyam,* பெ.(n.) 1. நிலையாமை; instability. 2. நிலையற்றது; that which is transient, unstable. *"இந்த வநித்திய வாழ்வு வேண்டேன்" (காஞ்சிப்பு. திருநெறிக். 18).*

*[Skt. a-nitya > த. அநித்தியம்.]*

**அநித்திரை** *anittirai,* பெ.(n.) 1. உறக்கமின்மை; sleeplessness. 2. கோழை நிரம்பிய தொழிலினால், உடம்பிற்குண்டாகும் நிலைமை; sleeplessness due to the phlegmatic condition of the system, *Insomnia.*

*[Skt. a-nidrā> த. அநித்திரை.]*

**அநிதம்**[1] *anidam,* பெ.(n.) அளவுகடந்தது; that which is unrestricted, unlimited. *"அநித கோடி யணிமுடி மாலையும்" (பெரியபு. திருமலை. 5).*

*[Skt. a-niyata > த. அநிதம்.]*

**அநிதம்**[2] *anidam,* பெ.(n.) நிலையற்றது; that which is transient or unstable. *"அநிதவுடற் பூதமாக்கி" (திருமந். 1854).*

*[Skt. a-nitya > த. அநிதம்.]*

**அநியதபோக்கியம்** *aniyada-pōkkiyam,* பெ.(n.) முதலில் நல்லதாகக் கருதப்பட்டும் பின் தகாதென விலக்கப்பட்ட வினைப்பயன் (சி.சி.2,39, ஞானப்.); *(Śaivam)* effect of actions once considered lawful but subsequently considered sinful.

*[Skt. a-niyata+bhōgya>த. அநியத போக்கியம்.]*

**அநிந்திரியம்** *anindiriyam,* பெ.(n.) உறுப்பில்லாதது; that which has no animal organ (சா.அக.).

*[Skt. a-nindriya>த. அநிந்திரியம்.]*

**அநிந்திரியவது** *anindiriya-vatu,* பெ.(n.) சிற்றுயிரிகளின் அமைப்பில்லாத பொருள்; substance devoid of the structure of a living being (சா.அக.).

*[Skt.a-nindriya+vastu> த.அநிந்திரியவது.]*

**அநிப்பிராயயம்** *anippirāyayam,* பெ.(n.) புருவத்தையும், கண்ணோரங்களையுந் தாக்கி வலியையும் வீக்கத்தையுமுண்டாக்குமொரு கண்ணோய்; pain and swelling of the eyelids and outer corners of the eyes (சா.அக.).

**அநிமாலினம்** *ani-mālinam,* பெ.(n.) இறப்பு; death.

த.வ. சாவு.

**அநிமிடன்** *animiḍan,* பெ.(n.) இமையாதிருப்பவன்; one who does not wink (சா.அக.).

*[Skt. a+nimişa>த. அநிமிடன்.]*

**அநிமேசம்** *animēšam,* பெ.(n.) 1. ஒரு வகை மீன்; a kind of fish. 2. பேய்; devil (சா.அக.).

**அநியாயதண்டம்** *aniyāya-tanḍam,* பெ.(n.) 1. முறைகேடான வரி (பாண்டி.); illegal tax. 2. வீண்செலவு (கொ.வ.); wasteful expenditure.

த.வ. முறையிலா வரி.

*[அநியாய + தண்டம்.]*

*[Skt. a-nyāya> த. அநியாயம்.]*

*தண்டு→ தண்டம்.*

**அநியாயம்** *aniyāyam,* பெ.(n.) 1.நேர்மையற்றது, தவறான செயல், கொடுமை (தாயு. சுகவாரி, 12); injustice, wrong action. 2. வீண் (தாயு. சச்சி. 5); uselessness.

த.வ. முறைகேடு, அல்நயம், அன்னாயம்.

*[Skt. a-nyāya > த. அநியாயம்.]*

**அநிர்தம்** *anirdam,* பெ.(n.) மாயை; delusion, as of water in the mirage.

*[Skt. a.nir > த. அநிர்தம்.]*

**அநிர்தேசியம்** *anirtēšiyam,* பெ.(n.) இத்தன்மைத்தென்று கூறொண்ணாதது; that which is indescribable.

*[Skt. a-nirdēšya > த. அநிர்தேசியம்.]*

**அநிர்வசனம்** *anirvašanam,* பெ.(n.) மாயை (சி.சி.1, 27, சிவஞா.); *māyai.*

*[Skt. a-nir-vacana > த. அநிர்வசனம்.]*

**அநிர்வசனீயக்கியாதி** *anirvašaniya-k-kiyādi,* பெ.(n.) அறிவெனவும் அறிவற்றதெனவும் உறுதிசெய்யவியலாத தொன்றை யுணருந் திரிபுணர்வு; error consisting in the cognition of what is not determinable either as real or unreal.

*[Skt.a-nir-vaana+khyāti > த. அநிர்வசனீயக்கியாதி.]*

**அநிர்வசனீயம்** *anirvašaniyam,* பெ.(n.) 1. சரியாக (நிருபிக்க) மெய்ப்பிக்க முடியாதது; that which is indefinable. 2. மாயை; *māyā.*

*[Skt. a-nirvacaniya > த.அநிர்வசனீயம்.]*

**அநிர்வாச்சியம்** *anirvācciyam,* பெ.(n.) **அநிர்வசனீயம்** (வேதா. சூ. 58) பார்க்க; see *anirvašaniyam.*

*[Skt. a-nirvācya > த. அநிர்வாச்சியம்.]*

**அநிருத்தம்** *aniruttam,* பெ.(n.) மெய்ப்பிக்கப்படாதது (நிருபிக்கப்படாதது) (திருக்காளத். பு. 32, 40); that which is not defined.

த.வ. நிறுவாதது.

*[Skt. anirukta> த. அநிருத்தம்.]*

**அநிருத்தன்[1]** *aniruttan,* பெ.(n.) 1. திருமாலின் படைவகுப்புத் தலைவன் வகை (அஷ்டாதச. தத்வத். உ, 48); the *vyūha* manifestation of *Vişņu* as preserver. 3. கண்ணபெருமான் பெயரன் (சிலப். 6, 54, உரை); name of the grandson of *Krişņan.*

*[Skt. aniruddha > த. அநிருத்தன்.]*

**அநிருத்தன்[2]** *aniruttaṉ,* பெ.(n.) 1. தடையற்றவன்; one who is irresistible. 2. அடங்காதவன்; one who is irrepressible. 3. ஒற்றன்; spy.

*[Skt. a+ni-ruddha> த. அநிருத்தன்.]*

**அநிலசகன்** *anilaśagaṉ,* பெ.(n.) நெருப்பு; fire.

*[Skt. a-nilacaka > த. அநிலசகன்.]*

**அநிலசம்** *anilaśam,* பெ.(n.) செம்முகக் குரங்கு; red faced monkey (சா.அக.).

*[Skt. anilaca> த. அநிலசம்.]*

**அநிலச்சூலை** *anila-c-cūlai,* பெ.(n.) ஊதையினாலேற்படும் சூலை; acute arthritis associated with gout, acute gouty arthritis (சா.அக.).

*[அநில + சூலை.]*

*[Skt. a-nila> த. அநிலம்.]*

*சுல் → சூல் → சூலை.*

**அநிலம்** *anilam,* பெ.(n.) 1. காற்று; wind. 2. பிறப்பு; birth. 3. ஊதை (வாத) நோய்; rheumatism (சா.அக.).

*[Skt. a-nila > த. அநிலம்.]*

**அநிலன்** *anilaṉ,* பெ.(n.) 1. காற்று (வாயு); air. 2. உயிர்வளி; oxygen (சா.அக.).

*[Skt. a-nila > த. அநிலன்.]*

**அநிலாமயம்** *anilāmayam,* பெ.(n.) ஊதை (வாத) நோய்; morbid affection of the deranged wind (vāyu) such as, flafulence, rheumatism etc.

*[Skt. anila-maya > த.அநிலாமயம்.]*

**அநீகினி** *anīkiṉi,* பெ.(n.) தாமரைப் பூ; lotus, *Nelumbium speciosum.*

**அநீதம்** *anīdam,* பெ.(n.) **அநீதி** பார்க்க; see *anīdi.*

*[Skt. a-nīti > த.அநீதம்.]*

**அநீதி** *anīdi,* பெ.(n.) கொடுமை; injustice.

*[Skt. a-nīti > த.அநீதி.]*

**அநு** *anu,* பெ.(n.) 1. கதுப்பு; jaw. 2. நோய்; disease. 2. சாவு; death. 4. முலைப்பால்; woman's breast milk. 5. இணை; like or equal to.

*[Skt. hanu > த. அநு.]*

**அநுக்கம்** *anukkam,* பெ.(n.) 1. பாம்பு; snake. 2. அச்சம்; fear. 3. சோம்பல்; lethargy. 4. துன்பம்; suffering.

**அநுகன்** *anugaṉ,* பெ.(n.) காம விருப்பம் (விச்சை) யுடையவன்; one who is inclined to lewdness, *awanton.*

**த.வ. பெண் பித்தன்.**

*[Skt. anuka> த. அநுகன்.]*

**அநுகோதம்** *anu-kōdam,* பெ.(n.) மூளையின் பின் பக்கத்தின் கீழ்ப் பிரிவாகிய சிறு மூளை; that portion of the brain which is posterior to and underlying the great cerebral mass, *Cerebellum.*

*[Skt. anugōta > த. அநுகோதம்.]*

**அநுகோர்த்தம்** *anu-kōrttam,* பெ.(n.) **அநுகோதம்** பார்க்க; see *anu-kōdam.*

*[Skt. anugōta>த. அநுகோர்த்தம்.]*

**அநுசந்தானம்பண்ணல்** *anu-śandāṉam-paṇṇal,* பெ.(n.) 1. இடைவிடாது நினைதல்; continuous thinking. 2. இடையீடில்லா வோகம்; continuous meditation or contemplation.

*[அனுசந்தானம் + பண்ணல்.]*

*[Skt. anu-santāna > த.அநுசந்தானம்.]*

*பண் → பண்ணல்.*

**அநுசயம்** *anuśayam,* பெ.(n.) 1. காலில் வரும் நோய்; a disease of the leg. 2. உடம்பில் மேற்பாகத்திற் காணுமொரு வகைக் கொப்புளம் அல்லது கட்டி; a boil or abscess in the upper part of the body. 3. தலையில் வரும் கட்டி; a boil or abscess on the head.

[Skt. anu-kṣaya> த. அநுசயம்.]

**அநுசிரஞ்சவாதம்** *anu-širañja-vādam,* பெ.(n.) தாடையின் பூட்டைத்தழுவி (யனுசரித்து) எந்நேரமும் வாயைத் திறந்தாவது மூடியாவதிருக்கச் செய்யுமொரு வகை ஊதை (வாத) நோய்; a kind of tetanic spasam of the jaw, which keeps the mouth always shut or open, thereby rendering the patient unable to chew things or to speak.

[Skt. anu-ciram-ja+vāta>த. அனுசிரஞ்ச வாதம்.]

**அநுட்டணசீதம்** *anuṭṭaṇa-šīdam,* பெ.(n.) வெயில்; குளிர்ச்சியற்றது; that which is neither hot or cold.

[Skt. anuṣṇa+šīta>த. அநுட்டணசீதம்.]

**அநுட்டணம்** *anuṭṭaṇam,* பெ.(n.) சூடின்மை; that which is devoid of heat.

[Skt. anuṣṇa > த. அநுட்டணம்.]

**அநுட்டணாசீதம்** *anuṭṭaṇā-šīdam,* பெ.(n.) **அநுட்டணசீதம்** பார்க்க; see *anuṭṭaṇa-šīdam.*

[Skt. anuṣṇā+sīta>த.அநுட்டணாசீதம்.]

**அநுட்டினம்** *anuṭṭiṇam,* பெ.(n.) கருங்குவளை (நீலோற் பலம்); blue lotus, *Nymphae craerulea.*

[Skt. anuṣṇa > த. அநுட்டினம்.]

**அநுத்தம்பவாதம்** *anu-t-tamba-vādam,* பெ.(n.) 1. இரு தாள்களையும் மரக்கச் செய்து இறுக்கி நாவையுள்ளுக்கிழுத்துத் துன்பத்தை விளைவிக்கு மோர் ஊதை (வாத) நோய்; a kind of spasm characterised by the affection of the jaws, and contraction or drawing in of the tongue, a kind of tetanus. 2. மோவாய்க் கட்டைப் பிடிப்பு; a spasm of the muscles of mastication commonly called lock-jaw. 3. இசிவால் (சன்னியால்) தாளிறுத்தல்; a tetanic condition of the muscles of the jaaw, *Trismusm.*

**அநுத்தானம்** *anu-t-tāṇam,* பெ.(n.) முகம் குப்புறவிருக்கும்படி கிடத்தல்; lying with the face downwards.

[Skt.anu+sthāna> த. அநுத்தானம்.]

**அநுத்துருதம்** *anu-t-turudam,* பெ.(n.) 1. ஒரு காலவளவு; a period of time. 2. ஒரு மாத்திரையின் காற்பங்கு; 1/4 of a moment.

**அநுத்துவாகம்** *anu-t-tuvāgam,* பெ.(n.) திருமணமேற்கா நோன்பு; unmarried state, celibacy.

**அநுதரிசம்** *anu-darišam,* பெ.(n.) 1. வேட்கை; thirst. 2. மதுவருந்தும் மட்கலம்; an earthern pot for drinking toddy.

[Skt. anu+darisa> த. அநுதரிசம்.]

**அநுதரிசனம்** *anu-darišaṇam,* பெ.(n.) 1. கள் குடித்தல்; drinking toddy. 2. கட்குடிக்கும் கலையம்; a mud pot used drinking toddy.

[Skt. anu+darišana> த. அநுதரிசனம்.]

**அநுதாபசுரம்** *anu-dāba-šuram,* பெ.(n.) ஒற்றுணர்ச்சியினாலுண்டாகும் சுரம்; sympathetic fever.

த.வ. பரிவிரக்கக் காய்ச்சல்.

[Skt. anu> த. அநு.]

**அநுதாவனம்** *anudāvaṇam,* பெ.(n.) தூய்மையாக்குகை; cleaning.

**அநுதினம்** *anudiṇam,* பெ.(n.) நாடொறும்; daily.

[Skt. anu+dina > த. அநுதினம்.]

**அநுதேகம்** *anu-dēgam,* பெ.(n.) நுண்ணுடல்; astral body.

[Skt. anu+dēha>த. அநுதேகம்.]

**அநுபசயம்** *anu-pašayam,* பெ.(n.) நோய் குணப்படாத நிலைமை; the state of being incurable, incurability.

*[Skt. anu + caya>த. அநுபசயம்.]*

**அநுபந்தம்** *anubandam,* பெ.(n.) 1. பிறந்த குழந்தை; new-born child. 2. ஒன்றோடொன் றிணைக்கப்பட்டது; that which is collaterally connected, concomiant, adjunct. 3. சேர்க்கப்பட்டது; appendage.

த.வ. இணைப்பு.

**அநுபர்தை** *anubardai,* பெ.(n.) நீர்வேட்கை (தாகம்); thirst. 2. விக்கல்; hiccough.

**அநுபவம்** *anubavam,* பெ.(n.) 1. கண்டறியுமறிவு; the knowledge gained by trial or repeated trials, observation and experience. 2. மணத்தாற்றோன்றும் அறிவு; practical wisdom experienced by the changes and trials of life.

த.வ. பட்டறிவு.

*[Skt. anu-bhava > த. அநுபவம்.]*

**அநுபவாமிர்தம்** *anubavāmirdam,* பெ.(n.) தமிழிற் செய்த வைராக்கிய சதகம்; a treatise on determination or will-power complied in Tamil.

*[Skt.anubhava+a-mṛta>த.அநுபவாமிர்தம்.]*

**அநுபாகம்** *anubāgam,* பெ.(n.) தாடையைச் சேர்ந்த பகுதி; (in anatomy) maxillary portion.

*[அநு + பாகம்.]*

*[Skt. anu>த.அநு.]*

**அநுபானம்** *anubānam,* பெ.(n.) மருந்தையுள்ளே செலுத்துதற்குதவியாகக் குடிக்கும் நீர் அல்லது குடிநீர்; water of other liquid taken as a basis for swallowing medicine without difficulty, vehicle. 2. உட்கொள்ளுவதற்காக வேண்டிய மருந்தைக் குழைத்து நாவால் நக்கிப் பயன்கொள்ளுதற்குரிய தேன் முதலிய பொருள்கள்; a thick syrupy medicament, like honey, ghee or other substances mixed with the intended medicine and taken in by licking, linctus.

த.வ. துணைப்பருகம்.

*[Skt. anu+pāna > த. அநுபானம்.]*

**அநுபோகம்** *anubōgam,* பெ.(n.) **அநுபவம்** பார்க்க; see *anubavam.*

த.வ. நுகர்ச்சி.

*[Skt. anu+bhōga > த. அநுபோகம்.]*

**அநுமரணம்** *anu-maranam,* பெ.(n.) உடன் கட்டையேறுகை; ascending the funeral pile or pyre with the deceased husband, sati.

த.வ. உடன்கட்டை.

*[அநு+மரணம்.]*

*[Skt. anu > த. அநு.]*

*மடி→மரி+அணம்–மரணம் (வ.வ.54).*

**அநுமை** *anumai,* பெ.(n.) கண்ணின் கீழிமை; that part immediately below the eye-lid.

**அநுரசம்** *anurašam,* பெ.(n.) உண்ட பின்பு ஏற்படும் சுவை; a secondary flavour; a taste which succeeds eating and drinking after taste.

*[Skt. anu+rasa > த. அநுரசம்.]*

**அநுராகபோகம்** *anurāga-bōgam,* பெ.(n.) 1. சிற்றின்ப நுகற்சி; sexual enjoyment. 2. காம வேட்கை; sexual bliss.

*[Skt.anu-rāga+bhōga>த.அநுராகபோகம்.]*

**அநுராகமூலி** *anurāga-mūli,* பெ.(n.) காமவேட்கையுண்டாக்கும் மூலிகை; a drug exciting sexual desire, *Aphrodisiac.*

*[அநுராக(ம்) + மூலி.]*

*[Skt. anu-rāga > த. அநுராக(ம்).]*

**அநுராகம்** *anurāgam,* பெ.(n.) 1. சிற்றின்ப விருப்பம்; carnal appetite, lust. 2. ஆசை; lover attachment.

த.வ. விழைச்சு, காமவேட்கை.

*[Skt. anu+rāga > த. அநுராகம்.]*

**அநுலேபகம்** *anulēbagam,* பெ.(n.) 1. உடம்பிற் பூசும் சந்தன முதலிய நறுமணப் பொருள்கள்; perfumes like sandal paste etc, smeared over the body. 2. பூசும் நெய்மம்; any soft unctuous substance used for smearing particularly over the body or the diseased part, an unguent or ointment. 3. நெய்மம் முதலியவற்றைப் பூசுதல்; anoiting the body with unguents.

*[Skt. anu-lēpaka > த. அநுலேபகம்.]*

**அநுலேபம்** *anulēbam,* பெ.(n.) **அநுலேபகம்** பார்க்க; see *anulēbagam.*

*[Skt. anu-lēpa > த. அநுலேபம்.]*

**அநுலேபனம்** *anulēbanam,* பெ.(n.) 1. பூசுதல்; smearing or anoiting the body. 2. பூசும் பொருள்; oily or emmolient application.

*[Skt. anu-lēpana > த. அநுலேபனம்.]*

**அநுலோபனம்** *anulōbanam,* பெ.(n.) குடலுக்குள் ஏற்படும் இயற்கையான அசைவு; a peculiar motion of the intestines and other tubular organs in digestion-peristalsis.

*[Skt. anu-lōpana> த. அநுலோபனம்.]*

**அநுலோமனம்** *anulōmanam,* பெ.(n.) வளியை (வாயுவை)க் கண்டித்து வெளிப்படுத்தும் கழிச்சல் மருந்து; a pursative which helps to check or remove the doshas in the system especially *vāyu* (wind), by setting them free.

*[Skt. anu-lōma > த. அநுலோமனம்.]*

**அநுவாசம்** *anu-vāšam,* பெ.(n.) நறுமண மூட்டுகை; imparting smell.

*[Skt. anu-vāša > த. அநுவாசம்.]*

**அநுவாசிதம்** *anu-vāšidam,* பெ.(n.) 1. அணியமாக்கிச் செலுத்துதல்; that which is prepared and administered as in enema. 2. புகையிடுதல்; fumigating.

*[Skt. anu-vāšita > த. அநுவாசிதம்.]*

**அநுவிருத்தம்** *anu-viruttam,* பெ.(n.) முட்டை வடிவம்; shape like that of an egg-oval shape.

*[Skt. anu-vṛtta > த. அநுவிருத்தம்.]*

**அநுவெல்லிதம்** *anu-vellidam,* பெ.(n.) 1. கட்டுக்கட்டல்; bandaging or securing with bandages. 2. கால் கை கட்டு; the bandage applied to the extremities.

**அநுற்பத்தி** *anuṟpatti,* பெ.(n.) பிறவாமை; not being born again; absence of birth.

*[Skt. anut-patti > த. அநுற்பத்தி.]*

**அநூகன்** *anūgaṉ,* பெ.(n.) பிறப்பிலி; one who is free from re-birth.

*[Skt. anūka > த. அநூகன்.]*

**அநூடன்** *anūḍaṉ,* பெ.(n.) திருமணம் செய்யாதவன்; an unmarried person, celibate.

*[Skt. anūta> த. அநூடன்.]*

**அநூர்த்துவாத்தி** *anūrttu-vātti,* பெ.(n.) மேற்கதுப்பெலும்பு; superior maxillary bone.

**அநூரு** *anūru,* பெ.(n.) முடவன்; a lame person.

**அநேகம்** *anēgam,* பெ.(n.) பல; many. *'மாதத்தில் அநேக நாட்கள் கஞ்சிதான் உணவு' (உ.வ.).*

த.வ. மிகவு, மிகுதி.

*[Skt. an-ēka > த. அநேகம்.]*

**அநேகமாக** *anēgam-āga,* கு.வி.அ.(adj.) 1. பெரும்பாலும்; mostly, almost. *'அநேகமாக என்னைத் தவிர அனைவரும் உணவருந்தி விட்டனர்'.* 2. அறிந்த வளவில்; most probably. *'அநேகமாக இது வீண் முயற்சிதான்'.*

*[அநேகம் + ஆக.]*

*[**Skt.** an-ēka>த. அநேக(ம்).]*

**அநேகாங்கம்** *anēgāṅgam,* பெ.(n.) பலவுறுப்புகள்; several organs.

**த.வ.** பல்லுறுப்பு.

*[**Skt.** an-ēka+aṅga > த. அநேகாங்கம்.]*

**அநேகாந்தம்** *anēgāndam,* பெ.(n.) ஐயம்; that which is doubtful.

*[**Skt.** an-ēkanta > த. அநேகாந்தம்.]*

**அநேடமூகம்** *anēḍa-mūgam,* பெ.(n.) கேளாச் செவியும் ஊமையுமாந் தன்மை; loss of speech; deaf dumbness deafmutis.

*[அநேட+மூகம்.]*

*[**Skt.** anēṭa> த.அநேட.]*

**அநேடமூகன்** *anēḍa-mūgaṉ,* பெ.(n.) செவியிலூமன்; a person who is both deaf and dumb, deaf mute.

*[அநேட + மூகன்.]*

*[**Skt.** an-ēṭa>த.அநேட(ம்).]*

*மூழ்→மூகு→மூகன்.*

**அநேதிரு** *anētiru,* பெ.(n.) வெப்பம் அல்லது மின் ஆற்றல் எளிதில் ஊடுருவக்கூடாத பொருள்; a substance which does not transmit a force like that of hear or electricity.

*[**Skt.** anēti > த. அநேதிரு.]*

**அநோக்கம்** *anōkkam,* பெ.(n.) 1. மரம்; tree. 2. மரப்பொது; tree in common.

**அப்காரி** *apkāri,* பெ.(n.) 1. கள்,தேறல் முதலியவை இறக்கி விற்பனை செய்கை; abkari, manufacture or sale of spirituous liquors.

**த.வ.** கள்வணிகம், மதுவிற்பனை.

*[**U.** ābkāri > த. அப்காரி.]*

**அப்சந்தீன்** *apšandīṉ,* பெ.(n.) உனானி முறையில் வழங்கும் மூலிகை; a drug used in the unani medicine (சா.அக.).

*[**U.** ab-šandīṉ > த. அப்சந்தீன்.]*

**அப்சரசு** *apšarašu,* பெ.(n.) மேலுலகப் பெண்கள்; a class of celestial nymphs.

**த.வ.** அரமகளிர்.

*[**Skt.** apseras > த. அப்சரசு.]*

**அப்சூத்** *apšūt,* பெ.(n.) மிகுதி (P.T.L.); excess, increases.

*[**Persn.** afzūd>த.அப்சூத்.]*

**அப்தபூர்த்தி** *apta-pūrtti,* பெ.(n.) முதலாமாண்டு நிறைவு; first anniversary of the child's birth.

**த.வ.** முதல் வெள்ளணி.

*[**Skt.** abda+pūrti>த.அப்தபூர்த்தி.]*

**அப்தம்** *aptam,* பெ.(n.) ஆண்டு; year.

**த.வ.** ஆண்டு.

*[**Skt.** abda > த. அப்தம்.]*

**அப்தா** *aptā,* பெ.(n.) கிழமை (வாரம்); week. *அப்தாக் கணக்கு* (C.G.).

**த.வ.** கிழமை.

*[**U.** hafta > த. அப்தா.]*

**அப்திபேனம்** *abdi-bēṉam,* பெ.(n.) 1. கடல்நுரை; sea froth. 2. மீனெலும்பு; cuttle-fish bone (சா.அக.).

**அப்திமண்டூசி** *abdi-maṇḍūši,* பெ.(n.) முத்துச் சிப்பி; pearl-oyster (சா.அக.).



**அப்திமூன்** *abdi-mūṉ,* பெ.(n.) உனானி மருத்துவத்தில் வழங்கும் ஒரு வகைக் கடைச்சரக்கு; a bazaar drug used in the uṉāṉi system (சா.அக.).

*[U. habdimūn > த. அப்திமூன்.]*

**அப்பச்சக்காணம்** *appaccakkāṇam,* பெ.(n.) சினம், இவறன்மை (லோபம்) முதலிய குற்றங்கள் (மேருமந்.363); (Jaina.) faults like anger, miserliness, etc.

*[Skt. apratyākhyāna > த. அப்பச்சக் காணம்.]*

**அப்பணை[1]** *appaṇai,* பெ.(n.) 1. பிணை; security, bail. 2. பற்றுக்கோடு; prop., support.

த.வ. பற்றுறுதி.

*[Skt. ājñāpanā > த. அப்பணை.]*

**அப்பணை[2]** *appaṇai,* பெ.(n.) கட்டளை; command, mandate. *"ராஜாவும்... அப்பணையிட்டுவிட" (குருபரம்.ஆறா.160).*

*[Skt. ajñāpana > த. அப்பணை.]*

**அப்பயத்துடராகம்** *appayattuḍarāgam,* பெ.(n.) எட்டிமரம்; nux vomica tree, *Strychnos nux vomica* (சா.அக.).

**அப்பரியந்தம்** *appariyan-dam,* பெ.(n.) ஒதிய மரம்; Indian ash tree, *Odina wodier* (சா.அக.).

*[Skt. ap-paryanta > த. அப்பரியந்தம்.]*



**அப்பாரிசம்** *appāriśam,* பெ.(n.) அந்தப் பக்கம்; the other side (சா.அக.).

**அப்பிகை** *appigai,* பெ.(n.) ஏழாவதாகிய துலை (ஐப்பசி) மாதம் (தெ.இ.க.தொ.iii, 150); the seventh Tamiḻ month.

*[Skt. āśvayuja > த. அப்பிகை.]*

**அப்பிதம்** *appidam,* பெ.(n.) முகில் (சிந்தா. நி.186); cloud.

*[Skt. abda > த. அப்பிதம்.]*

**அப்பியங்கம்** *appiyaṅgam,* பெ. (n.) 1. தலையிலும், உடம்பிலும் எண்ணெயைத் தேய்த்துக் கொண்டு இளஞ்சூடுள்ள தண்ணீரில் தலைமுழுகல்; anointing the head and the body with sesamum oil preparatory to bathing. 2. உடம்பிற்கு நறுமண மூட்டுகை; to perfume the body. 3. கண்ணுக்கு மை தீட்டுகை; painting the eye lids with collyrium (சா.அக.).

த.வ. திருமுழுக்கு, நெய்யாட்டு.

*[Skt. abhyaṅga > த. அப்பியங்கம்.]*

**அப்பியங்கனம்** *appiyaṅgaṉam,* பெ.(n.) எண்ணெய் (தேய்த்து)க் குளிக்கை; inunction, bathing with oil.

த.வ. முழுக்காட்டு.

*[Skt. abhyañjana > த. அப்பியங்கனம்.]*

**அப்பியசி-த்தல்** *appiyaśi-,* 4 செ.கு.வி.(v.i.) பழகுதல்; to practise.

*[Skt. abhyas > த. அப்பியசி-.]*

**அப்பியசூயகன்** *appiyaśūyagaṉ,* பெ.(n.) பொறாமைக்காரன் (சிந்தா.நி.181); jealous, envious person.

*[Skt. abhyasūyaka > த. அப்பியசூயகன்.]*

**அப்பியஞ்சனம்** *appiyañjaṉam,* பெ.(n.) 1. எண்ணெய்; oil. 2. எண்ணெய் பூசுகை; smearing the body with oil. 3. மை தீட்டல்; applying collyrium to the eye lids.

[Skt. abhyañjana > த. அப்பியஞ்சனம்.]

**அப்பியந்தரபரிக்கிரகம்** *appiyandara-parikkiragam,* பெ.(n.) மனத்தைப் பற்றி வரும் பகை (குரோதம்), மானம் முதலிய பதினான்கு குற்றங்கள் (மேருமந்.1207, உரை); (Jaina.) the fourteen mental defects, such as anger, pride, etc.

த.வ. ஈரேழ் மனமாசு.

[Skt. abhyantara+pari-k-kraha > த. அப்பியந்தரபரிக்கிரகம்.]

**அப்பியந்தரம்** *appiyandaram,* பெ.(n.) இடையூறு; obstacle, impediment.

[Skt. abhyantara > த. அப்பியந்தரம்.]

**அப்பியம்** *appiyam,* பெ.(n.) தேவர்க்கிடப்படும் திருப்படையல் (அறநெறி. 26); oblation to the gods.

[Skt. havya > த. அப்பியம்.]

**அப்பியமதன்** *appiyamadaṉ,* பெ.(n.) நோயாளி; a sick person (சா.அக.).

**அப்பியமிதம்** *appiyamidam,* பெ.(n.) துன்பம் (சிந்தா.நி.187); distress.

[Skt. abhyamita > த. அப்பியமிதம்.]

**அப்பியமேகம்** *appiya-mēgam,* பெ.(n.) மூத்திரம், யானையின் மதசலத்தைப் போல் ஆறுமணிக்கு ஒருமுறை, ஒவ்வொரு வேளைக்கும் ஒருபடியளவாக இறங்குவதும், காய்ச்சினால் உவர்மண்ணைப் போலடியில் வண்டல் படிவதுமான சிறுநீர் நோய்; a disease characterised by excessive secretion of urine as much as even one measure for every six hours and it leaves a sediment when heated-diabetes insipidus (சா.அக.).

த.வ. உச்சைமேகம்.

[அப்பிய+மேகம்.]

[Skt. abhya > த. அப்பிய(ம்).]

**அப்பியவகாரம்** *appiyavagāram,* பெ.(n.) உண்கை (சிந்தா.நி.179); eating.

[Skt. abhyavahāra > த. அப்பியவகாரம்.]

**அப்பியாகதன்** *appiyāgadaṉ,* பெ.(n.) நெருங்கிய பழக்கமுள்ள விருந்தினன்; familiar guest. *"அப்பியாகதரோடுத்தமவதிதிபூசை" (திருவானைக். கோச்செங்.160).*

த.வ. வாடிக்கை விருந்தாளி.

[Skt. abhyāgata > த. அப்பியாகதன்.]

**அப்பியாகதி** *appiyāgadi,* பெ.(n.) தெரிந்த விருந்தினன்; familiar guest. *"வரப்பட்ட அதிதி அப்பியாகதிகளுக்கு உண்டாகும் பசியைத் தணிப்பதற்கும்" (ஜீவப்பிரம்மைக்ய. பக்.554).*

[Skt. abhyāgata > த. அப்பியாகதி.]

**அப்பியாசம்** *appiyāšam,* பெ.(n.) 1. பழக்கம்; practice, exercise. *"கணக்குப் பொத்தகத்தின் கடைசியில் சில முக்கியமான அப்பியாசங்கள் இருந்தன".* 2. பாடப்பயிற்சி (இ.வ.); exercises based on rules. 3. இயல்; chapter.

த.வ. பயிற்சி.

[Skt. abhyāša > த. அப்பியாசம்.]

**அப்பியாசயோகம்** *appiyāša-yōgam,* பெ.(n.) ஊழ்கம்; meditation (சா.அக.).

த.வ. தவநிலை.

[Skt.abhyāsa+yōga>த.அப்பியாச யோகம்.]

**அப்பியாசவைந்தியம்** *appiyāša-vaindiyam,* பெ.(n.) தொடர் பழக்கத்தால் செய்யும் பண்டுவம்; the practices of a quack, quackery (சா.அக.).

த.வ. பக்குவமருத்துவம்.

[Skt. abhyāša+vaidya > த. அப்பியாச வைத்தியம்.]

**அப்பியாசி[1]-த்தல்** *appiyāši-,* 4 செ.குன்றாவி. (v.t.) பயிலுதல்; to practise. *"ஞானமாத்திரம் அப்பியாசித்தவனிடத்திலே" (பஞ்சதசப்.93).*

த.வ. பயிலல்.

[Skt. abhyāsa > த. அப்பியாசி-.]

**அப்பியாசி**[2] *appiyāši,* பெ.(n.) தொழில் பழகுநர் (வேதா.சூ.14); one who practises.

த.வ. வினைவலன், வினைவன்.

[Skt. abhyāsin > த. அப்பியாசி.]

**அப்பியுதயம்** *appiyudayam,* பெ.(n.) நன்னிகழ்வு; prosperity, welfare.

[Skt. abhyu-daya > த. அப்பியுதயம்.]

**அப்பிரகஅரிதகி** *appiraga-aridagi,* பெ.(n.) காக்கைப்பொன்பொடி (அப்பிரகபற்பம்), கடுக்காய்த் தோல் முதலியவைச் சேர்ந்த, ஓர் ஆயுள்வேத மருந்து; an ayurvedic medicine comprising calcined mica and gall-nut powder as chief ingradients (சா.அக.).

த.வ. காக்கைப்பொன் துகள்.

[Skt. abhraka+haritaki > த. அப்பிரக அரிதகி.]

**அப்பிரகக்கிண்ணி** *appiraga-k-kinni,* பெ.(n.) தகட்டுத்தாளை (அப்பிரகத்தை) உருகும்படிச் செய்து, மெழுகு கட்டி வார்த்தெடுக்கும் ஓர் ஏனம்; a basin made of melted mica cast into a mould (சா.அக.).

[அப்பிரகம்+கிண்ணி.]

[Skt. abhraka > த. அப்பிரகம்.]

**அப்பிரகக்குகை** *appiraga-k-kugai,* பெ.(n.) ஊதை(வாத)முறையில் பயன்படுத்துவதற்காக, காக்கைப்பொன் பொடியால் (அப்பிரக பற்பத்தினாற்) செய்த குகை; a crucible made of calcined mica for the purpose of using it in alchemy (சா.அக.).

[Skt. abhraka > த. அப்பிரகம்.]

**அப்பிரககற்பம்** *appiraga-karpam,* பெ.(n.) காக்கைப்பொன்னை (அப்பிரகத்தை)ச் செந்தூரம், பொடி (பற்பம்) முதலிய மருந்துகளாகச் செய்து பயன்படுத்தும் வகையை விளத்தமாய்க் குறிக்குமோர் ஆயுள் வேதநூல்; an ayurvedic treatise dealing with the method and use of several compounds of mica and their preparations in detail (சா.அக.).

[அப்பிர + கற்பம்.]

[Skt.abhraka>த.அப்பிரகம். கல்பம்→கற்பம்.]

**அப்பிரகச்சத்து** *appiraga-c-cattu,* பெ.(n.) காக்கைப் பொன்னிலிருந்து (அப்பிரகத்தினின்று) உருவாக்கப்பெறும் ஊட்டம் (சத்து); essence prepared from mica (சா.அக.).

[Skt. abhraka > த. அப்பிரகம்.]

**அப்பிரகசிந்தூரம்** *appiraga-šindūram,* பெ.(n.) காக்கைப் பொன்னா (அப்பிரகத்தா)லான மருந்துவகை (வின்.); red oxide of talc or mica.

த.வ. காக்கைப்பொன் செந்தூரம்.

[அப்பிரக(ம்) + சிந்தூரம்.]

[Skt.abhraka>த. அப்பிரகம். செந்தூரம்→ சிந்தூரம்.]

**அப்பிரகசூதை** *appiraga-šūdai,* பெ.(n.) மலடி; a barren woman (சா.அக.).

**அப்பிரகசெந்தூரம்** *appiragašendūram,* பெ.(n.) காக்கைப் பொன்னை (அப்பிரகத்தை) முறையாகத் தூய்மை செய்து, பிறகு அதைப் புடமிட்டெடுக்கும் ஒரு வகைச் செந்தூரம்; a red oxide of mica obtained after cleaning mica as per process laid down in the Tamil medical science for cleaning minerals and then subjecting it to calcination. It is a powder of brick-dust colour and a saline earthy taste, Chemically, it is a silicate of magnesia with iron in excess (சா.அக.).

[அப்பிரகம் + செந்தூரம்.]

[Skt. abhraka > த. அப்பிரகம்.]

**அப்பிரகத்தகடு** *appiraga-t-tagadu,* பெ.(n.) 1. காக்கைப் பொன் (அப்பிரகச்) செதில்; a loose, filmy mass of talc separated in layers, *Talc flakes.* 2. அப்பிரகத்தை உருக்கி அதனின்று உருவாக்குமொரு தகடு; plate obtained by melting mica (சா.அக.).

த.வ. காக்கைப்பொன் தகடு.

*[அப்பிரக(ம்) + தகடு.]*

*[**Skt.** abhraka > த. அப்பிரகம்.]*

**அப்பிரகநவநீதம்** *appiraga-navanīdam,* பெ.(n.)காக்கைப் பொன்னால் (அப்பிரகத்தாற்) செய்த களிம்பு (வின்.); mica made into an ointment.

த.வ. காக்கைப்பொன் களிம்பு.

*[**Skt.** abhraka+nava-nīta > த.அப்பிரக நவநீதம்.]*

**அப்பிரகபற்பம்** *appiraga-paṟpam,* பெ.(n.) காக்கைப் பொன்னை (அப்பிரகத்தை)ப் புடமிட்டு உருவாக்கி நீரிழிவு முதலிய நோய்களுக்குக் கொடுக்கும் மருந்து; an oxide of mica obtained by calcination as per process of India medical science. It is used for diabetes etc. (சா.அக.).

த.வ. காக்கைப்பொன் மருந்து.

*[**Skt.** abhraka+bhaspa > த. அப்பிரகபற்பம்.]*

**அப்பிரகபாடாணம்** *appiraga-pāḍāṇam,* பெ.(n.) பிறவிவைப்பு நஞ்சு வகை (மூ.அ.); a mineral poison.

த.வ. காக்கைப்பொன் நஞ்சு.

*[**Skt.**abhraka + pāsāṇam >த. அப்பிரக பாடாணம்.]*

**அப்பிரகம்** *appiragam,* பெ.(n.)தகட்டுத்தாள் (மைக்கா); mica, talc. *"அப்பிரக மென்றறைந்தால் அண்டம் மகோதரமும்..... போம்" (பதார்த்த.1126).*

த.வ. காக்கைப்பொன், ஒட்டுத்தாள்.

*[**Skt.** abhraka > த. அப்பிரகம்.]*

**அப்பிரகமணல்** *appiraga-maṇal,* பெ.(n.) 1. நிலத்தினின்று வெட்டி எடுக்கப்படும் அப்பிரகமும் மணலுங் கூடிய ஒரு மூலப்பொருள்; a mineral ore consisting of sand and talc, *Talc ore.* 2. கருமணல்; black sand mixed with mica (சா.அக.).

த.வ. காக்கைப்பொன் மணல்.

*[**Skt.** abhraka > த. அப்பிரகம்.]*

**அப்பிரகாசம்**[1] *a-p-pirakāšam,* பெ.(n.) விளக்கமின்மை; invisibility, indistinctness, darkness. *"ஒருகாலத்துப் பிரகாச மொருகாலத் தப்பிரகாசம்" (சூத.எக்கிய. பூ.47: 27).*

*[**Skt.**aprakāša > த. அப்பிரகாசம்.]*

**அப்பிரகாசம்**[2] *appirakāšam,* பெ.(n.) சடப்பொருள் (அசித்து); matter, as insentient. *"அவைதாம்... அப்பிரகாசமாய் நிற்றலான்" (சி.போ.4:1).*

*[**Skt.**a-prakāša>த. அப்பிரகாசம்.]*

**அப்பிரகிருட்டம்** *appirakiruṭṭam,* பெ.(n.) காக்கை (சிந்தா.நி.187); crow.

*[**Skt.** a-pra+kṛṣṭa > த. அப்பிரகிருட்டம்.]*

**அப்பிரசம்** *appirašam,* பெ.(n.) மலடு, குழந்தை பெற்றெடுக்க முடியாமை; barrenness (சா.அக.).

த.வ. மலட்டுத் தன்மை, கொட்டு.

**அப்பிரசன்** *appirašaṉ,* பெ.(n.) பிறங்கடை (வாரிசு) இல்லாதவன்; one who is without issue (சா.அக.).

**அப்பிரசாதை** *appirašādai,* பெ.(n.) மலடி (சிந்தா.நி.187); barren woman.

*[**Skt.** aprajātā > த. அப்பிரசாதை.]*

**அப்பிரசித்தம்** *a-p-pirašittam,* பெ.(n.) வெளிப்படையாகாதது; that which is unknown, unpublished.

த.வ. தெரியாதது.

*[**Skt.** a-prasiddha > த. அப்பிரசித்தம்.]*

**அப்பிரசித்தவிசேடணம்** *a-p-pirašitta-višēḍaṇam,* பெ.(n.) பக்கப் போலிகளு ளொன்று (மணிமே.29:151); (Log.) fallacy consisting in the major term being unacceptable to the opponent.

*[**Skt.**a-prasiddha + višēṣaṇa> த.அப்பிர சித்தவிசேடணம்.]*

**அப்பிரசித்தவிசேடியம்** *a-p-pirašitta-višēḍiyam,* பெ.(n.) பக்கப் போலிகளு ளொன்று (மணிமே.29, 152); (Log.) fallacy consisting in the minor term being unacceptable to the opponent.

*[Skt. a-prasiddha+višēṣya>த. அப்பிர சித்தவிசேடியம்.]*

**அப்பிரசித்தவுபயம்** *a-p-pirašitta-v-ubayam,* பெ.(n.) பக்கப் போலிகளுளொன்று (மணிமே.29, 152); (Log.) fallacy consisting in the major and minor terms being unacceptable to the opponent.

*[Skt.a-prasiddha+upāya> த. அப்பிரசித்த வுபயம்.]*

**அப்பிரசித்தாசம்பந்தம்** *a-p-pirašittā-šambandam,* பெ.(n.) பக்கப் போலிகளு ளொன்று (மணிமே.29, 153); (Log.) fallacy consisting in the syllogism seeking to establish no relation not already accepted by the opponent.

*[Skt. a-prasiddhā+asambandha>த. அப்பிரசித்தாசம்பந்தம்.]*

**அப்பிரசை** *appirašai,* பெ.(n.) மகப்பேறு அற்றவள்; a woman deprived of issue (சா.அக.).

*[Skt. apirajā >த.அப்பிரசை.]*

**அப்பிரத்தியட்சம்** *a-p-pirattiyaṭcam,* பெ.(n.) புலப்படாதது; that which is imperceptible, invisible.

*[Skt. a-pratyakṣa > த. அப்பிரத்தியட்சம்.]*

**அப்பிரத்தியாக்கியானம்** *appirattiyā-k-kiyāṉam,* பெ.(n.) **அப்பச்சக்காணம்** (மேருமந்.1378, உரை) பார்க்க; see *appaccakkāṇam.*

*[Skt.aprathyākhyāna> த. அப்பிரத்தியாக் கியானம்.]*

**அப்பிரதக்கிணம்** *a-p-piratakkiṇam,* பெ.(n.) **அப்பிரதட்சிணம்** பார்க்க; see *a-p-pirataṭciṇam.* "நகரை யப்பிரதக்கிணமா யதினடந்து" (பிரபோத.12:12).

**த.வ. இடம்வரல்.**

*[Skt. a-pradakṣiṇa>த.அப்பிரதக்கிணம்.]*

**அப்பிரதட்சிணம்** *a-p-pirataṭciṇam,* பெ.(n.) வலமிருந்து இடம் வருகை; circumambulation from right to left.

**த.வ. எதிர்வலம், இடச்சுற்று, இடம்வரல்.**

*[Skt. a-pradakṣiṇa > த.அப்பிரதட்சிணம்.]*

**அப்பிரதானம்** *a-p-piradāṉam,* பெ.(n.) முதன்மையல்லாதது; that which is non-essential, secondary.

*[Skt. a-pradhāna > த. அப்பிரதானம்.]*

**அப்பிரதானி** *appiradāṉi,* பெ.(n.) சிறியோன் (வின்.); insignificant person.

*[Skt. a-prādhana > த. அப்பிரதானி.]*

**அப்பிரதிப்பழம்** *appiradi-p-paḻam,* பெ.(n.) பேரீச்சைப் பழம் (பேரீந்து); date fruit of date tree, *Phoenix dactylifera* (சா.அக.).

**அப்பிரதிபை** *appiradibai,* பெ.(n.) தோல்வித் தானத் தொன்று (செந்.iii, 13); a fault in argumentation.

**த.வ. எதிராடல் குற்றம்.**

*[Skt. a-pratibhā > த. அப்பிரதிபை.]*

**அப்பிரதீரூபகதை** *appiradirūbakadai,* பெ.(n.) **அப்பிரதிபை** (செந்.iii, 16); பார்க்க; see *appiradibai*

*[Skt. a-prati-rūpa- > த. அப்பிரதீரூபகதை.]*

**அப்பிரபஞ்சம்** *appira-bañjam,* பெ.(n.) எலிப் பயறு; a wild grain wild horse-gram (சா.அக.).

*[Skt. a-p-pira-pañja > த. அம்பிரபஞ்சம்.]*

**அப்பிரபுட்பம்** *appiraputpam,* பெ.(n.) நீர் (சிந்தா.நி.169); water.

*[Skt. abhra-puṣpa > த. அப்பிரபுட்பம்.]*

**அப்பிரபுத்தன்** *appiraputtaṉ,* பெ.(n.) கூர்ந்துணர்வில்லாதவன் (திருக்களிற்றுப்.57, உரை); person without acute intellect.

த.வ. மழுங்கன்.

[**Skt.** *a-prabuddha > த. அப்பிரபுத்தன்.*]

**அப்பிரம்**[1] *appiram,* பெ.(n.) முகில் (பிங்.); cloud.

[**Skt.** *abhra > த. அப்பிரம்.*]

**அப்பிரம்**[2] *appiram,* பெ.(n.) 1. வானுலகம்; svarga. 2. வானம்; sky.

[**Skt.** *abhra > த. அப்பிரம்.*]

**அப்பிரம்**[3] *appiram,* பெ.(n.) 1. பொன்; gold. 2. காக்கைப் பொன் (அப்பிரகம்); mica; talc (சா.அக.).

[**Skt.** *abhra > த. அப்பிரம்.*]

**அப்பிரமண்ணியம்** *appiramaṇṇiyam,* பெ.(n.) உதவி வேண்டிக்கூறும் குறிப்புமொழி (கலிங்.455, புது.); an alarmist exclamation meaning a monstrous (lit. urbrāhmanical) deed is perpetrated used in calling for help.

[**Skt.***a-brahmaṇya>த. அப்பிரமண்ணியம்.*]

**அப்பிரமாணம்** *a-p-piramāṇam,* பெ.(n.) 1. ஆணை (பிரமாணம்) யல்லாதது; that which is untrustworthy, not valid. 2. பொய் ஆணை (பொய்சத்தியம்); false oath. *"அவன் முறையாயத்தில் அப்பிரமாணம் பண்ணினான்".* 3. எல்லைக்குட் படாதது; that which is unlimited, illimitable.

[**Skt.** *a-pramāna > த. அப்பிரமாணம்.*]

**அப்பிரமாணஐதிகம்** *appiramāṇa-aidigam,* பெ.(n.) காணாத தொன்றை உளதென்றுரைக்கும் உலகவுரை (சி.சி. அளவை, 1, மறைஞா.); unattested tradition.

த.வ. இல்லதை உளதெனல்.

[**Skt.***a-pramāṇa+aitihya>த.அப்பிரமாண ஐதிகம்.*]

**அப்பிரமாணிக்கம்**[1] *a-p-piramāṇikkam,* பெ.(n.) 1. சான்றற்றது; that which is without sufficient proof or authority. 2. கயமைத் தனம் (உ.வ.); dishonesty.

[**Skt.***a-prāmāṇika>த. அப்பிரமாணிக்கம்.*]

**அப்பிரமாணிக்கம்**[2] *a-p-piramāṇikkam,* பெ.(n.) உறுதியாகக் கொள்ளத் தகாதது (வின்.); untrustworthiness, unreliability.

[**Skt.***a-prāmāṇika> த. அப்பிரமாணிக்கம்.*]

**அப்பிரமாணிக்கன்** *appiramāṇikkaṉ,* பெ.(n.) பொய்யன் (வின்.); liar.

[**Skt.***a-prāmāṇika>த. அப்பிரமாணிக்கன்.*]

**அப்பிரமாதங்கம்** *appiramādaṅgam,* பெ.(n.) இந்திரனது யானை (சிந்தா.நி.169); Indra's elephant.

[**Skt.***abhra-mātaṅga>த. அப்பிரமாதங்கம்.*]

**அப்பிரமு** *appiramu,* பெ.(n.) **அப்பிரமை** (வின்.) பார்க்க; see *a-p-piramai.*

[**Skt.** *Abhramu > த. அப்பிரமு.*]

**அப்பிரமேயம்** *a-p-pirамēyam,* பெ.(n.) 1. அளக்கமுடியாதது; that which is immeasurable. 2. ஒரு பேரெண் (வின்.); a hundred quintillions.

[**Skt.** *a-prameya > த. அப்பிரமேயம்.*]

**அப்பிரமை** *appiramai,* பெ.(n.) கீழ்த்திசைப் பெண்யானை (சது.); name of the female elephant of the East, mate of *airāvatam.*

[**Skt.** *abhramu > த. அப்பிரமை.*]

**அப்பிரயோசனம்** *a-p-pirayōšaṉam,* பெ.(n.) பயனின்மை; fruitlessness.

[**Skt.** *a-prayōjaṉa > த. அப்பிரயோசனம்.*]

**அப்பிராகிருதசரீரம்** *a-p-pirākiruda-šarīram,* பெ.(n.) தெய்வத் தன்மைமிக்க மேன்மையான உடல்; divine body, as not made of gross matter.

[**Skt.** *a-prākṛta+šarira>த. அப்பிராகிருத சரீரம்.*]

**அப்பிராகிருதம்** *a-p-pirākirudam,* பெ.(n.) இயற்கைக்கு அப்பாற்பட்டது (பிரகிருதி சம்பந்தமற்றது) (அஷ்டாதச. தத்வத்.3:51); that which transcends nature.

த.வ. இயற்கை இகவு.

*[Skt. a-prākṛta > த. அப்பிராகிருதம்.]*

**அப்பிராகிருதலோகம்** *a-p-pirākiruda-lōgam,* பெ.(n.) வீடுபேறு (பரமபதம்) (குருபர.5); heaven.

*[Skt. a-prākṛta+lōka > த. அப்பிராகிருத லோகம்.]*

**அப்பிராணம்** *appirāṇam,* பெ.(n.) 1. ஆவி (உயிர்) அடங்குகை; absence of life. 2. சாவு; death (சா.அக.).

*[Skt. a-prāṇa>த. அப்பிராணம்.]*

**அப்பிராணி** *a-p-pirāṇi,* பெ.(n.) 1. பேதை (உ.வ.); harmless, undesigning person. 2. நலிந்தோன்; சத்தியில்லாதவன் (உ.வ.); feeble, weak person. *பாவம், அப்பிராணி, அவனை ஏன் அடிக்கிறீர்கள் (இக்.வ.).*

த.வ. அமைதியாளன், வலியிலான், தீதிலான், வலுவிலி.

*[Skt. a-prāṇin > த. அப்பிராணி.]*

**அப்பிராத்தகாலம்** *appirātta-kālam,* பெ.(n.) தோல்வித்தானத் தொன்று (செந்.iii, 13); a fault in argumentation.

*[அப்பிராத்த(ம்) + காலம்.]*

*[Skt. a-prāpta> த. அப்பிராத்தம்.]*

*கால் (நீட்சி) →காலம்.*

**அப்பிராப்தி** *a-p-pirāpti,* பெ.(n.) அடையாமை; non-attainment, non-acquisition.

த.வ. எய்தாமை.

*[Skt. a-pirapti> த. அப்பிராப்தி.]*

**அப்பிராப்பியம்** *a-p-pirāppiyam,* பெ.(n.) 1. அடைதற்கரியது; that which is difficult to obtain. *"அப்பிராப்பிய மென்றுரைக்கின்" (சூத.எக்கிய.பூ.38:15).* 2. அடையத்தகாதது; that which is not fit to obtain. *அப்பிராப்பியமான தேவதாந் தரங்கள்.*

த.வ. எய்தொணாதது.

*[Skt. a-prāpya>த. அப்பிராப்பியம்.]*

**அப்பிராமணன்** *a-p-pirāmaṇaṉ,* பெ.(n.) போலிப் பார்ப்பனன்; pseudo-Brāhman.

*[Skt. a-brāhmaṇa>த. அப்பிராமணன்.]*

**அப்பிராமாணிக்கம்** *a-p-pirāmāṇikkam,* பெ.(n.) உறுதியாகக் கொள்ளத்தகாதது (வின்.); untrust-worthiness, unreliability.

*[Skt. a-prāmāṇika>த. அப்பிராமாணிக்கம்.]*

**அப்பிராமாணியம்** *a-p-pirāmāṇiyam,* பெ.(n.) அதிகாரமின்மை, உறுதியாகாமை, நிலையின்மை (பிரமாணமாகாமை) (சி.சி.8:5, ஞானப்.); invalidity, unauthoritativeness.

*[Skt. a-prāmāṇya>த. அப்பிராமாணியம்.]*

**அப்பிரியதரு** *appiriya-taru,* பெ.(n.) 1. பயனில்லாத மரம்; contemptible tree; a tree not useful for any purpose. 2. ஒதியமரம்; Indian ash tree, *Odina wodier* (சா.அக.).

*[Skt. a-priya+taru>த. அப்பிரியதரு.]*

**அப்பிரியம்** *a-p-piriyam,* பெ.(n.) 1. வெறுப்பு; dislike, unfriendliness. 2. வெறுப்பான செயல்; disagreeable, offensive act. *"எனக் கப்பிரியத்தை யாற்றினையால்" (நல். பாரத.இந்திர.77).*

*[Skt. a-priya > த. அப்பிரியம்.]*

**அப்பிரியா** *appiriyā,* பெ.(n.) **அப்பிரியதரு** பார்க்க; see *appiriya-taru* (சா.அக.).

*[Skt. a-priya> த. அப்பிரியா.]*

**அப்பிருகம்** *appirugam,* பெ.(n.) **அப்பிரக பாடாணம்** பார்க்க; see *appiraga-pāḍāṇam* (சா.அக.).

*[Skt. abhraka>த.அப்பிருகம்.]*

**அப்பிரேசம்** *appirēšam,* பெ.(n.) **அப்பிரகம்** பார்க்க; see *appiragam* (சா.அக.).

*[Skt. abhrasa > த. அப்பிரேசம்.]*

**அப்பீரகம்** *appīragam,* பெ.(n.) நீண்ட மரவகை (மலை.); Indian hog-plum.

**அப்பீரா** *appīrā,* பெ.(n.) சீமையத்தி; foreign fig tree; European edible fig, *Ficus carica* (சா.அக.).

**அப்புக்காத்து** *appukkāttu,* பெ.(n.) வழக்குரைஞர் (யாழ்ப்.); advocate, supreme-court pleader.

**த.வ. வழக்கறிஞர்**

*[E. advocate> த. அப்புக்காத்து.]*

**அப்புசம்** *appušam,* பெ.(n.) 1. சங்கு; chank. 2. தாமரை; lotus. 3. நீர்க்கடம்பு; water cadamba.

*[**Skt.** ab-ja > த. அப்புசம்.]*

**அப்புசன்** *appušan,* பெ.(n.) 1. நிலவு; moon. 2. தன்வந்திரி; *Tanvantiri*, the physician of the gods.

*[**Skt.** ab-ja > த. அப்புசன்.]*

**அப்புலோகிதம்** *appu-lōgidam,* பெ.(n.) சீமையிலந்தை; foreign jujube, *Zizyphus jujuba* (சா.அக.).

**அப்போசுதலர்நடபடிகள்** *appōšutalar-nada padigaḷ,* பெ.(n.) அப்போசுதலரின் கிறித்துவ சமயக் கோட்பாடுகள் குறித்து, பைபிளால் அறியப்படும் ஒரு நூல் (Chr.); name of a book in the Bible, viz., Acts of the Apostles.

*[G. apostolos> த. அப்போசுதலர்.]*

**அப்போசுதலன்** *appōšutalan,* பெ.(n.) விவிலியத்தி(பைபிளி)ல் காணப்பெறும் கிறித்துவின் தலைமைச் சீடர் பன்னிருவருள் ஒருவர் (Chr.); Apostle.

*[G. apostolos > த. அப்போசுதலன்.]*

**அப்ரகம்** *apragam,* பெ.(n.) **அப்பிரகம்** பார்க்க; see *appiragam* (சா.அக.).

*[**Skt.** abhraka > த. அப்ரகம்.]*

**அப்வாப்** *apvāp,* பெ.(n.) நிலத்தீர்வையுடன் ஏற்படுஞ் சில்லறைத் தீர்வை (R.T.); miscellaneous head of taxation, in addition to the regular land assessment.

**த.வ. சில்லறைவரி**

*[U. abwab > த. அப்வாப்.]*

**அப**[1] *aba,* இடை.(part.) வடமொழி முன்னொட்டு வகை; a Skt. adverbial or adnominal preposition implying contrariety, inferiority or distance.

*[**Skt.** apa > த. அப.]*

**அப**[2] *aba,* இடை.(part.) 1. ஏதாவது ஒரு பொருளுக்கு ஏற்படும் இழப்பு அல்லது அழிக்கை; the privation of any object or its attribute. 2. உடம்பினெப்பகுதியிலாவது, உறுப்பு முதலிய அதைச்சார்ந்த இனத்திற்காவது இயல்பாக உண்டான தன்மையை அழித்தல்; (in pathology) privation of any organ or part of the body or depriving them of the nature of their attributes (சா.அக.).

*[**Skt.** apa > த.அப.]*

**அபக்கியாதி** *aba-k-kiyādi,* பெ.(n.) புகழின்மை; disrepute, disgrace, infamy.

*[**Skt.** apakhyāti > த. அபக்கியாதி.]*

**அபக்குரோசம்** *abakkurōšam,* பெ.(n.) இகழ்கை (சிந்தா. நி. 181); treating with contempt.

*[**Skt.** apākrōša > த. அபக்குரோசம்.]*

**அபக்குவபுத்தி** *abakkuva-putti,* பெ.(n.) பக்குவப்படாத அறிவு; immature understanding (சா.அக.).

*[அபக்குவ(ம்) + புத்தி.]*

*[**Skt.** a - pakva + த. அபக்குவ(ம்).]*

*புல் > புலம் = பொருளொடு பொருந்தும் அறிவு. அறிவுறுப்பு, அறிவுநூல் (சு.வி. 36.). புலம் > புலன். புல் > புன் > (புந்தி) > புத்தி = அறிவு, நல்வழி, வழிவகை.*

**அபக்குவபோசனம்** *abakkuva-bōšanam,* பெ.(n.) முறையாகச் சமைக்காத உணவா யுண்ணுகை; eating food improperly cooked (சா.அக.).

த.வ. ஏலா உணவு.

[*Skt.* *a-pakva + bhōjana> த. அபக்குவ போசனம்.*]

**அபக்குவம்** *a-bakkuvam,* பெ.(n.) முதிராமை; immaturity, unfitness.

[*Skt.* *a-pakva > த. அபக்குவம்.*]

**அபக்குவம்**[2] *a-bakkuvam,* பெ.(n.) 1. பழுக்காமை; unripeness. 2. செரியாமை; indigestion (சா.அக.).

[*Skt.* *apakva > த. அபக்குவம்.*]

**அபக்குவன்** *a-bakkuvan,* பெ.(n.) பக்குவமடையாதவன் (தாயு. நினைவொ. 8.); immature person, one not yet fit, esp. to be initiated.

[*Skt.* *a-pakva > த. அபக்குவன்.*]

**அபக்குவி** *abakkuvi,* பெ.(n.) **அபக்குவன்** பார்க்க; see *abakkuvan.*

[*Skt.* *a-pakvin > த. அபக்குவி.*]

**அபகடம்** *aba-kaḍam,* பெ.(n.) ஏய்ப்பு; guile, dissimulation. *"அபகட நினைவிகள்" (திருப்பு. 243).*

[*Skt.* *ava-kaṭa > த. அபகடம்.*]

**அபகதவியாதியன்** *abakada-viyādiyan,* பெ.(n.) நோய்வாய்ப்பட்டுப் பிறகு குணமடைந்தவன்; one who has recovered from an illness or a disease, convalescent.

த.வ. நோயகன்றோன்.

[*Skt.* *apa-ghata+vyādhistha>த. அபகத வியாதியன்.*]

**அபகம்** *abagam,* பெ.(n.) இறப்பு (சிந்தா. நி. 170); death.

[*Skt.* *apa-ga > த. அபகம்.*]

**அபகமம்** *aba-gamam,* பெ.(n.) இறப்பு; death (சா.அக.).

[*Skt.* *apaga> த.அபகமம்.*]

**அபகரி-த்தல்** *aba-gari-,* 4. செ. குன்றாவி.(v.t.) கவர்தல்; பிறருக்கு உரியதை நேர்மையற்ற முறையில் எடுத்துக் கொள்ளுதல்; to seize by violence, snatch away, plunder, abduct. *"எனையபகரிக்க வந்த சின்மயம்" (தாயு. ஆசை. 33.). வேறு ஒருவருக்குக் கிடைக்க வேண்டிய பதவி உயர்வை இவர் அபகரித்து விட்டாராம் (இ.வ.).*

[*Skt.* *apahar> த.அபகரி-.*]

**அபகனம்** *aba-ganam,* பெ.(n.) உறுப்பு; organ (சா.அக.).

[*Skt.* *apagana > த. அபகனம்.*]

**அபகாதம்** *abagādam,* பெ.(n.) கொல்லுகை (சிந்தா. நி. 169.); killing.

[*Skt.* *apa-ghāta > த. அபகாதம்.*]

**அபகாரம்**[1] *abagāram,* பெ.(n.) தீமை; injury, wrong, mischief. *"அபகார மாற்றச் செயினும்" (நாலடி. 69.).*

[*Skt.* *apa-kāra > த. அபகாரம்.*]

**அபகாரம்**[2] *abagāram,* பெ.(n.) கவர்கை; stealing, snatching away. *சுவர்ணபகாரம்.*

[*Skt.* *apa-hāra > த. அபகாரம்.*]

**அபகாரி** *abakāri,* பெ.(n.) தீமை செய்வோன்; one who does evil to another, wrongdoer.

[*Skt.* *apa-kārin > த. அபகாரி.*]

**அபகீர்த்தி** *aba-kīrtti,* பெ.(n.) புகழின்மை; disgrace, ill fame, disrepute.

த.வ. அவப்புகழ்.

[*Skt.* *apa-kīrti > த. அபகீர்த்தி.*]

**அபகுண்டனம்** *abakuṇḍanam,* பெ.(n.) சுற்றுகை (சிந்தா. நி. 172.); circling, revolving.

[*Skt.* *ava-kuṇthana > த. அபகுண்டனம்.*]

**அபகோலம்** *aba-kōlam,* பெ.(n.) அழிஞ்சில்; sage-leaved alangium, *Alangium lamarckil* (சா.அக.).

**அபங்கம்** *abaṅgam,* பெ.(n.) 1. கோளகவைப்பு நஞ்சு (மூ.அ.); a mineral poison. 2. மராத்தியரது தெய்வப்பாடல்; *Marāthi* devotional song.

*[Skt. a-bhaṅga > த. அபங்கம்.]*

**அபங்கன்[1]** *abaṅgaṉ,* பெ.(n.) குறை வில்லாதவன்; one free from defect, perfect. *"கொல் யானை யபங்கா" (தமிழ்நா. 129.).*

*[Skt. a-bhaṅga > த. அபங்கன்.]*

**அபங்கன்[2]** *a-baṅgaṉ,* பெ.(n.) கடவுள் (ஞான 48.); god as undivided whole.

*[Skt. a-bhaṅga > த. அபங்கன்.]*

**அபங்குரன்** *abaṅguraṉ,* பெ.(n.) திண்ணியன்; one who is firm or unshakable. *"அபங்குர செங்கோ செங்கீரை" (குலோத் பிள்ளைத் 22).*

*[Skt. a-bhaṅgura > த. அபங்குரன்.]*

**அபச்சாயை** *abaccāyai,* பெ.(n.) 1. நிழலற்றது; shadowless being, as a deity or celestial being. 2. சாவுக்குறி; a sign of death. 3. நிழலை அளந்து நாழிகை கணிப்பதில் மாதத்திற்குரிய தள்ளுபடியளவு: deduction from the length of one's shadow, varying with the time of the year, made in calculating the hour of the day.

*[Skt. apacchāyā > த. அபச்சாயை.]*

**அபச்சி** *abacci,* பெ.(n.) அபசி பார்க்க; see *abaši* (சா.அக.).

**அபச்சுமாரம்** *abaccu-māram,* பெ.(n.) 1. கால்கை (காக்கை) வலிப்பு; epilepsy. 2. பித்து; lunacy (சா.அக.).

**அபசகம்** *abašagam,* பெ.(n.) சிற்றிலந்தை; small jujube tree, *Scutia indica.*

*[Skt. apasaka > த. அபசகம்.]*

**அபசகுனம்** *aba-šaguṉam,* பெ.(n.) தீய குறி ; bad omen.

த.வ. தீக்குறி.

*[Skt. apa-ša-guṇa> த. அபசகுனம்.]*

**அபசங்கம்** *abašaṅgam,* பெ.(n.) கால் (சிந்தா. நி. 174.); leg.

*[Skt. apa-jaṅgha > த. அபசங்கம்.]*

**அபசஞ்சாரம்** *aba-šañjāram,* பெ.(n.) தொந்தத்தை மாற்றல்; purifying the contagion, disinfection (சா.அக.).

*[Skt. apa + sañ-cāra>த. அபசஞ்சாரம்.]*

**அபசஞ்சாரி** *aba-šañjāri,* பெ.(n.) நோயின் தொந்தங்களை மாற்றும் பொருள்; a substance that changes the attributes of a disease (சா.அக.).

*[Skt. apa + sañ-cāri > த. அபசஞ்சாரி.]*

**அபசப்தம்** *aba-šapdam,* பெ.(n.) 1. வழுஉ மொழி; faulty expression. 2. தீ மொழி; inauspicious expression. 3. புகழின்மை; disrepute.

*[Skt. apa-šabda > த. அபசப்தம்.]*

**அபசயம்[1]** *aba-šayam,* பெ.(n.) கேடு (மச்சபு. திரிபுரவி. 2); destruction, ruin.

த.வ. அழிவு.

*[Skt. apa+ jaya > த. அபசயம்.]*

**அபசயம்[2]** *abašayam,* பெ.(n.) 1. பறிக்கை; taking by force. 2. தோல்வி; defeat.

*[Skt. apa-jaya > த. அபசயம்.]*

**அபசரிதம்** *aba-šaridam,* பெ.(n.) தீயொழுக்கம்; improper conduct, misbehaviour.

*[Skt. apa-carita > த. அபசரிதம்.]*

**அபசவ்வியம்[1]** *aba-šavviyam,* பெ.(n.) 1. இடப்பக்கம்; left side. *"நலத்த சவ்விய மேயப சவ்விய நாமம்" (வேதாரணி. பிரதக். 13).* 2. மாறுபாடு; contrariety, disorder, as moving from right to left.

*[Skt. apa-savya > த. அபசவ்வியம்.]*

**அபசவ்வியம்[2]** *abašavviyam,* பெ.(n.) 1. வலப்புறம்; right side. 2. எதிர்விளைவு; unfavourableness.

[*Skt.* *apa-savya* > த. *அபசவ்வியம்.*]

**அபசற்பன்** *abašarpan,* பெ.(n.) 1. தூதன்; messenger. 2. ஒற்றன்; spy.

[*Skt.* *apa-sarpa* > த. *அபசற்பன்.*]

**அபசாரசக்தி** *abašāra-šakti,* பெ.(n.) மைய நோக்க ஆற்றல் (புதுமை); centrifugal force.

[*Skt.* *apa-cāra+šakti* > த. *அபசாரசக்தி.*]

**அபசாரப்படு-தல்** *apašara-p-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) குற்றப்படுதல்; to be guilty of disregard, discourtesy, improper speech towards respectable people. *நான் இறைவனிடத்து அபசாரப்பட்டு விட்டேன்.*

[*அபசார(ம்) + படு–.*]

[*Skt.* *apa-šāra*>த. *அபசாரம்.*]

**அபசாரம்[1]** *aba-šāram,* பெ.(n.) மதிப்புக் குறைவான செயல் (மச்சபு. சந்திரோ. 17.); incivility, disrespectful conduct, irreverence.

[*Skt.* *apa-šāra* > த. *அபசாரம்.*]

**அபசாரம்[2]** *aba-šāram,* பெ.(n.) 1. இறப்பு; death. 2. முறையற்ற மருந்துகள் (அவ பத்தியம்); (in medicine) unwholesome or improper regimen.

[*Skt.* *apa-cāra* > த. *அபசாரம்.*]

**அபசி** *abaši,* பெ.(n.) 1. அக்குள், ஆண்குறி, இடுப்பு ஆகியவிடங்களில் உண்டாகும் புற்றுநோய்; a cancer about the regions of the arm-pit root of the penis, and the waist. 2. கண்டமாலை, கடினமும், மினுமினுப்பும் கூட்டி, வலிய முடிச்சுகளைப் போன்ற கட்டிகளைத் தாடைப் புறத்திலும், தொண்டையிலும், கழுத்தைச் சுற்றியும், மாலையைப் போல் ஒன்றன்பின் ஒன்றாக எழுப்பும் ஒருவகைப் புண்; a string of a large crop of hard, glossy, painless, glandular knots gradually growing about the joints of the jaw-bones, the tendons of the neck and about the throat, *Scrofula* (சா.அக.).

த.வ. கண்டப்புற்று, கண்டமாலை.

[*Skt.* *apasi* > த. *அபசி.*]

**அபசிஅம்பர்** *abaši-ambar,* பெ.(n.) கருப்பு நிறமான அம்பர், (வேறு இரண்டு வகைகளாவன; வெள்ளம்பர், கசகசா அம்பர்); black amber. (the other two kinds are: poppy seeds amber, and white amber) (சா.அக.).

**அபசித்தாந்தம்[1]** *abašittāndam,* பெ.(n.) தவறான முடிவு; wrong conclusion. *"பன்னு மபசித்தாந்த மாகும்" (பிரபோத 43: 3).*

[*Skt.* *apa-šiddhānta* > த. *அபசித்தாந்தம்.*]

**அபசித்தாந்தம்[2]** *abašittāndam,* பெ.(n.) தோல்வித்தானத் தொன்று (செந். iii, 13.); a fault in argumentation.

[*Skt.* *apa-šiddhānta* > த. *அபசிந்தாந்தம்.*]

**அபசுமாரக்கிரகம்** *abašu-māra-k-kiragam,* பெ.(n.) குழந்தைகளைத் தாக்குமொருவகைக் கோட்குற்றம் (கிரக தோடம்). இது அறிவின்மை, மிக்கஅழுகை, வாயில்நுரை தள்ளல், உடம்பு நாற்றம், முதலிய குணங்களை உண்டாக்கும்; *a morbific diathesis common in children, arising from the evil influence of planets. It is marked by senselessness, excessive weeping, frothy saliva from the mouth, fetid smell of the body etc.* (சா.அக.).

த.வ. கோள் குற்றம்.

[*Skt.apa-sumāra+gṛha*> த.*அபசுமாரக் கிரகம்.*]

**அபசுமாரகரோகம்** *apašumāraga-rōgam,* பெ.(n.) கால்கை (காக்கை) வலிப்பு (சு.வை.ர.611.); epilepsy.

[*Skt.apasmāra-ka+rōga*> த.*அபசுமாரக ரோகம்.*]

**அபசுமாரம்[1]** *apašumāram,* பெ.(n.) 1. கால்கை (காக்கை) வலிப்பு; epilepsy, as marked by loss of memory. 2. வெறுக்கத்தக்கது; that which is repulsive, disgusting.

*[Skt. apasmāra> த.அபசுமாரம்.]*

**அபசுமாரம்²** *abašu-māram,* பெ.(n.) 1. உணர்ச்சியின் தெளிவு நீங்குதல்; loss of senses or sensual feelings. 2. உடம்பினுறுப்புக் கேற்படும் அழிவு; privation of any organ (சா.அக.).

*[Skt. apa-sumāra+gṛha> த.அபசுமாரக் கிரகம்.]*

**அபசுமாரரோகம்** *abašu-māra-rōgam,* பெ.(n.) பித்தம் மிகுதியாகி உடல் முழுவதும் பரவுவதால் நரம்பைப் பற்றிக்கொண்டு அறிவைக் கலக்கும் நோய்; a nervous affection arising from the deranged condition of bile in the system. It directly affects the mind (சா.அக.).

த.வ. பித்தமயக்கு.

*[Skt. apa-šumāra + rōga > த.அபசார ரோகம்.]*

**அபசுமாராசூரன்** *apasumārāšūran,* பெ.(n.) முயலகன் (தென். இந். க்ஷேத். பக். 252); an Asura over whose body *Naḍarāja* dances.

*[Skt. apasumāra + šūra>த.அபசுமாரா சூரன்.]*

**அபசுவாசம்** *aba-šuvāšam,* பெ.(n.) ஐந்து வித வளி (வாயுக்)களில் ஒன்று; one of the five vital airs (சா.அக.).

*[Skt. apa+švāsa > த. அபசுவாசம்.]*

**அபட்கை** *abaṭkai,* பெ.(n.) பாம்பின் கீழ்வாய் நச்சுப்பல் (வின்.); lower fang of a snake.

*[Skt. apaṭkai > த. அபட்கை.]*

**அபட்சியம்** *abaṭciyam,* பெ.(n.) உண்ணத் தகாதது; that which is unfit for consumption or is unwholesome (சா.அக.).

*[Skt. abhaksya > த. அபட்சியம்.]*

**அபடங்கி** *abaḍaṅgi,* பெ.(n.) பதுமினி சாதிப் பெண்; one of the four classes of women divided according to lust (சா.அக.).

**அபத்தக்களஞ்சியம்** *abatta-k-kaḷañjiyam,* பெ.(n.) குற்றச்சேமிப்புக் குவிப்பிடம்; storehouse of errors.

*[அபத்தம் + களஞ்சியம்.]*

*[Skt. a-baddha> த. அபத்தம்.]*

*குள்>குளஞ்சி>களஞ்சி+அம்>களஞ்சியம். களஞ்சியம் = கொள்ளிடம், இருப்பிடம்.*

**அபத்தசந்தம்** *abatta-šandam,* பெ.(n.) 1. உணவுகொள் வேட்கையின்மை; aversion of food. 2. பசியின்மை; want of appetite (சா.அக.).

*[Skt. a.baddha+santa > த. அபத்தசந்தம்]*

**அபத்தம்** *abattam,* பெ.(n.) 1. வழு; error. 2. பொய்; falsehood. 3. நிலையாமை; instability. *"குடும்பத் தபத்த முணர்கின்"* (ஞானவா. தாசு. 60.); 4. பேரிடர் (யாழ்ப்.); disaster calamity.

த.வ. பொய்ப்பழி.

*[Skt. a-baddha > த. அபத்தம்.]*

**அபத்தம்பம்** *abattambam,* பெ.(n.) மூச்சுக் குழாயின் பிரிவு; bronchial tubes or bronchia (சா.அக.).

*[Skt. abaddhamba > த. அபத்தம்பம்.]*

**அபத்தம்பமர்மம்** *abattamba-marmam,* பெ.(n.) மூச்சுக் குழற் கிளைகள் இரண்டும் கூடுமிடம்; the meeting of the bifurcated branches of the bronchialying on both sides of the breast (சா.அக.).

த.வ. மூச்சுக்குழல் வருமம்.

*[Skt. a-baddhamba+marman> த. அபத்தம்பமர்மம்.]*

த. மம்ருமம் > **Skt.** *marman*

**அபத்தம்பினி** *abattambiṉi,* பெ.(n.) ஒரு பூடு; a plant (சா.அக.).

**அபத்தமுகம்** *abatta-mugam,* பெ.(n.) இழிசொல் வழங்குவோன்; foul-mouthed.

*[அபத்தம் + முகம்.]*

*[Skt. a.baddha>த. அபத்தம்.]*

**அபத்திசந்தம்** *abatti-šandam,* பெ.(n.) **அபத்த சந்தம்** பார்க்க; see *abatta-šandam* (சா.அக.).

*[Skt. abaddha-šanda > த. அபத்திசந்தம்.]*

**அபத்தியசத்துரு** *abattiya-šatturu,* பெ.(n.) நண்டு; crab (சா.அக.).



**அபத்தியதை** *abattiyadai,* பெ.(n.) மருத்துவச்சி; midwife (சா.அக.).

**அபத்தியதோடம்** *apattiyadōḍam,* பெ.(n.) நோயுற்ற காலத்தில் உட்கொண்ட தகுதியற்ற உணவால் திரும்பிய நோய் (சீவரட். 30.); relapse caused by violation of dietary rules.

*[Skt.apathya+dōṣa>த. அபத்தியதோடம்.]*

**அபத்தியபதம்** *abattiya-padam,* பெ.(n.) பெண்குறி; female sexual organ (சா.அக.).

**அபத்தியம்**[1] *abattiyam,* பெ.(n.) முறையாக (பத்தியம்) மருந்துணாத் தவறு; deviation from prescribed diet, improper or unsuitable diet, in medical treatment. *"அபத்தியஞ் செய்திட றனக்கே கேடு" (வேதா. சூ. 175.).*

த.வ. பத்தியக்கேடு.

*[Skt. apathya > த. அபத்தியம்.]*

**அபத்தியம்**[2] *abattiyam,* பெ.(n.) 1. பிள்ளை (சிந்தா. நி. 168.); child. 2. மக்கட்பொது (நாநார்த்த.); human being.

*[Skt. apatya > த. அபத்தியம்.]*

**அபத்திரவியம்** *aba-t-tiraviyam,* பெ.(n.) 1. மாசு; want of cleanliness. 2. கலப்பு; admixture (சா.அக.).

**அபதந்திரகம்** *aba-tandiragam,* பெ.(n.) வளி மிகுதியால் (வாதாதிக்கத்தினால்) மூளை தாக்கப்பட்டு, அதனாலேற்படும் இசிவு முதலான வலி; convulsions as a result of the affection of brain due to the aggravated condition of 'vāyu' in the system, *Apoplectic convulsions* (சா.அக.).

த.வ. மூளை இசிவு.

**அபதந்திரம்** *aba-tandiram,* பெ.(n.) **அபதந்திரகம்** பார்க்க; see *abatandiragam* (சா.அக.).

**அபதர்ப்பணம்** *aba-darppaṇam,* பெ.(n.) 1. உண்ணா நோன்பு; fasting. 2. நோன்பு; low diet (சா.அக.).

*[Skt. apa+tarppaṇa> த.அபதர்ப்பணம்.]*

**அபதரோகிணி** *abada-rōgiṇi,* பெ.(n.) ஒரு புல்லுருவி; a parasitic plant, *Epidendron tesselloides* (சா.அக.).

**அபதாங்கம்** *aba-tāṅgam,* பெ.(n.) கருவைக் கரைப்பதாலும் அல்லது கரு தானாகவே அழிவதாலும் காயமடைவதனாலும், மற்றும் வேறு வகைக் காரணங்களினாலும் ஏற்பட்ட மிகுதி அரத்தவொழுக்கினால் உடம்பிலுண்டாகும் அதிர்ச்சி; a condition due to excessive hemorrhage following closely upon an abortion or miscarriage or one incidental to an external blow or injury-shock, is generally incurable (சா.அக.).

த.வ. கருவிழி நடுக்கம்.

**அபதார்த்தம்** *a-padārttam,* பெ.(n.) 1. உள்ளதல்லாதது; nonentity. 2. பயனற்றது; that which is useless.

*[Skt. a-padārtha > த. அபதார்த்தம்.]*

**அபதானகம்** *aba-tāṉagam,* பெ.(n.) 1. எல்லா வகை நோய்களிலும் காணும் இசிவு; a general paroxysm found in all disease. 2. வளியினால் நரம்புகள் தாக்கப்பட்டு அதனாலேற்படும் வலி அல்லது இசிவு; convulsion due to the affection of the nerves or nerve - centres of a functional or natural. 3. கால்கை (காக்கை) வலியாற் காணுமிசிவு; a sharp paroxysm due to epilepsy-fit (சா.அக.).

த.வ. நோய் இசிவு.

[Skt. *apa-dāna*> த. *அபதானகம்.*]

**அபதானகவாதம்** *aba-tāṉaga-vādam,* பெ.(n.) 1. உடம்பு சூடாகி வளி (வாயு) எல்லா நரம்புகளிலும் பரவுவதால், திடீரென எழுந்திருத்தல், உளறுதல், நடத்தல், நகைத்தல் முதலிய கெட்ட குணங்களைக் காட்டுமொரு நோய்; a neurotic disease of a functional origin extending to the nerve centres due to the aggravated condition of vayu in the system. It is marked by the sudden rising of the person from bed, incoherent speech and peculiar laughter, a kind of neurosis. 2.இசிவின்(வாதத்தின்) எழுச்சியினாலெழுந்து, நரம்புகளிற் பரவி எழுந்தெழுந்து விழுவதும், வலிப்புத் தவிர, மற்றபடி இயல்பாக ஏற்படும் கால்கை (காக்கை) வலிப்பு நோய்; a form of disease in which the patient falls to the ground at intervals and exhibits all symptoms of epilepsy except convulsions (சா.அக.).

த.வ. இயல்பலா இயக்க நோய்.

[Skt. *apa-dāna+vāta*>த. *அபதானக வாதம்.*]

**அபதானம்** *abadāṉam,* பெ.(n.) நற்பெருஞ் செயல்; great or noble dead. *"இதுவன்றோ அவனுடைய அபதான மிருக்கிறபடி"* (ஈடு. 2, 8, 8).

த.வ. அருஞ்செயல்.

[Skt. *apa-dāna* > த. *அபதானம்.*]

**அபதேசம்** *abadēśam,* பெ.(n.) 1. பெரும்புகழ்; fame. 2. நிமித்தம்; cause, motive. 3. தலைக் கீடு உரை (வியாஜம்); pretext. 4. குறி; mark, butt. 5. இடம்; place.

[Skt. *apa-dēśa* > த. *அபதேசம்.*]

**அபதேவதை** *aba-dēvadai,* பெ.(n.) ஆரஞர் தெய்வம், தீய தெய்வம்; demon, goblin, evil spirit.

[Skt. *apa-dēvatā* > த. *அபதேவதை.*]

**அபநயம்** *abanayam,* பெ.(n.) 1. பிணி தீர்த்தல்; curing a disease. 2. இறப்பு; death (சா.அக.).

**அபநாசி** *abanāśi,* பெ.(n.) மூக்கின்மை; lack of nose, congenital absence of a nose (சா.அக.).

[Skt. *apa-nāśika*> த. *அபநாசி.*]

**அபநித்திரை** *aba-nittirai,* பெ.(n.) உறக்கமின்மை; sleeplessness inability to sleep, insomnia (சா.அக.).

த.வ. உறக்கக்கேடு.

[Skt. *apa-nidrā* > த. *அபநித்திரை.*]

**அபநிரியாணம்** *abaniriyāṇam,* பெ.(n.) படையெழுச்சி (சிந்தா. நி. 182.); march of troops.

[Skt. *apa-niryāṇa* > த. *அபநிரியாணம்.*]

**அபப்பிரசாதை** *aba-p-pirašādai,* பெ.(n.) வயிற்றிற் கருவழித்தவள்; a female who has had a miscarriage; an aborted woman (சா.அக.).

**அபபாத்திரிதன்** *abapāttiridaṉ,* பெ.(n.) இனத்திலிருந்து விலக்கி வைக்கப்பட்டவன் (பிரஷ்டன்) (Cm.); one who is excommunicated.

[Skt. *apa-pātrita*>த. *அபபாத்திரிதன்.*]

**அபமட்டர்** *aba-maṭṭar,* பெ.(n.) வட்டத் திருப்பி; velvet leaf, *Cissampelos pareira* (சா.அக.).

**அபமம்** *abamam,* பெ.(n.) வான்கோள நடுநேர் வரையிலிருந்து விண்மீனுக்குரிய கோணத் தொலைவு; (Astron.) declination.

த.வ. விலகல் கோணம்.

[Skt. apama > த. அபமம்.]

**அபமரணம்** *aba-maraṇam,* பெ.(n.) 1. **அகால மரணம்** பார்க்க; see *akālamaraṇam.* 2. இயற்கைக்கு மாறான இறப்பு; unnatural death (சா.அக.).

[Skt. apa-maraṇa>த. அபமரணம்.]

**அபமார்க்கம்** *aba-mārkkam,* பெ.(n.) 1. நாயுருவிச் சமூலம்; the plant as a whole; Indian burr, *Achyranthes aspera.* 2. ஆதன் கடைத்தேறும் வழி; the path of emancipation (சா.அக.).

[Skt. apā-mārga> த. அபமார்க்கம்.]

**அபமார்க்கி** *abamārkki,* பெ.(n.) பூடுவகை (பதார்த்த. 395.); species of *Achyranthes.*

[Skt. apā-mārga > த. அபமார்க்கி.]

**அபமானம்** *abamāṇam,* பெ.(n.) மானக்கேடு (அபகீர்த்தி) சிந்தா. நி. 173.); dishonour, disgrace.

த.வ. மானக்கேடு.

[அப + மானம்.]

[Skt. ava> த. அப.]

**அபமிருத்தியு**[1] *aba-miruttiyu,* பெ.(n.) இயற்கைக்கு மாறான இறப்பு; untimely, accidental or unnatural death.

[Skt. apa-mṛtyu > த. அபமிருத்தியு.]

**அபமிருத்தியு**[2] *aba-miruttiyu,* பெ.(n.) 1. இடர்; agreat danger. 2. நோய்; illness (from which a person recovers) (சா.அக.).

**அபமிருத்து** *aba-miruttu,* பெ.(n.) **அபமிருத்தியு** பார்க்க; see *aba-miruttiyu* (சா.அக.).

[Skt. apa-mṛtyu> த. அபமிருத்து.]

**அபயக்கல்** *abayakkal,* பெ.(n.) எல்லைக்கல் (இ.வ.); boundary stone, as removing fear of encroachment.

[அபயம் + கல்.]

[Skt. a-bhaya>த. அபயம்.]

**அபயகத்தம்** *abaya-kattam,* பெ.(n.) 1. அடைக்கலக் கை; right hand of an idol or great person raised in token of dispelling fear and assuring protection. 2. கடவுளின் வலக்கை (அபய) முத்திரை பதிந்த சந்தன வில்லை; brittle cake of sandal containing the impression of the right hand of the idol and presented to worshippers in temples.

[Skt. a-bhaya + hasta >த. அபயகத்தம்.]

**அபயகரம்** *abayakaram,* பெ.(n.) **அபயாத்தம்** பார்க்க; see *abayāttam.* *"ஆசை யளிக்கு மபயகரம் பாரேனோ"* (பட்டினத். 209).

த.வ. அடைக்கலங்கை, உதவிக்கை.

[Skt. a-bhaya> த. அபயம்.]

**அபயகுலசேகரன்** *abayakulaśegaran,* பெ.(n.) திருமுறைகண்ட சோழன் (திருமுறைகண். 1.); a *Cōla-king.*

**அபயங்கொடு-த்தல்** *abayaṅ-koḍu-,* 4 செ. குன்றாவி.(v.t.) அஞ்சலென் றருளுதல்; to dispel fear by raising the hand, give assurance of protection, give refuge.

த.வ. புகல்தரல்.

[Skt. a-bhaya> த. அபயம்.]

**அபயதானம்** *abayadāṇam,* பெ.(n.) அடைக்கலந் தருகை (கம்பரா. வீபீடண. 120); giving assurance of safety or protection.

[அபயம் + தானம்.]

[Skt. a-bhaya > த. அபயம்.]

**அபயப்பிரதானம்** *abaya-p-piradāṇam,* பெ.(n.) **அபயதானம்** (பிரபோத. 22, 5) பார்க்க; see *abayadāṇam.*

[Skt. a-bhaya+pra-dāna>த. அபயப்பிரதானம்.]

**அபயம்**[1] *abayam,* பெ.(n.) இலாமிச்சம் (நாநார்த்த); cuscus grass.

[Skt. a-bhaya>த. அபயம்.]

**அபயம்**[2] *abayam,* பெ.(n.) மிளகு (வை.மூ.); pepper.

**அபயம்**[3] *abayam,* பெ.(n.) 1. அச்சமின்மை; fearlessness, intrepidity, safety, security. *"அபயமச்சம்" (பிரபோத. 27, 81.).* 2. அடைக்கலம்; refuge, protection. *"மன்னா வுனக் கபயம்" (நளவெ. கலிநீ. 3).* 3. அருள் (பிங்.); god's grace, as refuge.

*[**Skt.** a-bhaya > த. அபயம்.]*

**அபயம்**[4] *abayam,* பெ.(n.) 1. செவ்வியம்; common or black pepper, *piper nigrum.* 2. ஒரு நறுமணப் புல்; a kind of scented grass (சா.அக.).

**அபயமிடு-தல்** *abayam-idu-,* 20 செ.கு.வி. (v.i.) அடைக்கலந்தரும்படி கூவுதல்; to call for succour, appeal for protection. *"அபயமிடு குரலறி யாயோ" (திருப்பு. 180.).*

*[அபய(ம்) + இடு-.]*

*[**Skt.** a-bhaya> த. அபயம்.]*

**அபயமுத்திரை** *abaya-muttirai,* பெ.(n.) தஞ்சமளித்தலைக் காட்டுங் கைக்குறி; pose of the right hand, as of an idol, raised as a sign of protection.

*[அபயம் + முத்திரை.]*

*[**Skt.** abhaya> த. அபயம்.]*

**அபயர்** *abayar,* பெ.(n.) வீரர் (உரி. நி.); warriors.

*[**Skt.** abhaya> த. அபயர்.]*

**அபயவத்தம்** *abayavattam,* பெ.(n.) இணைக்கை வகை (சிலப். 3, 18, உரை); (*Nāṭya.*) gesture with both hands in which they, in *śuga-tuṇḍam* pose, are placed loosely so as to face the breast.

*[**Skt.** avahittha > த. அபயவத்தம்.]*

**அபயவரதக்கை** *abaya-varada-k-kai,* பெ.(n.) மனக்கருத்தைக் குறிப்பாய் விளக்கும் கை மற்றும் மெய் செய்கை (அபிநயக்கை) வகை (பரத. பாவ. 55.); (*Nāṭya*) a pose of the hands, one indicative of protection, and the other, bestowal of boons.

*[அபயவரதம் + கை.]*

*[**Skt.**a-bhaya + varada> த. அபயவரதம்.]*

**அபயவாக்கு** *abaya-vākku,* பெ.(n.) அஞ்சலென்னும் அருட்சொல்; assurance of saftey, word of encouragement.

*[அபயம் + வாக்கு.]*

*[**Skt.** abhaya> த. அபயம்.]*

**அபயன்**[1] *abayaṉ,* பெ.(n.) 1. அருகன் (திவா.); Arhat, as without fear. 2. சோழ மன்னருள் ஒருவன்; *Cōḷa king. "செய்யகோ லபயன்" (பெரியபு. திருமலை. 12.).*

*[**Skt.** a-bhaya > த. அபயன்.]*

**அபயன்**[2] *abayaṉ,* பெ.(n.) **அபயன்கடுக்காய்** பார்க்க; see *abayaṉkaḍukkāy. "அபயனெனுங் கடுக்காய்" (பதார்த்த. 963).*

**அபயன்**[3] *abayaṉ,* பெ.(n.) அச்சமில்லாதவன் (நாநார்த்த.); fearlessman.

*[**Skt.** a-bhaya > த. அபயன்.]*

**அபயன்**[4] *abayaṉ,* பெ.(n.) உடம்பில் எலும்புகளைப் பற்றிய நோய்களைப் போக்கும் கருப்பு நிறமானதும் பொதிகை மலையில் விளைவதுமான கடுக்காய்; a species of black Indian myrobalan capable of curing disease affecting the bones in the system. Stanza goes to show that this drug is available in Podigai hills in the Tinnevelly District. *"அபயனெனுங் கடுக்கா யங்க நோ யெல்லாம் அபயமிட் டோட வடிக்கும் – அபையற் கதிக நிறங் கறுப்ப தாகும் விளை பூமி பொதிகை மலையாம் புகல்" (பதார்த்த. சிந்)* (சா.அக.).

*[**Skt.** a-bhaya> த. அபயன்.]*

**அபயன்கடுக்காய்** *abayaṉ kaḍu-k-kāy,* பெ.(n.) கடுக்காய் வகை; species of chebulic myrobalan.

*[அபயன் + கடுக்காய்.]*

*[**Skt.** abhaya> த. அபயன்.]*

**அபயாத்தம்** *abayāttam,* பெ.(n.) அச்சந்தீர வமைக்குங் கை (சிந்தா. நி. 174.); hand raised in token of dispelling fear and assuring protection.

**த.வ.** தஞ்சக்கை, அடைக்கலக்கை.

*[Skt. a-bhaya+hasta> த. அபயாத்தம்.]*

**அபயாதிசல்கம்** *abayādi-šalgam,* பெ.(n.) மூச்சு, விக்கல் ஆகியவற்றிற்குச் சுக்கும், கடுக்காயும் சேர்த்து செய்த ஒரு வகைப் பிசுபிசுப்பான மருந்து; a paste of dry ginger, and country gallnut prescribed for hard-breathing and hiccough (சா.அக.).

*[Skt.a-bhayāti+calka>த.அபயாதி சல்கம்.]*

**அபயாரிட்டம்** *abayārițțam,* பெ.(n.) காய்ச்சல் கட்டி, செரியாமை, நெஞ்சுவலி, காமாலை, குடற்பூச்சி முதலிய நோய்களுக்குக் கொடுக்குமோர் ஆயுள்வேத மருந்து; an ayurvedic preparation given in cases of enlarged spleen, impaired digestion, chronic diarrhoea, heart-disease, jaundise, ascites, worms in the intestines etc. (சா.அக.).

*[Skt. a-bhayā-rișța> த. அபயாரிட்டம்.]*

**அபர்யாப்தகம்** *aparyāptagam,* பெ.(n.) பற்றாக்குறை (மேருமந். 713, உரை.); insufficiency.

*[Skt. a-paryāptaka > த. அபர்யாப்தகம்]*

**அபரக்காத்திரம்** *abara-k-kāttiram,* பெ.(n.) 1. கால்; leg. 2. பின்கால்; hind leg (in qudrupeds) (சா.அக.).

**அபரக்கிரியை** *abara-k-kiriyai,* பெ.(n.) சவச்சடங்கு; obsequies. *"அபரக்கிரியை இன்றோடு முடிந்தது".*

**த.வ.** இறுதிக்கடன்.

*[Skt. a-para+kriyā > த. அபரக்கிரியை.]*

**அபரகாத்திரம்** *apara-kāttiram,* பெ.(n.) கால்; leg. *"வேழம்.... மருப்புத்திண்கை யபரகாத் திரங்க டம்மாற்.... கொன்றது" (சீவக. 806.).*

*[Skt. a-vara+gātra > த. அபரகாத்திரம்.]*

**அபரங்கப்பருப்பு** *abaraṅga-p-paruppu,* பெ.(n.) உளுந்து; black gram, *Phaseolus radiatus* (சா.அக.).

**அபரசன்** *abarašan,* பெ.(n.) தம்பி (சிந்தா. நி. 166.); younger brother.

*[Skt. apara-ja > த. அபரசன்.]*

**அபரசூரியன்** *abarašūriyan,* பெ.(n.) அறிவ நடைகளிற் சிறந்தோன்; person pre-eminent in wisdom and character, as a second sun.

*[அபர(ம்) + சூரியன்.]*

*[Skt. a-para> த. அபரம்.]*

**அபரஞ்சி**[1] *abarañji,* பெ.(n.) புடமிட்ட பொன்; refined gold. *"ஆயிரத் தெட்டு மாற்றி னபரஞ்சி" (மச்சபு. தாரகாசுரவ. 26.).*

**அபரஞ்சி**[2] *abarañji,* பெ.(n.) 1. தங்க ஒள்ளிழை; gold leaf used in setting precious stones. 2. கம்மாறு வெற்றிலை; a species of dark green and pungent thick betel leaf (சா.அக.).

**அபரஞ்சித்தூள்** *abarañji-t-tūl,* பெ.(n.) 1. தங்கப் பொடி; gold dust. 2. பொன்மணல்; gold ore (சா.அக.).

**அபரஞானம்** *abara-ñānam,* பெ.(n.) நூலறிவு (ஒழிவி. கிரியை. 11. உரை); that which is not divine wisdom, as knowledge of *šāstras.*

*[Skt. a-para+Pkt. ñāna>த.அபரஞானம்.]*

**அபரத்துவம்** *abarattuvam,* பெ.(n.) பின்மை (பிரபோத. 42. 2); being behind, coming after.

*[Skt. a-paratva > த. அபரத்துவம்.]*

**அபரதரன்** *abarataran,* பெ.(n.) வெடியுப்பு (வை. மூ.); saltpetre.

**அபரதன்** *abaradan,* பெ.(n.) வெடியுப்பு; nitre-potassium nitrate (சா.அக.).

**அபரதி** *abaradi,* பெ.(n.) தாமதிக்கை (சிந்தா. நி. 167.); delay.

*[Skt. ava-rati > த. அபரதி.]*

**அபரநாதம்** *abaranādam,* பெ.(n.) சிவக் கொண்முடிபுகளு ளொன்று(வின்.); a *Śivatattuvam.*

*[Skt. apara+nātha>த. அபரநாதம்.]*

**அபரபக்கம்** *abarapakkam,* பெ.(n.) தேய்பிறை (கிருஷ்ண பட்சம்); the dark or latter half of the lunar month.

**த.வ. இருட்பக்கம்.**

*[Skt. apara> த. அபர(ம்).]*

**அபரபட்சம்** *abarapaṭcam,* பெ.(n.) **அபரபக்கம்** பார்க்க; see *abarapakkam.*

*[Skt. a-para+pakṣa > த. அபரபட்சம்.]*

**அபரபுத்தி** *abaraputti,* பெ.(n.) பின்புத்தி (வின்.); indiscretion, afterthought.

**அபரபோகம்** *abara-bōgam,* பெ.(n.) இம்மை மறுமைகளில் துய்க்கத்தக்க இன்பங்கள் (சி.சி. 8, 18.); pleasures enjoyed in this world and the next.

*[Skt. a-para+bhōga > த. அபரபோகம்.]*

**அபரம்** *abaram,* பெ.(n.) 1. பின் (பிங்.); latter, being after in time or place. 2. முதுகு (பிங்.); back. 3. யானையின் பின்னங்கால் (திவா.); hind leg of an elephant. 4. பொய் (பிங்.); falsehood. 5. நிரயம் (பிங்.); hell. 6. காப்பு (பிங்.); coat of mail. 7. மேற்கு; west. *"அபர திசை"*. 8. சவ (பிண)ச் சடங்கு; obsequies. 9. தோணியின் பின்பக்கம்; stern of a ship.

*[Skt. a-para > த. அபரம்.]*

**அபரமார்க்கம்** *abara-mārkkam,* பெ.(n.) வெண்ணாயுருவி; a white species of நாயுருவி. a plant, Indian burr, *Acchyrathes aspera* (சா.அக.).

**அபரமுத்தி** *abara-mutti,* பெ.(n.) 1. பதமுத்தி; inferior state of bliss, attainment of heavens of deities, opp to paramutti. 2. தூய மெய்ப்பொருள் (தத்துவங்)களிற் பெறும் வாழ்வு; (*Śaivam*) incomplete liberation which consists in enjoyment of bliss in any one of the *śutta-tattuvam.*

*[Skt. a-para+mukti > த.அபரமுத்தி.]*

**அபரராத்திரம்** *abara-rāttiram,* பெ.(n.) நள்ளிரவிற் கடுத்த சாமம்; small hours of the night.

*[Skt. a-para-rātra > த. அபரராத்திரம்.]*

**அபரவங்கம்** *abara-v-aṅgam,* பெ.(n.) உடம்பை வில்லைப் போல் பின்புறமாக வளைக்குமோர் ஊதை (வாத) நோய்; a tetanic condition of the muscles, especially of the back, whereby there is an arching backward of the trunk which thus rests upon head and heels-opisthrotonus (சா.அக.).

**த.வ. வில்லூதை.**

*[Skt. a-para+aṅga> த. அபரவங்கம்.]*

**அபரவயசு** *abara-vayaśu,* பெ.(n.) முதிரகவை; old age.

*[Skt. a-para > த. அபரம்.]*

**அபரவலி** *abara-vali,* பெ.(n.) முதுகு வலி; pain in the back-Notalgia (சா.அக.).

*[அபரம் + வலி.]*

*[Skt. apara > த. அபரம்.]*

**அபரவாக்கியம்** *abara-vākkiyam,* பெ.(n.) பூகோள கணிதத்தில் பிழை தீர்க்க ஏற்பட்ட எண்மான வகை (வின்.); (Astron.). a resulting equation or correction following a calculation.

*[Skt. a-para+vākya > த.அபரவாக்கியம்.]*

**அபரவாகீசுவரர்** *abara-vāgīśuvarar,* பெ.(n.) (சிவபேதம்) சிவன் சிவை வேறுபாடுகளுள் ஒன்று; a form of *Śivaṉ.*

*[Skt.a-para+vāgiśuvarar>த.அபரவாகீசுவரர்.]*

**அபரவாகீசுவரி** *abara-vāgīśuvari,* பெ.(n.) வித்தமிழ்தின் ஆற்றல் (விந்துசக்தி)

(சி.போ.பா, 2, 4, பக். 233.); a form of divine energy.

*[Skt. a-para+vāgišuvarī>த. அபரவாகீசுவரி.]*

**அபரவிந்து** *abara-vindu,* பெ.(n.) **அபரவாகீசுவரி** (சி.போ. 2, 4, பக். 223.) பார்க்க; see *abara-vāgišuvari.*

*[அபர(ம்) + விந்து.]*

*[**Skt.** a-para> த. அபர(ம்).]*

**அபரா** *abarā,* பெ.(n.) நஞ்சுக்கொடி; navel string, umbilical cord (சா.அக.).

**அபராங்கம்** *abarāṅgam,* பெ.(n.) முதுகுப்புறம்; the hinder part of the body, back. *"வேடனத னபராங்கம் பிளக்க வெய்தான்" (பாரத. அருச்சுனன் தவ. 90.).*

*[**Skt.** a-para+aṅga > த. அபராங்கம்.]*

**அபராசி** *abarāši,* பெ.(n.) விட்டுணுக்கிராந்தி (நாமதீப.); *viṭṭuṇukkirāndi,* a medicinal plant.

*[**Skt.** aparāji > த. அபராசி.]*

**அபராசிதம்** *abarāšidam,* பெ.(n.) விட்டுணுக் கிராந்தி; Vishnu plant, clitoria ternatia alias *Evolvulus, alsinoides* (சா.அக.).

*[**Skt.** aparājita> த. அபராசிதம்.]*

**அபராசிதன்**[1] *abarāšidaṉ,* பெ.(n.) 1. சிவன்; *Šivaṉ,* 2. திருமால்; *Viṣṇu.*

*[**Skt.** aparājita > த. அபராசிதன்.]*

**அபராசிதன்**[2] *abarāšidaṉ,* பெ.(n.) வெல்லப் படாதவன் (சங். அக.); he who is unconquered, invincible.

*[**Skt.** a-parā-jita > த. அபராசிதன்.]*

**அபராசிதை** *abarāšidai,* பெ.(n.) 1. கொற்றவை (துர்க்கை); *Durgā.* 2. விட்டுணுக்கிராந்தி; a medicinal plant.

*[**Skt.** a-parājitā > த. அபராசிதை.]*

**அபராணம்** *abarāṇam,* பெ.(n.) பிற்பகல்; afternoon, last watch of the day. *"அபராணப் போழ்தி னடகிடுவ ரேனும்" (நாலடி, 207.).*

*[**Skt.** aparāhṇa > த. அபராணம்.]*

**அபராத்திரம்** *abarāttiram,* பெ.(n.) கடையாமம்; the last part of the night (சா.அக.).

**அபராதகாணிக்கை** *abarāda-kāṇikkai,* பெ.(n.) செலுத்தற்குரிய நேர்த்திக் கடனைச் சரியாகச் சேர்ப்பிக்காத பிழைக்காகச் செலுத்தும் காணிக்கை (கொ.வ.); gift of god made in expiation of failure to present the original gift in due time as vowed.

**த.வ. தப்புக் காணிக்கை.**

*[அபராத(ம்) + காணிக்கை.]*

*[**Skt.** apa-rādha> த.அபராதம்.]*

**அபராதம்** *abarādam,* பெ.(n.) 1. குற்றம்; offence, transgression, fault, crime, sin. *"அடியனேன் முன்னஞ் செய்த வபராதம்" (திருவிளை. நான்மாடக் 25.).* 2. தண்டம்; fine, penalty.

**த.வ. தப்பு, தப்புக் கட்டணம்.**

*[**Skt.** apa-rādha > த. அபராதம்.]*

**அபராதசாபணம்** *abarāda-šābaṇam,* பெ.(n.) மன்னிப்புக் கோருகை (குருபரம். 115.); seeking forgiveness (சா.அக.).

*[**Skt.** apa-rādha+kṣāpaṇa>த. அபராதசா பணம்.]*

**அபராதி** *abarādi,* பெ.(n.) தீங்கிழைத்தோன்; offender, guilty person. *"உறவினுக் கபராதியும்" (சிவதரு. பாவ. 68.).*

*[**Skt.** apa-rādhin > த. அபராதி.]*

**அபராவதாரம்** *abarāvadāram,* பெ.(n.) முன்னெடுத்த தோற்றரவின் மாறுபடு தோற்றரவு; new, different incarnation.

*[**Skt.** apara+ava-tāra > த. அபராவதாரம்]*

**அபரான்னம்** *abarāṉṉam,* பெ.(n.) 1. நண்பகலை யடுத்து வரும் ஆறு நாழிகைப் பொழுது; the period of the day which follows noon up to 2.24 p.m. (சா.அக.).

**த.வ. உச்சிசாய்வு.**

**அபரிக்கிரகம்** *abarikkiragam,* பெ.(n.) 1. பிறர்பால் ஏற்காமையாகிய நோன்பு; the vow of not receiving anything from another. 2. உரிமைச் சொத்துகளை நீக்கி விடுகை (மேருமந். பாயி XV); (Jaina.) renouncing property.

*[**Skt.** a-parigraha > த. அபரிக்கிரகம்.]*

**அபரிச்சடம்** *abari-c-cadam,* பெ.(n.) 1. கருப்பம் முழுவதுமாகுமுன் பிறத்தல்; not born fully developed. 2. குறை (அகால)ப் பிறப்பு; premature birth (சா.அக.).

**அபரிச்சதம்** *abari-c-cadam,* பெ.(n.) உடையின்மை; nakedness, nudity (சா.அக.).

**அபரிச்சின்னம்** *apariccinnam,* பெ.(n.) அளவிட முடியாதது; that which is unlimited. *"எம்பெருமானது அபரிச்சின்னமான குணங்கள்".*

*[**Skt.** a-paricchinna > த. அபரிச்சின்னம்.]*

**அபரிசகுட்டம்** *abariša-kuttam,* பெ.(n.) உடம்பு முழுவதும் வீங்கி வெடித்து அதினின்றும் கறுப்பு இரத்தம் வடிந்து, தொடக் கூடாத வலியை யுண்டாக்கும் ஒருவகைக் குட்டம்; a kind of leprosy analogons to syphilis, attended with swelling, ulceration and a discharged of venous blood. The prodromal symptoms are associated with hyperesthesia of skin (சா.அக.).

**த.வ. வெடிப்புக்குட்டம்.**

**அபரிசரம்** *abarišaram,* பெ.(n.) தொலைவு (தூரம்) (சிந்தா. நி. 173.); distance.

*[**Skt.** a-parisara > த. அபரிசரம்.]*

**அபரிதை** *abaridai,* பெ.(n.) முயக்க மறியாத பெண்; a woman who has had no carnal knowledge of man, a virgin or an unmarried woman (சா.அக.).

*[**Skt.** aparita > த. அபரிதை.]*

**அபரிபூதம்** *abari-būdam,* பெ.(n.) 1. முதிராதது; that which is not matured. 2. திமிங்கிலம்; whale (சா.அக.).

*[**Skt.** a-pari-buta > த. அபரிபூதம்.]*

**அபரிமிதம்** *aparimidam,* பெ.(n.) அளவின்மை (பிங்.); unlimitedness, immeasurable ness, immensity.

*[**Skt.** aparimita > த. அபரிமிதம்.]*

**அபருடவாக்கியம்** *aparuda-vākkiyam,* பெ.(n.) கொடுமையற்ற சொல் (தக்கயாகப். 664, உரை.); agreeable speech.

**த.வ. இன்சொல்.**

*[**Skt.**a-parusa+vākya>த.அபருடவாக்கியம்.]*

**அபரூபம்** *abarūbam,* பெ.(n.) அழகின்மை; gross deviation from, beauty; disfigurement; defornity (சா.அக.).

*[**Skt.** apa+rūpa > த. அபரூபம்.]*

த.உருவம் > **Skt.** *rūpa.*

**அபரை** *abarai,* பெ.(n) **அபரா** பார்க்க; see *abarā* (சா.அக.).

**அபரோட்சஞானம்** *abarōtca-ñānam,* பெ.(n.) தெளிவான காட்சி அறிவு (பிரத்தியட்சஞானம்) (வேதா. சூ. 23, உரை.); direct cognition as arising from the senses or such other sources of perception.

**த.வ. காட்சியறிவு.**

*[**Skt.**a-parōksa+**Pkt.** ñāna>த. அபரோட்ச ஞானம்.]*

**அபரோட்சம்** *abarōtšam,* பெ.(n.) அபரோட்ச ஞானம் (வேதா. சூ. 115.) பார்க்க; see *abarōtca-ñānam.*

*[**Skt.** aparōksa > த. அபரோட்சம்.]*

**அபல் முசுக்கு** *abal-mušukku,* பெ.(n.) கத்தூரி வெண்டை; musk bendy, *Hibiscus abelmoschus* (சா.அக.).

**அபல்லியம்** *aballiyam,* பெ.(n.) நோய்; sickness (சா.அக.).

**அபலந்துரு** *abalanduru,* பெ.(n.) பயன்தரா மரம்; (Rd.); non-fruit bearing tree, as acrub, young trees.

[Skt. a-phala+dru > த. அபலந்துரு.]

**அபலநாடி** *abala-nāḍi,* பெ.(n.) குறை நாடி; feeble pulse, *Arachnoid pulse* (சா.அக.).

[அபலம் + நாடி.]

[Skt. a-phala>த. அபலம்.]

**அபலம்[1]** *abalam,* பெ.(n.) பயனின்மை; uselessness, barrenness. *"பலாபல மிவற்றில் விருப்பமற" (ஞானவா. விரத. 10).*

[Skt. a-phala > த. அபலம்.]

**அபலம்[2]** *abalam,* பெ.(n.) வலியின்மை; weakness, as want of strength.

[Skt. a-bala > த. அபலம்.]

**அபலம்[3]** *abalam,* பெ.(n.) 1. காய்ப்புமாறிய மரம் (R.T.); tree which is past fruit-bearing. 2. இழப்பு (நட்டம்) (பாண்டி); loss.

[Skt. a-phala > த. அபலம்.]

**அபலம்[4]** *abalam,* பெ.(n.) கொழு (நாநார்த்த); plough-share.

[Skt. apala > த. அபலம்.]

**அபலம்[5]** *abalam,* பெ.(n.) 1. மலடு; unfruitfulness, unproductiveness. 2. ஆற்றலரி; a plant, *Tamarix indica.* 3. சோற்றுக் கற்றாழை; aloe (Aloe perfoliate). 4. ஒரு பூடு; a plant, *Tapia crataeva* (சா.அக.).

**அபலன்** *abalan,* பெ.(n.) வலியற்றவன்; weak person.

[Skt. a-bala > த.அபலன்.]

**அபலாடிகை** *abalāḍigai,* பெ.(n.) தாகம் (சிந்தா. நி. 178.); thirst.

**த.வ. நீர்வேட்கை.**

[Skt. apalāṣikā > த. அபலாடிகை.]

**அபலாபனம்** *abalābanam,* பெ.(n.) மறைக்கை; concealing, hiding. *"இதனை அபலாபனம் செய்தல் யார்க்கும் ஒல்லாது" (சிவசம. 54.).*

[Skt. apalāpana > த. அபலாபனம்.]

**அபலை** *abalai,* பெ.(n.) ஏதும் செய்வதறியாப் பெண்; woman, as weak.

**த.வ. அவலி, அவலை.**

[Skt. a-balā > த. அபலை.]

**அபவம்** *abavam,* பெ.(n.) **அபலம்** பார்க்க; see *abalam.*

[Skt. apava > த. அபவம்]

**அபவர்க்கம்[1]** *aba-varkkam,* பெ.(n.) 1. வீடுபேறு (முத்தி); emancipation of the soul from bodily existence, final liberation. *"அபவர்க்கமு மற்றடையான்"* (ஞானா. 3, 10); 2. **அபவருக்கம்** பார்க்க; see *abavarukkam.*

[Skt. apavarga > த. அபவர்க்கம்.]

**அபவர்க்கம்[2]** *abavarkkam,* பெ.(n.) ஈகம் (நாநார்த்த.); bounty, gift.

[Skt. apa-varga > த. அபவர்க்கம்.]

**அபவரம்** *abavaram,* பெ.(n.) நோயுண்டாக்கும் பேய்; a demon causing illness (சா.அக.).

**அபவருக்கம்** *aba-v-arukkam,* பெ.(n.) பிறப்பறுகை; excemption from further transmigration (சா.அக.).

[Skt. apa + varga> த. அபவருக்கம்.]

**அபவருத்தம்** *abavaruttam,* பெ.(n.) அழிக்கை (சிந்தா. நி. 172.); destroying.

[Skt. apa-vṛtta > த. அபவருத்தம்.]

**அபவனம்** *aba-vanam,* பெ.(n.) 1. வளிவழங்கா விடம்; an ill-ventilated place. 2. பூந்தோட்டம்; flower-garden (சா.அக.).

[Skt. apa-vana > த. அபவனம்.]

**அபவாக்கு** *aba-vākku,* பெ.(n.) தீங்கு விளைக்குஞ் சொல் (சினேந். 454. உரை.); evil word.

**த.வ. தீச்சொல்.**

[அப + வாக்கு.]

[Skt. apa > த.அப.]

**அபவாதசூத்திரம்** *abavāda-śūttiram,* பெ.(n.) ஒரு நூற்பாவான் கொடு (விதி)க்கப் பட்டதற்கு முற்றும் மாறுபாடாகக் கொடு (விதி)க்கும், வேறு நூற்பா; a *sūtra* whose import is opposed to that of another *sūtra.*

த.வ. முரண்நூற்பா.

[**Skt.** *apa+vāda+šūtra>த.அபவாத சூத்திரம்.*]

**அபவாதம்** *aba-vādam,* பெ.(n.) 1. பழி; calumny, slander, reproach. "*உரையா தொழிதிமற் றொருவர்க் கபவாதம்*" (சேதுபு. கவிசம்பு. 61.); 2. புகழ்க்கேடு, அவகீர்த்தி; bad reputation.

[**Skt.** *apa-vāda > த. அபவாதம்.*]

**அபவாரணம்** *aba-v-āraṇam,* பெ.(n.) சாவு; death (சா.அக.).

**அபவித்தன்** *abavittaṉ,* பெ.(n.) பெற்றோரால் விடப்பட்டுப் பிறரால் ஏற்று(தத்து)க் கொள்ளப்பட்ட மகன்; son abandoned by his parents and adopted by a stranger, one of twelve *puttiraṉ,* q.v.

[**Skt.** *apa-viddha > த. அபவித்தன்.*]

**அபவித்திரம்** *abavittiram,* பெ.(n.) தூய்மையின்மை; uncleanliness (சா.அக.).

[**Skt.** *apa+viddhra > த. அபவித்திரம்.*]

**அபவித்திரன்** *abavittiraṉ,* பெ.(n.) தூய்மையில்லாதவன்; one who is not clean (சா.அக.).

[**Skt.** *apa+viddhra > த. அபவித்திரன்.*]

**அபவிருத்தி** *aba-virutti,* பெ.(n.) குறைவு (சிந்தா. நி. 172.); decrease.

[**Skt.** *apa-vṛddhi > த. அபவிருத்தி.*]

**அபவேட்டிதம்** *aba-vēṭṭidam,* பெ.(n.) குறிப்புணர்த்தும் உடலுறுப்பசைவியக்கம் (சீவக. 1257, உரை.); (*Nāṭya*) a gesture.

[**Skt.** *apavēṣṭita > த. அபவேட்டிதம்.*]

**அபனாதி** *abaṉādi,* பெ.(n.) நிலத்துளசி; basil (சா.அக.).

**அபாக்கியம்** *a-bākkiyam,* பெ.(n.) வாய்ப்புக் கேடு; wretchedness, misfortune.

த.வ. போகூழ்.

[**Skt.** *a-bhāgya > த. அபாக்கியம்.*]

**அபாகசாகம்** *abāgašāgam,* பெ.(n.) இஞ்சி (பரி.அக.); ginger.

[**Skt.** *apāka-šāka > த. அபாகசாகம்.*]

**அபாகம்** *abāgam,* பெ.(n.) 1. முதிராமை; immaturity. 2. இயலாக் குணம்; முடியாமை; incapability of digesting food; the state of indigestion (சா.அக.).

[**Skt.** *a-pāka> த. அபாகம்.*]

**அபாகிரோகம்** *abāgi-rōgam,* பெ.(n.) உடம்பில் உலர்ந்த கொப்புளங்கலெழும்பி நீண்ட நாள் வரைக்கும் இறக்கங் கொள்ளாமல் துன்பத்தை விளைவிக்குமோர் அம்மை நோய்; an abortive form of variola in which the vesicles which spread over several parts of the body dry before reaching the pustular stage and given them a blackish appearance. It takes a long time for the falling off of the scabs or crusts and thus puts the patient to a great deal of suffering, *Variola vaccina strophica* (சா.அக.).

[**Skt.** *a-pāka+rōga> த. அபாகிரோகம்.*]

**அபாங்கம்**[1] *abāṅgam,* பெ.(n.) கடைக்கணிப்பு (சூடா.); looking from the outer corner of the eye, gracious attention.

[**Skt.** *apaṅga > த. அபாங்கம்.*]

**அபாங்கம்**[2] *abāṅgam,* பெ.(n.) நெற்றிக்குறி (நாநார்த்த.); sectarian mark on the forehead.

[**Skt.** *apāṅga > த. அபாங்கம்.*]

**அபாங்கமர்மம்** *abāṅga-marmam* பெ.(n.) மேல்வாய், கண், மூக்கு இவற்றின் நாடிகளுக்கு ஏற்படும் எட்டாத தொடர்பு; a pathologic formation of a passage between the arteries of the upper mouth, eyes and the nose, *Anastomosis of the infra-orbital artery* (சா.அக.).

த.வ. எட்டாவருமம்.

**அபாசிரயம்** *abāširayam,* பெ.(n.) பந்தர் (சிந்தா.நி.183); pandal, pavilion.

த.வ. பந்தல்

*[Skt. apāśraya > த. அபாசிரயம்.]*

**அபாசீனம்** *abāśīṉam,* பெ.(n.) தெற்கு (சிந்தா.நி.183); south.

*[Skt. apācīna>த. அபாசீனம்.]*

**அபாடம்** *abāḍam,* பெ.(n.) தவறு; mistake. *"உலகபாட மனுவென வுலாவுவன" (தக்கயாகப். 27).*

த.வ. பிழை, வழு

*[Skt. a-pātha>த. அபாடம்.]*

**அபாடவம்** *abāḍavam,* பெ.(n.) 1. நோய்; disease. 2. அழகுக்கேடு; deviation from beauty, ugliness (சா.அக.).

**அபாண்டம்** *abāṇḍam,* பெ.(n.) இடுபழி (நிந்தை); deliberate evil report, slander. *"அபாண்டமாய் என்மேற் சொல்லாதே"* (இ.வ.).

த.வ. இடுவந்தி, அடாப்பழி

*[Skt. abhaṇḍa>த. அபாண்டம்.]*

**அபாண்டவாத்திரம்** *abāṇḍa-v-āttiram,* பெ.(n.) பாண்டவ குலத்தை அழிக்கப் பயன்படுத்திய அம்பு; missile thrown out with a view to exterminating the *Pāṇḍava* clan.

*[Skt.apāṇda+astra>த.அபாண்ட வாத்திரம்.]*

*அஸ்திரம்→அத்திரம்.*

**அபாண்டவியம்** *apāṇḍaviyam,* பெ.(n.) **அபாண்டவாத்திரம்** பார்க்க; see *apāṇḍa-v-āttiram.*

*[Skt. a-pānḍavya>த. அபாண்டவியம்.]*

**அபாத்திரம்** *a-pāttiram,* பெ.(n.) தானம் பெறத் தகுதியற்றவன்; unfit recipient, person unworthy to receive a gift. *"இரப்பான் றன்னை யபாத்திரமென் றுன்னி" (சைவச. பொது. 421).*

*[Skt. a-pātra>த.அபாத்திரம்.]*

**அபாதரன்** *abādaraṉ,* பெ.(n.) வெடியுப்பு; nitre-potassic nitrate (சா.அக.).

**அபாதானம்** *abādāṉam,* பெ.(n.) ஐந்தாம் வேற்றுமைப் பொருள் (தொல். சொல். குறிப்பு, பக். 115); (gram.) the sense of the ablative case.

*[Skt. apā-dāna>த. அபாதனம்.]*

**அபாநம்** *abānam,* பெ.(n.) 1. **அபானம்**[1] பார்க்க; see *abāṉam.* 2. **அபானம்**[2] பார்க்க; see *abāṉam.* 3. பாலகம் (மூலாதரம்); (in yoga philosophy) one of the six psychic centres of the human body i.e., the posteriors includings the hip-pelvic plexus. 4. கீழ்; down (சா.அக.).

*[Skt. a-pānīya>த. அபாநம்.]*

**அபாபம்** *abābam,* பெ.(n.) இறப்பு; death (சா.அக.).

*[Skt. apāpa>த. அபாபம்.]*

**அபாம்பதி** *abāmpadi,* பெ.(n.) கடல் (சேதுபு. சேதுயாத். 13); sea.

*[Skt. apām-pati>த. அபாம்பதி.]*

**அபாமார்க்கசாரம்** *abā-mārkka-śāram,* பெ.(n.) நாயுருவிச் சத்து அல்லது சாம்பல்; the essence or ashes obtained from the plant, Indian burr (சா.அக.).

*[அபமார்க்க(ம்) + சாரம்.]*

*[Skt.apā-mārga >த.அபாமார்க்கம்.]*

*சாறு>சாறம்>சாரம்.*

**அபாமார்க்கம்** *abāmārkkam,* பெ.(n.) பூடுவகை (மலை); species of Achyranthes.

*[Skt. apāmārga>த. அபாமார்க்கம்.]*

**அபாமாருதமூலி** *abā-māruda-mūli,* பெ.(n.) **அபரமார்க்கம்** பார்க்க; see *abara-mārkkam* (சா.அக.).

*[அபாமாருத(ம்) + மூலி.]*

*[Skt. apā+māruta>த. அபாமாருதம்.]*

**அபாயக்கொடி** *abāya-k-koḍi,* பெ.(n.) பேரிடர் குறிக்கும் கொடி; danger-signal, red flag.

த.வ. ஏதக்கொடி.

*[அபாய(ம்) + கொடி.]*

*[Skt. apāya> த. அபாயம்.]*

*கொடு→கொடி→வளைந்து படரும் நிலைத் திணை வகை (வே.க.167).*

**அபாயகரம்** *abāya-karam,* பெ.(n.) கடுந்தொல்லை (ஆபத்து) (கொ.வ.); dangerous condition.

*[Skt. apāya+kara>த. அபாயகரம்.]*

**அபாயச்சங்கிலி** *abāya-c-caṅgili,* பெ.(n.) மின் தொடர்வண்டியில் செல்லும் வழிப்போக்கர்களுக்கு ஏதமுறு நேரத்தில் வண்டியை உடன் நிறுத்திடுவதற்குரிய தொடரி; alaram chain (in trains).

**த.வ. ஏதத்தொடரி.**

*[அபாய(ம்)+சங்கிலி.]*

*[Skt. apāya>த. அபாயம்.]*

*அங்கு→சங்கு=வளைந்தது. சங்கு→சங்கிலி.*



**அபாயச்சங்கு** *abāya-c-caṅgu,* பெ.(n.) பேரிடர் ஏற்படுமாயின் அதனை அறிவிப்பதற்கான பெருக்கொலிக் கருவி; siren (for warning or to signify danger.). *தீப்பற்றத் தொடங்கியதும் அபாயச்சங்கு அலறியது.*

**த.வ. ஏதச்சங்கு.**

*[அபாயம் + சங்கு.]*

*[Skt. apāya>த. அபாயம்.]*

*சருக்கு→சக்கு→சங்கு.*

**அபாயதந்திரம்** *abāyatandiram,* பெ.(n.) ஏமாற்றுந் தந்திரம் (R.) ; artifice, trick.

*[Skt. apāya>த. அபாயம்.]*

**அபாயம்**[1] *abāyam,* பெ.(n.) பேரிடர், ஏதம் (ஆபத்து); calamity, danger, misfortune. *"அபாய மொருநாளு மில்லை" (நல்வழி, 15).*

**த.வ. ஏதம், ஊறு, இடுக்கண்.**

*[Skt. apāya>த. அபாயம்.]*

**அபார்த்தகம்** *abārttagam,* பெ.(n.) தோல்வித் தானத் தொன்று (செந்.111, 13); a fault in argumentation.

*[Skt. apārthaka> த. அபார்த்தகம்.]*

**அபார்த்தம்** *abārttam,* பெ.(n.) தவறான பொருள்; erroneous meaning.

*[Skt. apārtha>த. அபார்த்தம்.]*

**அபாரசக்தி** *abāra-śakti,* பெ.(n.) அளவிலாற்றல்; unlimited power.

**த.வ. பேராற்றல்.**

*[Skt. a-pāra+śakti>த. அபாரசக்தி.]*

**அபாரணக்காலம்** *abāraṇa-k-kālam,* பெ.(n.) உணவேற்கவொண்ணா வேளை; time not intended for taking food; untimely (சா.அக.).

*[அபாரணம் + காலம்.]*

*[Skt. a-pāraṇā> த. அபாரணம்.]*

**அபாரணை** *abāraṇai,* பெ.(n.) உண்ணாமை (சிந்தா.நி.185); fasting.

*[Skt. a-pāraṇā> த. அபாரணை.]*

**அபாரம்**[1] *abāram,* பெ.(n.) 1. நல்லை; முதல் தரமானது; exceptionally good, excellent or superb. 2. அளவற்றது; immense. *அவர் புதுமையில் பற்றுள்ளவராயினும் பழமையிலும் அபார நம்பிக்கை கொண்டவர்.*

**த.வ. அருமை.**

*[Skt. a-pāra>த. அபாரம்.]*

**அபாரம்**[2] *abāram,* பெ.(n.) சிறப்பானது, எல்லையற்றது (திவா.); that which is boundless, as not having an opposite shore.

*[Skt. a-pāra>த. அபாரம்.]*

**அபாலங்கம்** *abālaṅgam,* பெ.(n.) கொன்றை; a plant, *Cassia fistual* (சா.அக.).

**அபாவம்**[1] *abāvam,* பெ.(n.) 1. இன்மை; unexistence, negation. *முன்னபாவம், அழிவுபாட்டபாவம், முழுதுமபாவம், ஒன்றினொன்ற பாவம் என (தருக்க.சங்.8)வும், என்றுமபாவம், இல்லத னபாவம், ஒன்றினொன்றபாவம், உள்ளத னபாவம், அழிவுபாட்ட பாவம் (சி.சி.அளவை. 1, மறைஞா.) எனவும் கூறுகிறது.* 2. ஒர் அளவை (சி.சி. அளவை. 1); non-congnition relied upon us proof of negation, one of six *pirmāṉam,* q.v.

*[**Skt.** a-bhāva>த. அபாவம்.]*

**அபாவம்**[2] *abāvam,* பெ.(n.) கேடு (நாநார்த்த.); ruin, destruction.

*[**Skt.** a-bhāva>த. அபாவம்.]*

**அபாவம்**[3] *abāvam,* பெ.(n.) கடுக்காய்; gall-nut, *Chebalic Myrobalan-Terminalia chebula* (சா.அக.).

**அபாவயோகம்** *abāva-yōgam,* பெ.(n.) கரணங்களுக் கெட்டாத இறையுள் மனமொன்று (மனோலாயமா)வதற்காகச் செய்யும் ஐவகை ஓகத்திலொன்று; one of the five stages of yoga intended for bringing about the union of the mind with the divine spirit (சா.அக.).

*[அபாவ(ம்) + ஓகம்.]*

*[**Skt.** a-bhāva>த.அபாவம்.]*

*த. ஓகம் > **Skt.** yōga.*

**அபானக்கடுப்பு** *abāṉa-k-kaḍuppu,* பெ.(n.) எரு (மல)வாய்க் கடுப்பு; irritation of the rectum (சா.அக.).

*[அபானம் + கடுப்பு.]*

*[**Skt.** apāna>த. அபானம்.]*

*கடு→கடுப்பு.*

**அபானக்காந்தல்** *abāṉa-k-kāndal,* பெ.(n.) எருவாய் எரிச்சல்; burning sensation or inflammation of the anus or the rectum-*proctitis* (சா.அக.).

*[அபானம் + காந்தல்.]*

*[**Skt.** apāna>த. அபானம்.]*

*காந்து>காந்தல் = எரிவு, சூடு, காந்துகை.*

**அபானசுத்தி** *abāṉa-śutti,* பெ.(n.) எரு (குத)வாய் வழியே குடல் கழுவு மருத்துவம்; treatment by enema (சா.அக.).

*[**Skt.** apāna+śuddhi>த. அபானசுத்தி.]*

**அபானத்தானலித்திரிதிக்கட்டி** *abāṉa-t-tāṉa-littiridi-k-kaṭṭi,* பெ.(n.) **அபானலித் திரிதி** பார்க்க; see *abāṉa-littiridi* (சா.அக.).

**அபானத்துவாரம்** *abāṉa-t-tuvāram,* பெ.(n.) எரு (மல)வாயில்; the opening through which the excrement is expelled, *anus* (சா.அக.).

த.வ. எருவாய்.

*[**Skt.** apāna+dvāra>த. அபானத்துவாரம்.]*

**அபானப்பிரயோகநீர்** *abāṉa-p-pirayōga-nīr,* பெ.(n.) கழிமாசு அறக் கழிதனிமித்தம் எருவாயிற் புகட்டும் நீர்; a liquid substance injected into the lower intestines, to cleanise the bowels, *clyster enema* (சா.அக.).

*[அபானப்பிரயோக(ம்) + நீர்.]*

*[**Skt.** apāna+pra-yōga> த.அபானப் பிரயோகம்.]*

*நுல்→நெல்→நெள்→நெகு→நெகி (நெகிள்)→ நீள்→நீர் (வே.க.3:42).*

**அபானம்**[1] *abāṉam,* பெ.(n.) கடுக்காய் மரம் (பச்.மூ.); chebulic myrobalan.

**அபானம்**[2] *abāṉam,* பெ.(n.) எரு (மல)வாய் (மச்சபு.தீர்க்கதம.32); anus.

*[**Skt.** apāna>த. அபானம்.]*

**அபானமால்** *abāṉamāl,* பெ.(n.) **அபானவாயு** பார்க்க; see *abāṉa-vāyu* (சா.அக.).

*[**Skt.** apāna+māl> த. அபானமால்.]*

**அபானரோகம்** *abāṉa-rōgam,* பெ.(n.) எரு(மல)வாயில் ஏற்படும் நோய்; disease of the rectum or the anus, in general (சா.அக.).

*[**Skt.** apāna+rōga>த. அபானரோகம்.]*

**அபானலித்திரிதி** *abāṉa-littiridi,* பெ.(n.) எருவாயிலிற் கடும் வலியுண்டாக்கும் கட்டி; an abscess of the anus causing intense pain-marginal abscess (சா.அக.).

த.வ. எருவாய்க்கட்டி.

**அபானவிப்புருதி** *abāṉa-vippurudi,* பெ.(n.) குதத்திலெழும்பு மொரு வகைச் சிலந்தி; an ulcer inside the recturm or atits extermity c.f. பவுத்திரம் (சா.அக.).

த.வ. எருவாய்க்கட்டி.

*[Skt. apāna+vidradhi>த.அபானவிப்புருதி.]*

**அபானவாயு** *abāṉa-vāyu,* பெ.(n.) பதின் வளியு ளொன்றாகியதும் கீழ்நோக்கிச் செல்லுவதுமான பரியன்வளி (வாயு); one of the ten vital airs, having a tendency to pass downwards (சா.அக.).

த.வ. பரியன் வளி.

*[Skt. apāna+vāyu>த. அபானவாயு.]*

**அபானவாயுக்கடுப்பு** *abāṉa-vayu-k-kaḍuppu,* பெ.(n.) சூட்டினாலும், எருவாயி லுண்டாகும் புண்ணாலும் ஏற்படும் எரிச்சல்; a burning sensation due to excess of heat and ulceration of the anus-rectitis or proctitis (சா.அக.).

த.வ. எருவாய் எரிச்சல்.

*[அபானவாயு + கடுப்பு.]*

*[Skt. apānavāyu>த.அபானம் + வாயு.]*

*கடு→கடுப்பு:வலி, எரிச்சல், நோவு.*

**அபானவாயுக்கெரிச்சான்** *abāṉa-vāyu-k-kericcāṉ,* பெ.(n.) புகையிலை; tobacco as an agent for driving out wind through the anus (சா.அக.).

*[அபானவாயு + எரிச்சான்.]*

*[Skt. apānavāyu>த. அபானவாயு.]*

*எரி→எரிச்சன்.*

**அபானவிரிவு** *abāṉa-virivu,* பெ.(n.) எரு(மல) வாய் விரிதல்; dilatation of the rectum or of the anus-proctectasia (சா.அக.).

த.வ. எருவாய்விரிவு.

**அபானவிருத்தி** *abāṉa-v-irutti,* பெ.(n.) குடலில் பரியன்வளி பரிதல்; a condition marked by the presence of excessive gas in the intestines, flatulence (சா.அக.).

த.வ. வளியேற்றம்.

*[Skt. apāna+vṛtti> த.அபானவிருத்தி.]*

**அபானவேர்** *abāṉa-vēr,* பெ.(n.) மூல முளை; an eversion of the rectal mucous membrance observed in cases of piles (சா.அக.).

*[அபானம் + வேர்.]*

*[Skt. apāna>த. அபானம்.]*

**அபானன்** *abāṉaṉ,* பெ.(n.) பரியன்வளி (பிங்); a vital air of the body, the downward *vāyu,* which expels wind, excrement, urine and semen, one of *tacca-vāyu.*

*[Skt. apāna> த. அபானன்.]*

**அபானியம்** *abāṉiyam,* பெ.(n.) குடிக்கத் தகாதது; that which is unfit to drink (சா.அக.).

**அபானோத்காரம்** *abāṉōtkāram,* பெ.(n.) **அபானவாயு** பார்க்க; see *abāṉa-vāyu* (சா.அக.).

**அபி** *abi,* இடை.(pref.) 1. அசைதல், போதல், கிட்டுதல் ஆகிய பொருள்களைத் தரும் வினைச் சொற்களோடு சேரும் ஒரு முன்னொட்டு; a prefix to verbs which expresses the notion of moving, going or approaching. 2. மேன்மை, மிகுதி ஆகிய பண்புகளைக் காட்டும் பெயர்ச்சொற்களோடு சேரும் முன்னொட்டு; an intensive prefix to nouns, which expresses superiority, intensity, inferiority etc. (சா.அக.).

*[Skt. abhi>த. அபி.]*

**அபிக்கியை** *abikkiyai,* பெ.(n.) 1. பெயர்; name, 2. புகழ்; fame, அழகு; beauty.

*[Skt. abhi-khyā>த. அபிக்கியை.]*

**அபிகதம்** *abigadam,* பெ.(n.) அணுக்கம் (சமீபம்) (சிந்தா. நி. 179); nearing.

*[Skt. abhi+gata>த. அபிகதம்.]*

**அபிகரணம்** *abi-karaṇam,* பெ.(n.) செவி பாகம்; the region of the ears (சா.அக.).

**அபிகருடணம்** *abi-karuḍaṇam,* பெ.(n.) தேய்த்தல்; rubbing, anointing (சா.அக.).

**அபிகாசசேத்துமம்** *abi-kāša-šēttumam,* பெ.(n.) இருமல், இளைப்பு, ஈளை, முதலியவையுண்டாகி வயிறு மந்தித்து, உடம்பு வற்றி, உருவழிந்து, வலுவைக் குறைக்குமொரு நோய்; a phlegmatic disease attended with cough, fatigue, phlegm etc., with the symptoms or loss of appetite, emaciation, loss of strength denutrition, change of features etc. (சா.அக.).

**த.வ. வலுவிழப்பு நோய்.**

*[Skt. abhi-hāsa-sēttum>த. அபிகாச சேத்துமம்.]*

**அபிகாதசம்** *abikādašam,* பெ.(n.) அடி அல்லது உடற் புண்ணால் ஏற்படும் அதிர்ச்சி; shock due to external injury or blow, *traumatic shock* (சா.அக.).

**த.வ. புண்ணதிர்ச்சி.**

*[Skt. abhi+ghātaka>த. அபிகாதசம்.]*

**அபிகாதசுரம்** *abikādašuram,* பெ.(n.) கடும் உழைப்பின் நிமித்தம் உண்டாகும் காய்ச்சல் (ஜீவரட்); fever due to wounds, over-exertion, etc.

**த.வ. அலுப்புக்காய்ச்சல்.**

*[அபிகாத(ம்) + சுரம்.]*

*[Skt. abhi-ghāta>த. அபிகாதம்.]*

*சுல்→சுர்→சுரம்.*

**அபிகாதசூலை** *abikāda-šūlai,* பெ.(n.) கல் முதலியவற்றால் செவியில் அடியுண்ட காலத்தில் அதனுள் சீழ், அரத்தம் முதலியன சேர்ந்து, குத்தலை யுண்டாக்குமொரு வகைக் காது நோய்; a disease of the ear marked by darting pain arising from the collection of pus and blood inside. It is due to traumatic causes, *Otalgia or otitis* (சா.அக.).

**த.வ. செவிக்குத்து.**

*[Skt. abhi-ghāta> த. அபிகாத(ம்).]*

*சுல்→சூல்→சூலை.*

**அபிகாதசோபை** *abikāda-šōbai,* பெ.(n.) 1. இரசகந்த நஞ்சு, சேராங்கொட்டை முதலிய மருந்துகளினாலுடம்பி லுண்டாகுமொரு வகைச் சோகை நோய்; a form of anemia due to the action of certion poisons, such as mercury, sulphur, arsenic, markinmg nut etc.,toxic anemia. 2. ஆயுதப் புண்ணால் அரத்த வொழுக் கேற்பட்டு அதனால் உண்டாகும் சோகை; anemia due to the loss of blood from an injury or a wound, *Traumatic anemia* (சா.அக.).

**த.வ. கடுஞ்சோகை.**

*[Skt. abhi-ghāta+šōbhā>த. அபிகாத சோபை.]*

**அபிகாதி** *abigādi,* பெ.(n.) பகைவன் (சிந்தா. நி. 173.); enemy, foe.

*[Skt. abhi-ghātin>த. அபிகாதி.]*

**அபிகாமின்** *abikāmiṉ,* பெ.(n.) புணர்ச்சி; sexual intercourse, copulation (சா.அக.).

**அபிகாயம்** *abikāyam,* பெ.(n.) 1. ஒரு கொடிய ஈளை (காச) நோய்; asthma of a virulent type. 2. உள்ளழற்சி; internal inflammation, as of the lungs in consumprion (சா.அக.).

*[Skt. abhi-kāya> த.அபிகாயம்.]*

**அபிகாரம்[1]** *abikāram,* பெ.(n.) 1. கொள்ளை; robbery. 2. தாக்குகை; attack. 3. படையெழுச்சி; rising in arms.

*[Skt. abhihāra> த. அபிகாரம்.]*

**அபிகாரம்²** *abikāram,* பெ.(n.) 1. தூவல்; scattering over 2. தெளித்தல்; sprinkling (சா.அக.).

**அபிகிதத்துவம்** *abigitattuvam,* பெ.(n.) மேற்கோள் (சித்தா. நி. 173); authority.

*[**Skt.** abhi-hita-tva>த. அபிகிதத்துவம்.]*

**அபிச்செடி** *abi-c-cedi,* பெ.(n.) கசகசாச் செடி; poppy plany, *Papaver somniferum* (சா.அக.).

*[அபினி + செடி.]*

*[**U.** afin > த. அபினி.]*



**அபிசங்கசுரம்** *abišaṅga-šuram,* பெ.(n.) மருந்து, நஞ்சு, சினம், அச்சம், வருத்தம், விருப்பம் (இச்சை) எனும் மேற்காண் கரணியந் தொடர்பில் ஏற்படும் காய்ச்சல்; a fever due to the excited condition of the body, arising from any of the following. seven causes viz-demomiac frenzy, virulent medicine, poison, anger, fear, distress and passion-Idiopathic fever (சா.அக.).

**த.வ. பதைப்புக் காய்ச்சல்.**

*[அபிசாங்க(ம்) + சுரம்.]*

*[**Skt.** abhij-saṅga> த. அபிசங்க(ம்).]*

**அபிசந்தம்** *abišandam,* பெ.(n.) **அபிசியந்தம்** பார்க்க; *abišiyandam* (சா.அக.).

**அபிசந்தாபம்** *abišandābam,* பெ.(n.) போர் (சிந்தா. நி. 179); fight.

*[**Skt.** abhi-santāpa>த. அபிசந்தாபம்.]*

**அபிசயந்திபோசனம்** *abišayandi-bōšaṉam,* பெ.(n.) உடம்பை பருக்கச்செய்யக் கூடிய தயிர் முதலிய உணவுப் பொருள்கள்; articles of food such as, curd etc. likely to inflate the system (சா.அக.).

**த.வ. கொழுப்புணவு.**

*[**Skt.** abhi + jayantī+bhōjana>த. அபிசயந்திபோசனம்.]*

**அபிசர்ச்சனம்** *abišarccaṉam,* பெ.(n.) கொலை; murder (சா.அக.).

**அபிசரன்** *abišaraṉ,* பெ.(n.) நண்பன் (சிந்தா. நி. 167); friend.

*[**Skt.** abhi-cara>த. அபிசரன்.]*

**அபிசனம்** *abišaṉam,* பெ.(n.) 1. பிறப்பிடம்; birth place. 2. குலம்; family. 3. குலவிருது; insignia of a family or dynasty. 4. அரசியற் சுற்றம்; attendants, retinue. 5. புகழ்; fame.

*[**Skt.** abhi-jana>த. அபிசனம்.]*

**அபிசாங்கி** *abišāṅgi,* பெ.(n.) அத்தினி சாதிப் பெண்; last of the four classes the women divides according to lust (சா.அக.).

**அபிசாதம்** *abišādam,* பெ.(n.) 1. துன்பம்; pain, suffering. 2. புண்படுகை; inflicting injury; 3. வெடிப்பு; பிளவு; fissure, crack. 4. வருத்தம்; torture, afflication. 5. அதிக உழைப்பு; strain (physical); exertion. 6. கருப்பைச் சுருக்கம்; uterine contraction. 7. பறவைக் காய்ச்சல்; fever in birds (சா.அக.).

**அபிசாதவாதம்** *abišāda-vādam,* பெ.(n.) விரைந்த நடை, ஊர்திகளில் ஏறி விரைவிற் செல்லல், மற்போர் செய்தல், நெடுந்தூரம் செல்லல், அதிக உழைப்பு முதலிய செய்கைகளினால் உடம்பு தாங்க முடியாமல் நரம்புகளுக்குச் சோர்வு ஏற்பட்டு, வலி, களைப்பு, படுக்கையாய்க் கிடத்தல், இளைப்பு முதலிய குணங்களை யுண்டாக்கு மோர் ஊதை (வாத) நோய்; a functional disorder of the

nervous system not dependent on any discoverable lesion, but supposes to arise from excessively fast walking, riding, wrestling, long journey, and undrue exertion, etc. It invades the whole system and is marked by pain, exhaustion, prostration fatigue, etc. (சா.அக.).

**த.வ. அலுப்பு ஊதை.**

*[Skt. abhi-jāta+vāta>த. அபிசாதவாதம்.]*

**அபிசாதன்**[1] *abišādaṉ,* பெ.(n.) 1. தக்கோன்; worthy person. 2. அறிஞன் (நாநார்த்த); wiseman.

*[Skt. abhi-jāta>த. அபிசாதன்.]*

**அபிசாதன்**[2] *abišādaṉ,* பெ.(n.) உயர்குடிப் பிறந்தோன்; man of noble descent.

*[Skt. abhi-jāta>த. அபிசாதன்.]*

**அபிசாபசுரம்** *abišāba-šuram,* பெ.(n.) அறிவர் (சித்தர்), முனிவர் (யோகி) முதலிய பெரியோர்களின் சாவித்தலினால் ஏற்படும் காய்ச்சல்; fever from severe curse of siddhars; yogis and such other great man (சா.அக.).

**த.வ. சவிப்புக்காய்ச்சல்.**
*[அபி + சாபம் + சுரம்.]*
*[Skt.abhi> த. அபி.]*
*சாவி→சாவம்→சாபம் (சவிப்பு). சுல்→சுர்→சுரம்.*

**அபிசாபனம்** *abišābaṉam,* பெ.(n.) சாவிப்பு மொழி (சிந்தா. நி. 171); cursing.

**த.வ. சவிப்பு.**
*[அபி+சாபனம்.]*
*[Skt. abhi> த.அபி.]*
*சாவம்→சாபம்→சாபனம்.*

**அபிசாரசுரம்** *abišāra-šuram,* பெ.(n.) இறப்பு மந்திரங்களால் வேள்வி செய்து உண்டாக்குவதாகக் கருதப்படும் ஒருவகைக் காய்ச்சல் (சீவரட்); fever supposed to be caused by death invoking incantations at a sacrifice.

**த.வ. உருவேற்றக் காய்ச்சல்.**

*[Skt. abhi-cāra>த. அபிசாரம்.]*

*சுல்→சுர்→சுரம்.*

**அபிசாரம்**[1] *abišāram,* பெ.(n.) பிறர்க்குத் தீங்கு நாடி மறைமொழி செலுத்துகை; emloyment of mantras for a malevolent purpose, black art. *"மாமதுவா லபிசார மமைத்து" (பிரபோத. 18, 27).*

*[Skt. abhi-cāra>த. அபிசாரம்.]*

**அபிசாரம்**[2] *abišāram,* பெ.(n.) 1. இறப்பு; death. 2. ஏவலாற் செய்யுங் கொலை (மரணம்); black art for purpose of invoking death. 3. பாழ் (சூனியம்); magic practise to bring about insanity, disease etc; employment of spells for a malevolent purpose (சா.அக.).

*[Skt. abhi-cāra>த. அபிசாரம்.]*

**அபிசாரமந்திரம்** *abišāra-mandiram,* பெ.(n.) மனக்கோட்டம், ஆசை, வெறுப்பு, சாவு முதலியவையேற்படுத்தும் ஒருவனுக்குத் தீங்கிழைக்க வேண்டி வேள்வியினாலும் யந்திரம் அமைத்தலாலும் செய்து முடிக்கும் சாவிப்பு மந்திரம்; a magic for a malevolent purpose. It is practised with sacrifical fire or with spells and magic diagrams and is supposed to bring on or produce mental aberration, love, harted, paralysis, and death. 2. மோகன மந்திரம்; one of the eight kinds of magical enchantments by which super human powers are attained the power of bringing about libinous fascination by magic (சா.அக.).

*[அபிசாரம் + மந்திரம்.]*

*[Skt. abhi-cāra>த. அபிசாரம்.]*

**அபிசாரி** *abišāri,* பெ.(n.) 1. ஒழுக்கங் கெட்டவள்; unchaste woman. 2. விலை மகள்; courtezan.

**த.வ. பொதுமகள், பரத்தை.**

*[Skt. abhišāri>த. அபிசாரி.]*

**அபிசாரிக்கை** *abišāri-k-kai,* பெ.(n.) பிறருக்குக் கொலை, விருப்பம் (இச்சை), பித்து முதலிய தீங்குகளை விளைவிப்பதற்காக வேண்டிச் செய்யும், மந்திர சாதனை; the practice of black art with the aid of magical enchantments for purposes of bringing about death, lust, lunacy or other evil effects in a person (சா.அக.).

**அபிசாரிகை** *abišārigai,* பெ. (n.) **அபிசாரி** (வின்) பார்க்க; see *abišāri.*

*[**Skt.** abhicāri-ka>த. அபிசாரிகை.]*

**அபிசிக்தர்** *abišiktar,* பெ.(n.) சைவரில் குருக்கள் வகையார் (மீனாட்.சரித்.i, 27); persons belonging to a non Brahmin priestly caste who had been anointed as guru.

*[**Skt.** abhisikta>த. அபிசிக்தர்.]*

**அபிசிக்தன்** *abišiktan,* பெ.(n.) திருமுழுக்கு பெற்றவன்; one who is anointed, installed, enthroned.

*[**Skt.** abhi-sikta>த. அபிசிக்தன்.]*

**அபிசித்து** *abišittu,* பெ.(n.) கடைக்குள (உத்திராட)த்திற்பின் பதினைந்து நாழிகையும் முக்கோலி (திருவோண)த்தின் முன் நான்கு நாழிகையுஞ் சேர்ந்ததாகிய ஓர் ஒட்டு நாண்மீன் (குமாரசாமீ. நட்சத்திர. 8.); nakastra introduced in certain *siddhāntas,* consisting of the latter 15 *nāligais* of *uttirāḍam* and the earlior four *nāligais*of *thiruvōṇam.* 2. பகல் முழுத்தத்துள் எட்டாவது (விதான. குணா. 73 உரை); (Astrol.) the eight of 15 divisions of day.

**த.வ. ஒட்டுநாண்மீன்.**

*[**Skt.** abhi-jit>த. அபிசித்து.]*

**அபிசிந்தி** *abišindi,* பெ.(n.) (Hind.) மாசிப்பத்திரி; a hidustani term for santonin wood, *Artemosia absinthium* (சா.அக.).

**அபிசியந்தம்** *abišiyandam,* பெ.(n.) ஒருவகைக் கண்ணோய்; ophthalmia due to the action of deransged vāyu and it is attended with pricking pain, horripilation of the eye lashes and irritation of the eyes, conjunctivitis (சா.அக.).

**அபிசியந்தி** *abišiyandi,* பெ.(n.) 1. உடம்பினில் உள்ள நாளங்களின் பிசுபிசுப்பையும், அதனால் கை கால் கனாதியையும் உண்டாக்குமோர் கோழை (சிலேட்டுமம்); anything that produces a sliminess in the channels and a consequent heaviness of the limbs. 2. நீர் கசியச் செய்தல்;causing defluxions or watery effusions (சா.அக.).

*[**Skt.** abhi-jayanti>த. அபிசியந்தி.]*

**அபிசுதம்** *abišudam,* பெ.(n.) கஞ்சி; rice-water (சா.அக.).

**அபிசுரம்** *abišuram,* பெ.(n.) ஏவலினால் உண்டாகுங் காய்ச்சல்; a fever caused by magic spells (சா.அக.).

**த.வ. ஏவல் காய்ச்சல்.**
*[**Skt.** abhi> த. அபி.]*
*சுல்→சுர்→சுரம்.*

**அபிசோரா** *abišōrā,* பெ.(n.) பொட்டிலுப்பினால் சில்லிட்ட குடிநீர்; water cooled by means of solution of salpetre (சா.அக.).

**அபிசோலா** *abišōlā,* பெ.(n.) சுவைச் சாற்றினால் குளிர்ந்த குடிநீர்; water cooled by syrup, a solution of sugar combined with other drugs (சா.அக.).

**அபிஞ்ஞன்** *abiññan,* பெ.(n.) அறிஞன்; learned man, person of understanding.

*[**Skt.** abhi-jña>த. அபிஞ்ஞன்.]*

**அபிட்டம்** *abiṭṭam,* பெ.(n.) இதளியம் (வின்); quicksilver.

*[**Skt.** avintyaja>த. அபிட்டம்.]*

**அபிடங்கசுரம்** *abiḍaṅgašuram,* பெ.(n.) நஞ்சு, சீற்றம், அச்சம், வருத்தம், காமம் முதலிய காரணங்களால் உண்டாகும் காய்ச்சல் (சீவரட்.31); fever due to poison, excessive anger, fear, grief or sexual indulgence.

*[அபிடங்கம் + சுரம்.]*

*[**Skt.** abhisaṅga>த. அபிடங்க(ம்).]*

**அபிடங்கம்** *abiḍaṅgam,* பெ.(n.) சாவம், தீமொழி (சிந்தா. நி. 181); curse.

*[Skt. abhisaṅga>த. அபிடங்கம்.]*

**அபிடதம்** *abiḍadam,* பெ.(n.) **அவுடதம்** பார்க்க; see *avuḍadam* (சா.அக.).

*[Skt. abhista >த.அபிடதம்.]*

**அபிடவம்** *abiḍavam,* பெ.(n.) **அபிசவம்** பார்க்க; see *abišavam* (சா.அக.).

**அபிடியந்தம்** *abiḍi-yandam,* பெ.(n.) கண்ணின் வலு (பல)க் குறைவு; weakness of the eye (சா.அக.).

**அபிடேகக்காணி** *abiḍēga-k-kāṇi,* பெ.(n.) வரிவகை (S.I.I.vii, 403); a tax.

*[அபிடேகம் + காணி.]*

*[Skt. abhisēka>த.அபிடேக(ம்).]*

**அபிடேகக்கூட்டு** *abiḍēga-k-kūṭṭu,* பெ.(n.) திருமஞ்சன மாட்டுதற்குரிய நறுமணக் கலவை (வின்.); macerated spices for anointing an idol.

*[அபிடேகம் + கூட்டு.]*

*[Skt. abhisēka>த. அபிடேகம்.]*

**அபிடேகசுதர்** *abiḍēgašudar,* பெ.(n.) **அபிசிக்தர்** பார்க்க; see *abišiktar.*

**அபிடேகநாமம்** *abiḍēga-nāmam,* பெ.(n.) அரசன், மடத்தலைவர் (மடாதிபதி) இவர்கள் பட்டம் பெறுங்காலத்துக்கு ஏற்கும் பெயர்; title assumed on entering office, as of a king.

*[Skt.abhisēka+nāman> த. அபிடேக நாமம்.]*

**அபிடேகப்பால்** *abiḍēga-p-pāl,* பெ.(n.) 1. பால், இதளியம் முதலியவற்றைக் கொண்டு கொங்கணவர் முறைப்படி உருவாக்கிய மருந்து; a mercurial preparation obtained by boiling milk and mercury, with other ingredients for purposes of rejuvenation and transmutation of metals by a mystic process, as described in Konganava's work on alchemy. 2. மதிய மிர்தம்; an ambrosial fluid supoosed to be oozing in drops from the opening behind the uvula during the advanced stage in yoga. It is said to promote longevity. *"மேலான அபிஷேகப்பாலை யுண்டால் விரைந்தேழு நாளையிலே காயசித்தி" (கொங்.வாத. காவி.)* (சா.அக.).

*[Skt. abhisēka> த.அபிடேகம்.]*

**அபிடேகம்**[1] *abiḍēgam,* பெ.(n.) 1. நீர், தேன், முதலானவற்றைக்கடவுளின் முழு திருமேனிபடும்படி நீராட்டுதல்; (திருமஞ்சனம்); bathing of an idol with water, oil, ghee, milk, honey and other substances. 2. பட்டஞ் சூட்டும் விழா; inauguration of a king by anointing, consecreation of a priest. *"மன்னனைப் பராசரன்றா னபிடேகம்... வழங்க" (சேதுபு. மங்கல. 79.)* 3. மணிமுடி (திருவாலவா. 11, 4); crown.

த.வ. முழுக்கு.

*[Skt. abhi-sēka>த. அபிடேகம்.]*

**அபிடேகம்**[2] *abiḍēgam,* பெ.(n.) தலையணி வகை (S.I.I. iii, 474); a head ornament.

*[Skt. abhisēka>த. அபிடேகம்.]*

**அபிடேகமண்டபம்** *abiḍēga-maṇḍabam,* பெ.(n.) திருமஞ்சனசாலை (I.M.P.cg. 331); hall for the ceremonial bath of an idol, in a temple.

*[அபிடேகம் + மண்டபம்.]*

*[Skt. abhisēka >த.அபிடேகம்.]*

**அபிடேகி-த்தல்** *abiḍēgi-,* 4 செ.குன்றாவி. (v.t.) திருமுழுக்கு செய்தல்; to bathe, to anoint. *"ஆசிலாப் பொன்னிநீரா லமனுக் கபிடேகித்தோர்" (திருவாட்போக்கிப்பு. மாணிக்கமலைச் சிறப். 36).*

த.வ. திருமுழுக்காட்டுதல்.

*[Skt. abhi-sēka>த. அபிடேகி-.]*

**அபித்தியை** *abittiyai,* பெ.(n.) விருப்பம் (இச்சை) (சிந்தா. நி. 181.); wish, desire.

*[Skt. abhi-dhyā>த. அபித்தியை.]*

**அபிதம்** *abidam,* பெ.(n.) காப்பு (இரட்சிகை) (சிந்தா. நி. 177); protection.

*[Skt. abhidha>த. அபிதம்.]*

**அபிதர்மபிடகம்** *abidarmabiḍagam,* பெ.(n.) புத்த அறிவு நூல் மூன்றனுள் ஒன்று; name of the third section of Buddhist writings, as a basket of metaphysics.

**அபிதா** *abidā,* பெ.(n.) இடுக்கணுற்றுழி முறையிட்டுக் கூறுஞ்சொல்; exclamation used in calling for help. *"கிரியெட்டும் அபிதா வபிதாவென" (திருப்பு. 1140).*

*[Skt. avidhā>த. அபிதா.]*

**அபிதாபம்** *abidābam,* பெ.(n.) அளவிறந்த வெப்பம்; extreme heat (சா.அக.).

*[அபி + தாபம்.]*

*[Skt. abhi> த. அபி.]*

*தவி→தாவம்→தாபம். தகம்=சூடு, வெப்பம். தகம்→தாபம்=அளவிற்கதிகமான வெப்பம்.*

**அபிதார்த்தம்** *abidārttam,* பெ.(n.) சொல்லுக்கு இயல்பான பொருள் (வேதா. சூ. 118).; primary signification of a word.

*[Skt. abhi-dhā+artha>த. அபிதார்த்தம்.]*

**அபிதானகோசம்** *abidāṉa-kōšam,* பெ.(n.) ஒரு வடமொழி யகரமுதலி; a Sanskrit medical dictionary (சா.அக.).

*[Skt. abhi-dhāna+kōša>த. அபிதான கோசம்.]*

**அபிதானசிந்தாமணி** *abidāṉa-šindāmaṇi,* பெ.(n.) 1. ஏமச் சந்திரன் என்பவரால் செய்த ஒரு வடமொழி யகராதி; a sanskrit dictionary of synomyms by Hemachandran. 2. சிங்காரவேலு முதலியாரால் தொகுக்கப் பெற்ற தமிழ்க் கலைக்களஞ்சியம்; an encyclopeadia compiled siṅgāravelu mudaliyar(சா.அக.).

*[Skt. abhi-dhāna> த. அபிதானம்.]*

*சித்து+மணி – சித்தாமணி→ சிந்தாமணி. மண்ணுதல் = கழுவுதல். மண்→மண்ணணி→மணி = கழுவப்பெற்ற ஒளிக்கல்.*

**அபிதானசூடாமணி** *abidāṉa-šūḍamaṇi,* பெ.(n.) வடமொழியில் எழுதப்பட்டதொரு மருத்துவ நூல்; an excellant work on materia medica Compiled by Narahari of Kashmere. It is a glossary of medicinal substances with specifications of their virtues. It is also known as *RajaNigaṇḍu* for, it was composed under the patronage of the kind of Kasmere in 700 A.D. (சா.அக.).

**த.வ. இராசநிகண்டு.**
*[Skt. abhi-dhāna>த.அபிதான(ம்).]*
*சூடா+மணி+சூடாமணி.*

**அபிதானம்**[1] *abidāṉam,* பெ.(n.) பெயர் (பிங்); name, appellation.

*[Skt. abhi-dhāna>த. அபிதானம்.]*

**அபிதானம்**[2] *abidāṉam,* பெ.(n.) மறைவு (நாநார்த்தை); covering.

*[Skt. aidhāna>த. அபிதானம்.]*

**அபிதானம்**[3] *abidāṉam,* பெ.(n.) 1. **அபிதான கோசம்** பார்க்க; see *abidāṉa-kōšām.* 2. நிகண்டு; a vocabularly of synonyms, a dictionary. 3. சலாகை; a surgeon's probe (சா.அக.).

*[Skt. abhi-dhāna>த. அபிதானம்.]*

**அபிதேயம்** *abidēyam,* பெ.(n.) செஞ்சொற் பொருள் (தருக்கசங். 249); that which is denoted by *šeñ-jol.*

*[Skt. abhi-dhēya>த. அபிதேயம்.]*

**அபிதை** *abidai,* பெ.(n.) நாநலம் (பி.வி. 50, உரை); primary significative capacity of a word.

*[Skt. abhi-dhā>த. அபிதை.]*

**அபிந்நியாசம்** *abinniyāšam,* பெ.(n.) இசிவு (சன்னி) வகை (வின்); convulsions.

*[Skt. abhi-nyāsa>த. அபிந்நியாசம்.]*

**அபிநந்தனர்** *abinandaṉar,* பெ.(n.) தீர்த்தங்கரருள் ஒருவர் (திருக்கலம், காப்பு, உரை); name of a Jaina Arhat, one of 24 *tirttaṅgarar,* q.v.

*[Skt. abhi-nandana>த. அபிநந்தனர்.]*

**அபிநயக்கை** *abinaya-k-kai,* பெ.(n.) கைகாட்டு (அபிநயம்) மெய்ப்பாடு; gesture by hand.

*[**Skt.** abhi-naya>த. அபிநயம்.]*



**அபிநயசிரம்** *abinayaširam,* பெ.(n.) தலையாற் செய்யும் மெய்ப்பாடு; pose of the head.

*[**Skt.** abhi-naya+širas>த. அபிநயசிரம்.]*

**அபிநயநூல்** *abinaya-nūl,* பெ.(n.) காமக் கலைப் பற்றிய ஒரு நூல்; a treatise on gestures of lust or of passion (சா.அக.).

*[**Skt.** abhi-naya>த. அபிநயம்.]*

**அபிநயம்** *abinayam,* பெ.(n.) 1. ஆடற் கலையில், களம், கருத்து, காலம் முதலியவற்றை முகத்தாலும், உடல் உறுப்புகளாலும் உணர்ச்சியோடு வெளிப்படுத்துதல்; communication and interpretation of meaningful ideas and emotions through facial expressions and rhytmic gestures of hands. *"இருபத்து நான்கு ஒற்றைக்கை அபிநயங்களைக் காட்டி விளக்கினார்".* 2. மனக்கருத்தைக் குறிப்பால் விளக்கும் உடற்செய்கை; indication of sentiment or purpose by look or gesture, gesticulation, theatrical action. *"மகளிர்தங்க ளபிநயம்" (இரகு. தசரதன்சா. 30).*

**த.வ. அவிநயம்.**

*[த.அவிநயம்>**Skt.**abhi-naya>த. அபிநயம்.]*

**அபிநயவிடுகதை** *abinaya-vidu-kadai,* பெ.(n.) ஒரு சொல்லின் பல பிரிவுகளை, மெய்ப்பாட்டால் காட்டும் புதிர் (பாண்டி); acted charade.

*[அபிநயம் + விடுகதை.]*

*[**Skt.**abhi-naya>த.அபிநயம்.]*

**அபிநயன்** *abinayan,* பெ.(n.) கூத்தன் (சிந்தா. நி. 166); dancer.

**த.வ.அவிநயன், ஆடவல்லான், கூத்தப் பெருமான்.**

*[த.அவிநயம்>**Skt.**abhi-naya>த.அபிநயன்.]*

**அபிநயி** *abinayi,* பெ.(n.) ஆடற் கலையில் உடல் உறுப்புகளை அசைத்தல்; show in gestures and postures (the feelings, emotions, etc.) *"பக்திச் சுவையை அபிநயித்துக் காட்டினார்".*

**த.வ.அவிநயி.**

*[**Skt.** abhi-naya>த. அபிநயி.]*

**அபிநயி-த்தல்** *abinayi-,* 4 செ.குன்றாவி.(v.t.) நடித்தல்; to act, gesticulate.

**த.வ.அவிநயி.**

*[**Skt.** abhi-naya>த. அபிநயி-.]*

**அபிநவம்** *abinavam,* பெ.(n.) புதிது; that which is quite new, fresh, modern. *"ராகவ வபிநவ கவிநாதன்" (கம்பரா. தனி. 9).*

*[**Skt.** abhi-nava>த. அபிநவம்.]*

**அபிநாகனம்** *abināganam,* பெ.(n.) கண்கட்டு; bandage over the eyes (சா.அக.).

**அபிநாகிதம்** *abi-nāgidam,* பெ.(n.) தேற்றான் கொட்டை; water cleaning nut, *Strychnos potatorum* (சா.அக.).

**அபிநாசசன்னி** *abināša-šanni,* பெ.(n.) 1. **அபிநியாசசன்னி** பார்க்க; see *abi-niyāša-šanni.* 2. இசிவுநோய் (இராட்); a kind of *šanni.*

*[**Skt.**abhi-nāsa+sanni>த.அபிநாசசன்னி.]*

**அபிநாசி** *abināši,* பெ.(n.) **அபீனசம்** பார்க்க; see *abinašam* (சா.அக.).

**அபிநிதமாது** *abinida-mādu,* பெ.(n.) பதுமினி சாதிப் பெண்; the first of the four classes to lust, chastity etc. (சா.அக.).

**அபிநியாசசன்னி** *abiniyāša-šanni,* பெ.(n.) அளவிற்கதிகமாய்ச் சுரங்காய்ந்து, பசியின்மை, முக, உடம்பு வலி, மேல்மூச்சு, வலுக்குறைவு (பலவீனம்) ஐம்பொறிகளின் (பஞ்சேந்திரியத்) தன்மைக் குறைவு, மயங்கிய தூக்கம், அறிவின்மை முதலிய குணங்களைக் காட்டுமொரு வகை இசிவு (சன்னிபாத)ச் சுரம்; a kind of typhoid fever characterised by high temperature, loss of appetite, glossiness of face, pain all over the body, hard, breathing, weakness, depression of vital powers of the five sensory organs, sommolence, loss of consciousness etc. (சா.அக.).

*[Skt. abhi+nyāsa+san-ni>த. அபிநியாச சன்னி.]*

**அபிநியாசசுரம்** *abiniyāša-šuram,* பெ.(n.) உட்காங்கை, நிறம்குன்றல், பசிநீங்கல், முகப்பளபளப்பு, பேச்சின்மை, ஐம்பொறி (பஞ்சேந்திரிய)த் தன்மைக் குறைவு, மயங்கிய உறக்கம் (நித்திரை) மற்றும் இசிவு (சன்னிபாத) குணங்கள் முதலியவற்றுடன் கூடிய சுரம்; a fever accompanied by a slight or impereeptible rise of the bodily beat or a slightly sub normal temperature, dulness of completion, loss of appetite, glassiness of face, loss of voice, loss of vital powers of the sensory organs, somnolence or subcomatose state and other concomitant symptoms of typhus fever, ardent fever (சா.அக.).

**த.வ.உட்காங்கைக் காய்ச்சல்.**

*[Skt.abhi+nyāša>த. அபிநியாசம்.]*

**அபிநியாசவாதம்** *abiniyāša-vādam,* பெ.(n.) உயிர்வளி, பரியன்வளி, ஊதை, பித்தம், கோழை முதலியவற்றை அதிகரிக்கச் செய்வதனால், அதிக சுரங்காய்ந்து, காதடியில் வீக்கத்தை உண்டுபண்ணும் ஓர் ஊதை (வாத) நோய்; a rheumatism marked by high fever and swelling below the lobes of the ears (சா.அக.).

**த.வ. காதடிவூதை.**

*[Skt. abhi+nyāsa+vāta>த. அபிநயாச வாதம்.]*

**அபிநிவேசம்**[1] *abinivēšam,* பெ.(n.) விருப்பம் (விசாரசந். 335) ; desire.

*[Skt. abhinivēša>த. அபிநிவேசம்.]*

**அபிநிவேசம்**[2] *abinivēšam,* பெ.(n.) ஊக்க மிகுதி; zeal, earnestness. *"வருந்தபி நிவேச மவையைந்தும்" (கூர்மபு. விபூ. 19).*

*[Skt. abhinivēša>த.அபிநிவேசம்.]*

**அபிநீலம்** *abinīlam,* பெ.(n.) மிகக்கருப்பு; very black or dark (சா.அக.).

**த.வ. கருநீலம், அட்டகருப்பு.**

*[Skt. abhi+nīla>த. அபிநீலம்.]*

**அபிப்பிராயபேதம்**[1] *abippirāyabēdam,* பெ. (n.) மாறுபட்ட கருத்து ; difference of opinion (சா.அக.).

*[Skt.abhi-prāya+bhēda> த.அபிப்பிராய பேதம்.]*

**அபிப்பிராயபேதம்**[2] *abippirāya-bēdam,* பெ.(n.) மனவருத்தம்; hard feelings. *"ஒரு சிறிய பிரச்சினையினால் இருவருக்குள்ளும் அபிப்பிராயபேதம் ஏற்பட்டுவிட்டது" (இ.வ.).*

**த.வ.கருத்துமுரண்.**

*[Skt. abhi-prāya+bhēda>த. அபிப்பிராய பேதம்.]*

**அபிப்பிராயம்** *abippirāyam,* பெ.(n.)**1.** சொந்தக் கருத்து; personal opinion. **2.** (ஒரு துறையில்) வல்லுநர் கொண்டிருக்கும் கருத்து, கலந்தாய்வு; professional opinion or advice. *"வழக்குரைஞரிடம் அபிப்ராயம் கேட்டு அதன்படி செய்யலாம்"* (இக்.வ.). **3.** செயல்படுத்த திட்டமிட்டிருக்கும் எண்ணம்; intention. *"பைஃனை மேலே படிக்க வைக்கும் அபிப்பிராயம் இல்லை" (இக்.வ.).* **4.** நோக்கம்; aim, intention.

**த.வ. கருத்து.**

[Skt. abhi-prāya>த. அபிப்பிராயம்.]

**அபிபவம்** *abibavam*, பெ.(n.) அவமானம்; disgrace.

[Skt. abhi-bhava>த. அபிபவம்.]

**அபிபவி-த்தல்** *abibavi*, 4 செ.குன்றாவி.(v.t.) அவமானப்படுத்துதல் (திவ்பெருமாள்தி. 2, 5, வ்யா. பக். 33); to disgrace.

[Skt. abi-bhava>த. அபிபவி-.]

**அபிபிங்கலம்** *abipiṅgalam*, பெ.(n.) மிகச்சிவப்பு; very red or reddish brown (சா.அக.).

த.வ. செக்கச்சிவப்பு.

**அபிபூதன்** *abibūdaṉ*, பெ.(n.) மறைக்கப் பட்டவன்; one who is concealed (சா.அக.).

[அபி + பூதன்.]

[Skt. abhi>த. அபி.]

**அபிமதம்[1]** *abimadam*, பெ.(n.) இணக்கம் (நாநார்த்த) ; agreeableness.

[Skt. abhi-mata>த. அபிமதம்.]

**அபிமதம்[2]** *abimadam*, பெ.(n.) விருப்பம்; desire, wish. *"அவர வர்க்குள வபிமத மறைந்திடு மென்ன" (நல். பாரத. பாண்டவர்துற. 6).*

[Skt. abhi-mata> த. அபிமதம்.]

**அபிமந்தம்** *abi-mandam*, பெ.(n.) கண்ணோய்; a disease of the eye (சா.அக.).

**அபிமந்திரணம்** *abi-mandiraṇam*, பெ.(n.) மந்திரித்தல்; treating by magical enchantments (சா.அக.).

**அபிமந்திரம்** *abimandiram*, பெ.(n.) ஓதுகை (சிந்தா. நி. 182); reciting mantras.

[அபி + மந்திரம்.]

[Skt. abhi>த. அபி.]

மன்+திரம்–மந்திரம்.

**அபிமந்திரி-த்தல்** *abi-mandiri-*, 4. செ. குன்றாவி. (v.t.) மறைமொழியால் அழிவை உண்டாக்குதல் (சீவக. 2411. உரை); to consecrate by uttering mantras.

[Skt. abhi>த. அபி.]

**அபிமபுத்தி** *abimaputti*, பெ.(n.) உருத்திருள் ஒருவர் (தக்க யாகப். 443, உரை); a Rudraṉ.

**அபிமன்** *abimaṉ*, பெ.(n.) அருச்சுனருக்குச் சுபத்திரையிடம் பிறந்த மகன் (பெருங். உஞ்சை, 56, 58, குறிப்பு); Arjuna's son by *Subhadrā.*

[Skt. abhi-manyu>த. அபிமன்.]

**அபிமன்னியு** *abimaṉṉiyu*, பெ.(n.) **அபிமன்னு** பார்க்க; see *abimaṉṉu.*

[Skt. abhimanyu>த. அபிமன்னியு.]

**அபிமன்னு** *abimaṉṉu*, பெ.(n.) அருச்சுனன் மகன் (நல்.பாரத. புத்திர. 117); name of the son of Arjuna by *Subhadrā*

[Skt. abhimanyu>த. அபிமன்னு.]

**அபிமானகளத்திரம்** *abimāṉa-kaḷattiram*, பெ.(n.) வைப்பாட்டி; concubine used euphem.

த.வ. காமக்கிழத்தி.

[Skt. abhi-māna+kalatra>த. அபிமான களத்திரம்.]

**அபிமானத்தி** *abimāṉatti*, பெ.(n.) வைப்பாட்டி; concubine, used euphem.

[Skt. abhi-māna> த. அபிமானம்.]

அத்தி – பெண்பாலீறு.

**அபிமானதுங்கன்** *abimāṉa-tuṅgaṉ*, பெ.(n.) அன்புமிக்கோன் ; one who has great affection, attachment. *"அணிகோட்டியர் கோனபிமான துங்கன் செல்வனை" (திவ். திருப்பல். 11).*

[Skt. abhi-māna+tuṅga>த. அபிமான துங்கன்.]

**அபிமானபுத்திரன்** *abimāṉa-puttiraṉ*, பெ.(n.) வளர்ப்பு மகன்; on by affection, foster son, not recognized by law.

*[Skt.abhi-māna>த.அபிமான(ம்).]*

*புது→புத்து→புத்திரன். புதியதாக குடும்பத்திற்கு வந்தவன்.*

**அபிமானம்** *abimāṉam,* பெ.(n.) 1. தன்மதிப்பு (மச்சபு. பன்வந். 22); self-respect, sense of honour. 2. ஒன்றன் குணத்தை மற்றொன்றன் மேலேற்றுகை; erroneous identification as of the soul with the body *"செயிரி னாலுட னானெனு மபிமானம்" (சூத. சிவ. 12,38).* 3. பற்று; love, affection. 4. உள்ளக்களிப்பு (சூடா); joy, enthusiasm. *"உலக இலக்கியத்தில் அவர் கொண்டிருந்த அபிமானம் அளவிடமுடியாது"* 5. நன்மதிப்பு, உயர்வான உண்ணம். ; admiration. *"சிறந்த கதைகள் எழுதி மக்களின் அபிமானத்தைப் பெற்றவர்" (இக்.வ.).*

**த.வ. தன்மதிப்பு, தன்மானம்.**

*[Skt. abhi-māna>த. அபிமானம்.]*

**அபிமானவிருத்தி** *abimāṉa-virutti,* பெ.(n.) செருக்கு; egoism (சா.அக.).

*[Skt.abhi-māna+vṛtti>த.அபிமான விருத்தி.]*

**அபிமானி[1]-த்தல்** *abimāṉi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. மதித்தல்; to honour, esteem, respected. 2. ஆதரித்தல்; to take great care of support, love.

*[Skt. abhi-māni>த. அபிமானி-.]*

**அபிமானி[2]** *abimāṉi,* பெ.(n.) பற்றுடையோன்; one who has affection, attachment.

**த.வ. ஆர்வலன்.**

*[Skt. abhi-mānin>த. அபிமானி.]*

**அபிமானிதம்** *abimāṉidam,* பெ.(n.) புணர்ச்சி; copulation; sexual intercourse (சா.அக.).

*[Skt.abhi-mānin>த.அபிமானிதம்.]*

**அபிமுகம்** *abimugam,* பெ.(n.) 1. நேர்முகம்; face turned towards. *"வடக்கபிமுகம்" (நல். பாரத. கபிலை. 86).*

*[அபி + முகம்.]*

*[Skt. abhi>த. அபி.]*

**அபிமுகன்** *abimugaṉ,* பெ.(n.) நல்லவன்; person favourably disposed. *"ஐவரு மபிமுகராக" (நல். பாரத. சத்தியபா. 4).*

*[அபி + முகன்.]*

*[Skt. abhi>த. அபி.]*

*முகம் → முகன்.*

**அபியங்கம்** *abiyaṅgam,* பெ.(n.) நெய்மம் (தயிலந்) தேய்த்தல்; rubbing over the body with oil - unction; anointing or applying an oil or ointment with friction, inunction (சா.அக.).

**த.வ. எண்ணெய் முழுக்காட்டு.**

*[Skt. abhi+aṅga>த. அபியங்கம்.]*

**அபியந்தரம்** *abiyandaram,* பெ.(n.) உள்; inside (சா.அக.).

*[Skt. abhi+antara>த. அபியந்தரம்.]*

**அபியிதம்** *abiyidam,* பெ.(n.) சொல்லுகை (சிந்தா. நி. 182); saying, speaking.

*[Skt. abhi-hita>த. அபியிதம்.]*

**அபியுக்தன்** *abiyuktaṉ,* பெ.(n.) அறிஞன் (திருக்கோ. நூன்முகம்); scholar of high standing.

*[Skt. abhi-yukta>த. அபியுக்தன்.]*

**அபியோகபத்திரம்** *abiyōgapattiram,* பெ.(n.) பிறரால் செய்யப்பட்ட துன்பத்தைக் கூறி முறையிடும் ஆவணம் (சுக்கிர நீதி. 95); petition, complaint in writing.

**த.வ. முறையீட்டு ஆவணம்.**

*[Skt. abhi-yōga+patra>த. அபியோக பத்திரம்.]*

**அபியோகம்** *abiyōgam,* பெ.(n.) தனக்குப் பிறர் செய்த தீங்கை அரசனிடம் முறையிடுகை (சுக்கிரநிதி. 262); complaint, representation to the king of the wrongs done to a person.

**த.வ. முறையீடு.**

*[Skt. abhi-yōga>த. அபியோகம்.]*

**அபிரங்கி** *abiraṅgi,* பெ.(n.) கருநெல்லி; black berried feather foil, *Phyllanthus reticulatus* (சா.அக.).

**அபிராமஞ்சி** *abirāmañji,* பெ.(n.) சடா மாஞ்சில்; a plant, *Valeriana jatamansi* (சா.அக.).

**அபிராமம்** *abirāmam,* பெ.(n.) அழகானது; that which is beautiful, lovely, pleasing, delightful. *"கொடுஞ்சமரிற் பட்ட வடுத் துளைத்த கல்லபிராமம்" (தனிப்பா. 1,92,7).*

*[Skt. abhi-rāma>த. அபிராமம்.]*

**அபிராமன்** *abirāmaṉ,* பெ.(n.) மனத்துக் கினியவன்; sweet charming person. *"அபிராம விங்கு வருக" (திருப்பு. 59).*

*[Skt. abhi-rāma>த. அபிராமன்.]*

**அபிராமி**[1] *abirāmi,* பெ.(n.) மலைமகள்; *Pārvadi,* as beautiful.

*[Skt. abhi-rāmi>த. அபிராமி.]*

**அபிராமி**[2] *abirāmi,* பெ.(n.) மூலி, சார்வளை; a plant, *Trianthema decandra* (சா.அக.).

**அபிராமிபட்டர்** *abirāmipaṭṭar,* பெ.(n.) அபிராமியந்தாதி யியற்றியவர்; name of a *Brāhman* devotee to *Tirukkaḍavūr* in the Tanjore district, author of the *abirāmi-y-andādi,* 18th c.

*[Skt.abhi-rāmi+bhaṭṭa>த.அபிராமிபட்டர்.]*

**அபிராமியந்தாதி** *abirāmi-y-andādi,* பெ.(n.) ஒரு நூல்; name of a popular devotional poem on the goddess *Abirāmi* of *Thirukkaḍavūr* by *Abirāmi-paṭṭar.*

*[Skt.abhi-rāmi+anta+ādi>த. அபிராமி யந்தாதி.]*

**அபிருசி** *abiruši,* பெ.(n.) மிகுவிருப்பம்; great taste.

*[Skt. abhi-ruci>த. அபிருசி.]*

**அபிருத்தம்** *abiruttam,* பெ.(n.) மேக நோயினால் ஆண்குறியின் முன் தோலில் ஏற்படும் சுருக்கம்; the refraction of the prepuce behind the glans penis, paraphymosis (சா.அக.).

த.வ. முன்தோல் சுருக்கு.

**அபிரேக்கு**[1] *abirēkku,* பெ.(n.) மீன் (மதி. களஞ். ii, 18); fish.

**அபிரேக்கு**[2] *abirēkku,* பெ.(n.) **அப்பிரகம்** பார்க்க; see *appiragam* (சா.அக.).

**அபிரேகம்** *abirēgam,* பெ.(n.) **அப்பிரகம்** பார்க்க; see *appiragam* (சா.அக.).

*[Skt. abhraka>த. அபிரேகம்.]*

**அபிலாசம்** *abilāšam,* பெ.(n.) விருப்பம் (சிந்தா. நி. 187); desire, wish, longing.

*[Skt. abhi-lāsa>த. அபிலாசம்.]*

**அபிலாசை** *abilāšai,* பெ.(n.) விருப்பம்; desire; wish. *"அபிலாசையின்றி யாசாரியனைப் பிறிந்திருப்பா ரார்" (உபதேசரத். 64) காசிக்குப் போய் வரவேண்டும் என்ற பாட்டியின் அபிலாசை நிறைவேறியது. (இ.வ.).*

த.வ. அவா.

*[Skt. abhi-lāsa>த. அபிலாசை.]*

**அபிலாபம்** *abilābam,* பெ.(n.) பேச்சு (சிந்தா. நி. 169); talk, speech.

*[Skt. abhi-lāpa>த. அபிலாபம்.]*

**அபிவாகதாரை** *abivāga-tārai,* பெ.(n.) 1. நிணநீர்த் தாரை முடிவு; the termianl ducts of the lymphatic gland. 2. கோளத்தினின்று வெளிவரும் நிணநீர்த்தாரை; the efferent ressels of the lymphatic gland - vase efferentia *(Lymphatica).*

*[Skt. abhi-vāja-dhāra>த. அபிவாகதாரை.]*

**அபிவாதனம்** *abivādaṉam,* பெ.(n.) தன் குலம், பெயர் முதலியன கூறி பெரியோரைத் தொழுகை; respectful salutation which describes the name and lineage of the person who salutes. *"அபிவாதனத்தாற் பெரியோரை வணங்கல்" (கூர்மபு. வியாதர் கரும. 8).*

த.வ. தன்நவில் தொழுகை.

*[Skt. abhi-vādana>த. அபிவாதனம்.]*

**அபிவியஞ்சகம்** *abiviyañjagam,* பெ.(n.) 1. வெளிப்படுத்துகை; revealing, manifesting. *"அது வைகரிவாக்குக்கு அபிவியஞ் சகஸ்தானம்" (சி. சி. 2, 62, சிவாக்.).* 2. வெளிச்சம்; brightness.

*[**Skt.** abhi-vyañjaka>த. அபிவியஞ்சகம்.]*

**அபிவியத்தி** *abiviyatti,* பெ.(n.) வெளிப்படுகை; manifestation. *"நீர் கொண்ட சிவத்து வாபிவியத்திக்கு மீளப் பிறப்புண்டென்றவா றாயிற்று" (சிவசம. 35).*

*[**Skt.** abhi-vyakti>த. அபிவியத்தி.]*

**அபிவியாதம்** *abi-viyādam,* பெ. (n.) விழுங்குவதற்காக வாயைத் திறத்தல்; opening one's mouth for swallowing (சா.அக.).

*[**Skt.** abhi-vyāta>த. அபிவியாதம்.]*

**அபிவிருத்தி** *abivirutti,* பெ.(n.) 1. மேன்மேலும் பெருகுகை; growth, prosperity, continuous advancement. *"தங்குல மபிவிருத்தி யெய்தும்" (மச்சபு. சபிண்டீ. 29).* 2. தொழில், பொருளாதாரம், உருவாக்கம் முதலியவற்றில் வளர்ச்சி; development. தொழில் அபிவிருத்தி மிக்க நாடுகள். 3. முன்னேற்றம்; improvement (qualilalively). *ஆசிரியர்களின் திறமையை அபிவிருத்தி செய்ய நடவடிக்கை.*

**த.வ. வளர்ச்சி, முன்னேற்றம், மேம்பாடு.**

*[**Skt.** abhi-vrddi>த. அபிவிருத்தி.]*

**அபிற்சாந்து** *abir-šāndu,* பெ.(n.) பூஞ்சாந்து; a tree bark sold in the bazzars (சா.அக.).

**அபின்** *abin,* பெ.(n.) கசகசாச் செடியின் பால்; opium, inspissated juice of papaver somniferum (சா.அக.).

**த.வ. கஞ்சங்குல்லை, கசமத்தப்பிசின்.**

*[**U.** afim>த. அபின்.]*

**அபின்சாரம்** *abin-šāram,* பெ.(n.) பலவகை அபினிச் சத்துக்களிலொன்று; one of the several alkalods of oium-ladanam (சா.அக.).

*[அபின் + சாரம்.]*

*[**U.** afim>த. அபின்.]*

*சாறு→சாறம்→சாரம்.*

**அபின்னியாசம்** *abinniyāšam,* பெ.(n.) இசிவு (சன்னி) வகை(R.); a kind of high fever attended with convulsion.

*[**Skt.** abhinyāsa>த. அபின்னியாசம்.]*

**அபினி** *abini,* பெ.(n.) 1. ஒருவகை (போதை) மதர்ப்புப் பொருள்; opium. 2. **அபின்** *பார்க்க;* see *abin.*

*[**U.** afim > த.அபினி.]*

**அபினிச்சத்து** *abini-c-cattu,* பெ.(n.) 1. அபினியி னின்று இறக்கும் சத்து; extract of opium-*morphine or cocaine.* 2. **அபின்சாரம்** பார்க்க; see *abin-šāram.*

*[அபினி + சத்து.]*

*[**U.** afim>த.அபினி.]*

**அபினிச்சாராயம்** *abini-c-cārāyam,* பெ.(n.) 1. கசகசாவினின்று எடுக்கப்படுவதும் பக்கிரிகளாலும், இன்னும் சிலரால் விழா (பண்டிகை)க் காலங்களில் உட்கொள்ளப்படுவதுமான பங்கி என்று சொல்லப்பட்ட ஒரு வகை மது; an intoxicating liquor which is formed by macerating or infusin the poppy heads in water and sweetening the smae with molasses. It is drunk by fakirs and by some others on festival occasions, bhang.2. அபினிச் சத்திலிருந்து வடிக்கும் ஒரு வகை மேனாட்டுச் சாராயம்; wine of opium, *Vinum opili* (சா.அக.).

*[அபினி + சாராயம்.]*

*[**U.** afim> த.அபினி.]*

**அபினிச்செம்பு** *abini-c-cembu,* பெ.(n.) அபினி, கந்தகம், துருசு முதலான சரக்குகளைக் கொண்டு போகர் நூலிற் சொல்லிய முறைப்படி மெழுகாக்கிச் செம்புருகையில் கிராசங் கொடுத்துத் தூய்மை (சுத்தி) செய்த களிம்பற்ற ஓர் உயர்தரமான செம்பு; a purified superior copper free from

verdigris, prepared, according to the process laid down in a Bogar's work, using opium, sulphur, blue stone etc., as chief ingredients (சா.அக.).

*[அபினி + செம்பு.]*

*[**U.** afim> த.அபினி.]*

*செம்→செம்பு (வே.க.220).*

**அபினித்தைலம்** *abiṉi-t-tailam,* பெ.(n.) மேற்பூச்சு மருந்தாக ஊதை (வாத) நோய், ஊதை (வாத)ப்பிடிப்பு முதலான வலியுள்ள நோய்களுக்குப் பயன்படும் அபினிச் சத்திலிருந்து உருவாக்கும் நெய்மம்; an oily liquid preparation from the extract of opium used as an external application in cases of rheumatism, gout and other painful affections (சா.அக.).

*[**U.** afim> த. அபினி..]*

**அபினிப்பாகு** *abiṉi-p-pāgu,* பெ.(n.) கசகசாத் தோல், சாராயம், சருக்கரை ஆகிய இவற்றை வெந்நீரில் கலக்கிக் கொதிக்க வைத்துப் பாகுபதமாய் இறக்கியவொரு மருந்துப் பாகு; the syrup of poppies-surupus *papavaris.* It is a syrup prepared from poppy capsules, rectified spirit and refined sugar by boiling them sufficiently until the mass is reduced to a concentrated solution of sugar (சா.அக.).

*[அபினி + பாகு.]*

*[**U.** afim> த. அபினி.]*

*பகு→பாகு.*

**அபினியிளகியம்** *abiṉi-y-iḷagiyam,* பெ.(n.) கபாட இளகியம்; மலத்தைக் கட்டக் குழந்தைகளுக்கு உருவாக்கிக் கொடுக்கும் ஒரு வகை இளகியம்; an electuary prepared with opium as a chief ingredient and given to children for arresting motions.

*[அபினி + இளகியம்.]*
*[**U.** afim>த. அபினி.]*
*இளகு→இளகம்→இளகியம்.*

**அபினியுப்பு** *abiṉi-y-uppu,* பெ.(n.) அபினியினின்று எடுக்கப்படும் உப்புச் சத்து; alkaloids obtained from opium some of them are hydrochlorate, sulphate, and acedate of opium (சா.அக.).

*[அபினி + உப்பு.]*

*[**U.** afim>த. அபினி.]*

*உ→உப்பு = உயர்தல், படுதல், மேலெழும்பித் தோன்றுதல்.*

**அபினிரஞ்சம்** *abiṉirañjam,* பெ.(n.) ஆங்கில முறைப்படியும் ஆயுள்வேத முறைப்படியும் செய்யக்கூடியதான அபினியைச் சாராயத்திற் கரைத்துப் புளிக்க வைத்து வடித்த ஒரு நீர்மச் சத்து; a preparation obtained by fermenting the solution of opium and alchohol according to either the English system or the ayurvedic system. it is known as Arishtam, *Tincture of opium* (சா.அக.).

*[**U.** afim+nirañja>த. அபினிரஞ்சம்.]*

**அபினிவைப்பு** *abiṉi-vaippu,* பெ.(n.) கடுகு, கசகசா, மராட்டிமொக்கு முதலான சரக்குகளைக் கொண்டு உருவாக்கி, அபினிக்குப் பகரமாக விற்கும் போலி அபினி; a faked opium prepared from a mixture of the following drugs as ingredients viz., mustard, poppy seeds, gunjah and buds of dhatura and sold as a substitute for the genuine drug (சா.அக.).

*[அபினி + வைப்பு.]*

*[**U.** afim>த. அபினி.]*

**அபீசனம்** *abīśaṉam,* பெ.(n.) நோயற்ற நிலைமை; absence of disease.

**அபீசி** *abīśi,* பெ.(n.) நிரய (நரகம்) வகை (சி.போ.பா.2, 3, பக்.204); a hell.

*[**Skt.** a-vīci>த. அபீசி.]*

**அபீசு** *abīśu,* பெ.(n.) கைவிரல்கள்; fingers (சா.அக.).

**அபீட்டிதம்** *abīṭṭidam,* பெ.(n.) தொழுகை (சிந்தா.நி.180); prayer.

*[Skt. abhiṣṭita>த. அபீட்டிதம்.]*

**அபீடனம்** *abīḍaṉam,* பெ.(n.) **அபீசனம்** பார்க்க; see *abīśaṉam* (சா.அக.).

*[Skt. abhisana>த. அபீடனம்.]*

**அபீர்** *abīr,* பெ.(n.) சந்தனத் தூள், முளரி (ரோசா), கத்தூரி, கற்பூரம் முதலியவற்றைக் கொண்டு உருவாக்கும் ஒரு நறுமணப் பொடி; a perfumed powder made up of sandal wood powder zedoary, rose musk, camphor etc. (சா.அக.).

*[Skt. abhi>த. அபீர்.]*

**அபீரு** *abīru,* பெ.(n.) தண்ணீர் மீட்டான் கிழங்கு; a plant water root, *Asparagus racemosus* (சா.அக.).

**அபீனசம்** *abīṉaśam,* பெ.(n.) 1. நீர்க் கோப்பின்மை; absence of catarrh. 2. மூக்கின் வறட்சி; dryness of the nasal. 3. மூக்கடைப்பு; obstructions in the nostrils (சா.அக.).

*[Skt. a-pīnasa>த. அபீனசம்.]*

**அபீனசரோகம்** *abīṉaśa-rōgam,* பெ.(n.) சளியினால் மூக்கின் நரம்புகள் அடைபட்டு, மூக்கினின்று சளி வராது வறண்டு, மூச்சுவிடும் போது 'குறு குறு' என்ற ஒலியை யுண்டாக்கி எந்நேரமும் வியர்வையை யுண்டு பண்ணுமொரு நீர்க்கோப்பு நோய்; a disease of the nose arising from the phlegmatic condition of the body in which the mucous in prevented from being discharged owing to the obstruction in the nasal passages and the adjacent sinuses (சா.அக.).

**த.வ. நீர்க்கோப்பு.**

*[Skt. apīnasa+rōga>த. அபீனசரோகம்.]*

**அபீட்டம்** *abīṭṭam,* பெ.(n.) விருப்பமானது; that which is desired.

*[Skt. abhiṣta>த. அபீட்டம்.]*

**அபீடேகம்** *abīḍēgam* பெ.(n.) **அபிடேகம்** பார்க்க; see *abiḍēgam.*

**த.வ. முழுக்கு.**

*[Skt. abhi-sēka> த.அபீடேகம்.]*

**அபுட்பபலம்** *abuṭpa-palam,* பெ.(n.) 1. பூவாது காய்த்தல்; bearing fruits without flowering. 2. பலாமரம்; the jact tree, *Artocarpus integrifolia.* 3. அத்திமரம்; fig tree, *Ficus glemerata* (சா.அக.).

**த.வ. பூவாமரம்.**

**அபுட்பம்** *abuṭpam,* பெ.(n.) பூக்காதது, அதாவது மொட்டு; that which has not blossomed, a bud (சா.அக.).

*[Skt. a-puspa>த.அபுட்பம்.]*

**அபுத்திபூருவம்** *abutti-pūruvam,* பெ.(n.) அறியக்கூடாமல் நிகழ்வுறுகை; that which is unintentional. *"சிவபுண்ணியம் அபுத்திபூருவம் புத்தி பூருவமென் றிருவகைப்படும்" (சி.போ.பா.8, 1, 2, பக்.169).*

**த.வ. அறியா நிகழ்வு.**

*[Skt. a-buddhi-pūrva>த. அபுத்திபூருவம்.]*

**அபுத்திரகன்** *abuttiragaṉ,* பெ.(n.) பிள்ளைப் பெறாதவன்; one without male issue.

*[Skt. a-putraka>த. அபுத்திரகன்.]*

த. புத்திரன் > **Skt.** *putra.*

**அபுதன்** *abudaṉ,* பெ.(n.) மூடன் (திருக்காளத். பு.21, 11); fool, dolt.

*[Skt. a-budha>த. அபுதன்.]*

**அபுரூபம்** *aburūbam,* பெ.(n.) அருமை (வின்.); rarity. corr. of அபூர்வம்.

**அபூதம்** *abūdam,* பெ.(n.) முன் இல்லாதது; whatever has not been, has not happened.

**த.வ. என்றுமிலி.**

*[Skt. a-bhūta>த. அபூதம்.]*

**அபூதவுவமை** *abūda-v-uvamai,* பெ.(n.) இல்பொருளுவமை (தண்டி.30); figure of speech in which non-existent things are used as standards of comparison.

*[அபூத(ம்) + உவமை.]*

*[**Skt.** a-bhūta> த. ஆபூதம்.]*

*உவ்→உவ→உவமை.*

**அபூபம்** *abūbam,* பெ.(n.) அப்ப வகை (பிங்.); small round cake made of flour or meal.

*[**Skt.** apūpa>த. அபூபம்.]*

**அபூர்ணகாலம்** *abūrṇa-kālam,* பெ.(n.) பருவத்திற்குப் போதாத அல்லது குறைவான காலம்; the period wanting for maturity (சா.அக.).

**த.வ. முதிராக்காலம்.**

*[அபூர்ண(ம்) + காலம்.]*

*[**Skt.** apūrṇa>த. அபூர்ண(ம்).]*

**அபூர்வம்**[1] *abūrvam,* பெ.(n.) 1. புதிது; that which has not existed before, is quite new, rare. 2. கருமத்தால் பிறப்புக் கோள்களினால் (சன்மாந்தரங்களிற்) வலுவினைக் கொடுக்கும்படி தோன்றுவது (சி.சி.பர.பிரபா.2); *(Mimāmsā)* that which arises from karma and leads to results aimed at.

த.வ. அரிது, அருந்தோற்றம்.

*[**Skt.** a-pūrva>த. அபூர்வம்.]*

**அபூர்வம்**[2] *abūrvam,* பெ.(n.) 1. அரிதாக ஒருமுறை நிகழ்வது அல்லது காணப்படுவது, அரிதானது; that which occasionally occurs or is seen, that which is rare. இந்த வகையான கூத்து அபூர்வமாகத்தான் ஆடப்படுகிறது. 2. முன்னர் அறிந்திராத வொன்று, புதுமையானது; that which is new or novel. *"அவர் அபூர்வமான ஒரு வழியில் இதை முடிக்க நினைக்கிறார்".* 3. வழக்கத்துக்கு மாறானது; that which is unusual. *அபூர்வமாக அவன் காலை ஐந்து மணிக்கே எழுந்துவிட்டான்.*

**த.வ. நிகழாநிகழ்வு.**

*[**Skt.** a-pūrva>த. அபூர்வம்.]*

**அபூர்வி** *abūrvi,* பெ.(n.) தலயாத்திரிகரான மறைநூல் வல்ல அந்தணர் (I.M.P.Tj.32); Brahmin pilgrims well-versed in the *vēdas.*

*[**Skt.** a-pūrvin>த. அபூர்வி.]*

**அபூரணகாலம்** *abūraṇa-kālam,* பெ.(n.) 1. முதிராமற் பிறந்தது; that which has come out before maturity. 2. காலம் நிறைவுறு முன் பிறந்தது; that which has taken birth before the due time or the prescribed period (சா.அக.).

**த.வ. முதிராப்பிறப்பு.**

*[அபூரண(ம்) + காலம்.]*

*[**Skt.**a-pūrṇa>த. அபூரணம்.]*

**அபூரணம்** *abūraṇam,* பெ.(n.) முற்றாதது; that which is undeveloped (சா.அக.).

*[**Skt.** a-pūrṇa>த. அபூரணம்.]*

**அபூரணி** *abūraṇi,* பெ.(n.) பட்டுப்பருத்தி; silk cotton, *Bombax malabaricum alias B.peptaphyllum* (சா.அக.).

**அபூரி** *abūri,* பெ.(n.) **அபூர்வி** பார்க்க; see *abūrvi. "அபூரித் திருமேனிகளுக்குக் கொடுக்க... அரிசி இருநாழி" (S.I.I.IV.129).*

*[**Skt.** apūrvin>த. அபூரி.]*

**அபூரிதக்கரைசல்** *abūrida-k-karaišal,* பெ.(n.) (வேதி.) கலக்கப்படும் பொருளைத் தொடர்ந்து கரையவிடும் நீர்மம்; unsaturated solution.

**த.வ. தொடர்கரைசல்.**

*[அபூரிதம் + கரைசல்.]*

*[**Skt.** a-pūrita> த. அபூரிதம்.]*

**அபூருவம்** *abūruvam,* பெ.(n.) 1. புதினம் (சிந்தா. நி.183); novelty. 2. அரியது (இ.வ.); rarity.

*[**Skt.** apūrva>த. அபூருவம்.]*

**அபேசாக்கு-தல்** *abēšākku-,* 5 செ. குன்றாவி. (v.t.) உயர்த்துதல் (M.navi.98.); to heave.

*[அபேசு + ஆக்கு–.]*

*[**E.** upraise>அபேசு.]*

*ஆகு (த.வி.)-ஆக்கு (பி.வி.).*

**அபேசுசெய்—தல்** *abēšu-šey-,* 1 செ. குன்றாவி. (v.t.) 1. பருக்க வைத்தல் (இ.வ.); to prostrate. 2. விழுங்குதல்; to swallow. 3. கவர்தல்; to misappropriate. 4. திருடுதல் (மதி.களஞ்.i, 187); to steal.

*[அபேசு + செய்–.]*

*[**E.** abase> த. அபேசு–.]*

**அபேசுபோடு—தல்** *abēšu-pōḍu-,* 19 செ.குன்றாவி. (v.t) திருடுதல் (மதி.களஞ்.i, 77); to steal.

*[அபேசு + போடு–.]*

*[**E.** abase>த.அபேசு.]*

**அபேட்சகர்** *abēṭcagar,* பெ.(n.) வேட்பாளர்; candidate for an election.

*[**Skt.** apēkṣaga>த. அபேட்சகர்.]*

**அபேட்சி—த்தல்** *abēṭci-,* 4 செ.குன்றாவி.(v.t.) விரும்புதல்; to desire.

*[**Skt.** apēkṣi>த. அபேட்சி–.]*

**அபேட்சிதம்** *abēṭšidam,* பெ.(n.) விரும்பப் பட்டது (ஈடு.); that which is desired.

*[**Skt.** apēkṣita>த. அபேட்சிதம்.]*

**அபேட்சை** *abēṭcai,* பெ.(n.) விருப்பம்; desire.

*[**Skt.** apēkṣā>த. அபேட்சை.]*

**அபேதக்கட்சி** *abēda-k-kaṭci,* பெ. (n.) **அபேதவாதம், 2** பார்க்க (பாரதி.கட்டுரை, IV, 163); see *abēdavādam.*

த.வ. நிகராண்மைக்கட்சி.

*[**Skt.** a-bhēda+kaksya>த.அபேதக்கட்சி.]*

**அபேதகம்** *abēdagam,* பெ.(n.) கொத்துப் பசலை; cluster basella, *Basella cordifolia alias B.lucida* (சா.அக.).

**அபேதசைவம்** *abēdašaivam,* பெ.(n.) சிவனியம் பதினாறனுள் ஒன்று; *šaiva* sect which holds that the initiate should mediate on *šivan* as one with himself, one of 16 *Šaivam*, q.v.

*[**Skt.** abhēda+šaiva>த. அபேதசைவம்.]*

*சிவ> சிவம்>**Skt.** šaiva.*

**அபேதம்** *abēdam,* பெ.(n.) வேற்றுமையின்மை; absence of difference or distinction, indentity. *"பொன்னும் பணியும்போல அபேதம்" (சி.போ.சிற்.2,1).*

*[**Skt.** a-bhēda>த. அபேதம்.]*

**அபேதவாதம்** *abēda-vādam,* பெ.(n.) 1. ஆதனும் (சீவான்மா) பரவாதனும் (பரமான்மா) ஒன்றெனக் கூறும் கொள்கை (சொரூபசாரம், காப்பு உரை); the doctrine identifying the individual soul with god. 2. உலகத்துச் சொத்தை மக்களுக்குச் சமமாகப் பகிர்ந்து கொடுத்தல் தொழிலாளிகள் போட்டி முறையை மாற்றிக் கூடியுழைக்கு முறையைக் கையாளுதல் முதலிய கொள்கைகளை யுடைய அரசியல்வாதம் (புதுமை.); socialism.

*[**Skt.** a-bhēda-vāda>த. அபேதவாதம்.]*

**அபேதவாதி** *abēda-vādi,* பெ.(n.) ஒருமைக் கொண்முடிபாளன் (அத்துவைதி); one who maintains the identity of the individual self with the Supreme Soul.

*[**Skt.** a-bhēda+vādin> த. அபேதவாதி.]*

**அபேதிவாதம்** *abēdi-vādam,* பெ.(n.) முதியார் கூந்தல்; a plant, *Poederia foctida* (சா.அக.).

**அபேயபானம்** *abēya-bānam,* பெ.(n.) குடிக்கத் தகாதது; that which is unfit to drink (சா.அக.).

*[**Skt.** a-bhēya-pāna>த. அபேயபானம்.]*

**அபேனம்** *abēnam,* பெ.(n.) கசகசாச் செடி; poppy plant, *Papaver somniferum* (சா.அக.).

**அபேனரசம்** *abēna-rašam,* பெ.(n.) **அபின் சாரம்** பார்க்க; see *abin-šāram* (சா.அக.).

*[**U.** afim+rasa>த. அபேனரசம்.]*

**அபையன்** *abaiyaṉ,* பெ.(n.) **அபயன்** பார்க்க; see *abayaṉ* (சா.அக.).

*[Skt. abhaya> த.அபையன்.]*

**அபோக்தா** *abōktā,* பெ.(n.) துய்க்காதவன், புசிக்காதவன்; one who does not eat or enjoy.

*[Skt. a-bhōktr> த. அபோக்தா.]*

**அபோகம்** *abōgam,* பெ.(n.) சிற்றின்ப நுகர்வின்மை; absence of sexual enjoyment (சா.அக.).

*[Skt. a-bhōga>த. அபோகம்.]*

**அபோச்சியம்** *abōcciyam,* பெ.(n.) உண்ணத் தகாதது; that which is prohibited as food. *"போதமிகு ஞானிகட் கபோச்சியமொன் றேனுமிலை" (சூத.எக்சிய.45, 3).*

*[Skt. a-bhōjya>த. அபோச்சியம்.]*

**அபோசம்[1]** *abōšam,* பெ.(n.) பருத்தி; cotton, *Gossypium herbaceum* (சா.அக.).

**அபோசம்[2]** *abōšam,* பெ.(n.) உடம்பை ஆற்றலிழக்கச் செய்யுமொரு நோய்; a wasting disease resulting in weakness and loss of weight, size and function of an organ or organs, *Atrophy* (சா.அக.).

**அபோசனம்** *abōšaṉam,* பெ.(n.) 1. பட்டினி; starvation. 2. நோன்பு; fasting (சா.அக.).

*[Skt. a-bhōjana>த.அபோசனம்.]*

**அபோதம்** *abōdam,* பெ.(n.) அறியாமை; ignorance, stupidity. *"நின்னபோதமன்றி" (பாரத.சூது.183).*

*[Skt. a-bōdha>த. அபோதம்.]*

**அபௌருசேயம்** *a-pauruṣēyam,* பெ.(n.) ஒருவராற் செய்யப்படாதது (ஈடு, 1, 1, 7); that which is not made by any one, as the *Vēdas.*

*[Skt. a-pauruṣēya>த. அபௌருசேயம்.]*

**அம்[1]** *am,* பெ.(n.) கொடுமை (சம். அக. Ms.); cruelty.

*[Skt. am> த. அம்]*

**அம்[2]** *am,* பெ.(n.) 1. மணியின் ஒளி; lustre of gems. 2. நகைப்பு; laughter. 3. இன்பம்; happiness. 4. தசைச்சுரிப்புடன் கூடிய மயிர்க் கூச்செரிப்பு (புளகம்); horripilation. 5. கடவுள்; god. 6. அன்னம்; swan. 7. அழைப்பு; invitation. 8. செருக்கு; pride. 9. போர்; battle. 10. அம்பு; arrow.

*[Skt. haṃ> த. அம்.]*

**அம்[3]** *am,* பெ.(n.) 1. ஆணை; command. 2. கும்பிடு; obeisance with joined hands. 3. நீட்சி; length. 4. ஏழிசையாதி யளவு; measure of the musical notes. 5. நேர்மையற்ற தொடரியம் (வக்கிர வாக்கியம்); crooked sentence.

*[Skt. am> த. அம்]*

**அம்சசக்கரம்** *amša-šakkaram,* பெ.(n.) ஒன்பது கோண (நவாம்ச)ச் சக்கரம்; (Astrol.) one of the two diagrams used in casting horoscopes.

*[அம்சம் + சக்கரம்.]*

*[Skt. aṃša> த. அம்சம்.]*

*சருக்கு→சருக்கரம் (வட்டம்)→சக்கரம் = வட்டம், உருளி (வே.க.239).*

**அம்சசந்தி** *amša-šandi,* பெ.(n.) தோட் பொருத்து; shoulder joint.

*[அம்ச + சந்தி.]*
*[Skt. aṃša> த. அம்ச(ம்).]*
உம்→உந்து→அந்து→சந்து→சந்தி.

**அம்சசுவரம்** *amša-šuvaram,* பெ.(n.) ஒரு பண் பாடுவதில் அடிக்கடி பயன்படுத்தும் குரலோசை; (Mus.) prominent note of a melody-type.

*[Skt. aṃša+svara>த. அம்சசுவரம்.]*

**அம்சபத்திரம்** *amša-pattiram,* பெ.(n.) பாகப்பிரிவினை (கூறு) உறுதி ஆவணம் (பத்திரம்); (R.F.) deed or memorandum evidencing a division of family property effected with the consent of all the members.

த.வ. பகுத்தி ஆவணம்.

*[Skt. aṃśa + patra> த. அம்சபத்திரம்.]*

**அம்சபப்பளி** *amšapappaḷi,* பெ.(n.) சேலைவகை (இ.வ.); a kind of saree.

*[Skt. haṃsa> த. அம்சம்.]*

**அம்சபாதம்** *amšapādam,* பெ.(n.) புள்ளடிக் குறி; caret mark, interlineation indicated by a caret.

*[அம்சம் + பாதம்.]*

*[Skt. haṃsa>த. அம்சம்.]*

பள் → படு → படி → படிதல் = பதிதல். பதி → பதம் → பாதம் = நிலத்திற்பதியும் காலடி.

**அம்சபாதயிலை** *amša-pāda-yilai,* பெ.(n.) சிறு புள்ளடி; a plant.

*[அம்சம் + பாதம் + இலை.]*

*[Skt. haṃsa> த. அம்சம்.]*

*பதி → பதம் → பாதம்.*



**அம்சபூதன்** *amša-pūdaṉ,* பெ.(n.) இறைவனின் கூறாயிருப்பவன்; one who forms part, as of a deity. *"நம்முடைய அம்சபூத ரொருவரை" (குருபரம். 166).*

*[அம்சம் + பூதன்.]*

*[Skt. aṃśa> த. அம்சம்.]*

*பூ → பூது → பூதம்→ பூதன்.*

**அம்சம்**[1] *amšam,* பெ.(n.) அன்னப்பறவை; swan.

த.வ. எதின்.

*[Skt. haṃsa> த. அம்சம்.]*

**அம்சம்**[2] *amšam,* பெ.(n.) தேர்விற் பெற்ற மதிப்பெண் (புதுமை); mark.

*[Skt. aṃśa> த. அம்சம்.]*

**அம்சம்**[3] *amšam,* பெ.(n.) 1. கூறு; part, portion. 2. உரிமைப்பங்கு (இ.வ.); share of property for expenses. 3. கீழ்வாயிலக்கத்தின் கீழெண்; denominator of a fraction.

*[Skt. aṃśa> த. அம்சம்.]*

**அம்சம்**[4] *amšam,* பெ.(n.) நூற்றெட்டுபநிடதங்களு ளொன்று; name of an upaniṣad.

*[Skt. haṃsa> த. அம்சம்.]*

**அம்சம்**[5] *amšam,* பெ.(n.) 1. பல பகுதிகளாக அல்லது பன்முகமாக உள்ள திட்டம், கலந்தாய்வு முதலியவற்றில் குறிப்பிட்ட ஒரு பகுதி; aspect (of an affair, idea, plan etc.), point. *'இருபது அம்சம் திட்டம் ஒன்று உருவாக்கப்பட்டுள்ளது'.* 2. எடுத்துக் கூறும்படியாக இருக்கும் கூறு அல்லது தன்மை; (a typical or noticeable) feature. 3. (ஒருவரின் அல்லது ஒன்றின் அமைப்புக்கு வேண்டிய அளவான) அழகு; compactness. *"அம்சமான வீடு".*

*[Skt. aṃśa> த. அம்சம்.]*

**அம்சமந்திரம்** *amša-mandiram,* பெ.(n.) **அசபை** பார்க்க; see *ašabai.*

*[அம்ச(ம்) + மந்திரம்.]*

*[Skt. aṃśa> த. அம்சம்.]*

*மன் + திரம் → மந்திரம்.*

**அம்சன்** *amšaṉ,* பெ.(n.) தன்னொறுப்பாளன்; kind of ascetic.

*[Skt. haṃsa > த. அம்சன்.]*

**அம்சாசனம்** *amšāšaṉam,* பெ.(n.) ஓகவிருக்கை வகையுளொன்று; *(yōga)* a *yōgic* posture.

*[Skt. haṃsa+ā-ṣana> த. அம்சாசனம்]*

**அம்பங்கி** *ambangi,* பெ.(n.) விழாவரிசி; a kind of medicinal drug. (சா.அக.)

**அம்பசாதிதம்** *amba-šādidam,* பெ.(n.) செல் கொத்தான் கொடி; the red thread creeper, *Cassytha filiformis* (சா.அக.).

**அம்பசாரம்** *amba-šāram,* பெ.(n.) முத்து; pearl (சா.அக.).

**அம்பசி** *ambaši,* பெ.(n.) ஆடு தின்னாப் பாளை; worm killer; a bitter plant eaten not even by sheep, *Aristolachiabracteata* (சா.அக.).

**அம்பட்டகி** *ambaṭṭagi,* பெ.(n.) வட்டத்திருப்பி; India pareira, *Cissampelos pareira* (சா.அக.).

*[Skt. ambaṣṭha> த. அம்பட்டகி.]*

**அம்பட்டச்சி** *ambaṭṭacci,* பெ. (n.) முடிதிருத்துபவனின் மனைவி; fem. of *ambaṭṭaṉ.*

*[அம்பட்ட(ன்) + அச்சி.]*

*[Skt. ambaṣṭha> த.அம்பட்டன்.]*

*அச்சன்(ஆ.பா.) → அச்சி (பெ.பா.).*

**அம்பட்டத்தி** *ambaṭṭatti,* பெ.(n.) **அம்பட்டச்சி** பார்க்க; see *ambaṭṭacci.*

*[Skt. ambaṣṭha> த. அம்பட்டத்தி.]*

*அத்தன்(ஆ.பா.)–அத்தி (பெ.பா.)*

**அம்பட்டம்** *ambaṭṭam,* பெ.(n.) **அம்பட்டகி** பார்க்க; see *ambaṭṭagi.*

*[Skt. ambaṣṭha> த.அம்பட்டம்]*

**அம்பட்டன்[1]** *ambaṭṭaṉ,* பெ.(n.) 1. முடி திருத்துபவன்; barbar. 2. மருத்துவன்; literally means the person who stands near to cure, but generally the name refers to a barber. many of the barbers are doctors and surgeons as well and their women are employed as midwives. (சா.அக.)

**த.வ. பண்டுவன், மருத்துவன், பரியாரி, மழிப்பன், மழிஞன், மஞ்சிகன்.**

*[Skt. ambaṣṭha>த. அம்பட்டன் (நீக்கத் தக்க இழிவுச் சொல்).]*

வடமொழியில் *ambaṣṭha* எனும் சொல் அருகில் நின்று நோயைக் குணப்படுத்துபவன் எனப் பொருள்படுகிறது. வடமொழி நூல்கள் புண் ஆற்றும் மருத்துவப்பணி தூய்மையற்றதால் உயர் குலத்தார் செய்யத் தகாதது எனக் கூறுகின்றன. இச்சொல் தமிழில் மருத்துவர் என்றும் பண்டுவர் எனவும் வழங்கியது. மதிப்புக்குரிய தமிழ்ச் சொற்கள் வடமொழி புதுச் சொல் புகுந்ததால் மறைந்தன. தமிழ்ச் சொற்களை ஆள்வதே தகவானது.

**அம்பட்டன்கத்தி** *ambaṭṭaṉ-katti,* பெ.(n.) கடல் மீன் வகை (மூ.அ.); a marine fish, deep blue on the back, becoming silvery white on the sides, attaining 81/2 in., *Mene maculata.*

**த.வ. பண்டுவன்கத்தி.**

*[அம்பட்டன் + கத்தி.]*

*[Skt. ambaṣṭha> த. அம்பட்டன்.]*

*கள் → கட்டு → கத்து → கத்தி.*



**அம்பட்டன்பாரை** *ambaṭṭaṉ-pārai,* பெ.(n.) **அம்பட்டன்கத்தி** பார்க்க; see *ambaṭṭaṉ-katti.*

**த.வ. பண்டுவன் பாரை.**

*[Skt. ambaṣṭha> த. அம்பட்டன்.]*

**அம்பட்டன்வாளை** *ambaṭṭaṉ-vāḷai,* பெ.(n.) சொட்ட வாளை; barber's knife, a freshwater fish, silvery, attaining more than 2 ft., *Notopterus kapirat.*

**த.வ. பண்டுவன்வாளை, மழிஞன் வாளைமீன்.**

*[அம்பட்டன் + வாளை.]*

*[**Skt.** ambaṣṭha> த. அம்பட்டன்.]*



**அம்பட்டை¹** *ambaṭṭai,* பெ.(n.) கொடிவகை (தைலவ.); Indian pareira.

*[**Skt.** ambaṣṭhā> த. அம்பட்டை.]*

**அம்பட்டை²** *ambaṭṭai,* பெ.(n.) 1. முல்லை; Arabian jasmine. 2. பங்கம்பாளை; worm-killer. 3. புளியாரை; yellow wood-sorrel.

*[**Skt.** ambaṣṭhā> த. அம்பட்டை.]*

**அம்பட்டை³** *ambaṭṭai,* பெ.(n.) **அம்பட்டகி** பார்க்க; see *ambaṭṭagi.*

*[**Skt.** ambaṣṭha> த. அம்பட்டை.]*

**அம்பத்தை** *ampattai,* பெ.(n.) கொடிவகை (இ.வ.); glacous backed triangular buckler-leaved moonseed.

**அம்பர்சர்க்கா** *ambar-šarkkā,* பெ.(n.) பஞ்சை இழைக்கப் பயன்படுத்துதற்காகக், கையால் இயக்கப்படும் கருவி; hand spinning wheel.

*[**U.** ambar+carkhā> த. அம்பர்சர்க்கா.]*

**அம்பர்சா** *ambaršā,* பெ.(n.) சீலைவகை; kind of woman's printed cloth.

*[**U.** amberšā > த. அம்பர்சா.]*

**அம்பயஞானநூல்** *ambayañāṉa-nūl,* பெ.(n.) தாமரை நூல்; filaments of lotus plant.

**அம்பராந்தம்** *ambarāndam,* பெ.(n.) அடிவானம் (பாண்டி.); horizon.

*[**Skt.** ambarānta>த. அம்பராந்தம்.]*

**அம்பராம்புயம்** *ambarāmpuyam,* பெ.(n.) (ஆகாசத்தாமரை) இல்பொருள் (பச்.மூ.); that which is non existent, as sky-lotus.

*[**Skt.**ambara+ambuja>த. அம்பராம்புயம்.]*

**அம்பரிடம்¹** *ambariḍam,* பெ.(n.) மாநிரய மெட்டனு ளொன்று (சி.போ.பா.2,3,பக்.203); a hell, one of eight *mā-nirayam.*

*[**Skt.** ambariṣa> த. அம்பரிடம்.]*

**அம்பரிடம்²** *ambariḍam,* பெ.(n.) சூரியன்; the sun.

*[**Skt.** ambarisa> த. அம்பரிடம்.]*

**அம்பரியம்** *ambariyam,* பெ.(n.) பேறுகால (பிரசவ) நோய்; pangs of child birth; the pains of the contraction of the uterus during labour (சா.அக.).

**அம்பரீசம்** *ambarīšam,* பெ.(n.) எண்ணெய்ச் சட்டி; a pot in which oil is kept or boiled (சா.அக.)

*[**Skt.** ambariṣa> த. அம்பரீசம்.]*

**அம்பரீடம்** *ambarīḍam,* பெ.(n.) 1. போர்; battle. 2. புளிமா; a species of mango. 3. வறையோடு; pan used for parching, frying pan. 4. குதிரைக்குட்டி; colt.

*[**Skt.** ambarīsa> த. அம்பரீடம்.]*

**அம்பரீடன்¹** *ambarīḍaṉ,* பெ.(n.) கதிரவ(ன்) குல அரசருளொருவன் (கம்பரா. மிதிலை. 120); name of a king of the solar race celebrated for his devotion to *Viṣṇu.*

*[**Skt.** ambariṣa > த. அம்பரீடன்.]*

**அம்பரீடன்²** *ambarīḍaṉ,* பெ.(n.) சிவபெருமான்; *Šivaṉ.*

*[Skt. ambarīṣa> த.அம்பரீடன்.]*

**அம்பா** *ambā,* பெ.(n.) 1. தாய் (பரிபா. 11, 81); mother. 2. மலைமகள்; *Pārvadi,* as mother of the universe.

*[Skt. ambā> த. அம்பா.]*

*அம்மை > Skt. ambā.*

**அம்பாயனக்குங்கிலியம்** *ambāyaṉa-k-kuṅgiliyam,* பெ.(n.) ஒரு வகைத் தூய்மையான குங்கிலியம்; dammer proper from amboyna (resin of ) *Canarium, Strictum.*

**அம்பார்** *ambār,* பெ.(n.) தவசக்குவியல் (P.T.L.); heap of paddy or other grain.

*[U. ambār> த. அம்பார்.]*

**அம்பாரக்கடை** *ambāra-k-kaḍai,* பெ.(n.) களஞ்சியம் (W.G.); store, granary, place where anything is stored.

*[அம்பாரம் + கடை.]*

*[U. ambār>த. அம்பார(ம்).]*

*கட→கடை* (தமி. வ : 138.)

**அம்பாரம்**[1] *ambāram,* பெ.(n.) அடுக்கு; pile. *'புகையிலை யம்பாரம்' (நெல்லை).*

*[U. ambār> த. அம்பாரம்.]*

**அம்பாரம்**[2] *ambāram,* பெ.(n.) யானை மேற்றவிசு (இ.வ.); howdah with a canopy.

*[Skt. ambāri>த. அம்பாரம்.]*

**அம்பாரம்**[3] *ambāram,* பெ.(n.) 1. நெற்குவியல் (திவ். திருவிருத். 58, வ்யா. அரும்.); heap of paddy or other grain on the threshing floor. 2. களஞ்சியம் (இ.வ.); granary. *'ஆண்டிக்கு ஏன் அம்பாரக் கணக்கு' (பழ.).*

*[Skt. ambār> த. அம்பாரம்.]*

**அம்பாரராசி** *ambārarāśi,* பெ.(n.) விளைசலான நெல்லில் அரசுக்குரிய பகுதி (R.T.); the government's share of the gross produce of paddy.

*[U. ambār+rāśi> த. அம்பாரராசி.]*

**அம்பாரவாசி** *ambāra-vāśi,* பெ.(n.) காய்ச்சற்பாடு முதலியவற்றால் நட்டமேற்படாதபடி, அதிகப்படியாய்க் கொடுக்கும் நெல்; extra quantity of grain measured by the tenant to the landlord to compensate for the loss due to shrinkage etc. *"அம்பாரவாசி அரைவாயிலே கழித்து".*

*[அம்பார(ம்) + வாசி.]*

*[U. ambār> த. அம்பார(ம்).]*

**அம்பாவாடல்** *ambā-v-āḍal,* பெ.(n.) தைநீராடல்; ceremonial ablutions of young girls in the month of (January) *Taiṣam* under the guidance of their mothers. *"அம்பா வாடலி னாய்தொடிக் கன்னியர்" (பரிபா. 11, 81).*

*[அம்பா + ஆடல்.]*

*[Skt. ambā>த. அம்பா.]*

*ஆடு → ஆடல் = நீராடல்.*

**அம்பாள்** *ambāḷ,* பெ.(n.) மலைமகள்; a general term for goddess parvati in temples. *அர்ச்சனை அம்பாளுக்கா, சுவாமிக்கா ?*

*[Skt. ambā >த. அம்பாள்.]*

**அம்பிகாபதி** *ambigābadi,* பெ.(n.) 1. சிவபெருமான் (சூத. சிவமான். 7, 8); *Śivaṉ,* as the husband of *Pārvadi.* 2. ஒரு புலவர்; name of a poet, son of Kambar, author of the *Ambigāpadi-kōvai.*

*[அம்பிகா + பதி.]*

*[Skt. ambikā + pati> த. அம்பிகாபதி.]*

*பதி = தலைவன் இறைவன்.*

**அம்பிகாபதிகோவை** *ambigābadi-kōvai,* பெ.(n.) ஒரு நூல்; a *kōvai* poem attributed to *Ambigāpadi.*

*[அம்பிகாபதி + கோவை.]*

*[Skt. ambikā+pati>த.அம்பிகாபதி.]*

**அம்பிகாவல்லவர்** *ambigā-vallavar,* பெ.(n.) சிவபெருமான் (பெரியபு. ஏயர். 325); *Śivaṉ,* as the husband of *Pārvadi.*

*[அம்பிகா + வல்லவர்.]*

*[Skt. ambikā>த. அம்பிகா.]*

**அம்பிகேயன்** *ambikēyaṉ,* பெ.(n.) 1. திருதராட்டிரன் (பாரத. திரெளபதி. 107); *Dhṛtarāṣṭra.* 2. பிள்ளையார் (கணேசன்) (சங்.அக.); *Gaṇēšaṉ.* 3. முருகக்கடவுள் (சங்.அக.); *Kandaṉ.*

*[Skt. ambikēya> த. அம்பிகேயன்.]*

**அம்பிகை[1]** *ambigai,* பெ.(n.) மலைமகள் (பார்வதி) (கந்தபு. தெய்வ. 32); *Pārvadi,* as mother.

*[Skt. ambikā> த. அம்பிகை.]*

**அம்பிகை[2]** *ambigai,* பெ.(n.) 1. தாய்; mother. 2. அத்தை; aunt.

*[Skt. ambikā> த. அம்பிகை.]*

**அம்பிகை[3]** *ambigai,* பெ.(n.) வெட்பாலை; a plant, *Wrightia antidysenterica.*

**அம்பிகைதனயன்** *ambigai-taṉayaṉ,* பெ.(n.) பிள்ளையார் (விநாயகன்) (சூடா.); *Gaṇēšaṉ,* as son of *Pārvadi.*

*[அம்பிகை + தனயன்.]*

*[Skt. ambikā> த. அம்பிகை.]*

*தன் + ஐயன் → தனயன்.*

**அம்பிகைபாகன்** *ambigai-pāgaṉ,* பெ.(n.) சிவபெருமான் (காஞ்சிப்பு. அந்தர்வே. 32); *Šivaṉ,* as half-*Pārvadi.*

*[அம்பிகை + பாகன்.]*

*[Skt. ambikā > த. அம்பிகை.]*

*பகு → பாகம் → பாகன்.*

**அம்பிகைமாலை** *ambigai-mālai,* பெ.(n.) ஒரு நூல்; name of a poem in praise of goddess *Mīṉākṣi* of madura, by *Kulasēgara-pāṇḍiyaṉ.*

*[அம்பிகை + மாலை.]*

*[Skt. ambikā> த. அம்பிகை.]*

**அம்பிசா** *ambišā,* பெ.(n.) **அம்பளங்காய்** பார்க்க; see *ambalaṅgāy* (சா.அக.).

**அம்பிசைக்குழலாள்** *ambišai-k-kuḻalāḷ,* பெ.(n.) பெருச்சாளி; bandicoot.



**அம்பிலி** *ambili,* பெ.(n.) முட்டைக் கரு (பைஷஜ. பக். 127); yolk or white of egg.

*[U. ambil > த. அம்பிலி.]*

**அம்புகிராதம்** *ambu-kirādam,* பெ.(n.) முதலை; crocodile.

**அம்புசம்** *ambušam,* பெ.(n.) தாமரை (கொடி வகை); lotus, as water-born.

**த.வ. அம்புசனி.**

*[Skt. ambu-ja > த. அம்புசம்.]*

**அம்புசன்மம்** *ambušaṉmam,* பெ.(n.) தாமரை (பச். மூ.); lotus.

*[Skt. ambu-janman> த. அம்புசன்மம்.]*

**அம்புசாகிதம்** *ambu-šāgidam,* பெ.(n.) தம்பட்டை யவரை; sword bean; fowl's bean, *Canarajia ensiformis* (சா.அக.).

**அம்புசாதகம்** *ambu-šādagam,* பெ.(n.) கட்டுக்கொடி; a plant that freezes water, coagulating creeper, *Cocculus villosus.* (சா.அக.).

**அம்புசாதம்** *ambu-šādam,* பெ.(n.) 1. தாமரை (மலை.); lotus. 2. கடம்பு; cadamba.

*[Skt. ambu+jāta> த. அம்புசாதம்.]*

**அம்புசாதன்** *ambu-šādaṉ,* பெ.(n.) நான்முகன்; *Brahmā,* as lotus-born. *"அம்புசாதன் முகத்தினில்" (பாரத. சிறப். 2).*

*[Skt. ambu+jata> த. அம்புசாதன்.]*

**அம்புசினி** *ambu-šiṉi*, பெ.(n.) தாமரைச் செடி; lotus plant, *Nelumbium speciosum* (சா.அக.).

**அம்புசூகரம்** *ambu-šūgaram*, பெ.(n.) பன்றியைப் போன்ற ஒரு முதலை; a kind of porcine crocodile (சா.அக.).

**அம்புசேதிகம்** *ambu-šēdigam*, பெ.(n.) செங்கொழுஞ்சி; a plant (சா.அக.).

**அம்புதம்** *ambudam*, பெ.(n.) கோரைக்கிழங்கு; koray root, sedge, *Cyperus rotundus* (சா.அக.).

*[Skt. ambu-da > த. அம்புதம்.]*

**அம்புதரம்** *ambudaram*, பெ.(n.) கோரைக் கிழங்கு; koray root, *Cyperus rotundus.*

**அம்புதிவல்லபம்** *ambudi-vallabam*, பெ.(n.) பவளம்; coral (சா.அக.).

**அம்புப்பிரசாதனம்** *ambu-p-pira-šādaṉam*, பெ.(n.) தேற்றாங்கொட்டை (சித். அக.); water clearing nut (சா.அக.).

*[Skt. ambu-prasādana > த. அம்புப் பிரசாதனம்.]*

**அம்புப்பிரசிதம்** *ambu-p-pirašidam*, பெ.(n.) செங்கொள்ளு; red horse gram, *Dolichos biflorus* (சா.அக.).

**அம்புபூரணரோகம்** *ambu-pūraṇa-rōgam*, பெ.(n.) கருவுற்றிருக்கும் போது முலைப் பால் கொடுத்தலால் அக்குழந்தைக்கு ஏற்படும் நோய்; a disease in children arising from allowing the child to suckle during the time of the mother's pregnancy.

த.வ. யாக்கட்டு நோய்.

*[Skt. ambu + pūrṇa + rōga > த. அம்புபூரண ரோகம்.]*

**அம்புமாகிகம்** *ambu-māgigam*, பெ.(n.) காசரைக் கீரை; a vegetable green.

**அம்புயநூல்நாணான்** *ambuyanūl-nāṇāṉ*, பெ.(n.) மன்மதன் (நாமதீப.); Kāmaṉ, as having a bowstring of lotus-fibres. (தாமரை நூலை நாணாகவுடையவன்).

*[அம்புய(ம்) + நூல்நாணான்.]*

*[Skt. ambuya > த. அம்புயம்.]*

*நாண்ன் → நாணான்.*

**அம்புயன்**[1] *ambuyaṉ*, பெ.(n.) நான்முகன் (கந்தபு. தெய்வயா. 223); *Brsahmāṉ*, as lotus-born.

*[Skt. ambuja > த. அம்புயன்.]*

**அம்புயன்**[2] *ambuyaṉ*, பெ.(n.) நஞ்சு; a kind of arsenic poison (சா.அக.).

**அம்புயை** *ambuyai*, பெ.(n.) திருமகள் (திருவரங்கத்தந். 56); *Lakṣmi*, as ocean-born.

*[Skt. ambu-jā > த. அம்புயை.]*

**அம்புருகம்** *amburugam*, பெ.(n.) 1. செம்பரத்தம் பூ; the day lotus, *Hibiscus mutabilis.* 2. நாரை; Indian crane.

*[Skt. amburuka > த. அம்புருகம்.]*

**அம்புரேசம்** *amburēšam*, பெ.(n.) தாமரை; lotus (சா.அக.).

**அம்புரோகினி** *amburōgiṉi*, பெ.(n.) தாமரை (சிந்தா. நி. 213); lotus.

*[Skt. ambu-rōhiṇi > த. அம்புரோகினி]*

**அம்பை**[1] *ambai*, பெ.(n.) 1. மலைமகள் (திருக்காளத். பு. 24, 12); *Pārvadi.* 2. காசிராசன் மகள் (பாரத. குருகுல. 127); name of a sister of *Pāṇḍu's* mother, daughter of a king of *Kāši.*

*[Skt. āmbā > த. அம்பை.]*

**அம்போசம்**[1] *ambōšam*, பெ.(n.) தாமரை; lotus, as water - born (சா.அக.).

*[Skt. ambhō-ja > த. அம்போசம்.]*

**அம்போசம்**[2] *ambōšam*, பெ.(n.) நாரை; a water-bird stork (சா.அக.).

**அம்போநிதி** *ambōnidi*, பெ.(n.) பெருங்கடல்; ocean.

**அம்போயோனி** *ambōyōṉi*, பெ.(n.) தாமரை; lotus plant, *Nelumblum speciosum* (சா.அக.).

**அம்மடியம்** *ammaḍiyam,* பெ.(n.) பட்டாணி; pea, *Pisum-sativam* (சா.அக.).

**அம்மணக்கட்டை** *ammaṇa-k-kaṭṭai,* பெ.(n.) உடுப்பற்றவன்; a naked person without the customary covring (சா.அக.).

*[அம்மணம் + கட்டை.]*

*[Skt. sramaṇa>த. அம்மணம்.]*

**அம்மணக்குண்டி** *ammaṇa-k-kuṇḍi,* பெ.(n.) அம்மணக்கட்டை (இ.வ) பார்க்க; see *ammaṇa-k-kaṭṭai* (சா.அக.).

*[அம்மணம் + குண்டி.]*

*[Skt. srammaṇa> த. அம்மணம்.]*

*குள்→குண்டு→குண்டி.*

**அம்மணத்தர்** *ammaṇattar,* பெ.(n.) அமணர் (சினேந். 139); Jains.

*[Skt. sramaṇa > த. அம்மணத்தார்.]*

**அம்மணத்தோண்டி** *ammaṇa-t-tōṇḍi,* பெ.(n.) அம்மணக்கட்டை (இ.வ.) பார்க்க; see *ammaṇa-k-kaṭṭai* (சா.அக.).

*[அம்மணம் + தோண்டி.]*

*[Skt. šramaṇa> த. அம்மணம்.]*

**அம்மணம்**[1] *ammaṇam,* பெ.(n.) 1. ஆடை இல்லாத நிலை; nakedness, nudity. 2. வண்டப் பேச்சு (யாழ்ப்.); obscene language, abscenity.

*[Skt. šramaṇa > த. அம்மணம்.]*

**அம்மணம்**[2] *ammaṇam,* பெ.(n.) 1. இடை (திவ். பெரியாழ். 1, 6, 3, வ்யா); waist. 2. கள்ளத் தொடர்பு; lewdness.

*[Skt. šramaṇa> த. அம்மணம்.]*

**அம்மணம்பேசு** *ammaṇam-pēšu,* வி.எ. (adv.) அருவருப்பாகவும், நாணக்கேடாகவும் பேசுதல்; talk in obscenities.

*[அம்மணம் + பேசு.]*

*[Skt. šramaṇa> த. அம்மணம்.]*

**அம்மார்** *ammār,* பெ.(n.) கப்பற்கயிறு; ship's cable.

*[Port. amarva> த. அம்மார்.]*

**அம்மியம்** *ammiyam,* பெ.(n.) செந்தாடு பாவை; one of the 21 kinds of rare plants (unidentified). The correct spelling of this term is probably (சா.அக.).

**அம்மிரம்** *ammiram,* பெ.(n.) மாமரம் (சங்.அக.); mango (சா.அக.).

*[Skt. āmra > த. அம்மிரம்.]*

**அம்மிலசாரம்** *ammila-šāram,* பெ.(n.) 1. புளித்த காடி; sour vinegar. 2. புளிப்பு; sourness (சா.அக.).

*[Skt. amla> த.அம்மிலம்.]*

*சாறு → சாறம் → சாரம்.*

**அம்மிலம்** *ammilam,* பெ.(n.) 1. புளிப்பு; sourness. 2. புளி; tamarind. 3. புளிவஞ்சி; *puḷi-vañji,* a creeper bearing sour fruits.

*[Skt. amla > த. அம்மிலம்.]*

**அம்மிலவிருக்கம்** *ammila-virukkam,* பெ.(n.) புளிய மரம்; tamarind tree, *Tamarindus Indica* (சா.அக.).

*[Skt.amla + vṛkṣa> த. அம்மிலவிருக்கம்.]*

**அம்மிலவிருட்சம்** *ammila-viruṭcam,* பெ.(n.) புளியமரம் (மலை.); tamarind.

*[Skt. amla+vṛkṣa> த. அம்மிலவிருட்சம்.]*

**அம்மிலிகா** *ammiligā,* பெ.(n.) 1. புளிப்பு; sourness. 2. புளி நறளைக் கிழங்கு; the root of the plant, *Cissue acida* (சா.அக.).

*[Skt. amla>ammiliga]*

**அம்மிலிகை** *ammilikai,* பெ.(n.) புளி (சிந்தா. நி. 206); tamarind.

*[Skt. amlikā > த. அம்மிலிகை.]*

**அமங்கலம்** *amaṅgalam,* பெ.(n.) ஆமணக்கு; castor plant, *Ricinus communis* (சா.அக.).

**அமசம்** *amašam,* பெ.(n.) நோய்; disease (சா.அக.).

**அமண்** *aman,* பெ.(n.) 1. சமணமதம்; jainism. *"வல்லமணாசற" (தேவா. 861, 11).* 2. சமணர்; Jainas, as a sect. *"வல்லமண் விடுத்த வேழம்" (திருவிளை. அங்கம். 3).* 3. அரையில் ஆடையில்லாமை; nakedness, nudity. *"குவிமுலையார் தம்முன்ன நாணமின்றி .............. அமணே நின்றார்" (தேவா. 962, 7).* 4. வரிக் கூத்து வகை (சிலப். 3, 13, உரை); a inasquerade dance.

*[**Skt.** śramaṇa > த. அமண்.]*

**அமண்டம்** *amaṇḍam,* பெ.(n.) ஆமணக்கு (மலை.); castor-plant (சா.அக.).

*[**Skt.** amaṇḍa > த. அமண்டம்.]*

**அமண்டலம்** *amaṇḍalam,* பெ.(n.) ஆமணக்கு (மூ.அ.); castor plant.

*[**Skt.** amaṇḍa>த. அமண்டலம்.]*



**அமணக்கூத்து** *amaṇa-k-kūttu,* பெ.(n.) 1. நாணம் சிறிதுமின்றி ஆடையின்றியாடுங் கூத்து; wanton, naked dance. 2. கட்டுக்கடங்காச் செயல் (திவ். திருமாலை, 34, வ்யா.); disorderly, uncontrolled conduct.

*[அமணம் + கூத்து.]*

*[**Skt.** śramaṇa> த. அமண(ம்).]*

*குல் → குத்து → கூத்து = பல வகைகளில் கால் குத்திட்டு ஆடுவது.*

**அமணம்** *amaṇam,* பெ.(n.) 1. சமணமதம்; Jainism. 2. அரையில் ஆடையின்மை; nakedness, nudity, as the characteristic of Jaina ascetics.

*[**Skt.** śramaṇa > த. அமணம்.]*

**அமணர்** *amaṇar,* பெ.(n.) சமணர் (பெரியபு. திருஞான. 704); Jains.

*[**Skt.** śramaṇa > த. அமணர்.]*

**அமணழித்தோன்** *amaṇa-ḻittōṉ,* பெ.(n.) திருஞானசம்பந்தர் (நாமதீப.); *St. Tiruñāṉa-sambandar.*

*[அமணம் + அழித்தோன்.]*

*[**Skt.** śramaṇa> த. அமணம்.]*

**அமணன்பாழி** *amaṇaṉ-pāḻi,* பெ.(n.) அமணர் கோயில்; jain temple. *"அமணன் பாழியிற் சிம்மத்தைக் காட்டி" (ஈடு. 4, 6, 6).*

*[அமணம் + பாழி.]*

*[**Skt.** śramaṇa> த. அமணன்.]*

**அமத்திரம்** *amattiram,* பெ.(n.) 1. ஏனம்; a vessel. 2. வெண்கலம்; bell metal which is a mitture or an alloy of copper and powder.

**அமந்தம்** *amandam,* பெ.(n.) நாட்டு வாதுமை மரம்; wild almond myrobalan, *Terminalia catappa.*

**அமந்தி** *amandi,* பெ.(n.) நாட்டு வாதுமை (மூ.அ.); Indian almond.

*[**Fr.** amande > த. அமந்தி.]*

**அமம்** *amam,* பெ.(n.) நோய் (சிந்தா. நி. 190); disease, illness.

*[**Skt.** ama > த. அமம்.]*

**அமர்த்தன்** *amarttaṉ,* பெ.(n.) திறமையில்லாதவன்; incapable person. *"அமர்த்தனுக்கும் காணி வேண்டாம், சமர்த்தனுக்கும் காணி வேண்டாம்".*

*[**Skt.** a-samartha > த. அமர்த்தன்.]*

**அமரகிச்சிலி** *amara-kiccili,* பெ.(n.) மஞ்சட் கிச்சிலி; a gold coloured orange (சா.அக.).

**அமரகோசம்** *amarakōšam,* பெ.(n.) ஒரு வடமொழி நிகண்டு; a Sanskrit vocabulary compiled by Amarasimhan (சா.அக.).

*[Skt. āmara+kōša > த. அமரகோசம்.]*

**அமரசயம்** *amarašayam,* பெ.(n.) இரைக்குடல்; the stomach and the intestines where the food is digested (சா.அக.).

*[Skt. āmā-šaya> த. அமரசயம்.]*

**அமரசிங்கம்** *amarašingam,* பெ.(n.) அமரகோசம் (பி.வி. 42) பார்க்க; see *amarakōšam.* (சா.அக.)

*[Skt. amara-simha > த. அமரசிங்கம்]*

**அமரசிம்மன்** *amara-šimman,* பெ.(n.) அமரகோச மென்னும் வடமொழி நிகண்டை இயற்றியவன்; the author of a vocabulary in Sanskrit (சா.அக.).

*[Skt. amara+simha> த. அமரசிம்மன்.]*

**அமரத்துவம்** *amarattuvam,* பெ.(n.) அழிவின்மை (சிந்தா. நி. 213); indestructibility; immortality.

**த.வ. நிலைபேறு.**

*[Skt. amara-tva > த. அமரத்துவம்.]*

**அமரதாரு** *amara-dāru,* பெ.(n.) 1. தேவதாரு; deccany deodar, *erythroxylon monogynum.* 2. தேட்கொடுக்கி; scorpion plant, *Heliotropium indicum* (சா.அக.).

*[Skt. amara+tāru> த. அமரதாரு.]*

**அமரபக்கம்** *amarapakkam,* பெ.(n.) தேய்பிறை (கிருட்டிணபட்சம்); the dark fortnight.

**த.வ. கரும்பக்கம்.**

*[அமர(ம்) + பக்கம்.]*

*[Skt. apara > த. அமர.]*

பக்கு → பக்கம்.

**அமரபர்த்திரு** *amaraparttiru,* பெ.(n.) இந்திரன் (சிந்தா. நி. 188); Indran.

*[Skt. amara-bhartr> த. அமரபர்த்திரு.]*

**அமரபில்லம்** *amara-pillam,* பெ.(n.) கண்ணிமையில் குருதி போற் சிவந்து தசை தடித்துப் பீளை தள்ளிக் கீழிமையை யொட்டிக் கொண்டு, கண்ணொளி மயங்கி நீர் வடியும் ஒரு கண்ணோய்; an eye disease characterised by inflammation of the eye lids, hyperemia of the conjunctiva with a catarhal or muco-purulent discharge, sticking of the eye-lids, defective vision etc., *castarhal ophthalmia* (சா.அக.).

**த.வ. இமைப்பிசிரி.**

**அமரபுட்பி** *amara-putpi,* பெ.(n.) ஒரு வகைச் செடி; a plant, *Andropogon acicularis* (சா.அக.).

*[Skt. amara+pusp> த. அமரபுட்பி.]*

**அமரபுட்பிகம்** *amara-putpigam,* பெ.(n.) ஒரு வகைப் பெருஞ்சீரகம்; a kind of anise, *Anetheum sowa* (சா.அக.).

*[Skt. amara+puspika> த. அமரபுட்பிகம்.]*



**அமரம்** *amaram,* பெ.(n.) 1. இதளியம் (பாதரசம்); mercury. 2. பொன்; gold. 3. ஒரு கிரந்த நிகண்டு; a thesaurus in Sanskrit. 4. வெண்மை; whiteness. 5. அழிவின்மை; immortality (சா.அக.).

*[Skt. amara> த. அமரம்.]*

**அமரமாலை** *amara-mālai,* பெ.(n.) அமரகோசத்தைச் செய்த நூலாசிரியரே, செய்ததாகக் கருதப்படும் ஒரு வடமொழி

அகராதி; the title of a dictionary considered to have been compiled by the same author as of the book known as *'Amarakōšam'* (சா.அக.).

*[அமர(ம்) + மாலை.]*

*[**Skt.** amara> த. அமரம்.]*

**அமரமுனிவன்** *amaramunivan*, பெ.(n.) தேவமுனி; divine sage. *"அமரமுனிவ னகத்தியன் றனாது" (மணிமே. பதிக. 11).*

*[அமர(ம்) + முனிவன்.]*

*[**Skt.** amara> த. அமரம்.]*

**அமரர்கற்பம்** *amarar-karpam*, பெ.(n.) வானுலுகம் (R.); heaven.

*[அமரர் + கற்பம்.]*

*[**Skt.** amara> த. அமரர்.]*

*கல்→கல்பம்→கற்பம்.*

**அமரர்கோன்** *amararkōn*, பெ.(n.) இந்திரன் (திவ். திருவாய். 10, 2, 6); Indran as king of gods.

**த.வ. தேவர்தலைவன், அமரர்பதி.**

*[அமரர் + கோன்.]*

*[**Skt.** amara> த. அமரர்.]*

*கோ→கோவன் →கோன் = தலைவன், அரசன்.*

**அமரர்பதி**[1] *amarar-padi*, பெ.(n.) இந்திரன் (பிங்.); Indran, as lord of gods.

*[**Skt.** amara+pati > த. அமரர்பதி.]*

**அமரர்பதி**[2] *amarar-padi*, பெ.(n.) தேவர் உலகம்; Svargam, as the abode of gods.

**த.வ. வானவருலகம், துறக்கவுலகம்.**

*[அமரர் + பதி.]*

*[**Skt.** amara> த. அமரர்.]*

**அமரர்வணங்குங்கன்னி** *amarar-vanangu-ṅ-kanni*, பெ.(n.) இந்திர பாடாணம்; the poisonous arsenical compound of zinc.

**அமரலோகம்** *amara-lōgam*, பெ.(n.) தேவர் உலகம் (தேவா. 264, 11); world of gods.

**த.வ. புத்தேளுலகு.**

*[**Skt.** amara +lōka > த. அமரலோகம்.]*

*த. உலகம் > **Skt.** lōka.*

*உல்→உலவு→உலகு→உலகம்.*

உலகம் என்னும் சொல்லிலுள்ள பெருமைப் பொருளின் பின்னொட்டாகிய "அம்" என்னும் ஈறு. சிறப்பாகத் தமிழுக்கே உரியது. (ஒ.நோ.) கம்பு → கம்பம். அரங்கு → அரங்கம். நிலை → நிலையம். நகர் → நகரம். "அம்" ஈறு கெட்டு வழங்குவது வடமொழியின் இயல்பு.

**(ஒ.நோ.)** த. அம்பலம்>**Skt.** அம்பல.

த. முகம் >**Skt.** முக.

வடமொழியாளர் காட்டும் மூலம் "லோக்" என்பதாகும். இச்சொல் "பார்" என்னும் பொருண்மைத்து. இச்சொல் "look" என்னும் ஆங்கிலச் சொல்லோடு தொடர்புடையது. மேலும், இச்சொல் "நோக்கு" என்னும் தமிழ்ச் சொல்லினின்று முகிழ்த்த தென்பார் பாவாணர். சுற்றி வருவது, உருண்டையானது; மக்கள் என்னும் பொருண்மையே அடிப்படையானது. உலகம் என்னும் சொல் பொதுமக்களைக் குறிப்பது பெருவழக்கு.

எ–கா. உலகம் என்ன சொல்லும் ?

**ஒ.நோ.:–** **L.** vulgus (volgus). the people, common people, the great multitude, the public, **L.** vulgaris, **E.** vulgar, characteristic of the common people.

**அமரவல்லரி** *amara-vallari*, பெ.(n.) கொத்தான்; a plant, *Cassytha filiformis* (சா.அக.).

**அமரவல்லி** *amara-valli*, பெ.(n.) **அமரவல்லரி** பார்க்க; see *amara-vallari* (சா.அக.).

**அமராசயம்** *amarāšayam*, பெ.(n.) 1. இரைப்பை (வின்.); stomach. 2. கருப்பை (சிந்தா. நி. 188); womb.

*[**Skt.** āmā-aya>த. அமராசயம்.]*

**அமராஞ்சனம்** *amarāñjanam*, பெ.(n.) சந்தன மரம் (சித்.அக.); sandalwood tree.

*[**Skt.** amara+añjanā > த. அமராஞ்சனம்.]*

**அமராபகை** *amarāpagai,* பெ.(n.) பால்வீதி (ஆகாய கங்கை) (சிந்தா.நி.193); the milky way.

*[Skt. amarā+āpa-gā > த. அமராபகை.]*

**அமராபதி** *amarāpadi,* பெ.(n.) இந்திரன் நகர் (சீவக.2335); names of Indira's capital.

*[Skt. amarāpati > த. அமராபதி.]*

**அமராபுரம்** *amarāpuram,* பெ.(n.) அமராவதி; Indra's capital, *Amarāvati.* *"உடம்பராளு மமராபுரந்தவிர" (தக்கயாகப்.17).*

*[அமரா + புரம்.]*

*[Skt. amara>த. அமரா.]*

*புர்→ புரை = உயர்வு. புர்→புரம் = உயர்ந்தமனை.*

**அமரி** *amari,* பெ.(n.) காயகற்பம்; a medicine which promotes health and bestows longevity (சா.அக.).

**த.வ. வாணாள்மருந்து.**

*[Skt. amara > த. அமரி.]*

**அமரிடணம்** *amariḍaṇam,* பெ.(n.) சினம் (சிந்தா.நி.211); anger.

*[Skt.amarsana > த.அமரிடணம்.]*

**அமரிதம்** *amaridam,* பெ.(n.) கடுக்காய் (மலை.); chebulic myrobalan.

*[Skt. amrtā > த. அமரிதம்.]*

**அமரிறை** *amariṟai,* பெ.(n.) வானவர், தலைவன், இந்திரன்; Indraṉ. *"அமரிறை யருள்வகை" (பெருங்.வத்தவ. 5, 76).*

*[அமர் + இறை.]*

*[Skt. amara > த. அமர்.]*

*இறு→இறு-த்தல் = தங்குதல். இறு→இறை.*

**அமருடம்** *amaruḍam,* பெ.(n.) 1. சினம்; anger. 2. பொறுமையின்மை; impatience.

*[Skt. amarṣa > த. அமருடம்.]*

**அமருலகம்** *amarulagam,* பெ.(n.) வானுலகம் (திவ்.பெரியதி.2, 2, 10); svargam.

*[அமர் + உலகம்.]*

*[Skt. amara >த.அமர்.]*

**அமரேசம்** *amarēšam,* பெ.(n.) குய்யாட்டக புவனத்து ளொன்று (சி.போ.பா.2, 3 பக்.213); (šaivam) a spiritual world, one of *kuyyāṭṭaga-puvaṉam* q.v.

*[Skt. amara+īša > த. அமரேசம்.]*

**அமரேசன்** *amarēšaṉ,* பெ.(n.) 1. இந்திரன் (கந்தபு.தெய்வ.19); Indraṉ. 2. வியாழன் (விதான.குணா.37); Jupiter, as preceptor of gods.

*[Skt. amara+īša > த. அமரேசன்.]*

**அமரை** *amarai,* பெ.(n.) 1. அமராவதி; *Amarāvadi.* 2. தூண்; pillar. 3. அறுகம்புல்; durva grass. 4. சீந்தில்; gulancha.

*[Skt. amara > த. அமரை.]*

**அமரோர்** *amarōr,* பெ.(n.) அமரர் (திருப்பு.518); immortals, *dēvas.*

**த.வ. வானோர்.**

*[Skt. amara > த. அமரோர்.]*

**அமல்** *amal,* பெ.(n.) 1. அதிகாரம்; authority, sway. 2. மேலாய்வு (R.F.); administration or management of any land or business of behalf of another.

*[U. amal > த. அமல்.]*

**அமல்தார்** *amaltār,* பெ.(n.) வரி தண்டுமதிகாரி (R.F.); native collector of revenue corresponding to a tahsildar, mamlatdar.

**த.வ. சுங்கவதிகாரி, தண்டல்நாயகன்.**

*[U. amal-dār > த. அமல்தார்.]*

**அமல்நாமா** *amalnāmā,* பெ.(n.) ஒரு பணியைச் செய்யும்படி கொடுக்கும் அதிகார ஆவணம் (R.T.); warrant or authority from a public functionary for doing a piece of work.

**த.வ. பணிக்கட்டளை.**

*[U. amal+nāmā > த. அமல்நாமா.]*

**அமலகம்[1]** *amalagam,* பெ.(n.) நெல்லி (மலை.); emblic myrobalan.

*[Skt. āmalaka > த. அமலகம்.]*

**அமலகம்[2]** *amalagam,* பெ.(n.) அருநெல்லி (சித்.அக.); a species of gooseberry tree.

*[Skt. āmalaka > த. அமலகம்.]*

**அமலகம்[3]** *amalagam,* பெ.(n.) 1. புளிய மரம்; tamarind tree, *Tamarindus indicus.* 2. பித்தத்தால் ஏற்படும் வாய்ப்புளிப்பு; sour taste in the mouth from biliousness. 3. வயிற்றுப் புளிப்பு; acidity of the stomach (from indigestion). 4. ஒரு செடி; a plant, *Artocarpus lakuca.* 5. புளியாரை; woodsorrel, *Oxalis Corniculata* (சா.அக.).

**த.வ. அம்புளி.**

*[Skt. āmalaka > த. அமலகம்.]*

புளியமரத்துக்கு அம்புளி என்னம் பெயருண்டு. சில வகை புளியம்பழம் சற்றே இனிக்கும் தன்மை நோக்கி அம்புளி எனவும் தீம்புளி எனவும் தமிழில் வழங்கப்படும். **அம்புளி** எனும் சொல் வடமொழியில் ஆமலக–ஆமல–அமல என்றெல்லாம் திரிபுற்றது. இது வடமொழி தமிழிலிருந்து பெற்ற கடன்சொல். புளிப்புச் சுவைநோக்கி நெல்லியையும் குறித்தது.

**அமலகமலம்** *amalakamalam,* பெ.(n.) ஆனீர் (கோமூத்திரம்) (சிந்தா.நி.189); cow's urine.

**த.வ. கோமியம், ஆனுச்சை.**

*[Skt. amala+kamala> த. அமலகமலம்.]*

**அமலகவடகம்** *amalaga-vaḍagam,* பெ.(n.) நெல்லிக்காய் வடகம்; a kind of dried cake of goose berry (சா.அக.).

*[அமலகம் + வடகம்.]*

*[Skt. āmalaka > த. அமலகம்.]*

**அமலகாண்டம்** *amala-kāṇḍam,* பெ.(n.) ஒரு பூடு; a plant (unidentified) (சா.அக.).

**அமலகேசரம்** *amala-kēšaram,* பெ.(n.) நாரத்தை மரம்; citron tree, *Citrus aurantium* (சா.அக.).

**அமலசம்பீரம்** *amala-šambīram,* பெ.(n.) எலுமிச்சை; lime tree, *Citrus medica* (சா.அக.).

*[Skt. āmalaka+campīra> த. அமலசம்பீரம்.]*

**அமலசாகம்** *amala-šāgam,* பெ.(n.) ஒரு செடி; a kind of sorrol (potherb) (சா.அக.).

**அமலசாந்தம்** *amala-šāndam,* பெ.(n.) 1. சுண்ணாம்பு; lime or slaked like. 2. ஆப்பீ, மாட்டுச் சாணி; cow's dung.

**அமலசாரம்** *amala-šāram,* பெ.(n.) 1. எலுமிச்சை; lime. 2. ஓர் ஆரைச் செடி; a kind of sorrel. 3. வடித்த கஞ்சிக் காடி; fermented rice water (சா.அக.).

*[அமலம் + சாரம்.]*

*[Skt. aāmlaka> த. அமலகம்.]*

**அமலசுக்கிரம்** *amala-šukkiram,* பெ.(n.) ஒரு விலாரிச் செடி; a kind of sorrel plant (சா.அக.).

**அமலசூடம்** *amala-šūḍam,* பெ.(n.) **அமலசுக்கிரம்** பார்க்க; see *amala-šukkiram* (சா.அக.).

**அமலத்திரவம்** *amala-t-tiravam,* பெ.(n.) புளிக்க வைத்த பழச்சாறு; acid or fermented juice of fruits (சா.அக.).

*[Skt. āmalaka+drava > த. அமலத்திரவம்.]*

**அமலதிக்தகசாயம்** *amaladikda-kašāyam,* பெ.(n.) துவர்ப்பு, கைப்பு, புளிப்பு இவை சேர்ந்த மருந்து நீர் (கசாயம்); a decoction of astringent, bitter and sour drugs (சா.அக.).

**அமலந்தை** *amalandai,* பெ.(n.) புளிப்பு; sourness (சா.அக.).

**அமலநாயகம்** *amala-nāyagam,* பெ.(n.) புளியாரை; wood sorrel, *Oxalis corniculata* (சா.அக.).

**அமலநிசா** *amala-nišā,* பெ.(n.) சிச்சலிக் கிழங்கு; the root of a plant, *Curcuma zerum* (சா.அக.).

**அமலநிம்பூரம்** *amala-nimbūram,* பெ.(n.) எலுமிச்சை; lime-*citrusmedica* (சா.அக.).

**அமலபஞ்சகம்** *amala-pañjagam,* பெ.(n.) ஐந்து வகைப் புளித்த காய், பழங்களின் சாறு; a mixture of the juices of five kinds of sour and unripe fruits (சா.அக.).

**அமலபத்திரை** *amala-pattirai,* பெ.(n.) புளியாரை முதலிய பூடுகள்; oxalis and other plants (சா.அக.).

**அமலபலம்** *amala-palam,* பெ.(n.) புளியமரம்; tamarind tree, *Manganifera indica* (சா.அக.).

**அமலபனசம்** *amala-panašam,* பெ.(n.) ஈரப்பலா; monkey jack tree, *Artocarpus lacucha (Roxb.)* (சா.அக.).

**அமலபித்தம்** *amala-pittam,* பெ.(n.) 1. வயிற்றுப்புளிப்பு; acidity of the stomach. 2. புளிப்பித்தம்; sourbile. 3. நெஞ்செரிவு, குலையெரிவு; burning sensation of the chest or the heart (சா.அக.).

*[அமல(ம்) + பித்தம்.]*

*[**Skt.** āmala> த. அமலம்.]*

*பித்து→பித்தம்.*

**அமலபேதனம்** *amala-bēdanam,* பெ.(n.) ஓர் ஆரைச் செடி; a sorrel plant (சா.அக.).

**அமலம்**[1] *amalam,* பெ.(n.) 1. ஒட்டுத்தாள் (அப்பிரகம்) (நா.நார்த்த.); mica. 2. அரி நெல்லி (சித்.அக.); a species of gooseberry.

*[**Skt.** āmalaka > த. அமலம்.]*

**அமலம்**[2] *amalam,* பெ.(n.) 1. மாசில்; that which is spotless, immaculate. *"அமலமாம் பொருளை யேற்று" (கந்தபு.திருக்கல்.83).* 2. அழுக்கின்மை (பிங்.); purity, cleanliness. 3. மரமஞ்சள் (மலை.); tree turmeric.

*[**Skt.** a-mala > த. அமலம்.]*

**அமலம்**[3] *amalam,* பெ.(n.) 1. மும்மலத்தினால் பற்றப் படாமை; (in philosophy) the state of being free from the three kinds of evil passions or inherent principles of the soul viz., selfishness, delusion and lust. 2. வெண்மை; whitness. 3. செவ்வள்ளி; red yam red sweet potato, *Disorya parpurea.* 4. அரிநெல்லி; country star gooseberry, *phyllanthus distinchus.* 5. அழகு; beauty. 6. நெல்லி மரம்; gooseberry tree, *Embilica officinalis.* 7. நஞ்சுக்கொடி; umbilical cord. 8. ஒரு பூடு; the plant saptala. 9. காக்கைப் பொன் (அப்பிரகம்); tale. 10. புளிப்பு; sourness or acidity. 11. புளியாரை; wood sorrel, *Oxalis corniculata.* 12. புளித்த தயிர்; sour curd.

*[**Skt.** āmala>த. அமலம். **அமலகம்**[3] பார்க்க.]*

**அமலமேகம்** *amala-mēgam,* பெ.(n.) சிறுநீர் நோய்; acidity of the urine (சா.அக.).

*[**Skt.** amala+mēgha > த. அமலமேகம்.]*

**அமலர்** *amalar,* பெ.(n.) நெல்லிமுள்ளி (வை.மூ.); dried flesh of gooseberry fruits.

*[**Skt.** āmalaka > த. அமலர்.]*

**அமலருகம்** *amalarugam,* பெ.(n.) ஒரு வகை வெற்றிலை; a kind of betel leaf (சா.அக.).

**அமலலோனிகம்** *amala-lōnigam,* பெ.(n.) புளியாரைச் செடி; wood sorrel, *Oxalia corniculata* (சா.அக.).

**அமலலோனி** *amalalōni,* பெ.(n.) **அமலலோனிகம்** பார்க்க; see *amala-lōnigam* (சா.அக.).

**அமலவர்க்கம்** *amala-varkkam,* பெ.(n.) நாரத்தை; கிச்சிலி முதலிய புளிப்பான இலைகளையுடைய மரம்; the class or trees and plants bearing leaves or fruits that taste sour such as, orange, lime, tamarind etc. (சா.அக.).

*[**Skt.** āmalaka+varga > த. அமலவர்க்கம். **அமலகம்**[3] பார்க்க.]*

**அமலவரித்திரா** *amala-varittirā,* பெ.(n.) **அமலநிசா** பார்க்க; see *amala-nišā* (சா.அக.).

**அமலவல்லி** *amala-valli,* பெ.(n.) ஒரு வகை செடி; a kind of plant, *Pythonium bulbiferum* (சா.அக.).

**அமலவாடகம்** *amala-vāḍagam,* பெ.(n.) புளிமா; hog-plum, *Spondias mangifera* (சா.அக.).

**அமலவாடிகம்** *amala-vāḍigam,* பெ.(n.) **அமலருகம்** பார்க்க; see *amalarugam* (சா.அக.).

**அமலவிருட்சம்** *amala-viruṭcam,* பெ.(n.) புளியமரம்; tamarind tree, *Tamarindus indicus* (சா.அக.).

*[Skt. āmalaka+vrkṣa>த. அமல விருட்சம்.]*

**அமலவேதசம்** *amala-vēdašam,* பெ.(n.) 1. ஒரு வகை ஆரைச்செடி; a kind of sorrel, *Rumex vesicarius.* 2. காடி; vinegar obtained from fruits (சா.அக.).

**அமலன்**[1] *amalaṉ,* பெ.(n.) 1. மாசிலன், மலம் நீங்கினவன்; one who is immaculate, freed from impurities, has attained liberation. 2. கடவுள்; the Supreme Being, as immaculate.

**த.வ. மாசிலான்.**

*[Skt. a-mala> த. அமலன்.]*

**அமலன்**[2] *amalaṉ,* பெ.(n.) கடுக்காய்; Indian gall-nut, *Terminalia chebula* (சா.அக.).

**அமலா** *amalā,* பெ.(n.) நெல்லி முள்ளி அல்லது நெல்லி வற்றல்; dried fruit of gooseberry, *Phyllanthus emblica* (சா.அக.).

*[Skt. āmalaka > த. அமலா.]*

**அமலாங்குசம்** *amalāṅ-gušam,* பெ.(n.) ஒரு செடி; a kind of sorrel (சா.அக.).

**அமலாதியுசிதம்** *amalādi-ušidam,* பெ.(n.) புளித்த வுணவு அல்லது புளித்த மாங்காயைத் திண்பதால் ஏற்படுமொரு கண்ணோய்; a disease of the eyes caused by eating sour mangoes or fermented food (சா.அக.).

**அமலாயோகம்** *amalāyōgam,* பெ.(n.) நல்லோரை அல்லது (சந்திரன்) நிலவிற்குப் பத்தாமிடத்தில் நற்கோள்க ளிருக்கை (இலக்கினம்); (Astrol.) location of auspicious planets in the tenth house from the moon or the ascendant.

*[Skt. amalā+yōga> த. அமலாயோகம்.]*

**அமலாளி** *amaḷāḷi,* பெ.(n.) வரிதண்டுவோன்; amaldar, an Indian revenue officer. *"கட்டளவாய் நம்புமமலாளி பற்றினானென்றும்" (சரவண.பணவிடு.187).*

**த.வ. தண்டல்நாயகன்.**

*[U. amal> த. அமல்.]*

*ஆள்→ஆளி.*

**அமலிகம்** *amaligam,* பெ.(n.) 1. வயிற்றுப் புளிப்பு; acidity of the stomach. 2. புளியாரை; wood sorrel, *Oxalis corniculata* (சா.அக.).

*[Skt. āmalaka>த.அமலிகம்.]*

**அமலித்தல்** *amalaittal,* பெ.(n.) புளித்தல்; acidified (சா.அக.).

**அமலினிட்டமணி** *amaliṉiṭṭa-maṇi,* பெ.(n.) சிவன் அணிந்த அக்கமணி; a sacred berd worn by Šivaṉ, *Eleocarpus tuberculatus* (சா.அக.).

**அமலை** *amalai,* பெ.(n.) 1. மாசற்றவள்; a woman who is pure. 2. மலைமகள்; *Pārvadi.* 3. கீழாநெல்லி; a small plant. 4. பூவந்தி; soapnut tree.

*[Skt. a-malā> த. அமலை.]*

**அமலோத்கரம்** *amalōt-karam,* பெ.(n.) எதிர்க்களித்தல்; sour aructation (சா.அக.).

**த.வ. தேக்கெறிவு.**

**அமளிதம்** *amaḷidam,* பெ.(n.) தீவதாட்சி; a fruit unknown in Southern India (சா.அக.).

**அமனி** *amaṉi,* பெ.(n.) தெரு (சிந்தா.நி.204); street.

*[Skt. amaṉi > த. அமனி.]*

**அமாசயம்** *amā-šayam,* பெ.(n.) உண்ட வுணவும் தண்ணீருந் தங்குமிடம், வயிறு; a membraneous sac or receptacle to receive the food and water which we take-it serves as the principal organ of digestion, *stomach* (சா.அக.).

**அமாத்தம்** *amāttam,* பெ.(n.) மனமழிந்து நிற்பது; the mind is raised from the gross to the subtle state to remain there in equilibrium (சா.அக.).

**அமாத்தியன்** *amāttiyan,* பெ.(n.) அமைச்சன்; minister, counsellor.

*[த.அமைத்தன்>**Skt.**amā-tya>த. அமாத்தியன்.]*

**அமாநசியம்** *amānašiyam,* பெ.(n.) வலி (சிந்தா.நி.195); pain.

*[**Skt.** amā-nasya > த. அமாநசியம்.]*

**அமார்** *amār,* பெ.(n.) கப்பற்கயிறு; ship's cable.

*[**Port.** amarva> த. அமார்.]*

**அமார்க்கம்**[1] *amārkkam,* பெ.(n.) சமய நெறியில்லாதது (வின்.); irreligion.

*[**Skt.** a-mārga>த.அமார்க்கம்.]*

**அமார்க்கம்**[2] *amārkkam,* பெ.(n.) நாயுருவி (பரி.அக.); a plant.

*[**Skt.** a-mārga> த.அமார்க்கம்.]*

**அமாவாசி** *amāvāši,* பெ.(n.) காருவா (அமாவாசை) (வின்.); new moon. *"ஆயிரம் வெதிபாத மொப்போ ரமாவாசி" (சேதுபு. சேதுபல.57).*

*[**Skt.** amā-vāši>த. அமாவாசி.]*

**அமாவசியை** *amāvašiyai,* பெ.(n.) காருவா (வின்.); new moon.

*[**Skt.** amāvāšyā>த. அமாவசியை.]*

**அமாவாசை** *amāvāšai,* பெ.(n.) கதிரவனும் நிலவும் கூடி நிற்கும் நாள்; new moon, as the time when the sun and the moon dwell together. *"பிற்றைநா ளமாவாசையில்" (உபதேசகா.சிவவி.229).*

**த.வ. காருவா.**

*[**Skt.** amā-vāsyā > த. அமாவாசை.]*

**அமாவாசைக்கண்டம்** *amāvāšai-k-kaṇḍam,* பெ.(n.) நோய் மிக்கார்க்கு காருவா நாளிலுண்டாகும் ஏதம், நேர்ச்சி (வின்.); crisis of a disease occuring at the new moon.

**த.வ. காருவாநேர்ச்சி.**

*[அமாவாசை + கண்டம்.]*

*[**Skt.**amā-vāšyā > த. அமாவாசை.]*

**அமாவாசைக்கருக்கல்** *amāvāšai-k-karukkal,* பெ.(n.) காருவா காரிருள்; great darkness in the night of the new moon day.

*[அமாவாசை + கருக்கல்.]*

*[**Skt.**amā-vāšyā > த.அமாவாசை.]*

*கரு >கருகு >கருக்கு>கருக்கல்.*

**அமானத்து** *amānattu,* பெ.(n.) 1. ஒப்படைத்த பொருள்; deposit, anything held in trust. 2. கருவூலத்தில் பெயர் விளத்தம் குறிக்காமல் வைத்த பணம் (R.F.); money kept in suspense and not credited under any head.

*[**U.** amānat> த. அமானத்து.]*

**அமானத்துச்சிட்டா** *amānattu-c-ciṭṭā,* பெ.(n.) பொதுக்குறிப்பேடு; miscellaneous account.

*[**U.** amānat+ciṭṭha > த. அமானத்துச் சிட்டா.]*

**அமானம்** *amānam,* பெ.(n.) அளவின்மை (சூடா.); boundlessness.

**த.வ. வரம்பின்மை, கட்டுப்பாடின்மை.**

*[**Skt.** a-māna>த. அமானம்.]*

**அமானவன்** *amānavan,* பெ.(n.) விரசைக் கரையிலுள்ள கடவுள் (உபதேசரத். சிறப்புப்.); *(Vaisn.)* name of a god said to be on the banks of the river *Virajā,* who by his touch purifies souls on their way to heaven.

*[**Skt.** amānava> த. அமானவன்.]*

**அமானி[1]** *amāṇi,* பெ.(n.) 1. பொறுப்பு; security, trust, deposit. 2. அரசுப் பொறுப்பிலுள்ள நிலம் (C.G.); land held directly under the government, opp. to இஜாரா. 3. வரி நிலுவை முதலியவற்றிற்காக அரசுப் பார்வையிலுள்ள நிலம் (C.G.); land under the management of government officers for arrears of revenue or for any other reason. 4. உரிமையாளன் பொறுப்பில் இல்லாத நிலம்; (C.G.); land not held by the owner, for whom another holds it a trustee.

**த.வ. சாராநிலம், உரிமைசாராநிலம்.**

*[U. amānī > த. அமானி.]*

**அமானி[2]** *amāṇi,* பெ.(n.) வரையறுக்கப்படாதது; that which is not previously filled. *"அமானியிலே கண்டுமுதல் பண்ணிக்கொள்" (இ.வ.).*

*[Skt. a-māni> த. அமானி.]*

**அமானிபாசேபாப்** *amāṇi-pāsēpāp,* பெ.(n.) ஆட்சியர் ஆளுகையிலுள்ள சில்லறை பயிர்செய்யும் நிலங்கள் (P.T.L.); sundry farms under the management of a collector.

*[Ar.amānī+pājēpāp>த. அமானிபாசேபாப்.]*

**அமானுடகிருத்தியம்** *amāṇuḍa-kiruttiyam,* பெ.(n.) மனித வல்லமையைக் கடந்த செயல்; superhuman act.

*[Skt. a-mānuṣa+kṛtya>த. அமானுட கிருத்தியம்.]*

**அமானுடம்** *amāṇuḍam,* பெ.(n.) மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்டது; that which is superhuman.

*[Skt.mānuṣya> த.அமானுடம்.]*

**அமானுடரோகம்** *amāṇuḍa-rōgam,* பெ.(n.) தெய்வத்தினாலும், தேவதைகள், பேய் முதலியவற்றினாலும் ஏற்படும் நோய்; disease brought on through superhuman influences, here super human beings include the deities, demons, ghosts, monsters, malignant spirits etc. (சா.அக.).

**த.வ. புறச்சார்பு நோய்.**

*[Skt.a-mānuṣa+rōga>த. அமானுடரோகம்.]*

**அமிச்சை** *amiccai,* பெ. (n.) அறிவு (சிந்தா.நி.212); knowledge.

*[a-mithyā > த. அமிச்சை.]*

**அமிசகம்** *amišagam,* பெ.(n.) நாள் (சிந்தா. நி.193); day.

*[Skt. amšaka> த. அமிசகம்.]*

**அமிசபிதம்** *amišapidam,* பெ.(n.) தோளெலும்பின் கவை; a cavity in the scapula (shoulder blade) to receive the knob of the humerus, *Glenoid cavity* (சா.அக.).

**அமிசம்[1]** *amišam,* பெ.(n.) பாகம்; part, portion.

*[Skt. amša> த. அமிசம்.]*

**அமிசம்[2]** *amišam,* பெ.(n.) ஓதிமம் (அன்னப்புள்); swan.

*[Skt. hamsa > த. அமிசம்.]*

**அமிசனம்** *amišaṇam,* பெ.(n.) பிரிக்கை (சிந்தா.நி.195); dividing, parting.

*[Skt. amšana > த. அமிசனம்.]*

**அமிசாமம்** *amišāmam,* பெ.(n.) மானசவாவி (சிந்தா.நி.196); lake manasarowar, a sacred lake at the foot of Mt. Kailas.

*[Skt. hamša> த. அமிசாமம்.]*

**அமிசு** *amišu,* பெ.(n.) அணு (பாண்டி.); atom.

*[Skt. amša > த. அமிசு.]*

**அமிசுகம்** *amišugam,* பெ.(n.) இலை; leaf (சா.அக.).

**அமிசை** *amišai,* பெ.(n.) தலையெழுத்து; lot. *"ஆசையிருக்கிறது தாசில்பண்ண, அமிசையிருக்கிறது கழுதை மேய்க்க".*

*[Skt. amša > த. அமிசை.]*

**அமித்தியம்** *amittiyam,* பெ.(n.) பொய்யல்லாதது (வேதாந்தசா.84); that which is not false.

*[Skt. a-mithyā > த. அமித்தியம்.]*

**அமித்திரன்** *a-mittran,* பெ.(n.) பகைவன் (உரி.நி.); enemy, as unfriendly.

*[Skt. a-mitra> த. அமித்திரன்.]*

**அமிதம்** *amidam,* பெ.(n.) அளவிறந்தது; that which is unmeasured, immense. *"அமிதமாகிய பெரும்படை" (சூளா.கல்யாண. 49).*

*[Skt. amita > த. அமிதம்.]*

**அமிதவாதி** *amidavādi,* பெ.(n.) மிதமிஞ்சின கொள்கையுடையவன் (புதுமை.); extremist.

*[Skt. amita+vādin> த. அமிதவாதி.]*

**அமிராகிதம்** *amirāgidam,* பெ.(n.) செங்கருங்காலி (சித்.அக.); red catechu.

**அமிரிநாளம்** *amiri-nāḷam,* பெ.(n.) வெட்டிவேர்; the root of a fragrant grass (khus khus), *Andropogon muricatus* (சா.அக.).

**அமிருதை** *amirudai,* பெ.(n.) 1. திப்பிலி; long pepper, Piper longum. 2. மது; sweet drink. 3. துளசி; holy basil, *Ocimum sanctum* (சா.அக.).

**அமில்தார்** *amildār,* பெ.(n.) வரி தண்டுமதிகாரி; office employed to collect revenue.

த.வ. அமல்தார்.

*[U. amal-dār > த. அமில்தார்.]*

**அமிலக்கினம்** *amilakkinam,* பெ.(n.) உடலில் அழிந்த தாது உறுப்பை உள்வாங்குமல்லது வெளித்தள்ளு மருந்து; (in materia medica) a drug or medicine that produces absorption or exudaton of diseased tissues (சா.அக.).

த.வ. அகப்புறந்தள்ளி.

**அமிலகரம்** *amilagaram,* பெ.(n.) உயிர்வளி (பிராணவாயு); a gaseous element which is very essential to respiration, *Oxygen* (சா.அக.).

**அமிலத்தன்மை** *amila-t-tanmai,* பெ.(n.) **அமிலம்** பார்க்க; see *amilam* (சா.அக.).

*[Skt. amla> த. அமிலம்.]*

**அமிலதம்** *amiladam,* பெ.(n.) கறி, கந்தம் முதலியவற்றோடு கூடி காரவகை (அமில வர்க்கங்)களை உண்டாக்கும் காய்கறிகள்; that which converts vegetables and roots into sour, substances (சா.அக.).

*[Skt. amla-ta > த. அமிலதம்.]*

**அமிலதிகரணம்** *amiladi-karanam,* பெ.(n.) உயிர்வளியைக் கலக்கச் செய்தல்; the act of uniting or causing to combine with oxygen, *Oxygenation* (சா.அக.).

*[அமிலம் + அதி + கரணம்.]*

*[Skt. amla+adhi>த. அமிலதி.]*

**அமிலப்பிரதிகாரம்** *amila-p-piradi-kāram,* பெ.(n.) புளிப் பெதிர்க்கை; the reciprocal action of acid, acid reaction (சா.அக.).

**அமிலம்** *amilam,* பெ.(n.) (வேதி.) 1. அரிக்கும் தன்மையும் புளிப்புச் சுவையும் கொண்ட காடி (திரவம்.); acid. 2. புளிப்புப்பொருள்; sour substances. 3. மண், மாழை முதலியவற்றோடு சேர்ந்து உப்பு வகைகளை உண்டு பண்ணுமொரு பொருள்; (in chemistry) a sub-substance which combines with bases to form salts, and of which hydrogen is an essential constituent (சா.அக.).

*[Skt. amla> த. அமிலம்.]*

**அமிலமாக்கல்** *amila-mākkal,* பெ.(n.) புளிப்பேற்றுகை; converting into acid, to make sour (சா.அக.).

*[அமிலம் + ஆக்கல்.]*

*[Skt. amla> த. அமிலம்.]*

**அமிலமை** *amilamai,* பெ.(n.) காடி (திராவக)த் தன்மை, புளிப்புத்தன்மை; acidity, sourness (சா.அக.).

*[Skt. amla> த. அமிலமை.]*

**அமினா** *aminā,* பெ.(n.) அற (நீதி) மன்றத்தின் ஆணை (உத்தரவு)களை உரியவரிடம் சேர்ப்பிக்கும் பொறுப்பான அலுவலர்; subordinate officer of civil court to serve legal processes.

த.வ. விடையதிகாரி, கட்டளை அதிகாரி.

[U. amin > த. அமினா.]

**அமிதூரம்** *amidūram,* பெ.(n.) செம்மறிக்கடா; the male of a sheep which butts with its head, ram (சா.அக.).

**அமிர்** *amir,* பெ.(n.) தலைவன்; commander, nobleman.

[U. amir> த. அமீர்.]

**அமீன்**[1] *amīṉ,* பெ.(n.) 1. பணம் தண்டல் செய்யும் ஓர் அதிகாரி; subordinate officer employed to collect arrears of revenue under a coercive process. 2. குடிமமுறை மன்றக் கட்டளைகளை நிறைவேற்றுகிற ஓர் அதிகாரி; subordinate office employed by civil courts for various purposes such as to sell or deliver up possession of immovable property, carry out legal processes as a bailiff.

**த.வ. கட்டளை அதிகாரி, கட்டளையர்.**

[U. amin> த. அமீன்.]

**அமீன்**[2] *amīṉ,* பெ.(n.) கமுக்க (அந்தரங்க) அலுவலர் (M.Sm.D.I.278); confidential officer.

**த.வ. அணுக்க அதிகாரி, அணுக்கர், கமுக்க அலுவலன்.**

[U. amin > த. அமீன்.]

**அமீன்கெச்சு** *amīṉ-keccu,* பெ.(n.) சிற்றூரின் நிலஅளவுக் குறிப்பு; official plan of village lands.

[U. amin + F. sketch> த. அமீன்கெச்சு.]

**அமீனா** *amīṉā,* பெ.(n.) 1. வல்லந்தமாய்க் கடன் நிலுவைத் தொகையைத் தண்டும் வருவாய் அலுவலர்; sub-ordinate officer employed to collect arrears of revenue under a coercive process. 2. அசையாச் சொத்துக்களை விற்றல், கைப்பற்றுதல் போன்ற நயமன்றக் கட்டளைகளை நிறைவேற்றும் அதிகாரி; subordinate officer employed by civil courts for various purposes such as to sell or deliver up possession of immovable property, carryout legal processes as a bailiff.

**த.வ. தண்டலர்.**

[U - amin > த. அமீனா.]

**அமுதசம்பூதன்** *amuda-šampūdaṉ,* பெ.(n.) பாற்கடலில் பிறந்த நிலவு (வரத. பாகவத. குருகு. 23); Moon, as born from the ocean of milk.

[Skt. a-mṛta+ sam - bhūta > த. அமுதசம்பூதன்]

**அமுதவேணி** *amuda-vēṇi,* பெ.(n.) கங்கையை முடியிலணிந்தவன், சிவன் (திருப்பு.202); Šivaṉ, as having the Ganges in his matted hair.

[அமுதம் + வேணி.]

**அமுல்** *amul,* பெ.(n.) 1. அதிகாரம்; authority, sway. 2. மேல் உசாவு; administration or management of any land or business on behalf of another (R.R.). 3. நடைமுறைப்படுத்தம்; effect. *'நாளையிலிருந்து இந்தச் சட்டம் அமுலுக்கு வருகிறது.'*

**த.வ. நடைமுறைப்படுத்தம்.**

[U. amal> த.அமுல்.]

**அமூர்த்தம்** *a-mūrttam,* பெ.(n.) உருவில்லாதது; that which is without form.

**த.வ. உருவிலி.**

[Skt. a-mūrta>த. அமூர்த்தம்.]

**அமூர்த்தன்** *amūrttaṉ,* பெ. (n.) உருவில்லாதவன், சிவன் (சி.சி.1, 30, மறைஞா.); Šivaṉ, as formless.

**த.வ. உருவிலன்.**

[Skt. a-mūrta>த. அமூர்த்தன்.]

**அமை** *amai,* பெ.(n.) கதிரவனும் நிலவும் கூடி நிற்கும் நாளாகிய காருவா நாள்; new noon, as the time when the sun and the moon dwell together. *"அமையதனின் மாளயந்தா னாற்றுவரேல்" (சேதுபு. துராசா. 41).*

த.வ. உவா.

*[Skt. amā> த.அமை.]*



**அமோகபாணம்** *amōga-bāṇam,* பெ.(n.) இலக்குத் தவறாத அம்பு, (பாரத. நிவாத. 84); unerring arrow.

*[Skt. a-mōgha+bāṇa>த. அமோகபணம்]*

**அமோகம்** *amōgam,* பெ.(n.) 1. மிகுதி; plenty, abundance. 2. இலக்குத் தவறாமை (சீவக. 1646); unfailingness in hitting.

த.வ. மிகுதி, பெருக்கம்.

*[Skt. a-mōgha > த. அமோகம்.]*

**அமோகன்** *amōgaṉ,* பெ.(n.) மயக்கமில்லாதவன் (மச்சபு. சுக்கிர. 35); one in whom there is no ignorance.

*[Skt. a-mogha > த. அமோகன்.]*

**அமோகை** *amōgai,* பெ.(n.) கடுக்காய் (தைலவ. தைல. 34); chebulic myrobalan.

*[Skt. amōghā > த. அமோகை.]*

**அயக்களங்கு** *aya-k-kaḷaṅgu,* பெ.(n.) இரும்புத் துரு (வின்); oxide of iron, used as medicine.

*[அயம்+களங்கு.]*

*[Skt. ayas > த. அயம்.]*

*களம்→களங்கு = கருமை.*

**அயக்கிரீவம்** *ayakkirīvam,* பெ.(n.) நூற்றெட்டுச் சிற்றிலக்கியங்களுள் ஒன்று; name of an upanisad.

*[Skt. hayagrīva > த. அயக்கிரீவம்.]*

**அயக்கிரீவன்** *aya-k-kirīvaṉ,* பெ.(n.) திருமாலின் தோற்றரவுகளுள் ஒன்று; name of a form of *Tirumāl* as horse-necked.

*[Skt. Hayagrīvā>த. அயக்கிரீவன்.]*

**அயகரம்** *aya-karam,* பெ.(n.) மலைப்பாம்பு; boa-constrictor, as goat-swallower.

*[Skt. aja-gara> த. அயகரம்.]*



**அயசு** *ayacu,* பெ.(n.) இரும்பு (சி.சி.4, 8, சிவாக்); iron.

*[Skt. ayas > த. அயசு.]*

**அயணம்** *ayaṇam,* பெ.(n.) செலவு; moving, going. *"வெய்யோன் வடதிசை யயண முன்னி" (சீவக. 85).*

த.வ. செல்லுகை.

*[Skt. ayana > த. அயணம்.]*

**அயத்தொட்டி** *aya-t-toṭṭi,* பெ.(n.) வைப்பு நஞ்சு வகை; a prepared arsenic, said to be pieces of iron cauldron used in the preparation of cinnabar.

*[அயம் + தொட்டி.]*

*[Skt. ayas > த. அயம்.]*

**அயதார்த்தம்** *a-yadārttam,* பெ.(n.) மெய்யில்லாதது; untruth. *"அயதார்த்த ஸ்மரணம்" (தர்க்கபா. 68).*

த.வ. மெய்யின்மை.

*[**Skt.** a-yathārtha> த. அயதார்த்தம்.]*

**அயப்பனை** *ayappaṉai,* பெ.(n.) **அயபானி** பார்க்க; see *aya-pāṉi.*

**அயபானி** *aya-pāṉi,* பெ.(n.) ஒரு மருந்துச் செடி (மூ.அ.); a medicinal herb.

*[**Braz.** ayapana > த. அயபானி.]*

**அயம்**[1] *ayam,* பெ.(n.) விழா (அக.நி.); festival.

*[**Skt.** aya > த. அயம்.]*

**அயம்**[2] *ayam,* பெ.(n.) 1. இரும்பு (பிங்.); iron. 2. அரப்பொடி (தைலவ. தைல. 6); iron filings.

*[**Skt.** ayas > த. அயம்.]*

**அயம்**[3] *ayam,* பெ.(n.) குதிரை (பிங்.); horse.

*[**Skt.** haya > த. அயம்.]*

**அயம்**[4] *ayam,* பெ.(n.) அலரி (மூ.அ.); oleander.

*[**Skt.** haya-māra > த. அயம்.]*

**அயம்பற்றி** *ayam-paṟṟi,* பெ.(n.) காந்தம்; magnet, as an iron-attracter.

*[அயம் + பற்றி.]*

*[**Skt.** ayas > த. அயம்.]*

பற்று > பற்றி.

**அயமகம்** *aya-magam,* பெ.(n.) குதிரை வேள்வி; horse - sacrifice. *"அயமக மாயிரத்துக் கேனும்" (நல். பாரத. தீர்த்தம. 18).*

*[**Skt.** haya-medha > த. அயமகம்.]*

**அயமரம்** *aya-maram,* பெ.(n.) அலரி (பிங்.); oleander, as death to horse.

*[**Skt.** haya-māra > த. அயமரம்.]*

**அயமுகம்** *aya-mugam,* பெ.(n.) ஒன்பது இருக்கை வகைகளுள் ஒன்றான திரிதரவில்லா விருக்கை (சிலப். 8: 26, உரை); a posture, one of nine posture.

*[அயம் + முகம்.]*

*[**Skt.**haya> த. அயம்.]*

**அயமேதம்** *aya-mēdam,* பெ.(n.) குதிரை வேள்வி (உத்தரரா. அசுவமே. 7); horse - sacrifice.

*[**Skt.** haya-mēda> த. அயமேதம்.]*

**அயவணம்** *ayavaṇam,* பெ.(n.) ஒட்டகம் (பிங்.); camel.

*[**Skt.** ravana > த. அயவணம்.]*

**அயவாகனன்** *aya-vāgaṉaṉ,* பெ.(n.) ஆட்டை யூர்தியாகக் கொண்ட கடவுளெனக் கருதப்படும் தீக்கடவுள் (சூடா.); *Agni,* as riding on a goat.

*[**Skt.** aja+vāhanaṉ>த. அயவாகனன்.]*

**அயவாரி** *ayavāri,* பெ.(n.) வசம்பு; sweet-flag.

*[**Skt.** aja+ari>த. அயவாரி.]*

**அயவெள்ளை** *aya-veḷḷai,* பெ.(n.) மருந்துக்காகப் பொடியாக்கப்பட்ட இரும்பு; iron reduced to medicinal powder.

*[அயம் + வெள்ளை.]*

*[**Skt.** ayas> த. அயம்.]*

**அயன்**[1] *ayaṉ,* பெ.(n.) 1. பிறப்பில்லாதவ னெனக் கருதப்படும் நான்முகன்; *Brahmaṉ,* as not born. 2. தயரதனின் தந்தை; name of the father of *Dayarathan.* *"அயன் புதல்வன் தசரதனை" (கம்பரா. குலமுறை. 13).*

*[**Skt.** Aja > த. அயன்.]*

**அயன்**[2] *ayaṉ,* பெ.(n.) அரசு நிலம்; government lands.

*[**U.** ain> த.அயன்.]*

**அயன்கணக்கு** *ayaṉ-kaṇakku,* பெ.(n.) நான்முகன் வகுத்த நெறி; destiny ordained by *Brahmaṉ.* *'அயன் கணக்கு ஆருக்குந் தப்பாது'.*

*[அயன்+கணக்கு.]*

*[**Skt.** aja>த. அயன்.]*

கள்→கண்→கணக்கு.

**அயன்தரம்** *ayan-taram,* பெ.(n.) நிலத்தின் முதன் மதிப்பு; original classification of lands in the Madras provinces at the time of survey according to their kinds of qualities.

*[அயன் + தரம்.]*

*[U. ain>த. அயன்.]*

**அயன்தீர்வை** *ayan-tirvai,* பெ.(n.) நிலவரி; tax on land.

*[அயன் + தீர்வை.]*

*[U. ain>த. அயன்.]*

**அயன்மனைவி** *ayan-manaivi,* பெ.(n.) நான்முகன் மனைவியாகிய கலைமகள்; *Kalaimagal* wife of *Brahman.*

*[அயன் + மனைவி.]*

*[Skt. aja> த. அயன்.]*

**அயன்சமா** *ayan-samā,* பெ.(n.) அரசால் குறிக்கப்பட்ட மொத்தவரி; amount of government demand on land.

*[U. ain+ jamā > த.அயன்சமா.]*

**அயன்சமாபந்தி** *ayan-samābandi,* பெ.(n.) ஆண்டு நிலவரித் தீர்மானம்; annual settlement of land revenue.

*[U. ain+ jamābandi > த.அயன்சமாபந்தி.]*

**அயனப்பிறப்பு** *ayana-p-pirappu,* பெ.(n.) கதிரவனின் வடதிசை, தென்திசைச் செலவுகளின் தொடக்கம்; commencement of the sun's northward or southward course, time of the sun's entry in *kadagam* or *magaram.*

*[அயனம் + பிறப்பு.]*

*[Skt.ayana>த.அயனம்.]*

பிற→பிறப்பு.

**அயனம்** *ayanam,* பெ.(n.) 1. வழி (பிங்.); road, path, course. 2. நிலநடுக்கோட்டிற்கு வடக்கிலாவது தெற்கிலாவது ஞாயிறு செல்லும் காலம்; time of the sun's northward or southward course. 3. அரையாண்டு (சூடா.); half year. 4. வடவழி, தென்வழிச் செல்லும் கதிரவன் காலம் (உத்தராயண தட்சிணாயன பிரவேச காலம்) (வேதாரணி. தோற்றச். 82); solstitial point, the first in either *kadagam* or *magaram.*

**த.வ. செலவு.**

*[Skt. ayana > த.அயனம்.]*

**அயனமண்டலம்** *ayana-mandalam,* பெ.(n.) நிலநடுக் கோட்டிற்கு வடக்கும் தெற்குமுள்ள கதிரவன் செல்லும் பாதை; the ecliptic.

*[அயன(ம்) + மண்டலம்.]*

*[Skt. ayana> த. அயன(ம்).]*

மண்டு > மண்டலம்.

**அயனாள்** *ayanāl,* பெ.(n.) 1. நான்முகனின் நாள்; a day of *Brahman.* 2. நான்முகனின் வாணாள்; age of *Brahman.*

*[அயன் + நாள்]*

*[Skt. aja > த. அயன்.]*

**அயாசகம்** *ayāšagam,* பெ.(n.) கேளாது கிடைக்கும் இரவல்; unsolicited alms. *"ஆய்ந்தார்க் கயாசகமுமாம்" (சைவச. பொது. 257).*

*[Skt. a-yācaka > த. அயாசகம்.]*

**அயாசிதபிச்சை** *a-yāšida-piccai,* பெ.(n.) இருந்தவிடத்திலேயே வரும் உணவை வாங்கியுண்ணும் இரவல் (சைவச. பொது. 405); food obtained unsought by saintly men, who neither leave their place nor make any effort to obtain it.

*[Skt.a-yācita+bhikṣā>த.அயாசித பிச்சை.]*

**அயிக்கவாதசைவம்** *ayikka-vāda-šaivam,* பெ.(n.) சிவனிய மதப் பிரிவுகளுலொன்று (சி. போ. பா. அவை. பக். 22); a šaiva sect.

**அயிங்கிசை** *ayingišai,* பெ.(n.) துன்புறுத்தாமை; abstention from doing injury, esp. from killing. *"அயிங்கிசை பொறையே மெய்ம்மை" (சிவதரு. சிவதருமம். 3).*

*[Skt. a-himsā> த.அயிங்கிசை.]*

**அயிச்சுரியம்** *ayiccuriyam,* பெ.(n.) செல்வம்; wealth.

*[Skt. aiśvarya >த.அயிச்சுரியம்.]*

**அயிஞ்சை** *ayiñjai,* பெ.(n.) துன்புறுத்தாமை; abstention from doing injury, esp. from killing. *"அயிஞ்சையே பரமதன்மம்" (பிரபோத. 18, 4).*

*[Skt. a-himšā > த.அயிஞ்சை.]*

**அயிதம்** *ayidam,* பெ.(n.) தீங்கு; harm. *"இந்த மானியத்துக்கு அயிதம் பண்ணினவன்" (தெ.க.தொ.1, பக். 138).*

*[Skt. a-hita > த.அயிதம்.]*

**அயிந்தா** *ayindā,* பெ.எ. (adj.) அடுத்து வருகிற; next, ensuring. *'அயிந்தா பசலி' (உ.வ.).*

*[U. ā-inda > த.அயிந்தா.]*

**அயிந்திரதிசை** *ayindra-disai,* பெ.(n.) கிழக்கு; the east quarter, as under the guardianship of Indira. *"அயிந்திர திசையின்" (சீகாளத். பு. தென்கை. 64).*

**த.வ. கீழ்திசை.**

*[அயிந்திரம் + திசை.]*

*[Skt. ayindra > த.அயிந்திர(ம்).]*

**அயிம்சை** *ayimšai,* பெ.(n.) **அகிம்சை** பார்க்க; see *ahimsai.*

*[Skt. a-himšā > த.அயிம்சை.]*

**அயிமாசு** *ayimāšu,* பெ.(n.) தேர்வு, ஆய்வு; examination, inspection.

*[U. āzmā'ish >த.அயிமாசு.]*

**அயிராணி** *ayirāṇi,* பெ.(n.) 1. அயிராவணனின் துணைவி அயிராவணி; consort of *Airāvaṇaṉ.* 2. இந்திரனின் துணைவி (நாலடி, 381); *Indirāṇi,* Indraṉ's consort. 3. மலைமகள் (திவா.); Pārvadi.

*[Skt. aja+rani > த.அயிராணி.]*

**அயிராவணம்** *ayirāvaṇam,* பெ.(n.) **அயிராவதம்** பார்க்க; see *ayirāvadam.*

*[Skt. ayirāvada> த.அயிராவணம்.]*

**அயிராவதம்** *ayirāvadam,* பெ.(n.) இந்திரனின் ஊர்தி என்று சொல்லப்படும் ஐராவதம் என்னும் யானை; Indiraṉ's elephant.

**த.வ. தேவர்கோன்யானை.**

*[Skt. ayirāvada> த.அயிராவதம்.]*

**அயிராவதன்** *ayirāvadaṉ,* பெ.(n.) அயிராவதம் என்னும் யானையை ஊர்தியாகக் கொண்டவன், இந்திரன்; *Indiraṉ.*

**த.வ. தேவர்கோன்.**

*[Skt. ayirāvada> த.அயிராவதன்.]*

**அயில்வார்** *ayil-vār,* பெ.(n.) முதல் வரித் திட்டத்திற்குப் பின் வரியிடப்பட்ட நிலங்கள் (G.Sm. D.I.ii. 28); lands assessed subsequent to the first settlement by the British.

*[U. ain-wār > த. அயில்வார்.]*

**அயுத்தம்** *ayuttam,* பெ.(n.) தகுதியின்மை; unfitness, incongruity. *"அயுத்தமெனுஞ் சுரிகை யொருபால் வீக்கி" (பிரபோத. 3 : 11).*

**த.வ. பொருந்தாமை.**

*[Skt. a-yukta > த.அயுத்தம்.]*

**அயுதம்** *ayudam,* பெ.(n.) பத்தாயிரம் (இரகு. திருவவ. 1); ten thousand.

*[Skt. ayuta > த.அயுதம்.]*

**அயோக்கியதை** *a-yōkkiyadai,* பெ.(n.) தீயொழுக்கம்; bad conduct, dishonesty.

*[Skt. a-yōgya-tā > த. அயோக்கியதை.]*

**அயோக்கியம்** *a-yōkkiyam,* பெ.(n.) தகாதது; that which is unsuitable, improper.

**த.வ. ஒழுக்கமின்மை.**

*[Skt. a-yogya > த.அயோக்கியம்.]*

**அயோக்கியன்** *ayōkkiyaṉ,* பெ.(n.) 1. நம்புதற்கேலா நடத்தையன்; unreliable person; 2. ஒழுக்கமற்றவன்; dishonest.

*[Skt. a-yogya > த.அயோக்கியன்.]*

**அயோகவன்** *a-yōgavan,* பெ.(n.) நான்காம் வருணத்தா (சூத்திர)னுக்கும் வணிக (வைசிய)ப் பெண்ணுக்கும் பிறந்தவன் (சைவச. பொது. 467, உரை); son of a šūdra man and *vaišya* woman.

*[Skt. a-yogava > த. அயோகவன்.]*

**அயோத்தி** *ayōtti,* பெ.(n.) கோசலர்களின் தலைநகர் (கம்பரா. கையடை. 7); name of the capital of the kingdom of *Košala.*

*[Skt. ayōdhyā > த. அயோத்தி.]*

**அயோனிசன்** *ayōnišan,* பெ.(n.) பிறப்புறுப்பு வழியாய் பிறவாதவன்; one not born from the womb.

*[Skt. a-yōni-ja > த. அயோனிசன்.]*

**அர்க்கம்** *arkkam,* பெ.(n.) எருக்கு (மலை.); madar.

*[Skt. arka > த. அர்க்கம்.]*

**அர்க்கன்** *arkkan,* பெ.(n.) கதிரவன்; the sun.

*[Skt. arka > த. அர்க்கம்.]*

**அர்க்காதிபதி** *arkkādipadi,* பெ.(n.) (வானியல்) பொருள் முதல்வன் (திரவியாதிபதி); the planet presiding over riches.

*[Skt. arga+adhipati > த. அர்க்காதிபதி.]*

**அர்க்காதிபன்** *arkkādiban,* பெ.(n.) **அர்க்காதிபதி** பார்க்க; see *arkkādipadi.*

*[அர்க்காதிபதி → அர்க்காதிபன்.]*

**அர்க்கார்** *arkkār,* பெ.(n.) தூதன்; messenger.

*[U. -harkāra > த. அர்க்கார்.]*

**அர்க்கியம்** *arkkiyam,* பெ.(n.) தேவர்களுக்கும், விருந்தினர்களுக்கும் நீரால் செய்யும் வரவேற்பு; water offered reverentially to gods and guests. *"மந்திரத்தினாலே விதமாரர்க்கியங் கொடுத்து" (சேதுபு. சேதுபல. 90).*

**த.வ. நீரோம்பல்.**

*[Skt. arghya > த. அர்க்கியம்.]*

**அர்ச்சகன்** *arccagan,* பெ.(n.) கோயிலில் வழிபாடு நடத்துபவன்; temple priest.

**த.வ. பூசகன், பூசாரி.**

*[Skt. arcaka > த. அர்ச்சகன்.]*

**அர்ச்சனாபாகம்** *arccanā-pāgam,* பெ.(n.) **அர்ச்சனாபோகம்** பார்க்க; see *arccanā-pōgam.*

*[அர்ச்சனா + பாகம்.]*

*[Skt. arcanā> த.அர்ச்சனா.]*

**அர்ச்சனாபோகம்** *arccanā-bōgam,* பெ.(n.) கோயிற்பூசகனுக்கு விடப்பட்ட இறையிலி நிலம் (I.M.P. SA. 176); lands on free tenure bestowed on temple priests.

*[அர்ச்சனா+போகம்.]*

*[Skt.arcanā >த. அர்ச்சனா.]*

**அர்ச்சனை** *arccanai,* பெ.(n.) வழிபாடு; worship. *"செவ்வி தர்ச்சனை செய்தனர்" (கந்தபு. திருவி. 123).*

**த.வ. பூசை.**

*[Skt. arcanā > த. அர்ச்சனை.]*

**அர்ச்சாவதாரம்** *arccāvadāram,* பெ.(n.) திருமால் நிலைகளுளொன்று (அஷ்டாதச. தத்வத். 3,60); manifestation of *Tirumāl* as idols and other sacred symbols which are worshipped in temples and houses, one of five *Tirumāl nilai.*

*[Skt. arcā +ava-tāra>த.அர்ச்சாவதாரம்.]*

**அர்ச்சாவிக்கிரகம்** *arccā-vikkiragam,* பெ.(n.) பூசைத் திருமேனி; idol to be worshipped. *"சடகோபனை அர்ச்சா விக்கிரகமாகப் பிரதிஷ்டிப்பித்து" (கோயிலொ. 7).*

**த.வ. கடவுட்சிலை.**

*[Skt.arcā+vi-graha>த.அர்ச்சாவிக்கிரகம்.]*

**அர்ச்சி** *archi,* பெ.(n.) விண்ணப்பம்; official representation generally in writing from a sub-ordinate to a superior a petition.

**த.வ. வேண்டுகோள்.**

*[U. arzi > த. அர்ச்சி.]*

**அர்ச்சி–த்தல்** *arcci-,* 4 செ.குன்றாவி (v.t.) வழிபடுதல்; to worship. *"அர்ச்சிப்பா ரிந்நூ லலரினால்" (சைவச. பொது. 566).*

**த.வ.பூசைசெய்தல்.**

*[**Skt.** arc- > த. அர்ச்சி–,]*

**அர்ச்சிதன்** *arccidan,* பெ. (n.) வழிபடப்படுவோன்; one who is worshipped. *"ஆதிநாத னமரர்க ளர்ச்சிதன்" (தேவா. 784:7).*

**த.வ. வழிபடத்தக்கோன்.**

*[**Skt.** arcita > த. அர்ச்சிதன்]*

**அர்ச்சியசிட்டர்** *arcciya-cittar,* பெ.(n.) தூயகத் துறவியர் (கிறித்.); canonised saints.

*[**Skt.** ariya+šista>த. அர்ச்சியசிட்டர்.]*

**அர்ச்சிராதிமார்க்கம்** *arccir-ādi-mārkkam,* பெ.(n.) துறக்கத்திற்குச் செல்வோரை முதலிற் கண்டு வரவேற்று வழி நடத்தும் சிறுதெய்வங்களைக் கடந்து துறக்கத்துக்குச் செல்லும் வழி; way to the supreme heaven which is open only to the Brahma-vit (knower of Brahman) and on which one has to pass by Arccis and other deities.

*[**Skt.** arcist-ādi+mārga>த. அர்ச்சிராதி மார்க்கம்.]*

**அர்ச்சிசு** *arcciśu,* பெ.(n.) துறக்கத்திற்குச் செல்வோரை முதலிற்கண்டு வரவேற்று வழி நடத்துந் தெய்வம் (அஷ்டாதச. அர்ச்சி); name of the deity met with first on the way to the supreme heaven, who leads on to the next, and who presides over light.

*[**Skt.** arcis > த. அர்ச்சிசு.]*

**அர்ச்சுனன்** *arccunan,* பெ.(n.) **அருச்சுனன்** பார்க்க; see *aruccunan.*

**அர்ச்சை** *arccai,* பெ.(n.) தெய்வவுரு (வணங்கப்படும் சிலை); idol, as worshipped.

**த.வ. இறையுரு.**

*[**Skt.** arcā > த. அர்ச்சை.]*

**அர்சாரோகம்** *arśā-rōgam,* பெ.(n.) மலவாயிலில் தசை வளர்ந்து துன்புறுத்தும் மூல நோய்; a disease which gives rise to the growth of polypi or fleshy condylomata at the anus known as piles.

*[**Skt.** arcā-rōga> த.அர்சாரோகம்.]*

**அர்சி** *arci,* பெ.(n.) விண்ணப்பம்; official representation generally writting from a sub-ordinate to a superior, a petition.

**த.வ. வேண்டுகோள்.**

*[**U.** arzi > த. அர்சி.]*

**அர்சிதாத்து** *arci-dāddu,* பெ.(n.) எழுத்து மூலமான விண்ணப்பம்; written petition.

*[**U.** arzi+dāsh > த. அர்சிதாத்து.]*

**அர்சிதார்** *arcidār,* பெ.(n.) வேண்டுகோள் (விண்ணப்பம்) செய்வோன்; petition, memorialist.

*[**U.** arzi-dār > த. அர்சிதார்.]*

**அர்சிதாவா** *arsi-dāvā,* பெ.(n.) முறையீட்டு (பிராது) வேண்டுகோள் (விண்ணப்பம்) (இக். வ); petition of complaint, plaint, first pleading in a suit.

*[**U.** arzi+tāva > த. அர்சிதாவா.]*

**அர்சோரோகம்** *arsō-rōgam,* பெ.(n.) மூலநோய் (சு.வை.ர.); piles.

*[**Skt.** aršas+rōga > த. அர்சோரோகம்.]*

**அர்த்தக்கிரகணம்** *artta-k-kiraganam,* பெ.(n.) பாதிக் கோள் மறைப்பு (பாதிக் கிரகணம்); half eclipse.

**த.வ. அரைமறைப்பு.**

*[**Skt** ardha+grahana>த.அர்த்தக் கிரகணம்.]*

**அர்த்தகோளம்** *artta-kōlam,* பெ.(n.) அரைக்கோளம்; hemisphere.

*[அர்த்த(ம்) + கோளம்.]*

*[**Skt.** ardha> த. அர்த்தம்.]*

**அர்த்தசந்திரக்குறி** *artta-śandira-k-kuri,* பெ.(n.) இன்பந் துய்க்குங்கால் பெண்களின் மார்பு போன்ற பாகங்களில் ஆண்களின் உகிர்(நகங்)கள்பட்டு அரைநிலவு (அர்த்த சந்திர) வடிவில் உண்டாக்கப் பெறும் உகிர்(நக)க்குறி; semi lunar impression of the finger-nail left by a male on the female

breast etc. at sexual intercourse for the purpose of exciting sexual passion as laid down in the erotic science of kokkōga muṉi.

*[அர்த்தசந்திர(ம்) + குறி.]*

*[Skt.ardha+candra>த.அர்த்தசந்திரன்+ குறி.]*

**அர்த்தசந்திரகபாடம்** *artta-šandira-kabāḍam,* பெ. (n.) நெஞ்சத்தில் பெரிய, சிறிய அரத்தக்குழாய்களில் அதன் வாய்ப் பகுதிகளைக் காக்க வேண்டி அவை ஒவ்வொன்றிற்கும் அமைந்துள்ள கதவு போன்ற மூன்று பிறை வடிவ தசை; the three semi-lunar cuspid valves which guard the entrances leading to the aorta and the pulmonary artery.

*[Skt. ardha+candra+kapāta>த. அர்த்த சந்திரகபாடம்.]*

**அர்த்தசந்திரப்பிரயோகம்** *artta-šandira-p-pirayōgam,* பெ.(n.) கழுத்திற் கைகொடுத்துத் தள்ளுகை; pushing one by the neck with the open hand put in the shape of a crescent.

*[Skt. ardha + candra + prayōgam>த. அர்த்தசந்திரப்பிரயோகம்.]*

**அர்த்தசந்திரபாணம்** *artta-candra-pāṇam,* பெ.(n.) பிறை வடிவான அம்பு; arrow with crescent - shaped head.

*[Skt. ardha+candra+pāṇa>த. அர்த்த சந்திரபாணம்.]*



**அர்த்தசந்திரம்** *artta-šandiram,* பெ.(n.) 1. படைவகுப்புவகையுளொன்று; army arrayed in the form of a crescent. *"அர்த்தசந்திரப்போர் வியூகம் வகுத்தான்" (பாரத. மூன்றாம் போர். 2).* 2. திருவாசியின் மேல் வளைவு (தெ.க.தொ.ii.பக்.143); crescent arch on an idol.

*[Skt. ardha+candra>த. அர்த்தசந்திரம்.]*

**அர்த்தசந்திரன்**[1] *artta-šandiraṉ,* பெ.(n.) 1. எட்டாம் நாள் நிலவு; half-moon crescent. 2. உகிர் (நக)க்குறி (கொக்கோ. 5, 58 உரை); semi-circular impression of the finger nail. 3. ஒருவகை நெற்றிக் குறி; figure of crescent painted on the forehead.

*[Skt. ardha+candra>த. அர்த்தசந்திரன்.]*

**அர்த்தசந்திரன்**[2] *artta-šandiraṉ,* பெ.(n.) 1. பதினாறு (சோடச) கலையு ளொன்று (செந். IX, 248); a mystic centre in the body, one of *šōḍaša-kalai.* 2. திருவாசியின் ஒரு பகுதி (தெ.க.தொ.ii, 203); a part of the *tiruvāši.*

*[Skt. ardha+candra>த. அர்த்தசந்திரன்.]*

**அர்த்தசம்வாதம்** *arttašamvādam,* பெ.(n.) இறைக்கொள்கையின் உள்ளது இல்லது ஆகிய இரு கொள்கை, (அஸ்திநாஸ்திவாதம்) (சி.சி.அளவை, 1, சிவாக்.); (phil.) doctrine which affirms both existence and non-existence.

*[Skt.artha+samvada>த.அர்த்தசம் வாதம்.]*

**அர்த்தசாத்திரம்** *artta-šāttiram,* பெ.(n.) கௌடில்யர் எழுதிய அரசியல் நூல்; political economy, political science, a book written by Gowdilyar.

**த.வ. பொருள்நூல்.**

*[Skt. ardha+šāstra>த. அர்த்தசாத்திரம்.]*

**அர்த்தசாமபூசை** *artta-šāma-p-pūšai,* பெ. (n.) கோயிலின் நள்ளிரவுப் பூசை; midnight service in the temple.

*[அர்த்த + சாமம் + பூசை.]*

*[**Skt.** ardha>த. அர்த்தம்.]*

யாமம்→ சாமம் >**Skt.**jāma. பூசு→ பூசை >**Skt.** pūja.

**அர்த்தசாமம்** *artta-šāmam,* பெ.(n.) நள்ளிரவு, நடு இரவு; midnight.

*[அர்த்த(ம்) + சாமம்.]*

*[**Skt.** ardha > த. அர்த்த(ம்).]*

யாமம்→ சாமம்.

**அர்த்ததர்சி** *arttatarši,* பெ.(n.) புத்தருள் ஒருவர் (மணிமே. பக். 369); a Buddha.

**அர்த்ததாயம்** *arttadāyam,* பெ.(n.) பிறங்கடை (வாரிசு) உரிமையில் பெறும் பங்குப் பொருள்; property obtained as a share in inheritance. *"இவ்வூராருடன் ஒரு அர்த்ததாய ப்ராப்தி உடையேனல்லேன்" (திவ். பெரியாழ். 3: 1,8, வியா. பக். 521).*

*[அர்த்த(ம்)+தாயம்.]*

*[**Skt.** ardha>த. அர்த்தம்.]*

த. ஆயம்> **Skt.** தாயம்.

**அர்த்தநாசம்** *artta-nāšam,* பெ.(n.) பொருட்கேடு; loss of wealth.

*[**Skt.** artha> த. அர்த்த(ம்).]*

த. நசி > **Skt.** nāsa.

**அர்த்தநாரி** *artta-nāri,* பெ.(n.) மணிக்குற்ற வகை; flaw in a ruby.

*[**Skt.** ardha+nāri> த. அர்த்தநாரி.]*

**அர்த்தநாரீசன்** *artta-nārīšan,* பெ.(n.) **அர்த்தநாரீசுவரன்** பார்க்க; see *artta-nārīšuvaran.*

**அர்த்தநாரீசுவரன்** *artta-nārīšuvaran,* பெ.(n.) பாதியுடம்பு பெண் வடிவான சிவன் (மச்சபு. புராண. 22); form of Šivan, half female and half male.

த.வ. மாதொருபாகன்.

*[**Skt.**ardha + nārī + īšvara>த.அர்த்த நாரீசுவரன்.]*

**அர்த்தப்படுத்து-தல்** *arttappaḍuttu-,* 5 செ.குன்றாவி.(v.t.) பொருள் கொள்ளுதல்; interpret (in one's own way). *அவர் உன்னோடு பேசாததற்கு உன் மேல் சினம் என்று அர்த்தப்படுத்தத் தேவை இல்லை. (உ.வ.).*

*[அர்த்தம் + படுத்து-.]*

*[**Skt.** artha> த. அர்த்தம்.]*

**அர்த்தப்பிசகு** *artta-p-pišagu,* பெ.(n.) பொருட்பிழை; misconstruction, wrong sense.

*[அர்த்தம் + பிசகு.]*

*[**Skt.** artha> த. அர்த்த(ம்).]*

**அர்த்தப்புரட்டு** *artta-p-puraṭṭu,* பெ.(n.) **அர்த்தப்பிசகு** (பாண்டி.) பார்க்க; see *artta-p-pišagu.*

*[அர்த்த(ம்)+புரட்டு.]*

*[**Skt.** artha>த. அர்த்தம்.]*

**அர்த்தபக்குவம்** *artta-pakkuvam,* பெ.(n.) தேவையான பக்குவத்தில் பாதி (பாதி பழுத்தது); half-riped condition.

*[அர்த்த(ம்)+பக்குவம்.]*

*[**Skt.** artha>த. அர்த்தம்.]*

**அர்த்தபஞ்சகம்** *artta-pañjagam,* பெ.(n.) மாலியத்தின் ஐம்பெரும் உண்மைகள்; five truths of *Vaisṇavism.*

*[**Skt.**artha + pañcaka>த.அர்த்தபஞ்சகம்.]*

**ஐம்பெரும் உண்மைகளாவன :**

1. ஸ்வஸ்வரூபம், 2. பரஸ்வரூபம், 3. புருஷார்த்த ஸ்வரூபம், 4. உபாயஸ்வரூபம், 5. விரோதிஸ்வரூபம்.

**அர்த்தபரியங்கம்** *artta-pariyaṅgam,* பெ.(n.) ஓர் ஒக நிலை; a particular reclaining posture practised in meditation or yoga.

*[**Skt.**ardha+pariyaṅka>த. அர்த்தபரியங்கம்.]*

**அர்த்தபாதம்** *artta-pādam,* பெ.(n.) ஒரு வகைச் செடி; a plant, *Phyllanthus niruri.*

**அர்த்தபாராவதம்** *artta-pārāvadam,* பெ.(n.) 1. ஒரு வகைப் புறா; a kind of pigeon. 2. கவுதாரி; a partridge, *Tetrax perdix.*

**அர்த்தபிரசாதனி** *artta-pirašādani,* பெ.(n.) இமயத்தில் இருக்கும் ஒருவகை செடி; an unidentified Himalayam plant used in eye-disease.

**அர்த்தபிருட்டகம்** *artta-piruttagam,* பெ.(n.) (நாட்டிய.) கூத்தின் உறுப்பசைவு களுளொன்று (சுத்தா. சிலப். பக். 81); a mode of gesticulation.

*[**Skt.** ardha+prsthaka>த.அர்த்த பிருட்டகம்.]*

**அர்த்தபுட்டி** *artta-putti,* பெ.(n.) பொருட் பொலிவு; significative fullness, pregnant signification in speech, writting or action.

**த.வ. பொருட்பொலிவு.**

*[**Skt.** artha+pusti > த. அர்த்தபுட்டி]*

**அர்த்தபுட்பி** *artta-putpi,* பெ.(n.) சிறு நாகப்பூ மரம்; iron-wood of Ceylon-mesua ferrea.

**அர்த்தபேதம்** *artta-pēdam,* பெ.(n.) பொருள் வேறுபாடு; difference in meaning.

*[**Skt.** artha+bhēda>த. அர்த்தபேதம்.]*

**அர்த்தபேதரோகம்** *artta-pēda-rōgam,* பெ.(n.) 1. ஒற்றைத் தலைவலி; neuralgia or headache on one-side of the head, *Hemicrania.* 2. தலையின் ஒரு பக்கத்தில் குத்தல் வலி கண்டு தொல்லை செய்து 15 நாள் அல்லது மாதத்திற்கொரு முறை அதிகமாகி அதன்பின்தானே குணமடைவ தாயுமிருக்கும் நோய்; a neuraligic disease of the head in which a violent and excruciating pain of a pierecing nature is felt on one half of the cranium.

**அர்த்தம்**[1] *arttam,* பெ.(n.) 1. சொற்பொருள்; meaning. 2. பொருட்டு என்னும் பொருளில் வரும் வட சொல்; last member of a Skt. compound which conveys the sense of the dat., as in ஜீவனார்த்தம்.

*[**Skt.** artha>த. அர்த்தம்.]*

**அர்த்தம்**[2] *arttam,* பெ.(n.) பாதி; half.

**த.வ. பகுதி, அரை.**

*[**Skt.** ardha>த. அர்த்தம்.]*

**அர்த்தம்பண்ணு-தல்** *arttam-pannu-,* 5 செ.குன்றாவி.(v.t.) பொருள் கொள்ளுதல்; to understand, interpret.

*[அர்த்தம் + பண்ணு-.]*

*[**Skt.** artha > த. அர்த்தம்.]*

**அர்த்தமண்டபம்** *artta-mandabam,* பெ.(n.) கருவறையைச் சார்ந்த மண்டபம்; hall immediately in front of the innermost shrine in a temple.

*[அர்த்தம் + மண்டபம்.]*

*[**Skt.** ardha > த. அர்த்தம்.]*

**அர்த்தமாகதி** *arttamāgati,* பெ.(n.) பிராகிருத மொழி வகை (சி.சி.பாயி. 2, மறைஞா.); a Prakrtic dialect.

*[**Skt.** ardha-māgadhi>த. அர்த்தமாகதி.]*

**அர்த்தமாகு-தல்** *arttamāgu-,* 5 செ. குன்றாவி.(v.t.) 1. பொருள்படுதல்; to make sense, mean. *'அவர் விடை சொல்லவில்லை என்பதால் அவர் ஒப்புக் கொண்டார் என்று அர்த்த மாகாது'.* 2. புரிதல்; to understand. *'நீங்கள் சொன்னது எனக்கு அர்த்தமாகவில்லை'.*

*[அர்த்தம் + ஆகு-.]*

*[**Skt.** artha > த. அர்த்தம்.]*

த. ஆகு-, (து.வி.)

**அர்த்தமானியம்** *artta-māniyam,* பெ.(n.) பாதிப்பகுதி இறையிலியாக விடப்பட்ட நிலம்; land which pays half assessment.

*[அர்த்த(ம்) + மானியம்.]*

*[**Skt.** ardha > த. அர்த்த(ம்).]*

**அர்த்தமூலம்** *artta-mūlam,* பெ.(n.) குருகு (மூலம்) நாண்மீனின் முதலிரண்டு நாழிகை (சோதிட. சிந். 56); the first two *ghatikās*or forty-eight minutes in *mūla-naksatra.*

*[அர்த்த(ம்) + மூலம்.]*

*[**Skt.** ardha > த. அர்த்த(ம்).]*

**அர்த்தரதம்** *artta-radam,* பெ.(n.) தேர் நான்கனுள் ஒன்று (ஸ்ரீபத்ம. தென்றல்விடு. 67, உரை); a class of chariots, one of four iradam.

*[Skt. ardha-ratha > த. அர்த்தரதம்.]*

**அர்த்தரதன்** *artta-radaṉ,* பெ.(n.) போர் புரிந்து பின்னடையுந் தேர்வீரன் (பாரத. அணிவ. 3); warrior who fights from his car with another and runs away defeated, one of four *tēr-vīraṉ.*

*[Skt. ardha+ratha> த. அர்த்தரதன்.]*

**அர்த்தராத்திரி** *artta-rāttiri,* பெ.(n.) நள்ளிரவு; midnight.

*[Skt. ardha+raṭri>த.அர்த்தராத்திரி.]*

**அர்த்தராத்திரிசுரம்** *artta-rāttiri-śuram,* பெ.(n.) நடு இரவிலுண்டாகுங் காய்ச்சல்; an attack of fever during midnight hours.

*[அர்த்த+ராத்திரி+சுரம்.]*

*[Skt. sardha+ratri> த. அர்த்தராத்திரி.]*

சுள்>சுர>சுரம்.

**அர்த்தவாதம்** *artta-vādam,* பெ.(n.) நெறிவிலக்கங்களை வற்புறுத்தும் தொடர் (சிவசம.35); commendatory or condemnatory texts emphasizing the desirableness of what is enjoined or the undesirableness of what is prohibited. 2. புகழ்ச்சி; praise, eulogium. *'இவ்விசயத்தில் அர்த்தவாத மில்லை' (ஈடு. 3.9:2).*

*[Skt. artha+vāda>த.அர்த்தவாதம்.]*

**அர்த்தவிருத்தை** *artta-viruttai,* பெ.(n.) நடு அகவை; middle aged.

*[Skt. artha+vrdhā>த.அர்த்தவிருத்தை.]*

**அர்த்தவேதம்** *artta-vēdam,* பெ.(n.) பொருணூல் (வேதா. சூ. 3, உரை); political science, political economy, one of four *upa-vēdam.*

*[Skt. artha + vēda>த. அர்த்தவேதம்.]*

**அர்த்தாங்கத்திமிர்** *arttāṅga-t-timir,* பெ.(n.) 1. உடம்பினொரு பக்கத்தில் உணர்ச்சியின்மை; absence of sensibility to pain on one side of the body, *Hemi-analgesia.* 2. உடம்பின் ஏதாவதொரு பாதியிலுணர்ச்சியின்மை; loss of sensation in either half of the body, *Hemi-anesthesia.*

*[அர்த்தம்+ஆங்கம்+திமிர்.]*

*[Skt. artha+aṅga> த. அர்த்தாங்கம்.]*

**அர்த்தாங்கம்** *arttāṅgam,* பெ. (n.) 1. **அர்த்தாங்கவாதம்** பார்க்க; see *arttāṅga-vādam.* 2. பாதி உடம்பு; one half of the body.

*[Skt. artha+aṅga> த. அர்த்தாங்கம்.]*

**அர்த்தாங்கவலி** *arttāṅga-vali,* பெ.(n.) 1. உடம்பினொருபக்கத்து வலி; pain on one side of the body. 2. ஊதையினாலுடம்பிலொரு பக்கமுண்டாகும் குத்தல் வலி; a neuralgic attack on one side of the body. 3. உடம்பினொரு பகுதியிற் காணுங் கால்கை வலிப்பு; epilepsy affecting one half of the body.

*[அர்த்தம்+ஆங்கம்+வலி.]*

*[Skt. artha+aṅga> த. அர்த்தாங்க.]*

**அர்த்தாங்கவாதம்** *arttāṅga-vādam,* பெ.(n.) குருதியோட்டம் பாதி உடம்பிற் குறைவதனால் அப்பக்கத்துக் கை, கால் முதலிய உறுப்புகள் உதவாமற் போகும்படிச் செய்யும் வலிப்பு நோய்; paralysis of one side of the body due to insufficient circulation or supply of blood.

**த.வ. குருதிக்குறைவலிப்பு.**

*[Skt.ardha+aṅga+vadham>த.அர்த்தாங்கவாதம்.]*

**அர்த்தாங்கவிசிவு** *arttāṅga-v-iśivu,* பெ.(n.) பக்க ஊதை (வாதம்) (தைலவ. தைல. 128); paralysis of half the body.

*[அர்த்தாங்கம் + இசிவு.]*

*[Skt. artha+aṅga> த. அர்த்தாங்கம்.]*

**அர்த்தாங்கி** *arttāṅgi,* பெ.(n.) மனைவி; wife. *"கம்பணவுடையார் அர்த்தாங்கி இராமாதேவியார்" (தெ.க.தொ. 4 : 99).*

[Skt. artha+aṅga> த. அர்த்தாங்கி.]

**அர்த்தாங்கீகாரம்**[1] *arttāṅgikāram,* பெ.(n.) பாதியுடன்பாடு (ஈடு. 4. 1: 1, ஜீய); half consent.

[Skt. ardha+ aṅgikāra > த. அர்த்தாங்கீ காரம்.]

**அர்த்தாங்கீகாரம்**[2] *arttāṅgikāram,* பெ.(n.) இரு திறத்தாருள் ஒரு திறத்தார் மட்டும் உடன்படுகை (ஈடு. 4. 1: 1, ஜீய); consent of one of the two parties to an agreement.

[அர்த்தாங்கீகாரம்[1] >அர்த்தாங்கீகாரம்[2].]

**அர்த்தாந்தரநியாசம்** *arttāndara-niyāšam,* பெ.(n.) வேற்றுப் பொருள் வைப்பணி (அணியி. 61); figure of speech whereby a particular case is maintained by reference to a general truth, or a general tuth by reference to a particular case.

[Skt. arthāntara+nyāsa> த. அர்த்தாந்தர நியாசம்.]

**அர்த்தாந்தரம்**[1] *arttāndaram,* பெ.(n.) தோல்வித்தானத்தொன்று (செந். IV, 13); a defect in argumentation.

[Skt. artha+antara > த. அர்த்தாந்தரம்.]

**அர்த்தாந்தரம்**[2] *arttāndaram,* பெ.(n.) வேறுபொருள்; another meaning.

**அர்த்தாப்பு** *arttāppu,* பெ.(n.) உருளைக்கிழங்கு (பரதவ.); potato.

**அர்த்தாபத்தி** *arttāpatti,* பெ.(n.) ஒன்றைக் கூறி மற்றொன்றைக் குறிப்பிடாமலே விளங்கவைக்கும் ஒருமுறை; (Log.) assumption of something to account for another thing which is otherwise unaccountable.

[Skt. artha+ā-patti> த. அர்த்தாபத்தி.]

**அர்த்தாலங்காரம்** *arttālañgāram,* பெ.(n.) பொருளணி; figure of speech relating to the sense opp. to சப்தாலங்காரம்.

[Skt.artha+alaṅkara>த. அர்த்தாலங்காரம்.]

**அர்த்தாவபேதகம்** *arttāva-bēdagam,* பெ.(n.) தலையிலொரு பக்கங் காணும் வலி; pain on one side of the head-Hemicramia.

த.வ. ஒற்றைத் தலைவலி.

**அர்த்தி**[1]**-த்தல்** *artti-,* 4 செ.குன்றாவி.(v.t.) இரத்தல்; to beg.

[Skt.arth > த. அர்த்தி-,]

**அர்த்தி**[2]**-த்தல்** *artti-,* 4 செ.குன்றாவி.(v.t.) (கணிதம்) இரண்டு சரிபாகங்களாகப் பிரித்தல்; (Math.) to bisect, divide into two equal halves.

[Skt. ardha-, > த. அர்த்தி-.]

**அர்த்தி**[3] *artti,* பெ.(n.) இரவலன் (வின்.); begger.

[Skt. arthin > த. அர்த்தி]

**அர்த்திதம்** *arttidam,* பெ.(n.) 1. முகம் அல்லது வாயை ஒரு பக்கமாய்த் திருப்புகை; turning the face or the mouth to one side as in facial paralysis, spasm of the jaw-bones, Trismus, Hemiplegia etc. 2. முகம், கழுத்து இவற்றின் ஒரு பக்கத்திற் காணும் பக்கவலிப்பு; paralysis of the muscles on one side of the face and neck.

**அர்த்திதவாதம்** *arttida-vādam,* பெ.(n.) வளியானது தலை, முகம் ஆகிய விடங்களில் பரவி, ஒரு பாதியைத் தாக்கி, முகத்தை ஒரு பக்கம் திருப்பி, நோவு, குத்தல் முதலிய குணங்களைக் காட்டும் நோய்; a nervous disease due to the enraged condition of the local vayu which spreads and finds lodgment in the regions of the head and the face. It distorts the face on one side. Motor paralysis of one side of the face-Facial hemiplegia.

[அர்த்திதம்+வாதம்.]

**அர்த்திராபிரமேகம்** *arttirā-piramēgam,* பெ.(n.) பித்தவெட்டை; a kind of veneral disease.

**அர்த்தோதயம்** *arttōdayam,* பெ.(n.) சுறவ (தை) மாதத்துக் காருவாவும் (அமாவாசையும்) ஞாயிற்றுக் கிழமையும் திருவோணமும், வியதீபாதமும் கூடிய வைகறை நற்பொழுது; sacred conjunction of the sun and the moon, at sunrise on a sunday with *śravaṇa naksatra* and *viyatipāta yōga,* in the month of tai. *'மாசி மகத்திலாத் தோதயத்தில்' (அருணா. பு. திருமலைவலம். 24).*

*[Skt. ardha+udaya > த. அர்த்தோதயம்.]*

**அர்ப்பணம்** *arppaṇam,* பெ.(n.) உரியதாகக் கொடுக்கை; dedication. *'ஈசுரார்ப்பணம்' (ஞானவா. அருச்சு. 16).*

**த.வ. படையல், ஈவு, காணிக்கை.**

*[Skt. arpana > த. அர்ப்பணம்.]*

**அர்ப்பணி-த்தல்** *arppaṇi-,* 4 செ.குன்றாவி. (v.t.) (அர்ப்பணம்) உரித்தாக்கம் செய்தல்; to dedicate (totally to a noble cause) sacrifice, dedicate (a new industry, etc.) to the nation.

**த.வ. காணிக்கையாக்கல், படைத்தல்.**

*[Skt. arpana > த. அர்ப்பணி-,]*

**அர்ப்பம்** *arppam,* பெ.(n.) 1. பனி; dew. 2. பூண்டு; plant.

**அர்ப்பி-த்தல்** *arppi-,* 4 செ.குன்றாவி.(v.t.) உரியதாக்குதல்; to dedicate.

**த.வ. படையல்.**

*[Skt. arp > த. அர்ப்பி-,]*

**அர்ப்பிதம்** *arppidam,* பெ.(n.) உரியதாக்கப்பட்டது; that which is offered. *"அத்தகை மேலோற்கே செவ்வயி னர்ப்பிதமாக" (பிரபோத. 18, 25).*

**த.வ. படைக்கப்பெற்றது.**

*[Skt. arpita> த. அர்ப்பிதம்.]*

**அர்ப்புதம்**[1] *arppudam,* பெ.(n.) ஆயிரங் கோடி (வின்.); ten thousand millions.

*[Skt. arbuda > த. அர்ப்புதம்.]*

**அர்ப்புதம்**[2] *arppudam,* பெ.(n.) 1. பாம்பு; snake. 2. கோரைக்கிழங்கு; coray root-cyperus rotundus. 3. இமையைப் பற்றிய ஒரு வகைக் கண்ணோய்; a disease of the eye lid-stye. 4. மார்பெலும்பின் மென்மையான பாகம்; the cartilage of a rib. 5. பாம்பைப் போன்ற பூதம்; a domen like a serpent. 6. இரண்டு மாதக் காலத்துப் பிண்டத்தைப் போன்றது; a lond round mass of fleshy growth of the size of a two months foetus. 7. வீக்கம்; swelling. 8. தசை வளர்த்தி; polypus. 9. புரைக்கழலை; goitre.

*[Skt. arbuda > த. அர்ப்புதம்.]*

**அர்ப்புதவர்த்துமரோகம்** *arppuda-varttuma-rōgam,* பெ.(n.) கண்ணிமையி னோரங்களில் மொத்தையாக தசை வளர்ந்து சிவந்து வலியையுண்டாக்கு மொரு வகைக் கண்ணோய்; an eye-disease marked by a morbid growth of flesh and inflammation on the margin of the eyelids-zeissian stye.

*[Skt. arbuda+varttumarōga> த.அர்ப்புத வர்த்துமரோகம்.]*

**அர்ப்புதாகாரம்** *arppudā-gāram,* பெ.(n.) 1. கட்டியைப் போன்றது; shaped like a tumar. 2. நருவிலி; common sebestan plant-cordia myta.

**அர்ப்புதின்** *arppudiṉ,* பெ.(n.) 1. கட்டி; tumour. 2. வீக்கம்; swelling.

**அர்ப்புதோட்டரோகம்** *arppudōṭṭa-rōgam,* பெ.(n.) உதடுகளிற் சிறிய பேரீச்சங் காயைப் போல் வீக்கத்தையுண்டாக்கு மொரு நோய்; a disease of the lips characterised by a growth of flesh and swelling about the size of a small date fruit-Labio mycosis.

**அர்மம்** *armam,* பெ.(n.) தசை வளர்ச்சியை யுண்டாக்கும் ஒரு வகைக் கண்ணோய்; an eye disease marked by the manifest vesetation or polypus on the affected eye.

**அரகசா** *aragaśā,* பெ.(n.) நறுமணக் குழம்பு வகை (இ.வ.); a spiced unguent.

*[H. argajā > த. அரகசா.]*

**அரகத்** *aragat,* பெ.(n.) மனவருத்தம் விளைக்கும் பேச்சு (தாசீல்தார்நா. 15); painful talk.

*[Ar. harkat > த. அரகத்.]*

**அரசம்**[1] *arašam,* பெ.(n.) சுவையின்மை; want of taste. *'அரசமாகப் பேசுகிறான்'.*

*[Skt. a-raša > த. அரசம்.]*

**அரசம்**[2] *arašam,* பெ.(n.) மூலநோய்; piles. *"அரசம்மொலி குன்மமும்" (தைலவ. தைல. 84).*

*[Skt. aršas > த. அரசம்.]*

**அரசிகம்** *arašigam,* பெ.(n.) 1. இரசமின்மை; saplessness. 2. சுவையில்லாமை; tastelessness.

*[Skt. a-rasika > த. அரசிகம்.]*

**அரசிகன்** *arašigaṉ,* பெ.(n.) சுவையறியாதவன்; dull man, one who cannot feel or appreciate.

*[Skt. a-rasika > த. அரசிகன்.]*

**அரசோனம்** *arašōṉam,* பெ.(n.) வெள்ளைப்பூண்டு (தைலவ. தைல. 9); garlic.

*[Skt. rašōna > த. அரசோனம்.]*

**அரணியகசம்** *araṇiya-gašam,* பெ.(n.) காட்டு யானை; wild-elephant.

*[அரணியம்+கசம்.]*

*[Skt. araṇya > த. அரணியம்.]*

*த. கயம்> Skt. gaja> த. கசம்.*

*அரணம் > Skt. araṇya> த. அரணியம்.*

**அரணியகதலி** *araṇiyagadali,* பெ.(n.) காட்டுவாழை (சித்.அக.); wild plantain.

*[அரணியம்+கதலி.]*

*[Skt. araṇya > த. அரணியம்.]*

*[த. கதலி > Skt. katali.]*

கதலி = சிறு வாழைப்பழம். கதலி → கசலி = மீன் குஞ்சு. இச்சொல் குதலை என்பதனொடு தொடர்புடையது. மிக இனிக்கும் சிறு வாழைப்பழவகை தேங்கதலி எனப்பெறும். (வ.வ.107).

**அரணியகம்** *araṇiyagam,* பெ.(n.) மலை வேம்பு; mountain neem-melia sempevirens.

*[அரணிய+அகம்.]*

*[Skt. araṇya> த. அரணிய.]*

**அரணியகற்பாசி** *araṇiya-kaṟpāši,* பெ.(n.) காட்டுப் பருத்திச் செடி; wild cotton shrub-coctilospermum Gossypium.

*[அரணிய+கல்+பாசி.]*

*[Skt. araṇya> த. அரணிய(ம்).]*

**அரணியகாக்கை** *araṇiya-kākkai,* பெ.(n.) காட்டுக் காக்கை; wild crow.

*[அரணிய(ம்)+காக்கை.]*

*[Skt. araṇya> த. அரணிய(ம்).]*

**அரணியகுதம்பம்** *araṇiya-kudambam,* பெ.(n.) காட்டுச் செந்திருக்க மரம்; a plant; false saffron; flame tree-carthamus tinctorius.

*[அரணிய(ம்)+குதம்பம்.]*

*[Skt. araṇya> த. அரணிய(ம்).]*

**அரணியகுலத்திகை** *araṇiya-kulattigai,* பெ.(n.) ஒரு செடிவகை; a plant-Glycine labialis.

*[அரணிய(ம்)+குலத்திகை.]*

*[Skt. araṇya> த. அரணிய(ம்).]*

**அரணியகேது** *araṇiya-kēdu,* பெ.(n.) ஒரு செடி வகை; a plant (unidentified).

*[Skt. araṇya> த. அரணிய(ம்).]*

**அரணியகோலி** *araṇiya-kōli,* பெ.(n.) ஒரு கறி வகை; the name of a vegetable.

*[Skt. araṇya>த. அரணிய(ம்).]*

**அரணியசடகம்** *araṇiya-šaḍagam,* பெ.(n.) காட்டுக் கவுதாரி; wild partridge.

*[அரணிய(ம்)+சடகம்.]*

*[Skt. araṇya>த. அரணிய(ம்).]*

*[சகடம்>சடகம் = வட்டமிட்டுப் பறக்கும் பறவை.]*



**அரணியசணம்** *arani-yašanam,* பெ.(n.) காட்டுக் சீரகம்; wild cumin seed - vernonia anthelmintica.

*[Skt. aranya>த. அரணிய(ம்).]*

**அரணியசாலி** *araniya-šāli,* பெ.(n.) 1. செவ்வகில்; a red species of agil which is a valuable fragrant wood. 2. காட்டரிசி; wild rice-oryza mutica.

**அரணியசாறணை** *araniyašāranai,* பெ.(n.) காட்டிஞ்சி (மலை.); wild ginger.

**அரணியசீரம்** *araniya-šīram,* பெ.(n.) காட்டுச் சீரகம்; wild cumin seed.

*[அரணிய+சீரம்.]*

*[Skt. aranya>த. அரணிய(ம்).]*

**அரணியசோகி** *araniya-šōgi,* பெ.(n.) செம்முள்ளிக் கீரை; common naid dye-*Barleria prionitis.*

**அரணியஞ்சபத்திகம்** *araniyañja-pattigam,* பெ.(n.) பெரிய முள்ளங்கி; a medicinal plant said to act on mercury.

**அரணியதானியம்** *araniya-dāniyam,* பெ.(n.) காட்டரிசி; wild rice, *Oryza mutica.*

*[Skt.aranya + dhānya>த.அரணிய தானியம்.]*

**அரணியதிலகம்** *araniya-dilagam,* பெ.(n.) காட்டெள்; wild sesamum containing no oil.

*[Skt.aranya+tilagam>த.அரணிய திலகம்.]*

**அரணியதுளசி** *araniya-dulaši,* பெ.(n.) காட்டுத் துளசி; wild basil-ocimum adsendons.

*[அரணிய(ம்)+துளசி.]*

*[Skt. aranya>த. அரணியம்.]*

**அரணியம்** *araniyam,* பெ.(n.) காடு; wilderness, jungle, forest.

*[த. அரணம்>Skt. aranya > த. அரணியம்.]*

**அரணியமாட்சிகம்** *araniya-mātcigam,* பெ.(n.) ஒரு வகை ஈ வகை; gad fly.

*[Skt. aranya+makshika >த. அரணிய மாட்சிகம்.]*

**அரணியமார்ச்சாரம்** *araniya-mārccāram,* பெ.(n.) காட்டுப்பூனை; a wild cat, *Felis chaus.*

*[Skt.aranya+mārjāra>த.அரணியமார்ச்சாரம்.]*



**அரணியமுட்கம்** *araniya-mutgam,* பெ.(n.) காட்டு அவரை; a kind of wild bean.

*[Skt. aranya + mudga>த.அரணிய முட்கம்.]*

**அரணியயசுவன்** *araniya-yašuvan,* பெ.(n.) 1. ஓநாய்; wolf. 2. நரி; jackal.

**அரணியராசன்** *araniya-rāšan,* பெ.(n.) அரிமா; lion.

*[Skt. aranya + rāja>த.அரணிய.]*

*[த.அரசன் > Skt. rāja> த. ராசன்.]*

**அரணியவாயசம்** *araniya-v-āyašam,* பெ.(n.) ஒரு பறவை, காட்டுக் காக்கை; raven.

**அரத்தனி** *arattani,* பெ.(n.) 1. முழங்கை; elbow. 2. முழங்கையினின்று சிறுவிரல் நுனி மட்டுமுள்ள முழம்; cubit, measured from the elbow to the tip of the little finger.

*[Skt. aratni > த. அரத்தனி.]*

**அரத்துவாக்கி** *arattu-vākki,* பெ.(n.) கருஞ்சீரகம்; black cumin seed-*Nigella sativa.*

**அரதம்** *aradam,* பெ.(n.) காதின்மை; earlessness, congenital absence of the ears-*Anotia.*

**அரதனம்** *aradanam,* பெ.(n.) 1. (இரத்தினம்) மணி; a precious stone. *"அரதனக் கலச வியன்கரம்" (தணிகைப்பு. கடவுள். 3).* 2. (மிருதபாடாணம்) ஒருவகை நஞ்சு (வின்.); a mineral poison.

*[**Skt.** ratna > த. அரதனம்.]*

**அரதனமாலை** *aradanamālai,* பெ.(n.) அணியிலக்கண வகைகளுளொன்று (அணியி. 74); figure of speech which consists in enumerating certain things in their regular order.

*[அரதன(ம்) + மாலை.]*

*[**Skt.** ratna>த.அரதனம்.]*

**அரதனாகரம்** *aradanāgaram,* பெ.(n.) தனுசுகோடிக்குக் கிழக்கிலுள்ள கடல் (அருணா. பு. திருக்கண். 14); the bay east of *Dhanuskōḍi.*

*[**Skt.** ratna+ā-kara > த. அரதனாகரம்.]*

**அரதி**[1] *aradi,* பெ.(n.) வேண்டாமை; absence of desire. *"அரதி கைவிஞ்சு மோகம்" (திருவாய். நூற். 62).*

*[**Skt.** a-rati > த. அரதி.]*

**அரதி**[2] *aradi,* பெ.(n.) துன்பம் (மேருமந். 1379); distress, misery.

*[**Skt.** a-rati > த. அரதி.]*

**அரப்பதுமம்** *ara-p-padumam,* பெ.(n.) 1. துளசி; holy or sacred basil-ocimum sanctum. 2. செந்தாமரை; red lotus-*Nelumbium speciosum.*

**அரபி** *arabi,* பெ.(n.) 1. அரபு நாடு; Arabic country. 2. ஒரு மொழி; Arabic language.

*[**U.** arab > த. அரபி.]*

**அரபிப்பிசின்** *arabi-p-piśin,* பெ.(n.) ஒரு வகைப் பிசின்; gum arabic - African gum.

*[அரபி + பிசின்.]*

*[**U.** arab> த. அரபி.]*

**அரபிபோளம்** *arabi-pōḷam,* பெ.(n.) ஒரு வகைப் போளம்; sccortine aloe - *Aloe socotrine.*

*[அரபி+போளம்.]*

*[**U.** arab> அரபி .]*

**அரபீசம்** *arabīšam,* பெ.(n.) இதளியம் (பாதரசம்); mercury.

**அரபு** *arabu,* பெ.(n.) அரேபிய நாடு; Arabic country.

*[**U.** arab> த.அரபு.]*

**அரபுத்தமிழ்** *arabuttamiḻ,* பெ.(n.) 1. அரபு சொற்களைத் தமிழில் எழுதிய குரான் (muham.); quoran written in Tamil script. 2. அரபுச் சொற்கள் கலந்து வழங்கும் தமிழ்; Tamil with a large admixture of Arabic words.

*[அரபு+தமிழ்.]*

*[**U.** arab> அரபு.]*

**அரம்பை** *arampai,* பெ.(n.) 1. வானுலக நடன மங்கையருளொருத்தி (திவ். பெரியாழ். 3, 6, 4); name of a courtesan in the world of the gods. 2. வாழை; plantain. *"அரம்பை நிரம்பிய தொல்வரை" (கம்பரா. வரைக். 59).*

*[**Skt.** rambhā> த. அரம்பை.]*

**அரம்பையர்** *arambaiyar,* பெ.(n.) தெய்வமகளிர்; celestial damsels. *"அரம்பையர்ச் சேர்குவ ரன்றே" (நைடத. நிலா. 13).*

*[**Skt.** rambhā > த. அரம்பையர்.]*

**அரமனாபம்** *aramanābam,* பெ.(n.) வாழை; plantain tree - *musa paradisiaca.*

**அரமியம்** *aramiyam,* பெ.(n.) 1. அரண்மனை (பிங்.); palace. 2. நிலாமுற்றம்; terrace of a house, open space above the first or other floor. *"அரமிய மேறித் தாங்காது வீழ்ந்து" (மணிமே. 12, 47).*

*[**Skt.** harmya > த. அரமியம்.]*

**அரமேகலா** *aramēgalā,* பெ.(n.) ஒரு வகை மருத்துவ அறிவியல்; an ayurvedic science.

**அரர்** *arar,* பெ.(n.) தூய நீரவ(தீர்த்தங்கர)ருள் ஒருவர் (திருக்கலம். காப்பு, உரை); Arhat, one of 24 Tirttaṅkarar, q.v.

*[**Skt.** ara > த. அரர்.]*

**அரரம்** *araram,* பெ.(n.) 1. கதவு; door. 2. இரும்பு; iron.

*[**Skt.** arara > த. அரரம்.]*

**அரரி** *arari*, பெ.(n.) கதவு (சூடா.); door.

*[Skt. arari > த. அரரி.]*

**அரவதண்டம்** *arava-daṇḍam*, பெ.(n.) கூற்றுவனின் தண்டனை; punishment by yama. *"அரவதண்டத்தி லுய்யலு மாமே" (திவ். பெரியாழ். 4, 5, 3).*

*[அரவ+தண்டம்.]*

*[Skt. rāva> த.அரவ.]*

**அரவிந்தப்பாவை** *aravinda-p-pāvai*, பெ.(n.) திருமகள் (திவ். பெரியாழ். 5, 2, 10); Laksmi, seated on or residing in the lotus.

*[அரவிந்தம் + பாவை.]*

*[Skt. aravinda> த. அரவிந்தம்.]*

**அரவிந்தம்** *aravindam*, பெ.(n.) 1. தாமரை (திவ். திருநெடுந். 21); lotus. 2. நாரை; crane. 3. செம்பு; copper. 4. இதளியம்; mercury.

*[Skt. aravinda > த. அரவிந்தம்.]*

**அரவிந்தராகம்** *aravinda-rāgam*, பெ.(n.) பதுமராகம்; a species of ruby, hyacinth. *"கோங்கமரவிந்த ராகம்" (கம்பரா. மார்ச. 96).*

*[Skt.aravinda+rāgam > த. அரவிந்தராகம்.]*

**அரவிந்தலோசனன்** *aravinda-lōcaṉaṉ*, பெ.(n.) திருமால் (திவ். திருவாய். 6, 7, 10); *Tirumāl*, having eyes like lotus.

**த.வ. தாமரைக்கண்ணன்.**

*[Skt.aravinda + lochan>த.அரவிந்த லோசனன்.]*

**அரவிந்தன்** *aravindaṉ*, பெ.(n.) பிரமன் (கல்வளை. 81); *Brahmā*, spring from the lotus.

**த.வ. தாமரையான்.**

*[Skt. arbinda > த. அரவிந்தன்.]*

**அரவிந்தை** *aravindai*, பெ.(n.) திருமகள்; Laksmi.

**த.வ. தாமரையாள்.**

*[Skt. aravindā > த. அரவிந்தை.]*

**அராகதத்துவம்** *arāga-tattuvam*, பெ.(n.) தூயதூவ மெய்ம்மங்களுள் (சுத்தாசுத்த தத்துவங்களுள்) ஒன்று (சி.போ.பா. 2,2, பக்.1155, புது.); (šaiva) that which excites disire in the soul, one of seven cuttacutta-tattuvam.

*[Skt. rāga+tatva>த.அராகதத்துவம்.]*

**அராசகம்**[1] *arāšagam*, பெ.(n.) தேயம் அரசியலற்றிருக்கை (கோயிலொ. 86); anarchy.

*[Skt. a-rājaka > த. அராசகம்.]*

**அராசகம்**[2] *arāšagam*, பெ.(n.) முறையற்ற அதிகாரப்போக்கு; anarcy.

*[Skt. a-rājaka > த. அராசகம்.]*

**அராசரிகம்** *arāšarigam*, பெ.(n.) அரசில்லாக் குழப்பம் (இ.வ.); anarchy.

*[Skt. a-rājarika > த. அராசரிகம்.]*

**அராந்தாணம்** *arāndāṇam*, பெ.(n.) சமணப் பள்ளி; jaina temple. *"தவலருஞ் சிறப்பி னராந்தாணத்துளோன்" (மணிமே. 3, 87).*

*[Skt. arahantāṇam > த. அராந்தாணம்.]*

**அராதி** *arādi*, பெ.(n.) எதிரி, பகைவன் (சிந்தா. நி. 283); enemy, foe.

*[Skt. arāti > த. அராதி.]*

**அராமி** *arāmi*, பெ.(n.) கொடியவன் (கொ.வ.); wicked, deceitful person.

*[U. harāmi > த. அராமி.]*

**அராலம்** *arālam*, பெ.(n.) பொது மகளிர்; a prostitute.

*[Skt. arāla > த. அராலம்.]*

**அராலை** *arālai*, பெ.(n.) விலைமகள் (சிந்தா. நி. 282); harlot, prostitute.

*[Skt. arālā > த. அராலை.]*

**அராவான்** *arāvāṉ*, பெ.(n.) அருச்சுனனுக்கு உலூபியிடம் பிறந்த மகன் (பாரத. அருச்சுனன்றீர். 9); name of the son of *Arjuna* and *Ulūpi*, who offered himself as a sacrifical victim on the eve of the Bhārata war.

*[Skt. irāvat > த. அராவான்.]*

**அராளகடகாமுகம்** *arāḷakaḍagā-mugam,* பெ.(n.) நாட்டியக் கைமுத்திரைகள் முப்பதனு ளொன்று (சிலப். 3, 13, பக். 81, கீழ்க்குறிப்பு); a hond-pose, one of 30 *nirruta-k-kui,* q.v.

*[அராளம் + கடக(ம்)+முகம்.]*

*[**Skt.** arāla> த. அராளம்.]*

**அரிக்கன்விளக்கு** *arikkaṉ-viḷakku,* பெ.(n.) காற்றுக்கு அணையாத விளக்கு வகை; hurricane lantern.

**த.வ.** காற்றெதிர் விளக்கு.

*[**E.** hurricane>த. அரிக்கன்.]*



**அரிக்காரன்** *arikkāraṉ,* பெ.(n.) 1. தூதன்; messenger, courier, emissary. 2. வெள்ளித்தடி பிடித்துக் கட்டியங் கூறுவோன்; mace-bearer one who carries a mace in royal functions, in front of the idol in temple service.

*[**U.** harkara > த. அரிக்காரன்.]*

**அரிகரகுமரன்** *arigara-kumaraṉ,* பெ.(n.) ஐயனார் (பிங்.); *Aiyanār*, the son of *Tirumāl* and *Šivaṉ.*

*[அரிகரன்+குமரன்.]*

*[**Skt.** Hari + Hara> த. அரிகரன்]*

**அரிகரபுத்திரன்** *arigara-puttiraṉ,* பெ.(n.) **அரிகரகுமரன்** (கூடா.) பார்க்க; see *arikara-kumaraṉ.*

*[**Skt.** Hari + Hara + puttra>த. அரிகர புத்திரன்.]*

**அரிகரன்** *arigaraṉ,* பெ.(n.) சிவனும் திருமாலும் கூடிய உருவம்; manifestation of God which combines, both the forms of *Tirumāl* and *Šivaṉ.*

*[**Skt.** Hari+Hara> த. அரிகரன்.]*

**அரிகல்** *arigal,* பெ.(n.) மேருமலை (சிந்தா. நி. 259); Mount Mēru.

**அரிகாந்தி** *arikāndi,* பெ.(n.) ஒரு வகைச் செடி; monkey wort, vishnu plant - *Evolvulus absinoides.*

**அரிகிட்டி** *arikiṭṭi,* பெ.(n.) காட்டுப் பன்றி; wild hog.

**அரிகேசா** *arikēšā,* பெ.(n.) இருவேலி; cuscus root - *Ardropogon muricatus.*

**அரிகேந்திரதாரி** *arikēndira-dāri,* பெ.(n.) மல்லிகை; jasmine.

**அரிச்சந்திரன்** *ariccandiraṉ,* பெ.(n.) பொய்யுரையாமையால் தன் நாட்டையும், மனைவியையும், மகனையும் இழந்ததோடு தன்னையும் இழக்கத் துணிந்து, மெய்மைக்காக எதை இழப்பதற்கும் அணியமாயிருந்த கதிரவக் குலத்தரசன்; king of the solar race who is said to have given up his country, his wife his son and himself as a martyr to truth a king upholding the truth till the end without minding any loss to him.

**த.வ. ஒன்னிலவன்.**

*[**Skt.** Haris-šandra > த. அரிச்சந்திரன்.]*

**அரிச்சனை** *ariccaṉai,* பெ.(n.) பூசை (சிந்தா. நி. 234); worship.

**த.வ. வழிபாடு.**

*[**Skt.** arcanā > த. அர்ச்சனை>அரிச்சனை]*

**அரிச்சிகன்** *ariccigaṉ,* பெ.(n.) நிலவு (சாதகசிங். 6); moon.

*[Skt. arcita > த. அரிச்சிகம்.]*

**அரிசட்வர்க்கம்** *ari-sat-varkkam,* பெ.(n.) மனத்தைக் கெடுக்கும் அறுபகை; the six emotions which disturb a man's mind.

*[Skt. ari+sad-varga> த. அர்சட்வர்க்கம்.]*

**அறுவகையாவன :** காமம், குரோதம், மோகம், உலோபம், மதம், மாற்சரியம்.

**அரிசணம்** *arisaṇam,* பெ.(n.) நல்லூழ் இருபத்தேழிலொன்று; (Astron.) a division of time, one of 27 yōgam.

*[Skt. harsaṇa > த. அரிசணம்.]*

**அரிசம்**[1] *arišam,* பெ.(n.) காருவா அதிகமும் (பிரதமை) ஒரி குறைவுமாகக் கூடியிருக்கும் நாள் (மச்சபு. புரூரவா. 27); calendar day comprising the major part of the new moon lunar day.

*[Skt. arša > த. அரிசம்.]*

**அரிசம்**[2] *arišam,* பெ.(n.) மகிழ்ச்சி (சி.சி.2,800, மறைஞா.); joy, pleasure happiness.

*[Skt. harsa > த. அரிசம்.]*

**அரிசமயதீபம்** *arišamaya-dībam,* பெ.(n.) மாலிய ஆழ்வார்களின் வரலாற்றைக் கூறும் நூல்; name of a history in verse of the *āḻvārs* and *ācāryas,* by *Kiḻai-caḍakōpa-tāšar.*

*[அரி+சமயம்+தீபம்.]*

*[Skt. Hari> த. அரி.]*

**அரிசரோகம்** *ariša-rōgam,* பெ.(n.) மூலநோய்; a polypoid growth of the veins in the rectum of persons suffering from impaired digestion-Hemorrhoid.

**அரிசவர்த்தமன்** *ariša-varttamaṉ,* பெ.(n.) கண்ணில் உண்டாகும் கட்டி; a tumour in the corner of the eye.

த.வ. கண்கட்டி.

**அரிசேவை** *ari-šēvai,* பெ.(n.) திருப்பதி (பயணம்) செலவு செய்வோர் நிகழ்த்தும் நடனம்; dance of the votaries of *Tirumāl* on their return from a pilgrimage to Tirupati.

*[Skt. Hari+cēvai > த. அரிசேவை]*

**அரிசோபகந்தரவிரணம்** *arišō-pagandara-viraṇam,* பெ.(n.) எருவாயில் புரையோடிய புண்; piles and fistula.

த.வ. மூலப்புள்.

**அரிசோரோகம்** *arišō-rōgam,* பெ.(n.) ஆண்குறியில் சிறு சிறு முளைகள் போலெழும்பிப் புண்ணாகி குருதி யொழுகுமொரு வகைப் புண்; a venereal sore giving rise to small vesicles on the penis with itching sensation. It is attended with discharge of blood from the affected parts.

த.வ. குறிபுண்ணோய்.

**அரிசோவர்த்தமரோகம்** *arišō-varttama-rōgam,* பெ.(n.) கண்ணிமைப் பாகங்களில் சதை வளர்ந்து, வெள்ளரி விதைகளைப் போன்ற சிரங்குகளுண்டாகிச் சிவந்து எரிச்சலையும் மினுமினுப்பையும் சிறிது வலியையுமுண்டாக்குமொரு வகைக் கண்ணோய்; a morbid growth of flesh rescuting in small rough papinac in the eye lids resembling cucumber seeds. It gives rise to inflammation, with some burning sensation and glossiness.

த.வ. கண்ணிமைநோய்.

**அரிட்டம்**[1] *ariṭṭam,* பெ.(n.) 1. தீங்கு; evil, misfortune, calamity. *"அவர்க்கெலா மரிட்டஞ் செய்ய" (விநாயகபு. 71, 186).* 2. கள் (பிங்.); intoxicating liquor, toddy. 3. காக்கை; crow. *"எங்குஞ் சங்கவரிட்ட விரக்கமே" (இரகு.திக்குவ 185).* 4. வேம்பு (அகநி); margosa. 5. வெள்ளுள்ளி (மலை); garlic.

*[Skt. a-risṭa > த. அரிட்டம்.]*

**அரிட்டம்**[2] *ariṭṭam,* பெ.(n.) முட்டை (பிங்.); egg.

**அரிட்டி-த்தல்** *ariṭṭi-,* 4 செ.குன்றாவி.(v.t.) கொல்லுதல் (சது.); to kill.

*[Skt. arista > த. அரிட்டி-,]*

**அரிட்டை** *arittai,* பெ.(n.) 1. தீங்கு; evil, calamity, misfortune. *"நந்துயரா மரிட்டை யோதும்" (அருட்பா.2 ஸ்ரீ சிவசண்முக.4).* 2. கடுகுரோகணி (தைலவ. தைல. 23); black hellebore.

**அரிடம்** *aridam,* பெ.(n.) 1. தீங்கு; evil, misfortune. *"அரிடமானதன் விதியினால்" (பாரத. நிரை. 44).* 2. கடுகுரோகிணி (மலை.); black hellebore. 3. வேம்பு (மலை.); margosa.

**அரித்திரம்** *arittiram,* பெ.(n.) மஞ்சள் (பிங்.); turmeric.

*[Skt. haridrā > த. அரித்திரம்.]*

**அரித்திராபம்** *arittirābam,* பெ.(n.) பொன்னிறம் (உரி.நி.); golden colour. 2. மஞ்சள்; turmeric.

*[Skt. haridrabha > த. அரித்திராபம்.]*

**அரித்திராமேகம்** *arittirā-mēgam,* பெ.(n.) பித்தவெட்டை (தைலவ. தைல. 58, உரை); yellow diabetes.

*[Skt. haridrā+mēham > த. அரித்திரா மேகம்.]*

**அரித்துவாரம்** *ari-t-tuvāram,* பெ.(n.) மாயாபுரி (பிங்.); Hardvar, the celebrated sacred bathing place in the course of the Ganges.

*[Skt. Haridvāra> த. அரித்துவாரம்.]*

**அரிதகி** *aridagi,* பெ.(n.) கடுக்காய் (திவா.); chebulic myrobalan.

*[Skt. haritaki > த. அரிதகி.]*

**அரிதம்[1]** *aridam,* பெ.(n.) திக்கு (பிங்.); point of the compass.

த.வ. திசை.

*[Skt. harit > த. அரிதம்.]*

**அரிதம்[2]** *aridam,* பெ.(n.) 1. பச்சை (பிங்.); greenness, verdure. 2. பசும் புற்றரை (பிங்.); meadow, pasture, land with green grass growing on it. 3. பொன்னிறம் (பிங்.); gold colour.

*[Skt. harita > த. அரிதம்.]*

**அரிதிருமருகன்** *ari-tiru-marugan,* பெ.(n.) (விநாயகர்) 1. பிள்ளையார்; Tirumal's sister's son Ganesan. 2. முருகன் (பிங்.); *Tirumāl's* sister's son, Murugan.

*[அரி+திருமகன்.]*

*[Skt. hari> த. அரி.]*

**அரிதினம்** *ari-dinam,* பெ.(n.) பதினோரமை (ஏகாதசி); the 11th day in a lunar fortnight, sacred to *Tirumāl.* *"ஏதமறுந் துவாதசியி னிலங்கு மரிதினத்தும்" (வேதாரணி. அந்தர்க். 1).*

*[அரி+தினம்.]*

*[Skt. hari> த. அரி.]*

**அரிந்தமன்** *arin-daman,* பெ.(n.) 1. பகைவரை யடக்குவோன் (கம்பரா. மராமர. 12); subduer of foes. 2. திருமால் (பிங்.); Tirumāl.

த.வ. பகையடக்கி.

*[Skt. arin-dama> த. அரிந்தமன்.]*

**அரிப்பிரியை** *ari-p-piriyai,* பெ.(n.) திருமகள் (பிங்.); Tirumagal.

*[Skt. hari+priya>த.அரிப்பிரியை.]*

**அரிமதா** *arimadā,* பெ.(n.) வெள்வேல் (மலை.); panicled babul.

*[Skt. ari-mēda> த. அரிமதா.]*

**அரியமன்** *ariyaman,* பெ.(n.) கதிரவக்கடவுள் (துவாதசாதித்தருள் ஒருவர்); a sun-god, one of the *duvātacātittar.*

*[Skt. aryaman > த. அரியமன்.]*

**அரியாசனம்** *ari-y-āšanam,* பெ.(n.) அரியணை; lion-seat, throne. *"அரியாசனத்தில்...... வைத்த தாய்" (தனிப்பா. 1, 2, 1).*

*[Skt. hari+ā-ṣana > த. அரியாசனம்.]*

**அரியூர்தி** *ari-y-ūrdi,* பெ.(n.) (கருடன்) கலுழன் (பிங்.); Garuda, as the vehicle of *Tirumāl.*

*[அரி+ஊர்தி.]*

*[Skt. hari> த. அரி.]*

**அரிவருடம்** *ari-varuḍam,* பெ.(n.) ஒன்பாண் ஆண்டிலொன்று; a division of the earth, one of *nava-varuḍam.* *"அம்புவியினி சதமுத லேமங்காறுமரிவருடம்" (கந்தபு. அண்டகோ. 37).*

*[அரி+வருடம்.]*

*[Skt. hari> த. அரி.]*

**அரீடம்** *aridam,* பெ.(n.) கடுகுரோகிணி (மலை.); black hellebore.

*[**Skt.** arista > த. அரீடம்.]*

**அருக்கன்** *arukkan,* பெ.(n.) கதிரவன்; sun. *"அருக்க னணிநிறமுங் கண்டேன்" (திவ். இயற். 3. 1).*

*[**Skt.** arka > த. அருக்கன்.]*

**அருக்கன்வீதி** *arukkan-vidi,* பெ.(n.) சூரியன் செல்லும் வீதி; the ecliptic.

*[அருக்கன்+வீதி.]*

*[**Skt.** arka> த. அருக்கன்.]*

**அருக்கன்றிசை** *arukkanrišai,* பெ.(n.) கிழக்கு (பிங்.); east.

*[அருக்கன்+திசை.]*

*[**Skt.** hari> த. அருக்கன்.]*

**அருக்கியம்** *arukkiyam,* பெ.(n.) **அர்க்கியம்** பார்க்க; see *arkkiyam. "அருக்கிய முதலினோடாசனங் கொடுத்து" (கம்பரா. திருவவ. 42).*

*[**Skt.** arghya > த. அர்க்கியம் → அருக்கியம்]*

**அருகசரணம்** *aruga-šaranam,* பெ.(n.) அருகனை வணங்குகை (சீவக. உரை); (Jaina) seeking refuge with Arhat.

*[**Skt.** arhat + sarana > த. அருகசரணம்.]*

**அருகந்தர்** *arugandar,* பெ.(n.) அருகசமயத்தோர் (பதினொ. ஆளுடை. மும்மணி. 26); Jains.

**த.வ. தகைஞன்மதத்தார்.**

*[**Skt.** arhanta > த. அருகந்தர்.]*

**அருகம்**[1] *arugam,* பெ.(n.) மதிப்புடையது; that which is worthy.

**த.வ. தக்கது.**

*[**Skt.** arha > த. அருகம்.]*

**அருகம்**[2] *arugam,* பெ.(n.) சமணமதம்; jaina religion. *"பௌத்த மருகம்" (சூத.எக்கிய பூ. 32 : 12).*

**த.வ. தகைஞன்மதம்.**

*[**Skt.** arhat > த. அருகம்.]*

**அருகன்** *arugan,* பெ.(n.) அருகக்கடவுள் (திவா.); Arhat. 2. சமண மதத்தான்; Jain. *"அருகர்ச் சார்ந்து நின்று" (கல்லா. 4.).*

**த.வ. தகைஞன்.**

*[**Skt.** Arhat > த. அருகன்.]*

**அருகனெண்குணம்** *arugan-en-gunam,* பெ.(n.) சமண மதத்தவர்களின் எண் குணங்கள்; the eight attributes of Arhat.

*[அருகன் + எண்குணம்.]*

*[**Skt.** arhat>த. அருகன்.]*

**எண்குணங்களாவன** : 1. கடையிலாவறிவு, 2. கடையிலாக்காட்சி, 3. கடையிலா வீரியம், 4. கடையிலாவின்பம், 5. நாமமின்மை, 6. கோத்திரமின்மை, 7. ஆயுளின்மை, 8. அழியாவியல்பு – (குறள், 9, உரை).

**அருகனைத்தரித்தாள்** *aruganai-t-tarittal,* பெ.(n.) அறத்தெய்வம் (பிங்.); Dharma personified as the wife of Arhat.

*[அருகன்+ஐ+தரித்தாள்.]*

*[**Skt.** arhat>த. அருகன்.]*

**அருச்சகன்** *aruccagan,* பெ. (n.) கோயிலில் பூசை செய்வோன்; temple priest. *"ஆதிசைவனா மருச்சக னொருவன்" (திருவிளை. வாதவூ. 25).*

**த.வ. பூசகன்.**

*[**Skt.** arcaka > த. அருச்சகன்.]*

**அருச்சனை** *aruccanai,* பெ. (n.) 1. பூசை (இரகு. தேனுவ. 20); worship. 2. ஒருவருக்காக கடவுள் பெயர் கூறி மலர் முதலியன இடுகை; offering of flowers, sacred leaves, or saffron accompanied by a recitation of the sacred names of a deity in a temple on behalf of particular individuals. *"கோயிலில் கிரகப்பிரிதிக்காக அருச்சனை நடந்து வருகிறது".*

**த.வ. பூசை.**

*[**Skt.** aršanā > த. அருச்சனை.]*

**அருச்சனைவடிவு** *aruccanai-vadivu,* பெ. (n.) திருமால் நிலையுள் ஒன்று; *Tirumāl* idol which is worshipped. *"திருவாழ் மார்பனருச்சனை வடிவிற் கெல்லாம்" (அரிசமய. பராங். 47).*

*[அருச்சனை+வடிவு.]*

*[**Skt.** aršanā > த. அருச்சனை.]*

**அருச்சி-த்தல்** *arucci-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. வழிபடுதல்; to worship. 2. கடவுள் பெயர்ச்சொல்லி மலர் முதலியன இடுதல் (பூ செய்தல்); to offer flowers, sacred leaves or saffron to the idol while the sacred names are being recited.

**த.வ. பூசித்தல்.**

*[**Skt.** arc-, > த. அருச்சி-,]*

**அருச்சி** *arucci,* பெ. (n.) 1. காந்தல்; splendour. 2. தீப்பிழம்பு; flame. 3. கதிர்; ray of light.

*[**Skt.** arci > த. அருச்சி.]*

**அருச்சிகன்** *aruccigan,* பெ. (n.) நிலவு (திவா.); moon.

**அருச்சியம்** *arucciyam,* பெ. (n.) உவர்ப்பில்லாதது; that which is not brackish.

**அருச்சுனசன்னியாசி** *aruccuna-šanniyāši,* பெ. (n.) பொய்த்துறவி; one who puts on the garb of an ascetic to deceive others, as Arjuna did when marrying.

*[**Skt.** Arjuna + san + nyāsin > த. அருச்சுனசன்னியாசி.]*

**அருச்சுனம்**[1] *aruccunam,* பெ. (n.) 1. வெண்மை (சூடா.); whiteness. 2. மருதமரவகை (பிங்.); Arjan.

*[**Skt.** arjuna > த. அருச்சனம்.]*

**அருச்சுனம்**[2] *aruccunam,* பெ. (n.) எருக்கு என்னும் செடிவகை (மலை.); madar.

**அருச்சுனம்**[3] *aruccunam,* பெ. (n.) 1. பந்து (பொதி.நி.); ball. 2. வெள்ளையரிசியோடு அறுகுகூட்டி வாழ்த்துதல் (அரு.நி.463); bestowed on a person by sprinkling rice mixed with cynodon grass. 3. கண்ணோய் வகை; inflammation of the conjuctiva or white of the eye. 4. பொன் (நாநார்த்த.); gold. 5. புல் (நாநார்த்த.); grass.

**அருச்சுனம்**[4] *aruccunam,* பெ.(n.) 1. மருதமரம்; arjun tree-terminalia alata. 2. வெண்மை; whiteness. 3. மயில்; peacock. 4. அரக்கு; lac. 5. கடப்பம் பூ; the flower of the cadamba tree-*Barringtonia racemosa.* 6. வெள்விழி மேல், கடப்பம் பூ நிறமான படலத்தையுண்டாக்குமோர்வகைக் கண்ணோய்; a disease of the eye in which a yellow-coloured coating is formed in the white portion of the eye.

**அருச்சுனன்**[1] *aruccunan,* பெ.(n.) 1. ஒருதாய்க்கொரு பிள்ளை (நாநார்த்த.); only son of a woman. 2. நெல்வகை (குருகூர்ப். 58); a kind of paddy.

*[**Skt.** arjuna > த. அருச்சுனன்.]*

**அருச்சுனன்**[2] *aruccunan,* பெ. (n.) 1. மாபாரதக் கதைமாந்தர் ஐவருள் ஒருவன்; Arjuna, the third of the *Pāndu* princes, one of *pañša-pāndavar,* q.v. 2. கார்த்த வீரியன் (உத்தரரா. கார்த்த.2); *Kārttaviriyan.*

*[**Skt.** arjuna > த. அருச்சுனன்.]*

**அருச்சுனி**[1] *aruccuni,* 1. ஆ (பசு); cow. 2. உசாதேவி; the goddess of the dawn. 3. ஓர் ஆறு; a river. 4. தொழுத்தை; bawd.

*[**Skt.** arjuni > த. அருச்சுனி.]*

**அருச்சுனி**[2] *aruccuni,* பெ.(n.) 1. ஒருவகைப் பாம்பு; a kind of snake. 2. தலைப்பிடிக்கி; a procures, a bawd.

**அருச்சை** *aruccai,* பெ. (n.) 1. வழிபாடு; worship, adoration. *"தோகைக்குஞ் சொன்முறை யருச்சை" (வேதாரணி. மண. 21).* 2. உருவச் சிலை; deity.

**த.வ. பூசனை.**

*[**Skt.** aršā > த. அருச்சை.]*

**அருசி** *aruśi,* பெ.(n.) 1. சுவையின்மை; tastelessness, want of relish. *"வாயருசி சோபை" (பதார்த்த. 522).* 2. விருப்பின்மை; aversion, dislike.

*[Skt. a-ruci > த. அருசி.]*

**அருசிசூலை** *aruśi-śūlai,* பெ.(n.) சுவையின்மையை யுண்டாக்கும் ஒரு வகைச் சூலைநோய்; a piercing pain in the stomach giving rise to loss of appetite or tastelessness a kind of colic arising from gastralgia.

*[Skt. a-ruci>த.அருசி.]*

**அருசிப்பித்தம்** *aruśi-p-pittam,* பெ.(n.) உணவு வெறுக்கச் செய்யும் பித்தம்; bile which causes distaste for food.

*[அருசி + பித்தம்.]*

*[Skt. a-ruci > த. அருசி.]*

**அருசுராணம்** *aruśurāṇam,* பெ.(n.) புண் கழுவும் நீர்; a kind of medical preparation to wash wounds; lotion.

**அருசுனம்** *aruśuṉam,* பெ.(n.) அருச்சுனம் பார்க்க; see *aruccuṉam.*

**அருட்டம்¹** *aruṭṭam,* பெ.(n.) கடுகுரோகிணி என்னும் ஒருவகைப் பூண்டு (மூ.அ.); black hellebore.

*[Skt. arista > த. அருட்டம்.]*

**அருட்டம்²** *aruṭṭam,* பெ.(n.) 1. வேம்பு (வை.மூ.); margosa. 2. மலைவேம்பு (T.C.M.iii. 2, 429); mountain neem. 3. மிளகு (T.C.M.ii, 2, 429); pepper.

**அருட்டன்** *aruṭṭaṉ,* பெ.(n.) மிளகு; black pepper.

**அருட்டை** *aruṭṭai,* பெ.(n.) கடுகுரோகிணி (பரி.அக.); black hellebore.

*[Skt. arista > த.அருட்டை.]*

**அருத்தசாமம்** *arutta-śāmam,* பெ.(n.) நடு இரவு; midnight.

*[அருத்தம்+சாமம்.]*
*[Skt. ardha> த. அர்த்த.]*

த. யாமம்> சாமம்.

**அருத்தநாள்** *arutta-nāḷ,* பெ.(n.) 1. பாதிநாள்; half day. 2. உச்சிப் பொழுது; midday; noon.

*[அருத்தம்+நாள்.]*
*[Skt. ardha> த. அருத்த.]*

**அருத்தநிசா** *aruttaniśā,* பெ.(n.) **அருத்தசாமம்** பார்க்க; see *arutta-śāmam.*

*[Skt. ardha-niśā> த. அருத்தநிசா.]*

**அருத்தநூல்** *arutta-nūl,* பெ.(n.) பொருணூல் (புறநா. 166, உரை); political economy.

*[அருத்தம்+நூல்.]*
*[Skt. ardha> த. அருத்தம்.]*

**அருத்தபாகம்** *arutta-ṅāgam,* பெ.(n.) சமப்பங்கு; equal part.

*[Skt.ardha>த. அருத்தம்.]*

த.பகு > பாகம்.

**அருத்தபாகை** *arutta-pāgai,* பெ.(n.) மறைநூற்பொருள் வகை (சூடா.); *Brāhmaṇam,* that portion of the *vēda* which concerns itself mainly with the interpretation of the mantras (hymns) from the ritualistic point of view.

*[Skt. artha+bhāga > த. அருத்தபாகை.]*

**அருத்தம்¹** *aruttam,* பெ.(n.) 1. சொற்பொருள் (சூடா.); meaning, signification, import. 2. கருத்து (உரி.நி.); object, intention. 3. செல்வப் பொருள்; wealth, riches. *"அருத்த மின்ப மென்றிவை" (தேவா. 863, 3).* 4. பொன் (பிங்.); gold. 5. பயன் (உரி.நி.); utility, usefulness.

*[Skt. artha > த. அருத்தம்.]*

**அருத்தம்²** *aruttam,* பெ.(n.) பாதி (பிங்.); half.

த.வ. துண்டம்.

*[Skt. ardha> த. அருத்தம்.]*

**அருத்தம்³** *aruttam,* பெ.(n.) 1. செய்தி; object of sense. 2. பண்டம்; article. 3. காரணம்; cause, origin, ultimate cause. 4. (சாத்திரம்) அறிவு நூல்; śāstra. 5. வழக்கு; law, litigation. 6. வகை; manner, mode. 7. removal, abolition.

*[Skt. artha> த. அருத்தம்.]*

**அருத்தம்[4]** *aruttam,* பெ.(n.) துண்டம் (நாநார்த்த.); bit.

*[**Skt.** ardha > த. அருத்தம்.]*

**அருத்தம்[5]** *aruttam,* குக்கில் (சங்.அக.); dammer resin.

**அருத்தமண்டபம்** *arutta-maṇḍabam,* பெ.(n.) **அர்த்தமண்டபம்** பார்க்க; see *artta maṇḍabam. "அருத்த மண்டபத்துட் புக்கே" (அருணகிரி. வலம்புரி. 54, சங்.அக.).*

**த.வ. ஓலக்கமண்டபம்.**

*[அருத்த(ம்)+மண்டபம்.]*

*[**Skt.** ardha> த. அருத்த(ம்).]*

**அருத்தயாமம்** *arutta-yāmam,* பெ.(n.) நள்ளிரவு; midnight. *"அப்பதியருத்த யாமத் துனக்களி யுதவுங் கோலம்" (வேதாரணி. மணவா. 84).*

*[அருத்தம்+யாமம்.]*

*[**Skt.** ardha> த. அருத்த(ம்).]*

**அருத்தலக்கணை** *aruttalakkaṇai,* பெ.(n.) (இலக்.) இலக்கணை மூன்றனுள் ஒரு வரியில் ஒரு பாகத்தின் பொருளை விட்டு மற்றைப் பாகத்தின் பொருள் இயைபு பெற நிற்கும் இலக்கணையான விட்டும் விடாதவிலக்கணை (இலக்.அக.) (வேதா. சூ. 122),; a variety of ilakkaṇai, in which the primary sense of a word is partly discarded and partly retained, one of three ilakkaṇai, *viṭṭum-viḍāda-vilakkaṇai.*

*[அருத்த(ம்)+இலக்கணை.]*

*[**Skt.** ardha> த. அருத்த(ம்).]*

*[த. இலக்கணை > **Skt.** laksaṇa.]*

**அருத்தவாதம்** *aruttavādam,* பெ.(n.) புனைந்துரை (வேதாரணியபு. மேன்மைச். 81); exaggeration, over-statement.

**த.வ. எடுத்துரைப்பு.**

*[**Skt.** artha-vāda > த. அருத்தவாதம்.]*

**அருத்தவேடணை** *arutta-vēḍaṇai,* பெ.(n.) ஏடணாத்திரயத்தொன்று; attachment to wealth, one of *ēḍaṇā-t-tirayam,* q.v.

*[**Skt.** artha+ēṭaṇā>த.அருத்தவேடணை.]*

**அருத்தன்** *aruttaṉ,* பெ.(n.) அரைப்பாகமாகக் கொண்டவன்; one who has only half a body, as *tirumāl* in his union with *śivaṉ. "கண்ணுதல் கூடிய அருத்தனை" (திவ். பெரியதி. 7, 10, 7).*

**த.வ. மாற்சிவன்.**

*[**Skt.** ardha > த. அருத்தன்.]*

**அருத்தாபத்தி** *aruttāpatti,* பெ.(n.) **அர்த்தாபத்தி** பார்க்க; see *arttāpatti.*

**அருத்தி[1]-த்தல்** *arutti-,* 4 செ.குன்றாவி. (v.t.) இரத்தல்; to beg, ask for. *"நெடுமாலே யுன்னை யருத்தித்து வந்தோம்" (திவ். திருப்பா. 25).*

*[**Skt.** arth-, > த. அருத்தி-,]*

**அருத்தி[2]** *arutti,* பெ.(n.) 1. பணிவோன் (சேவிப்போன்); servant. 2. இரப்போன்; beggar. 3. செல்வன்; rich man.

*[**Skt.** arthi > த. அருத்தி.]*

**அருத்தி[3]** *arutti,* பெ.(n.) 1. ஆசை; avidity. *"அருத்தி யுற்றபி னாண முண்டாகுமோ" (கம்பரா. உலாவியல்.38).* 2. விரும்பப்படும் பொருள்; that which is desired. *"அருத்தி யீதல் பொற் சுரதரு வினுக்குமற் றரிது" (பாரத.கிருட்.241).*

*[**Skt.** arth > த. அருத்தி.]*

**அருத்தி[4]** *arutti,* பெ.(n.) பாதம், அடி; foot.

**அருத்தி[5]** *arutti,* பெ.(n.) கள்; toddy.

**அருத்தி[6]** *arutti,* பெ.(n.) கூத்து (வின்.); dancing.

**அருத்தியன்** *aruttiyaṉ,* பெ.(n.) விருப்ப முடையவன்; one who wants or desires. *"வந்த மனித்த னேதி லருத்தியன்" (பாரத. புட்ப. 119).*

**அருத்திரம்** *aruttiram,* பெ.(n.) மரமஞ்சள் (மலை.); turmeric tree.

*[**Skt.** haridrā > த. அருத்திரம்.]*

**அருத்திரமாசு** *aruttira-mášu,* பெ.(n.) பம்பளிமாசு; Batavian orange-citrus decumana typica.



**அருத்திராங்கம்** *aruttirāṅgam,* பெ.(n.) 'சி' காரம்; the sacred letter 'si'.

**அருத்து** *aruttu,* பெ.(n.) சொற்பொருள்; meaning, signification. *"கருத்தானா யருத்தானாய்" (தேவா. 286, 7).*

*[**Skt.** artha > த. அருத்து.]*

**அருத்தோதயம்** *aruttōdayam,* பெ.(n.) சுறவ(தை)த் திங்களில் காருவாவும் ஞாயிற்றுக்கிழமையும் திருவோணமும், வியதீபாதமும் கூடிய வைகறைப் புலர் பொழுது; sacred conjunction of the sun and the moon at sunrise on a sunday with sravana naksatra and viyatipata yōga, in the month of Tai. *"அருத்தோதய மகோதயம் பொருந்தி லோது புண்ணிய காலங்களாம்" (சேதுபு. சேதுபல. 23).*

**த.வ. ஓணக்காருவா புலர்காலை.**

*[**Skt.** ardhōdaya > த. அருத்தோதயம்.]*

**அருந்ததி** *arundati,* பெ.(n.) 1. வசிட்டர் மனைவி (ஐங்குறு. 442); name of the wife of Vasistar considered a paragon of chastity. 2. அருந்ததி விண்மீன் (பிங்.); the scarcely visible star alcor of the Great Bear, supposed to be Arundhati transformed.

*[**Skt.** arundhati > த. அருந்ததி.]*

**அருந்ததிகாட்டு-தல்** *arundadi-kāṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) அருந்ததிபோலக் கற்புடைய ளாகுகவென்று அந்நாண்மீனை மணமகட்குக் காட்டுதல்; to point out the star Arundhati to the bride as a model worthy of imitation, a part of the marriage ceremony. *"விசும்பிற்பூத்த வருந்ததி காட்டி" (சீவக. 2469).*

*[அருந்ததி+காட்டு-தல்.]*

*[**Skt.** arundhatā > த. அருந்ததி.]*

**அருந்ததியர்** *arundatiyar,* பெ.(n.) தோலின்துன்னர் (சென்னை.); cobblers.

*[**Skt.** arundhatiya > த. அருந்ததியர்.]*

**அருந்துதன்** *arundudan,* பெ.(n.) துன்பம் செய்வோன் (பிங்.); one who inflicts wounds, causes pain.

*[**Skt.** arun-tuda > த. அருந்துதன்.]*

**அருந்துதி** *arundudi,* பெ.(n.) **அருந்ததி**[1], **1** (திருக்கோ. 300) பார்க்க; see *aruntati.*

**அருநங்கன்** *arunaṅgan,* பெ.(n.) நாகப்பாம்பு; cobra.

**அருப்பகம்** *aruppagam,* பெ.(n.) 1. வலுவில்லாதது; that which is not strong. 2. விலங்கின் குட்டி; the young one of a species of animals.

**அருப்பகன்** *aruppagan,* பெ.(n.) 1. சிறுவன்; male child. 2. வறிஞன்; poor man. 3. அறிவிலான்; ignorant man. 4. முரடன்; rude, heartless person.

*[**Skt.** arbhaka > த. அருப்பகன்.]*

**அருமேதகம்** *arumēdagam,* பெ.(n.) ஒரு வகை தீக்கொப்புளம்; a venomous creature the bite of which gives rise to a swelling or a boil.

**அருருட்டுக்கிழங்கு** *aruruṭṭu-k-kiḷaṅgu,* பெ.(n.) கூவைக் கிழங்கு (L); true arrowroot plant.

*[அருருட்டு + கிழங்கு.]*

*[**E.** arrowroot> த. அருட்டு.]*

**அருவதா[1]** *aruvadā,* பெ.(n.) சதாப்புச் செடி; rue, m.sh., *ruta graveolens.*

*[Port. arruda > த. அருவதா.]*

**அருவதா[2]** *aruvadā,* பெ.(n.) கழலை; tumour.

**அருவதான்** *aruvadāṉ,* பெ.(n.) **அருவதா** பார்க்க; see *aruvadā.*

**அரூதா** *arūdā,* பெ.(n.) சதாப்புச் செடி; rue.

*[Port. arruda > த. அரூதா.]*

**அரூபம்[1]** *arūbam,* பெ.(n.) உருவமின்மை; formlessness, incorporeity, invisibility. *"அஞ்சலி னபனநீ ருகுத் தரூபமாய்" (இரகு. திக்கு. 253).*

**த.வ. உருவிலி.**

*[Skt. a-rūpa > த. அரூபம்.]*

*த. உருவம் >Skt. ரூப.*

**அரூபம்[2]** *arūbam,* பெ.(n.) 1. வானம்; sky. 2. ஒரு வகைக் கண்ணோய்; a kind of eye-disease.

**அரூபமா-தல்** *arūbamā-,* 6 செ.கு.வி.(v.i.) பாழடைதல்; to become desolate. *"அந்த ஊர் அரூபமாய்விட்டது" (இ.வ.).*

*[Skt. a-rūpa > த. அரூபம்.]*

ஆதல் – தொ.பெ.வி.

**அரூபவலி** *arūbavali,* பெ.(n.) 1. உள்வலி; internal pain. 2. உடம்பினுள் மறைந்திருக்கும் வல்லமை; potential energy.

*[அரூபம் + வலி.]*

*[Skt.a-rūpa > த.அரூப.]*

**அரூபி** *arūbi,* பெ.(n.) 1. கடவுள்; god, without form. 2. சிவன் (பிங்.); šivaṉ. 3. உடலில்லாதது (அசரீரி.) (பாரத. புட்ப. 78); spirit, invisible presence.

*[Skt. a-rūpin > த. அரூபி.]*

**அரேணு** *arēṇu,* பெ.(n.) 1. குலப்பெண்; gentle woman. 2. வால் மிளகு; cubeb. 3. கடலை; bengal gram.

*[Skt. harēnu > த. அரேணு.]*

**அரேணுகப்பூ** *arēṇuga-p-pū,* பெ.(n.) கடுக்காய்ப்பூ; chebulic myrobalan galls.

**அரேணுகம்** *arēṇugam,* பெ.(n.) 1. வால்மிளகு என்ற கொடி வகை (மலை.); cubebs. 2. காட்டு மிளகு என்ற மிளகுக் கொடி வகை (தைலவ. தைல. 77); flat branched pepper. 3. கடுமரவேர் (மூ.அ.); root of chebulic myrobalan.

*[Skt. harēnu > த. அரேணுகம்.]*

**அரேணுகை** *arēṇugai,* பெ.(n.) **அரேணுகம்** பார்க்க; see *arēṇugam.*

**அரோகதிடகாத்திரம்** *arōgatiḍagāttiram,* பெ.(n.) நலமும் வலிமையுமுள்ள உடலும் (தாயு. பாயப். 59); sound and strong body.

*[Skt.a-rōga +didha+gātra>த. அரோக திடகாத்திரம்.]*

**அரோகம்** *arōgam,* பெ.(n.) நோயின்மை; freedom, from disease, health.

*[Skt. a-rōga > த. அரோகம்.]*

**அரோகிணி** *arōgiṇi,* பெ.(n.) **அரோகிணிக் கடுக்காய்** (பதார்த்த. 965) பார்க்க; see *arrōgiṇi-k-kaḍukkāy.*

*[Skt. rōhiṇi>த. அரோகிணி.]*

**அரோகிணிக்கடுக்காய்** *arōgiṇi-k-kaḍukkāy,* பெ.(n.) கடுக்காய் வகை (பதார்த்த. 965); species of chebulic myrobalan.

*[அரோகிணி+கடுக்காய்.]*

*[Skt. rōhiṇi> த.அரோகிணி.]*

**அரோசகம்** *arōšagam,* பெ.(n.) 1. உணவில் வெறுப்பு; loss of appetite, having no relish for food. 2. அருவருப்பு; disgust.

*[Skt. a-rōcaka> த. அரோசகம்.]*

**அரோசனம்** *arōšaṉam,* பெ.(n.) அருவருப்பு; disgust. *"அரோசனத்துட னத்தின நண்ணினார்" (பாரத. திரௌ. 105).*

*[Skt. a-rōcana > த. அரோசனம்.]*

**அரோசி—த்தல்** *arōši-,* 4 செ.கு.வி.(v.i.) ளஅருவருப்பாதல்; to feel abhorrence. *"உணவு எனக்கு அரோசித்துப் போயிற்று".*

*[Skt. a-ruci> த. அரோசி-,]*

**அரோசிகம்** *arōšigam,* பெ.(n.) **அரோசகம்** பார்க்க; see *arōšagam.*

*[Skt. a-rōcaka > த. அரோசிகம்.]*

**அல்பத்துவம்** *alpattuvam,* பெ. (n.) 1. சிறுமை; smallness, meanness. 2. ஒரு பண்ணில் சிறுபான்மையாய்ப் பயன்படுத்தப்படும் குரலோசை; note rarely used in a melody-type, opp. to பகுத்துவம்.

*[Skt. alpa-tva > த.அல்பத்துவம்.]*

**அல்லா** *allā,* பெ.(n.) முகமதியர் வணங்கும் கடவுளின் பெயர்; name of Muslim's god.

*[U. allāh > த. அல்லா.]*

**அல்லேலூயா** *allēlūyā,* பெ. (n.) (கிறித்.) ஒரு வழிபாட்டுச் சொல்; praise the Lord.

த.வ. **இறைவா போற்றி.**

*[L. alleluia., Heb. halleluyah>த. அல்லேலூயா.]*

**அல்வா** *alvā,* பெ.(n.) இனிப்பு வகைகளுள் ஒன்று; இன்களி; a kind of sweet.

த.வ. **இன்கூழ்.**

*[U. halwā > த. அல்வா.]*

**அல்வான்** *alvāṉ,* பெ.(n.) வண்ணத்துணி; cotton cloth of various sorts and colours.

*[U. alwān > த. அல்வான்.]*

**அலங்கரணம்** *alaṅgaraṇam,* பெ.(n.) ஒப்பனை; adornment, make up.

த.வ. **ஒப்பனை.**

*[Skt. alamkāraṇa > த. அலங்கரணம்.]*

**அலங்கரி—த்தல்** *alaṅkari-,* 4 செ.குன்றாவி. (v.t.) அழகுப்படுத்தல் (கோயிற்பு. பதஞ். 10); to adorn, decorate, ornament.

த.வ. **ஒப்பனைசெய்தல், புனைதல், அணிசெய்தல்.**

*[Skt. alamkar > த. அலங்கரி-,]*

**அலங்காரசாத்திரம்** *alaṅgāra-šāttiram,* பெ.(n.) அணியிலக்கணநூல்; rhetoric, science of rhetoric.

த.வ. **அணிநூல்.**

*[Skt. alam-kāra+šāstra > த. அலங்காரசாத்திரம்]*

**அலங்காரப்பஞ்சகம்** *alaṅgāra-pañjagam,* பெ.(n.) வெண்பா, கலித்துறை, அகவல், விருத்தம், சந்தவிருத்தம் ஆகிய ஐந்தும் ஈறு தொடங்கியாக வரப்பாடும் சிற்றிலக்கியம் (இலக்.வி.844); poem in five stanzas in five metres in which the last syllable of each stanza is the same as the first syllable of the next.

த.வ. **ஐயணிப்பனுவல்.**

*[Skt. alam-kāra+pañcaka > த. அலங்காரப் பஞ்சகம்.]*

**அலங்காரப்பேச்சு** *alaṅkāra-p-pēccu,* பெ. (n.) 1. அழகுப் பேச்சு; fine or ornate speech. 2. புனைவுரை; false speech, flattery.

*[அலங்காரம்+ பேச்சு.]*

*[Skt. alam-kāra> த. அலங்காரம்.]*

**அலங்காரம்**[1] *alaṉgāram,* பெ. (n.) 1. ஒப்பனை (பிங்.); adornment, decoration. 2. அழகு; beauty, elegance, attractiveness. "அலங்காரமால்"(அழகர்கலம் 69). 3. அணிகலன்; ornament, jewel. "பாம்பலங்காரப் பரன்" (திருக்கோ. 11). 4. திருமால் கோயில்களில் படைக்கப்படும் சோறு, சாறு, குழம்பு முதலிய உணவு; ordinary meal offered in a *Tirumāl* temple. 5. செய்யுளணி; rhetorical embellishment, in two main divisions, viz., அர்த்தாலங்காரம், சத்தாலங்காரம். 6. இசையுறுப்பு வகை; graces and ornaments of melody.

*[Skt. alaṉ-kāra > த. அலங்காரம்.]*

**அலங்காரம்**[2] *alaṅgāram,* பெ. (n.) வெடிகாரம் (சங்.அக.); saltpetre.

**அலங்காரமண்டபம்** *alaṅgāra-maṇḍapam,* பெ. (n.) வரவேற்புக் கூடம் (கட்டட. நாமா.); saloon.

த.வ. எழிற்கூடம்.

[அலங்காரம் + மண்டபம்.]

[**Skt.** *alaṅkāra> த. அலங்காரம்.]*

**அலங்காரமாடம்** *alaṅgāra-māḍam,* பெ.(n.) வழிபாட்டுப் பண்டங்களை வைப்பதற்கு ஏற்பட்ட மாடம் (கட்டட. நாமா.); tabernacle.

த.வ. எழில்மாடம்.

[அலங்காரம் + மாடம்.]

[**Skt.** *alaṅkāra> த. அலங்காரம்.]*

**அலங்காரவிளக்கு** *alaṅgāraviḷakku,* பெ. (n.) மரத்தண்டிற் பல கிளைகொண்ட மணவிளக்கு (E.T.); lamp on a wooden stand with several branches supporting a number of small lamps, used in the marriage ceremonies of the *vaṉṉiya* caste.

த.வ. எழில்விளக்கு.

[அலங்காரம் + விளக்கு]

[**Skt.** *alam-kāra> த. அலங்காரம்.]*



**அலங்காரி-த்தல்** *alaṅgāri-,* 4 செ.குன்றாவி. (v.t.) **அலங்கரி-த்தல்** பார்க்க; see *alaṅkari-* *"அயலலங்காரித்து" (தணிகைப்பு. அகத். 163).*

[**Skt.** *alam-kāra > த. அலங்காரி-,]*

**அலங்காரி** *alaṅgāri,* பெ.(n.) மிகையாக ஒப்பனை செய்து கொண்ட பெண்; a woman with heavy make-up.

த.வ. ஒப்பனைக்காரி.

[**Skt.** *alaṅkāra > த. அலங்காரி.]*

**அலங்கிருதம்** *alaṅgirudam,* பெ.(n.) ஒப்பனை (இராமநா. யுத்த. 122); adornment.

த.வ. புனைவம்.

*[**Skt.** alam-krta > த. அலங்கிருதம்.]*

**அலங்கிருதி** *alaṅgirudi,* பெ.(n.) **அலங்கிருதம்** பார்க்க; see *alaṅgirudam.*

*[**Skt.** alaṃ-kṛta > த. அலங்கிருதி.]*

**அலசம்** *alacam,* பெ.(n.) 1. மந்தம்; torpidity, inactivity of the organs. *"தலைநோயலசம்" (தைலவ. தைவ. 8).* 2. விரலிடைச் சேற்றுப்புண்; itching sore between the toes.

*[**Skt.** alasa > த. அலசம்.]*

**அலசல்** *alaśal,* பெ. (n.) சோம்பல் (வின்.); laziness, langour.

த.வ. மந்தம்.

*[**Skt.** alasa > த. அலசல்.]*

**அலட்சியம்** *alaṭciyam,* பெ.(n.) 1. கவனமின்மை; disconcentration. 2. மதிப்பின்மை; irrespect. 3. பொருட்படுத்தாமை; inapt.

*[**Skt.** a-lakṣya > த. அலட்சியம்.]*

**அலப்படை** *alappaḍai,* பெ. (n.) போர்க் கருவியாகப் பயன்படுத்தப்படும் கலப்பை (சூடா.1,10); plough, used as weapon.

*[அலம்+படை]*

*[**Skt.** hala > த. அலம்.]*



**அலப்படையோன்** *alappaḍai-yōṉ,* பெ. (n.) கலப்பையைப் போர்க்கருவியாகப் பயன்படுத்தும் பலராமன்; *Balarāmaṉ,* the elder brother of *Krishnaṉ* having the plough as his weapon.

[*அலப்படை → அலப்படையோன்.*]

**அலப்பனாத்து** *alappaṉāttu*, பெ. (n.) குண்டூசி (சென்னை); pin.

**அலம்புரி-தல்** *alampuri-*, 2 செ.குன்றாவி. (v.t.) மனநிறைவடையும் வரை கொடுத்தல்; to give to satisfaction or satiety. *"அலம்புரிந்த நெடுந்தடக்கை யாலே யிரப்பதோ" (திவ். திருச்சந். 25, வியா).*

[*அலம்+புரி-தல்.*]

[**Skt.** *alam > த. அலம்.*]

**அலமாரி** *alamāri*, பெ.(n.) நிலைப்பேழை; closed wall-shelves, wall cupboard.

[**U.** *almāri > த. அலமாரி*]

**அலன்** *alaṉ*, பெ. (n.) பலராமன் (பரிபா.3, 83); *Balarāmaṉ*, armed with a plough.

**த.வ. வல்லெழிலன்.**

[**Skt.** *hala > த. அலன்.*]

**அலாக்காக** *alākkāga*, பெ.எ.(adj.) அப்படியே, தனியாக; (with ease and facility) as it is. *'யானை குழந்தையை அலாக்காகத் தூக்கி முதுகில் வைத்தது' (உ.வ.).*

[**U.** *alag > த. அலாக்கு + ஆக.*]

**அலாக்கு**[1] *alākku*, பெ.(n.) கெடுதி (R.); wrong, injury.

[**U.** *alag > த. அலாக்கு.*]

**அலாக்கு**[2] *alākku*, பெ.(n.) தனிமை; separateness, aloofness, distinetness.

[**U.** *alag > த. அலாக்கு.*]

**அலாதசக்கரம்** *alādaśakkaram*, பெ. (n.) கொள்ளியைச் சுழற்றுதலிற் றோன்றும் வட்ட வடிவு (இ.வ.); apparent circle in the air caused by whirling a fire-brand.

**த.வ. வட்டுரு.**

[*அலாத + சக்கரம்.*]

[**Skt.** *a-lāta > த. அலாதம்.*]

**அலாதம்**[1] *alādam*, பெ. (n.) கடைக்கொள்ளி (பிங்.); fire-brand.

[**Skt.** *a-lāta > த. அலாதம்.*]

**அலாதம்**[2] *alādam*, பெ.(n.) மரஞ்சுட்ட கரி (நாநார்த்த.); charcoal.

[**Skt.** *alāta > த. அலாதம்.*]

**அலாதி** *alādi*, பெ.(n.) 1. தனிச் சிறப்பானது; something special, unique. *'அவருக்கு உன் மீது அலாதி விருப்பம்'.* 2. எதனோடும் தொடர்பில்லாமல் தனித்து நிற்பது; that which is singular. *'அவன் போக்கே அலாதி'.*

**த.வ. தனிப்பு.**

[**U.** *alāhida > த. அலாதி.*]

**அலாபம்** *alābam*, பெ. (n.) 1. இழப்பு, நட்டம், ஊதியமின்மை; absence of gain. 2. தீது (திவா.); evil.

[**Skt.** *a-lābha > த. அலாபம்.*]

**அலாபு** *alābu*, பெ. (n.) சுரை என்னும் ஒருவகைக் கொடி (பிங்.); calabash.

[**Skt.** *alābu > த. அலாபு.*]



**அலாயுதன்** *alāyudaṉ*, பெ. (n.) பலராமன் (பிங்.); *Balarāmaṉ*, armed with a plough.

**த.வ. கலப்பைப்படையன்.**

[**Skt.** *Halāyudha > த. அலாயுதன்.*]

**அலாவு** *alāvu*, பெ.(n.) **அலாபு** பார்க்க; see *alāpu*.

[**Skt.** *alābu > த. அலாவு.*]

**அலிகம்** *aligam*, பெ. (n.) நெற்றி (சிந்தா. நி. 299); forehead.

[**Skt.** *alika > த. அலிகம்.*]

**அலிசிவிரை** *aliśvirai,* பெ. (n.) ஆளிவிதை(C.G.); linseed.

[அலிசி+விரை.]

[U. alsi> த. அலிசி.]

[விதை → விரை.]

**அலீகன்** *alīgaṉ,* பெ.(n.) தலை; head. "அலீகனிற அற்றுழியும் உடம்பாடுதெலின்" (தொல். பொருள். 71, உரை).

[Skt. alika > த. அலீகன்.]

**அலீசா[1]** *alīšā,* பெ.(n.) பட்டு வகைகளு ளொன்று; silk cloth five yards long, which has a short wavy line pattern running in the length on either side.

[U. ilāca > த. அலீசா.]

**அலுகோசு** *alukōšu,* பெ.(n.) (யாழ்ப்.) தூக்குத் தண்டனையை நிறைவேற்றும் அரசு அலுவலர்; hangman.

**அலுப்தசக்தி** *alupdašakti,* பெ. (n.) பேரருளுடைமை; (Saivam) being possessed of infinite mercy.

[Skt. alupta+ sakti>த. அலுப்தசக்தி.]

**அலேகம்[1]** *alēgam,* பெ.(n.) எழுத அணியப்படுத்திய வெற்றோலை (சிவதரு. சிவஞானதா. 58); blank palm leaves, prepared and joined together for writing.

த.வ. வெற்றேடு.

[Skt. a-lēkha > த. அலேகம்.]

**அலேபகன்** *alēbagaṉ,* பெ.(n.) ஆதனைக் கரிசு (பாவம்) பற்றாதென்னுங் கொள்கையினன் (சங்கற்பசூரியோ. பக்.8); (phil.) one who believes that sin does not attach itsellf to a soul.

[Skt. a-lēpaka > த. அலேபகன்.]

**அலோகம்[1]** *alōgam,* பெ. (n.) 1. கதிரவனின் கதிர் படாத உலகம்; world where the sun's rays do not fall. 2. ஐம் பூதத் தொடர்பில்லாதது; that which is not constituted of the five elements.

த.வ. காணப்படாத உலகு.

[Skt. alōka > த. அலோகம்.]

**அலோகம்[2]** *alōgam,* பெ.(n.) மாழை யில்லாதது; non-metal.

[Skt. a-lōka > த. அலோகம்.]

**அலௌகிகம்** *alaukigam,* பெ. (n.) உலக நடைமுறைக்கு மாறானது; unworldy, nonconformity with worldy wisdom.

[Skt. a-laukika > த. அலௌகிகம்.]

**அவ்யாசகருணை** *avyāša-karuṇai,* பெ. (n.) காரணமே வேண்டாத அருள் (தென். இந். க்ஷேத். 252); grace which does not require any pretext to cause.

[Skt. a-vyāja+karuṇā > த. அவ்யாச கருணை.]

**அவ்வச்சிலேடிகவியாபகம்** *avvac-cilēḍiga-viyābagam,* பெ. (n.) நன்கு பொருந்தியுள்ளதாலுண்டாகும் நிறைவு (சிவப்பிர. சிந்தனையுரை); (phil.) permeation due to close or immediate contact.

[Skt. aupašlēṣika + vyāpaka > த. அவ்வச்சிலேடிகவியாபகம்.]

**அவ்வல்** *avval,* பெ.அ.(adj.) முதன்மையான (P.T.L.); first, principal.

[Arab. awwal > த. அவ்வல்.]

**அவ்வியக்தம்** *avviyakdam,* பெ. (n.) 1. **அவ்வியத்தம்** பார்க்க; see *avviyattam.* 2. நூற்றெட்டு சிற்றிலக்கியங்களுள் ஒன்று; name of an upanisad.

[Skt. a-vyakta > த. அவ்வியக்தம்.]

**அவ்வியக்தி** *avviyakti,* பெ. (n.) புகைக்கொடி, வால்வெள்ளி (தக்கயாகப். 457, உரை); a comet.

[Skt. a-vyakti > த. அவ்வியக்தி.]

**அவ்வியத்தம்[1]** *avviyattam,* பெ.(n.) 1. விளங்கக் காணப்படாதது; that which is imperceptible, invisible, not manifested or differentiated. 2. உலகத் தோற்றவியல் கோட்பாடு

**அன்னத்துரோகம்** *anna-t-turōgam,* பெ.(n.) உண்டவீட்டுக்கு இரண்டகம் பண்ணுகை; treachery to the house by one where one has been fed.

*[**Skt.** anna+turōkam>த.அன்னத் துரோகம்.]*

**அன்னதானக்குறுவை** *annadāna-k-kuruvai,* பெ.(n.) மூன்று மாதத்தில் விளையும் நெல்வகை; a kind of paddy matures in three months.

*[அன்னம் + தானம் + குறுவை]*

*[**Skt.** anna> த. அன்னம்.]*

**அன்னதானச்சம்பா** *annadāna-c-cambā,* பெ.(n.) சம்பா நெல்வகை (ஏரெழு. உரை); variety of sampa paddy.

*[அன்ன(ம்) + தானம் + சம்பா]*

*[**Skt.** anna> த. அன்னம்.]*

**அன்னதானம்**[1] *annadānam,* பெ.(n.) உணவளிக்கை; giving away food in charity. *"அன்னதான மகிலநற் றானங்கள்" (கம்பரா. பாயி.).*

**த.வ. ஊண்கொடை.**

*[அன்னம்+தானம்.]*

*[**Skt.** anna> த. அன்னம்.]*

**அன்னதானம்**[2] *annadānam,* பெ.(n.) மூன்று மாதத்தில் விளையும் நெல் வகை (M.M.); kind of paddy. harvertel within 3 months.

*[அன்னம் + தானம்.]*

*[**Skt.** anna> த. அன்னம்.]*

**அன்னதீபம்** *annadīpam,* பெ.(n.) கோயில் விளக்கு வகை (பரத. ஒழிபி. 41); kind of temple lamp having the shape of a swan. *"swan shaper temple lamp"*

*[அன்னம் + தீபம்.]*

*[**Skt.** hamsa> த. அன்னம்.]*

ஓதிம (அன்னப்பறவை) வடிவிலமைந்துள்ள விளக்கு.



**அன்னப்பால்** *anna-p-pāl,* பெ.(n.) அரிசி கொதிக்கும் போது எடுக்குங் கஞ்சி; water strained from boiling rice, used as a very mild diet in sickness.

*[அன்னம் + பால்.]*

*[**Skt.** anna>த. அன்னம்.]*

**அன்னபானம்** *annapānam,* பெ.(n.) சோறும் நீரும்; food and drink. *"அபேக்ஷிதம் அன்னபானாதிகள்" (அஷ்டாதச. முமுக்ஷ. 1, 38).*

*[**Skt.** anna+pānam>த.அன்னபானம்.]*

**அன்னபிச்சை** *anna-piccai,* பெ.(n.) சோறாக வாங்கும் இரப்பு (மீனாட். சரித். i, 19); begging of boiled rice.

**த.வ. ஊணிரப்பு.**

*[**Skt.** anna-bhiksa> த. அன்னபிச்சை.]*

**அன்னபேதி** *annapēdi,* பெ.(n.) மருந்து சரக்குவகை (பதார்த்த. 1116); green vitriol, ferri sulphas, so called as it liquefies boiled rice.

*[**Skt.** anna-bhēdin > த. அன்னபேதி.]*

**அன்னபோதம்** *anna-pōdam,* இதளியம் (சு.வை.ர.536); mercury.

**அன்னம்** *annam,* பெ.(n.) சோறு; food, victuals, esp. boiled rice.

*[**Skt.** anna > த. அன்னம்.]*

**அன்னம்பிடி—த்தல்** *annampiḍi-,* 4 செ.கு.வி.(v.i.) நெல்மணி பால்பற்றுதல் (கொ.வ.); to be in the milk, as of grains of paddy.

த.வ. பால் பிடித்தல்.

*[அன்னம்+பிடி—,]*

*[Skt. anna > த. அன்னம்.]*

**அன்னரசம்** *annarašam,* பெ.(n.) உணவின் ஊட்டம்; essence of food, nutriment.

*[Skt. anna+rašam>த.அன்னரசம்.]*

**அன்னவம்** *annavam,* பெ.(n.) கடல் (சூடா.); sea.

*[Skt. arṇava > த. அன்னவம்.]*

**அன்னவூறல்** *anna-v-ūral,* பெ.(n.) வடிகஞ்சி (வின்.); gruel congee, water in which rice has been boiled.

*[அன்னம்+ஊறல்.]*

*[Skt. anna> த. அன்னம்.]*

**அன்னவெட்டி** *annaveṭṭi,* பெ.(n.) சோறு பரிமாறுவதற்குரிய கரண்டி (கொ.வ.); a spoon type vessel for serving rice.

த.வ. சோற்றுக்கரண்டி, கைகரண்டி.

*[அன்னம் + வெட்டி.]*

*[Skt. anna> த. அன்னம்.]*



**அன்னாசி** *annāši,* பெ.(n.) செந்தாழை என்னும் பழச்செடி; pine-apple, native of Maxico and Panama.

*[E. Anisi > த. அன்னாசி.]*

*[Port. ananas > த. அன்னாசி.]*

*[Braz. nanas > த. அன்னாசி.]*

**அன்னாபிடேகம்** *annāpiḍēgam,* பெ.(n.) கடவுளுக்குச் சோற்றால் செய்யும் திருமுழுக்கு; cermony of pouring boiled rice over an idol in a temple.

*[Skt.anna+abhi-ṣēka>த.அன்னாபிடேகம்.]*

**அன்னியத்தன்** *anniyattan,* பெ.(n.) 1. புறம்பானவன்; one who is outside a particular community or society. 2. அறிமுகமில்லாதவன்; stranger.

*[Skt. anya+stha > த. அன்னியத்தன்.]*

**அன்னியம்** *anniyam,* பெ.(n.) 1. வேறாகை (சி.போ.7,1,1); being separate. 2. வேறானது; that which is different. 3. பிற நாட்டுள்ளது (வின்.); that which is foreign, alien.

*[Skt. anya > த. அன்னியம்.]*

**அன்னியன்** *anniyan,* பெ.(n.)1. புறம்பேயுள்ளான்; stranger, alien, foreigner. 2. பிறன் (உத்தரரா. இலவண. 15); other than oneself.

த.வ. அயலவன், உறவிலான்.

*[Skt. anya > த. அன்னியன்.]*

**அன்னியாயம்** *anniyāyam,* பெ.(n.) **அநியாயம்** பார்க்க; see *aniyāyam.*

*[Skt. a-nyāya > த.அன்னியாயம் (கொ.வ.).]*

**அன்னியோன்னியம்** *anniyōnniyam,* பெ.(n.) ஒற்றுமை; mutuality, reciprocity, union, fellowship, initimacy.

மறுவ. ஒன்றிப்பு.

*[Skt. anyōnya > த. அன்னியோன்னியம்.]*

**அனகம்** *anagam,* பெ.(n.) கரிச (பாவம)ற்றது; குற்றமற்றது; sinless, pure. *"அனகமா நெறிபட ரடிகள்" (கம்பரா. சடாயுவுயிர். 39).*

*[Skt. an-agha > த. அனகம்.]*

**அனகன்** *anagan,* பெ.(n.) 1. கடவுள் (கந்தபு. தெய்வ. 208); God, as the sinless one, Brahmān, Šivan, Arhat. 2. அழகுள்ளவன் (கம்பரா. நீர்விளை. 1); handsome man.

*[Skt. an-agha > த. அனகன்.]*

**அனசனம்** *aṉaśaṉam,* பெ.(n.) (சமணம்) சமணரின் உண்ணாநோன்பு; ceremony of fasting, preliminary to giving up one's life. *"அண்ண லனசனத் தவமமர்ந்தான்" (யசோதர. 1, 20).*

*[Skt. an-aśana > த. அனசனம்.]*

**அனசனவிரதம்** *aṉaśaṉaviradam,* பெ.(n.) **அனசனம்** பார்க்க; see *aṉaśaṉam.*

*[Skt. an-asana+ விரதம் > த. அனசன விரதம்.]*

**அனத்தம்** *aṉattam,* பெ.(n.) 1. பயனற்றது; that which is worthless, useless. *"அனத்தமான வுள்ளந்தான்" (ஞானவா. உபசாந். 11).* 2. பொல்லாங்கு; evil, calamity. *"அனத்தக் கடலு ளழுந்தி" (திவ். பெரியாழ். 5,3,7).*

*[Skt. an-artha > த.அனத்தம்.]*

**அனந்தசயனம்** *aṉandaśayaṉam,* பெ.(n.) 1. திருமாலின் பாம்புப் படுக்கை; couch of *Tirumāl* consisting of the coils of *ādiśēṣaṉ.* 2. திருவனந்தபுரம்; *Trivandrum*, as the seat of the shrine wherein *Tirumāl* is represented as reclining on the serpent *ādiśēṣaṉ.*

த.வ. அரவத்துயில்.

*[Skt. an-anta+sayana > த. அனந்தசயனம்.]*

**அனந்தசயனன்** *aṉanda-śayaṉaṉ,* பெ.(n.) திருமால் (திவ். பெரியாழ். 1,7,2); Tirumāl, as reclining on *ādiśēṣaṉ.*

த.வ. அரவத்துயிலோன், பாம்பணையான்.

*[Skt. an-anta+sayana>த. அனந்தசயனன்.]*

**அனந்தசுகம்** *aṉandaśugam,* பெ.(n.) கடையிலாவின்பம் (சீவக. 2846, உரை); limitless bliss.

*[Skt. an-anta+sukha > த. அனந்தசுகம்.]*

**அனந்தஞானம்** *aṉanda-ñāṉam,* பெ.(n.) கடையிலாவறிவு (சீவக. 2846, உரை); limitless knowledge.

*[Skt. an-anta+ñāṉa> த. அனந்தஞானம்.]*

**அனந்தஞானி** *aṉanda-ñāṉi,* பெ.(n.) அருகன் (சூடா.); Arhat, as all-knowing.

*[Skt. an-anta+ñāṉi> த. அனந்தஞானி.]*

**அனந்ததரிசனம்** *aṉanda-dariśaṉam,* பெ.(n.) கடையிலாக் காட்சி (சீவக. 2846, உரை); limitless vision.

*[Skt. an-anta + darśana > த. அனந்த தரிசனம்.]*

**அனந்தம்** *aṉandam,* பெ.(n.) 1. அளவின்மை (திவா.); limitlessness, infinity. 2. அளவற்றது (பிங்.); that which is boundless. 3. வானம் (சூடா.); sky, atmosphere. 4. ஒரு பேரெண் (வின்.); a hundred- thousand quadrillions.

*[Skt. an-anta > த. அனந்தம்.]*

**அனந்தர்** *aṉandar,* பெ.(n.) (தீர்த்தங்காரர்) அருக பதவியை அடைந்த சமணருள் ஒருவர் (திருக்கலம். காப்பு. உரை); Arhat, one of the twenty-four tirttaṅkarar, q.v.

*[Skt. Ananta > த. அனந்தர்.]*

**அனந்தலோசனன்** *aṉandalōśaṉaṉ,* பெ.(n.) புத்தன் (திவா.); Buddha, as having a limitless number of eyes.

*[Skt. an-anta+lōcana > த. அனந்த லோசனன்.]*

**அனந்தன்** *aṉandaṉ,* பெ.(n.) 1. கடவுள்; God, as the endless one. 2. திருமால்; Tirumāl. 3. சிவன்; *Sivaṉ.* 4. நான்முகன்; Brahmāṉ. 5. (அருகன்) சமணன்; Arhat. 6. (அஷ்டமநாகம்) எண் வகை பாம்புகளு ளொன்று (பிங்.); a serpent which supports the earth in the South-East, one of *aṣḍa-mā-nāgam,* q.v. 7. திருமாலின் பாம்பணை (ஆதிசேடன்) (திவ். பெரியாழ். 5, 4, 8); *Adiśēṣaṉ,* couch of Tirumāl. 8. பதஞ்சலி (கோயிற்பு. நடரா. 37.); the grammarian *patañjali.* 9. ஒருவகைப் பிறவி நஞ்சு (மூ.அ.); a prepared arsenic.

**அனந்தாழ்வான்** *anandāḻvāṉ,* பெ.(n.) ஆதிசேடன்; the serpent *ādiśēṣaṉ.*

*[அனந்தன் + ஆழ்வான்.]*

**[Skt.** *an-anta* > *த. அனந்தன்.]*

**அனந்தை**[1] *anandai,* பெ.(n.) 1. சிறுகாஞ்சொறி (நாநார்த்த.); small climbing nettle. 2. நன்னாரி (நாநார்த்த.); Indian sarasaparilla. 3. குப்பைமேனி (நாநார்த்த.); Indian acalpha. 4. அறுகு (நாநார்த்த); harialli grass. 5. கடுமரம் (நாநார்த்த.); chebulic myrobalan. 6. சீந்தில் (நாநார்த்த.); gulancha. 7. செங்காந்தள் (நாநார்த்த.); red species of malabar glory-lily. 8. பதினாறு கலையுளொன்றான ஓகநிலை (தத்துவப். 142); (Saivam) a mystic centre in the body, one of *śōdśa-kalai,* q.v.

**[Skt.** *an-antā* > *த. அனந்தை.]*

**அனந்தை**[2] *anandai,* பெ.(n.) உலகம்; world.

**த.வ. மண்ணகம்.**

**[Skt.** *an-antā* > *த. அனந்தை.]*

**அனபை** *anabai,* பெ.(n.) ஒரு வேள்வி (விதான. சாதக. 23); configuration of the planets in which the favourable planets occupy the 12th place from the moon.

**[Skt.** *anaphā* > *த. அனபை.]*

Gr. anaphā.

**அனயம்** *anayam,* பெ.(n.) 1. தீவினை; evil deed. 2. கடுந்தொல்லை; danger. 3. தீயது; inauspiciousness. 4. துன்பம்; misery.

**த.வ. மங்கலமின்மை.**

**[Skt.** *a-naya* > *த. அனயம்.]*

**அனர்த்தம்** *anarttam,* பெ.(n.) 1. பொருளற்றது (திவா.); that which is without meaning, nonsense. 2. பயனற்றது; worthless, useless. *"அருந்தங்க ளனர்த்த மாகும்" (ஞானவா. வீமபா. 5).* 3. துன்பம்; calamity, evil. *"பிறவியான வனர்த்தத்தில்" (ஞானவா. வைராக். 28).* 4. குழப்பம்; muddle.

**[Skt.** *an-artha* > *த. அனர்த்தம்.]*

**அனரசம்** *anaraśam,* பெ.(n.) பணியார வகை (இந்துபாக. 289); a sweet confection made of rice flour, ghee, etc.

**[U.** *anarsā* > *த. அனரசம்.]*

**அனன்னியம்** *anaṉṉiyam,* பெ.(n.) வேறன்மை; identical thing. *"கடத்தொடு மட் கனன்னியம்" (வேதா. சூ. 127).*

**[Skt.** *an-anya* > *த. அனன்னியம்.]*

**அனன்னியார்கம்** *anaṉṉiyārgam,* பெ.(n.) வேறொருவருக்கு உரிமையாகாமலிருப்பது (திவ். திருவாய். 6,1,1, பன்னீ.); that on which none else has a claim.

**[Skt.** *an-anya+arha* > *த. அனன்னியார்கம்.]*

**அனாகுலன்** *anāgulaṉ,* பெ.(n.) கவலையற்றவன்; one who is collected, self-possessed, not perplexed or confused. *"அறிவனனாகுலன்" (ஞானா. 10).*

**[Skt.** *anākulan* > *த. அனாகுலன்.]*

**அனாசி** *anāśi,* பெ.(n.) (அன்னாசி) செந்தாழைப் பழச்செடி (மூ.அ.); pine-apple.

**[Port.** *ananas* > *த. அனாசி.]*



**அனாதி** *anādi,* பெ.(n.) 1. தொடக்கமில்லாதது; that which has no beginning. 2. கடவுள்; god, who has no beginning. 3. சிவன் (பிங்.); Šivaṉ. *"அனாதியேக தத்துவ சொரூபத்தை" (தாயு. பரசிவ. 3).*

**த.வ. ஏதுமிலி.**

**[Skt.** *an-ādi* > *த. அனாதி.]*

**அனாதிகாலம்** *anādikālam,* பெ.(n.) மிகப் பழங்காலம், நெடுங்காலம்; ancient, time immemorial. *'உலகம் அனாதி காலமாகவே இருந்து வருகிறது'.*

*[அனாதி+ காலம்]*

*[Skt. an-ādi > த. அனாதி.]*

**அனாதித்தரிசு** *anādi-t-tarišu,* பெ.(n.) நெடுங்காலம் விளைவிக்காத நிலம்; immemorial waste land.

*[அனாதி+தரிசு.]*

*[Skt. an-ādi > த. அனாதி.]*

**அனாதித்திட்டு** *anādi-t-tiṭṭu,* பெ.(n.) நெடுங்காலம் பயிரிடப்படாத நிலம் (R.T.); immemorial waste-land.

*[அனாதி+திட்டு.]*

*[Skt. an-ādi> த. அனாதி.]*

**அனாதிபாழ்** *anādipāḷ,* பெ.(n.) நெடுங்காலம் பாழடைந்துள்ள இடம்; place in ruins from time immemorial. *"ஊற்றுக்கட்டுக் கோட்டத்து அனாதிபாழாய்க் கிடந்த ஊர்" (S.I.I.iv. 99).*

**த.வ. தொன்பாழிடம்.**

*[அனாதி + பாழ்.]*

*[Skt. an-ādi > த. அனாதி.]*

**அனாமத்து** *anāmattu,* பெ.(n.) தனிமையான; separate, not belonging to any specified item.

**த.வ. தனிநிலை, கேட்பாரற்றது.**

*[U. amānat > த. அனாமத்து.]*

**அனாமத்துச்சிட்டா** *anāmattu-c-ciṭṭā,* பெ.(n.) பொதுச் சிட்டை (குறிப்பேடு); miscellaneous account note.

**த.வ. பொதுச்சிட்டை.**

*[U. amānat+ciṭṭā > த. அனாமத்துச்சிட்டா.]*

சிட்டை–சிறுகுறிப்பேடு.

**அனாமயம்** *anāmayam,* பெ.(n.) நோயின்மை; health, freedom from disease. *"அசட மனாமயம்" (கைவல்ய சந்தேக. 137.).*

*[Skt. an-āmaya > த. அனாமயம்.]*

**அனாமயன்** *anāmayan,* பெ.(n.) 1. நோயற்றவன்; one not subject to disease, as God. *"நாதனனாமயன்" (ஞானா. 48).* 2. அருகன் (சூடா.); Arhat.

*[Skt. an-āmaya > த. அனாமயன்.]*

**அனாயம்** *anāyam,* பெ.(n.) 1. முறைகேடு; injustice. 2. வீண்; unprofitableness. *"ஆவி யனாயமே யுகுத்தெனைய" (கம்பரா. கும்ப. 140).*

*[Skt. a-nyāya > த. அனாயம்.]*

**அனாயாசம்** *anāyāšam,* பெ.(n.) வருத்தமின்மை; absence of pain.

*[Skt. an-āyāsa > த. அனாயாசம்.]*

**அனாவசியம்** *anāvašiyam,* பெ.(n.) தேவையற்றது; unneccessary.

**த.வ. தேவையின்மை.**

*[Skt. an-ā-vašya > த. அனாவசியம்.]*

**அனிச்சை**[1] *aniccai,* பெ.(n.) விருப்பின்மை (வேதா. சூ. 175); absence of desire.

**த.வ. ஒவ்வாமை.**

*[Skt. an-icchā > த. அனிச்சை.]*

**அனிச்சை**[2] *aniccai,* பெ.(n.) பழக்கத்தின் காரணமாக அல்லது தன்னை அறியாமல் ஒரு செயலைச் செய்கிற தன்மை; that which is involuntary. *"கண் இமைப்பது ஒரு அனிச்சைச் செயல்".*

*[Skt. an-icchā > த. அனிச்சை.]*

**அனிட்டம்** *aniṭṭam,* பெ.(n.) வெறுப்பு, வெறுப்பானது; that which is indesirable, unpleasent. *"அனிட்டநின் றகற்றி யிட்டநன் குதவி" (சிவப்பிரபந். நெடுங்கழி. 4).*

*[Skt. an-iṣṭa > அனிஷ்டம் > த. அனிட்டம்.]*

**அனிருதம்** *anirudam,* பெ.(n.) பொய்; false hood.

*[Skt. an-ṛta > த. அனிருதம்.]*

**அனீகினி** *anīkini,* பெ.(n.) படை; army. *"அனீகினித் தூளி" (பாரத. வாரணா. 76.).*

*[Skt. anīkini > த. அனீகினி]*

**அனிசு** *aṉisu,* பெ.(n.) 1. பெருஞ்சீரகம்; anise (w.). 2. நாண்மீன் (நட்சத்திர) சீரகம் (மூ.அ.); star-anise.

[*Fr. anis > த. அனிசு.*]

**அனு**[1] *aṉu,* இடை.(prep.) 'பின்' எனப் பொருள் தரும் வடமொழி முன்னடைகளுலொன்று; a sanskrit prefix meaning 'after'.

[*Skt. hanu > த. அனு.*]

**அனு**[2] *aṉu,* பெ.(n.) தாடை; jaw. *"நின்னனு வற்றிடலா லனுமனெனும் பேர்பெற்று" (உத்தரரா. அனுமப். 34).*

[*Skt. hanu > த. அனு.*]

**அனு**[3] *aṉu,* பெ.(n.) 1. மஞ்சள் (நாநார்த்த.); turmeric. 2. கருவி (நாநார்த்த.); weapon. 3. நோய் (நாநார்த்த.); disease. 4. இறப்பு (நாநார்த்த.); death. 5. நாகணம் என்னும் மணந் தரும் மரம் (நாநார்த்த.); a tree yielding an aromatic substance. 6. முகம் (பொதி. நி.); face.

[*Skt. hanu > த. அனு.*]

**அனுக்கிரகம்** *aṉu-k-kiragam,* பெ.(n.) 1. அருள்; grace, mercy. 2. (சிவனியம்) கடவுளின் ஐந்தொழில்களிலொன்று (பஞ்ச கிருத்தியம்); (šaivam) function of showing grace, designed to liberate the souls from bondage, one of *pañja-kiruttiyam,* q.v.

த.வ. ஏற்றருளல்.

[*Skt. anu-graha > த. அனுக்கிரகம்.*]

**அனுக்கிரகி–த்தல்** *aṉukkiragi-,* 4 செ.குன்றாவி. (v.t.) அருள் செய்தல்; to show favour to, bestow grace upon, have mercy on.

[*Skt. anu-graha > த. அனுக்கிரகி–,*]

**அனுக்கிரி–த்தல்** *aṉukkiri-,* 4 செ. குன்றாவி. (v.t.) அருள் செய்தல்; to bless, to show favour to. *"வேங்கட வராட்கொண் டனுக்கிரிக்க" (தெய்வச். விறலிவிடு. 29).*

[*Skt. anu-grī > த. அனுக்கிரி–,*]

**அனுகதம்** *aṉugadam,* பெ.(n.) தொடர்ந்து வருவது; that which follows or comes after. *"அனுகதமா யப்பொழுதே............ பார்வைகள் வந்தடையும்" (ஞானவா. தாசூர். 21).*

[*Skt. anu-gata > த. அனுகதம்.*]

**அனுகம்பம்** *aṉugambam,* பெ.(n.) இரக்கம்; sympathy, compassion. *"அனுகம்பம் ...... உடையவரே சிறந்தார்" (சிவதரு. பல. 39).*

[*Skt. anu-kampā > த. அனுகம்பம்.*]

**அனுகற்பம்** *aṉu-gaṟpam,* பெ.(n.) மந்தையில் இருந்து எடுத்த ஆவின் (பசுவின்) சாணத்தைக் கொண்டு முறைப்படி உண்டாக்கிய திருநீறு; generally a less stringent alternative to a rule, here applied to the sacred ashes prepared according to rule from cowdung picked up in pasture lands one of three viputi. *"இனியனு கற்பந்தனையும் கூறுவம்" (சைவச. பொது. 179).*

[*Skt. anu-kalpa > த. அனுகற்பம்.*]

**அனுகாரம்** *aṉugāram,* பெ.(n.) ஒன்றைப் போலச் செய்கை (திவ். திருப்பா. வியா. பிர.); imitation.

[*Skt. anu-kāra > த. அனுகாரம்.*]

**அனுகூலம்** *aṉukūlam,* பெ.(n.) 1. நன்மை; good, blessing. 2. உதவி; friendly assistance, kindness. 3. (காரிய சித்தி) வினை கைகூடல்; success, prosperity.

த.வ. கைகூடல்.

[*Skt. anu-kūla > த. அனுகூலம்.*]

**அனுகூலன்** *aṉukūlaṉ,* பெ.(n.) இதமாக நடப்பவன் (திவ். பெரியாழ். 4,4,2); one who is friendly or helpful.

[*Skt. anu-kūla > த. அனுகூலன்.*]

**அனுச்சை** *aṉuccai,* பெ.(n.) அனுமதி; permission. *"அரசனு மனுச்சை செய்ய" (திருவிளை. சமணரை. 10).*

த.வ. ஒப்புகை.

[*Skt. anu-jñā > த. அனுஞ்ஞை → அனுச்சை.*]

**அனுசம்** *anušam*, பெ.(n.) (பனை) ஒரு நாண் மீன்; the 17th naksatra, part of scorpio.

*[**Skt.** anu-rādha > த. அனுசம்.]*

**அனுசயம்**[1] *anušayam*, பெ.(n.) செய்தற்கு வருந்தும் தன்மை; repentance. *"அனுசயப்பட்டது விதுவென்னாதே" (தேவா. 784 : 6).*

**த.வ. கழிவிரக்கம்.**

*[**Skt.** anu-šaya > த. அனுசயம்.]*

**அனுசயம்**[2] *anušayam*, பெ.(n.) 1. வழக்காடுகை; contest, objection. 2. பெரும்பகை; feud. 3. பின்கூறு, தொடர்பகுதி; sequel.

*[**Skt.** anu-šaya > த. அனுசயம்.]*

**அனுசரணம்** *anušaraṇam*, பெ.(n.) சார்ந்தொழுகல் (கோயிலொ. 13); following, going after.

*[**Skt.** anu-saraṇa > த. அனுசரணம்.]*

**அனுசரணை** *anušaraṇai*, பெ.(n.) 1. சார்ந்தொழுகுகை; following, going after. 2. உதவி (கொ.வ.); support, help.

*[**Skt.** anu-šaraṇa > த. அனுசரணை.]*

**அனுசரி–த்தல்** *anušari-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. பின்பற்றுதல்; to follow, practice. 2. உடன்படுதல் (ஆமோதித்தல்); to support, second. 3. வழிபடுதல் (வின்.); to worship, reverence. 4. கொண்டாடுதல் (வின்.); to celebrate, keep, as a day, observe, as a rite.

*[**Skt.** anu-šara > த. அனுசரி–,]*

**அனுசரிப்பு** *anušarippu*, பெ.(n.) 1. பின்பற்றுகை; following, observing. 2. இணக்கம்; conformity.

*[**Skt.** anu-šara > த. அனுசரிப்பு.]*

**அனுசன்** *anušan*, பெ.(n.) தம்பி (பிங்.); younger brother.

*[**Skt.** anu-ja > த. அனுசன்.]*

**அனுசாரி**[1] *anušāri*, பெ.(n.) பின்பற்றுவோன்; adherent, follower. *"நேசானுசாரியாய் விவகரிப்பேன்" (தாயு. பரிபூர. 1).*

*[**Skt.** anu-sārin > த. அனுசாரி.]*

**அனுசாரி**[2] *anušāri*, பெ.(n.) மாணாக்கன்; disciple.

*[**Skt.** anu-sārin > த. அனுசாரி.]*

**அனுசிதம்** *anušidam*, பெ.(n.) 1. தகாதது; that which is unfit, improper. *"யானை யனுசிதமென்றதனைச் சிதைக்க" (பெரியபு. கோச்செங். 4).* 2. பொய் (திவா.); falsehood. 3. கக்கல்; வாயாலெடுப்பு செய்கை (உரி. நிக.); vomiting.

*[**Skt.** an-ucita > த. அனுசிதம்.]*

**அனுசுருதி** *anu-curuti*, பெ.(n.) ஒத்த சுருதி (சீவக.657, உரை); (Mus.) note assonant and harmonious with the curuti.

**த.வ. ஒத்தொலி.**

*[**Skt.** anu-sruti > த. அனுசுருதி.]*

**அனுசூதன்** *anušūdan*, பெ.(n.) விடாது தொடர்ந்திருப்பவன் (வேதா.சூ.99); one whose connection is regular and uninterrupted.

*[**Skt.** anu-syūta > த. அனுசூதன்.]*

**அனுசென்மம்** *anušenmam*, பெ.(n.) (கணியம்) ஒருவனின் பிறந்த நாண்மீனிற்குப் பத்தாவது நாண்மீன் (இலக். வி. பக். 796); (Astrol.) the tenth naksatra from one's natal star.

*[**Skt.** anu-janma > த. அனுசென்மம்.]*

**அனுசை** *anušai*, பெ.(n.) தங்கை; younger sister.

*[**Skt.** anu-jā > த. அனுசை.]*

**அனுசைவர்** *anušaivar*, பெ.(n.) (சிவதீக்கை) சிவ குருவம் பெற்ற சத்திரியன்; நால்வகை வருணத்துள் இரண்டாம் வருணத்தினரான வைசியர் (சைவச. பொது. 435, உரை); *šaiva* initiates among ksatryas or *vaišyas*.

*[**Skt.** anu-šaiva > த. அனுசைவர்.]*

**அனுஞ்ஞாலங்காரம்** *anuññālaṅgāram,* பெ.(n.) வேண்டலணி (அணியி.71); figure of speach in which an undesirable thing is counted as ultimately leading to something desirable.

*[Skt. an-jñā > த. அனுஞ்ஞாலங்காரம்.]*

**அனுட்டணம்** *anuṭṭaṇam,* பெ.(n.) 1. வெப்பமின்மை (சங். அக.); coolness. 2. சோம்பல் (யாழ்.அக.); idleness.

*[Skt. an-uṣṇa > த. அனுட்டணம்]*

**அனுட்டானம்** *anuṭṭāṇam,* பெ.(n.) 1. (சந்தியாவந்தனம்) காலை, உச்சி, மாலை வழிபாடு; observance of religious rites. *"வயங்கனுட் டானம் பண்ணி" (மச்சபு. வீம. 21).* 2. வழக்கம்; established custom.

*[Skt. anu-ṣṭhāna > த. அனுட்டானம்]*

**அனுட்டானி-த்தல்** *anuṭṭāṇi-,* 4 செ. குன்றாவி.(v.t.) வழிபடுதல்; to practice. *"சொல்லிய தனுட்டானித்து" (விவேக. சூடா. 37).*

*[Skt. anuṣṭhāna > த. அனுட்டானி-,]*

**அனுட்டி-த்தல்** *anuṭṭi-,* 4 செ. குன்றாவி.(v.t.) பின்பற்றுதல்; to practice, as religious rites. *"மனிதரு மனுட்டித்து.... வீடடைந்தார்" (திருவிளை. இந்திரன் முடி. 29).*

*[Skt. anu-ṣṭhā > த. அனுட்டி-,]*

**அனுதபி-த்தல்** *anudabi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. கழிந்ததற்கிரங்குதல்; to repent. 2. பிறர் இன்பதுன்பங்களில் அவரோடொன்று தல் (கிறித்.); to sympathise.

*[Skt. anu-tāpa > த. அனுதபி-]*

**அனுதாத்தம்** *anudāttam,* பெ.(n.) படுத்தலோசை; grave accent, esp. vedic. *"உதாத்தமோசை யனுதாத்த சொரிதம்" (திருவிளை. தடாதகை. 8).*

*[Skt. an-udātta > த. அனுதாத்தம்.]*

**அனுதாபம்** *anudābam,* பெ.(n.) 1. கழிவிரக்கம்; repentance, remorse. 2. இரக்கம்; pity. 3. பிறர் இன்ப துன்பங்களில் அவரோ டொன்றுகை (chr.); sympathy.

த.வ. அருளிரக்கம்.

*[Skt. anu-tāpa > த. அனுதாபம்.]*

**அனுதாபி** *anudābi,* பெ.(n.) ஓர் இயக்கத்தில் உறுப்பினராக இல்லாமல் (ஆதரவு) முன்னுதவி தருபவர்; பற்றாளர்; sympathizer (mostly of a political party).

த.வ. ஆதரவாளர்.

**அனுதினம்** *anu-dinam,* பெ.(n.) நாடோறும் (திருவிளை. விடையில. 4.); every day, daily.

*[Skt. anu-dina > த. அனுதினம்.]*

**அனுநாசிகம்** *anunāsigam,* பெ.(n.) மெல்லெழுத்து (பி.வி. 5); nasal.

*[Skt. anu-nāsika > த. அனுநாசிகம்.]*

**அனுப்பிரவேசம்** *anu-p-piravēšam,* பெ.(n.) தொடர்ந்து புகுகை; entering after another.

*[Skt. anu-pravēša > த. அனுப்பிரவேசம்.]*

**அனுப்பிராசம்** *anu-p-pirāšam,* பெ.(n.) வழியெதுகை (இலக். வி. 748. உரை); repetition of rhyming syllables.

*[Skt. anu-prasā > த. அனுப்பிராசம்.]*

**அனுபந்தம்** *anubandam,* பெ.(n.) 1. உறவின் முறை; relation, connection. 2. நூலின்பின் சேர்க்கப்படும் பிற்சேர்க்கை (இக்.வ.); appendix, supplement.

*[Skt. anu-bandha > த. அனுபந்தம்.]*

**அனுபந்தன்** *anubandan,* பெ.(n.) தீமைக்கு உடன்படுபவன்; accomplice, one who approves a sinful act. *"காயுமவர்க் கனுபந்தருமா யுள்களித்தீரே" (சிவதரு. சுவாக். 195).*

*[Skt. anu-bandha > த. அனுபந்தன்.]*

**அனுபமன்** *anubaman,* பெ.(n.) ஒப்பில்லாதவன்; one who is incomparable. *"அனுபமன் செழியன்" (திருவாலவா. 13, 15.).*

த.வ. இணையிலி.

*[Skt. an-upama > த. அனுபமன்.]*

**அனுபமை** *aṉubamai,* பெ.(n.) 1. ஒப்பில்லாதது; that which is incomparable, matchless. 2. தென்மேற்றிசைப்பெண் யானை (சது.); name of the female elephant of the south-west, mate of kumutam.

*[Skt. an-upamā > த. அனுபமை.]*

**அனுபல்லவி** *aṉuballavi,* பெ.(n.) இசைப்பாடலில் இரண்டாம் உறுப்பான உடனெடுப்பு; second section of the South Indian melody known as kirthanam.

**த.வ. இடைநிலை.**

*[Skt. anu+pallavi > த. அனுபல்லவி.]*

இசைப்பாடலில் எடுப்பு, உடனெடுப்பு, தொடுப்பு என மூன்று கூறுகளாகப் பகுத்துள்ளனர். அவற்றை வடமொழியில் முறையே பல்லவி, அனுபல்லவி, சரணம் என்பர்.

**அனுபலத்தி** *aṉubalatti,* பெ.(n.) ஒன்றன் இன்மையால் மற்றொன்றின் இன்மையை அறியும் ஏது (சி.சி.அளவை. 10, மறைஞா.); inference of the absence of one thing from the absence of something else.

*[Skt. an-upalabdhi > த. அனுபலத்தி.]*

**அனுபலத்தியேது** *aṉubalatti-y-ēdu,* பெ.(n.) **அனுபலத்தி** பார்க்க; see *aṉubalatti.*

*[Skt. an-upalab-dhi + hetu > த. அனுபலத்தியேது.]*

**அனுபவக்காட்சி** *aṉubava-k-kāṭši,* பெ.(n.) (பிரத்தியட்ச ஞானம்) காட்சியறிவு (வின்.); perception by actual experience.

*[அனுபவம்+காட்சி.]*

*[Skt. anu-bhava >த. அனுபவம்.]*

**அனுபவசாலி** *aṉubavašāli,* பெ.(n.) பட்டறிவு மிக்கவன்; person of large experience.

*[அனுபவம் + சாலி]*

*[Skt. anubhava > த. அனுபவம்.]*

*த. சாலி. சாலுதல் = நிறைதல். சாலி = நிறைந்தவன், மிகுந்தவன்.*

**அனுபவம்** *aṉupavam,* பெ.(n.) 1. பட்டறிவு; experience. *"இமையோர் மெய்த்தனுபவ முதவுவுர்" (இரகு. திக்குவி. 86).* 2. துய்ப்பு; enjoyment. *"அந்த வீடு அவன் அனுபவத்தில் இருக்கிறது".*

**த.வ. வினையறிவு.**

*[Skt. anu-bhava > த. அனுபவம்.]*

**அனுபவி¹-த்தல்** *aṉubavi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. துய்த்தல்; to experience good or evil. *"இச்சாப மனுபவித்தல்லது விடாதல்" (காஞ்சிப்பு. அரிசா. 15).* 2. உரிமையாகக் கையாளுதல்; to enjoy possession of. *"சொத்தை அவன் அனுபவிக்கிறான்".* 3. இன்பநுகர்தல்; to enjoy happiness.

*[Skt. anu-bhava > த. அனுபவி-,]*

**அனுபவி²** *aṉubavi,* பெ.(n.) 1. இன்பமாய் வாழ்பவன்; one who lives a life of enjoyment. 2. ஆன்மஞானி (வேதா. சூ. 14); one who has realised one's self.

*[Skt. anu-bhavin > த. அனுபவி.]*

**அனுபாலனம்** *aṉubālaṉam,* பெ.(n.) காப்பு; preservation.

*[Skt. anu-pālana > த. அனுபாலனம்.]*

**அனுபானம்** *aṉubāṉam,* பெ.(n.) மருந்து வைக்கும் கலன்; vehicle of medicine.

*[Skt. anu-pāna > த. அனுபானம்.]*

**அனுபூதி** *aṉubūti,* பெ.(n.) காட்சியறிவு (வேதா. சூ. 151); perception, apprehension, realisation.

**த.வ. பட்டறிவு.**

*[Skt. anu-bhūti > த. அனுபூதி.]*

**அனுபோகசாலி** *aṉubōgašāli,* பெ.(n.) **அனுபவசாலி** பார்க்க; see *aṉubavasāli.*

*[Skt. aṉubhōga> த. அனுபோகசாலி.]*

**அனுபோகம்** *aṉubōgam,* பெ.(n.) 1. துய்ப்பு; enjoyment. *"சிவமாதுடனே யனுபோகமதாய்" (திருப்பு. 518).* 2. பழக்கம்; experience,

practice. 3. கையாட்சி; legal possession. 4. நுகர வேண்டிய தீவினைப்பயன்; that which is fated to be experienced, esp. results of evil deeds. *"அனுபோகம் தொலைந்தால் அவிழ்தம் பலிக்கும்".*

*[Skt. anu-bhōga > த. அனுபோகம்.]*

**அனுபோகி[1]–த்தல்** *anubōgi-,* 4 செ. குன்றாவி.(v.t.) துய்த்தல்; to enjoy. *"அன்னை தந்தை யிருவருந்தா னனுபோகிக்க" (ஞானவெட்டி. பாயி. 24).*

த.வ. இன்பம் நுகர்தல்.

*[Skt. anu-bhōga > த. அனுபோகி–,]*

**அனுபோகி[2]** *anubōgi,* பெ.(n.) இன்பநுகர்ச்சி யுடையவன்; one who has experience of the pleasures of life.

*[Skt. anu-bhōgin > த. அனுபோகி–,]*

**அனுமக்கொடியோன்** *anuma-k-kodiyōn,* பெ.(n.) குரங்குக் கொடியுடைய அருச்சுனன்; *Arjunan*, as having the figure of Hanuman as his flag.

*[அனுமன் + கொடியோன்.]*

*[Skt. hanumān > த. அனுமன்.]*

**அனுமதம்** *anumadam,* பெ.(n.) வீணைவகை (பாரத. ஒழிபி. 15); kind of lute.

**அனுமந்தன்** *anumandan,* பெ.(n.) அனுமன் (இராமநா. சுந்தர. 31); nom. pl. of Hanumat, *Hanumān.*

*[Skt. hanuman-tān>த. அனுமந்தன்.]*

**அனுமரணம்** *anumaranam,* பெ.(n.) உடன் இறப்பது; woman who dies with her husband, sati. *"பந்தமுற வனுமரணஞ் செய்த வுருக்குமணி" (நல். பாரத. முத்தியடை. 6).*

த.வ. உடன்கட்டை.

*[Skt. anu-marana > த. அனுமரணம்.]*

**அனுமன்** *anuman,* பெ.(n.) காற்றின் புதல்வன் (அனுமன்) (உத்தரரா. அனுமப். 34); nom. sing. of Hanumat *Hanumān.*

*[Skt. Hanu-mān > த. அனுமன்.]*

**அனுமான்** *anumān,* பெ.(n.) காற்றின் புதல்வன் (அனுமன்); *Hanumān,* the monkey god, who greatly aided Rāma in his war with *Rāvana.*

த.வ. திருக்குரக்கன்.

*[Skt. Hanu-mān > த. அனுமான்.]*

**அனுமானப்பிரமானம்** *anumāna-p-piramānam,* பெ.(n.) கருதலளவை; inference, as a mode of proof.

*[Skt. anu -māna + Pirāmāna > த. அனுமானப்பிரமானம்.]*

**அனுமானபலன்** *anumānapalan,* பெ.(n.) (நியாயவிசாரணை) முறை ஆய்கையில் ஐயத்தால் கிடைக்கும் நன்மை (C.G.); benefit of the doubt.

*[Skt. anu-māna+phala > த. அனுமான பலன்.]*

**அனுமி–த்தல்** *anumi-,* 4செ.குன்றாவி.(v.t.) கருதுதல்; to infer. *"தூய மதிரு ரனுமித்துச் சொல்லு மருங்குல்" (பிரபுலிங். பிரபு. 37).*

த.வ. உன்னித்தல்.

*[Skt. anu-miti-, > த. அனுமி–,]*

**அனுமிதி** *anumidi,* பெ.(n.) கருதலளவையா லுண்டாகும் அறிவு (தருக்கசங். 45); (log.) knowledge obtained by inference.

*[Skt. anu-miti > த. அனுமிதி.]*

**அனுமேயம்** *anumēyam,* பெ.(n.) கருதலால் (அனுமானத்தால்) அறியத்தக்கது (மணிமே. 27, 26); (log.) that which is inferable.

*[Skt. anu-mēya > த. அனுமேயம்.]*

**அனுயோகம்** *anuyōgam,* பெ.(n.) தருக்கத்தில் எழுப்பும் வினா (பு.வெ.8, 19, உரை); question in argument.

*[Skt. anu-yōga > த. அனுயோகம்.]*

**அனுராகம்** *anurāgam,* பெ.(n.) 1. அன்பு (திவ். திருவாய். 8,8,8); attachment, affection, love. 2. காமப்பற்று; lasciviousness. *"அனுராக போக மிகுமாதர்" (பாரத. குரு. 139).*

*[Skt. anu-rāga > த. அனுராகம்.]*

**அனுரூபம்** *anurūbam,* பெ.(n.) ஏற்றது; fitness, suitability. *"தோன்றினர் கருமவனு ரூபமாய்" (சூத. சிவ. 11, 14).*

*[Skt. anu-rūpa > த. அனுரூபம்.]*

**அனுலோமன்** *anulōman,* பெ.(n.) உயர்குல ஆடவனுக்கு இழிகுலப் பெண்ணிடம் பிறந்தவன்; offspring of parents where the mother is inferior in caste to the father.

*[Skt. anu-lōma > த. அனுலோமன்.]*

**அனுவர்த்தனம்** *anuvarttanam,* பெ.(n.) பின்பற்றுதல்; following, compliance.

*[Skt. anu-vartana > த. அனுவர்த்தனம்.]*

**அனுவாகம்** *anuvāgam,* பெ.(n.) மறையின் உட்பகுப்பு; a sub-division of the veda.

*[Skt. anu-vāka > த. அனுவாகம்.]*

**அனுவாதம்** *anuvādam,* பெ.(n.) முன்னர் பெறப்பட்டதைப் பின்னர் எடுத்துக் கூறுதல் (குறள், 7239, உரை); repeating by way of explanation.

*[Skt. anu-vāda > த. அனுவாதம்.]*

**அனுவிருத்தி** *anuvirutti,* பெ.(n.) 1. தொடர்ச்சி (சி.சி.2, 60, சிவாக்.); continuance. 2. கூடவிருக்கை (சூத. எக்கி. பூ. 19, 10); being with, attending.

*[Skt. anu-vṛtti > த. அனுவிருத்தி.]*

**அனேகம்**[1] *anēgam,* பெ.(n.) பல; many, not one. *"யானைமீதுவரும் யானையுமனேக மெனவே" (கலிங். அவதா. 57.).*

*[Skt. an-ēka > த. அனேகம்.]*

**அனேகம்**[2] *anēgam,* பெ.(n.) காலம்; time.

*[Skt. an-ēka > த. அனேகம்.]*

**அனேகமாய்** *anēgam-āy,* வி.எ.(adv.) 1. பெரும்பாலும்; mostly, almost, very nearly. 2. நிகழக்கூடிய; most probably. *'அவர் அனேகமாய் இன்று வருவார்'.*

*[Skt. an-ēka > த. அனேகமாய்.]*

**அனேகாந்திகம்** *anēgāndigam,* பெ.(n.) 1. பலவகை; many ways. 2. ஏது போலிகளுள் ஒன்று; a fallacy in reasoning. (log.).

*[Skt. an-aikāntika > த. அனேகாந்திகம்.]*

**அனேகான்மவாதம்** *anēgānma-vādam,* பெ.(n.) ஆன்மாக்கள் பல உண்டு எனும் கொள்கை; doctrine which maintains the existence of individual soul.

*[Skt. an-ēka + ātma + vāda > த. அனேகான்மவாதம்.]*

**அனைகாந்திகம்** *anaigāndigam,* பெ.(n.) **அனேகாந்திகம்** பார்க்க; see *anēgāndigam.*

*[Skt. an-aikāntika > த. அனைகாந்திகம்.]*

**ஆக்கர்**[1] *ākkar,* பெ.(n.) உலாவிக் கொண்டே துணி முதலியவற்றை வணிகம் செய்வோன்; pedlar, hawker.

*[E. Hawker > த. ஆக்கர்.]*

**ஆக்கர்**[2] *ākkar,* பெ.(n.) துரப்பணம்; centerbit, tool for boring holes.

*[E. Auger > த. ஆக்கர்.]*



**ஆக்கிரகம்** *ākkiragam,* பெ.(n.) 1. விடாப்பிடி; persistence, obstinacy, determination. 2. கடுங்கோபம் (திவ். பெரியாழ். 3, 5, வியா. பிர); great anger, violent, temper, wrath.

*[Skt. ā-graha > த. ஆக்கிரகம்.]*

**ஆக்கிரமணம்** *ākkiramanam,* பெ.(n.) வலிந்து கவர்கை; seizing, taking by force.

*[Skt. ā-kar-mana > த. ஆக்கிரமணம்.]*

**ஆக்கிரமி-த்தல்** *ākkirami-,* 4 செ.குன்றாவி. (v.t.) வலிந்து கவர்தல்; to seize by violence, take or occupy by force.

[**Skt.** *ā-kram-,* > *த. ஆக்கிரமி-த்தல்.*]

**ஆக்கிரமிப்பு** *ākkiramippu,* பெ.(n.) வன்கவர்ப்பு; occupy by force.

[**Skt.** *ā-kram,* > *த. ஆக்கிரமிப்பு.*]

**ஆக்கிராணம்** *ākkirāṇam,* பெ.(n.) 1. முகர்கை; act of smelling. 2. மூக்கு (சூடா.); nose. 3. மூக்கிலிடும் மருந்துப் பொடி; a medicinal snuff intended to dispel humours from the head.

[**Skt.** *ā-ghrāṇa* > *த. ஆக்கிராணம்.*]

**ஆக்கிராணி-த்தல்** *ākkirāṇi-,* 4 செ. குன்றாவி.(v.t.) முகர்தல்; to smell, snuff up.

[**Skt.** *ā-ghrāṇi* > *த. ஆக்கிராணி-த்தல்.*]

**ஆக்கிராந்தம்** *ākkirāndam,* பெ.(n.) கைக்கொள்ளப்பட்டது; that which is seized, taken possession of. *"அஞ்ஞானாக் கிராந்தமாயிருக்கிற"* **(சி.சி.2,9) (சிவாக்.).**

**த.வ. கையகப்பேறு.**

[**Skt.** *ā-krānta* > *த. ஆக்கிராந்தம்.*]

**ஆக்கினாசக்கரம்** *ākkiṉā-cakkaram,* பெ.(n.) சக்கரம் போல் எங்கும் சுழலும் அரசாணை; king's authority, revolving as a discus and ready to strike evil-doers.

[*ஆக்கினா+சக்கரம்.*]

[**Skt.** *ājñā* > *த. ஆக்கினா.*]

**ஆக்கினாசத்தி** *ākkiṉā-catti,* பெ.(n.) அரசனாணையின் வன்மை; regal power to enforce a command. *"தனதாக்கினா சத்தியுங் கோடாமற் செங்கோல் நடத்தா நிற்பன்"* **(சி.சி.2,31, மறைஞா.).**

**த.வ. ஆணையாற்றல்.**

[**Skt.** *ājñā+šakti* > *த. ஆக்கினாசத்தி.*]

*த. சத்தி* >**Skt.** *சக்தி*

**ஆக்கினாபங்கம்** *ākkiṉā-paṅgam,* பெ.(n.) ஆணை மீறுகை; insubordination.

[**Skt.** *ājñā+bhanga* > *த. ஆக்கினாபங்கம்.*]

**ஆக்கினேயபுராணம்** *ākkiṉēya-purāṇam,* பெ.(n.) பதினெண் தொன்மத்தி(புராணத்) லொன்று; a chief *purāṇam,* one of *patiṉeṉ-purāṇam.*

[**Skt.** *āgnēya+purānam* > *த. ஆக்கினேய புராணம்.*]

**ஆக்கினேயம்**[1] *ākkiṉēyam,* பெ.(n.) 1. தீக்கடவுளுக்குரியது; that which belongs to Fire God. 2. தென் கீழ்த்திசை; the South East quarter of which Fire God is guardian. 3. சிவாகமத்துளொன்று; an ancient šaiva scripture in Sanskrit, one of 28 sivāgamam.

[**Skt.** *āgnēya* > *த. ஆக்கினேயம்.*]

**ஆக்கினேயம்**[2] *ākkiṉēyam,* பெ.(n.) திருநீறு; sacred ashes.

[**Skt.** *āgnēya* > *த. ஆக்கினேயம்.*]

**ஆக்கினேயச்நானம்** *ākkiṉēya-c(š)-nāṉam,* பெ.(n.) தூய்மைக்காக திருநீற்றைப் பூசிக்கொள்ளல் (சித். சிகா. விபூதி. 12, உரை); purification by smearing one's body with sacred ashes.

[**Skt.** *āgnēya+snāṉam* > *த. ஆக்கினேயச் நானம்.*]

**ஆக்கினேயாச்திரம்** *ākkiṉēyāc(š)tiram,* பெ.(n.) தீயைத் தேவியாகக் கொண்ட அம்பு; missile presided over by fire.

[**Skt** *āgnēyā+astra* > *த. ஆக்கினே யாச்திரம்.*]

**ஆக்கினை** *ākkiṉai,* பெ.(n.) 1. கட்டளை; order, command, mandate. 2. தண்டனை; punishment, penalty. *"தலைக்குமிஞ்சின ஆக்கினையில்லை".* 3. கட்டைவிரல்; thumb.

[**Skt.** *ā-jñā* > *த. ஆக்கினை.*]

**ஆக்கினைப்பத்திரம்** *ākkiṉai-p-pattiram,* பெ.(n.) அரசனது எழுத்து மூலமான கட்டளை; king's writ, royal edict.

[**Skt.** *ā-jñā+patra* > *த. ஆக்கினைப்பத்திரம்.*]

**ஆக்குரோசம்** *ākkurōšam,* பெ.(n.) கடுஞ்சினம்; great rage.

த.வ. **வெஞ்சினம்.**

*[Skt. ā-krōša > த. ஆக்குரோசம்.]*

**ஆக்குவயம்** *ākkuvayam,* பெ.(n.) பெயர் (பிங்.); name.

*[Skt. a-hvaya > த. ஆக்குவயம்.]*

**ஆகடியம்** *āgadiyam,* பெ.(n.) 1. பகடி; mockery, ridicule, banter. *"ஆகடியம் பண்ணாதே".* 2. பொல்லாங்கு; mischief, cruelty. *"அஞ்சுபூதமுண்டாகடிய காரரிவர்" (திருப்பு. 156).*

**தெ.** ஆகடமு; **க.** ஆகட.

*[Skt. āgadamu > த. ஆகடியம்.]*

**ஆகண்டலன்** *āgantalan,* பெ.(n.) இந்திரன் (பிங்.); Indran, the clipper of the wings of mountains.

த.வ. **தேவர்கோன்.**

*[Skt. ā-khandala > த. ஆகண்டலன்.]*

**ஆகதம்** *āgadam,* பெ.(n.) அலுக்கம் (கமகம்) பத்தனுளொன்று; succession of staccato notes in ascent, one of ten *kamakam.*

*[Skt. āhata > த. ஆகதம்.]*

**ஆகதர்** *ākatar,* பெ.(n.) சமணர்; jains. *"ஆகதர்க்கெளி யேனலேன்" (தேவா. 858, 2).*

*[Skt. ārhata > த. ஆகதர்.]*

**ஆகந்துகம்** *āgandugam,* பெ.(n.) இடையில் வந்தேறியது; that which has come accidentally, incidentally, uninvited. *"ஆகந்துக மன்றிக்கே" (ஈடு. 1,1,1,1).*

*[Skt. ā-gantuka > த. ஆகந்துகம்.]*

**ஆகம்பிதசிரம்** *āgambida-širam,* பெ.(n.) தலையால் காட்டுகை; gesture of the head to express a greeting.

*[Skt. ā-kampita+ciram > த. ஆகம்பிதசிரம்]*

**ஆகம்பிதமுகம்** *āgambida-mugam,* பெ.(n.) இசைவிற்கு அறிகுறியாக மேல்கீழாகத் தலையாட்டுகை; nod of approbation, one of 14 *muka-v-apinayam.*

*[Skt. ā-kampita+mugam > த. ஆகம்பிதமுகம்]*

**ஆகமசாத்திரம்** *āgama-šātiram,* பெ.(n.) சிவனிய, மாலிய, சமணத் தந்திரங்கள்; a class of sacred works in Sanskrit, Saiva, Vaisṇava, Jaina.

த.வ. **தோன்றியம்.**

*[Skt. ā-gama+sāstiram > த. ஆகமசாத்திரம்]*

**ஆகமம்** *āgamam,* பெ.(n.) 1. மறைநூல்கள் (பிங்.); Sastras, scriptures, one of six *piramāṇam.* 2. முதல்வன் வாக்கு; scriptures believed to be revealed by God and peculiar to Saivism, Vaisṇavism, Šāktismor Jainism. 3. தோன்றல் நிலையில் வருமெழுத்து (வீரசோ. சந்தி. 13); (Gram.) augment, letter or syllable inserted in the combination of two words or two parts of a word.

*[Skt. ā-gama > த. ஆகமம்.]*

**ஆகமமலைவு** *āgama-malaivu,* பெ.(n.) மறைநூற்கு மாறாக வருவது (தண்டி. 121); anything contrary to scriptures.

*[ஆகம+மலைவு.]*
*[Skt. ā-gama > த. ஆகமம்.]*

**ஆகமவளவை** *āgama-v-aḷavai,* பெ.(n.) அறிவிற்கு அடிப்படையாக விளங்கும் மூன்று நூல்கள் scriptures, one of three sources of knowledge.

*[ஆகம+அளவை.]*
*[Skt. ā-gama > த. ஆகம.]*

**ஆகமனம்** *āgamaṇam,* பெ.(n.) வருகை; coming, arrival.

*[Skt. ā-gamana > த. ஆகமனம்.]*

**ஆகர்சகம்** *āgarsagam,* பெ.(n.) கவர்வது; that which is attractive. *"மனசுக்கு ஆகர்ஷகமாயிருக்கிற சோலை".*

*[Skt. ā-karṣaka > த. ஆகர்சகம்.]*

**ஆகர்சணசக்தி** *āgarsaṇa-cakti,* பெ.(n.) கவருந்திறம்; power of drawing to oneself, force of gravitation.

த.வ. ஈர்ப்பாற்றல்.

*[Skt. ā-karṣaṇa > த. ஆகர்சணசத்தி.]*

**ஆகர்சணம்** *āgarsaṇam,* பெ.(n.) 1. இழுக்கை; pulling, drawing near, attracting. 2. எண் கருமத்தொன்று; magic art of summoning an absent person into one's presence, one of asta-karumam.

*[Skt. ā-karṣaṇa > த. ஆகர்சணம்.]*

**ஆகர்சி-த்தல்** *āgarsi-,* 4செ.கு.வி.(v.i.) 1. கவருதல், ஈர்த்தல்; to draw towards oneself, attract, fascinate. 2. ஆவியை வரவழைத்தல்; to invoke or adjure a demon summon a spirit. (w.).

*[Skt. ā-karṣa > த. ஆர்கசி-த்தல்]*

**ஆகரம்**[1] *āgaram,* பெ.(n.) 1. மணிகளின் சுரங்கம்; mine of precious stones. *"ஆகரங்களிற் படுவனவும்" (குறள், 736, உரை).* 2. உறைவிடம் (திவா.); source, seat, abode, store house.

**ஆகரம்**[2] *āgaram,* பெ.(n.) கூட்டம்; crowd.

*[Skt. ākara > த. ஆகரம்.]*

**ஆகரி**[1]**-த்தல்** *āgari-,* 4 செ.கு.வி.(v.i.) தருவித்தல்; to send for, secure, get. *"ஐவகை வண்ணமுமாகரித் தூட்டி" (பெருங். உஞ்சைக். 38, 149).*

*[Skt. āhr-,> த. ஆகரி-த்தல்.]*

**ஆகரி**[2] *āgari,* பெ.(n.) ஒரு பண் (சிலப். 14, 166, உரை); a special melody-type, specially suitable for singing at midnight.

*[Skt. āhiri> த. ஆகரி.]*

**ஆகருடணம்** *āgaruḍaṇam,* பெ.(n.) 1. **ஆகர்சணம்** பார்க்க; see *āgarsaṇam. "அகரமாதிமூன் றாகிய வாகருடணமே" (திருவிளை. எல்லம். 17).* 2. அழைக்கை (பிங்.); calling, invitation, summons.

*[Skt. ā-karṣaṇa > த. ஆகருடணம்.]*

**ஆகவபூமி** *āgava-būmi,* பெ.(n.) போர்க்களம் (பிங்.); battle-field.

*[Skt. ā-hava+būmi > த. ஆகவபூமி.]*

**ஆகவம்** *āgavam,* பெ.(n.) போர் (பாரத. பதின்மூன். 97); war, battle.

*[Skt. ā-hava > த. ஆகவம்.]*

**ஆகவனீயம்** *āgavaṉiyam,* பெ.(n.) வேள்வித்தீ வகை (திருமுரு. 181, உரை); one of three sacred fires connected with *Srauta ritual* in which oblations are generally offered.

*[Skt. ā-hava-niya > த. ஆகவனீயம்.]*

**ஆகவியன்** *āgaviyaṉ,* பெ.(n.) போர்வீரன் (நிகண்டு); warrior.

*[Skt. āhavya > த. ஆகவியன்]*

**ஆகளரசம்** *āgaḷa-rašam,* பெ.(n.) இதளியம்; mercury.

**ஆகச்மிகம்** *āgasmigam,* பெ.(n.) எதிர்பாராமல் தோன்றுவது; accidental, unforeseen, unexpected.

*[Skt. ākas-mika > த. ஆகச்மிகம்.]*

**ஆகா** *ākā,* பெ.(n.) ஒரு கந்தருவன் (நைடத. அன்னத்தைத்தூ. 66); a Gandharva associated with *Hūhū.*

*[Skt. hāhā > த. ஆகா.]*

**ஆகாசக்கத்தரி** *ākāša-k-kattari,* பெ.(n.) வெண்டை (யாழ்.); lady's finger.

*[Skt. ā-kāša+த. கத்தரி > த. ஆகாசக்கத்தரி.]*

**ஆகாசக்கப்பல்** *ākāša-k-kappal,* பெ.(n.) வானத்தில் செல்லும் விண்ணூர்தி; airship, balloon.

*[ஆகாசம்+கப்பல்.]*

*[Skt. ā-kāša>த. ஆகாசம்.]*

**ஆகாசக்கல்** *āgāša-k-kal,* பெ.(n.) வானத்தில் பறக்கும் அணு (வின்.); aeorolite in regard to which the belief is that it so dazzles the eye that it does not recover from the affection till the next day.

*[ஆகாசம்+கல்.]*

*[**Skt.** ākāša > த. ஆகாசம்.]*

**ஆகாசக்கோட்டை** *agāša-k-kōṭṭai,* பெ.(n.) கற்பனை அல்லது நடைமுறைக்கு ஏற்பில்லாத திட்டம் அல்லது எதிர்பார்ப்பு; castle in the air.

*[ஆகாசம்+கோட்டை.]*

*[**Skt.** ākāša > த. ஆகாசம்.]*

**ஆகாசகங்கை** *āgāša-gaṅgai,* பெ.(n.) 1. மந்தாகினி; the celestial ganges. 2. வான்வெளி (பால்வீதி) மண்டலம்; the milky way.

*[ஆகாசம்+கங்கை.]*

*[**Skt.** ā-kāša> த. ஆகாசம்.]*

**ஆகாசகமனம்** *āgāša-gamaṉam,* பெ.(n.) அறுபத்து நாலு கலைகளுளொன்றான வான் வழிச் செலவு; flying through the air, an art believed to be acquired by magic and yōga.

*[ஆகாசம்+மனம்.]*

*[**Skt.** ā-kāša> த. ஆகாசகம்.]*

**ஆகாசகருடன்** *āgāša-garuḍaṉ,* பெ.(n.) கொல்லங்கோவை (மலை.) எனும் செடி; a climbing shrub.

**ஆகாசகாமி** *āgāša-kāmi,* பெ.(n.) 1. பறந்து செல்லும் ஆற்றலுடையோன்; one who is able to fly through the air, an angel. 2. பறக்குங் குதிரை (வின்.); fabled horse, having the power of flying through the air.

*[**Skt.** ā-kāša+gāmin > த. ஆகாசகாமி.]*

**ஆகாசகாமினி** *āgāša-kāmiṉi,* பெ.(n.) வானத்திற் செல்லுதற்குதவும் ஒரு மந்திரம் (சீவக. 1713, உரை); incantation that gives one the power of flying through the air.

*[**Skt.** ā-kāša+gāmini > த. ஆகாசகாமினி.]*

**ஆகாசசபை** *āgāša-šapai,* பெ.(n.) காஞ்சிபுரத்து ஆடலரசனின் ஆடரங்கு (நடராச சபை) (அபி.சிந்.); dancing hall of *Natarāja* at *Kāñcipuram*, a vast, open space.

*[ஆகாச(ம்)+சபை.]*

*[**Skt.** ā-kāša> த. ஆகாசகம்.]*

*அவை→சவை>சபை* > **Skt.** *sabā.*

**ஆகாசத்தாமரை** *āgāša-t-tāmarai,* பெ.(n.) 1. பூடு வகை; a weed. 2. கொட்டைப் பாசி (மூ.அ.); seed moss. 3. இல்பொருள்; that which is absolutely non-existent as an aerial lotus.

த.வ. ஆகாயத்தாமரை.

*[ஆகாச(ம்) + தாமரை.]*

*[**Skt.** ā-kāša> த. ஆகாசம்.]*

**ஆகாசத்திற்பற–த்தல்** *āgācattiṟ-paṟa-,* 3 செ.கு.வி.(v.i.) 1. செருக்காய் (நாணுணர்வு) ஒழுகுதல்; to be on one's high horse, to give oneself airs, to be arrogant (colloq.). 2. முடியாததை முயலுதல்; to attempt to accomplish the impossible (colloq.).

த.வ. ஆகாயத்திற் பற–.

*[ஆகாச(ம்)+அத்து+இல்+பற–.]*

**ஆகாசதீபம்** *āgāša-dīpam,* பெ.(n.) உயர்ந்த கம்பத்தில் வைக்கப்படும் விளக்கு; lantern on a pole, beacon light, light-house.

*[ஆகாசம் + தீபம்.]*

*[**Skt.** ā-kāša> த. ஆகாசம்.]*

*தீ→தீவம்>தீபம்.*



**ஆகாசப்பந்தல்** *āgāša-p-pandal,* பெ.(n.) **ஆகாயப்பந்தல்** பார்க்க; see *āgāya-p-pandal.*

*[ஆகாசம் + பந்தல்.]*

***[Skt.** ā-kāša > த. ஆகாசம்.]*

**ஆகாசபஞ்சாங்கம்** *āgāša-pañjāṅgam,* பெ.(n.) பெரும்பொய்; stupendous lie, as an almanac written in the air.

***[Skt.** ā-kāša+pañjāṅga>த- ஆகாசப் பஞ்சாங்கம்.]*

**ஆகாசபட்சி** *āgāša-paṭci,* பெ.(n.) சாதகபட்சி (வின்.); the shepherd koel.

*[ஆகாசம் + பட்சி.]*

***[Skt.** ā-kāca+paṭci> த. ஆகாசபட்சி.]*

**ஆகாசபலம்** *ākāša-palam,* பெ.(n.) எரி விண்மீன், விண் வீழ் கொள்ளி; meteor, shooting star. *"ஆகாசபலம் வீழ்வது போல்" (ஞானவா. சனக. 7).*

*[ஆகாசம் + பலம்.]*

***[Skt.** ā-kāca+phala>த.ஆகாசபலம்.]*

*வலம்→***Skt.***phala.*

**ஆகாசம்** *āgāšam,* பெ.(n.) 1. ஐம்பூதத்தொன்று; ether pervading all space, one of five elements. 2. வெளி; open space. 3. வானம்; sky, the visible heavens. 4. காற்று மண்டிலம்; air, atmosphere (mod.).

**த.வ.** வானம்.

***[Skt.** ā-kāša > த. ஆகாசம்.]*

**ஆகாசமண்டலம்** *āgāša-mandalam,* பெ.(n.) **ஆகாயமண்டிலம்** பார்க்க; see *āgāya-maṇḍilam.*

*[ஆகாசம் + மண்டலம்.]*

***[Skt.** ā-kāša> த. ஆகாசம்.]*

*மண்டு→மண்டலம்.*

**ஆகாசராமன்** *āgāša-rāmaṉ,* பெ.(n.) பெயரிலான்; nameless person, a nobody.

***[Skt.** ā-kāša+rāma> த. ஆகாசராமன்.]*

**ஆகாசலிங்கம்** *āgāša-liṅgam,* பெ.(n.) தில்லையி (சிதம்பரத்தி)ல் உள்ள ஐவகை (பஞ்ச) லிங்கத்து ளொன்று; the *liṅkam* in the shrine at Chidambaram, which is considered to be formless like the ether; indicating the attributes of God as all pervading.

***[Skt.** ā-kāša+liṅgam > த. ஆகாசலிங்கம்.]*

**ஆகாசவாசியர்** *ākāša-vāšiyar,* பெ.(n.) சிறு தெய்வங்கள்; a class of demi-gods.

***[Skt.** ā-kāša+vāsin>த. ஆகாசவாசியர்.]*

**ஆகாசவாணம்** *āgāša-vāṇam,* பெ.(n.) வானிற் செல்லும் சீறுவாணம்; sky rocket.

*[ஆகாசம் + வாணம்.]*

***[Skt.** ā-kāša>த.ஆகாசம்.]*

*வானம்→வாணம்.*

**ஆகாசவாணி** *āgāša-vāṇi,* பெ.(n.) 1. விண்குரல்; voice from heaven, incorporeal voice. 2. வானொலி; radio.

***[Skt.** ākāša-vāni > த. ஆகாசவாணி.]*

**ஆகாத்தியம்** *āgāttiyam,* பெ.(n.) பாசாங்கு; pretence, simulating agony. *"ஆகாத்தியக் காரனுக்குப் பிரமகத்திக் காரன் சாட்சி".*

**தெ.** ஆகாதியமு; **க.** ஆகாதிய.

**ஆகாமி** *āgāmi,* பெ.(n.) எண்போகத் தொன்றாகிய பிற்காலத்துத் துய்க்கும் உரிமை; propective right and privilage which possession of an estate may bring in its wake one of *aṣṭapōkam.*

***[Skt.** ā-gāmin > த. ஆகாமி.]*

**ஆகாமியம்** *āgāmiyam,* பெ.(n.) இப்பிறப்பிலே செய்யும் நல்வினை தீவினை; karmā, which is yet to come, action good and bad of the present life which are expected to bring their rewards in future births, one of three karumam. *"மேல்வரு மாகாமியமு நாடாமல்" (திருக்காளத். பு. 12, 28).*

***[Skt.** ā-gāmya > த. ஆகாமியம்.]*

**ஆகாயக்கக்கரி** *āgāya-k-kakkari,* பெ.(n.) முள்வெள்ளரி வகை (பாதர்த்த 705); variety of kakri-melon.

*[ஆகாய(ம்) + கக்கரி.]*

*[Skt. a-kāša > த. ஆகாயம்.]*

**ஆகாயகங்கை** *āgāya-gaṅgai,* பெ.(n.) மந்தாகினி (மணி. பதி. 17); the celestial *Ganges.*

*[ஆகாயம் + கங்கை.]*

*[Skt. ā-kāša> த. ஆகாயம்.]*

**ஆகாயகணம்** *āgāya-gaṇam,* பெ.(n.) இரண்டு நிறையசையும் ஒரு நேரசையும் சேர்ந்த 'கருவிளங்காய்' போன்றதொரு செய்யுட்கணத்தொன்று (இலக். வி. 800, உரை); metrical foot of two nirai and one nēr as considered inapt and so boding evil, when used at the commencement of a poem.

**ஆகாயகமனம்** *āgāya-kamaṉam,* பெ.(n.) அறுபத்து நாலு கலையுள் காற்று வெளியில் நடந்து செல்லும் கலை (வின்.); art of walking in the air, one of *aṟupattu-nālu-kalai.*

**ஆகாயச்சொல்** *āgāya-c-col,* பெ.(n.) இல்லாதானொருவனை முன்னிலைப் படுத்தித் தானே கூறும் பேச்சு (சிலப். 3, 13, உரை); literally, a speech in the air, used in dramas as a stage direction when a character on the stage puts questions to some one who is not actually present and listens also to an imaginary speech, supposed to be a reply from the person so addressed.

*[ஆகாயம் + சொல்.]*

*[Skt. ā-kāša > ஆகாயம்.]*

**ஆகாயசூலை** *āgāya-šūlai,* பெ.(n.) குதிரை நோய்வகை (அசுவ. 50); a disease of horses.

**ஆகாயப்பந்தல்** *ākāya-p-pandal,* பெ.(n.) மனக்கோட்டை; castle in the air.

த.வ. வான்பந்தல்.

*[ஆகாயம் + பந்தல்.]*

*[Skt. ā-kāša > ஆகாயம்.]*

**ஆகாயப்பிரவேசம்** *āgāya-p-piravēšam,* பெ.(n.) அறுபத்து நான்கு கலைகளுள் காற்று வெளியில் புகுந்து மறையும் ஒரு கலை (வின்.); art of entering into the air and becoming invisible, disappearing into air, one of *aṟupattunālu-kalai.*

*[Skt. ā-kāša-p-piravēcam> த. ஆகாயப்பிரவேசம்.]*

**ஆகாயம்** *āgāyam,* பெ.(n.) வான்வெளி, வானம்; sky.

த.வ. விண்.

**ஆகாயமண்டிலம்** *ākāya-maṇḍilam,* பெ.(n.) 1. வானவட்டம்; the celestial sphere. 2. நாட்டிய வகையுளொன்று (திருவிளை. கான்மாற். 9); a mode of dancing.

*[ஆகாயம் + மண்டிலம்.]*

*[Skt. ā-kāša > ஆகாயம்.]*

**ஆகாயமாஞ்சி** *āgāya-māñji,* பெ.(n.) சிறு சடாமாஞ்சி (மலை.); spikenard.

**ஆகாயவாசிகள்** *āgāya-vāšigaḷ,* பெ.(n.) பதினெண்கணத்துளொரு சாரார் (திருமுருகு. 168, உரை); a class of demigods, sky-dwellers, one of *patiṉeṉ-kaṇam.*

*[Skt. ஆகாசம் → ஆகாயம் + வாசிகள்.]*

**ஆகாரசமிதை** *āgāra-šamidai,* பெ.(n.) வேள்வி குண்டலத்தில் தென்கிழக்கிலும் வடகிழக்கிலும் வைக்கப்படும் அரச மரத்துக் குச்சிகள் (சீவக. 2464, உரை); two pipal twigs dipped in ghee and placed one at the north-east and the other at the south-east corner of the grhya-sacred fire.

*[Skt. a-ghāra+samidh > த. ஆகாரசமிதை.]*

**ஆகாரம்**[1] *ā-gāram,* பெ.(n.) 1. உருவம்; shape, form, figure, outline, structure. *"ஆகாரமழகெறிப்ப" (பாரத. வசந்தகா. 19).*

2. உடம்பு; body. *"திருவாகாரங் குலுங்க" (திவ். பெரியதி. 4, 4, 8).*

*[**Skt.** ā-kāra > த. ஆகாரம்.]*

**ஆகாரம்**[2] *ā-kāram,* பெ.(n.) நெய் (பிங்.); clarified butter, ghee.

*[**Skt.** ā-ghāra > த. ஆகாரம்.]*

**ஆகாரம்**[3] *ā-kāram,* பெ.(n.) உணவு (பிங்.); food.

*[**Skt.** ā-hāra > த. ஆகாரம்.]*

**ஆகிரந்தம்** *āgirandam,* பெ.(n.) புன்கு (மலை.); Indian beech.

**ஆகிருதி** *āgirudi,* பெ.(n.) 1. உருவம்; form, shape. 2. அடிதோறும் ஒற்று நீங்கிய 22 உயிரெழுத்துக் கொண்ட நான்கடியையுடைய தாய் வருஞ் சந்தம் (வீரசோ. யாப். 33, உரை); meter of four lines with 22 vowel sounds each.

*[**Skt.** ā-kṛti > த. ஆகிருதி.]*

**ஆகு** *āku,* பெ.(n.) 1. எலி (பிங்.); rat. 2. பெருச்சாளி (திவா.); bandicoot.

*[**Tib.** gyāk > த. ஆகு.]*

**ஆகுஞ்சனம்** *āguñjaṇam,* பெ.(n.) சுருக்குகை (பிரபோத. 44, 23); contraction.

**த.வ. சுருக்கம்.**

*[**Skt.** ā-kuñcana > த. ஆகுஞ்சனம்.]*

**ஆகுபாடாணம்** *āgu-pāḍāṇam,* பெ.(n.) வெண் நஞ்சு; a mineral poison.

**ஆகுலம்** *āgulam,* பெ.(n.) 1. மனக்கலக்கம்; confusion, agitation, flurry. *"சிந்தாகுலமுற்று" (திருக்கோ. 12).* 2.ஆரவாரம் (குறள், 34); pomp, idle sound. 3. மனவருத்தம்; grief, sorrow, distraction of mind. *"ஆகுலப் புணரியுளழுந்தி னோரையும்" (கந்தபு. குமாரபுரி. 48).*

*[**Skt.** ā-kula > த. ஆகுலம்.]*

**ஆகுலி-த்தல்** *āguli-,* 4 செ.கு.வி.(v.i.) துன்புறுதல் (கம்பரா. பிரமாத். 193); to be distressed of mind, suffer grief.

**ஆகுவாகனன்** *āgu-vāganaṇ,* பெ.(n.) பிள்ளையார் (விநாயகன்) (திவா.); Vinayagan.

வடமொழியில் 'ஆகு' என்னும் சொல் எலியைக் குறிக்கும் சொல். எலியை வாகனமாய் கொண்டவன் பிள்ளையார் என்ற பொருளில் வந்துள்ளது.



**ஆகையர்** *āgaiyar,* பெ.(n.) முடிவு; end, close.

*[**U.** ākhir > **Skt.** ākaiyar > த. ஆகையர்]*

**ஆங்காரம்** *āṅgāram,* பெ.(n.) பற்று; kindness, love, affection. *"தேனாங் காரப்பொழில்" (திவ். திருவாய். 10, 7, 11).*

*[**Skt.** ahaṃ-kāra > த. ஆங்காரம்.]*

**ஆங்காரி**[1]**-த்தல்** *āṅgāri-,* 4 செ.கு.வி.(v.i.) **அகங்கரி-,** பார்க்க; see *agaṅgari-. "ஆதலா லாங்காரித்தே யறிஞரை யிகழா நின்றான்" (திருவாலவா. 18, 1).*

**ஆங்காரி**[2] *āṅgāri,* பெ.(n.) அகங்கார முள்ளவன்; proud, haughtly-persons.

*[**Skt.** aham-kārin > த. ஆங்காரி.]*

**ஆங்கிரசம்** *āṅkirašam,* பெ.(n.) அறநூல் பதினெட்டிலொன்று; a text-book of Hindu law in Sanskrit, ascribed to angiras, one of 18 *taruma-nūl.*

*[**Skt.** āṅgirasa > த. ஆங்கிரசம்.]*

**ஆங்கிரசன்** *āṅkirašaṇ,* பெ.(n.) ஒரு முனிவன்; angiras, a sage.

*[**Skt.** aṅgiras > த. ஆங்கிரசன்.]*

**ஆங்கிரன்** *āṅkiraṇ,* பெ.(n.) ஒரு முனிவன் (உரி.நி.); a sage.

*[**Skt.** aṅgiras > த. ஆங்கிரன்.]*

**ஆங்கீரச** *āṅkīraša,* பெ.(n.) வியாழன் சுழற்சியில் அறுபது ஆண்டில் ஒன்று; a name of the sixth year of the jupiter cycle.

*[Skt. āṅgirasa > த. ஆங்கீரச.]*

**ஆச்சரியம்** *āccariyam,* பெ.(n.) வியப்பு; surprise, wonder.

*[Skt. ā-š-carya > த. ஆச்சரியம்.]*

**ஆச்சாதனபலம்** *āccādaṉa-palam,* பெ.(n.) பருத்திக்கொட்டை (தைலவ. தைல. 33); cotton seed.

*[ஆச்சாதன(ம்)+பலம்.]*

*[Skt. ā-chādana > த. ஆச்சாதனம்.]*

த. பலம் >**Skt.** phala.

**ஆச்சாதனம்** *āccādaṉam,* பெ.(n.) 1. ஆடை; cloth, clothes, mantle. 2. மறைப்பு (சி.சி.2,86, சிவாக்.); covering, concealing, hiding.

**த.வ. மூடுகை.**

*[Skt. ā-chā-dana > த. ஆச்சாதனம்.]*

**ஆச்சான்** *āccāṉ,* பெ.(n.) ஆதனிய (ஆன்மீக) முன்னோடி; spiritual preceptor. *"நாலூராச்சான்".*

*[Skt. ā-cārya > த. ஆச்சான்.]*

**ஆச்சியம்**[1] *ācciyam,* பெ.(n.) நெய் (கைவல்ய. தத்துவ. 66); ghee, clarified butter.

*[Skt. ā-jya > த. ஆச்சியம்.]*

**ஆச்சியம்**[2] *ācciyam,* பெ.(n.) பகடிக்குரியது; that which is fit to be ridiculed or derided. *"ஆச்சியப் பேய்களோடு" (தேவா. 1094, 10).*

**த.வ. எள்ளல்.**

*[Skt. hāsya > த. ஆச்சியம்.]*

**ஆச்சியச்தாலி** *ācciyactāli,* பெ.(n.) வேள்விக்குரிய நெய் ஏனம் (சீவக. 2463, உரை); vessel in which clarrified butter is kept during oblations.

*[Skt. ājya+sthālī > த. ஆச்சியத்தாலி.]*

**ஆச்சிரமதருமம்** *āccirama-darumam,* பெ.(n.) அந்தந்த குலத்தோர் செய்ய வேண்டிய கடமை; duties pertaining to the four stages of life esp. among the twice born.

*[Skt. ā-šrama + dharma> த. ஆச்சிரம தருமம்.]*

**ஆச்சிரமம்** *ācciramam,* பெ.(n.) 1. முனிவர்கள் உறைவிடம் (சேதுபு. நைமிசா. 15); hermitage, abode of an ascetic. 2. வாழ்க்கை நிலை (பிரமசரியம், கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சன்னியாசம்); order or stage in life, esp. of the twice-born, of which four are mentioned. *"ஆச்சிரம நான்கவை யியம்புவாம்" (திருக்காளத்.பு. 29,6).*

**த.வ. திருவாசிரிய இருக்கை.**

*[Skt. ā-šrama > த. ஆச்சிரமம்.]*

**ஆச்சிரமி** *āccirami,* பெ.(n.) நால்வகை ஒழுக்கநெறிகளுள் ஒன்றிலிருப்பவன்; one who is in any one of the four stages of life or *ācciraman.*

*[Skt. ā-šramin > த. ஆச்சிரமி.]*

**ஆச்சிரயம்** *āccirayam,* பெ.(n.) 1. புகலிடம்; asylum, place of refuge. 2. பகை வெல்லுதற்குப் வலுவுள்ளானொருவனையடைகை (இரகு. திக்கு. 22); seeking by a king the help of a mighter king to conquer an enemy, one of *aracar-aṟu-kuṇam.*

*[Skt. ā-šraya > த. ஆச்சிரயம்.]*

**ஆச்சிரயாசித்தம்** *āccirayācittam,* பெ.(n.) குறைந்த அளவில் இல்லாத ஏதுவைக்கூறும் ஏதுப்போலி (மணிமே. 29, 194); fallacy consisting in the minor term being non-existent.

*[Skt. ā-šraya+a-siddha > த. ஆச்சிரயாசித்தம்.]*

**ஆச்சிராமம்** *āccirāmam,* பெ.(n.) **ஆசிரமம்** பார்க்க; see *āciramam.* *"வதரியாச் சிராமம்" (திவ். பெரியதி. 1,4,1).*

*[Skt. ā-šrama > த. ஆச்சிராமம்.]*

**ஆச்சிலை** *ā-c-cilai,* பெ.(n.) திருமணி (கோமேதகம்) (சங்.அக.); cinnamon stone.

**ஆசங்கி-த்தல்** *ācaṅgi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. ஐயப்படுதல்; to suspect, doubt.

2. மறுத்துரைத்தல் (சி.போ. சிற். 2,2); to object to, state a possible objection to.

*[**Skt.** ā-śaṅk-, > த. ஆசங்கி-த்தல்.]*

**ஆசங்கை** *ācaṅgai,* பெ.(n.) 1. ஐயம்; doubt, suspicion. *"மழையென்றாசங்கை கொண்ட கொடை" (கம்பரா. நாகபாச. 263).* 2. மறுப்பு; abjection.

*[**Skt.** ā-śāṅkā > த. ஆசங்கை.]*

**ஆசத்தி** *ācatti,* பெ.(n.) பற்று; attachment, desire.

*[**Skt.** ā-sakti > த. ஆசத்தி.]*

**ஆசந்தி**[1] *ācandi,* பெ.(n.) பிணங்கொண்டு போகும் பாடை; bier. *"ஆசந்தி மேல்வைத்தமைய வழுது" (திருமந். 150).*



**ஆசந்தி**[2] *ācandi,* பெ.(n.) பெரிய வெள்ளிக்கிழமையன்று சிலுவையில் அமைந்த இயேசுநாதர் உருவத்தை ஊர்வலஞ் செய்விக்கை; procession of the image of Christ on the cross on Good Friday.

*[**Skt.** ā-sandi > த. ஆசந்தி.]*

**ஆசந்திரதாரம்** *ā-candira-dāram,* வி.அ.(adv.) நிலவும் உடுக்களும் உள்ளவரை; as long as the moon and stars endure, in perpetuity, a term used in deeds. *"இப்பரிசு ஆசந்திரதாரம் ஊட்டுவதாக" (தெ.க.தொகுதி 3. பக். 3).*

*[**Skt.** ā+candra+tāra > த. ஆசந்திரதாரம்.]*

**ஆசந்திரார்க்கம்** *ācandirārkkam,* (adv.) நிலவும் கதிரவனுமுள்ளவரை; as long as the sun and moon endure, in perpetuity, a term used in deeds.

*[**Skt.** ā+candra+arka > த. ஆசந்திரார்க்கம்.]*

**ஆசம்** *āśam,* பெ.(n.) சிரிப்பு (பிங்.); laughter, mirth,

*[**Skt.** hāsa > த. ஆசம்.]*

**ஆசமனம்** *āśamaṉam,* பெ.(n.) வலக்குடங்கையால் மந்திரபூர்வமாக நீரை மும்முறை யுட்கொள்ளுகை (கூர்மபு. நித்திய. 11); sipping while uttering certain mantras a little water three times from the palm of the right-hand.

*[**Skt.** ā-camana > த. ஆசமனம்.]*

**ஆசமனியம்** *āśamaṉiyam,* பெ.(n.) ஆசமனநீர்; water used for *ācamaṉam.*

*[**Skt.** ā-camaniya > த. ஆசமனீயம்.]*

**ஆசமி-த்தல்** *āśami-,* 4 செ.குன்றாவி.(v.t.) வலக்குடங்கையால் மந்திரமோதி நீரை மும்முறையுட் கொள்ளுதல்; to sip while uttering certain *mantras* a little water three times from the palm of the right hand. *"அணிநீர் கரந்தொட்டா சமித்தான்" (சேதுபு. சேதுவந். 26).*

*[**Skt.** ā-cam-, > த. ஆசமி-,]*

**ஆசயம்** *ācayam,* பெ.(n.) 1. உறைவிடம்; resting place, abode, retreat. 2. உடலின் உட்பை; vessel of the body. *"பஞ்சாசயம்".* 3. கருத்து; intention meaning. *"இது கவியின் ஆசயம்".*

*[**Skt.** ā-śaya > த. ஆசயம்.]*

**ஆசர்** *āśar,* (adv.) வருகைப் பதிவேட்டில் வருநிலை; presence in attendance.

**U.** ḥāzir., **Skt.** ஆசர்.

**ஆசர்ப்பட்டி** *āśar-p-paṭṭi,* பெ.(n.) வருகைப்பதிவேடு; attendance register.

*[ஆசர்+பட்டி.]*

*[**U.** hāzir > த. ஆசர்.]*

**ஆசர்படுத்து-தல்** *āśar-paḍuttu-,* 5 செ.கு.வி.(v.i.) குற்றம் சாட்டப்பட்ட வரை

அறமன்றத்திற்குக் கொண்டு வருதல்; produce the accused before a court of law.

*[ஆசர்+படுத்து–தல்.]*

*[U. hāzir>த. ஆசர்.]*

**ஆசரணம்** *āšaraṇam,* பெ.(n.) நடைமுறை கூர்ந்து நோக்குகை; absevance, usage, practice.

*[Skt. ā-carana > த. ஆசரணம்.]*

**ஆசரணை** *āšaraṇai,* பெ.(n.) **ஆசரணம்** (வேதா. சூ.8) பார்க்க; see *āšaraṇam.*

**ஆசரி[1]–த்தல்** *āšari-,* 4 செ.கு.வி.(v.i.) 1. கடைபிடித்தல்; to practice, follow habitually. *"ஆசரித்த ஆசாரம்" (உபதேசரத். 67).* 2. கைக் கொள்ளுதல்; to observe, keep holy, solemnise, practise as a rite. *"ஆசரிக்குங் கண்டியும்" (சைவச. ஆசா. 45).*

*[Skt. ā-car-, > த. ஆசரி–,]*

**ஆசரி[2]–த்தல்** *āšari-,* 4 செ.கு.வி.(v.i.) வழிபடுதல்; to worship. *"தானா சரித்துவரு தெய்வமிது" (குமரே. சத. 60).*

*[Skt. ā-šraya > த. ஆசரி–,]*

**ஆசரிப்புக்கூடாரம்** *āšarippu-k-kūḍāram,* பெ.(n.) யூதர் வழிபட்ட நடமாடும் ஆலயம்; tabernacle, a movable sanctuary. (chr.).

**ஆசவம்** *āšavam,* பெ.(n.) கள் (பிங்.); spirituous liquor which is distilled from molasses, toddy.

*[Skt. ā-sava > த. ஆசவம்.]*

**ஆசவுசம்** *āšavušam,* பெ.(n.) தீட்டு (சைவச. பொது. 252); pollution caused either by the birth or death of a relative.

*[Skt. ā-šauca > த. ஆசவுசம்.]*

**ஆசன்னம்** *āšannam,* பெ.(n.) அண்மையது; that which is near or draws near in time, place or number.

*[Skt. ā-sanna > த. ஆசன்னம்.]*

**ஆசனகிருமி** *āšaṉa-kirumi,* பெ.(n.) மலப்புழுவகை; thread warm.

*[Skt. āsana+kirmi> த.ஆசனகிருமி.]*

**ஆசனகுளிகை** *āšaṉa-kuḷigai,* பெ.(n.) ஆசனவழியாய்ச் செலுத்தும் மாத்திரை; suppository.

*[ஆசனம் + குளிகை.]*

*[Skt. ā-sana>த. ஆசனம்.]*

**ஆசனந்திருத்து–தல்** *āšaṉan-diruttu-,* 4 செ.குன்றாவி.(v.t.) பெரியோர்க்கு இருக்கை யமைத்தல்; to provide seats esp. for elders.

*[ஆசனம் + திருத்து–தல்.]*

*[Skt. ā-sana>த. ஆசனம்.]*

**ஆசனபவுத்திரம்** *āšaṉa-pavuttiram,* பெ.(n.) எருவாயில் உண்டாகும் கட்டி; fisiula in ano.

**ஆசனம்** *āšaṉam,* பெ.(n.) 1. உட்காருமிடம் (இருக்கை.); seat, anything to sit on, raised seat. 2. ஒகத்தில் இருக்கை நிலை (சீவக. 656, உரை); yōgic posture of which nine are considered to be important. 3. உரியகாலம் வரும் வரை பகை மேற்செல்லாதிருக்கை; halting, encamping, biding one's time, awaiting a suitable opportunity to attack. *"ஆசன முந்திய காலமங் குணர்ந்திருத்தல்" (இரகு. திக்கு. 21).* 4. மலவாயில்; anus, rectum. *"ஆசன முபத்தங் கைகால்" (மச்சபு. பிரம. 11).*

*[Skt. ā-ṣana > த. ஆசனம்.]*

**ஒன்பது வகை ஆசனவகைகள்** : சுவத்திகாசனம், கோமுகாசனம், பதுமாசனம், வீராசனம், கேசரியாசனம், பத்திராசனம், முத்தாசனம், மயூராசனம், சுகாசனம்.

**ஆசனவாய்** *āšaṉa-vāy,* பெ.(n.) மலவாய்; anus.

*[ஆசனம் + வாய்.]*

*[Skt. ā-sana> த.ஆசனம்.]*

**ஆசனவெடிப்பு** *āšaṉa-veḍippu,* பெ.(n.) நோய்வகை; anal-fissure, crack-like sore or ulcer.

*[ஆசனம் + வெடிப்பு.]*

*[Skt. ā-sana> த.ஆசனம்.]*

**ஆசாடபூதி** *āšāḍa-pūdi,* பெ.(n.) வெளித் தோற்றத்துக்குப் பொருத்தம் இல்லாத முரணான செயலைச் செய்பவன்; one who does things which are not appropriate to his appearance hypocrite.

**த.வ. போலித்துறவி, தோற்றப்போலி.**

*[ஆசாட + பூதி.]*

*[**Skt.** āṣāḍha > த. ஆசாட. புழுதி → பூதி.]*

**ஆசாடம்** *āšāḍam,* பெ.(n.) **1.** பொதிய மலை; Pothigay hills near *Kurrālam in* Thirunalvelly District; Malaya Mountain. **2.** கடக (ஆடி) மாதம்; Tamil month corresponding to July. **3.** முருக்கு மரம்; Indian coral tree - *Erythrina Indica* (சா.அக.).

*[**Skt.** āṣāḍha > த. ஆசாடம்.]*

**ஆசாடி** *āšāḍi,* பெ.(n.) குய்யாட்டக புவனத்து ளொன்று (சி.போ.பா. 2:3, பக். 213); a spiritual world, one of kuyyāṭṭakapuvaṉam.

*[**Skt.** āṣāḍhi > த. ஆசாடி.]*

**ஆசாடிவேர்** *āšāḍi-vēr,* பெ.(n.) கலியாண முருக்கன்வேர்; the root of the Indian coral tree (சா.அக.).

*[ஆசாடி+வேர்.]*

**ஆசாதிகரம்** *āšādikaram,* பெ.(n.) காசாங்கம்; the plant *kāšā* as a whole (சா.அக.).

**ஆசாபங்கம்** *āšā-baṅgam,* பெ.(n.) விரும்பியது பெறாமை; disappointment.

*[**Skt.** āšā + bhaṅga > த. ஆசாபங்கம்.]*

*த. ஆசை>āšā.*

*ஆசு = பற்று. ஆசு>ஆசை = மனப்பற்று.*

**ஆசாபந்தம்** *āšāpandam,* பெ.(n.) **1.** நம்பிக்கை; confidence. **2.** சிலந்திவலை; cobweb.

*[**Skt.** āšā+bandha > த. ஆசாபந்தம்]*

**ஆசாபாசம்** *āšā-pāšam,* பெ.(n.) உலகப் பொருள்களின் மீதும் உறவுகளின் மீதும் வைக்கும் ஆசை, உலகப்பற்று; noose of desire attachment. *ஆசாபாசங்களிலிருந்து விடுபட்டவர்களே துறவிகளாக முடியும்.*

**த.வ. பரிவுப்பற்று.**

*[**Skt.** āšā+pāsam > த. ஆசாபாசம்.]*

*த.ஆசை>**Skt.**āšā. த.பாசம்>**Skt.**pāsa.*

**ஆசாபைசாசம்** *āšāpaišāšam,* பெ.(n.) ஆசையாகிய பேய்; devilish desire. *"உம்மை ஆசாபைசாசங் குமைக்குங்கிமீர்" (பாடுது. 30:7).*

**த.வ. ஆசைப்பேய்.**

*[**Skt.** āšā+paišāca > த. ஆசாபைசாசம்.]*

**ஆசாம்பரன்** *āšāmbaraṉ,* பெ.(n.) சிவன்; Šivaṉ, the space-clad that is naked. *"அமகர வாசாம்பர" (திருப்பு. 436).*

*[**Skt.** āšā+ambara > த. ஆசாம்பரன்.]*

**ஆசாமி** *āšāmi,* பெ.(n.) அறிமுகம் இல்லாத ஆள்; தனியொருவன்; individual, a person. *ஊரிலிருந்து ஆசாமி ஒருவர் வந்துள்ளார். மதிப்புரவு இல்லாமல் நடந்துகொள்ளும் அந்த ஆசாமி யார்.* **2.** செயலாளர், முகவர்; commission agent.

**த.வ. ஆள்.**

*[**U.** āsāmī > த. ஆசாமி.]*

**ஆசாமிக்களவு** *āšāmi-k-kaḷavu,* பெ.(n.) ஆளைத்திருடுகை; ஆளைக்கடத்துகை; kidnapping.

**த.வ. ஆள்திருட்டு.**

*[ஆசாமி + களவு. **U.** āšāmī > த. ஆசாமி.]*

**ஆசாமிசோரி** *āšāmi-šōri,* பெ.(n.) **ஆசாமிக் களவு** (C.G.) பார்க்க; see *āšāmi-k-kaḷavu.*

*[ஆசாமி + சோரி.]*

*[**Skt.** cōra > த. சோரி.]*

**ஆசாமிமாறாட்டம்** *āšāmi-māṟāṭṭam,* பெ.(n.) ஆள்மாறாட்டம் (C.G.); false personation.

*[ஆசாமி + மாறாட்டம்.]*

*[U. āsami+ த. மாறாட்டம்.]*

**ஆசாமிவார்** *āšāmi-vār,* கு.வி.எ.(adv.) ஒவ்வொருவராக; individually, personally, according to name applied to a revenue settlement with each individual cultivator (R.F.).

**த.வ. ஆள்வாரி.**

*[U. āsāmi >த. ஆசாமி+வார். வார் = வரிசை.]*

**ஆசாமிவார்க்கணக்கு** *āšāmi-vār-k-kaṇakku,* பெ.(n.) பெயரேடு; personal ledger.

**த.வ. ஆளேட்டுக்கணக்கு.**

*[U. āsāmi > த. ஆசாமி + வார் + கணக்கு. பெயர் வரிசையாக எழுதப்பட்ட ஏடு.]*

**ஆசாமிவாரி** *āšāmi-vāri,* கு.வி.எ.(adv.) இனவாரி (இனம்இனமாய்); individually.

*[ஆசாமி + வாரி. U. āšāmi + wār. இனவாரி = இனவாரியாக என்னும் பொருளில் வருஞ்சொல். வகுப்புவாரி.]*

**ஆசாமிவாரிஇசாப்** *āšāmi-vāri-išāp,* பெ.(n.) அடங்கற்கணக்கு *(P.T.L.)*; revenue account showing the name, etc., of individual taxpayer.

*[U. āsāmivar + U. hisāb > த. ஆசாமிவாரி இசாப்.]*

**ஆசாமிவாரிச்சிட்டா** *āšāmi-vāri-c-ciṭṭā,* பெ.(n.) இனவாரிக்கணக்கு; account showing under the name of each individual the assessment he has to pay.

*[U. āsāmi+ vāri-c-ciṭṭā >த.ஆசாமிவாரிச் சிட்டா.]*

**ஆசார்யகிருதயம்** *āšārya-hirudayam,* பெ.(n.) அழகிய மணவாளர் எழுதிய ஒரு மாலிய (வைணவ) சமய நூல்; a treatise on the Vaiṣṇava siddhānta written by *Aḻakiya-maṇavāḷa-nayiṉār.*

*[Skt. ā-cārya+hṛdaya > ஆசார்ய ஹ்ருதயம் > த. ஆசார்யகிருதயம்.]*

**ஆசார்யாபிசேகம்** *āšāryāpišēgam,* பெ.(n.) ஆசிரியர்க்குச் செய்யப்படும் சிறப்புச் சடங்கு; consecration of a guru or priest.

*[Skt. ā-cārya+abisēka> த.ஆசார்யாபி சேகம்.]*

**ஆசாரக்கணக்கு** *āšāra-k-kaṇakku,* பெ.(n.) கோயிலில் நடைபெறும் சடங்குகள் போன்ற வற்றைக் குறித்து வைக்கும் பொத்தகம் (நாஞ்.); record of temple rites and ceremonies.

**த.வ. கோயில் நடப்புக்கணக்கு.**

*[ஆசாரம் + கணக்கு.]*

**ஆசாரக்கள்ளன்** *āšāra-k-kaḷḷaṉ,* பெ.(n.) ஒழுக்கமுள்ளவன் போல் நடிக்கும் திருடன்; thief who pretends sancity sanctimonious person, one who makes a pretence of holiness. *அழுகள்ளன், தொழுகள்ளன், ஆசாரக்கள்ளன்.*

**த.வ. படிமானக்கள்ளன்.**

*[ஆசாரம் + கள்ளன்.]*

*[Skt. ā-cāra > த. ஆசாரம்.]*

*கள் → கள்ளன், 'ன்' ஆ.பா.ஈறு.*

**ஆசாரக்கள்ளி** *āšāra-k-kaḷḷi,* பெ.(n.) கற்புடையவள் (பதிவிரதை) போல் நடிப்பவள்; woman who pretends to be chaste.

**த.வ. படிமானக்கள்ளி.**

*[ஆசாரம் + கள்ளி. Skt. ā - cāra > த. ஆசாரம். ஆசாரம் = நூலில் கூறிய (சாத்திர) முறைப்படி ஒழுகுதல், நன்னடத்தை. கள்ளி = கள்ளத்தன்மை மிக்கவள், வேலைசெய்யாது உழப்புபவள்]*

**ஆசாரகாண்டம்** *āšāra-kāṇḍam,* பெ.(n.) வைத்திய நாத குருவனார் (தீட்சிதர்) எழுதிய அற நூலின் ஒரு பகுதி; a treatise on religious duties, one of the books written by Vaidyanātha Dīkṣitar.

*[ஆசாரம் + காண்டம்.]*

*[Skt. ā-cāra + த. காண்டம்.]*

*கண்டம்>காண்டம்.*

**ஆசாரங்கூட்டு-தல்** *āšāraṅ-gūṭṭu-,* 5 செ. குன்றாவி.(v.t.) தூய்மையாகச் செய்தல்; to purify ceremonially.

*[Skt. ā-cāra + த. கூட்டு-தல்.]*

**ஆசாரச்சாவடி** *āšāra-c-cāvaḍi,* பெ.(n.) ஓலக்க மண்டபம் (வின்.); durbar hall.

*[Skt. ā-cāra + Mar. charady.]*

**ஆசாரஞ்செய்-தல்** *āšārañjey-,* 1 செ.கு.வி. (v.i.) ஒழுக்கத்தைப் பேணுதல் (ஆதரித்தல்) (குறள், 1075, உரை.); to perform one's duty sincerely, to perform duty for duty's sake.

**த.வ. படிமானம் செய்தல்.**

*[Skt. ā-cāra > த. ஆசாரம்.]*

*[ஆசாரம் + செய்-தல்]*

**ஆசாரப்பிழை** *āšāra-p-piḻai,* பெ.(n.) ஒழுக்கத்தவறு, கெட்டகுணம்; dereliction of duty, bad conduct.

**த.வ. படிமானக்குற்றம்.**

*[ஆசாரம் + பிழை]*

*[Skt. ā-cāra > த. ஆசாரம்.]*

**ஆசாரபரன்** *āšāra-paraṉ,* பெ.(n.) ஒழுக்கத்தில் ஊக்கமுள்ளவன்; one who is punctilious about the duties of his caste and order. *"ஆசாரபரனா யிருந்து மென்ன" (அறப். சத. 37.).*

**த.வ. நல்லொழுக்கன், படிமானக்காரன்.**

*[Skt. ā-cāra+paraṉ > த. ஆசாரபரன்.]*

**ஆசாரபோசன்** *āšāra-bōšaṉ,* பெ.(n.) ஆடம்பரத் தோற்றமுள்ளவன்; person of a very imposing appearance.

**த.வ. ஆகுலத்தான்.**

*[Skt. ā-cāra+bhōja > த. ஆசாரபோசன்.]*

**ஆசாரம்**[1] *āšāram,* பெ.(n.) 1. நூல்முறைப்படி ஒழுகுகை; conducting oneself according to the dictates of the šāstras. *"ஒழுக்கமன்பரு ளாசாரம்" (சி.சி. 2 : 23.).* 2. நன்நடத்தை; proper conduct, good behaviour. *"அச்சமே கீழ்கள தாசாரம்" (குறள், 1075). 'அவர் தன்குல ஆசாரப்படி நடப்பவர்'.* 3. பொது ஒழுக்கத்துக்கான அல்லது சமய குல ஒழுக்கத்துக்கான நெறிமுறைகள், வழக்கம்; custom, practice, usage. 4. தூய்மை; cleanliness. 5. ஆடை; cloth.

**த.வ. நன்னடத்தை, படிமானம்.**

*[Skt. ā-cāra > த. ஆசாரம்.]*

**ஆசாரம்**[2] *āšāram,* பெ.(n.) பெருமழை; heavy downpour of rain.

*[Skt. ā-šāra > த. ஆசாரம்.]*

**ஆசாரம்**[3] *āšāram,* பெ.(n.) காட்சி (அக.நி.); sight.

*[Skt. ācāra > த. ஆசாரம்.]*

**ஆசாரம்**[4] *āšāram,* பெ.(n.) 1. எங்கும் நிறைந்திருக்கும் அல்லது பரவியிருக்கும் தன்மை (வியாபகம்); pervasiveness. 2. படை; army.

*[Skt. āsāra > த. ஆசாரம்.]*

**ஆசாரம்பண்ணு-தல்** *āšāram-paṇṇu-,* 5 செ.கு.வி.(v.i.) விருந்தோம்பல்; to treat courteously. *'நீங்கள் அவனைக் கண்டு ஆசாரம் பண்ணுதல் செய்வீராகில்' (பாரதவெண். 159, உரை.).*

*[ஆசாரம் + பண்ணு-தல்.]*

*[Skt. āsāra > த. ஆசாரம்.]*

**ஆசாரலிங்கம்** *āšāra-liṅgam,* பெ.(n.) சிவக்குறி (சிவலிங்கம்) வகைகளுள் ஒன்று. (சித். சிகா. 201); one of *Šiva-liṅgam.*

*[Skt. ஆசாரம் + த. இலிங்கம்.]*

**ஆசாரவீனன்** *āšāra-viṉaṉ,* பெ.(n.) தனக்குரிய ஒழுக்கத்தைக் கைவிட்டவன்; one who habitually breaks religious injunctions.

த.வ. ஒழுக்கக்கேடன்.

*[Skt. ā-cāra-hīna > த. ஆசாரவீனன்[2].]*

**ஆசாரவீனி** *āšāra-v-iṉi*, பெ.(n.) **ஆசாரவீனை** (திருப்பு. 488) பார்க்க; see *āšāra-viṉai*.

*[Skt. ā-cāra-v-iṉi > த. ஆசாரவீனி.]*

*[வீனன் → வீனி.]*

**ஆசாரவீனை** *āšāra-v-iṉai*, பெ.(n.) ஆசார வீனன் என்பதன் பெண்பால்; fem. of *āšāra-v-īṉaṉ*.

*[Skt. ā-cāra-viṉai > த. ஆசாரவீனை.]*

**ஆசாரவுபசாரம்** *āšāra-v-upašāram*, பெ.(n.) மிக்க மதிப்புரவு; sincere and hearty courtesy extended to a guest. *"ஆசார வுபசாரமா யாசனந்தனிலெழுந் தருளுமென்று" (திருவேங். சத். 84.).*

த.வ. ஒப்புரவு.

*[Skt. ā-cāra+upa-cāra>த. ஆசாரவுபசாரம்.]*

**ஆசாரி** *āšāri*, பெ.(n.) மாத்துவ மாலிய (வைணவ) பார்ப்பனரின் பட்டப் பெயர்; a title adopted by *Mādhva* and *Šrī Vaishṇava Brāhmans.*

**T., k., Tu.** *ācāri*

*[Skt. ā - cārya > த. ஆசாரி.]*

**ஆசாரியசம்பாவனை** *āšāriya-šampāvaṉai*, பெ.(n.) நல்ல நேரங்களில் ஆசாரியருக்குக் கொடுக்கும் காணிக்கை; offering of money to the spiritual head of a sect on auspicious occasions like marriage.

த.வ. குரவர் காணிக்கை, திருவாசிரிய உவந்தளிப்பு.

*[Skt. ā-cārya+sambhāvanā > த. ஆசாரிய சம்பாவனை.]*

**ஆசாரியபக்தி** *āšāriya-pakti*, பெ.(n.) ஆசானிடமுள்ள பற்று; devotion to a teacher, guru.

த.வ. ஆசான்பற்றி.

*[Skt. ā-cārya+bhakti > த. ஆசாரியபக்தி.]*

**ஆசாரியபும்சதுவம்** *āšāriya-pumšaduvam*, பெ.(n.) ஆசாரிய ஆண்கள் கொள்ளும் செருக்கு (கருவம்); sacerdotal hauteur of a religious preceptor.

த.வ. ஆசான்பெருமிதம்.

*[Skt. ā-cārya+pumstva > ஆசாரியபும் ஸ்துவம் > த. ஆசாரியபும்சதுவம்.]*

**ஆசாரியபுருசம்** *āšāriya-purušam*, பெ.(n.) கோயில் குருக்களுக்கு அளிக்கப்படும் மானியம்; grant of land to a priest for temple service.

த.வ. பூசகர்கொடை.

*[Skt. ā-cārya+purusa > த. ஆசாரியபுருசம்.]*

**ஆசாரியபுருசன்** *āšāriya-purušaṉ*, பெ.(n.) ஐந்து வகையான சடங்குகளைச் செய்வதற்குரிய மாலிய மறை அறிவன்; guru among Sri Vaiṣṇavas who is qualified to perform the *pañja-samskaras.*

த.வ. மாலியத்திருவாசிரியன், மாலியக் குரவன்.

*[Skt. ā-cārya+purusa>த. ஆசாரியபுருசன்.]*

*[புருஷன் → புருசன்.]*

**ஆசாரியபோகம்** *āšāriya-bōgam*, பெ.(n.) ஆசாரியன் நுகரும் பங்குரிமை (உரிமைத் துய்ப்பு) (தெ.இ.க. தொ.ii : 107); endowment enjoyed by an *ācāriya.*

த.வ. ஆசான் நுகர்வு.

*[Skt. ā-cārya+bhōga>த. ஆசாரியபோகம்.]*

**ஆசாரியன்** *āšāriyaṉ*, பெ.(n.) சமய ஆசிரியர் (மதகுரு); spiritual teacher duly anointed and authorized to initiate others into the esoteric doctrines of religion. 2. சமயத் (மதத்) தலைவன்; head of a religious sect. 3. ஆசிரியன்; teacher, preceptor.

த.வ. சமயக்குரவர்.

*[Skt. ā-cārya > த. ஆசாரியன்.]*

**ஆசாரியன்திருவடியடை-தல்** *āšāriyaṉ-tiru-v-āḍi-y-aḍai-*, 4 செ.கு.வி. (v.i.) இறந்து நற்பேறடைதல் (நற்கதி அடைதல்)

(மாலியவழக்கு); reaching the guru's feet, an euphemism for dying.

த.வ. திருவடிப்பேறு.

[ஆசாரியன் + திருவடியடை-தல்.]

[**Skt.** *ā-cārya* > த. ஆசாரியன்.]

**ஆசாரோபசாரம்** *āšārōbašāram,* பெ. (n.) விருந்தினரிடம் காட்டும் மதிப்புரவு; sincere and hearty courtesy to a guest.

த.வ. விருந்துபேணல்.

[**Skt.** *ā-cāra+upa-cāra*>த.ஆசாரோபசாரம்.]

**ஆசாலுகம்** *āšālugam,* பெ. (n.) ஒகவகைகளுள் ஆசானுகம் ஒன்று (தத்துவப். 109, உரை); a yōgic posture.

[**Skt.** *ā-jānuka* > த. ஆசாலுகம்.]

**ஆசானவனுயிர்** *āšāṉavaṉ-uyir,* பெ.(n.) முயல்; hare (சா.அக.).

**ஆசானுபாகு** *āšāṉu-pāgu,* பெ.(n.) **ஆசானுவாகு** பார்க்க; see *āšāṉu-vāgu.* (சா.அக.).

**ஆசானுவாகு** *āšāṉu-vāgu,* பெ.(n.) முழங்காலளவு நீண்ட கையுடைய பெருந்தோற்ற முள்ளோன்; one whose arms reach his knees, indicating majesty of stature.

த.வ. செந்தோற்றன், தாள்தோய்தடக்கையன்.

[**Skt.** *ā-jānu+bāhu* > த. ஆசானுவாகு.]



**ஆசிகம்**[1] *āšigam,* பெ.(n.) முகம்; face.

[**Skt.** *āsya* > ஆசிகம்.]

**ஆசிகம்**[2] *āšigam,* பெ.(n.) ஆட்டுப் புழுக்கை; the excretes of the sheep (சா.அக.).

**ஆசிகரோகம்** *āšigarōgam,* பெ.(n.) கண்ணின் கருவிழியில் ஆட்டுப்புழுக்கையைப் போல் கொப்புளங் கண்டு பிதுங்கி அதைச் சுற்றிலும் சிறுசிறு குருக்கள் நிறைந்து, அதிக வலியையும், செந்நீரொழுக்கையும் உண்டாக்கும் கண் நோய்; an eye disease attended with protrudsion of the cornea about the shape of the sheep's excrete (சா.அக.).

த.வ. கருவிழிக்கொப்புளம்.

[ஆசிகம் + ரோகம்.]

**ஆசித்திரி** *āšittiri,* பெ.(n.) மிகுந்த உணவு உண்பவன்; glutton (சா.அக.).

**ஆசிதகுருக்கன்** *āšida-kurukkaṉ,* பெ.(n.) 32 வகைச் செய்நஞ்சுள் ஒன்றான காக நஞ்சு; one of the 32 kinds of prepared arsenic.

**ஆசிதம்** *āšidam,* பெ.(n.) 1. ஒரு வண்டிச் சுமை; a cart-load, as a measure of weight. 2. இருநூறு துலாங் கொண்ட சுமை (பாரம்); weight of 200 tulām.

[**Skt.** *āšita* > த. ஆசிதம்.]

**ஆசியக்காரன்** *āšiya-k-kāraṉ,* பெ.(n.) சிரிப்பூட்டும் நகைச்சுவைப் பேச்சுக்காரன் (விகடஞ் செய்வோன்); buffoon.

[**Skt.** *hāsya* > த. ஆசியம் + காரன் - ஆசியக்காரன்.]

**ஆசியக்குவாதம்** *āšiya-k-kuvādam,* பெ.(n.) உடற் சூட்டால் வாயில் புண் உண்டாகி, மார்பில் வலியையும் உண்டாக்கும் ஒருவகை நோய்; an ulceration of the mouth due to excessive heat arising from the deranged *Vāyu.* It also cause pain in the chest (சா.அக.).

த.வ. மார்வலி.

**ஆசியசீரகம்** *āšiya-širagam,* பெ.(n.) கருஞ்சீரகம்; black cumin (சா.அக.).

**ஆசியதகரான்னம்** *āšiya-takarāṉṉam,* பெ.(n.) நஞ்சு கலந்த சோறு; food mixed with poison (சா.அக.).

த.வ. நஞ்சுணவு.

**ஆசியநாடகம்** *āšiya-nāḍagam,* பெ.(n.) நகைச்சுவை மிக்க நாடகம்; farce.

[ஆசியம் + நாடகம்.]

[**Skt.** *hāsya>* த. ஆசியம்.]

**ஆசியபத்திரம்** *āšiya-pattiram,* பெ.(n.) தாமரை (பச்.மூ.); lotus.

**ஆசியபாகபித்தம்** *āšiya-pāgapittam,* பெ.(n.) பித்தம் தலைக்கேறி வாயில் புண் உண்டாகி, பசியின்மை, ஏப்பம், காய்ச்சல், கொட்டாவி, விக்கல் ஆகிய குணங்களைக் காட்டும் ஒருவகைப் பித்த நோய்; a disease due to the aggravated bill in the system (சா.அக.).

த.வ. தலைப்பித்தம்

[ஆசியம்[1] + பாகம் + பித்தம்.]

[**Skt.** *āsya>*த. ஆசியம்.]

**ஆசியபாகம்** *āšiyapāgam,* பெ.(n.) முகத்தின் உறுப்புகள்; facial organs (சா.அக.).

[ஆசியம்[1] + பாகம்.]

[**Skt.** *āsya>*த. ஆசியம்.]

**ஆசியபாகவாதம்** *āšiya-pāga-vādam,* பெ.(n.) முக உறுப்புகளைத் தாக்கும் ஒருவகை ஊதை நோய்; a nervous disease affecting the facial organs (சா.அக.).

[ஆசியம் + பாகம் + வாதம்.]

[**Skt.** *āsya>*த. ஆசியம்.]

**ஆசியம்[1]** *āšiyam,* பெ.(n.) 1. வாய்; mouth. 2. முகம்; face. 3. கண்களின் நடுவிலிருக்கும் இடம்; a mystic spot between the eye-brows.

[**Skt.** *āsya >* த. ஆசியம்.]

**ஆசியம்[2]** *āšiyam,* பெ.(n.) 1. சிரிப்பு; laughter. 2. கிண்டல்; jest, ridicule. 3. ஒன்பான் சுவைகளுளொன்று; sentiment of humour, one of nava-rasam. 4. கருஞ்சீரகம்; black-cumin.

த.வ. நகைப்பு.

[**Skt.** *hāsya >* த. ஆசியம்.]

**ஆசியலோமன்** *āšiya-lōmaṉ,* பெ.(n.) முக மயிர் அல்லது தாடி மயிர்; the hair of the face such as, the mustaches or the beard. (சா. அக.)

**ஆசியவாங்கலம்** *āšiya-vāṅgalam,* பெ.(n.) கலப்பை முகம்; plough like face (சா.அக.).

**ஆசியவாதம்** *āšiya-vādam,* பெ.(n.) முக வூதை; முகத்தின் உறுப்புகளைச் சிதைக்கும் (பின்னப்படுத்தும்) ஓர் ஊதை நோய்; a disease affecting the facial organs.

**ஆசியாசவம்** *āšiyā-šavam,* பெ.(n.) 1. எச்சில்; matter ejected from the mouth. 2. உமிழ் நீர். the fluid secreted by the salivary glands which serves to moisten the tongue and the mouth-*Saliva* (சா.அக.).

**ஆசியாசுகம்** *āšiyā-šugam,* பெ.(n.) சுவையில்லாதது; disagreeableness to the mouth or to the taste (சா.அக.).

**ஆசியாட்சேபவாதம்** *āšiyāṭcēba-vādam,* பெ.(n.) முகவுறுப்புகளைப் பொறுத்து வலி உண்டாக்கும் ஒரு ஊதை நோய்; a disease affecting the nerves of the facial organs (சா.அக.).

த.வ. முகநரம்புநோய்.

**ஆசியோதனம்** *āšiyōdaṉam,* பெ.(n.) 1. கண்ணோய்க்கு விடும் மருந்து; eye drops. 2. உடலின் ஒன்பது துளைகள் வழியே செலுத்தும் எண்ணெய்; medicated oil caused to be absorbed through, the nine openings of the body (சா.அக.).

த.வ. கண் மருந்து.

**ஆசியோபலேபம்** *āsiyōbalebam,* பெ.(n.) சளியால் வாயில் ஏற்படும் தடை; obstruction in the mouth due to phlegm (சா.அக.).

**த.வ.** நீர்க்கோள் அடைப்பு.

**ஆசிர்வதி–த்தல்** *āsir-vadi-,* 4. செ.கு.வி.(v.i.) வாழ்வில் சீரும் சிறப்பும் நன்மையும் பெறுமாறு வாழ்த்துதல்; wish one happiness, prosperity, etc. bless.

*[Skt. āśirvad > த. ஆசிர்வதி–த்தல்.]*

**ஆசிர்வாதம்** *āsir-vādam,* பெ.(n.) சீரும், சிறப்பும் பெறுமாறு கூறும் நல்வாழ்த்து; blessing; good wishes; the invoking of happiness. *அமைச்சர்கள் மணமக்களுக்கு ஆசிர்வாதம் வழங்கினர்.*

**த.வ.** நல்வாழ்த்து.

*[Skt. āśir-vāda > த. ஆசிர்வாதம்.]*

**ஆசிர்விடம்** *āsir-vidam,* பெ.(n.) நச்சுப் பாம்பு; venomous snake (சா.அக.).

**ஆசிரம்** *āsiram,* பெ. (n.) நெருப்பு (சா.அக.); fire.

**ஆசிரமம்** *āsiramam,* பெ.(n.) 1. துறவிகள் வாழுமிடம்; sage's house. *'இந்த ஆசிரமம் துறவிகளுக்காவே கட்டப்பட்டது', "அறவோர் வைகுமாசிரமத்து" (சேதுபு. 2வது சக்கர. 1).* 2. முனிவர் அல்லது இறை நெறியில் ஈடுபட்டோர் வாழுமிடம்; the abode of an ascetic or anyone who is engaged in spiritual activities. *'அரவிந்தர் ஆசிரமம் புதுச்சேரிக்கருகில் உள்ளது'.* 3. களைகண் (ஆதரவு) அற்றோர் போன்றவர்களுக்குப் பாதுகாப்புத் தரும் முறையில் அமைக்கப்படும் இடம், விடுதி; home for the destitutes, disabled etc. *ஏதிலியர்க்காகக் கட்டப்பட்ட ஆசிரமம் இது.* 4. வாழ்வின் நால்நிலைகள்; four stages of life.

**த.வ.** திருவாசிரிய இருக்கை, புகலிடம்.

*[Skt. ā-śrama > த. ஆசிரமம்.]*

**ஆசிரமி** *āsirami,* பெ.(n.) 1. வாழ்வின் நான்கு நிலைகளைக் கடைபிடிப்பவன்; one who is in any one of the four stages of life a word tacked on to compounds. 2. முனிவன்; sage.

*[Skt. ā - śramin > த. ஆசிரமி.]*

**ஆசிரயணம்** *āsirayaṇam,* பெ.(n.) சார்ந்து நிற்கை (திவ். திருவாய் 6.1 : 6, பன்னீ.); seeking refuge with or depending on another.

*[Skt. ā-śrayaṇa > த. ஆசிரயணம்.]*

**ஆசிரயம்** *āsirayam,* பெ.(n.) அடுத்திருக்கை; dependence, seeking protection with another. *"இச்சைமற் றாசிரயங் குற்றோன்" (ஞானா. 61:19.).*

*[Skt. ā-śraya > த. ஆசிரயம்.]*

**ஆசிரவம்[1]** *āsiravam,* பெ.(n.) ஒன்பான் கறிவகைகளுள் ஒன்று (சீவக. 2814, உரை.); the way karma is acquired by the human soul, one of *nava-patārttam.*

*[Skt. ā-śrava > த. ஆசிரவம்.]*

**ஆசிரவம்[2]** *āsiravam,* பெ.(n.) 1. அரிசி கொதிக்கும் போது உண்டாகும் நுரை; the foams in boiling rice. 2. புலனின் புறப்பற்று; the action of the senses which impels the soul towards external objects. 3. துன்பம்; pain. 4. ஏழுவகை மெய்ம்மைகளுள் ஒன்று; one of the seven tattuvams. 5. புறப் பற்றினால் வந்து சேரும் செருக்கு; the influence or action of the body, mind and speech in impelling the soul to generate karma (சா.அக.).

*[ஆசிரவம்[1] → ஆசிரவம்[2].]*

**ஆசிரிதம்** *āsiridam,* பெ.(n.) சார்ந்திருக்கை; dependence, depending upon another.

*[Skt. ā-śrita > த. ஆசிரிதம்.]*

**ஆசிருத்தம்** *āsiruttam,* பெ. (n.) புன்குமரம்; a tree; Indian beech-*Dalbergia arborea* (சா.அக.).

**ஆசில்** *āšil,* பெ.(n.) வாழ்த்து (நாமதீப.); blessing.

*[Skt. āših > த. ஆசில்.]*

**ஆசிலேடம்** *āšilēḍam,* பெ.(n.) தழுவுகை; embrace (சா.அக.).

**ஆசிலேடித்தல்** *āšilēḍittal,* தொ. பெ. (vbl. n.) தழுவுகை; embrace (சா.அக.).

**ஆசிவிடம்** *āšiviḍam,* பெ.(n.) நன்மை செய்யாத வேளைகளுள் (அசுப யோகம்) ஒன்று; an inauspicious *yōkam.*

*[Skt. āšī-viṣa > த. ஆசிவிடம்.]*

**ஆசீர்வசனம்** *āšīr-vašaṉam,* பெ. (n.) வாழ்த்துரை (வீரசோ. அலங். 33.); word of blessing, benediction.

*[Skt. āšīr-vacana > த. ஆசீர்வசனம்.]*

**ஆசீர்வதி–த்தல்** *āšīr-vadi-,* 4 செ.கு.வி. (v.i.) வாழ்த்துதல்; to bless, pronounce benediction upon.

த.வ. வாழ்த்தல்.

*[Skt. ā-šīrvad > த.ஆசீர்வதி–த்தல்.]*

**ஆசீர்வாதம்** *āšīr-vādam,* பெ.(n.) வாழ்த்து; blessing, benediction.

*[Skt. ā - šīr-vāda > த. ஆசீர்வாதம்.]*

**ஆசீல்** *āšīl,* பெ.(n.) மதிப்பு; valuation, estimate.

*[U. hāsil > த. ஆசீல்.]*

**ஆசீவகப்பள்ளி** *āšīvaga-p-paḷḷi,* பெ.(n.) சமண முனிவர்களின் உறைவிடம் (நன். 158, மயிலை.); monastery of the ascetics of the Ājiv-aka sect.

*[ஆசீவகன் + பள்ளி.]*

*[Skt. ā-jīvaka > த. ஆசீவகன்.]*

**ஆசீவகன்** *āšīvagaṉ,* பெ.(n.) 1. சமணரில் ஒரு பிரிவினன் (மணிமே. 27 : 108); member of a Jaina sect founded by *Gōšāla.* 2. சமண முனிவன்; Jaina ascetic.

*[Skt. ā-jīvaka > த. ஆசீவகன்.]*

**ஆசுக்காயம்** *āšukkāyam,* பெ.(n.) பேய் வெங்காயம்; wild onion (சா.அக.).

**ஆசுகம்** *āšugam,* பெ.(n.) 1. காற்று (சூடா.); wind, being that which moves swiftly. 2. அம்பு; arrow. *"ஐந்திற னாகிய வாசுக வில்வேள்"(கந்தபு.காமதக.1).* 3. பறவைப் பொது; birds in general.

*[Skt. āšu-ga > த. ஆசுகம்.]*

**ஆசுகவி** *āšu-kavi,* பெ.(n.) 1. எந்த முன்னேற்பாடு மின்றிக் கொடுத்த பொருளில் உடனடியாகச் செய்யுள் இயற்றும் வல்லமை படைத்த புலவன்; one who composes verses extempore. 2. கொடுத்த பொருளில் அடுத்த பொழுதிற் பாடும் பாட்டு (வெண்பாப். செய். 2, உரை); verse composed extempore and satisfying certain given conditions, one of *nār-kavi.*

த.வ. ஊற்றுப்பலா, ஊற்றுப்பாவலன்.

*[Skt. āšu+kavi > த. ஆசுகவி.]*

**ஆசுகன்**[1] *āšugaṉ,* பெ.(n.) ஞாயிறு (நாநார்த்த.); sun.

*[Skt. āšu-ga > த. ஆசுகன்.]*

**ஆசுகன்**[2] *āšugaṉ,* பெ.(n.) வளி (வாயு) (பாரத. புட்ப. 67.); Vāyu, as one who moves swiftly.

*[Skt. āšu-ga > த. ஆசுகன்.]*

**ஆசுகா** *āšukā,* பெ.(n.) ஒருவகைச் சருக்கரை; sugar from āska in the Ganjam district.

*[Skt. āska > த. அசுகா.]*

ஆசுகா என்பது சருக்கரை செய்யும் ஊர்.

**ஆசுகி** *āšugi,* பெ.(n.) பறவைப் பொது; bird in common (சா.அக.).

*[Skt. āšu-ga > த. ஆசுகி.]*

**ஆசுசம்** *āšušam,* பெ.(n.) மாதவிடாய்; menstruation (சா.அக.).

**ஆசுசுக்கணி** *āšu-šukkaṇi,* பெ.(n.) நெருப்பு (பாரத. காண். 55.); fire, because it shines.

*[Skt. ā-šušuk-ṣaṇi > த. ஆசுசுக்கணி.]*

**ஆசுதாபனம்** *āsudābaṉam,* பெ.(n.) 1. வலிமை உண்டாக்கும் மருந்து; a strengthening remedy - *Restarative.* 2. எண்ணெய் அல்லது நெய் முதலிய கழிச்சலை உண்டாக்கும் பொருட்கள்; an enema of oil or ghee etc. 3. மலவாய் வழியாய்ச் செலுத்துகை; the act of introducing through the rectum (சா.அக.).

**ஆசுதி** *āsudi,* பெ.(n.) காய்ச்சி வடிக்கப்பட்டது; distilled - *Distila* (சா.அக.).

த.வ. வடிநெய்.

**ஆசுதித்தநீர்** *āsuditta-nīr,* பெ.(n.) 1. காய்ச்சி வடிகட்டிய நீர்; water boiled and filtered. 2. வாலையிலிறக்கிய நீர்; water obtained by evaporation and condensation - *Distilled water.*

த.வ. வடிநீர்

**ஆசுபத்திரம்** *āsupattiram,* பெ.(n.) அகச் சூலி; toon tree - *Cedrela ṭoona.*

**ஆசுபத்திரி** *āsupattiri,* பெ.(n.) மருத்துவமனை; hospital.

த.வ. மருந்தகம்.

*[E. Hospital > ஆஸ்பத்திரி > த. ஆசுபத்திரி.]*

**ஆசுபதம்** *āsupadam,* பெ.(n.) 1. இடம்; place. 2. பிடிபாடு; support, hold. 3. கரணியம் (காரணம்); cause. *கலகத்திற்கு ஆசுபதமென்ன ?*

*[Skt. ā-s-pada > ஆஸ்பதம் > த. ஆசுபதம்.]*

**ஆசுபோடம்** *āsupōḍam,* பெ.(n.) 1. புற் பூண்டுகளைக் குறிக்கும் பெயர்; a generic name for several plants. 2. நடுக்கம்; shivering, trembling (சா.அக.).

**ஆசுரங்கமூலி** *āsuraṅga-mūli,* பெ.(n.) பிரமியிலை; diabetes plant are important medical herb - *Gratiola Monieri* (சா.அக.).

**ஆசுரம்**[1] *āsuram,* பெ.(n.) 1. இஞ்சி; ginger. 2. வெள்ளை வெங்காயம்; white onion. 3. கத்தியாலறுக்கை; to open with a knife as is done to a boil, abscess etc. 4. மெய்யறிவு; philosophical wisdom; spiritualism. 5. காயங்களைக் குணப்படுத்தும் மருந்துவகை; a division of surgery. 6. கருவிகளால் வெட்டிச் செய்யும் மருத்துவ முறை; curing by cutting with an instrument. 7. சூடுபோடுகை, applying cautery (சா.அக.).

*[Skt. āsura > த. ஆசுரம்.]*

**ஆசுரம்**[2] *āsuram,* பெ.(n.) 1. அரக்கர் தொடர்பானது; that which belongs or relates to Asuras. *"ஆசுரப் பெரும்படைக்கலம்" (கம்பரா. இராவணன் வதை. 97.)* 2. தலைமகளுக்குப் பொன்பூட்டிச் சுற்றத்தார்க்கு வேண்டுவன கொடுத்துக் கொள்ளும் மணம் (நம்பியகப். 117, உரை); a form of marriage in which the bridegroom obtains the bride by bedecking her with jewels and by paying what is known as bride's price to her father and paternal kinsmen. 3. ஒரு பெண் பேய்; a female demon.

*[Skt. āsura > த. ஆசுரம்.]*

இது தமிழர்க்குரிய மணமுறையன்று.

**ஆசுரம்**[3] *āsuram,* பெ.(n.) நாளிகம் முதலிய கருவிகளாற் செய்யப்படும் போர் (சுக்கிர நீதி, 332); war waged with guns, etc.

*[Skt. āsura > த. ஆசுரம்.]*

**நாளிகம்:** கோட்டை மதிற்சுவரில் அமைக்கப்படும் எறிபடைவகை (சுக்கிர நீதி, 328).

ஆரியர் அல்லாதாரின் போர்முறை.

**ஆசுரவைத்தியம்** *āsura-vaittiyam,* பெ.(n.) அறுவை மருத்துவம்; the operative branch of medical practice. - Surgery, as one of the methods of healing (சா.அக.).

த.வ. பண்டுவம்.

*[Skt. āsura+vaidhya> த. ஆசுரவைத்தியம்.]*

ஆரியம் அல்லாத திரவிடரின் மருத்துவம்.

**ஆசுராப்பண்டிகை** *āsurā-p-paṇḍigai,* பெ.(n.) மொகரம் பண்டிகை; Muharram, a Muhammadan festival.

*[ஆசுராம் + பண்டிகை.]*

*[U. āshūr > த. ஆசுராம்.]*

**ஆசுரி**[1] *āśuri,* பெ.(n.) அரக்கர் குலப்பெண்; an Asura female. *"ஆசுரியின் சின்னங்களாவ" (விநாயகபு. 83:76).*

*[Skt. āsurī > த. ஆசுரி.]*

**ஆசுரி**[2] *āśuri,* பெ.(n.) அறுவை மருத்துவத்தில் தேர்ந்தவர்; surgeon (சா.அக.).

**த.வ. பண்டுவர், தமிழ் மருத்துவர்.**

**ஆசுவம்** *āśuvam,* பெ.(n.) சமணரில் ஒரு பிரிவினராகிய ஆசீவகரின் உணவு; food of the *Ajīvakas.* ஆசுவிமக்கள் ஆசுவமுண்ணும் பேரால் (E.C.)

*[Skt. ā-jīvaka > த. ஆசுவம்.]*

**ஆசுவயுசி** *āśuvayuśi,* பெ.(n.) ஒரு வகை வேள்வி (திவா.); sacrifice in the household fire on the full moon of āśvina.

*[Skt. āśvayuja > த. ஆசுவயுசி.]*

**ஆசுவலாயனம்** *āśuvalāyaṉam,* பெ.(n.) மதச்சடங்குகள் பற்றிய ஒரு நூல்; a collection of ritualistic, aphorisms, by *Āśvalāyana* dealing with domestic and Vēdic rites.

*[Skt. āśvalāyana > த. ஆசுவலாயனம்.]*

**ஆசுவாசம்** *āśu-vāśam,* பெ.(n.) 1. பரபரப்பு, கவலை போன்றவை நீங்கிய பின் கிடைக்கும் ஆறுதல்; relief; consolation. *அவள் ஆசுவாசத்துடன் உட்கார்ந்துகொண்டு பேசத் தொடங்கினாள்.* 2. இளைப்பாறுகை; taking breath, resting.

**த.வ. தணிவு.**

*[Skt. ā - śvāsa > த. ஆசுவாசம்.]*

**ஆசுவிகன்** *āśu-vigaṉ,* பெ.(n.) **ஆசீவகன்** பார்க்க (S.I.I. i, 108.); see *āśīvagan.*

*[Skt. ā-jīvaka > த. ஆசீவகன்.]*

**ஆசுவினம்** *āśuviṉam,* பெ.(n.) நிலவு மாதத்துள் ஏழாவது; seventh lunar month roughly corresponding to Aippaci.

*[Skt. āśvina > த. ஆசுவினம்.]*

**ஆசுவீசம்** *āśuvīśam,* பெ.(n.) **ஆசுவினம்** பார்க்க; see *āśuviṉam.*

*[Skt. āśvayuja > த. ஆசுவீசம்.]*

**ஆசூ** *āśū,* பெ.(n.) 1. நிரய உலகில் (நரக உலகம்) கொடுக்கப்படும் தண்டனை; torments of hell. 2. அமஞ்சி வேலை; working without wages.

*[Skt. ājū > த. ஆசூ.]*

**ஆசூசம்** *āśūśam,* பெ.(n.) தீட்டு; defilement, caused by the birth of a child or by the death of a relative. *"ஆ சூ ச மி ல் லை யருநியமத்தருக்கு" (திருமந். 2552.).*

**த.வ. தீட்டு, தொடக்கு.**

*[Skt. āśauca > த. ஆசூசம்.]*

**ஆசேகம்** *āśēgam,* பெ.(n.) நனைக்கை; moistening, pouring water upon. *"ஆசேகவொண்புனல்" (கந்தபு. வில்வலன் வாதாவிவ. 12.).*

*[Skt. ā-sēka > த. ஆசேகம்.]*

**ஆசேதம்** *āśēdam,* பெ.(n.) அரசனாணையை மேற்கொண்டு தடைசெய்கை. (சுக்கிர நீதி, 262); stopping or obstructing in the king's name.

**த.வ. அரசுத்தடை.**

*[Skt. āsēdha > த. ஆசேதம்.]*

**ஆசைவப்பனை** *āśaiva-p-paṉai,* பெ.(n.) பனங்கள்; palmyra toddy (சா.அக.).

**ஆசைவம்** *āśaivam,* பெ.(n.) கள்; toddy (சா.அக.).

**ஆசோதை** *āśōdai,* பெ.(n.) 1. ஓய்வு; rest or repose. 2. இளைப்பாறுகை; taking rest (சா.அக.).

**த.வ. ஒழிவு.**

**ஆசௌசம்** *āšaušam,* பெ. (n.) தீட்டு (கூர்மபு. அனுக்கிர 25.); pollution.

[**Skt.** *āšauca > த. ஆசௌசம்.*]

**ஆஞ்சனேயன்** *āñjaṉēyaṉ,* பெ.(n.) அனுமான் (நல். பாரத. இராமன் படையெழு. 111); Hanumāṉ.

[**Skt.** *āñjanēya > த. ஆஞ்சனேயன்.*]

**ஆஞ்ஞாபனம்** *āññābaṉam,* பெ.(n.) கட்டளையிடுகை; commanding, ordering.

[**Skt.** *ā - jñāpana > த. ஆஞ்ஞாபனம்.*]

**ஆட்சேபகம்** *āṭšēbagam,* பெ. (n.) 1. இசிவு; spasm. 2. வலிப்பு; convulsive contortion of the limbs. 3. உதைத்துக் கொள்கை; a violent involuntary action of the muscle as in convulsion or fits.

**த.வ.** நடுக்கம்.

[**Skt.** *ā -kṣēpav > த.ஆட்சேபகம்.*]

**ஆட்சேபகவாதம்** *āṭšēbagavādam,* பெ. (n.) பிட்டம், தோள், கை முதலியவிடங்களில் நின்று நரம்புகளில் பரவி, உடம்பில் வலிப்பையும், நடுக்கத்தையும் உண்டாக்கும் ஒரு நோய், a disease enraged Vayu while country swiftly through the nerves in the hips, shoulders, arms etc develops fits tremor, vanishing or loss of consciousness etc.

**த.வ.** நடுக்கநோய்.

[*ஆட்சேபகம் + வாதம்.*]

**ஆட்சேபசமாதானம்** *āṭšēba-šamādāṉam,* பெ. (n.) தடைவிடை; objection and its rejoinder.

[**Skt.** *ā-kṣēpa + sam-ā-dhāna > த. ஆட்சேபசமாதானம்.*]

**ஆட்சேபணை** *āṭšēbaṇai,* பெ. (n.) ஒன்றை ஏற்பதற்கு அல்லது ஒன்றைச் செய்வதற்கு ஒருவர் எழுப்பும் தடை, மறுப்பு; objection.

**த.வ.** தடை.

[**Skt.** *ā-kṣēpaṇa > த. ஆட்சேபணை.*]

**ஆட்சேபம்** *āṭšēbam,* பெ.(n.) 1. மறுப்பு, தடை; objection. *நீங்கள் இங்கு தங்குவதற்கு எந்த ஆட்சேபமும் இல்லை. "பாற்கவன்றனைக் குமாரி யாட்சேபம் பகர்ந்த வாறும்" (மச்சபு. அனுக்கிர. 9.).* 2. எதிர்ப்பு, கண்டனம்; protest. சுற்றுச்சூழல் அமைப்பு ஆட்சேபக் குரல் எழுப்பியது. 3. குற்றம், fault, flaw.

**த.வ.** மறுப்பு.

[**Skt.** *ā-kṣēpa > ஆக்ஷேபம் > த. ஆட்சேபம்.*]

**ஆட்சேபாலங்காரம்** *āṭšēbālaṅgāram,* பெ.(n.) ஒருவகை அணியிலக்கணம்; figure of speech in which a statement is withdrawn as if correcting oneself on second thought.

[**Skt.** *ā-kṣēpa + alam-kāra > த. ஆட்சேபாலங்காரம்.*]

**ஆட்சேபி-த்தல்** *āṭšēbi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. தடை செய்தல், தடை நிகழ்த்துதல்; to object, to challenge. 2. ஒரு கூற்றை எதிர்த்தல் அல்லது மறுப்புக்கூறுதல்; protest against object. *'தலைவரின் பேச்சை யாரும் ஆட்சேபிக்க வில்லை'.*

[**Skt.** *ā-kṣēpa > த. ஆட்சேபி-த்தல்.*]

**ஆடகக்குடோரி** *āḍaga-k-kuḍōri,* பெ.(n.) மயிலாடுங் குருந்து; a plant (unidentified) (சா. அக.).

**ஆடகண்டம்** *āḍagaṇḍam,* பெ.(n.) பெருங்காயம்; asafoetida - *Ferula asafoetida* (சா.அக.).

**ஆடகாவிகம்** *āḍakāvigam,* பெ.(n.) மரவுரி; bark tree - *Antarias toxicaria* (சா.அக.).

**ஆடபிராக்கு** *āḍapirākku,* பெ.(n.) வெள்ளை நோய்க்காகப் பயன்படுமோர் கடைச் சரக்கு; a bazaar drug used in gonorrhoea and other venereal complaints (சா.அக.).

**ஆடாகங்கநிதானம்** *āḍāgaṅga-nidāṉam,* பெ.(n.) ஒரு சிறந்த வடமொழி மருத்துவ நூல்; a celebrated Ayurvedic Science (சா.அக.).

**ஆடுதலி** *āḍutali,* பெ.(n.) அதிகாரியுடன் இருக்கும் உதவியாள்; orderly.

*[E. orderly > த. ஆடுதலி.]*

**ஆடோபம்**[1] *āḍōbam,* பெ.(n.) 1. செருக்கு, திமிர்; pride, self-conceit. 2. வீக்கம்; puffing; swelling.

*[Skt. āṭōpa > த. ஆடோபம்.]*

**ஆடோபம்**[2] *āḍōbam,* பெ.(n.) காற்று கொள்ளல்; being affected with gas or morbid air in the system (சா.அக.).

**ஆத்தசம்** *āttašam,* பெ.(n.) மொச்சை; country bean, *Dolichos lablab* (சா.அக.).

**ஆத்தாள்நாதம்** *āttāḷnādam,* பெ.(n.) அப்பிரகம்; a hydrous silicate of magnesia - Indian mica (சா.அக.).

**ஆத்தானகோழை** *āttāṉa-kōḻai,* பெ.(n.) அவைக்கோழை; one who is afraid to speak in, or to face, an assembly.

*[ஆத்தானம்+கோழை.]*

*[Skt. ā-sthāna > த. ஆத்தானம்.]*

**ஆத்தானசந்தோசி** *āttāṉa-šantōši,* பெ.(n.) நகையாளன், நகைச்சுவையை விளைவிப்பவன் (விகடன்); buffoon.

**த.வ. அவைக்களநகைவன்.**

*[Skt. ā-sthāna + cantōsi >த.ஆத்தான சந்தோசி.]*

**ஆத்தானம்** *āttāṉam,* பெ.(n.) 1. அரசசபை; king's audience hall. 2. அவை; assembly, hall of audience.

*[Skt. ā-sthāna > த. ஆத்தானம்.]*

**ஆத்தானமண்டபம்** *āttāṉa-maṇḍapam,* பெ.(n.) அவை நடக்கும் மண்டபம்; hall of audience.

**த.வ. நாளோலக்கம், ஓலக்க மண்டபம்.**

*[ஆத்தானம் + மண்டபம்.]*

*[Skt. ā-sthāna > த. ஆத்தானம்.]*



**ஆத்தி** *ātti,* பெ.(n.) சொத்து; property, wealth, riches.

*[Skt. āsti > த. ஆத்தி]*

**ஆத்திகம்** *āttigam,* பெ.(n.) கடவுள் உண்டென்று நம்பும் கொள்கை; theism.

*[Skt. āstika > த. ஆத்திகம்.]*

**ஆத்திகன்** *āttigaṉ,* பெ.(n.) கடவுள் முதலிவை உண்டென்று நம்புவோன்; one who believes in the existence of God and of a future world, opp. to nāsthigaṉ.

*[Skt. āstika > த. ஆத்திகன்.]*

**ஆத்திபாத்தி** *ātti-pātti,* பெ.(n.) சொத்து; property.

*[Skt. āsti+bhāsti > த. ஆத்திபாத்தி.]*

**ஆத்தியந்தம்** *āttiyandam,* பெ.(n.) முதலும் முடிவும்; beginning and end.

*[Skt. ādi+anta > த. ஆதியந்தம் > ஆத்தியந்தம்.]*

**ஆத்தியந்திகபிரளயம்** *āttiyandiga-piraḷayam,* பெ.(n.) முழு அழிவு (சர்வசங்காரம்) (அபி. சிந்); total annihilation; final deluge.

*[Skt. ātyandiga+pra-laya > த. ஆத்தியந்தி கபிரளயம்.]*

**ஆத்தியாத்துமிகம்** *āttiyāttumigam,* பெ.(n.) தன்வினைபற்றிவருந் துன்பம் (வின்); evil due to one's own acts.

*[Skt. ādhyātmika > த. ஆத்தியாத்துமிகம்.]*

**ஆத்திரேயர்**[1] *āttirēyar,* பெ.(n.) **ஆத்திரையன்** பார்க்க; see *āttiraiyaṉ.* 2. ஆத்திரையன் என்னும் தமிழ் மருத்துவர் பெயரின் வடமொழியாக்கம்; translation of the Tamil name *āttiraiyaṉ,* an ancient authority of Tamil medicine.

**ஆத்திரேயர்**[2] *āttirēyar,* பெ.(n.) ஆத்திரையன் என்னும் தமிழ்ப் பெயரிட்டுக் கொண்டவரும் வடமொழியில் மருத்துவச் சொல் வரிசை (நிகண்டு) எழுதி மிகமைபேர் பெற்றவருமாகிய வடநாட்டு முனிவர். இவர் பாஞ்சால நாட்டிற் பிறந்து, ஆயுள் மறையில் (வேதத்தில்) புலமை பெற்றவர். அக்கினி வேசருக்குக் குருவாய் இருந்தவரின் நூலை "ஆத்திரேய சம்மிதை" எனும் வடமொழிநூலாக எழுதியவர்; he is a great sage and is well known as the author of a medical vocabulary. He is a native of the Punjab and attained great celebrity in Ayurveda. He is said to be the Successor of Agnivesa and is now considered to be a great authority on Ayurveda (சா.அக.).

*[த. ஆத்திரையன் > **Skt.** āttrēya.]*

**ஆத்திரேயன்** *āttirēyaṉ,* பெ.(n.) 1. நிலவு; moon; 2. அத்திரி குலத்திற் பிறந்தவன்; a descendant of the sage Atri.

*[**Skt.** Atrēya > த. ஆத்திரேயன்.]*

**ஆத்திரேயி** *āttirēyi,* பெ.(n.) 1. ஓர் ஆறு; a river; 2. பூப்புள்ளவள்; woman in her periods.

*[**Skt.** ātrēyī > த. ஆத்திரேயி.]*

**ஆத்திரேயிகை** *āttirēyigai,* பெ.(n.) மாத விடாய்க்குப் பின் குளித்த பெண்; a woman who has bathed after her course (சா.அக.).

**ஆத்திரேயை** *āttirēyai,* பெ.(n.) அன்னப் பால்; chyle (சா.அக.).

**ஆத்திரையம்** *āttiraiyam,* பெ.(n.) மறைநூலின் ஒரு பகுதியாகிய (வேதாங்கமாகிய) கற்பத்தைப் பற்றிய ஒரு வடநூல் (தொல். பொருள். 75, உரை.); a ritualistic treatise in Šanskrit by Atri *Ṛṣi.*

*[**Skt.** ātrēya > த. ஆத்திரையம்.]*

**ஆத்துமகத்தி** *āttuma-katti,* பெ.(n.) தற்கொலை; suicide.

*[**Skt.** ātman+hatyā > ஆத்மஹத்தி > த. ஆத்துமகத்தி.]*

**ஆத்துமகாமம்** *āttumakāmam,* பெ.(n.) ஆதன் கடைத்தேறும் வழியில் விருப்பம் கொள்ளல்; desire for the emancipation of the Soul (சா.அக.).

**ஆத்துமகுணம்** *āttumaguṇam,* பெ.(n.) ஆதனிடத்தில் அமைந்துள்ள நற்குணம்; a virtue of the Soul (சா.அக.).

**ஆத்துமகுப்தா** *āttumaguptā,* பெ.(n.) பூனைக்காலி; cat bean - *Mucana pruriens* (சா.அக.).

*[**Skt.** ātma-gupta > த. ஆத்துமகுப்தா.]*

**ஆத்துமகூண்டு** *āttumagūṇdu,* பெ.(n.) மெய்; body as a cage for the soul (சா.அக.).

**ஆத்துமகேசரி** *āttumakešari,* பெ.(n.) நிலக்கடலை; ground nut, underground kidney bean, *Arachis hypogaea* alias *A. africana* (சா.அக.).

**ஆத்துமகொடிமணி** *attumakodimaṇi,* பெ.(n.) மணிக்குடல்; a membrane in the cavity of the abdomen serving to retain the intestines and their appendages in the proper position, *Mesentery* (சா.அக.).

**ஆத்துமகோடம்** *āttumagōḍam,* பெ.(n.) காகம்; crow (சா.அக.).



**ஆத்துமசத்தி** *āttuma-šatti,* பெ.(n.) ஆதனின் ஆற்றல். இது ஒவ்வொரு மாந்தனிடத்திலும் மறைந்திருக்கும் காந்தவலிமை. நூலில் கூறியபடி ஆதனை ஏற்கக் கண்டவர்களே இவ்வுலக துயரங்களினின்று விடுதலை அடைவார்கள். இது எல்லாப் பொருட்களிலும் நிறைந்து உள்ளது; soul power. Soul fores it is nothing, but the subtle magnetism which emanates from the properly controlled souls, and which, when properly, exerted, will overcome and remove all adverse and opposite impressions. It is the soul that is percolating through all kinds of matter and force (சா.அக.).

*[ஆத்துமம் + சத்தி.]*

**ஆத்துமசல்லியை** *āttumašalliyai,* பெ.(n.) தண்ணீர் விட்டான் கிழங்கு; water root - *Asparagus racemosus* (சா.அக.).

**ஆத்துமசன்** *āttumašan,* பெ.(n.) மகன்; son.

*[Skt. ātma-ja > த. ஆத்துமசன்.]*

**ஆத்துமசிந்தை** *attuma-šindai,* பெ.(n.) ஆதன் மெய் அறிவு பெற வேண்டி செய்யும் ஒகம்; meditation on the soul (சா.அக.).

**த.வ. ஆதன்ஒகம்.**

*[ஆத்துமம் + சிந்தை.]*

**ஆத்துமசியோனி** *āttuma-šiyōni,* பெ.(n.) சித்தினிகுலப்பெண்; one of the four classes of women (சா.அக.).

**ஆத்துமசினேகிதன்** *āttuma-šinēgidan,* பெ.(n.) உயிர்த்தோழன்; bosom friend.

*[Skt. ātman + snēhida >த.ஆத்தும சினேகிதன்.]*

**ஆத்துமசுத்தி** *āttuma-šutti,* பெ.(n.) 1. ஆதனின் தூய்மை; the purity of the soul, self purification. *காசு பணம் தான் வாழ்வின் குறிக்கோள் என்றில்லாமல் அனைவரும் ஆத்மசுத்தியுடன் உழைக்க வேண்டும்.* 2. ஆதனின் தெய்வீக நுகர்ச்சி; a spiritual experience of the soul (சா.அக.).

*[Skt. ātman+šuddhi > த. ஆத்துமசுத்தி.]*

**ஆத்துமசௌசம்** *āttuma-šaušam,* பெ.(n.) மனத் தூய்மை; purity of mind (சா.அக.).

*[Skt. ātman+šauca > த. ஆத்துமசௌசம்.]*

**ஆத்துமஞானம்** *āttuma-ñānam,* பெ.(n.) 1. ஆதனை உணர்வது அல்லது தன்னைத் தானே அறிவது; individual consciousness or knowledge of the soul. 2. ஆதனை ஒகத்தால் அறிவது; spiritual knowledge attained through yogic power. *'எவன் ஒருவன் தனக்குள் மறைந்திருக்கும் ஆசைகளை வென்று ஒருவழியில் நிற்கின்றானோ அவனே ஆதனை அறியமுடியும். ஒவ்வொரு மூலப் பொருளிலும் அடங்கியுள்ள ஆதனினால் தான், உலகம் நடைபெறும். இவ்வாதனை அறிந்தவன் உலகமே கை வரப்பெற்றவன் ஆவான்'* (சா.அக.).

**த.வ. மெய்யுணர்வு, தன்னுயிர் தானறிகை.**

*[Skt. ātman+jñāna > த. ஆத்துமஞானம்.]*

**ஆத்துமஞானி** *āttuma-ñāni,* பெ. (n.) தன்னையறிந்தவன் (ஈ.டு. 4. 1 : 10.); one who has realized oneself.

**த.வ. மெய்யுணர்வாளன்.**

*[Skt. ātman +ñāni > த. ஆத்துமஞானி.]*

**ஆத்துமத்தியாகம்** *āttuma-tiyāgam,* பெ.(n.) தன்னை மறத்தல்; the self-forgetfulness (சா. அக.).

**த.வ. தன்னிலை மறப்பு.**

*[ஆத்துமம் + தியாகம்.]*

**ஆத்துமதத்துவநூல்** *āttuma-tattuva-nūl,* பெ.(n.) ஆதன் அல்லது மனதின் மூலக் கோட்பாட்டைப் பற்றிக் கூறும் நூல்; that branch of knowledge which deals with the philosophy of the mind, or the soul, or their operation - Psychology.

**த.வ. உளவியல்.**

*[ஆத்துமதத்துவம் + நூல்.]*

*[Skt. ātman+tattva > த. ஆத்துமதத்துவம்.]*

**ஆத்துமதத்துவம்** *āttuma-tattuvam,* பெ.(n.) பிறப்பற்றதும் நிலையானதுமான ஆதனின் இயற்கைக் குணம்; the true nature of the soul or the supreme spirit which is unborn, eternal and changeless.

**த.வ. தன்னியல்.**

*[Skt. ātman+tattva> த. ஆத்துமதத்துவம்.]*

இது நுண்மையிலும், நுண்மையானது; பெரிதினும் பெரிது; தானாகத் தோன்றக் கூடியது; காலத்திற் தோன்றி அழியும் பொருள் அல்ல; தொடக்கமும், முடிவும் அற்றது; எப்பொழுதும் அழிவற்றது (சா.அக.).

**ஆத்துமதந்திரம்** *āttuma-tandiram,* பெ.(n.) ஆதனின் நிலை; the basis of the self (சா.அக.).

*[Skt. ātman+tantra> த. ஆத்துமதந்திரம்.]*

**ஆத்துமதரிசகம்** *āttuma-tarišagam,* பெ.(n.) கண்ணாடி; mirror (சா.அக.).

*[Skt. ātman+taricaka> த. ஆத்துமதரிசகம்.]*

**ஆத்துமதரிசம்** *āttuma-tarišam,* பெ. (n.) **ஆத்துமதரிசகம்** பார்க்க; see *āttuma-tarišagam* (சா.அக.).

**ஆத்துமதரிசனம்** *āttuma-tarišaṉam,* பெ. (n.) 1. எல்லா உயிர்களிலும் மறைந்துள்ளதும், நுட்பமான அறிவை அடைந்தவர்களினால் தான் பார்க்க முடியும் என்று நம்பப்படுவதாகிய ஆதனின் நிலையை அறிகை; the soul's perception. The soul is hidden in all beings, but it could be seen only by the subtle seer through their pointed subtle intellect. 2. மெய்யுள் ஆதனின் நிலையை ஒகத்தால் தெளிகை; the spiritual illumination through contemplation or meditation. 3. பரம் பொருள் உள்ளில் இருந்து சிற்றுயிர்களை ஆட்டுவிக்குந் தன்மையை உணர்ந்து தெளிகை; a consciousness that the God within is the operator of the actions of the souls. 4. ஆதனைக் காண்கை; the seeing of the soul (சா.அக.).

**த.வ. தற்காட்சி.**

*[Skt. ātman+daršana >த. ஆத்துமதரிசனம்.]*

இதனைத் திருவள்ளுவர் தன்னுயிர்தானறப் பெறுதல் எனக் குறிப்பிட்டுள்ளார்.

**ஆத்துமதிருப்தி** *āttuma-tirupdi,* பெ.(n.) பிறருக்காகவோ பிறகரணியங்களுக்காகவோ செய்யாமல் தன் மகிழ்ச்சியின் பொருட்டே செய்வதால் ஒருவர் அடையும் மனநிறைவு; soul's satisfaction; *பணத்துக்காக அல்லாமல் ஆத்ம திருப்திக்காக வாழ்கின்றார்.*

**த.வ. தன்னிறைவு.**

*[Skt. ātman+ṭpti > த. ஆத்துமதிருபதி.]*

**ஆத்துமதோத்திரம்** *āttuma-tōttiram,* பெ. (n.) தற்புகழ்ச்சி; self-praise.

*[Skt. ātman+stottira>த.ஆத்துமதோத்திரம்.]*

**ஆத்துமநாசம்** *āttuma-nāšam,* பெ.(n.) தன்னைத் தானே கெடுத்துக்கொள்ளுகை; destroying or losing one's soul through misconduct.

**த.வ. தற்கேடு.**

*[Skt. ātman+nāša > த. ஆத்துமநாசம்.]*

**ஆத்துமநிவேதனம்** *āttuma-nivēdaṉam,* பெ.(n.) 1. தன் உயிரையே கொடையாகக் கொடுக்கை; sacrifice of life. 2. தன்னை ஒப்படைக்கை; self dedication, offering oneself (சா.அக.).

**த.வ. தற்படையல்.**

*[Skt. ātman+ni-vēdana > த. ஆத்தும நிவேதனம்.]*

**ஆத்துமபந்து** *āttuma-bandu,* பெ.(n.) 1. ஆதனின் உறுதிச்சுற்றம்; friend or relation in the spiritual sense as one's guru. 2.அத்தைமகன் முதலிய உறவுகள் (பந்துக்கள்); such as father's sister's son, mother's brother's son, etc.

*[Skt. ātman+bandhu > த. ஆத்துமபந்து.]*

**ஆத்துமபவம்** *āttuma-pavam,* பெ.(n.) தானாய் விளங்குகை; existing of one's self.

**ஆத்துமபாரம்** *āttumapāram,* பெ.(n.) ஆதனின் தேட்டம்; the requiste of the supreme spirit (சா.அக.).

*[ஆத்துமம் + பாரம்.]*

**ஆத்துமபிரபோதம்** *āttuma-pirabōdam,* பெ. (n.) நூற்றெட்டு மறைமுடிபுகளுள் ஒன்று; name of an Upanisad.

*[Skt. ātma-prabōdha>த. ஆத்துமபிரபோதம்.]*

**ஆத்துமம்¹** *āttumam,* பெ.(n.) ஆதன்; soul. *"ஆத்துமம் விட்டிறக்கு நாள்" (குற்றா. குற கடவுள் வணக். 6).*

**த.வ. ஆதன், உயிரன்.**

*[Skt. ātman > த. ஆத்துமம்.]*

**ஆத்துமம்²** *āttumam,* பெ.(n.) நூற்றெட்டு மறை முடிபுகளுள் ஒன்று; name of an Upanisad.

*[Skt. ātman > த. ஆத்துமம்.]*

**ஆத்துமராமன்** *āttumarāman,* பெ.(n.) தன்னிறைவுடையவன் (ஆத்ம திருப்தி யுடையவன்) (வேதாந்தசா. 108); one who is self-satisfied.

*[Skt. ātmārāma > த. ஆத்துமராமன்.]*

**ஆத்துமலாபம்** *āttuma-lābam,* பெ.(n.) 1. ஆன்மப்பேறு; gain of soul. 2. சொந்த வருமானம் (ஆதாயம்); personal gain. 3. தன்னையறிகை; self-realization.

**த.வ. ஆதன்பேறு, உயிரன்பேறு.**

*[Skt. atman+lābha > த. ஆத்துமலாபம்.]*

**ஆத்துமவதம்** *āttuma-vadam,* பெ.(n.) தற்கொலை; suicide.

*[Skt. atma-vadha > த. ஆத்துமவதம்.]*

**ஆத்துமவதிகாசனம்** *āttuma-v-adikāšanam,* பெ.(n.) நல்லிருக்கை (நல்லாசனம்) என்னும் ஒகவிருக்கை (யோகாசனம்); a yōgic posture.

**த.வ. நல்லோகம்.**

*[Skt. ātman + adhika + ā-sana > த. ஆத்துமவதிகாசனம்.]*



**ஆத்துமவிரக்கங்காட்டு-தல்** *āttuma-v-irakkan-gāṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) முழு மனதுடன் அன்புந் தயையுங் காட்டுதல் (இராட்.); to show favour and compassion with all one's heart.

*[ஆத்துமன் + இரக்கம் + காட்டு-தல்.]*

*[Skt. ātman > த. ஆத்துமன்.]*

**ஆத்துமவிவேகம்** *āttūma-vivēgam,* பெ.(n.) தன்னையறிகை (ஆத்மஞானம்) (இராட்); spiritual wisdom

*[Skt. ātmā-vivēka > த. ஆத்துமவிவேகம்.]*

**ஆத்துமா¹** *āttuma,* பெ. (n.) 1. ஆதன், soul. 2. உயிரி; living being.

**த.வ. ஆதன், உயிரன்.**

*[Skt. ātmā > த. ஆத்துமா.]*

**ஆத்துமா²** *āttumā,* பெ.(n.) மூச்சுவிடுவதில் தடை ஏற்படும் நுரையீரல் தொடர்பான நோய்; asthma.

**த.வ. ஈளைநோய்.**

*[Skt. āsduma > ஆஸ்த்மா>த. ஆத்துமா.]*

**ஆத்துமாபகாரம்** *āttumāpakāram,* பெ.(n.) ஆதனின் இயல்பை வேறாக நினைக்கை; misapprehension about the nature of Ātman.

*[Skt. ātman+apahāra>த. ஆத்துமாபகாரம்.]*

**ஆத்துமார்த்தம்** *āttumārttam,* பெ.(n.) மிக்க நட்பு, பழக்கம், பேச்சு முதலியவைக் குறித்து வருகையில் எந்த செய்தியையும் மனம்விட்டுப் பகிர்ந்து கொள்ளக்கூடிய நெருக்கம்; oneness of mind; identifying oneself with some one or samething.

த.வ. உயிரன்பு.

*[Skt. ātmārtha > த. ஆத்துமார்த்தம்.]*

**ஆத்துமானந்தம்** *āttumāṉandam,* பெ.(n.) 1. தனக்குள் மகிழ்கை; rejoicing in oneself. 2. தன்னறிவால் (தற்போதத்தால்) நிகழும் மகிழ்ச்சி; joy that arises or one's knowing oneself.

த.வ. உள்ளுவப்பு.

*[Skt. ātman+ā-nanda> த. ஆத்துமானந்தம்.]*

**ஆத்துமானுபவம்** *āttumāṉubavam,* பெ.(n.) தன்னைத்தான் உணர்கை (அஷ்டாதச. அர்த்தபஞ்.); self realization.

த.வ. தன்னறிவு.

*[Skt. ātman+anu-bhava>த.ஆத்துமானுபவம்.]*

**ஆத்துமிகம்** *āttumigam,* பெ. (n.) **ஆத்தியாத்துமிகம்** பார்க்க; see *āttiyāttumigam.*

*[Skt. ātmika > த. ஆத்துமிகம்.]*

**ஆத்துமீகம்** *āttumīgam,* பெ.(n.) **ஆன்மீகம்** பார்க்க; see *āṉmīgam.*

**ஆத்துமீயம்** *āttumīyam,* பெ.(n.) தன்னுடையது; that which belongs to oneself, one's own. *"ஆத்துமா ஆத்துமீயங் களில் நசை யறவேணும்".*

*[Skt. ātmīya > த. அத்துமீயம்.]*

**ஆத்தை** *āttai,* பெ.(n.) விருப்பம், அன்பு; regard, eager, desire. *அந்தப் பிள்ளைக்குப் படிப்பில் ஆத்தை மிகுதி.*

*[Skt. ā-sthā> ஆஸ்தை > த. ஆத்தை.]*

**ஆத்மகத்தி** *ātma-katti,* பெ.(n.) **ஆத்துமகத்தி** பார்க்க; see *āttuma-katti.*

*[Skt. ātman+hatyā > த. ஆத்மகத்தி.]*

**ஆத்மசக்தி** *ātma-šakti,* பெ.(n.) **ஆத்துமசத்தி** பார்க்க; see *āttuma-šatti.*

**ஆத்மசினேகிதன்** *ātma-šinēgidaṉ,* பெ. (n.) **ஆத்துமசினேகிதன்** பார்க்க; see *āttuma-šiṉēgidaṉ.*

**ஆத்மசுத்தி** *ātma-šutti,* பெ.(n.) **ஆத்துமசுத்தி** பார்க்க; see *āttuma-šutti.*

**ஆத்மசௌசம்** *ātma-šaušam,* பெ. (n.) **ஆத்துமசௌசம்** பார்க்க; see *āttuma-šaušam.*

**ஆத்மஞானம்** *ātma-ñāṉam,* பெ. (n.) **ஆத்துமஞானம்** பார்க்க; see *āttuma-ñāṉam.*

**ஆத்மதரிசனம்** *ātma-darišaṉam,* பெ. (n.) **ஆத்துமதரிசனம்** பார்க்க; see *āttuma-darišaṉam.*

**ஆத்மநிவேதனம்** *ātma-nivēdaṉam,* பெ.(n.) **ஆத்துமநிவேதனம்** பார்க்க; see *āttuma-nivēdaṉam.*

**ஆதகம்** *ādagam,* பெ.(n.) 1. அன்பு; kindness, affection. 2. ஆசை; love, desire. 3. இஞ்சி; ginger (சா.அக.).

**ஆதங்கம்[1]** *ādaṅgam,* பெ.(n.) 1. நோய்; disease, sickness. 2. அச்சம்; fear. *"இப்பா ராதங்க மாற (பாரத. அருச்.தீர்த். 87)"*

*[Skt. ā-taṅka > த. ஆதங்கம்.]*

**ஆதங்கம்[2]** *ādaṅgam,* பெ.(n.) இவ்வாறு நிகழ்த்திருக்க வேண்டாம் அல்லது நிகழ வேண்டும் என்ற கவலை, மனக்குறை; feeling of regret or feeling of anxiety. *'விடுப்பு எடுத்துப் போயும் நண்பரைக் காண முடியவில்லையே என்ற ஆதங்கம் அவருக்கு; அதனால்தான் வருத்தமாயிருக்கிறார்'.*

த.வ. மனத்தாங்கல்.

**ஆதங்கம்[3]** *ādaṅgam,* பெ.(n.) 1. துன்பம்; grief. 2. முரசினோசை; sound of drum.

*[Skt. ātaṅka > த. ஆதங்கம்.]*

**ஆதஞ்சனம்** *ādañjaṉam,* பெ.(n.) நீறாக்கியது; that which is calcined or reduced to ashes (சா.அக.).

**ஆததாயிகள்** *ādadāyigaḷ,* பெ. (n.) கொடியோர் (குறள்,550,உரை.); desperadoes; incendiaries, poisoners, murderers, as having one's bow drawn to take another's life.

த.வ. வன்கணாளர்.

*[Skt. ātatāyin > த. ஆததாயிகள்.]*

**ஆதபசுரம்** *ādabaśuram,* பெ.(n.) கோடைக் காலங்களில் காலைப் பொழுதில் ஓயாமல் வழி நடத்தவினால் பித்தம் கோளாறடைந் துண்டாகும் காய்ச்சல்; a billious fever arising from the deranged pittam due to constant exposure to the sun by walking in the mornings of the summer season (சா.அக.).

த.வ. பித்தக்காய்ச்சல்.

**ஆதபத்திரம்** *ādapattiram,* பெ.(n.) 1. குடை; umbrella, as a protection against the sun. 2. வெண்குடை (சூடா.); white umbrella, as an emblem of the royalty.

*[Skt. ātapatra > த. ஆதபத்திரம்.]*

**ஆதபத்தைலம்** *ādabattailam,* பெ.(n.) வெயிலில் வைத்து எடுத்த நெய்மம்; oil obtained by leaving it with the ingredients exposed to the sun for some days (சா.அக.).

த.வ. வெயில் சூட்டுநெய்மம்.

**ஆதபநீயம்** *ādabanīyam,* பெ.(n.) ஒரு வகை நெல்; a kind of paddy (சா.அக.).

**ஆதபம்**[1] *ādabam,* பெ.(n.) 1. வெயில்; sunshine, sunlight. 2. ஒளி; lustre. *"ஒருவழியி னடையா வாதபஞ் சாயைபோல"* (ஞானா. 63).

த.வ. உருமம்.

*[Skt. ā-tapa > த. ஆதபம்.]*

**ஆதபம்**[2] *ādabam,* பெ.(n.) மூலப்பகுதிகளுள் (பிரகிருதிகளுள்) ஒன்று (மேருமந். 165); a pirakirudi.

*[Skt. ātapa > த. ஆதபம்.]*

**ஆதபயோகம்** *ātapa-yōgam,* பெ.(n.) வெயிலின் கடுமையைத் தாங்கும் ஒகநிலை (மேருமந். 619. உரை); a yōgic condition in which the yōgi is able to with stand the burning heat of the sun.

த.வ. சுடுவெயில் தவம்.

*[Skt. ātaba+yōga > த. ஆதபயோகம்.]*

**ஆதபன்** *ādabaṉ,* பெ.(n.) கதிரவன்; Sun, as the source of heat. *"ஆதபனிடத்தன் றருந்தொழில் புரியு நீதியில்லை"* (ஞானா. 57).

*[Skt. ā-tapa > த. ஆதபன்.]*

**ஆதம்** *ādam,* பெ.(n.) 1. கூந்தற் பனை; a kind of palm tree, so called from its numerous long, and thin spadices. Jaggery tree. Bastard sago tree - *Caryota urens.* 2. உயிர்; life. 3. சந்தன மரம்; sandalwood tree - *Santanum album* (சா.அக.).



**ஆதம்பரம்** *ādambaram,* பெ.(n.) மாதேவி; a tree flea-bane-*Vernonia cinerea* (சா.அக.).

**ஆதம்பேதி** *ādambēdi,* பெ.(n.) செருப்பு நெருஞ்சில்; a thistle bearing red flowers; trailing indigo-*Indigofera enneaphylla* (சா.அக.).

**ஆதமதந்தம்** *ādamatandam,* பெ.(n.) 1. சிலந்திக்கட்டி; pimple, a small boil. 2. நஞ்சுக்கட்டி; abscess, ulcer, venereal boil (சா.அக.).

**ஆதமம்** *ādamam,* பெ.(n.) அரத்தை; galangal - *Alpinia galangal* (சா.அக.).

**ஆதமர்ணிகப்பொருள்** *ādamarṇiga-p-poruḷ,* பெ.(n.) கடனாகக் கொடுக்கும் பொருள் (சுக்கிரநீதி, 97); money that is lent.

*[Skt. ādhamarṇika > த. ஆதமர்ணிகம்.]*

**ஆதர்ச** *ādarša,* பெ.அ.(adj) மிகச் சிறந்த; எடுத்துக்காட்டாகச் சொல்லக் கூடிய; something ideal; perfect; model. *ஆதர்ச நண்பர்கள்.*

**ஆதரணை** *ādaraṇai,* பெ.(n.) ஆதரவு; shelter, support, help. *"கைதூக்கி ஆதரணை செய்யும்" (கந்தபு. கீர். 31:18).*

*[Skt. ādaraṇā > த. ஆதரணை.]*

**ஆதராதிசயம்** *ādarādišayam,* பெ.(n.) பேரன்பு; great regard, ardent desire.

*[Skt. ā-dara+ati-saya > த. ஆதராதிசயம்.]*

**ஆதரிசம்**[1] *ātarišam,* பெ.(n.) 1. நூலுக்கு வழங்கப்படும் உரை; commentary. 2. மூல ஏடு; original manuscript.

*[Skt. ādarša > த. ஆதரிசம்.]*

**ஆதரிசம்**[2] *ādarišam,* பெ.(n.) கண்ணாடி; mirror.

*[Skt. ā-darša > த. ஆதரிசம்.]*

**ஆதரிசனம்** *ādarišaṉam,* பெ.(n.) **ஆதரிசம்**[2] பார்க்க; see *ādarišam*[2].

*[Skt. ā-daršana > த. ஆதரிசனம்.]*

**ஆதவத்தைலம்** *ādavattailam,* பெ.(n.) கதிரவன் சூடு படும் படி புட மிட்ட நெய்மம்; a medicated oil prepared by exposing it to the sun's rays (சா.அக.).

த.வ. **வெயில் சூட்டுநெய்.**

**ஆதவம்** *ādavam,* பெ.(n.) 1. வெயில்; sunshine. 2. ஒளி (பிங்.); light.

*[Skt. ā-tapa > த. ஆதவம்.]*

**ஆதவன்** *ādavan,* பெ.(n.) கதிரவன்; Sun.

*[Skt. ā-tapa > த. ஆதவன்.]*

**ஆதனம்**[1] *ādaṉam,* பெ.(n.) 1. யானைக் கழுத்து (நாநார்த்த.); nape of the elephant. 2. இருக்கை, பீடம் (நாநார்த்த.); seat. 3. சீலை (வின்.); cloth. 4. தரை; ground. 5. குண்டி (பிருட்டம்); buttocks.

த.வ. **இருக்கை.**

*[Skt. āsana > த. ஆதனம்.]*

**ஆதனம்**[2] *ādaṉam,* பெ.(n.) ஒக இருக்கை (யோகாசனம்), (நாநார்த்த.); yōgic posture. *"தலையினோ டாதனந்தட்ட" (ஈடு. 3.5:3).*

**ஆதனமூர்த்தி** *ādaṉa-mūrtti,* பெ.(n.) 1. படிமம்; image. 2. சிவகுறி (இலிங்கம்); liṅga or emblem of Šivaṉ (சா.அக.).

*[ஆதனம் + மூர்த்தி.]*

*[Skt. āsana > த. ஆதனம் + மூர்த்தி]*

**ஆதாம்** *ādām,* பெ.(n.) முதல் மாந்தன் (முதல்மனிதன்); name of the firstman.

*[Heb. ādām > த. ஆதாம்.]*

**ஆதானம்**[1] *ādāṉam,* பெ.(n.) 1. குதிரையணி (நாநார்த்த); caparisons of a horse. 2. பற்றுகை (மச்சபு. பிரமமு. ii); taking, seizing.

*[Skt. ādāna > த. ஆதானம்.]*

**ஆதானம்**[2] *ādaṉam,* பெ. (n.) வைக்கை (சேதுபு. அகத். 38); depositing, placeing usu. in compounds as அக்கினியாதானம், கர்ப்பாதானம்.

*[Skt. ā-dhāna > த. ஆதானம்.]*

**ஆதிதேசசு** *āditēšašu,* பெ.(n.) மஞ்சட் பூவுடைய ஒரு நீர்க்கொடி; a creeping plant with gold coloured flowers growing near the water - *Polanisia Icosandra* (சா.அக.).

**ஆதிபன்** *ādibaṉ,* பெ.(n.) இறைவன்; lord.

*[Skt. adhi-pa > த. ஆதிபன்.]*

**ஆதிவெள்ளைச்சிந்தூரம்** *ādiveḷḷai-c-cintūram,* பெ.(n.) வீரம்; corrosive sublimate (சா.அக.).

**ஆதினம்** *ādiṉam,* பெ.(n.) **ஆதீனம்** பார்க்க; see *ādīṉam.*

**ஆதீனகர்த்தன்** *ādīṉa-karttaṉ,* பெ.(n.) நிலவுடைமையாளர் (R.T.); proprietor, landlord.

*[Skt. ādhīna+kartā> த.ஆதீனகர்த்தன்.]*

**ஆதீனகர்த்தா** *ādīṉa-karttā,* பெ.(n.) **ஆதீனத்தர்** பார்க்க; see *ādīṉattar.*

**ஆதீனத்தர்** *ādīṉattar,* பெ.(n.) சிவமடத்தின் தலைவர் (இ.வ); head of a Šiva mutt.

**த.வ. தம்பிரான், தம்பிரான் அடிகள்.**

*[Skt. āadhinastar > த. ஆதீனத்தர்.]*

**ஆதீனம்** *ādīṉam,* பெ.(n.) 1. ஒரு குருவால் தோற்றுவிக்கப்பட்டுச் சிவனியத்தைப் பரப்புவதற்குச் சிவத்துறவிகளால் நடைமுறைப் படுத்தப்படும் அமைப்பு; an organization founded by a religious teacher for the propagation of Šaivism and later managed by his celibate disciples, *குன்றக்குடி ஆதீனம்.* 2. ஆதீனத்தின் தலைவர்; head of a Šaiva mutt. *மதுரை ஆதீனம் சொற்பொழிவு நிகழ்த்துகிறார்.*

**த.வ. திருமடம், சிவமடம்.**

*[Skt. adhīna > த. ஆதீனம்.]*

**ஆதீனவம்** *ādīṉavam,* பெ.(n.) 1. தீவினைப் பயன்கரிசு (பாவம்); sin. 2. கொடுஞ் சாவு (துர்மரணம்); unnatural death. 3. துன்ப மடைகை; suffering.

*[Skt. ādīṉava > த. ஆதீனவம்.]*

**ஆதுயம்** *āduyam,* பெ.(n.) கள்; toddy (சா.அக.).

**ஆதுரசாலை** *ādura-šālai,* பெ.(n.) **ஆதுரர்ச்சாலை** பார்க்க; see *ādurar-c-cālai*

**ஆதுரம்**[1] *āduram,* பெ.(n.) 1. அவா; desire. 2. நோய்; disease.

*[Skt. ādura > த. ஆதுரம்.]*

**ஆதுரம்**[2] *āduram,* பெ.(n.) பரபரப்பு; impatience, undue haste.

*[Skt. ā-tura > த. ஆதுரம்.]*

**ஆதுரர்ச்சாலை** *ādurar-c-cālai,* பெ. (n.) நோயாளிகளைக் கிடத்தும் இடம்; a place where the sick and the injured are lodged and nursed - Hospital (சா.அக.).

**த.வ. மருத்துவமனை.**

*[ஆதுரர் + சாலை.]*

*[Skt. ā-tura > த. ஆதுரர்.]*

**ஆதுரன்** *āduraṉ,* பெ.(n.) நோயாளி; a sickly man, a patient (சா.அக.).

*[ஆதுரம் → ஆதுரன்.]*

**ஆதுலர்சாலை** *ādular-cālai,* பெ.(n.) மெலிந்தோருக்கும், வறியோர்க்கும், ஏற் படுத்தப்பட்ட தங்குமிடம் ; poor - house for giving food and shalter to the disabled, poor and the destitute (சா.அக.).

**த.வ. புகலிடச்சாலை.**

*[ஆதுலன் → ஆதுலர் + சாலை.]*

**ஆதுலன்** *ādulaṉ,* பெ.(n.) 1. திறமையற்றவன்; disabled person. 2. வறியவன்; poor man. *"ஆதுலன் மூத்தான் (ஆசாரக். 101)."*

*[Skt. ā-turā > த. ஆதுரர் →ஆதுலன்.]*

**ஆதுனிகன்** *āduṉigaṉ,* பெ.(n.) இக் காலத்தவன் (பி.வி. 2, உரை.); person of the modern times.

*[Skt. ādhunika > த. ஆதுனிகன்.]*

**ஆதெரிசனம்** *āderišaṉam,* பெ.(n.) கண்ணாடி; mirror (சா.அக.).

**ஆதோரணமஞ்சரி** *ādōraṇa-mañjari,* பெ.(n.) எதிர்த்த மதயானைகளை அழித்தும் அடக்கியும் போரிடும் வீரனது சிறப்பை வஞ்சிப்பாவால் தொடுத்துப் பாடும் சிற்றிலக்கியம் (தொன். வி. 283, உரை.); poem in vañji metre in praise of a warrior who has subdued or killed one or more furious elephants of a hostile army.

**த.வ. மறவஞ்சி.**

*[Skt. ā-dhōraṇa+mañjari > த. ஆதோரண மஞ்சரி.]*

**ஆதோரணன்** *ādōraṇaṉ,* பெ. (n.) யானைப் பாகன் (திவா.); elephant-driver, mahout.

*[Skt. ā-dhōraṇa > த. ஆதோரணன்.]*

**ஆப்தன்** *āptaṉ,* பெ.(n.) 1. நண்பன்; friend. 2. நம்பிக்கைக்குரியவன் (தாயு. எங்கு.1); trust-worthy person one whose words are believable.

*[Skt. ā-pta > த. ஆப்தன்.]*

**ஆப்திகம்** *āptigam,* பெ.(n.) முதல் நினைவேந்தல் (தலைத்திவசம்); ceremony on the first anniversary of a deceased person.

*[Skt. ā-bdika > த. ஆப்திகம்.]*

**ஆப்பகூரா** *āppakūrā,* பெ.(n.) நீர்க் குடிக்கும் ஏனங்களுள் ஒருவகை; a narrow vessel for drinking from.

*[U - ābkhora > த. ஆப்பகூரா.]*



**ஆப்பியந்தரம்** *āppiyandaram,* பெ.(n.) உள்ளானது; that which is internal, mental. *"பூசை பாகிய மாப்பியந்தரமென விரண்டாகும்" (சூத. சிவமான். 5 : 2.).*

*[Skt. ābhyantra > த. ஆப்பியந்தரம்]*

**ஆப்பியாயனம்** *āppiyāyaṉam,* பெ.(n.) பொந்திகை (திருப்தி); satisfaction, contentment.

த.வ. தணிவு.

*[Skt. āpyāyana > த. ஆப்பியாயனம்.]*

**ஆப்புலுதம்** *āppuludam,* பெ.(n.) குதிரையின் நடைவகை (கதிவகை) (சுக்கிர நீதி, 72); a pace of horses.

*[Skt. āpluta > த. ஆப்புலுதம்.]*

**ஆபகை** *āpagai,* பெ.(n.) கங்கை யாறு (வின்.); river Ganges.

*[Skt. āpagā> த. ஆபகை.]*

**ஆபச்சகாயன்** *āpaccagāyaṉ,* பெ.(n.) துன்பத்தில் உதவுவோன்; friend in one's distress. *"ஆபச்சகாயனை யகந்தழீஇக் களிப்பாம்" (தணிகைப்பு. கடவுள்வா. 3.).*

த.வ. உறுதுணைவன்.

*[Skt. ā-pad+sahāya > த. ஆபச்சகாயன்]*

**ஆபத்சன்னியாசம்** *āpat-šaṉṉiyāšam,* பெ.(n.) இறக்குங் காலத்தில் (மரிக்குங்கால்) பெறுந் துறவு (வின்); taking to asceticism when at the point of death.

த.வ. வாழ்விறுதித்துறவு.

*[Skt. āpat+šan-nyāsa>த.ஆபத்சன்னியாசம்.]*

**ஆபத்தம்பம்** *ābattambam,* பெ.(n.) ஆரியச் சார்புடைய பதினெட்டு அற (தரும) நூல்களுள் ஒன்று (பிங்.); a work on Hindu law in Šanskrit, ascribed to Apastamba, one of eighteen *taruma-nūl.*

*[Skt. āpa-stamba > த. ஆபத்தம்பம்.]*

**ஆபத்தனம்** *ābattaṉam,* பெ. (n.) எய்ப்பினில் வைப்பு; wealth kept in reserve to serve in an emergency.

*[Skt. ā - pad + dhana > த. ஆபத்தனம்]*

**ஆபத்து** *ābattu,* பெ.(n.) 1. இழப்பு அல்லது தீங்கு ஏற்படும் நிலை; கேடு; danger; harm. *'ஆபத்துக் காலத்தில் உதவிய நண்பர்'. 'ஆபத்தான வளைவுகளில் வண்டியின் வேகத்தைக் குறைக்க வேண்டும்'.* 2. தொல்லைகளுக்குக் காரணம்; source of trouble and inconvenience. *'பகலில் நாயை அவிழ்த்துவிட்டது ஆபத்தாகப் போய்விட்டது'.* 3. ஏதம் (விபத்து); distress, danger.

த.வ. ஏதம், ஊறு.

*[Skt. ā - pad > த. ஆபத்து.]*

**ஆபத்துஉதவி** *āpattu-udavi,* பெ.(n.) மெய்க்காப்பாளர்; body guard.

**த.வ. மெய்க்காவலர்.**

*[ஆபத்து + உதவி.]*

**ஆபத்துசம்பத்து** *āpattu-šampattu,* பெ.(n.) வாழ்வுதாழ்வு; adversity and prosperity, weal and woe.

*[**Skt.** ā-pad+šam-pad>த. ஆபத்துசம்பத்து.]*

**ஆபத்துரட்சகன்** *āpattu-raṭcagaṉ,* பெ.(n.) துன்பத்தில் துணைநிற்பவன், இடர்நீக்குபவன்; a timely helper at the times of adversity.

**த.வ. இடர்தாங்கி, ஏதக்காவலன்.**

*[ஆபத்து + ரட்சகன்.]*

**ஆபத்பாந்தவன்** *ābat-pāndavaṉ,* பெ.(n.) ஆபத்ரட்சகன் பார்க்க; '**ஆபத்துரட்சகன்** *āpattu-raṭcagaṉ,* பெ.(n.) துன்பத்தில் துணைநிற்பவன்; see *ābat-raṭcakaṉ*.

**ஆபதம்** *ābadam,* பெ.(n.) இடர்; distress, calamity. *"சந்திராபதமும் தினகரா பதமும்" (பாரத. இந்திர. 14.).*

**த.வ. இடர்ப்பாடு.**

*[**Skt.** ā - pad > த. ஆபத்து →ஆபதம்.]*

**ஆபரணச்செப்பு** *ābaraṇa-c-ceppu,* பெ. (n.) அணிகலப்பெட்டி; jewel-casket.

*[**Skt.** ā-bharaṇa+šeppu>த. ஆபரணச் செப்பு.]*



**ஆபரணம்**[1] *ābaraṇam,* பெ. (n.) தங்கம், வெள்ளியாலான அணிகலன், நகை; mostly gold or silver ornament. *கடவுள் திருமேனிகட்கு ஆபரணம் பூட்டுவர்.*

*[**Skt.** ā-bharaṇa > த. ஆபரணம்.]*

**ஆபரணம்**[2] *ābaraṇam,* பெ.(n.) ஒப்பனை (அலங்காரம்) (நாநார்த்த.); decoration.

**த.வ. அணிசெயல்.**

*[**Skt.** abharaṇa > த. ஆபரணம்]*

**ஆபற்சன்னியாசம்** *ābaṟ-šaṉṉiyāšam,* பெ.(n.) இறப்புக்கு (மரணத்துக்கு) அஞ்சி பெறும் துறவு; taking the order of *šaṉṉiyāsam* when apprehending death. *"ஆபற்சன்னியாசந் தீது" (வைராக். தீப. 25).*

**த.வ. சாவஞ்சு துறவு.**

*[**Skt.** ā-pad+šaṉṉiyāšam> த. ஆபற் சன்னியாசம்.]*

**ஆபன்** *ābaṉ,* பெ.(n.) எண் வகை சிறு தெய்வங்களுள் (அட்டவசுக்களுள்) ஒருவன் (கூர்மபு. அந்தகா. 9); name of a Vasu, one of *aṣṭa-vašukkaḷ.*

*[**Skt.** apa > த. ஆபன்.]*

**ஆபாசப்படம்** *ābāša-p-paḍam,* பெ.(n.) அருவருக்கத்தக்க கீழ்த்தரமான காட்சிகளைக் கொண்ட திரைப்படம்; a film of obscene actions.

**த.வ. கீழ்த்தரவுப்படம்.**

*[**Skt.** ā-bhāša+த. படம்.]*

**ஆபாசம்** *ābāšam,* பெ.(n.) 1. போலி; semblance of reason, fallacy. *"எட்டுள பிரமாணா பாசங்கள்" (மணிமே. 27 : 57).* 2. படிவுரு (பிரதி பிம்பம்); reflection. 3. தூய்மை யின்மை; that which is filthy. *"ஆபாசக் கொட்டிலை" (பட்டினத். திருப்பா. திருவேகம். 27.).* 4. கீழ்த்தரமான முறையில் பாலுணர்வைத் தூண்டி விடக்கூடியது; pornography; salaciousness; lewdness. *'திரைப் படங்களில் ஆபாசம் மிகுந்துவிட்டது'.*

5. தரக்குறைவு; கீழ்த்தரம்; obscenity; lewdness. *'பொதுக் கூட்டங்களில் ஆபாசமாகப் பேசக்கூடாது'.* 6. அருவருப்பான கழிவுப்பொருள்; refuse, filth. *'நாய் ஆபாசத்தில் கிடந்து புரண்டு எழுந்தது'.* 7. முறைகேடு; irregularity. 8. இகழ்ச்சி; calumny.

**த.வ. கீழ்த்தரவு.**

[**Skt.** *ā-bhāsa > த. ஆபாசம்.*]

**ஆபாசவிசுவாசம்** *ābāša-višuvāšam,* பெ.(n.) நம்பிக்கை ஏய்ப்பு, நம்பிக்கை இரண்டகம் (வின்.) (விசுவாசகாதகம்); violated faith.

**த.வ. கீழ்த்தரவுக்குணம்.**

[**Skt.** *ā-paša+višvāsa>த.ஆபாசவிசுவாசம்.*]

**ஆபாத்** *āpāt,* பெ. (n.) போர் வீரர்கட்குத் தேவைப்படும் போர்க்கருவிகளைத் திரட்ட (சேகரிக்க)க் கூடிய பேரூர் (R.T.); town where military supplies are available.

**த.வ. படைக்கலப்பேரூர்.**

[**Persn.** *ābād > த. ஆபாத்.*]

**ஆபாத்கிராமம்** *āpāt-kirāmam,* பெ.(n.) குடிவளமுடைய ஊர்; flourishing village having extensive cultivation and a large population.

**த.வ. நல்லூர்.**

[**U.** *ābād+***Skt.** *grāma > த. ஆபாத்கிராமம்.*]

**ஆபாதகேசம்** *ā-pāda-kēšam,* பெ.(n.) **ஆபாதமத்தகம் (வின்.)** பார்க்க; see *āpāda-mattagam.*

[**Skt.** *ā-pāda+kēša> த. ஆபாதகேசம்.*]

**ஆபாதம்[1]** *āpādam,* பெ.(n.) 1. நிகழ்காலம்; present time. 2. விழுகை; falling.

[**Skt.** *ā-pāta > த. ஆபாதம்.*]

**ஆபாதம்[2]** *ā-pādam,* கு.வி.எ.(adv.) **ஆபாதமத்தகம்** பார்க்க; see *ā-pāda-mattagam.*

[**Skt.** *ā-pādam > த. ஆபாதம்.*]

**ஆபாதமத்தகம்** *ā-pāda-mattagam,* கு.வி.எ. (adv.) உள்ளங்கால் முதல் உச்சந்தலைவரை (வின்); from foot to head.

[**Skt.** *ā-pāda-mastagam>த. ஆபாதமத்தகம்.*]

**ஆபாதமத்தம்** *ā-pāda-mattam,* கு.வி.எ.(adv.) **ஆபாதமத்தகம் (வின்.)** பார்க்க; see *ā-pāda-mattagam.*

[**Skt.** *āpāda-mastam > த. ஆபாதமத்தம்.*]

**ஆபாதன்** *āpādaṉ,* பெ.(n.) தீயன், பொல்லாதவன்; impure person, wicked man. *"ஆபாத னேனு நாளு நினைவது" (திருப்பு. 326.).*

**த.வ. கொடியவன்.**

[**Skt.** *ā-bhāsa > த. ஆபாதன்.*]

**ஆபாலகோபாலம்** *āpāla-gōpālam,* பெ.(n.) எல்லோரும் (சி.சி. பாயி. சத்திவண. சிவாக்.); all, including children and cowherds.

[**Skt.** *ā-pāla+go-pāla>த. ஆபாலகோபாலம்.*]

**ஆபிசாத்யம்** *āpišātyam,* பெ.(n.) உயர்குடிப்பிறப்பு (ஈடு, 4. 2 : 5.); noble birth, nobility.

[**Skt.** *ābhi-jātya > த. ஆபிசாத்யம்]*

**ஆபிசாரம்** *āpišāram,* பெ.(n.) பிறருக்குத் தீங்கையுண்டாக்க வேண்டி மந்திரம் செய்கை; blackart. *"தென்னனை யாபிசாரஞ் செய்துயிர் செகுத்தால்" (திருவிளை. யானையெ. 10.).*

**த.வ. செய்வினை மந்திரம்.**

[**Skt.** *abhi-cāra > த. அபிசாரம் > ஆபிசாரம்.*]

**ஆபிமுக்கியம்** *āpimukkiyam,* பெ.(n.) உடன் பாடாயிருக்கை, நன்மை செய்வதாய் இருக்கை; the state of being favourable.

[**Skt.** *ābhi-mukhya > த. ஆபிமுக்கியம்.*]

**ஆபீசு** *āpīsu,* பெ.(n.) அலுவலகம்; office, place of work, business.

**த.வ. அலுவலகம், அதியம்.**

[**E.** *office > த. ஆபீசு.*]

**ஆபீசுநாடா** *āpišu-nāṭā,* பெ.(n.) சிறுநாடா; narrow tape.

*[E. office + U. nārā > த. ஆபீசுநாடா.]*

**ஆபீரம்** *āpīram,* பெ.(n.) ஆயர்தெரு (சூடா.); street of herdsmen.

*[Skt. ā-bhīra > த. ஆபீரம்.]*

**ஆபீரவல்லி** *āpīra-valli,* பெ.(n.) இடைச்சேரி (பிங்.); village of herdsmen.

**த.வ. ஆய்ப்பாடி.**

*[Skt. ā-bhīra+paḷḷi > த. ஆபீரவல்லி.]*

**ஆபீலம்** *āpīlam,* பெ.(n.) 1. துன்பம்; distress. 2. அச்சம்; fear.

*[Skt. ābhīla > த. ஆபீலம்.]*

**ஆபீனம்** *āpīṉam,* பெ.(n.) முலைமடி (சூடா.); udder.

*[Skt. āpīna > த. ஆபீனம்.]*

**ஆபூபிகன்** *āpūpigaṉ,* பெ.(n.) 1. அப்பஞ்சுடுவோன்; one who prepares cakes. 2. அப்பம் விற்போன்; one who sells cakes.

**த.வ. அப்பவணிகன்.**

*[Skt. āpūpiga > த. ஆபூபிகன்.]*

**ஆபோக்கிலிமம்** *āpōkkilimam,* பெ.(n.) பிறப்போரைக்கு (இலக்கினத்திற்கு) மூன்று, ஆறு, ஒன்பது, பன்னிரண்டாம் இடங்கள் (குமாரசு. இராசி. 2.); the 3rd, 6th, 9th and 12th houses from that one's birth which are considered auspicious.

*[Skt. āpōklima > த. ஆபோக்கிலிமம்.]*

**ஆபோகம்[1]** *āpōgam,* பெ.(n.) பண் உறுப்புகளுள் ஒன்று (சிலப். 3 : 150, உரை.); one of four limbs of a musical piece.

*[Skt. ā-bhōga > த. ஆபோகம்.]*

**ஆபோகம்[2]** *āpōgam,* பெ.(n.) 1. முயற்சி; effort. 2. நிறைவு; fullness. 3. வருணன் குடை; Varuṇa's umbrella.

*[Skt. ā-bhōga > த. ஆபோகம்.]*

**ஆபோசனம்** *āpōšaṉam,* பெ.(n.) உணவு உட்கொள்ளும் முன்னும் பின்னும் மந்திர முறைப்படி நீர் அருந்துகை; sipping a little water with appropriate mantras both at the commencement and the close of a meal.

*[Skt. āpōšana > த. ஆபோசனம்.]*

**ஆம்தனி** *āmdaṉi,* பெ.(n.) வருவாய்; income, revenue, rents, profits, proceeds.

*[U. āmad > த. ஆம்தனி.]*

**ஆம்பரியம்** *āmpariyam,* பெ.(n.) மின்சாரம் (பாண்டி); electricity.

*[Ar. ambar > த. அம்பர் → ஆம்பரியம்.]*

**ஆம்லட்டு[1]** *āmlaṭṭu,* பெ.(n.) முட்டையப்பம்; omelette.

**த.வ. முட்டைத்தோசை, முட்டை அடை.**

*[E. omelet or omelette > த. ஆம்லட்டு.]*

**ஆம்லட்டு[2]** *āmlaṭṭu,* பெ.(n.) ஒருவகை இனிப்பு மாம்பழம்; variety of sweet mango.

*[U. āmlaḍḍu > த. ஆம்லட்டு.]*

**ஆமகணம்** *āma-kaṇam,* பெ. (n.) குழந்தைகளுக்கு ஏற்படும், கோழையும் அரத்தமும் கலந்து வெளியாகும் கழிச்சல் நோய் (சீதவழும்பு நோய்); in fantile dysentery.

**த.வ. வழும்புக்கழிச்சல்.**

*[Skt. āma > த. ஆம + கணம்.]*

**ஆமசன்னி** *āma-šaṉṉi,* பெ.(n.) உணவு செரியாமைக் கோளாறால் ஏற்படும் இசிவுநோய் (சன்னி) (வின்.); convulsions in children caused by indigestion.

**த.வ. செரியா இசிவு.**

*[Skt. āma+san-ni > த. ஆமசன்னி.]*

**ஆமசிராத்தம்** *āma-širāttam,* பெ.(n.) சமைக்காத, வேகவைக்காத பொருள்களைக் கொண்டு (பாகம் பண்ணாத சாமக்கிரிகளைக் கொண்டு) இறந்தவர்களுக்குச் செய்யும் சடங்கு (சிராத்தம்) (சேதுபு. சேதுபல. 98); *šrāddha* in which uncooked articles of food are offered to *Brāhmans.*

த.வ. பச்சுணாச்சடங்கு.

*[Skt. āma+šrāddha > த. ஆமசிராத்தம்.]*

**ஆமசுரம்** *āma-šuram,* பெ. (n.) குழந்தைகளுக்குச் செரியாமை நோயால் (அசீரணத்தால்) வரும் காய்ச்சல் (வின்.); a fever in children caused by indigestion.

த.வ. செரியாக்காய்ச்சல்.

*[Skt. āma+jvara > த. ஆமசுரம்.]*

**ஆமசூலை** *āma-šūlai,* பெ.(n.) உணவு செரியாமையால் வரும் வயிற்றுவலி (மூ.அ.); colic pains arising from indigestion.

த.வ. செரியாச்சூலை.

*[ஆம+சூலை.]*

*[Skt. āma > த. ஆம.]*

**ஆமத்** *āmat,* பெ.(n.) வருமானம் (இ.வ.); income, revenue.

*[U. āmad > த. ஆமத்.]*

**ஆமநாயம்** *āmanāyam,* பெ.(n.) 1. தோன்றியம் (ஆகமம்); the *Āgamas.* 2. தொன்றுதொட்டு வரும் வழக்கம் (சம்பிரதாயம்); sacred tradition. 3. குலம்; clan.

*[Skt. āmnāya > த. ஆமநாயம்.]*

**ஆமவாதரோகம்** *āma-vāda-rōgam,* பெ.(n.) ஊதைநோய் வகை; rheumatism, as caused by indigestion.

*[Skt. āma+vāda+roga > த. ஆமவாத ரோகம்.]*

**ஆமாசயம்** *āmāšayam,* பெ.(n.) உடலின் உட்புறம் உள்ள ஐந்து பைகளில் ஒன்றான இரைப்பை; stomach one of *pañjāšayam.*

*[Skt. āma + ā-šaya > த. ஆமாசயம்.]*

**ஐந்து பைகள்:** 1. இரைப்பை. 2. நெஞ்சப்பை. 3. கருப்பை 4. சிறுநீர்ப்பை. 5. மலப்பை.

**ஆமிசம்** *āmišam,* பெ.(n.) 1. கண்டுமுதல்; produce of land. 2. விளைச்சலின் மதிப்பு; estimate of the yield or value of a standing crop.

*[Skt. amša > த. ஆமிசம்.]*

**ஆமிசம்டாப்பு** *āmišam-ṭāppu,* பெ.(n.) ஓராண்டின் விளைவுமதிப்பு; estimate of the produce of a piece of land for the whole year.

த.வ. கண்டுமுதல்.

*[Skt. amša + T. ḍābu > த. ஆமிசம்டாப்பு.]*

**ஆமிடம்** *āmiḍam,* பெ.(n.) உணவு; food. *"எனக்காமிடமாய் வருவாய்கொல்" (கம்பரா. கடறாவு. 67.)*

*[Skt. āmiṣa > த. ஆமிடம்.]*

**ஆமிலம்** *āmilam,* பெ.(n.) 1. புளிப்பு (பிங்.); sourness, acidity. 2. புளியமரம் (சூடா.) tamarind.

*[Skt. āmla > த. ஆமிலம்.]*

**ஆமிலிகை** *āmiligai,* பெ.(n.) புளிப்பு (வின்.); acidity.

*[Skt. āmliga > த. ஆமிலிகை.]*

**ஆமிலை** *āmilai,* பெ.(n.) புளியாரை (தைலவ. தைல. 109); yellow wood - sorrel.

*[Skt. āmlā > த. ஆமிலை.]*

**ஆமின்** *āmiṉ,* பெ.(n.) முறைமன்ற ஆணையை நிறைவேற்றும் அதிகாரி; ameen, a public officer.

*[U. amin > த. ஆமின்.]*

**ஆமுசமிகம்** *āmušamigam,* பெ.(n.) மறுமை பற்றியது; that which pertains to the other world.

*[Skt. āmuṣmika > த. ஆமுசமிகம்.]*

**ஆமென்** *āmeṉ,* கு.வி.எ.(adv.) கிறித்தவர்கள் கடவுள் வாழ்த்தின் இறுதியில் பயன்படுத்தும் சொல்; verily, so be it, used by Christians usually at the close of prayer and hymn.

*[Heb. āmēn > த. ஆமென்.]*

**ஆமோதம்** *āmōdam,* பெ.(n.) 1. மகிழ்ச்சி; joy, pleasure. 2. மிக்க மணம் (திருப்பு. 54.); fragrance, diffusive perfume, strong smell.

*[Skt. ā-mōda > த. ஆமோதம்.]*

**ஆமோதனம்** *āmōdaṉam,* பெ.(n.) தீர்மானக் கோரிக்கைக்கு உடன்படுகை; support, as a motion.

*[Skt. ā-mōdana > த. ஆமோதனம்.]*

**ஆமோதி-த்தல்** *āmōdi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ஒப்புக்கொள்ளுதல்; ஏற்றுக் கொள்ளுதல்; approve, agree with. *'ஒருமனதாக ஆமோதித்தனர்'.* 2. வழிமொழிதல்; second a motion, etc. *'குழுவின் தலைவர் கொண்டுவந்த தீர்மானத்தை ஒருவர் ஆமோதித்தார்'.*

த.வ. ஏற்பு.

*[Skt. ā-mōda > த. ஆமோதி-.]*

**ஆயசூரி** *āyaśūri,* பெ.(n.) கடுகு (மூ.அ.); Indian mustard.

*[Skt. āsurī > த. ஆயசூரி.]*

**ஆயனம்**[1] *āyaṉam,* பெ.(n.) ஆண்டு (பிங்.); year.

*[Skt. hāyana > த. ஆயனம்.]*

**ஆயனம்**[2] *āyaṉam,* பெ.(n.) 1. கதிரவன், நிலவு போன்றவற்றின் ஒளிக்கதிர் (கிரணம்); ray. 2. நெல் வகை; a kind of paddy.

*[Skt. hāyana > த. ஆயனம்.]*

**ஆயாமம்**[1] *āyāmam,* பெ.(n.) அடக்குகை; restraining the breath. பிராணாயாமம்.

*[Skt. ā-yāma > த. ஆயாமம்.]*

**ஆயாமம்**[2] *āyāmam,* பெ.(n.) 1. நீளம்; length. 2. அகலம்; breadth.

**ஆயில்** *āyil,* பெ.(n.) எண்ணெய்; oil, as a liquid using to fire, light.

த.வ. நெய்மம்.

*[E.oil > த. ஆயில்.]*

**ஆயு** *āyu,* பெ. (n.) 1. எண்வகைக் குற்றங்களுள் ஒன்றான வாழ்நாளை வரையறுப்பது (சூடா.); the karma which determines the length of time which a *Jīva* must spend in the form with which another of his karma has endowed him, one of *eṇ-kuṟṟam.* 2. வாழ்நாள்; life time.

*[Skt. āyus > த. ஆயு.]*

**ஆயுகம்** *āyugam,* பெ.(n.) **ஆயுசு** (திவா.) பார்க்க; see *āyuśu.*

**ஆயுசயம்** *āyuśayam,* பெ.(n.) **ஆயு** பார்க்க; see *āyu.*

*[Skt. āyuṣya > த. ஆயுசயம்.]*

**ஆயுசயவோமம்** *āyuśaya-v-ōmam,* பெ.(n.) நீண்ட வாழ்நாள் வேண்டி ஆண்டுதோறும் சிறப்புநாட்களில் செய்யும் ஓமம்; *ōma* ceremony performed on birthdays and on other important occasions for securing long life.

த.வ. வாழ்வோமம்.

*[Skt. āyuṣya + hōma > த. ஆயுசயவோமம்.]*

**ஆயுசு** *āyuśu,* பெ.(n.) வாழ்நாள் (பிங்.); lifetime.

த.வ. வாணாள்.

*[Skt. āyus > த. ஆயுசு.]*

**ஆயுட்காரகன்** *āyuṭ-kāragaṉ,* பெ.(n.) காரி (சனி); Saturn, whose influence is believed to determine the length of a man's life.

*[Skt. āyus + kāraka > த. ஆயுட்காரகன்.]*

**ஆயுட்டானம்** *āyuṭṭāṉam,* பெ.(n.) பிறப்போரையிலிருந்து (சன்மலக்கினத்

திலிருந்து) எட்டாமிடம் (வின்.); the eighth house from the *lagna* of ons's birth.

*[Skt. āyus+sthāna > த. ஆயுட்டானம்.]*

**ஆயுட்டானாதிபதி** *āyuṭṭāṉādipadi,* பெ.(n.) பிறப்போரை (லக்கினம்) யிலிருந்து எட்டாமிடத்தின் தலைவன் (அதிபதி); lord of the eighth house from the ascendant.

*[Skt. āyus + sthāna + adhipati > த. ஆயுட்டானாதிபதி.]*

**ஆயுட்மான்** *āyuṭmāṉ,* பெ.(n.) 1. நூற்றிருபது ஆண்டு வாழ்பவன்; one blessed with long life of 120 years. 2. ஒக வகை இருபத்தேழுள் ஒன்று; a division of time, one of 27 yōkam.

*[Skt. āyuṣmān > த. ஆயுட்மான்.]*

**ஆயுர்ப்பாவம்** *āyur-p-pāvam,* பெ.(n.) வாணாளின் நிலைமை (ரீதி); forecast of the length of a man's life.

*[Skt. āyus + bhāva > த. ஆயுர்ப்பாவம்.]*

**ஆயுர்வேதம்** *āyur-vēdam,* பெ.(n.) மருத்துவ நூல்; science of life, science relating to the Hindu system of medicine, one of four *upā-vēdam.*

*[Skt. āyus+vēdam > த. ஆயுர்வேதம்.]*

**ஆயுவின்மை** *āyu-v-iṉmai,* பெ. (n.) அருகனின் எண்வகைக் குணத்தொன்று. (சூடா.); ever-lasting, eternity, one of *Arugaṉ-eṇ-kuṇam.*

*[ஆயுள்+இன்மை.]*

*[Skt. āyus > த. ஆயுள்.]*

*அருகன் எண்குணம்: கடையிலாவறிவு, கடையிலாக்காட்சி, கடையிலா வீரியம், கடையிலா வின்பம், நாமமின்மை, கோத்திரமின்மை, ஆயுளின்மை, அழியாவியல்பு (குறள், 9, உரை.)*

**ஆயோகம்** *āyōgam,* பெ.(n.) 1.துறையில் மரக்கலங்களைக் கட்டும் பந்தி (கரை); moorings to which boats are attached. *"திரள்கள் ஆயோகப் பொலிவி னசைவிற் போதுவன" (பெரியபு. கழறிற். 49).* 2. நீர்க்கரை (நாநார்த்த.); bank, as of a stream. 3. பூசனை (அர்ச்சனை) (வின்.); offering of flowers and incense in worship.

*[Skt. āyōga > த. ஆயோகம்.]*

**ஆயோகவர்** *āyōgavar,* பெ.(n.) கைக்கோளர்வகை (M.E.R. 508 of 1922); a sect of weavers.

*[Skt. āyōgava > த. ஆயோகவர்.]*

**ஆயோதம்** *āyōdam,* பெ.(n.) **ஆயோதனம்**[1] பார்க்க; see *āyōdaṉam.*

**ஆயோதனம்**[1] *āyōdaṉam,* பெ.(n.) போர் (பிங்.); war, battle.

*[Skt. ā-yōdhana > த. ஆயோதனம்.]*

**ஆயோதனம்**[2] *āyōdaṉam,* பெ.(n.) வேட்டம் அல்லது வேட்டை (நாநார்த்த.); hunting.

*[Skt. āyōdhana > த. ஆயோதனம்.]*

**ஆர்த்தவம்** *ārttavam,* பெ. (n.) மகளிர்பூப்பு (விதான. தெருட்சி. 4, உரை.); menses.

**த.வ. தீட்டு.**

*[Skt. ārtava > த. ஆர்த்தவம்.]*

**ஆர்த்திப்பிரபந்தம்** *ārtti-p-pirapandam,* பெ.(n.) மணவாளமாமுனிகள் செய்த ஒரு நூல்; a work by *Maṇavāḷa-māmuṉivar.* expressing his devotion to *Rāmānuja.*

*[Skt. ārti+pra-bandha > த. ஆர்த்திப் பிரபந்தம்.]*

**ஆர்த்திரகம்** *ārttiragam,* பெ.(n.) இஞ்சி (உரி.நிக.); ginger.

*[Skt. ārdraka > த. ஆர்த்திரகம்.]*

**ஆர்த்திராதரிசனம்** *ārttirā-tarišaṉam,* பெ.(n.) **ஆருத்திராதரிசனம்** பார்க்க; see *āruttirā-tarišaṉam.*

**ஆர்மோனியம்** *ārmōṉiyam,* பெ.(n.) காற்றை உட்செலுத்தி மேற்புறக் கட்டைகளை விரலால் அழுத்தி இசைக்கும், பெட்டி வடிவிலுள்ள ஓரிசைக்கருவி; harmonium.

**த.வ. பாட்டுப்பெட்டி, இசைப்பெட்டி.**

*[E. harmonium > த. ஆர்மோனியம்.]*



**ஆரகோதம்** *ārakōdam,* பெ.(n.) சரக்கொன்றை (மூ.அ.); Indian laburnum.

*[Skt. ārag-vadha > த. ஆரகோதம்.]*

**ஆரஞ்சு** *ārañju,* பெ.(n.) கிச்சிலி பழவகைகளுள் ஒன்று; orange.

**த.வ. மென்கிச்சிலி.**

*[E. orange > த. ஆரஞ்சு.]*

**ஆரண்யகம்** *āraṇyagam,* பெ.(n.) மறையின் (வேதத்தின்) ஒருபகுதி; a class of Vēdic works closely connected with the Brāhmanas, and composed in the solitude of a forest.

*[Skt. āraṇyaka > த. ஆரண்யகம்.]*

**ஆரநாளம்** *āranāḷam,* பெ.(n.) காடி(தைலவ. தைல.21); vinegar made from sour gruel.

*[Skt. āra-nāla > த. ஆரநாளம்.]*

**ஆரபி** *ārabi,* பெ.(n.) ஒருவகைப் பண் (இராகம்); a specific melody type.

*[Ar. ārabhi > த. ஆரபி.]*

**ஆராத்தியர்** *ārāttiyar,* பெ.(n.) வீரச் சிவனியப் பிராமணர் (வீரசைவம்) *lingāyat Brāhmans.*

**த.வ. சிவனியப் பார்ப்பனர்.**

*[Skt. ā-rādhya > த. ஆராத்தியர்.]*

**ஆராதகர்** *ārātagar,* பெ.(n.) பூசை செய்பவர் (அருச்சகர்) (கோயிலொ. 27.); officiating priests in a temple.

**த.வ. பூசகர்.**

*[Skt. ā-rādhaka > த. ஆராதகர்.]*

**ஆராதனம்**[1] *ārādaṉam,* பெ.(n.) பூசை (அஷ்டப். திருவரங்கத்தந். 30); worship.

*[Skt. ā-rādhana > த. ஆராதனம்.]*

**ஆராதனம்**[2] *ārādaṉam,* பெ.(n.) 1. எண்ணுகை (சிந்திக்கை); fulfilment. 2. மகிழ்விக்கை உவப்பிக்கை; gratifying. 3. சமைக்கை; cooking. 4. பெறுகை; acquirement, attaining. 5. வெறியாட்டு (ஆவேசம்); possession by spirit. *சுடலைமாடன் ஆராதனமாகி ஆடினான்.*

*[Skt. ā-rādhana > த. ஆராதனம்.]*

**ஆராதனை** *ārādaṉai,* பெ.(n.) 1. மலர் தூவுகை, சுடர் காட்டுகை போன்றவற்றால் தெய்வத்துக்குச் செய்யும் வழிபாடு; worship by offering flowers, lighting lamps, etc. மூலவர்க்குத் தீவ ஆராதனை காட்டப்படுகிறது. 2. மறைந்த பெரியவர்கட்கு ஆண்டுதோறும் செய்யப்படும் வழிபாட்டுச் சடங்கு; ritual of worship to the memory of saints. திருவையாற்றில் தியாகராச ஆராதனை நடைபெறுகிறது. 3. கிறித்தவர் கோயில் வழிபாடு; prayer service in church.

**த.வ. மலர்வழிபாடு, போற்றிவழிபாடு.**

*[Skt. ā-rādhanā > த. ஆராதனை.]*

**ஆராதி-த்தல்** *ārādi-,* 4 செ.கு.வி. (v.i.) பூசை செய்தல், வழிபாடு செய்தல்; worship. *'கலைஞர்கள் அல்லது படைப்பாளிகள் அழகை ஆராதிக்கின்றனர்'.*

**த.வ. போற்றிவழிபடல்.**

*[Skt. ā-rādh > த.ஆராதி-.]*

**ஆராமம்** *ārāmam,* பெ.(n.) 1. பூஞ்சோலை; pleasure garden, park. *"ஆராமத்திடை யலர் கொய்வேன்றனை" (மணிமே. 3 : 32.)* 2. மலைச்சோலை; moutain grove.

*[Skt. ā-rāma > த. ஆராமம்.]*

**ஆரிசப்பிரதிட்டை** *āriśa-p-piradiṭṭai,* பெ.(n.) முனிவர்கள் தெய்வத்தைப் புதுக்கோயில் முதலியவற்றில் நிலைநிறுத்துகை; consecration of an idol by a *Ṛṣi* or *sage.*

*[Skt. ārṣa+prati-ṣthā>ஆரிஷப்பிரதிஷ்டை > த. ஆரிசப்பிரதிட்டை.]*

**ஆரியசத்தை** *āriya-śattai,* பெ.(n.) புத்தமதத்தைச் சார்ந்தவர்களுக்குரிய மேலான உண்மைகள்; the noble truths of the Buddhas. *"ஆரிய சத்தையலாற் கந்தம் வேறில்லையேல்" (நீலகேசி, 389).*

*[Skt. ārya-sattva > த. ஆரியசத்தை.]*

**ஆரியப்பிராமணர்** *ārya-p-pirāmaṉar,* பெ.(n.) வடநாட்டிலிருந்து வந்து இராமேசுவரத்தில் குடியேறியதாகக் கருதப்படும் ஒருவகைப் பிராமணர்; a sect of Brāhman's in Rameswaram, who have certain rights in the temple and are believed to be immigrants from North India.

**த.வ. ஆரியப்பார்ப்பனர்.**

*[Skt. ārya+brāhmaṇa>த.ஆரியப்பிராமணர்.]*

**ஆரியபூமி** *āriya-pūmi,* பெ.(n.) பனிமலை (இமயமலை), விந்திய மலைகளுக்கு இடையே அமைந்துள்ள ஆரியர் குடியேற்றப் பகுதி; the tract of country in India lying between the Himalayas and the Vindhya mountain, the land by Āryas.

*[Skt. ārya + bhūmi > த. ஆரியபூமி.]*

**ஆருணி** *āruṇi,* பெ.(n.) நூற்றியெட்டு மறை நூல்களுள் (உபநிடதங்களுள்) ஒன்று; name of an *Upanisad.*

*[Skt.Āruṇi > த. ஆருணி.]*

**ஆருத்திராதரிசனம்** *āruttirā-tariśaṉam,* பெ.(n.) சிலை (மார்கழி)த் திங்கள் வெள்ளுவா நாளில் சிதம்பரம் முதலிய ஊர்களில் உள்ள சிவன் கோயில்களில் யாழ் விண்மீன் (திருவாதிரை) தலை உச்சிக்கு மேலே வருகின்றபோது கொண்டாடப்படும் விழா; a luni-solar festival, celebrated in *Śivaṉ* temples and particularly at Chidambaram, about the full-moon of *Mārkaḻi* when the star *Ārdrā* is in the ascendant.

**த.வ. சிலைநிலாப்பண்டிகை.**

*[Skt. ārdrā+darśana > த. ஆருத்திரா தரிசனம்.]*

**ஆரூபம்** *ārūbam,* பெ. (n.) 1. ஒவ்வாமை; dissimilarity. 2. நீங்காமை; inseparableness.

*[Skt. ā-rūba > த. ஆரூபம்.]*

**ஆரொட்டி** *āroṭṭi,* பெ.(n.) கூவைக்கிழங்கு; East-Indian arrow-root, *Curcuma angustifolia.*

*[E. arrow-root > த. ஆரொட்டி.]*

**ஆரொட்டிமா** *āroṭṭimā,* பெ.(n.) கூவைக் கிழங்குமா; flour or fine starch obtained from the tubers of arrow root.

*[ஆரொட்டி + மா.]*

**ஆரோக்கியகுளியல்** *arōkkiya-kuḷiyal,* தொ.பெ.(vbl.n.) நோயினின்று மீண்டபின் செய்யும் முதல் குளியல்; bath taken soon after recovery from illness.

**த.வ. நலநீராட்டு.**

*[ஆரோக்கியம் + குளியல்.]*

*[Skt. ā-rōgya > த. ஆரோக்கியம்.]*

**ஆரோக்கியசாலை** *ārōkkiya-śālai,* பெ.(n.) மருத்துவமனை (சிவ. தே.பிர. பக். 286); hospital.

**த.வ. நலச்சாலை.**

*[Skt. ā-rōgya > த. ஆரோக்கியம்.]*

**ஆரோக்கியம்** *ārōkkiyam,* பெ.(n.) நோய் இல்லாமல் நலமாக இருக்கும் நிலை; good

health: healthy state of the body. *'உடலும் உள்ளமும் ஆரோக்கியமாக இருந்தால் நோய் நொடிகள் வரா'.*

**த.வ. நலப்பாடு.**

*[**Skt.** ā-rōgya > த. ஆரோக்கியம்.]*

**ஆரோகணம்[1]** *ārōgaṇam,* பெ.(n.) 1. ஏறுகை; ascending, rising, mounting. 2. நினைவு (கமகம்) பத்தனுள் ஒன்று (பரத. இராக. 24.); complete ascent of the gamut one of ten *kamakam*. 3.படிக்கட்டு; staircase. 4. தாழ்வாரம்; inclined roof.

*[**Skt.** ā-rōhaṇa > த. ஆரோகணம்.]*

**ஆரோகணம்[2]** *ārōgaṇam,* பெ.(n.) ஏழு பண்களையும் (சுவரங்களையும்) படிப் படியாகக் கீழிருந்து மேலாக ஒலி அளவில் உயர்த்தும் முறை; ascending scale of the seven notes from the basic to the highest.

**த.வ. ஏறுகிரல், ஆளத்தி.**

*[**Skt.** ā-rōhaṇa > த. ஆரோகணம்.]*

**ஆரோகணம்[3]** *ārōgaṇam,* பெ. (n.) 1. வெளிப்போகை (நாநார்த்த.); exit. 2. முன்வாயில் (நாநார்த்த.); front entrance of a house. 3. ஏணி (பாண்டி); ladder.

*[**Skt.** ā-rōhaṇa > த. ஆரோகணம்.]*

**ஆரோகணி–த்தல்** *ārōgaṇi-,* 4 செ.கு.வி. (v.i.) குதிரை போன்ற ஒன்றின் மீது ஏறி உட்காருதல்; mount a horse. etc. *குதிரையின் மீது ஆரோகணித்து அரண்மனையை அடைந்தான்.*

**த.வ. இவர்தல்.**

*[ஆரோகணம் → ஆரோகணி–த்தல்.]*

**ஆரோகம்[1]** *ārōgam,* பெ.(n.) 1. ஏறுகை; ascent. 2. உயர்ச்சி; elevation, height. 3. நீட்சி; length. 4. பெண்களின் இடுப்புப்பகுதி (நிதம்பம்); woman's hip. 5. முளை; shoot, sprout.

*[**Skt.** ā-rōha > த. ஆரோகம்.]*

**ஆரோகம்[2]** *ārōgam,* பெ.(n.) மறை ஓதும் முறைகளுள் ஒன்று; a mode of reciting the *Vēdas*. *"சுரம்பதங் கிரமஞ் சடையவ ரோகஞ் சொல்லுமா ரோகம்" (பிரபோ. 11: 4).*

*[**Skt.** ā-rōha > த. ஆரோகம்.]*

**ஆரோகி** *ā-rōgi,* பெ.(n.) இசையமைக்கும் வகைகளுள் ஒன்று; variety of musical composition.

*[**Skt.** ā-rōhin > த. ஆரோகி.]*

**ஆரோணம்** *ārōṇam,* பெ.(n.) மீக்கோள் (நாமதீப); covering.

*[**Skt.** ā-rōhaṇa > த. ஆரோணம்.]*

**ஆரோதமடி–த்தல்** *ārōdam-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) இரக்கத்தினால் கொடுஞ் செயலினின்று உள்ளம் நெகிழ்தல் (ஈடு, 3. 10:1); recoiling out of pity from a contemplated terrible act.

*[ஆரோதம் + மடி–த்தல்.]*

*[**Skt.** ā-rōda > த. ஆரோதம்.]*

**ஆரோபணம்** *ārōpaṇam,* பெ.(n.) ஒரு பொருளின் குணத்தை மற்றொன்றின் மீது ஏற்றிக்கூறும் தன்மை; erroneous attribution to an object of a quality that belongs to another.

**த.வ. வலிந்தேற்றம்.**

*[**Skt.** ā-rōpaṇa > த. ஆரோபணம்.]*

**ஆரோபம்** *ārōpam,* பெ.(n.) **ஆரோபணம்** பார்க்க; see *ārōpaṇam*. *"ஆரோப மத்தியாசங் கற்பனை" (கைவல்ய. தத்துவ. 27.)*

*[**Skt.** ā-rōpa > த. ஆரோபம்.]*

**ஆரோபி–த்தல்** *ārōpi-,* 4 செ.குன்றாவி. (v.t.) ஒன்றன் மேல் மற்றொரு பொருளின் தன்மையையும், குணத்தையும் ஏற்றிக் கூறுதல்; to attribute to an object, a quality or property that belongs to another.

**த.வ. வலிந்தேற்றல்.**

*[**Skt.** ā-rōpa > த. ஆரோபி–.]*

**ஆரோபிதம்** *ārōpidam,* பெ.(n.) 1. ஏற்றப்பட்டது; that which is attributed. 2. ஒருவர் மேல் கற்பனையாகப் புனையப்பட்ட குற்றம்; concoction, false charge laid against one.

த.வ. வலிந்தேற்பு.

*[Skt. ā-rōpitā > த. ஆரோபிதம்.]*

**ஆல்பகோடா** *ālpakōḍā,* பெ.(n.) **ஆலுபொகாரா** பார்க்க; see *ālu-pokārā.*

**ஆல்பகோரா** *ālpakōrā,* பெ.(n.) **ஆலுபொகாரா** பார்க்க; see *ālu-pokārā.*

**ஆலசியம்** *ālaśiyam,* பெ.(n.) 1. சோம்பி இருப்பது; idleness, indolence, sloth. 2. சுணக்கம்; delay. 3. கவனக்குறைவு; negligence, dereliction.

த.வ. மப்பு.

*[Skt. ālasya > த. ஆலசியம்.]*

**ஆலதரன்** *ālataran,* பெ.(n.) சிவன் (உரி.நி.); Śivan, holding poison in his throat.

*[Skt. āla+dhara > த. ஆலதரன்.]*

**ஆலம்பனம்** *ālambanam,* பெ.(n.) பற்றுக்கோடு; prop, support.

*[Skt. ā-lambana > த. ஆலம்பனம்.]*

**ஆலவால்** *āl-avāl,* பெ.(n.) ஒருவனுடைய நிலை அல்லது தகுதி (P.T.L.); one's circumstances.

*[U. āl-aval > த. ஆலவால்.]*

**ஆலாசியம்**[1] *ālāśiyam,* பெ.(n.) ஆண் முதலை (நாநார்த்த.); male crocodile

*[Skt. ālāsya > த. ஆலாசியம்.]*

**ஆலாசியம்**[2] *ālāśiyam,* பெ.(n.) மதுரை; Madurai.

*[Skt. āla +āsya > த. ஆலாசியம்.]*

**ஆலாபம்** *ālāpam,* பெ.(n.) உரையாடல் (சம்பாஷணை) (வின்.); conversation

*[Skt. ālāpa > த. ஆலாபம்.]*

**ஆலாபனம்**[1] *ālāpanam,* பெ.(n.) **ஆலாபம்** (வின்.) பார்க்க; see *ālāpam.*

*[Skt. ālāpana > த. ஆலாபனம்.]*

**ஆலாபனம்**[2] *ālāpanam,* பெ.(n.) பண்ணை விரித்துப் பாடுகை; improvised introduction to a melody, meant to notify to the audience the nature of the rāgā, which the melody will develop, and also to help the singer himself to get into its swing.

*[Skt. ā-lāpana > த. ஆலாபனம்.]*

**ஆலாபனை** *ālāpanai,* பெ.(n.) அராகத்தின் (ராகத்தின்) வடிவத்தைப் பாடமோ தாளமோ இல்லாமல் விரிவாக வெளிப்படுத்தும் முறை; the free rendering of a *'rāgam'* in such a way as to bring out its form without reference to '*tāḷam*' or words.

**ஆலாபி-த்தல்** *ālāpi-,* 4 செ.கு.வி. (v.i) பண்ணை விரித்துப் பாடுதல்; to extemporize a melody with a view to develop a *rāga* and get into its swing.

*[Skt. ā-lāpa > த. ஆலாபி-.]*

**ஆலாபினி** *ālāpini,* பெ. (n.) இசை வேறுபாடுகளுள் ஒன்று (சுவர பேதம்) (பரத. இராக. 44); a division of the 5th note of the gamut.

*[Skt. ālāpini > த. ஆலாபினி.]*

**ஆலிங்கனம்** *āliṅganam,* பெ. (n.) தழுவுகை (சூடா.); embrace.

த.வ. அணைப்பு.

*[Skt. ā-lingana > த. ஆலிங்கனம்.]*

**ஆலிம்** *ālim,* பெ.(n.) அறிந்தவன் (முகமதி.); learned man.

*[Ar. ālim > த. ஆலிம்.]*

**ஆலீனகம்** *ālīnagam,* பெ.(n.) வெள்ளடம்(துத்தநாகம்) (சங். அக); zinc.

*[Skt. ālīnaga > த. ஆலீனகம்.]*

**ஆலுபுகாரா** *ālu-pukarā,* பெ.(n.) ஆலுபொகாரா பார்க்க; see *ālu-pokārā.*

**ஆலுபொகாரா** *ālu-pokārā,* பெ.(n.) பொகாரா நாட்டிலிருந்து ஏற்றுமதியாகும் தேனிலிட்ட ஒருவகைப் பழம்; a kind of prunes seasoned in a solution of suger or honey and exported from Bokhara.

**த.வ. பொகாராப்பழம்.**

இப்பழம் மருந்துப் பொருளாகப் பயன்படுகிறது. தாகத்தைத் தணிக்கவும், வாய்க் கசப்பைப் போக்கவும் பயன்படுகிறது. ஆல் பகோடா பழம், காபூல் பழம் என்றும் அழைக்கப்படுகிறது. ஆலுபுகாரா என்றும் ஆல்பகோரா என்றும் இதற்கு வேறு பெயர்கள் உண்டு.

**ஆலேபனம்** *ālēpaṉam,* பெ.(n.) பூசுகை (தெ.இ.கல். 4 : 295); anointing.

*[Skt. ā-lēpana > த. ஆலேபனம்.]*

**ஆலோகம்** *ālōgam,* பெ. (n.) 1. பார்வை (வின்.); sight (w.). 2. ஒளி; light. *"சூரியகிரணம் முதலிய ஆலோக சகாயத்தினால்" (சித். மரபு. கண். 10).*

*[Skt. ā-lōka > த. ஆலோகம்.]*

**ஆலோகனம்** *ālōgaṉam,* பெ. (n.) பார்க்கை (வின்.); seeing.

*[Skt. ā-lōkana > த. ஆலோகனம்.]*

**ஆலோசகபித்தம்** *ālōšaga-pittam,* பெ.(n.) பார்வையைப் பெருகச் செய்யும் நரம்பு (சீவரட்); a nerve of the eye which makes the sight powerful.

*[ஆலோசகம் + பித்தம்.]*

*[Skt. ālōsana > த. ஆலோசகம்.]*

**ஆலோசனை[1]** *ālōšaṉai,* பெ.(n.) 1. ஒருவர் மற்றொருவருக்குத் தம் கருத்தைத் தெரிவிப்பதன் மூலம் காட்டும் வழிமுறை; ஒருவர் மற்றொருவரிடம் கலந்து பெறும் கருத்துரை; guidance; advice; consultation. *'கட்சித் தலைமையின் ஆலோசனையைக்கேட்ட பிறகே போராட்டத் திட்டம் வகுக்கப்பட்டது'.* 2. ஒரு துறையில் தேர்ச்சி பெற்றவர் வழங்கும் முறையான கருத்து; professional advice; counsel. *'பொய் சொல்பவர்களை உளவியல் அறிஞரின் ஆலோசனைப்படி திருத்துங்கள்'.* 3. சிந்தனை; thought in which one is immersed. *'என்ன பெரிய ஆலோசனையா?', 'பேசவே மாட்டேன் என்கிறீர்களே'.*

**த.வ. கருத்துரை, கலந்தாய்வு.**

*[Skt. ā-lōšana > த. ஆலோசனை.]*

**ஆலோசனை[2]** *ālōšaṉai,* பெ.(n.) பார்வை (நாநார்த்த); seeing, sight.

*[Skt. ālōšana > த. ஆலோசனை.]*

**ஆலோசனைச்சங்கம்** *ālōšaṉai-c-caṅgam,* பெ.(n.) அறிவுரை வழங்கும் குழு; council.

**த.வ. கருத்துரைக்குழு.**

*[ஆலோசனை + சங்கம்.]*

**ஆலோசி-த்தல்** *ālōši-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. ஒன்றை எவ்வாறு செய்யலாம் என்பதைப் பற்றி கலந்து பேசுதல்; to consult. *'என் தங்கையின் திருமணத்தைப் பற்றித் தந்தையுடன் ஆலோசித்து எழுதுகிறேன்'.* 2. எண்ணுதல் (சிந்தித்தல்); to think over. *'இந்த வினாவுக்கு ஆலோசித்துத் தான் பதில் சொல்ல முடியும்'. "என்றுள முடைந் தாலோசித்து" (மச்சபு. திரிபுரஞ். 5).*

**த.வ. கலந்தாய்வு.**

*[Skt. ā-lōc > த. ஆலோசி-த்தல்.]*

**ஆலோபம்** *ālōbam,* பெ.(n.) வருத்தம்; distress. *"களிறோலமென்ற வாலோபந் தீர்த்த" (குலோத். கோ. 493).*

*[Skt. ālōla > த. ஆலோபம்.]*

**ஆலோலம்** *ālōlam,* பெ.(n.) வருத்தம், கலக்கம் (சஞ்சலம்) (நாநார்த்த); commotion

*[Skt. ālōla > த. ஆலோலம்.]*

**ஆலோலிதமுகம்** *ālōlita-mugam,* பெ.(n.) ஆசையால் மலர்ந்த முகத்தோடு ஒருவனை அழைக்கும் மெய்ப்பாடு (அபிநய வகை); the gesture of calling one with a cheerful countenance indicative of joy, one of 14 *muga-v-apiṉayam.*

**த.வ. உவப்பு முகம்.**

*[ஆலோலிதம் + முகம்.]*

*[**Skt.** ā-lōlita > த. ஆலோலிதம்.]*

**ஆவகம்** *āvagam,* பெ.(n.) எழுவகைக் காற்றுள் (சப்தமருத்துக்களுள்) ஒன்று; a wind one of *šaptamaruttu.*

*[**Skt.** āvaka > த. ஆவகம்.]*

**எழுவகைக் காற்றுகள்:** 1.ஆவகம், 2. பிரவகம், 3. சம்வகம், 4. உத்வகம், 5. விவகம், 6. பரிவகம், 7. பராவகம்.

**ஆவச்சீவாளம்** *āva-c-cīvāḷam,* பெ.(n.) பொது வாழ்வையும், தனிப்பட்ட வாழ்வையும் காட்டும் வரலாற்று முழுநிலைமை; life history, details of life private and public. *'அவன் ஆவச்சீவாளமும் அறிந்திருக்கிறேன்'.*

*[**Skt.** yāvat+jīva > த. ஆவச்சீவாளம்.]*

**ஆவசியகம்** *āvašiyagam,* பெ.(n.) இன்றியமையாதது; that which is indispensable, very important.

**த.வ. அகத்தியம்.**

*[**Skt.** āvašyaka > த. ஆவசியகம்.]*

**ஆவசியம்** *āvašiyam,* பெ.(n.) இன்றியமையாதது; necessity. *"ஆவசிய மென்ப தறியாயோ" (அழகிய நம்பியுலா, 125).*

**த.வ. தேவை.**

*[**Skt.** āvašyaka > அவசியம் >த. ஆவசியம்.]*

**ஆவணி** *āvaṇi,* பெ.(n.) 1. மடங்கல், ஐந்தாம் தமிழ் மாதம்; the fifth Tamil month, August - September. 2. 22வது விண்மீனாகிய பறவை (அவிட்டம்) விண்மீன்; 22nd nakṣatra.

**த.வ. மடங்கல்.**

*[**Skt.** šrāvaṇa > த. சிரவணம் → ஆவணி.]*

**ஆவணிமுழக்கம்** *āvaṇi-muḻakkam,* பெ.(n.) மடங்கல் (ஆவணி) திங்களில் உண்டாகும் இடி முழக்கம், (சோதிட. சிந். 207); thunder after the sixth day of *Āvaṇi,* which indicates good rains.

**த.வ. மடங்கல் இடி.**

*[ஆவணி + முழக்கம்.]*

**ஆவணியவிட்டம்** *āvaṇi-y-aviṭṭam,* பெ.(n.) பெரும்பாலும் மடங்கல் முழுநிலவன்று (ஆவணி பூர்ணிமையன்று) புதுப்பூணூல் பூணுதல் முதலியவற்றுடன் திருமறை (வேத) பாடம் தொடங்குஞ் சடங்கு; ceremony performed generally on the full-moon day in the month of Āvaṇi, when the study of the Vēdas is commenced with the investiture of a sacred thread. 2. மதுரையில் முற்காலத்து நடந்த ஒரு திருவிழா (இறை.16. உரை); an ancient festival in Madurai which has now ceased to be observed.

**த.வ. மடங்கல் பறக்கி.**

*[ஆவணி + அவிட்டம்.]*

**ஆவர்த்தம்** *āvarttam,* பெ.(n.) 1. எழுவகை முகில்களில் ஒன்றான மழைபொழியும் முகில்; a celestial cloud which rains water, one of *šattamēgam.* 2. தடவை; time, in the sense of the repetition of anything once, twice etc. *'பத்தாவர்த்தம் சொல்'.*

*[**Skt.** ā-varta > த. ஆவர்த்தம்.]*

**எழுவகை முகில்கள் :** 1. சம்வர்த்தம், 2. ஆவர்த்தம், 3. புட்கலா வர்த்தம், 4. சங்காரித்தம், 5. துரோணம், 6. காளாமுகில், 7. நீலவருணம்.

**ஆவர்த்தி[1] –த்தல்** *āvartti-,* 4 செ.கு.வி. (v.i) முதல்மனைவி இறந்தபின் மறுமணஞ் செய்து கொள்ளுதல்; to remarry on the death of the first wife. *"கூரத்தாழ்வார், நங்கையார் திருவடி*

*சார்ந்தவாறே, பின்பு ஆவர்த்திப்பதாக அறுதியிட்டு"(திவ். பெரியாழ். 1 : 8, அவ. பக். 156).*

த.வ. மறுமணம் செய்தல்.

*[Skt. ā-vṛt > த. ஆவர்த்தி–.]*

**ஆவர்த்தி[2]** *āvartti,* பெ.(n.) தடவை; turn.

*[Skt. ā-vṛtti > த. ஆவர்த்தி.]*

**ஆவரணீயம்** *āvaraṇiyam,* பெ.(n.) மறைப்பது; that which blinds or obscures, as mental vision. *'ஞானாவரணீயம்'.*

த.வ. மறைப்பு.

*[Skt. ā-varaṇiya > த. ஆவரணீயம்.]*

**ஆவாதம்** *āvādam,* பெ.(n.) இசையை இனிமைப்படுத்தவும், ஒப்பனை செய்யவும் கையாளப்படும் பத்து, இசைக்குறிப்புகளுள் (கமகம்) ஒன்று; a musical molody note, one among ten variety which is used for graces, and embellishment.

த.வ. பண்ணாளம், உள்ளாளம்.

*[Skt. ā-hata > த. ஆவாதம்.]*

**ஆவாபம்** *āvābam,* பெ.(n.) 1. விதைப்பு; sowing. 2. பாத்தி; pan, seed-bed. 3. பருகவகை; a drink. 4. பாண்டத் தூய்மை; cleansing of a vessel.

*[Skt. āvāpa > த. ஆவாபம்.]*

**ஆவாளஞ்சீவாளம்** *āvāḷañjīvāḷam,* பெ.(n.) **ஆவச்சீவாளம்** பார்க்க; see *āva-c-cīvāḷam. 'அவன் ஆவாளஞ்சீவாளமும் அறிந்திருக் கின்றேன்'.*

**ஆவிர்ப்பவி–த்தல்** *āvir-p-pavi-,* 4 செ.கு.வி. (v.i) வெளிப்படுதல்; to appear, become visible, manifest.

*[Skt. āvir-bhāva > த. ஆவிர்ப்பவி–.]*

**ஆவிர்ப்பாவம்** *āvir-p-pāvam,* பெ. (n.) வெளிப்படுகை; presenting oneself, as a deity before a devotee.

த.வ. வெளிப்பாடு.

*[Skt. āvir-bhāva > த. ஆவிர்ப்பாவம்.]*

**ஆவிருத்தி** *āvirutti,* பெ.(n.) 1. திரும்பத்திரும்ப ஓதுகை; repeated reading, study. *"ஆவிருத்தியெனத்தகு நாணேற்றி" (பிரபோத. 34 : 15.).* 2. தடவை; turn, time, as added to a number.

த.வ. மறை, மறையோதல்.

*[Skt. ā-vṛtti > த. ஆவிருத்தி.]*

**ஆவிருத்தியலங்காரம்** *āvirutti-y-alaṅgāram,* பெ.(n.) பின்வருநிலையணி; figure of speech in which the same expression or only the sense there of or both are repeated to heighten the effect.

*[Skt. ā-vṛtti+alam-kāra > த. ஆவிருத்தி யலங்காரம்.]*

**ஆவிருதி** *āvirudi,* பெ.(n.) ஆணவமலம்; *āṇava-malam,* as enveloping the soul. *"ஆவிருதி என்றற்றொடக்கத்துக் காரணக்குறிகளும்" (சி.போ.4 : 2, சிற்.).*

*[Skt. ā-vṛti > த. ஆவிருதி.]*

**ஆவிலம்** *āvilam,* பெ.(n.) தெளிவில்லாத நீர்; turbid water.

*[Skt. ā-vila > த. ஆவிலம்.]*

**ஆவேசசமவாதம்** *āvēśa-śama-vādam,* பெ.(n.) 1. சிவனியத்தின் அகப்புறச் சமயம் ஆறனுள் ஆதன் என்றென்றும் (நித்தியமாய்) பலவாய், எங்கும் பரந்து இருப்பதென்றும், பச்சைக் கொடிபிடித்து மக்களின் தலையோட்டில் இரந்து உண்பவர் முத்தராய்ச் சிவசமம் ஆவரென்றும், கூறும் சமயம் (சி.போ.பா.அவை); one of the minor *Śaivite.* systems which holds that souls are eternal, plural and omnipresent, enjoins taking alms in human skull with green flags in hand, as a necessary stage for becoming the mukta or perfected soul and promises the latter Šiva like bliss,

one of six *aka-p-puṟa-c-camayam*. 2. நான்முகனின் மண்டையோட்டைக் கையிலேந்தி சிவன் ஆடுங் கூத்து; dance of Šivaṉ with the skull of Brahma in his hand.

த.வ. புருடைச்சமயம், புருடைக்கூத்து.

*[Skt. ā-vēša + šamavāda > த. ஆவேச சமவாதம்.]*

**ஆவேசநீர்** *āvēša-nīr*, பெ.(n.) தேறல் முதலிய, போதையூட்டும், வெறி நீர்மங்கள்; toddy, strong drink, intoxicating liquor. *"ஆவேசநீரைக் குடித்த துட்டர்" (திருப்பு.794).*

த.வ. வெறியம்.

*[ஆவேசம் + நீர்.]*

*[Skt. ā-vēša > த. ஆவேசம்.]*

**ஆவேசம்** *āvēšam*, பெ.(n.) 1. உணர்ச்சிப் பெருக்கு; உணர்ச்சி வயப்பட்ட நிலை, மருள்; frenzy ; state of being possessed. *காவடி ஆட்டத்தைக்கண்டதும் நண்பருக்கு ஆவேசம் வந்து விட்டது. மக்கள் கூட்டத்தைக் கண்டதும் தலைவர் ஆவேசமாகப் பேச்சைத் தொடங்கினார்.* 2. கடுஞ்சினம்; fury. *சல்லிக் கட்டில் காளைகள் ஆவேசமாக மோதின.* 3. பேய்; ghost; spirit. 4. பேய் ஆடுகை; demonical frenzy. 5. ஒன்றின்மேல் பற்று; devotedness to an object. 6. இசிவு (சன்னி) நோயால் ஏற்படும் மயக்கம்; apoplectic giddiness. 7. நோயின் வெறி; paroxysm in disease (சா.அக.).

*[Skt. ā-vēša > த. ஆவேசம்.]*

**ஆவேசவாதி** *āvēsa-vādi*, பெ.(n.) காபாலிகமதத்தான் (சி.போ.பா. அவை. 21.); member of the *Kapālika* sect.

*[Skt. ā-vēša + vādi > த. ஆவேசவாதி.]*

**ஆவேசனம்**[1] *āvēšaṉam*, பெ.(n.) அக்கசாலையர் தெரு (திவா.); street of goldsmiths and workers in metals.

*[Skt. ā-vēšana > த. ஆவேசனம்.]*

**ஆவேசனம்**[2] *āvēšaṉam*, பெ.(n.) 1. பணிக் கூடம்; smithy. 2. நுழைவு (பிரவேசம்); entrance. 3. பேய் வெறியாட்டு (பேய் ஆவேசிக்கை); possession by a spirit.

*[Skt. ā-vēšana > த. ஆவேசனம்.]*

**ஆவேசாவதாரம்** *āvēšāvadāram*, பெ.(n.) திருமாலின் கூர்மத் தோற்றரவு (கௌணாவ தாரம்) (அஷ்டாதச. பக். 25, குறிப்பு); *Viṣṇu's* secondary or partial incarnation.

*[Skt. ā-vēša+ava-tāra> த. ஆவேசாவதாரம்.]*

**ஆவேசி-த்தல்** *āvēši-*, 4 செ.கு.வி.(v.i) தெய்வம் ஏறுதல்; to be possessed, as by a deity.

த.வ. மருளாடல்.

*[Skt. ā-vēša > த. ஆவேசி-.]*

**ஆவேதனம்** *āvēdaṉam*, பெ.(n.) அறிக்கை; report. *"நான்காம் ஆவேதனத்தோடு" (ஆறுமுகநா. 19).*

*[Skt. ā-vēdana > த. ஆவேதனம்.]*

**ஆற்கந்திதம்** *āṟkandidam*, பெ.(n.) குதிரையின் நடைவகை (சுக்கிரநீதி, 72); a pace of horse.

*[Skt. āskandita > த. ஆற்கந்திதம்.]*

**ஆற்பணம்** *āṟpaṇam*, பெ.(n.) அன்பு; liking.

*[Skt. arpana> த. அர்ப்பணம் → ஆற்பணம்.]*

**ஆற்பனேபதம்** *āṟpaṉēpadam*, பெ.(n.) வடமொழி வினைவகை (பி.வி.36); a kind of verbs in Sanskrit.

*[Skt. ātmanēpada > த. ஆற்பனேபதம்.]*

**ஆன்னிகம்** *āṉṉigam*, பெ.(n.) நாள்தோறும் செய்யும் மதத் தொடர்பான செயல்கள்; daily round of religious duties.

*[Skt. āhnika > த. ஆன்னிகம்.]*

**ஆனத்தவாயு** *āṉatta-vāyu*, பெ.(n.) ஊதை (வாதம்) நோய்வகை (M.L.); muscular rheumatism.

*[Skt. ā-naddha + vayu > த. ஆனத்த வாயு.]*

**ஆனந்த** *āṉanda,* பெ.(n.) வியாழ வட்ட ஆண்டுகளில் 48 ஆவது ஆண்(டு); the 48th year of the Jupiter cycle.

[**Skt.** *ā-nanda* > *த. ஆனந்த.*]

**ஆனனம்** *āṉaṉam,* பெ.(n.) முகம், (பிங்); face.

[**Skt.** *ānana* > *த. ஆனனம்.*]

**ஆனிலன்** *āṉilaṉ,* பெ.(n.) 1. காற்று (வாயு)க் கடவுளின் மகனான அனுமன் (வின்.); *Hanumāṉ* being a son of *Vāyu.* 2. காற்று (வாயு)க் கடவுளின் மற்றொரு மகனான வீமன் (பாரத. பதினெட். 181); *Bhīma* being another son of *Vāyu.*

[**Skt.** *ānila* > *த. ஆனிலன்.*]

**ஆனுகூலியம்** *āṉukūliyam,* பெ.(n.) நன்மை, உதவி (அனுகூலமுடைமை); suitableness, agreement of minds, friendliness.

[**Skt.** *ānukūlya* > *த. அனுகூலியம்.*]

**ஆனுபூர்வி** *āṉupūrvi,* பெ.(n.) ஒழுங்கு, தொடர்ச்சி (சீவக. 3076, உரை); order, sequence.

[**Skt.** *ānupūrvi* > *த. ஆனுபூர்வி.*]

**இக்காமத்து** *ikkāmattu,* பெ.(n.) 1. தங்கி யிருக்கை; staying, dwelling. *ஒரூரில் இக்காமத்து செய்பவன் அவசியம் நோன்பு வைக்க வேண்டும் (முகமதி.).* 2. நின்று கொண்டிருக்கை; standing. *தொழுகைக்கு இக்காமத்தாய்விட்டது (முகமதி.).*

**த.வ. தங்கல், இருப்பு.**

[**Ar.** *iqāmat* > *த. இக்காமத்து.*]

**இக்குரார்** *ikkurār,* பெ.(n.) ஒத்துக் கொள்ளுகை; confession, admission. *நாம் செய்த குற்றங்களை இக்குரார் செய்து கொள்ளவேண்டும் (முகமதி).*

**த.வ. ஒப்பேற்பு.**

[**Ar.** *iqrār* > *த. இக்குரார்.*]

**இக்தியார்** *iktiyār,* பெ.(n.) விருப்பம்; will, option, discretion. *மாந்தன் உயிருடனிருப்பதும் இறப்பதும் அவனுடைய இக்தியாரி வில்லை (முகமதி.).*

[**Ar.** *ikhiiar* > *த. இக்தியார்.*]

**இகுலாசு** *igulāšu,* பெ.(n.) உண்மை அன்பு; sincerity, true, love, piety. *நாம் இகுலாசுடன் செய்யும் வணக்கங்களையே இறைவன் ஒத்துக்கொள்வான் (முகமதி.).*

[**Ar.** *ikhlas* > *த. இகுலாசு.*]

**இங்கார்** *iṅgār,* பெ.(n.) தடை, மறுப்புத் தெரிவிக்கை (முகமதி.); objection, contradiction.

[**Ar.** *iṅkār* > *த. இங்கார்.*]

**இச்சத்து** *iccattu,* பெ.(n.) மதிப்புரவு (கௌரவம்); honour. *"மனிதன் இச்சத்தோடு காலங்கழிக்க வேண்டும்".*

**த.வ. பெருந்தகவு.**

[**Ar.** *izzat* > *த. இச்சத்து.*]

**இசதாசார்** *isatāsār,* பெ.(n.) மதிப்புரவின் அடையாளம்; mark of respect (P.T.L.).

[**Ar.** *izzat-āthār* > *த. இசதாசார்.*]

**இசப்கோல்** *išapkōl,* பெ.(n.) செடிவகை (மூ.அ.); ispaghul, *plantago isphagula.*

[**U.** *isapgōl* > இஸ்கோல் > *த. இசப்கோல்.*]

**இசம்** *išam,* பெ.(n.) பெயர்; name, individual.

[**Ar.** *ism* > *த. இசம்.*]

**இசம்கர்ணம்** *išam-karṇam,* பெ.(n.) சிற்றூர்க் (கிராமக்) கணக்கன்; registered village or accountant.

**த.வ. மணியக்காரன்.**

[**Ar.** *ism*+**Skt.** *karana* > *த. இசம்கர்ணம்.*]

**இசம்வார்** *išam-vār,* பெ.(n.) வருவாய்த்துறைக் கணக்கேடு (நபர் சிட்டா); revenue account of the holdings with assessment arrangement under the names of the several individuals.

[**Ar.** *ism*+**U.** *wār* > *த. இசம்வார்.*]

**இசா** *isā,* பெ.(n.) 1. இரவின் முற்பாகம்; the first part of the night (Muham.). 2. இரவில் தொழுகை; the prayer of the night (Muham.).

த.வ. முன்னிராத்தொழுகை.

*[Ar. isha > த. இசா.]*

**இசாசத்து** *isā-sattu,* பெ.(n.) இசைவு, (அனுமதி); permission leave to depart. *நான் போவதற்கு முன் தங்களிடம் வந்து இசாசத்து பெற்றுக் கொள்கிறேன் (முகம்.).*

*[Ar. ijazat > த. இசாசத்து.]*

**இசாபா** *išābā,* பெ.(n.) வருவாய் மிகுதி; increase in revenue whether from improved cultivation or from enhancement of the rate of assessment (C.G.).

*[U. izāfā > த. இசாபா.]*

**இசாபு** *išābu,* பெ.(n.) கணக்கு; account, bill of charges.

*[U. hisāb > த. இசாபு.]*

**இசார்நாமா** *išār-nāmā,* பெ.(n.) குத்தகை ஆவணம்; deed of lease.

*[U. isār-nāmā > த. இசார்நாமா.]*

**இசாரா[1]** *išārā,* பெ.(n.) குத்தகை நிலம்; land leased or rented out.

*[U. ijārā > த. இசாரா.]*

**இசாரா[2]** *išārā,* பெ.(n.) குறிப்புக்காட்டல் (சமிஞ்ஞை); hint, suggestion. *"இசாராவினால் தெரிந்து கொள்ளாதவன் என்ன சொன்னாலும் தெரிந்து கொள்ளமாட்டான்" (முகம்.).*

த.வ. குறிப்பு.

*[U. ishara > த. இசாரா.]*

**இசாராதார்** *išārādār,* பெ.(n.) குத்தகைக்கு வாங்குவோன்; lessee, contractor, renter (W.G.).

*[U. ijārā-dār > த. இசாராதார்.]*

**இசீகாத்திரம்** *isīkāttiram,* பெ.(n.) ஏவுகணை வகை (கம்பரா.நிகும்.132, உரை); a kind of missile.

*[Skt. isikāstra > த. இசீகாத்திரம்.]*

**இசுகார்** *išukār,* பெ.(n.) கப்பலில் லவுரானுக்குக் குறுக்கே ஏணிப் படிபோல இடப்பட்டிருக்குஞ் சிறு குறுக்குக் கயிறுகள்; ratives (M.Navi.85).

த.வ. படிக்கயிறு.

*[Skt. iskar > த. இசுகார்.]*

**இசுகால்** *išukāl,* பெ.(n.) தடை; hindrance.

*[U. ishkāl > த. இசுகால்.]*

**இசுசா** *isusā,* பெ.(n.) பங்கு; part, portion, lot, share (W.G.).

*[U. hissa > த. இசுசா.]*

**இசுசாகால்** *isusākāl,* பெ.(n.) பொது வாய்க்கால் (W.G.); water channel jointly enjoyed by two or more parties.

*[இசுசா + கால்.]*

*[U. hissa > த. இசுசா.]*

**இசுதவா** *isutavā,* பெ.(n.) 1. படிப்படியாக உயர்த்தப்படும் நிலவரி (W.G.); land tax or rent levied at progressively increasing rates until it reaches the full sum imposable on land brought under cultivation, or on villager let out to farm. 2. நிலவரியைப் படிப்படியாக உயர்த்துகை; the practice of so taxing lands.

த.வ. ஏறுவரி.

*[U. istiwā > த. இசுதவா.]*

**இசுதிக்பார்** *išutikbār,* பெ.(n.) கரிசுகளை (பாவங்களை) மன்னிக்குமாறு கடவுளிடம் வேண்டிக் கொள்ளுகை; begging forgiveness of god. *மனிதன் அடிக்கடி இசுதிக்பார் செய்து கொண்டிருக்க வேண்டும் (முகம்.).*

த.வ. மன்னிப்பு வேண்டுகை.

*[Ar. istigfar > த. இசுதிக்பார்.]*

**இசுதிக்பால்** *iśutikpāl,* பெ.(n.) எதிர் கொண்டழைக்கை; ceremonies reception of a person of distinction consisting in the villagers coming out of the village limits in procession to meet the hounoured guest (W.G.).

**த.வ. எதிரேற்பு.**

*[U. istiqbal > த. இசுதிக்பால்.]*

**இசுதிபா** *iśutibā,* பெ.(n.) விடுதலையாவணம்; deed of relinquishment (R.T.).

*[Ar. istifa > த. இசுதிபா.]*

**இசுதிமிரார்** *iśutimirār,* பெ.(n.) 1. தீர்வை வரையறை; permanent settlement of revenue (R.F.). 2. தீர்வை வரையறுக்கப்பட்ட நிலம்; land permanently settled (R.F.).

*[U. istimrār > த. இசுதிமிரார்.]*

**இசுதியார்** *iśutiyār,* பெ.(n.) விளம்பரம்; proclamation, notice, advertisement.

*[U. ishtēhār > த. இசுதியார்.]*

**இசுதியார்நாமா** *iśutiyār-nāmā,* பெ.(n.) விளம்பரச் சுவரொட்டி, விளம்பர அட்டை; advertisement, placard poster.

*[U. ishtēhār-nāmā > த. இசுதியார்நாமா.]*

**இசுதீங்கு** *iśutiṅgu,* பெ.(n.) கப்பற்பாயை ஏற்றவும் இறக்கவும் உதவும் கயிறுகள்; brails (M.Navi.86).

**த.வ. ஏண்வடம்.**

*[Skt. istinki > த. இசுதீங்கு.]*

**இசும்** *iśum,* பெ.(n.) பெயர்; name (Muham.).

*[Ar. ism > த. இசும்.]*

**இசுமு** *iśumu,* பெ.(n.) பெயர்; name.

*[U. isum > த. இசுமு.]*

**இசுமுதார்** *iśumutār,* பெ.(n.) மரபுவழியாக சிற்றூரில் வேலை செய்பவன்; hereditary holder of a village office.

**த.வ. குடிமகன், குடிப்பிள்ளை.**

*[U. isum-dār > த. இசுமுதார்.]*

**இசுமுவாரி** *iśumu-vāri,* பெ.(n.) பெயர் வரிசை (நபர்சிட்டா); revenue account of the holdings and their assessments arranged under the names of the several individuals.

**த.வ. பெயரேடு.**

*[U. isum-wāri > த. இசுமுவாரி.]*

**இசுராபு** *iśurābu,* பெ.(n.) தேவைக்கதிகமாக செலவு செய்கை; extravagance, waste (Muham.).

**த.வ. வீணடிப்பு.**

*[Ar. israf > த. இசுராபு.]*

**இசுலாம்** *iśulām,* பெ.(n.) 1. அமைதி; peace. 2. முகம்மதிய சமயம்; religion of Islam; the muhammadan religion (Muham.).

*[Ar. islam > த. இசுலாம்.]*

**இசுலாம்மார்க்கம்** *iśulām-mārkkam,* பெ.(n.) முகம்மதிய மதம்; religion of Islam.

*[Ar. islam+Skt. mārkka > த. இசுலாம் மார்க்கம்.]*

**இசூக்கு** *isūkku,* பெ.(n.) அன்பு; love, affection. *"அவன் அல்லாவின் இஷீக்கினால் மயக்கம் கொண்டிருக்கிறான்" (முகமதி.).*

*[Ar. ishq > த. இசூக்கு.]*

**இசூராக்கு** *isūrākku,* பெ.(n.) ஞாயிற்றின் தோற்றம்; rising of the sun, day-break (Muham.).

**த.வ. எழுஞாயிறு.**

*[Ar. ishraq > த. இசூராக்கு.]*

**இஞ்சின்** *iñjiṉ,* பெ.(n.) இயந்திரம், பொறி; engine; any complex and powerful machine.

*[E. engine > த. இஞ்சின்.]*

**இஞ்சினியர்** *iñjiṉiyar,* பெ.(n.) பொறியாளர்; engineer.

*[E. engineer > த. இஞ்சினியர்.]*

**இஞ்சீல்** *iñjīl,* பெ.(n.) விவிலிய நூலில் உள்ள புதிய ஏற்பாடு; the Gospel; the New Testament.

*[U. injil > த. இஞ்சீல்.]*

**இட்சி** *itsi,* பெ.(n.) கத்தூரி மஞ்சள் (மூ.அ.); yellow zedoary.

*[Skt. iksi > த. இட்சி.]*

**இட்சுவாகு** *itsu-vāku,* பெ.(n.) கதிரவக் குலத்தின் முதலரசன்; the first king of the solar dynasty.

*[Skt. iksvāku > த. இட்சுவாகு.]*

**இட்டகாமியம்** *itta-kāmiyam,* பெ.(n.) மனம் மிக விரும்பியது; object ordently desired.

த.வ. உவந்தது.

*[Skt. ista-gāmya > த. இட்டகாமியம்.]*

**இட்டசித்தி** *itta-citti,* பெ.(n.) விருப்பம் நிறைவேறுகை; attainment of one's heart's desire.

த.வ. விழைவுப்பேறு.

*[Skt. ista-siddhi > த. இட்டசித்தி.]*

**இட்டதெய்வம்** *itta-deyvam,* பெ.(n.) கடவுள் (குல தெய்வம்); favourite deity, deity to whom one is devoted.

த.வ. உகப்புத் தெய்வம்.

*[இட்டம் + தெய்வம்.]*

*[Skt. ista > த. இட்டம்.]*

தேய்→தெய்→தெய்வம்> **Skt.** *deiva.*

**இட்டதேவதை** *itta-dēvadai,* பெ.(n.) **இட்டதெய்வம்** பார்க்க; see *itta-deyvam.*

த.வ. விழைவுத்தெய்வம்.

*[இட்டம் + தேவதை.]*

*[Skt. ista > த. இட்டம்.]*

**இட்டப்பிரசாதம்** *itta-p-pirasādam,* பெ.(n.) 1. கைமாறு வேண்டாக் கொடை; gift of grace. 2. கடவுட் கருணை; grace of god. 3. தெய்வப் படையல்; boiled rice offered to the idols. 4. தெய்வ அப்பம்; encharist.

த.வ. விழைவுப்படையல்.

*[Skt. istam-prasatha > த. இட்டப்பிரசாதம்.]*

**இட்டபோகம்** *itta-pōgam,* பெ.(n.) விரும்பியதை நுகர்கை; free licentious enjoyment of wished for pleasure.

த.வ. விழைவுத் துய்ப்பு.

*[Skt. ista-pōga > த. இட்டபோகம்.]*

**இட்டம்** *ittam,* பெ.(n.) 1. விருப்பம்; desire, will, wish, inclination of mind. *"நம்பனை நாடொறு மிட்டத்தா லினிதாக நினைமினோ" (தேவா. 20,8.).* 2. அன்பு; love, affection. *"இட்டமான வியற்புக ரோனிடங் கிட்டினான்" (கந்தபு. சுக்கிரனுப. 15.).* 3. நட்பு; friendship.

த.வ. உகப்பு.

*[Skt. ista > த. இட்டம்.]*

**இட்டம்பண்ணு-தல்** *ittam-pannu-,* 5 செ. குன்றாவி(v.t.) அடிமைத் தனத்தை விலக்குதல் (வின்.); to emancipate.

*[இட்டம் + பண்ணு-தல்.]*

*[Skt. ista > த. இட்டம்.]*

**இட்டலிங்கம்** *itta-lingam,* பெ.(n.) நாடோறும் வழிபாட்டுக்குரியதாக மாணாக்கனுக்குக் குருவினாற் கொடுக்கப்படும் சிவக்குறி (ஆன்மார்த்த லிங்கம்) (சைவச. பொது. 464); lingam which a guru hands over to a duly initiated disciple with instructions regarding the method of private worship.

த.வ. வழிபடு படிமம்.

*[Skt. ista + linga > த. இட்டலிங்கம்.]*

**இட்டவிகாதம்** *itta-vigādam,* பெ.(n.) விருப்பத்தைக் கெடுக்கை (சிவசம.பக்.54); destruction of one's cherished wish.

த.வ. விழைவுக்கேடு.

*[Skt. ista-vihata > த. இட்டவிகாதம்.]*

**இட்டன்** *ittan,* பெ.(n.) நண்பன்; friend.

*[Skt. ista > த. இட்டன்.]*

**இட்டாநிட்டம்** *iṭṭā-niṭṭam,* பெ.(n.) விருப்பு வெறுப்பானவை; those that are liked and those that are disliked.

த.வ. நச்சிநச்சாதவை.

*[Skt. iṣṭa-an-iṣṭa > த. இட்டாநிட்டம்.]*

**இட்டாபூர்த்தம்** *iṭṭā-pūrttam,* பெ.(n.) வேள்வி முதலிய செயல்களும் குளம் வெட்டுகை முதலிய அறச்செயல்களும் (S.I.I.iii, 3); sacrifices and charitable deeds.

த.வ. விழைவறம்.

*[Skt. iṣṭa-pūrta > த. இட்டாபூர்த்தம்.]*

**இடபக்கொடியோன்** *iṭaba-k-koṭiyōṉ,* பெ.(n.) கொடியில் எருதைச் சின்னமாகக் கொண்ட சிவன்; Šiva, who has the figure of a bull on his banner.

த.வ. ஏற்றுக்கொடியோன்.

*[இடபம் + கொடியோன்.]*

*[Skt. ṛṣabha > த. இடபம்.]*

**இடபகிரி** *iṭaba-giri,* பெ.(n.) அழகர் மலை (அழகர்கல. 33.); Aḻagar malai near Madurai.

*[Skt. ṛṣabha+giri > ரிஷபகிரி > த. இடபகிரி.]*

**இடபதரன்** *iṭaba-taraṉ,* பெ.(n.) உருத்திரர்களுள் ஒருவர் (சி.போ.பா. 2 : 3, பக். 212); a Rudra.

*[Skt. Ṛṣabhadhara > த. இடபதரன்.]*

**இடபதீபம்** *iṭaba-tībam,* பெ.(n.) கோயிலில் கடவுள் முன்பு காட்டப்படும் ஒப்பனை விளக்கு வகை (தமிழ்விடு. 233.); a kind of lamp waved before idols.



*[Skt. ṛṣabha+dīpa > ரிஷபதீபம் > த. இடபதீபம்.]*

**இடபம்** *iṭabam,* பெ.(n.) 1. ஏறு (திவா.); bull. 2. பொலியெருது (பிங்.); bull kept for breeding. 3. நந்தி (பிங்.); Nandi, the chief attendant of Šiva, so called as he has a face resembling that of a bull. 4. இரண்டாம் ஓரை (திவா.); name of the second sign of the Zodiac; Taurus. 5. விடை மாதம் (வைகாசி) (மணிமே. 15 : 23); Tamil second month.

த.வ. காளை.

*[Skt. ṛṣabha > ரிஷபம் > த. இடபம்.]*

**இடபவாகனன்** *iṭaba-vāgaṉaṉ,* பெ.(n.) எருதை ஊர்தியாகக் கொண்ட சிவன்; Šiva, who rides on a bull.

த.வ. ஏறூர்ந்தோன்.

*[Skt. ṛṣabha+vāhaṉaṉ > த. இடபவாகனன்.]*

**இடபவீதி** *iṭaba-vīdi,* பெ.(n.) மீனம், மேழம், கன்னி, துலை என்னும் ஓரைகளடங்கிய கதிரவன் இயங்கும் நெறி; trisection of the Zodiac, embracing the four signs, Pisces, Aries, Virgo, and Libra.

த.வ. ஞாயிற்றுச்சாலை.

*[Skt. ṛṣabha+vīthi > த. இடபவீதி.]*

**இடபன்** *iṭabaṉ,* பெ.(n.) காமநூல் கூறும் மூன்று பிரிவு ஆடவருள் ஒரு பிரிவினன் (கல்லா. 7, மயிலே.); man of bull-like nature; one of three *āḍavar-šādi.*

த.வ. ஏற்றன்.

*[Skt. ṛṣabha > த. இடபன்.]*

**ஆடவர் இனம்** : 1. சசன், 2. இடபன், 3. அச்சுவன்.

**இடபாரூடர்** *iṭabārūḍar,* பெ.(n.) சிவ வடிவங்களுள் ஒன்று; Šiva, in one of His aspects, appearing as mounted on the sacred bull. *"பிரமகபாலத்தர் மறைபேசு மிடபாரூடர்" (திருநெல். பு. அறம்வளர். 11).*

த.வ. ஏறூர்ந்த சிவன்.

*[Skt. ṛṣabha + ārūḍha > த. இடபாரூடர்.]*

**இடாக்குத்தர்** *iṭākkuttar,* பெ.(n.) ஆங்கில முறையைப் பின்பற்றும் மருத்துவர் (யாழ்ப்); doctor, physician.

**த.வ.** மருத்துவர்.

*[**E.** doctor > த. இடாக்குத்தர்.]*

**இத்தத்து** *ittattu,* பெ.(n.) **இத்தா** பார்க்க; see *ittā.*

*[**Ar.** iddat > த. இத்தத்து.]*

**இத்தா** *ittā,* பெ.(n.) வெளியில் வராமை; period of seclusion incumbent on a Muhammadan woman in consequence of the dissolution of her marriage either by divorce or by the death of her husband. *கணவன் இறந்தால் மனைவி நான்கு மாதம் பத்துநாள் இத்தாவிருக்க வேண்டும் (முகமதி.).*

**த.வ.** இற்செறிப்பு.

*[**Ar.** iddat > த. இத்தா.]*

**இத்திகாத்தான** *ittikāttāṉa,* பெ. எ. (adj.) ஒன்றுபட்ட (ஏகோபித்த); unanimous. *இவ்விடயத்தில் ஆலிம்களுக்குள் இத்திகாத்தான எண்ணம் இருக்கிறது (முகமதி.).*

**த.வ.** ஒன்றித்த.

*[**Ar.** ittihād > த. இத்திகாத்தான.]*

**இத்திகாத்து** *ittikāttu,* பெ. (n.) நம்பிக்கை; faith, belief. *நன்மை செய்தவனுக்கு மறுமையில் நற்பலன் உண்டென்று முகமதியர் இத்திகாத்து கொள்ள வேண்டும் (முகமதி.).*

*[**Ar.** ittiquad > த. இத்திகாத்து.]*

**இத்திகாபு** *ittikābu,* பெ.(n.) தனித்திருந்து ஊழ்கம் செய்கை (தியானித்தல்) (முகமதி.); meditation in retirement; silent devotion.

*[**Ar.** ittikāf > த. இத்திகாபு.]*

**இத்திபார்** *ittibār,* பெ.(n.) மதிப்பு, நம்பிக்கை; credence, confidence. *உம்முடைய சொல்லில் எனக்கு இத்திபாரில்லை (முகமதி.).*

*[**Ar.** itibār > த. இத்திபார்.]*

**இத்திராசு** *ittirāšu,* பெ.(n.) மறுத்துச் சொல்லுகை, தடை; dispute, objection. *நான் சொல்வதற்கெல்லாம் இத்திராசு செய்யாதே. (முகமதி.).*

*[**Ar.** itirāz > த. இத்திராசு.]*

**இத்திரிப்பெட்டி** *ittiri-p-peṭṭi,* பெ.(n.) சலவைப் பெட்டி; iron box.

*[இத்திரி + பெட்டி.]*

*[**U.** istri > த. இத்திரி.]*



**இத்திலாக்கு** *ittilākku,* பெ.(n.) குறியீட்டு மொழியாக (பரிபாஷையாக) வழக்கிலுள்ளது; technical language, conventional meaning. *உலக மாக்களுடைய இத்திலாக்கில் அவ்வார்த்தைக்கு வேறு அர்த்தம் ஏற்படும் (முகம்.).*

**த.வ.** இடவழக்கு.

*[**Ar.** istilaq > த. இத்திலாக்கு.]*

**இத்திலா** *ittilā,* பெ.(n.) செய்தி; information, advice, notification.

*[**U.** ittillā > த. இத்திலா.]*

**இத்துவரம்** *ittuvaram,* பெ.(n.) எருது (சங். அக.); bull.

*[**Skt.** iḍvara > த. இத்துவரம்.]*

**இத்யாதி** *ityādi,* பெ.(n.) என்ற இவை முதலானவை; இன்னும் பல; et cetera; and the rest. *"மோகினியென்றும் மகானென்றும் இத்யாதி நாமங்களுண்டு" (சி.சி. 1 :57, சிவாக்.).*

*[**Skt.** iti+ādi > த. இத்யாதி.]*

**இதசத்துரு** *ita-šatturu,* பெ.(n.) வெளிநட்புக் காட்டும் பகைவன்; enemy in the guise of a friend.

**த.வ. உட்பகைவன்.**

*[Skt. hita+šatru > த. இதசத்துரு.]*

**இதரேதராச்சிரயம்** *itarētarāccirayam,* பெ.(n.) ஒன்றை யொன்று பற்றுதலென்னுங் குற்றம் (தொல். விருத். முதற். பக். 50.); arguing in a circle with reference to two things; fallacy of mutual dependence.

**த.வ. இருபால் கவர்வு.**

*[Skt. itarētara+a-šraya>த. இதரேதராச்சிரயம்.]*

**இதாசனி** *itāšaṇi,* பெ.(n.) (ஓகநிலை) இருக்கை ஒன்பதனுள் ஓகி தன்மனம் போல அமைத்துக் கொள்ளும் இருக்கை (ஆசனம்) (சுகாசனத்தி லிருப்பவன்); person who sits at ease, cross-legged. *"இதாசனியா யிருந்தேன்" (திருமந். பாயி. 56).*

**த.வ. உகப்பு இருக்கை.**

*[Skt. hitā+āsana> த. இதாசனி.]*

**இதிகாசம்** *itikāšam,* பெ.(n.) 1. இராமாயணம், மகாபாரதம் போன்ற தொல் மறவனப்பு; ancient epic, as the *Rāmāyaṇa* or the *Mahābhārata.* 2. எடுத்துக்காட்டு; example, illustration. 3. உலகுரையாகிய அளவை (ஐதிகப் பிரமாணம்); tradition, which the *Paurānikas* recognize as a proof.

**த.வ. தொன்மம்.**

*[Skt. itihāsa > த. இதிகாசம்.]*

**இதிபாரா** *itibārā,* பெ. (n.) நம்பிக்கை (C.G.); confidence.

*[U. etibār > த. இதிபாரா.]*

**இதோபதேசம்** *itōpatēšam,* பெ.(n.) 1. நல்ல கருத்துகளைக் கற்பிக்கை (நற்போதனை); friendly advice, salutary instruction. 2.யாழ்ப்பாணத்து நாகநாத பண்டிதர் சமற்கிருதத்திலிருந்து தமிழில் மொழி பெயர்த்த ஒரு நூல்; a Tamil translation, by *Nāganātha Paṇḍitar* of Jaffna of a Skt. work containing a popular collection of fables intermixed with didactic sentences and moral precepts, supposed to have been narrated by a *Brāhman* named *Viṣṇusaraman* to some young princes, and chiefly founded on the *pañja-tantra.*

**த.வ. நல்லோதல்.**

*[Skt. hita+upa-dēša > த. இதோபதேசம்.]*

**இந்திராக்கம்** *intirākkam,* பெ.(n.) குதிரைச் செவியினடியிற் காணப்படுஞ் சுழிவகை (சுக்கிரநீதி, 314.); a curl or mark found below the ears of horses.

*[Skt. indrākṣa > த. இந்திராக்கம்.]*

**இந்திரி** *intiri,* பெ.(n.) கிழக்கு; the eastern cardinal direction, as Indra's quarter. *"இந்திரி முதற்றிசை யெட்டுங் கேட்டன" (கம்பரா. வாலிவதை. 9.).*

*[Skt. aindrī > த. இந்திரி.]*

**இந்திரிபேதி** *indiri-bēdi,* பெ.(n.) தோல் (பிரமேக) நோயால் உடம்பினுள் தங்கி நிற்கும் நஞ்சை வெளிப்படுத்தும் முகத்தான், ஆயுள் வேத முறைப்படி செய்யும் மருத்துவம்; a method of purgation adopted in ayurveda, by which the septic poison stagnated in the body through venereal causes, is eliminated from the system (சா.அக.).

**த.வ. நஞ்சுநீக்கு மருத்துவம்.**

**இந்திரியஆத்துமன்** *indiriya-āttumaṉ,* பெ.(n.) ஆதனில் (ஆன்மா) ஒன்றிய இந்திரியப் புலன்; identitical or one with the soul; senses merged in the soul (சா.அக.).

**த.வ. உயிர்ப்புலன்.**

*[Skt.indriya-ātman>த.இந்திரியஆத்துமன்.]*

**இந்திரியஆர்த்தம்** *indiriya-ārttam,* பெ.(n.) புலன்களின் செயல் பற்றியது; an object of the sense, as smell, sound etc. (சா.அக.).

*[**Skt.** indriya-ārttam>த.இந்திரியஆர்த்தம்.]*

**இந்திரியக்கட்டு** *indiriya-k-kaṭṭu,* பெ.(n.) 1. புலன்கள் அதன் வழி செல்லாது தடுக்கை; restraining the senses from indulgence. 2. பெண்ணுடன் சிற்றின்பத்தில் இருக்கும்போது விந்து வெளிப்படாமல் இருக்க மருந்தினால் கட்டுகை; suppression of semen during intercourse (சா.அக.).

**த.வ. புலடனக்கம்.**

*[இந்திரியம் + கட்டு.]*

*[**Skt.** indriya> த.இந்திரியம்.]*

**இந்திரியக்கலனம்** *indiriya-k-kalaṉam,* பெ.(n.) **இந்திரியக் கலிதம்** பார்க்க; see *indiriya-k-kalidam.*

*[இந்திரியஸ்கலனம் → இந்திரியக்கலனம்.]*

**இந்திரியக்கலிதம்** *indiriya-k-kalidam,* பெ.(n.) கருநீர் (சுக்கிலம்) வெளிப்படுகை; emission of semen.

**த.வ. கருநீர்கழிவு.**

*[**Skt.** indriyaškalita>த.இந்திரியக்கலிதம்.]*

கருநீர் (இந்திரியம்) இரண்டு முறையில் வெளிப்படும். ஒன்று உடலுறவின் போது தெரிந்தும், கனவின்கண் தெரியாமலும் வெளிப்படும்.

**இந்திரியக்கனவு** *indiriya-k-kaṉavu,* பெ.(n.) கருநீர் (இந்திரியம்) வெளிப்படும் முன் தூக்கத்திலுண்டாகுங் கனவு; wet dream (சா.அக.).

**த.வ. உறவுக்கனவு.**

*[**Skt.** indriya>இந்திரியம்.]*

**இந்திரியக்காட்சி**[1] *indiriya-k-kāṭci,* பெ.(n.) தூங்கும்பொழுது கருநீர் (சுக்கிலம்) வெளிப்படும் முன் பெண்ணைப் புணரவாவது அணைக்கவாவது காணும் தோற்றம்; an unreal fancy just before emission during which the sleeping man experiences if he is enjoying with or embracing a woman - *Emissional visions* (சா.அக.).

**த.வ. இணைவிழைச்சுக்கனவு.**

*[இந்திரியம் + காட்சி.]*

*[**Skt.** indriya> த. இந்திரியம்.]*

**இந்திரியக்காட்சி**[2] *indiriya-k-kāṭci,* பெ.(n.) ஆதன் பொறிபூதங்களுடன் கூடி வேறுபாடின்றி (நிருவிகற்பமாய்) அறியும் அறிவு (சி.சி. அளவை. 6.); sense - perception.

**த.வ. புலக்காட்சி.**

*[இந்திரியம் + காட்சி.]*

*[**Skt.** indriya> த. இந்திரியம்.]*

**இந்திரியக்குழல்** *indiriya-k-kuḻal,* பெ.(n.) 1. **இந்திரியக்கமலக்குழல்** பார்க்க; see *indiriya-k-kamala-k-kuḻal.* 2. உறுப்புகளின் குழாய்; organic vessels of the body (சா.அக.).

*[இந்திரியம் + குழல்.]*

*[**Skt.** indriya> த. இந்திரியம்.]*

**இந்திரியக்கமலக்குழல்** *indiriya-k-kamala-k-kuḻal,* பெ.(n.) கருநீர் (சுக்கிலம்) தங்குமிடத்திற்குச் செல்லுமொரு குழல்; the tube connecting the seminal sac - *Vas deferens* (சா.அக.).

*[இந்திரியம் + கமலம் + குழல்.]*

*[**Skt.** indriya> த. இந்திரியம்.]*

**இந்திரியக்கமலம்** *indiriya-k-kamalam,* பெ.(n.) கருநீர் (சுக்கிலம்) தங்கும் பை; seminal sac - *Vesiculae seminales.*

**த.வ. கருநீர்ப்பை.**

*[இந்திரியம் + கமலம்.]*

*[**Skt.** indriya-kamala>த.இந்திரியக்கமலம்.]*

**இந்திரியக்கரணம்** *indiriya-k-karaṇam,* பெ.(n.) உறுப்புகளின் அமைப்பு; organic structure; suitable disposition of the parts

in the body for the performance of vital functions (சா.அக.).

த.வ. பொறிப்பாங்கு.

*[இந்திரியம் + கரணம்.]*

*[**Skt.** indriya> த. இந்திரியம்.]*

**இந்திரியக்காதம்** *indiriya-k-kādam,* பெ.(n.) பொறிகளின் (புலனின்) வலுவின்மை; weakness of the organs of sense (சா.அக.).

*[**Skt.** indriya-ghāta> த. இந்திரியக்காதம்.]*

**இந்திரியக்கிராமம்** *indiriya-k-kirāmam,* பெ.(n.) மெய், வாய், கண், மூக்கு, செவி எனும் ஐம்பொறிகள்; the five sense organs *mey, vāy, kaṇ, mūkku, ševi* (சா.அக.).

த.வ. ஐம்பொறி.

*[**Skt.** indriya-grāma> த. இந்திரியக் கிராமம்.]*

**இந்திரியக்கோசம்** *indiriya-k-kōšam,* பெ.(n.) **இந்திரியக்கமலம்** பார்க்க; see *indiriya-k-kamalam.*

*[**Skt.** indriya-kōsa> த. இந்திரியக்கோசம்.]*

**இந்திரியக்கோசரம்** *indiriya-k-kōšaram,* பெ.(n.) 1. புலனால் அறியப்படுவது; that which is perceived by the sense. 2. புலன்களுக்குச் செய்தியாதல்; capability of being perceptible by the sense (சா.அக.).

த.வ. புலப்பாடு.

*[**Skt.** indriya-kōsaram> த. இந்திரியக் கோசரம்.]*

**இந்திரியசக்தி** *indiriya-šakti,* பெ.(n.) 1. புலனின் ஆற்றல்; the power of the sense and the sensory organs. 2. கருநீரின் (விந்துவின்) ஆற்றல்; virile power.

த.வ. புலனாற்றல்.

*[**Skt.** indriya-šakti> த. இந்திரியசக்தி.]*

**இந்திரியசங்கம்** *indiriya-šaṅgam,* பெ. (n.) பற்றற்ற தன்மை; indifference to pleasure or pain; non-attachment to sensual objects-*Stoicism.*

*[**Skt.** indriya-saṅgha> த. இந்திரியசங்கம்.]*

**இந்திரியசிராவம்** *indiriya-širāvam,* பெ.(n.) வெள்ளை நோயினால் ஏற்படும் கருநீர் (சுக்கிலம்) ஒழுக்கு; a venereal disease attended with constant oozing or abnormal discharge of semen (சா.அக.).

*[**Skt.** indriya-šrāvya> த. இந்திரியசிராவம்.]*

**இந்திரியஞானம்** *indiriya-ñāṉam,* பெ.(n.) உணர்ச்சியின் கருவி; the faculty of perception (சா.அக.).

*[**Skt.** indriya-ñāna> த. இந்திரியஞானம்.]*

**இந்திரியத்தாருட்டியம்** *indiriya-t-tāruṭṭiyam,* பெ.(பே.) கருநீரின் (சுக்கிலத்தின்) வலிமை; the thickness of the semen (சா.அக.).

**இந்திரியத்துவம்** *indiriyattuvam,* பெ.(n.) உணர்ச்சியின் உறுப்பாயிருக்கும் நிலைமை; the condition of being an organ of sense (சா.அக.).

**இந்திரியநரம்பு** *indiriya-narambu,* பெ.(n.) நாடி (தாது) நரம்பு; spermatic cord (சா.அக.).

*[இந்திரியம் + நரம்பு.]*

*[**Skt.** indriya> த. இந்திரியம்.]*

**இந்திரியநிக்கிரகம்** *indiriya-nikkiragam,* பெ.(n.) பொறியடக்கம்; spiritual inhibition of the organs of sense.

*[**Skt.** indriya-nigraha> த. இந்திரியநிக்கிரம்.]*

**இந்திரியப்பசை** *indiriya-p-pašai,* பெ.(n.) கருநீரில் (இந்திரியத்தில்) உள்ள பிசின் போன்ற பொருள்; an albuminoid substance derived from the semen - *Spermatin.*

*[இந்திரியம் + பசை.]*

*[**Skt.** indriyam> த. இந்திரியம்.]*

**இந்திரியப்பிரசங்கம்** *indiriya-p-pirašaṅgam,* பெ.(n.) சிற்றின்ப நுகர்ச்சி; sensuality (சா.அக.).

*[**Skt.** indriya-pra-šaṅgam> த. இந்திரியப் பிரசங்கம்.]*

**இந்திரியப்பெருக்கு** *indiriya-p-perukku,* பெ.(n.) கருநீர் மிகுதியாக சுரக்கை (சுக்கில விருத்தி); abundant secretion of semen.

*[இந்திரியம் + பெருக்கு.]*

*[**Skt.** indriyam> **த.**இந்திரியம்.]*

**இந்திரியப்போக்கு** *indiriya-p-pōkku,* பெ.(n.) கருநீர் (சுக்கிலம்) மிகுதியாக வெளிப்படுகை; frequent involuntary discharge of semen with out copulation- *Spermatorrhoea.*

*[இந்திரியம் + போக்கு]*

*[**Skt.** indriyam> **த.**இந்திரியம்.]*

**இந்திரியபலம்** *indiriya-palam,* பெ.(n.) **இந்திரியத்தாருட்டியம்** பார்க்க; see *indiriya-t-tāruttiyam.*

*[இந்திரியம் + பலம்.]*

*[**Skt.** indriyam> **த.**இந்திரியம்.]*

**இந்திரியபுத்தி** *indiriya-putti,* பெ.(n.) 1. ஐம்புலன் உணர்ச்சி; perception by the five sense. 2. புலன் நுகர்ச்சி; the exercise of any sense 3. உறுப்புகளின் உணர்ச்சி; the faculty of any organ.

*[இந்திரியம் + புத்தி.]*

*[**Skt.** indriyam> **த.**இந்திரியம்.]*

**இந்திரியபோகம்** *indiriyā-pōgam,* பெ.(n.) புணர்ச்சியால் உண்டாகும் மகிழ்ச்சி; sexual happiness (சா.அக.).

**த.வ. புணர்ச்சி மகிழ்தல்.**

*[**Skt.** indriya-pōka> **த.**இந்திரியபோகம்.]*

**இந்திரியம்** *indiriyam,* பெ.(n.) 1. பொறி; organ or power of sense. 2. கருநீர் (சுக்கிலம்); semen. 3. மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்பொறிகள் (பிங்.); the five organs of perception; the five sense of the body (சா.அக.).

*[**Skt.** indriya > **த.** இந்திரியம்.]*

மெய்மை நூற் (தத்துவ நூல்) கருத்துப் படி புலன் (இந்திரியம்) என்பது மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்தோடு மனம், கல்வி (வித்தை) என்பதையும் சேர்த்து ஏழுவகை என்று கருதப்படும். மேலும் புலன் (இந்திரியம்) என்பது பொதுவாக அறிவுக்கருவிகள் (ஞானேந்திரியம்) செயற்கருவிகள் (கருமேந்திரியம்)உட்புலக்கருவிகள் (அந்தரேந்திரியம்) என மூவகையாகவும் கொள்ளப்படும். (சா. அக.)

**இந்திரியம்நீற்றல்** *indiriyam-nīṟṟal,* பெ.(n.) கருநீர் (சுக்கிலம்) தண்ணீரைப் போலாகை; liquidity of semen; destruction of solution of spermatoza - *Spermatolysis.*

**த.வ. நீர்த்தகருநீர்.**

*[இந்திரியம் + நீற்றல்.]*

*[**Skt.** indriyam> **த.**இந்திரியம்.]*

**இந்திரியமடக்கல்** *indiriyam-aḍakkal,* தொ.பெ. (vbl. n.) 1. ஐம்புலன்களையும் அடக்குகை; restraining the five senses. 2. புணர்ச்சியின் போது கருநீரை வெளிவிடாதபடி தடுக்கை; suppression of semen during coition (சா.அக.).

**த.வ. புலனடக்கம்.**

*[இந்திரியம் + அடக்கல்.]*

*[**Skt.** indriyam> **த.**இந்திரியம்.]*

**இந்திரியமறுப்பு** *indiriyamaṟuppu,* பெ.(n.) கருநீர் (இந்திரியம்) தடை; obstruction to the discharge of semen - *Sper - matempharxis* (சா.அக.).

**இந்திரியமிறுகல்** *indiriyamiṟugal,* தொ.பெ. (vbl.n.) கருநீர் (சுக்கிலம்) கட்டுகை; thickening of the seminal fluid (சா.அக.).

*[இந்திரியம் + இறுகல்.]*

*[**Skt.** indriyam> **த.**இந்திரியம்.]*

**இந்திரியமுடைதல்** *indiriyam-uḍaidal,* தொ.பெ. (vbl.n.) **இந்திரியம் நீற்றல்** பார்க்க; see *indiriyam-nīṟṟal* (சா.அக.).

*[இந்திரியம் + உடைதல்.]*

*[**Skt.** indriyam> **த.**இந்திரியம்.]*

**இந்திரியமோசனம்** *indiriyamōšaṉam*, பெ.(n.) ஐம்புலன்களின் அவா அறுக்கை; abandonment of sensuality (சா.அக.).

**த.வ. புலன்தடை.**

**இந்திரியயிழிவு** *indiriya-y-iḻivu*, பெ.(n.) கருநீர் உடைந்து கழிகை; destruction and discharge of semen - *Spermatorrhoea* (சா.அக.).

*[இந்திரியம் + இழிவு.]*

*[**Skt.** indriyam> த.இந்திரியம்.]*

**இந்திரியவம்** *indiriyavam*, பெ.(n.) வெட்பாலை யரிசி (தைலவ. தைல. 116.); seeds of *Holarrbena antidysenterica.*

*[**Skt.** indra+yava > த. இந்திரியவம்.]*

**இந்திரியவிசயநோய்கள்** *indiriya-višaya-nōygaḷ*, பெ.(n.) ஐம்பொறி (பஞ்சேந்திரியம்) களாலுண்டாகும் துன்பம், தொல்லை (அவஸ்தை); disorders pertaining to the sensory organs (சா.அக.).

**த.வ. ஐம்பொறி நோய்.**

*[இந்திரியவிசயம் + நோய்கள்.]*

*[**Skt.** indriya-vi-saya > த. இந்திரியவிசயம்.]*

**இந்திரியவிசயம்** *indiriya-višayam*, பெ.(n.) புலனின் கருவிகள்; object of the senes (சா.அக.).

*[**Skt.** indriya-vi-saya > த. இந்திரியவிசயம்.]*

**இந்திரியவிருத்தி** *indiriya-virutti*, பெ. (n.) 1.கருநீர் (இந்திரியம்) மிகுதியாக வுண்டாகுகை; excess in the secretion of semen. 2. உணர்ச்சியின் கருவி; sensitive faculty (சா.அக.).

*[**Skt.** indriya+vrtti> த. இந்திரியவிருத்தி.]*

**இந்திரியவீனம்** *indiriya-viṉam*, பெ.(n.) 1. கருநீர் (சுக்கிலம்) குறைவு; want of secretion of semen. 2. ஆண்மைத் தன்மைக் குறைவு; impotancy; want of virile power. 3. **இந்திரியயிழிவு** பார்க்க; see *indiriya-y-iḻivu.*

*[**Skt.** indriya+hina> த. இந்திரியவீனம்.]*

**இந்திரியவொடுக்கம்** *indiriya-v-oḍukkam*, பெ.(n.) ஐம்புலன்களும் ஒடுங்குகை; suppression of the five senes. 2. விந்து சுரக்காவண்ணம்தடைசெய்கை; suppression of the secretion of semen-*Spermatos chesis.*

**த.வ.** புலனொடுக்கம்.

*[இந்திரியம் + ஒடுக்கம்.]*

*[**Skt.** indriya > த. இந்திரியம்.]*

**இந்திரியவொழுக்கு** *indiriya-v-oḻukku*, பெ.(n.) **இந்திரியயிழிவு** பார்க்க; see *indiriya-y-iḻivu.*

*[இந்திரியம் + ஒழுக்கு.]*

*[**Skt.** indriya > த. இந்திரியம்.]*

**இந்திரியவோதனம்** *indiriya-v-ōdaṉam*, பெ.(n.) உடம்பின் ஆற்றலைத் தூண்டுகை; arousing the bodily powers (சா.அக.).

*[இந்திரியம் + ஓதனம்.]*

*[**Skt.** indriya > த. இந்திரியம்.]*

**இந்திரியாசங்கம்** *indiriyā-šaṅgam*, பெ.(n.) புலன் நுகர்வு (அனுபவம்) அல்லது செயல் வெறுப்பு; detachment from sensual object-*Stoicism* (சா.அக.).

**இந்திரியாபதனம்** *indiriyā-padaṉam*, பெ.(n.) உடல்; body (சா.அக.).

**இந்திரியானி** *indiriyāṉi*, பெ.(n.) புலனுறுப்பு, உணர்ச்சியுறுப்பு; an organ which receives a stimulus and transforms it into a sensation - *Sensory organ.*

**இந்திரியோபாதானம்** *indiriyō-pātāṉam*, பெ.(n.) ஐம்புலனையும் அடக்குகை; restraining the five senses (சா.அக.).

**த.வ. புலனடக்கம்.**

**இந்திரை[1]** *indirai*, பெ.(n.) திருமகள் (கம்பரா. இராவணன்வதை. 120.); Lakṣmi

*[**Skt.** indirā > த. இந்திரை.]*

**இந்திரை²** *indirai,* பெ.(n.) அரிதாரம்; orpiment prepared arsenic (சா.அக.).

**இந்துத்தானம்** *indu-t-tāṉam,* பெ.(n.) வடஇந்தியா; name given to that part of India, which is north of the Nerbudda.

*[U. hindusthān > த. இந்துத்தானம்.]*

**இந்துத்தானி** *indu-t-tāṉi,* பெ.(n.) இந்தி, உருது மொழிகள்; the language of Hindustan; the Hindi language; a term generally applied to Urdu.

*[U. hindustān > த. இந்துத்தானி.]*

**இந்துவி** *induvi,* பெ.(n.) இந்திமொழி; the Hindi language.

*[U. hinduwi> த. இந்துவி.]*

**இந்தோளம்** *intōḷam,* பெ.(n.) மாலையில் பாடும் பண் வகை (பரத. இராக. 73.); a specific melody-type appropriate to be sung during evenings.

**த.வ. இந்தளம்.**

*[Skt. hindōla > த. இந்தோளம்.]*

**இப்பவம்** *ippavam,* பெ.(n.) இப்பிறப்பு; the present birth (சா.அக.).

**இப்பா** *ippā,* பெ.(n.) நன்கொடை; gift.

*[U. hibā > த. இப்பா.]*

**இபம்** *ibam,* பெ.(n.) 1. யானை; elephant *"திசையிபச்செவி" (கலிங். புதுப. 331).* 2. யானைக் கொம்பு; elephant's tusk. 3. மரக் கொம்பு; the branch or twig of a tree.

*[Skt. ibha > த. இபம்.]*

**இபரோகம்** *ibarōgam,* பெ.(n.) யானைக்கால்; Cochin leg - *Elephantiasis* (சா.அக.).

*[Skt. ibha-rōga> த. இபரோகம்.]*

*[இபம் → இபரோகம்.]*



**இபாதத்து** *ibātattu,* பெ.(n.) கடவுளுக்குச் செய்ய வேண்டிய வழிபாடு; worship of god. *ஒருவனுக்கு அறிவு எவ்வளவு இருந்தாலும் அவனிடம் இபாதத்து இல்லையானால் பயனில்லை (முகமதி.).*

*[Ar. ibadat > த. இபாதத்து.]*

**இபாரத்து** *ibārattu,* பெ. (n.) சொற்றொடரமைப்பு; style of writing, mode of expression. *நீ எழுதிய வியாசத்தில் இபாரத்துச் சரியாய் இல்லை (முகமதி.).*

*[Ar. ibārat > த. இபாரத்து.]*

**இபுதார்** *ibudār,* பெ.(n.) நோன்புக்குப்பின் உண்ணுகை; breaking a fast. *ரம்சான் நோன்பில் ஞாயிறு மறைந்த பின் இபுதார் செய்யவேண்டியது (முகமதி.).*

**த.வ. நோன்புணவு.**

*[Ar. iftar > இப்தார் > த. இபுதார்.]*

**இபுனு** *ibuṉu,* பெ.(n.) பிறங்கடை, வழித்தோன்றல்; son of, descendant of. *கத்தாபின் இபுனு ஹெஸரத் உமர் (முகமதி.).*

*[Ar. ibn > த. இபுனு.]*

**இமாம்** *imām,* பெ.(n.) தொழுகையை நடத்துபவர்; spiritual leader or guide, leader in congregational prayer. *தொழுகையில் இமாமைப் பின்பற்றியே மற்றவர்கள் செயல்பட வேண்டும் (முகமதி.).*

**த.வ. தொழுகை ஆசான்.**

*[Ar. imam > த. இமாம்.]*

**இமாமத்** *imāmat,* பெ.(n.) பள்ளிவாசலில் (தியானம்) உள்ளொடுக்கத்தைத் தொடங்கி நடத்துகை; the act of leading the prayers in a mosque.

*[**Ar.** imāmat > த. இமாமத்.]*

**இயாத்து** *iyāttu,* பெ.(n.) நோயாளியைப் பார்க்கை; visiting the sick. *இயாத்துச் செய்யவேண்டியது முகமதியர்களின் கடமை (முகமதி.).*

*[**Ar.** iyadat> த. இயாத்து.]*

**இயாதம்** *iyādam,* பெ.(n.) யானைத் தோட்டி (பிங்.); elephant goad.

*[**Skt.** yāta > த. இயாதம்.]*

**இயேசு** *iyēšu,* பெ.(n.) கிறித்துவின் இயற்பெயர்; the Tamil form of the personal name of Jesus Christ.

*[**Heb.** yēshu'a > **GK.** iesoūs > த. இயேசு.]*

**இயேசுநாதர்** *iyēšu-nādar,* பெ. (n.) **இயேசு** பார்க்க; see *iyēšu.*

**இரக்கை** *irakkai,* பெ.(n.) 1. காப்பு; amulet or charm. 2. திருநீறு; sacred ashes, as a charm or protection against evil. *"இரக்கை யெனும் பேரா மிதற்கு" (சைவச. பொது. 204.)*

*[**Skt.** rākṣā > த. இரக்கை.]*

**இரகசியப்போலீசு** *iragašiya-p-pōlīšu,* பெ. (n.) துப்பறியும் காவல்துறை; criminal Intelligence Department of the Police Service, so called because it is a secret service.

**த.வ. கமுக்கக்காவல்.**

*[**Skt.** rahasya+**E.** Police> த. இரகசியப் போலீசு.]*

**இரகசியம்**[1] *iragašiyam,* பெ.(n.) 1. தனக்கு மட்டுமே தெரிந்த, பிறர் அறியாமல் காக்கப் படுகிற செய்தி; secret. இந்த இரகசியம் யாருக்கும் தெரியக்கூடாது. 2. ஒரு சிலரைத் தவிரப் பிறர் அறியாத நிலை; secrecy. *'தொழிலதிபரிடம் இரகசியமாக வினாவுதல் நடைபெறுகிறது'.* 3. பிறர் அறியாதபடி தனக்குள்ளே வைத்துக்கொள்ளும் நிலை; privacy; in secret. 4. அறிவினால் புரிந்து கொள்ளவோ விளங்கவோ இயலாத மறை பொருள்; mystery, secret. *'படைப்பின் இரகசியத்தை யார் அறிவார்?'.*

**த.வ. கமுக்கம்.**

*[**Skt.** rahasya > த. இரகசியம்.]*

**இரகசியம்**[2] *iragašiyam,* பெ.(n.) பெண்குறி; the genital of a female.

*[**Skt.** rahasya> த. இரகசியம்.]*

**இரச்சு** *iraccu,* பெ.(n.) கயிறு (பிங்.); cord, rope, string.

*[**Skt.** rajju> த. இரச்சு.]*

**இரச்சுப்பொருத்தம்** *iraccu-p-poruttam,* பெ. (n.) திருமணப் பொருத்தங்களுள் ஒன்று (சோதிட. சிந். 197); a felicitous correspondence between the horoscopes of the prospective bride and of the bride-groom one of ten *Kaliyāna-p-poruttam.*

**த.வ. மணப்பொருத்தம்.**

*[இரச்சு + பொருத்தம்.]*

*[**Skt.** rajju> த. இரச்சு.]*

**இரச்சுவம்** *iraccuvam,* பெ.(n.) குற்றெழுத்து; short vowel. *"குறிலுங் குறுமையும் இரச்சுவமுங் குறில்" (பேரகத். 13.).*

**த.வ. குறில்.**

*[**Skt.** hrasva > த. இரச்சுவம்.]*

**இரசக்கட்டு** *iraša-k-kaṭṭu,* பெ.(n.) நெருப்பிற்கு ஓடாதபடி யிறுகச் செய்த இதளியம் (ரசம்); consolidated or solid fied mercury capable of standing the test of fire (சா.அக.).

**த.வ. இதளியக்கட்டு.**

*[இரசம் + கட்டு.]*

*[**Skt.** rasa > த. இரசம்.]*

**இரசக்கலவை** *iraša-k-kalavai,* பெ.(n.) இதளியம் (பாதரசம்) பிற மாழை (உலோகம்) களோடு சேர்ந்த கலப்பு; amalgam; a compound of mercury with another metal (சா.அக.).

*[இரசம் + கலவை.]*

*[Skt. rasa > த. இரசம்.]*

**இரசக்களங்கு** *iraša-k-kaḷaṅgu,* பெ.(n.) இதளிய (இரச)த்தைக் கட்டிய பிறகு மூலிகை களினால் அது நொறுங்கும் படிச் செய்வதும், ஊதை நோய்யைக் குணமாக்கப் பயன்படுவதுமான ஒரு பொருள்; a form of mercury which is consolidate with the aid of herbs into a state in which it can be easily powdered. It is useful in Alchemy (சா.அக.).

**த.வ. இரசவெட்டை.**

*[இரசம் + களங்கு.]*

**இரசக்களிம்பு** *iraša-k-kaḷimbu,* பெ.(n.) காயத்தை ஆற்றுவதற்காக இதளியத்தால் (பாதரசம்) செய்தவோர் மேற்பூச்சு மருந்து; a mercurial ointment applied for healing up wounds (சா.அக.).

*[இரசம் + களிம்பு.]*

*[Skt. raša > த. இரசம்.]*

**இரசக்காரசிந்தூரம்** *iraša-k-kāra-šindūram,* பெ.(n.) காரமேற்றிய இதளியச் செந்தூரம்; an irritant oxide of mercury.

*[இரசம் + காரம் + சிந்தூரம்.]*

*[Skt. raša > த. இரசம்.]*

**இரசக்கிண்ணம்** *iraša-k-kiṇṇam,* பெ.(n.) இதளியத்தை இறுகச் செய்து வெள்ளியைப் போலுருக்கித் தகடு தட்டிச் செய்த கிண்ணம்; a bowl made of consolidated mercury and used just like a silver ore (சா.அக.).

*[இரசம் + கிண்ணம்.]*

*[Skt. rasa > த. இரசம்.]*

**இரசக்கிண்ணி** *iraša-k-kiṇṇi,* பெ.(n.) கட்டியான இதளியத்தாற் செய்த உண்கலம்; a plate made of consolidated mercury (சா. அக.).

*[இரசம் + கிண்ணி.]*

*[Skt. rasa > த. இரசம்.]*

**இரசக்கிணறு** *iraša-k-kiṉaṟu,* பெ.(n.) இதளியக் குழி (வின்.); quick silver mine.

*[இரசம் + கிணறு.]*

*[Skt. rasa > த. இரசம்.]*

**இரசக்கிரியை** *iraša-k-kiriyai,* பெ.(n.) 1. மூலிகைச் சாற்றிலிருந்து கசாயம் இறக்கி அதைக் குழம்பாகக் காய்ச்சு முறை; a process of preparing medicine by thickening the decoction of any drug or drugs. 2. புண்களை ஆற்றுவதற்காகத் தேனோடு கூட்டிப்பயன்படுத்தும் ஓர் ஆயுள்வேத மருந்து; a preparation in ayurveda, applied for healing up an ulcer, or other syphilitic sore after mixing it up or maceration it with honey.

*[Skt. rasa+kriyā > த. இரசக்கிரியை.]*

**இரசக்குடுக்கை** *iraša-k-kuḍukkai,* பெ.(n.) இதளியத்தை அடைக்கும் குப்பி (வின்.); any small receptacle for mercury such as a coconut shell or a dry gourd.

**த.வ. இதளியக்குப்பி.**

*[இரசம் + குடுக்கை.]*

*[Skt. rasa > த. இரசம்.]*

**இரசக்குண்டு** *iraša-k-kuṇḍu,* பெ.(n.) அழகுக்காக தொங்கவிடும் இதளியம் பூசிய கண்ணாடி உருண்டை; globular glass coated with mercury, usually hung up as an article of decoration.

**த.வ. இதளியக்குண்டு.**

*[இரசம் + குண்டு.]*

*[Skt. rasa > த. இரசம்.]*

**இரசக்குழி** *iraša-k-kuḷi,* பெ.(n.) **இரசக்கிணறு** பார்க்க; see *iraša-k-kiṉaṟu.*

*[இரசம் + குழி.]*

*[**Skt.** rasa > **த.** இரசம்.]*

**இரசகந்தபாடாணம்** *iraša-kanda-pāḍāṇam,* பெ.(n.) சாதிலிங்கம் (மூ.அ.); red sulphurate of mercury.

*[**Skt.** rasa+gandaka+pāṣāṇa > **த.** இரசகந்தபாடாணம்.]*

**இரசகந்தம்** *iraša-kandam,* பெ.(n.) குங்கிலியம்; false myrrh-*Balsmodendron myrrha.* (சா.அக.)

*[**Skt.** raša+gandaka > **த.** இரசகந்தம்.]*

**இரசகந்தாயம்** *iraša-kandāyam,* பெ.(n.) 1. வரி; tribute, tax. 2. வளமான நிலம் (R.); fertility of the soil, soil productivity.

*[இரசம் + கந்தாயம்.]*

*[**Skt.** rasa > **த.** இரசம்.]*

**இரசகர்ப்பூரம்** *iraša-kar-p-pūram,* பெ.(n.) **இரசகருப்பூரம்** பார்க்க; see *iraša-karuppūram.*

*[இரசம் + கர்ப்பூரம்.]*

*[**Skt.** rasa > **த.** இரசம்.]*

*த. கருப்பூரம் > **Skt.** karppura.*

**இரசகருப்பூரம்** *iraša-karuppūram,* பெ.(n.) இதளிய (பாதரசம்)த்தினின்று செய்யப்படும் ஒரு சரக்கு; bichloride of mercury - Hydrargyri sub-chloridum of chemists. (சா.அக.)

*[இரசம் + கருப்பூரம்.]*

*[**Skt.** rasa > **த.** இரசம்.]*

**இரசகன்** *irašagaṉ,* பெ.(n.) சலவைத் தொழிலாளி; washer-man.

*[**Skt.** rajaka > **த.** இரசகன்.]*

**இரசகா** *irašakā,* பெ.(n.) சாதிலிங்கம்; red sulphuret of mercury (சா.அக.).

**இரசகாந்தவிருட்சம்** *iraša-kānda-viruṭcam,* பெ.(n.) ஒளிமிகுதியாகவுள்ள மரம்; mercury brightness tree. It is a tree supposed to be a bright as mercury (சா.அக.).

*[**Skt.** rasa + **த.** காந்தம் + **Skt.** vṛkṣa > **த.** இரசகாந்தவிருட்சம்.]*

இம்மரமிருக்கும் இடத்தில் இரவு தோன்றாது. இது தோற்றத்தில் பலாமரம் போலவும், மென்மையில் வாழைமரம் போலவுமிருக்கும். இதில் வெள்ளை, கறுப்பு என இருவகை உண்டு (சா.அக.).

**இரசகி** *irašaki,* பெ.(n.) வண்ணாத்தி; woman of the washerman caste.

*[**Skt.** rajakī > **த.** இரசகி.]*

**இரசகிரீதம்** *iraša-kirīdam,* பெ. (n.) சுண்ணாம்பு கலந்த இதளியம் (இரசம்); mercury combined with chalk.

*[**Skt.** rasa+kirīta > **த.** இரசகிரீதம்.]*

**இரசகுரு** *iraša-kuru,* பெ.(n.) 1. இதளிய (இரச) மருந்துகளில் முதன்மையான மருந்து; the chief of the mercurial compounds. 2. இதளிய (இரச) சுண்ணம்; a mercurial preparation having the peculiar property of transmuting inferior metals into gold.

*[இரசம் + குரு.]*

*[**Skt.** rasa > **த.** இரசம்.]*

**இரசகுளிகை** *iraša-kuḷigai,* பெ. (n.) 1. இதளியத்தால் செய்யப்பட்ட மாத்திரை; mercury pill. 2. சித்தர்கள் பயன்படுத்திய மாத்திரை (சி.சி.11 : 5); pill said to have been used by the Siddhars.

**த.வ. இதளியக்குளிகை.**

*[இரசம் + குளிகை.]*

*[**Skt.** rasa > **த.** இரசம்.]*

**இரசகெந்தி** *iraša-kendi,* பெ.(n.) அனைத்து மருந்துகளுடன் சேருமோர் இதளியகுரு (இரசக்குரு); black mercuric sulphide which was believed to be a universal agent in all medicines.

**இரசகேசபீடம்** *iraša-kēša-pīḍam,* பெ. (n.) துத்தம்; white vitriol - *Zinc sulphate* (சா.அக.).

*[**Skt.** rašakēsa-pēḍam > த. இரசகேசபீடம்.]*

**இரசகேசரம்** *iraša-kēšaram,* பெ.(n.) கருப்பூரம்; camphor (சா.அக.).

**இரசகேந்திரலோகன்** *iraša-kēndira-lōgaṉ,* பெ.(n.) இதளியம் (சூதம்); mercury. (சா. அக.)

**இரசச்சுண்ணம்** *iraša-c-cuṇṇam,* பெ.(n.) பூச்சு மருந்துவகை (மூ.அ.); peroxide of mercury.

*[இரசம் + சுண்ணம்.]*

*[**Skt.** rasa > த. இரசம்.]*

**இரசசித்தன்** *iraša-šittaṉ,* பெ.(n.) இதள் மாற்றியம் (இரசவாதம்) பயின்றவன்; a Siddha who is skilled in alchemy (சா.அக.).

*[இரசம் + சித்தன்.]*

*[**Skt.** rasa > த. இரசம்.]*

**இரசசித்தி** *iraša-šitti,* பெ.(n.) இதள் மாற்றியப் (இரசவாதம்) பயிற்சியினாலுண்டாகும் அறிவு; the knowledge of alchemy.

*[இரசம் + சித்தி.]*

*[**Skt.** rasa > த. இரசம்.]*

**இரசசிந்தாமணி** *iraša-šindāmaṇi,* பெ.(n.) இதளிய (இரச) மருந்தைப் பற்றிக் கூறுமோர் மருத்துவ நூல்; a book on mercury and its compounds (சா.அக.).

*[இரசம் + சிந்தாமணி.]*

*[**Skt.** rasa > த. இரசம்.]*

**இரசசிந்தூரம்** *iraša-šindūram,* பெ.(n.) இதளியத்தால் செய்யப்படும் மருந்து (பைஷஜ.); oxide of mercury.

*[**Skt.** rasa-sindur > த. இரசசிந்தூரம்.]*

**இரசசீவரட்சாமிர்தம்** *iraša-šīva-raṭcāmirdam,* பெ. (n.) இதளியத்தைப் பற்றிக் கூறுமோர் ஆயுள் வேத நூல்; a treatise in ayurveda on mercury (சா.அக.).

**இரசசீனிச்சூரணம்** *iraša-šīṉi-c-cūraṇam,* பெ.(n.) அண்ட ஊதை (வாதம்), அரையாப்பு, புண், சூலை முதலியவைகளுக்குக் கொடுக்கும் ஒரு வகை மருந்துப் பொடி; a medicinal powder prescribed by Veidyans for Hydrocele, venereal complaints such as bubo etc. (சா.அக.).

*[**Skt.** rasa+šīni+šūrṇa > த. இரசசீனிச் சூரணம்.]*

**இரசசு** *irašašu,* பெ.(n.) 1. ஊனில் இருந்து உண்டாகி மாதவிலக்குக் காலத்தில் பெண்களுக்கு அல்குல் (யோனி) வழியாய் வெளிப்படும் நெய்மத்தைப் போன்ற ஒரு வகை அரத்தம்; the menstrual blood. 2. மகளிர் பூப்பு நீர்; the monthly discharge of a woman. 3. பூந்தாது அதாவது மலரின் மகரந்தப் பொடி; the pollen and anther of a flower (சா.அக.).

**இரசசுத்தி** *iracacutti,* பெ.(n.) ஈயம் (வை.மூ.); lead.

*[**Skt.** rasa+šuddhi > த. இரசசுத்தி.]*

**இரசசுவலம்** *iraša-šuvalam,* பெ.(n.) எருமை; buffalo.

**இரசசுவலை** *iraša-šuvalai,* பெ.(n.) மாதவிலக்கு, தீட்டு; menses (சா.அக.).

*[இரசசு + வலை.]*

*[**Skt.** rašasu > த. இரசசு.]*

**இரசசூதம்** *iraša-šūdam,* பெ.(n.) மண்டையோட்டிலிருந்து செய்யும் ஒரு வகைச் சுண்ணம்; a calcined powder prepared from the human skull.

*[**Skt.** rasa+sūta > த. இரசசூதம்.]*

**இரசசெந்தூரம்** *iraša-šendūram,* பெ.(n.) 1. இதளியச் சிந்தூரம்; red oxide of mercury. 2. மஞ்சள் நிற இதளியச் சிந்தூரம்; yellow oxide of mercury - Hydrargyri Oxidum flavum.

*[**Skt.** rasa-sindur > த. இரசசெந்தூரம்.]*

**இரசசெம்பு** *iraša-šembu,* பெ.(n.) இதளியம் (இரசம்) ஏற்றிய செம்பு; copper amalgam.

*[இரசம் + செம்பு.]*

*[**Skt.** rasa > த. இரசம்.]*

**இரசசெய்கை** *iraša-šeygai,* பெ. (n.) அறுவகைச் சுவைக்கும் உண்டான தொழில். அதாவது – இனிப்பு, புளிப்பு, உப்பு முதலிய இம்மூன்றும் வளி (வாயு)யையும்; துவர்ப்பு, இனிப்பு, கசப்பு இம்மூன்றும் பித்தத்தையும்; துவர்ப்பு, கசப்பு, கார்ப்பு இம்மூன்றும் கோழை (கபம்)யையும் போக்கும்; the action of the six kinds of tastes in reducing the effects of the 3 humours as shown above.

*[இரசம் + செய்கை.]*

*[**Skt.** rasa > த. இரசம்.]*

**இரசசெவ்வத்திரம்** *iraša-ševvattiram,* பெ.(n.) **இரசசிந்தூரம்** பார்க்க; see *iraša-šindūram.*

**இரசசெவ்வியோதிரம்** *iraša-ševvi-yōdiram,* பெ. (n.) ஒருவகை இதளியச் (இரச) சிந்தூரம்; red oxide of mercury (சா.அக.).

**இரசசோதனம்** *iraša-šodanam,* பெ.(n.) வெண்காரம்; borax (சா.அக.).

**இரசத்தைக்கருவாக்கும்வேந்தன்** *irašattai-k-karuvākkum-vēndan,* பெ.(n.) கார் முகிற் பாடாணம்; a dark cloud-coloured arsenic (சா.அக.).

**இரசதகிரி** *irašada-giri,* பெ.(n.) பனிமலை (கைலாசமலை) (அழகர்கல. 33.); mount Kailasa the abode of Šivan, so called because it is considered to be a silver mountain.

*[**Skt.** rajata+giri > த. இரசதகிரி.]*

**இரசதசபை** *irašada-šapai,* பெ.(n.) மதுரையிலுள்ள வெள்ளியம்பலம் (நடராசர் அவை); dancing hall of Sri *Naṭarāja* in the shrine at Madurai from its being roofed with silver.

**த.வ. வெள்ளிமன்றம்.**

**இரசதநிமிளை** *irašata-nimiḷai,* பெ.(n.) வெள்ளிநிமிளை (இராட்.); bismuth of a white colour.

*[**Skt.** rajata-nēmila > த. இரசதநிமிளை.]*

**இரசதபற்பம்** *irašada-parbam,* பெ. (n.) வெள்ளிப்பொடி; oxide of silver.

*[**Skt.** rajata+bhasman > இரசதபஸ்மம் > த. இரசதபற்பம்.]*

**இரசதம்**[1] *irašadam,* பெ.(n.) 1. இதளியம் போன்ற நிறமுடைய வெள்ளி; silver, which is white in colour. 2. அரத்தம்; blood. 3. பொன்; gold. 4. யானைக் கொம்பு; the tusk of an elephant. 5. இதளியம் (பாதரசம்); mercury. 6. வெள்ளை, whiteness, white colour. 7. முத்துமாலை, garland of pearls.

*[**Skt.** rajata > த. இரசதம்.]*

**இரசதம்**[2] *irašadam,* பெ.(n.) உணர்ச்சி; passion or emotion. *"இரசதத்தின் குணமெய்தி நான்முகனா யுலகீனும்" (கூர்மபு. பிரகிருதி. 22.).*

*[**Skt.** rajas > த. இரசதம்.]*

**இரசதம்**[3] *irašadam,* பெ.(n.) அரைப்பட்டிகை (பிங்.); gridle, belt.

**இரசதமணல்** *irašada-maṇal,* பெ.(n.) வெள்ளி கலந்த மணல் (வின்.); sand containing silver.

**த.வ. வெள்ளிமணல்.**

*[இரசதம் + மணல்.]*

*[**Skt.** rajasta > த. இரசதம்.]*

**இரசதமனி** *irašadamani,* பெ.(n.) நுரையீரலி லோடும் அரத்தக் குழாய்; an artery of the lungs-*Pulmomary artery* (சா.அக.).

*[இரசம்+தமனி.]*

**இரசதாகி** *irašatāki,* பெ.(n.) கடுக்காய்; Indian gall-nut (சா.அக.).

**இரசதாது** *iraša-tādu,* பெ.(n.) 1. இதளியம் (இரசம்); quick-silver as a mineral. 2. உடம்பிலுள்ள எழுவகை ஆற்றல்கள்

(சத்துக்கள்); the seven fundamental principles of organisms in the animal body, such as the lymph chyle etc.

*[இரசம்+தாது.]*

*[**Skt.** rasa > த. இரசதம்.]*

**இரசதாபமானி** *irašatāpa-māṉi,* பெ.(n.) வெப்ப அளவை, வெப்ப நிலையை அறிந்துகொள்வதற்காக இதளியத்தைக் (பாதரசம்) கொண்டு அமைத்தவொரு கருவி; a thermometre which has mercury in its expanding column (சா.அக.).

**த.வ. வெப்பமானி.**




**இரசதாப்பிரகம்** *irašatāppiragam,* பெ.(n.) நான்கு வகை அப்பிரகங்களுள் வெண்மையான அப்பிரகம்; one of the four kinds of mica, white in colour (சா.அக.).

**இரசதாரை** *iraša-tārai,* பெ.(n.) உடம்பில் பரவி நிற்கும் அரத்தத்தோடு, உண்ட உணவு (அன்னாசம்) கலக்கும்படிச் செய்வதற்காக நெஞ்சறையிலமைக்கப்பட்டவொரு வகைக் குழல்; a passage with well-defined walls, which acts as a channel for the collection of the lymph from the portions of the body below the diaphragm and from the left side of the body above the diaphragm-*Thoracic duct* (சா.அக.).

*[இரசம் + தாரை.]*

*[**Skt.** rasa > த. இரசதம்.]*

**இரசதாளி** *iraša-tāḷi,* பெ.(n.) வாழை வகை; a kind of plantain.

*[**Skt.** rasa-dālika > த. இரசதாளி.]*

**இரசதுவிகெந்தி** *iraša-tuvi-kendi,* பெ.(n.) சாதிலிங்கம்; a beautiful red colouring matter artificially prepared from sulphur and mercury- *Bisulphuret of Mercury* (சா.அக.).

**இரசதோடம்** *iraša-tōḍam,* பெ.(n.) 1. இதளியத்திற்கு (இரசத்திற்கு) இயற்கையாகவே அமைந்த எட்டுவகைக் குற்றங்கள்; the eight natural defects existing in mercury. 2. இதளிய மருந்தின் பயன்பாட்டால் உடம்பினுள் ஏற்பட்ட நஞ்சு; the chronic poisoning from misuse of mercury - *Mercurialism.*

*[**Skt.** rasa+dōṣa > த. இரசதோடம்.]*

**இரசநாதம்** *iraša-nādam,* பெ.(n.) **இரசநாதன்** பார்க்க; *see iraša-nādaṉ.*

**இரசநாதன்** *iraša-nādaṉ,* பெ.(n.) இதளியம் (மூ.அ.); mercury.

*[**Skt.** rasa+nātha > த. இரசநாதன்.]*

**இரசநீகான்** *iraša-nīgāṉ,* பெ.(n.) நிலவு; moon (சா.அக.).

**இரசநீசலம்** *iraša-nīšalam,* பெ.(n.) பனி; frost, dew (சா.அக.).

**இரசப்பிடிப்பு** *iraša-p-piḍippu,* பெ.(n.) முடக்கூதை(வாதம்) (பைஷஜ.); mercurial rheumatism.

*[இரசம் + பிடிப்பு.]*

*[**Skt.** rasa > த. இரசதம்.]*

**இரசப்புகை** *iraša-p-pugai,* பெ. (n.) இதளியத்தின் ஆவி; mercurial vapour.

*[இரசம் + புகை.]*

*[**Skt.** rasa > த. இரசதம்.]*

**இரசப்புண்** *iraša-p-puṇ,* பெ.(n.) இதளிய மருந்தை அதிகமாக உட்கொள்வதால் ஏற்படும் வாய்ப்புண்; inflammation of the mouth etc. due to mercurial poisoning - *Mercurial stomatitis.*

*[இரசம் + புண்.]*

*[**Skt.** rasa > த. இரசதம்.]*

**இரசபதங்கம்** *iraša-padaṅgam,* பெ.(n.) இதளியத்தை மற்ற சரக்குகளுடன் சேர்த்து ஏனத்திலிட்டு மூடி எரிப்பதனால் ஆவியாக மேற்சென்று, மூடியிருக்கும் ஏனத்தின் அடியில் படிந்திருக்கும் இதளியம் (இரசம்); the mercury which is vapourised by heat and then condensed is to a solid-*sublimated mercury* (சா.அக.).

*[**Skt.** rasa+padaṅ-ga > த. இரசபதங்கம்.]*

**இரசபந்தனி** *iraša-pandaṉi,* பெ.(n.) இதளியத்தை (இரசத்தை)க் கட்டுவதற்காக பயன்படுத்தும் மூலிகைகள்; the drugs which are capable of consolidating mercury (சா.அக.).

**இதளியத்தைக் கட்டும் மூலிகைகள்:** சர்க்கரை வேம்பு, சாயா மரம், செம்பல்லிப் பூடு, தித்திப்புக்கோவை, கற்றாமரை, கண்பூ, தாம்பூரச் சிகை, உரோம மரம், கிளி முருக்கு, தேவதாளி, பொன்னூமத்தை முதலியன.

**இரசபலம்** *iraša-palam,* பெ.(n.) தென்னை (மலை.); coconut palm, so called from its bearing fruit which yields a sweet fluid.

*[**Skt.** rasa+phala > த. இரசபலம்.]*

**இரசபற்பம்** *iraša-paṟbam,* பெ.(n.) இதளியப் பொடிமம் (மூ.அ); oxide of mercury calx.

*[**Skt.** rasa+basma > இரசபஸ்மம் > த. இரசபற்பம்.]*

**இரசபாடாணம்** *iraša-pāḍāṇam,* பெ.(n.) 1. இதளியமும் (இரசமும்) பாடாணமும் கலந்த மருந்து; a compound of mercury and arsenic. 2. இதளியம் சேர்ந்த நச்சுத் தன்மையுள்ள மருந்து; a poisonous mercurial compound such as Cinnabar (சா.அக.).

*[**Skt.** rasa+pāṣāṇa> த. இரசபாடாணம்.]*

**இரசபாண்டம்** *iraša-pāṇḍam,* பெ.(n.) இதளியம் (இரசம்) வைப்பதற்கான குப்பி, குடுக்கை முதலிய ஏனம்; a receptacle, such as a bottle, cocoanut shell, dry gourd etc. for preserving mercury (சா.அக.).

*[இரசம் + பாண்டம்.]*

*[**Skt.** rasa> த. இரசதம்.]*

**இரசபீதவச்சிரம்** *iraša-pīda-vacciram,* பெ.(n.) மஞ்சள் வண்ணமுடைய ஒருவகை இதளிய மருந்து; a yellow oxide of mercury (சா.அக.).

**இரசப்பிரீதி** *iraša-p-pirīdi,* பெ.(n.) 1. அப்பிரகத் தகடு; slates or flakes of mica. 2. ஒருவகைப் பாடாணம்; a kind of native arsenic.

*[**Skt.** rasa+prīti> த. இரசப்பிரீதி.]*

**இரசப்பிளாத்திரி** *iraša-p-piḷāttiri,* பெ.(n.) சீலையிலூட்டிய இதளிய மருந்து; mercurial plaster.

*[**Skt.**rasa+E.plaster > த. இரசப்பிளாத்திரி.]*

**இரசபுட்பம்** *iraša-puṭpam,* பெ.(n.) இரசகருப்பூரம் (மூ.அ.); sublimate of mercury.

*[**Skt.** rasa+pushpa > இரசபுஷ்பம் > த. இரசபுட்பம்.]*

**இரசபூபதி** *iraša-pūpadi,* பெ.(n.) இசிவு (சன்னி) நோய்க்குக் கொடுக்கும் இதளியம் சேர்ந்த ஒருவகைக் குளிகை மருந்து; a mercurial pill prescribed for delirium, apoplexy etc. (சா.அக.).

*[**Skt.** rasa+bhū-pati > த. இரசபூபதி.]*

**இரசபூரம்** *iraša-pūram,* பெ.(n.) இதளியமும், பூரமும் சேர்ந்த மருந்து; a soft of muriate of mercury.

*[**Skt.** rasa+pūra > த. இரசபூரம்.]*

**இரசம்** *irašam,* பெ.(n.) 1. உண்ட உணவு குடலுக்குள் மாறுதலை அடைந்து அரத்த வோட்டத்தினால் அரத்தத்தில் கலக்கும் வெண்மையான சோற்றின் (அன்னத்தின்) சாரம்; rasa or lymph-chyle permeating the whole body by circulation. it is a nutritive fluid extraced by intestinal absorption from the food after digestion. It is purely white, sweet and cooling and keeps a man in good spirts. 2. சாறு; the expressed juice of medicinal fruits, plant etc. 3. சுவை; taste in general 4. சத்து; essence. 5. மிளகு சேர்த்த நீர்; pepper water used in food. 6. உமிழ்நீர்; saliva. 7. இரச வாழை; red costate - leaved banana - *Musa sapientum*. 8. மாமரம்; mango-tree *Mangifera indica*. 9. இனிப்பு; sweetness. 10. இலைச்சாறு; juice of leaves in general. 11. மதம்; the essence of body. 12. கருநீர் (சுக்கிலம்); semen. 13. பூந்தாது; the essential portion of the flower 14. நஞ்சுக் கொடி; the naval card. 15. பூப்பு நீர்; menstrual blood. 16. காந்தம்; வெண்காரம் முதலிய துணைச் சரக்குகள்; the natural substance, as classified in Tamil medicine viz-magnet, borax etc. (சா.அக.).

*[Skt. rasa > த. இரசம்.]*

**இரசமணி** *iraša-mani,* பெ. (n.) நோய் நீங்கக் காப்பாகக் கட்டப்படும் இதளியம் சேர்த்த மணி (வின்); hard globule of mercury prepared with incantatios and wom as an amulet (W.).

*[இரசம் + மணி.]*

*[Skt. rasa > த. இரசம்.]*

**இரசமருந்து** *iraša-marundu,* பெ. (n.) 1. இதளியத்திலிருந்து செய்த மருந்து; any preparation of mercury - *Mercurial*. 2. இதளியம் (இரசம்) சேர்ந்த மருந்து; medicinal preparation in which mercury forms one of the several ingredienst. 3. மூலிகைச் சாற்றைக் கொண்டு செய்த மருந்து; medicine prepared from the juice of plants (சா.அக.).

*[இரசம் + மருந்து.]*

*[Skt. rasa > த. இரசம்.]*

**இரசமாத்திரை** *iraša-māttirai,* பெ. (n.) 1. இதளிய மருந்துகளைக் கொண்டு செய்யும் மாத்திரை; pills prepared with the aid of mercurial compounds - *Mercury pill*. 2. மூலிகைச் சாற்றினால் செய்த மாத்திரை; pills prepared from the juice of herbs and prescribed for children (சா.அக.).

**த.வ. இதளியமாத்திரை.**

*[இரசம் + மாத்திரை.]*

*[Skt. rasa > த. இரசம்.]*

**இரசமாதா** *iraša-mādā,* பெ.(n.) ஒருவகைச் செய்நஞ்சு (மூ.அ.); a mineral poison.

*[Skt. rasa+mātā > த. இரசமாதா.]*

**இரசமாரணம்** *iraša-māranam,* பெ. (n.) இதளியத்தைக் கொல்லுகை; killing or destroying the virulency of mercury (சா.அக.).

**த.வ. இதளிய அழிப்பு.**

*[Skt. rasa+mārana > த. இரசமாரணம்.]*

**இரசமிசிரம்** *irašam-iširam,* பெ.(n.) இதளிய (இரச)க் கலப்பு; an alloy of mercury with another metal - *Amalgam*.

**இரசமுரிஞ்சல்** *irašam-uriñjal,* தொ.பெ. (vbl.n.) 1. சத்து வாங்குகை; absorbing the essence of anything. 2. இதளியத்தை (இரசத்தை) இழுத்துக் கொள்ளும்படிச் செய்கை; (in chemistry) causing to absorb mercury.

*[இரசம் + உரிஞ்சல்.]*

*[Skt. rasa > த. இரசம்.]*

**இரசமுறி-த்தல்** *irašam-muri-,* 4 செ.கு.வி. (v.i.) 1. இதளியத்தை வெளிப்படுத்தல்; purging mercury out. 2. இதளியத்தின் குணத்தை

அழித்தல்; neutralising or destroying the effects or properties of mercury (சா.அக.).

[இரசம் + முறி-த்தல்.]

[**Skt.** *rasa* > த. இரசம்.]

**இரசமூட்டல்** *irašam-ūṭṭal,* தொ.பெ.(vbl. n) 1. சுவைப் படுத்துகை; highly seasoning; to make or render any preparation highly delicious. 2. இதளியத்தை உட்கொள்ளும் படிச் செய்கை; (in Alchemy) causing to absorb mercury. 3. இதளியம் (இரசம்) சேரும்படிச் செய்கை; subjection of anything to the action of mercury; the act or process of putting under the influence of mercury - *Mercurialisation.* 4. இதளிய மருந்தினால் மருத்துவம் செய்கை; treating with medicines containing mercury (சா.அக.).

[இரசம் + ஊட்டல்.]

[**Skt.** *raja* > த. இரசம்.]

**இரசமெழுகு** *iraša-meḻugu* பெ.(n.) 1. இதளியத்தை (இரசத்தை) மற்றச் சரக்குகளுடன் சேர்த்து அரைத்துச் செய்த மருந்து; a pill prepared by grinding mercury with other drugs. 2. இதளியத்தை நெருப்புக் கோடாதபடிக் கட்டி மற்றப் பொருள்களுடன் சேர்த்துச் செய்த மெழுகைப் போன்ற ஒருவகை மருந்து; a wax-like substance prepared out of solidified mercury by adding to it other chemicals and used in Alchemy. 3. மண்டையோட்டைக் கொண்டு செய்யப்படும் ஒருவகை இதளியம் (இரசம்) சேர்ந்த மெழுகு; a mercurial paste prepared from the human skull by a secret process. 'இம்மெழுகு மந்திர வேலைகளுக்கு உதவும்' (சா.அக.).

**த.வ. இதளிய மெழுகு.**

[இரசம் + மெழுகு.]

[**Skt.** *rasa* > த. இரசம்.]

**இரசலிங்கம்** *iraša-liṅgam,* பெ.(n.) 1. சாதிலிங்கம் (மூ.அ.); red sulphurate of mercury. 2. சிவகுறி(லிங்க) வகை (சைவச. பொது. 81, உரை.); linga, made of mercury (சா.அக.).

[**Skt.** *rasa+linka* > த. இரசலிங்கம்.]

**இரசவலிவு** *iraša-valivu,* பெ. (n.) 1. இதளியத்தைக் கட்டிக் கெட்டிப்படுத்துகை; consolidating mercuary and then making it as hard as a stone. 2. இதளியத்தின் வல்லமை; the strength of mercury. 3. இதளிய ஆற்றலினால் ஏற்பட்ட வலு (பலம்); the strength derived from the essence or juice of anything (சா.அக.).

[இரசம் + வலிவு.]

[**Skt.** *rasa* > த. இரசம்.]

**இரசவாகி** *iraša-vāgi,* பெ.(n.) நிணநீர் செல்லும் குழல்; serium carrying duct (சா.அக.).

**இரசவாகினி** *iraša-vāgiṉi,* பெ. (n.) உண்டஉணவின் சத்தைச் சிறுகுடல்களி னின்று எடுத்துப்போகும் சிறு குழாய்கள்; vessels or slender tubes of animal bodies for conveying the chyle or milk fluied from the alimentary canal-*Lacteals* (சா.அக.).

**இரசவாடை** *iraša-vāḍai,* பெ. (n.) 1. **இரசப்புகை** பார்க்க; see *irašap-pugai.* 2. இதளியமணம்; the scent or smell of mercury (சா.அக.).

**த.வ. இதளியவாடை.**

[இரசம் + வாடை.]

[**Skt.** *rasa* > த. இரசம்.]

**இரசவாடைப்பிடிப்பு** *raša-vāḍai-p-piḍippu,* பெ.(n.) இதளியப்புகை அல்லது இதளிய மருந்துகளின் மணத்தினால் ஏற்படும் ஒருவகை நோய்; an affection of the nerves arising from the fumigation of mercury.

**த.வ. இதளியப்புகை நோய்.**

[இரசம் + வாடை + பிடிப்பு.]

[**Skt.** *rasa* > த. இரசம்.]

**இரசவாதகற்பம்** *iraša-vāda-kaṟpam,* பெ. (n.) மலமூத்திரங்கள் பட்ட விடமெல்லாம் பொன்னாக (வேதை) காணும் படிக்கும், உடல் நீடித்திருக்க உண்ணும் மருந்து (காய கற்பம்); the alchemical preparation taken internally for longevity. it is capable of lending peculiar virtues to excreta and urine in transmuting into gold anything which may come in contact with them.

த.வ. இதளிய உடற்காப்பு.

[*Skt. rasa+vāda+kalpa > த. இரசவாத கற்பம்.*]

**இரசவாதசாலை** *iraša-vāda-šālai,* பெ. (n.) வேதியல் (இரசாயன) ஆய்வுக் கூடம் (பாண்டி); laboratory.

*[இரசவாதம் + சாலை.]*

[*Skt. rasa > த. இரசம்.*]

**இரசவாதம்** *iraša-vādam,* பெ. (n.) மாழைகளைப் (உலோகங்களை) பொன்னாக மாற்றும் கலை (வித்தை); transmuting baser metals into gold; alchemy. *"நேசித்திரசவாத வித்தைக் கலைந்திடுவர்" (தாயு. பரிபூர. 10.).*

த.வ. இதளியக்கலை.

[*Skt. rasa+vāda > த. இரசவாதம்.*]

**இரசவாதி** *iraša-vādi,* பெ.(n.) மாழைகளைப் (உலோகங்களை) பொன்னாக மாற்றுவோன்; alchemist.

[*Skt. rasa+vādin > த. இரசவாதி.*]

**இரசவாழை** *iraša-vāḻai,* பெ. (n.) பேயன்வாழை (வின்.); Manilla hemp.

*[இரசம் + வாழை.]*

[*Skt. raja > த. இரசம்.*]

**இரசவீரி** *iraša-vīri,* பெ. (n.) ஒருவகைச் செய் நஞ்சு; a kind of prepared arsenic-yellow oxide of arsenic (சா.அக.).

[*Skt. rasa+viri > த. இரசவீரி.*]

**இரசவீறு** *iraša-vīṟu,* பெ.(n.) இதளியத்தால் ஏற்பட்ட வாய் வேக்காளம் (இரசவேகம்); inflammation of the mouth due to mercurial poisoning-*Mercurial stomatitis.*

*[இரசம் + வீறு.]*

[*Skt. rasa > த. இரசம்.*]

**இரசவுப்பு** *iraša-v-uppu,* பெ.(n.) இதளியத்தைக் கொண்டு செய்த ஒருவகை உப்பு; mercurial salt (சா.அக.).

*[இரசம் + உப்பு.]*

[*Skt. raja > த. இரசம்.*]

*இது கக்கல் கழிச்சல் (பேதி), உடம்பைத் தேற்றுவது போன்றவற்றிற்கு மருந்தாகப் பயன்படுகிறது.*

**இரசவெண்ணெய்** *iraša-veṇṇey,* பெ. (n.) இதளியத்தை மூலிகைச் சரக்குகளினால் அரைத்து மடியச்செய்து பிறகு வெண்ணெயைப் போலாக்குவது; a butter-like preparation obtained from mercury by depriving it of its interent qualities (சா.அக.).

த.வ. இதளியவெண்ணெய்.

*[இரசம் + வெண்ணெய்.]*

[*Skt. rasa > த. இரசம்.*]

*இதை மாழையில் (உலோகத்தில்) பாய்ச்சிட பொன்னாகும் (வேதையாகும்). செந்தூரம் முதலிய மருந்துகள் செய்ய இது பயன்படுகிறது.*

**இரசவேக்காடு** *iraša-vēkkāḍu,* பெ. (n.) இதளிய மருந்தின் வலிமையால் வாய், வயிறு முதலியவுறுப்புகள் வெந்து வாய்நீர் சுருங்கிப் பல்லீறு புண்ணாகி கெட்ட மணம் வீசுகை; a state in which the mouth and the aliments are inflamed due to the virulence of mercury (சா.அக.).

த.வ. இதளியவேக்காடு.

*[இரசம்+ வேக்காடு.]*

[*Skt. rasa > த. இரசம்.*]

**இரசவேகம்** *iraša-vēgam,* பெ. (n.) 1. இதளியத்திற்குரிய ஆற்றல் (வீரம்); the high potency of mercury. 2. இதளிய

மருந்திற்குண்டான கொடுமை; the virulency of mercury and mercurial compounds (சா.அக.).

*[இரசம் + வேகம்.]*

*[**Skt.** rasa > **த.** இரசம்.]*

**இரசவைப்பு** *iraša-vaippu,* பெ. (n.) ஊதை (வாதம்) முறையிலும், மருத்துவ முறையிலும் தமிழ் வாகடப்படி இதளிய மருந்துகள் செய்யும்முறை; the process of mercurial preparations in general, both in alchemy and medicine as contemplated in Tamil medicine (சா.அக.).

**த.வ. இதளியவைப்பு.**

*[இரசம் + வைப்பு.]*

*[**Skt.** rasa > **த.** இரசம்.]*

**இரசனம்**[1] *irašanam,* பெ.(n.) 1. பொன்; gold. 2. வெள்ளி; silver. 3. நஞ்சு; poison. 4. பிசின்; gum, paste. 5. பழம்; fruit. 6. வடிநீர் (கஷாயம்); decoction. 7. இலைச்சாறு; extract of leaves. 8. ஒலிக்கை; sounding. 9. உணவு; food. 10. நேயம்; friendship.

*[**Skt.** rasana > **த.** இரசனம்.]*

**இரசனம்**[2] *irašanam,* பெ.(n.) 1. ஒரு பொறி; an organ of sense. 2. பல்; tooth. 3. சுவை; taste (சா.அக.).

**இரசனி** *irašani,* பெ.(n.) 1. இரவு; night. *"பரநிருப விரசனி" (இரகு. அரசியற். 5.).* 2. மஞ்சள்; turmeric. *"ஏலமாவொடு நெல்லி யிரசனி" (தக்ஷிணகை. அர்ச்சனா. 38.).* 3. செம்பஞ்சு; red cotton.

*[**Skt.** rajanī > **த.** இரசனி.]*

**இரசனிமுகம்** *irašani-mugam,* பெ. (n.) சிவனை வழிபடுவதற்குரியதான, மாலைக் காலம். அதாவது கதிரவன் மறைவதற்கு முன்னும் பின்னும் உள்ள 1 1/2 மணி நேரம் (பிரதோசகாலம்) (வேதாரணியபு. பிரதக். 95, கீழ்க்குறிப்பு.); the period of 1½ hours before and after sunset.

*[இரசனி + முகம்.]*

*[**Skt.** rajani > **த.** இரசனி.]*

**இரசனை**[1] *irašanai,* பெ.(n.) 1. அணிவகை; a kind of array of troops. 2. மலர் முதலியவற்றைத் தொடுக்கை; stringing of garlands.

*[**Skt.** rasanā > **த.** இரசனை.]*

**இரசனை**[2] *irašanai,* பெ.(n.) பதினாறு கோவையுள்ள அரைப்பட்டிவகையான காஞ்சி (நாநார்த்த.); a girdle of 16 strings.

*[**Skt.** rašanā > **த.** இரசனை.]*

**இரசாதலம்** *irašādalam,* பெ.(n.) கீழ் ஏழு உலகங்களுள் ஒன்று; name of a region under the earth, the sixth of *kīḻ-ēḻ-ulakam.*

*[**Skt.** rasātala > **த.** இரசாதலம்.]*

**இரசாதிபதி** *irašādibadi,* பெ.(n.) சாறு தரும் பொருள்களான காய், கனிகளுக்கு (இரசவசுதுகளுக்கு) அதிகாரியான கோள்மீன் (கிரகம்); one of the planets which, by annual rotation of office, becomes the regent over fruits and vegetables.

**த.வ. கனிக்கோளகன்.**

*[**Skt.** rasa+adhibadi > **த.** இரசாதிபதி.]*

**இரசாபாசம்**[1] *irašāpāšam,* பெ. (n.) 1. சீர்கேடு; clumsiness, ugliness. 2. அருவருப்பு; disgust.

**த.வ. கீழ்த்தரவு.**

*[**Skt.** rasa+ā-bhāsa > **த.** இரசாபாசம்.]*

**இரசாபாசம்**[2] *irašāpāšam,* பெ. (n.) 1. சுவையின்மை; tastelessness. 2. சுவைக்கேடு; bad taste. 3. சாறற்றது; that which is without juice. 4. சத்தற்றது; saplessness or loss of essence (சா.அக.).

**இரசாயந்தம்** *irašāyandam,* பெ.(n.) 1. பால்; milk. 2. சாரம்; juice of anything (சா.அக.).

**இரசாயனக்கலப்பு** *irašāyana-k-kalappu,* பெ.(n.) **இரசாயனப்புணர்ச்சி** பார்க்க; see *irašāyana-p-punarcci*

**இரசாயனக்கவர்ச்சி** *irašāyaṉa-k-kavarcci,* பெ.(n.) வேதியில் இழுப்பு; the affinity between two elements - *Chemical attraction* (சா.அக.).

*[இரசாயனம் + கவர்ச்சி.]*

*[**Skt.** rašāyanā > த. இரசாயனம்.]*

**இரசாயனக்குறிப்பு** *irašāyaṉa-k-kuṟippu,* பெ.(n.) வேதியல் வாய்ப்பாடு; chemical formula (சா.அக.).

*[இரசாயனம் + குறிப்பு.]*

*[**Skt.** rašāyanā > த. இரசாயனம்.]*

**இரசாயனக்கூட்டுறவு** *irašāyaṉa-k-kūṭṭuṟavu,* பெ.(n.) வேதியல் பொருத்தம்; chemical composition (சா.அக.).

*[இரசாயனம் + கூட்டுறவு.]*

*[**Skt.** rašāyanā > த. இரசாயனம்.]*

**இரசாயனக்கூறுபாடு** *irašāyaṉa-k-kūṟupāḍu,* பெ.(n.) வேதியல் பிரிவு; the chemical analysis.

*[இரசாயனம் + கூறுபாடு.]*

**இரசாயனசங்கேதம்** *irašāyaṉa-šaṅgēdam,* பெ.(n.) வேதியில் குறிப்பு; chemical formula (சா.அக.).

*[**Skt.** rasāyana+saṅgēta > த. இரசாயன சங்கேதம்.]*

**இரசாயனசம்பந்தம்** *irašāyaṉašambandam,* பெ.(n.) வேதியல்உறவு; chemical affinity.

*[**Skt.** rasāyana+sam-bantha > த. இரசாயனசம்பந்தம்.]*

**இரசாயனத்திரவயோகம்** *irašāyaṉa-t-tiravayōgam,* பெ.(n.) வேதியல் முறையால் ஏற்படும் கரைவு; chemical solution (சா.அக.).

*[**Skt.** rašāyana-drava > த. இரசாயனத் திரவியம்.]*

**இரசாயனத்திரவியம்** *irašāyaṉa-t-tiraviyam,* பெ.(n.) வேதியல் மருந்து; a substance used to produce chemical effects.

*[இரசாயனம் + திரவியம்.]*

*[**Skt.** rašāyana-drava > த. இரசாயனத் திரவம்.]*

**இரசாயனத்தொழில்** *irašāyaṉa-t-toḻil,* பெ.(n.) வேதியல் செய்கை; chemical action (சா.அக.).

*[இரசாயனம் + தொழில்.]*

*[**Skt.** rašāyaṉa > த. இரசாயனம்.]*

**இரசாயனதந்திரம்** *irašāyaṉa-tandiram,* பெ.(n.) உடலை நரைதிரையின்றி நெடு நாளிருக்கச் செய்யும் (காயசித்தி) முறைகள், மருந்துகள், நோயணுகா முறைகள் முதலியவைகளைப் பற்றிக் கூறும் ஓர் ஆயுள்வேத நூல்; one of the 8 parts of tantras in Ayurvēda treating of medicines, rejuvenation and the rules of restoring youth, improving memory, preventing diseases in general etc.

*[இரசாயனம் + தந்திரம்.]*

*[**Skt.** rašāyana > த. இரசாயனம்.]*

**இரசாயனநூல்** *irašāyaṉa-nūl,* பெ.(n.) 1. இயற்பியல் (பௌதிகம்) இயல்பை ஆராயும் நூல்; the science which relates to the peculiar properties of matter - *Chemistry.* 2. ஊதை(வாதம்), உடம்பை நரைதிரையின்றி நெடுநாளிருக்கச் செய்யும் முறை (காயசித்தி) முதலிய கமுக்கங்களைக் (இரகசியங்களை) கூறும் நூல்; in Āyurvēda the science which treats about medicines which tend to arrest the innate morbific tendencies, decay, death etc. and also about alchemy - *Alchemistry* (சா.அக.).

*[இரசாயனம் + நூல்.]*

*[**Skt.** rašāyana > த. இரசாயனம்.]*

**இரசாயனப்பரிமானம்** *irašāyaṉa-p-parimāṉam,* பெ. (n.) வேதியல் அளவு அல்விகிதம்; chemical proportion (சா.அக.).

*[இரசாயனம் + பரிமானம்.]*

**இரசாயனப்புணர்ச்சி** *iraśāyaṉa-p-puṇarcci,* பெ.(n.) வேதியில் கலப்பு; chemical combination (சா.அக.).

*[இரசாயனம் + புணர்ச்சி.]*

*[**Skt.** raśāyana > த. இரசாயனம்.]*

**இரசாயனபேதம்** *iraśāyaṉa-pēdam,* பெ. (n.) 1. வேதியல் வேற்றுமை; the chemical change. 2. வேதியல் வகைகள்; the different chemicals (சா.அக.).

*[இரசாயனம் + பேதம்.]*

*[**Skt.** raśāyana-pēda > த. இரசாயனபேதம்.]*

**இரசாயனம்** *iraśāyaṉam,* பெ. (n.) 1. உடம்பிற்குத் தேவையான வலிமைகளை (தாதுக்களை) உண்டாக்கி தூக்கம், சோம்பல், சோர்வு (அசதி), வலுக்குறைவு (பலவீனம்) முதலியவைகளைப் போக்கி, வாணாளி (ஆயுள்), நலப்பாடு (ஆரோக்கியம்), அழகு (யௌவனம்) முதலியவைகளைத் தந்து ஊதை(வாதம்), பித்தம், கோழை (கபம்) முதலியவற்றைச் சமநிலைப்படுத்தி, உடம்பில் காந்தி, நிறம், குரல் முதலியவைகளை வளர்ச்சியடையச்செய்து, விரைவாக கிழத் தன்மை நேரிடாமல் வாழ்நாளைக் கூட்டக் கூடியமருந்து; a medicines that could produce favourable changes in the process of nutrition. and repair thereby re-establishing healthy functions of the system such as those described above- *Alteratives*. 2. உடலை நரைதிரையின்றி நெடுநாளிருக்கச் செய்யும் (காயசித்தி) மருந்து (மூ.அ.); elixir of life medicine credited to have the property of prolonging life and preventing the coming of old age. 3. நஞ்சு(மூ.அ.); poison. 4. வேதியல்நூல்; chemistry. 5. இதளிய மருந்து (இரசவாத மருந்து); ambrosial drugs capable of transmuting baser metals into gold (சா.அக.).

**த.வ. வேதிமம்.**

*[**Skt.** rasāyana > த. இரசாயனம்.]*

**இரசாயனமுறிவு** *iraśāyaṉa-muṟivu,* பெ. (n.) பொருள்களிலுள்ள நச்சுத் தன்மையை இயற்பியல் (பௌதிகம்) முறையால் முறிக்கும் மருந்து; an antidote which neutralises the chemical nature of a poison so that it becomes insoluble and harmless - *Chemical antidote.*

**த.வ. வேதிமுறிவு.**

*[இரசாயனம் + முறிவு.]*

*[**Skt.** rasāyana > த. இரசாயனம்.]*

**இரசாயனமுறை** *iraśāyaṉa-muṟai,* பெ.(n.) வேதியல் போக்கு; the chemical method or process.

*[இரசாயனம் + முறை.]*

*[**Skt.** rasāyana > த. இரசாயனம்.]*

**இரசாயனவைரவம்** *iraśāyaṉa-vairavam,* பெ.(n.) மூர்ச்சைகளுக்குக் கொடுக்குமோர் மருந்து; a medicine prescribed by physician for restoring consciousness and reviving life in patients (சா.அக.).

*[இரசாயனம் + வைரவம்.]*

*[**Skt.** rasāyana > த. இரசாயனம்.]*

**இரசாயனன்** *iraśāyaṉaṉ,* பெ.(n.) 1. இதளியத்தைப் பொன்னாக்குவோன்; one who is capable of converting mercury into gold. 2. கலுழன் (கருடன்); brahminy kite (சா.அக.).

**த.வ. வேதிமன்.**

*[இரசாயனம் → இரசாயனன்.]*

**இரசாலவெலி** *iraśāla-v-eli,* பெ.(n.) ஒருவகை எலி; a kind of rat. *'இவ்வெலி கடிப்பதனால் மழைக் காலத்தில் நஞ்சு அதிகமாகி மனநிலைக் கெடும்' (சா.அக.).*

**இரசாலை** *iraśālai,* பெ.(n.) 1. அறுகு; harialli grass. 2. சருக்கரையும் மணப்பொருளும் கலந்த தயிர்; curds mixed with sugar and spices. 3. நா; tongue. 4. வெள்ளீறில் செடி; *veḷḷīṟil*, a kind of plant.

*[Skt. rasāla > த. இரசாலை.]*

**இரசானந்தன்** *irašāṉandaṉ,* பெ.(n.) இதளியம் (சூதம்); mercury.

**இரசி–த்தல்** *iraši-,* 4 செ.கு.வி.(v.i.) இனித்தல்; to be pleasant to the taste; to be agreeable to the ear, to the mind.

*[Skt. ras. > த. இரசி–த்தல்.]*

**இரசிகம்** *irašigam,* பெ.(n.) 1. குதிரை; horse. 2. யானை; elephant. 3. வெள்ளி; silver (சா.அக.).

**இரசிகர்மன்றம்** *irašigar-maṉṟam,* பெ.(n.) நடிப்புக்கலை நயந்தோர் அமைத்த ஆர்வலர் மன்றம்; an association formed by the fans of a film artist.

த.வ. ஆர்வலர் மன்றம்.

*[Skt. rasika + த. மன்றம்.]*

**இரசிகன்** *irašigaṉ,* பெ.(n.) 1. சுவையுணர்வோன்; man of taste; one who is able to appreciate excellence or beauty in anything. 2. சுவைஞன்; fan.

த.வ. ஆர்வலன்.

*[Skt. rasika > த. இரசிகன்.]*

**இரசிதகுரு** *irašida-kuru,* பெ.(n.) சட்டைமுனி 1000–ல் சொல்லியுள்ள வோர் இதள் மாற்றியம் (இரசவாதம்) பற்றிய மருந்து; an alchemical compound mentioned in the work of *Šattamuni* 1000 (சா.அக.).

**இரசிதசத்துரு** *irašida-šatturu,* பெ.(n.) ஒருவகைச் செய்நஞ்சு (கற்பரி பாடாணம்); a kind of native arsenic found on the beds of rocks (சா.அக.).

**இரசிதசிங்கி** *irašida-šiṅgi,* பெ.(n.) ஒருவகைச் செய்நஞ்சு (சிங்கி பாடாணம்); a kind of prepared arsenic (சா.அக.)

**இரசிதசிலை** *irašida-šilai,* பெ.(n.) வெள்ளிக் கல்; silver ore (சா.அக.).

*[இரசிதம் + சிலை.]*

*[Skt. rasita > த. இரசிதம்.]*

**இரசிதசுண்ணம்** *irašida-šuṇṇam,* பெ.(n.) வெள்ளிச்சுண்ணம்; a compound of silver carbonate prepared by Tamil Veidyans by a special process (சா.அக.).

*[இரசிதம் + சுண்ணம்.]*

*[Skt. rasita > த. இரசிதம்.]*

**இரசிதநிமிளை** *irašida-nimiḷai,* பெ.(n.) வெள்ளி நிமிளை; a veriety of hard mineral with silvery radiated crystals - *Iron pyrites* (சா.அக.).

*[Skt. rasita-nēmila > த. இரசிதநிமிளை.]*

**இரசிதபற்பம்** *irašida-paṟbam,* பெ.(n.) வெள்ளிப்பற்பம்; oxide of silver. 2. வெள்ளியைப் புடமிட்ட பற்பம்; calcined silver (சா. அக.).

*[இரசிதம் + பற்பம்.]*

*[Skt. rasita-bhasman > த. இரசிதபற்பம்.]*

**இரசிதபாடாணம்** *irašida-pāḍāṇam,* பெ.(n.) 1. வெள்ளிப்பாடாணம்; a poisonous compound of silver. 2. ஒரு வகை வைப்பு நஞ்சு; one of the 32 kinds of prepared poisons described in the Tamil Medicine.

*[Skt. rasita-pāṣāṇa > த. இரசிதபாடாணம்.]*

**இரசிதம்**[1] *irašidam,* பெ.(n.) 1. பொன்னின் பூச்சு; gilt. 2. ஒலி செய்வது; that which makes noise. 3. இடி முழக்கம்; thunder-clap.

*[Skt. rasita > த. இரசிதம்.]*

**இரசிதம்**[2] *irašidam,* பெ.(n.) 1. வெள்ளி; silver. 2. **இரசிதபாடாணம்** பார்க்க; see *irašida-pāḍāṇam.* 3. துத்தபாடாணம்; another variety of mineral poison. 4. நாகமணல்; zinc ore. 5. வெள்ளிமணல்; silver mixed with sand - *Silver ore.*

*[Skt. rajata > த. இரசிதம்.]*

**இரசிதமரணம்** *irašida-maraṇam,* பெ.(n.) **இரசிதபற்பம்** பார்க்க; see *irašida-paṟbam.*

**இரசிதமலை** *irašida-malai,* பெ.(n.) 1. வெள்ளி கிடைக்கும் மலை; mountain containing silver ore. 2. பனிமலை (வெள்ளியங்கரி); mount Kailas; *Meru mountain.*

*[இரசிதம் + மலை.]*

*[**Skt.** rajata > த. இரசிதம்.]*

**இரசிதமார்க்கம்** *irašida-mārkkam,* பெ.(n.) வெள்ளி செய்யும் வேதியல் (வாத) முறை; the alchemical process of making artificial silver (சா.அக.).

**த.வ. வேதிமுறை.**

*[இரசிதம் + மார்க்கம்.]*

*[**Skt.** rajata > த. இரசிதம்.]*

**இரசிதயேமம்** *irašida-y-ēmam,* பெ.(n.) வெள்ளியைப் பொன்னாக்கும் மருந்து; alchemical compound capable of transmuting silver into gold (சா.அக.).

*[இரசிதம் + ஏமம்.]*

**இரசிதவர்ணம்** *irašida-varṇam,* பெ.(n.) 1. **இரசிதசிங்கி** பார்க்க; see *irašida-šiṅgi.* 2. வெள்ளி நிறம்; silver colour (சா.அக.).

*[இரசிதம் + வர்ணம்.]*

*[**Skt.** rasita > த. இரசிதம்.]*

*த. வண்ணம் > **Skt.** varṇam.*

**இரசிப்பு** *iraśippu,* பெ.(n.) 1. இனிமை; sweetness. 2. சுவை; taste (சா.அக.).

**த.வ. உணர்த்தி.**

**இரசுவரோகம்** *irašuva-rōgam,* பெ.(n.) பித்தத்தினால் கண்களின் பார்வையை மறைத்துக் கண்ணொளியைக் குறைக்கும் ஒருவகைக் கண்ணோய்; an eye-disease marked by diminution of eyesight arising from aggravated or deranged condition of bile (சா.அக.).

**இரசேசுவரம்** *irašēšuvaram,* பெ.(n.) இதளியம் (பாதரசம்); the most valuable and useful of fluids - *Quick silver* (சா.அக.).

**இரசேந்திரகுரு** *irašēndira-kuru,* பெ.(n.) பொன்னாக்குதல் (இரசவாதம்) முறைப்படிப் பொன் செய்வதற்கு ஏதுவான ஒரு வகைக் குருமருந்து; a superior kind of medicine prepared from mercury and used for transmuting metals into gold (சா.அக.).

**இரசேந்திரம்**[1] *irašēndiram,* பெ.(n.) தரம் குறைந்த மாழைகளைப் பொன்னாக்கும் மருந்து (பரிசவேதி) (வின்.); philosopher's stone.

**த.வ. இதள்மாற்றி.**

*[**Skt.** rašēndra > த. இராசேந்திரம்.]*

**இரசேந்திரம்**[2] *irašēndiram,* பெ.(n.) இதளியம் (இரசம்); mercury (சா.அக.).

**இரசேந்திரன்** *irašēndiran,* பெ.(n.) **இரசேந்திரம்**[1] பார்க்க; see *irašendiram.*

**இரசேந்திரியம்** *irašēndiriyam,* பெ.(n.) சுவையை உணர்த்தும் நாக்கு (இந்திரியம்); the organ of taste - *Tongue.*

*[**Skt.** rasa+indriya > த. இரசேந்திரியம்.]*

**இரசை** *irašai,* பெ.(n.) 1. நிலம்; earth. 2. நா; tongue.

*[**Skt.** rašā > த. இரசை.]*

**இரசோகுணம்** *irašō-kuṇam,* பெ.(n.) மூன்று வகைக் குணத்துள் ஒன்று, மாந்திகம்; the quality of passion manifested in one's activity, zeal, courage, pride, etc., one of *mu-k-kuṇam.*

**த.வ. மாந்திகம், வெகுளி.**

*[**Skt.** rajas > த. இரசோ.]*

**மூன்று குணங்கள் :** தேவிகம் (சாத்துவீகம்), மாந்திகம் (இராசதம்), பேயிகம் (தாமதம்).

**இரசோபலம்** *irašō-palam,* பெ.(n.) முத்து; pearl (சா.அக.).

**இரஞ்சகம்** *irañjagam,* பெ.(n.) மகிழ்ச்சி தருவது; that which pleases or delights.

*[**Skt.** rañjaka > த. இரஞ்சகம்.]*

**இரஞ்சபித்தம்** *irañja-pittam,* பெ.(n.) உண்டவுணவைச் செரிக்கச் செய்து உடலை வளர்ப்பதற்காக இரைக் குடலுக்குள் வந்து சேரும் பித்தம்; the bile which is help up for same time inthe gall-bladder before moving into the intestines to aid the action of digestion - Cysticbile.

**இரஞ்சிகம்** *irañjigam,* பெ.(n.) 1. ஈரல், மண்ணீரல் முதலியவைகளில் தங்கியிருந்து பிறகு உணவுச்சாற்றில் (அன்னரசம்) கலந்து அரத்தம் உண்டாகக் காரணமாக இருக்கும் பித்தம்; the bile which remains in the liver and the spleen and imparts redness to the essential juice, which is turned into blood by the formation of blood carpuscles. 2. அன்பு; affection.

**இரஞ்சிதம்** *irañjidam,* பெ.(n.) 1. இன்பமானது; that which pleases. 2. சித்தரிக்கப்பட்டது; that which is painted or drawn in colours. *"பத்தி யோவியஞ் சேர்ந் திரஞ்சித மெனவும்" (வேதா. சூ. 43.).*

த.வ. இனிமை.

*[Skt. rañjita > த. இரஞ்சிதம்.]*

**இரட்சகன்**[1] *iraṭšagaṉ,* பெ.(n.) இயேசு; Jesus the saviour.

*[Skt. rakṣaka > த. இரட்சகன்.]*

**இரட்சகன்**[2] *iraṭšagaṉ,* பெ.(n.) 1. காப்போன்; protector, preserver, guardian. இறைவனை ஏதிலிகளின் (அனாதைகளின்) இரட்சகன் என்கிறோம். 2. உய்விப்போன்; saviour.

*[Skt. rakṣaka > த. இரட்சகன்.]*

**இரட்சசருமம்** *iraṭša-šarumam,* பெ.(n.) நோயாளிகளின் நோயைத்தீர்ப்பதற்காகப் பயன்படும் மந்திரம்; incantations resorted to for the cure and safety of a patient (சா.அக.).

**இரட்சணியசேனை** *iraṭšaṇiya-šēṉai,* பெ. (n.) கிறித்தவ சபையில் ஒரு பிரிவு; Salvation Army, a Christian religious and philanthropic organization, founded by William Booth in the 19th century.

*[Skt. rakṣaka + šēnā > த. இரட்சணிய சேனை.]*

**இரட்சணியம்** *iraṭšaṇiyam,* பெ. (n.) வீடுபேறு; salvation.

*[Skt. rakṣaṇya > த. இரட்சணியம்.]*

**இரட்சணை**[1] *iraṭšaṇai,* பெ.(n.) வீடுபேறு; salvation.

*[Skt. rakṣaṇā > த. இரட்சணை.]*

**இரட்சணை**[2] *iraṭcaṇai,* பெ.(n.) காப்பாற்றுகை (இரட்சிப்பு) (பாண்டி.); protection.

த.வ. காப்பு.

*[Skt. rakṣaṇā > த. இரட்சணை.]*

**இரட்சாணி** *iraṭšāṇi,* பெ.(n.) சாதிக்காய்; nutmeg (சா.அக.).

**இரட்சாபந்தனம்** *iraṭšā-pandaṉam,* பெ.(n.) காப்பு; an amulet; a charm (சா.அக.).

த.வ. காப்புக்கட்டு, காப்புக்கயிறு.

**இரட்சாபோகம்** *iraṭšā-pōgam,* பெ.(n.) காவல்வரி (T.A.S.H.O.P.3.); fees levied for protecting anything such as land.

*[Skt. rakṣā+bhōga > த. இரட்சாபோகம்.]*

**இரட்சாமூர்த்தி** *iraṭšā-mūrtti,* பெ.(n.) திருமால்; *Viṣṇu* as Protector. *'இரட்சா மூர்த்தியான ஆமை' (தக்கயாகப். 341, உரை).*

*[Skt. rakṣa-mūrti > த. இரட்சாமூர்த்தி.]*

**இரட்சி-த்தல்** *iraṭši-,* 4 செ.கு.வி.(v.i.) 1. துன்பம் முதலியவற்றிலிருந்து காப்பாற்றுதல்; to preserve, protect, guard, defend. 2. உய்வித்தல்; to save.

*[Skt. rakṣ > த. இரட்சி →இரட்சி-த்தல்.]*

**இரட்சிப்பு** *iraṭšippu,* பெ.(n.) 1. காப்பாற்றுகை; saving, preserving, protecting. 2. உய்வு; salvation.

*[Skt. rakṣ > த. இரட்சி →இரட்சிப்பு.]*

**இரட்சை** *iratšai,* பெ.(n.) 1. காப்பு; protection. *"ஏணத் தமிழிற் கிரட்சையாம்" (தைலவ. கடவுள். 3.).* 2. திருநீறு; sacred ashes. 3. காப்புக்கயிறு; string of protect.

*[Skt. raksā > த. இரட்சை.]*

**இரட்டர்** *irattar,* பெ.(n.) இராட்டிரகூட மன்னர்; Rāstrakūta kings. *"ஒண்டிற லிரட்ட மண்டலம்" (சோழவமி. பக். 91).*

*[Skt. rāstra-kūta >த. இரட்டர்.]*

**இரண்யகருப்பநீர்** *iranya-karuppanīr,* பெ.(n.) பானை நீர்; pot water (சா.அக.).

**இரண்யகருப்பம்** *iranya-karuppam,* பெ.(n.) நுட்பமான (சூக்கும) உடம்போடு கூடிய நிலை; chit united with the subtle body (சா.அக.).

**இரணக்கிரந்தி** *irana-k-kirandi,* பெ.(n.) வெள்ளை நோயினால் உண்டான புண் (கிரந்திபுண்); a sore arising from syphylitic causes.

*[Skt. vrana+granthi > த. இரணக்கிரந்தி.]*

**இரணக்குட்டம்** *irana-k-kuttam,* பெ.(n.) புண்களோடு கூடிய ஒருவகைப் பெருநோய்; a form of leprosy attended with ulcers gradually eating away the flesh and bones (சா.அக.).

*[இரணம் + குட்டம்.]*

*[Skt. vrana > த. இரணம்.]*

*த. குட்டம் > Skt. kušta.*

**இரணக்கொடி** *irana-k-kodi,* பெ.(n.) குய்யத்திற்கும் குதத்திற்கும் நடுவே புண்ணுடைய (விரணம்) பாகம்; the median line or area between the anus and the genital organs containing ulcers (சா.அக.).

*[இரணம் + கொடி.]*

*[Skt. vrana > த. இரணம்.]*

**இரணகளம்** *irana-kalam,* பெ. (n.) 1. போர்க்களம்; battlefield. 2. பெருங் குழப்பம்; row, uproar, fracas.

*[இரணம் + களம்.]*

*[Skt. vrana > த. இரணம்.]*

**இரணகன்** *iranagan,* பெ. (n.) நோய்களையும், காயங்களையும் கையினாலாவது, கருவிகளைக் கொண்டாவது, உடம்பின் உள்ளும் புறமும் மருத்துவம் (சிகிச்சை) செய்வோன்; a medical man whose profession or occupation is to treat disease or injuries of the body by manual operation or by medical appliances employed externally or internally, as distinguished from a physician-*Surgeon* (சா.அக.).

**த.வ. அறுவைப் பண்டுவன்.**

*[இரணம் → இரணகன்.]*

**இரணங்கொடு-த்தல்** *iranan-godu-,* 4 செ. குன்றாவி.(v.t.) அடித்தல்; to cause bruises, give pepper. *"மற்றோரிரணங் கொடுத்தாலிடுவர்" (நல்வ. 18).*

*[இரணம் + கொடு-த்தல்.]*

*[Skt. vrana > த. இரணம்.]*

**இரணசன்னி** *irana-šanni,* பெ.(n.) புண்களால் உண்டாகும் காய்ச்சல் நோய்; traumatic delirium.

*[Skt. vrana+san-ni->த. இரணசன்னி.]*

**இரணசிகிச்சை** *irana-šikiccai,* பெ.(n.) புண் மருத்துவம் (இரணவைத்தியம்); treatment of disease by manual and operative procedure; the operative branch of medical practice (சா.அக.).

**த.வ. அறுவை மருத்துவம்.**

*[Skt. vrana+cikitsā > த. இரணசிகிச்சை.]*

**இரணசுக்கிரன்** *irana-šukkiran,* பெ. (n.) 1. அழற்சியால் கருவிழியில் ஏற்படும் கண்ணோய்; an eye-disease affecting the black of the eye due to inflammation-*Iritis.* 2. கருமணியின் மீது கொப்புளங்கள் புறப்பட்டுப் புண்ணை உண்டாக்கும் ஒரு வகைக் கண்நோய்; ulceration of the iris of the eyes. 3. அடிப்பதனால் உண்டாகும் காயத்தாலும், வெள்ளை நோயாலும்

கருவிழியின் நிறம் மாறி உண்டாகும் புண்; discolouration and inflammation of the iris brought about by injury due to syphilis gonorrhoea etc. (சா.அக.).

*[Skt. vraṇa+šukra > த. இரணசுக்கிரன்.]*

**இரணசூரன்** *iraṇa-šūran,* பெ.(n.) படை வீரன்; hero in war, warrior.

த.வ. மறவன்.

*[Skt. raṇa+šūra > த. இரணசூரன்.]*

**இரணத்துருவம்** *iraṇa-t-turuvam,* பெ.(n.) கோள் (கிரகப்) புடத்திற் கழிக்கப்படுவது (வின்.); longitude of a planet required to be subtracted in astron. calculations.

*[Skt. ṛṇa + dhruva > த. இரணத்துருவம்.]*

**இரணத்தொடை** *iraṇa-t-toḍai,* பெ.(n.) முரண்டொடை (காரிகை, ஒழிபி. 5.); a kind of *toḍai,* poetry grammar.

*[இரணம் + தொடை.]*

*[Skt. raṇa > த. இரணம்.]*

**இரணதூபம்** *iraṇa-tūbam,* பெ.(n.) காயத்தில் (இரணம்) சீழ்பிடிக்காதவாரும், புழுக்கள் புழுக்காதபடிக்கும், வேறு வகையான குற்றங்கள் ஏற்படாதபடிக்கும் காட்டும் புகை(தூபம்); disinfecting fumes used in cases of wound to prevent suppuration and to destory the micro organisms-Fumigant (சா.அக.).

த.வ. காயப்புகை.

*[Skt. vraṇa+dhūpa > த. இரணதூபம்.]*

**இரணநாயகம்** *iraṇa-nāyagam,* பெ.(n.) புண்(இரணம்), காயம், கட்டி, கொப்புளம் முதலியவற்றைக் குணமாக்கும் மருந்துப்பூடு; any harbaceous plant capable of curing injuries, wounds, burns, boils etc. (சா.அக.).

*[இரணம் + நாயகம்.]*

**இரணபத்திரகாளி** iraṇa-pattira-kāḷi, பெ.(n.) கொற்றவை (துர்க்கை); Durgā, conferring victory in war.

த.வ. கடுஞ்சினக்கொற்றவை.

*[Skt. raṇa + bhadra + த. காளி > த. இரணபத்திரகாளி.]*

**இரணபாதகம்** *iraṇa-bādagam,* பெ.(n.) கடனைத் திருப்பிக் கொடுக்காமல் ஏய்ப்பு செய்கை (துரோகம்); unfaithfulness to creditors.

த.வ. ஏய்ப்பாளி.

*[Skt. ṛṇa+bādhaga > த. இரணபாதகம்.]*

**இரணபேரி** *iraṇa-pēri,* பெ.(n.) போர்ப்பறை; battle-drum.



*[Skt. raṇa+bhēri > த. இரணபேரி.]*

**இரணபேரிகை** *iraṇa-pērigai,* பெ.(n.) **இரணபேரி** பார்க்க; see *iraṇa-pēri.*

**இரணம்¹** *iraṇam,* பெ.(n.) கடன் (சூடா.); debt.

*[Skt. ṛṇa > த. இரணம்.]*

**இரணம்²** *iraṇam,* பெ.(n.) போர் (திவா.); war, battle, fight, conflict.

*[Skt. raṇa > த. இரணம்.]*

**இரணம்³** *iraṇam,* பெ.(n.) புண்; wound, sore, ulcer, cancer. *"உள்ளிலிரு பலமிட்டுப் பூசிரணம் போமால்" (தைலவ. தைல. 103.).*

*[Skt. vraṇa > த. இரணம்.]*

**இரணம்⁴** *iraṇam,* பெ.(n.) 1. பொன் (சூடா.); gold. 2. மாணிக்கம்; ruby. 3. பலகறை; cowry.

*[Skt. hiraṇa > த. இரணம்.]*

**இரணம்⁵** *iraṇam,* பெ.(n.) விந்துநீர் (சுக்கிலம்); semen.

*[Skt. hiraṇa > த. இரணம்.]*

**இரணம்⁶** *iraṇam,* பெ.(n.) உணவு; food (சா.அக.).

**இரணமத்தம்** *iraṇa-mattam,* பெ.(n.) யானை; elephant (சா.அக.).

*[இரணம்² + மத்தம்.]*

**இரணமேகம்** *iraṇa-mēgam,* பெ.(n.) வெள்ளை நோயால் உண்டாகும் சிரங்கு, புண், கொருக்கு முதலிய நோய்கள்; syphilitic sores such as chancre etc. due to veneral causes (சா.அக.).

*[Skt. vraṇa+mēha > த. இரணமேகம்.]*

**இரணரங்கம்** *iraṇaraṅgam,* பெ.(n.) போர்க்களம்; battle-field.

*[Skt. raṇa+raṅga > த. இரணரங்கம்.]*

**இரணவஞ்சம்** *iraṇa-vañjam,* பெ.(n.) மகிழ்ச்சியைத் தரும் நிலங்களுள் (போக பூமியுள்) ஒன்று; one of six blissful regions or *pōka-pūmi* where the fruits of the good deeds of former births are enjoyed.

*[Skt. hiraṇa+vamša > த. இரணவஞ்சம்.]*

**இரணவாதம்** *iraṇa-vādam,* பெ.(n.) நோய் வகை (கடம்ப. பு. இலீலா. 140.); a disease.

*[Skt. raṇa+vāta > த. இரணவாதம்.]*

**இரணவீரன்** *iraṇa-vīraṉ,* பெ.(n.) 1. போர் வீரன்; hero in war. 2. அங்காளம்மை கோயிலின் சுற்றுச் சுவர் தெய்வம் (பரிவார தேவதை); a demonhero represented by an image in *Aṅgāḷamman's* temple.

*[Skt. raṇa> த. இரணம்.]*

**இரணவைத்தியம்** *iraṇa-vaittiyam,* பெ.(n.) அறுவை மருத்துவம்; surgery.

*[Skt. vraṇa+vaidya > த. இரண வைத்தியம்.]*

**இரணவைத்தியன்** *iraṇa-vaittiyaṉ,* பெ.(n.) அறுவை மருத்துவர்; surgeon.

*[Skt. vraṇa+vaidya > த. இரணவைத்தியன்.]*

**இரணியகசிபு** *iraṇiya-kašipu,* பெ.(n.) திருமாலின் தோற்றரவுகளில் ஒன்றான அரிமா தலையும் மனித உடலும் கொண்ட ஆளரிமா (நரசிம்மம்) வால் கொல்லப்பட்ட ஓர் அசுரன்; name of an impious *Ašuraṉ* who was destroyed by *Viṣṇu* in His man-lion incarnation.

*[Skt. hiraṇya+kasipu> த. இரணியகசிபு.]*

**இரணியகர்ப்பதானம்** *iraṇiya-karppatāṉam,* பெ.(n.) பொற்குடத்தை யளிக்குந் தானம் (அபி.சிந்.); gift of gold pot, in religious ceremonies.

*[இரணியகர்ப்பம் + தானம்.]*

*[Skt. hiraṇya-garbha > த. இரணியகர்ப்பம்.]*

**இரணியகர்ப்பம்** *iraṇiya-karppam,* பெ.(n.) ஒரு வேள்வி; ceremony of passing through a golden cow, such as the one observed by the Maharaja of Travancore, which is believed to be equivalent to a second birth and so to bestow *Brāhman-hood* on a *Kṣatriya.*

*[Skt. hiraṇya+garbha > த. இரணியகர்ப்பம்.]*

**இரணியகர்ப்பமதம்** *iraṇiyakarppamadam,* பெ.(n.) நான்முகனே முதற்கடவுள் என்னும் மதம்; doctrine that Brahmā is the supreme God.

*[Skt. hiraṇya+garbha > த. இரணியகர்ப்பம்.]*

**இரணியகர்ப்பயாசி** *iraṇiya-karppa-yāši,* பெ.(n.) இரணியகர்ப்பயாகம் செய்தவன்; one who has performed the ceremony of passing through a golden cow.

*[Skt. hiraṇya + garbha + yāji > த. இரணியகர்ப்பயாசி].*

**இரணியகர்ப்பர்** *iraṇiya-karppar,* பெ.(n.) உயிர் மூச்சே ஆதன் என்னுஞ் சார்வாகருள் ஒரு சாரார் (விவேக சிந். பக். 17); the sect of the *Sārvākas* who hold that *ātman* is *pirāṇaṉ.*

*[Skt. hiraṇya-garbha > த. இரணியகர்ப்பர்.]*

**இரணியகர்ப்பன்** *iraṇiya-karppaṉ,* பெ.(n.) நான்முகன் (பிங்.); *Brahmā* who was born from the golden egg.

*[Skt. hiraṇya+garbha>த. இரணியகர்ப்பன்.]*

**இரணியசிராத்தம்** *iraṇiya-širāttam,* பெ.(n.) இறந்தோர் பொருட்டு பொன் கொடுத்து செய்யும் (சிராத்தம்) சடங்கு; ceremony in honour of a deceased ancestor in which the offering consists only of money.

*[Skt. hiraṇya + šrāddha>த. இரணிய சிராத்தம்.]*

**இரணியதானம்** *iraṇiya-tāṉam,* பெ.(n.) பொன் கொடை; distribution of gold.

*[இரணியம் + தானம்.]*

*[Skt. hiraṇya > த. இரணியம்.]*

**இரணியநேரம்** *iraṇiya-nēram,* பெ.(n.) அந்திநேரம்; evening.

*[இரணியம் + நேரம்.]*

**இரணியம்**[1] *iraṇiyam,* பெ.(n.) 1. பொன்; gold. *"இரணியவரைக்கண்" (கந்தபு. திருவி. 92.).* 2. பணம்; money.

*[Skt. hiraṇya > த. இரணியம்.]*

**இரணியம்**[2] *iraṇiyam,* பெ.(n.) **இரணம்**[5] (நாநார்த்த.) பார்க்க; see *iraṇam*[5].

*[Skt. hiraṇya > த. இரணியம்.]*

**இரணியவருடம்** *iraṇiya-varuḍam,* பெ.(n.) ஒன்பதாண்டுகளுள் ஒன்று; a division of earth; one of *nava-varuḍam.* *"சிருங்கமுதற் சுவேதமட்டும் நீதியிரணிய வருடம்" (கந்தபு. அண்டகோ. 36.).*

*[Skt. hiraṇya+varṣa > த. இரணியவருடம்.]*

**இரணியவேளை** *iraṇiya-vēḷai,* பெ.(n.) **இரணியநேரம்** பார்க்க; see *iraṇiya-nēram.*

*[இரணியம் + வேளை.]*

*[Skt. hiraṇya > த. இரணியம்.]*

**இரணியன்**[1] *iraṇiyaṉ,* பெ.(n.) 1. ஓர் அசுரன் (சீவக. 1813); name of an *Ašuraṉ.* 2. பன்னிரு கதிரவர்களில் (துவாத சாதித்தருள்) ஒருவன்; a sun-god, one of the *tuvāta-šātittar.*

*[Skt. hiraṇya > த. இரணியன்.]*

**இரணியன்**[2] *iraṇiyaṉ,* பெ.(n.) வியாழன் (சாதகசிந். 6); Jupiter.

*[Skt. hiraṇya > த. இரணியன்.]*

**இரணியாக்கதன்** *iraṇiyākkadaṉ,* பெ.(n.) இரணியகசிபுவோடு இரட்டையாகப் பிறந்தவன்; (அறப். சத. 98); the golden-eyed twin brother of *Hiraṇya-kašipu,* killed by *Viṣṇu* in His boar incarnation.

*[Skt. Hiraṇyākṣa > த. இரணியாக்கதன்.]*

**இரத்தக்கட்டி** *iratta-k-kaṭṭi,* பெ.(n.) **அரத்தக் கட்டி** பார்க்க; see *aratta-k-kaṭṭi.*

*[இரத்தம் + கட்டி.]*

**இரத்தக்கட்டு** *iratta-k-kaṭṭu,* பெ.(n.) **அரத்தக்கட்டு** பார்க்க; see *aratta-k-kaṭṭu.*

**இரத்தக்கண்ணன்** *iratta-k-kaṇṇaṉ,* பெ.(n.) **அரத்தக் கண்ணன்** பார்க்க; see *aratta-k-kaṇṇaṉ.*

**இரத்தக்கமலம்** *iratta-k-kamalam,* பெ.(n.) **அரத்தக்கமலம்** பார்க்க; see *aratta-k-kamalam.*

**இரத்தக்கலப்பு** *iratta-k-kalappu,* பெ.(n.) **அரத்தக்கலப்பு** பார்க்க; see *aratta-k-kalappu.*

**இரத்தக்கவிச்சு** *iratta-k-kaviccu,* பெ.(n.) **அரத்தக்கவிச்சு** பார்க்க; see *aratta-k-kaviccu.*

**இரத்தக்கழிச்சல்** *iratta-k-kaḻiccal,* பெ.(n.) **அரத்தக்கழிச்சல்** பார்க்க; see *aratta-k-kaḻiccal.*

**இரத்தக்கனப்பு** *iratta-k-kaṉappu,* பெ.(n.) **அரத்தக்கனப்பு** பார்க்க; see *aratta-k-kaṉappu.*

**இரத்தக்காசம்** *iratta-k-kāšam,* பெ.(n.) **அரத்தக்காசம்** பார்க்க; see *aratta-k-kāšam.*

**இரத்தக்காட்டேறி** *iratta-k-kāṭṭēṟi,* பெ.(n.) **அரத்தக்காட்டேறி** பார்க்க; see *aratta-k-kāṭṭēṟi.*

**இரத்தக்காணிக்கை** *iratta-k-kāṇikkai,* பெ.(n.) **அரத்தக்காணிக்கை** பார்க்க; see *aratta-k-kāṇikkai.*

**இரத்தக்கிட்டம்** *iratta-k-kiṭṭam,* பெ.(n.) **அரத்தக்கிட்டம்** பார்க்க; see *aratta-k-kiṭṭam.*

**இரத்தக்கிராணி** *iratta-k-kirāṇi,* பெ.(n.) **அரத்தக்கழிச்சல்** பார்க்க; see *aratta-k-kaḻiccal.*

**இரத்தக்குமுதம்** *iratta-k-kumudam,* பெ.(n.) **அரத்தக்குமுதம்** பார்க்க; see *aratta-k-kumudam.*

**இரத்தக்குழல்** *iratta-k-kuḻal,* பெ.(n.) **அரத்தக்குழல்** பார்க்க; see *aratta-k-kuḻal.*

**இரத்தக்குறைச்சல்** *iratta-k-kuṟaiccal,* பெ.(n.) **அரத்தக்குறைச்சல்** பார்க்க; see *aratta-k-kuṟaiccal.*

**இரத்தக்குறைவு** *iratta-k-kuṟaivu,* பெ.(n.) **அரத்தக்குறைவு** பார்க்க; see *aratta-k-kuṟaivu.*

**இரத்தக்குன்மம்** *iratta-k-kuṉmam,* பெ.(n.) **அரத்தக்குன்மம்** பார்க்க; see *aratta-k-kuṉmam.*

**இரத்தக்கைரவம்** *iratta-k-kairavam,* பெ.(n.) செவ்வாம்பல் (மூ.அ.); red indian water-lily.

*[த. அரத்தம் > வ. இரத்தம்.]*

**இரத்தக்கொதி** *iratta-k-kodi,* பெ.(n.) **அரத்தக்கொதி** பார்க்க; see *aratta-k-kodi.*

**இரத்தக்கொழுப்பு** *iratta-k-koḻuppu,* பெ.(n.) **அரத்தக்கொழுப்பு** பார்க்க; see *aratta-k-koḻuppu.*

**இரத்தக்கோமாரி** *iratta-k-kōmāri,* பெ.(n.) **அரத்தக்கோமாரி** பார்க்க; see *aratta-k-kōmāri.*

**இரத்தச்சந்தனம்** *iratta-c-candaṉam,* பெ.(n.) **அரத்தச்சந்தனம்** பார்க்க; see *aratta-c-candaṉam.*

**இரத்தச்சந்தியகம்** *iratta-c-candiyagam,* பெ.(n.) **அரத்தச்சந்தியகம்** பார்க்க; see *aratta-c-candiyagam.*

**இரத்தச்சம்பந்தம்** *iratta-c-cambandam,* பெ.(n.) **அரத்தக்கலப்பு** பார்க்க; see *aratta-k-kalappu.*

**இரத்தச்சாகம்** *iratta-c-cāgam,* பெ.(n.) செங்கீரை (மலை.); cockscomb greens.

**இரத்தச்சாட்சி** *iratta-c-cāṭci,* பெ.(n.) **அரத்தச்சாட்சி** பார்க்க; see *aratta-c-cāṭci.*

**இரத்தச்சாமுண்டி** *iratta-c-cāmuṇḍi,* பெ.(n.) கொற்றவையின் வேறு வடிவம்; a form of Durgai.

**இரத்தச்சாரம்** *iratta-c-cāram,* பெ.(n.) **அரத்தச்சாரம்** பார்க்க; see *aratta-c-cāram.*

**இரத்தச்சிலந்தி** *iratta-c-cilandi,* பெ.(n.) **அரத்தச்சிலந்தி** பார்க்க; see *aratta-c-cilandi.*

**இரத்தச்சுரப்பு** *iratta-c-curappu,* பெ.(n.) **அரத்தச்சுரப்பு** பார்க்க; see *aratta-c-curappu.*

**இரத்தச்சுருட்டை** *iratta-c-curuṭṭai,* பெ.(n.) **அரத்தச்சுருட்டை** பார்க்க; see *aratta-c-curuṭṭai.*

**இரத்தச்சூலை** *iratta-c-cūlai,* பெ.(n.) **அரத்தச்சூலை** பார்க்க; see *aratta-c-cūlai.*

**இரத்தச்சூறை** *iratta-c-cūṟai,* பெ.(n.) **அரத்தச்சூறை** பார்க்க; see *aratta-c-cūṟai.*

**இரத்ததிருட்டி** *iratta-tiruṭṭi,* பெ.(n.) சன்னி வகை (தஞ். சரசு, iii, 194.); a kind of delirium.

*[த. அரத்தம் > வ. இரத்தம்.]*

**இரத்தந்ததும்பு-தல்** *irattan-tatumbu-,* 5 செ.கு.வி. (v.i.) **அரத்தந்ததும்பு-தல்** பார்க்க; see *arattan-tatumbu-.*

**இரத்தநரம்பு** *iratta-narambu,* பெ.(n.) அரத்தநரம்பு பார்க்க; see *aratta-narambu.*

**இரத்தப்பலம்** *iratta-p-palam,* பெ.(n.) ஆல மரவகை (மலை.); banyan, so called from its bearing red fruit.

*[த. அரத்தம் > வ. இரத்தம்.]*

**இரத்தப்பழி** *irattappaḻi,* பெ.(n.) **அரத்தப்பழி** பார்க்க; see *aratta-p-paḻi.*

**இரத்தப்பிரமியம்** *iratta-p-piramiyam,* பெ.(n.) **அரத்தவெட்டை** (வின்.) பார்க்க; see *aratta-veṭṭai.*

**இரத்தப்பிரமேகம்** *iratta-p-piramēgam,* பெ.(n.) **அரத்தவெட்டை** பார்க்க; see *aratta-veṭṭai.*

**இரத்தப்பிரவாகம்** *iratta-p-piravāgam,* பெ.(n.) **அரத்தப்பெருக்கு** பார்க்க; see *aratta-p-perukku.*

**இரத்தப்பிரியன்** *iratta-p-piriyaṉ,* பெ.(n.) **அரத்தப்பிரியன்** பார்க்க; see *aratta-p-piriyaṉ.*

**இரத்தப்புடையன்** *iratta-p-puḍaiyaṉ,* பெ.(n.) **அரத்தப்புடையன்** பார்க்க; see *aratta-p-puḍaiyaṉ.*

**இரத்தப்பெருக்கு** *iratta-p-perukku,* பெ.(n.) **அரத்தப்பெருக்கு** பார்க்க; see *aratta-p-perukku.*

**இரத்தப்பந்தனம்** *iratta-p-pandaṉam,* பெ.(n.) **அர்த்தக்கலப்பு** (பாண்டி.) பார்க்க; see *aratta-k-kalappu.*

**இரத்தப்பலி** *iratta-p-pali,* பெ.(n.) **அரத்தப்பலி** பார்க்க; see *aratta-p-pali.*

**இரத்தப்பலை** *iratta-p-palai,* பெ.(n.) கோவைப் பழம் (சங். அக); fruit of common creeper of the hedges.

*[த. அரத்தம் → வ. இரத்தம்.]*

**இரத்தப்பாடாணம்** *iratta-pāḍāṇam,* பெ.(n.) வைப்புநஞ்சு வகை (மூ.அ.); a prepared arsenic.

*[த. அரத்தம் > வ. இரத்தம்.]*

**இரத்தப்பாரதம்** *iratta-p-pāradam,* பெ.(n.) சாதிலிங்கம் (மூ.அ.); cinnabar vermilion.

**இரத்தப்பிண்டம்** *iratta-p-piṇḍam,* பெ.(n.) **அரத்தப் பிண்டம்** பார்க்க; see *aratta-p-piṇḍam.*

**இரத்தப்பித்தம்** *iratta-p-pittam,* பெ.(n.) **அரத்தப்பித்தம்**[1] பார்க்க; see *aratta-p-pittam.*

**இரத்தப்பிந்து** *iratta-p-pindu,* பெ.(n.) **அரத்தப்பிந்து** பார்க்க; see *aratta-p-pindu.*

**இரத்தப்பீனசம்** *iratta-p-pīṉašam,* பெ.(n.) மூக்கிலிருந்து குருதியொழுகும் நோய் (இங். வை. 175); bleeding from nose.

*[த. அரத்தம் > வ. இரத்தம்.]*

**இரத்தப்பூடம்** *iratta-p-pūḍam,* பெ.(n.) **அரத்தப்பூடம்** பார்க்க; see *aratta-p-pūḍam.*

**இரத்தப்போளம்** *iratta-p-pōḷam,* பெ.(n.) **அரத்தப்போளம்** பார்க்க; see *aratta-p-pōḷam.*

**இரத்தம்**[1] *irattam,* பெ.(n.) **அரத்தம்** பார்க்க; see *arattam.*

**இரத்தம்**[2] *irattam,* பெ.(n.) தாமிரம் (நாநார்த்த); copper.

*[**Skt.** rakta > த. இரத்தம்.]*

**இரத்தமடக்கி** *irattam-aḍakki,* பெ.(n.) **அரத்தமடக்கி** பார்க்க; see *aratta-maḍakki.*

**இரத்தமண்டலம்** *iratta-maṇḍalam,* பெ.(n.) **அரத்தமண்டலம்** பார்க்க; see *aratta-maṇḍalam.*

**இரத்தமண்டலி** *iratta-maṇḍali,* பெ.(n.) அரத்தமண்டலி பார்க்க; see *aratta-maṇḍali.*

**இரத்தமாடன்** *iratta-māḍaṉ,* பெ.(n.) அரத்தமாடன் பார்க்க; see *aratta-māḍaṉ.*

**இரத்தமாரணம்** *iratta-māraṇam,* பெ.(n.) அரத்தமாரணம் பார்க்க; see *aratta-māraṇam.*

**இரத்தமானியம்** *iratta-māṉiyam,* பெ.(n.) அரத்தமானியம் பார்க்க; see *aratta-māṉiyam.*

**இரத்தமூத்திரம்** *iratta-mūttiram,* பெ.(n.) அரத்தமூத்திரம் பார்க்க; see *aratta-mūttiram.*

**இரத்தமூலம்** *iratta-mūlam,* பெ.(n.) அரத்தமூலம் பார்க்க; see *aratta-mūlam.*

**இரத்தமேகம்** *iratta-mēgam,* பெ.(n.) அரத்தவெட்டை பார்க்க; see *aratta-veṭṭai.*

**இரத்தவடி** *iratta-vaḍi,* பெ.(n.) அரத்தவடி பார்க்க; see *aratta-vaḍi*

**இரத்தவமனம்** *iratta-vamaṉam,* பெ.(n.) அரத்தவாந்தி பார்க்க; see *aratta-vāndi.*

**இரத்தவலிப்பு** *iratta-valippu,* பெ.(n.) அரத்தவலிப்பு பார்க்க; see *aratta-valippu.*

**இரத்தவழலை** *iratta-vaḻalai,* பெ.(n.) அரத்தவழலை பார்க்க; see *aratta-vaḻalai.*

**இரத்தவள்ளி** *iratta-vaḷḷi,* பெ.(n.) அரத்தவள்ளி பார்க்க; see *aratta-vaḷḷi.*

**இரத்தவாந்தி** *iratta-vāndi,* பெ.(n.) அரத்தவாந்தி பார்க்க; see *aratta-vāndi.*

**இரத்தவிந்து** *iratta-vindu,* பெ.(n.) அரத்தவிந்து பார்க்க; see *aratta-vindu.*

**இரத்தவிரியன்** *iratta-viriyaṉ,* பெ.(n.) அரத்தவிரியன் பார்க்க; see *aratta-viriyaṉ.*

**இரத்தவுதிரி** *iratta-v-udiri,* பெ.(n.) அரத்தவுதிரி பார்க்க; see *aratta-v-udiri.*

**இரத்தவெட்டை** *iratta-veṭṭai,* பெ.(n.) அரத்தவெட்டை பார்க்க; see *aratta-veṭṭai.*

**இரத்தவெறி** *iratta-veṟi,* பெ.(n.) அரத்தவெறி பார்க்க; see *aratta-veṟi.*

**இரத்தவோட்டம்** *iratta-vōṭṭam,* பெ.(n.) அரத்தவோட்டம் பார்க்க; see *aratta-v-ōṭṭam.*

**இரத்ததாகம்** *iratta-tāgam,* பெ.(n.) சிற்றாமணக்கு (தைலவ. தைல. 93.); castor plant.

**இரத்தாசயம்** *irattāšayam,* பெ.(n.) இதயம்; heart, one of *paññāšayam.*



**இரத்தாட்சி** *irattāṭši,* பெ.(n.) ஓர் ஆண்டின்பெயர்; name of the 58th year of the jupiter cycle.

**இரத்தாதிசாரம்** *irattātišāram,* பெ.(n.) அரத்தக்கழிச்சல் பார்க்க; see *aratta-k-kaḻiccal.*

**இரத்தாம்பரசாயம்** *irattāmbarašāyam,* பெ.(n.) சிவப்புவண்ணம்(பாண்டி); red dye.

**இரத்தாம்பரம்**[1] *irattāmbaram,* பெ.(n.) மரவகை (பாண்டி); a tree.

**இரத்தாம்பரம்**[2] *irattāmbaram,* பெ.(n.) செவ்வாடை; red clothes.

**இரத்தாளிக்கரும்பு** *irattāḷi-k-karumbu,* பெ.(n.) செங்கரும்புவகை; a species of sugarcane.

**இரத்தினகசிதம்** *irattiṉa-kašidam,* பெ.(n.) மணியிழைக்கப்பட்டது; that which is studded with gems.

[இரத்தினம் + கசிதம்.]

**இரத்தினகம்பளம்** *irattiṉa-kambaḷam,* பெ.(n.) ஓவிய வேலைப்பாடுகள் நிறைந்த வண்ணவிரிப்பு (மூ.அ.); carpet of variegnted colours

[இரத்தினம் + கம்பளம்.]

**இரத்தினச்சுருக்கம்[1]** *irattiṉa-c-curukkam,* பெ.(n.) மிகச் சுருக்கமான செய்தி; message in a very short form; abstract.

த.வ. மணிச்சுருக்கம்.

[இரத்தினம் + சுருக்கம்.]

**இரத்தினச்சுருக்கம்** *irattiṉa-c-curukkam,* பெ.(n.) 1. மகளிர் உறுப்புவமை முதலியவற்றைக் கூறும் ஒரு நூல்; name of a treatise giving smilies drawn from nature suitable to describe the feature of the fair sex, and other matters. 2. ஒரு மருத்துவ நூல்; name of a treatise on medicine.

[இரத்தினம் + சுருக்கம்.]

[Skt. *ratna* > த. இரத்தினம்.]

**இரத்தினசபை** *irattiṉa-šabai,* பெ.(n.) திருவாலங்காட்டிலுள்ள நடராசர் அவை; dancing hall of *Naḍarāja* in the shrine at *Tiru-v-ālaṅgāḍu* in the North Arcot District, so called from its being roofed with gems.

[இரத்தினம் + சபை.]

[Skt. *ratna* > த. இரத்தினம்.]

**இரத்தினசிரசு** *irattiṉa-širašu,* பெ.(n.) 393 உச்சிகளையும் 50 மேனிலைக் கட்டுக்களையுமுடைய கோயில் (சுக்கிரநீதி, 230); temple with 393 towers and 50 storeys.

[இரத்தினம் + சிரசு.]

[Skt. *ratna* > த. இரத்தினம்.]

**இரத்தினத்திரயம்** *irattiṉa-t-tirayam,* பெ.(n.) சமணரின் நல்லறிவு, நற்காட்சி, நல்லொழுக்கம் என்னும் மும்மணிக்கொள்கை; the three gems, Right faith, Right knowledge and Right conduct which sum up the beliefs and tenets of the Jaina cult. *"நன்ஞானம், நற்காட்சி, நல்லொழுக்கம்" (சீவக. 374, உரை).*

[Skt. *ratna+traya* > த. இரத்தினத்திரயம்.]

**இரத்தினதீவம்** *irattiṉa-dīvam,* பெ.(n.) இலங்கை (மணிமே. 11 : 21); ancient name of Srilanka.

த.வ. மணிபல்லவம்.

[இரத்தினம் + தீவம்.]

[Skt. *ratna* > த. இரத்தினம்.]

மணி பல்லவத்திற்கு அயலிலுள்ள ஒரு சிறு தீவு. இதில் புத்தருடைய பாதப்படிமை அமைக்கப்பட்ட ஒரு மலையுண்டு. இதுவே இலங்கை (மணிமேகலை).

**இரத்தினப்பிரத்தம்** *irattiṉa-p-pirattam,* பெ.(n.) பனிமலையின் (கைலாயத்தின்) தாழ்வரை (சி.சி. 1 : 52, மறைஞா.); name of the base of Mount *Kailāsa.*

[Skt. *ratna+pra-stha*> த. இரத்தினப் பிரத்தம்.]

**இரத்தினப்பிரபை** *irattiṉa-p-pirabai,* பெ.(n.) எழுவகை நிரயத்துள் (நரகத்துள்) ஒன்று (சீவக. 2817, உரை.); a hell strewnfully with sharp stones, one of *eḻu-naragam.*

[Skt. *ratna+pra-bhā*> த. இரத்தினப்பிரபை.]

**இரத்தினபரீட்சை** *irattiṉa-parīṭcai,* பெ.(n.) அறுபத்து நான்கு கலைகளுள் மணிகளின் இயல்பறியும் கலை; knowledge of precious stones, art of the connoisseur of gems, one of *aṟupattu-nālu-kalai.*

[Skt. *ratna+parīkṣā* > த. இரத்தினபரீட்சை.]

**இரத்தினம்[1]** *irattiṉam,* பெ.(n.) மணி; jewel, gem, a precious stone.

[Skt. *ratna* > த. இரத்தினம்.]

**இரத்தினம்[2]** *irattiṉam,* பெ.(n.) **அரத்தை** (சங்.அக) பார்க்க; see *arattai.*

**இரத்தினமாலை** *irattiṉa-mālai,* பெ.(n.) மணிவடம்; garland of gems.

த.வ. மணிமாலை.

*[இரத்தினம் + மாலை.]*

*[**Skt.** ratna > த. இரத்தினம்.]*

**இரத்தினாகரம்** *irattiṉākaram,* பெ.(n.) 1. மணிகள் நிறைந்த கடல்; ocean, as the repository of in numerable precious gems. 2. தனுட்கோடிக்கு வடக்கேயுள்ள கடல்; the popular name of that part of the Bay of Bengal north of *Dhanuṣkōḍi* near Rameswaram.

*[**Skt.** ratna+ā-kara > த. இரத்தினாகரம்.]*

**இரத்தினி** *irattiṉi,* பெ.(n.) 1. பிடிமுழம்; cubit measured with closed hand. 2. முன்கைப் பேரெலும்பு; ulna.

*[**Skt.** ratni > த. இரத்தினி.]*

**இரத்து**[1] *irattu,* பெ.(n.) சேனைக்குரிய உணவுப் பொருள் (வின்.); stores, provisions for army.

*[**Persn.** rasad> இரஸ்து > த. இரத்து.]*

**இரத்து**[2] *irattu,* பெ.(n.) வாழைவகை (வை.மூ.); a kind of plantain.

*[இரஸ்து → த. இரத்து.]*

**இரத்தை** *irattai,* பெ.(n.) மலைமகளின் (பாராசத்தியின்) நால்வகை வடிவுகளுள் ஒன்று (சைவச. பொது. 74, உரை.); a form of parā-sakti, one of four forms. 2. மஞ்சிட்டி; Indian madder.

*[**Skt.** raktā > த. இரத்தை.]*

சிவசத்தியின் நால்வகைப் பிரிவு : இரத்தை, சுக்கிலை, அசிதை, இருட்டிணை.

**இரத்தோற்பலம்** *irattōṟpalam,* பெ.(n.) **அரத்தோற்பலம்** பார்க்க; see *arattōr-palam.*

**இரதகம்** *iradagam,* பெ.(n.) இச்சி மரவகை (மலை.); jointed ovate-leaved fig.

**இரதகுளிகை** *irada-kuḷigai,* பெ.(n.) இதளிய மாத்திரை; mercury pill.

*[இரதம் + குளிகை.]*

*[**Skt.** rasa > த. இரதம்.]*

*இரசகுளிகை→இரதகுளிகை.*

**இரதசத்தமி** *irada-šattami,* பெ.(n.) கும்ப மாதத்தின் ஒளிப் பக்கத்து ஏழாம் நாள் (விநாயகபு. 75 : 13); the seventh day in the bright fortnight of *Māgam,* considered holy on account of its synchronisation, at some time in the past, with the day on which the sun turns northward, which circumstance now happens, however, only on the 22nd of December.

*[**Skt.** ratha+saptamī > த. இரதசத்தமி.]*

**இரதபதம்** *irada-padam,* பெ.(n.) புறா (அக.நி.); dove.

*[**Skt.** ratha+pada > த. இரதபதம்.]*



**இரதபந்தம்** *irada-pandam,* பெ.(n.) ஓவியப் பாடல் (சித்திர கவி) வகை (மாறன. 286.); variety of *šittira-kavi* which is fitted into a fanciful diagram representing a temple chariot.

*[**Skt.** ratha+bandha > த. இரதபந்தம்.]*

**இரதபரீட்சை** *irada-parīṭcai,* பெ.(n.) அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்றாகிய தேர் ஓட்டும் கலை (சாரத்தியம்); art of charioteering; one of *aṟupattu-nālu-kalai.*

*[**Skt.** ratha + parīkṣa > த. இரதபரீட்சை.]*

**இரதம்[1]** *iradam,* பெ.(n.) புணர்ச்சி (பிங்.); coition.

*[Skt. rata > த. இரதம்.]*

**இரதம்[2]** *iradam,* பெ.(n.) தேர் (திவா.); chariot, car.

*[Skt. ratha > த. இரதம்.]*



**இரதம்[3]** *iradam,* பெ.(n.) 1. சாறு; sap, juice. (தைலவ.தைல. 6.) 2. சோற்றுச்சாறு; essence of rice. 3. சுவை (பிங்); flavour, taste. 4. இனிமை; sweetness, agreeableness, pleasantness. *"இரதமுடையநடமாட்டுடையவர்" (திருக்கோ. 57.)* 5. வாயூறுநீர்(திவா.); saliva. 6. வண்டு (பிங்.);bee, so called because it tastes honey. 7. இதளியம்(பாதரசம்); mercury *"இரும்பெரிபொன் செயுமிரத நீர தொன்று" (சீவக. 1204.)* 8. இதளியலிங்கம் (சைவச. பொது. 81.); mercury Lingam. 9. கற்பனை; imagination. *"பரிசவிதை யிரதத்தி லெழுவதாம்" (ஞானவா. தாசு. 34.).* 10. பல்; tooth.

*[Skt. rasa > த. இரசம் → இரதம்.]*

**இரதம்[4]** *iradam,* பெ.(n.) அரைஞாண் (பிங்.); waist string, waist ornament.

**இரதம்[5]** *iradam,* பெ.(n.) மாமரம் (மூ.அ.); mango tree.

**இரதம்[6]** *iradam,* பெ.(n.) 1. கால்; leg. 2. உடல்; body. 3. வஞ்சிமரம்; *vañjitree.* 4. ஊர்தி; vehicle.

*[Skt. ratha > த. இரதம்.]*

**இரதம்[7]** *iradam,* பெ.(n.) எழுதுகை (நாநார்த்த); writing.

*[Skt. rada > த. இரதம்.]*

**இரதம்[8]** *iradam,* பெ.(n.) 1. அன்பு (அனுராகம்)(நாநார்த்த); disire, affection. 2. நீர்; water. 3. எழுவகை; (சத்த) தாதுக்களுளொன்று (சூடா.); chyle, a constituent element in the human body, one of *šatta-tātu.* 4. வலிமை (நாநார்த்த.); strength. 5. நஞ்சு(நாநார்த்த); poison.

*[Skt. rasa > த. இரதம்.]*

**இரதரேணு** *iradarēnu,* பெ.(n.) பரமாணு நான்கு கொண்ட நீட்டலளவை (சிற்பசாத். 18.); a measure of four atoms.

**இரதனம்** *iradaṉam,* பெ.(n.) அரைஞாண் (திவா.); waist string.

*[Skt. rašanā > த. இரசனம் → இரதனம்.]*

**இரதனை** *iradaṉai,* பெ.(n.) 1. அரத்தை; galangal. 2. நா; tongue.

**இரதாங்கம்** *iradāṅgam,* பெ.(n.) 1. தேர்க்கால்; chariot - wheel. 2. சக்கரவாகப்புள்; cakra bird.

*[Skt. rathānga > த. இரதாங்கம்.]*

**இரதாரூடன்** *iradārūḍaṉ,* பெ.(n.) தேரின் மேற்செல்வோன் (பயணிப்போன்) (வின்.); one riding on a chriot.

*[Skt. ratha + ā-rūḍha > த. இரதாரூடன்.]*

**இரதி[1]** *iradi,* பெ.(n.) 1. விருப்பம் (சீவக. 3076, உரை.); desire, longing. 2. புணர்ச்சி; coition. *"இரதி வேட்டையிற் பொருதனர்" (செவ்வந் திப்பு. தாயான. 11).* 3. காமனின் மனைவி (கந்தபு. மோன நீங்கு. 1.); name of Kama's wife.

*[Skt. rati > த. இரதி.]*

**இரதி[2]** *iradi,* பெ.(n.) பெண் யானை (சூடா.); female elephant.

*[Skt. radini > த. இரதி.]*

**இரதி³** *iradi,* பெ.(n.) பித்தளை (பிங்.); brass.

*[Skt. riti > த. இரதி.]*

**இரதி⁴-த்தல்** *iradi,* 4 செ.குன்றாவி. (v.t.) விரும்புதல்; to desire. *"வேளுமிரதியிரதியும்" (மாறன. 677.)*

*[Skt. radi > த. இரதி →இரதி-த்தல்.]*

**இரதி⁵-த்தல்** iradi-, 4 செ.கு.வி(v.i.) தித்தித்தல்; *to be sweet, mellifluous. "இரதித்த மொழியொடு" (அரிச்.பு.விவா. 282).*

*[Skt. rasa > த. இரதி.]*

**இரதிக்கிரீடை** *iradi-k-kirīḍai,* பெ.(n.) புணர்ச்சி; sexual intercourse.

*[Skt. rati+krīḍā > த. இரதிக்கிரீடை.]*

**இரதிகன்** *iradigaṉ,* பெ.(n.) 1. தேரோட்டி; charioteer. 2. தேர்க்குரியவன்; owner of a car.

*[Skt. rathika > த. இரதிகன்.]*



**இரதிகாதலன்** *iradi-kādalaṉ,* பெ.(n.) காமன், இரதியின் காதலன்; *Kāma,* husband of Radi.

*[இரதி + காதலன்.]*

*[Skt. rati > த. இரதி.]*

**இரதிகாந்தன்** *iradi-kāndaṉ,* பெ.(n.) **இரதி காதலன்** பார்க்க; see *iradi-kādalaṉ.*

**இரதிசம்** *iradiśam,* பெ.(n.) கொருக்கு நோய்; the primary lesion of syphilis - Chancere (சா. அக.)

**இரதிபதி** *iradi-padi,* பெ.(n.) **இரதிகாதலன்** பார்க்க; see *iradi-kādalaṉ.*

*[Skt. rati+pati > த. இரதிபதி.]*

**இரதிமந்திரம்** *iradi-mandiram,* பெ.(n.) பெண்குறி; the gentital of a female.

**இரதோற்சவம்** *iradōṟcavam,* பெ.(n.) தேர்த் திருவிழா; car festival when there is a grand and solemn procession of an idol mounted on a car which is drawn around the streets.

**த.வ. தேரோட்டம்.**

*[Skt. ratha+ut-sava> த. இரதோற்சவம்.]*

**இரந்திரம்¹** *irandiram,* பெ.(n.) 1. துளை; hole, opening slit. 2. வெளி (சி.சி. 2 : 66, சிவாக்); space. 3. பிறப்போரை (வின்.); zodiacal sign at the time of one's birth. 4. மறைபொருள்; cunning, weak point.

*[Skt. randhra > த. இரந்திரம்.]*

**இரந்திரம்²** *irandiram,* பெ.(n.) சுருங்கை (நாநார்த்த.); subterraneous passage.

*[Skt. randhra > த. இரந்திரம்]*

**இரம்மியம்** *irammiyam,* பெ.(n.) 1. மகிழ்ச்சி தருவது; that which is pleasant or lovely. 2. அழகியது; that which is beautiful. 3. விரும்பத்தக்கது; that which is lovable, desirable.

**த.வ. கவின்.**

*[Skt. ramya > த. இரம்மியம்.]*

**இரம்மி** *irammi,* பெ.(n.) சீட்டு விளையாட்டில் ஒரு வகை; a kind of play at cards.

**இரமணீயம்** *iramaṇīyam,* பெ.(n.) 1. இன்ப மூட்டுவது; that which is pleasant, delightful. 2. அழகுள்ளது; that, which is charming.

*[Skt. ramaṇīya > த. இரமணீயம்.]*

**இராமாப்பிரியம்** *iramā-p-piriyam,* பெ.(n.) தாமரை (மூ.அ.); lotus, the favourite flower of *Lakṣmi.*

*[Skt. ramā+priya > த. இராமாப்பிரியம்.]*

**இரமாபதி** *iramā-padi,* பெ.(n.) திருமால்; *Viṣṇu,* consort of *Lakṣmi.*

*[**Skt.** ramā+pati > த. இராமாபதி.]*

**இரமி[1]–த்தல்** *irami-,* 4 செ.கு.வி.(v.i.) மகிழ்ச்சியாய் இருத்தல்; to rejoice, feel delight.

*[**Skt.** ram > த. இரமி → இரமி–த்தல்.]*

**இரமி[2]–த்தல்** *irami-,* 4 செ.குன்றாவி. (v.t.) புணர்தல்; to copulate.

*[**Skt.** ram > த. இரமி–.]*

**இரமியம்** *iramiyam,* பெ.(n.) **இரமியவருடம்** பார்க்க; see *iramiya-varuḍam.* *"சுவேதநீல நெடுங்கிரியி னடுவ ணிரமிய மாம்" (கந்தபு. அண்டகோ.36).*

*[**Skt.** ramya > த. இரமியம்.]*

**இரமியவருடம்** *iramiya-varuḍam,* பெ.(n.) ஒன்பது ஆண்டுகளுக்கு ஒன்று; a division of the earth; one of *nava-varuḍam.*

*[**Skt.** ramya+varsa > த. இரமிய வருடம்]*

**இரமை** *iramai,* பெ.(n.) திருமகள் (இலக்குமி); Lakṣmi, the goddess of fortune.

*[**Skt.** ramā> த. இரமை.]*

**இரவுத்திரியம்** *iravuttiriyam,* பெ.(n.) சிவகுருவம் (சிவதீட்சை); Šaiva initiation. *"விளங்கு மிரவுத்திரிய முற்றுவித்து" (பிரமோத், 22 : 69).*

*[**Skt.** raudriya > த. இரவுத்திரியம்.]*

**இரவை** *iravai,* பெ.(n.) 1. நுட்பமான பொருள்; small particle, little thing. 2. கோதுமைக் குறுநொய்; coarsely ground wheat - flour. 3. துமுக்கியிலிடும் ஈயச்சன்னம்; shot. 4. வயிரம்; diamond.

**த.வ. குறுணை.**

*[**Skt.** lava > **Te.** rava > த. இரவை.]*

**இரவைசல்லா** *iravai-šallā,* பெ.(n.) மெல்லிய துணி; transparent muslin.

**த.வ. ஆவித்துணி.**

*[**Skt.** lava > **T.** rava + **Skt.** cēla > த. இரவைசல்லா.]*

**இராக்கதம்[1]** *irākkadam,* பெ.(n.) 1. தலை மகளை வலிதிற்கொள்ளும் திருமணம் (தொல். பொ.92, உரை); a form of marriage in which the bride is carried away by force without her consent or the permission of her relatives, a form of characteristic of *Rākṣaṣās,* one of *aṣṭa-vivāgam,* q.v. 2. இரவு 15 முழுத்தத்துள் ஆறாவது (விதான. குணா.73, உரை); the sixth of 15 divisions of the night.

**த.வ. பொருந்தா ஒழுக்கம், பெருந்திணை.**

*[**Skt.** rākṣasa > த. இராக்கதம்.]*

**இராக்கதம்[2]** *irākkadam,* பெ.(n.) 1. பத்துத் தாலங் கொண்ட ஒரு நீட்டலளவை (சுக்கிரநீதி, 232); a lineal measure of ten *tālam.* 2. உருத்திர உலகங்களுள் ஒன்று (சி.போ.2, 3, பக்.214); a mythical world of the Rudras.

*[**Skt.** rākṣasa > த. இராக்கதம்.]*

**இராக்கதன்** *irākkadaṉ,* பெ.(n.) அரக்கன் (திவ்.பெரியாழ்.4, 4, 8); giant, demon or goblin.

*[**Skt.**rākṣasa > த.இராக்கதன்.]*

**இராக்கதி[1]** *irākkadi,* பெ.(n.) அரக்கி (திவ். பெரியதி.10, 6, 9); giantess, female goblin.

*[**Skt.**rākṣasī > த. இராக்கதி.]*

**இராக்கதி[2]** *irākkadi,* பெ.(n.) சன்னக் கச்சோலம் (நாநார்த்த.); a kind of long zedoary.

*[**Skt.**rākṣasī > த. இராக்கதி.]*

**இராகவம்** *irāgavam,* பெ.(n.) திமிங்கிலத்தை விழுங்கவல்ல பெரிய மீன் (சுக்கிரநீதி, 146); a large fish capable of devouring *timiṅgilam.*

**இராகத்துக்கொன்றை** *irāgattu-k-koṉṟai,* பெ.(n.) கொன்றை வகை; a kind of cassia tree (சா.அக.).

*[இராகம் + அத்து (சாரியை) + கொன்றை.]*

*[**Skt.** rāga > த. இராகம்.]*

**இராகப்புள்** *irāga-p-puḷ,* பெ.(n.) கின்னரப் பறவை; a small migratory bird that sings at night (சா.அக.).

*[இராகம் + புள்.]*

*[**Skt.**raga >த. இராகம்.]*



**இராகம்** *irāgam,* பெ.(n.) 1. காமம்; passion. 2. சிவப்பு; redness. 3. நிறம்; colour tint. 4. இசை (பிங்.); music. 5. முப்பத்திரண்டு எண்ணிக்கையில் குறிப்பிட்ட பண் வகைகள்; (Mus.) specific melody-types of which those mentioned in standard works number 32, viz..., *மேகரஞ்சி, குறிஞ்சி, பூபாளம், கைசிகம், வராளி, மலகரி, பல்லதி, இந்தோளம், படமஞ்சரி, நாராயணி, நாட்டை, வசந்தம், பௌளி, ஸ்ரீராகம், பங்காளம், கூர்ச்சரி, கௌளி, காந்தாரி, காம்போதி, இலலிதை, தேவக்கிரியை, தேக்ஷஷரி, மாளவி, சாவேரி, தேசி, சாரங்கம், தோடி, இராமக் கிரியை, வேளாவளி, பைரவி, குண்டக் கிரியை, தன்னியாசி (பரத.இராக. 56).*

*[த. அராகம் > **Skt.** rāga> த. இராகம்.]*

*[அர்–ஓர் ஒலிக்குறிப்பு. அர் >அர >அரவு > அரவம் = ஒலி, ஓசை. அரவம்>அராவம்>அராகம் = ஒலிச் சிறப்புள்ள செய்யுளுறுப்பு அல்லது பண்.]*

**இராகமாலிகை** *irāga-māligai,* பெ.(n.) இசைப் பாட்டு வகை; song whose several parts are adapted to be sung in different melody types.

**த.வ. இசைப்பாட்டு.**

*[**Skt.** rāga+mālikā>த. இராகமாலிகை.]*

**இராகவன்** *irāgavaṉ,* பெ.(n.) இரகுவின் மரபில் வந்தவன், இராமன் (திவ்.பெருமாள். 8, 1); *Rāma*, a lineal descendant of *Raghu.*

*[**Skt.** rāghava>த. இராகவன்.]*

**இராகவிராகம்** *irāga-virāgam,* பெ.(n.) வேண்டுதல் வேண்டாமை; desire and aversion.

*[**Skt.** rāga+vi-rāga>த.இராகவிராகம்.]*

**இராகவி** *irāgavi,* பெ.(n.) பெரு நெருஞ்சில்; large thistle (சா.அக.).

*[**Skt.** ragavi> த.இராகவி.]*

**இராகவிண்ணாடகம்** *irāgaviṇṇāḍagam,* பெ.(n.) 1. கொன்றை; a kind of cassia tree. 2. சரக்கொன்றை; Indian laburnam (சா.அக.).

**இராகவேகம்** *irāga-vēgam,* பெ.(n.) ஆசை மிகுகை (பு.வெ.12, பெண், 5, உரை); increasing of desire.

**த.வ. வேணவா.**

*[இராகம் + வேகம்.]*

*[**Skt.** rāga > த. இராகம்.]*

**இராகாதனம்** *irāgādaṉam,* பெ.(n.) ஒக இருக்கை வகை; a kind of yogic posture. *"இராகாதனமாவது பிடரியிலேறிட்டகால் முன்தொங்கக் கையிரண்டும் முன்னேயூன்றி யிருக்கை" (தத்துவப்.108, உரை).*

*[**Skt.** rāga+āsaṉā > த. இராகாதனம்.]*

**இராகினி** *irāgiṉi,* பெ.(n.) வெற்றிலை (T.C.M. ii, 2, 429); betel leaf.

*[**Skt.** rākiṉi > த. இராகினி.]*

**இராகு** *irāgu,* பெ.(n.) நிழற்கோள், ஒன்பது கோள்களுள் ஒன்று; *rāhu*, the ascending node of the moon regarded as one of the nine planets, and believed to have the form of a monstrous serpent or dragon which, with *kētu*, the descending node, is supposed to seize the sun and the moon and thus cause the eclipses, caput draconis.

**த.வ. நிழற்கோள், அரா.**

*[**Skt.** rāhu > த. இராகு.]*

இராகுவை அரா என்றும் கேதுவை அரவு என்றும் குறிப்பிடலாம்.

**இராகுகாலம்** *irāgu-kālam,* பெ.(n.) நிழற் கோளுக்கு உரிய வேளை; a shifting period of 1 1/2 hours on everyday of the week, considered to be inauspicious, being the time under the influence of *rāhu.*

**த.வ. நிழற்கோள் நேரம், அராக்காலம்.**

*[இராகு + காலம்.]*

*[**Skt.** rāhu>த. இராகு.]*

**இராகுமண்டலம்** *irāgu-maṇḍalam,*பெ.(n.) நிலவுருண்டையின் நிழல்; shadow of the earth. *"மருவுபூமியின் சாயலா மிராகு மண்டலம்" (கூர்மபு. மண்டலவளவை.10).*

*[இராகு + மண்டலம்.]*

*[**Skt.** rāhu>த. இராகு.]*

**இராச்சியக்கலக்கம்** *irācciya-k-kalakkam,* பெ.(n.) வன்கொடுமை (அராசகம்); cataclysm; anarchy (புதுவை வ).

*[இராச்சிய(ம்) + கலக்கம்.]*

*[**Skt.** rajjiyam> த. இராச்சிய(ம்).]*

*[கலங்கு>கலக்கு>கலக்கம்.]*

**இராச்சியப்புரட்டு** *irācciya-p-puraṭṭu,* பெ.(n.) **இராச்சியக்கலக்கம்** பார்க்க; see *irācciya-k-kalakkam* (புதுவை, வ).

*[இராச்சியம் + புரட்டு.]*

*[**Skt.** rājjiya> த. இராச்சியம்.]*

**இராச்சியபரிபாலனம்** *irācciya-paribālaṉam,* பெ.(n.) அரசாட்சி; administration of a kingdom or state.

*[**Skt.** rājya+paribālaṉa > த. இராச்சிய பரிபாலனம்.]*

**இராச்சியபாரம்** *irācciya-bāram,* பெ.(n.) அரசாளும் பொறுப்பு; burden or responsibilities of government.

**த.வ. ஆட்சிச்சுமை.**

*[**Skt.** rājya+bhāra> த. இராச்சியபாரம்.]*

**இராச்சியம்** *irācciyam,* பெ.(n.) 1. அரசு; kingdom, state, realm. 2. உலகு; world. 3. ஆளுகை; rule, reign. chr. *"இராச்சியமு மாங்கொழிய" (திவ்.பெரியாழ். 4, 8, 4).*

*[**Skt.** rājya > த.இராச்சியம்.]*

**இராச்சியலட்சுமி** *irācciya-latcumi,* பெ.(n.) அரசுச் செல்வம்; sovereign power, personified as a goddess.

*[**Skt.** rājya+laksmi>த.இராச்சியலட்சுமி.]*

**இராச்சியவலங்கோலை** *irācciya-v-alaṅgōlai,* பெ.(n.) **இராச்சியக்கலக்கம்** பார்க்க; see *irācciya-k-kalakkam(புதுவை.வ.).*

*[இராச்சியம் + அலங்கோலை.]*

*[**Skt.** rājya >த.இராச்சியம்.]*

*அலங்கோலம் > த. அலங்கோலை.*

**இராசஇராசன்** *irāša-rāšaṉ,* பெ.(n.) 1. சோழப்பேரரசன் இராசராசன்; king of kings, chola emperor, paramount sovereign, a title given as a compliment. 2. துரியோதனன்; Duryodhana. 3. குவையன் (குபேரன்); Kubera, the god of wealth. 4. சோழ மன்னரின் பெயர்; name of the *Chōla* kings.

**த.வ. கோவேந்தன், மன்னர்மன்னன்.**

அருண்மொழிவருமண் பார்க்க; see *Aruṇmoḻi varuman*

*[**Skt.** rājan+rājan > த. இராசராசன்.]*

*அரசன்>**Skt.** rāja> த. இராச(ன்)*

**இராசக்கட்டி** *irāša-k-kaṭṭi,* பெ.(n.) பக்கப் பிளவை; carbuncle (சா.அக.).

த.வ. அரசப்பிளவை.

*[இராசன் + கட்டி.]*

**இராசக்கிருகம்** *irāša-k-kirugam,* பெ.(n.) அரண்மனை; royal palace.

*[Skt. rājan+grha> த. இராசக்கிருகம்.]*

**இராசகம்பீரன்** *irāša-kambīraṉ,* பெ.(n.) வீரராசேந்திர சோழனுடைய பட்டப் பெயர்களுள் ஒன்று; a title of *Vīra- rājēndra-cōlā. "இராசகம்பீரனை வாழ்த்தினவே" (தக்கயாகப். 774).*

*[Skt.rāja+gambhīra> த. இராசகம்பீரன்.]*

**இராசகரம்**[1] *irāšakaram,* பெ.(n.) அரசு (S.I.I. V, 512); government.

*[Skt. rāja-kara > த. இராசகரம்.]*

**இராசகரம்**[2] *irāša-karam,* பெ.(n.) ***இராசக் கிருகம்*** பார்க்க; see *rāsa-k-kirugam.*

*[Skt. rājan+graha > த. இராசகரம்.]*

**இராசகருவி** *irāša-karuvi,* பெ.(n.) நெஞ்சகம் முதலிய உடலுறுப்புகள்; the vital or principal organs such as the heart etc. (சா.அக.).

*[இராசன் + கருவி.]*

*[Skt. rājan>த. இராச(ன்).]*

*கரு > கருவி.*

**இராசகற்பனை** *irāša-kaṟpaṉai,* பெ.(n.) அரசன் கட்டளை; royal command, order of a king or other ruling power (w.).

*[Skt.rājan+kaṟpaṉā> த. இராசகற்பனை.]*

**இராசகன்னி** *irāša-kaṉṉi,* பெ.(n.) இளவரசி; king's daughter, princess.

*[இராசன் + கன்னி.]*

*[Skt. rājan>த. இராச(ன்).]*

*கன்>கன்னு > கன்னி.*

**இராசகனி** *irāša-kaṉi,* பெ.(n.) எலுமிச்சை; lime fruit (சா.அக.).

**இராசகாரியம்** *irāša-kāriyam,* பெ.(n.) 1. அரசியல்; king's duty, affairs of state. 2. அரசர்க்குச் செய்யும் ஊழியம்; service to the king. 3. உயர்ந்த செயல்; matters of great importance.

*[Skt.rājan+kāriyam>த. இராசகாரியம்.]*

**இராசகீயம்** *irāša-kīyam,* பெ.(n.) 1. அரசனுக் குரியது; matters pertaining to the king. 2. அரசியல்; politics.

*[Skt. rājakiya > த. இராசகீயம்.]*

**இராசகீரி** *irāša-kīri,* பெ.(n.) 1. வெள்ளைக் கீரிப்பிள்ளை; white mongoose. 2. கீரிப்பூடு; a kind of mongoose plant (சா.அக.).



**இராசகுஞ்சரம்** *irāša-kuñjaram,* பெ.(n.) 1. அரச யானை (அரசுவா); state elephant. 2. அரசர் தலைவன்; king of kings. *"ஏழுய ரிராசகுஞ்சரமேல்...... வந்தான்" (பாரத. இந்திரப்.6). "இராசகுஞ்சரம் பிறந்திடும்" (பாரத.சம்பவ.13).*

*[இராசன் + குஞ்சரம்.]*

*[Skt. rājan > த. இராசன்.]*

**இராசகுமாரன்** *irāša-kumāraṉ,* பெ.(n.) இளவரசன்; king's son, prince.

*[இராசன் + குமாரன்.]*

*[Skt. rājan > த. இராசன்.]*

*குமரன்>குமாரன்>Skt. kumāra.*

**இராசகுலம்** *irāša-kulam,* பெ.(n.) அரச குலம்; races of kings of ancient India, royal family.

*[இராசன் + குலம்.]*

*[**Skt.** rājan > த. இராசன்.]*

**இராசகுலவாழை** *irāšakulavāḻai,* பெ.(n.) செவ்வாழை; royal banana (சா.அக.).

**இராசகேசரி**[1] *irāša-kēsari,* பெ.(n.) சோழ மன்னர்களில் சிலர் ஏற்று வந்த பட்டப் பெயர் (கலிங்.178); a title assumed by certain *cōla* kings.

*[**Skt.** rājakēsari > த. இராசகேசரி.]*

**இராசகேசரி**[2] *irāša-kēsari,* பெ.(n.) சோழர் காலத்து அளவுக் கருவி; measure of capacity which was in use in the time of the *cōla* king *Rājarāja* I.

*[**Skt.** rājan+kēsari > த. இராசகேசரி.]*

**இராசகோபாலச்சக்கரச்சுழி** *irāša-gōpāla-c-cakkara-c-cuḻi,* பெ.(n.) பொன் நாணய வகை; gold coin issued by *Vijaya Rāghava,* a king of Tanjore.

*[இராசன் + கோபாலன் + சக்கரம் +சுழி.]*

*[**Skt.**rājan+gōpāla>த. இராசகோபாலன்.]*

**இராசகோலம்** *irāša-kōlam,* பெ.(n.) அரசனின் கொலு உடை; court dress of a king, royal robes.

*[இராசன் + கோலம்.]*

*[**Skt.** rājan > த. இராசன்.]*

**இராசகோழை** *irāša-kōḻai,* பெ.(n.) காச நோய் வகை; tuberculosis, pulmonary consumption (w.) (சா.அக.).

*[இராசன் + கோழை.]*

*[**Skt.** rājan > த. இராசன்.]*

**இராசசக்கரம்** *irāša-šakkaram,* பெ.(n.) அரசாணை (தக்கயாகப். 2, உரை); kings command.

*[இராசன் + சக்கரம்.]*

*[**Skt.** rājan > த. இராசன்.]*

**இராசசகுனம்** *irāša-šagunam,* பெ.(n.) ஒருவகை வல்லூறு; king's vulture (சா.அக.).



**இராசசபை** *irāša-šabai,* பெ.(n.) அரசவை; kings assembly, durbar.

**த.வ.** திருவோலக்கம், நாளவை, நாளோலக்கம்.

*[**Skt.** rāja > த. இராச.]*

*த.அவை→சபை>**Skt.** sabhā.*

**இராசசம்** *irāša-šam,* பெ.(n.) **இரசோகுணம்** பார்க்க; see *irasō-kuṇam.*

**இராசசம்பு** *irāša-šambu,* பெ.(n.) 1. சம்பு நாவல் அல்லது பெருநாவல்; large rose apple. 2. வெண்ணாவல்; jaumoon of white variety (சா.அக.).

**இராசசமுகம்** *irāša-šamugam,* பெ.(n.) அரசனின் முன்னிலை; king's presence.

*[**Skt.**rāja+sam-mukha>த.இராசசமுகம்.]*

**இராசசாரம்** *irāša-šāram,* பெ.(n.) மயில்; peacock (சா.அக.).



**இராசசிங்கம்** *irāša-šiṅgam,* பெ.(n.) அரசரேறு; illustrious monarch, a lion among kings.

*[Skt. rājan+simha > த. இராசசிங்கம்.]*

**இராசசின்னம்** *irāša-šiṉṉam,* பெ.(n.) அரசர் சின்னம்; insignia of royalty.

*[இராசன் + சின்னம்.]*

*[Skt. rājan > த. இராசன்.]*

**இராசசூயம்**[1] *irāša-šūyam,* பெ.(n.) 1. வெற்றி வேந்தனால் செய்யப்படும் ஒரு வேள்வி; sacrifice performed by a victorious monarch attended by his vanquished tributary princes. *"தரணிபனிராசசூய மாமகமுற்றி" (பாரத. சூது.2).* 2. தாமரை (மலை.); lotus.

*[Skt. rāja+šūya > த. இராசசூயம்.]*

**இராசசூயம்**[2] *irāša-šūyam,* பெ.(n.) 1. தாமரை; lotus. 2. மலை; mountain (சா.அக.).

**இராசசேகரன்** *irāša-šēkaraṉ,* பெ.(n.) அரசர் தலைவன்; chief of kings, paramount king.

*[Skt.rājan+šēkhara > த. இராசசேகரன்.]*

**இராசசேவை** *irāša-šēvai,* பெ.(n.) 1. அரசர்க்குச் செய்யும் பணி; royal service. 2. அரசனுக்கு மதிப்பளிக்கை; paying one's respects to a sovereign.

*[Skt. rājan+šēvā > த. இராசசேவை.]*

**இராசத்துரோகம்** *irāša-t-turōgam,* பெ.(n.) அரசுக்குச் செய்யும் இரண்டகம் (துரோகம்); treason, disloyalty.

*[Skt.rājan+dhurōga>த. இராசத்துரோகம்.]*

**இராசத்துவம்** *irāšattuvam,* பெ.(n.)அரசன் தன்மை; royalty, regal power or qualities, royal prerogative, kingship.

*[Skt. rājatva > த. இராசத்துவம்.]*

**இராசத்துவாரம்** *irāša-t-tuvāram,* பெ.(n.) 1. அரண்மனை வாசல்; palace gate. 2. அரசவை; royal court, durbar. *"இராசத்துவாரத்துக்கோர் மந்திரியாய்" (தனிப்பா.).*

*[Skt.rājan+tuvara>த. இராசத்துவாரம்.]*

**இராசத்தேள்** *irāšattēḷ,* பெ.(n.) நால்வகைத் தேள்களிலொன்றாகிய சிவப்புத் தேள்; one of the 4 kinds of scorpions; it is red in colour and is known as 'king scorpian' (சா.அக.).

*[இராசன் + தேள்.]*

*[Skt. rāja > த. இராசன்.]*

**இராசதண்டம்** *irāša-taṇḍam,* பெ.(n.) அரசத் தண்டனை; punishment inflicted by the king, state penalty. *"இராச தண்டத்துக்குட்பட்டு" (S.I.I.i. 84).*

*[இராசன் + தண்டம்.]*

*[Skt. rājan > த. இராசன்.]*

*தண்டுதல்>தண்டம்.*

**இராசதந்தம்** *irāša-tandam,* பெ.(n.) 1. முன் வாய்ப்பல்; royal tooth, applied to the two central canine teeth. 2. முன்வாய் மேற்பல்; the two upper canine teeth called the eye-teeth (சா.அக.).

*[Skt. rājan+danta > த. இராசதந்தம்.]*

**இராசதந்திரம்** *irāša-tandiram,* பெ.(n.) 1. அரசியல் உத்தி; state-craft, politics. 2. அரசியல் நூல்; science of government.

*[Skt.rājan+tandira>த. இராசதந்திரம்.]*

**இராசதபுராணம்** *irāšada-purāṇam,* பெ.(n.) நான்முகனைப் போற்றும் தொன்மங்களின் தொகுதி; group of the chief *Purāṇas* exalting Brahma in whom the predominating *guṇa* is rajas.

*[Skt.rājasa+purāṇa>த. இராசதபுராணம்.]*

இராசத புராணத்துள் உள்ள புராணங்கள்:– பிரமம், பிரமாண்டம், பிரமவைவர்த்தம், மார்க்கண்டேயம், பவிடியம், வாமனம்.

**இராசதம்** *irāšatam,* பெ.(n.) அரச பதவி; kingly state. *"ஏடே விராசதத்தினைப் பணித்ததும்" (திருப்பு.1132).*

*[Skt. rājatsa > த. இராசதம்.]*

**இராசதரு** *irāšataru,* பெ.(n.) குறாமரம்; bottle - flower (சா.அக.).

*[Skt. rājan+taru>த. இராசதரு.]*

**இராசதருமம்** *irāša-tarumam,* பெ.(n.) அரசன் அறநெறி; king's duties; rules or laws relating to a king's duties in respect of his government, etc.

த.வ. அரசநெறி.

*[Skt. rājan+dharma>த. இராசதருமம்.]*

**இராசதாலம்** *irāša-tālam,* பெ.(n.) கமுகு; areca-palm (சா.அக.).

த.வ. இராசதாலி.

**இராசதானம்** *irāša-tāṉam,* பெ.(n.) தலைநகர்; capital city.

*[Skt. rāja+sthāna > த. இராசதானம்.]*

**இராசதானி** *irāša-dāṉi,* பெ.(n.) 1. தலை நகரம்; metropolis, capital, seat of government. *"ஏகசக்ர மாப்புரக்கு மிராசதானி" (பணவிடு. 69).* 2. மாநிலம்; province. *சென்னை யிராசதானி (தற்.).*

*[Skt. rājan+dhāni > த. இராசதானி.]*

**இராசதானிப்பாலை** *irāšatāṉi-p-pālai,* பெ.(n.) கணுப்பாலை; Indian mimusops (சா.அக.).

**இராசதிருட்டி** *irāša-tiruṭṭi,* பெ.(n.) அரசன் கண்ணேறு; evil eye of a king or a person in power.

*[Skt. rājan+drṣṭi > த. இராசதிருட்டி.]*

**இராசநாகம்** *irāša-nāgam,* பெ.(n.) அரச நாகம், நாகப் பாம்பு வகை; cobra of the *kṣatrya* class, being large or superior of its kind (சா.அக.).

த.வ. அரசநாகம்.

*[இராசன் + நாகம்.]*

*[Skt. rājan+nāga > த. இராசநாகம்.]*

*[நகர்(தல்) > நாகம் > Skt. nāga.]*



**இராசநோக்கம்** *irāša-nōkkam,* பெ.(n.) 1. அரசனின் அருட் பார்வை; royal favour or clemency, graciousness. 2. அரசனின் எண்ணம், மனப்போக்கு; king's bent of mind, king's pleasure, disposition.

*[இராசன் + நோக்கம்.]*

*[Skt.rājan>த. இராசன்.]*

**இராசநோக்காடு** *irāša-nōkkāḍu,* பெ.(n.) இறுதியான மகப்பேற்றுத் துன்பம், பேற்று வலி; the final pains of child-birth, the most excruciating (சா.அக.).

*[இராசன் + நோக்காடு.]*

*[Skt.rājan>த. இராசன்.]*

**இராசப்பிரதிட்டையுள்ளோன்** *irāšappiratiṭṭai yuḷḷōṉ,* பெ.(n.) ஆமை; turtle (சா.அக.).

**இராசப்புறா** *irāša-p-puṟā,* பெ.(n.) ஒரு வகை உயர்தரமான புறா; imperial pigeon (சா.அக.).

**இராசபக்தி** *irāša-pakti,* பெ.(n.)அரசப்பற்று; loyalty to the king.

*[Skt. rājan+bhakthi > த. இராசபக்தி.]*

**இராசபஞ்சகம்** *irāša-pañjagam,* பெ.(n.) தீக்குறிகாட்டும் பஞ்சக வகை (Astrol.); an inauspicious period of time, considered

as portending harm from king or other public authority in respect of any function commenced during such period, one of *pañcagam.*

*[Skt.rājan+pañcaka > த. இராசபஞ்சகம்.]*

**இராசபத்திரம்** *irāša-pattiram,* பெ.(n.) அரசனுடைய ஆணை; royal edict.

*[Skt.rāja+patra>த. இராசபத்திரம்.]*

**இராசபத்தினி** *irāša-pattiṉi,* பெ.(n.) அரசி; king's consort, queen.

*[Skt. rājan+pattiṉi > த. இராசபத்தினி.]*

**இராசபதவி** *irāša-padavi,* பெ.(n.) அரச நிலை; rank of a king, kingship.

*[இராசன் + பதவி.]*

*[Skt. rājan>த இராச.]*

**இராசபரினி** *irāša-bariṉi,* பெ.(n.) பாலை; silvery-leaved ape flower (சா.அக.).

**இராசபலா** *irāša-palā,* பெ.(n.) 1. முதியோர் கூந்தல் என்னும் மூலிகை; king's tonic. 2. காய்ச்சலைக் குறைக்கும் சீனமூலிகை; stinking opal berry (சா.அக.).

*[இராசன் + பலா.]*

*[Skt. rājan > த. இராச.]*

**இராசபாட்டை** *irāša-pāṭṭai,* பெ.(n.) போக்குவரத்துக்கு உரிய பெருவழி; king's highway, public road.

*[இராசன் + பாட்டை.]*

*[Skt. rājan > த. இராசன்.]*

**இராசபாதை** *irasapātai,* பெ.(n.) பொதுச் சாலை; kings highway, public road.

*[இராசன் + பாதை.]*

*[Skt. rājan > த. இராசன்.]*

**இராசபாவம்** *irāša-bāvam,* பெ.(n.) அரசத் தன்மை (சிலப்.27, 53, அரும்.); kingliness.

*[Skt. rājan+bhāva > த. இராசபாவம்.]*

**இராசபிரதிநிதி** *irāša-piradinidi,* பெ.(n.) அரசப்பேராளர்; viceroy, the king's representative.

*[Skt.rājan+piradhinidhi>த.இராசபிரதிநிதி.]*

**இராசபிளவை** *irāša-piḷavai,* பெ.(n.) பெரிய நச்சுப்புண்;carbuncle, being a large boil; anthrax.

*[இராசன் + பிளவை.]*

*[Skt. rājan > த. இராசன்.]*

**இராசபுட்பி** *irāšapuṭpi,* பெ.(n.) ஒரு வகை வெள்ளரி; a kind of cucumber (சா.அக.).

**த.வ. கக்கரி.**

**இராசபுடல்** *irāsapuḍal,* பெ.(n.) ஒரு வகைப் புடல்; a kind of gourd with round seeds (சா.அக.).

*[இராசன் + புடல்.]*

*[Skt. rājan > த. இராசன்.]*

**இராசபுண்** *irāsapuṉ,* பெ.(n.) **இராசபிளவை** பார்க்க; see *irāšapiḷavai.*

**இராசபுத்தி** *irāsaputti,* பெ.(n.) சிறப்பான அறிவு; special wisdom, peculiar knowledge (வின்.).

*[இராச+புத்தி.]*

*[Skt. raja> த. இராச.]*

**இராசபுத்திரன்** *irāša-puttiraṉ,* பெ.(n.) இளவரசன்; king's son, prince.

*[இராச+புத்திரன்.]*

*[Skt. rājan> த. இராச.]*

**இராசபுத்திரி**[1] *irāsaputtiri,* பெ.(n.) இளவரசி; king's daughter, queen.

*[இராச+புத்திரி.]*

*[Skt. rājan> த. இராச.]*

**இராசபுத்திரி**[2] *irāsaputtiri,* பெ.(n.) 1. சிறு சண்பகம்; canbaga flower tree. 2. பேய்ச்சுரை; a bitter variety of gourd, bitter gourd (சா.அக.).

**இராசபுள்** *irāsapuḷ,* பெ.(n.) 1. எட்டுக்காற் பூச்சி; an insect with eight legs. 2. கருடன்; the king of birds.

*[இராசன் + புள்.]*

*[Skt. rājan > த. இராச.]*

**இராசபோகம்**[1] *irāša-bōgam,* பெ.(n.) அரசனுக்குரிய நுகர்ச்சியின்பம்; little enjoyment fit for a king, princely happiness.

த.வ. அரச நுகர்வு.

*[Skt. rājan+bhōga > த. இராசபோகம்.]*

**இராசபோகம்**[2] *irāša-bōgam,* பெ.(n.) அரசர்க்குரிய பாதுகாவல் வரி; (T.A.S. iv. 8); taxes levied for protecting property.

*[Skt. rajan+bogam > த. இராசபோகம்.]*

**இராசமகிசி** *irāša-magiši,* பெ.(n.) அரசி; queen.

*[Skt. rājan+mahiṣi > த. இராசமகிசி.]*

**இராசமடைப்பள்ளி** *irāša-maḍai-p-paḷḷi,* பெ.(n.) அரசர்க்குச் சமையல் செய்தோர் வழிவந்த ஒரு வகுப்பார்; sub-caste of *maṭai-p-paḷḷi* who derive their name from their ancestors having been cooks in royal households (J.).

*[இராசன் + மடைப்பள்ளி.]*

*[Skt. rājan > த. இராசன்.]*

**இராசமண்டலம்** *irāša-manḍalam,* பெ.(n.) அரசர்கள் அவை; assembly of kings. *"எங்கணு நெருங்கி வைகும் இராச மண்டலங்களோடும்" (பாரத. திரௌப.18).*

*[இராசன் + மண்டலம்.]*

*[Skt. rājan > த. இராசன்.]*

**இராசமண்டூரம்** *irāša-manḍūram,* பெ.(n.) முதன்மைத் தவளை; the chief of frogs (சா.அக.).

**இராசமணி** *irāšamaṇi,* பெ.(n.) நெல்வகை; a kind of paddy.

*[இராசன் + மணி.]*

*[Skt. rājan > த. இராசன்.]*

**இராசமாடம்** *irāša-māḍam,* பெ.(n.) பெரும் பயறு; a big variety of grain (சா.அக.).

**இராசமாநாகம்** *irāša-mā-nāgam,* பெ.(n.) கருவழலை; nocturnal ground-snake of the black variety, cobra of the *kṣatrya* class. *"இராசமாநாக மென்பார்" (சீவக. 1276).*

*[இராசன் + மாநாகம்.]*

*[Skt. rājan > த. இராசன்.]*

**இராசமாபுரம்** *irāša-mā-puram,* பெ.(n.) சீவகனின் தலைநகரம் (சீவக. 78, உரை); name of the capital city of king *Cīvagan.*

*[இராச(ன்)+மா+புரம்.]*

*[Skt. rājan > த. இராச.]*

**இராசமாமந்தம்** *irāša-mā-mandam,* பெ.(n.) ஒரு வகைப் பாம்பு (சீவக.1276, உரை); a kind of snake.

*[Skt. rājan+mā-mandam > த. இராசமா மந்தம்.]*

**இராசமார்க்கம்** *irāša-mārkkam,* பெ.(n.) இராசபாட்டை பார்க்க; see *irāša-pāṭṭai.*

*[Skt. rājan+mārga > த. இராசமார்க்கம்.]*

**இராசமானியம்** *irāša-māṉiyam,* பெ.(n.) அரசரால் விடப்பட்ட இறையிலி நிலம்; royal gift of land, rent free.

*[Skt. rājan+manya > த. இராசமானியம்.]*

**இராசமுடி** *irāša-muḍi,* பெ.(n.) 1. அரசமுடி, மகுடம்; royal crown. 2. சாயக் கொண்டை; artistic coiffare inclined to oneside, occasionally used as an adornment for the head of the images of deities in *Vaisṇava* as well as *Šaiva* temples.

*[இராசன் + முடி.]*

*[Skt. rājan > த. இராசன்.]*

**இராசமுத்திரை** *irāša-muttirai,* பெ.(n.) அரசச் சின்னம் (இலச்சினை); royal signet, government seal.



*[இராசன் + முத்திரை.]*

*[**Skt.** rājan > த. இராசன்.]*

*முகம் + திரை – முத்திரை.*

**இராசமோடி** *irāša-mōḍi,* பெ.(n.) அரச வீறு, மிடுக்கு; royal grandeur.

*[**Skt.** rajan+mōḍi > த. இராசமோடி.]*

**இராசயோகம்** *irāša-yōgam,* பெ.(n.) 1. ஒகச் சிறப்பு; configuration of planets at the birth of any man, indicating that he is destined to rise to a position of power and influence. 2. அரசரின் இன்ப நுகர்ச்சி; enjoyment of the luxury of kingship. 3. ஒக வேறுபாடு; easy way in *yōga*, as fit for princes to practise.

*[**Skt.** rājan+yōga > த. இராசயோகம்.]*

**இராசர்கவசரோப்பியம்** *irāšarkavaša rōppiyam,* பெ.(n.) வெள்ளெருக்கு; white madar.

**இராசராசதேவன்** *irāša-rāša-dēvan,* பெ.(n.) சோழ மன்னர் மூவரின் பெயர்; name of three *Chōla* kings in the 11th, 12th and 13th century respectively.

*[இராசராச+தேவன்.]*

*[**Skt.** rājan+rājan > த. இராச ராசனே.]*

**இராசராசேச்சுரம்** *irāša-rāšēccuram,* பெ.(n.) தஞ்சைப் பெரியகோயில்; name of the great *Šivan* temple in Tanjavūr, built by *Rājarājan* I. *"தஞ்சையிராச ராசேச்சுரத்து" (திருவிசை. கருவூர். தஞ்சை.1).*



*[**Skt.** rājan+rājēswaram> த. இராச ராசேச்சுரம்.]*

**இராசராசேச்சுவரி** *irāša-rāšēccuvari,* பெ.(n.) காளியின் பெயர்; a form of Durgai.

*[**Skt.** rājan+rājēswari> த. இராச ராசேச்சுவரி.]*

**இராசராசபலம்** *irāšarāšapalam,* பெ.(n.) வலம்புரிக்கொடி; twisted horn (சா.அக.).

**இராசராசேகரரசம்** *irāša-rāšēgararašam,* பெ.(n.) ஒரு வகை உயர்தரமான ஆயுர்வேத மருந்து; an excellent preparation in *ayurveda*.

**இராசரிகம்** *irāšarigam,* பெ.(n.) அரசாட்சி; government, rule, administration.

*[**Skt.** rājarigam > த. இராசரிகம்.]*

**இராசரிசி** *irāša-risi,* பெ.(n.) அரசகுல முனிவன்; royal sage, a *kṣatriya* of the ruling caste who was turned a sage.

**த.வ.** அரசமுனி.

*[**Skt.** rājan+ṛṣi > த. இராசரிசி.]*

**இராசலட்சணம்** *irāša-latcaṇam,* பெ.(n.) 1. அரசர்க்குரிய உடற்குறி; mark on a man's body indicating kingship. 2. அரசக்குறியீடு; royal insignia.

*[**Skt.**rājan+lakṣaṇa> த. இராசலட்சணம்.]*

**இராசரோகம்** *irāšarōgam,* பெ.(n.) எலும்புருக்கி நோய்; the king of disease; consumption (சா.அக.).

*[**Skt.**rājan+rōga> த. இராசரோகம்.]*

**இராசலம்** *irāsalam,* பெ.(n.) தாமரைப்பூ; lotus flower (சா.அக.).

**இராசவட்டம்** *irāša-vaṭṭam,* பெ.(n.) 1. அரசச் செய்திகள்; public matters, politics. 2. அரச மேன்மை; royal dignity. *நாளை வலிய வருவா ரவருக்கிராச வட்டமென்னடி" (மதுரகவி.).*

*[இராசன் + வட்டம்.]*

*[Skt. rājan > த. இராசன்.]*

*வள்>வட்டு>வட்டம்.*

**இராசவத்தனம்** *irāšavattanam,* பெ.(n.) மணி (வைடூரிய) வகை (யாழ்.அக.); a kind of precious stone.

*[Skt. rāja+vattana > த. இராசவத்தனம்.]*

**இராசவமிசம்** *irāša-vamišam,* பெ.(n.) அரச குலம்; royal family, dynasty.

*[Skt. rājan+vamša > த. இராசவமிசம்.]*

**இராசவர்க்கம்**[1] *irāša-varkkam,* பெ.(n.) 1. அரச குலம்; king's ancestry, lineage. 2. அரச குலத்தார்; king relatives.

*[Skt. rājan+varga > த. இராசவருக்கம்.]*

**இராசவர்க்கம்**[2] *irāšavarkkam,* பெ.(n.) வெண்மையும் கருப்புங் கலந்த நிறம்; a mixed colour of white and black (சா.அக.).

**இராசவர்ணம்** *irāša-varṇam,* பெ.(n.) பேய்ப்புடல்; a wild snake-gourd or devils gourd (சா.அக.).

*[Skt. rājan+varṇa>த. இராசவர்ணம்.]*

**இராசவர்த்திக்கல்** *irāsavarttikkal,* பெ.(n.) நடுவில் பொன்னிறமான புள்ளிகளை உடைய வயிரத்தைப் போன்ற கல்; one of the two inferior varietes of diamond with yellow speck, which is used as a substitude for pure diamonds (சா.அக.).

**இராசவரிசை** *irāša-varišai,* பெ.(n.) அரசர்க்கு செய்யும் சிறப்பு; royal honours.

**த.வ. கோமுறை.**

*[இராசன் + வரிசை.]*

*[Skt. rājan > த. இராசன்.]*

**இராசவல்லபன்** *irāša-vallaban,* பெ.(n.) அரசனிடத்துச் சாய்காலுள்ளவன்; one who has influence with the king.

*[Skt.rājan+vallabha >த. இராசவல்லபன்.]*

**இராசவல்லபை** *irāša-vallabai,* பெ.(n.) இலந்தைப் பழம்; jujube fruit (சா.அக.).

**இராசவல்லி** *irāšavalli,* பெ.(n.) ஒரு வகைக் கசப்புக் கொடிப் பாகல்; a creeper of bitter gourd (சா.அக.).

**இராசவள்ளிக்கிழங்கு** *irāšavaḷḷi-k-kiḻaṅgu,* பெ.(n.) ஒரு பருத்த சிவப்பு வள்ளிக் கிழங்கு; a large red species of yam (சா.அக.).

*[இராசன் + வள்ளி + கிழங்கு.]*

*[Skt. rājan > த. இராசன்.]*

**இராசவாகனம்**[1] *irāša-vāganam,* பெ.(n.) 1. அரசனின் ஊர்தி; royal conveyance or vehicle. 2. சிவிகை; palanquin.

**த.வ. கோவூர்தி.**

*[Skt.rājan+vāhana>த. இராசவாகனம்.]*



**இராசவாகனம்**[2] *irāšavāganam,* பெ.(n.) கோவேறு கழுதை; the off-spring of a horse and an ass - mule (சா.அக.).

**இராசவாதங்கி** *irāšavātaṅki,* பெ.(n.) கற்றாழை; aloe, *alce vera* (சா.அக.).

**இராசவாய்க்கால்** *irāša-vāykkāl,* பெ.(n.) தலைமையான நீர்க்கால்; main irrigation channel.

**த.வ. தலைவாய்க்கால்.**

*[இராசன் + வாய்க்கால்.]*

*[Skt. rājan > த. இராசன்.]*

**இராசவாழை**[1] *irāsa-vāḻai,* பெ.(n.) குலை யொன்றுக்கு 1000 காய்கள் காய்க்கும் வாழை வகை; a kind of plantain that yields 1000 fruits to a bunch.

**த.வ. பெருங்குலைவாழை.**

*[இராசன் + வாழை.]*

*[Skt. rājan > த. இராசன்.]*

**இராசவாழை**[2] *irāšavāḻai,* பெ.(n.) செவ்வாழை; royal banana (சா.அக.).

*[இராசன் + வாழை.]*

*[Skt. rājan > த. இராசன்.]*

**இராசவிகுரதம்** *irāšaviguradam,* பெ.(n.) கொன்றை; common cassia (சா.அக.).

**இராசவிசுவாசம்** *irāša-višuvāšam,*பெ.(n.) அரச நன்றியுடைமை; loyalty.

*[Skt.rajan+višvāsa>த. இராசவிசவாசம்.]*

**இராசவிரணம்** *irāša-viraṇam,* பெ.(n.) நடுமுதுகின் முள்ளந் தண்டின் மேற்பகுதியில், தாமரைக் காயைப் போல் வீங்கி, புரையோடி வலி மிகுதியுண்டாக்கும் கொப்புளம்; a painful dark-coloured tumour of the cellular tissue, ending in mortification of the part and the discharge of a fetid bloody pus (சா.அக.).

**த.வ. தண்டுப்பிளவை.**

*[Skt. rājan+vraṇa>த. இராசவிரணம்.]*

**இராசவிபாடன்** *irāsa-vibāḍaṉ,* பெ.(n.) விசய நகரத்தரசர் பட்டங்களுள் ஒன்று (S.I.I.iv, 96); a title of the Vijayanagar kings.

*[Skt. rājan+vi-pāṭa > த. இராசவிபாடன்.]*

**இராசவிருட்சம்** *irāša-viruṭcam,* பெ.(n.) கொன்றை (மலை.); cassia (சா.அக.).

*[Skt. rājan+vrkṣa>த. இராசவிருட்சம்.]*



**இராசவீதி** *irāša-vīdi,* பெ.(n.) அரசர் உலா வருதற்குரிய சாலை; king's high road; broad street of a capital city fit for royal processions.

**த.வ. திருவுலாச்சாலை.**

*[Skt. rājan+vīthi > த. இராசவீதி.]*

**இராசவுறுப்பு** *irāšavuṟuppu,* பெ.(n.) நெஞ்சாங்குலை முதலிய ஆற்றல் வாய்ந்த முதன்மை உறுப்புக்கள்; the vital or principal organs such as the heart etc. (சா.அக.).

*[இராசன் + உறுப்பு.]*

*[Skt. rājan > த. இராசன்.]*

*உறு > உறுப்பு.*

**இராசவைத்தியம்** *irāša-vaittiyam,* பெ.(n.) பத்தியமில்லாத மருத்துவம்; medical treatment which does not entail any loss of the usual personal comforts of a patient, a method of treatments appreciated by princes (சா.அக.).

**த.வ. வேந்து மருத்துவம்.**

*[Skt.rājan+vaidya>த.இராசவைத்தியம்.]*

**இராசன்**[1] *irāšaṉ,* பெ.(n.) 1. அரசன்; king. 2. மதி; moon. *"இராகு திசையில் வாழ்ந்தவனில்லை, இராச திசையில் கெட்டவனில்லை".* 3. தலைவன்; the greatest or the most superior.

**த.வ. அரசன்.**

*[Skt. rājan > த. இராசன்.]*

**இராசன்²** *irāšaṉ,* பெ.(n.) 1. வேந்தன் (இந்திரன்); Indra. 2. இயக்கன் (நாநார்த்த.); Yakṣa.

*[Skt. rājan > த. இராசன்.]*

**இராசனை** *irāšaṉai,* பெ.(n.) வெள்ளைப் பூண்டு (தைலவ. தைல. 45); garlic (சா.அக.).

*[Skt. rāsana > த. இராசனை.]*

**இராசா** *irāšā,* பெ.(n.) 1. அரசன்; king. 2. தெலுங்கர் வகுப்பினர்; name of a Telugu caste who, being *kṣatriyas,* style themselves *Rādzu.*

*[Skt. rāja > த. இராசா.]*

**இராசாக்கினை** *irāšākkiṉai,* பெ.(n.) 1. அரசன் கட்டளை; king's edict, royal decree. 2. அரச தண்டனை; penalty of law.

த.வ. அரசகட்டளை.

*[Skt. rājan+ājñā > த. இராசாக்கினை.]*

**இராசாகரங்காணிக்கை** *irāšākaraṅ-kāṇikkai,* பெ.(n.) வரிவகை; a tax.

*[இராசா + கரம் + காணிக்கை.]*

*[Skt. rājakaram > த. இராசாகரம்.]*

**இராசாகி** *irāšāgi,* பெ.(n.) இருதலைப் பாம்பு; a snake with head on either ends (சா.அக.).



**இராசாங்கநாடி** *irāšāṅga-nāḍi,* பெ.(n.) சூத முனி செய்த ஒரு தமிழ் நாடி நூல்; an easy guide on pulsation compiled by *Sootha muni* in Tamil (சா.அக.).

*[இராசாங்கம் + நாடி.]*

*[Skt. rājan-aṅga > த. இராசாங்கன்.]*

**இராசாங்கம்** *irāšāṅgam,* பெ.(n.) 1. படை, கூழ், குடி, அமைச்சு, நட்பு, அரண் (குறள், 381) என்னும் அரசின் ஆறு உறுப்புகள். அரசுக்குரிய உறுப்புகள்; requisites of legal administration, six in number. 2. அரசாட்சி; rule, government.

*[Skt. rājan+aṅga > த. இராசாங்கம்.]*

**இராசாத்தி** *irāšātti,* பெ.(n.) அரசி; queen.

*[Skt. rājathi > த. இராசாத்தி.]*

**இராசாததம்** *irāšādadam,* பெ.(n.) 1. முரளஞ் செடி; a plant (unidentified). 2. பழமுண்ணிப் பாலை; also a plant (unidentified) (சா.அக.).

**இராசாதனம்** *irāšādaṉam,* பெ.(n.) 1. முருக்க மரம்; palas tree. 2. முரள் என்னும் ஓடுடைய மீன்; a shell fish. 3. அரியணை; throne, royal seat. 4. கிங்கிணிப் பாலை என்னும் மூலிகை மரம்; a kind of tree.

*[Skt. rajadana > த.இராசாதனம்.]*

**இராசாதிகாரம்** *irāšādigāram,* பெ.(n.) அரசனுக்குரிய அதிகாரம்; royal power or authority.

*[இராசன்+அதிகாரம்.]*

*[Skt.rājan>த. இராசன்.]*

**இராசாதிராசன்** *irāšādi-rāšaṉ,* பெ.(n.) அரசர்க்கரசன்; king of kings, emperor.

த.வ. கோவேந்தன், மன்னர்மன்னன்.

*[Skt.rajan+adhi-rāja> த. இராசாதிராசன்.]*

**இராசாமந்திரி** *irāšā-mandiri,* பெ.(n.) ஒரு விளையாட்டு (G.tn.D 105); boy's game consisting in the mock trial of a thief by the king.

*[Skt. rājan+mantrin > த. இராசாமந்திரி.]*

**இராசாவர்த்தம்** *irāšāvarttam,* பெ.(n.) நடுவில் பொன்னிறமான புள்ளிகளை உடைய வயிரத்தைப் போன்ற கல்; one of the two inferier varieties of diamonds with yellow specks, which is used as a substitute for pure diamonds (சா.அக.).

**இராசாவேறுங்கழுதை** *irāšā-v-ēruṅ kaḻudai,* பெ.(n.) கோவேறு கழுதை; mule.

**இராசாளி**[1] *irāšāḷi,* பெ.(n.) 1. வல்லூறு; royal falcon, prized for hawking, the varieties being red, white, blue and black. 2. பறவை வகை; crestless hawk-eagle, dark above and white beneath. 3. வைரி; pergrine falcon. 4. கள்ளச் சாதியாருள் ஒரு பட்டப் பெயர்; a title among *Kallars* in the *Tanjāvūr* District.

*[ஒருகா. இராசன் + ஆளி.]*

*[Skt. rājan > த. இராசன்.]*

**இராசாளி**[2] *irāšāḷi,* பெ.(n.) வெண் புள்ளிகளை உடைய சிகப்புப் பருந்தினம்; royal alcon, with reddish, body and white spots about the head and the back of the neck (சா.அக.).



**இராசான்னம்**[1] *irāšāṉṉam,* பெ.(n.) மூக்குங் காலும் சிவந்து, உடம்பு வெண்மையாயுமுள்ள ஓர் உயர்வகை எகினப் பறவை; a superior breed of swan with red beak and legs and white body (சா.அக.).

**இராசான்னம்**[2] *irāšāṉṉam,* பெ.(n.) ஒரு உயர்ந்த வகை நெல் (பெரும்பாண்.305, உரை); a superior kind of paddy.

*[Skt. rājan+aṉṉa > த. இராசான்னம்.]*

**இராசி**[1] *irāši,* பெ.(n.) 1. வான் கணியத்தில் உள்ள 12 விண்மீன் கூட்டங்கள்; in astrology the sign of the zodiac, 12 in number. 2. கைவரி; magnetic power of healing naturally possessed by one (சா.அக.).

**இராசி**[2] *irāši,* பெ.(n.) வரிசை; row, line, range.

*[Skt. rāji > த. இராசி.]*

**இராசி**[3] *irāši,* பெ.(n.) 1. கூட்டம்; collection, flock, assemblage (w.). 2. குவியல்; heap (பிங்.). 3. மொத்தம்; total out-turn, aggregate (arith.). 4. பன்னிரு ஓரைகள்; signs of the zodiac, 12 in number (சூடா.). 5. ஆகூழ்; luck. 6. இனம்; kind; sort, as of grains. 7. இயல்பு; disposition. 8. பொருத்தம்; agreement, harmony.

த.வ. ஓரை.

*[Skt. rāši > த. இராசி.]*

**இராசி**[4] *irāši,* பெ.(n.) உடன்பாடு; amicable settlement between litigants; reconciliation.

*[U. rāzi > த. இராசி.]*

**இராசிக்கணக்கு** *irāši-k-kaṇakku,* பெ.(n.) கூட்டு வணிகத்தில் தனித்தனிக் கூட்டாளிக்கு ஊதியம் இழப்புக் கணக்கிடும் முறைகளுள் ஒன்று; a special method of calculating the share of profits or losses of each individual in a joint partnership account.

த.வ. கூட்டாண்மைக் கணக்கு.

*[இராசி + கணக்கு.]*

*[Skt. rāši > த. இராசி.]*

*[கள் > கண் > கணக்கு.]*

**இராசிக்காரன்** *irāśi-k-kāraṉ,* பெ.(n.) ஆகூழ்க்காரன்; fortunate person; lucky fellow.

*[இராசி + காரன்.]*

*[**Skt.** rāśi > த. இராசி.]*

**இராசிகம்** *irāśigam,* பெ.(n.) 1. நரம்பு வரி; the line of the nerves. 2. கரும்பு; sugarcane. 3. கேழ்வரகு; raggy (சா.அக.).

**இராசிகர்ச்சு** *irāśi-karccu,* பெ.(n.) புன்செய் அறுவடை உரிமை (G.Sm.D.ii, 49); perquistie in a dry-crop harvest.

*[**Skt.** rāśi+karccu > த. இராசிகர்ச்சு.]*

**இராசிகாரோகம்** *irāśikārōham,* பெ.(n.) வேனிற் காலத்தில் வெயிலின் புழுக்கத்தினால் வியர்வை மிகுதியாகக் காணுவதாலுண்டாகும் வியர்க்குரு; an acute inflammation of the sweat-glands, characterised by the formation of patches of small red papules and vesicles with intense itching and burning sensation (சா.அக.).

*[இராசி + காரோகம்.]*

**இராசிகுணாகாரம்** *irāśi-kuṇākāram,* பெ.(n.) கணியக்கணக்கு வகை (சோதிட. சிந்.228); (Astrol.) a mode of calculation.

**இராசிகை** *irāśigai,* பெ.(n.) 1. வயல்; field, land. 2. கைவரி (இரேகை); line, as in palm. 3. ஒழுங்கு; orderliness, order. 4. கேழ்வரகு; ragi.

*[**Skt.** rajikā > த. இராசிகை.]*

**இராசிசக்கரம்** *irāśi-cakkaram,* பெ.(n.) 1. ஓரை மண்டலம்; zodiac. 2. ஓரைகளை எழுதியடைத்த சக்கரம்; diagram showing planetary houses in the fixed siderial zodiac.

*[இராசி + சக்கரம்.]*

*[**Skt.** rāśi > த. இராசி.]*

*[சருக்கு > சருக்கரம் > சக்கரம்.]*

**இராசிதகம்** *irāśitakam,* பெ.(n.) கலுவம், மருந்தரைக்குங் கல்; an oval shaped shallow vessel made of hard granite stone in which drugs are beaten, crushed, pulveresed or ground with a pestle-stone- mortar (சா.அக.).



**இராசிதம்** *irāśitam,* பெ.(n.) செஞ்சந்தனம்; red sandel (சா.அக.).

**இராசிநாதன்** *irāśi-nādaṉ,* பெ.(n.) ஓரைக்கு அதிகாரியான கோள்மீன்; regent of a sign in the Zodiac.

*[**Skt.** rāśi+nātha > த. இராசிநாதன்.]*

**இராசிநாமா** *irāśi-nāmā,* பெ.(n.) 1. உடன்படிக்கை ஆவணம்; written deed of compromise, where by the parties to a case agree to adjust their differences, on certain terms. 2. வேலை விலகல் கடிதம்; letter of resignation of an office.

*[**U.** rāzi+u-nāmā > த. இராசிநாமா.]*

**இராசிப்பணம்** *irāśi-p-paṇam,* பெ.(n.) தனித்தனியாக எண்ணாமல் மொத்தமாக எண்ணும் பணம்; coin reckoned in quantity, by weight, the pieces not being separately counted.

**த.வ. எடைப்பணம்.**

*[இராசி + பணம்.]*

*[**Skt.** rāśi>த. இராசி.]*

**இராசிப்பிரிவு** *irāśi-p-pirivu,* பெ.(n.) கோள் (கிரகம்) ஓரையைக் (இராசியைக்) கடக்கை; passage of planet from one sign to another in the zodiac (w.)

*[இராசி + பிரிவு.]*

***[Skt.** rāśi>த. இராசி.]*

**இராசிப்பொருத்தம்** *irāśi-p-poruttam,* பெ.(n.) திருமணப் பொருத்தங்களுள் ஒன்று (சோதிட.சிந்.196); correspondence between the horoscopes of the prospective bride and the groom in respect of the zodiacal signs, one of ten *kaliyāṇa-p-poruttam.*

*[இராசி + பொருத்தம்.]*

***[Skt.** rāśi>த. இராசி.]*

**இராசிப்பொன்** *irāśi-p-poṉ,* பெ.(n.) கலப்பற்ற தூய்மையான பொன்; pure gold. *'ஒடுக்கின இராசிப்பொன்' (S.I.I.vi, 133).*

*[இராசி + பொன்.]*

***[Skt.** rāśi>த. இராசி.]*

**இராசிபுடம்** *irāśi-puḍam,* பெ.(n.) ஓரைகளில் கோள் (மீன்கள்) நிற்கும் நிலையைச் சரியாகப் பார்க்கை; clear calculation of the situation of the planets in zodiacal signs.

**த.வ. கோள்கணிப்பு.**

***[Skt.** rāśi+sphuṭa > த. இராசிபுடம்.]*

**இராசிமண்டலம்** *irāśi-maṇḍalam,* பெ.(n.) கோள்மீன்கள் செல்லும் பாதை; zodiac.

**த.வ. ஓரைமண்டலம்.**

*[இராசி + மண்டலம்.]*

***[Skt.** rāśi>த. இராசி.]*

**இராசியக்காரன்** *irāśiya-k-kāraṉ,* பெ.(n.) அலுவலகக் கணக்காளர் (இராயசக்காரன்) (சீதக்.123); writer.

*[இராசிய + காரன்.]*

***[Skt.** இராயசம் > த. இராசியம்.]*

*"காரன்" த. உடைமைப் பொருள்.*

**இராசியடி** *irāśi-y-aḍi,* பெ.(n.) 1. பொலியடித் தவசம் (தானியம்); first grain beaten out on the threshing-floor. 2. அளந்த பின் கிடக்கும் களநெல்; residue left on the treshing-floor after a heap of grain has been measured.

**த.வ. தலையடித்தவசம்.**

*[இராசி + அடி.]*

***[Skt.** rāśi > த. இராசி.]*

**இராசியத்தானம்** *irāśiya-t-tāṉam,* பெ.(n.) மறைவிடம்; secret place, place of concealment.

**த.வ. மறைவகம்.**

***[Skt.**rahasya+stāna>த. இராசியத்தானம்.]*

**இராசியதிபதிப்பொருத்தம்** *irāśi-y-adipati-p-poruttam,* பெ.(n.) திருமணப் பொருத்தங்கள் பத்தனுள் ஒன்று; correspondence between the horoscopes of the prospective bride and the groom in respect of the ruling planets of their respective birth-signs, one of ten *kaliyaṇa-p-poruttam.*

*[இராசி + அதிபதி + பொருத்தம்.]*

***[Skt.** rāśi+adhi+pati> த.இராசியதிபதி.]*

**இராசியம்**[1] *irāśiyam,* பெ.(n.) 1. மறைவு (சூடா.); secret, mystery, anything hidden. 2. பெண்குறி (சூடா.); pudendum muliebre.

***[Skt.**rahasya>த. இராசியம்.]*

**இராசியம்**[2] *iraciyam,* பெ.(n.) தாமரை (மூ.அ.); lotus.

***[Skt.** cf.rājiva > த. இராசியம்.]*

**இராசியத்தானம்** *irāśiyattāṉam,* பெ.(n.) **இராசியம்** பார்க்க; see *irāśiyam.*

**இராசியெழுத்து** *irāśi-y-eḻuttu,* பெ.(n.) குறியீட்டெழுத்து வகை (யாப்.வி.536); a kind of symbolic letter.

*[இராசி + எழுத்து.]*

***[Skt.** rāśi > த. இராசி.]*

**இராசில்** *irāšil,* பெ.(n.) மகிழம்பூ; pointed leaved Ape flower (சா.அக.).

**இராசிலம்[1]** *irāšilam,* பெ.(n.) சாரைப்பாம்பு (சூடா.); rat snake.

*[Skt. rājila > த. இராசிலம்.]*

**இராசிலம்[2]** *irāšilam,* பெ.(n.) நீர்ப்பாம்பு; water snake (சா.அக.).

**இராசிவக்கிரம்** *irāši-vakkiram,* பெ.(n.) ஓர் ஓரையில் உள்ள கோள் தான் முன்பு விட்டு வந்த ஓரைக்குச் செல்லுதல்; retrogression of a planet to the next sign.

*[Skt.rāši+vakra > த. இராசிவக்கிரம்.]*

**இராசிவங்கம்** *irāšivaṅgam,* பெ.(n.) வெள்ளீயம்; white lead tin (சா.அக.).

**இராசிவட்டம்** *irāši-vaṭṭam,* பெ.(n.) கோள்களின் பாதை; zodiac.

*[இராசி + வட்டம்.]*

*[Skt. rāši>த. இராசி.]*

**இராசினா** *irāšiṉā,* பெ.(n.) அரத்தை; a drug galangal.

**இராசீகம்** *irāšīgam,* பெ.(n.) அரசனால் வருவது; that which is caused by the king; act of state.

*[Skt. rājan > த. இராசீகம்.]*

**இராசீவம்[1]** *irāšīvam,* பெ.(n.) தாமரை (பிங்.); lotus.

*[Skt. rājīva > த. இராசீவம்.]*

**இராசீவம்[2]** *irāsīvam,* பெ.(n.) 1. வரைக் கெண்டை; carp. 2. மான் வகை; a kind of deer (நாநார்த்த.).

*[Skt. rajīva > த. இராசீவம்.]*

**இராசுனை** *irāsuṉai,* பெ.(n.) சிற்றரத்தை; lesser galangal.

**இராசேந்திரதேவன்** *irāšēndira-dēvaṉ,* பெ.(n.) சோழ மன்னர் சிலரின் பெயர்; name of three *Chōḻa* kings of the 11th, 12th and 13th century, respectively.

*[Skt. rājendra+dēva > த. இராசேந்திர தேவன்.]*

**இராசோத்துங்கன்** *irāšōttuṅgaṉ,* பெ.(n.) சிறந்த அரசன்; distinguished sovereign.

*[Skt.rājan>uttuṅga>த. இராசோத்துங்கன்.]*

**இராசோபசாரம்** *irāšōbacāram,* பெ.(n.) அரசனின் விருந்தோம்பல்; royal entertainment.

**த.வ. அரசோம்பல்.**

*[Skt.rājan+upa-šāra>த. இராசோபசாரம்.]*

**இராட்சச** *irāṭcaša,* பெ.(n.) ஓர் ஆண்டின் பெயர் (சோதிட.சிந்.); name of the forty - ninth year of the jupiter cycle.

*[Skt. rākṣasa > த. இராட்சச.]*

**இராட்சசசிகிச்சை** *irāṭcaša-šigicai,* பெ.(n.) காரச் சீலை, காரம் முதலியவற்றைக் கொண்டு செய்யும் ஒரு கொடிய மருத்துவ முறை; that branch of medicine which deals with the treatment of diseases wholly or in part with (சா.அக.).

**த.வ. வன்பண்டுவம்.**

**இராட்சசம்** *irāṭcašam,* பெ.(n.) **இராக்கதம்** பார்க்க; see *irākkadam.*

*[Skt.rāksasa>த. இராட்சசம்.]*

**இராட்சசன்** *irāṭcašaṉ,* பெ.(n.) அரக்கன்; giant, monster.

*[Skt. rāksasa > த. இராட்சசன்.]*

**இராட்சசி[1]** *irāṭcaši,* பெ.(n.) அரக்கி; female giant (சா.அக.).

*[Skt. rākṣasi > த. இராட்சசி.]*

**இராட்சசி²** *irātcaši,* பெ.(n.) 1. துளசி; holy basil. 2. சதுரக் கள்ளி; square spurge. 3. கற்றாழை; aloe (சா.அக.).



**இராட்சதகணசிகிச்சை** *irātcatakaṇa šihiccai,* பெ.(n.) **இராட்சசசிகிச்சை** பார்க்க; see *iraṭcaša-sihiccai* (சா.அக.).

*[இராட்சதம் + கணம் + சிகிச்சை.]*

**இராட்சதகணம்** *irātcada-kaṇam,* பெ.(n.) அரக்க குலத்தைச் சார்ந்த ஒன்பது நாள்மீன்கள் (விதான. கடிமண. 7, உரை); the nine nakatras belonging to the giant class dist. fr. *maṇiṭa-kaṇam* and *tēva-kaṇam* viz., ஆரல் (கார்த்திகை), கவ்வை (ஆயில்யம்), கொடுங்கம் (மகம்), நெய்ம்மீன் (சித்திரை), சுளகு (விசாகம்), தழல் (கேட்டை), குருகு (மூலம்), பறவை (அவிட்டம்), குன்று (சதயம்).

*[**Skt.** rākṣasa+> த. இராட்சசகணம்.]*

**இராட்சதவைத்தியம்** *irāṭcatavaittiyam,* பெ.(n.) அறுத்தல், காரம் வைத்தல், சூடு போடல் முதலிய முரட்டுத் தனமான மருத்துவம்; a crude and painful treatment as by operation blistering cauterisation etc., as distinguished by administration of drugs or other medicines (சா.அக.).

த.வ. வன்மருத்துவம்.

**இராட்டிரம்** *irāṭṭiram,* பெ.(n.) 1. நாடு; country. 2. நகரிலுள்ள மக்கள்; townsfolk, citizens. 3. தீநிகழ்வு; portent.

த.வ. பைதிரம்.

*[**Skt.** rāṣṭrā > த. இராட்டிரம்.]*

**இராட்டினவாழை** *irāṭṭiṉa-vāḻai,* பெ.(n.) கிளைகள் நெருங்க இருக்கும் ஒரு வகை வாழை மரம்; a plaintain tree, with branches having no intermediate blank spaces (சா.அக.).

*[இராட்டினம் + வாழை.]*



**இராட்டு** *irāṭṭu,* பெ.(n.) தேன் கூடு; honey-comb (சா.அக.).

**இராணம்** *irāṇam,* பெ.(n.) 1. இலை; leaf. 2. மயில் தோகை; pea-cocks feather (சா.அக.).

**இராணி** *irāṇi,* பெ.(n.) அரசி; queen, wife of a king.

*[**Skt.** rājñi > த. இராணி.]*

**இராணிவாசம்** *irāṇi-vāšam,* பெ.(n.) அரசியின் உவளகம் (அந்தப்புரம்); queen's apartments.

*[**Skt.** rājñi+vāsa > த. இராணிவாசம்.]*

**இராணுவம்** *irāṇuvam,* பெ.(n.) படை; army. *"தமிட்ட ராணுவம் பெருக்கி" (தனிப்பா.).*

த.வ. படைத்துறை.

*[**Skt.** raṇa > த. இராணுவம்.]*

**இராணுவமோடி** *irāṇuva-mōḍi,* பெ.(n.) அணிவகுப்பு; array of an army.

*[Skt. rāṇa+mōḍi > த. இராணுவமோடி.]*

**இராத்தல்** *irāttal,* பெ.(n.) 1. 40 உரூபாய் எடை; arabian pound = 40 tolas. 2. ஒரு யூத எடை (விவிலி. லூக்.19:13); a jewish measure of weight. 3. பதின்மூன்று பலஎடை; thirteen rupees (or 1 ib weight).

*[U.raṭl > த. இராத்தல்.]*

**இராத்தி** *irātti,* பெ.(n.) வெண்காரவுள்ளி; a kind of white pungent onion (சா.அக.).

**இராத்திரிவேதம்** *irāttiri-vētam,* பெ.(n.) சேவல் (சித்.அக.); cock (சா.அக.).

*[Skt. rātri-vēda > த. இராத்திரிவேதம்.]*

**இராதம்** *irādam,* பெ.(n.) கடைக்கொள்ளி (பிங்.); fire brand nearly burnt out.

*[Skt. rādhā > த. இராதம்.]*

**இராதா** *irādā,* பெ.(n.) எண்ணம்; design, intention.

*[U. irādā > த. இராதா.]*

**இராதாரி** *irātāri,* பெ.(n.) ஆயத் தீர்வைச் சீட்டு; customs permit.

*[Skt. rahatāri > த. இராதாரி.]*

**இராதினி** *irātiṉi,* பெ.(n.) 1. சல்லகி மரம்; a tree. 2. ஓர் ஆறு; a river. 3. வேந்தனின் வயிரப்படை; indra's thunderbolt. 4. மின்னல்; lightning. 5. இடி; thunder.

*[Skt. hrādinī > த. இராதினி.]*

**இராதை**[1] *irādai,* பெ.(n.) 1. பதினாறாவது விண்மீனாகிய சுளகு (விசாகம்); the 16th nakṣatra. 2. விட்டுணுக் கிராந்தி என்னும் மூலிகை; a medicinal plant. 3. நெல்லி; amblic myrobalan. 4. மின்னல்; lightning.

*[Skt. rādhā > த. இராதை.]*

**இராதை**[2] *irādai,* பெ.(n.) 1. கண்ணன் காதலித்த ஆயர்குலப் பெண்களுள் ஒருத்தி; a celebrated *gōpi* or herdswoman loved by Sri *kṛṣṇa.* 2. கன்னனின் (கர்ணனின்) செவிலித்தாய்; foster mother of *karṇā.*

*[Skt. rādhā > த. இராதை.]*

**இராமக்கரும்பு** *irāmakkarumbu,* பெ.(n.) 1. வெள்ளையும் சிவப்புக் கோடுங் கலந்த கரும்பு; sugarcane with white and red stripe. 2. பேய்க் கரும்பு; a wild not useless sugarcane (சா.அக.).

*[இராமம் + கரும்பு.]*



**இராமக்கிரி** *irāma-k-kiri,* பெ.(n.) குறிஞ்சிப் பண் வகை (பிங்.); a primary melody-type of the *kuriñci* class.

*[Skt. rāma-kiri > த. இராமக்கிரி.]*

**இராமக்குமிட்டி** *irāma-k-kumiṭṭi,* பெ.(n.) பேய்க் கொம்மட்டி; bitter apples (சா.அக.).

*[இராமம் + குமிட்டி.]*

**இராமக்குறண்டி** *irāma-k-kuraṇḍi,* பெ.(n.) முட் குறண்டி; a throny shrub grown in barren island (சா.அக.).

*[இராமம்+ குறண்டி.]*

**இராமக்கோவை** *irāma-k-kōvai,* பெ.(n.) கற்கோவை; rama's caper.

*[Skt. rāma+kōvai > த. இராமக்கோவை.]*

**இராமகலி** *iramakali,* பெ.(n.) பண் வகை (பரத. ராக.103); (Mus.) a specific melody - type.

*[இராமம்+ கலி.]*

*[Skt. rama > த. இராம.]*

**இராமசந்திரன்** *irāma-candiraṉ,* பெ.(n.) இராமபிரான் (திருப்பு. 174); *Śrī Rāma*, the benignant.

*[Skt. rāmā+candira > த. இராமசந்திரன்.]*

**இராமசித்தா** *irāma-śittā,* பெ.(n.) பழ மரவகை; bullock's heart - *Anona reticulata.*

த.வ. பறங்கிச் சக்கை.

*[Skt. rāma+sitā > த. இராமசித்தா.]*

**இராமசேது** *irāma-śēdu,* பெ.(n.) இராமரணை ஆதம் பாலம் என்று சொல்லப்படுவதும், இராமன் இலங்கை செல்லும் போது கடந்து சென்றதாகக் கருதப்படுவதும், மன்னார் வளைகுடாவிற்கும் பாக் (ஜல) நீர்ச் சந்திக்கும் இடைப்பட்ட இடத்தில் காணலாகும் மண்ணாலும் பவழப் பாறைகளாலும் ஆன நீர்மட்டத்திற்கு அடியில் இருக்கும் மணல் திட்டு; popular name of the bridge of coral rocks between the gulf of mannar and the palk's straits, now known as Adam's bridge, so called because it is believed to be the bridge by which Rama crossed the sea to Ceylon.

*[Skt. rāma+sēdhu > த. இராமசேது.]*

**இராமடங்கா** *irāmaḍaṅgā,* பெ.(n.) ஒரு வகைப் பொற்காசு; an ancient gold coin.

*[Skt. rāma+taṅka > த. இராமடங்கா.]*

**இராமடம்** *irāmaḍam,* பெ.(n.) பெருங்காயம் (மூ.அ.); asafoetida.

*[Skt. rāmaṭha > த. இராமடம்.]*

**இராமடை** *irāmaḍai,* பெ.(n.) பெருங்காயம்; asafoetida (சா.அக.).

**இராமதாசன்** *irāmadāśaṉ,* பெ.(n.) கடற் காக்கை; sea crow.

**இராமதாபனி** *irāma-tābaṉi,* பெ.(n.) நூற்றெட்டு மறை முடிபுகளுள் ஒன்று; name of an upanisad.

*[Skt. rāma-tāpanī > த. இராமதாபனி.]*

**இராமதூதன்** *irāma-tūdaṉ,* பெ.(n.) அனுமான்; Hanuman, the messenger of Rama.

*[Skt. rāma+dūta > த. இராமதூதன்.]*

**இராமநாடகம்** *irāma-nāḍagam,* பெ.(n.) அருணாசலக்கவிராயர், புகழ்ப் பாவடிவில் (கீர்த்தனைகளாக) இயற்றிய இராமாயண நூல்; a work narrating the story of the Ramayana in songs interpersed with verses by *Aruṇācala-k-kavirāyar,* dated A.D. 1772.

*[இராமம் + நாடகம்.]*

*[Skt.rāma>த. இராமம்.]*

**இராமநாதன்** *irāma-nādaṉ,* பெ.(n.) இராமனால் வழிபடப்பட்ட இராமேச்சுரத்துச் சிவன் (சேதுபு.); *Śiva-liṅga* in *Rāmēśwaram,* which is reputed to have been installed by *Śrī Rāma.*

*[Skt. rāma+nātha > த. இராமநாதன்.]*

**இராமப்பிரியம்** *irāma-p-piriyam,* பெ.(n.) தாமரை (வை.மூ.); lotus.

*[Skt. rāma+priya > த. இராமப்பிரியம்.]*

**இராமப்பிரியா** *irāma-p-piriyā,* பெ.(n.) ஒருவகைப் பண்; a specific melody-type (mus.).

*[Skt. rāma+priyā > த. இராமப்பிரியா.]*

**இராமபாணம்** *irāma-bāṇam,* பெ.(n.) 1. இராமனின் அம்பு; *Rāma's* arrow. 2. ஏடுகளைத் துளைத்துக் கெடுக்கும் பூச்சி; a worm which eats through the palmyra leaves of m.s. books. 3. பாச்சை வகை; silver fish, a household pest, lepisma domestica. 4. மல்லிகை வகை; variety of jasmine. 5. ஒரு வகை மருந்து; a medicinal preparation (w.). 6. மாலியர்களின் நெற்றிக் குறியான திருமண்; sacred earth used by Vaishnavas in marking their foreheads.

*[Skt. Rāma+bāṇa > த. இராமபாணம்.]*

**இராமம்**[1] *irāmam,* பெ.(n.) 1. வெண்மான்; white deer. 2. வெண்மை; whiteness. 3. கருமை; blackness.

[Skt. rāma > த. இராமம்.]

**இராமம்**[2] *irāmam,* பெ.(n.) 1. அழகு; beauty. *"மெய்ப்பொலி யிலங்கொளி யிராமம்" (இரகு.தேனு.17).* 2. விரும்பத்தக்கது; that which is lovely, charming.

**த.வ.** எழில்.

[Skt. rāma > த. இராமம்.]

**இராமமுழியன்** *irāma-muliyan,* பெ.(n.) ஒருவகைக் கடல் மீன்; a silvery sea-fish (சா.அக.).

**இராமரகசியம்** *irāma-ragaśiyam,* பெ.(n.) நூற்றெட்டு மறைமுடிபுகளுள் ஒன்று; name of an upanisad.

[Skt. rāma-rahasya > த. இராமரகசியம்.]

**இராமரசம்** *irāma-raśam,* பெ.(n.) ஒரு வகை நீர்ம மருந்து; medicinal drink made of hemp leaves, spices and other drugs (சா.அக.).

[Skt. rāma+rasa > த. இராமரசம்.]

**இராமராச்சியம்** *irāma-rācciyam,* பெ.(n.) இராமனால் நடத்தப்பட்டதாகக் கருதப்படும் நல்லரசாட்சி; government of equity and benignity as Rama's government.

[Skt. rāma+rājya > த. இராமராச்சியம்.]

**இராமலிங்கம்** *irāma-liṅgam,* பெ.(n.) **இராமநாதன்** பார்க்க; see *irāma-nādan.*

[Skt. rāma+liṅga > த. இராமலிங்கம்.]

**இராமலிங்க அடிகளார்** *irāma-liṅga-aḍigaḷār,* பெ.(n.) திருவருட்பா இயற்றிய, வள்ளலார் எனப் புகழப்படும் சிவனிய வெள்ளாடைத் துறவி; a modern saivaite sage, author of the *tiru-v-aruṭpā* and some other minor works (1823-1874).

திருவருட் பிரகாச வள்ளலார் என அழைக்கப்படும் இராமலிங்க அடிகளார் 19ஆம் நூற்றாண்டில் (1823–1874) வாழ்ந்தவர். தென்னார்க்காடு மாவட்டம் மருதூரில் பிறந்தவர். வடலூரில் அறச்சாலை நிறுவி மக்களுக்கு இடையறாது சோறிட்டார். 51ஆம் அகவையில் வடலூரில் ஓர் அறையில் திருக்காப்பிட்டுக் கொண்டு மறைந்தார். மனுமுறை கண்ட வாசகம், சிவநேச வெண்பா, நெஞ்சறிவுறுத்தல், மகா தேவமாலை முதலிய அருள் நூல்களை இயற்றியுள்ளார். அருட்பெருஞ்சோதி ஒளிவழிபாட்டைத் தோற்றுவித்தார். கொல்லாமையை வலியுறுத்தினார். இவருடைய பாடல்கள் திருவருட்பா என அழைக்கப்படுகின்றது.

**இராமவாசகம்** *irāma-vāšagam,* பெ.(n.) தவறாத சொல்; sacred promise, plighted word, as irrevocable as the word of Rama.

[Skt. rāma+vāsaka > த. இராமவாசகம்.]

**இராமன்** *irāman,* பெ.(n.) 1. பரசுராமன்; *Parašurāma.* 2. இராமாயண இராமன்; *Śri Rāma,* the hero of the *Rāmāyaṇa.* 3. பலராமன்; *Balarāma.*

[Skt. rāma > த. இராமன்.]

திருமாலின் தோற்றரவாக (அவதாரமாக) கருதப்படுபவர்கள் பரசுராமன், இராமன், பலராமன்.

**இராமன்சம்பா** *irāman-šambā,* பெ.(n.) நெல்வகை; variety of paddy.

[Skt. rāma+campā > த. இராமன்சம்பா.]

**இராமாயணம்** *irāmāyaṇam,* பெ.(n.) வால்மீகியால் எழுதப்பட்ட வடமொழிக் காப்பியம்; famous skt. epic by *Vālmīkī* rendered into tamil by *Kambar,* relating the adventures of *Rāman.*

[Skt. rāmayaṇa > த. இராமாயணம்.]

மறவனப்புகள் (இதிகாசங்கள்)இரண்டனுள் ஒன்றான இராமாயணம், வடமொழியில் வால்மீகியால் எழுதப்பட்டது. அதை முதனூலாகக் கொண்டு கம்பர் தமிழில் கம்பராமாயணம் படைத்தார். இராமாயணம் இராமனின் கதையைக் கூறும். ஒரு மாலிய (வைணவ) நூல். வால்மீகி இராமாயணத்தினின்றும் வேறுபட்டுச் சில இடங்களில் கம்பர் தமிழ் மரபுக்கு ஏற்ப மாற்றி அமைத்துள்ளார். தமிழில் இராமாயணம் எழுந்த காலம் கி.பி.12–ஆம் நூற்றாண்டின் பிற் பகுதியாகும்.

**இராமாவதாரம்** *irāmāvadāram,* பெ.(n.) 1. இராமனாகப் பிறந்த திருமாலின் தோற்றரவு; incornation of *Visṇu* as *Rāma*, the son of *Dašarathan*. 2. கம்பர் தனது வனப்பு நூலுக்கு (காப்பியத்திற்கு) வைத்த பெயர்; the *Rāmāyaṇam* in tamil by the poet *Kambar*. (புறத்திரட்டு) *"நாயகன் றோற்றத்தி னிடை நிகழ்ந்த விராமவ தாரப்போர்....... மாக்கதை" (கம்பரா.பாயி.).*

த.வ. கம்பராமாயணம்.

*[Skt.rāma+ava-tāra>த. இராமாவதாரம்.]*

**இராமானுசகூடம்** *irāmāṉuša-kūḍam,* பெ.(n.) மாலிய (வைணவ) அடியார்கள் வழியிடைத் தங்கும் சாவடி (I.M.P.Tp.492, R); rest house for *Vaisṇ* travellers.

*[இராமானுசம் + கூடம்.]*

*[Skt. rāmānuja>த. இராமானுசம்.]*

**இராமானுசதரிசனம்** *irāmāṉuša-darišaṉam,* பெ.(n.) இராமானுசரால் கற்பிக்கப்பட்ட கோட்பாடு (விசிட்டாத் வைதம்); philosophy of *Višisṭādvaitam* as expounded by *Ramanujar.*

*[Skt.rāmāṉuja+darsana>த. இராமானுச தரிசனம்.]*

**இராமானுசநூற்றந்தாதி** *irāmāṉuša-nūṟṟandādi,* பெ.(n.) இராமானுசரைப் புகழ்ந்து திருவரங்கத்தமுதனார் இயற்றிய ஒரு நூல்; a poem in praise of Ramanuja by *Tiru-v-araṅgattamutanār*, one of his contemporaries.

*[Skt.rāmānuja>த. இராமானுசம்.]*

**இராமானுசம்** *irāmāṉušam,* பெ.(n.) மாலியர் (வைணவர்) பயன்படுத்தும் ஒருவகைச் செப்புக் கலன்; drinking vessel, use of copper, used by *Vaisṇavas.*

*[Skt. rāmānuja > த. இராமானுசம்.]*

**இராமானுசர்** *irāmāṉušar,* பெ.(n.) விசிட்டாத்துவிதம் என்னும் சமயக் கோட்பாட்டை நிறுவிப்பரப்பியவர்; *Rāmānuja,* a *Sri Vaisṇava Acārya* (teacher) and ascetic (1017-1137 A.D.) who was the leading exponent of the *Višisṭadvaita* doctrine of pantheistic non - dualism.

*[Skt. rāmānuja > த. இராமானுசர்.]*

**இராமானுசன்** *irāmāṉusaṉ,* பெ.(n.) இராமனின் தம்பியாகிய இலக்குவன்; *laksmaṇaṉ* brother of *Rāmāṉ.*

*[Skt. rāmāṉuja > த. இராமானுசன். அனுசன் = தம்பி.]*

**இராமானுசீயர்** *irāmāṉušiyar,* பெ.(n.) இராமானுசரைப் பின்பற்றுபவர்கள்; followers of Ramanujar.

*[Skt. rāmānujiya > த. இராமானுசீயர்.]*

**இராமேச்சுரம்** *irāmēccuram,* பெ.(n.) சிவன் கோயில் உள்ள இடம்; *Rāmēšvaram*, the celebrated *Šiva* shrine on an island, which is reputed to have been founded by *Šri Rāmaṉ.*

*[Skt. rāma+īšvara > த. இராமேச்சுரம்.]*

இராமன் இலங்கைப் போருக்குமுன் இங்கு சிவக்குறி (இலிங்கம்) அமைத்து வழிபட்டதாகக் கூறப்படுகிறது. இலங்கைக்கும் தமிழ் நாட்டுக்கும் இடையில் கடலில் உள்ள ஒரு தீவு.

**இராமேசம்** *irāmēšam,* பெ.(n.) **இராமேச்சுரம்** பார்க்க; see *irāmēccuram.*

*[Skt.rāma+īša>இராமேஸம்>த. இராமேசம்.]*

**இராமேசுவரம்** *irāmēšuvaram,* பெ.(n.) **இராமேச்சுரம்** பார்க்க; see *irāmē-c-curam.*

*[Skt. rāma+īšvara > த. இராமேசுவரம்.]*

**இராமை** *irāmai,* பெ.(n.) 1. மன்மத நூல் கற்றவள்; woman who is an expert in erotics. 2. சிறுவழுதலை; a kind of brinjal.

*[Skt. rāmā > த. இராமை.]*

**இராயசம்** *irāyasam,* பெ.(n.) ஆணை ஆவணம்; written order. *"நரசிங்க ராஜ உடையார் கட்டளை பண்ணி இராயசமும் கொடுக்கையில்" (S.I.I. iv, 83).*

*[T. vrāyasamu > த. இராயசம்.]*

**இராயசவர்த்தனை** *irayasavarttanai,* பெ.(n.) வரிவகை (S.I.I. viii, 188); a tax.

*[இராயசம் + வர்த்தனை.]*

*[T. vrāyasamu+***Skt.** *vartana> த.இராயச வர்த்தனை.]*

**இராயர்** *irāyar,* பெ.(n.) 1. விசய நகர மன்னர்களின் பட்டப்பெயர்; title assumed by the Vijayanagar kings. 2. மராட்டிய மத்துவ பார்ப்பனரின் பட்டப் பெயர்; caste title of *mahārāṣṭara* and Madhva and other *brāhmins.*

**த.வ.** அரையர்.

*[***Skt.***rājan>த. இராயர்.]*

**இராயன்** *irāyan,* பெ.(n.) 1. அரசன்; king. 2. உரோம மன்னன் (விவிலி.மார்.12, 14); Caesar, the Rome's king.

**த.வ.** அரையன்.

*[***Skt.** *rājan > த. இராயன்.]*

**இராவணம்** *irāvaṇam,* பெ.(n.) அழுகை (திருப்பு.330); crying, screaming.

*[***Skt.** *rāvaṇa > த. இராவணம்.]*

**இராவணன்** *irāvaṇan,* பெ.(n.) இராம காதையில் குறிக்கப் பெறும் எதிராளித் தலைவனான இலங்கை மன்னன்; *rāvana,* a villain king of *Laṅka* and chief in *Rāmayana.*

*[***Skt.** *rāvaṇa > த. இராவணன்.]*

ராவண என்னும் சொல் அரற்றுதல், ஒலியிடுதல் என்னும் பொருள்படும் 'ராவ' என்னும் அடியிலிருந்து பிறந்ததாக மா.வி. காட்டுகிறது. இராமகாதையில் வரும் எதிராளிக் கதை மாந்தன் என்றாலும் இலங்கை மன்னன் ஒரு சிவனடியான். இசைவல்லோன், வீணை இசைப்போன், அரக்கர் தலைவன், விண்ணவரை ஏவல் கொண்டவன், வீபிணன், கும்பகர்ணன் ஆகியோரின் தமையன், இந்திரசித்துவின் தந்தை, கைலாயத்தைப் பெயர்த்தவன் போன்ற பாங்குகளை இராவணனுக்குரியதாகக் காட்டுவர். முதலாவதாக பண்டைக்காலத்தில் இலங்கையிலும் பிற இடங்களிலும் அரக்கர் இருந்ததாகக் கருதப்படும் கருத்து தொன்ம அடிப்படையில் கற்பிக்கப்பட்டது. மேலும் பிற்காலத்தில் ஆரிய திராவிட (தமிழ்) வேறுபாட்டை குறிக்கும் குறியீடாகக் கொண்டு தமிழர் தம்மை இழிவுபடுத்தும் நோக்கில் கற்பிக்கப்பட்டதே இராவணன் அரக்கர் தன்மையாம்.

**இராவணன்புல்** *irāvaṇan-pul,* பெ.(n.) கடற்கரையிலுள்ள ஒருவகைக் கூரிய புல்; water-pink, a seashore grass, spinifex squarrosus, from its resemblance to *Rāvanan's* whiskers.

*[இராவணன் + புல்.]*

*[***Skt.** *rāvaṇa>த. இராவணன்.]*

**இராவணன்மீசை** *irāvaṇan-mīšai,* பெ.(n.) **இராவணன்புல்** பார்க்க; see *irāvaṇan-pul.*

*[இராவணன் + மீசை.]*

*[***Skt.** *rāvaṇa>த. இராவணன்.]*

**இராவணாகாரம்** *irāvaṇākāram,* பெ.(n.) அச்சம் தரும் வடிவம்; frightful form, as the terror-striking mien of *Rāvaṇa.* *"இராவணாகாரமாகி" (தாயு. மௌன.9).*

*[***Skt.***rāvaṇa+ā-kārā>த. இராவணாகாரம்.]*

**இராவணாசுரம்** *irāvaṇāšuram,* பெ.(n.) வீணை வகை (பரத. ஒழிபி.15); kind of *vīṇā.*

*[***Skt.***rāvaṇa+a-sura> த. இராவணாசுரம்.]*

**இராவணாத்தம்** *irāvaṇāttam,* பெ.(n.) கொட்டாங்கச்சியில் செய்த ஒருவகைச் சிறுவீணை; an ancient stringed instrument formed with a coconut shell.

*[**Skt.** rāvaṇa+hasta > த. இராவணாத்தம்.]*



**இராவணி** *irāvaṇi,* பெ.(n.) இராவணன் மகன் (கம்பரா.நாகபா.13:7); Indrajit, son of *Rāvaṇa.*

*[**Skt.** rāvaṇi > த. இராவணி.]*

**இராவுத்தராயன்** *irāvutta-rāyaṉ,* பெ.(n.) குதிரைப் பாகரின் தலைவன் (திருவாலவா. உரி, 23); leader of horseman.

*[**U.** raut+raya > த. இராவுத்தராயன்.]*

**இராவுத்தன்** *irāvuttaṉ,* பெ.(n.) 1. குதிரை வீரன்; cavalier, horseman, trooper. 2. தமிழ் முகமதியருள் ஒரு பிரிவினரின் பட்டப் பெயர்; title of a certain class of tamil-speaking Muhammadans.

*[**U.** raut > த. இராவுத்தன்.]*

*[**cf.Skt.** raja-dūta.]*

**இரிசபகம்** *irisabakam,* பெ.(n.) இலந்தை; Indian plum (சா.அக.).

**இரிசபதாரகிருதம்** *irisabatārakirutam,* பெ.(n.) சீவகம் அல்லது இலந்தை; Indian plum (சா.அக.).

**இரிசபதாரம்** *irisabatāram,* பெ.(n.) ஆவு; the cow (சா.அக.).

**இரிசால்** *irišāl,* பெ.(n.) 1. ஊர் அலுவலர்கள் அரசுக் கருவூலத்தில் தண்டல் பணம் செலுத்துதல்; remittance or despatch of collections of rents forworded by the village revenue officer to the treasury. 2. கருவூலத்திற்கு அனுப்பும் பணம்; collections of rents to be forwarded to the treasury.

**த.வ. வரிஒடுக்கல்.**

*[**Arab.** iršal > த. இரிசால்.]*

**இரிசி** *iriši,* பெ.(n.) வேத முனி; sage versed in vedas (சா.அக.).

**இரிசியா** *irišiyā,* பெ.(n.) பூனைக்காலி (மலை.); cowhage.

*[**Skt.** irisya > த. இரிசியா.]*

**இரிட்டம்** *iriṭṭam,* பெ.(n.) 1. நன்மை; good. 2. வாள்; sword. 3. நன்மையல்லாதது; inauspiciousness. 4. முடிவு, அழிவு; end, destruction. 5. கரிசு (பாவம்); sin.

*[**Skt.** riṣṭa > த. இரிட்டம்.]*

**இரீதி** *irīti,* பெ.(n.) 1. குடவம் (பித்தளை); brass. 2. இரும்புக் கிட்டம்; scoria of iron. 3. தூள்; dust (சா.அக.).

*[**Skt.** riti > த. இரீதி.]*

**இருக்கம்** *irukkam,* பெ.(n.) 1. விண்மீன்; naksatra. 2. கரடி; bear. 3. கோள்; zodiacal sign.

*[**Skt.** rksa > த. இருக்கம்.]*

**இருக்கமாலி** *irukkamāli,* பெ.(n.) 766 முழ அகலமும் உயரமுமுள்ளதாய் 766 முகடுகளோடு (சிகரம்) 96 மேனிலைக் கட்டுகள் கொண்ட கோயில் (சுக்கிரநீதி.229); temple of the width of 766 hands and of the same height, with 766 towers and 96 storeys.

**த.வ. சதுரக்கூம்பு (பிரமிடு)**

*[**Skt.** rkṣamāli > த. இருக்கமாலி.]*

**இருசகம்** *irušagam,* பெ.(n.) மாதுளை; pomegranate (சா.அக.).

*[Skt. rucaka > த. இருசகம்.]*



**இருசால்** *irušāl,* பெ.(n.) **இரிசால்** பார்க்க; see *irisāl.*

*[U. irsāl > த. இருசால்.]*

**இருசால்நாமா** *irušāl-nāmā,* பெ.(n.) ஊர் அலுவலர் கருவூலத்தில் செலுத்தும் தண்டல் பணத்துக்கு விளக்கம் தரும் பட்டி; invoice of collections of rents forwarded to the treasury by the village revenue officer.

**த.வ. வரிஒடுக்கல் பட்டி.**

*[U. irsāl+nāmā > த. இருசால்நாமா.]*

**இருசிதாரி** *irusitāri,* பெ.(n.) கருஞ்சீரகம்; black cumin (சா.அக.).

**இருசியகெந்தா** *irušiya-kendā,* பெ.(n.) சிற்றாமுட்டி; ceylon pavonia (சா.அக.).

**இருசியசிம்மகருட்டம்** *irušiyasimmaka kuṭṭam,* பெ.(n.) புழுக்கள் நிறைந்து, நோவையும், எரிச்சலையுண்டாக்கும் ஒரு தொழுநோய்; a form of leprosy with formation of maggots, burning semation and pain (சா.அக.).

*[இருசிய + சிம்மம் + குட்டம்.]*

*[Skt. irušiya-simma>த. இருசியசிம்மகம்.]*

*த. குட்டம் > Skt. kusta.*

**இருசீக்கியம்** *irušīkkiyam,* பெ.(n.) கருஞ் செந்தொட்டி; black climbing nettle plant (சா.அக.).

**இருசுபசுந்தரவிரணம்** *irušupasuntara-viraṇam,* பெ.(n.) மலவாயையொட்டிச் சீலை ஒழுகச் செய்யும் ஒருவகை மூலநோய்; a form of fistula marked by a regular perforated ulcer near the rectum with a discharge of pus for therefrom (சா.அக.).

**இருசுபாலை** *irusuppālai,* பெ.(n.) திருநாமப் பாலை; a kind of herb.

**இருசுவசற்பாட்சி** *irušuvašarpātci,* பெ.(n.) 1. நோய் பரப்பும் நுண்ணுயிர்களின் குற்றத்தைப் போக்கும் ஒரு மூலிகை; a plant said to be used in complaints arising from germs. 2. ஒரு வகை நாணற்புல்; a kind of darba grass (சா.அக.).

**இருசுவம்** *irušuvam,* பெ.(n.) மலையிலுப்பை; wild mohwah (சா.அக.).

**இருடிநங்கை** *iruḍinaṅkai,* பெ.(n.) கற்பூரயிலை; thick leaved lavender or camphor creeper (சா.அக.).

**இருடிபட்சி** *iruḍipaṭci,* பெ.(n.) பழந்தின்னி வௌவால்; sage bird, flying fox (சா.அக.).

*[Skt. rishabatci > த. இருடிபட்சி.]*



**இருடிமூலம்** *iruḍimūlam,* பெ.(n.) வசம்பு; sweet flag (சா.அக.).

**இருடீகம்** *irudigam,* பெ.(n.) புலனுறுப்பு; sensory organ. *"இருடீகங்க ளீரைந்துஞ் சரங்களாக" (தேசிகப்.2, 41).*

*[Skt. hrṣika > த. இருடீகம்.]*

**இருத்தி** *irutti,* பெ.(n.) வட்டி (T.A.S. viii, 15); interest.

*[Skt. rddhi > த. இருத்தி.]*

**இருதயஅடைப்பு** *irudaya-adaippu,* பெ.(n.) மூச்சு விட முடியாமல், மயக்கம், வலி முதலிய குணங்களைக் காட்டும் மாரடைப்பு நோய்; a disease marked by pain in the chest with suffocation and swooning due to the spasm of the systemic arteries (சா.அக.).

த.வ. நெஞ்சடைப்பு, மாரடைப்பு.

*[இருதயம் + அடைப்பு.]*

*[Skt. hrdaya > த. இருதயம்.]*

**இருதயகந்தம்** *irudayakantam,* பெ.(n.) கொத்த மல்லி; coriander (சா.அக.).

*[Skt. hrdaya+kanta > த. இருதயகந்தம்.]*

**இருதயகபாடதாபிதம்** *irudayakapāda tābitam,* பெ.(n.) நெஞ்சகத்தில் ஒருவழி அடைப்புத் தடுக்கில் ஏற்படும் அழற்சி; inflammation of the heart-valves (சா.அக.).

*[இருதயம் + கபாடம் + தாபிதம்.]*

*[Skt. hrdaya > த. இருதயம்.]*

**இருதயகபாடம்** *irudayakapādam,* பெ.(n.) 1. உடலில் நெஞ்சகத்தின் பக்கங்களில் அமைந்துள்ள ஒரு வழி அடைப்புத் தடுப்புகள்; the two sets of valves inside the heart. 2. தமனி, சிரைகளின் தடுக்கிதழ்கள்; aricklo ventriculer valves. 3. பிறை கபாடம் அல்லது நாடிக் கபாடம்; semilunar valves (சா.அக.).

*[இருதயம் + கபாடம்.]*

*[Skt. hrdaya > த. இருதயம்.]*

**இருதயகவசம்** *irudayakavašam,* பெ.(n.) இதயத்தின் மேல் போர்வை போல் சுற்றிக் கொண்டிருக்கும் ஒரு சவ்வுப்பை; the membraneous sacenclosing the heart (சா.அக.).

*[இருதயம் + கவசம்.]*

*[Skt.hrdaya >த. இருதயம்.]*

*கவ்வு>கவ்வியம்>கவயம்>கவசம்.*

**இருதயகிரகம்** *irudayakirakam,* பெ.(n.) நெஞ்சகத்தில் உண்டாகும் ஒரு பிடிப்பு வலி; a catching pain in the chest (சா.அக.).

*[Skt. hrdaya+graha>த. இருதயகிரகம்.]*

**இருதயகோசம்** *irudayakōšam,* பெ.(n.) **இருதயகவசம்** பார்க்க; see *irudaya kavasam.*

*[Skt. hrdaya+kōsa > த. இருதயகோசம்.]*

**இருதயக்கட்டி** *irudayakkatti,* பெ.(n.) நெஞ்சகத்தில் உண்டாகும் கட்டி; an abscess of the heart (சா.அக.).

*[இருதயம் + கட்டி.]*

*[Skt. hrdaya > த. இருதயம்.]*

*குள்>கள்>கட்டு>கட்டி.*

**இருதயக்கண்டரை** *irudaya-k-kandarai,* பெ.(n.) நெஞ்சாங்குலையின் பக்கத்திலுள்ள பெரிய தூய அரத்தக் குழாய்; the great artery that springs from the left side of the heart (சா.அக.).

*[இருதயம் + கண்டரை.]*

*[Skt. hrdaya > த. இருதயம்.]*

*கண்டு>கண்டரை.*

**இருதயக்கழலை** *irudaya-k-kalalai,* பெ.(n.) உடம்பினுள் நெஞ்சாங்குலையி லுண்டாகுங் கழலைக் கட்டி; a tumour or swelling containing any fluid or solid blood in direct communication with the cavity of the heart (சா.அக.).

த.வ. நெஞ்சக்கழலை.

*[இருதயம் + கழலை.]*

*[Skt. hrdaya > த. இருதயம்.]*

*கழல்>கழலை = கழற்சிக்காய் போன்ற கட்டி.*

**இருதயக்குவிப்பு** *irudaya-k-kuvippu,* பெ.(n.) நெஞ்சகச் சுருக்கம்; the contraction of the heart (சா.அக.).

*[இருதயம் + குவிப்பு.]*

*[**Skt.** hrdaya > த. இருதயம்.]*

**இருதயக்கூச்சு** *irudaya-k-kūccu,* பெ.(n.) நெஞ்சக முனை; the apex of the heart (சா.அக.).

*[இருதயம் + கூச்சு.]*

*[**Skt.** hrdaya > த. இருதயம்.]*

**இருதயசனிப்பு** *irudaya-šaṉippu,* பெ.(n.) நெஞ்சகத்தில் உருவாதல்; originating in the heart itself (சா.அக.).

*[**Skt.** hrdaya+jaṉi> த. இருதயசனிப்பு.]*

**இருதயசிகிச்சை** *irudayašihiccai,* பெ.(n.) நெஞ்சில் ஏற்படும் நோய்களுக்கு செய்யும் மருத்துவ முறை; treatment for all diseases of the heart - *Cardiotherapy* (சா.அக.).

*[**Skt.**hrdaya+shitsa>த. இருதயசிகிச்சை.]*

**இருதயசூலை** *irudayašūlai,* பெ.(n.) மார்புவலி மிகுந்து, மூச்சுவிட முடியாமல் குத்தலை உண்டாக்கும் ஒரு நோய்; an uneasy and painful sensation with difficulty of respiration due to the deranged of the bodily *vayū* (சா.அக.).

*[இருதயம் + சூலை.]*

*[**Skt.** hrdaya > த. இருதயம்.]*

**இருதயத்தவறு** *irutayattavaṟu,* பெ.(n.) மார்புத் துடிப்பு நிற்றல்; arrest of the hearts action (சா.அக.).

*[இருதயம் + தவறு.]*

*[**Skt.** hrdaya > த. இருதயம்.]*

**இருதயத்திமிர்ப்பு** *irutaya-t-timirppu,* பெ.(n.) நெஞ்சாங்குலையின் உணர்ச்சியின்மை; absence of sensation in the heart (சா.அக.).

*[இருதயம் + திமிர்ப்பு.]*

*[**Skt.** hrdaya > த. இருதயம்.]*

**இருதயத்திமிர்வாதம்** *irutaya-t-timirvātam,* பெ.(n.) நெஞ்சக நரம்பிற்கேற்படும் உணர்ச்சியின்மையாகிய ஒரு வகை இழுப்புநோய்; paralysis of the heart (சா.அக.).

*[இருதயம் + திமிர்வாதம்.]*

*[**Skt.** hrdaya > த. இருதயம்.]*

**இருதயத்துடிதுடிப்பு** *irutaya-t-tuḍituḍippu,* பெ.(n.) நெஞ்சகப்பதைபதைப்பு, அதாவது அதிவேகமாய்த் துடித்தல்; excessive rapidity in the action of the heart (சா.அக.).

*[இருதயம் + துடிதுடிப்பு.]*

*[**Skt.** hrdaya > த. இருதயம்.]*

**இருதயத்துடிப்பு** *irudaya-t-tuḍippu,* பெ.(n.) நோயினாலும், அச்சம், மனக்கவலை, சினம் முதலியவற்றாலும், மார்பின் இடது பக்கத்திலிருக்கும் நெஞ்சகம் அளவு கடந்து வேகமாய்த் துடித்தல்; extreme and unusual rapid action of the heart through disease or emotion fear, anger, exercise drugs.

*[இருதயம் + துடிப்பு.]*

*[**Skt.** hrdaya > த. இருதயம்.]*

**இருதயதாபிதம்** *irutayatābitam,* பெ.(n.) நெஞ்சில் உண்டாகும் ஓர் அழற்சி; the inflammation of the actual muscular of the heart itself (சா.அக.).

**த.வ. நெஞ்சு அழற்சி.**

*[இருதயம் + தாபிதம்.]*

*[**Skt.** hrdaya > த. இருதயம்.]*

**இருதயநார்க்கடிமை** *irutayanārkkaḍimai,* பெ.(n.) நெஞ்சாங்குலையில் தசை நாரமைப்புக் கேற்படும் வன்மை; the process of hardening the fibrous structure of the heart, the fibroid induration of the heart (சா.அக.).

*[இருதயம் + நார் + கடிமை.]*

*[**Skt.** hrdaya > த. இருதயம்.]*

**இருதயநாளம்** *irutayanāḷam,* பெ.(n.) நெஞ்சகத்தில் ஓடும் நாளங்கள்; veins of the walls of the heart (சா.அக.).

**த.வ. நெஞ்சநாளம்.**

*[இருதயம் + நாளம்.]*

*[Skt. hrdaya > த. இருதயம்.]*

**இருதயநோய்** *irutayanōy,* பெ.(n.) நெஞ்சகத்தில் உண்டாகும் நோய்கள்; diseases of the heart, in general heart affections (சா.அக.).

**த.வ. நெஞ்சநோய், குண்டை நோய்.**

*[இருதயம் + நோய்.]*

*[Skt. hrdaya > த. இருதயம்.]*

**இருதயப்படபடப்பு** *irutayappadapadappu,* பெ.(n.) **இருதயத்துடிப்பு** பார்க்க; see *irudayattuḍippu* (சா.அக.).

*[இருதயம் + படபடப்பு.]*

*[Skt. hrdaya > த. இருதயம்.]*

**இருதயப்பிடிப்பு** *irutaya-p-piḍippu,* பெ.(n.) நெஞ்சகத்தில் ஏற்படும் பிடிப்பு; spasm of the heart (சா.அக.).

**த.வ.** நெஞ்சப்பிடிப்பு.

*[இருதயம் + பிடிப்பு.]*

*[Skt. hrdaya > த. இருதயம்.]*

**இருதயப்பிதுக்கம்** *irutaya-p-pidukkam,* பெ.(n.) நுரையீரல் தாங்கியில் ஏற்படும் வெடிப்பு மூலமாய் நெஞ்சகம் வெளிப் பிதுங்கல்; protrusion of the heart through a fissure produced in the diaphragm-cardiocele (சா.அக.).

**த.வ. நெஞ்சப்பிதுக்கம்.**

*[இருதயம் + பிதுக்கம்.]*

*[Skt. hrdaya > த. இருதயம்.]*

**இருதயப்பிளவு** *irutaya-p-piḷavu,* பெ.(n.) நெஞ்சக வெடிப்பு; rupture of the heart, cardiorrhexis (சா.அக.).

**த.வ. நெஞ்சவெடிப்பு.**

*[இருதயம் + பிளவு.]*

*[Skt. hrdaya > த. இருதயம்.]*

**இருதயப்புற்று** *irutaya-p-puṟṟu,* பெ.(n.) நெஞ்சகத்தில் புரையோடிய புண்; cancer of the heart (சா.அக.).

**த.வ. நெஞ்சப்புண்.**

*[இருதயம் + புற்று.]*

*[Skt. hrdaya > த. இருதயம்.]*

**இருதயப்போக்கு** *irutayappōkku,* பெ.(n.) நெஞ்சம் அசைவு; movement of the heart, cardiomobility (சா.அக.).

*[இருதயம் + போக்கு.]*

*[Skt. hrdaya > த. இருதயம்.]*

**இருதயம்**[1] *irutayam,* பெ.(n.) நெஞ்சகக் கூட்டினிலிருக்கும் ஓர் உறுப்பு. இது தாமரை மொக்கைப் போல், நுரையீரலுக்கு நடுவில், மேற்புறத்தில் துளையுடன் தலைகீழாய் மார்பின் இடது புறத்தின் தொங்கும் உறுப்பு; heart, an organ resembles the Lotus, believed to be the most important of all the parts (சா.அக.).

**த.வ. நெஞ்சகம், குண்டிக்காய், குண்டை.**

*[Skt. hrdaya > த. இருதயம்.]*



**இருதயம்**[2] *irudayam,* பெ.(n.) 1. மனம்; mind. 2. நடுவக் கருத்து; central idea. 3. நடு; centre, core.

*[Skt. hrdaya > த. இருதயம்.]*

**இருதயமுனை** *irudayamunai,* பெ.(n.) நெஞ்சக முனை; the apex of the heart.

*[இருதயம் + முனை.]*

***[Skt.** hrdaya > த. இருதயம்.]*

**இருதயலயம்** *irutayalayam,* பெ.(n.) அரத்த ஓட்டத்தினால் நெஞ்சாங்குலை மாறி மாறிச் சுருங்குவதும் விரிவதுமாயுள்ள முறையான கால அளவு; the rhythm of the heart beat due to its contraction and dilation (சா.அக.).

***[Skt.** hrdaya+laya > த. இருதயலயம்.]*

**இருதயவலி** *irutayavali,* பெ.(n.) 1. சூலை நோவு; pain in the heart-cardinodynia. 2. நெஞ்செரிவு; heart burn-pyrosis (சா.அக.).

**த.வ. நெஞ்சுவலி.**

*[இருதயம் + வலி.]*

***[Skt.** hrdaya > த. இருதயம்.]*

**இருதயவழற்சி** *irutayavalarci,* பெ.(n.) நெஞ்சாங்குலையில் ஏற்படும் ஒருவகை வேக்காடு; inflammation of the heart - carditis (சா.அக.).

**த.வ. நெஞ்செரிச்சல்.**

*[இருதயம் + அழற்சி.]*

***[Skt.** hrdaya > த. இருதயம்.]*

*அழல் > அழற்சி.*

**இருதயவழுவு** *irudayavaluvu,* பெ.(n.) நெஞ்சகத்திற்கு உண்டான அவக்கேடு; defermity or malfermation of the heart-cardiamorphia (சா.அக.).

*[இருதயம் + வழுவு.]*

***[Skt.** hrdaya > த. இருதயம்.]*

**இருதயவாயு** *irutayavāyu,* பெ.(n.) நெஞ்சாங்குலையின் நரம்புகளிலேற்படும் ஒரு வகை வலி, இதனால்தான் மாரடைப்பு உண்டாகும்; neuralgia of the heart leading to a disease of the heart known as Angina pectoris (சா.அக.).

***[Skt.** hrdaya-vāyu > த. இருதயவாயு.]*

**இருதயவிரிவு** *irutayavirivu,* பெ.(n.) 1. அரத்தவோட்ட உறுப்புகள் விரியுந் தன்மை அடைதல்; the stage of dilalation of the heart Diastole. 2. அரத்தவோட்ட உறுப்பு நீண்டு விகாரப்படல்; dilalation of the heart cardiectasis (சா.அக.).

*[இருதயம் + விரிவு.]*

***[Skt.** hrdaya > த. இருதயம்.]*

**இருதயவீக்கம்** *irutayavīkkam,* பெ.(n.) நெஞ்சக வீக்கம்; swelling of the heart.

**த.வ. நெஞ்சுவீக்கம்.**

*[இருதயம் + வீக்கம்.]*

***[Skt.** hrdaya > த. இருதயம்.]*

**இருதயவுட்கவசம்** *irudayavutkavašam,* பெ.(n.) நெஞ்சாங்குலையின் புறத்தில் மூடியிருக்கும் ஒரு மெல்லிய சவ்வு; the epithellial lung membrane of the heart - *Endo cardium* (சா.அக.).

*[இருதயம் + உள்+கவசம்.]*

***[Skt.** hrdaya > த. இருதயம்.]*

**இருதயவுப்பிசம்** *irudaya-uppišam,* பெ.(n.) நெஞ்சமானது நோயின் காரணமாய் வீக்கங் கொள்வது; abnormal dilalation of the heart-cardiacdilation (சா.அக.).

*[இருதயம் + உப்பிசம்.]*

***[Skt.** hrdaya > த. இருதயம்.]*

*உப்பு > உப்பம் (தொ.பெ.).*

*உ> உப்பு (வீங்குதல்) > உப்பசம் >உப்பிசம்.*

**இருதயவெடிப்பு** *irudya-vedippu,* பெ.(n.) அரத்தவோட்டக் குழல்களிலுண்டாகிய ஒரு பிளவு; cardiac rupture, *Cardioclasis* (சா.அக.).

*[இருதயம் + வெடிப்பு.]*

***[Skt.** hrdaya > த. இருதயம்.]*

**இரேக்கு** *irēkku,* பெ.(n.) 1. தங்கத்தாள், பொன் தகடு; gold leaf, tinsal. 2. பூவிதழ்; the petal of a flower (சா.அக.).

**இரேகம்** *irēkam,* பெ.(n.) 1. உடம்பு; body. 2. வயிறு; stomach. 3. கழித்தல்; purging (சா.அக.).

**இரேகாம்சம்** *irēkāmsam,* பெ.(n.) நிலக் கோளத்தை வடக்குத் தெற்காக 360 சம பங்குகளாய்ப் பிரிக்கப்பட்டவற்றுள் ஒரு பாகம் (தீர்க்க ரேகை)(Astron.); terrestrial longtitude.

த.வ. நெடுவரி.

*[Skt. rēkhā+amsa > த. இரேகாம்சம்.]*

இதன் எதிரான இடைக்கோடு (அட்சரேகை) கிடைவரி எனப்படும்.

**இரேகி[1]–த்தல்** *irēki-,* 11 செ.குன்றாவி.(v.t.) ஒன்றுபடுதல்; to unite, become one; to be very intimate, as friends. *'அவனோடு இரேகித்துப் பூரித்து இருக்கிறான்' (கொ.வ.).*

*[Skt. cf.rēcakā > த. இரேகி–,]*

**இரேகி[2]–த்தல்** *irēki-,* 11 செ.குன்றாவி.(v.t.) எழுதுதல்; to draw, to write. *"இரேகித்த சித்திரம்".*

*[Skt. rēkha > த. இரேகி–,]*

**இரேகுத்தி** *irēkutti,* பெ.(n.) ஒருவகைப் பண்; (mus.) a specific melody-type.

*[U. rēkhtī > த. இரேகுத்தி.]*

**இரேகுலிசம்** *irēkuliśam,* பெ.(n.) மணித் தக்காளி; black berried nightshade.

**இரேகை[1]** *irēkai,* பெ.(n.) 1. இடையறா வொழுங்கு; unbroken series. 2. வஞ்சம்; deceit, wile.

*[Skt. rēkhā > த. இரேகை.]*

**இரேகை[2]** *irēgai,* பெ.(n.) 1. கைகால் முதலியவற்றிலுள்ள கோடு; lines on the palm of hand or on the sole of foot or on the forehead as marks observed in palmistry. 2. வரி; line. 3. எழுத்து; letter, chiro-graphy, writing. 4. மதிக்கலை; digit of the moon (astron.). 5. அரசிறை; tax, assessment. 6. தராசு படி முதலியவற்றின் அளவு கோடு; degree, as of a scale, unit of measure.

த.வ. வரிகை.

*[Skt. rēkhā > த. இரேகை.]*

**இரேகைசாத்திரம்** *irēkai-sāttiram,* பெ.(n.) உள்ளங்கைக் கோடுகளை வைத்துக் கணியம் கூறும் கணியநூல்; palmistry, chiromancy.

த.வ. வரிகைநூல்.

*[Skt.rēkhā+sāstra>த. இரேகைசாத்திரம்.]*

**இரேகைநூல்** *irēkainūl,* பெ.(n.) கை வரிகளைப் பற்றிய ஒரு நூல்; a treatise on the art or practice of telling fortunes by examening the lines on the hand - chiromany (சா.அக.).

த.வ. வரிகைநூல், கைவரி நூல்.

*[இரேகை + நூல்.]*

*[Skt.rēkhā>த. இரேகை.]*

**இரேகையுடையோன்** *irēkaiyudaiyōṉ,* பெ.(n.) முட்டைச்சிலந்தி; egg shaped spider (சா.அக.).

**இரேசககுணா** *irēśakakuṇā,* பெ.(n.) கடுகு; mustard (சா.அக.).

**இரேசகம்** *irēcakam,* பெ.(n.) 1. வெளிவிடும் மூச்சுக் காற்றை (மூக்கால்) புறத்தே கழிக்கை; (yōgā) expiration of breath, a part of *pirāṇa-yamam.* 2. கழிச்சல் மருந்து; catharlic (w.). *"போற்றிரேசக நன்மூச்சை விடுக்குதல்" (கூர்மபு. யோகமு.11).*

*[Skt. rēcaka > த. இரேசகம்.]*

**இரேசகி–த்தல்** *irēśagi-,* 11 செ.குன்றாவி. (v.t.) மூச்சுப் பயிற்சி ஓகத்தில் ஒரு மூக்கின் வழியாய் மூச்சுவிடல்; letting out the breath rythmically through one nostrils in the course of pranāyamā (சா.அக.).

**இரேசகி** *irēšaki,* பெ.(n.) 1. கடுக்காய்; Indian galnut; myrobalan. 2. சீந்தில்; moon creeper (சா.அக.).

**இரேசகிக்குடிரம்** *irēšagikkuḍiram,* பெ.(n.) மலை எருக்கு; species of madar grown on the hills-calotropis gigantea (சா.அக.).

**இரேசகுணம்** *irēšakuṇam,* பெ.(n.) குளிர் தாமரை; floating lotus, sky lotus (சா.அக.).

**இரேசக்கடுகு** *irēšakkaḍugu,* பெ.(n.) செங்கடுகு; brown mustard (சா.அக.).

**இரேசக்குணா** *irēša-k-kuṇā,* பெ.(n.) கடுகு; mustard (சா.அக.).

**இரேசக்கொடி** *irēšakkoḍi,* பெ.(n.) ஊணாங்கொடி; silver weed (சா.அக.).

**இரேசந்திரம்** *irēšantiram,* பெ.(n.) இதளியம் (பாதரசம்); mercury (சா.அக.).

**இரேசப்பூடு** *irēša-p-pūḍu,* பெ.(n.) வெள்ளைப் பூண்டு; garlic (சா.அக.).

**இரேசலம்** *irēšalam,* பெ.(n.) நெல்லி நிறம்; the colour of goose berry-yellowish colour (சா.அக.).

**இரேசன்** *irēšaṉ,* பெ.(n.) **இரேசனி** பார்க்க; see *irēšaṉi* (சா.அக.).

**இரேசனம்** *irēšaṉam,* பெ.(n.) 1. கழிச்சல் மருந்து; a purgative a catharlic. 2. கழிச்சல்; purging (சா.அக.).

**இரேசனி¹** *irēšaṉi,* பெ.(n.) வெள்ளுள்ளி; garlic (சா.அக.).



**இரேசனி²** *irēšaṉi,* பெ.(n.) 1. சிவதை; indian jalap. 2. ஞாழல்; orange cupcasslyxed brasiletto. 3. நேர்வாள விதை; croton seed. 4. மனோ சிலை; realgar (நாநார்த்த.).

**இரேசி¹-த்தல்** *irēci-,* 11 செ.குன்றாவி. (v.t.) மூச்சைப் புறத்து விடுதல்; to breatheout, empty the lungs. *"மதியிலிருநான் கிரேசித்து" (காசிக. யோக.23).*

**இரேசி²-த்தல்** *irēci-,* 11 செ.குன்றாவி.(v.t.) ஒன்று சேரும்படிக் குழைத்தல்; to mix upto become one (சா.அக.).

**இரேசிதம்** *irēšidam,* பெ.(n.) 1. குதிரை வேகத்தில் ஒருவகை; canter of a horse, one of five *acuva-kati* (w.). 2. நாட்டிய வகை; a mode of dancing. *"அங்ககாரமே யிரேசித மென்ன" (திருவிளை. கான்மா.9).*

[**Skt.** *rēcita* > *த. இரேசிதம்.*]

**இரேசுதல்** *irēšutal,* பெ.(n.) செரிமானம் ஆகாநிலை; the state of indigestion (சா.அக.).

**இரேணு¹** *irēṇu,* பெ.(n.) 1. பூந்தாது; pollen. 2. அழகு; beauty (சா.அக.).

**இரேணு²** *irēṇu,* பெ.(n.) பற்படகப்புல் (நாநார்த்த.); fever plant.

[**Skt.** *rēṇu* > *த. இரேணு.*]

**இரேணு³** *irēṇu,* பெ.(n.) துகள்; dust, atom of dust. *"வணங்கிரேணு வடிவுமிலாது" (சங்.அக.தக்ஷிணகை. அர்ச்ச.36).*

[**Skt.** *rēṇu* > *த. இரேணு.*]

**இரேணுகம்** *irēṇugam,* பெ.(n.) ஒரு வகை மருந்துப் பொருள்; a fragrant drug.

[**Skt.** *rēṇukā* > *த. இரேணுகம்.*]

**இரேணுகாமூலி** *irēṇukāmūli,* பெ.(n.) செவ்வாமணக்கு; a red variety of castor (சா.அக.).

**இரேணுகை¹** *irēṇukai,* பெ.(n.) 1. தவிடு; bran. 2. தக்கோலம்; cubeb.

[**Skt.** *rēṇukā* > *த. இரேணுகை.*]

**இரேணுகை²** *irēṇukai,* பெ.(n.) காட்டு மிளகு; wild pepper (சா.அக.).

**இரேதகம்** *irētakam,* பெ.(n.) விந்து; semen, semen virile (சா.அக.).

**இரேதசு** *irēdašu,* பெ.(n.) விந்து; semen virile.

*[Skt. rētas > த. இரேதசு.]*

**இரேதசுகலிதம்** *irētašukalitam,* பெ.(n.) தானாக விந்து ஒழுகிவிடல்; involuntary discharge of semen (சா.அக.).

**இரேபன்** *irēbaṉ,* பெ.(n.) 1. கொடியவன்; cruel man. 2. இகழத் தக்கவன்; contemptible man.

*[Skt. rēpa > த. இரேபன்.]*

**இரேயம்** *irēyam,* பெ.(n.) 1. காய்ச்சி வடித்த சாராயம்; spirituous liquor. 2. கள்; toddy.

*[Skt. airēya > த. இரேயம்.]*

**இரேவடம்** *irēvaḍam,* பெ.(n.) 1. வலம்புரிச் சங்கு; conch with right spirals. 2. சூறைக் காற்று; whirl wind. 3. மூங்கில்; bamboo (நாநார்த்த.).

*[Skt. rēvaṭa > த. இரேவடம்.]*



**இரேவணசித்தர்** *irēvaṇa-sittar,* பெ.(n.) அகராதி நிகண்டின் ஆசிரியர். இவரது முழுப் பெயர் புலியூர்ச் சிதம்பர ரேவண சித்தர்; இந்நிகண்டின் காலம் கி.பி.1594; author of a thesaurus inverse as giving the words in alphabetical order in AD 1594.

**இரேவணாராத்தியர்** *irēvaṇārāttiyar,* பெ.(n.) சிவஞான தீவவாசிரியர்; name of a Brahmin devotee of *Vīra-šaiva* persuasion, author of the *Šiva-ñāṉa-tīpam.*

*[Skt. rēbhaṇa+ā-rādhya> த. இரேவணா ராத்தியர்.]*

**இரேவதர்** *irēvatar,* பெ.(n.) புத்தர்களுள் ஒருவர் (மணிமே.பக்.369); a buddha.

*[Skt. rēvata > த. இரேவதர்.]*

**இரேவதி** *irēvadi,* பெ.(n.) 1. இருபத்து ஏழாம் விண்மீன்; the 27th nakṣatra, part of pisces. 2. பலராமனின் மனைவி (பிங்.); wife of *Balarāma.*

த.வ. தொழுபஃறி.

*[Skt. rēvati > த. இரேவதி.]*

**இரேவற்சின்னி** *irēvaṟ-ciṉṉi,* பெ.(n.) 1. சீன மஞ்சட் கிழங்கு; rhubarb. 2. மரவகை; ceylon gamboge.

*[U. revandcinī > த. இரேவற்சின்னி.]*

**இரேவல்சீனி** *irēvalciṉi,* பெ.(n.) **இரேவற் சின்னி** பார்க்க; see *irēvaṟciṉṉi* (சா.அக.).

**இரேவல்சீனிப்பால்** *irēvalciṉippāl,* பெ.(n.) மக்கிப்பால்; rhubarb milk product of Garcinia morella (சா.அக.).

**இரேவை¹** *irēvai,* பெ.(n.) நருமதை ஆறு (பிங்.); the river Narmada.

*[Skt. rēvā > த. இரேவை.]*

**இரேவை²** *irēvai,* பெ.(n.) அவுரி (நாநார்த்த.); indigo.

*[Skt. rēvā > த. இரேவை.]*

**இரௌத்தன்** *irauttaṉ,* பெ.(n.) **இராவுத்தன்** பார்க்க; see *irāvuttaṉ.*

*[Skt. rāja-dūta>U.rāūt> த. இரௌத்தன்.]*

**இரௌத்திரம்** *irauttiram,* பெ.(n.) 1. பெருஞ் சினம்; great anger, wrath. 2. ஒன்பான் சுவைகளுள் ஒன்று (திவா.); sentiment of anger of fury, one of *nava-racam*(rhet.). 3. பகலிரவுகளுக்குத் தனித்தனியே உரிய15 நல்ல நேரங்களுள் முதலாவது (விதான. குணா.73, உரை); the first of 15 divisions of day or night.

த.வ. எரிசினம்.

*[Skt. raudra > த. இரௌத்திரம்.]*

**இரௌத்திராகாரம்** *irauttirākāram,* பெ.(n.) பெருஞ்சினத் தோற்றம்; inexorable mien, ferocious appearance.

த.வ. எரிசினத்தோற்றம்.

*[Skt.raudra+ākāra>த.இரௌத்திராகாரம்.]*

**இரௌத்திரி**[1] *irauttiri,* பெ.(n.) ஒரு சிவசத்தி (சைவபூ.சந்.219); a sakti of *śiva.*

*[Skt. raudri > த. இரௌத்திரி.]*

**இரௌத்திரி**[2] *irauttiri,* பெ.(n.) ஓர் ஆண்டின் பெயர்; the 54th year of the jupiter cycle.

*[Skt. raudri > த. இரௌத்திரி.]*

**இரௌரவம்** *irauravam,* பெ.(n.) 1. ஒரு நிரையம்; a hell. 2. சிவத் தோன்றியத்துள் ஒன்று; a *śaiva* scripture in Sanskrit, of a part of which the Tamil *Civā-ñāṉapōtams* is said to be a translation one of 28 *sivākamam.*

*[Skt. raurava > த. இரௌரவம்.]*

**இல்லாடம்** *illāḍam,* பெ.(n.) நெற்றி; forehead.

**இல்லாடலிபி** *illāḍalibi,* பெ.(n.) தலையெழுத்து; fate, destiny.

**இல்லாடவிளிம்பு** *illāḍavilimbu,* பெ.(n.) 1. தலைமுட்டு; coronol suture. 2. நெற்றி எலும்பையும் பித்திகை எலும்பையும் ஒரு காதினின்று மற்றொரு காது வரையில் சென்று இணைக்கும் வரி; the coronal suture which connects the parietal and the frontal bones.

**இல்லாடோதயம்** *illāḍōtayam,* பெ.(n.) மகப்பேற்றின் போது குழந்தை நெற்றி வெளிவருதல்; presentation of the forehead in delivery.

**இல்வலன்** *ilvalaṉ,* பெ.(n.) வாதாபியின் தமையனான அசுரன் (வேதாரணி. மணவளை.13); a daitya, elder brother of *vātāpi*, destroyed by agastya.

*[Skt. ilvala > த. இல்வலன்.]*

**இலக்கினம்** *ilakkiṉam,* பெ.(n.) 1. பிறப்பு ஓரையின் தோற்றம்(விதான. மரபி. 3, உரை); rising of a sign of the zodiac. 2. நன் முழுத்தம் (இரகு. முடிசூ.63); hour fixed for auspicious ceremonies.

*[Skt. lagna > த. இலக்கினம்.]*

**இலக்கினாதிபதி** *ilakkiṉādipati,* பெ.(n.) பிறப்போரைக்கு (இலக்கினத்திற்கு) உரியவன்; ruling planet of the ascendant.

த.வ. ஓரையன்.

*[Skt. lagna+adipati>த. இலக்கினாதிபதி.]*

**இலக்குமணன்** *ilakkumaṇaṉ,* பெ.(n.) இராமனின் தம்பி (காஞ்சிப்பு. வீரராக.8); the brother and faithful companian of R*āma* during his exile.

*[Skt. laksmaṇa > த. இலக்குமணன்.]*

**இலக்குமன்** *ilakkumaṉ,* பெ.(n.) **இலக்குமணன்** பார்க்க (திவ். பெரியதி.2, 3, 7); see *ilakkumaṇaṉ.*

*[Skt. laksmaṇa > த. இலக்குமணன் > த. இலக்குமன்.]*

**இலக்குமி** *ilakkumi,* பெ.(n.) 1. அரியின் மனைவி; the consort of *Visṇu.* 2.திருமகள்; the goddess of prosperity.3. செல்வம்; good fortune. 4. மஞ்சள் (விநாயகபு. 3:57); turmeric.

*[Skt. lakṣmi > த. இலக்குமி.]*

**இலக்குவன்** *ilakkuvaṉ,* பெ.(n.) **இலக்குமணன்** பார்க்க (கம்பரா.மாரீச.57); see *ilakkumaṇaṉ.*

*[Skt. lakṣmaṇa > த. இலக்குவன்.]*

**இலக்கை** *ilakkai,* பெ.(n.) பாதுகாவல்; protection. *"இலக்கை யற்றதவ் விலங்கைக்கு மிராவணன் றனக்கும்" (கம்பரா. கும்பகரு. 339).*

*[Skt. raksa > த. இலக்கை.]*

**இலகடம்** *ilakaḍam,* பெ.(n.) அம்பாரி; howdah. *"யானைமேல்...... பொன்னிலகடங்கள்" (கலிங்.புதுப்.278).*

*[Mhr. lagada > த. இலகடம்.]*

**இலகிரி**[1] *ilakiri,* பெ.(n.) 1. அபினி; opium. 2. கஞ்சா; gunjah, which is the produce of cannabis satives. 3. சாதிக்காய்; nutmeg. 4. சாதிப்பத்திரி; mace covering the nutmeg kernal. 4. மயக்கத்தை உண்டு பண்ணும் பொருள்; intoxicating substance in general (சா.அக.).

**இலகிரி**[2] *ilakiri,* பெ.(n.) அறிவு நூலில் கூறியுள்ள மெய் மறந்த ஒரு நிலைமை; இலகிரியில் சொக்குதல்; (in philosophy) a modifical of physical consciousnes in which the man forget all about him (சா.அக.).

**இலகிமா** *ilakimā,* பெ.(n.) எட்டுப் பேறுகளில் (அட்டமா சித்திகள்) ஒன்று. அதாவது பஞ்சினொய்தாதல்; இலேசாதல் (திருவிளை. அட்டமா.24); one of the eight supernatural powers practised by siddhars, i.e the art of becoming as soft as cotton on becoming extremely light as dust. It also includes the art of floating on the surface of water, or in the atmosphere.

*[Skt. laghiman > த. இலகிமா.]*

**இலகோட்டா** *ilakōṭṭā,* பெ.(n.) மரவகை; loquat.

*[Chi. luhwat > த. இலகோட்டா.]*

**இலங்கணி** *ilaṅgaṇi,* பெ.(n.) அங்கார தாரை (இராமநா.சுந்தர.2); a female demon who was the keeper of the entrance gate of the city of *laṅkā*, slain by *Hanumān.*

*[Skt. laṅkā > த. இலங்கணி.]*

**இலங்கனம்**[1] *ilaṅgaṉam,* பெ.(n.) 1. தடை; stopping, opposing, preventing. *"இத்தர்மத்தை இலங்கனம் பண்ணுவான்" (S.I.I.IV, 20).* 2. நோன்பு; fasting.

*[Skt. laṅghana > த. இலங்கனம்.]*

**இலங்கனம்**[2] *ilaṅkaṉam,* பெ.(n.) கடக்கை (நாநார்த்த.); transgression.

*[Skt. laṅghana > த. இலங்கனம்.]*

**இலங்காபுரம்** *ilaṅgā-puram,* பெ.(n.) இராவணனின் தலைநகரம் (திவ்.இயற்.3, 51); capital city of the *Laṅkā* of *Rāvaṇa.*

*[Skt. laṅka+puram > த. இலங்காபுரம்.]*

**இலங்காபுரி** *ilaṅgā-puri,* பெ.(n.) **இலங்காபுரம்** பார்க்க; see *ilaṅgāpuram.*

*[Skt. laṅka+puri > த. இலங்காபுரி.]*

**இலங்கிகன்** *ilaṅkikaṉ,* பெ.(n.) துறவி (அக.நி.); asetic.

*[Skt. lingi > த. இலிங்கிகன்.]*

**இலங்கோடு** *ilaṅkōḍu,* பெ.(n.) நீர்ச்சீலை (கோவணம்); stripe of cloth fitted to the loins. *"இலங்கோடு கௌபீனமே" (அலங்காரச் சிந்து.16).*

*[Hind. laṅgōṭa > த. இலங்கோடு.]*

**இலச்சி-த்தல்** *ilacci-,* 11 செ.குன்றாவி.(v.t.) நாணுதல்; to be bashful, coy, shy.

*[Skt. lajja > த. இலச்சி-.]*

**இலச்சை** *ilaccai,* பெ.(n.) 1. கூச்சம்; bashfulness, coyness, shyness (பிங்.). 2. நாணம்; shame.

*[Skt. lajjā > த. இலச்சை.]*

**இலச்சைக்கேடு** *ilaccai-k-kēḍu,* பெ.(n.) வெட்கக் கேடு; shamelessness.

**த.வ. நாணக்கேடு.**

*[இலச்சை+கேடு.]*

***[Skt.** lajjā + > த. இலச்சை.]*

**இலட்சணகாவியம்** *ilaṭcaṇa-kāviyam,* பெ.(n.) அகத்தியர் இயற்றிய ஐந்து பாடங்கள் பற்றிய ஐந்து தொகுப்புகள்; one of the five volumes compiled by Agastya on five different subjects (சா.அக.).

**இலட்சணம்** *ilaṭcaṇam,* பெ.(n.) 1. அழகு; beauty. 2. இயல்பு; nature quality. 3. அடையாளம்; symbol, sign.

*[த. இலக்கணம் > **Skt.** லக்ஷண > த. இலட்சணம்.]*

சிறந்த நடைக்கு எடுத்துக்காட்டாக கற்றோர் பின்பற்றும் இலக்கு.

**இலட்சணமாயி** *ilaṭcaṇamāyi,* பெ.(n.) வெண்காரவுள்ளி; white onion - *Allium cepa* (சா.அக.).

**இலட்சம்** *ilaṭcam,* பெ.(n.) நூறாயிரம்; lakh, 1,00,000.

*[த.இலக்கம்>**Skt.**லக்ஷ>த. இலட்சம்.]*

**இலட்சாதிகாரி** *ilaṭcātikāri,* பெ.(n.) பெருஞ் செல்வன்; wealthy man, lord of a lakh.

***[Skt.** lakṣa+adikāri > த.இலட்சாதிகாரி.]*

**இலட்சாதிபதி** *ilaṭcātipati,* பெ.(n.) **இலட்சாதிகாரி** பார்க்க; see *ilaṭcātikāri.*

***[Skt.** lakṣa+adipati > த. இலட்சாதிபதி.]*

**இலட்சியம்** *ilaṭciyam,* பெ.(n.) 1. குறி; aim, target. 2. மதிப்பு; esteem, respect.

*[த.இலக்கியம்>**Skt.**லக்ஷ்ய>த. இலட்சியம்.]*

**இலட்சுணா** *ilaṭcuṇā,* பெ.(n.) பெரு வழுதலை; long brinjal (சா.அக.).

**இலட்சுமணபுத்திரர்** *ilaṭcumaṇaputtirar,* பெ.(n.) நறுந்தாளி; a fragrant plant of the convolvulus (சா.அக.).

**இலட்சுமணமூலம்** *ilaṭcumaṇamūlam,* பெ.(n.) **இலட்சுமணபுத்திரர்** பார்க்க; see *ilaṭcumaṇaputtirar* (சா.அக.).

**இலட்சுமணம்** *ilaṭcumaṇam,* பெ.(n.) தாளி; American bind weed (சா.அக.).

**இலட்சுமி**[1] *ilaṭcumi,* பெ.(n.) திருமகள்; *Lakṣmī,* goddess of prosperity.

***[Skt.** lakṣmī > த. இலட்சுமி.]*

**இலட்சுமி**[2] *ilaṭcumi,* பெ.(n.) 1. அரிதாரம்; orpiment. 2. வன்னி; suma tree. 3. பொடுதலை; a plant-verbena nodiflora. 4. பன்னீர்; rose water. 5. தாளி; American bind weed (சா.அக.).

**இலட்சுமிசிரேட்டர்** *ilaṭcumisirēṭṭar,* பெ.(n.) வெளித்தாமரை; sky Lotus, the roots of which float in the air (சா.அக.).

**த.வ.** ஆகாசத்தாமரை.

**இலட்சுமிசுவர்ணம்** *ilaṭcumisuvarṇam,* பெ.(n.) பொன் வண்ணச் சாலி; a gold coloured plant unidentified (சா.அக.).

**இலட்சுமிசேர்க்கை** *ilaṭcumi-cērkkai,* பெ.(n.) வன்னி; suma tree (சா.அக.).

**இலட்சுமிசைபத்திரசனனி** *ilaṭcumišai pattiracaṇaṇi,* பெ.(n.) தாளி; American bind weed.

**இலட்சுமிநாசனி** *ilaṭcumināšaṇi,* பெ.(n.) 1. தான்றிக்காய்; devils abode. 2. தாளி; American bind weed (சா.அக.).

**இலட்சுமிரேட்டம்** *ilaṭcumirēṭṭam,* பெ.(n.) ஓரிதழ்த் தாமரை; a little herb with mono petalous flower (சா.அக.).

**இலட்சுமிவண்டு** *ilaṭcumivaṇḍu,* பெ.(n.) கரப்பான்பூச்சி; cockroach, is a harbinger of prosperity.

*[இலட்சுமி + வண்டு.]*

***[Skt.** lakṣmi>த. இலட்சுமி.]*



**இலட்சுமிவிலாசம்** *ilaṭcumivilāšam,* பெ.(n.) 1. பாக்கு; areca-nut. 2. வெள்ளரிசி அல்லது பச்சரிசி; raw rice (சா.அக.).

**இலட்சோபலட்சம்** *ilaṭcōbalaṭcam,* பெ.(n.) பெருந்தொகை; lakhs upon lakhs, vast numbers.

***[Skt.** lakṣa+upa-lakṣa>த.இலட்சோபலட்சம்.]*

**இலட்டு** *ilaṭṭu,* பெ.(n.) உருண்டை வடிவான இனிப்பு வகை; sweet meat balls in many varities.

**த.வ. இன்னுருண்டை.**

***[Skt.** laḍḍu > த. இலட்டு.]*

**இலட்டுகம்** *ilaṭṭugam,* பெ.(n.) **இலட்டு** பார்க்க; see *ilaṭṭu.*

***[Skt.** laḍḍuka > த. இலட்டுகம்.]*

**இலட்டுவம்** *ilaṭṭuvam,* பெ.(n.) **இலட்டு** பார்க்க (திவ்.பெரியாழ்.2, 9, 9); see *ilaṭṭu.*

***[Skt.** laḍḍuka > த. இலட்டுவம்.]*

**இலட்டை[1]** *ilaṭṭai,* பெ.(n.) அப்பம் (அக.நி.); round cake of rice flour and sugar.

***[Skt.** laḍḍu > த. இலட்டை.]*

**இலட்டை[2]** *ilaṭṭai,* பெ.(n.) 1. அடை, தோசை; cake. 2. பொரிமா உருண்டை; a ball made of fried rice flour and sugar (சா.அக.).

**இலடகம்** *iladagam,* பெ.(n.) புளிய மரம்; tamarind tree (சா.அக.).

**இலடதாவிகம்** *iladatāvikam,* பெ.(n.) எருமை முன்னை; heart leaved dusky fire brand teak (சா.அக.).

**இலடம்** *iladam,* பெ.(n.) புளியமரம்; tamarind tree (சா.அக.).

**இலடவி** *iladavi,* பெ.(n.) நான்கு வகைப்பட்ட நறுமணமுள்ள கட்டைகளுள் கள்ளி மரத்தினுள் இருக்கும் கட்டை; an aromatic wood which consist of four varities, white, red, yellow and black. Its formed inside the kalli tree (சா.அக.).

**இலண்டம்** *ilaṇḍam,* பெ.(n.) யானை, குதிரை முதலியவைகளின் சாணம்; dung as of elephants, horses etc. (சா.அக.).

**இலண்டணாமணக்கு** *ilaṇḍaṇāmaṇakku,* பெ.(n.) சீமை ஆமணக்கு; foreign castor plant (சா.அக.).

*[இலண்டன் + ஆமணக்கு.]*

*[**E.** London > த. இலண்டன்.]*

**இலண்டன்பருத்தி** *ilaṇḍaṉparutti,* பெ.(n.) அமெரிக்கா நாட்டுப் பருத்தி; American cotton tree or plant (சா.அக.).

**த.வ. இலாடன் பருத்தி.**

*[இலண்டன் + பருத்தி.]*

*[**E.** London > த. இலண்டன்.]*

**இலணை** *ilaṇai,* பெ.(n.) அரசு; peepul tree (சா.அக.).



**இலதிகை** *ilatigai,* பெ.(n.) சிறுபடர் கொடி; a small spreading plant (சா.அக.).

**இலதுமுகி** *ilatumuki,* பெ.(n.) கல்லுப் பயிற்றங் கொடி; a kind of country bean (சா.அக.).

**இலபனம்** *ilabaṉam,* பெ.(n.) வாய் (Anat.); mouth (சா.அக.).

*[Skt. lapana > த. இலபனம்.]*

**இலபனரம்** *ilabaṉaram,* பெ.(n.) வாய்ப்புண்; the formation of small superficial ulcers in the mucous membrane of the mouth (சா.அக.).

**இலபி-த்தல்** *ilabi-,* 11 செ.குன்றாவி.(v.t.) 1. நேர்தல், நிகழ்தல்; happening. 2. வாய்வேக்காடு; inflammation of the mouth, stomatitis (சா.அக.).

**இலபேதகி** *ilapētagi,* பெ.(n.) கழுநீர்ப்பூ; water lily (சா.அக.).

**இலம்பம்** *ilambam,* பெ.(n.) 1. உயர்வு; height. 2. மிகு அகலம்; expanse, width.

*[Skt. lamba > த. இலம்பம்.]*

**இலமலர்** *ilamalar,* பெ.(n.) இலவ மலர்; flower of silk cotton tree (சா.அக.).



**இலயசத்தி** *ilayasatti,* பெ.(n.) சிவனியக் கொண்முடிபில் உருவமில்லாத சிவனின் சத்தி (சி.சி.2, 75, மறைஞா); (*Šaiva) Šakti* of ilaya *Šivaṉ.*

*[Skt. laya-satti > த. இலயசத்தி.]*

**இலயதத்துவம்** *ilayatattuvam,* பெ.(n.) ஊழிக்காலத்தில் தன் செயல்களெல்லாம் ஒடுங்கிக் காரண மாத்திரையாய் நிற்கும் இறைவனிலை (சி.சி.6, 6, ஞானப்.); *(Šaiva)* state of the supreme being during the *maka-caṅkāram.*

*[Skt. laya-tattva > த. இலயதத்துவம்.]*

**இலயம்** *ilayam,* பெ.(n.) 1. அழிவு; dissolution. 2. இரண்டறக்கலத்தல்; merging, absorption. 3. ஞானத்தை மட்டும் திருமேனியாக உடைய கடவுள் நிலை; state of god in which knowledge alone is manifest, one of three avattai (*Šaiva*). 4. ஒழிவு (சீவக.1256); effacement. 5. தாளவறுதி; exactness of time-measure. *"ஆக்கிய விலயம் நீங்கிற்று" (சீவக.1258).* 6. சருதிலயம்; union of song, dance and instrumental music. *"பண்ணிய விலயம் பற்றிப் பாடிய" (சீவக.727).* 7. கூத்து; a dance *"இலயங்களாடக் கண்டேன்" (தேவா. 1234, 6).*

*[Skt. laya > த. இலயம்.]*

**இலயமாதல்** *ilayamātal,* பெ.(n.) 1. ஒன்றுபடல்; to be united, absorbed, an euphemism for dying. 2. அழிதல்; to vanish, to fade away. *"சாந்த மிலயமா வாடுகின்றான்" (சீவக. 1256).*

**இலயமுத்தி** *ilaya-mutti,* பெ.(n.) பரம் பொருளொடு இரண்டறக் கலக்கையாகிய (முத்தி) வீடுபேறு (யாழ்.அக.); salvation through absorbtion into God head.

*[இலயம் + முத்தி.]*

*[**Skt.** laya> த. இலயம்.]*

*த. முத்தி > **Skt.** mukti*

**இலயன்** *ilayaṉ,* பெ.(n.) உருவமற்ற சிவன்; the formless aspect of *Śiva* in which he is united with the energy of knowledge.

*[**Skt.** laya > த. இலயன்.]*

**இலயி-த்தல்** *ilayi-,* 11 செ.கு.வி.(v.i.) 1. ஒடுங்கல்; to dissolve; to be reduced to original state, as the elements, etc., at the dissolution of the world. *"இலயித்த தன்னி லிலயித்ததாம்" (சி.போ.1, 2, 1).* 2. இரண்டறக் கலத்தல்; to be absorbed as a soul in the diety. 3. ஐக்கியமாதல்; to unite. 4. அழிதல்; to come to destruction, die, perish.

*[**Skt.** lay > த. இலயி-.]*

**இலயை** *ilayai,* பெ.(n.) தாள உறுப்புகளில் ஒன்று (பரத. தாள.51); element of time-measure which specifies the pace at which a composition is to be performed, of three kinds, one of ten *tāḷa-p-pirāṇam*

*[**Skt.** laya > த. இலயை.]*

**இலலாடம்** *ilalāḍam,* பெ.(n.) நெற்றி (பிங்.); forehead.

*[**Skt.** lalāṭa > த. இலலாடம்.]*

**இலலாடலிபி** *ilalāṭa-lipi,* பெ.(n.) தலையெழுத்து; lines on the skull regarded as *Brahmā's* writing indicative of one's destiny; fate.

*[**Skt.** lalāṭa+lipi > த. இலலாடலிபி.]*

**இலலாலம்** *ilalālam,* பெ.(n.) 1. குதிரை; horse. 2. வரி; the lines on the palm forehead etc.

**இலலிதபஞ்சமி** *ilalita-pañchami,* பெ.(n.) பண்வகை (பரத. ராக.103); (Mus.) a specific melody-type.

*[**Skt.** lalita-pañchami>த. இலலிதபஞ்சமி.]*

**இலவிதை** *ilavithai,* பெ.(n.) மான் மதம் (கத்தூரி); musk.

**இலவகம்** *ilavakam,* பெ.(n.) தசையரும்புகள்; small round fleshy masses in a wound.

**இலவணம்** *ilavaṇam,* பெ.(n.) 1. உப்பு; common salt. 2. உவர்ப்பு; saltness (சா.அக.).

*[**Skt.** lavaṇa > த. இலவணம்.]*

**இலவணவாயு** *ilavaṇa-vāyu,* பெ.(n.) உப்பு வாயு; nitrogen.

*[**Skt.** lavaṇa-vāyu > த. இலவணவாயு.]*

**இலவணவாழை** *ilavaṇa-vāḻai,* பெ.(n.) ஒரு வாழை; a kind of plantain.

*[இலவணம் + வாழை.]*

*[**Skt.** lavana > த. இலவணம்.]*

**இலவணவாழைக்குழிநீர்** *ilavaṇa-vāḻai-k-kuḻinīr,* பெ.(n.) வாழை மரத்தின் அடியில் நிற்கும் தண்ணீர்; water found deposited at the bottom of the plaintain tree.

*[இலவணம் + வாழை + குழிநீர்.]*

*[**Skt.** lavana > த. இலவணம்.]*

**இலவணவித்தை** *ilavaṇavittai,* பெ.(n.) 1. உப்பை நெருப்பிற்கு ஓடாதபடிக் கட்டும் கலை; the art of consolidating common salt or any salt so as to melt in field. 2. ஒரு வகை கண்கட்டுக் கலை; kind of jugglery.

**இலவணவேதை** *ilavaṇa-vēdai,* பெ.(n.) உப்பைக் கட்டி அதினின்று பொன்னாக்கம் செய்தல்; transmiting metals into gold with the aid of consolidated salt.

**இலளிதம்** *ilaḷidam,* பெ.(n.) 1. விருப்பம், ஆசை (நாநார்த்த.); longing wish. 2. பொருளின் தெளிவு; lucidity of expression.

[**Skt.** *lalita > த. இலளிதம்.]*

**இலளிதை¹** *ilaḷidai,* பெ.(n.) பார்வதி; *Pārvati,* literally a gentle, tender - hearted woman. *"இலளிதை மாதினை உயிர்த்தான்" (காஞ்சிப்பு. திருவே.5).*

[**Skt.** *lalitā > த. இலளிதை.]*

**இலளிதை²** *ilaḷitai,* பெ.(n.) ஒருவகை முத்தாரம் (நாநார்த்த.); a kind of pearl necklace.

[**Skt.** *laḷita > த. இலளிதை.]*

**இலாக்கா** *ilākkā,* பெ.(n.) 1. மாவட்டம்; district, jurisdiction. 2. அலுவலகத் துறை; department.

[**Arab.** *ilāqā > த. இலாக்கா.]*

**இலாக்கை¹** *ilākkai,* பெ.(n.) 1. செம்பஞ்சு (நாநார்த்த.); red cotton. 2. அரக்கு; shell-lac.

[**Skt.** *laksā > த. இலாக்கை.]*

**இலாக்கை²** *ilākkai,* பெ.(n.) 1. இந்திர கோபத்தைப் போன்ற பூச்சி; an insect resembling ladies fly. 2. ஈர்; louse.

**இலாகவம்** *ilāgavam,* பெ.(n.) திறமை; dexterity, skill, knack. *"குலிசமன்னுங் கையிலாகவத்தினோடும்" (திருவாலவா. 1, 14).*

[**Skt.** *lāghava > த. இலாகவம்.]*

**இலாகா** *ilākā,* பெ.(n.) **இலாக்கா** பார்க்க; see *ilākkā.*

[**Arab.** *ilāqā > த.இலாகா.]*

**இலாக்கிரி** *ilākkiri,* பெ.(n.) செம்மெழுகு; red sealing wax.

**இலாகிரிவத்து** *ilākirivattu,* பெ.(n.) மயக்கத்தை உண்டு பண்ணும் பொருள்; intoxicating drug or other substances (சா.அக.)

*[தெ.lāhir> த.இலாகிரி.]*

**இலாகு** *ilāgu,* பெ.(n.) தாங்கல்; support, hold. *"மகாசந்நிதானம் திருவீதிக்கு எழுந்தருளும் போது இளையதம்பிரான்கள் கைலாகு கொடுத்து வந்தனர்" (தஞ்.வ.).*

[**Skt.** *lāga > த.இலாகு.]*

**இலாகுளம்** *ilāguḷam,* பெ.(n.) சிவனியப் பிரிவுகளுள் ஒன்று (திருக்காளத். பு.30, 26); name of a *Śaiva* sect founded by *lakuliśa.*

[**Skt.** *lākula > த. இலாகுளம்.]*

**இலாங்கலம்** *ilāṅkalam,* பெ.(n.) 1. பூவகை; a kind of flower. 2. பனை; palmyra. 3. கலப்பை; plough. 4. கொடுங்கை; curved cornice. 5. ஆண்குறி; the genital part of a male (சா.அக.).

[**Skt.** *lāṅgala > த. இலாங்கலம்.]*

**இலாங்கலி¹** *ilāṅkali,* பெ.(n.) 1.செங்காந்தள்; flame flower. 2. தென்னை; cocoanut. 3. தென்னை பனை முதலியன; palmyra tree in general. 4. கார்த்திகைப் பூ; white species of November flower.

[**Skt.** *laṅgali > த. இலாங்கலி.]*

**இலாங்கலி²** *ilāṅkali,* பெ.(n.) கலப்பை (பிங்.); plough.

[**Skt.** *lāṅgala > த. இலாங்கலி.]*



**இலாங்கலிகம்** *ilāṅkaligam,* பெ.(n.) கலப்பைக் கிழங்கு; plough root.

**இலாங்கலித்தைலம்** *ilāṅkali-t-tailam,* பெ.(n.) தேங்காய்ப் பாலில் மருந்துச் சரக்குகளைப் போட்டுக் காய்ச்சி இறக்கும் நெய்மம்; a medicated oil extracted from cocoanut milk mixed with other drugs.

**இலாங்கூலம்** *ilāṅkūlam,* பெ.(n.) ஆண்குறி (நாநார்த்த.); membrum virile.

[**Skt.** *laṅgūla > த. இலாங்கூலம்.*]

**இலாச்சம்** *ilāccam,* பெ.(n.) 1. தவச அளவை வகை; a dry measure (j.). 2. ஒரு நில அளவை; space of land in the proportion of 18 units of length to oen of breadth.

[**Port.** *lash > த. இலாச்சம்.*]

**இலாசவோமம்** *ilāca-v-ōmam,* பெ.(n.) திருமணத்தின் போது பொரியால் செய்யப்படும் வேள்வி (சீவக.2464, உரை); sacrificial act of throwing parched paddy into the sacred fire in a marriage ceremony.

[**Skt.** *lāja+hōma > த. இலாசவோமம்.*]

**இலாஞ்சனை**[1] *ilāñjaṉai,* பெ.(n.) 1. குறி; sign, symbol, mark. 2. முத்திரை; seal, signet bearing the name or symbol of the owner. 3. உருத்தோன்ற அச்சுக்கட்டின படம்; outline of a picture. *"நீனிறத் திலாஞ்சனை யெனவும்" (வேதா.சூ.43).* 4. மதிப்பு; credit, esteem.

[**Skt.** *lāñchana > த. இலாஞ்சனை.*]

**இலாஞ்சனை**[2] *ilāñjaṉai,* பெ.(n.) கூச்சம்; bashfulness.

[**Skt.** *lajjā > த. இலாஞ்சனை.*]

**இலாஞ்சனம்** *ilāñjaṉam,* பெ.(n.) **இலாஞ்சனை** பார்க்க; see *ilāñjaṉai*

**இலாஞ்சி** *ilāñji,* பெ.(n.) ஏலம்; cardomom plant.

[**U.** *ilāci > த. இலாஞ்சி.*]

**இலாஞ்சினைப்பேறு** *ilāñjiṉai-p-pēṟu,* பெ.(n.) பழைய வரிவகை (S.I.I.ii, 115); an ancient tax.

[**Skt.** *lāñchana+pēṟu>த. இலாஞ்சினைப் பேறு.*]

**இலாட்சை** *ilāṭcai,* பெ.(n.) செல்வாக்கு; red lac. *"இலாட்சைச் சத்தான தைலத்தின்" (தைலவ.தைல.60).*

[**Skt.** *lākṣā > த. இலாட்சை.*]

**இலாடம்**[1] *ilāḍam,* பெ.(n.) சேலை (நாநார்த்த.); saree.

[**Skt.** *lāṭa > த. இலாடம்.*]

**இலாடம்**[2] *ilāḍam,* பெ.(n.) குருகு (மூலம்) விண்மீனுக்கும் கதிரவனுக்கும் உள்ள தொலைவை யொட்டி வரையறுக்கும் நாள் (பஞ்.); (astron.) the day in which the sun's position is in a specified relation to the constellation *mūlam.*

[**Skt.** *lāṭa > த. இலாடம்.*]

**இலாடம்**[3] *ilāḍam,* பெ.(n.) குதிரைக் காலில் பொருத்தும் இரும்புக் காலணி; horse shoe.

**த.வ.** குளம்பணி.

[**U.** *lāḍa > த. இலாடம்.*]

**இலாபகரம்** *ilāba-karam,* பெ.(n.) ஊதியம் தருவது; that which is profitable.

[**Skt.** *lābha+> த. இலாபகரம்.*]

**இலாபத்தானம்** *ilāba-t-tāṉam,* பெ.(n.) பிறப்போரைக்கு (இலக்கினத்திற்கு)ப் பதினோராமிடம்; the 11th house from the ascendant, as indicative of prosperity.

[**Skt.** *lābha+stāna > த. இலாபத்தானம்.*]

**இலாபநட்டம்** *ilāba-naṭṭam,* பெ.(n.) ஆதாயமும், இழப்பும்; profit and loss.

**த.வ. ஆகுபோகு.**

[**Skt.** *lābha+naṣṭa > த. இலாபநட்டம்.*]

**இலாபம்** *ilābam,* பெ.(n.) 1. ஆதாயம்; gain, profit. 2. பயன்; advantage, benefit. 3. தவச அளவையில் முதலெண்ணுக்கு வழங்கும் சொல்; `fortunate first', an

auspicious term applied to the first unit in measuring grain.

த.வ. ஆகு, ஆதாயம்.

*[Skt. lābha > த. இலாபம்.]*

**இலாபாந்தராயம்** *ilāpāntarāyam,* பெ.(n.) குறித்த பேற்றை இடைநின்று விலக்குங் கருமத் தடை (சீவக. 3081, உரை); (jaina) an inpediment to the attainment of one's object, caused by karma.

*[Skt.lābha+antarāya>த. இலாபந்தராயம்.]*

**இலிகிதம்** *iligidam,* பெ.(n.) 1. எழுதப்பட்டது; written document. 2. கடிதம்; letter, epistic. 3. அறுபத்து நான்கு கலையுள் ஒன்றான எழுதும் திறமை; penmanship, one of *arupattunānku-kalai.*

த.வ. எழுத்து, மடல்.

*[Skt. likhita > த. இலிகிதம்.]*

*த. இலக்கு > Skt. likh.*

**இலிகிதன்** *iligidan,* பெ.(n.) 1. எழுத்தாளன்; writer. 2. இந்து சமையம், (மதச்) சட்டங்களை உருவாக்கியவருள் ஒருவர்; a writer on hindu law.

*[Skt. likhita > த. இலிகிதன்.]*

**இலிகுசம்** *iligušam,* பெ.(n.) எலுமிச்சை (பிங்.); sour lime.

*[Skt. likuca > த. இலிகுசம்.]*



**இலிங்கக்கட்டி**[1] *ilinga-k-katti,* பெ.(n.) ஆண் குறியிலுண்டாகும் கட்டி; a lump of vermilon.

*[இலிங்கம் + கட்டி.]*

*[Skt. linga> த. இலிங்கம்.]*

**இலிங்கக்கட்டி**[2] *ilinga-k-katti,* பெ.(n.) வீர சைவன்; *lingāyat,* one who wears round his neck a *linga* enclosed usuu in a silver case.

*[இலிங்கம் + கட்டி.]*

*[Skt. linga> த. இலிங்கம்.]*

**இலிங்கக்கட்டு**[1] *ilinga-k-kattu,* பெ.(n.) நெருப்பிற்கோடாதபடிக் கட்டுண்ட இலிங்கம்; a lump of consolidated vermilion which is used for transmiting metals into gold.

*[இலிங்கம் + கட்டு.]*

*[Skt. lingula> த. இலிங்கம்.]*

**இலிங்கக்கட்டு**[2] *ilinga-k-kattu,* பெ.(n.) வைப்பு மருந்து வகை (பைஷஜ. 127); preparation of mercury with sulphur.

*[இலிங்கம் + கட்டு.]*

*[Skt. lingula> த. இலிங்கம்.]*

**இலிங்கக்கல்** *ilinga-k-kal,* பெ.(n.) வளைவுக் கட்டடத்தின் மையக்கல் (C.E.M.); guard-stone in an arch.

*[இலிங்கம் + கல்.]*

*[Skt. linga> த. இலிங்கம்.]*



**இலிங்கக்கவறை** *ilinga-k-kavarai,* பெ.(n.) சிவனிய (சைவ)க் கவறை வகுப்பினர்; a division of the Kavarai caste who are Lingayats, the Kavara is being mostly *Vaiṣṇavaites.*

*[Skt.linga+kavarai>த. இலிங்கக்கவறை.]*

**இலிங்கக்கவசம்** *iliṅga-k-kavašam,* பெ.(n.) ஆண் குறியின் மேல் தோல்; perpuce or foreskin of the penis (சா.அக.).

*[இலிங்கம் + கவசம்.]*

*[**Skt.** liṅga> த. இலிங்கம்.]*

**இலிங்கக்கழலை** *iliṅga-k-kaḻalai,* பெ.(n.) ஆண்குறியில் உண்டாகும் கழலைக் கட்டி; a wart attended with swelling of the part and is due to the aggravated vayu, in the hard and inflammed penis causing pressure in the urethra (சா.அக.).

*[இலிங்கம் + கழலை.]*

*[**Skt.** liṅga> த. இலிங்கம்.]*

**இலிங்கக்குழம்பு** *iliṅga-k-kuḻambu,* பெ.(n.) ஒரு வகை மருந்துக் கூட்டு; a semi solid preparation with consolidated vermilion used in medicine (சா.அக.).

*[இலிங்கம் + குழம்பு.]*

*[**Skt.** liṅga> த. இலிங்கம்.]*

**இலிங்கக்கோவை** *iliṅga-k-kōvai,* பெ.(n.) கை விரல்களைப் போன்று தோற்றமுள்ள ஐவிரலி என்னும் படர் கொடியின் இலை; creeping plant whose leaf is said to resemble the fingers.

*[இலிங்கம் + கோவை.]*

*[**Skt.** liṅga> த. இலிங்கம்.]*

**இலிங்ககாசம்**[1] *iliṅga-kāšam,* பெ.(n.) விழிவெண்படலம்; cataract.

*[**Skt.** liṅga+kāsam > த. இலிங்ககாசம்.]*

**இலிங்ககாசம்**[2] *iliṅga-kāšam,* பெ.(n.) கண்ணில் வரும் ஒரு நோய் (நேத்திர வெண்படலம்); cataract of the eye.

**த.வ. கண்புரை.**

*[**Skt.** liṅga+kāsam > த. இலிங்ககாசம்.]*

**இலிங்ககீடரோகம்** *iliṅgakīḍa-rōgam,* பெ.(n.) புழுக்களை உண்டாக்கும் ஆண் குறியைப் பற்றிய நோய்; a disease of the penis developing germs.

**இலிங்ககோளம்** *iliṅgakōḷam,* பெ.(n.) அண்டவாதம்; a circumscribed collection of fluid in the scrotam - hydrocele or scrotal hydrocele.

**இலிங்கச்சோர்வு** *iliṅga-c-cōrvu,* பெ.(n.) அகவை முதிர்ச்சியாலும், நோய், வலுவின்மை, நரம்புக் கோளாறு முதலிய காரணங்களை முன்னிட்டும், ஆண்குறி தளர்ச்சி அடைதல்; want of erectile power in the penis due to old age, sexual abuse, nervousdeblity nervous disorder etc.

*[இலிங்கம் + சோர்வு.]*

*[**Skt.** liṅga> த. இலிங்கம்.]*

**இலிங்கசத்துரசம்** *iliṅgacattu-rašam,* பெ.(n.) பல கல்லு மருந்து; a kind of medicine prepared from the essense of several stones.

*[**Skt.** liṅga-cattu-rāšā>த. இலிங்கசத்து ரசம்.]*

**இலிங்கசரீரம்** *iliṅgašarīram,* பெ.(n.) வீடுபேறு அடையும் வரை ஆதனோடு கூட இருக்கும் ஒரு வகை (வித) மெல்லிய உடல்; a sublle or tenuous body penetrading and encasing the gross or the visible body.

*[**Skt.** liṅga-šarīra> த. இலிங்கசரீரம்.]*

**இலிங்கசுத்தி**[1] *iliṅgasutti,* பெ.(n.) தமிழ் மருத்துவத்தில் கூறிய ஐந்து முறையில், செந்நிற கனிமத் தூளைத் தூய்மை செய்யும் முறை; (in medicine) vermilion which has been purified according to the five processes of purification contemplated in the Tamil medicine.

*[**Skt.** liṅga-sutti> த. இலிங்கசுத்தி.]*

**இலிங்கசுத்தி**[2] *iliṅga-šutti,* பெ.(n.) ஐந்தாற்றலுள் (பஞ்ச சுத்தியுள்) ஒன்று; realizing the imminence of God in the

non-sentient universe, as well as in the sentient, one of *pañca-cutti.*

*[Skt. linga+cutti > த. இலிங்கசுத்தி.]*

**இலிங்கசூலை** *ilinga-sūlai,* பெ.(n.) ஆண் குறியில் வரும் ஒரு வகை நோய்; a kind of a venereal disease of men (சா.அக.).

*[Skt. lingasūlai > த. இலிங்கசூலை.]*

**இலிங்கத்துருத்திரம்** *ilinka-t-turuttiram,* பெ.(n.) மண்டையோட்டு (அண்ட)ச் சுண்ணம்; a calcined medicine prepared out of human skull (சா.அக.).

*[Skt.linga-turuttira>த.இலிங்கத் துருத்திரம்.]*

**இலிங்கத்தேகம்** *ilinga-t-tēgam,* பெ.(n.) 1. நுண்ம உடம்பு; the astral body. 2. தத்துவங்களடங்கிய உடம்பு; the spiritual body consisting of the real or essential nature of things. 3. உயர்நிலை அடையும் பருப்பொருளாகிய உடம்பு; a higher development of the material body (சா.அக.).

*[Skt. linga-dēha> த. இலிங்கத்தேகம்.]*

**இலிங்கதாரி** *ilinga-dāri,* பெ.(n.) **இலிங்கக் கட்டி** பார்க்க; see *ilinga-k-katti.*

*[Skt. linga+dharin > த. இலிங்கதாரி.]*

**இலிங்கநாசனி** *ilinka-nāšini,* பெ.(n.) கண்ணிலுண்டாகுங் காசநோயை விரைவில் குணப்படுத்தாவிடில், காற்றழுத்தமானது கண்களின் நான்காம் புரையை அடைந்து, பார்வை மண்டலமாகிய, பாவை திரை போட்டதுபோல் மறையப்படுவது அல்லாமற் பார்வையைக் கெடுத்துக் குருட்டுண்டாக்கும்; a form of cataract of the eye defeating, the eye sight and thus making one completed blind. It is due to the opacity of the whole lens. If it is not treated properly at the onset it progresses and passes into several stages owing to the deranged condition of vayu and finally destroys the lens (சா.அக.).

*[Skt. linga-nāšini> த. இலிங்கநாசினி.]*

**இலிங்கபந்தனி** *ilingapantani,* பெ.(n.) 1.ஆத்தி மல்லிகை; இளமையை உண்டாக்கும் ஒரு மருந்து மூலிகை; a herb used in rejuvenation. This is said to consolidate vermilion. 2. இலிங்கத்தைக் கட்டக்கூடிய சரக்கு; any drug capable of consolidating vermilion (சா.அக.).

*[Skt. linga-pattani> த. இலிங்கபந்தனி.]*

**இலிங்கபந்தி** *ilingapandi,* பெ.(n.) பேய்த் தும்மட்டி; bitter apple.

*[Skt. linga+panti> த. இலிங்கபந்தி.]*

**இலிங்கபற்பம்** *ilinga-parpam,* பெ.(n.) நீற்று மருந்துவகை; calcined powder of cinnabar.

*[Skt.hingula+paspa > த. இலிங்கபற்பம்.]*

**இலிங்கபாடாணம்** *ilinga-pādānam,*பெ.(n.) முப்பத்திரண்டு நஞ்சுகளில் ஒன்று; one of the 32 kinds of arsenics in its native state.

*[Skt. hingula+pāsāna> த. இலிங்க பாடாணம்.]*

**இலிங்கபிராணி** *ilingapirāni,* பெ.(n.) பரு உடலின் ஆவி; the soul of the astral body (சா.அக.).

*[Skt. linga-pirāni> த. இலிங்கபிராணி.]*

**இலிங்கபுடோல்** *ilingapudōl,* பெ.(n.) ஐவிரலிக் கொவ்வை; ghee-ajwaun.

*[Skt. linga-pudōl> த. இலிங்கபுடோல்.]*

**இலிங்கபுராணம்** *ilinga-purānam,* பெ.(n.) 1. ஒரு தமிழ் நூல்; a rendering of the above in Tamil by *Kula-šēkara-pāndian.* 2. பதினெண் தொன்மங்களுள் ஒன்று; a chief *purana,* one of *patinen-purānam.*

*[Skt.linga+purāna > த. இலிங்கபுராணம்.]*

**இலிங்கபெந்தகத்தி** *ilingapendagatti,* பெ.(n.) செவ்வாமணக்கு; a variety of red castor plant (சா.அக.).

**இலிங்கப்பருப்பு** *iliṅga-p-paruppu,* பெ.(n.) புங்கன் கொட்டைப் பருப்பு; the kernal of the seed of the plant.

*[இலிங்கம் + பருப்பு.]*

*[**Skt.** liṅga> த. இலிங்கம்.]*

**இலிங்கப்புகை** *iliṅga-p-pugai,* பெ.(n.) எருக்கன் வேர்ப் பட்டை–8, விராகனிடை, எருக்கன் கரி, 4. வி.சாதி லிங்கம், 4. வி.மிளகு, 1. இவற்றைத் தனித் தனியே பொடித்துப் பிறகு ஒன்றுபடக் கலந்து கல்வத்திலிட்டுப், பரட்டை இலையின் சாற்றை விட்டரைத்து, மயினமாயின பின் எடுத்து, பன்னிரண்டு அடைகளாகத் தட்டி வெயிலிலுலர்த்தி அவற்றிலொன்றெடுத்து நெருப்பிலிட்டுப் புகையை உள்ளுக்குக் கொள்வது இலிங்கப் புகை; the fumes of vermilon or factitious cinnabar (சா.அக.).

*[இலிங்கம் + புகை.]*

*[**Skt.** liṅga> த. இலிங்கம்.]*

**இலிங்கம்**[1] *iliṅgam,* பெ.(n.) 1. குறி; sign, mark, symbol, token, emblem. 2. ஆண்குறி (திவா.); glans penis. 3. ஏது; the invariable mark that proves the existence of anything in an object. 4. வடமொழிப் பெயர்ச்சொற்கு உரிய பால்; gender of Sanskrit nouns, in three forms, viz. *புல்லிங்கம், ஸ்திரீலிங்கம், நபுஞ்சகலிங்கம்.* 5. சிவகுறி (லிங்கம்) கல்லினாற் செய்த குழவியைப் போன்ற உருவமைப்பு; symbol of *śivaṉ* in stone or other material, set up and worshipped. 6. **இலிங்கபுராணம்** பார்க்க; see *iliṅgapurāṇam.*

*[**Skt.** liṅga > த. இலிங்கம். வல்லங்கம் பார்க்க; see vallaṅgam.]*

வல்=கல். அங்கம்=துண்டு, சிறுபகுதி. வல்லங்கம் – சிறிய கல். **த.** வல்லங்கம் > வலங்கம் >லங்க>**Skt.**லிங்க எனத் திரிந்துள்ளது. வடமொழியில் ஆண் குறியைக் குறித்த லிங்க என்னும் சொல்லுக்குச் சிவலிங்கத்தைக் குறித்த வல்லங்கத்தின் திரிபாகிய லிங்கம் என்னும் சொல்லுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை.

**த.வ. வல்லங்கம், தாணு, சிவக்குறி.**

**இலிங்கம்**[3] *iliṅgam,* பெ.(n.) 1. ஏது; the invariable mark, that proves the existence of anything in an object. 2. நோய்க்குறி; the symptom of a disease. 3. மாவிலிங்கம்; lingam tree. 4. கண் விழியின் நடுவிலிருக்கும் பாவை; the transparent lenticular organ behind the pupil eye lens. 5. பெண்குறி வழியில் நடுவிலிருக்கும் நீள நரம்பன் பகுதி; an organ of the female similar.

*[**Skt.** liṅga> த. இலிங்கம்.]*

**இலிங்கம்**[4] *iliṅgam,* பெ.(n.) சாதிலிங்கம்; cinabar, a preparation of mercury with sulphur.

*[**Skt.** liṅgula > த. இலிங்கம்.]*

**இலிங்கம்**[5] *iliṅgam,* பெ.(n.) இயற்கை (பிரகிருதி) (நாநார்த்த.); prakrti (phil.).

*[**Skt.** liṅga > த. இலிங்கம்.]*

**இலிங்கம்பெற்றகன்னி** *iliṅgamperrakanni,* பெ.(n.) செவ்வலரி; oleander rosebay (சா.அக.).

**இலிங்கமுத்திரை** *iliṅga-muttirai,* பெ.(n.) பூசை செய்யும்போது காட்டும் முத்திரை வகை (செந்.X, 426); a kind of hand-pose, in worship.

*[இலிங்கம்+முத்திரை.]*

*[**Skt.** liṅga> த. இலிங்கம்.]*

**இலிங்கமூலி** *ilinkamūli,* பெ.(n.) கறிப்புடலை; snake gourd used in curry (சா.அக.).

**இலிங்கமெழுகு** *iliṅga-meḻugu,* பெ.(n.) ஒருவகை மருந்து; medicine prepared from cinnabar (சா.அக.).

*[**Skt.** liṅga+meḻugu>த. இலிங்கமெழுகு.]*

**இலிங்கவட்டம்** *ilinga-vaṭṭam,* பெ.(n.) கிணறு இடியாமல் வைக்கும் மரச்சுவர்; timber planks used for walling a well.

*[இலிங்கம்+வட்டம்.]*

*[**Skt.** linga> த. இலிங்கம்.]*

**இலிங்கவலரி** *ilingavalari,* பெ.(n.) மஞ்சட் பூப்பூக்குமோர் வகை அலரி; a kind of Nerium bearing yellow flowers.

**இலிங்கவிரணம்** *ilinga-viraṇam,* பெ.(n.) ஆண்குறிநோய் வகை; chancre.

*[**Skt.** linga+viraṇam> த. இலிங்கவிரணம்.]*

**இலிங்கவைப்பு** *ilinga-vaippu,* பெ.(n.) 1. இலிங்கத்தை மருத்துவ முறைப்படி செய்வது; artificial preparation of cinnabar according to the process laid down. 2. செயற்கை லிங்கம்; artificial medicine.

*[இலிங்கம் + வைப்பு.]*

*[**Skt.** linga> த. இலிங்கம்.]*

**இலிங்கவைப்புமுறை** *ilingavaippumuṟai,* பெ.(n.) இலிங்கம் செய்ய வாகடத்திற் சொல்லிய முறை; the method of preparing cinnabar according to the rules prescribed in the Tamil medicine (சா.அக.).

*[இலிங்கம் + வைப்புமுறை.]*

*[**Skt.** linga> த. இலிங்கம்.]*

**இலிங்காரிசம்** *ilingārišam,* பெ.(n.) ஆண்குறிநோய்; a veneral disease attended with warts or condylomatous growth about the genitals (சா.அக.).

**இலிங்கி**[1] *ilingi,* பெ.(n.) 1. குறியை உடையது; that which has a distinguishing mark. 2. சிவ (லிங்க) பூசை செய்வோன்; one who worships *Šivalingam.* 3. முனிவன்; sage. 4. துறவி; ascetic. 5. வஞ்சகத் துறவி; pseudo ascetic.

*[**Skt.** lingin > த. இலிங்கி.]*

**இலிங்கி**[2] *ilingi,* பெ.(n.) 1. பருப்பொருளாகிய உடல்; one who has the astral body. 2. முனிவன்; sages. 3. இலிங்கத்தை வழிபடும் ஒரு துறவி; an ascetic meditating on *Šivaṉ* (சா.அக.).

**இலிங்கியர்** *ilingiyar,* பெ.(n.) அனுமானத்தை முதன்மையாகக் கொண்டு சொற்போர் செய்யும் (வாதிக்குந்) ஏரண வாதியர் (திவ்.திருவாய்.4, 10, 5); logicians who emphasize the importance of inference.

*[**Skt.** rlingin > த. இலிங்கியர்.]*

*[இலிங்கம்→இலிங்கியர்.]*

**இலிங்கு** *ilingu,* பெ.(n.) மரவிலங்கு; species of jarlic-pear. *"இந்தடிதராமுனி யிலிங்க வுரிசயை" (தைலவ.தைல.72).*

**இலிங்கோற்பவர்** *ilingōṟ-pavar,* பெ.(n.) சிவத்திருமேனிகளுள் ஒன்று; *Siva,* who emanated from a linga for the sake of his devotee *Mārkaṇḍēya.*

த.வ. தாணுருவர்.

*[**Skt.** linga+ud-bhava>த.இலிங்கோற்பவர்.]*

**இலிச்சம்** *iliccam* பெ.(n.) எலுமிச்சை; lime tree (சா.அக.).

**இலிந்தகம்** *ilindagam,* பெ.(n.) கருங் குவளை; blue lotus (சா.அக.).

**இலிபி** *ilibi,* பெ.(n.) 1. எழுத்து (நன்.273, மயிலை); writting, letter, character. 2. ஊழ் (விதி); destiny, fate, as written on the head.

*[**Skt.** lipi > த. இலிபி.]*

**இலிக்கை** *ilikkai,* பெ.(n.) 1. பேனின் முட்டை வடிவான ஈர்; nit, egg of louse. 2. ஒரு நீட்டலளவை (கந்தபு.அண்டகோ.5); a linear measure = 8 கசாக்கிரம்.

*[**Skt.** likkā > த. இலிக்கை.]*

**இலிலாவினோதம்** *ilīlā-viṉōtam,* பெ.(n.) இயல் முரணிய பாலுணர்வு; perversion of the sexual impulse (சா.அக.).

**இலீலை**[1] *ililai,* பெ.(n.) விளையாடல்; play, sport.

த.வ. விளையாட்டு.

*[Skt. līlā > த. இலீலை.]*

**இலீலை**[2] *ililai,* பெ.(n.) ஏளனம் (நாநார்த்த.); plafulness.

*[Skt. līlā > த. இலீலை.]*

**இலீனகர்ப்பம்** *silinakarppam,* பெ.(n.) உடற் காற்றினால், கருப்பை வழி, இரத்தக் குழாய்கள், முதலியவை அடைபட்டுக் கருப்பையினுள் கரு வளர முடியாமல் வயிற்றில் ஒட்டிக் கிடக்குமோர் கருப்ப நோய்; a kind of pregnancy in which the product of conception are not fully developed consequent on the obstruction of the passage due to the thickening of the vagina, the wall of the uterus etc. The child will be in the womb undeveloped (சா.அக.).

**இலீனம்** *ilinam,* பெ.(n.) 1. அழிவு; dissolution. 2. அடக்கம்; involution. *"அப்படிப்போலப் பிரகிருதியில் ஜீவர்கள் இலீனமா யிருக்கிறார்கள்" (வாசுதேவ மனனம், பக்.3).*

*[Skt. līna > த. இலீனம்.]*

**இலுகாம்** *ilugām,* பெ.(n.) மறைவான செய்திகள், ஆண்டவன் அருளால் வெளியாதல்; revelation by divine inspiration. *"ஆண்டவனுடைய உண்மையான அடியார்களுக்கு இலுஹாமுண்டாவது இயற்கையே"* Muham.

*[Arab. ilham > த. இலுகாம்.]*

**இலுதை** *ilutai,* பெ.(n.) அணில்; squirrel (சா.அக.).

**இலுமு** *ilumu,* பெ.(n.) கல்வியறிவு; learning, knowledge. *"இலுமுஇல்லாத மனிதன் மிருகத்துக்குச் சமானம்"* Muham.

*[Ar. ilm > த. இலுமு.]*

**இலேககன்** *ilēgagan,* பெ.(n.) 1. எழுதுவோன்; writter, clerk, amanuensis. 2. சித்திரக் காரன்; painter, delineator.

*[Skt. lekhaka > த. இலேககன்.]*

**இலேகம்** *ilēgam,* பெ.(n.) நக்கியுண்ணும் இளகிய மருந்து வகை; electuary, taken by licking.

*[Skt. lehya > த. இலேகம்.]*

*த. இளகியம் >* **Skt.** *lehya*

**இலேகர்** *ilēgar,* பெ.(n.) தேவர்; *dēvas,* gods. *"இலேகரும்பரவ" (திருப்பு.1127).*

*[Skt. lēkha > த. இலேகர்.]*

**இலேகனம்**[1] *ilēganam,* பெ.(n.) எழுத்து; letter.

*[Skt. lēkhana > த. இலேகனம்.]*

**இலேகனம்**[2] *ilēganam,* பெ.(n.) 1. பூவரசு மரத்தின் மேலுரி (நாநார்த்த.); bark of paper tree. 2. வெட்டுகை; cutting.

*[Skt. lēkhana > த. இலேகனம்.]*

**இலேகனம்**[3] *ilēganam,* பெ.(n.) அரிதாரம்; orpiment (சா.அக.).

**இலேகனி** *ilēgani,* பெ.(n.) 1. எழுத்தாணி (சூடா.); style, pointed piece of iron, used in writing on the palmyra leaf. 2. எழுதுகோல்; pen, pencil.

த.வ. இலக்காணி.

*[Skt. lēkhani > த. இலேகனி.]*

*த. இலக்காணி >* **Skt.** *lakani.*



**இலேகி–த்தல்** *ilēgi-,* 11 செ.குன்றாவி.(v.t.) 1. எழுதுதல்; to write. 2. வரைந்து காட்டுதல்; to delineate, draw. *"இலேகித்த சித்திர மண்டபம்" (விநாயகபு. 79, 43).*

த.வ. இலக்குதல்.

*[Skt. lekha > த. இலேகி–த்தல்.]*

**இலேகிதம்** *ilēkitam,* பெ.(n.) செருந்தி; golden champak (சா.அக.).

**இலேகியபாகம்** *ilēgiya-bāgam,* பெ.(n.) இளகியம் செய்யும் முறை. அதாவது வெல்லத்தைக் கருக்கு நீருடன் சேர்த்துக் காய்ச்சிய நூல் பதத்திலிறக்கி மருந்துப் பொடியைக் கொஞ்சங் கொஞ்சமாகக் கலந்து அத்துடன் நெய்யும் தேனும் ஊற்றிக் கிளறி இலகு பதமாகத் திரண்ட பின்னர் இறக்கிப் பதனப்படுத்திக் கொள்வது; the method of preparing by making jaggery into a pure syrup of a thick consistency with the addition of the decoction, when the syrup is hot, and the powder things ghee and honey are mixed and the resulting thick mass is taken out of the vessel at a certain state and preserved for use.

*[இலேகியம் + பாகம்.]*

*த. இளகியம் > Skt. lehya.*

**இலேகியம்** *lēgiyam,* பெ.(n.) இளகியம்; அளவில் குறிப்பிட்ட பொடிகளைச் செய்து, சர்க்கரையில் தண்ணீர், பால் அல்லது கருக்கு நீரைக் கலந்து காய்ச்சிக் கிண்டிப் பாகு பதத்தில் இறக்கிப் பொடியைக் கொஞ்சம், கொஞ்சமாகப் போட்டுக் கிளறித் தேன் நெய்விட்டுப் பிசைந்து உருவாக்கிய இளக்கமான மருந்து; an electuary made by addings drugs in powder to the boiling sugar, milk, water, decoction and stir it to thicken and made as a thick mass in taken out of the vessel and preserved for use (சா.அக.).

த.வ. இளகியம்.

*த. இளகியம் > Skt. lehya.*

**இலேகினி** *ilēgiṇi,* பெ.(n.) மஞ்சள்; turmeric plant (சா.அக.).

**இலேகை** *ilēkai,* பெ.(n.) 1. எழுத்து; letter. *"இலேகை யக்கரப்பெயர்" (பேரகத்.4).* 2. நிலம்; earth. 3. தழும்பு; cicatrice. *"நுதிமருப்பிலேகை நுண்ணிது தோன்ற" (பெருங்.வத்தவ.7, 184).*

*[Skt. lēkhā > த. இலேகை.]*

**இலேசகம்** *ilēšagam,* பெ.(n.) 1. இழிவானது; the smallest quantity. 2. மிகச் சிறிய அளவு; the lowest limit (சா.அக.).

**இலேசம்** *ilēsam,* பெ.(n.) 1. சிறுமை, இழிவு; small bit, very small quantity. *"என்னிடம் இலேசமுமில்லை".* 2. அதிவிரைவு (சூடா.); in a moment; instantaneously.

*[Skt. lēša > த. இலேசம்.]*

**இலேசுணம்** *ilēšuṇam,* பெ.(n.) அரிதாரம்; orpiment or kings yellow.

**இலேஞ்சி** *ilēñci,* பெ.(n.) பொதுவாகச் சிவப்பு நிறத்திலுள்ள கைக்குட்டை, சிறுதுண்டு; kerchief, scarf, usually, red.

*[Port. lenco > த. இலேஞ்சி.]*

**இலேதீதம்** *ilētītam,* பெ.(n.) எரிபூடு; a plant, garlic (சா.அக.).

**இலேந்து** *ilēntu,* பெ.(n.) 1. கல்லுப்பு; common salt found in masses at the bottom of the sea. 2. வெடியுப்பு; a prepared black salt (சா.அக.).

**இலேபபேதி** *ilēba-bēti,* பெ.(n.) மாழைகளை மாற்ற வேண்டிக் கல்லுப்பைக் கொண்டு செய்த, ஒருவகைக் குரு மருந்து; a universal solvent prepared out of rock-salt and used in alchemy (சா.அக.).

**இலேபம்**[1] *ilēbam,* பெ.(n.) 1. வால் மிளகு; cubebs, Java pepper. 2. பூச்சு; smearing, plastering. 3. பூசு மருந்து; a medicinal preparation for external application. 4. கல்லுப்பு; rock salt. 5. கந்தகவுப்பு; black salt (சா.அக.).

**இலேபம்**[2] *ilēbam,* பெ.(n.) பூச்சு; smearing, daubing, plastering.

*[**Skt.** lepa > த. இலேபம்.]*

**இலேபம்**[3] *ilēbam,* பெ.(n.) 1. உணவு; food. 2. சாந்து; paste.

*[**Skt.** lēpa > த. இலேபம்.]*

**இலேபி** *ilēbi,* வி.எ.(adv.) 1. பூச; to smear. 2. பூச்சு; smearing (சா.அக.).

**இலேபிதம்** *ilēbitam,* பெ.(n.) தடவல்; smearing (சா.அக.).

**இலேபை**[1] *ilēbai,* பெ.(n.) சீலை மருந்து; plaster, any tenacious preparation for applying on the surface of the body (சா.அக.).

**இலேபை**[2] *ilēbai,* பெ.(n.) வெட்டுக் காயங்களுக்கான ஒட்டுப் பசைத் துணி (C.G.) plaster (சா.அக.).

**த.வ. பசைத்துணி, காரத்துணி.**

*[**Skt.** lēpana > த. இலேபை.]*

**இலேம்புகம்** *ilēmbugam,* பெ.(n.) நிலக் கடம்பு; kadamba tree (சா.அக.).

**இலேம்போருகம்** *ilēmpōrugam,* பெ.(n.) பாம்புக் கொல்லி; common rue (சா.அக.).

**இலேலிசம்** *ilēlišam,* பெ.(n.) 1. பாம்பு; snake. 2. வயிற்றுக் கீரிப்பூச்சி; the worm in the intestines; a small thread like worm (சா.அக.).

**இலேலிகானம்** *ilēlikāṉam,* பெ.(n.) பாம்பு; snake (சா.அக.).

**இலேவுந்து** *ilēvundu,* பெ.(n.) **இலேந்து** பார்க்க; see *ilēndu* (சா.அக.).

**இலைங்கம்** *ilaiṅgam,* பெ.(n.) **இலிங்க புராணம்** பார்க்க; see *iliṅgapurāṇam.*

*[**Skt.** laiṅga > த. இலைங்கம்.]*

**இலௌகிகம்** *ilaugigam,* பெ.(n.) 1. உலக நடை; worldly affairs. 2. வாழ்க்கை; occupation; means of livelihood.

*[**Skt.** laukika > த. இலௌகிகம்.]*

**இலௌகிகசாத்திரம்** *ilaugiga-sāttiram,* பெ.(n.) கண்கூடாகப் பயனளிப்பவற்றைக் கூறும் வரலாறு (விவேகசிந்.13); treatise dealing with perceptable results, dist. fr. *Vaitīka-šāttiram.*

**த.வ. உலகியல்நூல்.**

*[இலௌகிகம் + சாத்திரம்.]*

*[**Skt.** laukika > த. இலௌகிகம்.]*

**இவேசித்தொகையேடு** *ivēšittogai-y-ēḍu,* பெ.(n.) தண்டல் செய்த பணம், தவசம் (தானியம்) முதலியவற்றின் கணக்கைக் காட்டும் விவரக் குறிப்பு (R.T.); a statement showing the asount of collection and balance in money or in kind.

*[இவேசி + தொகையேடு.]*

*[**U.** iwāz > த. இவேசி.]*

**இறசால்** *iṟašāl,* பெ.(n.) 1. பழைய இலங்கை நாணய வகை; an ancient coin of Ceylon of the value of Is. 6d CJ.). 2. முக்கால் உரூபா; sum of money amounting to twelve annas (J.).

*[**Port.** real > த. இறசால்.]*

**இறாத்தல்** *iṟāttal,* பெ.(n.) **இராத்தல்** பார்க்க; see *irāttal.*

*[**U.** ratl > த. இறாத்தல்.]*

**இறையால்** *iṟaiyāl,* பெ.(n.) **இறசால்** பார்க்க; see *iṟašāl.*

*[**Port.** real > த. இறையால்.]*

**இன்சாபு** *insābu,* பெ.(n.) அறம் (நீதி); justice. *எனக்கு இன்ஸாபு செய்தால் போதும்; உபகாரமாகத் தாங்கள் ஒன்றும் செய்ய வேண்டாம் (Muham.).*

*[Ar. insaf > த. இன்ஸாபு.]*

**இன்சான்** *insān,* பெ.(n.) மனிதன்; human being. *"தவறுவது இன்சானுக்கு இயற்கையே" (Muham.).*

*[Ar. insan > த. இன்சான்.]*

**இனாம்** *inām,* பெ.(n.) 1. நன்கொடை; gift from a superior to an inferior, present, reward. 2. இறையிலி நிலம்; grant of land made by government for religious or charitable purposes or for services rendered, sometimes given rent-free and sometimes with a light quit-rent.

*[U. inām > த. இனாம்.]*

**இனாம்நாட்கள்** *inām-nāṭkaḷ,* பெ.(n.) சரக்கு ஏற்றற்காவது, இறக்கற்காவது விடப்படும் நாட்கள்; lay days (M.Navi.122).

*[இனாம் + நாட்கள்.]*

*[U. inām> த. இனாம்.]*

**இனாயத்நாமா** *ināyat-nāmā,* பெ.(n.) கொடை ஆவணம்; deed of gift.

*[U. ināyet+nāmā> த. இனாயத்நாமா.]*

**ஈகாமிருகம்** *igāmirugam,* பெ.(n.) நாடக வகைப்பத்தனுள் ஒன்று (சிலப்.பக்.84, கீழ்க்குறிப்பு); one of ten different kinds of drama in four acts, representing men, gods and demon as fighting for the possession of a beautiful damsel who, however, does not love anyone of them, sc named after the bestrial lust of the characters. One of the rupakam.

*[Skt. ihāmrga > த. ஈகாமிருகம்.]*

**ஈசத்துப்பீசம்** *īśattu-p-pīšam,* பெ.(n.) கொட்டையில்லாக் கொடிமுந்திரி; a species of grapes having no seeds (சா.அக.).



**ஈசத்துவறுகு** *īšattuvaruku,* பெ.(n.) சிற்றறுகு; a kind of grass (சா.அக.).

**ஈசத்துவம்** *īšattuvam,* பெ.(n.) எண்மா இயற்கையிறந்த செயல்களுள் (அட்டமா சித்திகளுள்) ஒன்று; supremacy or superiority considered as a super natural power, one of *asṭa-mā-citti.*

*[Skt. īša-tva > த. ஈசத்துவம்.]*

**ஈசதேசாத்தி** *īšatēsātti,* பெ.(n.) பெரு மருந்துக் கொடி; a twining plant (சா.அக.).

**ஈசப்பரிவிந்து** *īsappari-vintu,* பெ.(n.) கந்தகம்; sulphur (சா.அக.).

**ஈசன்**[1] *īšan,* பெ.(n.) 1. இறைவன்; supreme being; Lord of the universe. *"இளந்தளிரிற் கண்வளர்ந்த வீசன்றன்னை" (திவ். பெரியதி.2, 10, 1).* 2. சிவன்; Šva. *"ஈசன் காரியானைத்தான்" (நள.காப்பு).* 3. அரசன்; king. *"தரணிபர்க்கெல்லா மீசனும்" (பாரத.குரு.91).* 4. தலைவன்; lord, master. 5. குரு (பிங்.); preceptor. 6. மூத்தோன் (திவா.); eldest brother.

த.வ. அவ்வன், இயனன்.

*[Skt. īša > த. ஈசன்.]*

*த. இயனன்>ஈயன் >* **Skt.** *isa.*

**ஈசன்**[2] *īšaṉ,* பெ.(n.) 1. கௌரி நஞ்சு; a kind of arsenic. 2. சவுக்காரம்; வழலை; soap. 3. மூன்று வகைப் பச்சைக் கருப்பூரங்களில் ஒன்று; one of the three kinds of crude camphor (சா.அக.).

**ஈசன்**[3] *īšaṉ,* பெ.(n.) 1. பச்சைக் கருப்பூரம்; a preparation of camphor. *"ஈசனென்னும் பூரம்வெண்மை" (பதார்த்த. 1076).* 2. ஒருவகைச் செய்நஞ்சு; a mineral poison.

**ஈசன்கொடி** *īsaṉkodi,* பெ.(n.) கொன்றை; cassia tree (சா.அக.).

*[ஈசன் + கொடி.]*

***[Skt.** īšaṉ > த. ஈசன்.]*

**ஈசன்சுண்மை** *īšaṉcuṉmai,* பெ.(n.) **ஈசனுப்புச்சுண்ணம்** பார்க்க; see *īšaṉuppu-c-cuṉṉam* (சா.அக.).

*[ஈசன் + சுண்மை.]*

***[Skt.** īšaṉ > த. ஈசன்.]*

**ஈசன்திருமூலி** *īšaṉtirumūli,* பெ.(n.) கஞ்சா; ganjah (சா.அக.).

*[ஈசன்+திருமூலி.]*

***[Skt.** īšaṉ > த. ஈசன்.]*



**ஈசன்மதுவுண்டகிண்ணி** *īšaṉmatuvuṇḍa-kiṉṉi,* பெ.(n.) அப்பிரகத்தினின்று சத்தெடுத்து, உருக்கிக் கருவில் பாய்ச்சி வார்த்தெடுத்த கிண்ணி; a mica eating dish, which is prepared from the active prenciple contained in the mica by melting and castina it into a mould (சா.அக.).

*[ஈசன்+மது+உண்ட+கிண்ணி.]*

***[Skt.** īšaṉ+matu > த. ஈசன்மது.]*

**ஈசன்விந்து** *īšaṉvindu,* பெ.(n.) உப்பைக் கட்டி மணியாகத் திரட்டியது; salt bread (சா.அக.).

*[ஈசன் + விந்து.]*

***[Skt.** īšaṉ > த. ஈசன்.]*

**ஈசன்றார்** *īšaṉṟār,* பெ.(n.) கொன்றைமரம்; cassia tree (சா.அக.).

**ஈசன்றினம்** *īšaṉṟiṉam,* பெ.(n.) ஆறாவது நாள் மீனான யாழ் (திருவாதிரை); the sixth naksatra, a day sacred to *Šiva* (சூடா.).

***[Skt.** īša+dina>த. ஈசன்றினம்.]*

**ஈசனாரணி** *īšaṉāraṇi,* பெ.(n.) கொன்றை; cassia tree (சா.அக.).

*[ஈசனார் + அணி.]*

***[Skt.** īšaṉ > த. ஈசனார்.]*



**ஈசனுப்பு** *īšaṉuppu,* பெ.(n.) வெடியுப்பு; nitre potasium nitrate (சா.அக.).

*[ஈசன் + உப்பு.]*

***[Skt.** īšaṉ > த. ஈசன்.]*

**ஈசனுப்புச்சுண்ணம்** *īšaṉuppu-c-cuṉṉam,* பெ.(n.) வழலைச் சுண்ணம்; a calcined carbonate extracted from fullers earth combined with other ingredients (சா.அக.).

*[ஈசன் + உப்பு + சுண்ணம்.]*

***[Skt.** īšaṉ > த. ஈசன்.]*

**ஈசாபு** *īšābu,* பெ.(n.) திருமணக்கோரிக்கை; proposal. *விவாஹம் நிறைவேறுதற்கு ஈசாபு அவசியமானது (முகம்.).*

[*Ar. ijab > த. ஈசாபு.*]

**ஈசாவாசியம்** *īšāvāšiyam,* பெ.(n.) நூற்றெட்டு மறைமுடிபுகளுள் (உபநிடதங்களுள்) ஒன்று; one of the 108 upanisads.

[*Skt. īšāvāsya > த. ஈசாவாசியம்.*]

**ஈசானகோணம்** *īšāna-kōṇam,* பெ.(n.) வடகீழ்த்திசை; north east quarter for which *Šiva* is regent.

[*ஈசானம் + கோணம்.*]

[*Skt. īšāna > த. ஈசானம்.*]

**ஈசானதிசை** *īšāna-tisai,* பெ.(n.) **ஈசானகோணம்** பார்க்க (திவா.); see *īšānakōṇam.*

[*ஈசானம் + திசை.*]

[*Skt. īšāna>த. ஈசானம்.*]

**ஈசானம்**[1] *īšānam,* பெ.(n.) 1. சிவனின் ஐம்முகத்துள் ஒன்று; one of the five faces of *Šiva*represented as being directed upward, one of *Šivan-ai-m-mugam.* 2. ஒரு சிவனிய (சைவ) மந்திரம்; a *Šaiva* mantra. 3. வடகீழ்த்திசை ; the northest quarter being the region which is under the guardionship of *īšāna* who is *Šiva* in one of his aspects.

[*Skt. īšāna > த. ஈசானம்.*]

**ஈசானம்**[2] *īšānam,* பெ.(n.) இலவ மரம்; the silk cotton tree (சா.அக.).

**ஈசானன்** *īšānan,* பெ.(n.) 1. சிவன்; aspect of *Šiva,* who is regent of the north east quarter, one of *asṭa-tikku-p-pālakar.* 2. சிவனின் பதினொரு உருவங்களில் (ஏகாதச ருத்திரருள்) ஒன்று (திவா.); one of *ēkātaca-ruttirar.*

[*Skt. īšāna > த. ஈசானன்.*]

**ஈசானி** *īšāni,* பெ.(n.) சிவனின் ஐந்து பெண் ஆற்றல்களில் ஒன்று; one of the five female energies of *Siva* (சா.அக.).

**ஈசானிகம்** *īšānigam,* பெ.(n.) உடை மரம்; arrow thorn tree (சா.அக.).

**ஈசானியப்பார்வை** *īšāniya-p-pārvai,* பெ.(n.) வீடு வடகீழ்த்திசை நோக்கி இருக்கை; orientation of a house toward the north-east, an aspect considered auspicious.

[*ஈசானியம் + பார்வை.*]

[*Skt. īšānya>த. ஈசானியம்.*]

**ஈசானியம்** *īšāniyam,* பெ.(n.) வடகீழ்த் திசை; north-east quarter.

[*Skt. īšānya > த. ஈசானியம்.*]

**ஈசானியமூலை** *īšāniya-mūlai,* பெ.(n.) **ஈசானியம்** பார்க்க; see *īšāniyam.*

[*ஈசானியம் + மூலை.*]

[*Skt. īšānya>த. ஈசானியம்.*]

**ஈசிகம்** *īšigam,* பெ.(n.) மூசையிலிட்டு மாழையை உருக்கும்போது, அதை ஆய்வு செய்யப் பயன்படுத்தும் ஒரு இரும்புக் காம்பு; a dipping iron rod something thrust into a cruicible to examine if the metal it contains is in fusion or not (சா.அக.).

**ஈசித்துவம்** *īšittuvam,* பெ.(n.) **ஈசத்துவம்** பார்க்க; see *īšattuvam.*

[*Skt. īši-tva > த. ஈசித்துவம்.*]

**ஈசிதை** *īšidai,* பெ.(n.) **ஈசத்துவம்** பார்க்க (சிவதரு.சிவஞானயோ.90); see *īšattuvam.*

[*Skt. īšitā > த. ஈசிதை.*]

**ஈசுகணுவெலும்பு** *īšukaṇuvelumbu,* பெ.(n.) முழங்காலின் எலும்பு; the joint connecting the two principal parts of the leg-knee (சா.அக.).

[*ஈசு + கணுவெலும்பு.*]

[*Skt. īšu> த.ஈசு.*]

**ஈசுரச்செயம்** *īšura-c-ceyam,* பெ.(n.) **ஈசுரசத்து** பார்க்க; see *īšuracattu* (சா.அக.).

*[Skt. īšura-ceyam> த.ஈசுரச்செயம்.]*

**ஈசுரச்செயல்** *īšura-c-ceyal,* பெ.(n.) கடவுள் செயல் (குமரேச.சத.64); will of god; divine act, act of providence.

*[ஈசுவரன் + செயல்.]*

*[Skt. īšvara>த. ஈசுவரன்.]*

**ஈசுரசுருளி** *īšura-curuḷi,* பெ.(n.) பெரு மருந்து; a twining plant (சா.அக.).

*[Skt. ēsura+curuḷi > த. ஈசுரசுருளி.]*

**ஈசுரதேவி** *īšuradēvi,* பெ.(n.) கௌரிநஞ்சு; a kind of prepared arsenic (சா.அக.).

*[ஈசுவரன் + தேவி.]*

*[Skt. īšvara>த. ஈசுவரன்.]*

**ஈசுரப்பிரமி** *īšurapirami,* பெ.(n.) நெற்றி; forehead (சா.அக.).

*[Skt. īšvara-pirami>த. ஈசுவரப்பிரமி.]*

**ஈசுரப்புல்** *īšurappul,* பெ.(n.) ஒரு வகைப் புல்; a kind of grass (சா.அக.).

*[ஈசுவரன் + புல்.]*

*[Skt. īšvara>த. ஈசுவரன்.]*

**ஈசுரபூதம்** *īšurapūtam,* பெ.(n.) ஒரு பேய்த் தொடர்பான நோய்; a devilish disease with the symptoms characteristic of Iswara (சா.அக.).

*[Skt. īšuvara-pōta>த. ஈசுவரபூதம்.]*

**ஈசுரமூலி** *īšuramūli,* பெ.(n.) 1. பெருமருந்து; a twinning plant. 2. கஞ்சா; ganjah. 3. இதளியத்தைக் கட்டும் ஒரு மூலிகை; lord root which is so called from its peculiar viritus of consolidating mercury. 4. வலம்புரி; twisted slick (சா.அக.).

*[ஈசுவரன் + மூலி.]*

*[Skt. īšuvara>த. ஈசுர.]*

**ஈசுரவல்லி** *īšuravalli,* பெ.(n.) ஒருவகைக் கொடி; a creeper (சா.அக.).

*[ஈசுவரன் + வல்லி.]*

*[Skt. īšuvara>த. ஈசுர.]*

**ஈசுரவவிகாரவாதசைவம்** *īšura-v-avikāra-vāta-šaivam,* பெ.(n.) அகச் சமயத்துள் ஒன்று; a *šaiva* sect, one of six *aka-c-camayam.*

*[Skt. īšvara+avikāra+vādha+šaivam> த. ஈசுரவவிகாரவாதசைவம்.]*

**ஈசுரவிந்து** *īšura-vindu,* பெ.(n.) இதளியம் (மூ.அ.); quick silver.

*[ஈசுவரன் + விந்து.]*

*[Skt. īšuvara>த. ஈசுர(ம்).]*

**ஈசுரன்** *īšuran,* பெ.(n.) 1. தலைவன்; chief, leader, head, lord. 2. கடவுள்; the almighty. 3. சிவன்; siva.

*[Skt. īšuvara>த. ஈசுர(ன்).]*

**ஈசுவர** *īšuvara,* பெ.(n.) அறுபது ஆண்டு வட்டத்துள் பதினோராமாண்டின் பெயர்; name of the eleventh year of the jupiter cycle.

*[Skt. īšuvara>த. ஈசுவர.]*

**ஈசுவரன்** *īšuvaran,* பெ.(n.) **ஈசுரன்** பார்க்க; see *īšuran.*

*[Skt. īšuvara>த. ஈசுரன்.]*

**ஈசுவரார்ப்பணம்** *īšuvarārppaṇam,* பெ.(n.) கடவுளுக்கு உரியதாக்குதல்; dedication to god, consecration.

**த.வ. இறைக்காணிக்கை.**

*[Skt.īšvara+arpana>த. ஈசுவரார்ப்பணம்.]*

**ஈசுவரி** *īšuvari,* பெ.(n.) மலைமகள் (பார்வதி); P*ārvati,* being the consrt of *Šiva,* who is *īšvara.*

*[Skt. īšvari>த. ஈசுவரி.]*

**ஈசுவரிநாதம்** *īsuvari-nādam,* பெ.(n.) கந்தகம் (மூ.அ.); sulphur.

*[Skt. īśvari+nādha>த. ஈசுவரிநாதம்.]*

**ஈசுவரோபாத்தி** *īsuvarōbātti,* பெ.(n.) கடவுள் வழிபாடு (வேதா.சூ.24, உரை); devotion to God head, worship of God.

*[Skt. īśvara+upāsti>த. ஈசுவரோபாத்தி.]*

**ஈசோபநிடதம்** *īsōbaniḍadam,* பெ.(n.) பத்து மறைமுடிபுகளுள் (உபநிடதங்களுள்) ஒன்று ; name of an upanisad, one of *tacōpaniḍatam.*

*[Skt. eṣa+upa-ni-sad>த. ஈசோபநிடதம்.]*

**ஈத்து** *ittu,* பெ.(n.) முகமதியர் திருவிழா; islamic festival.

*[Ar. id > த. ஈத்து.]*

**ஈதுல்பிதர்** *itulpidar,* பெ.(n.) முகமதியர் நோன்பு முடிந்த முதல் நாள்; festival day afte the close of Ramzan.

*[Ar. idulfitr>த. ஈதுல்பிதர்.]*

**ஈமான்** *īmāṉ,* பெ.(n.) முகமதியக் கொள்கை; islamic faith, belief.

*[Ar. iman > த. ஈமான்.]*

**ஈர்சை** *īrsai,* பெ.(n.) பொறாமை (சி.சி.2, 39, சிவாக்.); envy, jealousy.

*[Skt. irṣā>த. ஈர்சை.]*

**ஈரங்கி** *īraṅgi,* பெ.(n.) வழக்குக் கேட்கை; judge's investigation and hearing of arguments in a case.

த.வ. நேர்கேட்பு.

*[E. hearing > த. ஈரங்கி.]*

**ஈரான்** *īrāṉ,* பெ.(n.) பண்டைய பாரசீக நாடு; persia.

*[Ar. iran > த. ஈரான்.]*

**ஈனக்கிரயம்** *īṉa-k-kirayam,* பெ.(n.) குறைய விற்பு; discredit sale.

**ஈனசாமந்தன்** *īṉa-sāmandaṉ,* பெ.(n.) சாமந்தர் வகையினர் (சுக்கிரநீதி, 26); a class of *Śāmandar.*

*[Skt. hīna+sāmanda > த. ஈனசாமந்தன்.]*

**ஈனசுரம்** *īṉa-suram,* பெ.(n.) தாழ்ந்தக்குரல்; lowly voice.

*[Skt. hīna-svara > த. ஈனசுரம்.]*

**ஈனம்** *īṉam,* பெ.(n.) கீழ்மை; vulgarity.

*[Skt. hīna> த. ஈனம்.]*

**ஈனன்** *īṉaṉ,* பெ.(n.) தாழ்ந்தோன்; ignoble person.

*[Skt. hīna> த. ஈனன்.]*

**உக்கா** *ukkā,* பெ.(n.) கஞ்சா முதலியவற்றின் புகை குடிக்கும் கருவி; hookah, turkish tobacco pipe and its apparatus by which smoke is drawn through water.

த.வ. புகைக்குப்பி.

*[U. huqqa > த. உக்கா.]*



**உக்கிதசிரம்** *ukkida-ciram,* பெ.(n.) வான்முகட்டை நோக்கும் மெய்ப்பாடு (சிரவபிநயம்) (பரத.பாவ.74); (natya.) gesticulation of the head, looking up at the sky, a theatrical attitude.

*[Skt. ud-dhṛta+cira > த. உக்கிதசிரம்.]*

**உக்கிரகந்தம்**[1] *ukkira-kandam,* பெ.(n.) 1. வெள்ளைப் பூண்டு; garlic. 2. பெருங்காயம்; asafoetida. 3. வேம்பு; margosa. 4. கருவேம்பு (மலை.); grey downy balsam tree. 5. கரும்பு; sugarcane.

[Skt. ugragandha > த. உக்கிரகந்தம்.]

**உக்கிரகந்தம்**[2] *ukkira-kandam,* பெ.(n.) 1. வசம்பு (சித்.அக.); sweet flag. 2. ஓமம் (நாநார்த்த.); bishop's weed.

[Skt. ugragandha > த. உக்கிரகந்தம்.]

**உக்கிரகந்தை** *ukkirakantai,* பெ.(n.) 1. வசம்பு (சித்.அக.); sweet flag. 2. ஓமம் (நாநார்த்த.); bishop's weed.

[Skt. ugragandhā > த. உக்கிரகந்தை.]



**உக்கிரமம்** *ukkiramam,* பெ.(n.) சுடரொளி; blaze,glow (புதுவை.வ.).

[Skt. ugra > த. உக்கிரமம்.]

**உக்கிரன்** *ukkiran,* பெ.(n.) சிவ வடிவங்களுள் ஒன்று (வீரபத்திரன்) (காஞ்சிப்பு.சிவபுண்.15); a manifestation of *Šiva.*

[Skt. ugra > த. உக்கிரன்.]

**உக்கிருட்டம்** *ukkiruṭṭam,* பெ.(n.) மேன்மை; excellence, greatness.

[Skt. ut-krṣṭa > த. உக்கிருட்டம்.]

**உக்கிரை** *ukkirai,* பெ.(n.) ஏழாம் இசை (ஏழாஞ் சுருதியின்) வேறுபாடுகளுள் ஒன்று (பரத. இராக.46); a variety of the seventh note of the gamut.

[Skt. ugra > த. உக்கிரை.]

**உக்கும்** *ukkum,* பெ.(n.) ஆணை; permission, order (P.P.L.).

[U. hukm > த. உக்கும்.]

**உக்கும்நாமா** *ukkumnāmā,* பெ.(n.) எழுத்து மூலமான ஆணை; written order.

[U. hukm-nāma > த. உக்கும்நாமா.]

**உக்குமத்து** *ukkumattu,* பெ.(n.) 1. செல்வாக்கு; influence. 2. செருக்கு (நெல்லை.); arrogance. 3. உடந்தை (தஞ்.); complicity.

[U. hukumat > த. உக்குமத்து.]

**உச்சரிடம்** *uccariḍam,* பெ.(n.) மலம்; excrement, dung (சா.அக.).

**உச்சலம்**[1] *uccalam,* பெ.(n.) மனம் (வின்.); mind (சா.அக.).

[Skt. uccala > த. உச்சலம்.]

**உச்சலம்**[2] *uccalam,* பெ.(n.) 1. அறிவு; knowledge. 2. மனம்; mind (சா.அக.).

**உச்சாடனம்**[1] *uccāḍanam,* பெ.(n.) 1. இருப்பிடத்தை விட்டு ஓட்டுந் தொழிலாகிய எட்டுவித மாய மந்திரவித்தைகளில் ஒன்று; the art of driving away or causing a person to quit his occupation by magical incantation. 2. பேய் முதலியவற்றை ஓட்டல்; expelling an evil spirit or devil from a person or place by adjurations and ceremonies. 3. ஏவல் அல்லது மந்திர வித்தை; incitement by magic or neromancy of an evil spirit or demon to cause injury or ruin to anyone at will (சா.அக.).

**உச்சாடனம்**[2] *uccāḍanam,* பெ.(n.) 1. நெய்மத்தாலும், மணப்பொருளினாலும், உடம்பைத் தேய்த்துத் தூய்மை செய்தல்; cleaning or rubbing the body with oil or perfume. 2. புகையிட்டுத் தூய்மைப்படுத்தல்; cleaning by fumegaling (சா.அக.).

**உச்சாயம்** *uccāyam,* பெ.(n.) மகிழ்ச்சி; ஆற்றல்; energy.

[Skt. ut-sāha > த. உச்சாயம்.]

**உச்சிகரணம்** *uccikaraṇam,* பெ.(n.) பதங்கம்; the process by which a solid substance in brought into the state of vapour by application of heat without melting it (சா.அக.).

**உச்சீவனம்** *uccivaṉam,* பெ.(n.) 1. உய்கை; revival of life. 2. பிழைப்பு; livelihood, means of living (சா.அக.).

**உச்சீவி-த்தல்** *uccivi-,* 11 செ.கு.வி.(v.i.) 1. நோயினின்று பிழைத்தல்; regaining life of from a diseases. 2. இறப்பின் பிடியிலிருந்து பிழைத்துத் தேறுதல்; to pass off the crisis of a disease and become free from the jawr of death.

**உச்சுவலம்** *uccuvalam,* பெ.(n.) 1. ஆசை (யாழ்.அக.); desire. 2. பொன்; gold.

*[Skt. ujjvala > த. உச்சுவலம்.]*

**உச்சே** *uccē,* பெ.(n.) பிரெஞ்சு ஆட்சித் துறையில் ஓர் ஊர் (கிராம) அலுவலன்; sheriff's officer in the communes of French India.

*[Fr. huissier > த. உச்சே.]*

**உச்சேதம்** *uccēdam,* பெ.(n.) அழிதல் (நீலகேசி. 637); desolation.

*[Skt. uccēda > த. உச்சேதம்.]*

**உச்சைச்சிரவம்** *uccai-c-ciravam,* பெ.(n.) இந்திரன் குதிரை; name of an Indra's steed.

*[Skt. uccaiś-śravas> த. உச்சைச்சிரவம்.]*

**உசரிதம்** *uśaritam,* பெ.(n.) நெருஞ்சில்; a thorny shrub (சா.அக.).

**உசரிபம்** *uśaribam,* பெ.(n.) **உசரிதம்** பார்க்க; see *uśaritam* (சா.அக.).

**உசரு** *uśaru,* பெ.(n.) உயிர்; life (சா.அக.).

**உசலம்** *usalam,* பெ.(n.) உசிலை மரம்; oosilay tree (சா.அக.).

**உசவோற்கம்** *uśavōṟkam,* பெ.(n.) முயல்; hare (சா.அக.).

**உசற்காலம்** *uśaṟkālam,* பெ.(n.) விடியற் காலம் (யாழ்.அக.); dawn.

*[உசற்+காலம்.]*

*[Skt. uslat > த. உசற்.]*

**உசார்** *uśār,* பெ.(n.) விழிப்புடன் இருத்தல்; alertness, watchfulness, vigilance.

*[U. hushyār > த. உசார்.]*

**உசிச்செடி** *uśicceḍi,* பெ.(n.) புல்லூரி; a parasitie plant (சா.அக.).



**உசிதம்**[1] *uśidam,* பெ.(n.) 1. தகுதி; propriety, suitability, fitness. 2. மேன்மை; excellence, good quality, transcendence. *"வார்த்தை யுசிதத்தை மந்திரிகளன்றி யறிவரோ" (திருவேங்.சத.30).*

*[Skt. ucita > த. உசிதம்.]*

**உசிதம்**[2] *uśitam,* பெ.(n.) 1. பெருங்காயம்; asafoetida. 2. கத்தூரி மஞ்சள்; round zedoary (சா.அக.).

**உசிதவசனம்** *uśita-vasaṉam,* பெ.(n.) 1. சரியான உணவு; a good dinner or food. 2. மேம்பட்ட உணவு; rich meal (சா.அக.).

**உசிதன்** *ucitaṉ,* பெ.(n.) பாண்டியன் (இறை.2, 32, மேற்கோட்பாடு) (அக.நி.); the *Paṇḍiya* king.

*[Skt. ucita > த. உசிதன்.]*

**உசிரம்** *uširam,* பெ.(n.) இலாமிச்சை வேர்; a fragrant root (சா.அக.).

**உசிலோசிதம்** *ušilōšitam,* பெ.(n.) கருப்புக் கடுக்காய்; a black variety of gallnut (சா.அக.).

**உசுவாசநிசுவாசம்** *ušuvāšanišuvāšam,* பெ.(n.) வலது மூக்கின் வழியாக ஆற்றலுள்ள காற்றை உள்ளிழுத்து, இடது மூக்கின் வழியாக வெளியே விட்டும், மறுமுறை மாறாக மூச்சுவிடும் ஒகமுறை; (in yoga philosophy) the vital air inhaled through the right and exhaled through the right and exhaled through the left nostril and vice versa (சா.அக.).

**உசுவாசம்** *ušuvāsam,* பெ.(n.) 1. உள்ளே மூச்சை இழுத்தல்; inhalation. 2. உயிர்க் காற்றை உட்கொளல்; inhalation of prana, through the right nostrill (சா.அக.).

*[உள் + சுவாசம் → உசுவாசம்.]*

**உசூர்** *ušūr,* பெ.(n.) 1. திருமுன்; presence of a superior authority, as of a magistrate. 2. அரசியல் நடத்துமிடம்; hall of audience, court; office of the chief magistrate or administrator.

*[U. huzūr > த. உசூர்.]*

**உசூர்க்கச்சேரி** *ušūr-k-kaccēri,* பெ.(n.) மாவட்டத் தலைமை வருவாய் அலுவலகம்; chief revenue office of the district.

*[U. huzūr+kachahri > த. உசூர்க்கச்சேரி.]*

**உசேனி** *usēṉi,* பெ.(n.) பண் வகை (பரத.ராக.104); (mus.) a specific melody-type.

*[Skt. usēṉi > த. உசேனி.]*

**உஞ்சேனைமாகாளம்** *uñcēṉai-mākāḷam,* பெ.(n.) உச்சயினியில் உள்ள சிவன் கோயில் (தேவா.1221, 8); the šiva shrine at ujjain.

*[Skt. uñcēnaimaha-kāla > த. உஞ்சேனை மாகாளம்.]*

**உட்டணம்** *uṭṭaṇam,* பெ.(n.) 1. முதிர்வேனில் (நாநார்த்த.);summer. 2. மிளகு (யாழ்.அக.); pepper.

*[Skt. uṣṇa > த. உட்டணம்.]*

**உட்டாறா** *uṭṭāṟā,* பெ.(n.) கப்பலில் சவாய்ப் பாய்களை இறக்க உதவும் கயிறுகள்; down-haul.

*[U. uṭhānā > த. உட்டாறா.]*

**உட்டீனம்** *uṭṭīṉam,* பெ.(n.) குறிப்பிட்ட வகைப் பறவைகளின் சிறப்புகளுள் ஒன்று; a particular kind of the flight of birds, one of eight different kinds mentioned. *"உட்டீனம்... கதிபறவைட்கெட்டுள" (காசிக். திரிலோ.6).*

*[Skt. uḍḍīna > த. உட்டீனம்.]*

**உடான்** *uṭāṉ,* பெ.(n.) விளையாட்டாகச் சொல்லும் பொய்; fib, lie uttered for fun.

த.வ. பகடி.

*[U. uḍāṉ > த. உடான்.]*

**உடோளக்கை** *uḍoḷa-k-kai,* பெ.(n.) விரல்களை நெருக்கிக் கொண்டு, தோளுக்கு நேராக இரு கைகளையும் நீட்டும் இணைக்கை வகை (பரத.பாவ.52); (Natya.) a hand-pose in which both hands are stretched in front of the shoulders, with fingers kept close to one another.

*[உடாளம் + கை.]*

*[Skt. ḍola > த. உடோளம்.]*

**உத்கிரமணம்** *ut-kiramaṇam,* பெ.(n.) வெளிப்போகை; passing out.

*[Skt. ūt-kramaṇa > த. உத்கிரமணம்.]*

**உத்கிருட்டம்** *ut-kruṭṭam,* பெ.(n.) சிறந்தது; that which is excellent, eminent, superior.

*[Skt. ut-krsṭa > த. உத்கிருட்டம்.]*

**உத்கோசம்** *ut-kōsam,* பெ.(n.) பெரு முழக்கம்; loud roaring.

*[Skt. ud-ghōsa > த. உத்கோசம்.]*

**உத்சர்ச்சனம்** *utsarccanam,* பெ.(n.) ஓதா தொழிந்திருக்கை; temporary suspension of recitation of sacred books. *"உபக்கிரம உத்ஸர்ஜன காலத்தை" (கோயிலொ.33).*

*[Skt. ut-sarjana > த. உத்சர்ச்சனம்.]*

**உத்சேபணம்** *utsēbaṇam,* பெ.(n.) கூத்தின் மெய்ப்பாடுகளுள் (அங்க கிரியைகளுள்) ஒன்று (சிலப்.பக்.81, ft.n.); a mode of gesticulation.

*[Skt. ut-kṣēpaṇa > த. உத்சேபணம்.]*

**உத்தஞ்சம்** *uttañcam,* பெ.(n.) 1. செவிப் பூண்; ear-pendant. 2. சூட்டு மாலை; wreath.

*[Skt. uttaṇsa > த. உத்தஞ்சம்.]*

**உத்தமர்ணன்** *uttamarṇaṉ,* பெ.(n.) கடன் கொடுப்பவன் (சுக்கிரநீதி, 96); creditor, money lender.

*[Skt. uttamarṇa > த. உத்தமர்ணன்.]*

**உத்தமவிம்சதி** *uttama-vimsati,* பெ.(n.) ஆண்டு அறுபதனுள் 'பிரபவ' முதல் 'விய' வரையுமுள்ள 20 ஆண்டுகள்; the cyclic years from 'prapava' to viya in the jupitar cycle.

*[Skt. uttama > த. உத்தமம்.]*

**உத்தரணி** *uttaraṇi,* பெ.(n.) நீர் எடுத்தற்குரிய சிறு கரண்டி; small spoon used for taking water.

*[Skt. ud-dharani > த. உத்தரணி.]*

**உத்தரத்திரயம்** *uttara-t-tirayam,* பெ.(n.) மூன்று நாண்மீன்கள்; the three naksatras.

*[Skt. uttara+ traya > த. உத்தரத் திரயம்.]*

மானேறு (உத்தரம்), கடைக்குளம் (உத்தராடம்), பிற்கொழுங்கால் (உத்தரட்டாதி).

**உத்தராகம்** *uttarāgam,* பெ.(n.) சரணடைதலுக்குப் பின் செய்யப்படும் தீவினை (ஈடு, 10, 2, 1, ஜீ.); sin committed after pirapatti or self-surrender.

*[Skt. uttarāga > த. உத்தராகம்.]*

**உத்தராசாடம்** *uttarāsāḍam,* பெ.(n.) கடைக்குளம், இருபத்தோராவது நாண்மீன்; the 21st naksatra.

*[உத்தரம் + ஆசாடம்.]*

*[Skt. uttara+sāḍhā > த. உத்தரசாடம்.]*

**உத்தரி–த்தல்** *uttari-,* 11 செ.குன்றாவி.(v.t.) கொடுமை செய்தல்; to annoy, hurt, worry. *"உத்தமனாக்கை யுத்தரித்த பாடுகள் அத்தனைக்கும் எனவறிதி" (இரட்சணிய. பக்.78).*

*[Skt. uddhr > த. உத்தரி–.]*

**உத்தவம்** *uttavam,* பெ.(n.) விழா (நாநார்த்த.); festival.

*[Skt. uddhava > த. உத்தவம்.]*

**உத்தரியம்** *uttariyam,* பெ.(n.) **உத்தரீயம்** பார்க்க; see *uttarīyam. "அறுவை யுத்தரியந் தனிவிசும்பி லெறிந்தார்க்குந் தன்மையாலே" (பெரியபு.திருஞான.95).*

*[Skt. uttariya > த. உத்தரியம்.]*

**உத்தாபம்** *uttābam,* பெ.(n.) 1. மிகுவெப்பு; great heat. 2. தவிப்பு; distress. 3. முயற்சி; effort.

*[Skt. uttāpa > த. உத்தாபம்.]*

**உத்தாபனி** *uttāpaṇi,* பெ.(n.) தசை வகை (Anat.); exector, a muscle.

*[Skt. utthāpanī > த. உத்தாபனி.]*

**உத்தாரக்கூறு** *uttāra-k-kūṟu,* பெ.(n.) பாகப் பிரிவினை (சுக்கிரநீதி, 12); partition of ancestral property.

*[உத்தாரம் + கூறு.]*

*[Skt. uddhāra > த. உத்தாரம்.]*

**உத்தாரணம்** *uttāraṇam,* பெ.(n.) 1. எடுத்து நிறுத்துகை; lifting up, elevating. 2. தீங்கினின்று மீட்கை; rescuing, as from a trouble; delivering.

*[Skt. ud-dhāraṇa > த. உத்தாரணம்.]*

**உத்தாரம்** *uttāram,* பெ.(n.) முறையாகக் கொடுக்கும் சம்பளம்; regular, fixed payment. *"மாதவழி நூறுபொன்னு முத்தாரம்" (தெய்வச்.விறலிவிடு.295).*

*[Skt. uttāra > த. உத்தாரம்.]*

**உத்தாலகம்** *uttālakam,* பெ.(n.) ஒருவகை மரம் (வீரவனப்பு. வீரைபலா.26); a kind of tree.

*[Skt. uddāla > த. உத்தாலகம்.]*

**உத்தாலம்** *uttālam,* பெ.(n.) நறுவிலி (மூ.அ.); narrow-leaved sebesten.

*[Skt. uddāla > த. உத்தாலம்.]*

**உத்தானத்துவாதசி** *uttāva-t-tuvataci,* பெ.(n.) நளி (கார்த்திகை) மாதத்து வெண்பக்கப் பன்னிரண்டாம் நாள்; the 12th titi in the bright fortnight of *kārthikai.*

*[உத்தானம் + துவாதசி.]*

*[Skt. utthāna > த. உத்தானம்.]*

**உத்தானம்**[1] *uttāṉam,* பெ.(n.) 1. அடக்குகை; subduing. 2. இடை; waist.

*[Skt. uddāna > த. உத்தானம்.]*

**உத்தானம்**[2] *uttāṉam,* பெ.(n.) அடுப்பு (திவா.); oven.

*[Skt. ud-dāna > த. உத்தானம்.]*



**உத்தானம்**[3] *uttāṉam,* பெ.(n.) உயிர்த்தெழுகை; rising from the dead, resurrection.

*[Skt. ut-thāna > த. உத்தானம்.]*

**உத்தானம்**[4] *uttāṉam,* பெ.(n.) குழந்தையைப் பிள்ளைப்பேறு (பிரசவ) அறையினின்று வெளிக்கொணரும் வினை முறை; ceremony of bringing out an infant from the lying in room, one of *cōṭaca-camskāram.* *"உத்தானஞ் செய்துகந்தன ராயரே" (திவ். பெரியாழ்.1, 1, 8).*

*[Skt. ut-thāpana > த. உத்தானம்.]*

**உத்தானவஞ்சிதம்** *uttāṉavañcitam,* பெ.(n.) நாட்டியக்கை முப்பதனுள் ஒன்று (சிலப்.பக்.81); (Natya.) one of thirty *nirutta-k-kai*

*[உத்தானம் + வஞ்சிதம்.]*

*[Skt. uddāṉa > த. உத்தானம்.]*

**உத்தானி** *uttāṉi,* பெ.(n.) தசைவகை; (Anat.) erector, a muscle.

*[Skt. utthāṉi > த. உத்தானி.]*

**உத்திட்டம்** *uttiṭṭam,* பெ.(n.) குறிப்பு (யாழ்.அக.); mention, note, indication.

*[Skt. uddiṣṭa > த. உத்திட்டம்.]*

**உத்திதாங்குலி** *uttitāṅguli,* பெ.(n.) வரமளிக்கும் கை (யாழ்.அக.); hand raised in abhaya pose.

*[Skt.uddhita+aṅguli > த. உத்திதாங்குலி.]*

**உத்தியம்** *uttiyam,* பெ.(n.) வேள்விவகை (திவா.); a sacrifice.

*[Skt. ukthya > த. உத்தியம்.]*

**உத்தியாபனம்** *uttiyābaṉam,* பெ.(n.) 1. முடிக்கை; bringing to conclusion, as a periodical fast. 2. நீங்கச் செய்கை; causing to depart. *"அண்ண லோடுமையை நண்பி னுத்தியாபனஞ்செய்தே" (பிரமோத்.18; 31).*

*[Skt. ud-yāpana > த. உத்தியாபனம்.]*

**உத்தியானம்** *uttiyāṉam,* பெ.(n.) பூஞ்சோலை (திவா.); garden, park.

*[Skt. ud-yāna > த. உத்தியானம்.]*

**உத்தியுத்தன்** *uttiyuttaṉ,* பெ.(n.) 1. ஊக்கமுள்ளவன்; a zealous person. 2. அருவுருவத்திருமேனி கொண்ட சிவன் (சி.போ.பா.1, 1); the *Sadāšiva* form of *Šiva.*

*[உத்தி + உத்தன்.]*

*[Skt. ud-yukta > த. உத்தியுத்தன்.]*

**உத்தியோகம்** *uttiyōgam,* பெ.(n.) 1. முயற்சி; effort, exertion. *"வேகமார் கலுழனுத்தியோகமென" (பிரபோத.28, 2).* 2. வேலை; business, employment, work.

*[Skt. ud-yōga > த. உத்தியோகம்.]*

**உத்தியோகன்** *uttiyōkaṉ,* பெ.(n.) பணியாளர்; officer, official. *"உபயத்திராளையும் ஏத்தி வாங்கிடும் உத்தியோகர்கள்" (சர்வசமய. பக்.190).*

**உத்திரதம்** *uttiratam,* பெ.(n.) அச்சுருவாணி (யாழ்.அக.); linch-pin.

*[Skt. udratha > த. உத்திரதம்.]*

**உத்திரம்** *uttiram,* பெ.(n.) தேட்கொடுக்கி என்னும் மூலிகை; indian heliotrope.

*[Skt. uddira > த. உத்திரம்.]*



**உத்திலேசம்** *uttilēsam,* பெ.(n.) ஒருவனை நால்வகை வழிகளால் உண்மை கூறும்படிச் செய்தல் (சுக்கிரநீதி, 282); making one speak the truth by the four fold expedients.

*[Skt. yuki-lēša > த. உத்திலேசம்.]*

**உத்திபகம்** *uttībagam,* பெ.(n.) எழுச்சி யுண்டாக்குவது; that which excites or inspirits, stimulant. *"காமோத்தீபகமான பொருள்".*

*[Skt. ud-dīpaka > த. உத்தீபகம்.]*

**உத்தீபனம்** *uttīpaṉam,* பெ.(n.) எழுச்சி யுண்டாக்குகை; kindling, exciting, stimulating.

*[Skt. ud-dīpana > த. உத்தீபனம்.]*

**உத்தீயம்** *uttīyam,* பெ.(n.) ஏழுவித சோம வேள்விகளுள் ஒன்று (பிரபோத.39, 14); one of seven varieties of the *Šōma*sacrifice.

*[Skt. ukthya > த. உத்தீயம்.]*

**உத்துவாகம்** *uttuvākam,* பெ.(n.) திருமணம் (பார்ப்பன.); marriage.

*[Skt. udvāha > த. உத்துவாகம்.]*

**உத்துவாகிதமுகம்** *uttuvāgida-mugam,* பெ.(n.) தலையண்ணாந்து பார்க்கை; looking up with the head thrown back, one of 14 *muka-v-apiṉayam.*

*[உத்துவாகிதம் + முகம்.]*

*[Skt. ud-vāhita→த. உத்துவாகிதம்.]*

**உத்துவாசனம்** *uttuvāšaṉam,* பெ.(n.) அனுப்பிவிடுகை; send-off, farewell, quitting, dismissal.

*[Skt. ud-vāsana > த. உத்துவாசனம்.]*

**உத்துவீதம்** *uttuvītam,* பெ.(n.) நாட்டியக்கை முப்பதனுள் ஒன்று (சிலப்.பக்.81); (Natya) one of thirty *nirutta-k-kai.*

*[Skt. ud-vīta > த. உத்துவீதம்.]*



**உத்துவேகம்** *uttuvēkam,* பெ.(n.) 1. மிகு விரைவு (நாநார்த்த.); quickness of motion. 2. அச்சம்; fear. 3. திருமணம்; marriage. 4. பாக்கு; areca-nut.

*[Skt. udvēga > த. உத்துவேகம்.]*

**உத்துளம்** *uttuḷam,* பெ.(n.) திருநீற்றை நீரிற் குழையாது உடலிற் பூசுகை; smearing one's body with dry sacred ashes. *"மிக்க விருமுத்துள மெய்வீறு" (அலங்காரச் சிந்து, 9).*

*[Skt. ud-dhūlana > த. உத்துளம்.]*

**உத்தூளம்** *uttūḷam,* பெ.(n.) திருநீற்றை நீரில் குழைக்காது வரியின்றிப் பூசுகை (சித். சிகா.விபூதி.14); besmearing parts of one's body with dry sacred ashes.

*[Skt. ud-dhūlana > த.உத்தூளம்.]*

**உத்தூளனம்** *uttūḷaṉam,* பெ.(n.) **உத்தூளம்** பார்க்க (தணிகைப்பு.இராம.22); see *uttūḷam.*

*[Skt. ud-dhūlana > த. உத்தூளனம்.]*

**உத்தூளி** *uttūḷi,* பெ.(n.) **உத்துளம்** பார்க்க; see *uttuḷam. "வெண்ணீற்றி னுத்தூளி" (சிதம்பர.திருப்பதி.454).*

*[Skt. ud-dhūlita > த. உத்தூளி.]*

**உத்தேசம்**[1] *uttēšam,* பெ.(n.) உயரம்; height. *"உத்சேதம் எழுநூற்றெழுபத்தைந்து வில்லு" (ஸ்ரீபுராணம்).*

த.வ. குத்துமதிப்பு.

*[Skt. utsēdha > த. உத்சேதம்.]*

**உத்தேசம்**[2] *uttēšam,* பெ.(n.) 1. நோக்கம்; intention, object, motive, aim. 2. மதிப்பு; estimate, guess, conjecture, surmise. 3. பின்னர் விரித்துக் கூறுவதற்காகப் பேர் மாத்திரையால் பொருளை மட்டும் குறிப்பிடுகை; preliminary indication of a topic which is to be further defined and classified.

*[Skt. ud-dēša > த. உத்தேசம்.]*

**உத்தேசியம்** *uttēšiyam,* பெ.(n.) கருதிய பொருள்; object in view.

*[Skt. ud-dēšya > த. உத்தேசியம்.]*

**உத்பாதம்** *utpādam,* பெ.(n.) **உற்பாதம்** பார்க்க; see *uṟpādam.*

*[Skt. ut-pāta >த. உத்பாதம்]*

**உதகபூருவஞ்செய்தல்** *utaka-pūrvañcey,* செ.குன்றாவி.(v.t.) திருக்கொடை (தானம்) செய்யும்போது நீர்வார்த்தல்; to pour water when a gift is made ceremonially. *"உதக பூருவஞ் செய்து கொடுத்தேன்" (S.I.I.i, 77).*

*[உதகம் + பூருவம் + செய்தல்.]*

*[Skt. udhaka+pūrvam> த. உதகபூருவம்.]*

**உதயகாந்தாரி** *utaya-kāntāri,* பெ.(n.) பண்வகை (பரத.ராக.103); (mus.) a specific melody-type.

*[உதயம் + காந்தாரி.]*

*[Skt. udhyam > த. உதயம்.]*

**உதயபானு** *utaya-bāṉu,* பெ.(n.) பண்வகை (பரத.இராக.103); (mus.) a specific melody type.

த.வ. எடுத்துக்காட்டு.

*[உதயம் + பானு.]*

*[Skt. udhaya > த. உதயம்.]*

**உதாகரணம்** *udākaraṇam,* பெ.(n.) சான்று; illustration.

*[உதாரணம் →உதாகரணம்.]*

*[Skt. ud-ā-haraṇa > த. உதாகரணம்.]*

**உதாகரிகன்** *utākarikaṉ,* பெ.(n.) எடுத்துக்காட்டாகவுள்ளவன்; exemplar. *"சொன்மரு வுதாரிகன்" (மான்விடு.198).*

*[Skt. உதாகரி + > த. உதாகரிகன்.]*

**உதாசனன்**[1] *udāšaṉaṉ,* பெ.(n.) 1. நெருப்பு; fire. 2. நெருப்புக் கடவுள்; Agni, the god of fire. 3. கொடுவேலி (மூ.அ.); Ceylon leadwort. *"எழில்கொ ளுதாசன னாகமதே" (தேவா.150;7).*

*[Skt. huta+ašana > த. உதாசனன்.]*



**உதாசனன்**[2] *udāšaṉaṉ,* பெ.(n.) இகழ்பவன் (நிந்திப்பவன்); reviler, abuser (w.).

*[Skt. ud-ā-sina > த. உதாசனன்.]*

**உதாசனி-த்தல்** *utāsaṉi-,* 11 செ.குன்றாவி. (v.t.) புறக்கணிப்புச் செய்தல்; to treat with contempt. *"இரப்பவரைக் கண்டால் உதாசனித்தலும் இன்றி" (குறள், 1055, மணக்.).*

*[Skt. udāsina > த. உதாசனி-த்தல்.]*

**உதாசனி** *udāšaṉi,* பெ.(n.) கொடியவள்; fiery, cruel woman. *"சூர்ப்பணகைப் படுமூளி யுதாசனி" (திருப்பு.266).*

*[Skt. huta+ašana > த. உதாசனி.]*

**உதாசினம்** *udāšiṉam,* பெ.(n.) நினைவில் (கவனத்தில்) கொள்ளப்படாத சொல்; contemtible word. *"உற்றாரை யுதாசினங்கள் சொல்ல வேண்டாம்" (உ.வ.).*

த.வ. தாழ்ச்சியுரை.

*[Skt. ud-ā-sina > த. உதாசினம்.]*

**உதாசீனம்** *udāšīṉam,* பெ.(n.) 1. விருப்பு வெறுப்பின்மை; indifference, apathy, neutrality. 2. இகழ்வு; contempt. *"நட்பேயுதாசீனம் பகை" (பன்னிருபா.56).*

த.வ. தாழ்ச்சி.

*[Skt. ud-ā-sīna > த. உதாசீனம்.]*

**உதாசீனன்** *udāšīṉaṉ,* பெ.(n.) 1. பொதுவாயிருப்பவன் (சி.சி.4, 8, சிவாக்.); one who is indifferent or neutral. 2. இல்லறக் கடனை முடித்து உவர்ப்புப் பிறந்த இல்லறத்தான்; a house holder who has discharged his duties and given up all worldly attachment.

*[Skt. ud-ā-sīna > த. உதாசீனன்.]*

**உதாத்தம்** *utāttam,* பெ.(n.) 1. செல்வத்தினுயர்ச்சி; figure of speech which expresses either abundance of wealth, or the greatness of thought. 2. மறையோதும் ஓசை நான்கனுள் ஒன்றாகிய எடுத்தலோசை (திருவிளை. தடாதகை.8); rising accent, one of four *vēdasvaram.*

*[Skt. udātta → த. உதாத்தன்.]*

**உதாத்தன்** *utāttaṉ,* பெ.(n.) 1. பெரியோன் (நாநார்த்த.); great man. 2. கொடையாளி; libral donor.

*[Skt. udātta → த. உதாத்தன்.]*

**உதாரகுணம்** *udāra-kuṇam,* பெ.(n.) வள்ளன்மை; liberality, manificence.

*[உதாரம் + குணம்.]*

*[Skt. udāra> த. உதாரம்.]*

**உதாரணம்** *udāraṇam,* பெ.(n.) 1. எடுத்துக்காட்டு; example, illustration. 2. கண்டபொருளைக்கூறி காணாத பொருளை சிந்திக்க வைக்கும் கருதளவை (அனுமானம்); statement of instance, the third member

of an indian syllogism (log.) *"அசைச் சீர்க்குதாரண நாண்மலரே" (காரிகை. உறுப்.7).*

த.வ. சான்று.

*[Skt. ud-ā-harana > த. உதாரணம்.]*

**உதாரத்துவம்** *udārattuvam,* பெ.(n.) வள்ளன்மை; liberality, munificence.

*[Skt. udāratva > த. உதாரத்துவம்.]*

**உதாரதை** *udāradai,* பெ.(n.) 1. கொடை; liberality. *"ஊணிலான் செய்யும் உதாரதையும்" (சிறுபஞ்.12).* 2. **உதாத்தம்** பார்க்க (வீரசோ.அலங்.29); see *udāttam.*

*[Skt. udāra-tā > த. உதாரதை.]*

**உதாரம்** *udāram,* பெ.(n.) 1. கொடை; liberality, generosity, munificence. *"உதார சீலனுய ரங்கர்கோன்" (பாரத.கிருட்.134).* 2. மேம்பாடு; nobility, greatness. *"கனமிலதா முதாரமதா மென்னினும்" (ஞானவா. வைராக்.64).* 3. குறிப்பினால் ஒரு பொருள் சிறப்புப்படத் தோன்றுவதாகிய குணம் (தண்டி.20); indication by indirect suggestion of the excellance or the eminence of a thing, a merit of poetic composition (poet).

*[Skt. udāra > த. உதாரம்.]*

**உதாரன்** *udāran,* பெ.(n.) 1. கொடையாளி; liberal man, generous person. 2. சிறந்தவன்; a person of good address, of confidence, of manliness (w.).

*[Skt. udāra > த. உதாரன்.]*

**உதாரி** *udāri,* பெ.(n.) **உதாரன்** பார்க்க; see *udāran. "உதாரி மேவிய கானமே" (சேதுபு. தரும.9).*

*[Skt. udāra > த. உதாரி.]*

**உதானன்** *udānan,* பெ.(n.) பத்து வளிகளுள் (தசவாயுக்களுள்) ஒன்று; a vital air of the body, the ascending *vāyu*, one of *tasa-vāyu* (பிங்.).

*[Skt. udāna > த. உதானன்.]*

**உதானன்றிசை** *utānanrišai,* பெ.(n.) வாயு விளங்கம் (சங்.அக.); small elliptic cuspidate-leaved wind berry.

*[உதானன் + திசை.]*

*[Skt. உதானன் > உதானன்.]*

**உதிட்டிரன்** *udittiran,* பெ.(n.) பாண்டவரில் மூத்தவனான தருமன்; *yudhistira,* the eldest of the *Pañca-pāṇḍavar.*

*[Skt. yudhi-ṣṭhira > த. உதிட்டிரன்.]*

**உதீசி** *udīsi,* பெ.(n.) வடக்கு; north. *"உதீசித் திருத்திய திசையில்" (இரகு.முடிசூ.34).*

*[Skt. udīcī > த. உதீசி.]*

**உப்பர்காவி** *uppar-kāvi,* பெ.(n.) காவியின் மேற்பாய்; upper top sail (M.Navi.83).

*[U. upar+ > த. உப்பர்காவி.]*

**உப்பர்சவர்** *uppar-savar,* பெ.(n.) கப்பலின் மேலிடத்துக் கட்டப்படும் பாய்வகை; upper top-gallant sail (M.Navi.83).

*[U. upar > த. உப்பர்.]*



**உப** *uba,* இடை. (part.) 1. உபசந்தி, உபக்கிரகம் என்பவற்றில் வருவது போல அருகு (சமீபம்), முதன்மையற்றது (அப்பிரதானம்) என்பவற்றைக் காட்டும் ஒரு வடமொழி முன்னொட்டு (உபசருக்கம்); a Skt. adverbial or adnominal prefix implying proximity or subsidiariness. 2. குறைந்த அல்லது குறை என்னும் பொருள்படும் ஒரு முன்னொட்டு; a prefix denoting lack or deficiency. 3. துணை; auxillary or secondary.

வடமொழியில் upa, அடிப்படையாக, அருகில் செல்லுதல், முன்னுக்குப் போதல் அதாவது பக்கத்தில் போதல், என்னும் பொருள் தருகிறது. ஒன்றுக்கு அருகில் இருப்பது என்னும் வழக்கு பின்னர் ஒன்றுக்குத் துணையாவது, அடுத்த நிலையில் இருப்பது போன்ற பொருள்களிலும் ஆளப்பட்டுள்ளது. தமிழில் உப பெரும்பான்மை துணை அதாவது இரண்டாம் நிலை என்னும் பொருளிலேயே வழக்கெய்தியுள்ளது. எ–டு : உபதலைவர்.

வடமொழியில் upa. ஒடு, உடன், கீழ் முதலியவற்றையும் அன்றியும், அதன்கூட என்பவற்றையும் உணர்த்தும் முன்னொட்டாக வருகிறது.

**உபக்கிரகம்**[1] *uba-k-kiragam,* பெ.(n.) பெருங்கோளை (கிரகத்தை)ச் சுற்றியோடுஞ் சிறுகோள்; satellite.

**த.வ. துணைக்கோள்.**

*[Skt. upa-graha > த. உபக்கிரகம்.]*

**உபக்கிரகம்**[2] *uba-k-kiragam,* பெ.(n.) சிறை (நாநார்த்த.); prison.

*[Skt. upa-graha > த. உபக்கிரகம்.]*

**உபக்கிரம்** *uba-k-kiram,* பெ.(n.) முகர்தல்; smelling.

**உபக்கிரமணம்**[1] *uba-k-kiramaṇam,* பெ.(n.) தொடக்கம்; commencement, beginning.

*[Skt. upa-kramaṇa > த. உபக்கிரமணம்.]*

**உபக்கிரமணம்**[2] *uba-k-kiramaṇam,* பெ.(n.) பண்டுவம் (மருத்துவம்) செய்தல்; applying medicine to or operating upon, patients to cure diseases.

*[Skt. upa-kramaṇa > த. உபக்கிரமணம்.]*

**உபக்கிரமணிகை** *uba-k-kiramaṇigai,* பெ. (n.) 1. முகவுரை; preface. 2. பாயிரம்; introduction.

*[Skt. upa-kramaṇikā > த. உபக்கிரமணிகை.]*

**உபக்கிரமம்**[1] *uba-k-kiramam,* பெ.(n.) தொடக்கம்; beginning, commencement. *"விஞ்சுமுபக்கிரம முபசங்கார நடையாய்" (பிரபோத. 22, 17).*

*[Skt. upa-krama > த. உபக்கிரமம்.]*

அருகில் செல்லுதல், வருதல், சென்று சேர்தல் என்ற பொருளுள்ள kram என்னும் வேரிலிருந்து upakram என்னும் சொல் பிறந்துள்ளது (மா.வி.). தமிழில் அது தொடக்கம் என்னும் பொருளில் ஆளப்பட்டுள்ளது.

**உபக்கிரமம்**[2] *uba-k-kiramam,* பெ.(n.) 1. பண்டுவம் (மருத்துவம்); medicine in theory. 2. மருத்துவப் பயிற்சி (வைத்தியாப்பியாசம்); medicine in practice.

*[Skt. upa-krama > த. உபக்கிரமம்.]*

**உபக்கிரமம்**[3] *ubakkiramam,* பெ.(n.) மறம் (விக்கிரமம்) (நாநார்த்த.); prowess.

*[Skt. upa-krama > த. உபக்கிரமம்.]*

**உபக்கிரமி–த்தல்** *uba-k-kirami-,* 11 செ.குன்றாவி.(v.t.) தொடங்குதல்; to begin. *"பாட்டுக்களையடைவே விவரிப்பதாக உபக்கிரமிக்கிறார்" (ஈடு. 1, 1, 1, ஜீ).*

kram என்னும் வேரிலிருந்து பிறந்த upakram என்னும் வடசொல் தமிழில் உபக்கிரமம் என்னும் வடிவத்தில் வழக்கூன்றியுள்ளது. இப்பெயர் பின்னர் வினைப்படுத்தும்போது உபக்கிரமித்தல் என்று வடிவம் பெற்றுள்ளது. வடமொழியில் upakram என்பது தொடங்குதல் என்னும் வினைவடிவத்தில் ஆட்சியுள்ளது. தமிழ் வினைவடிவம் பெயரிலிருந்து வினைதோன்றிய பின்னாக்க நிலையையே காட்டுகிறது.

**உபக்கிரயம்** *uba-k-kirayam,* பெ.(n.) முகர்தல்; smelling.

**உபக்கிராமம்** *uba-k-kirāmam,* பெ.(n.) சிற்றூர் (உட்கிடைச் சிற்றூர்); hamlet, dependent village (C.G.).

த.வ. பட்டி.

*[Skt. upa+grāma > த. உபக்கிராமம்]*

உபக்கிராமம் = கிராமத்தை (ஊரை)க் காட்டிலும் சிறியது. இன்றைய அரசு கணக்கின்படி பல சிற்றூர்கள் சேர்ந்தது ஓர் ஊர். வடசொல் grāma என்பதற்கு மக்கள் வாழிடம், ஊர், சிற்றூர் ஆகிய பொருள்கள் உண்டு. இச்சொல் தமிழில் ஊர் என்ற பொருளுடனும் பெருவழக்கெய்தியுள்ளது. கிராமம் என்னும் சொல் ஊரைக் குறித்தபின் அதனினும் சிறிய வாழிடமான சிற்றூரைக் குறிக்க உபக்கிராமம் என்னும் சொல் வடமொழியில் வழக்கூன்றியுள்ளது.

**உபகச்சம்** *uba-kaccam,* பெ.(n.) வெள்ளை யாமணக்கு; moghul castor-oil plant.



**உபகஞ்சிகம்** *uba-kañjigam,* பெ.(n.) கருஞ்சீரகம்; black cumin seed, nigella-satica.

**உபகண்டம்** *uba-kaṇḍam,* பெ.(n.) கழுத்தடி; the portion of the trachea between the neck and the thorax, cervico-thorax.

*[உப + கண்டம்]*

*[Skt. upa > த. உப]*

கள் → கண்டு → கண்டம் = கழுத்து.

**உபகணம்** *uba-kaṇam,* பெ.(n.) கருங்கோள் செங்கோள் (இராகுகேது) (மங்கனே. பாயி. 1); (Astron.) the ascending and descending nodes.

*[உப + கணம்]*

*[Skt. upa > த. உப]*

குல் → குலம் = கூட்டம். குல் → கல் → கல. கலத்தல் = கூடுதல். குல் → குள் → கள். கள்ளுதல் = கூடுதல். கள் → களம் = கூட்டம். கள் → கண். கண்ணுதல் = பொருந்துதல். கண் → கண. கணத்தல் = கூடுதல். கண் → கணம் = கூட்டம்.

*[த. கணம் > Skt. gaṇa.]*

**உபகதை** *uba-kadai,* பெ.(n.) 1. கிளைக்கதை; subordinate narrative, short story, episode. 2. கட்டுக்கதை (சங்.அக.); fable.

*[உப + கதை.]*

*[Skt. upa > த. உப]*

*[த. கதை > Skt. kathā.]*

upakathā என்னும் வடசொற்குச் சிறுகதை, கதை, துணையாக விளக்கப்படுவது (கிளைக்கதை) என்னும் பொருள்களை மா.வி. காட்டுகிறது. இப்பொருள்களுள் கிளைக்கதை என்னும் பொருளே தமிழில் இடம்பெற்றுள்ளது. மேலும், கட்டுக்கதை என்னும் புதுப் பொருளும் இங்கு உருவாகியுள்ளது. கிளைக்கதை மூலக் கதையோடு தொடர்புற்றிருப்பது போன்று மூலக்கதையை விளக்குமுகத்தான் புனைந் துரைப்பதால் இப்பொருள் தொடர்புடையதாயிற்று.

**உபகந்தகம்** *uba-kandagam,* பெ.(n.) கந்தகம் குறைவாயுள்ள ஓர் உப்பு; any salt containing less of sulphate, *Hyposulphite.*

**உபகந்தம்** *uba-kandam,* பெ.(n.) அளவிற் குறைந்த மண(வாசனை)ப் பொருள்; perfumes with less odour.

*[உப + கந்தம்]*

*[Skt. upa > த. உப]*

காந்து → கந்து → கந்தம்.

**உபகம்** *ubagam,* பெ.(n.) பெண்ணிடம் சேர்தல்; approaching a woman sexually.

*[Skt. upagam > த. உபகம்.]*

**உபகமம்** *ubagamam,* பெ.(n.) 1. ஏற்பு (அங்கீகாரம்) (நாநார்த்த.); acceptance. 2. அணுகுகை; approach.

*[Skt. upa-gama > த. உபகமம்.]*

**உபகரணம்** *uba-karaṇam,* பெ.(n.) 1. துணைப் பொருள்கள்; instrument, implement, means, apparatus. paraphernalia, as vessels at a sacrifice. *"உகந்த பொருளோ டுபகரண மொருங்கு சேர்த்தி" (சேதுபு. அநும. 22).* 2. துணைக் காரணம் (திவா.); instrumental cause. 3. உயிருக் குதவியானது; means of subsistence anything supporting life. 4. துணைச் செய்கை; action or operation done with an instrument.

**த.வ. துணைக்கருவி.**

*[உப + கரணம்.]*

*[Skt. upa > த. உப.]*

கருத்தல் = செய்தல். கரு → கரணம். *karaṇa* என்னும் சொல் செய், செயல்படுத்து என்னும் பொருளுள்ள kṛi என்னும் வேரிலிருந்து பிறந்ததாக மா.வி. காட்டுகிறது. 'கரு' என்னும் தமிழ்வினை *kṛi* எனத் திரிந்து அங்கு வழக்கூன்றியுள்ளது.

**உபகரணவைத்தியம்** *uba-garaṇa-vaittiyam,* பெ.(n.) கருவியினால் செய்யும் மருத்துவ முறை; the operative branch of medical practice-surgery.

*[உப + கரண(ம்) + வைத்தியம்.]*

*[Skt. vaidya > த. வைத்தியம்.]*

**உபகரி-த்தல்** *uba-kari-,* 14 செ.கு.வி.(v.i.) உதவுதல்; to render aid, do a kindness, confer a benefit, bestow favour. *"திவ்யாத்ம ஸ்வரூப வைலக்ஷண்யத்தைக் காட்டியுபகரித்தான்" (ஈடு. 1,1,1.).*

*[உப + கரி-,]*

*[Skt. upa > த. உப.]*

கருத்தல் = செய்தல். கரு → கரி. 'upkṛi'என்னும் வடமொழி வடிவத்தில் தமிழ்வினை கருவுடன் உபமுன்னொட்டு சேர்ந்துள்ளது.

**உபகருமம்** *uba-karumam,* பெ.(n.) குறைவான தொழில்; (in medicine) diminished function-Hypo function.

*[உப + கருமம்.]*

*[Skt. upa > த. உப.]*

கரு → கருமம்.

**உபகற்பம்** *uba-kaṟpam,* பெ.(n.) 1. காட்டுத்தீ, செங்கல் சூளையின் நெருப்பு முதலிய வற்றால் வெந்த சாம்பலைக் கொண்டு முறைப்படியமைத்த திருநீறு (வீபூதி) (சைவச. பொது 183); sacred ashes taken from natural forest fire or from artificially made brick or kiln fire and prepared according to rule, one of three vibūdi. 2. காய கற்ப மூலிகைகளைக் கொண்டு மருந்து உருவாக்குங் காலத்து அவற்றிற்கு உதவியாகச் சேரும் சரக்குகள்; auxillary or minor drugs which are added as ingredients to the life - promoting drugs used in the preparation of a cordial or an elixir. 3. தேற்று மருந்து; a preparation consisting of drugs promoting vigiour by relieving pain paregoric elixir.

*[உப + கற்பம்.]*

*[Skt. upa > த. உப.]*

கல் → கலி = ஒன்று சேர்தல், கூடுதல், மிகுதல், பெருகுதல். கல் → கல்பு → கல்பம் → கற்பம்.

**உபகாதம்** *uba-kādam,* பெ.(n.) நோய்; disease.

**உபகாரகன்** *ubakāragaṉ,* பெ.(n.) 1. உதவி செய்வோன்; assistant, friend, benefactor. *"நிர்ஹேதுகமாகத்தானே யுபகாரக னானான்" (ஈடு. 1,1,1.).* 2. மருத்துவனுக்குத் துணையாளி; a male medical assistant.

*[Skt. upa-kāraka > த. உபகாரகன்.]*

'ன்' ஆ.பா.ஈறு.

**உபகாரச்சம்பளம்** *ubakāra-c-cambaḷam,* பெ.(n.) 1. ஒய்வூதியம்; pension. 2. படிப்புக்காக அளிக்கப்படும் பொருளுதவி; scholarship.

**த.வ. உதவிச்சம்பளம், உதவித்தொகை.**

*[உபகாரம் + சம்பளம்.]*

*[**Skt.** upa > த. உப.]*

கரு > காரு > காரம்.

சம்பு = கூலம், நெல்; அளம் = உப்பு. பழங்காலத்தில் சம்பளம் கூலமும் உப்புமாகக் கொடுக்கப்பட்டது.

**த.** சம்பளம் > **Skt.** šambala (provender or provisions for a journey, stock for travelling.)

**உபகாரசுமிருதி** *ubakārasumirudi,* பெ.(n.) செய்ந்நன்றியறிகை; rememberance of a kind act, gratitude for a benefit received. *"உபகாரஸ்மிருதியினாலே ஆழ்வானைக் கொண்டாடுகிறார்கள்" (திவ். திருப்பல். 7).*

*[உப + கார + சுமிருதி.]*

*[**Skt.** upa > த. உப.]*

*[**Skt.** upa-kāra-smiriti > த. உபகாரசுமிருதி.]*

**உபகாரம்**[1] *ubakāram,* பெ.(n.) 1. உதவி; help, assistance, opp. to அபகாரம். *"நல்லாரொருவர்க்குச் செய்த வுபகாரம்" (வாக்குண். 2).* 2. கொடை (பிங்.); present, gift. 3. காணிக்கை; offering, oblation. *"நயந்தினிய வுபகார நல்கினார்கள்" (திருவாலவா. 2, 4).*

**த.வ. உதவி.**

*[உப + காரம்.]*

*[**Skt.** upa > த. உப.]*

கருத்தல் = செய்தல். கரு → காரு → காரம் = செய்கை. உப = துணை, உதவி. உபகாரம் = துணை செய்கை, உதவி புரிகை, உதவி.

**உபகாரம்**[2] *ubagāram,* பெ.(n.) மகிழ்ச்சி (அக.நி.); joy.

*[**Skt.** upa-hāra > த. உபகாரம்.]*

**உபகாரம்**[3] *ubakāram,* பெ.(n.) குறைந்த காரம்; less alkaline than normal-Hypo-alkaline.

*[உப + காரம்.]*

*[**Skt.** upa > த. உப.]*

*[கடு → கடி → கரி → கார். கார்த்தல் = உறைத்தல். கார்ப்பு = உறைப்பு. கார் → காரம் = உறைப்பு, எரிச்சல், பிள்ளை பெற்ற பெண்டிர்க்குக் கொடுக்குங் காரமருந்து.]*

**உபகாரன்** *ubakāraṉ,* பெ.(n.) **உபகாரி** பார்க்க; see *ubakāri.*

*[**Skt.** upa-kāra > த. உபகாரம் > உபகாரன்]*

**உபகாரி** *ubakāri,* பெ.(n.) உதவி செய்வோன் (பிங்.); benefactor, generous person, one who is obliging.

**த.வ. உதவுநன்.**

*[**Skt.** upa-kārin > த. உபகாரி.]*

*[உபகாரம் → உபகாரி. 'இ' உடைமை குறித்த ஈறு]*

**உபகாரிப்பு** *ubagārippu,* பெ.(n.) முழுவதுமாக மலர்ந்த பூ; a blossom, a full blown flower.

**உபகாரிவிரணம்** *ubagāri-v-iraṇam,* பெ.(n.) மெழுகு; wax.

**உபகாலிகம்** *ubagāligam,* பெ.(n.) **உபகுஞ்சம்** பார்க்க;see *upa-kuñjam.*

**உபகிதம்** *ubagidam,* பெ.(n.) தொல்லை (உபாதி)யுடையது (விசாரசந். 321); that which has *ubādi.*

*[**Skt.** upahita > த. உபகிதம்.]*

**உபகிரகம்** *ubakiragam,* பெ.(n.) நோய்களை யுண்டாக்கும் ஆவி, காற்று (கிரகம்); a kind of demon causing diseases.

**உபகிரமம்** *uba-kiramam,* பெ.(n.) 1. நோயாளியைக் கவனித்தல்; attendance on a patient. 2. மருத்துவம், பண்டுவம்; treatment, practice or application of medicine.

**உபகிருசம்** *ubakirušam,* பெ.(n.) ஒரு வகைப் பல் நோய்; a kind of teeth disease.

**உபகிருதம்** *ubakirudam,* பெ.(n.) உதவி (சங்.அக.); assistance, help, aid.

*[**Skt.** upa-kṛta > **த.** உபகிருதம்.]*

**உபகிருதன்** *ubakirudan̲,* பெ.(n.) தானாகவே ஒருவற்குத் தன்னேற்பு (சுவீகாரம்) புகுந்தவன் (ஏலா. 31); (Law) self-given son, son adopted with his own consent.

**உபகிருதி** *ubakirudi,* பெ.(n.) **உபகிருதம்** (வின்.) பார்க்க; see *upakirudam.*

*[**Skt.** upa-kṛti > **த.** உபகிருதி.]*

**உபகில்லியம்** *ubakilliyam,* பெ.(n.) திப்பிலி; long-pepper.

*[**Skt.** upa-kulyā > **த.** உபகுல்லியம் → உபகில்லியம்.]*

**உபகுசம்** *ubakušam,* பெ.(n.) பல்லீறில் வரும் கொப்புளம்; gum-boil.

**உபகுஞ்சம்** *ubakuñjam,* பெ.(n.) 1. கருஞ்சீரகம்; black cumin. 2. ஏலம்; cardamom.

**உபகுஞ்சிகம்** *ubakuñjigam,* பெ.(n.) சிற்றேலம்; small cardamom.

*[**Skt.** upa-kuñcika > **த.** உபகுஞ்சிகம்.]*

**உபகுஞ்சிகை** *ubakuñjigai,* பெ.(n.) 1. கருஞ்சீரகம்; black cumin. 2. ஏலம் (மூ.அ.); cardamom plant.

*[உப + குஞ்சிகை.]*

*[**Skt.** upa > **த.** உப.]*

*குஞ்சி >குஞ்சிகை.*

**உபகுஞ்சிதம்** *ubakuñjidam,* பெ.(n.) கத்தூரியரளி; musk-oleander.

**உபகும்பம்** *ubakumbam,* பெ.(n.) 1. சீரகம்; cumin-seed. 2. காட்டாமணக்கு; wild-croton.

**உபகுரு** *uba-guru,* பெ.(n.) துணை ஆசிரியர்; assistant teacher, assistant to the guru.

*[உப + குரு.]*

*[**Skt.** upa > **த.** உப.]*

குரு = பெருமை. குரு → குரவன் = பெரியோன், ஐங்குரவர், இரு முது குரவர். குரு என்னும் சொல்லுக்குப் பெரியோன் என்பதே மூலப் பொருளாகும்.

**உபகுல்லம்** *ubakullam,* பெ.(n.) சுக்கு (மூ.அ.); dried ginger.

**உபகுல்லாவிசம்** *ubakullāvišam,* பெ.(n.) கம்பளி மரம்; cater pillar tree.

**உபகுல்லியை**[1] *ubakulliyai,* பெ.(n.) திப்பிலி, மருந்துக் கொடிவகை; long pepper.

*[**Skt.** upa-kulyā > **த.** உபகுல்லியை.]*

**உபகுல்லியை**[2] *ubakulliyai,* பெ.(n.) கிளை வாய்க்கால் (நாநார்த்த.); branch channel.

*[**Skt.** upakulyā > **த.** உபகுல்லியை]*

**உபகுலியம்** *ubakuliyam,* பெ.(n.) **உபகுல்லியை**[1] (மூ.அ.) பார்க்க; see *upakulliyai*[1].

*[**Skt.** upa-kulyā > **த.** உபகுலியம்.]*

**உபகுலியை** *ubakuliyai,* பெ.(n.) **உபகில்லியம்** பார்க்க; see *upakilliyam.*

*[**Skt.** upakulyā > **த.** உபகுலியை.]*

**உபகுலோசிகம்** *ubakulōšigam,* பெ.(n.) கத்தைக் காம்பு; black catechu or pegu catechu.

**உபகேசி** *ubakēši,* பெ.(n.) 1. நப்பின்னை; *Nappin̲n̲ai,* a wife of Krṣṇa. *"உபகேசி தோண்மணந்தான்" (வள்ளுவமா. 21, நேமிநா. சொல். 5, உரை).* 2. இடுமுடியாள்; wigged woman.

*[**Skt.** upa-kēsi > **த.** உபகேசி.]*

**உபசங்காரம்** *uba-šaṅgāram,* பெ.(n.) 1. முடிவு, அழிவு; end, destruction, reduction. 2. கூட்டுறவை யழித்தல்; reducing a compound to its original elements. *"தனுவாதி யுபசங்காரப்*

*படுகையால்" (சி.சி.1, 32, சிவாக்.).* 3. முடிக்கை; summarizing, summing up, resume. *"உபசங்கார நடையாய்" (பிரபோத. 22, 17).* 4. படைக்கலனைத் தடுக்கும் மந்திரம்; *mantra* for preventing a particular missile from harming *"பிரமன் மெய்த்தவப் படையை விலக்குதற் குப சங்கார நானறிகிலன்" (வரத. பாகவத. பரீட்சித். சனன. 10).*

*[**Skt.** upa-saṃ-hāra > த. உபசங்காரம்.]*

**உபசத்தி** *ubašatti,* பெ.(n.) 1. ஒன்றுபடுதல்; union. 2. உதவி; service. 3. ஈகை; gift.

*[**Skt.** upašatti > த. உபசத்தி.]*

**உபசந்தானம்** *ubašandāṉam,* பெ.(n.) தொடுக்கை; fastening, tacking, affixing as an arrow. *"வெங்கணை..... உபசந்தானம் புரியரு மறையு மீந்தான்" (கூர்மபு. இராமனவ. 21).*

*[**Skt.** upa-san-dhāna > த. உபசந்தானம்.]*

**உபசந்தி** *uba-šandi,* பெ.(n.) சந்திக்குச் சற்று முந்தின காலம்; period of time just before sunrise or sunset. *"சந்தி உபசந்திகளின் பேதத்தையறிந்து" (சைவச. பொது. 76, உரை).*

த.வ. **அந்திசந்தி.**

*[உப + சந்தி.]*

*[**Skt.** upa > த. உப.]*

அந்து → அந்தி → சந்தி.

**உபசம்மாரம்** *uba-šammāram,* பெ.(n.) **உபசங்காரம்** பார்க்க; see *upašaṅgāram.*

*[**Skt.** upa-saṃ-hāra > த. உபசம்மாரம்]*

**உபசமயம்** *ubašamayam,* பெ.(n.) முட்கத்திரி; prickly brinjal-solanum melongena.



**உபசமனம்** *ubašamaṉam,* பெ.(n.) 1. அமைதி; tranquility, cessation of external action for the purpose of silent contemplation. 2. அமைதிப்படுத்துதல்; mitigating. 3. தணித்தல்; appeasing. 4. வலி ஆற்றும் மருந்து; a medicine that relieves pain an allaying medicine.

*[**Skt.** upašamana > த. உபசமனம்]*

**உபசமி-த்தல்** *ubašami-,* 11 செ.கு.வி.(v.i.) அமைதியடைதல் (உபசாந்த மடைதல்) (மேருமந். 724); to become quiescent.

*[**Skt.** upa-ša-, > த. உபசமி-]*

**உபசயசரீரம்** *ubašaya-šarīram,* பெ.(n.) பரு உடல்; physical body. *"ரோசாதிகளாற் கெடுகின்ற உபசயசரீரம் விட்டு" (நீலகேசி. 309, உரை).*

*[**Skt.** upa-caya+šarīra > த. உபசயசரீரம்.]*

**உபசயம்¹** *ubašayam,* பெ.(n.) 1. மிகுதி (பி.வி.44, உரை); abundance, excess. 2. எழு கோள்வீடு (லக்கினத்துக்கு) 3, 6 , 10, 11 ஆம் இடங்கள் (விதான. மரபி. 3); the 3rd, 6th, 10th, 11th signs from the ascendent. 3. வளர்ச்சி; growth. *"உபசயாபசயங்கள் உடம்பின் தன்மைகள்".*

*[**Skt.** upa-caya > த. உபசயம்.]*

**உபசயம்²** *ubašayam,* பெ.(n.) 1. நோய் குணப்படல்; disease being cured. 2. நோயைத் தணித்தல்; the allaying of disease by suitable remedies. 3. ஆற்று மருந்து; an allaying medicine, a healing drug. 4. தடுமன் கொள்ள வாய்ப்பு; the likelihood or predeliction of a sick person as for cold etc. 5. உணவு அல்லது மருந்துகளின் குணத்தைக் கொண்டு நோயை உறுதி படுத்துதல்; diagonosis from the effect of certain articles of food or medicine. 6. அருகிருத்தல்; lying near, at hand or close by.

**உபசர்க்கதாகம்** *ubašarkka-dāgam,* பெ.(n.) இனிப்பு, உப்பு முதலியவற்றை அளவு கடந்து உண்பதாலும் களைப்பு அல்லது சோர்வடைந்த பொழுதும் கடுங் காய்ச்சல் காலத்தும் உடம்பில் நெடுநாளாகப் பற்றிய நச்சு, காலத்தும் உண்டாகித் துன்புறுத்தும், மேன்மேலும் உண்டாகும் நாவறட்சி; a marbid or excessive thirst-polydypsis, due to the consumption of excessive salt or sugar in food or through fatigue or weariness or incases of fever accompanied by thirst or of poisoning from chronic disease.

*[உபசர்க்க + தாகம்.]*

*[**Skt.** upasarga > த. உபசர்க்கம்.]*

*தாவம்→தாகம் > **Skt.** dāha.*

**உபசர்க்கம்**[1] *ubašarkkam,* பெ.(n.) **உபசருக்கம்** பார்க்க; see *ubašarukkam.* *"கையாதிமிடைந்து நின்றதனைப் பெயரிட்டது பசர்க்கம்" (பி.வி.45).*

*[**Skt.** upa-sarga > த. உபசர்க்கம்]*

**உபசர்க்கம்**[2] *ubašarkkam,* பெ.(n.) 1. நோய்வகை (நாநார்த்த.); a disease. 2. துன்பம்; trouble. 3. நோய் மேல் நோய்; a disease super-induced on another. 4. நோயின் வேறுபாடு; change occasioned by any disease. 5. இறப்புக் குறி; indication or symptom of death.

*[**Skt.** upa-sarga > த. உபசர்க்கம்.]*

**உபசர்மம்** *ubašarmam,* பெ.(n.) தோலின் கீழ்; beneath the skin - hypodermic.

*[**Skt.** upasarma > த. உபசர்மம்.]*

**உபசரணம்** *ubašaraṇam,* பெ.(n.) (குருதி) அரத்தத் திரட்சி; accumulation of blood, congestion.

**உபசரணை** *ubašaraṇai,* பெ.(n.) பணிவிடைச் செய்கை; act of civility, courteous behaviour, respect.

**த.வ. பணிவிடை.**

*[**Skt.** upa-caraṇa > த. உபசரணை.]*

**உபசரம்** *ubašaram,* பெ.(n.) ஆ (பசு)க்கள் கருக் கொள்ளுங் காலம்; the period of gestation in cows.

**உபசரி-த்தல்** *ubašari-,* **11** செ.கு.வி.(v.i.) 1. பணிவிடை செய்தல்; to wait upon with respect, show veneration. 2. மதிப்புரவு (மரியாதை) காட்டுதல்; to show courtesy to, receive and wait on with marks of polite attention, treat with civility. *"குமரன் றன்னை முற்கொடு பாதலம்போ யுபசரித்த பின்னர்" (சேதுபு. விதூம. 110).*

**த.வ. விருந்தோம்புதல்.**

*[**Skt.** upa-car > த. உபசரி-,]*

**உபசரியம்** *ubašariyam,* பெ.(n.) கருக் கொள்ளல்; impregnation as in females.

**உபசருக்கம்**[1] *ubašarukkam,* பெ.(n.) பெயர் வினைகளுக்கு முன்வரும் முன்னொட்டு (அவ்வியயம்); Skt. adverbial and adnominal perfix as அப, உப.

*[**Skt.** upa-sarga > த. உபசருக்கம்.]*

**உபசருக்கம்**[2] *ubašarukkam,* பெ.(n.) 1. சிவப்பு; redness. 2. அம்மை (மாரி) முதலிய கொள்ளை நோய்கள்; epidemic disease such a small-box. 3. நோயின் கடுமை அல்லது இறப்பைக் காட்டுங் குறிகள்; supervening symptoms of a disease or symptoms of death.

**உபசருச்சி** *ubašarucci,* பெ.(n.) **உபகாரம்**[3] பார்க்க; see *upa-kāram*[3].

**உபசல்லியம்** *ubašalliyam,* பெ.(n.) 1. ஊரின் அருகு (நாநார்த்த.); proximity. 2. தாழ்த்தப்பட்டோரின் குடியிருப்பு (புலைச் சேரி); quarters of the depressed classes.

*[**Skt.** upa-šalya > த. உபசல்லியம்.]*

**உபசன்னத்துவம்** *ubašannattuvam,* பெ.(n.) அடைக்கலம் புகுந்து (சரணடைந்து) கேட்க வேண்டியவற்றைக் கேட்கை; seeking refuge in a *guru* so as to have one's doubts

cleared. *"சீடன்றனது விதிவதுப சன்னத்துவமாம்" (வேதா. சூ. 18).*

*[Skt. upa-sanna-tva > த. உபசன்னத்துவம்.]*

**உபசனனம்** *ubašaṉaṉam,* பெ.(n.) பிறப்பு; generation procreation.

*[Skt. upa-janana > த. உபசனனம்.]*

**உபசாகை** *uba-šāgai,* பெ.(n.) 1. கிளையைச் சேர்ந்த கிளை (சி.சி.1, 14, சிவாக்.); smaller branch of a tree, secondary or sub-axillary branch. 2. உட்பிரிவு; subdivision.

*[Skt. upa-sākha > த. உபசாகை.]*

**உபசாந்தசாதி** *ubašānda-šādi,* பெ.(n.) பாலியல் உணர்வுத் தொடர்பாக வகைப்படுத்தும் நால்வகை ஆண்பிரிவு களுளொன்று; one of the four classes of men derived according to lust.

**உபசாந்தம்** *uba-šāndam,* பெ.(n.) 1. மனவமைதி; calmness, tranquillity, peacefulness. *"உபசாந்த சித்தகுருகுல பவ பாண்டவர்க்கு" (திருப்பு. 773).* 2. தணிகை; mitigation, alleviation. *"நோய் (வியாதி) உபசாந்தமாயிற்று".*

*[உப + சாந்தம்.]*

*[Skt. upa > த. உப.]*

**உபசாந்தமருந்து** *ubasānda-marundu,* பெ.(n.) 1. நோய் தீர்க்கும் மருந்து; any medicine affording relief but not cure an alleviating medicine - palliative. 2. வலியைக் குறைக்கும் மருந்து; medicine that relieves pain - Anodyne.

*[உப + சாந்தம் + மருந்து.]*

*[Skt. upa > த. உப.]*

*மரு → மருந்து.*

**உபசாந்தி[1]** *uba-šānti,* பெ.(n.) **உபசாந்தம்** பார்க்க; see *upa-šāndam. "தொடர்ப்பா லனயாவைவு மகலநீத்துப சாந்தியளித் திடும்" (சேதுபு. கோடித். 3).*

*[உப + சாந்தி.]*

*[Skt. upa > த. உப.]*

*சாந்தம் → சாந்தி.*

**உபசாந்தி[2]** *uba-šānti,* பெ.(n.) 1. வலி அல்லது துன்பத்தைக் குறைக்கும் மருந்து; any medicine that relieves pain as opium morphia etc. 2. மருந்தின் வேகத்தைத் தணிக்கும் மருந்து; paregoric. 3. நோயாளிகளுக்குத் தொல்லை (உபாதை) நீங்கி அமரிக்கையை யுண்டாக்கல்; a temporary treatment given to a wounded or sick person before the doctor's arrival, first - aid.

**த.வ. ஆற்றுமருந்து, தணிப்பு மருந்து.**

*[உப + சாந்தி.]*

*[Skt. upa > த. உப.]*

*சாந்தம் → சாந்தி.*

**உபசாபம்** *uba-šābam,* பெ.(n.) 1. வேறுபாடு; disunion. 2. இரண்டகம் (துரோகம்); treachery, treason.

*[Skt. upajāpa > த. உபசாபம்.]*

**உபசாயகம்** *uba-šāyagam,* பெ.(n.) அடுத்துத் தூங்கல்; sleeping alternately.

**உபசாயிதத்துவம்** *ubašāyi-tattuvam,* பெ.(n.) பத்தியம் முதலியவற்றால் நோயைத் தணிக்கும் வழி; means of allaying a disease with diet etc - dietetic treatment.

*[Skt. upa-sāyi + tatva > த. உபசாயி தத்துவம்.]*

**உபசாரக்கை** *ubašāra-k-kai,* பெ.(n.) இரண்டு கைகளையுங் குவித்து மார்போடணைத்து மதிப்புரவாகக் காட்டும் இணைக்கைவகை; (Nāṭya.) gesture with both hands in which the hollow of both palms are brought close face to face and are held together on the breast implying polite submission to the words of elders. *"உபசாரக்கை......*

*குடங்கையிரண்டுங் கூப்பிமார்பிருத்தல்" (பரத. பாவ. 54).*

*[உபசாரம் + கை.]*

*[Skt. upa-cāra > த. உபசாரம்.]*

*செய் → கெய் → கை.*

**உபசாரகன்** *uba-šāragaṉ,* பெ.(n.) மதிப்புரவு செய்வோன் (சங்.அக.); courteous person, one who behaves respectfully.

*[Skt. upacāraka > த. உபசாரகன்.]*

'ன்' ஆ.பா.ஈறு.

**உபசாரங்கேள்(ட்)-த(ட)ல்** *ubašāraṅ-kēḷ-,* 11 செ.குன்றாவி.(v.t.) இழவு கேட்டல் (துக்கம் விசாரித்தல்); to condole.

*[உபசாரம் + கேட்டல்.]*

*[Skt. upa-cāra > த. உபசாரம்.]*

*கேள் → கேட்டல்.*

**உபசாரஞ்சொல்(லு)-தல்** *ubašārañjol-,* 8 செ.குன்றாவி.(v.t.) 1. முகமன் கூறுதல்; to express compliments pay respects. 2. இழவு கேட்டல் (துக்கம் விசாரித்தல்); to condole.

*[உபசாரம் + சொல்(லு)-,]*

*[Skt. upacāra > த. உபசாரம்.]*

**உபசாரப்பூநீர்** *ubašāra-p-pūnīr,* பெ.(n.) உவர் மண்ணினின்று உருவாக்கும் பூநீர்; fuller's earth used in the preparation of *pūnīr.*

*[உபசாரம் + பூநீர்.]*

*[Skt. upa-cāra > த. உபசாரம்.]*

**உபசாரப்பத்திரம்** *ubašāra-p-pattiram,* பெ.(n.) ஒருவரை வரவேற்கும் போது அல்லது விடைகொடுத்து அனுப்பும்போது படித்துக் கொடுக்கும் அறிக்கை; complimentary address, on a formal occasion, as in welcoming a person or bidding him farewell.

த.வ. வரவேற்பிதழ், விடைதருவாழ்த்து.

*[Skt. upa-cāra-patra > த. உபசாரப்பத்திரம்.]*

**உபசாரம்**[1] *uba-šāram,* பெ.(n.) 1. மதிப்புரவு; civility, politeness, urbanity, attention, guest, affability. 2. முகமன் கூற்று (பிங்.); salutation, compliment. 3. **உபசாரவழக்கு** (பி.வி.48) பார்க்க; see *upacāra-vaḻakku.* 4. மரபாக கூறும் கூற்று (உபசாரமாத்திரமாகச் சொல்லப்பெறும் வார்த்தை); commen-dation expressed only by way of formality.

த.வ. முகமன், மரபுக்கூற்று.

*[Skt. upa-cāra > த. உபசாரம்.]*

**உபசாரம்**[2] *uba-šāram,* பெ.(n.) 1. தொண்டு (சேவை) (நாநார்த்த.); service. 2. காணிக்கை; offering. 3. நோயாளிக்குச் செய்யும் உதவி; nursing rendered to a patient. 4. நோயாளிக்குச் செய்யும் பண்டுவம்; treatment accorded to a patient. 5. குறைந்த அன்னசாரம்; deficiency of chyle - hypochylia.

*[Skt. upacāra > த. உபசாரம்.]*

**உபசாரவசனம்** *ubašāra-vašaṉam,* பெ.(n.) முகமன் கூற்று; courteous discourse, complimentary address.

*[Skt. upa-cāra-vacana > த. உபசாரவசனம்.]*

**உபசாரவழக்கு** *ubasāra-vaḻakku,* பெ.(n.) ஒன்றன் தன்மையை, மற்றொன்றன் மேலேற்றிக் கூறுவது (குறள், 73, உரை); figurative, application of the attribute of one object upon another; secondary meaning.

த.வ. பிறிதேற்றம்.

*[உபசார(ம்) + வழக்கு.]*

*[Skt. upacāra > த. உபசாரம்.]*

*வழங்கு → வழக்கு.*

**உபசாரன்** *ubašāraṉ,* பெ.(n.) **உபசாரகன்** பார்க்க; see *ubašāragaṉ.*

*[Skt. upa-cāraka > த. உபசாரன்.]*

**உபசாரி[1]** *uba-sāri,* பெ.(n.) **உபசாரகன்** (வின்.) பார்க்க; see *ubaśāragaṉ.*

*[Skt. upacārin > த. உபசாரி.]*

**உபசாரி[2]** *uba-šāri,* பெ.(n.) நோயாளிக்கு உதவி செய்பவள்; a trained nurse who takes care of the sick.

*[உபசாரம் → உபசாரி.]*

'இ' பெ.பா.ஈறு.

**உபசாரிகம்** *ubaśārigam,* பெ.(n.) **உபசார வழக்கு** பார்க்க; see *upaśāravaḻakku.* *"ஆளினையே யருமாசென்பது போவுப சாரிகம்" (வேதா. சூ. 126).*

*[Skt. upacārika > த. உபசாரிகம்.]*

**உபசாரிகை** *uba-šārigai,* பெ.(n.) துணையாளி; a person who attends on a sick patient.

*[Skt. upacārika → உபசாரிகை.]*

**உபசி** *ubaśi,* பெ.(n.) கலவிக்காகப் பெண்ணிடம் சேருபவன்; he who lies by the side of or approaches a woman for the purpose of sexual intercourse.

*[Skt. upasī > த. உபசி.]*

**உபசிக்குவா** *ubašikkuvā,* பெ.(n.) **உபசிகுவை** பார்க்க; see *ubasiguvai.*

**உபசிகுவை** *ubašiguvai,* பெ.(n.) உண்ணாக்கு நீண்டு வீக்கத்தை உண்டாக்கி உண்ணமுடியாது, இருமல், அருவுதல் முதலிய குணங்களைக் காட்டுமோர் நோய்; a disease marked by cough and irritation of the throat and elongation of the uvula accompanied by swelling, in which the patient could not eat or drink without pain.

*[Skt. upa+jihvā > உபசிகுவை.]*

**உபசிங்கி** *ubaśiṅgi,* பெ.(n.) நாவில் வரும் புண்; an ulcer on the tongue.

**உபசித்தி** *ubašitti,* பெ.(n.) வெள்ளை நாகணம்; white croton oil plant-croton tigillium.

**உபசித்திரை** *ubašittirai,* பெ.(n.) 1. ஆல்; banyan tree. 2. எலி; rat.

**உபசிதரோகம்** *ubašidarōgam,* பெ.(n.) 1. வெப்பச் சன்னி; an apoplectic stroke caused by exposure to excessive heat, natural or artificial heat stroke or heat apoplexy. 2. வெயிலில் திரிவதா லுண்டாகும் இசிவு; a sudden attack of paralysis from injury to the brain-sunstroke.

*[Skt. upacita+rōha > த. உபசிதரோகம்.]*

**உபசிரிட்டம்** *ubaśiriṭṭam,* பெ.(n.) புணர்ச்சி; coition, sexual intercourse.

**உபசீரிடம்** *ubaśīriḍam,* பெ.(n.) தலையி லேற்படும் வளி மிகுதியி (கபாலவாயுவி)னால் சூலி (கருப்பிணி)களின் தலையில் வீக்கத்தையுண்டாக்கி அவ்வாறே வயிற்றி லிருக்கும் குழந்தைக்கும் உண்டாக்குமோர் நோய்; a disease characterised by swelling of the heads of both the child in the womb and the pregnant woman. It is said to arise from the deranged condition of vāyu in the region of the head.

த.வ. **தலைப்பருமல்.**

**உபசீவனம்** *uba-śīvaṉam,* பெ.(n.) 1. பிறரைச் சார்ந்த வாழ்க்கை; depending upon others, living, subject to others. 2. வாழ்வி (சீவனத்தி)ற்குரிய பொருள்; means of livelihood, sustenance.

த.வ. **ஒட்டுவாழ்வு.**

*[Skt. up-jīvana > த. உபசீவனம்.]*

**உபசீவி-த்தல்** *ubaśīvi-,* 11 செ.குன்றாவி. (v.t.) உயிர்வாழப் பிறரை அல்லது பிறிதொன்றைச் சார்ந்திருத்தல்; to depend for one's life upon a person or thing. *"இந்த ஔஷத மொன்றையுமே உபஜீவிக்க வமையும்" (ரஹஸ்ய. 1225).*

த.வ. **அண்டிவாழ்தல்.**

*[Skt. upajīva > த. உபசீவி-.]*

**உபசுகரம்** *ubaśugaram,* பெ.(n.) 1. கறிமசாலை; condiment. 2. நறுமணப்

பொருள்; spices. 3. சேரும் பொருள்; an ingredient.

**உபசுருதி** *uba-śurudi,* பெ.(n.) இரவிற் கேட்கும் வானொலி (ஆகாயவாணி); kind of supernatural voice heard at night and supposed to foretell the future. *"போகேலென்ன வுபசுருதி சொல்லிவை யெலாம்" (அறப். சத. 62).*

*[Skt. upa-śruti > த. உபசுருதி.]*

**உபசென்மம்** *uba-śeṉmam,* பெ.(n.) ஒருவன் பிறந்த விண்மீனுக்குப் பத்தொன்பது முதல் இருபத்தேழு முடியவுள்ள விண்மீன்கள் (இலக்.வி.பக்.796); the third group of nine naksatras counted from one's natal naksatra.

த.வ. ஈற்றொன்பான்.

*[Skt. upajanma > த. உபசென்மம்.]*

**உபசேசனம்** *ubaśēśaṉam,* பெ.(n.) இன்றியமையாது வேண்டப்பெறும் உப்பிட்டு ஊற வைத்த ஊறுகறி முதலிய பக்க உணவு வகைகள் (உபகரணங்கள்); relish, condiment. *"யாவனொருவனுக்கு ம்ருத்யு உபஸேசன கோடியிலே நிற்கிறான்" (ஈடு. 1, 1, 8, வ்யா. பக். 37).*

த.வ. தொடுகறி.

*[Skt. upa-sēsana > த. உபசேசனம்.]*

**உபசேவை** *ubaśēvai,* பெ.(n.) புணர்தல்; having intercourse with.

**உபஞ்சரோகம்** *ubañjarōgam,* பெ.(n.) மேக நோயினாலேற்படும் புண் (விரணம்); a venereal or syphilitic sore.

த.வ. மேகப்புள்.

**உபத்தநிக்கிரகம்** *ubatta-nikkiragam,* பெ.(n.) பாலியல் விருப்பத்தை விலக்கல்; rest - raint of sexual passion or desire.

**உபத்தபத்திரம்** *ubatta-pattiram,* பெ.(n.) அத்திமரம்; Indian fig-tree.



**உபத்தபாதம்** *ubatta-pādam,* பெ.(n.) ஆண்குறிக்குப் போகும் அரத்தக் குழாய்; a particular blood-vessel leading to the generative organ of a male.

த.வ. ஆணநாளி.

**உபத்தம்** *ubattam,* பெ.(n.) 1. பிறப்புறுப்பு (சன்மேந்திரம்) (மச்சபு. பிரமமு. 11); generative organ. 2. பெண்குறி (பிங்.); pudendum muliebre. 3. இடுப்பு; the haunch or the hip.

த.வ. அல்குல்.

*[Skt. upa-stha > த. உபத்தம்.]*

**உபத்தாயம்** *ubattāyam,* பெ.(n.) 1. பொய், பொய்ப்பழி (அபத்தம்); mistake. 2. துன்பம்; misery. 3. வழிவகை; means.

**உபத்தானம்** *ubattāṉam,* பெ.(n.) அந்திநேர வழிபாட்டு (சந்தியாவந்தன) முடிவிற் செய்யும் மந்திரப் புகழ் (துதி); hymns recited at the close of *santiyā-vandaṉam.* *"காயத்திரி செவியா வுபத்தானத்தின் றொழில் முடிக்க" (கூர்மபு. நித்தியகன். 6).*

த.வ. அந்திப்போற்றி.

*[Skt. upa-sthāna > த. உபத்தானம்.]*

**உபத்திதி** *ubattidi,* பெ.(n.) 1. அறிவு (ஞானம்); wisdom. 2. அருகு, அண்மை (சமீபம்); proximity.

*[Skt. upasthiti > த. உபத்திதி.]*

**உபத்திரம்** *ubattiram,* பெ.(n.) துன்பம் (யாழ்.அக.); misery.

**உபத்திரவசுரம்** *ubattirava-šuram,* பெ.(n.) புண் (விரணம்), காயம், வலி முதலியவற்றினாலுண்டாகுமோர்வகைக் காய்ச்சல்; a kind of fever arising wounds, injury and pain - traumatic fever.

த.வ. வலிக்காய்ச்சல்.

*[உபத்திரவம் + சுரம்.]*

*[Skt. upa-drava > த. உபத்திரம்.]*

சுள் > சுர > சுரம்.

**உபத்திரவம்** *ubattiravam,* பெ.(n.) 1. இடுக்கண்; tyranny, oppression, violence. *"அரசன் குடிகளை உபத்திரவம் செய்தான்".* 2. இன்னல், துன்பம்; calamity as famine, affliction, tribulation suffering of mind or body. *'பசியுபத்திரவம், மனோபத்திரவம்'.* 3. நோயின் மூலமாய் ஏற்படும் துன்பங்கள்; the side issues of a disease. 4. ஒரு நோய் மூலமாக மற்றும் சில நோய்கள் உண்டாதல்; a disease or diseases concurring with another disease, the concurrence of two or more diseases in the same patient-complication. 5. சீழ்ப்புண் (ரணம்), புண் முதலியவற்றால் படும் கொடுந்துன்பம்; the supervening and distressing symptoms found in cases of wound, ulcer etc. any grieves accident, misfortune calamity, mischief, national distress. 6. திடீரென உண்டாகும் நிகழ்வு; that which attacks or occurs suddenly. 7. தொல்லை, தொந்தரவு; worry. *"பட்டுப்புடவை வேணுமென்று மனைவி உபத்திரவஞ் செய்கிறாள்".*

த.வ. தொந்தரவு.

*[Skt. upa-drava > த. உபத்திரவம்]*

**உபதஞ்சக்கறை** *ubadañja-k-karai,* பெ.(n.) மேகவொழுக்கினால் ஏற்படும் மாசு; a venereal or syphilitic taint.

*[உபதஞ்சம் + கறை.]*

*[Skt. upa-danša > த. உபதஞ்சம்.]*

கரு → கறு → கறை = கருப்பு, மாசு.

**உபதஞ்சம்** *uba-tañjam,* பெ.(n.) 1. பாலியல் நோய் (மேக கிரந்தி); lues venerea. 2. உண்ணும் போது தொட்டுக் கொள்ளும் ஊறுகாய் முதலியன; pickle etc. used as auxilliaries in eating food.

*[Skt. upa-danša > த. உபதஞ்சம்.]*

**உபதஞ்சவீறு** *ubadañja-vīṟu,* பெ.(n.) பாலியல் (மேக) நோயின் வீறு; venereal or syphilitic virus.

*[உபதஞ்ச(ம்) + வீறு.]*

*[Skt. upa-dansa > த. உபதஞ்சம்.]*

**உபதம்சம்** *ubadamšam,* பெ.(n.) **உபதஞ்சம்** பார்க்க; see *ubatañjam.*

*[Skt. upa-danša > த. உபதம்சம்.]*

**உபதமிசம்** *ubatamišam,* பெ.(n.) 1. பக்க உணவு (உணவின் உபகரணம்); relish anything eaten with food to whet the appetite. 2. பால் (மேகவிரண) நோய் (பைஷஜ.); primary syphilis, chancre.

*[Skt. upa-damšā > த. உபதமிசம்.]*

**உபதாகம்** *uba-tāgam,* பெ.(n.) பனை (மூ.அ.); palmyra-palm.



**உபதாது** *uba-tādu,* பெ.(n.) பொன் முதலிய ஏழு மாழை (தாது)க்களைப் போலத் தோற்றமுடைய இழிந்த ஏழு மாழை (உலோகங்)கள் (சங்.அக.); any one of seven minerals, inferior to *tātu* viz. சுவர்ணமாட்சிகம், தாரமாட்சிகம், துத்தம், காஞ்சியம், ரீதி, சிந்தூரம், சிலாசத்து.

த.வ. தாழ்மாழை.

*[Skt. upa-tatu > த. உபதாது.]*

**உபதாபம்** *ubadābam,* பெ.(n.) அழற்சி, வெப்பவுணர்வு (நாநார்த்த.); burning sensation.

*[Skt. upatāpa > த. உபதாபம்.]*

**உபதாபனநாடி** *ubadāpaṉa-nāḍi,* பெ.(n.) மூச்சுக் குழலின் நாடி (தமரக சாகை நாடி); the bronchial artery.

*[உபதானம் + நாடி.]*

*[Skt. upa-dhana > த. உபதானம்.]*

நாள் → நாளி → நாழி → நாடி.

**உபதாபனம்** *ubadāpaṉam,* பெ.(n.) **உபதாபம்** பார்க்க; see *uba-dābam.*

**உபதாளம்** *uba-tāḷam,* பெ.(n.) ஐந்து சிறுதாளங்கள் (பரத. தாள. 3); secondary time-mesures, five in number. *ஆதிதாளம், பார்வதிலோசனம், குடுக்கம், சிங்கநந்தம், திரிமாத்திரை.*

**த.வ. சிறுதாளம்.**

*[உப + தாளம்.]*

*[Skt. upa > த. உப.]*

*தாள் → தாளம்.*

**உபதானம்[1]** *ubadāṉam,* பெ.(n.) **உபாதானகாரணம்** பார்க்க; see *ubātāṉakāraṇam.* *"அவையிதற்கே யுபதானமாகும்" (பாரத. இராச. 4).*

*[உப + தானம்.]*

*[Skt. upa > த. உப.]*

*[த. தானம் > Skt. dāna.]*

தரு → தா → தானம்.

**உபதானம்[2]** *ubadāṉam,* பெ.(n.) 1. தலையணை (திவா.); pillow, cushion. 2. அடிக்கல் (அஸ்திவாரம்) (வின்.); foundation.

*[Skt. upa-dhāna > த. உபதானம்.]*

**உபதானம்[3]** *ubadāṉam,* பெ.(n.) நோன்பு (விரதம்) (நாநார்த்த.); religious sensation.

*[Skt. upadhāna > த. உபதானம்.]*

**உபதானம்[4]** *ubadāṉam,* பெ.(n.) நஞ்சு (விடம்); poison.

**உபதி[1]** *ubadi,* பெ.(n.) 1. சக்கரத்தின் ஆரம் (வின்.); the part of a wheel between the nave and the circumference. 2. அச்சம் (வின்.); fear. 3. வஞ்சனை (நாநார்த்த.); deceit.

*[Skt. upadhi > த. உபதி.]*



**உபதி[2]** *ubadi,* பெ.(n.) 1. பயன்பாடுள்ளது, அதாவது கை; that which is useful i.e. the hand. 2. புல்லூரி; a parasitical plant.

**உபதிசை** *uba-tišai,* பெ.(n.) கோணத்திசை; intermediate point of the compass.

*[உப + திசை.]*

*[Skt. upa > த. உப.]*

திக்கு > திசை.

**உபதிருட்டை** *ubatiruṭṭai,* பெ.(n.) பூசகன் (புரோகிதன்) (சீவக. 2362, உரை); priest, as the conductor of ceremonies.

*[Skt. upa-drasṭā > த. உபதிருட்டை.]*

**உபதேசகலை** *ubadēša-kalai,* பெ.(n.) சமய மெய்ப்பொருள் கற்பிக்கும் (மததத்துவ போதனா) முறை (சி.சி.அளவை. 13, சிவாக்.); art of communicatng to a disciple the basic truths of religion.

*[உபதேச + கலை.]*

*[Skt. upa-dēsa > த. உபதேசம்.]*

கல் → கலை.

**உபதேசகாண்டம்** *ubadēša-kāṇḍam,* பெ.(n.) வடமொழி கந்தபுராணத்தின் ஒரு பகுதியினின்று கோனேரியப்ப முதலியார் மொழிபெயர்த்துப் பாடிய தமிழ்நூல்; a Tamil poetic version by *Kōnēriyappamudaliyār* of the last *kāṇḍa* of the *sivarahasyakhaṇḍa* of the *skānda-purāṇa.*

*[உபதேச(ம்) + காண்டம்.]*

*[Skt. upa-dēsa > த. உபதேசம்]*

குள் → குண்டு → கண்டு = கட்டி; நூற்றிரளை; கண்டு → கண்டம் = பெரிய துண்டு. கண்டம் → காண்டம் = பெரிய நூலின் ஒரு பகுதி, ஓரியல்.

**உபதேசப்பஃறொடை** *ubadtēša-p-pa kroḍai,* பெ.(n.) தட்சிணாமூர்த்தி தேசிகரியற்றிய ஒரு பண்டார சாத்திரம்; a *šaiva - šiddhānda* treatise by *Taṭciṇāmūrtti-tēsigar,* one of *panṭāra-cattiram.*

*[உபதேசம் + பஃறொடை. பல் + தொடை – பஃறொடை.]*

*[Skt. upa-dēsa > த. உபதேசம்.]*

**உபதேசம்** *ubadēšam,* பெ.(n.) 1. நல்லுரை, அறிவுரை (ஞானபோதனை) (சி.போ.3,6,சிற். பக். 76); spiritual instruction, teaching of doctrine. 2. மந்திர அறிவுரை (மந்திரோப தேசம்) (விதான. நல்வினை. 15); initiation into the mysteries of religion, by communication of the mantras.

த.வ. அறிவுரை.

*[Skt. upa-dēsa > த. உபதேசம்.]*

**உபதேசரத்தினமாலை** *ubadēša-rattiṉamālai,* பெ.(n.) மணவாளமா முனிகளியற்றிய ஒரு மாலியச் சடங்கு (வைணவ சம்பிரதாய) நூல்; a poetical treatise in Tamil by *maṇavāḷamā-muṉigal* 15th C explaining the vaiṣṇava traditions and discribing the lives and teachings of the long lineage of vaisṇ *ācāryas.*

*[உபதேசம் + ரத்தின + மாலை.]*

*[Skt. upa-dēša > த. உபதேசம்.]*

*[Skt. ratna > த. ரத்தினம்.]*

மால் → மாலை.

**உபதேசவெண்பா** *ubadēša-veṇbā,* பெ.(n.) அம்பலவாண தேசிகரியற்றிய ஒரு சிவக்கொண்முடிபு நூல் (பண்டார சாத்திரம்); a šaiva šiddhānda treatise by *ambala-vāṇa-dēšigar,* one of *paṇḍāra-šāttiram.*

*[உபதேச(ம்) + வெண்பா.]*

*[Skt. upadēsa > த. உபதேசம்.]*

**உபதேசி[1]-த்தல்** *ubadēši-,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. கற்பித்தல் (போதித்தல்); to teach spiritual truths, give religious instruction. 2. மந்திரத் தொடர்பில் அறிவு கொளுத்தல்; to initiate into the mysteries of ceremonies religion by communicating appropriate mantras. *"உபதேசித்த சித்தியை" (திருவிளை. அட்டமா. 29).* 3. மந்தண (இரகசிய)மாக இணங்கக் கூறுதல்; to influence in private, give secret advice. *"அவள் அவனுக்கு உபதேசித்துவிட்டாள்".*

*[Skt. upadēsa > த. உபதேசம் → உபதேசி,]*

**உபதேசி[2]** *uba-dēši,* பெ.(n.) 1. கற்பிப்போன், அறிவுரைஞன் (போதிப்போன்); preceptor, teacher. 2. அறிவுரை (உபதேசிக்கப்) பெறுபவன் (சி.போ.7, 3, சிற்); recepient of spiritual instruction.

*[Skt. upadēsin > த. உபதேசி.]*

**உபதேசிகை** *ubadēšigai,* பெ.(n.) பெரு முன்னை; large-leaved fire brand teak.

**உபதேசியார்** *ubadēšiyār,* பெ.(n.) துணை அறிவுரையாளர், உபபோதகர் (கிறித்.); catechist.

*[Skt. upa-dēsika > த. உபதேசியார்.] 'ஆர்' உயர்வுப் பன்மை ஈறு.*

**உபதேந்திரியம்** *ubadēndiriyam,* பெ.(n.) ஆண்குறி அல்லது பெண்குறி; the genitals whether of a male or a female.

**உபதை**[1] *ubadai,* பெ.(n.) அமைச்சர் முதலியோரைத் தேர்ந்தெடுத்து அமர்த்துவதற்கு அரசர் செய்யுந் தேர்வு (குறள், 501, உரை); test of the character and honesty of a minister or any officer of state in four ways viz. *அறவுபதை, பொருளுபதை, இன்பவுபதை, அச்சவுபதை.*

[**Skt.** *upa-dhā* > *த. உபதை.*]

**உபதை**[2] *ubadai,* பெ.(n.) காணிக்கை (நாநார்த்த.); offering.

[**Skt.** *upadhā* > *த. உபதை.*]

**உபந்நியாசம்** *ubanniyāšam,* பெ.(n.) சொற்பொழிவு; discourse.

[**Skt.** *upa-nyāsa* > *த. உபந்நியாசம்.*]

*upa-nyāsa* என்னும் சொல்லிற்கு வடமொழியில் கீழேவைத்தல், பக்கத்தில் வைத்தல், முன்னுக்குக் கொண்டு வருதல், பேசுதல், குறிப்பிடுதல், உரை, தூண்டுரை, குறிப்பு, மேற்கோள் போன்ற பொருள்கள் உள்ளன. (மா.வி.). தமிழில் இச்சொற்கு சொற்பொழிவு குறிப்பாக பேருரை என்னும் பொருள் மட்டும் உண்டு.

**உபநகரோகம்** *ubanaga-rōgam,* பெ.(n.) உகிரிடையி (நகச்சந்தி)ல் கட்டியுண்டாகிக் குத்தல், வீக்கம் முதலிய குணங்களைக் காட்டுமோர் புண் (விரண) நோய்; a malignant disease of the nail bed characterised by swelling, shooting pain etc. - whitlow.

[**Skt.** *upa-nakha+rōha* > *த. உபநகரோகம்.*]

**உபநட்சத்திரம்** *uba-naṭcattiram,* பெ.(n.) சிறு விண்மீன்கள் (அப்பிரதான நட்சத்திரம்) (சங்.அக.); secondary star, minor constellation.

[**Skt.** *upa-naksatra* > *த. உப நட்சத்திரம்.*]

**உபநதி** *uba-nadi,* பெ.(n.) பேராற்றில் வந்து விழும் ஆறு, சிற்றாறு; tributary, stream, affluent.

**த.வ. கிளையாறு.**

[**Skt.** *upa-nadi* > *த. உபநதி.*]

**உபநயம்** *ubanayam,* பெ.(n.) அனுமான வுறுப்புகள் ஐந்தனுள் நான்காவது (மணிமே. 29, 62); statement bringing the invariable concomitant middle term into relation with the minor, the fourth member of an Indian syllogism.

[**Skt.** *upa-naya* > *த. உபநயம்.*]

**உபநயனம்**[1] *uba-nayaṉam,* பெ.(n.) **1.** பூணூல் அணிவிக்கு (தரிக்கு)ஞ் சடங்கு (திருவானைக் கோச். செங். 14); initiatory ceremony intended to qualify the boys of the three twice-born castes among the Brahmins for commencement of the study of the *vēdas*, accompanied by the investiture with the sacred thread, one of *cōṭava-camskāram.* 2. மூக்குக் கண்ணாடி; spectacles, lit. supplementary eyes or help to vision.

**த.வ. பூணூல் பூணல்.**

[**Skt.** *upa-nayaṉa* > *த. உபநயனம்.*]

**உபநயனம்**[2] *ubanayaṉam,* பெ.(n.) கண்ணில் மருந்திட்டுக் கட்டுகை; bandage to the eyes after applying medicine.

**உபநயி-த்தல்** *ubanayi-,* 11 செ.கு.வி.(v.i.) பூணூற் சடங்கு செய்தல் (விதான மைந்தர். 25); to perform the ceremony of investing the sacred thread.

[**Skt.** *upanaya* > *த. உபநயம் > உபநயி-,*]

**உபநளகம்** *ubanaḷagam,* பெ.(n.) முன் கால் சிற்றெலும்பு; the outer and smaller of the two bones of the leg-fibula.

**உபநாகக்கட்டு** *ubanāga-k-kaṭṭu,* பெ.(n.) புண்ணுக்கு மருந்து வைத்துக் கட்டல்; application of poultice to a wound.

*[உபநாக(ம்) + கட்டு.]*

*[Skt. upa-nāha > த. உபநாகம்.]*

கள் → கட்டு.

**உபநாகம்**[1] *ubanāgam,* பெ.(n.) 1. யாழின் பீருடை (நாநார்த்த.); peg to which the strings of a *yāḷ* are attached. 2. புண் கட்டிகளில் வைத்துக் கட்டும் மா முதலியன (வின்.); poultice.

*[Skt. upa-nāha > த. உபநாகம்.]*

**உபநாகம்**[2] *ubanāgam,* பெ.(n.) 1. தாமரையின் அடித்தண்டு; the stalk of the lotus. 2. கபத்தினால் வெள் விழிச்சந்தில் தாமரைக் கொடியின் அடித் தண்டைப் போல் கட்டியை யெழுப்பி, வீக்கத்தையும், வலியையு முண்டாக்குமோர் வகைக் கண்ணோய்; a painful cyst of considerable size (that of a bit of lotus stalk) occuring at the function of the pupil with the iris attended with swelling, itching sensation, pain etc. inflammation of the ciliary gland-stye.

**உபநாகனம்** *uba-nāgaṉam,* பெ.(n.) 1. புண்ணுக்குக் கட்டும் மருந்து; poultice or external application to a wound, swelling etc. 2. மருந்திலைகளை வதக்கி வைத்துக் கட்டுதல்; application of medicinal leaves coated with oil and exposed to fire. 3. களிகிண்டிக் கட்டுதல்; the act of putting a plaster or poultice upon. 4. எண்ணெய் (தைலம்) பூசுதல்; anoiting medicated oil. 5. இடித்துக் கட்டும் மருந்து; a bandage of pounded leaves or other medicine applied to a wound.

*[Skt. upa-nāhana > த. உபநாகனம்.]*

**உபநாயகன்** *uba-nāyagaṉ,* பெ.(n.) கள்ளக்காதலன்; paramour, illicit partner of a married woman.

*[Skt. upanāyak > த. உபநாயகன்.]*

**உபநாயம்**[1] *ubanāyam,* பெ.(n.) **உபநாகம்**[1] பார்க்க; see *ubanāgam*[1].

**உபநாயம்**[2] *uba-nāyam,* பெ.(n.) **உபநாகம்**[2] **பார்க்க**; see *ubanāgam*[2].

**உபநிகழ்தம்** *uba-nigaḻdam,* பெ.(n.) ஓங்காரம்; the mystic name of the deity prefacing and concluding all the prayers of the daily worshipper.

**உபநிட்கிராமணம்** *uba-niṭkirāmaṇam,* பெ.(n.) பிறந்த நான்கா மாதத்தில் பிள்ளையை முதன்முதல் வெளிக்கொணருஞ் சடங்கு (திருவானைக். கோச்செங். 39); ceremony of taking a child out for the first time in the fourth month after its birth.

*[Skt. upa-nis-krāmaṇa > த. உபநிட் கிராமணம்.]*

**உபநிடகிறமணம்** *uba-niḍakiṟamaṇam,* பெ.(n.) வெளிக்கிளம்பல், வெளியே அடி எடுத்து வைத்தல்; the act of going or stepping out.

*[Skt. upa-nis-krāmaṇa > த. உபநிட கிறமணம்.]*

**உபநிடதம்**[1] *ubaniḍadam,* பெ.(n.) 1. மறையின் (வேதத்தின்) ஓதி (ஞான) காண்டம் (பிங்.); upaniṣad, philosophical writing forming part of the *vēdas.* 2. மறை (வேதம்); *vēda. "உபநிடத மொரு நான்கும்" (கலிங். கடவுள். 5).*

*[Skt. upa-ni-ṣad > த. உபநிடதம்.]*

**உபநிடதம்**[2] *uba-niḍadam,* பெ.(n.) 1. அறம் (தருமம்) (நாநார்த்த.); virtue. 2. கமுக்கம் (இரகசியம்); secret.

*[Skt. upa-ni-ṣad > த. உபநிடதம்.]*

**உபநிதி** *uba-nidi,* பெ.(n.) தக்கவனிடத்தில் முத்திரையிட்டு அடைக்கலமாக வைக்கும் பொருள்; (Law) sealed deposit, entrusted to a responsible party.

*[Skt. upa-ni-dhi > த. உபநிதி.]*

**உபநிபாதம்** *ubani-pādam,* பெ.(n.) திடீரென ஏற்படும் நோய்; a sudden and unexpected attack of a disease.

**உபநியசி-த்தல்** *uba-niyaši-,* 11 செ.கு.வி. (v.i.) விரிவுரையாற்றுதல்; to deliver lectures, to elaborate. *"தம்முடைய மதத்தை உபநியசித்து நின்றார் கீழ்" (ஈடு. 1,1,9, வ்யா. பக். 62).*

*[**Skt.** upa-nyāsa > த. உபநியாச > உபநியாசி-,]*

**உபநியாசம்** *uba-niyāšam,* பெ.(n.) பரப்புரை, பேருரை (பிரசங்கம்); address, speech, lecture.

**த.வ. பேருரை.**

*[**Skt.** upa-nyasa > த. உபநியாசம்.]*

**உபநேத்திரம்** *ubanēttiram,* பெ.(n.) **உபநயனம்** பார்க்க; see *ubanayanam.*

**உபப்பிரமா** *uba-p-piramā,* பெ.(n.) மக்கள் தலைவர் பதின்மருள் (தசப் பிரசாபதியுள்) ஒருவர்; any one of *taša-p-pirasāpadi.*

*[**Skt.** upa-brahmā > த. உபப்பிரமா.]*

**உபப்பிரும்மணம்** *ubappirummaṇam,* பெ.(n.) மறை (வேத)ப்பொருளை விளக்கும் மறவனப்பு (இதிகாசம்), தொன்மம் (புராணம்) போன்றன; *itihāsas, purāṇas,* etc. which dilate on the meaning of the *vēdas.*

*[**Skt.** upa-brmhaṇa > த. உபப்பிரும்மணம்.]*

**உபப்பிலவம்** *uba-p-pilavam,* பெ.(n.) கருங்கோள் (இராகு); rāhu, the ascending node. 2. கெடுகுறி (உற்பாதம்); evil portent.

*[**Skt.** upa-plava > த. உபப்பிலவம்]*

**உபபட்சம்** *uba-paṭcam,* பெ.(n.) 1. அக்குள்; arm-pit. 2. அக்குள் மயிர்; hair in the arm-pit.

**உபபத்தி** *uba-patti,* பெ.(n.) 1. நயம், நயன்மை (நியாயம்); reason, justification (Brāh.). *"அப்படிச் சொல்வதற்கு உபபத்தி என்ன?".* 2. சொத்து; property, wealth (Brāh.). *"அவன் உபபத்தியுள்ளவன்".* 3. சொல்லும் செய்தியை உறுதிபடுத்தும் பொருட்டுக் காட்டும் உத்தி; argument advanced for the establishment of proposition, proof. *"சச்சிதானந்த முப பத்தியகமுஞ் சீவனுமாய்" (பிரபோத. 22, 17).*

*[**Skt.** upa-patti > த. உபபத்தி.]*

**உபபத்திரம்** *uba-pattiram,* பெ.(n.) இலைக்காம்பருகேயுள்ள சிறிய இலை; a small leaf like appendage at the base of the pedicle, a stipule.

**த.வ. தளிர்.**

*[**Skt.** upa-pattra > த. உபபத்திரம்.]*

**உபபதி** *uba-padi,* பெ.(n.) கள்ளக்காதலன் (சோரநாயகன்); illicit partner of a married woman, paramour.

*[**Skt.** upa-pati > த. உபபதி.]*

**உபபரிசனை** *uba-parišaṉai,* பெ.(n.) 1. புணர்ச்சி; coition. 2. உண்டாயிருத்தல்; impregnation.

**உபபலம்** *uba-palam,* பெ.(n.) துணை வலி; auxiliary, allied army, (Brāh.).

*[**Skt.** upa-bala > த. உபபலம்.]*

**உபபாதகம்** *uba-pādagam,* பெ.(n.) சிறுகுற்றம் (பாதகம்) (சிவதரு. பாவ. 34); sin less heinous than *pañjamā-pādagam.*

*[**Skt.** upa-pātaka > த. உபபாதகம்.]*

**உபபுராணம்** *uba-purāṇam,* பெ.(n.) தொன்ம (மகாபுராண)ங்கட்கு அடுத்து மதிக்கப்பெறுஞ் சிறு தொன்மங்கள் (புராணங்கள்); secondary or minor purāṇas which are 18 in number.

சனற்குமாரம், நாரசிங்கம், நந்தி, துருவாசம், சிவதருமம், நாரதீயம், காபிலம், மானவம், ஔசனம், வரசிட்டலைங்கம், வாருணம், காளிகம், சாம்பேசம், அங்கிரம், சௌரம், பராசரம், மாரீசம், பார்க்கவம் (கூர்மபு. இந்திரத். 10).

**த.வ. துணைத்தொன்மம்.**

*[**Skt.** upapurāṇa > த. உபபுராணம்.]*

**உபபேறு** *ubapēṟu,* பெ.(n.) துணைப்பயன் (உபபலன்); something obtained in addition to the principal material, as in a process of manufacturing, a secondary product obtained during the manufacture of a primary product - by product.

*[உப + பேறு.]*

*[**Skt.** upa > த. உப.]*

பெறு → பேறு.

**உபபோக்கியம்** *uba-pōkkiyam,* பெ.(n.) பலவகை அரசிறையை ஈட்டுவதிலுங் காப்பாற்றுவதிலுஞ் செலவு செய்யப்படும் பொருள் (சுக்கிரநீதி, 98); money expended in the collection of revenue from several sources and in its safe guarding.

*[**Skt.** upa-bhōgya > த. உபபோக்கியம்.]*

**உபபோகாந்தராயம்** *uba-pōgāndarāyam,* பெ.(n.) பயன்பாட்டி (அனுபவித்த)ற்குரிய பொருள்களை விலக்குவதாகிய கருமம் (சீவக. 3081, உரை); (Jaina.) the karma which keeps away the articles of enjoyment.

**த.வ. விழைவுநீக்கம்.**

*[**Skt.** upa-bhōga + tarāyam > த. உபபோகாந்தராயம்.]*

**உபம்** *ubam,* பெ.(n.) இரண்டு; two. *"முன்னான்கி னவிலந்த மொருகழஞ்சா மற்றையுபம்" (தைலவ. தைல. 109).*

*[**Skt.** ubha > த. உபம்.]*

**உபமருந்து** *uba-marundu,* பெ.(n.) துணையாகக் கொள்ளும் மருந்து; an ingredient in a prescription to help the main ingredient - adjuvant.

*[உப + மருந்து.]*

*[**Skt.** upa > த. உப.]*

மரு → மருந்து.

**உபமலம்** *uba-malam,* பெ.(n.) 1. உள்ளிருக்கும் மாசு; internal impurities or filth such as phelgm, sweat etc. 2. மனமாசு (பிங்.); mental impurity, inward depravity.

*[உப + மலம்.]*

*[**Skt.** upa > த. உப.]*

மல் > மலம் = அழுக்கு, பவ்வீ.

**உபமன்னியு** *uba-maṉṉiyu,* பெ.(n.) ஒரு சிவனிய (சைவ) முனிவர்; a Saivite ṛṣi, the reputed author of the *upamaṉyu-bhakta-vilāsa*, a Skt. work relating the stories of the 63 šaiva saints.

*[**Skt.** upamanyu > த. உபமன்னியு.]*

**உபமானம்** *uba-māṉam,* பெ.(n.) 1. உவமை; standard of comparison, recognition of likeness, resemblance. 2. ஓர் ஒப்புமை (பிரமாணம்) (அணியி. 1); (Log.) analogy, opp. to உபமேயம்.

*[த. உவமானம் > **Skt.** upa-māna > த. உபமானம்.]*

**உபமானரகிதம்** *ubamāṉa-ragidam,* பெ.(n.) உவமையற்றது; that which is matchless, incomparable.

*[**Skt.** upamāna-rahita > த. உபமானரகிதம்.]*

**உபமிதி** *ubamidi,* பெ.(n.) ஒப்புமை வகையால் (பிரமாணத்தினால்) வரும் அறிவு (தர்க்கபா. 30); knowledge of things derived from analogy.

*[**Skt.** upa-miti > த. உபமிதி.]*

**உபமேயம்** *ubamēyam,* பெ.(n.) உவமிக்கப்பட்ட பொருள் (அணியி. 1); that which is compared, subject of comparison.

*[த. உவமேயம் > **Skt.** upamēya > த. உபமேயம்.]*

**உபமேயோபமாலங்காரம்** *ubamēyōpa mālaṅgāram,* பெ.(n.) உவமானம் (உபமான) உவமேயம் (உபமேயம்) ஒன்றற்கு ஒன்று பொருள் உவமேய உவமானங்களாக வரும் அணி (அணியி. 3.); a figure of speech in which the *upa-māṉam*, and *upa-mēyam* are compared to each other; reciprocal comparison, as of the moon to a beautiful face.

**உபமை** *ubamai,* பெ.(n.) ஒப்புமை; comparison, similarity.

*[த. உவமை > **Skt.** upa-mā > த. உபமை.]*

**உபயகர்ப்போட்டம்** *ubaya-karppōṭṭam,* பெ.(n.) சிலை (மார்கழி) மாதத்துக் கடைசி நாளிற் சூற்கொண்டு மழை பெய்யாது நிற்கும் மேகம்; double conception of rain by the clouds, supposed to take place if clouds appear without rain on the last day of the month of *mārkaḻi.*

**த.வ. காரோட்டம்.**

*[உபய + கர்ப்ப + ஓட்டம்.]*

*[**Skt.** ubhaya > த. உபய.]*

*[த. குரு > கரு > கருப்பம் > **Skt.** garbha.]*

ஓடு → ஒட்டு → ஓட்டம்.

**உபயகவி** *ubaya-kavi,* பெ.(n.) இருவேறு மொழிகளில் பா வியற்றும் பாவலன்; poet who has attainments enabling him to compose verses with equal facility in two languages; as for example, in Sanskrit and Tamil. *"உபயகவிப் புலவன்" (திவா. 1. கட்டுரை).*

**த.வ. இருமொழிப் பாவலன்.**

*[**Skt.** ubhayakavi > த. உபயகவி.]*

**உபயகுலம்** *ubaya-kulam,* பெ.(n.) தாய் தந்தை வழி மரபுகள்; the two ancestral lines, paternal and maternal. *"உபயகுல தீபதுங்க" (திருப்பு. 128).*

**த.வ. ஈன்றோர்வழி.**

*[உபய(ம்) + குலம்.]*

*[**Skt.** ubha > த. உபய.]*

குல் → குலம்.

**உபயகுலோத்தமன்** *ubaya-kulōttamaṉ,* பெ.(n.) தாய்வழி, தந்தை வழிகளால் உயர்ந்தவன்; one of noble extraction on this paternal as well as maternal sides. *"உபயகுலோத்தமன பயன் (கலிங். கடவுள். 2).*

**த.வ. ஈன்றோர் வழி மேலான்.**

*[உபய(ம்) + குலம் + உத்தமன்.]*

*[**Skt.** ubhaya > த. உபயம்.]*

உத்து = உயர்வு. உத்து > உத்தம் > உத்தமன்.

**உபயகோமுகி**[1] *ubaya-kōmugi,* பெ.(n.) ஈனும் போது கன்றின்முகம் வெளியே உதயமாகியுள்ள மாசு; cow in the act of calving, as having two faces, or heads towards both ways, considered as a fit object of gift for the acquirement of merit. *"உபய கோமுகியை யீந்தோர்" (காகிக. தேவர்க. பி. 22).*

*[உபய + கோ + முகி.]*

*[**Skt.** ubhaya > த. உபய.]*

முகம் → முகி.

**உபயகோமுகி**[2] *ubaya-kōmugi,* பெ.(n.) இரு பக்கம் பார்வையுள்ள உயிரி; two faced living beings or looking both ways as do worms.

**த.வ. இருநோக்கி.**

**உபயசம்மதம்** *ubaya-šammadam,* பெ.(n.) இரு திறத்தார் இசைவு (அனுமதி); acceptance by both parties in a dispute.

**த.வ. இருசார் இசைவு.**

*[**Skt.** ubhaya-šammada > த. உபயசம்மதம்.]*

**உபயத்திரர்** *ubayattirar,* பெ.(n.) இருதிறத்தாரும்; both parties.

**த.வ. இருசாரார்.**

*[**Skt.** ubhayatra > த. உபயத்திரர்.]*

**உபயதன்மவிகலம்** *ubaya-taṉma-vigalam,* பெ.(n.) திட்டாந்தத்தில் துணியப்படும் பொருள் (சாத்திய) துணைக்காரணம் (சாதன) மிரண்டும் குறைந்த ஏதுப்போலி வகை (மணிமே. 29, 359); (Log.) a fallacious example, defective in both the major and the middle terms.

**த.வ. இருசார் ஏதுப்போலி.**

*[**Skt.** ubhaya + taṉma-vikalam > த. உபயதன்மவிகலம்.]*

**உபயந்திரம்** *ubayantiram,* பெ.(n.) அறுவை மருத்துவஞ் செய்வதற்கான சிறிய அல்லது துணைக் கருவிகள்; minor surgical accessories.

த.வ. அறுவைப்பணிமுட்டு.

**உபயநாகமலர்** *ubaya-nāgamalar,* பெ.(n.) இருவகை நாகப்பூ (சிறு நாகப்பூ, பெரு நாகப்பூ); the two kinds cassiabuds, *mesua ferrea.*

*[உபய(ம்) + நாகமலர்.]*

*[Skt. ubhaya > த. உபய(ம்).]*

**உபயநொச்சி** *ubaya-nocci,* பெ.(n.) இருவகை நொச்சி (வெண்ணொச்சி, கரு நொச்சி); the two kinds of vitex-vitex negundo and vitex trifolia.

த.வ. இருநொச்சி.

*[உபய(ம்) + நொச்சி.]*

*[Skt. ubhaya > த. உபய(ம்).]*

**உபயபாகம்** *ubaya-pāgam,* பெ.(n.) கக்கல் கழிச்சல் (வாந்திபேதி) உண்டாக்கும் மருந்து; a medicine that acts in two ways as an emetic and as a purgative.

*[உபய(ம்) + பாகம்.]*

*[Skt. ubhaya > த. உபயம்.]*

பகு > பாகு > பாகம்.

**உபயம்**[1] *ubayam,* பெ.(n.) 1. இரண்டு (திவா.); two. 2. கோயில் முதலியவற்றிற்குக் கொடுக்கும் அறக்கொடை (தருமம்); gift to a temple or a monastery (S.I.I.iii, 209).

த.வ. திருப்பணிக்கொடை.

*[Skt. ubhaya > த. உபயம்.]*

**உபயம்**[2] *ubayam,* பெ.(n.) பழைய வரி (சுவர்ணாதாய) வகை; an ancient tax, payable in cash.

**உபயமாதம்** *ubaya-mādam,* பெ.(n.) இரு ஓரை (உபயராசி) மாதங்கள் (வின்.); the four months in which the sun is in the common signs, viz. ஆனி, புரட்டாசி, மார்கழி, பங்குனி, corresponding to June-July, September-October, December-January and March - April.

த.வ. ஈரோரை மாதம்.

*[உபய + மாதம்.]*

*[Skt. ubhaya > த. உபய(ம்).]*

மதி → மாதம்.

**உபயமார்க்கம்** *ubaya-mārkkam,* பெ.(n.) வரிவகை; a tax (S.I.I.IV. 99).

**உபயமுகம்** *ubaya-mugam,* பெ.(n.) 1. மேல்முகம், கீழ்முகம் முதலிய விருபுறம்; the two directions, namely upward and downward. 2. தாயின் முகமும் அதற்கு நேர்மாறாக இருக்கும் சூலியின் வயிற்றில் இருக்கும் கருவின் முகமும்; the two-faced said of a pregnant woman because of the embryo which has its face turned in the opposite direction to that of the mother. 3. இரு பக்கமும் திரும்பக்கூடிய முகம்; having a face that can be turned either way.

த.வ. இருமுகம்.

*[உபய(ம்) + முகம்.]*

*[Skt. ubhaya > த. உபய(ம்).]*

*[த. முகம் > Skt. mukha.]*

**உபயமுகரத்தபித்தம்** *ubaya-muga-ratta-pittam,* பெ.(n.) ஒரே காலத்தில் உடம்பின் ஏழு துளைகளின் வழியாகவும், மேலுங் கீழுமாக குருதியை வெளிப்படுத்துமோர் வகை நோய்; hemorrhage or escape of blood through all the seven opening of the body viz. the eyes, the nose, the ears, the mouth, the anus and the genitals in directions both upwards and downwards.

த.வ. குருதிப்பீச்சு.

*[உபய + முகம் + ரத்த + பித்தம்.]*

*[Skt. ubhaya > த. உபயம்.]*

[Skt. rakta > த. ரத்தம்.]

பித்து → பித்தம் > Skt. pitta.

**உபயர்** *ubayar,* பெ.(n.) இருவர்; two persons. *"புதல்வரு முபய ரானார்" (வேதாரணியபு. கோலர்கல. 37).*

*[Skt. uphaya > த. உபயர்] 'ர்' ப.பா.ஈறு.*

**உபயராசி** *ubaya-rāśi,* பெ.(n.) 1. இயக்கம், நிலை (சரம், ஸ்திரம்) என்னும் இருவகைக்கும் ஏற்ற ஓரை (இராசி) (விதான. மரபி. 5, உரை); (Astrol.) the four common signs of the zodiac, viz. மிதுனம், கன்னி, தனுசு, மீனம் as distinguished from the moveable and fixed signs. 2. உடைவாரம்; heap of grain comprising *mēl-vāram.* i.e. share of the government or landlord, and *kīḻ-vāram,* i.e., the share of the cultivator. *"மேல்வாரங் குடிவாரமாகப் பிரிப்பதற்கு முன்னுள்ள மொத்த விளைவுத் தவசம்".*

**த.வ. ஈரோரை.**

*[Skt. ubhaya+rāsi > த. உபயராசி.]*

**உபயவசை** *ubayavasai,* பெ.(n.) 1. சீரகம்; cumin seed. 2. கருஞ்சீரகம்; black cumin - nigella Sativa.

**உபயவாதிகள்** *ubaya-vādigaḷ,* பெ.(n.) 1. வழக்கின் வழக்காளி எதிர் வழக்காளி (வாதி பிரதிவாதிகள்); plaintiff and defendant. 2. வழக்குத் தொடுக்கும் வழக்காளி எதிர்வழக்காளியென்னு மிரு திறத்தார்; opponents in a controversy, upholders of opposite sides in a debate. *"ஈதுபயவாதிகள் சம்மதம்" (தாயு. எங்கு. 3).*

**த.வ. வம்பாளி வழக்காளி.**

*[உபயவாதி + கள்.]*

*[Skt. ubhayavādi > த. உபயவாதி.] 'கள்' பன்மை ஈறு.*

**உபயவிட்டகம்** *ubaya-viṭṭagam,* பெ.(n.) பெண்களுக்குக் கருப்பக் காலத்தில் மாதவிடாய்த் தவறுதலில்லாமல் இயல்பாக திங்கடொறும் வெளிப்படுவதனால் இளைத்து வயிற்றுக்குள் உலாவிக் கொண்டிருக்கும் பிண்டம் (சுப்தி); the emaciated foetus found moving in the womb, and this emaciation is due to the continuance of the menstrual discharge inspite of pregnancy.

**த.வ. வற்றல்கரு.**

*[உபய + விட்டகம்.]*

*[Skt. ubhaya > த. உபயம்.]*

**உபயவிபூதி** *ubaya-vibūdi,* பெ.(n.) பேரருளும் இவ்வுலகவின்பமும் (லீலாவிபூதி நித்தியவிபூதிகள்) (ஈடு.6,1,8); eternal bliss and worldly happiness.

**த.வ. இருதுய்ப்பு.**

*[உபய + வி + பூதி.]*

*[Skt. ubhaya > த. உபயம்.]*

புழுதி → பூதி.

**உபயவியஞ்சனன்** *ubaya-viyañjaṉaṉ,* பெ.(n.) இரண்டு குறிகளையும் உடைய பேடு (அலி); one with the marks of both the sexes - hermaphrodite.

*[Skt. ubhaya-vyañjana > த. உபய வியஞ்சனம் → உபயவியஞ்சனன்.] 'ன்' ஆ.பா.ஈறு.*

**உபயவேதாந்தம்** *ubaya-vēdāndam,* பெ.(n.) வடமொழி தென்மொழி மறை (வேதங்)களின் முடிவு; philosophy of both the Sanskrit and the Tamil scriptures. (vaisṇ.).

**த.வ. இருமொழி மறைமுடிபு.**

*[Skt.ubhayavēdanda > த. உபயவேதாந்தம்.]*

**உபயவேதாந்தாசாரியர்** *ubaya-vēdandā-śāriyar,* பெ.(n.) வடமொழி தென்மொழி மறைகளில் (உபயவேதாந்தங்களிலுந்) தேர்ந்த மாலியருக்கு வழங்கும் ஒரு பட்டப் பெயர்; a distinguishing title of reverence of such a vaisṇ. sage or learned man, as master of *ubaya-vēdāndam.*

*[Skt. ubhaya-vēdanda-ācāri > த. உபய வேதாந்தாசியர்.]*

**உபயவேர்** *ubaya-vēr,* பெ.(n.) இருவகை வேர் – வெட்டிவேர், விலாமிச்சை வேர்; the two kinds of aromatic roots - khus khus.

*[உபய + வேர்.]*

*[**Skt.** ubhaya > த. உபயம்.]*

**உபயவோசை** *ubaya-v-ōšai,* பெ.(n.) ஈரடுக்கொலி (திவா.); imitative, reiterated sound, as படபட, கடகட.

**த.வ. இரட்டைக் கிளவி.**

*[உபய(ம்) + ஓசை.]*

*[**Skt.** ubhaya > த. உபயம்.]*

**உபயாங்கம்** *ubayāṅgam,* பெ.(n.) பாட்டுக்கும் நாட்டியத்திற்கும் வாசிக்கும் வாச்சியம் (வாத்தியம்) (சிலப். 3, 14, உரை); musical instrument adapted to dancing as well as singing.

**த.வ. இருபால் இன்னியம்.**

*[**Skt.** ubhaya+aṅga > த. உபயாங்கம்.]*

**உபயாசித்தம்** *ubayāšittam,* பெ.(n.) ஏதுப்போலி வகை (மணிமே. 29, 193); fault of appealing to a middle term that is not accepted by either party to a controversy.

*[உபய(ம்) + சித்தம்.]*

*[**Skt.** ubhaya > த. உபயம்.]*

செ → செத்து → சித்து → சித்தம் > **Skt.** citta.

**உபயாத்தம்** *ubayāttam,* பெ.(n.) இரு பொருள் (வின்.); two meaning.

*[**Skt.** ubhaya-artha > த. உபயாத்தம்.]*

**உபயார்த்தம்** *ubayārttam,* பெ.(n.) **உபயாத்தம்** பார்க்க; see *ubayāttam.*

*[**Skt.** ubhaya-artha > த. உபயார்த்தம்.]*

**உபயாவியாவிருத்தி** *ubayāviyāvirutti,* பெ.(n.) துணைக்கரணம் (சாதனம்), துணியப்படும் பொருள் (சாத்தியம்) இரண்டும் மீளாதிருக்கும் ஒப்பின்மை (வைதன்மிய) திட்டாந்தப் போலி (மணிமே. 29, 441); (Log.) a fallacious example of co-absence where neither the major term nor the middle term is absolute.

*[**Skt.** upaya-viyāvirutti> த. உபயாவியா விருத்தி.]*

**உபயானுகம்** *ubayāṉugam,* பெ.(n.) **உபயாங்கம்** (சிலப். 3, 14, அரும்.) பார்க்க; see *upayāṅgam.*

*[**Skt.** ubhaya-anu-ga > த. உபயானுகம்.]*

**உபயானுசம்மதம்** *ubayāṉu-šammadam,* பெ.(n.) இரு திறத்தாரும் ஒப்புக் கொள்கை; consent of both parties to an agreement. *"உபயானு சம்மதமாய் நிச்சயித்த தொகை".*

**த.வ. இருதிற ஏற்பு.**

*[**Skt.** upaya+anušammada > த. உபயானு சம்மதம்.]*

**உபயுக்தா** *ubayuktā,* பெ.(n.) முதியார் கூந்தல், அம்மையார் கூந்தல்; Sita's thread.

**உபயோகப்படு–தல்** *ubayōga-p-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) பயன்படுதல்; to be serviceable, turned to account.

*[உபயோகம் + படு–.]*

*[**Skt.** upa-yōga > த. உபயோகம். 'படு' து.வி.]*

**உபயோகம்**[1] *uba-yōgam,* பெ.(n.) 1. உதவி; use, fitness, suitableness. 2. உதவிப் பொருள்; thing useful for given purpose. *"தாங்கி யுபயோகந் தன்னை" (சைவச. பொது. 259).*

**த.வ. பயன்பாடு, பயன்.**

*[**Skt.** upa-yōga > த. உபயோகம்.]*

**உபயோகம்**[2] *uba-yōgam,* பெ.(n.) கோள்வீட்டிலும் (இலக்கினத்திலும்) 2, 3, 4 ஆம் இடங்களிலும் ஏழு கோள் (கிரகங்)களும் நிற்பதாகிய ஒரு நிலை (யோகம்); (Astrol.) conjunction in which the seven major planets are found distributed over the ascendant and the next three houses. *"உதயாதி நாலினுமேழு கோளுமுறவுபயோ கமாம்" (வீமே. உள். 312).*

*[**Skt.** yūpa-yōga > த. உபயோகம்.]*

**உபயோகம்**[3] *uba-yōgam,* பெ.(n.) மருந்து கூட்டல்; compounding medicines.

**உபயோகி**[1] *ubayōgi,* பெ.(n.) உதவுபவன்; useful, helpful person.

*[Skt. upa-yōgin > த. உபயோகி.]*

**உபயோகி**[2]**–த்தல்** *ubayōgi-,* 11 செ.கு.வி. (v.i.) பயன்படுத்துதல்; to use, apply or employ, as words.

*[Skt. upayōga > த. உபயோகி–,] 'இ' வினையாக்க ஈறு.*

**உபரசக்குற்றம்போக்கி** *ubaraša-k-kuṟṟam -pōkki,* பெ.(n.) நறுந்தக்காளி; an unknown drug capable of removing the defects in the several natural bodies or substances called uparasams.

*[உபரச + குற்றம் + போக்கி.]*

*[Skt. uparasa > த. உபரச.]*

**உபரசகுணம்** *ubaraša-guṇam,* பெ.(n.) தமிழ் மருத்துவத்தில் சொல்லியுள்ள துணைச் சரக்குகளின் குணம்; qualities of the natural bodies or products enumerated in Tamil medical science.

*[உபரச + குணம்.]*

*[Skt. uparasa > த. உபரச.]*

**உபரசச்சத்து** *ubaraša-c-cattu,* பெ.(n.) தமிழ் மருத்துவ நூலிற் கண்ட 120 துணைப் பொருளினின்றும் ஊதை (வாத) நூலின் வழியின் படி எடுக்கும் சத்து; the quintessence extracted from any of the one hundred and twenty kinds of natural substances by an alchemical process.

*[உபரசம் + சத்து.]*

*[Skt. upa-rasa > த. உபரச.]*

சள் > (சண்) > சத்து.

**உபரசச்சத்துரு** *ubaraša-c-catturu,* பெ.(n.) சிங்கி செய்நஞ்சு (பாடாணம்); a kind of poison consisting, chiefly of lead and nitre.

*[Skt. uparasasatru > த. உபரசச்சத்துரு.]*

**உபரசச்சத்துவாதி** *ubaraša-c-cattuvādi,* பெ.(n.) கற்பூர சிலாசத்து; a beautiful crystallised foliated gypsum.

**உபரசத்தைத்தயிலமாக்கி** *ubarašattai-t-tailamākki,* பெ.(n.) சின்னாருகை; a plant (not known) capable of reducing or converting uparasas into oils.

**உபரசநிகண்டு** *ubaraša-nigaṇḍu,* பெ.(n.) போகரால் செய்யப்பட்ட ஒரு மருத்துவ நூல்; a poetic vocabulary of Tamil chemistry complied by 'Bogar' a great siddha.

**உபரசம்** *uba-rašam,* பெ.(n.) 1. துணை மாழை (உபதாது); secondary mineral, as red chalk, bitumen, etc. *"தாரார் மணியுபரசல் களையும்" (தைலவ. பாயி. 31).* 2. கல்லுப்பு (மூ.அ.); rock-salt. 3. சேர்க்கை இதளியம் (ரசம்); mercury in a combined state as opposed to nascent or natural state, underneath the sea. 4. களிம்பு கலந்த மாழைப் பொருள் (உலோகம்); metallic ores, such as iron rust, iron sulphate, copper sulphate etc. 5. கடல் நுரை; sea-froth. 6. இயற்கைச் சரக்கு; natural substance. 7. இழிந்த சுவையுள்ளது; that which is inferior in taste. 8. அடுத்த மணம்; secondary flavour.

*[Skt. upa-rasa > த. உபரசம்.]*

**உபரசன்** *ubarašaṉ,* பெ.(n.) தம்பி (யாழ்.அக.); younger brother.

**த.வ. இளவல்.**

*[Skt. upara-ja > த. உபரசன்.]*

**உபரசிதம்** *ubarašidam,* பெ.(n.) **உபராசிதம்** பார்க்க; see *ubarāšidam.*

**உபரஞ்சகம்** *ubarañjagam,* பெ.(n.) வேறுபடுத்தும் தன்மை (அவச்சேதகம்) நான்கனு ளொன்று (விசாரசந். 320); (Log.) one of four *ava-c-cēdagam.*

*[Skt. upa-rañ-jaka > த. உபரஞ்சகம்.]*

**உபரஞ்சப்பஞ்சபூதம்** *ubarañja-p-pañja-būdam,* பெ.(n.) போகர் நிகண்டிற் கூறியுள்ள துணைச் சரக்குகளின் ஐந்து வகை வேறுபாடுகள்; the five classes into which the secondary or auxillary minerals called uparasas are divided according to the five elements opposed to பாடாணப் பஞ்ச பூதம் which refers to the five classes of poisons bearing reference to the five elements.

**உபரஞ்சிப்பி-த்தல்** *uba-rañjippi-,* 11 செ.கு.வி.(v.i.) மகிழ்வுறச் செய்தல்; to cause to rejoice. *"பிறரை உபரஞ்சிப்பிக்குங் குணம்" (சி.சி.2, 23, ஞானப்.).*

*[**Skt.** upa-rañj > த. உபரஞ்சி.] 'பி' பி.வி. ஈறு.*

**உபரதம்** *ubaradam,* பெ.(n.) வெடியுப்பு (மூ.அ.); salt-petre.

**உபரதாமிரத்தட்டை** *ubara-tāmira-t-taṭṭai,* பெ.(n.) **உபரதாமிரம்** பார்க்க; see *ubara-tāmiram.*

**உபரதாமிரம்** *ubara-tāmiram,* பெ.(n.) நாரை மரம்; a kind of tree (un-identified).

**உபரதி**[1] *ubaradi,* பெ.(n.) 1. செயலொழிகை; cessation from action *"நித்திரை யென்றது இந்திரியங்களுடைய உபரதியே" (சி.சி.3, 4, சிவாக்.).* 2. பற்றொழிகை (விசாரசந். 345); renunciation of worldly attachments, one of *camāti-caṭka-campattu.* 3. பேரின்பம்; the spiritual enjoyment rejecting sensual pleasure.

*[**Skt.** upa-rati > த. உபரதி.]*

**உபரதி**[2] *ubaradi,* பெ.(n.) இறுதி; conclusion, end. *"உபரதியில் மண்டலம் போன் முன்னிறுத்தி" (விறலி விடு. 559).*

*[**Skt.** uparati > த. உபரதி.]*

**உபரமணம்** *ubaramaṇam,* பெ.(n.) உலகப் பற்றை விடல்; abstaining from worldly actions or desires.

**உபராகம்**[1] *ubarāgam,* பெ.(n.) கோள்மறைப்பு (கிரகணம்); eclipse of the sun or of the moon. *"ஓது பானுவெண் மதிபுபராகத்தில்" (சேதுபு. சேதுபல. 21).*

**த.வ. கோள்மறை.**

*[**Skt.** upa-rāga > த. உபராகம்.]*

**உபராகம்**[2] *ubarāgam,* பெ.(n.) 1. கருங்கோள் (இராகு) (நாநார்த்த.); rāhu, the ascending node. 2. வசைமொழி (நிந்தை); abuse.

*[**Skt.** uparāga > த. உபராகம்.]*

**உபராசன்** *ubarāšaṉ,* பெ.(n.) இளவரசன் (யாழ்.அக.); prince.

*[உப + ராசன்.]*

*[**Skt.** upa > த. உப.] 'ன்' ஆ.பா.ஈறு.*

அரசன் → ராசன்.

**உபராசிதம்** *ubarāsidam,* பெ.(n.) சிற்றகத்தி, ஒரு செடிவகை (மூ.அ.); a kind of plant, *common sesban.*

**உபராமயம்** *ubarāmayam,* பெ.(n.) வெண்டை; rose-mallow.

**உபரால்** *ubarāl,* பெ.(n.) உதவி; help, aid, assistance (P.T.L.).

**உபரி**[1] *ubari,* வி.அ.(adv.) 1. மேல்; on, upon, above. *"உபரி யெழுகின்ற சீயம்" (பாரத. பதின்மூ. 39).* 2. மிகுதியாய்; more.

**த.வ. மிகை.**

*[உப்பரி = மிகை, மிகுதி, மேற்படல். உப்பரி → உபரி > **Skt.** upari]*

**உபரி**[2] *ubari,* பெ.(n.) 1. உடலுறவின் ஒருவகை (உபரிசுரதம்); a mode of sexual intercourse. *"மிக்கா முபரி செயக் கார்க் கொண்டை பின்சரிய" (விறலி விடு. 523).* 2. மிகுதி; excess as in பித்த உபரி, biliousness.

*[**Skt.** upari > த. உபரி.]*

**உபரிசம்** *ubarišam,* பெ.(n.) மேலாக முளைத்தல்; growing upwards or out-protuberant.

**உபரிசரம்** *ubarišaram,* பெ.(n.) வான (ஆகாய)த்தில் உலாவல்; moving or walking in the air.

**உபரிசரர்** *ubari-šarar,* பெ.(n.) வான்வெளியில் செல்பவர்கள்; sojourners in the air, those who move above in the air. *"உபரிசரரென வுர னோடு புகுதர" (பாரத. பதினாறு. 30).*

**த.வ. வான் உலவர்.**

*[Skt. uparicara > த. உபரிசரர். 'ர்' ப.பா.ஈறு.]*

**உபரிசுரதம்** *ubari-šuradam,* பெ.(n.) சிறப்புப் புணர்ச்சி (கொக்கோ. 6, 47); *coitus muliere super, virum decumbonte.*

*[Skt. upari-su-rata > த. உபரிசுரதம்.]*

**உபரிதகம்** *ubaridagam,* பெ.(n.) கொக்கோக நூலில் சொல்லியுள்ள அறுபத்து நான்கு கலைகளில் ஒன்றான அழகிய இணைவு (சிருங்கார பந்தம்); a kind of coitus described in the erotic science *kokkōgam.*

**உபரிதம்** *ubaridam,* பெ.(n.) **உபரிசுரதம்** பார்க்க; see *uparišuradam. "இசலியிசலி யுபரித லீலையுற்று" (திருப்பு. 497).*

*[Skt. uparitaka > த. உபரிதம்.]*

**உபரிபாகம்** *ubari-pāgam,* பெ.(n.) மறைமுடிபு; *vedānta,* the crown of the *vēdas. "உபரிபாகப் பொருள்" (பதினொ. திருநாவுக். 1.).*

*[உபரி + பாகம்.]*

*[Skt. upari > த. உபரி.]*

பகு → பகுப்பு. பகு → பாகு = பகுதி, பக்கம், பக்கமாயிருந்து பேணுபவன் (பாகன்). பகு → பாகு → பாகம்.

**உபரியாவி** *ubariyāvi,* பெ.(n.) ஒரு வகை செடிவகை (கோஷ்டம்) (வை.மூ.); costus plant.

**உபலக்கணம்** *ubalakkaṇam,* பெ.(n.) 1. ஒரு மொழி ஒழிந்த தன்னினத்தையுங்குறிப்பது (சி.போ.5,1,சிற்); implying something that has not been made explicit by expressing another thing associated or connected with it. 2. குறிக்கோளைப் பக்கவுதவியாகக் கொண்டு உணர்த்தும் இலக்கணம் (லட்சணம்); secondary or unessential mark which helps the recognition of a thing, as the branch of a tree is pointed out to enable one to see through it a constellation or the crescent moon.

**த.வ. குறிப்புமொழி.**

*[உப + இலக்கணம்.]*

*[Skt. upa > த. உப.]*

*[த. இலக்கணம் > Skt. laksaṇa.]*

**உபலட்சணம்** *ubalaṭcaṇam,* பெ.(n.) **உபலக்கணம்** பார்க்க; see *ubalakkaṇam.*

*[உப + லட்சணம்.]*

*[Skt. upa > த. உப.]*

*[த. இலக்கணம் > Skt. laṭcaṇa > த. லட்சணம்.]*

**உபலநாடிக்கல்** *ubala-nāḍi-k-kal,* பெ.(n.) காதிற்குள்ளாக நரம்புகள் படருமிடத்து இருக்குமோர் கல்; a kind of calculus found near the auditory nerves inside the ear-aural calculus.

*[உபல + நாடிக்கல்.]*

upala என்னும் சொற்கு வடமொழியில் கல், பாறை போன்ற பொருள்களுண்டு. நாடிக்கல் என்னும் சொல்லிற்கு உபல அடையாக வருவது மிமிசை.

**உபலம்** *ubalam,* பெ.(n.) 1. கல் (சூடா.); stone, rock. 2. சிறுகல் (பிங்.); small stone. 3. பளிங்கு; crystal. *"பலநிறங் கவரு முபலமாய்" (தாயு. சிற்சுகோ. 2).* 4. உடம்பிலுண்டாகுங் கல்; (in medicine) a calculus or concretion formed in any part of the body such as gall stone, stone in the bladder, lung stone etc. 5. எருமுட்டை; cow-dung cake.

*[Skt. upa-la > த. உபலம்.]*

**உபலம்பம்** *ubalambam,* பெ.(n.) தோற்றுகை; perception, recognition. *"அவன்றனக்கு ஈஸ்வரனையொழிய ப்ருதக்ஸ் திதியாதல் உபலம்பமாதல் இல்லாமையாலே" (ஈடு. 1,1,6).*

*[Skt. upa-lambha > த. உபலம்பம்.]*

**உபலாலனை** *uba-lālaṉai,* பெ.(n.) கொண்டாடுகை; fondling, caressing.

*[Skt. upa-lālana > த. உபலாலனை.]*

**உபலாளனம்** *uba-lāḷaṉam,* பெ.(n.) 1. **உபலாலனை** பார்க்க; see *uba-lālaṉai. "உத்ஸ்வங்களையும் உபலாளனங்களையும் ஸ்ரீ பாஞ்சராத்ரப்ரகாரமாக வ்யவஸ்தை பண்ணி" (கோயிலொ. 54).* 2. தூய்மை, செய்கை (திவா.); cleansing, purifying.

*[Skt. upa-lālanam > த. உபலாளனம்.]*

**உபலிபம்** *ubalibam,* பெ.(n.) சாணத்தால் மெழுகுகை; besmearing with cow dung.

**உபலேபம்** *ubalēbam,* பெ.(n.) 1. **உபலேபனம்** பார்க்க; see *ubalēbaṉam.* 2. கோழைக் கட்டு; formation phlegm. 3. மந்தம்; dullness.

**உபலேபனம்** *uba-lēbaṉam,* பெ.(n.) 1. சாணத்தால் மெழுகுகை (வின்.); smearing with cow dung. 2. ஆ நீரால் மெழுகுகை; smearing with cow's urine. 3. ஆ நீரால் தூய்மை செய்தல்; a ceremony of cleaning with cow's urine.

*[Skt. upa+lēbana > த. உபலேபனம்.]*

**உபலை** *ubalai,* பெ.(n.) 1. சருக்கரை (நாநார்த்த.); sugar. 2. சுக்கான் பாறை; limestone.

*[Skt. upalā > த. உபலை.]*

**உபலோகத்திறம்** *ubalōga-t-tiṟam,* பெ.(n.) வெள்ளி; silver.

**உபலோகம்** *ubalōgam,* பெ.(n.) மாழையை (உலோகத்தை) அடுத்த பொருள்; secondary mineral.

*[Skt. upa-lōha > த. உபலோகம்.]*

**உபலோத்திரம்** *uba-lōttiram,* பெ.(n.) விளாம் பிசின் (மூ.அ.); gum of wood apple tree.

*[Skt. upa-lōdhra > த. உபலோத்திரம்.]*

**உபவசி¹-த்தல்** *ubavaši-,* 11 செ.கு.வி.(v.i.) உண்ணாதிருத்தல்; to fast. *"ஆயிரமாண்டுபவசித்து" (உத்தரரா. இராவணன் பிற. 26).*

**த.வ. நோன்பு.**

*[Skt. upa-vas > த. உபவசி-,]*

**உபவசி²** *ubavaši,* பெ.(n.) **உபவாசி** பார்க்க; see *uba-vāši. "அன்றைக் குபவசியாய்" (சைவச. பொது. 303).*

*[Skt. upa-vāsiṉ > த. உபவசி.]*

**உபவம்** *ubavam,* பெ.(n.) சீந்தில் (மூ.அ.); gulancha.

**உபவராகப்பிரண்டை** *ubavarāga-p-piraṇḍai,* பெ.(n.) கரணைப் பிரண்டை; coarse toothed heart-vine.

*[உபவராகம் + பிரண்டை.]*

புரு → புரள் → புரண்டை → பிரண்டை.

**உபவரி** *ubavari,* பெ.(n.) **உபவம்** பார்க்க; see *upavam.*

**உபவல்லிகம்** *ubavalligam,* பெ.(n.) ஒருவகைப் பூடு; a plant (unidentified).

*[Skt. upavalliga > த. உபவல்லிகம்.]*

**உபவனம்¹** *uba-vaṉam,* பெ.(n.) சோலை, பூஞ்சோலை; grove, flower-garden. *"அந்த மன்ன னோர் நாளி லுபவனத் தொருவனாய்" (ஞானவா. உற்பத்தி. 31).*

*[Skt. upa-vana > த. உபவனம்.]*

**உபவனம்²** *uba-vaṉam,* பெ.(n.) 1. காஞ்சொறி (மூ.அ.); climbing nettle. 2. கடுக்காய்; myrobalan.



**உபவாசக்காலம்** *ubavāśa-kālam,* பெ.(n.) 1. உண்ணா நோன்புக் காலம்; time for religious fasts. 2. தவமிருக்கும் காலம்; lent (Chr.).

*[உபவாச(ம்) + காலம்.]*

*[**Skt.** upa-vāsa > த. உபவாசம்.]*

கால் > காலம்.

**உபவாசகம்** *ubavāsagam,* பெ.(n.) பேய்த் தும்மட்டி; bitter apple, *Cucumis colocynthis.*

**உபவாசம்** *ubavāśam,* பெ.(n.) 1. உண்ணா நோன்பு (விரதம்); fast, fasting. *"இதன் புனலாடிய யுபவாச முஞற்றியக் கால்" (சேதுபு. பலதீ.19).* 2. சிற்றின்பம் தொடர்பானவற்றையும், மணம், அழகு படுத்துதல், ஆடல்பாடல், இசை, தாம்பூலம் முதலியவற்றையும் தவிர்த்து நோன்பு இருத்தல்; a religious mortification by abstinence from indulgence in all sexual gratification such as perfumes, flowers, unguents, ornaments, betel, music, dancing etc.

*[**Skt.** upavāsa > த. உபவாசம்.]*

வடமொழியில் இச்சொல் upa-vas என்றுள்ளது. இச்சொல்லுக்குப் பொறுத்திருத்தல், ஒன்றுடன் தங்கி இருத்தல், நுகர்பொருளை விலக்கியிருத்தல், உணவு உட்கொள்ளாமலிருத்தல் என்ற வகையில் பொருள் வளர்ச்சி ஏற்பட்டுள்ளது (மா.வி.). இவற்றுள் உண்ணா நோன்புப் பொருளே தமிழ் மொழியில் பெரும்பான்மை ஆளப்பட்டுள்ளது.

**உபவாசி[1]-த்தல்** *ubavāśi-,* 11 செ.கு.வி.(v.i.) உண்ணாநோன்பு மேற்கொள்ளல், பட்டினியா யிருத்தல்; to fast, especially from religious motives. *"ஓங்குந் திரிதி கையுபவாசித்தே" (மச்சபு. அனந்ததிரி. 28).*

வடமொழியில் upa-vasati என்று வினை வடிவம் இருக்கிறது (மா.வி.). தமிழில் உபவாசம் என்னும் பெயர்வடிவத்திலிருந்தே உபவாசி என்னும் வினைவடிவம் உருவாகியிருக்கிறது.

**உபவாசி[2]** *ubavāśi,* பெ.(n.) உண்ணா நோன்பிருப்பவன்; one who observes a fast. *"மதத்தவுடலதனா லற்ற வுபவாசி யொளித்துண்பானென்றுணர்தல்" (உபநி.16).*

**த.வ. உண்ணாநோட்பர்.**

*[**Skt.** upa-vāsin > த. உபவாசி.]*

**உபவாயு** *uba-vāyu,* பெ.(n.) உடலிலுள்ளனவும் சிறந்தெடுத்துக் கூறவியலாததுமான விக்கன் (நாகன்), இமையன் (கூர்மன்), எரியன் (கிருகரன்), ஆவிரியன் (தேவ தத்தன்), உச்சியன் (தனஞ்சயன்) என்ற ஐந்து வளி (ஊதை) (விசாரசந். 330); the five subsidiary breaths, *vikkan, imaiyan, eriyan, āviriyan* and *ucciyan.*

**த.வ. ஐவளி.**

*[**Skt.** upa+vāyu > த. உபவாயு.]*

விக்கல், ஏப்பம், இமைகொட்டல், இருமல், தும்மல், வீங்கல் ஆகிய செயற்பாடுகளுக்கு ஏதுவாயிருக்கும் பத்து வளி (தசவாயு)களுக்குத் துணையாயிருப்பவை உபவாயு என சா.அக. குறிப்பிடுகிறது.

**உபவாளிதம்** *ubavāḷidam,* பெ.(n.) ஒரு வகைச் செடி; Indian lead wort.

**உபவிட்டக்கருப்பம்** *uba-viṭṭa-k-karuppam,* பெ.(n.) மூவகைச் சூல்களுள் நன்றாகக் கருதப்படும் கருப்பையில் குறை கண்டு குருதி (அரத்தம்) கசிந்து அதனால் கரு மெலிந்து துடித்துக் கொண்டிருக்குமோர் நிலைமை; one of the three conditions of pregnancy marked by the oozing of blood or slight hemorrhage and emaciated and quivering condition of the womb.

*[உபவிட்டம் + கருப்பம்.]*

*[**Skt.** upa-viṭṭa > த. உபவிட்டம்.]*

த. குரு > கரு > கருப்பம் > **Skt.** garbha.

**உபவிட்டரம்** *uba-viṭṭaram,* பெ.(n.) தங்குபிண்டம் (சீவரட். 206); embryo shrunken in size owing to menstrual discharges during the period of gestation.

*[Skt. upa+viṣṭara > த. உபவிட்டரம்.]*

**உபவிடம்** *uba-viḍam,* பெ.(n.) 1. ஒரு மருந்துச் செடி (அதிவிடயம்); a kind of herb *(adi-viḍayam).* 2. ஒன்பது வகை நிலைத்திணை நஞ்சு (தாவரவிடம்); the nine kinds of vegetable poisons.

1. எருக்கம்பால், 2. கள்ளிப்பால், 3. சிவனார் கிழங்கு, 4. அலரி, 5. குன்றி, 6. அபினி, 7. ஊமத்தை, 8. எட்டி, 9. நாபி ஆகியன ஒன்பது நிலைத்திணை நஞ்சுகளாம்.

**உபவிடை** *uba-viḍai,* பெ.(n.) **உபவிடம்** பார்க்க; see *uba-viḍam.*

**உபவிருங்கணம்** *ubaviruṅgaṇam,* பெ.(n.) **உபப்பிரும்மணம்** (பெரியபு. திருமலைச். சூசனம்) பார்க்க; see *ubappi-rummaṇam.*

*[Skt. upa-bṛṁhaṇa > த. உபவிருங்கணம்.]*

**உபவீதம்** *ubavīdam,* பெ.(n.) 1. பூணூல் (பிங்.); sacred thread worn by men of the twice-born castes. 2. இடப்பக்கத்திலிருந்து வலப்பக்கமாய்ப் பூணூல் அணிதல்; wearing the sacred thread in the usual manner over the left shoulder and under the right arm opp. to பிராசீனாவிதம்.

*[Skt. upa-vīta > த. உபவீதம்.]*



**உபவீதி** *ubavīdi,* பெ.(n.) 1. **உபவீதம்**[2] பார்க்க; see *ubavīdam.* opp. to பிராசீனாவீதி.

*[Skt. upa-vītin > த. உபவீதி.]*

**உபவுப்பு** *uba-uppu,* பெ.(n.) பிண்டவுப்பு செயநீர்; a peculiar liquid extracted from the salt derived from the foetus.

*[உப + உப்பு.]*

*[Skt. upa > த. உப.]*

**உபவேசனம்** *uba-vēšaṉam,* பெ.(n.) மலங் கழித்தல்; passing of stools, evacuation of the bowels.

**உபவேட்டனம்** *ubavēṭṭaṉam,* பெ.(n.) கூத்திடுங்காலுண்டாம் உறுப்பசைவு முறைகளுளொன்று (சுத்தா; சிலப். பக். 81); a mode of gesticulation.

*[Skt. upa-vēṣṭana > த. உபவேட்டனம்.]*

**உபவேட்டிதம்** *uba-vēṭṭitam,* பெ.(n.) நடன முத்திரை (அபிநய) வகை (சீவக. 1257, உரை); a gesture by the fingers in dancing.

*[Skt. upa-vēṣṭita > த. உபவேட்டிதம்.]*

**உபவேதம்** *uba-vēdam,* பெ.(n.) நான் மறை (வேதங்)களையடுத்து மதிக்கப்பெறும் ஆயிர்வேதம், தனுர்வேதம், காந்தர்வவேதம், அர்த்த வேதம் ஆகிய நான் மறைகள் (வேதங்கள்) (திருக்காத். பு. 29, 38); secondary vēdas, class of writings subordinate to the vēdas, of which four are enumerated.

*[உப + வேதம்.]*

*[Skt. upa > த. உப.]*

விழி → வித் → வேத் → வேதம்.

**உபற்பவம்** *ubaṟ-pavam,* பெ.(n.) பாம்புக் கொல்லி; the herb of repentance.

**உபறியாவி** *ubaṟiyāvi,* பெ.(n.) கோட்டம் (மூ.அ.); Arabian costume.

**உபனோரஞ்சகன்** *ubaṉō-rañjagaṉ,* பெ.(n.) எலுமிச்சை; lime-citrus medicalima.

**உபா** *ubā,* பெ.(n.) தன்மாத்திரை; subtle, elements. *"உபாக்கடெரிவுரைப்பின்" (நீலகேசி. 486, உரை).*

**உபாக்கியானம்** *ubākkiyāṉam,* பெ.(n.) கிளைக்கதை; episode, short story introduced into a long one. *"நளோபாக்கியானம்".*

*[Skt. upā-khyāna > த. உபாக்கியானம்.]*

**உபாகமம்** *ubāgamam,* பெ.(n.) 1. மூல தோன்றிய (மூலாகம)ங்களின் வழித் தோன்றிய சைவத் தோன்றிய (ஆகம)ங்கள் (சைவச. பொது. 336, உரை); secondary āgamas said to be 207 in number. 2. பழைய ஏற்பாட்டில் ஐந்தாவது புத்தகம் (கிறித்.); the Tamil name for the book of Deuteronomy.

த.வ. துணைத் தோன்றியம்.

*[Skt. upāgama > த. உபாகமம்.]*

**உபாகர்மம்** *ubākarmam,* பெ.(n.) வேதங்களை ஓதத் தொடங்குமுன் ஆண்டிற்கொருமுறை புதியதாகப் பூணூல் போட்டுக் கொள்ளும் சடங்கு, (சிராவணச் சடங்கு) (பிராக்.); ceremony performed once a year before commencing to recite the vēda when the sacred thread is put on a new.

*[Skt. upā-karman > த. உபாகர்மம்.]*

**உபாகிதம்** *ubāgidam,* பெ.(n.) எரிகொள்ளி (நாநார்த்த.); fire brand.

*[Skt. upāhita > த. உபாகிதம்.]*

**உபாகிதை** *ubāgidai,* பெ.(n.) **உபாகிதம்** பார்க்க; see *ubāgidam.*

*[Skt. upāhita > த. உபாகிதை.]*

**உபாங்கதாளம்** *ubāṅga-tāḷam,* பெ.(n.) தாளவகை (பரத. தாள. 4, உரை); (Mus.) variety of time-measure.

*[உபாங்கம் + தாளம்.]*

*[Skt. upāṅga > த. உபாங்க.]*

*தாள் = கால், அடி. தாள் → தாளம் = ஆடுபவர் காலால் தட்டும் காலக்கணிப்பு.*

**உபாங்கம்** *ubāṅgam,* பெ.(n.) 1. சார்புறுப்பு; minor limb or member. 2. மறைமுடிவு (வேதாங்கங்)களுக்கு உறுப்பா (அங்கமா) யுள்ள நூல்கள் (சாத்திரங்கள்) (சி.சி.8, 14, மறைஞா.); a class of writings, supplementary to the *vēdāṅ-gas,* of which four are enumerated. 3. தோற் கருவி வகை (சிலப். 3, 27, உரை); kind of drum. 4. இசைக்கருவி பக்கவாச்சியம்; subsidiary musical instrument. *"தார்கிண்டு வண்டுபாங்கங்கூட" (இரகு. நாட்டுப். 54).* 5. **உபாங்கதாளம்** பார்க்க; see *ubāṅga-tāḷam. "அங்க முபாங்க மாகிடுநேர் பங்கமுடன்" (பரத. தாள. 4).*

*[Skt. upāṅga > த. உபாங்கம்.]*

**உபாங்கராகம்** *ubāṅga-rāgam,* பெ.(n.) அராகவகை; a melody-type.

*[உபாங்கம் + ராகம்.]*

*[Skt. upāṅga > த. உபாங்கம்.]*

*[த. அராகம் > Skt. rāga > த. ராகம்.]*

**உபாசகன்** *ubāšagaṉ,* பெ.(n.) 1. வழிபடு (உபாசனை) வோன்; worshipper, devotee. *"விழைவா லுபாசக ராகி" (விநாயகபு. 83, 107).* 2. புத்த மதத்தைச் சார்ந்தவ (பௌத்த)ரில் இல்லறத்தோன்; buddhist layman, opp. to பிக்ஷு. *"சீல வுபாசகர் செங்கைநறு நீரும்" (மணிமே. 28, 12).*

*[Skt. upāsaka > த. உபாசகன்.]*

**உபாசகை** *ubāšagai,* பெ.(n.) புத்த சமயத்தவரில் இல்லறத்தவள் (மணிமே. 28, 12. அரும்.); buddhist woman of the laity.

**உபாசங்கம்** *ubāšaṅgam,* பெ.(n.) அம்புக்கூடு; quiver.

*[Skt. upāsaṅga > த. உபாசங்கம்.]*



**உபாசயம்** *ubāšayam,* பெ.(n.) உறக்கம்; sleep.

**உபாசனம்** *ubāšaṉam,* பெ.(n.) **உபாசனை** பார்க்க; see *upāšaṉai.*

*[Skt. upāsana > த. உபாசனம்.]*

**உபாசனை** *ubāšaṉai,* பெ.(n.) வழிபாடு; worship. *"இரு வேறாகு முபாசனை" (விநாயகபு. 83, 67).*

*[Skt. upāsanā > த. உபாசனை.]*

upāsana என்னும் வடசொல் உட்காருதல் அல்லது அருகில்இருத்தல், தொண்டு செய்தல், காத்திருத்தல், தொண்டு, உதவி செய்தல், மதித்தல், புகழ்தல், வணங்குதல் என்னும் வகையில் பொருள் வளர்ச்சி கொண்டுள்ளது. இவற்றுள் 'வழிபாடு' என்னும் இறுதிப் பொருளை மட்டும் தமிழ் ஏற்றுக் கொண்டுள்ளது.

**உபாசி-த்தல்** *ubāši-,* 11 செ.குன்றாவி.(v.t.) வழிபடுதல்; to worship. *"நயந்துபா சித்த வாறும்" (விநாயகபு. பதி. 3).*

*[Skt. upās > த. உபாசி-,]*

**உபாசி** *ubāši,* பெ.(n.) தெய்வந் தொழுதலான் அவனருள் (அனுக்கிரகம்) பெற்றவன்; one who has obtained the grace of a particular deity by worshipping it.

*[Skt. upās > த. உபாசி.] 'இ' உடைமை குறித்த ஈறு.*

**உபாஞ்சு** *ubāñju,* பெ.(n.) **உபாம்சு** (சைவச. பொது. 152. உரை) பார்க்க; see *ubāmšu.* 2. தனிமை (ஏகாந்தம்); loneliness, solitude.

*[Skt. upāmšu > த. உபாஞ்சு.]*

**உபாத்தி** *ubātti,* பெ.(n.) ஆசிரியர் (உபாத்தியாயன்) (பிங்.); teacher.

*[Skt. upādhya > த. உபாத்தி.]*

**உபாத்தியாயம்** *ubāttiyāyam,* பெ.(n.) பூசாரியம் (புரோகிதம்); profession of conducting religious ceremonies (Brāh.).

*[Skt. upadhyāyam > த. உபாத்தியாயம்.]*

**உபாத்தியாயன்** *ubāttiyāyaṉ,* பெ.(n.) 1. ஆசிரியர்; teacher, school master. 2. மதகுரு; religious preceptor. *"அவனுபாத்தியாயன்" (பிரபோத. 11, 5).*

**த.வ. ஆசான்.**

*[Skt. upādhyāya > த. உபாத்தியாயன்.]*

*'அன்' ஆ.பா.ஈறு.*

**உபாத்தியாயனி** *ubāttiyāyaṉi,* பெ.(n.) ஆசிரியை; lady teacher, school mistress.

*[Skt. upā-dhyāyāni > த. உபாத்தியாயனி.]*

**உபாத்தியாயி** *ubāttiyāyi,* பெ.(n.) **உபாத்தியாயனி** பார்க்க; see *ubā-ttiyāyaṉi.*

*[Skt. upā-dhyāyani > த. உபாத்தியாயி.]*

**உபாத்து** *ubāttu,* பெ.(n.) சாவு (முகம); death.

**த.வ. சாக்காடு.**

*[Arab. wafāt > த. உபாத்து.]*

**உபாதாயவுரு** *ubādāya-v-uru,* பெ.(n.) வலி, இரதம், வன்னம், கந்தம் என்று நால்வகைப்பட்ட உருவ வகை (மணிமே. 30, 190, கீழ்க்குறிப்பு); (Buddh.) a variety of uruvam, of four kinds viz., vali, iradam, *vaṉṉam* and kandam.

*[உபதாய + உரு.]*

*[Skt. upadāya > த. உபாதாய.]*

**உபாதானகாரணம்** *ubādāṉa-kāraṇam,* பெ.(n.) முதற்காரணம்; material cause, as clay for a pot.

*[உபாதானம் + காரணம்.]*

*[Skt. upā-dāna > த. உபாதான.]*

**உபாதானபூதம்** *ubādāṉa-būdam,* பெ.(n.) கலப்பான பூதம்; that which is composed of two or more elements or ingredients - compound.

*[உபா + தான(ம்) + பூதம்.]*

*[Skt. upā > த. உபா.]*

**உபாதானம்** *ubātāṉam,* பெ.(n.) 1. **உபாதான காரணம்** பார்க்க; see *upātāṉa-kāraṇam.* 2. அரிசிப்பிச்சை; dole of uncooked rice.

*[உபா + தானம்.]*

*[Skt. upā > த. உபா.]*

தர் – (தர்) → தரு → தா. தரு → தருகிறாள், தருவான், தருகை, தரவு.

தா → தானம்.

*[த. தானம் > Skt. dāna.]*

**உபாதி[1]** *ubādi,* பெ.(n.) 1. கடமை; dues. *"எப்பேர்ப்பட்ட உபாதிகளும் இழித்து விட்ட அளவுக்கு" (தெ.க.வெ.தொ.2, 118).* 2. விளைவில் பரவி காரணத்தில் பரவாமல் இருப்பது (சாத்தியத்திலே வியாபித்துச் சாதனத்தில் வியாபகமில்லாதது) (தர்க்கபா. 18); special cause of a general effect. 3. மாயையாலுண்டாகுந் தோற்றம்; appearance, phantom.

*[Skt. upā-dhi > த. உபாதி.]*

**உபாதி[2]** *ubādi,* பெ.(n.) 1. தொல்லை (வேதனை); torment, agony, pang. *"உச்சியிற் சாலவுபாதி பசிதாகமாகும்" (பட்டினத். திருப்பா. திருத்தில்லை.).* 2. நோய்; disease, ailment. *"பேருணவு உபாதியை யுண்டாக்கும்".* 3. இடையூறு; hindrance, obstruction. *"உம்பரால் உருமுபாதி காப்பன்" (மச்சபு. பிருகுவி. 49).* 4. ஆதனு (ஆன்மாவு)க்கு ஏற்படும் துயரம்; in vedanta philosophy a condition of the body, which is specially applied to certain forms, considered disguises of the spirit.

த.வ. துன்பம்.

*[Skt. bādhā > த. உபாதி.]*

**உபாதி[3]-த்தல்** *ubādi-,* 11 செ.கு.வி.(v.i.) தொந்தரை செய்தல்; to cause distress, to afflict, torment, torture.

*[Skt. bādhā > த. உபாதி-,]*

**உபாதி[4]** *ubādi,* பெ.(n.) வேறுபடுத்தும் தன்மை (அவச்சேதகம்) நான்கனுளொன்று (விசாரசந். 320); (Log.) one of four *ava-c-cēdagam.*

*[Skt. upādhi > த. உபாதி.]*

**உபாதேயம்** *ubādēyam,* பெ.(n.) ஏற்றுக் கொள்ளத்தக்கது; that which is worthy of acceptance or adoption. *"குருவசனம் எப்போதும் உபாதேயமானது".*

*[Skt. upā-dēya > த. உபாதேயம்.]*

**உபாதை** *ubādai,* பெ.(n.) **உபாதி[2]** பார்க்க; see *ubādi[2].*

*[Skt. bādhā > த. உபாதை.]*

**உபாந்தியம்** *ubāndiyam,* பெ.(n.) 1. கடைக்கண் (வின்.); corner of the eye. 2. ஈற்றயல் (வின்.); the last but one, the penultimate. 3. அண்மை (சமீபம்) (பிராம.); proximity, vicinity.

*[Skt. upāntya > த. உபாந்தியம்.]*

**உபாம்சு** *ubāmšu,* பெ.(n.) மந்திரத்தை நா வசைவின்றி செவியுணருமாறு நெட்டுருச் செய்கை; recitation of a mantra in a hushed low voice so as to be heard by the reciter alone. *"சிவமந்திரத்தை வாசகமாகத் தான் உபாம்சுவாகத்தான் மானசமாகத்தான்..... ஜபிப்பது" (சி.சி.8,23,சிவாக்.).*

*[Skt. upāmšu > த. உபாம்சு.]*

**உபாயக்காரன்** *ubāya-k-kāran,* பெ.(n.) சூழ்ச்சியாளன் (தந்திரி); artful person, schemes, contriver.

*[உபாயம் + காரன்.]*

*[Skt. upāya > த. உபாய(ம்).]*

**உபாயசொரூபம்** *ubāya-šorūbam,* பெ.(n.) வீடுபேறு (மோட்சம்) பெறும் வழியின் தன்மை (அஷ்டாதச. பக். 25); nature of the path to final bliss, which is of five kinds, viz. கருமம், ஞானம், பத்தி, பிரபத்தி, ஆசாரியாபிமானம், one of *artha-pañjagam.*

*[Skt. upāya + švarūpa > த. உபாய சொரூபம்.]*

**உபாயதந்திரம்** *ubāya-tandiram,* பெ.(n.) ஏமாற்று (வஞ்சகம்) (Pond.); deceit.

*[Skt. upāya+tantra > த. உபாயதந்திரம்.]*

**உபாயநிசம்** *ubāya-nisam,* பெ.(n.) உயிர் வளியினை உள்வாங்குகை, உள்ளிழுக்கை; inhalation of vital air.

**த.வ. பூரகம்.**

**உபாயநிட்டை** *ubāya-niṭṭai,* பெ.(n.) எளிதிற் வீடுபேறு அடையும் வழியிலூன்றி நிற்கை; fixing on an easy method of attaining spiritual tranquillity. *"மேலோர் உபாய நிட்டை யுணர்த்துகின்றார்" (சி.சி.9,8, மறைஞா. அவ.).*

*[**Skt.** upāya+niṣṭai > த. உபாயநிட்டை.]*

**உபாயநிட்டைவெண்பா** *ubāya-niṭṭai-veṇpā,* பெ.(n.) பண்டார சாத்திரங்களுள் அம்பலவாணரியற்றிய நூல்; a šaiva šiddhānda treatise by *ambalavāṇa-dēšigar,* one of *paṇḍāra-cāttiram.*

*[உபாயநிட்டை + வெண்பா.]*

*[**Skt.** upāyaniṭṭai > த. உபாயநிட்டை.]*

வெள் → வெண் + பா – வெண்பா.

**உபாயபாரமிதை** *ubāya-pāramidai,* பெ.(n.) பத்துச் சிறப்புக் குணங்களுள் (தசபாரமிதையுள்) ஒன்றான அறம் (உபாயம்) (மணிமே. 26, 45, குறிப்பு. பக். 297); (Buddh.) a transcendental virtue, characteristic of the Buddha, one of *taša-pāramidai.*

**உபாயம்¹** *ubāyam,* பெ.(n.) 1. சூழ்ச்சி; that by which a person realizes his aim, means, stratagem, artifice. *"யாஅரு பாயத்தின் வாழாதார்" (நாலடி. 119).* 2. அரசர்க்குரிய நான்கு வழிவகைகள் (உபாயங்கள்) (பிங்.); means of overcoming an enemy, one of *cadurvidōbayam.* 3. நான்கு; four. *"அம்பு பாயமாம்படி யட்டி" (தைலவ. தைல. 94, 12).* 4. சிறிதளவு (சொற்பம்); smallness. *'உபாயமாய்க் கொடுத்தான்'.*

*[**Skt.** upāya > த. உபாயம்.]*

upaya என்னும் சொல்லிற்கு வடமொழியில் அருகில் வருதல். அடைதல். வந்துசேர்தல். நோக்கத்தை அடையும் வழி. வழிவகை. வழி போன்ற பல பொருள்களுள்ளன. இவற்றுள் வழிவகை. சூழ்ச்சி போன்ற ஒரு சில பொருள்களே தமிழில் உள்ளன.

**உபாயம்²** *ubāyam.* பெ.(n.) வழிவகை (சாதனம்); means. *"காசு ஒடுக்க உபாயமில்லாமையாலும்" (தெ.க.தொ. 5. பக். 370).*

*[**Skt.** upāya > த. உபாயம்.]*

**உபாயனபத்திரம்** *ubāyaṉa-pattiram.* பெ.(n.) கையுறையாகக் கொடுக்கும் பொருளைப் பற்றிய ஆவணம் (பத்திரம்) (சுக்கிரநீதி. 93); document specifying present.

*[**Skt.** upāyana + pattiram > த. உபாயனபத்திரம்.]*

**உபாயனம்** *ubāyaṉam,* பெ.(n.) காணிக்கை; present to a superior. *"மன்னனுக்கிய லுபாயன மென்று கொடுத்தனர்" (யசோதர. 3, 5.).*

*[**Skt.** upāyana > த. உபாயனம்.]*

**உபாயி** *ubāyi,* பெ.(n.) சூழ்ச்சியாளன் (தந்திரமுள்ளவன்); artful person.

*[**Skt.** upāya > த. உபாயி.]*

**உபாலம்பனம்** *ubālambaṉam,* பெ.(n.) இடித்துரைத்தல் (நிந்திக்கை); reproach, reproof. *"சந்திரோபாலம்பனம்" (நைடத.).*

*[**Skt.** upā-lambhana > த. உபாலம்பனம்.]*

**உபானம்¹** *ubāṉam,* பெ.(n.) மிதியடி; a kind of shoes, wooden sandals. *"உபானபதத்தொடு நடக்கும்" (சிவதரு. சுவர்க்கம். 142).*

**த.வ. பாதுகை.**

*[**Skt.** upa-nah > த. உபானம்.]*

**உபானம்²** *ubāṉam,* பெ.(n.) கோபுரத்தின் அடிச்சித்திரவரை; first moulding above the plinth in the structure of towers, etc.

forming the base above the lowest of a series of rows or layers intended to produce an ornamental effect, pedestal (T.A.S.I, 180).

*[Skt. upāna > த. உபானம்.]*

**உபானவரி** *ubāṉa-vari,* பெ.(n.) **உபானம்²** பார்க்க; see *ubāṉam.*

*[உபானம் + வரி.]*

*[Skt. upāna > த. உபானம்.]*

**உபுக்கு-தல்** *ubukku-,* 5 செ.கு.வி.(v.i.) பெருகுதல் (வின்.); to swell, overflow.

தெ. உபுகு; உரு. உபக்.

**உபேட்சாபாவனை** *ubēṭcā-pāvaṉai,* பெ.(n.) சார்பு பற்றாது ஒப்பு நோக்குந் தன்மை (மணிமே. 30, 253, அரும்.); impartiality.

*[Skt. upēksā+pāvaṉai> த. உபேட்சா பாவனை.]*

**உபேட்சி-த்தல்** *ubēṭci-,* 11 செ.குன்றாவி. (v.t.) புறக்கணித்தல்; to neglect, disregard, overlook, ignore. *"பரமபதத்தை உபேட்சித்துவந்து" (குருபரம். 69. பன்னீ.).*

*[Skt. upēks > த. உபேட்சி-,]*

**உபேட்சை** *ubēṭcai,* பெ.(n.) 1. புறக்கணிப்பு; disregard, neglect, indifference. *"மேதகு மறைவிரோத மேவுநூலுபேட்சை" (சூத. சருவவேதாந்.).* 2. உடல் நலமின்மை (அசௌக்கியம்); indisposition.

*[Skt. upēksā > த. உபேட்சை.]*

**உபேட்சையானம்** *ubēṭcai-yāṉam,* பெ.(n.) தோல்வியடைந்த அரசன் பகைவனைப் புறக்கணித்துத் திரும்புகை (சுக்கிரநீதி, 337); the return march of a defeated king unmindful of his defeat.

*[Skt. upēksā+yāna > த. உபேட்சையானம்.]*

**உபேந்திரன்** *ubēndiraṉ,* பெ.(n.) இந்திரனின் தம்பியாகிய திருமால்; Visṇu, who, at one time, incarnated as a younger brother of Indra. *"முச்சசகமளந்த வுபேந்திரன்" (தணிகைப்பு. விடை. 18).*

*[உப + இந்திரன்.]*

*[Skt. upa > த. உப.]*

வேந்தன் → இந்திரன்.

முல்லை நிலத் தெய்வமாகிய திருமாலை இந்திரன் தம்பியாக்கியதும் குறிஞ்சி நிலத் தெய்வமாகிய முருகனைப் பிள்ளையாரின் தம்பியாக்கியதும் தமிழ்ப் பண்பாட்டில் ஆரியப்பண்பாட்டின் வீச்சுகளாகக் கருதப்படுகின்றன.

**உபேந்திராசிரியர்** *ubēndirāśiriyar,* பெ.(n.) சினேந்திரமாலை யியற்றியவர்; the author of the *śiṉēndira-mālai.*

*[உப + இந்திரன் + ஆசிரியர்.]*

*[Skt. upa > த. உப.]*

வேந்தன் → இந்திரன்.

**உபோதகம்** *ubōdagam,* பெ.(n.) **உடுபோதம்** (யாழ்.அக.) பார்க்க; see *uḍupōdam.*

*[உடுபோதம் → உபோதகம்.]*

**உபோதம்** *ubōdam,* பெ.(n.) பேய்ப்பசளை (மலை.); a wild species of purslane.

*[Skt. upōdaka > த. உபோதம்.]*

**உபோற்காதம்** *ubōṟkādam,* பெ.(n.) பாயிரம் (தொல். பாயி.விருத். பக். 16); introduction, preface.

*[Skt. upōdghāta > த. உபோற்காதம்.]*

**உம்மத்து** *ummattu,* பெ.(n.) பற்றாளர் (இசுலாம்); followers, adherents.

*[Ar. ummat > த. உம்மத்து.]*

**உம்மியம்** *ummiyam,* பெ.(n.) உமியம், செய் நஞ்சு விளையும் நிலம்; soil or mine from which mineral poisons are dug out.

**உமலிட்சாரம்** *umaliṭ-cāram,* பெ.(n.) 1. குடல் சீராக்கத்திற்குக் கொடுக்கப்படும் உமரியுப்பு; a vegetable salt given in cases of bowel complaints such as hernia etc. 2. உமரிப் பூண்டினின்று எடுக்கும் சத்து; salt sort soda obtained from the plant 'umari'.

த.வ. உமரிஉப்பு.

**உமதகி** *umatagi,* பெ.(n.) சணல் (மலை.); sunnhemp.

**உமலோத்திரம்** *umalōttiram,* பெ.(n.) **உபலோத்திரம்** பார்க்க; see *ubalōttiram.*

**உமற்கடம்** *umar-kadam,* பெ.(n.) திரு (தருப்பை)ப்புல்; the kusa grass, the sacrifical grass.

**உமா**[1] *umā,* பெ.(n.) குன்றிமணி; crab's eye; gold-smith's grain.

**உமா**[2] *umā,* பெ.(n.) சிவை; pārvathi.

**உமாக்கலைக்கியானம்** *umā-k-kalai-k-kiyānam,* பெ.(n.) மலைமகளா (பார்வதியா)ற் கூறப்பட்டதாகச் சொல்லப்படுமோர் வட மொழி நூல்; arts and sciences said to have been revealed by Pārvathi, wife of god Šivan.

**உமாக்குருவி** *umā-k-kuruvi,* பெ.(n.) வான் வலப் (ஆகாய) பறவை; a bird of paradise-paradisea.

*[உமா + குருவி.]*

குள் → குரு → குருவி = சிறு பறவை.



**உமாகட்கம்** *umākatkam,* பெ.(n.) **உமற்கடம்** பார்க்க; see *umarkadam.*

**உமாதகி** *umātagi,* பெ.(n.) 1. **உமதகி** பார்க்க; see *umatagi.* 2. ஒரு வகை (இரசதாளி)க் கரும்பு; a species of sugar-cane.

**உமாதகியம்** *umātagiyam,* பெ.(n.) **உமா** பார்க்க; see *umā.*

**உமாதகியரிசி** *umātagi-y-ariši,* பெ.(n.) கருங்குருவை யரிசி; the rice of a black variety of paddy.

**உமாதசி** *umātaši,* பெ.(n.) **உமதகி** பார்க்க; see *umatagi.*

**உமாதாதகி** *umātātagi,* பெ.(n.) மஞ்சள் செவ்வந்தி; an yellow variety of chamomile.

**உமாபட்சி** *umā-patci,* பெ.(n.) பறவை வகை (வின்.); species of paradise-bird.

**உமாபதி** *umā-padi,* பெ.(n.) சிவன் (திவா.); Šivan whose consort is Umā.

*[Skt. umāpati > த. உமாபதி.]*

**உமாபதிசிவாசாரியார்** *umāpadi-šivā cāriyār,* பெ.(n.) சந்தான குரவருள் ஒருவர்; a šaiva *ācārya,* author of the *siva-p-piragāsam* and seven other treatises of the 14 *sittānda-sāttiram*besides several other works like *kōyirpurānam,* 13th C. one of four *šandānakuravar*(q.v.).

*[உமாபதி + சிவா + ஆச்சாரியார்.]*

*[Skt. umāpati > த. உமாபதி.]*

**உமாமகேச்சுரம்** *umāmagēccuram,* பெ.(n.) ஒரு நோன்பு; a religious observance in honour of. *Umā-mahesvaran.* *"உமாமகேச் சுரமென் றொரு அவவிரதம்" (பிரமோத். உமாம. 17).*

*[Skt. uma-mahesvaran > த. உமாமகேசுவரன் > உமாமகேச்சுரம்.]*

**உமாமகேசன்** *umā-magēšan,* பெ.(n.) **உமாமகேசுவரன்** பார்க்க; see *umā-magēšuvaran.*

*[Skt. umā+makēsan > த. உமாமகேசன்.]*

**உமாமகேசுவரன்** *umā-magēšuvaran,* பெ.(n.) சிவன்; Šivan, the great lord whose consort is Umā.

*[Skt.umāmahesvara>த. உமாமகேசுவரன்.]*

*'ன்' ஆ.பா.ஈறு.*

**உமியல்தாரி** *umiyaltāri,* பெ.(n.) கருநெய்தல்; blue lotus - monochoria - vaginalis.

**உமேசன்** *umēšan,* பெ.(n.) சிவன்; Šivan, Umā's lord.

*[Skt. umēša > த. உமேசன்]*

**உமேதுபண்ணு-தல்** *umēdu-paṇṇu-*, 15 செ.கு.வி.(v.i.) சம்பளமின்றி வேலை பழகுதல்; to serve as an unpaid probationer in expectation of permanent employment.

*[உமேது + பண்ணு-,]*

*[**Skt.** ummēd > **த.** உமேது.]*

**உமேதுவார்** *umēduvār*, பெ.(n.) 1. சம்பளமின்றி வேலை பழகுநர்; unpaid probationer who works in expectation of being provided with a permanent employment. 2. பதவியை விரும்புவன் (இசுலாம்); a condidate for an office or position (Muham.).

*[U. ummēd+war > **த.** உமேதுவார்.]*

**உமேதுவார்ப்பட்டாளம்** *umēdu-vār-p-paṭṭālam*, பெ.(n.) தன் விருப்பார்வப் படை; volunteer corps.

*[**U.** ummēd+war > **த.** உமேதுவார்; **E.** battalion > **த.** பட்டாளம்.]*

**உமையாளீசன்** *umaiyāḷīšan*, பெ.(n.) சவர்க்காரம்; earth impregnated with carbonate of soda, fuller's earth.

**உயசதி** *uyaṣati*, பெ.(n.) **உயத்தி** பார்க்க; see *uyatti*.

**உயத்தி** *uyatti*, பெ.(n.) 1. வெண் செய்நஞ்சு (பாடாணம்); white arsenic. 2. ஓட்டை மரம்; a tall tree.

**உயந்திசம்** *uyandišam*, பெ.(n.) ஆள்வாடைத்தட்டி; a plant.

**உயாத்தவம்** *uyāttavam*, பெ.(n.) இலந்தை; Indian apple.

**உயில்** *uyil*, பெ.(n.) இறப்பிற்குப் பின் நடைமுறைபடுத்தக்கோரி எழுதும் விருப்பாவணம் (மரண சாசனம்); will, legal declaration of a person's intentions, to take effect after his death.

**த.வ. விருப்பாவணம்.**

*[**E.** will > **த.** உயில்.]*

**உயிறு** *uyiṟu*, பெ.(n.) நறுமண (வாசனை) வேர் (இலாமிச்சை) (மலை.); cuscus-grass, with aromatic root.

**உயுத்தம்** *uyuttam*, பெ.(n.) போர்; war, battle. *"தானவானவ ருயுத்தமும்" (பாரத. பதினெட்டாம். 68).*

*[**Skt.** yuddha > **த.** உயுத்தம்.]*

**உயோகுதுயில்** *uyōgu-tuyil*, பெ.(n.) அறிதுயில் (யோகநித்திரை); trance in yōga, wakeful sleep. *"ஆலினிலையதன் மேற்பைய வுயோகுதுயில் கொண்ட பரம்பரனே" (திவ். பெரியாழ். 1, 5, 1).*

*[உயோகு + துயில்.]*

*[**Skt.** yōga > **த.** உயோகு.]*

**உரகக்கன்னி** *uraga-k-kaṉṉi*, பெ.(n.) நாகமல்லிகை; snake jasmine.

*[உரகம் + கன்னி.]*

*[**Skt.** uraga > **த.** உரகம்.]*

**உரகச்சீரகம்** *uraga-c-ciragam*, பெ.(n.) காட்டுச் சீரகம்; wild cumin.

*[உரகம் + சீரகம்.]*

*[**Skt.** uraga > **த.** உரகம்.]*

**உரகபந்தம்** *uraga-bandam*, பெ.(n.) ஒன்றிணைந்த இரண்டு பாம்பு போல வரைந்த சித்திரத்தின் அறைகளில் எழுத்துகளை அடைக்கும்படியமைந்த சித்திர பாவகை; a variety of cittira-kavi whose letters can be arranged to fit in a diagram in the form of two intermining snakes.

**த.வ. நாகபந்தம்.**

*[உரக + பந்தம்.]*

*[**Skt.** uraga > **த.** உரக.]*

**உரகபந்தனம்** *uraga-bandaṉam*, பெ.(n.) **உரகபந்தம்** பார்க்க; see *uraga-pandam*.

*[உரக + பந்தனம்.]*

*[**Skt.** uraga > **த.** உரக.]*

*[பந்தம் → பந்தனம்.]*

**உரகம்** *uragam,* பெ.(n.) பாம்பு; snake.

*[Skt. ura-ga > த. உரகம்.]*

**உரகாதிபன்** *uragādibaṉ,* பெ.(n.) முதற்பாம்பு (ஆதிசேடன்); *ādišēša,* chief of the serpents.

*[Skt. uraka+adhipa > த. உரகாதிபன்.]*

**உரகாரி** *uragāri,* பெ.(n.) 1. கருடன்; brahminy kite. 2. மயில்; peacock.

**உரகாரிவாதம்** *uragāri-vādam,* பெ.(n.) ஈரலில் வளி (வாயு) சேர்ந்து நெஞ்சு, குரல் வளை முதலியவிடங்களில் வலியுண்டாகிச் சோறு செல்லாது நெஞ்சடைக்குமோர் வகை ஊதைநோய்; a disease characterised by spasmodic suffocative attacks with pain especially in the thoracic region and difficulty in swallowing food, supposed to be due to the deranged vāyu accumulated in the liver.

த.வ. நெஞ்சடைநோய்.

**உரகேந்திரன்** *uragēndiraṉ,* பெ.(n.) **உரகாதிபன்** பார்க்க; see *uragādibaṉ.*

**உரசகத** *urašagada,* பெ.(n.) உப்பு வாயு கலந்தது; nitrogenous.

**உரசகதம்** *urašagadam,* பெ.(n.) உப்பு வாயு கலந்த பொருட்கள்; nitrogenous substances or constituents.

**உரசகதி** *urašagadi,* பெ.(n.) உடம்பின் குருதியில் உப்புவாயு தொடர்பான பொருட்களால் ஏற்படும் நிலைமை; a condition marked by the presence of nitrogenous bodies in the blood azotemia.

**உரசம்** *urašam,* பெ.(n.) 1. தூய இதள் (சுத்த ரசம்); purified or cleansed mercury. 2. வாலையிட் டிறக்கிய இதள்; sublimed mercury.

**உரசன்** *urašaṉ,* பெ.(n.) நெஞ்சுரமுள்ளவன்; a man of stout mind.

*[Skt. uraša > த. உரசன்.]* 'ன்' ஆ.பா.ஈறு.

**உரசிதக்கட்டி** *urašida-k-katti,* பெ.(n.) முலைக்கட்டி; mammary abscess.

*[உரசிதம் + கட்டி.]*

*[Skt. uras > த. உரசிதம்.]*

குல் → கள் → கட்டு → கட்டி = இறுகியது

**உரசிதம்** *urašidam,* பெ.(n.) முலை; the breast of the woman.

*[Skt. uras > த. உரசிதம்.]*

**உரசிருகம்** *uraširugam,* பெ.(n.) **உரசிதம்** பார்க்க; see *urašidam.*

**உரசிலன்** *urašilaṉ,* பெ.(n.) நெஞ்சுரமுடையவன்; one having a strong chest.

**உரணம்** *uraṇam,* பெ.(n.) செம்மறிக் கடா; ram.

*[Skt. uraṇa > த. உரணம்.]*



**உரணாட்சம்** *uraṇāṭcam,* பெ.(n.) தகரை; ringworm plant.

**உரணாட்சியம்** *uraṇāṭciyam,* பெ.(n.) **உரணாட்சம்** பார்க்க; see *uraṇāṭcam.*

**உரத்தபித்தவாதம்** *uratta-pitta-vādam,* பெ.(n.) பித்தமிகுதியினால் நல்லது கெட்டதென்று அறியாதபடித் திடீரென சினமுண்டாகி அடிக்கடி சண்டையிடத் தூண்டுமோர் வகை ஊதை (வாத) நோய்; nervous disease, due to aggravated condition of bile in the system characterised by sudden anger, excitement and indiscriminate quarrel.

த.வ. சீறுநோய்.

**உரத்தை** *urattai,* பெ.(n.) உத்தாமணி, வயிரம்; diamond of superior quality.

**உரதம்** *uradam,* பெ.(n.) 1. வித்தமிழ்து; semen. 2. மாதவிடாய்; the menstrual blood. 3. சிறு பூளை; wooly caper - erna lanata alias achyranthes lanata.

**உரதாரை** *uratārai,* பெ.(n.) நெஞ்சாங் குழல்; the canal in the region of the thorax.

**உரப்பிரம்** *urappiram,* பெ.(n.) வெள்ளாடு; goat.



**உரப்பிரு** *urappiru,* பெ.(n.) செம்மறியாடு; ram; ewe.

**உரம்பம்** *urambam,* பெ.(n.) பேய்ப்புல்; wild bitter grass.

**உரலாகை** *uralāgai,* பெ.(n.) கரு விழி; apple of the eye.

**உராகசாரசந்தனம்** *urāga-šāra-šandaṉam,* பெ.(n.) நறு மண (வாசனை)முள்ள ஒரு வகைச் சந்தனக் கட்டை; a kind of sandal wood with a strong smell.

**உராதரம்** *urādaram,* பெ.(n.) முலை; woman's breast.

**உரிசை** *urišai,* பெ.(n.) 1. சுவை; taste. *"கைப்புப் புளிப்புரிசை" (சினேந். 244).* 2. தீஞ்சுவை; sweet taste.

*[Skt. ruci > த. உரிசை.]*

**உரிசைபார்-த்தல்** *urišai-pār-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. சுவைத்தல்; to try by tasting. 2. சிற்றின்பந் துய்த்தல் (அனுபவித்தல்); to enjoy or experience the sexual pleasure.

*[உரிசை + பார்-,]*

*[Skt. ruci > த. உரிசை.]*

**உரிசையாயிரு-த்தல்** *uricai-yā-yiru-,* 3 செ.குன்றாவி.(v.t.) நாவுக்கினிமையா யிருத்தல்; to have a good flavour, to be savoury.

*[உரிசை + ஆய் + இரு-,]*

*[Skt. ruci > த. உரிசை.]*

**உரிணி** *uriṇi,* பெ.(n.) கொத்துமல்லி; coriander-coriandrum sativum.

**உரிதாகம்** *uridāgam,* பெ.(n.) கல்லுசில், ஊடுசில்; a kind of usil.

**உருக்குமிணி** *urukkumiṇi,* பெ.(n.) கண்ணபெருமானின் முதன் மனைவி (பாகவத.); name of the principal wife of Krsṇa.

*[Skt. rukmiṇi > த. உருக்குமிணி.]*

ஒளிக்கான ஏக்கம், ஒளிமயமாக இருப்பதற்கான விருப்பம் என்னும் பொருள்படும் ruj என்னும் வேரிலிருந்து (ruj → ruk → ruknā → )rukmiṇi என்னும் சொல் உருவாகியுள்ளது (மா.வி.).

'உருக்குமிணி' யை இருக்குமணி என்று குறிப்பிடுவதும் உண்டு (அபி.சிந்.).

**உருகம்** *urugam,* பெ.(n.) பிறப்பு; birth.

**உருசகதம்** *uruša-kadam,* பெ.(n.) 1. நாம் மூச்சுவிடும் (சுவாசிக்கும்) காற்றின் மூன்று பங்காயிருக்கும் உப்புக் காற்று (வாயு); nitrogen which forms 3/4 of the air inhaled by us. 2. உப்புக் காற்று (வாயு) சேர்ந்த பொருள்; a compound containing nitrogen - nitrogenous compound.

**உருசகதேந்திரியோபாதனபூதங்கள்** *urušaga-tēndiri-yōpādaṉa-pūdaṅgaḷ,* பெ.(n.) உப்பு வளி (வாயு) சேர்ந்த கூட்டு முறை; nitrogenous organic compounds.

**உருசகம்** *urušagam,* பெ.(n.) (நாநார்த்த.) 1. மாதுளை; pomegranate. 2. விளங்கம்; elliptic cuspidate-leaved wind-berry. 3. ஆன்மணத்தி (கோரோசனை); bezoar. 4. ஆமணக்கு; castor plant. 5. கொம்மட்டி மாதளை; melon lime - citronmedica. 6. புண் (இரணம்) முதலியவற்றிக்கிடும் காரம்; caustic applied to wounds, sores etc. caustic application.

*[Skt. urceka > த. உருசகம்.]*

**உருசி[1]** *uruši,* பெ.(n.) 1. சுவை; taste. 2. இன்சுவை; good taste, relish, flavour. 3. இனிமை; pleasantness, agreableness. *'அவன் பேச்சு உருசியானது'.* 4. விருப்பம்; wish, desire. *'அவனுக்குப் படிப்பில் உருசி அதிகம்'.*

*[Skt. ruci > த. உருசி.]*

வடமொழியில் ஒளி, அழகு என்னும் பொருள்படும் ru என்னும் வேரிலிருந்து விரும்புவது, சுவையானது எனப் பொருள்படும் ruci என்னும் சொல் பிறந்துள்ளது (மா.வி.) என்பது பொருந்துவதன்று. சொற்பிறப்பு நோக்கில் நாவின் அடிப்படையிலான சொல்லிலிருந்துதான் சுவை தொடர்பான சொல் தோன்ற முடியும். உணர்த்தி→ ருத்தி→ருசி எனத் திரிந்து வடநாட்டில் வழக்கூன்றியது என்பது அறியத்தக்கது. தமிழில் உருசி, சுவை, இன்சுவை என்னும் பொருள்களிலேயே பெருவழக்கெய்தியுள்ளது.

**உருசி[2]-த்தல்** *uruši-,* 11 செ.கு.வி.(v.i.) சுவையாதல்; to relish, to be savoury, pleasant to the senses or mind. *'எனக்கு இக்கனி உருசிக்கிறது'.*

உருசித்தலெனும் வினைச்சொல் உருசி என்னும் பெயர்ச்சொல்லிலிருந்து பின்னாக்க முறை (back formation)யில் உருவானது.

**உருசி[3]-த்தல்** *uruši-,* 11 செ.குன்றாவி.(v.t.) 1. சுவைத்தல்; to taste, examine by the taste. *'அவன் மாங்கனியை உருசிக்கிறான்'.* 2. துய்த்தல்; to experience, as pleasure, to enjoy, as happiness. *"உள்ளத்து ருசித்து" (திருவிளை.அன்னக்.11).*

**த.வ. உணர்த்தி>ருத்தி>ருசி**

*[Skt. ruci > த. உருசி → உருசி-,]*

**உருசி[4]** *uruši,* பெ.(n.) 1. ஒளிக்கற்றை (நாநார்த்த.); ray of light. 2. ஒளி (நாநார்த்த.); brilliance. 3. **உருசியாதனம்** பார்க்க; see *uruši-y-ādaṉam. "மயிறண்டுருசி" (தத்துவப். 107).*

*[Skt. ruci > த. உருசி.]*

**உருசிகரம்** *urušikaram,* பெ.(n.) இன்சுவையானது, இனிமையானது; that which is delicious savoury.

*[Skt. ruci-kara > த. உருசிகரம்.]*

**உருசிகாட்டு-தல்** *uruši-kāṭṭu,* 11 செ.கு.வி.(v.i.) இனிப்புக் காட்டுதல்; to allure by baits or dainties, cause one to engage in a pursuit by giving a gratifying foretaste.

*[உருசி + காட்டு-.]*

*[Skt. ruci > த. உருசி. காண் (த.வி.) - காட்டு (பி.வி.).]*

**உருசிகாண்(ணு)-தல்** *uruši-kāṇ(ṇu)-,* 12 செ.கு.வி.(v.i.) சுவையறிதல்; to get a taste, know the flavour. *'உருசி கண்ட பூனை'.*

*[உருசி + காண்-,]*

*[Skt. ruci > த. உருசி.]*

**உருசிதட்டு-தல்** *uruši-taṭṭu-,* 15 செ.கு.வி. (v.i.) சுவை தோன்றுதல்; to be sweet, pleasant to the taste.

*[உருசி + தட்டு-,]*

**உருசிபார்-த்தல்** *urušipār-,* 4 செ.குன்றாவி. (v.t.) **உருசிகாண்(ணு)-தல்** பார்க்க; see *urušikāṉ.*

*[உருசி + பார்-,]*

*[Skt. ruci > த. உருசி.]*

**உருசியம்** *urušiyam,* பெ.(n.) 1. காட்டா; a wild cow. 2. எருமை போன்ற மயிரடர்ந்த மான்; a very large kind of deer resembling a

buffalo with hair grown thick or bushy. a kind of yawk. **3.** ஒரு வகைக் குட்டம்; a kind of leprosy.

**உருசியாதனம்** *uruši-y-ādaṉam,* பெ.(n.) ஒகவிருக்கை வகை (தத்துவப். 107. உரை); (Saiva.) a yōgic posture.

[உருசி + ஆதனம்.]

[**Skt.** *ruci*> த. உருசி.]

[த. ஆதனம் > **Skt.** *āsana.*]

**உருசு**[1] *urušu,* பெ.(n.) **1.** கரி, மெய் அறுதிச் சான்று; proof. **2.** கையெழுத்து; signature.

[**Skt.** *rujū* > த. உருசு.]

**உருசு**[2] *urušu,* பெ.(n.) திருவிழா; festival. *'நாகூர் உருசுக்குப் போக வேண்டும்' (முகமதி.).*

[**Ar.** *urus* > த. உருசு.]

**உருசுச்செய்-தல்** *urušu-c-cey-,* 11 செ.குன்றாவி.(v.t.) மெய்ப்பித்தல்; to prove or establish by evidence, to bringhome, as a change or accusation.

[உருசு + செய்-,]

[**U.** *ruju* > த. உருசு.]

**உருசுப்படுத்து-தல்** *urušu-p-paḍuthu-,* 5 செ.குன்றாவி.(v.t.) **உருசுச்செய்-தல்** பார்க்க; see *urušu-c-cey-.*

[உருசு + படு-,]

[**U.** *ruju* > த. உருசு.]

**உருசுப்பண்ணு-தல்** *urušu-p-paṇṇu-,* 12 செ.குன்றாவி.(v.t.) **உருசுச்செய்-தல்** பார்க்க; see *urušu-c-cey-.*

**த.வ. மெய்ப்பித்தல்.**

[உருசு + பண்ணு-,]

[**U.** *ruju* > த. உருசு.]

**உருசுப்பொறுப்பு** *urušu-p-poṟuppu,* பெ.(n.) உண்மையெனக் காட்டவேண்டிய பொறுப்பு (ஈச்சுர நிச்சயம், 38); burden of proof.

[உருசு + பொறுப்பு.]

[**U.** *ruju* > த. உருசு.]

**உருசுப்போடு-தல்** *urušu-p-pōḍu-,* 20 செ.கு.வி.(v.i.) கையெழுத்துப் போடுதல்; to affix one's signature.

[உருசு + போடு-,]

[**U.** *ruju* > த. உருசு.]

**உருசை** *urušai,* பெ.(n.) இன்சுவை; relish, flavour. *"நாக்குக் கதியு ருசை நல்கும்" (பதார்த்த. 801).*

[**Skt.** *ruci* > த. உருசி > உருசை.]

**உருட்சம்** *uruṭcam,* பெ.(n.) மொந்தன் வாழைக் கிழங்கு; tuber of kuntela plantain.

**உருட்சணசிகிச்சை** *uruṭcaṇa-cigiṭcai,* பெ.(n.) கோழை முதலியவற்றை அறுத்துத் தள்ளி, அந்தந்த வுறுப்புகளுக்கும், தாதுக்களுக்கும் ஊட்டம் (போஷணை) உண்டாக்கு முறை; a form of treatment with tonic, which braces up every organ and increases the tone of the nervous system by completely removing the phlegm and the watery mucous from the lungs - tonic-treatment

**உருட்சை** *uruṭcai,* பெ.(n.) வாழைக்கிழங்கு; the root of the plantain tree.

**உருட்டா** *uruṭṭā,* பெ.(n.) பகட்டுப் பேச்சு (இடம்ப வார்த்தை); vain boast, rodomontade. *'அவன் உருட்டா அடிக்கிறவன்'.*

[**U.** *ulta* > உல்டா >த. உருட்டா.]

**உருட்டால்** *uruṭṭāl,* பெ.(n.) **உருட்டா** பார்க்க; see *uruṭṭā. 'ஏன் உருட்டாலடிக்கிறாய்'?*

[**Skt.** *ulṭā* > த. உருட்டா > உருட்டால்.]

**உருடகம்** *uruḍagam,* பெ.(n.) கருநாவி; black aconite.

**உருத்தகம்** *uruttagam,* பெ.(n.) **1.** ஒருவகை இசிவு (சன்னி) நோய்; a kind of apolexy. **2.** ஒருவகை இசிவு நோய் (உருத்தாக சன்னி

பாத சுரம்); typhoid fever characterised by excessive pain in the bodily organ.

**உருத்தகுதம்** *uruttagudam,* பெ.(n.) 1. ஒரு வகை எருவாய் (குத) நோய்; a disease of the anus. 2. எரு (ஆசன) வாயிலேற்படும் வலியுள்ள ஒரு வகைக் கட்டி (விரணம்); a painful linear ulcer at the margin of the anus.

**உருத்திதம்** *uruttidam,* பெ.(n.) (அக.நி.) 1. ஊதியம்; profit, wages. 2. உறு பொருள்; property. 3. வளர்ச்சி; increase.

**உருத்திரகிரந்தி** *uruttira-kirandi,* பெ.(n.) பாலக (மூலாதார)மும் அகட்டக (சுவாதிட்டான)மும் (ஆ.நி.); mystical circles, in ancient Hindu physiology, of *mūlātāram* and *cuvādiṭṭāṉam.*

*[Skt. uruṭṭira+kiranti > த. உருத்திரகிரந்தி.]*

**உருத்திரபூமி** *uruttira-pūmi,* பெ.(n.) சுடுகாடு; burning-ground.

*[Skt. rudra-bhūmi > த. உருத்திரபூமி.]*

**உருத்திரம்** *uruttiram,* பெ.(n.) பெருஞ்சினம்; anger.

*[Skt. rudra > த. உருத்திரம்.]*

**உருத்திரன்** *uruttiran,* பெ.(n.) சிவன்; God *Śivaṉ.*



**உருத்திராக்கம்** *uruttirākkam,* பெ.(n.) அக்கமணி; rudrakṣa bead.

**த.வ.** கடவுண்மணி, சிவமணி, தெய்வமணி, நாயகமணி, கண்மணி, கண்டம், கண்டி, கண்டிகை முண்மணி.

*[Skt. rudrakṣa > த. உருத்திராக்கம்.]*

அக்கமணி எனப் பொருள்படும் கண்மணி என்னும் கூட்டுச் சொல்லைக் கண் + மணி என்று தவறாகப் பிரித்து, கண் என்பதை அட்ச என்று திரித்து வடமொழி வழி ருத்திர+அக்ஷ (சிவன் கண்ணினின்று தோன்றுயது) எனப் பெயர் பெற்றதாகக் காட்டியுள்ளனர். அக்கமணியில் வரும் அக்கம் முண்முனை, எனப் பொருள்படுவதுபோல் கண்மணியில் வரும் கள் என்பதற்கும் முள் என்பது பொருள்.

**உருதம்** *urudam,* பெ.(n.) விலங்கு (மிருகம்) பறவை முதலியவற்றின் ஒலி; the noise made by animals and birds in general.

**உருதம்பண்ணு-தல்** *urudam-paṇṇu-,* 12 செ.குன்றாவி.(v.t.) பலுக்குதல், ஓதுதல் (உச்சரித்தல்); to pronounce, utter, articulate, to chant. *"வேதத்தையுருதம் பண்ணு நலத்தாலும்" (திருக்காலித். 4, 5, 49).*

*[உருதம் + பண்ணு-,]*

**உருது** *urudu,* பெ.(n.) 1. படை (சேனை); an army (Muham.). 2. பாசறை; military encampment (Muham.). 3. வட இந்திய மொழிகளில் ஒன்று; lit., the camp, applied to the Hindustani language which is spoken commonly in north India, and which is a mixture of Sanskrit, Persian and Arabic.

*[Ar. urdu > த. உருது.]*

**உருபசொரூபம்** *uruba-šorūbam,* பெ.(n.) காண்குறும் காட்சிப் பொருள்; the object of sight.

*[உரு → உருவு → உருவம் → **Skt.** rūpa → த. உருபம்.]*

*[**Skt.** sva-rūpa > த. சொரூபம்.]*

**உருபட்சா** *urubaṭcā,* பெ.(n.) பெருங்காயம்; asafoetida.

**உருபதன்மாத்திரை** *urupadan-māttirai,* பெ.(n.) ஐந்து (பஞ்ச) மாத்திரையிலொன்று அதாவது ஐம் (பஞ்ச) பூத மூலத்திலொன்று; one of the rudimentary elements of the five senses i.e. the primitive element of sight.

**உருபம்** *urubam,* பெ.(n.) 1. உருவம்; form, shape. 2. அழகு; beauty. 3. நிழற்படம் (பிரதிமை); image. 4. நிறம்; colour. 5. நிலை; posture. 6. சாயல்; features.

*[உரு → உருவு → உருவம் → **Skt.** rūpa → த. உருவம்.]*

**உருபுகம்** *urupugam,* பெ.(n.) ஆமணக்கு; castor-plant.

**உரும்பரம்**[1] *urumbaram,* பெ.(n.) செம்பு (வின்.); copper.

*[**Skt.** udumbara > த. உரும்பரம்.]*

**உரும்பரம்**[2] *urumbaram,* பெ.(n.) 1. பெருங்காயம் (வின்.); asafoetida. 2. பாம்பு (வின்.); serpent.

**உருமால்** *urumāl,* பெ.(n.) 1. தலைப்பாகை; turban. 2. மேற்துண்டு; upper cloth, fine shawl.

*[**U.** rūmāl > த. உருமால்.]*



**உருமாலை** *urumālai,* பெ.(n.) **உருமால்** பார்க்க; see *urumāl.*

*[**U.** rūmāl > த. உருமால் > உருமாலை.]*

**உருமிச்சோம்பு** *urumi-c-cōmbu,* பெ.(n.) ஒரு வகைச் சோம்பு; a kind of sweet fennel seed.

**உருமியம்** *urumiyam,* பெ.(n.) பெருச்சாளி; bandicoot.



**உருரசம்** *uru-rašam,* பெ.(n.) இதளியம் (பாதரசம்) (மூ.அ.); mercury, quick silver.

*[**Skt.** uru+rašam > த. உருரசம்.]*

**உருவசி** *uruvaši,* பெ.(n.) ஊர்வசி, ஆடற்றிறத்து அரமகள்; *ūruvaši,* a nymph, celebrated for her superior skill in dancing. *"உருவசி யென்னும் பேரா னொப்பிலா வழகு வாய்ந்த திருநிகர் மங்கை" (மச்சபு. அகத்தியர்பு. 17).*

*[**Skt.** urvasi > த. உருவசி.]*

**உரூட்சம்** *urūṭcam,* பெ.(n.) மொந்தன் வாழைக் கிழங்கு (தைலவ. தைல. 35); tuber of a species of plantain tree.

*[**Skt.** rūksā > த. உரூட்சம்.]*

**உரூடி** *urūḍi,* பெ.(n.) 1. இடுகுறி; word used in its conventional sense, arbitrary name. 2. செய்யுஞ் செயல் கண்டு காரணத்தை உறுதிப் படுத்துதல் (நிச்சயிக்கை); inference of the cause from the effect. *"ஒலிகெழு முரூடியானும்" (ஞானா. 15).*

*[**Skt.** rūḍhi > த. உரூடி.]*

**உரூப்பியம்** *urūppiyam,* பெ.(n.) 1. பொன்; gold. 2. வெள்ளிக்காசு (நாணயம்); silver coin, rupee. 3. அழகு (வின்.); that which is handsome, beautiful. 4. வெள்ளை; white.

*[Skt. rūpya > த. உரூப்பியம்.]*

**உரூபகத்தாளம்** *urūbaga-t-tāḷam,* பெ.(n.) தாள மேழனுள் ஒன்று (ரூபகதாளம்) (பரத. தாள. 5, உரை); a variety of time-measure, one of the seven *tāḷam.*

துருவதாளம், அடதாளம், ஏகதாளம். திரிபுடைதாளம். ரூபகதாளம், சம்பைதாளம், மட்டியதாளம் என்பன எழுவகைத் தாளங்கள்.

*[உரூபக(ம்) + தாளம்]*

*[உரு → உருவு → உருவகம் → Skt. rūpaka > த. உரூபகம் (ரூபக). தாள் → தாளம்.]*

**உரூபகம்** *urūbagam,* பெ.(n.) 1. உருவகம்; metaphor. 2. **உரூபகத்தாளம்** பார்க்க (பரத. தா. 5); see *urūbaga-t-tāḷam.*

*[உரு → உருவு → உருவகம் → Skt. rūpaka > த. உரூபகம்.]*

**உரூபகாரப்படுத்து-தல்** *urūpa-kāra-p-paḍuttu-,* 5 செ.குன்றாவி.(v.t.) மெய்ப் பித்தல் (யாழ்.அக.); to prove, demonstrate.

*[உரூபகாரம் + படுத்து-,]*

*[Skt. rūpa+kāra > த. உரூபகாரம். படு → படுத்து-,]*

**உரூபகாரம்** *urūba-kāram,* பெ.(n.) சான்று (அத்தாட்சி) (யாழ்.அக.); proof, demonstration.

*[Skt. rūpakāra > த. உரூபகாரம்.]*

**உரூபம்** *urūbam,* பெ.(n.) உருவம் (மணிமே. 6, 177); form, shape.

உரு = தோற்றம், வடிவம், உடல், படிமை, தெய்வச்சிலை. ஓவியம், ஓவிய வேலையான பூத்தொழில், வடிவுள்ள தனிப்பொருள். உரு → உருவு → உருவம். (மு.தா.37).

உருவம் > **Skt.** *rūpa* > த. உரூபம். தமிழில் உருக்கொள்ளுதல் என்னும் வினையிலிருந்து வளர்ந்த வடிவமாக உருவம் (உருவு போன்றன) இருப்பதும் வடமொழியில் *rūpayati* என்று பெயரிலிருந்து வினை உருவாகியிருப்பதும் உருவம் என்னும் சொல் தமிழில் இயல்பாய் வளர்ந்து வந்துள்ளமையைக் காட்டுகின்றன.

**உரூபா** *urūbā,* பெ.(n.) பணம்; money. *'எனக்கு பத்து உரூபா வேண்டும்'.*

*[உருவா > Skt. rūpā > த. ரூபா → உரூபா.]*

**உரூபா-த்தல்** *urūbi-.* 11 செ.குன்றாவி.(v.t.) உறுதிப்படுத்துதல் (ருஜுப்படுத்தல்); to prove.

*[Skt. rūpa > த. உரூபி-,]*

**உரூபிகரம்** *urūbigaram,* பெ.(n.) திருவுருவேற்கை (யாழ்.அக.); visible. manifestation, appearance, as of a deity.

*[த. உருவம் > Skt. rūpi+kara > ரூபிகரம் > உருபீகரம்.]*

**உரூபிகரி[1]-த்தல்** *urūbi-kari-,* 11 செ.குன்றாவி.(v.t.) நிறுவுதல், மெய்ப்பித்தல் (உரூபித்தல்); to prove.

*[Skt. rūpi-kar > த. உரூபிகரி-,]*

**உரூபிகரி[2]-த்தல்** *urūbi-kari-,* 11 செ.கு.வி.(v.i.) கடவுளாகத் தோற்றந் தருதல் (யாழ்.அக.); to appear, as a deity, to become manifest, asume a shape.

*[Skt. rūpi-kar > த. உரூபிகரி-,]*

**உரூபிகை** *urūbigai,* பெ.(n.) வெள்ளெருக்கு (சங்.அக.); white madder.

**உரொக்கம்** *urokkam,* பெ.(n.) அணியமாக (தயாராக) விருக்கும் பணம் (யாழ்.); cash, ready money.

*[U. rōk > த. ரொக்கம் > உரொக்கம்]*

**உரொட்டி** *uroṭṭi,* பெ.(n.) கோதுமையாற் செய்த அடை; bread, an ariticle of food prepared by backing wheat flour.

**த.வ. அடை.**

*[U. rōṭi > த. ரொட்டி → உரொட்டி.]*

**உரோ–தல்** *urō-,* 8 செ.கு.வி.(v.i.) அழுதல்; to cry, to weep.

**உரோகக்கினம்** *urōga-k-kiṉam,* பெ.(n.) **உரோகக்கினம்** பார்க்க; see *urōga-k-kiṉam.*

**உரோகககக்கினம்** *urōga-k-kiṉam,* பெ.(n.) நோய் தீர்க்கும் மருந்து; medicine or any substance that cures diseases.

**உரோககரம்** *urōgakaram,* பெ.(n.) நோய்களைக் கண்டித்தல்; the art of healing diseases, therapeuties.

**உரோககரி** *urōgakari,* பெ.(n.) நோய்களைக் கண்டிக்கும் மருந்து; therapeutic agent.

**உரோகசஞ்சீவி** *urōga-sañjīvi,* பெ.(n.) பெரும் ஊதை (மகாவாத) நோய்கள், இசிவுக் காய்ச்சல் (சன்னி பாத சுரம்) கொடி எலும்புருக்கி (காசம்) முதலிய நோய்களைத் தீர்த்து உயிர்தரும் ஒருவகை எண்ணெய் (தைலம்); a medicated oil capable of restoring life by rooting out all grave diseases such as rheumatism, typhoid fever, lung diseases etc., from the system.

த.வ. நோயகற்றி.

**உரோகசாந்தகன்** *urōga-šandagaṉ,* பெ.(n.) 1. நோயை மட்டு (சாந்த)ப் படுத்துபவன்; one who alleviates pain and cures diseases. 2. மருத்துவன்; a doctor.

**உரோகசிரோட்டம்** *urōga-cirōṭṭam,* பெ.(n.) காய்ச்சல்; fever as the principal one of all disease.

**உரோகணி** *urōgaṇi,* பெ.(n.) 1. **உரோகிணி** பார்க்க; see *urōgiṇi.* 2. ஒருவகை (அரோகிணி)க்கடுக்காய் (பாலவா. 171); a kind of chebulic myrobalan.

*[Skt. rōhiṇi > த. உரோகணி.]*

**உரோகத்தன்** *urōgattaṉ,* பெ.(n.) நோயாளி; a sickly man, a patient.

**உரோகதம்** *urōgadam,* பெ.(n.) மார்பு வலி; pain in the chest.

**உரோகதி** *urōgadi,* பெ.(n.) நாய் (யாழ்.அக.); dog.

**உரோகநிதானம்** *urōganidāṉam,* பெ.(n.) 1. நோயை ஆராய்தல்; diagnosis of diseases by their distinctive marks or symptoms. 2. நோயின் கூறுபாடுகளையும், அதன் காரணம், குறி முதலியவற்றையும் கூறும் குண நூல் (வாகடம்); a science relating to the nature of diseases and the changes caused by them - pathology.

**உரோகநீருறை** *urōga-nīruṟai,* பெ.(n.) பிணி நீர்ப்பை; a sac containing a liquid or a semi-solid-cyst.

*[உரோக + நீருறை.]*

*[Skt. rōga > த. ரோக > உரோகம்.]*

**உரோகராசம்** *urōga-rāšam,* பெ.(n.) நோய்களுக்கரசன், எலும்புருக்கி நோய் (சயரோகம்); the king of diseases namely consumption.

*[Skt. rōga+rāja > த. ரோகராசன் > ரோகராசம்.]*

*[த. அரசன் > Skt. rāja > த. ராச.]*

**உரோகம்**[1] *urōgam,* பெ.(n.) நோய் (பிங்.); disease.

*[Skt. rōga > த. ரோகம் > உரோகம்.]*

**உரோகம்**[2] *urōgam,* பெ.(n.) பூவரும்பு; bud.

**உரோகாதம்** *urōgādam,* பெ.(n.) மார் துடிப்பு; palpitation of the heart.

**உரோகி** *urōgi,* பெ.(n.) 1. நோயாளி; diseased person. 2. செம்மரம்; red wood.

*[Skt. rōhin > த. ரோகி > உரோகி.]*

**உரோகிகாரி** *urōgikāri,* பெ.(n.) 1. நோய்களைத் தீர்ப்பவன்; one who cures diseases. 2. மருத்துவன்; physician, doctor.

[உரோகி + காரி.]

[Skt. rōhi > த. உரோகி.]

**உரோகிடம்** *urōgidam,* பெ.(n.) காவட்டம் புல் (நாநார்த்த.); citronella grass.

[Skt. rōhisa > த. உரோகிடம்.]

**உரோகிணி**[1] *urōgiṇi,* பெ.(n.) 1. ஒரு விண்மீன் (நட்சத்திரம்) (திவா.); the 4th naksatra, hyades, part of Taurus. 2. பலராமன் தாய் (பாகவத. 1,1,36); one of the wives of Vasudēva and the mother of Balarāma. 3. ஒன்பது அகவை நிறைபெதும்பை (வின்.); girl of nine years. 4. கடுகுரோகிணி; purgative drug called christmas rose. 5. பீதரோகிணி (மலை.); stinking hellebore. 6. கடுக்காய்; Indian gall-nut or chebulic myrobalan. 7. ஓமை; mango tree. 8. சிறுகாஞ்சொறி; small climbing nettle.

[Skt. rōhiṇi > த. உரோகிணி.]

**உரோகிணி**[2] *urōgiṇi,* பெ.(n.) பெருங்குமிழ் (நாநார்த்த.); coomteak.

[Skt. rōhiṇi > த. உரோகிணி.]

**உரோகிணிதனயன்** *urōgiṇi-taṉayaṉ,* பெ.(n.) பலராமன் (பிங்.): Balarāma, the son of Rohiṇi.

[Skt. rōhiṇitanaya > த. உரோகிணிதனயன்.]

**உரோகிதப்பட்டை** *urōgida-p-paṭṭai,* பெ.(n.) வெளிப்புறம் சிறிது கருப்பாயும், உட்புறம் சிறிது சிவப்பாயும் மருந்துக்குதவுவதுமான துவர்ப்புடைச் செம்மரப்பட்டை; the bark of red wood, is used as a medicinal astringment, is of a black brownish colour externally and the substance inside, is of a deep reddish brown colour.

[உரோகிதம் + பட்டை.]

[Skt. rōhita > த. உரோகிதம்.]

**உரோகிதம்** *urōgidam,* பெ.(n.) (நாநார்த்த.) 1. செங்கயல்; red carp. 2. குங்குமம்; saffron. 3. சிவப்பு; redness.

[Skt. rōhita > த. உரோகிதம்.]

**உரோகிதாசுவம்** *urōgidāśuvam,* பெ.(n.) நெருப்பு; fire.

**உரோகிநேயம்** *urōginēyam,* பெ.(n.) கற்றுளசி; stone-basil.

**உரோகிரகம்** *urōgiragam,* பெ.(n.) மார்புப் பிடிப்பு; chest seizure, inflammation of the pleura.

**உரோகீசம்** *urōkīsam,* பெ.(n.) கலைமான்; the male red deer, stag.



**உரோங்கல்** *urōṅgal,* பெ.(n.) உலக்கை (பிங்.); pestle.

த.வ. இடிமரம்.

தெ. ரோகலி.

**உரோசம்** *urōśam,* பெ.(n.) 1. சினம்; anger, fury. 2. மட்டு மீறிய கூருணர்வு மானம்; keen sensitiveness.

[Skt. rōsa > த. உரோசம்.]

**உரோசலரோகம்** *urōśala-rōgam,* பெ.(n.) நெஞ்சறைக்குள் நீர் சேர்வதாலுண் டாகுமோர் வகைக் குத்தல் நோய்; the presence of an effused fluid in the pleural cavity due to venous obstruction and it is marked by pricking pain. hydrothorax.

**உரோசனக்களிம்பு** *urōśaṉa-k-kaḷimbu,* பெ.(n.) உரோசனம் என்னும் ஒரு வகைப் பிசினைக் கொண்டு செய்யுமோர் களிம்பு; a medicated preparation with resin as an ingredient, applied externally.

[உரோசனம் + களிம்பு.]

[**Skt.** *rōcana* > த. ரோசனம் > உரோசனம்.]

**உரோசனகம்** *urōšaṉagam,* பெ.(n.) எலுமிச்சை; lime.

**உரோசனம்**[1] *urōšaṉam,* பெ.(n.) **உரோசனை** பார்க்க; see *urōšaṉai.*

[**Skt.** *rōcana* > த. உரோசனம்.]

**உரோசனம்**[2] *urōšaṉam,* பெ.(n.) 1. முள்ளிலவு (மலை.); thorny cotton tree. 2. ஒரு வகைப் பிசின்; a resin.

[**Skt.** *rōcana* > த. உரோசனம்.]

**உரோசனமூங்கில்** *urōšaṉa-mūṅgil,* பெ.(n.) கல் மூங்கில்; hard bamboo.

**உரோசனி**[1] *urōšaṉi,* பெ.(n.) 1. செந்தாமரை (மலை.); red lotus. 2. ஆன்மணத்தி (கோரோசனை); bezoar. 3. கடுகு (கருப்பு); black mustard. 4. சிறு காஞ்சொறி; small climbing nettle. 5. மேற்பூச்சு மருந்தாகப் பயன்படும் கற்பாசி; licken growing upon rocks which is used in medicine as a liniment.

[**Skt.** *rōcani* > த. உரோசனி.]

**உரோசனி**[2] *urōšaṉi,* பெ.(n.) **உரோசனை**[2] (மலை.) பார்க்க; see *urōšaṉai.*

**உரோசனியம்** *urōšaṉiyam,* பெ.(n.) கடுகு; mustard.

**உரோசனை**[1] *urōšaṉai,* பெ.(n.) 1. ஆன்மணத்தி (கோரோசனை); a billiary calculus in a cow-bezoor. *"உரோசனை நிறத்த பொற்பரியே" (திருவிளை. நரிபரி. 109).* 2. ஒரு வகைப் பித்தம்; bile, yellow in colour resembling bezoar. 3. மூங்கிலுப்பு; bamboo salt. 4. மகிடரோசனை முதலிய மணத்தி (ரோசனை); concretions in general found in the intestines of some animals especially ruminants like ox etc.

[**Skt.** *rōcanā* > த. உரோசனை.]

**உரோசனை**[2] *urōšaṉai,* பெ.(n.) கடுகு (வின்.); mustard.

**உரோசனை**[3] *urōšaṉai,* பெ.(n.) செங்கழுநீர் (நாநார்த்த.); red water lily.

[**Skt.** *rōcana* > த. உரோசனை.]

**உரோசா** *urōšā,* பெ.(n.) முளரி (பூச்செடி); rose.

[**L.** *rosa* > த. உரோசா.]

**உரோசி-த்தல்** *urōši-,* 11 செ.கு.வி.(v.i.) 1. நாணுதல்; to exhibit a feeling of shyness of delicacy. 2. சுணை கொள்ளுதல்; to be spirited, sensitive to indignity.

[**Skt.** *rōsa* > த. உரோசி-,]

**உரோசி** *urōši,* பெ.(n.) பொழுது வணங்கி (சூரிய காந்தி) மலர்; sun flower.

[**Skt.** *rōci* > த. உரோசி.]



**உரோசிகாரம்** *urōšikāram,* பெ.(n.) பேய்ப்புல்; a poisonous red grass.

**உரோசினி** *urōšiṉi,* பெ.(n.) சிறுகாஞ்சொறி; small climbing nettle.

**உரோடணம்** *urōḍaṇam,* பெ.(n.) 1. இதளியம் (நாநார்த்த.); quick silver. 2. உவர்நிலம்; saline tract.

[**Skt.** *rōṣāṇa* > த. உரோடணம்.]

**உரோடம்** *urōḍam,* பெ.(n.) சினம்; anger. *"உரோடமொன்று மிலோங்கண்டாய்" (திவ். நாய்ச்.2,6).*

[**Skt.** *rōṣa* > த. உரோடம்.]

**உரோணி** *urōṇi,* பெ.(n.) 1. **உரோகிணி** பார்க்க; see *urōgiṇi.* *"வெண்மதி...... உரோணியோ டொளித்த தொத்ததே" (சீவக. 198).*

2. தொண்டை நோய் வகை (திருமந். 263); inflammation of the throat.

*[Skt. rōhiṇi > த. உரோணி.]*

**உரோதகம்** *urōdagam,* பெ.(n.) **உரோசலரோகம்** பார்க்க; see *urōsala-rōgam.*

*[Skt. rōdhaka > த. உரோதகம்.]*

**உரோத்தபத்திரம்** *urōtta-pattiram,* பெ.(n.) நஞ்சுப்பாலை; a poisonous milky plant - a kind of mimusops.

**உரோதம்** *urōdam,* பெ.(n.) 1. நீர்க்கரை; bank, shore. *"சீதரோதக் குருதித் திரையொரீஇ" (கம்பரா. இராவணன் சோ. 11).* 2. அணை; dam.

*[Skt. rōdha > த. உரோதம்.]*

**உரோதனம்**[1] *urōdaṉam,* பெ.(n.) அழுகை (திவா.); weeping, crying, lamentation.

*[Skt. rōdana > த. உரோதனம்.]*

**உரோதனம்**[2] *urōdaṉam,* பெ.(n.) தடை; obstruction.

*[Skt. rōdhana > த. உரோதனம்.]*

**உரோதனி** *urōdaṉi,* பெ.(n.) சிறுகாஞ்சொறி (மலை.); small climbing nettle.

*[Skt. rōdaṉi > த. உரோதனி.]*

**உரோதனை** *urōdaṉai,* பெ.(n.) 1. தொந்தரை; trouble, annoyance. 2. **உரோதனம்** பார்க்க; see *urōdaṉam.*

*[Skt. rōdana > த. உரோதனை.]*

**உரோதி-த்தல்** *urōdi-,* 11 செ.கு.வி.(v.i.) அழுதல்; to cry, bewail. *"உயிர்களெவற் றினையும் .......... உரோதிப்பிப்பாய்" (திருக்காளத். பு. 5, 48).*

*[Skt. rud > த. உரோதி-,]*

ru என்னும் மூலத்திலிருந்து பிறந்த rud என்னும் வடசொல் அழுதல், அழுகை என்று முறையே வினை, பெயர் ஆகிய இருவகையிலும் செயல்படுகிறது (மா.வி.).

**உரோபந்தனம்** *urōbandaṉam,* பெ.(n.) மார்புக்கட்டு; a bandage round the chest.

உர் → உறு = மிக்க உறுதி. உர் → உரம் = வலிமை, நிலத்திற்கு அல்லது பயிருக்கு வலிமைதரும் எரு. உடம்பில் வலிய உறுப்பான மார்பு.

*[த. உரம் > Skt. uras, uro > த. உரோ.]*

**உரோபந்திகை** *urōbandigai,* பெ.(n.) காசித்தும்பை; balsam flower, snapweed.

**உரோபம்** *urōbam,* பெ.(n.) அம்பு (நாநார்த்த.); arrow.

*[Skt. rōpa > த. உரோபம்.]*

rub என்னும் மூலத்திலிருந்து பிறந்த rōpa என்னும் சொல்லுக்கு மேலெழுப்பும் செயற்பாடு, நிலைபெறச் செய்தல், நடுதல், பொருத்துதல் என்னும் முதற்பொருள்களும் அம்பு, பிளவு, துளை முதலிய வழிப் பொருள்களும் உள்ளன (மா.வி.). இவற்றுள் அம்பு என்னும் பொருள் மட்டும் தமிழில் வழக்கூன்றியுள்ளது.

**உரோமக்கட்டி** *urōma-k-kaṭṭi,* பெ.(n.) வயிற்றினில் மயிர் போய்த் தங்குவதா லேற்படும் கட்டி; a concretion in the stomach due to the accumulation of hair - trichobezoar.

*[உரோமம் + கட்டி.]*

*[Skt. urōman > த. உரோமம்.]*

கள் → கட்டி.

**உரோமக்கட்டு** *urōma-k-kaṭṭu,* பெ.(n.) புறமயிரடர்த்தி (வின்.); hair thick-set on the body.

**த.வ. நிறைமயிர்.**

*[உரோமம் + கட்டு.]*

*[Skt. rōman > த. உரோமம்.]*

கள் → கட்டு = போர்க்களம், ஒரு கொள்கை பற்றிய கூட்டம், மரமடர்ந்த காடு. கள் → கண → கணம் = கூட்டம், படைப்பகுதி. கள் → கட்டு. கட்டுதல் = சேர்த்தல், பிணித்தல், திரள்தல்.

**உரோமக்கழலை** *urōma-k-kaḻalai,* பெ.(n.) மயிர்க் கால்களுக்கேற்படும் கழலைக் கட்டி; a tumour of hair - follicles.

*[உரோமம் + கழலை.]*

*[Skt. urōman > த. உரோமம்.]*

**உரோமக்கால்** *urōma-k-kāl,* பெ.(n.) மயிர்த் துளை; hair follicles.

[உரோமம் + கால்.]

[**Skt.** *rōman* > **த.** உரோமம்.]

**உரோமக்கால்ரோகம்** *urōma-k-kāl-rōgam,* பெ.(n.) மயிர்க்கால்களுக் குண்டாகும் நோய்; disease of the hair follicles.

[உரோகம் + கால் + ரோகம்.]

[**Skt.** *rōman* > **த.** உரோமம். **Skt.** *rōha* > **த.** ரோகம்.]

**உரோமக்கிழங்கு** *urōma-k-kilaṅgu,* பெ.(n.) வசம்பு; sweet flag.

[உரோமம் + கிழங்கு.]

[**Skt.** *rōman* > **த.** உரோமம்.]

**உரோமக்குணக்கு** *urōma-k-kuṇakku,* பெ.(n.) உள் வளைந்த மயிர்; a condition of ingrowing hairs about an orifice or of ingrowing eye lashes trichiais.

[உரோமம் + குணக்கு.]

[**Skt.** *rōman* > **த.** உரோமம்.]

குள் → குண → குணகு → குணக்கு.

**உரோமக்குறடு** *urōma-k-kuṟaḍu,* பெ.(n.) மயிரைப் பிடுங்குவதற்காகப் பயன்படுத்தும் குறடு அல்லது சாமணம்; tweezers for pulling out hairs - tricholabis.

[உரோமம் + குறடு.]

[**Skt.** *urōman* > **த.** உரோமம்.]



**உரோமக்கூச்சம்** *urōma-k-kūccam,* பெ.(n.) மயிரைத் தொடவுண்டாம் கூச்சம்; the sense which one perceives when the hairs of the skin are touched, hair sensibility, *Trichoesthesia.*

[உரோமம் + கூச்சம்.]

[**Skt.** *rōman* > **த.** உரோமம்.]

கூசு → கூச்சம்.

[**த.** கூச்சம் > **Skt.** *guccha.*]

**உரோமகூபம்** *urōma-kūbam,* பெ.(n.) மயிர்ச்சிலிர்ப்பு; horripilation, the standing on end of the hair through emotion. *"உகந்தெதிர் விம்மியுரோம கூபங்களாய்" (திவ். பெரியாழ். 5, 1, 7).*

[**Skt.** *rōman+kūpa* > **த.** உரோமகூபம்.]

**உரோமக்கேடு** *urōma-k-kēḍu,* பெ.(n.) மயிர்க் கால்களுக்குக் கெடுதியேற்பட்டு மயிர் முறிதல்; an atrophied condition of the hair-bulbs, leading to brittleness of hair - trichatrophia.

[உரோமம் + கேடு.]

[**Skt.** *rōman* > **த.** உரோமம்.]

கெடு → கேடு.

**உரோமக்கொட்டு** *urōma-k-koṭṭu,* பெ.(n.) தலைமயிர் உதிர்தல்; failing of the hair through affections of the scalp or through some enfeebled condition of health, rapid loss of hair, *Trichorrca.*

[உரோமம் + கொட்டு.]

[**Skt.** *rōman* > **த.** உரோமம்.]

**உரோமகக்கவணம்** *urōmaga-k-kavaṇam,* பெ.(n.) மயிர்க்கூச்சம்; a sensation in which hairs stand on end.

[உரோமம் + கவணம்.]

[**Skt.** *rōman* > **த.** உரோமன்.]

**உரோமகம்** *urōmagam,* பெ.(n.) **1.** இராச புதனத்தில், சாம்பார் ஏரியில் விளையும் சாம்பரியென்னும் ஓர் உயர்தரமான வுப்பு; the best and the purest of evaporated salts,

obtained from sambhar lake in Rajputana. 2. நால்வகைக் காந்தகற்களுளொன்று; one of the four kinds of load stones.

**உரோமகி** *urōmagi,* பெ.(n.) முதியார் கூந்தல்; a plant (un identified) c.f. Drowpady's hair.

த.வ. அம்மையார் கூந்தல்.

**உரோமகுரு** *urōmakuru,* பெ.(n.) **உரோமகுருபீடம்** பார்க்க; see *urōma-kuru-pīḍam.*

**உரோமகுருபீடம்** *urōmakuru-pīḍam,* பெ.(n.) பிண்டம்; foetus in the womb.

**உரோமங்கொள்ளல்** *urōmaṅ-koḷḷal,* பெ.(n.) 1. மயிருண்ணல்; the practice of eating hair, hair eating - trichophagy. 2. மயிர் வளர்தல்: growing of hair.

*[உரோமம் + கொள்ளல்.] 'அல்' தொ.பெ.ஈறு.*

*[Skt. rōman > த. உரோமம்]*

கொள் → கொள்ளல்.

**உரோமச்சங்கு** *urōma-c-caṅgu,* பெ.(n.) முட்சங்கு; chank or conch shell with thorn like points.

*[உரோமம் + சங்கு.]*

*[Skt. rōman > த. உரோமம்]*

*[த. சங்கு > Skt. saṅkh ]*



**உரோமச்சல்லடை** *urōma-c-callaḍai,* பெ.(n.) மயிர்த்துளை; pores of the skin through which hairs shoot out.

*[உரோமம் + சல்லடை]*

*[Skt. rōma > த. உரோமம்]*

**உரோமச்சிலிர்ப்பு** *urōma-c-cilirppu,* பெ.(n.) மயிர்க்கூச்சு; a sensation in which hairs stand on end.

*[உரோமம் + சிலிர்ப்பு]*

*[Skt. rōman > த. உரோமம்]*

சிலிர் → சிலிர்ப்பு

**உரோமச்சுருளி** *urōma-c-curuḷi,* பெ.(n.) மாமூலிகைகள் இருபத்து மூன்றில் ஒன்று; an unknown tree said to be rarely found on mountain tree.

**உரோமச்சுழி** *urōma-c-cuḻi,* பெ.(n.) மயிர்ச்சுழி, நன்மை, கெடுதி, ஆகூழ், போகூழ் போன்றவற்றைக் குறிக்கப் பயன்படுத்தும் மனிதர், விலங்கு, பறவை போன்றவற்றின் உடம்புகளின் சில பாகங்களில் காணப்படும் வளையமிட்டிருக்கும் மயிர்; a spiral growth of hair found at a particular spot on the surface of the body of both the human and animal kingdoms and by examining it good or evil, fortune or misfortune is said to be predicted.

த.வ. மயிர்ச்சுழி.

*[உரோமம் + சுழி.]*

*[Skt. rōman > த. உரோமம்.]*

**உரோமச்செம்பு** *urōma-c-cembu,* பெ.(n.) மயிரிலிருந்து எடுக்கும் செம்பு; copper extracted from hair.

*[உரோமம் + செம்பு.]*

*[Skt. rōman > த. உரோமம்.]*

சும் → செம் → செம்பு.

**உரோமச்சோளம்** *urōma-c-cōḷam,* பெ.(n.) வாலுடைய சோளவகை; a kind of American corn, the ears of which have hair-like projections.

*[உரோமம் + சோளம்.]*

*[Skt. rōma > த. உரோமம்.]*

**உரோமசக்கிரி** *urōma-śakkiri,* பெ.(n.) சவுக்கு மரம்; casuarina tree.

**உரோமசங்காரி** *urōma-śaṅgāri,* பெ.(n.) உடற்புற மயிரைப் போக்குவதற்காகப் பயன்படுத்தும் மருந்து; any substance or preparation used in removing the superfluous hair on the body - hair destroyer.

[**Skt.** *rōmasaṅgāri* > **த.** *உரோமசங்காரி.*]

**உரோமசத்தி** *urōma-śatti,* பெ.(n.) 1. கெந்த மாஞ்சள்; round zedoary - curcuma aromatica which strenghens the hair. 2. அரைக்கீரை; an edible greens very commonly eaten and considered to be a medicinal food.

**உரோமசயரோகம்** *urōmaśayarōgam,* பெ.(n.) தலைவழுக்கை; lack or loss of hair baldness - alopecia.

**உரோமசன்** *urōmaśaṉ,* பெ.(n.) **உரோமமுனி** பார்க்க; see *urōma-muṉi.*

**உரோமசாலியான்** *urōma-śāliyāṉ,* பெ.(n.) கக்கரி; cucumber.

**உரோமஞ்சிலிர்-த்தல்** *urōmañ-cilir-,* 4 செ.கு.வி.(v.i.) மயிர்க் கூச்செறிதல்; to bristle, as the hairs of the body.

[*உரோமம் + சிலிர்-,*]

[**Skt.** *rōma* > **த.** *உரோமம்.*]

**உரோமண்டலி** *urō-maṇḍali,* பெ.(n.) நாட்டியமுத்திரை (நிருத்தக்கை) முப்பதனு ளொன்று (சிலப். பக். 81); (Nāṭya.) one of 30 *nirutta-k-kai.*

[*உரோ + மண்டலி.*]

[**Skt.** *uras* > **த.** *உரோ.*]

முல் → முள் → முடம் = வளைவு. முடம் → முடங்கு. முடங்குதல் = வளைதல். முடங்கு → மடங்கு. முள் → முண்டு → மண்டு. மண்டுதல் = வளைதல். மண்டு → மண்டலம் = வட்டம், நாட்டுப்பகுதி. மண்டலம் → மண்டலி = வட்டமான பொறியுள்ள பாம்பு, வட்டமான களவன், கூத்தின் மண்டிலநிலை.

**உரோமத்தினிடை** *urōma-t-tiṉiḍai,* பெ.(n.) மயிரினிடைத் துளை; the opening or the cavity in the hair.

[*உரோம + அத்து + இன் + இடை.*]

[**Skt.** *rōman* > **த.** *உரோமம்.*]

'அத்து' சாரியை.

**உரோமத்துவாரம்** *urōma-t-tuvāram,* பெ.(n.) மயிர்க்கால்; pores of the skin through which the hairs shoot out.

[**Skt.** *rōman +dvāra>* **த.** *உரோமத்துவாரம்.*]

**உரோமத்தைலம்** *urōma-t-tailam,* பெ.(n.) 1. மயிரினின்று இறக்கிய தைலம்; oil extracted from the hair. 2. மயிருக்கிடும் தைலம்; hair-oil for the growth of hair.

[**Skt.** *rōman+taila* > **த.** *உரோமத்தைலம்.*]

**உரோமதரு** *urōma-taru,* பெ.(n.) **உரோமச்சுருளி** பார்க்க; see *urōma-c-curuḷi.*

[**Skt.** *urōmataru* > **த.** *உரோமதரு.*]

**உரோமநாக்கு** *urōma-nākku,* பெ.(n.) நாக்கில் முள் பாய்தல், நாக்குச் சொரசொரப்பு; hairy state of the tongue due to a thickening of the papillac - trichoglossia.

[*உரோமம் + நாக்கு.*]

[**Skt.** *rōman* > **த.** *உரோமம்.*]

**உரோமநிவாரணி** *urōma-nivāraṇi,* பெ.(n.) மயிர் நீக்குந் தன்மையுள்ள பொருள்; any application to remove the hair without injuring the skin and without smarting pain and irritation.

[**Skt.** *rōmanivāraṇi* > **த.** *உரோமநிவாரணி.*]

**உரோமநீர்** *urōma-nīr,* பெ.(n.) 1. வேர்வை நீர்; perspired water; water secrected from the hair folicles - sweat. 2. கெட்ட நீர்; dirty water.

**த.வ.** வியர்வை.

*[உரோமம் + நீர்.]*

***[Skt.** rōma > **த.** உரோமம்.]*

**உரோமப்பட்டு** *urōma-p-paṭṭu,* பெ.(n.) எலிமயிர் முதலியவற்றாற் செய்த பட்டு; cloth woven with fine hair. *"உரோமப் பட்டுடுத்து" (சீவக. 2425).*

*[உரோமம் + பட்டு.]*

***[Skt.** rōman > **த.** உரோமம்.]*

பட்டம் = பட்டையான துணி, பாய். பட்டம் → படம் = துணி, சீலை. பட்டம் → பட்டு.

**உரோமப்பரப்பு** *urōma-p-parappu,* பெ.(n.) மயிரடர்த்தி; thick or close hair.

*[உரோமம் + பரப்பு.]*

***[Skt.** urōman > **த.** உரோமம்.]*

**உரோமப்பரிட்சை** *urōma-p-pariṭcai,* பெ.(n.) மயிராய்வு (சோதித்தல்); examination of the hair, *Trichoscopy.*

***[Skt.** urōman-parikṣa > **த.** உரோமப் பரிட்சை.]*

**உரோமப்பிளப்பு** *urōma-p-piḷappu,* பெ.(n.) **உரோமவெடிப்பு** பார்க்க; see *urōma-veḍippu.*

*[உரோமம் + பிளப்பு.]*

***[Skt.** rōma > **த.** உரோமம்.]*

**உரோமப்புளகம்** *urōma-p-puḷagam,* பெ.(n.) மயிர்ச் சிலிர்ப்பு; errection of the hairs of the body caused by emotion, horripilation.

***[Skt.** rōman+puḷagam > **த.** உரோமப் புளகம்.]*

**உரோமப்புளகிதம்** *urōma-p-puḷagidam,* பெ.(n.) **உரோமபுளகம்** பார்க்க; see *urōma-puḷagam.*

***[Skt.** rōma-pulaka > **த.** உரோமப்புளகம் > உரோமப்புளகிதம்.]*

**உரோமப்பைத்தியம்** *urōma-p-paittiyam,* பெ.(n.) கோட்டி (பைத்தியம்) அல்லது இசிவுற்ற (சன்னி) காலத்தில் தன் மயிரைப் பறித்துக் கொள்ளுதல்; pulling out of the hair by delirious or insane persons - trichomania.

*[உரோமம் + பைத்தியம்.]*

***[Skt.** rōman > **த.** உரோமம்.]*

பிதற்று → பேத்து → பித்து = பிதற்று நிலை. அறிவு மயக்கம். பித்து → பித்தம். **த.** பித்த > **Skt.** paitya.

**உரோமப்பொடிப்பு** *urōma-p-poḍippu,* பெ.(n.) மயிர்க்கூச்செறிவு (உரோமபுளகம்); raising of the hair of the body, horripilation.

*[உரோமம் + பொடிப்பு.]*

***[Skt.** rōman > **த.** உரோமம்.]*

பொடி → பொடிப்பு.

**உரோமப்போசணம்** *urōma-p-pōsaṇam,* பெ.(n.) எண்ணெய் முதலியவற்றைத் தடவி மயிரை வளர்த்தல்; applying hair oils to promote development and growth of hair, nutrition for the hair.

***[Skt.** rōman - bhōṣana > **த.** உரோமப்போசணம்.]*

**உரோமபயம்** *urōma-bayam,* பெ.(n.) மயிர் கண்டு அஞ்சவருமோர் நோய்; morbid dread of hair, *Trichophobia.*

***[Skt.** rōman-bhaya > **த.** உரோமபயம்.]*

**உரோமபூமி** *urōmabūmi,* பெ.(n.) உடம்பின் மேற்றோல்; the skin on the surface of the body.

**உரோமம்** *urōmam,* பெ.(n.) **1.** மனிதர், விலங்கு, பறவை ஆகியவற்றின் உடற் புறமயிர் (திவா.); hair on the body of men or animals, down of birds. 2. மயிர்; hair. **3.** மயிர்ப்பரப்பு; thick or close hair. 4. வழலை; an emphemistic name for fuller's earth.

***[Skt.** rōman > **த.** உரோமம்.]*

வடமொழியில் ruh என்னும் மூலத்திலிருந்து வளர்ந்த rōman என்னும் சொற்கு ஆண்கள் உடம்பிலும் விலங்குகளின் உடம்பிலும் வளரும் மயிர் என்னும் பொருளே முதற்கண் தோன்றியுள்ளது. அவ்வகையில் உரோமம் பெரும்பாலும் உடற்பரப்பில் வளரும் சிறு மயிரையே குறிக்கும்.

**உரோமம்சிலும்பெறிதல்** *urōmam-šilumberidal*, பெ.(n.) மயிர்ச்சிலிர்ப்பு; horripilation.

*[உரோமம் + சிலும்பு + எறிதல்.]*

*[**Skt.** rōman > த. உரோமம்.]*

**உரோமமது** *urōmamadu*, பெ.(n.) சீமைச் சாராயம்; foreign liquor formerly exported from Rome.

*[உரோம + மது.முத்து → மத்து → மது = கள், தேன்.]*

*[த. மது > **Skt.** madhu.]*

*[**E.** Rōme > த. உரோமம்.]*

**உரோமமுட்டி** *urōmamutti*, பெ.(n.) புறங்கை நாளி, ஒரு மரவகை; a tree.

**உரோமமுள்ளோன்** *urōmamullōn*, பெ.(n.) உடம்பெல்லாம் மயிருள்ளவன்; hairy man.

*[உரோமம் + உள்ளோன்.]*

*[**Skt.** rōman > த. உரோமம்.]*

உள் → உள்ளோன்.

**உரோமமுறிவு** *urōma-murivu*, பெ.(n.) மயிரின் மென்மை (மிருது)த் தன்மை இழந்து முறிதல்; a condition in which hair becomes brittle and breaks off.

*[உரோமம் + முறிவு.]*

*[**Skt.** rōman > த. உரோமம். முறி → முறிவு.]*

**உரோமமுறைப்பு** *urōma-muraippu*, பெ.(n.) மயிரின் நொய்மை; brittleness of the hair.

*[உரோமம் + முறைப்பு.]*

*[**Skt.** rōman >த.உரோமம். முறை→ முறைப்பு.]*

**உரோமமுனி** *urōma-muni*, பெ.(n.) வாதம், வைத்தியம், யோகம், ஞானம் முதலிய தமிழ் நூல்களைச் செய்த பதினெண் சித்தர்களிலொருவர்; one of the eighteen Siddhars mentioned in the Tamil medical science, who is the author of many works in Tamil on alchemy, medicine and yoga philosophy.

இவருக்கு உடம்பெல்லாம் மயிர் நிறைந்துள்ள தாலிப் பெயர். இவர் இப்பொழுதும் உயிரோடு இருப்பதாகக் கருதப்படுகிறது.

*[**Skt.** rōman > த. உரோமம்.]* முனி = முனிவன். முனி → முனிவன் = உலகப் பற்றைத் துறந்த அறிவன்.

**உரோமர்வேதை** *urōmar-vēdai*, பெ.(n.) மயிலெச்சக் களங்க வேதை; a process in alchemy followed by Roma, in which the excreta of the peacock is used as the chief ingredient.

**உரோமரஞ்சம்** *urōma-rāñjam*, பெ.(n.) மயிர்கூச்சு; thrill of the hair.

**உரோமராசி** *urōma-rāši*, பெ.(n.) 1. மயிரொழுங்கு; the order in which the hair is grown. 2. **உரோமரேகை** பார்க்க; see *urōma-rēgai*.

*[**Skt.** rōmarāši > த. உரோமராசி.]*

**உரோமரிசி** *urōma-risi*, பெ.(n.) **உரோமமுனி** பார்க்க; see *urōma-muni*.

**உரோமரிசிகற்பம்** *urōmarisi-karpam*, பெ.(n.) 1. உரோம முனி (ரிஷி) காய கற்பத்துக்காக வேண்டியுண்ட மயிலெச்சம்; the excreta of the peacock taken in by the Siddha named Roma for the purpose of longevity. 2. அம்பு (நாநார்த்த.); arrow.

**உரோமரிசி** *urōmarisi*, பெ.(n.) **உரோமமுனி** பார்க்க; see *rōmamuni*.

**உரோமரேகை** *urōma-rēgai*, பெ.(n.) மயிரொழுங்கு; line of hair above the navel. *"ஞால மருளும் துரோமரேகை யென்னவே" (சௌந்த. 76).*

*[உரோமம் + ரேகை.]*

*[**Skt.** rōman > த. உரோம.வரி → வரிகை → ரேகை. வரிகை → ரேகை.]*

**உரோமரோகம்** *urōma-rōgam*, பெ.(n.) 1. மயிர்க் கால்களுக்கேற்படும் நோய்; disease of the hair follicles - trichocryptosis. 2. மயிருக்கேற்படும் நோய்; disease

of the hair - trichopathy. 3. பொதுவாக மயிருக்கு உண்டாகும் நோய்; any disease of the hair - trichonosis.

த.வ. மயிர்க்கால்நோய்.

*[Skt. rōma+roha > த. உரோமரோகம்.]*

**உரோமரோசனை** *urōma-rōšaṉai*, பெ.(n.) வயிறு அல்லது குடலுக்குள்ளுண்டாகும் மயிர் உருண்டை; a hair ball or a similar concretion found within the stomach or the intestines - trichobezoar.

**உரோமலம்பம்** *urōma-lambam*, பெ.(n.) வண்டு; beetle.

**உரோமலவணம்** *urōma-lavaṇam*, பெ.(n.) இலகு குணமுள்ள ஒரு பழைய (பூர்வ) வுப்பு; a salt with light qualities in use formerly.

**உரோமவல்லி** *urōmavalli*, பெ.(n.) காக்கணம்; hair creeper - clitoria ternatea.

**உரோமவழற்சி** *urōma-v-aḻaṟci*, பெ.(n.) மயிர்க்காலுக்கேற்படும் கொதிப்பு (தாபிதம்); inflammation of the hair bulbs - trichitis.

*[உரோம் + அழற்சி.]*

*[Skt. rōman > த. உரோமம்.]*

அழல் + சி → அழற்சி.

**உரோமவளர்த்தி** *urōma-vaḷartti*, பெ.(n.) மயிர் மிகுதியாக வளருதல்; abnormal growth of hair - trichosis.

*[உரோம் + வளர்த்தி.]*

*[Skt. rōman > த. உரோமம்.]*

வளர் → வளர்த்தி.

**உரோமவிருட்சம்** *urōma-viruṭcam*, பெ.(n.) **உரோமச்சுருளி** பார்க்க; see *urōma-c-curuḷi*.

*[Skt. rōmaviruksa > த. உரோமவிருட்சம்.]*

**உரோமவிருகம்** *urōma-virugam*, பெ.(n.) கல்லத்தி; stone - fig.

**உரோமவுள்ளம்** *urōma-v-uḷḷam*, பெ.(n.) மயிரைப் போல் மேலே முசுமுசுப்பாயுள்ள நெஞ்சாங்குலை; a hairy appearance upon the heart, hairy heart - trichocardia.

*[உரோம் + உள்ளம்.]*

*[Skt. rōman > த. உரோமம்*

*உள் → உள்ளம்.]*

**உரோமவெடிப்பு** *urōma-veḍippu*, பெ.(n.) 1. மயிர் இரண்டாகப் பிளத்தல்; splitting of the hairs. 2. மயிர் முனை பலவாகப் பிளத்தல்; a hair split at the end in a star like form.

*[உரோம + வெடிப்பு.]*

*[Skt. rōman > த. உரோமம்.*

*வெடி → வெடிப்பு.]*

**உரோமவேங்கை** *urōma-vēṅgai*, பெ.(n.) உதிரவேங்கை; East-Indian kino.

**உரோமவேதை** *urōma-vēdai*, பெ.(n.) தலை மயிரினின்று செம்பெடுத்துப் பிறகு பொன்னாக்கத்திற்குப் பயன்படுத்தும் முறை; a process of extracting copper (pure) from the hair and then using it for transmuting baser metals into gold.

**உரோமன்** *urōmaṉ*, பெ.(n.) உதிரவேங்கை; East-Indian kino.

**உரோமாஞ்சம்** *urōmāñjam*, பெ.(n.) **உரோமப்புளகம்** பார்க்க; see *urōma-p-puḷagam*.

**உரோமாஞ்சிதம்** *urōmāñjidam*, பெ.(n.) **உரோமப்புளகம்** பார்க்க; see *urōma-p-puḷagam*.

*[Skt. rōmāñcita > த. உரோமாஞ்சிதம்.]*

**உரோமாதிக்கம்** *urōmādikkam*, பெ.(n.) அதிகமாகவும், நீளமாகவும் மயிர் வளருதல்; excessive growth of hair, long and luxurious growth of hair.

**உரோமாதீதம்** *urōmātītam*, பெ.(n.) **உரோமாதிக்கம்** பார்க்க; see *urōmādikkam*.

**உரோமாம்பரம்** *urōmāmbaram*, பெ.(n.) கம்பளம்; blanket.

**உரோமாரிசம்** *urōmārišam,* பெ.(n.) **உரோமப்புளகம்** பார்க்க; see *urōma-p-pulagam.*

**உரோமாரிசம்** *urōmārisam,* பெ.(n.) **உரோமப்புளகம்** பார்க்க; see *urōma-p-pulagam.*

**உரோமாவலி** *urōmāvali,* பெ.(n.) **உரோமரேகை** பார்க்க; see *urōmarēgai.*

**உரோமி** *urōmi,* பெ.(n.) மயிர்ச்சிகைப் பூண்டு, ஒரு வகைக் கொடி (மலை.); peacock crest.

*[Skt. rōman > த. உரோமம் → உரோமி.]*

**உரோமிகி** *urōmigi,* பெ.(n.) **உரோமி** பார்க்க; see *urōmi.*

**உரோருகம்** *urōrugam,* பெ.(n.) முலை (யாழ்.அக.); breast.

*[Skt. uro-ruha > த. உரோருகம்.]*

*[த. உரம் > Skt. urō > த. உரோ.]*

**உரோவிபந்தம்** *urōvi-bandam,* பெ.(n.) 1. மார்பில் ஏற்படும் தொல்லை (சங்கடம்); oppressive feeling experienced in the chest. 2. ஈளை (காச) நோய்; asthma.

**உல்பகம்** *ulpagam,* பெ.(n.) முலைப்பால் நீர் குழந்தையைத் தாக்குவதால் குழந்தைகட் குண்டாகுமோர் நோய்; a disease in children arising from the impaired condition of mother's breast milk.

**உல்பம்** *ulpam,* பெ.(n.) கருப்பையில் கருவைக் கவர்ந்துள்ளவோர் பை போன்ற தோல் அல்லது சவ்வு; the membraneous sac covering the foetus in the womb.

**உல்மசு** *ulmašu,* பெ.(n.) பருத்த இலைகளுடையவோர் வகைக் காட்டு மரம்; broad-leaved elm grown in the forests of Europe.

**உல்லங்கனம்** *ullaṅganam,* பெ.(n.) மீறுகை; transgressing, ignoring. *"பெரியோர் சொல்லை உல்லங்கனம் செய்யலாகாது".*

*[Skt. ul-laṅghana > த. உல்லங்கனம்.]*

**உல்லங்கி-த்தல்** *ullaṅgi-,* 11 செ.குன்றாவி. (v.t.) நெறி திறம்புதல்; to transgress, to stray from the path of virtue. *"குருவங்கிசம் உல்லங்கியாமல்" (பாரத வெண். 171, உரை).*

*[Skt. ullaṅ-gha > த. உல்லங்கி-,]*

**உல்லாசம்** *ullāsam,* பெ.(n.) களிப்பு, அகமகிழ்வு; mirth.

*[Skt. ul-lāsa > த. உல்லாசம்.]*

**உல்லாபம்** *ullābam,* பெ.(n.) 1. நிரம்பாமென் மொழி, மழலைச் சொல் (திவா.); babble, prattle, stammering, imperfect, utterance, as of children, of birds. 2. நலிந்த குரல்; feeble voice due to sickness. 3. மாற்றுக் குரல்; change of voice.

*[Skt. ul-lāpa- > த. உல்லாபம்.]*

**உல்லாபன்** *ullāban,* பெ.(n.) நோய் தீர்ந்து நலமாகி வருபவன் (சூடா.); one who has recovered from illness, convalescent.

*[Skt. ul-lāgha > த. உல்லாபன்.]*

**உல்லிபாடாணம்** *ulli-pāḍāṇam,* பெ.(n.) ஒரு வகை செய்நஞ்சு; a kind of poison.

**உல்லேகம்** *ullēgam,* பெ.(n.) 1. புனைந்துரை; description. 2. பலபடப் புனைவணி (மாறனலங். 126); figure of speech in which an object is described according to the different impressions produced by its appearance.

*[Skt. ul-lēkha > த. உல்லேகம்.]*

**உல்லேகனம்** *ullēganam,* பெ.(n.) கக்கல் (வாந்தி); vomiting.

**உல்லோலம்** *ullōlam,* பெ.(n.) 1. பேரலை (வின்.); large wave, surge. 2. கூத்தின் கண் காண்குறலாகும் மெய்ப்பாடு (அங்கக்கிரியை)களுள் ஒன்று (சிலப். பக். 81. 81. சுந்தா); (Nāṭya) a mode of gesticulation.

*[Skt. ul-lōla > த. உல்லோலம்.]*

**உலங்கலம்** *ulaṅgalam,* பெ.(n.) கல்லேனம்; stone-vessel.

**உலங்காரணை** *ulaṅgāraṇai,* பெ.(n.) அவுரி; indigo plant.

**உலங்காரை** *ulaṅgārai,* பெ.(n.) அக்கமணி (உருத்திராட்சம்); wild olive tree - paralysis seed tree.

**உலபம்** *ulabam,* பெ.(n.) விழற்புல் (நாநார்த்த.); a kind of grass.

*[Skt. ulapa > த. உலபம்.]*

**உலம்பேசம்** *ulambēsam,* பெ.(n.) காட்டு முல்லை; wild jasmine.

**உலவைநாசி** *ulavai-nāši,* பெ.(n.) திப்பிலி; long pepper.

*[Skt. ulavai+naš > த. உலவைநாசி.]*

**உலாகுமம்** *ulāgumam,* பெ.(n.) மனோசிலை (வின்.); arsenic sulphide, realgar.

**உலாந்தா** *ulāndā,* பெ.(n.) ஐரோப்பாவிலுள்ள ஒரு நாடு; Holland.

*[E. Holland > த. உலாந்தா.]*

**உலாந்தாக்கமலம்** *ulāndā-k-kamalam,* பெ.(n.) தரந்தாழ்ந்த வயிரவகை; Holland cut diamond or white stone of inferior quality.

*[E. Holland+ Skt. kamalam > த. உலாந்தாக்கமலம்.]*

**உலாந்தாலிங்கம்** *ulāndā-liṅgam,* பெ.(n.) பம்பாய் இலிங்கம்; Bombay vermilion.

இது உலாந்தா தேசத்தினின்று ஏற்றுமதியாகும் சரக்கு. இது இதள் (இரசம்) நிறைந்து கருஞ் சிவப்பு நிறம் வாய்ந்து, ஊசிக் கம்பிகள் போல ஈர்க்குகளமைந்தது.

**உலாமா**[1] *ulāmā,* பெ.(n.) 1. கடுகுரோகணி (மலை); christmas rose, herb. 2. கொழுமிச்சை; citron.

**உலாமா**[2] *ulāmā,* பெ.(n.) மகமதிய குரு; high priest of Muhammadanism.

*[Ar. ulamā > த. உலாமா]*

**உலிமிடி** *ulimiḍi,* பெ.(n.) மாவிலிங்கை; garlic pear.

**உலிமிடிச்சக்கை** *ulimiḍi-c-cakkai,* பெ.(n.) மாவிலிங்கப்பட்டை; the bark of the garlic pear tree.

*[உலிமிடி + சக்கை]*

**உலிமிடிவேர்** *ulimiḍi-vēr,* பெ.(n.) மாவிலிங்க வேர்; the root of garlic pear tree.

*[உலிமிடி + வேர்]*

**உலிற்கள்** *ulirkal,* பெ.(n.) வெண்கலம்; any amalgam of zinc and copper-bell metal, white copper or queen's metal.

**உலுகத்தண்டு** *uluga-t-taṇḍu,* பெ.(n.) கீரைத் தண்டு; a culinary vegetable of amaranthus genus.

*[உலுகம் + தண்டு]*

**உலுகமாலினம்** *uluga-mālinam,* பெ.(n.) நோயையுண்டாக்கும் ஒரு பேய்; the name of a demon causing diseases.

**உலுகம்** *ulugam,* பெ.(n.) கீரைச்செடி; vegetable greens - amaranthus.

**உலுத்தன்** *uluttan,* பெ.(n.) வேடன் (நாநார்த்த.); hunter.

*[Skt. lubdha > த. உலுத்தன்]*



**உலுபம்** *ulubam,* பெ.(n.) ஒரு வகைப் புல்; a species of grass.

**உலுபேனா** *ulupēnā,* பெ.(n.) பாலுடன் முலாம்பழம், வாழைப்பழம் ஆகியவற்றின் சாறு கலந்த உணவுவகை; a particular dish consisting of milk mixed with the juice of melon, banana etc.

**உலுலாயம்** *ululāyam,* பெ.(n.) காட்டெருமை; wild buffalo.

**உலுவம்** *uluvam,* பெ.(n.) வெந்தயம்; fenugreek or dill seed.

**உலுவா** *uluvā,* பெ.(n.) 1. **உலுவம்** பார்க்க; see *uluvam*. 2. பெருஞ்சீரகம்; chinese anise.

**உலுவாசகெந்தி** *uluvāša-gendi,* பெ.(n.) தைவேளை; a plant.

**உலுவாவரிசி** *uluvāvariši,* பெ.(n.) பெருஞ்சீரகம்; chinese anise. 2. **உலுவா** பார்க்க; see *uluvā.*

*[உலுவா + அரிசி. அரி → அரிசி.]*

**உலுவாவிகம்** *uluvāvigam,* பெ.(n.) கறிவேப்பிலை; curry leaf.

**உலுவிந்தை** *uluvindai,* பெ.(n.) **உலுவேந்தம்** பார்க்க; see *uluvēndam.*

**உலுவேந்தம்** *uluvēndam,* பெ.(n.) ஒரு வகைப் பூடு; east coast cherry nutmeg.

**உலூகல்கம்** *ulūkalgam,* பெ.(n.) **உலூகம்** பார்க்க; see *ulūgam.*

**உலூகாரி** *ulūkāri,* பெ.(n.) காக்கை; crow.

**உலூதம்** *ulūdam,* பெ.(n.) **உலூதை** (நன். 273, மயிலை) பார்க்க; see *ulūdai.*

*[Skt. lūtā > த. உலூதம்.]*

**உலூதை**[1] *ulūdai,* பெ.(n.) சிலந்திப் பூச்சி (திவா.); spider.

*[Skt. lūtā > த. உலூதை.]*

**உலூதை**[2] *ulūdai,* பெ.(n.) எறும்பு (நாநார்த்த.); ant.

*[Skt. lūtā > த. உலூதை.]*

**உலூபி** *ulūbir,* பெ.(n.) ஒரு வகை மீன்; a kind of fish.



**உலூனகம்** *ulūnagam,* பெ.(n.) 1. கீழ்வாய் இலக்கம் (பின்னம்) (நாநார்த்த.); fraction. 2. ஆ (பசு); cow.

*[Skt. lūnaka > த. உலூனகம்.]*

**உலேகவாதம்** *ulēgavādam,* பெ.(n.) கண் பூ, கண்ணோய் வகை; a disease of the eye - cataract.

த.வ. கண்புரை.

**உலொட்டி** *uloṭṭi,* பெ.(n.) 1. வெறிமருந்து; intoxicating drug. 2. கள்ளுக்குடுவை; toddy-pot.

**உலொட்டிக்காரன்** *uloṭṭi-k-kāraṉ,* பெ.(n.) குடியன்; drunkard.

**உலோகக்கட்டி** *ulōga-k-kaṭṭi,* பெ.(n.) 1. மாழை (உலோகங்) கலந்த கட்டி; ore, metalliferous mineral. 2. ஐம்மாழையையும் (பஞ்சலோகத்தையும்) உருக்கிச் சேர்த்த கட்டி (வின்.); amalgam of *paṉca-lōgam* in equal proportion. 3. இரும்புக்கட்டி; a hump or mass of iron.

*[உலோகம் + கட்டி.]*

*[Skt. lōha > த. உலோகம்.*

*கள் → கட்டு → கட்டி.]*

**உலோகக்கலப்பு** *ulōga-k-kalappu,* பெ.(n.) பலவகை மாழை (உலோக)களின் சேர்மானம்; a mixture of different metals or metallic compounds by fusion - alloy.

*[உலோகம் + கலப்பு.]*

*[Skt. loha > த. உலோகம்.*

*கல → கலப்பு.]*

**உலோகக்கலவை** *ulōga-k-kalavai,* பெ.(n.) **உலோகக்கலப்பு** பார்க்க; see *ulōga-k-kalappu.*

*[உலோகம் + கலவை.]*

*[Skt. lōha > த. உலோகம்.*

*கல → கலவை.]*

**உலோகக்களிம்பு** *ulōga-k-kaḷimbu,* பெ.(n.) 1. இயல்பாக மாழைகளின் மேல் படியும் மாசு;

a deposit formed usually on surfaces of metals exposed to air, heat etc. for a long time, oxide or oxide of any metal. 2. இரும்புத் துரு; rust of iron. 3. செம்புக் களிம்பு; rust of copper, sub-acetate of copper - verdigris.

*[உலோகம் + களிம்பு.]*

*[**Skt.** rōha > த. உலோகம்.*

*களி → களிம்பு.]*

**உலோகக்கற்பஞானி** *ulōga-k-kaṟpa-ñāṉi,* பெ.(n.) கஞ்சா; gunjah.

**உலோகக்காந்தம்** *ulōga-k-kāndam,* பெ.(n.) இயற்கைக் காந்தம்; natural load-stone as opposed to magnet artificially made.

*[உலோகம் + காந்தம்.]*

*[**Skt.** lōha > த. உலோகம்.*

*காந்து → காந்தம்.]*

**உலோகங்களைப் பற்பமாக்கி** *ulōgaṅgaḷai-p-paṟpamākki,* பெ.(n.) காட்டுத்தீ; a great fire useful for calcining metals.

**உலோகங்களைப்பேதிப்பாக்கி** *ulōgaṅgaḷai-p-pēdippākki,* பெ.(n.) குழலாதொண்டை; common caper-capparis aphylla.

**உலோகச்சத்துரு** *ulōga-c-catturu,* பெ.(n.) கற்பரி செய்நஞ்சு; a kind of arsenic.

**உலோகச்சித்து** *ulōga-c-cittu,* பெ.(n.) வயிர (வச்சிர)க் கல்; a precious stone - one of the nine gems, diamond - adamantine.

**உலோகச்சிப்பி** *ulōga-c-cippi,* பெ.(n.) சிப்பி முத்து; oyster pearl, as distinguised from pearls derived from other sources as described in the Tamil medical science.

*[உலோகம் + சிப்பி.]*

*[**Skt.** lōha > த. உலோகம்.]*

**உலோகச்சுத்தி** *ulōga-c-cutti,* பெ.(n.) 1. இரும்பைக் கலப்பில்லாமற் செய்வது; cleaning the impurities of iron. 2. நிலத்திலிருந்து வெட்டியெடுக்கப்பட்ட மாழைகளை மருத்துவ (வைத்திய) முறைப்படி தூய்மை செய்து, மருந்திற்குப் பயன்படுத்து வதற்குக் களிம்பு முதலியவற்றை அகற்றல்; cleaning of minerals which are dug out from the earth, as per methods described in the Tamil medical science before they are introduced on used in medicine. 3. பொன், வெள்ளி, செம்பு முதலியவற்றை மூலிகைத் தூய்மை (சுத்தி), ஊத்துமுறை, எரிப்பு, பாடம் முதலியவற்றால் தூய்மை செய்தல்; (in alchemy) the process of refining gold, silver, copper, lead etc., by different methods such as cleansing with the essence of drugs, melting by blowing or burning smelting or by cupellation.

**உலோகச்செந்தூரம்** *ulōga-c-cendūram,* பெ.(n.) இரும்புத் தூளைக் கொண்டு செய்யுமோர் வகைச் செந்தூரம்; a calcined red-oxide of iron prepared by vaidyans.

*[உலோகம் + செந்தூரம்.]*

*[**Skt.** lōha > த. உலோகம்.*

*செந்தூள்→ செந்தூளம்→ செந்தூரம்.]*

**உலோகசாட்சி** *ulōga-šāṭci,* பெ.(n.) பன்னிரு (துவாதச) சித்தருளொருவன் (பிங்.); witness of (whatever happens in) the world, one of *tuvādašādittar.*

*[த. உலகம் → **Skt.** loha>த. உலோகம். **Skt.** sāksin > த. சாட்சி.]*

**உலோகத்தம்பம்** *ulōga-t-tambam,* பெ.(n.) இராசராசேச்சுரநிரைய (நரக)ங்களுளொன்று (சி.போ.பா.2,3,பக்.204); a hell, one of eight *irāša-rāsēccura-naragam.*

*[**Skt.** lōha + sthanbha > த. உலோகத் தம்பம்.]*

**உலோகத்தாது** *ulōga-t-tādu,* பெ.(n.) 1. துத்த செய்நஞ்சு (பாஷாணம்); a kind of arsenic. 2. பூமியிலிருந்து வெட்டியெடுக்கப்

படும் மாழைகள் (உலோகங்கள்); metallic ores dug out from the earth, natural metals as distinguished from artificial or wrought metals. 3. வெட்டியெடுத்த இரும்பு; iron ore.

**உலோகத்திரம்** *ulōga-t-tiram,* பெ.(n.) வெள்ளிலோத்திரம்; the bark of a tree.

**உலோகத்திராவகம்** *ulōga-t-tirāvagam,* பெ.(n.) **உலோகநீர்** பார்க்க; see *ulōga-nīr.*

*[Skt. ulāhadravaga > த. உலோகத் திராவகம்.]*

**உலோகத்தைச்செந்தூரமாக்கி** *ulōgattai-c-cendūramākki,* பெ.(n.) சிறு கல்லூரி; an unknown plant capable of reducing iron and other metals into red oxides.

*[உலோகத்தை + செந்தூரம் + ஆக்கி.]*

*[Skt. loha > த. உலோகம்.*

*செந்தூளம் → செந்தூரம்.*

*ஆக்கு → ஆக்கி.]*

**உலோகத்தைத்தகர்த்துசாடுமாருதி** *ulōgattai-t-tagarttu-šāḍumārudi,* பெ.(n.) பொன் நிமிளை; iron phrites occuring in dark yellow nodules.

**உலோகத்தைநயத்தவேகன்** *ulōgattai-nayatta-vēgan,* பெ.(n.) பலண்டுறுக செய்நஞ்சு (பாஷாணம்); a kind of native arsenic.

**உலோகத்தைப்பேதிக்குங்கன்னி** *ulōgattai-p-pēdikkuṅ-kanni,* பெ.(n.) ஏகம்பச் சாரம்; a salt used in alchemy.

**உலோகத்தைப்பளிப்பிடக்கூர்மை** *ulōgattai-p-paḷippiḍa-k-kūrmai,* பெ.(n.) பிடாவுப்பு (லவணம்); a prepared salt used in alchemy.

**உலோகதம்** *ulōgadam,* பெ.(n.) **உலோகநீர்** பார்க்க; see *ulōga-nīr.*

**உலோகதருமிணி** *ulōga-tarumiṇi,* பெ.(n.) உலகநாட்டம் கொண்ட மாணாக்கனுக்கு மறை ஆற்றலை அடையாளமாகக் கொண்டிருக்கும் சிண்டினை எடுக்காமல் செய்யப்படும் தீக்கைவகை (போககாமி கட்குச் செய்யப்படுவதான சபீசதீட்சை வகை) (சைவச. ஆசாரி.62, உரை); (Saiva.) a mode of initiation in which the hair tuft which represents the veiling energy is not removed for the worldly minded disciple, a kind of *šubiša-tiṭcai.*

*[Skt. lōha+darmiṇi > த. உலோகதருமிணி.]*

**உலோகதாது** *ulōga-tādu,* பெ.(n.) ஒரு செய்நஞ்சு (துத்த பாடாணம்) (மூ.அ.); a mineral poison.

*[Skt. lōha+tātu > த. உலோகதாது.]*

**உலோகதிதம்** *ulōgadidam,* பெ.(n.) புன்கு; poonga oil tree.

**உலோகநாதமூலி** *ulōga-nādamūli,* பெ.(n.) சிறு தும்மட்டி; a plant whose seeds are medicinal.

**உலோகநிமிளை** *ulōga-nimiḷai,* பெ.(n.) நிமிளை வகை (வின்.); variety of bismuth.

**உலோகநீர்** *ulōga-nīr,* பெ.(n.) 1. துரிசைப் பொடியிலிருந்து உருவாக்கப்படும் ஒரு வகை நீர்மம்; an oil substance produced from copper aceta. 2. இரும்பு ஆற்றல் (சத்து) கலந்த நீர்; water containing or charged with iron.

*[உலோகம் + நீர்.]*

**உலோகநீறு** *ulōganīṟu,* பெ.(n.) 1. இரும்புச் சாம்பல் (பற்பம்); calcined iron oxide. 2. பொதுவாக மாழை (உலோகங்களின்) சாம்பல் (பற்பம்); any calcined oxide of metal in general.

*[உலோகம் + நீறு.]*

*[Skt. lōha > த. உலோகம்.]*

**உலோகப்பஞ்சபூதம்** *ulōga-p-pañja-būdam,* பெ.(n.) ஐம்பூதக்கூறாகிய மாழை (உலோக) வகைகள்; the five elemental qualities

attributed to five metals.

*[உலோகம் + பஞ்ச + பூதம்.]*

*[**Skt.** lōha > த. உலோகம்.*

*பூ→பூது→பூதம்.]*

*[த. பூதம் > **Skt.** bhūta.]*

*[**Skt.** pānja > த. பஞ்ச.]*

**உலோகப்பத்திரம்** *ulōga-p-pattiram,* பெ.(n.) பனை மரம்; palmyra-tree.

**உலோகப்பந்தனி** *ulōga-p-pandaṉi,* பெ.(n.) மான் செவிக்கள்ளி; spiral leafy milk hedge.



**உலோகப்பற்பம்** *ulōga-p-paṟpam,* பெ.(n.) **உலோகநீறு** பார்க்க; see *ulōga-nīru.*

**உலோகப்பாதம்** *ulōga-p-pādam,* பெ.(n.) அவலந்தி, கொசு நீர்மம்; a kind of watery substance.

**உலோகப்பாந்தவன்** *ulōgappāndavaṉ,* பெ.(n.) மாழை (உலோக) க்குப் பந்தத்தைப் போல் வெளிச்சத்தைக் கொடுக்கும் ஞாயிறு (சூரியன்); the sun which gives to the world light, compared to a torch light.

**உலோகப்பாய்ச்சல்** *ulōga-p-pāyccal,* பெ.(n.) மருந்துகளை மாழைகளின் பேரில் உருக்கு முகத்திற்குக் கொடுத்துக் கலக்கும்படிச் செய்து அம்மாழையைப் பொன்னாக மாற்றுதல்; the process of transmulting inferior metals into gold by introducing or adding alchemical compounds to the metal under experiment while in a state of fusion.

**உலோகப்பிரகாசன்** *ulōga-p-pirakāšaṉ,* பெ.(n.) உலகத்தை ஒளி பெறச்செய்பவன் (துவாதசாதித்தருளொருவன்) (பிங்.); lit, he who illumines the world, one of *tuvādasātittar.*

*[**Skt.** lōka+pra-kāsa>த.உலோகப்பிரகாசன்.]*

காள் → காளம் = சுடுகை. காளவனம் = சுடுகாடு. காளவாய் = சுண்ணாம்புச்சுள்ளை. காள் → காய். காய்தல் = எரிதல், சுடுதல், ஒளி வீசுதல், உலைகாய்தல், நிலாக்காய்தல் என்னும் வழக்குகளை நோக்குக. காய் → காய்ச்சு. காய்ச்சுதல் = சுடவைத்தல், சமைத்தல். காய் → காச் (வ) வடசொல் ப்ர என்னும் முன்னொட்டொடு கூடிப் ப்ரகாச் என்று வழங்குவதே பெரும்பான்மை. ய–ச போலி (வ.வ.1:114).

**உலோகப்பிரதீபிதம்** *ulōga-p-piratīpidam,* பெ.(n.) நிரைய (நரக.) வகை (சி.போ.பா.2, 3, பக். 204); a hell.

*[**Skt.** lōha+piratiptam > த. உலோகப் பிரதீப்தம்.]*

**உலோகபற்பம்** *ulōga-paṟpam,* பெ.(n.) அயவெள்ளை (மூ.அ.); oxide of iron.

*[**Skt.** lōha+paṟpam > த. உலோகபற்பம்.]*

**உலோகபாலர்** *ulōga-pālar,* பெ.(n.) எண் திசைக்காவலர் (அஷ்டதிக்குப் பாலகர்) (திவ். பெரியாழ். 5, 2, 9); regents of the eight points of the compass.

*[**Skt.** lōka+pāla > த. உலோகபாலர்.]*

*[த. உலகம் > **Skt.** lōka > த. உலோகம்.]*

**உலோகம்** *ulōgam,* பெ.(n.) 1. பொன் முதலிய தாதுப்பொருள் (பிங்.); metal in general. 2. இரும்பு; a term peculiar to iron. 3. நிலவுலகம்; earth. 4. குருதி; blood. 5. அகிலமரம்; a fragrant tree. 6. மனிதர்; human being.

*[**Skt.** lōha > த. உலோகம்.]*

சிவப்பாதல் எனப் பொருள்படும் rudh என்னும்

வேரிலிருந்து சிவப்பு, செம்பு வண்ணம், செம்பால் ஆனது, இரும்பாலானது, சிவப்பு மாழை (உலோகம்), செம்பு என்றவாறு பொருள் வளர்ச்சி கொண்ட loha என்னும் வடசொல் உருவாகியுள்ளது. பின்னர் இச்சொல் இரும்பு உருக்கு, பொன் அல்லது மாழைப்பொது என்றின்ன வகையில் விரிந்த பொருள் வளர்ச்சி கொண்டுள்ளது (மா.வி.). தமிழில் இச்சொல் மாழைப் பொது என்னும் பொருளிலேயே பெருவழக்கெய்தியுள்ளது.

மாழை (உலோகம்)யை ஐவகை, எழுவகை, ஒன்பது வகை என்று மூவேறு பிரிவுகளில் சிறப்பித்துக் கூறுவர். **ஐவகை :** பொன் (gold), வெள்ளி (silver), இரும்பு (iron), ஈயம் (lead); **எழுவகை :** இவற்றுடன் வெண்கலம் (bronze), தரா (tara). **ஒன்பது வகை :** மேற்சொன்னவற்றுடன் பித்தளை (brass), நாகம் (zinc).

**உலோகம்பழுத்தல்** *ulōgampaḻuttal,* பெ.(n.) 1. இரும்பு, செம்பு முதலிய மாழை (உலோகங்) கள் பொன்னாக மாறுதல்; change or conversion on transmutation of inferior metals such as iron, copper etc. into gold. 2. பொன் பழுத்தல்; refining gold to yellow colour.

*[உலோகம் + பழுத்தல்.]*
*[Skt. lōha > த. உலோகம்.*
*பழு → பழுத்தல்.*

**உலோகமணல்** *ulōga-maṇal,* பெ.(n.) 1. இருப்பு மணல் (வின்.); iron sand or iron ore. 2. கருமணல்; black sand. 3. மண் கலந்த மாழை வகைகள்; a common term for matallic ores.

*[உலோகம் + மணல்.]*

*[Skt. lōha > த. உலோகம்.]*

**உலோகமத்தம்** *ulōga-mattam,* பெ.(n.) ஓமம்; bishob's weed.

**உலோகமுசிக்கல்** *ulōga-muśikkal,* பெ.(n.) மாழை (உலோகங்) களைக் களிம்பு முதலிய மாசுகளினின்றும் பிரித்தெடுக்க வேண்டி, உலைக் களத்தில் வைத்துருகும்படி ஊதுதல்; melting or fusing metallic ores for the purpose of separating the metal from the dross in a furnace, with special agents - smelting.

**உலோகயாத்திரை** *ulōga-yāttirai,* பெ.(n.) உலகநடை; way of the world, world, affairs. *"உலோகயாத்திரைக விதிகரியா துறுநரர்க்கு" (வேத. சூ. 164).*

*[உலோக + யாத்திரை.]*

*[த. உலகம் > Skt. lōka > த. உலோகம்.]*

**உலோகரஞ்சனம்** *ulōga-rañjaṉam,* பெ.(n.) 1. நீலாஞ்சனக்கல்; blue vitriol. 2. அஞ்சனக்கல்; sulpheret of antimony.

**உலோகரூடம்** *ulōga-rūḍam,* பெ.(n.) நாட்டு வளமை (யாழ்.அக.); customs and manners of a country.

*[Skt. lōka+rūṭam > த. உலோகரூடம்.]*

**உலோகரேட்சை** *ulōga-rēṭcai,* பெ.(n.) தன்னைப் போல் மற்றவர்களையும் பார்த்தல்; treating others on the same level as self.

**உலோகலன்** *ulōgalaṉ,* பெ.(n.) தெளிவாகப் பேசாதவன்; one who does not talk clearly.

**உலோகவாதம்** *ulōgavādam,* பெ.(n.) மரபு (ஐதீகம்) (சி.சி.அளவை. 1. ஞானப்.); popular report, tradition.

**உலோகவாதி** *ulōga-vādi,* பெ.(n.) இல்லறத்திலிருந்து கொண்டு பொன்னாக்கம் (வாதம்) செய்வோன்; one who practices alchemy in his domestic or family life.

**உலோகவிருட்டம்** *ulōga-viruṭṭam,* பெ.(n.) 1. கழுகு; eagle. 2. பருந்து; hawk.



**உலோகவிருத்தம்** *ulōga-viruttam,* பெ.(n.) உலக வழக்குக்கு மாறுபட்டது (மணிமே. 29, 162); (Log.) that which is against the customs of the country.

*[Skt. lōka+viruddha > த. உலோகவிருத்தம்.]*

**உலோகவிரும்பு** *ulōga-virumbu,* பெ.(n.) மாழையை (உலோகத்தை)ச் சார்ந்த இரும்பு; metalic iron.

*[உலோக(ம்) + இரும்பு.]*

*[Skt. lōha > த. உலோகம்.*

*இர் → இரு → இரும்பு = கரியதாது.]*

**உலோகவிலாசினி** *ulōga-vilāśiṉi,* பெ.(n.) பழையதொரு தொன்மம் (புராணம்) (பெருங். உஞ்சைக். 32, 2, குறிப்பு); an ancient purāṇa.

*[Skt. lōka+vilācini > த. உலோகவிலாசினி.]*

**உலோகவேதிச்சி** *ulōga-vēdicci,* பெ.(n.) கருநொச்சி; three-leaved chaste tree.

**உலோகவேதியாக்கி** *ulōga-vēdiyākki,* பெ.(n.) தொட்டி செய்நஞ்சு (பாஷாணம்); a kind of prepared arsenic.

*[உலோகவேதி + ஆக்கி.*

*ஆக்கு → ஆக்கி.]*

**உலோகாசவம்** *ulōgāśavam,* பெ.(n.) இரும்பு (அய)ப் பொடியோடு மற்றக் கடைச் சரக்குகளையும் கலந்து ஆயுள் வேத முறைப்படிப் புளிக்க வைத்து உருவாக்குமோர் வகை குடிப்பு (ஆசவம்); a wine or spirituous liquor obtained by fermenting a mixture of iron fillings and other powdered drugs as per process laid down in ayurveda.

**உலோகாதீதம்** *ulōgādītam,* பெ.(n.) உலக இயல்புக்கு மேற்பட்டது; above or beyond the powers or laws of nature.

*[Skt. lōka+atita > த. உலோகாதீதம்.]*

**உலோகாமிலம்** *ulōgāmilam,* பெ.(n.) மாழை (உலோகங்)களினின்று உருவாக்கும் நீர்மம்; metallic acid.

**உலோகாயதம்** *ulōgāyadam,* பெ.(n.) பொருண் முதன்மை கோட்பாடு (சார்வாகமம்) (திருக்காலித். 4, 30, 25); materialism.

*[Skt. lōkāyata > த. உலோகாயதம்.]*

**உலோகாயதன்** *ulōgāyadaṉ,* பெ.(n.) பொருளே முதன்மை எனக் கொண்டொழுகுபவன்; materialist. *"உலாகாயதனெனு மொண்டிறற்பாம்பின்" (திருவாச. 4, 56).*

த.வ. பொருள் முதன்மையன்.

*[Skt. lōkāyata > த. உலோகாயதன்.]*

**உலோகாயிதன்** *ulōgāyidaṉ,* பெ.(n.) **உலோகாயதன்** (பிரபோத. 31, 81) பார்க்க; see *ulōgāyadaṉ.*

*[Skt. lōkāyatika > த. உலோகாயிதன்.]*

**உலோகார்த்தம்** *ulōgārttam,* பெ.(n.) உலகிய (இலௌகீக) நயம்; material benefit. 2. உலக நன்மை; public good, secular advantages.

**உலோகானந்தர்** *ulōgānandar,* பெ.(n.) பொன்னாக்கம், மருத்துவம் ஆகிய நூற்களைத் தமிழில் இயற்றிய அகத்தியர் கூட்டத்தைச் சார்ந்தவோர் சித்தர்; one of the Siddhar's of Agastiyar's school who compiled various books on medicine and alchemy.

**உலோகிதகம்** *ulōgidagam,* பெ.(n.) செம்புக்கல்; ruby stone.

*[Skt. lōhita > த. உலோகிதகம்.]*

**உலோகிதசந்தனம்** *ulōgida-śandaṉam,* பெ.(n.) குங்குமப்பூ; english saffron.

*[உலோகிதம் + சந்தனம்.]*

*[Skt. lōhita > த. உலோகிதம்.]*

**உலோகிதம்** *ulōgidam,* பெ.(n.) 1. சிவந்தது (உரி.நி.); that which is red. 2. சந்தனம் (மூ.அ.); sandalwood tree. 3. சூதாட்ட வகை; a game at cards with heavy stakes.

*[Skt. lōkita > த. உலோகிதம்.]*

*lōhita* என்னும் சொல்லிற்கு வடமொழியில் சிவப்பு, சிவப்பு வண்ணம், சிவப்பாய் இருப்பது,

செம்பாலானது, செம்பு மாழை (உலோகம்) போன்ற பொருள்கள் உள்ளது (மா.வி.).

**உலோகிதன்** *ulōgidaṉ,* பெ.(n.) செவ்வாய் (பிங்.); mars, being reddish.

*[Skt. lōkita > த. உலோகிதன்.]*

**உலோச்சு** *ulōccu,* பெ.(n.) 1. தம் தலை மயிரைத் தம்கையாற் பறிக்கை (சீவக. 2520, விசேடக் குறிப்பு); (Jaina.) pulling out, by the root, the hair on one's head with one's own hands. 2. தலைமயிரைப் பிய்த்துக் கொள்ளும் ஒரு நோய்; a devilish disease tempting one to pull off the hair by the root.

*[Skt. luñc > த. உலோச்சு.]*

luñc என்னும் வடசொற்குப் பிடுங்குதல், இழுத்தல், கிழித்தல் ஆகிய பொருள்கள் உள்ளன. luñcitakēsa, அல்லது luñcitamūrdhaja என வரும் பொழுது தன் தலைமயிரைப் பிடுங்கும் சமணத் துறவியினரைக் குறிக்கும். luñc என்பது luñcita kēsa போன்ற சொற்களின் சுருக்கமாகும்.

**உலோசம்** *ulōsam,* பெ.(n.) 1. கண்மணி; the pupil of the eye. 2. வானம்; sky.

**உலோசமத்தகம்** *ulōša-mattagam,* பெ.(n.) ஓமம்; bishop's weed.

**உலோசரா** *ulōšarā,* பெ.(n.) அவல்; paddy soaked in water and then fried and flattened.

**உலோசனம்** *ulōšaṉam,* பெ.(n.) கண்; eye. *"தணவறுமுலோசனம் போல்" (பிரபோத. 32, 54).*

*[Skt. lōcana > த. உலோசனம்.]*

**உலோசி** *ulōši,* பெ.(n.) பேய்ப்பசளை (மூ.அ.); a wild species of purslane.

**உலோசிதம்** *ulōšidam,* பெ.(n.) சந்தனமரம்; sandalwood tree.

**உலோட்டம்** *ulōṭṭam,* பெ.(n.) 1. மண்ணாங்கட்டி; lump of clay, clod. *"தூமமேகா வணமுலோட்டமொடு கோமயந் தோயப் பொதிந்து" (தைலவ. தைல. 127).* 2. இரும்புக்கிட்டம், இரும்புருக்கையில் மேல் திரளும் கட்டி; irondross.

*[Skt. lōṣṭa > த. உலோட்டம்.]*

**உலோட்டி** *ulōṭṭi,* பெ.(n.) 1. சாராயச்சாரம் (பாண்டி.); alcohol. 2. தொல்லை, தொந்தரவு (யாழ்.அக.); annoyance.

தெ. லோட்டி.

**உலோடகம்** *ulōḍagam,* பெ.(n.) ஓடை மரம்; whell creeper.

**உலோத்திரச்சம்** *ulōttiraccam,* பெ.(n.) 1. வெள்ளிலோத்திரம்; the bark of a tree. 2. குறட்டைப் பருப்பு (சவரிலோத்திரம்); the pulp of the seed of a tree.

**உலோபம்**[1] *ulōbam,* பெ.(n.) 1. கடும்பற்றுள்ளம்; avarice, miserliness, penuriousness. *"உட்டெறு வெம்பகையாவ துலோபம்" (கம்பரா. வேள்விப். 32).* 2. எறும்பு; ant.

*[Skt. lōbha > த. உலோபம்.]*

**உலோபம்**[2] *ulōbam,* பெ.(n.) 1. குறைவு; want, shortcoming, deficiency. *"மந்திரவு லோபம்".* 2. கெடுதல் வேறுபாடு (விகாரம்); (Gram.) dropping a letter, by rule of combination, elision in sandi. *"ஆன்றாமு லோபத் தொடாகமம்" (வீரசோ. சந்தி. 10).*

*[Skt. lōpa > த. உலோபம்.]*

*lōpa* என்னும் வடசொற்கு உடைத்தல், புண்படுத்துதல், புண், அழ்வு, தலையீடு, புறக்கணிப்பு, மீறுகை, திருடுதல், கொள்ளையடித்தல், தேவை, குறைவு, இல்லாமை, மறைதல் போன்ற பல பொருள்கள் உள்ளன. (மா.வி.) இவற்றுள் குறைவு, கெடுதல் வேறுபாடு ஆகிய பொருள்களிலே இச்சொல் தமிழில் வழக்கெய்தியுள்ளது.

**உலோபன்** *ulōbaṉ,* பெ.(n.) **உலோபி** பார்க்க; see *ulōbi. "உலோபர் கடைத்தலை" (கம்பரா. பள்ளி. 26).*

*[Skt. lōbha > த. உலோபன்.]* 'ன்' ஆ.பா.ஈறு.

**உலோபாமுத்திரை** *ulōbāmuttirai,* பெ.(n.) அகத்தியர் மனைவி (தொல். பாயி. உரை); the wife of the sage Agastya.

*[உலோபா + முத்திரை.]*

***[Skt.** lōpā > த. உலோபா. த. முத்திரை > **Skt.** mudra.]*

முக + திரம் = மோதிரம், முத்திரையிட்ட விரலணி. முகத்திரம் → (முத்திரம்) → முத்திரை.

**உலோபி[1]** *ulōbi*, பெ.(n.) 1. பேராசையுள்ளன்; avaricious person. 2. இவறன், ஈயாதவன்; miser.

**த.வ. இவறி.**

***[Skt.** lōbhin > த. உலோபி.]*

*lōbhin* என்னும் வடசொல் குழப்பம், பொறுமை, இன்மை, விருப்பம், அவா, பேராசை போன்ற பொருள்களுள்ள *lobha* என்னும் அடியிலிருந்து பிறந்தது (மா.வி.). தமிழில் இச்சொல் பேராசையுடையவன், ஈயாதவன் என்னும் பொருளிலேயே பெரு வழக்கெய்தியுள்ளது.

**உலோபி[2]-த்தல்** *ulōbi-*, 11 செ.கு.வி(v.i.) 1. செட்டுச் செய்தல்; to be stingy, miserly. 2. பற்றுள்ளஞ் செய்தல்; to be sordid, greedy.

***[Skt.** lōbha > த. உலோபி-,]*

*lōbha* என்னும் சொல் வடமொழியில் வினைப்படும் போது *lōbhaniya* என்று வடிவம் பெறும். உலோபித்தல் என்னும் தமிழ் வடிவம் பெயர் *lōbha* விலிருந்து உருவானதாகும்.

**உலோபி[3]-த்தல்** *ulōbi-*, 11 செ.குன்றாவி. (v.t.) கெடுதல் விகாரமடைவித்தல்; (Gram.) to bring about elision in sandi. *"சவ்வை யுலோபித்து" (வீரசோ. வேற். 5, உரை).*

***[Skt.** lōpa > த. உலோபி-,]*

**உலோபு-தல்** *ulōbu-*, 10 செ.கு.வி.(v.i.) **உலோபி[2]-தல்** பார்க்க; see *ulōbi-*. *"ஏதுமுலோ பாய்காண்" (திவ். பெரியாழ். 2, 7, 6).*

***[Skt.** lōbha > த. உலோபு-,]*

**உலோமசம்** *ulōmaśam*, பெ.(n.) சடாமாஞ்சில்; spikenard herb.

***[Skt.** lōmaśa > த. உலோமசம்.]*

**உலோமதகரி** *ulōmadagari*, பெ.(n.) கல்லால்; dalhousie's fig.

**உலோமம்[1]** *ulōmam*, பெ.(n.) வால் (நாநார்த்த.); tail.

***[Skt.** lōman > த. உலோமம்.]*

**உலோமம்[2]** *ulōmam*, பெ.(n.) புறமயிர் (சங்.அக.); hair growing over the body of men or of animals.

***[Skt.** lōman > த. உலோமம்.]*

**உலோலம்** *ulōlam*, பெ.(n.) 1. அலைகை (நாநார்த்த.); wandering. 2. காமம்; cupidity, lust.

***[Skt.** lōla > த. உலோலம்.]*

**உலோலம்பம்** *ulōlambam*, பெ.(n.) வண்டு; beetle.

**உலோலன்** *ulōlaṉ*, பெ.(n.) சிற்றின்பத் தோய்வாளன்; a volluptuary.

**த.வ. ஓலன்.**

***[Skt.** lola > த. உலோலம் → உலோலன்.] 'ன்' ஆ.பா.ஈறு.*

**உலோலாட்சவிருட்சம்** *ulōlāṭca-viruṭcam*, பெ.(n.) மலைமா; hill mango.

**உலோலிதம்** *ulōlidam*, பெ.(n.) 1. அசைவு; shaking. 2. நடுக்கம்; trembling.

**உலோலிதமுகம்** *ulōlida-mugam*, பெ.(n.) ஆழ்ந்த கருத்தொன்றைத் தோள்மீது தலைசாய்த்து குறிப்பாய் விளக்கும் முகவெளிப்பாடு (முகவபிநயம்) (சது.); (Nāṭya) mode of facial gesticulation consisting in the person inclining his head to a side over his shoulder, to indicate that he is absorbed in deep through, one of 14 *muga-v-abinayam.*

*[உலோலித +முகம்.]*

***[Skt.** lōlita > த. உலோலிதம்.]*

**உலோலுபன்** *ulōlubaṉ*, பெ.(n.) சிற்றின்ப விருப்பமுள்ளவன்; one indulging in sexual pleasures.

[Skt. lōlupa > த. உலோலுப → உலோலுபன்.] 'ன்' ஆ.பா.ஈறு.

**உலோலை** *ulōlai,* பெ.(n.) நாக்கு; the tongue.

**உலோவு-தல்** *ulōvu-,* 5 செ.கு.வி.(v.i.) **உலோபி²-தல்** பார்க்க; see *ulōbi²-*. *"நீரென்னுயிர்தரவு லோவினீரோ" (கம்பரா. கார்முக. 46).*

[Skt. lōbha > த. உலோவு-தல்.]

**உவ்வாதம்** *uvvādam,* பெ.(n.) தவக் கோட்பாடு (நீலகேசி. அரும்.); austerity.

த.வ. துறவறம்.

**உவகாலி** *uvakāli,* பெ.(n.) கடுகு ரோகிணி; a purgative drug.

**உவகுருவாணன்** *uvaguruvāṇaṉ,* பெ.(n.) இல்லறத்தையடையும் நிலையிலிருக்கும் மாணி (பிரமசாரி) (கூர்மபு. வருண. 37); brahmachārin who is about to become a house-holder.

[Skt. upa+kurvāṇa > த. உவகுருவாணன்.]

**உவகுலம்** *uvakulam,* பெ.(n.) 1. திப்பிலி (மலை.); long pepper. 2. திரிபலை (மலை.); the three myrobalans.

[Skt. upakulyā > த. உவகுலம்.]

**உவசமம்** *uvaśamam,* பெ.(n.) அமைதி (உபசாந்தம்); quiescence. *"உவசமத்தி னுய்ப்பனவும்" (நீலகேசி. 113).*

[உவ + சமம்.]

[Skt. upa > த. உவ.]

**உவணகேதனன்** *ulvaṇa-kēdaṉaṉ,* பெ.(n.) திருமால் (சூடா.); Visṇu, who has the white-headed kite on his banner.

**உவரம்** *uvaram,* பெ.(n.) கண்ட திப்பிலி; a kind of long pepper.

**உவரோதம்** *uvarōdam,* பெ.(n.) இடையூறு; obstruction, impediment, obstacle. *"வசையபராதமாய வுவரோதம்" (தேவா. 212, 5).*

[Skt. upa-rodha > த. உவரோதம்.]

**உவனாயம்** *uvaṉāyam,* பெ.(n.) துவைத்துக் கட்டும் மருந்து; unguent applied to a wound or sore. *"உவனாயத்தால்.......... கானோ யொழித்தனர்" (உபதேசகா. சிவபுண். 346).*

[Skt. upa-nāha > த. உவனாயம்.]

**உவனியம்** *uvaṉiyam,* பெ.(n.) **உபநயனம்¹** பார்க்க; see *ubanayaṉam.* *"ஓது வாய்மையு முவனியப் பிறப்பும்" (திவ். பெரியதி. 5, 8, 7).*

[Skt. upa-nayana > த. உவனியம்.]

**உவாத்தி** *uvātti,* பெ.(n.) கற்பிப்போன், ஆசிரியன்; teacher. *"ஆரண வுவாத்தி யபஞ்சிகன்" (மணிமே. 13, 4).*

[Skt. upādhyāya > த. உவாத்தி.]

**உவாத்திகன்** *uvāttigaṉ,* பெ.(n.) ஆசிரியன், கற்பிப்போன் (மணிமே. 13, 4, அரும்.); teacher.

[Skt. upādhyāya > த. உவாத்திகன்.]

**உவாத்திச்சி** *uvātticci,* பெ.(n.) கற்றுத்தருபவள், ஆசிரியை; lady teacher, school mistress.

[உவாத்தி + இச்சி]

[Skt. upadhyāya > த. உவாத்தி.] 'இச்சி' பெ.பா.ஈறு.

**உவாத்திமை** *uvāttimai,* பெ.(n.) எழுத்தறிவிக்கும் தொழில்; profession of a school master, teaching profession. *"அவன் உபாத்திமைத் தொழில் செய்கிறான்".*

[Skt. upādhyāya > த. உவாத்தி → உவாத்திமை.] 'மை' தொ.பெ.ஈறு.

**உவாத்தியன்** *uvāttiyaṉ,* பெ.(n.) ஆசிரியன், கற்பிப்போன் (மணிமே. 13, 4, அரும்.); teacher.

[Skt. upādhyāya > த. உவாத்தியன்.]

**உவாத்தியாயன்** *uvāttiyāyaṉ,* பெ.(n.) **உபாத்தியாயன்** பார்க்க; see *ubāttiyāyaṉ.*

[Skt. upādhyāya > த. உவாத்தியாயன். 'ன்' ஆ.பா.ஈறு.]

**உவாத்தியாயனி** *uvāttiyāyaṉi,* பெ.(n.) ஆசிரியை; lady teacher.

[Skt. upādhyāyani > த. உவாத்தியாயனி.]

**உவாத்தியாரம்மாள்** *uvāttiyārammāḷ*, பெ.(n.) ஆசிரியை; lady teacher.

*[உவாத்தியார் + அம்மாள்.]*

*[Skt. upādhyāya > த. உவாத்தியாய.]*

**உவாத்தியான்** *uvāttiyāṉ*, பெ.(n.) ஆசிரியன் (ஆசாரக். 17); teacher.

*[Skt. upādhyāya > த. உவாத்தியான்.]* 'ன்' ஆ.பா.ஈறு.

**உவாத்தினி** *uvāttiṉi*, பெ.(n.) **உபாத்தியாயனி** பார்க்க; see *ubāttiyāyaṉi*.

*[Skt. upādhyāyaṉi > த. உவாத்தினி.]*

**உவாத்து** *uvāttu*, பெ.(n.) ஆசிரியர் (உபாத்தியாயன்); teacher, male or female. *"பொறைக்கு உவாத்தாவாரும்" (ஈடு. 9, 8, 5).*

*[Skt. upādhyāya > த. உவாத்து.]*

**உவாதி**[1] *uvādi*, பெ.(n.) எல்லை; limitation, condition, as of time or space. *"காலத்துவாதிதனை" (திருவாய். நூற். 33).*

*[Skt. upādhi > த. உவாதி.]*

**உவாதி**[2] *uvādi*, பெ.(n.) கடுந்துன்பம்; severe pain, distress.

*[Skt. upādhi > த. உவாதி.]*

**உவாந்தி** *uvāndi*, பெ.(n.) கக்கல்; nausca. vomiting.

த.வ. வாயாலெடுக்கை.

*[Skt. vānti > த. வாந்தி > உவாந்தி.]*

**உவாந்திபிராந்தி** *uvāndi-pirāndi*, பெ.(n.) கக்கல் கழிச்சல் (வாந்தியும், மயக்குமுங் கூடிய வயிற்றுப் போக்கும்); diarrhoea attended with bewilderment.

**உவாலம்பம்** *uvālambam*, பெ.(n.) **உபாலம்பனம்** (வின்.) பார்க்க; see *uvālambaṉam*.

*[Skt. upā-lambhana > த. உவாலம்பம்.]*

**உவாலம்பனம்** *uvālambaṉam*, பெ.(n.) **உபாலம்பனம்** பார்க்க; see *ubā-lambaṉam*. *"சந்திரோவாலம்பனம்" (வின்.).*

*[Skt. upa-lambhana > த. உவாலம்பனம்.]*

**உவையம்** *uvaiyam*, பெ.(n.) **உபயம்**[1] பார்க்க; see *ubayam*[1]. *"உவையம் முறுமுலகின்" (கம்பரா. நிகும். 156).*

*[Skt. ubhaya > த. உவையம்.]*

**உற்கடம்** *uṟkaḍam*, பெ.(n.) 1, நன்னாரி (வின்.); Indian sarasaparilla. 2. செருக்கு; pride. 3. வெறி; intoxication.

**உற்கடிதம்** *uṟkaḍidam*, பெ.(n.) (பஞ்ச) தாளமைந்தனுளொன்று (பரத. தாள. 15); (Mus.) variety of time-measure, represented thus, 222 one of *pañja-tāḷam*.

**உற்கம்** *uṟkam*, பெ.(n.) 1. கடைக்கொள்ளி; fire-brand. 2. அனற்றிரள் (திவா.); a body of fire, flame. 3. விண்வீழ்கொள்ளி; meteor, shooting star. *"வான்பூத்த வுற்கம்" (காசிக. கணபதிகா. 13).*

*[Skt. ulka > த. உற்கம்.]*

**உற்கமபாத்திரம்** *uṟkama-pāttiram*, பெ.(n.) சுண்ட வைக்கும் ஏனம் (பாத்திரம்); evaporating dish or vessel.

**உற்கமம்** *uṟkamam*, பெ.(n.) ஆவியாகப் போக்கிச் சுண்ட வைத்தல்; the conversion of a fluid or a solid into vapour - evaporation.

**உற்கமமுறை** *uṟkama-muṟai*, பெ.(n.) சுண்ட வைக்கும் முறை; the process of evaporation.

*[உற்கம + முறை.]*

*[Skt. ulkā > உற்கமம்.]*

**உற்கமோபகரணம்** *uṟkamōpa-karaṇam*, பெ. (n.) சுண்ட வைக்கப் பயன்படுத்தும் துணைக்கருவி; an apparatus used in evaporation.

*[உற்கமம் + உபகரணம்.]*

**உற்கலம்** *uṟkalam*, பெ.(n.) பண்டைய நிலப் பகுதி (பஞ்சகௌடத்தொன்று) (சது.); name of an ancient district including a large part

of Orissa, one of *pāñja-kauḍam.*

*[Skt. utkala > த. உற்கலம்.]*

**உற்காசுதி** *uṟkāšudi,* பெ.(n.) நீண்ட வெலும்பு; any shaft of a long bone.

**உற்காதா** *uṟkādā,* பெ.(n.) வேள்வி (யாகம்) செய்யும் மத குருமாருளொருவர்; one of the four principal priests at a sacrifice, who chants the hymns of the *šāmavēda.* *"பிரமனுற்காதா" (மச்சபு. சந்திரோ. 12).*

*[Skt. ud-gāta > த. உற்காதா.]*

**உற்காமுகம்** *uṟkā-mugam,* பெ.(n.) கொள்ளிவாய்ப் பேய்; a phantom, will 'o' the wisp; marsh-gas.

*[உற்கா + முகம்.]*

*[Skt. ulkā > த. உற்கா. த. முகம் > Skt. mukha.]*

**உற்காரசூலை** *uṟkāra-šūlai,* பெ.(n.) ஒருவகை குத்தல் நோய் (வின்.); pain in the joints, an arthritic disease.

*[உற்கார + சூலை.]*

*[Skt. ud-gāra > த. உற்கார.]*

சுல் → சூலை = குத்தும் கூரிய படைக்கலம். சூல் → சூலம் = முக்கவர்வேல், இடிதாங்கி. சூலுதல் = குத்துதல். சூல் → சூலை = குத்தல் குடைச்ச லெடுக்கும் அல்லது கைகாலை முடக்கும் நோய்.

**உற்காரம்**[1] *uṟkāram,* பெ.(n.) தூற்றுந்தவசம் (தானியம்) (வின்.); grain piled up for winnowing.

*[Skt. ut-kāra > த. உற்காரம்.]*

**உற்காரம்**[2] *uṟkāram,* பெ.(n.) வாயாலெடுக்கை (வாந்தி); vomiting. *"உதானன் களமுற் றுற்காரம் புரியும்" (வேதா. சூ. 75).*

*[Skt. ud-gāra > த. உற்காரம்.]*

**உற்காரிகை** *uṟkārigai,* பெ.(n.) மாவுக்களி; a soft composition of rice or wheat or something molifying to be applied to sores, abscesses etc.

**உற்காரிப்பு** *uṟkārippu,* பெ.(n.) ஏப்பம்; eructation or act of belching.

**உற்கிரமச்சா** *uṟkirama-c-cā,* பெ.(n.) ஒருவகைக் குறிப்பு மொழி (ஒரு பரிமாண சங்கேதம்) (வின்.); (Math.) the versed sine.

*[Skt. ut-krama+jyā > த. உற்கிரமச்சா.]*

**உற்கிருட்டம்** *uṟkiruṭṭam,* பெ.(n.) மேன்மை(யானது); that which is excellent, superior, eminent.

*[Skt. ut-kṛsta > த. உற்கிருட்டம்.]*

**உற்கிருதி** *uṟkirudi,* பெ.(n.) அடிதொறும் இருபத்தா றசைகளுடன் நான்கடியினதான வடமொழியிலுள்ளதொரு பாவகை (வடமொழி சத்தவகை) (யாப்.வி. 94, பக். 476); a Sanskrit metre of four lines of 26 syllables each.

*[Skt. utkṛti > த. உற்கிருதி.]*

**உற்கிதை** *uṟgidai,* பெ.(n.) முளைமந்திரம், ஓம். (பிரணவம்); the syllable ōm, the triliteral name of god.

*[Skt. ud-githa > த. உற்கீதை.]*

**உற்கிரணம்** *uṟkiraṇam,* பெ.(n.) வாயாலெடுத்தல் (வாந்தி செய்தல்); vomiting.

**உற்குரோசம்** *uṟkurōšam,* பெ.(n.) நீர்வாழ்பறவை (பிங்.); a water bird.

**உற்சங்கக்கை** *uṟcaṅga-k-kai,* பெ.(n.) இணை (அபிநய)க்கை வகை (பரத. பாவ. 53); (Nāṭya.) gesture with both hands in which the two palms, in *kudaṅgai.* pose are placed against the cheeks, as if to ward off the effect of a cold blast.

*[உற்சங்க(ம்) + கை.]*

*[Skt. ut-saṅga > த. உற்சங்கம்.]*



**உற்சங்கம்** *urcaṅgam,* பெ.(n.) இணைக்கை வகை (சிலப். 3, 18, உரை); (Nāṭya.) gesture with both hands in which one hand in *iḷam-pirai,* pose and the other in arāḷam pose are brought together in such a manner that one wrist may go over the other.

*[Skt. ut-saṅga > த. உற்சங்கம்.]*

**உற்சர்க்கம்** *urcarkkam,* பெ.(n.) மலம்; excretion.

**உற்சர்ப்பிணி** *urcarppiṇi,* பெ.(n.) வளம் (போகம்) பெருகுங் காலம்; days or prosperity in a man's life; period of waxing life as opposed to அவசர்ப்பிணி, waning life.

**உற்சவபேரம்** *urcava-pēram,* பெ.(n.) திருவிழா, மணவிழா மற்றும் இன்னபிற கொண்டாட்டத்தின்போது ஊர்வலமாக எடுத்துச் செல்லும் தெய்வத் திருமேனி (உற்சவ விக்கிரம்); idol taken out in processions.

*[Skt. ut-sava+bēra > த. உற்சவபேரம்.]*

**உற்சவம்** *urcavam,* பெ.(n.) 1. திருவிழா; temple festival. *"சிவன்றனுற் சவத்தினும்" (சைவச. பொது. 346).* 2. கொண்டாட்டம்; public festivity. 3. திருமணம் (விவாகம்) (வின்.); wedding.

த.வ. விழா.

*[Skt. ut-sava > த. உற்சவம்.]*

ut-sava என்னும் வடசொல் மேலே செல்லக் காரணியமாக இருத்தல் என்னும் பொருள்படும் ut-sū என்னும் அடியிலிருந்து பிறந்தது. இச்சொற்கு முயற்சி, தொடக்கம், விழா, கொண்டாட்டம், களிப்பு, மகிழ்ச்சி, மகிழாரவாரம் போன்ற பொருள்கள் உள்ளன (மா.வி.). இவற்றுள் விழா, கொண்டாட்டம் என்னும் பொருள்களுடன் தமிழில் உற்சாகம் வழக்கெய்தி உள்ளது.

**உற்சவமூர்த்தி** *urcava-mūrtti,* பெ.(n.) **உற்சவர்** பார்க்க; see *urcavar.*

*[Skt. ut-sava+mūrtti > த. உற்சவமூர்த்தி.]*

**உற்சவர்** *urcavar,* பெ.(n.) திருவிழாவின் போது நாட்டுமக்கள் காண்குறவும் வழிபடவும், ஊர்வலத்தில் கொண்டு வரப்படும் திருமேனி (உற்சவத்தி லெழுந்தருளும் விக்கிரகம்); idol taken out in processions.

*[Skt. ut-savar > த. உற்சவர்.]*

**உற்சவவிக்கிரகம்** *urcava-viggiragam,* பெ.(n.) **உற்சவர்** பார்க்க; see *urcavar.*

*[Skt. ut-sava-vi-graha > த. உற்சவ விக்கிரகம்.]*

**உற்சாகஞ்செய்-தல்** *urcagañ-cey-,* 1 செ.கு.வி.(v.i.) பெருமுயற்சி செய்தல் (வின்.); to make great efforts.

*[உற்சாகம் + செய்-,]*

*[Skt. ut-saga > த. உற்சாகம்.]*

**உற்சாகப்பிழை** *urcāga-p-piḻai,* பெ.(n.) ஊக்கமின்மை (வின்.); aversion, unwillingness, backwardness.

*[உற்சாகம் + பிழை.]*

*[Skt. ut-sāha > த. உற்சாகம்.]*

**உற்சாகபங்கம்** *urcāga-baṅgam,* பெ.(n.) ஊக்கக்கேடு; loss of zeal, dejection of spirits. *"உற்சாக பங்க முற்றேயுறைகின் றாரால்" (சிவரக. நந்திகணங்கள். 5).*

*[Skt. ut-sāga+bhanga > த. உற்சாகபங்கம்.]*

**உற்சாகம்** *urcāgam,* பெ.(n.) 1. ஊக்கம் (பிங்.); zeal, promptitude, spontaneity, alacrity. 2. முயற்சி (பிங்.); effort, exertion. 3. மகிழ்ச்சி; joy, happiness. *"உற்சாகங் கொண்டு மச்சைத் தாவுகிறான்" (வின்.).*

*[Skt. ut-sāha > த. உற்சாகம்.]*

வடமொழியில் utsāha என்னும் சொல்லுக்கு ஆற்றல், வலிமை, விருப்ப ஆற்றல், உறுதிப்பாடு, முயற்சி, விடாமுயற்சி, தொடர் முயற்சி, ஊக்கம், களிப்பு, மகிழ்ச்சி போன்ற பொருள்கள் உள்ளன (மா.வி.). இவற்றுள் ஊக்கம், முயற்சி, மகிழ்ச்சி ஆகிய பொருள்களுடன் இச்சொல் தமிழில் பெருவழக்கு எய்தியுள்ளது.

**உற்சாகமருந்து** *urcāga-maruntu,* பெ.(n.) மகிழ்வூட்டும் மருந்து, சுறுசுறுப்பை உண்டாக்கும் மருந்து; cheering stimulant.

*[உற்சாகம் + மருந்து.]*

*[**Skt.** ut-sāha > த. உற்சாக.]*

முள் → முரு → முருகு = முரு → மரு = மணம். மருவுதல் = கலத்தல். மரு → மருந்து = நோய் தீர்க்கும் மருந்துத்தழை, நோய் தீர்க்கும் பொருள்.

**உற்சேதம்** *urcēdam,* பெ.(n.) 1. உடல்; body. 2. புண் (காயம்) பட்டவுடம்பு; a wounded or an injured body.

**உற்பட்சமன்** *urpaṭcaman,* பெ.(n.) கண் இமை (ரப்பை)யில் மேல் நோக்கிய மயிர்; upturned eye-lashes.

**உற்படம்** *urpaḍam,* பெ.(n.) மரப் பொந்தினின்று ஒழுகும் பால்; the sap issuing from the cleft of a tree.

**உற்பத்தி** *urpatti,* பெ.(n.) தோற்றம்; birth, origin, derivation. *"உற்பத்தியுநாசமும்" (திருநூற். 79).* 2. கருத்தோற்றம்; conception.

*[**Skt.** ut-patti > த. உற்பத்தி.]*

வடமொழியில் ut-pat என்னும் சொல்லிற்குப் பறத்தல் அல்லது மேலே குதித்தல், மேனோக்கிப் பறத்தல், உயர்ந்து செல்லுதல், எழுதல், பள்ளியெழுதல், மேலே எறிதல், தொடங்குதல், விட்டோடுதல், உருவாக்குதல், தோன்றுதல் போன்ற பொருள்கள் உள்ளன (மா.வி.). இவற்றுள் தமிழில் உருவாக்குதல், தோன்றுதல் போன்ற சில பொருள்களே வழக்கூன்றியுள்ளன.

**உற்பத்திக்காலம்** *urpatti-k-kālam,* பெ.(n.) தோன்றுங் காலம்; time of birth or origin.

*[உற்பத்தி + காலம்.]*

*[**Skt.** utpatti > த. உற்பத்தி. கால் > காலம்.]*

**உற்பத்திக்கிரமம்** *urpatti-k-kiramam,* பெ.(n.) தோன்றுமுறை; the successive stages of creation as described below.

பெரும (பிரமம்)த்திலிருந்து வான்வெளியும் (ஆகாசமும்), வான் வெளியிலிருந்து வளியும் (வாயுவும்), வளியி (வாயுவி)னின்று நீரும், நீரி னின்று மண்ணும் மண்ணினின்று புற்பூண்டு முதலிய நிலைத் திணையும், நிலைத் திணையி னின்று உணவும், உணவினின்று விதை அதாவது விந்து (சுக்கிலம்)வும், விதையினின்று மனிதரும் தோன்றுவதாக வரிசை யொழுங்குபடக் கூறுவர் (மா.வி.).

**உற்பத்திகாலினம்** *urpatti-kālinam,* பெ.(n.) பிறக்கும் பொழுதே உண்டான குறைபாடு; defects existing at or even before birth-congenital defects.

**உற்பத்திகாலினல்** *urpatti-kālinal,* பெ.(n.) பிறக்கும் பொழுது நேர்வது; taking place at the time of birth.

**உற்பத்திசமவாதம்** *urpatti-šama-vādam,* பெ.(n.) சிவனிய (சைவ) சமயத்தின் அகச் சமயமாறனுளொன்று (மாவிரதம்); a section of šaivaism.

*[உற்பத்தி + சம + வாதம்.]*

*[**Skt.** ut-patti+vādam > த. உற்பத்திவாதம்.]*

**உற்பத்திப்பிரயோகம்** *urpatti-p-pirayōgam,* பெ.(n.) காரண காரிய வகைகளால் தோற்றுகை; production by the join operation of the cause and an effect.

**உற்பதனம்** *urpadanam,* பெ.(n.) 1. உயரப் பறத்தல்; flying upwards. 2. பறப்பதற்குப் பலுக்கும் (உச்சரிக்கும்) மந்திரம்; a spell by means of which one is able to fly upwards or to rise up from the earth. 3. பிறப்பு; birth.

**உற்பலகண்டிகம்** *urpala-kanḍigam,* பெ.(n.) மஞ்சட் சந்தனம், அரிச்சந்தனம்; a species of sandal paste of brass or yellow colour and very fragrant.

**உற்பலகோபம்** *urpala-kōbam,* பெ.(n.) ஊதற்கொடி; a dark blue creeper.

**த.வ.** சமதேவிப் பூடு. மலையாளத்தில் இதனைப் பால்வள்ளி எனக் குறிப்பர்.

**உற்பலசட்கம்** *urpalašaṭgam,* பெ.(n.) ஒரு வகை மருந்து; the name of a medicament.

**உற்பலசட்சு** *urpala-šatcu,* பெ.(n.) 1. முளரி (தாமரை)க் கண்; lotus eye. 2. நேர்த்தியான கண்; fine eye.

**உற்பலசாகிதம்** *urpala-šāgidam,* பெ.(n.) கருவாகை; black or fragrant sirissa.

**உற்பலசாரிவம்** *urpala-šārivam,* பெ.(n.) **உற்பலகோபம்** பார்க்க; see *urpala-kōbam.*

**உற்பலசாசனன்** *urpala-šāšanan,* பெ.(n.) பெருங்காயம் (மூ.அ.); asafoetida.

*[Skt. utpala+ šāsanan >த. உற்பலசாசனன்.]*

**உற்பலசானன்** *urpala-šānan,* பெ.(n.) **உற்பலசாசனன்** (வின்.) பார்க்க; see *urpala-šāšanan.*

*[Skt. utpalasāsana > த. உற்பலசானன்.]*

**உற்பலபத்திரகம்** *urpala-pattiragam,* பெ.(n.) பட்டைக்கத்தி; a broad bladed knife or lancet used by surgeons.



**உற்பலபத்திரம்** *urpala-pattiram,* பெ.(n.) 1. நெய்தல் இலை; the leaf of a water lily. 2. உகிர் (நக)க் குறி; (in erotic science), the nail mark on the breast and other prescribed or recognised parts of a woman, caused by her love.

**உற்பலபேதியகம்** *urpalapēdiyagam,* பெ.(n.) ஒரு வகைக் கட்டு; a kind of bandage.

**உற்பலம்**[1] *urpalam,* பெ.(n.) 1. கருநெய்தல் (சூடா.); blue Indian water lily. 2. செங்குவளை (திவா.); red Indian water-lily. 3. செங்கழு நீர்; purple Indian water-lily. 4. கோட்டம் (மலை.); Arabian costum. 5. குவளை; water lily in general. 6. நீராலம்பலுக்குள்ள பொதுப்பெயர்; a general name of the different species of the nymphaca and the pontederia.

*[Skt. ut-pala > த. உற்பலம்.]*

**உற்பலம்**[2] *urpalam,* பெ.(n.) 1. ஒரு வகைச் சிற்றுண்டி (பலகாரம்); a kind of cake. 2. மெலிந்தது; that which is emaciated.

**உற்பலவரை** *urpala-varai,* பெ.(n.) திருத்தணிகைமலை; another name for Tiruttaṇi-hill, in Tiruvaḷḷūr district where there is a tank abounding in water lilies. *"உற்பலவரையின் வாழ்வோர்" (கந்தபு. வள்ளி. 228).*

*[உற்பல + வரை.]*

*[Skt. ut-pala > த. உற்பல.]*

**உற்பலவனதை** *urpala-vanadai,* பெ.(n.) சிவதை; Indian jalap.

**உற்பலாதி** *urpalādi,* பெ.(n.) குளிர்ச்சியைக் கொடுக்கும் மருந்துச் சரக்கு; drugs of cold producing potency cooling drugs.

**உற்பவநாடி** *urpava-nāḍi,* பெ.(n.) குழந்தைகளுக்கேற்படும் நாடி நடை; pulsation in a new-born baby.

*[உற்பவ + நாடி.]*

*[Skt. ud-bhava > த. உற்பவம்.]*

நாளி → நாழி → நாடி = அரத்த அல்லது மூச்சுக்குழாய், ஊதை (வாத) பித்துக் கோழை நாடி, நாடித்துடிப்பு (வ.வ.1,19).

**உற்பவம்** *urpavam,* பெ.(n.) 1. தோற்றம், உருவாக்கம் (உற்பத்தி); origin, birth. *"மானுடவுற்பவம் பெற்று வாழுத லரிது" (பாரத. சஞ்சய. 7).* 2. கருக்கொள்ளுகை; conception.

*[Skt. vd-bhava > த. உற்பவம்.]*

**உற்பவமா-தல்** *urpava-mā-,* 6 செ.கு.வி. (v.i.) 1. பிறத்தல்; to be born. 2. கருக் கொள்ளுதல்; to conceive.

*[உற்பவம் + ஆ-,]*

*[**Skt.** ud-bhava > த. உற்பவம்.]*

**உற்பவமாலை** *urpava-mālai,* பெ.(n.) திருமாலின் பதின் தோற்றரவுக் கதைகளையும் ஆசிரிய மண்டில (விருத்த)த்தாற் கூறும் தெய்வப் பனுவல் (பிரபந்தம்) (தொன். 283, உரை); poem which describes the ten incarnations of Viṣṇu.

*[உற்பவம் + மாலை.]*

*[**Skt.** ud-bhava > த. உற்பவம். மால்>மாலை.]*

**உற்பவி[1]-த்தல்** *urpavi-,* 11 செ.கு.வி.(v.i.) தோன்றுதல்; to be conceived, be born; to originate, come into existence, to rise, as the sun. *"உற்றயோனி கடம்பிலுற்பவியாமல்" (பாரத. சஞ்சய. 7).* 2. கரு உண்டாதல்; to be conceived.

*[**Skt.** ud-bhava > த. உற்பவி-த்தல்.]*

**உற்பவி[2]-த்தல்** *urpavi-,* 11 செ.குன்றாவி. (v.t.) தோற்றுவித்தல்; to bring into existence, create. *"நாவல னோமத்தீயி னம்மையுற்பவித்து விட்டான்" (பாரத. நச்சு. 41).*

*[**Skt.** ud-bhava > த. உற்பவி-,]*

**உற்பவிப்பு** *urpavippu,* பெ.(n.) கருவுறுகை; formation in the womb, conception, fructification.

*[உற்பவி → உற்பவிப்பு. 'பு' தொ.பெ.ஈறு.]*

**உற்பன்னம்** *urpannam,* பெ.(n.) 1. **உற்பனம்[1]** பார்க்க; see *urpanam.* 2. விடத்தேர்; mint. 3. தோற்றம்; visible manifestation due to the power of incantation.

*[**Skt.** uyut-panna > த. உற்பன்னம்.]*

**உற்பன்னமருந்து** *urpanna-marundu,* பெ.(n.) நற்கலை கூட்டு மருந்து; a medicine of extraordinary virtues.

*[உற்பன்ன + மருந்து.]*

*[**Skt.** urpanna > த. உற்பன்ன. மரம்→மரு → மருந்து.]*

**உற்பனம்[1]** *urpanam,* பெ.(n.) 1. வல்விரைந் தறிகை; quick apprehension. *"உற்பனமாகக் கிரகிக்கிறது.* 2. ஏற்பு, நன்று (உத்தமம்); excellence, exquisiteness. *"அவனிடத்தில் உற்பனமான செயல் (காரியங்)களுண்டு".*

*[**Skt.** ut-panna > த. உற்பனம்.]*

**உற்பனம்[2]** *urpanam,* பெ.(n.) 1. தோன்றியது; that which is born, produced. *"உற்பன வேதத் திருப்பொருளை" (இரகு. அரசி. 4).* 2. புள்குறி (நிமித்தம்); omen. *"இவ்வகை யுற்பனங் காட்ட" (விநாயகபு. 75, 125).*

*[**Skt.** ut-panna > த. உற்பனம்.]*

**உற்பாகநிபாக** *urpāga-nibāga,* பெ.(n.) சரியாகச் சமைத்தல்; cooking thoroughly and well, cooking properly.

**உற்பாசிதம்** *urpāśidam,* பெ.(n.) சரியாகக் கொதிக்க வைத்தல்; heating or boiling thoroughly or correctly.

**உற்பாடகம்** *urpāḍagam,* பெ.(n.) 1. **உற்பாடம்** பார்க்க; see *urpāḍam.* 2. மரத்தின் வெளிப்பக்கத்துப் பட்டை; the external bark of a tree. 3. சரபப் பறவை (பட்சி); a fabulous eight legged bird supposed to attack even the lion.

**உற்பாடசயனம்** *urpāḍa-śayanam,* பெ.(n.) 1. நின்றபடித் தூக்கம், கோழித் தூக்கம்; sleeping while standing on the legs as fowls do. 2. ஒரு வகைக் கோழி; a species of fowl. 3. குறைந்த தூக்கம்; slight sleep.

**உற்பாடம்** *urpāḍam,* பெ.(n.) 1. வேரொடு பிடுங்கல்; pulling up by the root. 2. அழித்தல்; destroying. 3. காதின் வெளிப்புறம் ஏற்படும் நோய்; a disease of the external ear.

**உற்பாடனம்** *urpāḍanam,* பெ.(n.) 1. வேரொடு பிடுங்கல்; pulling up by the root. 2. கிழித்தல்; tearing out.

**உற்பாதகம்** *uṟpādagam,* பெ.(n.) எண்காற்பூச்சி; an insect with eight legs, a spider.



**உற்பாதபிண்டம்**[1] *uṟpāda-piṇḍam,* பெ.(n.) தகவு, மேதாவி; genius, prodigy.

*[உற்பாத + பிண்டம்.]*

*[Skt. utpāta > த. உற்பாதம். பிள் → பிண்டி. பிண்டித்தல் = தொகுத்தல், திரட்டுதல். பிண்டி = கூட்டம், வடிவம். பிண் → பிண்டி → பிண்டம்.]*

**உற்பாதபிண்டம்**[2] *uṟpāda-piṇḍam,* பெ.(n.) தீயநிமித்தமாகக் கொடூரமான உருவத்துடன் பிறந்த பிண்டம்; a foetus of unnatural form on of great size or one exhibiting very abnormal structure or malformation - monster.

*[உற்பாதம் + பிண்டம்.]*

*[Skt. utpāta > த. உற்பாதம். பிண் → பிண்டி → பிண்டம்.]*

**உற்பாதம்** *uṟpādam,* பெ.(n.) 1. தீய(துர்க்)குறி; portent, evil omen, preternatural, phenomenon boding calamity. *"உற்பாதமாகப் படியிடை யற்று வீழ்ந்த......... பதாகை" (கம்பரா.தாட.74).* 2. கடுந்துன்பம்; excess of trouble, great suffering or pain.

*[Skt. ut-pāta > த. உற்பாதம்.]*

**உற்பாதயோகம்** *uṟpāda-yōgam,* பெ.(n.) ஒரு நன்றல்லா (தீய) வேளை (அசுபயோகம்); (Astrol.) an inauspicious conjunction of a week-day with a lunar asterism, one of six *yōgam.*

*[Skt. ut-pāta+yōgam > த. உற்பாதயோகம்.]*

**உற்பாதி-த்தல்** *uṟpādi-,* 11 செ.குன்றாவி. (v.t.) உண்டாக்குதல்; to cause to be. *"வல்லே யுற்பாதிக்கும் வலி" (ஞானா. 15, 15).*

*[Skt. ut-pad-, > த. உற்பாதி-,]*

**உற்பாலனம்** *uṟpālaṉam,* பெ.(n.) நோயணுகாதபடித் தடுத்துக் கொள்ளல்; preventing from being attacked with diseases by following hygienic principles.

**உற்பாலனி** *uṟpālaṉi,* பெ.(n.) நோய்த்தடுப்பு; preventive.

**உற்பிச்சம்** *uṟpiccam,* பெ.(n.) உயிர்த் தோற்றம் நான்கனுள் வித்து, வேர் முதலிய வற்றினின்று தோன்றுவன; lives that sprout or germinate from seeds, roots twigs etc., plant life, one of four *uyir-t-tōṟṟam.*

*[Skt. ud-bhij-ja > த. உற்பிச்சம்.]*

**உற்பிசம்** *uṟpiśam,* பெ.(n.) நிலத்திணை (தாவரம்); that which is produced from the earth, vegetable kingdom.

**உற்பிட்டம்** *uṟpiṭṭam,* பெ.(n.) 1. நொறுங்கினது; crushed or bruised. 2. முறிவு அல்லது சுளுக்கு; (in surgery) a kind of fracture or dislocation.

**உற்பிண்டிதம்** *uṟpiṇḍidam,* பெ.(n.) வீக்கம்; swelling.

**உற்பித** *uṟpida,* பெ.(n.) உப்பு (இலவணம்); saline.

**உற்பிதம்** *uṟpidam,* பெ.(n.) கறியுப்பு; common or culinary salt.

**உற்பிரேட்சை** *uṟpirēṭcai,* பெ.(n.) தற்குறிப்பேற்றம் (அணியி. 12); (Rhet.) poetical fancy, a figure of speech which consists in the poet indulging in a flight of fancy whereby he seeks to find motives and purposes in natural things and objects.

*[Skt. ut-prēksā > த. உற்பிரேட்சை.]*

**உற்பீசம்** *uṟpīśam,* பெ.(n.) **உற்பிச்சம்** பார்க்க; see *uṟpiccam.* *"அண்டஞ் சுவேதசங்க ளுற்பீசஞ் சராயுசத்தோடு" (சி.சி.2, 89).*

*[Skt. ud-bhij-ja > த. உற்பீசம்.]*

**உற்பீடம்** *urpīḍam,* பெ.(n.) நசுக்கல்; squeezing, crushing.

**உற்புடகம்** *urpuḍagam,* பெ.(n.) காதின் வெளிப்பக்கத்து நோய்; a disease of the external ear.

**உற்பேதம்** *urpēdam,* பெ.(n.) முளைத்தல்; germination.

**உறுமால்** *urumāl,* பெ.(n.) **உருமால்** பார்க்க; see *urumāl.*

*[U. rūmāl > த. உறுமால்.]*

**உன்மச்சனம்** *unmaccanam,* பெ.(n.) காய்ச்சல் உண்டாக்குமோர் பெண் பேய்; a female demon causing fever.

**உன்மத்தகம்** *un-mattagam,* பெ.(n.) 1. ஊமத்தை; thorn apple. *"உன்மத்தக மலர் சூடி" (தேவா. 1200, 6).* 2. கோட்டி (பைத்தியம்); insanity.

*[Skt. un-mattaka > த. உன்மத்தகம்.]*



**உன்மத்தகி** *unmattagi,* பெ.(n.) 1. குறிஞ்சா (மலை.); common delight of the woods. 2. சிறுகுறிஞ்சா (மூ.அ.); a medicinal climber.

**உன்மத்தகோரம்** *unmatta-kōram,* பெ.(n.) கல் வாழை; stone plantain.

**உன்மத்ததொந்தம்** *unmatta-tondam,* பெ.(n.) கல் வாழை; stone plantain.

**உன்மத்தநாகலை** *unmatta-nāgalai,* பெ.(n.) தலைக்கு (பிரம்மரந்திரத்திற்கு) மேல் படர்ந் (வியாபித்) திருக்கும் ஒருவகைக் கலை; a subtle emanation of light found extending over the fontanelle or the crown of the head, aura.

**உன்மத்தபிரலாபிதம்** *unmatta-piralābidam,* பெ.(n.) கோட்டியின் பிதற்றல்; the chatter of a mad man.

**உன்மத்தம்** *un-mattam,* பெ.(n.) 1. வெறி; madness, infatuation, frenzy. *"உன் மத்த மேற் கொண் டுழிதருமே" (திருவாச. 5, 7).* 2. மயக்கம் (பிங்.); stupor, induced by drugs or mantras. 3. காமன்கணைகளுள் உன்மத்த முண்டாக்குவது (ஆ.நி.); the arrow of Kāma whose dart makes one mad on account of love. 4. காமனைங் கணைகளிலொன்றன் செயல் (பிங்.); action of one of the five arrows of Kāma. 5. ஊமத்தை (திவா.); datura or thorn apple.

*[Skt. un-matta > த. உன்மத்தம்.]*

**உன்மத்தரோகநாசினி** *unmatta-rōga-nāšini,* பெ.(n.) மனக்கோளாற்றினையும், மனக்குழப்பத்தினையும் நீக்கும் தன்மை பொருந்திய நறுந்தக்காளி; an unknown plant probably of the physalis genus capable of curing mental disturbances and disorders.

**உன்மத்தரோகம்** *unmatta-rōgam,* பெ.(n.) வளி முதலா யெண்ணிய மூன்றும் (வாத பித்த சிலேட்டுமம்) தத்தம் வழியின்று தப்பி நடக்கும் போது உடலுக்குச் செல்லும் நரம்புகள் தாக்கப்பட்டு, மன வேறுபாட்டை (விசறபத்தை) யுண்டு பண்ணுமோர் வகை மனநலக் கோளாறு (சித்தப் பிரமை); a disease in which the deranged bodily humours transversing the upper part of the body, affect the up coursing nerves and produce thereby a distracted state of the mind, insanity.

**உன்மத்தவாதம்** *unmatta-vādam,* பெ.(n.) ஊதை (வாத)ச் சூலை அல்லது ஊதை (வாத)ப் பிடிப்பினால் ஏற்படும் கோட்டி (பைத்தியம்);

insanity due to gout or rheumatism, arthritic insanity.

**உன்மத்தன்** *uṉ-mattaṉ,* பெ.(n.) 1. வெறியன், பித்தன்; mad man, infatuated person. *"மனவாசகங்கடந்தானெனைமத் தோன்மத்த னாக்கி" (திருவாச. 34, 3).* 2. வெறியன்; infatuated or intoxicated person.

*[Skt. un-matta > த. உன்மத்தன்.]*

**உன்மத்தி** *uṉmatti,* பெ.(n.) குறிஞ்சா; species of scammony swallow wort.

**உன்மத்து** *uṉmattu,* பெ.(n.) ஊமத்தை; datura.

*[Skt. un-matta > த. உன்மத்து.]*

**உன்மத்துவம்** *uṉmattuvam,* பெ.(n.) 1. மனநலக்கோளாறு (பைத்தியம்); insanity. 2. குடி மயக்கம் (போதை); intoxication.

**உன்மத்தை** *uṉmattai,* பெ.(n.) ஊமத்தை (மலை.); datura.

**உன்மதகம்** *uṉmadagam,* பெ.(n.) 1. **உன்மத்தம்** பார்க்க; see *uṉmattam.* 2. செவிப் புறத்தில் வரும் நோய்; a disease of the outer ear.

**உன்மதம்** *uṉ-madam,* பெ.(n.) 1. கழிகாமம்; intense lust, lasciviousness. *"முன்னமுன் மதத்தான்" (பாரத. குரு. 95).* 2. அறிவு (புத்தி) மயக்கம்; stupor induced by drugs like ganjah. 3. கோட்டி (பைத்தியம்); lunacy. 4. மயக்கம்; giddiness. 5. வெறி; intoxication.

**உன்மதனம்** *uṉmadaṉam,* பெ.(n.) காமவெறி கொள்ளல்; being inflamed with love.

**உன்மதிதம்** *uṉmadidam,* பெ.(n.) வெறி (ஆவேசங்) கொள்ளல்; being excited, being wrought up into an ecstatic state.

**உன்மந்தம்** *uṉmandam,* பெ.(n.) செவ்விண்டுக் கொடி; a red variety of creeper of the species of mimosa.

**உன்மனி** *uṉmaṉi,* பெ.(n.) ஒகிகளுக்கு மட்டும் புலப்படும் உடம்பிலுள்ளவோர் ஒக இடம் (யோகத்தானம்); a mystic centre of the body, perceived only by person of high spiritual development. *"உன்மனிக்கு ளொளிர்பரஞ் சோதியாம்" (தாயு. பொன். 38).*

*[Skt. un-manas > த. உன்மனி.]*

**உன்மனை** *uṉmaṉai,* பெ.(n.) இறங்கு வகை (பிராசாத) வியல்பி னொன்று; (in yoga practice) the mind or soul in the lower or the descending state of (அவஸ்தை) the five stages of consciousness of the soul.

**உன்மாதபித்தம்** *uṉmāda-pittam,* பெ.(n.) பித்தம் மிகுதியினால் அறிவிழந்து, வெட்கம் விட்டுத் தூக்கமின்றிப் பித்தனைப் போன்ற குணங்களை யுண்டாக்குமோர் வகை நோய்; due to the excessive secretion of bile in the system any uneasiness or indisposition (malaise) marked by loss of sense and shame, sleeplessness and expansive emotional state like that of a lunatic.

*[உன்மாதம் + பித்தம்.]*

*[Skt. un-māda > த. உன்மாதம்.*

*பித்து → பித்தம்.]*

**உன்மாதம்**[1] *uṉmādam,* பெ.(n.) 1. வெறி; madness, mania, intoxication. 2. மயக்கம்; giddiness. 3. மனநலக்கோளாறு (சித்தப்பிரமை); mentals torpor.

*[Skt. un-māda > த. உன்மாதம்.]*

**உன்மாதம்**[2] *uṉmādam,* பெ.(n.) **உன்மத்தரோகம்** பார்க்க; see *uṉmatta-rōgam.*

**உன்மாதரோகம்** *uṉmāda-rōgam,* பெ.(n.) **உன்மத்தரோகம்** பார்க்க; see *uṉmatta-rōgam.*

**உன்மாதவானு** *unmāda-vānu,* பெ.(n.) மன நலக்கோளாறு (சித்தப்பிரமை) கொண்டவன்; one who is affected with insanity, lunatic.

**உன்மாதனம்** *unmādanam,* பெ.(n.) பித்து பிடிக்கச் செய்தல்; causing lunacy as in sorcery.

**உன்மானம்** *unmānam,* பெ.(n.) அளவிடுகை, நிறுக்கை (பி.வி.23, உரை); weighing, measuring.

*[Skt. un-māna > த. உன்மானம்.]*

**உன்மீலனல்** *unmīlanal,* பெ.(n.) கண்ணிமைத்தல்; winking.

**உன்முகம்** *un-mugam,* பெ.(n.) 1. முன்னோக்குகை; raising the face, looking up. 2. உதவியாயிருக்கை; taking a favourable attitude. *"சிவசத்தி அவ்வக் காரியங்களில் உன்முகமாதலாகிய சங்கற்பம்" (சி.போ.5, 2,1,சிற்.).* 3. ஒன்றிற் கருத்தாயிருக்கை (வின்.); intentness in a pursuit.

*[உன் + முகம்.]*

*[Skt. un > த. உன்.]*

**உன்முகன்** *un-mugan,* பெ.(n.) கருத்தொன்றியிருப்பவன்; he that is intent on an object. *"சூதிலே யுன்முகனாயிருக்கிறான் (வின்.).*

*[உன் + முகன்.]*

*[Skt. un- > த. உன்.*

*முகம் → முகன். 'ன்' ஆ.பா.ஈறு.]*

**உன்முகி** *unmugi,* பெ.(n.) **உன்முகன்** (வின்.) பார்க்க; see *un-mugan.*

*[உன் + முகி.]*

*[Skt. un- > த. உன். முகம் → முகி. 'இ' உடைமை குறித்ததோ ரீறு.]*

**உன்மேடம்** *unmēdam,* பெ.(n.) கண்ணிமை விரித்தல்; excessive separation of the eye lids, causing the eye to be open very wide.

**உன்மேதை** *unmēdai,* பெ.(n.) கொழுப்பு; fat.

**உன்மை** *unmai,* பெ.(n.) தசை பிடுங்குங் குறடு; an instrument by which pieces of flesh or muscles are pulled out from the body.

**உன்னதம்** *unnadam,* பெ.(n.) 1. உயர்ச்சி (திவா.); height, elevation loftiness. 2. மேன்மை; eminence.

*[Skt. un-nata > த. உன்னதம்.]*

**உன்னததானம்** *unnata-tānam,* பெ.(n.) உயர்விடம், மேலிடம்; elevated place, high position.

*[Skt. un-nata+stānam > த. உன்னததானம்.]*

**உன்னதை** *unnadai,* பெ.(n.) மும்முரம்; a periodical increase in the severity of any symptoms or of violence in a disease.

**உன்னமாகதம்** *unnamāgadam,* பெ.(n.) புல்லாமணக்கு; creeping amanak.

**உன்னயம்** *unnayam,* பெ.(n.) 1. பரிநூற் கலை (அசுவசாத்திரம்)களுளொன்று; a treatise on the doctrine of diseases of horses. 2. உயர்த்துகை; elevating.

**உன்னயவங்கம்** *unnaya-vaṅgam,* பெ.(n.) பீசைப்புல்; a kind of grass (unidentified).

**உன்னயனம்** *unnayanam,* பெ.(n.) 1. நீர் வாங்கல்; drawing out a fluid. 2. நீள நினைத்தல் (ஆலோசித்தல்); thoughtful consideration. 3. ஊழ்கம் (தியானம்); that form of intelligent and exercised attention in which the mind is elevated and the emotions are aroused.

**உன்னலாகம்** *unnalāgam,* பெ.(n.) முன்றொடரிக்கு எதிரானதும் மாயக் கலையில் பயன்படுவதுமான பின் தொடரி; a plant (unknown) causing bewilderment.

**உன்னாகம்** *unnāgam,* பெ.(n.) காடி; sour-gruel made from the fermentation or rice.

**உன்னாகன்கொடி** *unnāgan-kodi,* பெ.(n.) பெருமுசுட்டை; many flowered bind weed.

**உன்னாம்** *unnām,* பெ.(n.) 1. (யுனானி) சீமையிலந்தைப் பழம்; foreign jujuba. 2. அரத்தி (ஆப்பிள்)ப் பழம்; apple.

**உன்னாயங்கொடி** *unnāya-n-kodi,* பெ.(n.) ஒரு வகைக் கொடி; a kind of creeper.

த.வ. ஒணான் கொடி.

**உன்னாயம்** *unnāyam,* பெ.(n.) 1. சோனைப் புல்; guinea grass. 2. உயர்த்துகை; elevating.

**உன்னாலயம்** *unnālayam,* பெ.(n.) நெஞ்சாங்குலை (இருதயம்); heart.



**உன்னி** *unni,* பெ.(n.) 1. ஏறழிஞ்சில்; sage-leaved alangium. 2. உண்ணி எனும் ஒரு வகைக் கொடி; orange flowered lantana. 3. நீள நினைக்கும் (தியானிக்கும்) பொருள்; object of contemplation. 4. கருத்தொன்றிப் பார்க்கும் பொருள்; (in occult science) subject which is concentrated upon.

**உன்னிசன்னி** *unni-šanni,* பெ.(n.) இடைவிடாது கண்ணூன்றிப் பார்த்தலினாலும் நினைத்தல் அல்லது எண்ணு (யோசித்) தலாலும் ஏற்படும் மயக்கம் அல்லது துன்பம்; fainting or temporary suspension of consciousness due to steadfast looking or by constant thinking.

**உன்னு** *unnu,* பெ.(n.) 1. சடைச்சி; common Indian linden. 2. பலிசை; sweet falsah.

**உனத்தகு** *unattagu,* பெ.(n.) குறிஞ்சா; Indian ipecacuanha.

**உனத்திதம்போக்கி** *unattidampōkki,* பெ.(n.) கற்றுளசி; stone basil.

**உனினம்** *uninam,* பெ.(n.) சிறு பூனை; woolly caper.

**ஊக்கு** *ūkku,* பெ.(n.) கொக்கி; clasp, used in clothing.

*[E. hook > த. ஊக்கு.]*

**ஊக்கும்** *ūkkum,* பெ.(n.) உத்தரவு; order (P.T.L.).

*[U. hukkum > த. ஊக்கும்.]*

**ஊகடகம்** *ūgaḍagam,* பெ.(n.) ஒரு வகை மீன்; a kind of fish.



**ஊகடன்** *ūkaḍan,* பெ.(n.) முருங்கை (மூ.அ.); horse radish tree.

**ஊகண்டகம்** *ūganḍagam,* பெ.(n.) கடலை; Bengal gram.

**ஊகத்தாதனம்** *ūgattādanam,* பெ.(n.) ஒக விருக்கை வகை (யோகாசன வகை) (தத்துவப். 107, உரை); (šaiva.) a yōgicposture.

**ஊகாக்கியம்** *ūgākkiyam,* பெ.(n.) கலவைக் கீரை; different varieties of greens mixed together for use in food.

**ஊகாஞ்சிதம்** *ūgāñjidam,* பெ.(n.) தற்குறிப் பேற்றயணி வகை (தொன். வி. 346); a figure of speech.

*[Skt. ūha+añcita > த. ஊகாஞ்சிதம்.]*

**ஊந்து** *ūndu,* பெ.(n.) கச்சோலம் (வின்.); cardamom husk.

**ஊர்ச்சங்கிழங்கு** *ūrccaṅ-kiḻaṅgu,* பெ.(n.) நளி (கார்த்திகை)க் கிழங்கு; the root of November flower plant.

*[ஊர்ச்ச(ம்) + கிழங்கு. கீழ் > கீழ்ங்கு > கிழங்கு.]*

**ஊர்ச்சசம்** *ūrccaśam,* பெ.(n.) வலிமை (பலம்); strength.

**ஊர்ச்சம்** *ūrccam,* பெ.(n.) 1. நளி (கார்த்திகை) மாதம்; the Tamil month corresponding to November. 2. உயிர்; life. 3. மூச்சு; breath.

**ஊர்ச்சிதப்படு-தல்** *ūrccida-p-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) நிலைப்படுதல் (ஸ்திரப் படுதல்); to be confirmed, as in an appointment, to be ratified, as an arrangement.

*[ஊர்ச்சிதம் + படு-,]*

*[**Skt.** ūrjita > த. ஊர்ச்சிதம். 'படு' து.வி.]*

**ஊர்ச்சிதம்** *ūrccidam,* பெ.(n.) 1. நம்பகத் தன்மை; confirmation, ratification. 2. வலுக்கட்டாயம்; importunity, compulsion. *'அவ்வளவு ஊர்ச்சிதமாய்க் கேட்கக்கூடாது'.*

*[**Skt.** ūrjita > த. ஊர்ச்சிதம்.]*

வடமொழியில் வலிமைப்படுத்துதல், எழுச்சியூட்டுதல், புத்துயிரூட்டுதல் எனப் பொருள்படும் *ūrj* என்னும் அடியிலிருந்து உருவான *ūrjita* என்னும் சொல்லிற்கு வலிமை, ஆற்றல், பேராண்மை போன்ற பொருள்கள் உள்ளன (மா.வி.). தமிழில் இச்சொல் பெரும்பான்மை உறுதிப்படுத்துதல் என்னும் பொருளிலேயே வழக்கூன்றியுள்ளது.

**ஊர்ணநாபி** *ūrṇa-nābi,* பெ.(n.) சிலந்திப் பூச்சி வகை; species of woolly spider.

*[**Skt.** ūrṇa-nābhi > த. ஊர்ணநாபி.]*



**ஊர்ணம்** *ūrṇam,* பெ.(n.) 1. ஆட்டு மயிர்; sheep's hair. 2. புருவ நடுச் சுழி; the spiral or curve between the eye-brows.

**ஊர்த்தசைவம்** *ūrtta-śaivam,* பெ.(n.) சிவனியம் (சைவம்) பதினாறனுள் ஒன்று (அபி. சிந்.); śaiva sect which emphasises the fact that Šivaṉ is above all tattvas, one of 16 śaivam.

*[**Skt.** ūrdhva > த. ஊர்த்த.]*

சிவ > சிவம் > சிவன் = சிவந்தன்.

*[சிவன் > **Skt.** śiva > śaiva > த. சைவம்.]*

**ஊர்த்தம்**[1] *ūrttam,* து.வி.(adv.) **ஊர்த்துவம்** பார்க்க; see *ūrttuvam.*

*[**Skt.** ūrdhva > த. ஊர்த்தம்.]*

**ஊர்த்தம்**[2] *ūrttam,* பெ.(n.) மேடு (நாமதீப.); upland, highland.

**ஊர்த்தமுகி** *ūrtta-mugi,* பெ.(n.) பூடு வகை (நாமதீப.); a plant.

**ஊர்த்தவெள்ளை** *ūrttaveḷḷai,* பெ.(n.) ஒரு வகை மீன்; a kind of fish. *"கெண்டைக்கார லூர்த்த வெள்ளை" (பறாளை. பள்ளு. 16).*

**ஊர்த்துவகததோசம்** *ūrttuva-kada-dōṣam,* பெ.(n.) ஒரு வகை எலும்புருக்கி நோய் (சய ரோகம்); a morbid affection.

**ஊர்த்துவககதம்** *ūrttuvaga-gadam,* பெ.(n.) 1. மேற் செல்லல்; rising upwards. 2. மேன்முக நோக்கம்; upward tendency.

**ஊர்த்துவகதி** *ūrttuva-gadi,* பெ.(n.) மேனோக்கிச் செல்கை; ascent, as of heavenly bodies, of celestials.

*[**Skt.** ūrdhva+gadi > த. ஊர்த்துவகதி.]*

**ஊர்த்துவகந்தம்** *ūrttuva-kandam,* பெ.(n.) தண்ணீர் விட்டான் கிழங்கு; climbing asparagus.

**ஊர்த்துவகமனி** *ūrttuva-kamaṉi,* பெ.(n.) மேலெழுப்பி வான் வழியே செல்பவன்; one who ascends in the aerial regions.

**ஊர்த்துவகலிகை** *ūrttuva-kaligai,* பெ.(n.) கூத்தின் உடலசைவுகளுளொன்று (சிலப். பக். 81); a mode of gesticulation in dancing.

*[Skt. ūrdhva+kalikai > த. ஊர்த்துவகலிகை.]*

**ஊர்த்துவகாமினி** *ūrttuva-kāmiṉi,* பெ.(n.) மேனோக்கிச் செல்லுங் குதிரை (வின்.); horse which mounts to the skies.

*[Skt. ūrdhva+gāmin > த.ஊர்த்துவகாமினி.]*

**ஊர்த்துவகாயம்** *ūrttuva-kāyam,* பெ.(n.) 1. உடம்பின் மேற்புறம்; the upper part of the body as opposed to அதோ காயம், the lower part. 2. மேனோக்கிய முகம்; the face in or the lock towards the upward direction; organs facing upwards. 3. மனித உடம்பு; the human body.

**ஊர்த்துவகேசம்** *ūrttuva-kēšam,* பெ.(n.) மயிர்க் கூச்சிடல்; having the hair erect, horripilation.

**ஊர்த்துவசிதம்** *ūrttuva-šidam,* பெ.(n.) பாகற்காய்; balsam pear.



**ஊர்த்துவசீலம்** *ūrttuva-šīlam,* பெ.(n.) நெருப்பு; fire having a tendency to pass or spread upwards.

**ஊர்த்துவசுவாசம்** *ūrttuva-šuvāšam,* பெ.(n.) 1. மேல் மூச்சு; short breathing, as of a dying person. 2. இரைப்பு நோய்வகை; a kind of asthma attended with hard breathing.

*[Skt. ūrdhva+cuvāšam > த. ஊர்த்துவசுவாசம்]*

**ஊர்த்துவசூதம்** *ūrttuva-šūdam,* பெ.(n.) 1. குடல் நோய் (ரோகங்)கள்; diseases of the bowels as in iliac passion. 2. வாய் நாற்றம் முதலிய குணங்களை யுண்டாக்கும் ஒரு வகை நோய்; a disease due to the vital air apana passing upwards through the alimentary canal from various causes.

**ஊர்த்துவதாண்டவம்** *ūrttuva-tāṇḍavam,* பெ.(n.) மேலே ஒரு பாதத்தைத் தூக்கியாடும் நடனம்; dance with one leg poised upward, as Šivaṉ's.

*[ஊர்த்துவ(ம்) + தாண்டவம்.]*

*[Skt. ūrdhva > த. ஊர்த்துவம்.]*

தாண்டுதல் = குதித்தாடுதல். தாண்டு → தாண்டவம், கூத்துவகை.



**ஊர்த்துவதேகம்** *ūrttuva-dēgam,* பெ.(n.) கொப்பூழ (நாபி)க்கு மேற்பட்டவுடற் பகுதி; that part of the body above the navel region; the upper part of the body.

[*Skt.* *ūrdhva+dēha* > *த. ஊர்த்துவதேகம்.*]

**ஊர்த்துவநயனம்** *ūrttuva-nayaṉam,* பெ.(n.) சரபப் பறவை (பட்சி); a fabulous bird.



**ஊர்த்துவநிருத்தம்** *ūrttuva-niruttam,* பெ.(n.) 1. ஊர்த்துவதாண்டவம்; Šivaṉ's dance with one leg poised upward. 2. ஒரு கால் மேனோக்கி நிற்க அதனை ஒரு கை கொண்டு கட்டி ஒரு காலினிற்கை (தத்துவப். 109. உரை); (šaiva.) standing on one leg, the other leg being raised upward and held by one hand.

[*ஊர்த்துவ(ம்) + நிருத்தம்.*]

நளிதல் = ஒத்தல். நளி → நடி. நடித்தல் = ஒத்து நடத்தல், நாடகம் நிகழ்த்தல், கூத்தாடுதல், பாசாங்கு செய்தல். நடி → நடம் – நட்டம் (வட.வ.2.18). நட்டம் → **Skt.** nrtta → **த.** நிருத்தம்.

[*Skt.* *ūrdhva* > *த. ஊர்த்துவம்.*]

**ஊர்த்துவபாகம்** *ūrttuva-bāgam,* பெ.(n.) மேற்பாகம்; the upper part, the higher part.

[*ஊர்த்துவ(ம்) + பாகம்.*]

[*Skt.* *ūrdhva* > *த. ஊர்த்துவம்.*]

**ஊர்த்துவபாதம்** *ūrttuva-pādam,* பெ.(n.) மேனோக்கிய பாதத்தையுடைய எட்டுக்காற் பூச்சி; a spider with legs turned upwards.

[*ஊர்த்துவ(ம்) + பாதம்.*]

[*Skt.* *ūrdhava* > *த. ஊர்த்துவம். பதி > பாதம்.*]

**ஊர்த்துவபாதனம்** *ūrttuva-pādaṉam,* பெ.(n.) 1. பதங்கித்தல்; sublimation. 2. இதள் (இரசம்) மேலே எழும்படிச் செய்தல்; the act of causing mercury to rise up. 3. இதள் (இரசம்) பதங்கம்; sublimation of mercury.

**ஊர்த்துவபாதனயந்திரம்** *ūrttuva-pādaṉa-yandiram,* பெ.(n.) ஆவியாக்கப் பயன்படும் துணைக்கருவி; an apparatus or vessel used in the process of vaporizing and condensing substances such as mercury etc.

**ஊர்த்துவபித்தம்** *ūrttuva-pittam,* பெ.(n.) மேனோக்கிய பித்தம்; bile tending to pass upwards.

[*ஊர்த்துவ(ம்) + பித்தம்.*]

[*Skt.* *ūrdhva* > *த. ஊர்த்துவம். பித்து > பித்தம்.*]

**ஊர்த்துவபித்தரோகம்** *ūrttuva-pitta-rōgam,* பெ.(n.) ஒரு வகைப் பித்த நோய்; a disease caused by the bile taking an upwards course in the system.

[*ஊர்த்துவ(ம்) + பித்தம் + ரோகம்.*]

[*Skt.* *ūrdhva* > *த. ஊர்த்துவம்.*]

[*Skt.* *roha* > *த. ரோகம்.*]

**ஊர்த்துவபிரகனநாளம்** *ūrttuva-piragaṉa-nāḷam,* பெ.(n.) கார் குருதியை (ரத்தத்தை) மேனோக்கிக் கொண்டு போகும் ஒரு பெரிய நாளக் குழாய்; one of the two great venous trunks going upward.

[*ஊர்த்துவபிரகன + நாளம்.*]

நுள் > நள் > நாள் > நாளம் = உட்டுளையுள்ள தண்டு.

**ஊர்த்துவபுண்டரம்** *ūrttuva-puṇḍaram,* பெ.(n.) நெற்றியின் கீழிருந்து மேற் செல்லுமாறு இடுங் குறி; distinctive sect mark worn vertically esp. on the forehead.

[*Skt.* *ūrdhva + puṇtaram* > *த. ஊர்த்துவபுண்டரம்.*]

**ஊர்த்துவம்[1]** *ūrttuvam,* து.வி.(adv.) மேல்; upwards, aloft, above.

*[**Skt.** ūrdhva > த. ஊர்த்துவம்.]*

vridh என்னும் அடியிலிருந்து ஊர்த்துவம் என்னும் சொல் உருவாகியிருக்கிறது. எழுதல், மேனோக்குதல், மேலாதல், நேராக நிற்றல் போன்ற பல பொருள்களுடன் இச்சொல் வழக்கில் உள்ளன. பெரும்பாலும் இச்சொல் கூட்டுச் சொற்களிலேயே இடம் பெறுகிறது (மா.வி.). மேல் என்னும் பொருளுடன் வழக்கிலுள்ள இச்சொல் பல கூட்டுச் சொற்களிலும் தமிழில் இடம் பெற்றுள்ளது.

**ஊர்த்துவம்[2]** *ūrttuvam,* பெ.(n.) 1. மேலெழும்பல்; rising or tending upwards. 2. மேலே வைக்கப்பட்டது; anything placed higher or above. 3. நிமிர்ந்திருப்பது; that which is erect.

*[**Skt.** ūrdhva > த. ஊர்த்துவம்.]*

**ஊர்த்துவமந்தினம்** *ūrttuva-mandiṉam,* பெ.(n.) விந்து கீழ் நோக்காமை; keeping or restraining the semen from flowing out i.e. abstaining from sexual intercourse.

**ஊர்த்துவமாயை** *ūrttuva-māyai,* பெ.(n.) துன்பமின்றி இன்பமே அளிப்பதும் சொல்லுலகத் (சுத்தப் பிரபஞ்சத்)திற்கு முதற்காரண மானதுமான மாயை (சுத்தமாயை); pure māya, the material cause of *cutta-p-pirapañjam* yielding unmixed happiness, dist. fr. *asutta-māyai.* *"ஒன்று தானே ஊர்த்துவ மாயை அதோமாயை என்றிரு வகைப்படு மென்பாரும்" (சி.போ. சிற். 2, 2, 3.).*

*[ஊர்த்துவ + மாயை.]*

*[**Skt.** ūrdhva > த. ஊர்த்துவம்.]*

**ஊர்த்துவமுகம்** *ūrttuva-mugam,* பெ.(n.) மேனோக்கின முகம் (சைவச. பொது. 338, உரை); upturned face, one of the five faces of Šivaṉ.

*[ஊர்த்துவ(ம்) + முகம்.]*

*[**Skt.** ūrdhva > த. ஊர்த்துவம். த. முகம் > **Skt.** mukha.]*

**ஊர்த்துவமுகராசி** *ūrttuva-muga-rāši,* பெ.(n.) மேனோக்கிய முகத்தையுடைய ஓரை (இராசி) (விதான குணா. 69, உரை); those signs of the zodiac that are supposed to look upwards.

*[**Skt.** ūrdhva > த. ஊர்த்துவம்.*

*த. முகம் > **Skt.** mukha. **Skt.** rāši > த. ராசி.]*

முகம் = முன்பக்கம், தலையின் முன்பக்கம். முகத்தின் முன் நீண்டுள்ள மூக்கு, நுனி, தொடக்கம், முன்பு, முதன்மை.

**ஊர்த்துவமுகவாதம்** *ūrttuva-muga-vādam,* பெ.(n.) முகத்தை அண்ணாந்த படியிருக்கச் செய்யும் ஒரு வகை ஊதை (வாத) நோய்; paralysis turning the face upwards.

*[ஊர்த்துவ(ம்) + முக(ம்) + வாதம்.]*

*[**Skt.** ūrdhva > த. ஊர்த்துவம்.]*

*[த. முகம் > **Skt.** mukha.]*

*[**Skt.** vāda > த. வாதம்.]*

**ஊர்த்துவமுகவிரத்தவொழுக்கு** *ūrttuvamuga-viratta-voḻukku,* பெ.(n.) நாளத்தின் வழியாக மேனோக்கிய முகமாக (குருதி) அரத்தம் வெளிவருதல்; escape of blood from a vein with an upward flow as opposed to அதோ முக விரத்தவொழுக்கு, that from an artery with a downward flow.

*[ஊர்த்துவ முக(ம்) + இரத்த + ஒழுக்கு.]*

*[**Skt.** ūrdhva > த. ஊர்த்துவம்.]*

*[**Skt.** rakta > த. இரத்தம்.]*

**ஊர்த்துவயந்திரம்** *ūrttuva-yandiram,* பெ.(n.) பதங்கத்திற்குப் பயன்படுத்தும் கருவி; an apparatus used in sublimations especially in that of mercury.

**ஊர்த்துவரேதசு** *ūrttuva-rēdašu,* பெ.(n.) வித்தமிழ்தை (சுக்கிலம்) இழக்குறாமல் மேல்முகப்பாக்குபவன்; lit. one who keeps the

semen so that it may not flow downwards, i.e. one who abstains from sexual intercourse.

*[Skt. ūrdhva+rētas > த. ஊர்த்துவரேதசு.]*

**ஊர்த்துவலோகம்** *ūrttuva-lōgam,* பெ.(n.) மேலுலகம்; upper world, heaven.

*[ஊர்த்துவம் + லோகம்.]*

*[Skt. ūrdhva > த. ஊர்த்துவம்.]*

*[த. உலகம் > Skt. lōka > த. லோகம்.]*

**ஊர்த்துவாங்கம்** *ūrttuvāṅgam,* பெ.(n.) இடுப்பிற்கு மேலுள்ள உறுப்பு (தைலவ. தைல. 54, உரை); part of the body above the waist.

*[Skt. ūrdhva+aṅga > த. ஊர்த்துவாங்கம்.]*

**ஊர்த்துவாமிச்சிரவாதம்** *ūrttuvāmi-c-ciravādam,* பெ.(n.) தலைவலியுண்டாக்குமோர் ஊதை (வாத) நோய்; ncuralgia affecting chiefly the head or the facial region.

**ஊர்மி** *ūrmi,* பெ.(n.) 1. வயிற்றின் மடிப்பு; the folds of the abdomen. 2. இன்ப துன்பங்களின் அலைவு; the wave of pain or passion. 3. உயிர் வாழ்க்கைக்கு ஏற்பட்ட ஆறுவகை நிலை மாற்றங்கள்; the six waves of existence.

**ஊர்வசி** *ūrvaśi,* பெ.(n.) தேவருலகத்து நாடகமகளிரி லொருத்தி; Urvaši, a nymph, celebrated for her superior skill, in dancing.

*[Skt. ūrvaśi > த. ஊர்வசி.]*

**ஊரணம்** *ūraṇam,* பெ.(n.) 1. புருவத்தின் இடையேயுள்ள மயிர்ச்சுழி; a circle or spiral of hair between the eye-brows. 2. சிலந்திப் பூச்சி; spider.

**ஊரணாயு** *ūraṇāyu,* பெ.(n.) 1. சிலந்தி; spider. 2. ஆடு; goat. 3. கம்பளம்; woollen blanket.

*[Skt. ūrṇāyu > த. ஊரணாயு.]*

**ஊரு** *ūru,* பெ.(n.) தொடை; thigh. *"அவளைத்தன் னூரு மிசை யேற்றி" (கந்தபு. அயிராணிசோ. 7).*

*[Skt. ūru > த. ஊரு.]*

வடமொழியில் மூடுதல், மறைத்தல், சூழ்தல் போன்ற பொருள்களுள்ள *ūrṇa* என்னும் வினைச் சொல்லிலிருந்து *ūru* என்னும் சொல் உருவாகியுள்ளது (மா.வி.). தமிழில் ஊரு என்னும் பெயர்ச்சொல் தொடை என்னும் பொருளில் மட்டும் வழக்கியுள்ளது. இதற்கு அடியான வினைச்சொல் தமிழில் வழக்கெய்தவில்லை.

**ஊருசன்** *ūruśaṉ,* பெ.(n.) வணிகன் (வைசியன்) (நிகண்டு); *vaiśya,* reputed to have been born from Brahma's thigh.

*[Skt. ūru-jā > த. ஊருசன்.]*

**ஊருத்தம்பம்** *ūru-t-tambam,* பெ.(n.) தொடையில் உண்டாகும் ஒருவகை ஊதை (வாத) நோய்; paralysis of the thigh. *"ஓங்கட லூருத்தமாட் சேபம்" (தைலவ. தைல.78).*

*[Skt. ūru+tampam > த. ஊருத்தம்பம்.]*

**ஊருப்பிரகூடம்** *ūru-p-pirakūḍam,* பெ.(n.) கலவியலின் வகை (ஆலிங்கன வகை) (கொக்கோ. 5, 45); a mode of sexual embrace.

*[Skt. ūru+prakūta > த. ஊருப்பிரகூடம்.]*

**ஊரோசம்** *ūr-ōśam,* பெ.(n.) பரந்த புகழ் (கீர்த்தி); wide spread fame. *'ஊரோசம் வீடு பட்டினி'.*

*[Skt. ūru+ōjas > த. ஊரோசம்.]*

**ஊலிகா** *ūlikā,* பெ.(n.) குதிரையின் அகவை (வயது) 20 என்றறியும் அடையாளமாக அதன் பற்களிலும் பற்சதைகளிலும் விழும் தொளை (அசுவசா. 6); hollow in the gums and teeth of a horse, which indicates its age to be twenty.

**ஊலுகம்** *ūlugam,* பெ.(n.) கோட்டான் (வின்.); rock horned-owl.

*[Skt. ulūka > த. ஊலுகம்.]*

வடமொழியில் val என்னும் வேரிலிருந்து ஆந்தையைக் குறிக்கும் ulūka என்னும் சொல் பிறந்துள்ளது (மா.வி.). தமிழில் உலுகம், ஊலுகம் என்னும் இரு வடிவங்கள் உள்ளன.

**ஊனமாசிகம்** *ūṉa-māśigam,* பெ.(n.) இறந்த முன்னோர்க்குச் செய்யும் படையல் (சிராத்த) வகை; sraddha offering to a deceased ancestor performed on the 27th and 45th days, and in the 6th month as well as at the end of the year after death.

*[Skt. ūna+māsika > த. ஊனமாசிகம்.]*

**ஊனாயம்** *ūṉāyam,* பெ.(n.) பிழை (யாழ்.அக.); mistake.

**எக்கண்டபரப்பு** *ekkaṇḍa-parappu,* பெ.(n.) ஒன்றாக இருக்கும் பெரும்நிலப்பரப்பு (வின்.); sheet of one piece.

*[எக்கண்டம் + பரப்பு.]*

*[Skt. ēka > த. ஏகம். ஏகக்கண்டம் > எக்கண்டம்.]*

கள் → கண்டு = துண்டு, கட்டி, நூற்பந்து, சக்கரைக்கட்டி. கண்டு → கண்டம் = துண்டு மாநிலப் பிரிவு. (பட) → பர → பரவு. பர → பரப்பு.

**எக்கம்** *ekkam,* பெ.(n.) நரம்பொன்றுடைய தோலிசைக் கருவி; one-stringed musical instrument. *"தண்ணுமை யெக்க மத்தளி தாழ்பீலி" (திவ். பெரியாழ். 3,4,1).*

**த.வ.** ஏகதந்திரி.

**ஒருகா.** *Skt. ēka* > த. எக்கம்.



**எக்கா** *ekkā,* பெ.(n.) (வட இந்தியாவிலுள்ள ஒற்றைக்) குதிரை வண்டி; a single-horse carriage, in use in north India.

*[H. ekkā > த. எக்கா.]*



**எக்கியம்** *ekkiyam,* பெ.(n.) வேள்வி (திருவானைக். கோச்செங். 70); sacrifice, ceremony in which oblations are offered.

*[Skt. yajña > த. எக்கியம்.]*

இறை யன்பினால் (தேவப்பிரீதியாய்) விருப்பப் பேற்றின் பொருட்டுச் செய்யப்படும் ஓகம் (யாகம்). இது அன்றாடு (நித்தியமாய்ச்) செய்யப்படுவதும் சிறப்பாய்ச் செய்யப்படுவதும் என இரு வகைப்படும். அவற்றுள், அன்றாடு (நித்தியமாய்ச்) செய்யப்படுவது தேவயஞ்ஞும், பிதுர்யஞ்ஞும், பூதயஞ்ஞும், பிரமயஞ்ஞும், மானுஷயஞ்ஞும் எனப்படும். சிறப்பாய்ச் செய்யப்படுவது ஓகம். தேவயஞ்ஞும் என்பது சூரியர், அக்கினி முதலிய தேவர்களைப் பூசிப்பது. பிதுர்யஞ்ஞும் என்பது தாய்தந்தையரை (பிதுர்க்களை)ப் பூசிப்பது. பூதயஞ்ஞும் பூதங்களுக்குக் காவு (பலி) போடுதல். பிரமயஞ்ஞு மென்பது மறை (வேத) யோதுகை. மனித (மானுஷ) யக்ஞும் விருந்தினரை (அதிதிகளை)ப் பூசித்தல். (அபி.சிந்.).

**எக்கியோபவீதம்** *ekkiyōbavīdam,* பெ.(n.) இருபிறப்பினர்கள் தம் தோளில் இட்டுக் கொள்ளும் நூல்; sacred thread worn over the shoulder by men of the twice-born castes.

**த.வ.** பூணூல், முப்புரிநூல்.

*[Skt. yajnōpavīta > த. எக்கியோபரிதம்.]*

**எக்கீன்** *ekkiṉ,* பெ.(n.) நம்பிக்கை (Muham.); faith. *'மருந்தில் எக்கீன் வைத்துச் சாப்பிட வேண்டும்'.*

*[Ar. yaggin > த. எக்கீன்.]*

**எகடம்** *egaḍam,* பெ.(n.) தென்னை (சங்.அக.); coco-palam.

**எகுத்து** *eguttu,* பெ.(n.) வாயு; air, wind.

**எகுன்று** *eguṉṟu,* பெ.(n.) குன்றிச் செடி; crab's eye.

**எச்சம்** *eccam,* பெ.(n.) அலுவல் (யாழ்.அக.); work.

*[Skt. yajña > த. எச்சம்.]*

**எச்சன்** *eccaṉ,* பெ.(n.) 1. வேள்வி செய்வோன்; one who performs a sacrifice. *"தக்கனையு முனிந்தெச்சன் றலைகொண்டான்காண் (தேவா. 596, 9).* 2. வேள்வியின் போது படைத்ததை ஏற்றுக் கொள்வதாகக் கருதப்படும் தேவதை *(கந்தபு. யாகசங். 38);* the deity supposed to be present at a sacrifice and to accept the offerings given.

*[Skt. yajña > த. எச்சன்.]*

**எச்சினி** *ecciṉi,* பெ.(n.) ஏழாமாதம் (சங்.அக.); the seventh month.

**எசமாட்டி** *ešamāṭṭi,* பெ.(n.) குடும்பத்தலைவி; mistress of a household.

*[எசமா(னன்) + ஆட்டி (பெ.பா.ஈறு).]*

*[Skt. yajamāna > த. எசமானன்.]*

**எசமான்** *ešamāṉ,* பெ.(n.) **எசமானன்** பார்க்க; see *ešamāṉaṉ. "மறையோராட்டிட வெசமானாடியே" (மச்சபு. விருக்கவு. 7).*

*[Skt. yajamāna > த. எசமான்.]*

**எசமானன்** *ešamāṉaṉ,* பெ.(n.) 1. வேள்வித்தலைவன்; one who performs a sacrifice. *"ஆன்மாயூப மெசமான் னளவேனும்" (மச்சபு. தடாகவிதி).* 2. தலைவன், முதலாளி, குடும்பத்தலைவன் (கொ.வ.); lord, master, employer, owner, proprietor, head of a family. 3. கணவன் (கொ.வ.); husband.

*[Skt. yajamāna > த. எசமானன்.]*

வடமொழியில் வணங்குதல், ஏத்துதல், படைத்தல், மூலம், மதிப்பளித்தல் போன்ற பொருள்களுள் yaj என்னும் மூலத்திலிருந்து வேள்வியாற்றுதல், வணங்குதல் போன்ற பொருள்களுள்ள yajamāna என்னும் சொல் பிறந்துள்ளது. வேள்விக்குரிய பொருள்களைத் தருபவன், வேள்வி நடத்தும் தலைமைப் பூசகன், புரவலன், முதலாளி, குடும்பம் அல்லது குலத்தலைவன் போன்ற பொருள்களையும் இச்சொல் ஏற்றுள்ளது (மா.வி.). தமிழில் தலைவன், முதலாளி, கணவன் ஆகிய பொருள்களுடன் இச்சொல் பெருவழக்கெய்தியுள்ளது.

**எசமானத்துவம்** *ešamāṉattuvam,* பெ.(n.) தலைமைத்தன்மை; superiority, rank.

*[Skt. yajamāna-tva > த. எசமானத்துவம்.]*

**எசமானி** *ešamāṉi,* பெ.(n.) **எசமாட்டி** பார்க்க; see *ešamāṭṭi.*

எசமானன் (ஆ.பா.) – எசமானி (பெ.பா.). 'இ' பெ.பா.ஈறு.

வேள்வித் தலைவன், தலைமைப் பூசகன், குடும்பம் அல்லது குலத்தலைவன் என்றாற்போன்று பொருள்படும் *yajamāna* வடமொழியில் ஆண்பாற் சொல்லாகவே வருகிறது. தமிழில் பெண்பாற் சொல்லாய் ஆளப்படுகிறது.

**எசமானிக்கை** *ešamāṉikkai,* பெ.(n.) தலைமை (யாழ்.அக.); leadership.

**எசு** *ešu,* பெ.(n.) ஆரிய வேதம் நான்கனு ளொன்றாகிய யசுர்வேதம்; yajur-vēda இருக்கெசுச் சாமவேத நாண்மலர்கொண்டு (திவ். பெரியாழ். 5, 1, 6).

*[Skt. yajur > த. எசு.]*

**எசுர்வேதம்** *ešurvēdam,* பெ.(n.) **எசு** (சிவரக. காயத்திரி. 29) பார்க்க; see *ešu.*

*[Skt. yajurvēda > த. எசுர் வேதம்.]*

**எஞ்ஞம்** *eññam,* பெ.(n.) **எக்கியம்** பார்க்க; see *ekkiyam. 'இருக வெஞ்ஞவீதியினை" (மச்சபு. அநுக்கிர. 26).*

*[Skt. yajña > த. எஞ்சம்.]*

**எஞ்ஞுவற்கியன்** *eññavarkiyan,* பெ.(n.) சமற்கிருத அறநூலாசிரியருளொருவர் (வேதாரணி. பிரமயாத்திரை. 14); Yajñavalkya, an ancient sage, the author of a code of laws in Sanskrit.

*[Skt. yajñavalkya > த. எஞ்ஞுவற்கியன்.]*

**எட்கை** *etkai,* பெ.(n.) தென்னை (சங்.அக.); coco-palm.

த.வ. ஏடகம்.

**எட்சம்** *etcam,* பெ.(n.) ஈருள்ளி; onion.



**எட்சிணி** *etcini,* பெ.(n.) இயக்கி, ஒரு வகை பெண் பேய்; kind of female demon.

*[Skt. yakšini > த. எட்சிணி, யட்சிணி.]*

**எட்சித்தோசம்** *etcit-t-tōšam,* பெ.(n.) குழந்தைகட்கு வரும் ஒரு நோய் (பாலவா. 62); an etraciating disease of children.

*[எட்சி + தோசம்.]*

*[Skt. dōsam > த. தோசம்.]*

இந்நோய் குழந்தைகளுக்குக் குருதியில் கொதிப்புக் கண்டு, கண்ணிற் பீளைகட்டி, உடல்வற்றி, கனல்மீறி, மயங்கிக் கிடக்கச் செய்யும். (சா.அக.).

**எட்சினி** *etcini,* பெ.(n.) 1. ஒரு பெண் பேய் (பிசாசு); a demoners or a female friend. 2. ஒரு மாயக்கலை (சால வித்தை); a magic performed with the aid of a female demon, attached to the service of Durga or *Kāḷi.*

இது அழகி பெண் போல் தோன்றி, நர மனிதருடன் புணர்ச்சி செய்வதாகக் கருதப்படுகிறது.

**எதளா** *edaḷā,* பெ.(n.) புளியமரம் (மலை.); tamarind.

**எதா** *edā,* வி.எ.(adv.) எப்படி; always used as a relative, and in Tamil generally in compounds, in which manner, as much as.

*[Skt. yathā > த. எதா.]*

**எதாசத்தி** *edāšatti,* வி.எ.(adv.) இயன்ற வரை, கூடிய வரை; to the best of one's ability, one's mite. *"பொருந்திய வெதாசத்தி யீந்தான்" (மச்சபு. தீர்த்தயாழ். 5).*

*[எதா + சத்தி.]*

*[Skt. yathā > த. எதா.]*

*சத்து > சத்தி.*

**எதாப்பிரகாரம்** *edā-p-pirakāram,* வி.எ. (adv.) வழக்கம் போல்; as usual. *'எதாப்பிரகாரம் நடக்கட்டும்'.*

*[Skt. etā-pirakāram > த. எதாப்பிரகாரம்.]*

**எதார்த்தம்** *edārttam,* பெ.(n.) உண்மை; truth. *"எதார்த்தவாதி வெருசன விரோதி".*

*[Skt. yathārtha > த. எதார்த்தம்.]*

**எதார்த்தவாதி** *edārttavādi,* பெ.(n.) 1. உண்மை விளம்பி; one who speaks truth. 2. வெளிப்படையாக இயங்குபவன்; one who acts openly.

*[Skt. yathārthavādin > த. எதார்த்தவாதி.]*

**எதி** *edi,* பெ.(n.) துறவி; ascetic. *"எதிகளேனும் வணங்குவர் தாயை (காசிக. சிவசன். அக். 13).*

*[Skt. yati > த. எதி.]*

**எதிராசன்** *edirāšan,* பெ.(n.) 1. துறவிகளுள் சிறந்தவன்; king of ascetics. 2. இராமானுசர்; an appellation of *Rāmānujācārya. "முனியெதிராசன் பேர்மொழி (அஷ்டப். நூற்றெட். காப்பு).*

[எதி + ராசன்.]

[**Skt.** *yati* > *த. எதி.*]

*அரசன் → ராசன்.*

**எதுகுலகாம்போதி** *edukulakāmpōdi,* பெ.(n.) ஓர் இசைப்பண் (இராகம்); (Mus.) a specific melody-type.

**எதுகுலம்** *edukulam,* பெ.(n.) யதுகுல அரசர் கால்வழியினர் (யதுவமிசம்); dynasty of king Yadu. *"எது குலத்துதித்து" (காஞ்சிப்பு. வாணி. 15).*

[எது + குலம்.]

[**Skt.** *yadu* > *த. எது.*]

குல் → குலம் = கூட்டம், பெற்றோரும் பிள்ளைகளும் கூடிய குடும்பம், மரபுவழிக் குடும்பம், உயர்மரபு வழிக் குடும்பம்.

**எதேச்சாதிகாரம்** *edēccādigāram,* பெ.(n.) விருப்பம் போல் அதிகாரஞ் செலுத்துகை; autocracy.

**எதேச்சையாக** *edēccai-y-āga,* வி.எ.(adv.) விருப்பத்தின் படி; agreebly to one is own sweet will and pleasure, without let or hinderance.

[எதேச்சை + ஆக.]

[**Skt.** *yathā-iccahā* > *த. எதேச்சை.*]

**எதேட்டமாய்** *edēṭṭamāy,* பெ.(n.) 1. விருப்பப்படி; as much as could be wished for, in abundance. 2. மிகுதியாய்; abudantly. *'அது எதேஷ்டமாய் கிடைக்கிறது'.*

[**Skt.** *yathā-iṣṭa* > *த. எதேட்ட.*]

**ஏக்கர்** *ēkkar,* பெ.(n.) நில அளவை வகைகளுள் ஒன்று; a kind of measurement.

**த.வ. குறுக்கம்**

[**E.** *acre* > *த. ஏக்கர்.*]

**ஏக்கோசம்** *ēk-kōšam,* பெ.(n.) சிற்றூர் நிலங்களை ஒருவர் பேரிற் பதிவு செய்கை; registry of the lands of a village in the name of a single ryot (P.T.L.).

[**Hind.** *ēk+kōša>த. ஏக்கோசம்.*]

**ஏககண்டமாய்** *ēka-kaṇḍamāy,* கு.வி.எ. (adv.) ஒரே குரலாய்; all together, unanimously with one voice. *"குழலொடு கண்டங்கொள" (மணிமே. 19:83). 'ஏககண்டமாய் அதனை அவர்கள் ஒப்புக் கொள்கிறார்கள்' (பே.வ.).*

[**Skt.** *ēka+த.கண்டம்+ஆய்>த. ஏககண்டமாய்.*]

*[கண்டு→கண்டம்=தொண்டை, குரல்.]*

**ஏககுடும்பம்** *ēka-kuḍumbam,* பெ.(n.) சொத்து பிரிக்கப்படாதக் கூட்டுக் குடும்பம்; undivided family. *'அவர்கள் ஏக குடும்பமாக இருக்கிறார்கள்' (பே.வ.).*

[ஏக + குடும்பம்.]

[**Skt.** *ēka+ த.ஏக.*]

*குடி>(குடிம்பு) குடும்பு>குடும்பம்.*

**ஏககுண்டலன்** *ēka-kuṇḍalaṉ,* பெ.(n.) ஒற்றைக் குழையை யணிந்த பலராமன்; *Balarāma*, who had ear-ring in one ear only.

[ஏக + குண்டலன்.]

[**Skt.** *ēka+ த. ஏக.*]

*[குள்>குண்டு=உருண்டை. குண்டு>குண்டலம் = வட்டம், சுன்னம், வானவட்டம், ஆடவர் காது வளையம். வடமொழியில் குண்டு என்னும் வடிவமும் இல்லை. குள் என்னும் மூலமும் இல்லை.]*

**ஏககுரு** *ēka-guru,* பெ.(n.) உடன் கற்றோன்; fellow student, colleague (யாழ்.அக.).

[ஏக + குரு.]

[**Skt.** *ēka+த.ஏக.*]

**ஏகசக்ரவர்த்தி** *ēka-cakravartti,* பெ.(n.) தனியாளுமை செலுத்துவோன்; paramount sovereign, suzerain, emperor.

**த.வ.** பேரரசன்.

[**Skt.** *ēka+cakra+vartin> த.ஏகசக்கரவர்த்தி.*]

**ஏகசக்கராதிபத்தியம்** *ēka-cakkarādi pattiyam,* பெ.(n.) தனியராட்சி; paramount sovereignty.

**த.வ.** பேரரசு.

*[**Skt.** ēka+cakra+adhi+patya>த. ஏக சக்கராதிபத்தியம்.]*

**ஏகசக்கராதிபதி** *ēka-cakkarātipati,* பெ.(n.) **ஏகசக்கரவர்த்தி** பார்க்க; see *ēka-cakkaravartti.*

*[**Skt.** ēka + cakra+adhi + pati > த.ஏக சக்கராதிபதி.]*

**ஏகசகடு** *ēka-cagaḍu,* பெ.(n.) 1. மொத்தம்; aggregate, whole. 2. சராசரி; average.

*[**Skt.** ēka+ **U.** sakat>த.ஏகசகடு.]*

**ஏகசமன்** *ēka-šamaṉ,* பெ.(n.) ஒரு நிகர் (வின்.); uniformity, sameness.

*[ஏக + சமன்.]*

*[**Skt.** ēka+த.ஏக.]*

*[உம்>அம்>சம்>சமம்>சமன்.]*

**ஏகசமானம்** *ēka-šamāṉam,* பெ.(n.) **ஏகசமன்** பார்க்க (வின்.); see *ēka-šamaṉ.*

*[ஏக + சமானம்.]*

*[**Skt.** ēka+த.ஏக.]*

*[சமம்→சமானம்.]*

**ஏகசரம்** *ēka-šaram,* பெ.(n.) காண்டாமிருகம்; rhinoceros (யாழ்.அக.).

**த.வ.** கல்யானை.

*[**Skt.** ēkacara> த.ஏகசரம்.]*



**ஏகசிந்தை** *ēka-šintai,* பெ.(n.) 1. ஒத்த மனம்; unanimity. *'இணையர் இருவரும் ஏக சிந்தை யுள்ளவர்கள்'.* 2. ஒரே நினைவு; singleness of purpose, undivided attention. *"நாடொறுமேக சிந்தையனாய்" (திவ்.திருவாய். 5, 10, 11).*

**த.வ.** நினைவொருமை.

*[**Skt.** ēka+த. ஏக.]*

*[சித்து>சிந்து>சிந்தை.]*

**ஏகசிருங்கி** *ēka-širuṅgi,* பெ.(n.) **ஏகசரம்** பார்க்க; see *ēka-šaram* (நாமதீப.).

*[**Skt.** ēka+šṛṅga> த. ஏகசிருங்கி.]*

**ஏகசுபாவம்** *ēka-šubāvam,* பெ.(n.) 1. ஒரே மாந்தத் தன்மை; evenness of disposition in a person. 2. பல மாந்தர்களின் ஒத்த தன்மை; similarity of nature in different person.

*[**Skt.** ēka+sua-bhāva>த. ஏகசுபாவம்.]*

**ஏகத்தாய்** *ēkattāy,* கு.வி.எ.(adv.) ஒருமைப்பட்டு; jointly, unanimously. *'இருவரும் ஏகஸ்தாய் எழுதிக் கொடுத்த உடன்படிக்கை' (வின்.).*

**த.வ. ஏகமனதாய்.**

*[**Skt.** ēka+sthā.>த.ஏகத்தாய்.]*

**ஏகத்துவம்** *ēkattuvam,* பெ.(n.) ஒன்றா யிருக்குந் தன்மை; oneness, unity, identity. *"ஏகத்துவத்திலே சுழுத்தி யிதயமுற் றின்பமே பெறுவாய்" (ஞானவா. தாகு.101).*

*[**Skt.** ēka-tva>த. ஏகத்துவம்.]*

**ஏகத்தொகை** *ēka-t-togai,* பெ.(n.) முழுத் தொகை; total amount (w.).

*[**Skt.** ēka>த. ஏக.]*

*[தொகு >தொகை.]*

**ஏகதண்டி** *ēka-taṇḍi,* பெ.(n.) ஒற்றைக்கோல் தாங்கி நிற்கும் துறவி, திரிதண்டியிலிருந்து வேறுபட்டவர்; Ascetic who bears a single staff, dist. fr. (குருபரம். ஆறா.92).

*[**Skt.** ēka+ த. ஏக.]*

*[தண்டு→தண்டி.]*

**ஏகதந்தன்** *ēka-tantaṉ,* பெ.(n.) ஒற்றை மறுப்பை யுடையவரான பிள்ளையார்; pillaiyar, the one-tusked (பிங்.).

த.வ. ஒற்றைமருப்பன்.

*[Skt. ēka+danta>த. ஏகதந்தன்.]*

**ஏகதார்** *ēka-tār,* பெ.(n.) ஓர் இழையை யுடைய வாய்ச்சியம்; one stringed tamboura.

த.வ. சுரையாழ்.

*[U. ēk-tāra>த. ஏகதார்.]*

**ஏகதாரவிரதன்** *ēka-tāra-viradaṉ,* பெ.(n.) ஒருத்தியையே மனைவியாகக் கொள்ளும் உறுதியுள்ளவன்; one who adheres to one wife, monogamist (ஈடு, 4, 2, 8).

த.வ. ஒருதாலிநோன்பன்.

*[Skt. ēka+dāra+virata>த. ஏகதாரவிரதன்.]*

**ஏகதாளம்** *ēka-tāḷam,* பெ.(n.) ஒலி தாளத்தொன்று; variety of time-measure, one of *catta-tāḷam.* *"ஏகதாளத்துக் கிலருவொன்றாமே" (பரத. தாள.24).*

*[Skt. ēka+த. ஏக.]*

*[தாள்>தாளம்.]*

தாள் – காலைத் தட்டி எழுப்பப்படும் சீரொலி.

**ஏகதிரித்துவம்** *ēka-tirittuvam,* பெ.(n.) ஒன்றில் மூன்று மெய்மங்கள் உள்ள நிலை; unity in trinity.

*[Skt. ēka+tri-tva>த. ஏகதிரித்துவம்.]*

**ஏகதேசப்படு–தல்** *ēka-tēca-p-paḍu-,* செ.கு.வி.(v.i.) வேறுபடுதல்; to be incorrect, as an account. *'கணக்கு ஏகதேசப் பட்டிருக்கிறது'* (w.).

*[Skt. ēka+tēšam>த. ஏகதேசம்+படு–தல்.]*

*[தேசம்>தேயம்.]*

**ஏகதேசம்** *ēka-tēcam,* பெ.(n.) 1. ஒருபுடை; one side (திருக்கோ.70, உரை). 2. சிறுபான்மை; small degree. *"ஏகதேசம் தமிழாகவும் பிராயிகம் தற்சமம் தற்பவமாகவுங் கூறினாம்" (பி.வி.2, உரை).* 3. அருமை; rareness, scarceness. *'ஏகதேசமாக அங்கே அது கிடைக்கும்' (w.).* 4. வேறுபாடு; anomaly, different. *'அதற்கு மிதற்கு மேகதேசம்'* (w.). 5. மாறுபாடு; blunder, mistake (w.). 6. சமமின்மை; unevenness. *இந்த நிலம் ஏகதேசமா யிருக்கிறது.* 7. நிந்தை; abuse. *'அவன் என்னை ஏகதேசமாகப் பேசினான்' (பே.வ.).* 8. குறைந்தது; low in rank or character, that which is inferior. *'பகவதானந்தத்தைப் பற்ற இது ஏகதேசமா யிருக்கையாலே' (ஈடு, 4, 1, 10).*

த.வ. ஒருசார், ஒருபுடை.

*[Skt. ēka+tēsa>த.ஏகதேசம்.]*

*[திசை→தேசம்.]*

**ஏகதேசவறிவு** *ēka-tēca-v-aṟivu,* பெ.(n.) சிற்றுணர்வு; limited knowledge. *"ஏகதேச வறிவைச் செய்தல் ஏகதேசப்படுந் தகுதியுடைய பொருட்கேயன்றி ஏனையதற் குரித்தன்று" (சி.சி.1, 41, சிவஞா).*

த.வ. சிற்றறிவு.

*[Skt. ēka+tēšam>த. ஏகதேசம்+அறிவு.]*

**ஏகதேசவுருவகம்** *ēka-tēša-v-uruvagam,* பெ.(n.) ஒரு பொருளின் ஏகதேசத்தை உருவகப்படுத்தும் உருவக அணி; metaphor in which the comparison is partially expressed (குறள், 24, உரை.).

*[Skt. ēka+tēšam>த.ஏகதேசம்+உருவகம்.]*

**ஏகதேசாகாரம்** *ēkatēcākāram,* பெ.(n.) அளவுபட்ட உணவு; finite form of food. *"உபாதி பற்றி ஏகதேசகாரம் உயினெனவும் அகண்ட காரமீச னெனவும்" (உபநிடதம், பக்.12).*

*[Skt. ēka+tēsā+ā+hāra>த. ஏகதேச+ஆகாரம்.]*

**ஏகதேசி** *ēkatēci,* பெ.(n.) ஒரிடத் திருப்புடையது; that which is to be found only within a limited area. *'இவ்வைங் கோசங்களில்.... ஏகதேசியாய்ப் போக்குவரவு*

*செய்து நிற்கும்' (சி.சி.4, 23, சிவஞா.).*

*[Skt. ēkatēsi.]*

**ஏகதேவன்** *ēka-tēvaṉ,* பெ.(n.) 1. இறைவன்; one supreme god (w.). 2. புத்தன்; buddha (திவா.).

*[Skt. ēka>த. ஏக+தேவன்.]*

*[தேய்>தீ>தேவன்.]*

**ஏகநாதன்** *ēka-nātaṉ,* பெ.(n.) தனித் தலைவன்; god, the one lord of the universe.

*[Skt. ēka+nātha>த. ஏகநாதன்.]*

**ஏகநாயகன்** *ēka-nāyakaṉ,* பெ.(n.) **ஏகநாதன்** பார்க்க; see *ēkanātaṉ.* *'ஏகநாயகனை மானதன் பிரவிருத்தியா லுதவும்' (பிரபோத. 28, 2).*

*[Skt. ēka> த. ஏக.]*

*[நாயன் >நாயகன்.]*

**ஏகப்பசலி** *ēka-p-pacali,* பெ.(n.) ஒரு விளைச்சல் நிலம்; land yielding one crop a year.

*[Skt. ēka+U. fasli>த. ஏகபசலி]*

**ஏகப்பிரளயம்** *ēka-p-piraḷayam,* பெ.(n.) பெருவெள்ளம்; huge flood.

*[Skt. ēka+pralaya> த. ஏகபிரளயம்.]*

**ஏகப்பிழை** *ēka-p-piḻai,* பெ.(n.) முழுவதும் வழு; all error.

*[ஏகம் + பிழை.]*

*[Skt. ēka+ த. ஏக.]*

**ஏகபந்தனம்** *ēka-bandaṉam,* பெ.(n.) ஒன்றிப்பு; uniting, fastening (யாழ்.அக.).

*[Skt. ēka+bandhana> த. ஏகபந்தனம்.]*

**ஏகபத்திரிகை** *ēka-pattirikai,* பெ.(n.) **வெண்டு(து)ளசி** பார்க்க; see *veṇtuḷaši* (மலை.).

*[Skt. ēka+patrikā>த. ஏகபத்திரிகை.]*

**ஏகபத்தினிவிரதம்** *ēka-pattiṉi-viratam,* பெ.(n.) ஒரு மனையாள் நோன்பு; faithful adherence to one wife, monogamy.

*[Skt. ēka+patni+vrata>த. ஏகபத்தினி விரதம்.]*

**ஏகபாதம்** *ēka-pātam,* பெ.(n.) 1. ஒரே யெழுத்துத் தொடரால் அமைந்து வரும் மிறைப்பாடல்; stanza of four lines all apparently alike but really made up of different meanings. 2. ஒற்றைக்கால் விலங்கு; a one-legged sevage creature. *'ஈற்றா மதமா வேகபாதம்' (தொல்.பொ.249, உரை).* 3. இருக்கை வகை யொன்பதனுள் ஒன்று; a pose, one of nine irukkai, q.v. (சிலப்.8, 25, உரை.).

*[Skt. ēka+த. பாதம்.]*

*[பதி>பதம்>பாதம்.]*

**ஏகபாதர்** *ēka-pātar,* பெ.(n.) ஒற்றைத் தாளர் ஆகிய சிவத் தோற்றம்; a manifestation of šiva with one foot.

*[Skt. ēka+த. பாதர்.]*

*[பதி>பாதம்>பாதர்.]*

**ஏகபாதனம்** *ēka-bātaṉam,* பெ.(n.) ஒக இருக்கையாசன வகை; a yōgic posture (தத்துவப்.108, உரை).

*[Skt. ēka+pātana>த. ஏகபாதனம்.]*



**ஏகபாவம்** *ēka-pāvam,* பெ.(n.) ஒத்த எண்ணம்; unanimity.

*[Skt. ēka + bhāva>த. ஏகபாவம்.]*

**ஏகபாவனை** *ēka-pāvaṉai,* பெ.(n.) ஒருமையாக எண்ணுகை; conception of oneness, as of the universe.

*[Skt. ēka+bāvanā> த. ஏகபாவனை.]*

**ஏகபிங்கலன்** *ēka-piṅkalaṉ,* பெ.(n.) பசப்படைந்த ஒற்றைக் கண்ணையுடைய குபேரன்; kubera, having a yellow taint in one eye (சூடா.).

*[Skt. ēka+piṅgala>த. ஏகபிங்கலன்.]*

**ஏகபிராணன்** *ēka-pirāṇaṉ,* பெ.(n.) ஒருயிர் போன்ற நட்பு; intimate friendship between persons, as if they were one (w.).

*[Skt. ēka+pirāṇa>த. ஏகபிராணன்.]*

**ஏகபுத்திரன்** *ēka-puttiraṉ,* பெ.(n.) 1. ஒரே மகன்; only son. 2. ஒரு மகனுடையவன்; one who has an only son.

த.வ. ஒருமகன்.

*[Skt. ēka+put-tra>த. ஏகபுத்திரன்.]*

**ஏகபோகம்**[1] *ēka-bōgam,* பெ.(n.) மொத்த நுகர்வு; sole enjoyment or possession.

த.வ. ஒருமைத் துய்ப்பு.

*[Skt. ēka+bhōga>த. ஏகபோகம்.]*

**ஏகபோகம்**[2] *ēka-bōkam,* பெ.(n.) ஒரு விளைவு பயிர் வைத்தல், ஆண்டுக்கு ஒருமுறை வளரும் பயிர்; single crop for a year.

*[Skt. ēka+த. போகம்.]*

*[பூகம்>போகம்.]*

**ஏகம்**[1] *ēkam,* பெ.(n.) 1. ஒன்று; unit (திவா.). 2. ஒப்பற்றது; that which is unique. *'ஏக மாநகர் வீதி நிரைத்தலே' (சீவக. 2398).* 3. தனிமை; solitariness, singleness (திவா.). 4. வீடு; final liberation (சூடா.). 5. மொத்தம்; total (w.). 6. வேறுபாடின்மை; identity, unity. *'வாரிகணங்கட் கேகமெனல் போல' (வேதா.சூ.127).* 7. அக்குரோணி எட்டுகொண்ட சேனை; army consisting of eight akkuronis (பிங்.). 8. மிகுதி; abundance. *"பொருள் ஏகமாய்க் குவிந்து கிடக்கிறது".*

*[Skt. ēka> த. ஏகம்.]*

**ஏகம்**[2] *ēkam,* பெ.(n.) வெண்கலம்; bell-metal (யாழ்.அக.).

**ஏகம்பட்சாரம்** *ēkampaṭcāram,* பெ.(n.) மாழை வகை; kind of metal (w.).

**ஏகம்பம்** *ēkambam,* பெ.(n.) காஞ்சி சிவன் தலம்; name of a *Śiva* shrine, in *conjeevaram. "ஏகம்பத் துறையீசன்" (தேவா.1033, 6).*

*[Skt. ēkamra > த. ஏகம்பம்.]*

**ஏகம்பன்** *ēkambaṉ,* பெ.(n.) காஞ்சிபுரத்தில் கோயில் கொண்ட சிவபிரான்; *Śiva,* worshipped in the shrine at *conjeevaram. "ஏத்திநின்ற வேகம்பன்றன்னை" (தேவா. 1039, 7).*

*[Skt. ēkāmara > த. ஏகம்பன்.]*

**ஏகமாயிரு—த்தல்** *ēkam-āy-iru-,* செ.கு.வி. (v.i.) 1. ஒன்றாயிருத்தல்; to be united. *'நானேகமாய் நின்னோடிருக்கு நாளெந்த நாள்' (தாயு. எங்குநிறை. 6).* 2. மிகுதியா யிருத்தல்; to be abundant.

*[Skt. ēka+ த.ஆயிரு—த்தல்.]*

**ஏகரா** *ēkarā,* பெ.(n.) **ஏக்கர்** பார்க்க; see *ēkkar.*

*[Eng. Acre > த. ஏகரா.]*

**ஏகராசி** *ēka-rāsi,* பெ.(n.) காருவா (அமாவாசை); new moon. *'ஒளியோனை யேகராசியினி னெய்த வெதிர்க்கும் வேகராகு' (கம்பரா.இராவணன்றோ.19).*

*[Skt. ēkarāsi>த.ஏகராசி.]*

**ஏகரூபன்** *ēka-rūbaṉ,* பெ.(n.) இறைவன்; God (யாழ்.அக.).

**த.வ.** கடவுள், ஒருருவன்.

[**Skt.** *ēka+rupa> த. ஏகரூபன்.*]

*த. உருவம் >* **Skt.** *rupa.*

**ஏகல்** *ēkal,* பெ.(n.) உயரம்; height.

**ஏகலபுச்சன்** *ēkala-puccaṉ,* பெ.(n.) கிறுக்கன்; crazy fellow.

**ஏகவசனம்** *ēka-vacaṉam,* பெ.(n.) **1.** ஒருமை; singular, number. *'வாருமென் றவர்களே கவசனமுஞ் சொல்வர்' (திருவேங்.சத.78).* **2.** மதிப்புயர்வாகப் பயன்படுத்தும் பன்மைச் சொல்லான அவர் நீர் என்று பேசாது அவன் நீ என்று பேசும் மதிப்பு குறைவானச் சொல்; disrespectful term, sing, for hon. pl. *'அவன் ஏக வசனமாய்ப் பேசினான்' (பே.வ.).* **3.** சத்திய வசனம்; honesty, uprightness, truth, as singleness of statement (w.).

[**Skt.** *ēka+vasana>த. ஏகவசனம்.*]

**ஏகவட்டம்** *ēka-vaṭṭam,* பெ.(n.) **ஏகவடம்** பார்க்க; see *ēka-vaḍam. "இனமணிப்பூணு மேகவட்டமும்" (பெருங். இலாவண.5, 139).*

[**Skt.** *ēka+த. ஏக.*]

*[வல்>வள்>வட்டு>வட்டம்.]*

**ஏகவடம்** *ēka-vaḍam,* பெ.(n.) **ஏகாவலி** பார்க்க; see *ēkāvali 'பொங்கிள நாகமொ ரேகவடத்தோடு' (தேவா. 350, 7).*

[**Skt.** *ēka+த. ஏக.*]

*[வட்டம்>வடம்.]*

**ஏகவல்லி** *ēka-valli,* பெ.(n.) **ஏகாவலி** பார்க்க; see *ēkāvali* (பெருங்.உஞ்சைக்.46, 211).

**ஏகவாசம்** *ēka-vācam,* பெ.(n.) **1.** தனிமையாய் இருக்கை; solitary life as of a hermit. **2.** கூடியிருக்கை; dwelling together.

[**Skt.** *ēka+vāsa> த. ஏகவாசம்.*]

**ஏகவாணை** *ēka-v-āṇai,* பெ.(n.) பொதுவற ஆளுகை; sole dominion. *"ஏகவாணை வெண்குடை" (சீவக.141).*

[**Skt.** *ēka+ā-jnā>த. ஏகவாணை.*]

**ஏகவாரம்**[1] *ēka-vāram,* பெ.(n.) ஒரு போது (ஒரே வேளை உணவு); partial fasting, such as taking only one meal. *'இன்று ஏகவாரந்தான் உணவு'.*

[**Skt.** *ēka+hāra>த. ஏகவாரம்.*]

**ஏகவாரம்**[2] *ēka-v-āram,* பெ.(n.) **ஏகாவலி** பார்க்க; see *ēkāvali. 'ஏகவார மிலங்கு கழுத்தினன்' (பெருங்.நரவாண.2, 26).*

[**Skt.** *ēka+vāram>த. ஏகவாரம்.*]

**ஏகவிடுகொடி** *ēka-viḍu-koḍi,* பெ.(n.) **ஏகாவலி** பார்க்க; see *ēkāvali "ஏகவிடுகொடி யெழிற்றே ளெழுதி" (பெருங். உஞ்சைக். 34, 21).*

*[ஏக + விடு + கொடி.]*

[**Skt.** *ēka>த. ஏக.*]

**ஏகவீரன்** *ēka-vīraṉ,* பெ.(n.) தனிவீரன்; unique or incomparable warrior (திவ்.திருவிருத்.13, வ்யா.).

[**Skt.** *ēka+த.ஏக.*]

*[வீறு>வீரு>வீரன்.]*

**ஏகவீரியன்** *ēka-vīriyaṉ,* பெ.(n.) வீரபத்திரன்; vira-bhadra (பிங்.).

[**Skt.** *ēka+த. ஏக.*]

*[வீறு→வீரியம்→வீரியன். 'அன்' – ஆண்பால் ஈறு.]*

**ஏகவெளி** *ēka-veḷi,* பெ.(n.) பெருவெளி; wide, open space.

[**Skt.** *ēka+த. ஏக.*]

**ஏகவேணி** *ēka-vēṇi,* பெ.(n.) ஒற்றைச் சடையுடைய மூதேவி; goddess of misfortune, wearing one lock (பிங்.).

[**Skt.** *ēka+vēni> த. ஏகவேணி.*]

**ஏகன்** *ēkaṉ,* பெ.(n.) 1. ஒருவன்; one man. 2. கடவுள்; god, as one. *'ஏக னநேக னிறைவ னடிவாழ்க' (திருவாச.1, 5).*

*[Skt. ēka> த. ஏகன்.]*

**ஏகாக்கிரசித்தம்** *ēkākkira-cittam,* பெ.(n.) ஒன்றிலே ஊன்றிய மனம்; mind concentrated on one object. *'ஏகாக்கிரசித்தமென்னும் விரதங்கெடாத திடவிரதம்' (சிவப்.பிரபந்.அபிஷேக.8).*

*[Skt. ēkāgra+citta>ஏகாக்கிரசித்தம்.]*

**ஏகாக்கிரதை** *ēkākkiratai,* பெ.(n.) ஒன்றிலே மனம் பதிந்திருக்கை; concentration of mind.

*[Skt. ēkāgrata>த. ஏகாக்கிரதை.]*

**ஏகாக்கிரம்** *ēkākkiram,* பெ.(n.) வளமான சாப்பாடு; rich meal.

**த.வ.** நிறைவுணா.

*[Skt. ēka+agra>த. ஏகாக்கிரம்.]*

**ஏகாகம்** *ēkākam,* பெ.(n.) இறந்தவர்க்குப் பதினோராம் நாளிற் செய்யுஞ் செய்கை; ceremony for the deceased on the 11th day.

**த.வ.** பதினோராம் நடப்பு.

*[Skt. ēkāha > த. ஏகாகம்.]*

**ஏகாகாரம்** *ēkākāram,* பெ.(n.) 1. மாறாத உருவம்; unchanging form. *'சூரியன் சந்திரனைப் போலன்றி ஏகாகாரமாய்த் தோன்றுகின்றான்'.* 2. ஒரு படி; uniform manner. *'நேற்று முழுதும் மழை ஏகாகாரமாகப் பெய்தது'.*

*[Skt. ēkā+karā> த. ஏகாகாரம்.]*

**ஏகாகி** *ēkāki,* பெ.(n.) தனித்திருப்போன்; one who is alone, solitary man.

*[Skt. ēkā> த. ஏகாகி.]*

**ஏகாங்கநமக்காரம்** *ēkāṅka-namakkāram,* பெ.(n.) தலை தாழ்த்திச் செய்யும் வணக்கம்; bowing the head in worship, as the act of a single member of the body(சங்.அக.).

*[Skt. ēka+aṅga+namaskāra>த. ஏகாங்க நமஸ்காரம்.]*



**ஏகாங்கம்** *ēkāṅgam,* பெ.(n.) 1. தனிமை; solitude (யாழ்.அக). 2. சந்தனம்; sandal wood (பச்.மூ.).

*[Skt. ēka+aṅga>த.ஏகாங்கம்.]*

**ஏகாங்கரூபகம்** *ēkāṅga-rūpagam,* பெ.(n.) உருவ வகை; a kind of metaphor (மாறனலங்.பக்.181).

*[Skt. ēkā + aṅga + rupakam>த. ஏகாங்க ரூபகம்.]*

**ஏகாங்கி**[1] *ēkāṅgi,* பெ.(n.) திருமாலடியாருள் ஒரு வகையார்; a class of vaisnava devotees (குருபரம். ஆறா.172.).

*[Skt. ēkāgin > த. ஏகாங்கி.]*

**ஏகாங்கி**[2] *ēkāṅgi,* பெ.(n.) குடும்பமின்றித் தனித்து வசிப்பவன்-ள்; single person, one who has no family.

**த.வ.** தனியன்.

*[Skt. ēkāgin > த. ஏகாங்கி.]*

**ஏகாசம்** *ēkācam,* பெ.(n.) தளர்வு உடை; loose cloth worn over the shoulders, scarf. *"ஐந்தலைய மாசுணங்கொண்டம் பொற்றோண்மே லேகாசமா விட்டு" (தேவா. 257, 3).*

*[Skt.ēka+amšu > த. ஏகாசம்.]*

**ஏகாட்சரம்** *ēkāṭcaram,* பெ.(n.) நூற்றெட்டு மெய்ம்மறைகளுள் ஒன்று; name of a upanisad.

*[Skt. ēkāksara>த. ஏகாட்சரம்.]*

**ஏகாட்சரி** *ēkāṭcari,* பெ.(n.) 1. ஒரெழுத்தாலாய மந்திரம்; monosyllabic mantra. 2. உயிரோடும் தனித்தும் ஒரே மெய் வரும் இறைப்பாடல்; quatrain composed of the same consonant in combination with various vowels, as. *தித்தித்த தோதித் திதி (w.).*

*[Skt. ēkāksari> த.ஏகாட்சரி.]*

**ஏகாட்சி** *ēkāṭci,* பெ.(n.) 1. ஒன்றைக் கண்-ணன்-ணி; one eyed person. 2. காகம்; crow, supposed to see only with one eye at a time.

*[Skt. ēkāksa>த. ஏகாட்சி.]*

**ஏகாடம்** *ēkāṭam,* பெ.(n.) ஏளனம்; scoffing, Jest. *'என்னத்துக்கிந்த ஏகாடஞ் செய்கிறீர்' (கனம். கிருஷ்ணையா, கீர்த்.6).*

**ஏகாண்டம்** *ēkāṇḍam,* பெ.(n.) முழுக்கூறு; that which is of one piece, not made of parts. *'ஏகாண்டமான தூண்'.*

*[Skt. ēka+த. கண்டம்.]*

*[ஏக+கண்டம்>ஏகாண்டம்.]*

**ஏகாதசம்** *ēkātacam,* பெ.(n.) பதினோராமிடம்; the 11th sign from one's *caṉma-lakkinam. "ஏகாதசந்தன்னி லெக்கோளு நிகரென்ன" (பாரத. பதினேழாம்.228).*

*[Skt. ēkadašan>த. ஏகாதசம்.]*

**ஏகாதசர்** *ēkātacar,* பெ.(n.) 1. **ஏகாதச ருத்திரர்** பார்க்க; see *ēkātasaruttirar. "எண்வசுக்க ளேகாதசர்கள்" (தேவா.1040, 5).* 2. பதினோறாமிடத்துள்ள கோள்; *kirakam* in the 11th sign from one's *canmalakkinam* (கம்பரா.திருவவ.110).

*[Skt. ēkādasa>த. ஏகாதசர்.]*

**ஏகாதசருத்திரர்** *ēkātaca-ruttirar,* பெ.(n.) பெருந் தேவன், சிவன், உருத்திரன், சங்கரன், விசயன், நீலலோகிதன், ஈசானன், வீமதேவன், சுபாலி, பவோற்பவன், சௌமியன் (திவா.), அரன் for சிவன் (பிங்.); the 11 *rudras*, as class of gods viz.

*[Skt. ēkadasa+rudras>த.ஏகாதச ருத்திரர்.]*

**ஏகாதசி** *ēkātaci,* பெ.(n.) பதினோராம் நாள்; the 11th day of a bright or dark fort night.

த.வ. பதினோரமை.

*[Skt. ēkādasi>த. ஏகாதசி.]*

**ஏகாதசிவிரதம்** *ēkātaci-viratam,* பெ.(n.) பதினோராம் நாளில் மேற்கொள்ளப்படும் உண்ணா நோன்பு; fast in honour of *Visṇu* on the *ēkātaci.*

*[Skt. ēkādasi+viratam>த.ஏகாதசிவிரதம்.]*

**ஏகாதிபத்தியம்** *ēkātipattiyam,* பெ.(n.) தனியராட்சி; paramount sovereignty, empire. *'ஏகாதிபத்தியம் விடாமல்' (இராமநா. பாலகா.2).*

*[Skt. ēka+adhipatya> த.ஏகாதிபத்தியம்.]*

**ஏகாதிபதி** *ēkātipati,* பெ.(n.) மாமன்னன்; paramount sovereign.

த.வ. தனியாண்மை அரசன்.

*[Skt. ēka+adhi+pati>த. ஏகாதிபதி.]*

**ஏகாந்தசேவை** *ēkānta-cēvai,* பெ.(n.) சில திருவிழாக்களில் இரவில் தனித்து நிகழும் இறைப்பணி; the appearance of the god in a temple in procession at midnight during some festivals.

த.வ. தனிச்சேவை.

*[Skt. ēkānta+sēva>த. ஏகாந்தசேவை.]*

**ஏகாந்தஞ்சமர்ப்பி-த்தல்** *ēkāntañcamarppi-,* செ.கு.வி.(v.i.) ஊர்திகளில் தெய்வ உருவங்களை வைத்துக் கச்சுச் சாத்துதல்; to fasten an idol to its vehicle for a procession.

*[Skt. ēka+anta+samarpana>த. ஏகாந்தஞ் சமர்ப்பி–.]*

**ஏகாந்தம்** *ēkāntam,* பெ.(n.) 1. தனிமை; loneliness, solitude. *'ஏகாந்த மினிது' (தனிப்பா.1, 112, 35).* 2. ஒருவருமில்லாத இடம்; solitary place. 3. கமுக்கம்; secret. *'அவனுடன் உனக்கென்ன ஏகாந்தம்'.* 4. உறுதியான (குறள், 563, உரை); certainty. 5. நாடிய ஒரே பொருள் (அறநெறி.18); sole end, one only end. 6. தகுதியானது; that which is appropriate or fit. *'ப்ரஹ்மிம்ஸைக்கு ஏகாந்தமான காலத்திலே' (திவ்.அமலனாதி, 2, வ்யா).*

*[Skt. ēka+anta> த. ஏகாந்தம்.]*

**ஏகாந்தவாதி** *ēkānta-vāti,* பெ.(n.) துறவு நெறியாளர்; non-Jain, as one who looks at things from only one point of view. *'ஏகாந்த வாதிக ளெண்கெட்ட வாதம் போல்' (அறநெறி.18).*

*[Skt. ēkānta+vddin> த.ஏகாந்தவாதி.]*

**ஏகாந்தவாழ்வு** *ēkānta-vāḻvu,* பெ.(n.) 1. தனி வாழ்க்கை; single life. 2. துறவியின் வாழ்க்கை; monastic life.

*[ஏகாந்தம்+ வாழ்வு.]*

*[Skt. ēkānta+ த. ஏகாந்தம்.]*

**ஏகாந்தன்** *ēkāndaṉ,* பெ.(n.) சமய நோன்பினன்; devotee whose mind is fixed on god alone. *"மாதேவர்க் கேகாந்த ரல்லராஇல்" (தேவா.1230, 10).*

**ஏகாந்தி** *ēkānti,* பெ.(n.) 1. **ஏகாந்தன்** பார்க்க; see *ēkāntaṉ.* 2. ஒரே வழி நோக்காளன்; one who looks at things from only one point of view (தேசிகப்.பரமத.26).

*[Skt. ēkāntam> ekānti>த.ஏகாந்தி.]*

**ஏகாந்தநித்திரை** *ēkānta-nittirai,* பெ.(n.) 1. அமைதியான தூக்கம்; sweet sleep. 2. உலக தொடர்பு சிறிதுமில்லாத துறவுநிலை; entire abstraction of the ascetic, free from worldly cares (சங்.அக.).

த.வ. தனித்தூக்கம்.

*[Skt. ēkanta+nidrā>த.ஏகாந்தநித்திரை.]*

**ஏகாம்பரநாதர்** *ēkāmpara-nātar,* பெ.(n.) காஞ்சிபுரத்தில் கோயில் கொண்டுள்ள சிவபிரான்; *Śiva* at *conjeevaram.*

த.வ. சிவன்.

*[Skt. ēkāmra+nātha>த. ஏகாம்பரநாதர்.]*

**ஏகாம்பரர்** *ēkāmparar,* பெ.(n.) **ஏகாம்பர நாதர்** பார்க்க; see *ēkāmbaranāthar.*

*[Skt. ēkamra>த. ஏகாம்பரர்.]*

**ஏகாம்பரம்** *ēkāmparam,* பெ.(n.) ஒரு மாமரத்தின் கீழ் சிவன் கோயிலைக் கொண்டுள்ள காஞ்சிபுரம்; a name for *conjeevaram*, a city famous for its *Śiva* shrine under a mango tree. *"தொல்லுலகு புகழ் காசியேகாம்பரம" (அறப்.சத.59).*

*[Skt. ēka+āmra>த. ஏகாம்பரம்.]*

**ஏகாம்பரன்** *ēkāmbaraṉ,* பெ.(n.) **ஏகம்பன்** பார்க்க; see *ēkambaṉ.*

*[Skt. ēka+āmra>த. ஏகாம்பரன்.]*

**ஏகாயம்** *ēkāyam,* பெ.(n.) **ஏகாசம்** பார்க்க; see *ēkāšam. "தோலுடையாடையேகாயமிட்டு" (தேவா.159, 4).*

**ஏகாயனர்** *ēkāyaṉar,* பெ.(n.) மாத்துவர்; *Madhvas*, from their doctrine that *Visnu* alone needs to be worshipped for salvation (ஈடு, மஹாப்ர.).

*[Skt. ēka+ayana>த.ஏகாயனர்.]*

**ஏகார்க்களம்** *ēkārkkaḷam,* பெ.(n.) தீயநாளறிதற்குரிய சக்கரம்; diagram drawn up to find out inauspicious days (விதான.பஞ்சாங்.28).

*[Skt. ēka+argala>த. ஏகார்க்களம்.]*

**ஏகார்ணவம்** *ēkārṇavam,* பெ.(n.) ஊழிப் பெரு வெள்ளம்; cosmic deluge. *"இப்படி ஏகார்ணவத்திலே தனியே சாய்ந்தருளுகிறவன் தான் ஆர் என்னில்" (ஈடு, 1, 5, 4, பக்.235).*

**ஏகாரவல்லி** *ēkāravalli,* பெ.(n.) 1. **பாகல்** பார்க்க; see *pāgal* (மலை.). 2. **பழுபாகல்** பார்க்க; see *paḻupāgal.* 3. **பலா** பார்க்க; see *pala* (மலை.).

*[Skt. ēkāravalli.]*

**ஏகாலத்தி** *ēkālatti,* பெ.(n.) **ஏகாலாத்தியம்** பார்க்க; see *ēkālāttiyam.*

**ஏகாலாத்தியம்** *ēkālāttiyam,* பெ.(n.) பூசையில் சாமிக்குமுன் ஏற்றும் ஒற்றைச் சுடர் தீபம்; single light waved before an idol in worship (பரத. ஒழிபி.41, உரை.).

*[Skt. ēkārātrika>த. ஏகாலாத்தியம்.]*

**ஏகாவல்லி** *ēkāvalli,* பெ.(n.) **ஏகாவலி** பார்க்க; see *ēkāvali (S.I.I.ii, 399).*

*[Skt. ēkāvali>த. ஏகாவல்லி.]*

**ஏகாவலி** *ēkāvali,* பெ.(n.) ஒற்றைச்சர மாலை; long gold or pearl necklace of a single string. *"ஏகாவலியுந் சாத்தீரே" (கலிங்.500, புதுப்.).*

*[Skt. ēkā-vali>த. ஏகாவலி.]*

**ஏகான்மவாதம்** *ēkāṉma-vātam,* பெ.(n.) படைப்பு ஒன்றைத்தவிர வேறொன்றுமில்லை என அறுதியிடும் மதம் (சி.போ. அவைய.பக்.47); monistic doctrine according to which there is only reality, viz., the soul.

**த.வ. ஓராதன்மதம்.**

*[Skt. ēka+ātman+vadam > த. ஏகான்ம வாதம்.]*

**ஏகி** *ēki,* பெ.(n.) கைம்பெண் (வின்.); widow, as one who leads a lonely life in this world.

*[Skt. ēka > த. ஏகி.]*

**ஏகீபவி-த்தல்** *ēkīpavi-,* செ.குன்றாவி.(v.t.) ஒன்றுபடுதல்; to combine, coalesce.

*[Skt. ēkībhāva- > த. ஏகிபவி-த்தல்.]*

**ஏகீபாவம்** *ēkīpāvam,* பெ.(n.) ஒன்றுபடுகை (சி.சி.6, 1, ஞானப்.);

*[Skt. ēkībhāva > த. ஏகீபாவம்.]*

**ஏகீயன்** *ēkīyaṉ,* பெ.(n.) தோழன்; friend (யாழ்.அக.).

*[Skt. ēkīya>த. ஏகீயன்.]*

**ஏகூன்** *ēkūṉ,* பெ.(n.) முழுவதும்; whole.

*[Mahr. ēkūṉ-ēk>த. ஏகூன்.]*

**ஏகோத்தரவிருத்தி** *ēkōttara-virutti,* பெ.(n.) இறந்தவர்க்கு முதற் பத்துநாட் செய்யும் ஒரு சிராத்தம் ஈமக்கடன் (பிரா.); obsequial distribution of doles of rice during the first ten days after death, the quantity given being increased each day by one unit of measure.

**த.வ. நீத்தார்கடன்.**

*[Skt. ēka+ut-tara-vrddhi > த. ஏகோத்தர விருத்தி.]*

**ஏகோத்திட்டம்** *ēkōttiṭṭam,* பெ.(n.) இறந்தவர்க்குப் பதினோறாம் நாளிற் செய்யும் ஒரு நடப்பு; *śrāddha* or funeral rite performed on the 11th day after death for the deceased exclusively, without including other ancestors.

**த.வ. நீத்தார்நடப்பு.**

*[Skt. ēka+ud-diṣṭa.]*

**ஏகோதகம்** *ēkōtakam,* பெ.(n.) சிற்றாறுகள் ஒன்று கலக்குமிடம் (வின்.); confluence of waters, union of one stream with another.

*[Skt. ēko+udaka > த. ஏகோதகம்.]*

**ஏகோபி-த்தல்** *ēkōpi-,* 11 செ.கு.வி.(v.i.) ஒன்றுபடுதல்; to be united. *"ஏகோபித்து முளைத்துக் கொண்டார்" (இராமநா. உயுத்த. 88).*

*[Skt. ēkibhāva > த. ஏகோபி-த்தல்.]*

**ஏட்டு** *ēṭṭu,* பெ.(n.) காவல் துறையின் தலைமைக் காவலர்; head constable.

*[E. head > த. ஏட்டு.]*

**ஏணகம்** *ēṇagam,* பெ.(n.) ஒருவகை மருந்துச் சரக்கு; a drug (நாமதீப.395).

**ஏணம்** *ēṇam,* பெ.(n.) மான்தோல்; deer skin (W.).

*[Skt. ēṇa > த. ஏணம்.]*

**ஏத்திரி** *ēttiri,* பெ.(n.) சாதிபத்திரி; mace, a spice.

*[U. jawatri > த. ஏத்திரி.]*

**ஏத்துவாபாசம்** *ēttuvāpācam,* பெ.(n.) **ஏதுப்போலி** (பிரபோத.42, 5) பார்க்க; see *ēttu-p-pōli.*

*[Skt.hētu+vāpācam > த.ஏத்துவாபாசம்.]*

**ஏதனம்** *ēdaṉam,* பெ.(n.) மூச்சு விடுகை; breathing (யாழ்.அக.).

*[Skt. ētaṉa > த. ஏதனம்.]*

**ஏதுனம்** *ēduṉam,* பெ.(n.) அரிதாரம்; yellow orpiment (யாழ்.அக.).

**ஏப்பிரன்** *ēppiraṉ,* பெ.(n.) இழுவண்டி முதலியவற்றில் உள்ள மூடுதுணி; apron, covering for legs, as in a rickshaw.

*[E. Apron > த. ஏப்பிரன்.]*

**ஏமகரம்** *ēmagaram,* பெ.(n.) பொன்; gold (அக.நி.).

*[Skt. hēmaka > த. ஏமகரம்.]*

**ஏமகூடம்** *ēma-kūḍam,* பெ.(n.) 1. எண்குல மலைகளுளொன்று (கந்தபு.அண்டகோ.34); name of a mountain to the north of the *Himālaya,* one of *asta-kula-parvatm.* 2. மேரு (திவா.); Mt. *Mēru.*

*[Skt. hēma-kūṭa > த. ஏமகூடம்.]*

**ஏமதாரி** *ēmadāri,* பெ.(n.) பொன்னூமத்தை; parple stramony (பச்.மூ.).

*[Skt. hēma-dhustura > த. ஏமதாரி.]*

**ஏமந்தருது** *ēmanta-rutu,* பெ.(n.) முன்பனிப் பருவம்; the months of *mārkaḻi*and *tai* one of six *rutu.*

*[Skt. hēmanta+rutu > த. ஏமந்தருது.]*

**ஏமநாகம்** *ēma-nāgam,* பெ.(n.) ஊமத்தை; thorn-apple (சித்.அக.).

*[Skt. hēma+nāga> த. ஏமநாகம்.]*



**ஏமாங்கி** *ēmāṅgi,* பெ.(n.) நிலவுருண்டை; earth (நாமதீப.).

**த.வ. வையம்.**

*[Skt. hēmāṅgi > த. ஏமாங்கி.]*

**ஏரண்டி** *ēraṇḍi,* பெ.(n.) திப்பிலி; long pepper (சங்.அக.).

*[Skt. ēraṇdhi> த. ஏரண்டி.]*

**ஏரம்பம்** *ērambam,* பெ.(n.) யானை; elephant (நாமதீப.).

*[Skt. hēramba > த. ஏரம்பம்.]*

**ஏவிளம்பி** *ēviḷambi,* பெ.(n.) ஓர் ஆண்டு; the 31st year of the jupiter cycle of 60 years.

*[Skt. hēma-lamba > த. ஏவிளம்பி.]*

**ஏனம்** *ēṉam,*பெ.(n.) குற்றம்; fault (யாழ்.அக.).

*[Skt. ēṉas > ஏனம்.]*

**ஐக்கவாதசைவம்** *aikka-vāta-caivam,* பெ. (n.) சிவணியத்தின் அகப்புறச் சமயத் தொன்று (சி.போ.பா.அவை.); (šaiva) a *Šaiva* sect which denies the *Aṉavamata* to the souls and declares that the souls attain their original pure state when they have gone through the round of births and got themselves rid of all *karma*, one of *aka-p-pura-c-camayam.*

*[Skt. aikya+vāta+saiva > த. ஐக்கவாத சைவம்.]*

**ஐக்கியநாடுகள்சபை** *aikkiya-nāḍugaḷ-sabai,* பெ.(n.) உலக ஒன்றிய நாடுகளின் பேரவை; united nations organisation (UNO).

**த.வ. உலகநாடுகள் ஒன்றியம்.**

*[Skt.aikya+த. நாடுகள் + சபை.]*

**ஐக்கியநாணயசங்கம்** *aikkiya-nāṉaya-saṅgam,* பெ.(n.) கூட்டுறவால் பணம் பெருக்குஞ் கூட்டுறவுக் குழு; co-operative credit society.

**த.வ. கூட்டுறவுக்குழு.**

*[ஐக்கிய + நாணயம் + சங்கம்.]*

*[Skt.aikya+nāṉaya>த. ஐக்கியநாணயம்.]*

**ஐக்கியபாவம்** *aikkiya-bāvam,* பெ.(n.) ஒற்றுமைத் தன்மை; unity.

*[Skt. aikya+bhāva>த. ஐக்கியபாவம்.]*

**ஐக்கியம்** *aikkiyam,* பெ.(n.) 1. ஒன்றுந் தன்மை; oneness. *"ஐக்கியமுன்னி வருந்தி நிற்பேன்" (தாயு.ஆகார.29).* 2. ஒற்றுமை; union, communion, fellowship.

**த.வ. ஒன்றிப்பு, ஒன்றியம்.**

*[Skt. aikya>த. ஐக்கியம்.]*

**ஐககண்டியம்** *aikakaṇḍiyam,* பெ.(n.) கருத்தொத்திருக்கை; consensus of opinion. *"சிவாக மங்களெல்லாம் ஐககண்டியமாகச் சொல்வது" (சிவசம்.67).*

*[Skt. aikakaṇthya > த. ஐககண்டியம்.]*

**ஐகமத்தியம்** *aikamattiyam,* பெ.(n.) ஒற்றுமை; unanimity. *"அவர்களும் ஐகமத்தியம் பண்ணிக் கொண்டு" (குருபரம். 226, பன்னீ).*

*[Skt. aikamatya > த. ஐகமத்தியம்.]*

**ஐகிகம்** *aikikam,* பெ.(n.) 1. இம்மைக்குரியது; that which pertains to this world. 2. இவ்வுலகம்; this world. *"ஐகிகத்திலும் நபம்ஸகனாகிறதுக்கு ஏதுவான பாபமும்" (சி.சி.4, 40, சிவாக்.).*

*[Skt. aihika > த. ஐகிகம்.]*

**ஐசுவரியம்** *aicuvariyam,* பெ.(n.) 1. செல்வம்; wealth, riches, prosperity. 2. ஈச்சுவரத் தன்மை; the quality or nature of the Lord.

*[Skt. aišvarya > த. ஐசுவரியம்.]*

**ஐணம்** *aiṇam,* பெ.(n.) மான்தோல்; deer-skin.

*[Skt. aiṇa > த. ஐணம்.]*

**ஐதரேயம்** *aitarēyam,* பெ.(n.) நூற்றெட்டு மறை நூல்களிலொன்று; name of an upanisad.

*[Skt. aitarēya > த. ஐதரேயம்.]*

**ஐதி** *aiti,* பெ.(n.) **ஐதிகப்பிரமாணம்** பார்க்க; see *aitika-piramāṇam.*

*[Skt. aiti > த. ஐதி.]*

**ஐதிகப்பிரமாணம்** *aitika-p-piramāṇam,* பெ.(n.) உலகுரையாகிய அளவை; evidence or authority from tradition.

*[Skt. aitihya+piramāṇa> த. ஐதிகப் பிரமாணம்.]*

**ஐதிகம்** *aitikam,* பெ.(n.) 1. உலகுரை; traidion. 2. **ஐதிகப்பிரமாணம்** பார்க்க; see *aitika-p-piramāṇam. "அளவை மேலு மொழிபுண்மை யைதிகத்தோ டியல்பென நான்கு" (சி.சி. அளவை.).*

*[Skt. aitihya > த. ஐதிகம்.]*

**ஐதிகவளவை** *aitika-v-aḷavai,* பெ.(n.) **ஐதிகப்பிரமாணம்** (மணி.27, 49) பார்க்க; see *aitika-p-piramāṇam.*

**ஐதுகன்** *aitukaṉ,* பெ.(n.) மெய்மறை உரையை மறுத்து முறையீடு செய்வோன்; one who is a *hētu-vādin* and denies the authority of the vedas. *"சூரண நூல்வழிச் செவ்வை யழித்திடு மைதுகர்க்கோர் வாரணமாய்" (ரஹஸ்ய.61).*

*[Skt. haituka > த.ஐதுகன்.]*

**ஐந்தவம்** *aintavam,* பெ.(n.) மாழ்கு விண்மீன்; the fifth naksatra, *mirukaciritam* (யாழ்.அக.).

*[Skt. aindava > த. ஐந்தவம்.]*

**ஐந்தாசால்** *aintā-cāl,* பெ.(n.) அடுத்த ஆண்டு; ensuing year.

*[U. aindā + U. sal > த. ஐந்தாசால்.]*

**ஐந்திரி** *aintiri,* பெ.(n.) இந்திரனைத் திக்குக் குழந்தையாகக் கொண்ட கிழக்கு (சூடா.); East, being Indra's Quarter.

*[Skt. aindrī > த. ஐந்திரி.]*

**ஐப்பசி** *aippaci,* பெ.(n.) 1. ஏழாவது மாதம் (உபதேசரத்.6); the seventh Tamil month, October-Novermber. 2. அசுவதி இரவை (சீவக.1770); the first naksatra.

**த.வ. சிலைத் திங்கள்.**

*[Skt. āśrayuj>த. ஐப்பசி.]*

**ஐப்பசிக்குழப்பம்** *aippaci-k-kuḻappam,* பெ.(n.) ஐப்பசி மாதத்தில் தோன்றுகிற புயல் (யாழ்ப்.); rough weather at the setting in of the north-east monsoon in October.

**த.வ. சிலைப்புயல்.**

**ஐப்பசிமுழுக்கு** *aippaci-muḻukku,* பெ.(n.) துலை மாதத்தில் காவிரியில் போடும் குளியல் (இலவ.); bathing in the *Kāvēri* during the month of *Aippaci.*

**த.வ. சிலைமுழுக்கு.**

**ஐமவதி** *aimavati,* பெ.(n.) பார்வதி (திருவானைக்கோச்செங்.81); *Pārvati.*

*[Skt. Haimavati > த. ஐமவதி.]*

**ஐராவதம்** *airāvatam,* பெ.(n.) எட்டு திக்கு யானைகளுள் ஒன்றான இந்திரனின் யானை; Indra's elephant said to be in the eastern quarter according to mythology, one of *asṭa-tik-kajam.*

*[Skt. airāvata > த. ஐராவதம்.]*

**ஐரோப்பியன்** *airōppiyaṉ,* பெ.(n.) ஐரோப்பா கண்டத்தான்; European, white man.

*[Ger. Europa> Fr., Gk. Europe > த. ஐரோப்பியன்.]*

**ஐவசு** *aivacu,* பெ.(n.) 1. ஈடு; substitute. 2. கைம்மாறு; recompense. 3. விளைவு; produce.

*[Arab. iwāz > த. ஐவசு.]*

**ஐவேசி** *aivēci,* பெ.(n.) **ஐவேசு** பார்க்க; see *aivēcu.*

*[U. aiwaz > த. ஐவேசி.]*

**ஐவேசு** *aivēcu,* பெ.(n.) சொத்திருப்பு; property, wealth, stock, capital.

*[U. aiwaz > த. ஐவேசு.]*

**ஒயின்** *oyin,* பெ.(n.) நாட்பட்ட கொடிமுந்திரிச் சாறு; wine.

**ஓர்லோட்கட்டை** *orlōṭ-kaṭṭai,* பெ.(n.) பொழுதுகாட்டி (கெடியாரம்); clock, timepiece.

*[Fr. horooge > **Port.** relogio> த. ஓர்லோர்கட்டை.]*

**ஓர்லோசுகட்டை** *orlōsu-kaṭṭai,* பெ.(n.) **ஓர்லோட்கட்டை** பார்க்க; see *orlōṭ-kaṭṭai*

**ஒலிவு** *olivu,* பெ.(n.) ஒருவகை மரம்; European olive.

*[**Lat.** oliva > த. ஒலிவு.]*

**ஒலு** *olu,* பெ.(n.) தொழுகைக்குமுன் கைகால் முதலியன கழுவுகை; ablution before prayer.

*[**Ar.** wazu > த. ஒலு.]*

**ஓகணம்** *ōkaṇam,* பெ.(n.) மூட்டுப் பூச்சி; bug (யாழ்.அக.).

*[**Skt.** ōkaṇa > த. ஓகணம்.]*



**ஓங்காரி** *ōṅkāri,* பெ.(n.) ஓம் என்ற வலிமைப் பொருளானவள்; sakti, as the personification of the mystic syllable, ōm (திருமந்.1073).

*[**Skt.** ōm-kāra > த. ஓங்காரி.]*

**ஓசீவனம்** *ōcīvaṉam,* பெ.(n.) வாழ்வுத் தொகை (யாழ்ப்.); support, livelihood alimony.

*[**Skt.** upa-jīvana > த. ஓசீவனம்.]*

**ஓசு** *ōšu,* பெ.(n.) புகழ்; fame (யாழ்.அக.).

*[**Skt.** ōjas > த. ஓசை.]*

**ஓசுவனம்** *ōcuvaṉam,* பெ.(n.) **ஓசீவனம்** (யாழ்ப்.) பார்க்க; see *ōšivaṉam.*

*[**Skt.** upa-jīvaṉa > த. ஓசுவனம்.]*

**ஓட்டல்** *ōṭṭal,* பெ.(n.) உண்டிச்சாலை; Hotel.

**த.வ. உணவகம்.**

*[**Eng.** Hotel > த. ஓட்டல்.]*

**ஓட்டியம்** *ōṭṭiyam,* பெ.(n.) பாடல் முழுதும் இதழ் குவிந்தும் கூடியும் இயலும் எழுத்துக்களேயுள்ள மிறைக்கவி (மாறன. 275); kind of fanciful verse, which contains only labials or other sounds produced by rounded lips.

**த.வ. இதழ் குவிபா.**

*[**Skt.** ōsṭhya > த. ஓட்டியம்.]*

**ஓடதீசம்** *ōḍadīšam,* பெ.(n.) கருப்பூரம்; campher (சவ்.அக.).

*[**Skt.** osadhi-ja > த. ஓடதீசம்.]*

**ஓடிகை** *ōḍigai,* பெ.(n.) காட்டு நெல்; wild paddy (யாழ்.அக.).

*[**Skt.** ōḍikā > த. ஓடிகை.]*

**ஓதம்** *ōtam,* பெ.(n.) பெருமை; greatness.

*[**Skt.** ōjas > த. ஓதம்.]*

**ஓது** *ōtu,* பெ.(n.) பூனை (நன்.273, மயலை); cat.

*[**Skt.** ōtu > த. ஓது.]*

**ஓமகுண்டம்** *ōma-kuṇḍam,* பெ.(n.) வேள்விக்குழி (கந்தபு.அசுரர்யாக.42); pit dug

out in the ground for keeping sacrificial fire.

*[Skt. hōma+kuṇḍa > த. ஓமகுண்டம்.]*

**ஓமசாந்தி** *ōma-cānti,* பெ.(n.) தீ வளர்த்துச் அமைதிபண்ணுகை; propitiating by fire.

*[Skt. hōma+šānti > த. ஓமசாந்தி.]*

**ஓமசாலை** *ōma-cālai,* பெ.(n.) வேள்விச் சாலை (சிலப்.10, 143, அரும்).; sacrificial hall.

*[ஓம + சாலை.]*

*[Skt. hōma>த. ஓம.]*

*[சால்>சாலை.]*

**ஓமத்திரவியம்** *ōma-t-tiraviyam,* பெ.(n.) வேள்விச் செய்யும் பொருள்; requisites for a sacrifice, including fire wood.

*[Skt. hōma+dravya > த. ஓமத்திரவியம்.]*

**ஓமாக்கினி** *ōmākkiṉi,* பெ.(n.) வேள்வித் தீ; sacrificial fire.

*[Skt. hōma+agni > த. ஓமாக்கினி.]*



**ஓமி–த்தல்** *ōmi-,* 11 செ.கு.வி.(v.i.) வேள்வி செய்தல்; to perform the *hōma* sacrifice. *"யாவையும் வாரி யோமித்தான்" (உபதேசக. பண்டாசு.65).*

*[Skt. hōma-, > த. ஓமி–த்தல்.]*

**ஓமியம்** *ōmiyam,* பெ.(n.) வேள்வி; sacrifice. *"ஓமியஞ் செய்தங் குள்ளத் துணர்மினோ" (தேவா.432, 8).*

*[Skt. hōmya > த. ஓமியம்.]*

**ஓர்சு** *ōršu,* பெ.(n.) பொதுப்பணி முதலியவை மேற்பார்க்கும் மேற்பார்வையாளன்; overseer.

**ஔசனம்** *aušaṉam,* பெ.(n.) துணைத் தொன்மம் பதினெட்டுனுள் ஒன்று; a secondary *purāṇa,* one of 18 *upa-purāṇam.*

*[Skt. aušanasa > த. ஔசனம்.]*

**ஔசித்தியம்** *aušittiyam,* பெ.(n.) தகுதி; fitness, suitableness.

*[Skt. aucitya > த. ஔசித்தியம்.]*

**ஔட்டு**[1] *auṭṭu,* பெ.(n.) ஒருவகை வாண வெடி; fire work bomb which, when fired into the air, bursts into glowing sparks.

*[U. auṭ > த. ஔட்டு.]*

**ஔட்டு**[2] *auṭṭu,* பெ.(n.) சீட்டு விளையாட்டு வகை; a game at cards played by two persons, finished with saying out, when either has scored 108.

**ஔத்தமர்ணிகம்** *auttamarṇikam,* பெ.(n.) வட்டியோடு தருவதாக வாங்கிய பணம்; money borrowed on interest (சுக்கிரநீதி. 96).

*[Skt. auttamarṇika >த. ஔத்தமர்ணிகம்.]*

**ஔத்திரிதீட்சை** *auttiri-tiṭcai,* பெ.(n.) சிவ தீக்கையேழனு ளொன்று (சைவச.ஆசாரி 62, உரை); (*šaiva*) a mode of initiation in whcih the guru performs the regular rites accompained by *hōma* one of seven *tiṭicai*

*[Skt. hautri+dīksa > த. ஔத்திரிதீட்சை.]*

**ஔதா** *autā,* பெ.(n.) யானைமேல் அமைக்கும் இருக்கை (அம்பாரி); Canopy.

*[U. haudah > த. ஔதா.]*



**ஔதாரியம்** *autāriyam,* பெ.(n.) தாராளக் குணம்; generosity, nobility, magnamity, liberality.

*[Skt.audarya > த. ஔதாரியம்.]*

**ஔபசாரிகம்** *aupacārikam,* பெ.(n.) ஒன்றன் தன்மையை மற்றொன்றிலேற்றிக் கூறுவது; a kind of metonymy by which the attributes of one are spoken of as those of something or some one connected with it.

*[Skt. aupacārika > த. ஔபசாரிகம்.]*

**ஔபனிதிகம்** *aupanitikam,* பெ.(n.) அடைக்கலப் பொருள்; deposit, entrusted for state safe keeping (சுக்கிரநீதி.96).

*[Skt. aupanidhika > த. ஔபனிதிகம்.]*

**ஔபாசனம்** *aupācaṉam,* பெ.(n.) காலை மாலைகளில் திருமணமான பிராமணர்கள் எழுப்பும் வேள்விப் புகை; the worship of the consecrated fire both morning and evening, a duty enjoined on a married Brahman.

*[Skt. aupāsana > த. ஔபாசனம்.]*

**ஔபாதிகம்** *aupātikam,* பெ.(n.) கடமை தொடர்பானது (சி.சி.2, 1, ஞானப்.); that which is limited by particular conditions which are valid under particular supposition.

*[Skt. aupādhikā > த. ஔபாதிகம்.]*

**ஔரசபுத்திரன்** *aurasa-puttiraṉ,* பெ.(n.) சொந்தப்பிள்ளை, தத்துப் பிள்ளைக்கு எதிரானது; own son, legitimate son.

*[Skt. aurasa+putrra> த. ஔரசபுத்திரன்.]*

**ஔரசன்** *auraśaṉ,* பெ.(n.) **ஔரசபுத்திரன்** பார்க்க; see *auraśa-puttiraṉ.*

*[Skt. aurasa > த. ஔரசன்.]*

**ஔரதன்** *auratan,* பெ.(n.) **ஔரசபுத்திரன்** பார்க்க; see *auraśaputtiraṉ.*

*[Skt. aurasa > ஔரதன்.]*

**ஔராத்து** *aurāttu,* பெ.(n.) நாள்தோறும் கூறும் வழிபாட்டுக்குரிய வழிபாட்டுச் சொல்; farmulae of daily devotional exercises. *"அவர்கள் காலை நேரங்களில் ஔராத்து ஓதிக்கொண்டிருப்பார்கள்" (முகமது.).*

*[Ar. aurad > த. ஔராத்து.]*

**ஔரிதம்** *auritam,* பெ.(n.) ஓர் அறநூல் (திவா.); code of laws by *Hārita.*

*[Arab. hārita > த. ஔரிதம்.]*

**ஔலாத்து** *aulāttu,* பெ.(n.) கால்வழி; issue, children. *ஔலாத்துகளை நல்வழியில் பயிற்ற வேண்டியது பெற்றோர்களின் கடமை.*

*[Ar. aulad > ஔலாத்து.]*

**ஔலியா** *auliyā,* பெ.(n.) பத்தர்கள்; saints *(Muham).*

*[Ar. auliya > த. ஔலியா.]*

